




ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணய நமஃ

இதிகாசமாகிய

# ஸ்ரீமஹாபாரதம்

வசன காவியம்

[ஐதீக பல கலர் திருவுருவப் படங்களடங்கிய சுத்தப் பதிப்பு]

ஆதிபர்வம்—சபாபர்வம்.

இவை,

ஸ்ரீ வேதவியாசர் செய்த கீர்வாண பாரதத்தைத்
தமிழில் நல்லாப் பிள்ளை அவர்கள் செய்த பாடலுக்கிணங்க
அமைத்தெழுதியது.

முதலாவது புத்தகம்



பிரசுரித்தவர்கள் :—

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1933.

4-வால்யம் செட்] [விலை ரூபா 10.





17-)

ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# முதற் புத்தகத்தின் சருக்க அட்டவணை

## ஸ்ரீ மகாபாரத வரலாறு



## ஆதிபருவம்

## சபாபருவம்



ஸ்ரீ ராதா ருக்மிணீ சமேத கிருஷ்ணமூர்த்தி.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:





ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ மஹாபாரதம்

## சிறப்புப் பாயிரம்

### கணபதி துதி.

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராஜன் மாபார தஞ்சொன்ன நாள்
ஏடாக வடமேரு வெற்பாகவங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

### மும்மூர்த்திகள் துதி.

உலகமாக்கலுங் காக்கலு முண்மையால், இலகநீக்கலு மென்றுந் தவிர்கலார்
சலசவாண்மலர்த் தாள்களென் னெஞ்சினு, நிலவுசென்னி யினுநிலை யாமரோ.

### கலைமகள் துதி.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யாற்றிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்.

### வேதவியாசர் துதி.

வேதமாதி விளங்கிய நூலெலாம், ஓதியாரு முளந்தெளி வெய்திடப்
போதியாநின்ற புங்கவ னன்புடை, வாதராயணன் றன்னை வழுத்துவாம்.

### அவையடக்கம்.

முன்சொலாகிய சொல்லெலா முழுதுணர் முனிவன், தன்சொலாகிய மாப்பெருங் காப்பியந் தன்னைத், தென்சொலாலுரை செய்தலிற் செழுஞ்சுவை யில்லாப், புன்சொலாயினும் பொறுத்தருள் புரிவரே புலவோர்.

### இந்நூல் செய்தற்குக் காரணம்

அகத்தியன் பயந்தசெஞ்சொ லாரணங் கம்புயாதன், முகத்தினில் வாழுமந்த மொய்குழ லருளினலே, பகைத்தெதிர் பொருததெய்வப் பாரதக்கவியை முந்நீர்ச், செகத்தினிற் கதையதாகச் செய்கெனச் செய்ததன்றே.

### வாழ்த்து கவி.

ஏழ்பெருங்கடன் மாநில மெங்குநல் லறமே, சூழ்கவண்டமி ழோங்குக தேங்குசுருதி [மே.
வீழ்கபைம்புயல் விளங்குக வளங்கெழு மனுநூல், வாழ்கவன்புடையடியவர் மன்னுமா தவ

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

உ

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# ஸ்ரீ மஹாபாரத வரலாறு

## சூதபுராணிகர் நைமிசாரண்யம் வருதல்

[நெடிய கடல்சூழ்ந்த உலகத்தில், தவத்துக் குபயோகமாக விருக்கின்ற திவ்யக்ஷேத்திரங்க ளெவற்றினு மிகவுஞ் சிறப்புற்றோங்கி விளங்குகின்ற நைமிசாரண்யத்தில், சௌனகர் முதலாகிய இருபத்தாறுயிர முனிவர்களுங்கூடி இருக்கிற தருணத்தில், சூதமுனிவர் வந்தார். அவரை அந்த இருபத்தாறுயிர முனிவர்களுங் கண்டவுடன் எழுந்தெதிர்கொண்டு அழைத்துவந்து, அர்க்கிய பாத்தியாதிகளைக் கொடுத்துப், பிரம்மாசனம் போட்டுச், சோட்ச உபசாரமுஞ்செய்து இருக்கச்சொல்லி, யோகக்ஷேமங் கேட்டபின்பு ஒருவசனஞ் சொல்லுவதானார்கள். ஓ மஹாநிலைபெற்ற தபோநிதியான சூதமுனிவரே! ஓ சகல புராணங்களையும் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த மஹானுபாவா! நீர் இவ்விடத்திற்கு வந்தது, நாங்களெல்லாம் கடைத்தேறுவதற்கு மூலகாரணமேயன்றி வேறொன்றில்லை. ஆனால் உம்மை ஒருமனுவு கேட்டுக் கொள்ளுகிறோம். அஃதென்னெனில்- முன்னந் தங்களுடைய வாக்கினாலே, மச்சியம்-கூர்மம்-வராகம் - வாமனம்-பிரமம்-வைணவம்-பாகவதம் - சைவம்-இலிங்கம்-பௌடிகம்-நாரதீயம - காருடம்-பிரமகைவர்த்தம்-காந்தம்-மார்க்கண்டேயம் - ஆக்கினேயம் - பிரமாண்டம் - பதுமம்-ஆகிய பதினெண் புராணங்களையும் கேட்டுணர்ந்தோம். இனி ஐந்தாம் வேதமென்று கூறப்பட்ட பாரதக்கதையைக் கேட்க விருப்புற் றிருக்கின்றோமென; அதை சூதமுனிவர் கேட்டு, ஓ முனிவர்களே! நீங்கள்கேட்ட பாரதக்கதையை முன்னம் ஜெனமேஜெய மஹாராஜன் கேட்டுப் பாபரகிதனானன். அவ்வளவு சிலாக்கியமான பாரதக்கதையை நீங்களுங் கேட்டு ஆனந்த மடையும்படியாக யாம் சொல்லுகிறோம் கேளுங்களென; அதற்கம்முனிவர் சூதமுனிவரை வணங்கி, இப் பாரதக்கதையைக்கேட்ட அவ்வரசன் யாவன்? முறைவழுவாமல் இக்கதையை அவ்வரசனுக்குக் கூறினவர் எவர்? யாதுகாரணத்தால் அக்கதையைக் கூறவுங் கேட்கவும் அவர்க்கேது உண்டாயின? இவைகளையெல்லாங் கிருபைசெய்து சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்னலும், சூதமுனிவர் கூறத்தொடங்கினர்.]

முதலாவது

## ஜெனமேஜெயன் அரசியற் சருக்கம்

முருகார் மலர்த்தாம முடியோனை யடியார் முயற்சித்திறந்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதே வருங்கை தொழுங்கோவை யுறவுன்னுவாம்.

ஓ சௌனகாதி முனிவர்களே! மலர்மிசை வீற்றிருக்குந் திசைமுகனாற் சிருஷ்டிக்கப்பட்ட இந்த வுலகம் ஏழு பிரிவாகி, அவ்வப்பிரிவிற்சிறந்த பொருள்களாகிய, நாவல்-இறலி-குசை-கிறவுஞ்சம் - புட்கரம் - தெங்கு-கமுகு - என்பனவற்றின் அபிதானத்தால் ஏழு தீவுகளாகி இருக்கின்றன. அவற்றுள் நாவலந்தீவாகிய இஃது, அநிகம்- அருணம்-அவந்தி- ஆந்திரம் - இலாடம்-யவனம்-ஒட்டியம்-கருசம்-கலிங்கம்-கன்னடம்-கன்னடம் காசம்-காஸ்மீரம் - காந்தாரம் - காம்போசம்-கிராடம்-குருகு-குடகம் - குந்தளம்-குரு-குலிந்தம்-கூர்ச்சரம்-கேகயம் - கேரளம் - கொங்கணம்-கொல்லம் - கோசலம்-சகம் - சவ்வீரம்-சாலவம்-சிங்களம்-சிந்து-சீனம்-சூரசேனம்-சோழம்-சோனகம்-திராவிடம்-துளுவம்-தெங்கணம்- நிடதம்-நேபாளம்-பாஞ்சாலம்-பப்பரம்-பல்லவம் - பாண்டியம் - புலிந்தம்-போடம்-மகதம்-மச்சம்-மராடம்- மலையாளம்-மாளவம்-யுகந்தரம்-வங்கம்-வங்காளம்-விதற்பம்

என்னும் ஐம்பத்தாறு தேசத்தை யுடைத்தாகி, இகபரசுகத்துக்கு உபயோகப்பட்டிருக்கின்றது. இத்தீவிலிருக்கும் நாடெல்லாவற்றிலும் மிகவுஞ் சிறப்புற்று, பரமனிடப்பாகத்து விளங்கும் பார்வதியைப் பெற்று வளர்த்த இமயமலையையும், அப்பரமன் சடாடவியில் வாழ்ந்திருக்கும் மந்தாகினியையுமுடைத்தாகி, அறிவுடைமை - அன்புடைமை-அருளுடைமை-பொருளுடைமை-பொறையுடைமை - வலியுடைமை-ஒழுக்கமுடைமை - முதலியவற்றைபெற்று, தருமாதிகளை வழுவாது வளர்த்து வருவதில் சிலாக்கியப்பட்டிருக்கின்றது குருக்ஷேத்திரம். அக்குருக்ஷேத்திரத்தில் அஸ்தினபுர மென்றொரு நகருண்டு. அந்நகரோசந்திரகுலத்தரசருக்கு அரசுசெலுத்தும் நகராகி, சொற்க-மத்திய-பாதாள லோகங்களி லிருக்கிற நகரங்களைத் தன் வளப்பத்தினல் வென்று, அந்தமூன்று லோகங்களில் சஞ்சரிப்பவர்கள் நிரந்தரந் தன்னைவிட்டு நீங்காம லிருக்கத்தக்க மங்கல வோசையையும் வேதகோஷ்டத்தையும் பெற்றிருக்கின்றது. அந்நகரத்துக்கு ஓரரசனுண்டு. அவன் யாரென்றால், சந்திரவமிச பரம்பரையிற் றோன்றிச், சக்ரவாளகிரி பரியந்தம் தன்னுணையைச் செலுத்திச், சத்துருக்களை நாசஞ்செய்து மித்துருக்களைப் பரிபாலித்து, நல்லொழுக்கத்தி னின்றோர்க்கெல்லாம் யாதொரு குறைவுவராமல் வேண்டியவற்றை யுதவித், தன்னுயிர்போலக் காப்பாற்றுந் தயாநிதியாகிய பரிட்சித்து மஹாராஜனுடைய புத்திரன் ஜெனமேஜெய மஹாராஜன். அந்த ஜெனமேஜெயன் தன் தந்தையினும் எண்மடங் கதிகமாக நன்மையை விளைத்து அரசுசெலுத்தி வருகிற நாளில், ஒருநாள் சத்திர யாகஞ் செய்ய யத்தனித்து, அந்த யாகத்துக்குச் சமைத்த சாலையி லினிதுவீற்றிருக்கிற தருணத்தில், தேவ குலத்திற் பிறந்த குக்குரன் மனைவி சரமை யென்பவள் பெற்ற சிறுவர்களில்சார்மேய னென்பவன், அந்த யாகசாலையிற் புகுந்தான். அவன் புகுந்ததை அந்த ஜெனமேஜெய மஹாரர்ஜன் சகோதரர்களாகிய சுதசேனன் - பீமசேனன் - உக்கிரசேனன் - இம்மூவருங் கண்டு, அச்சார்மேயனென்பவனை யடித்துத் துரத்திவிட்டார்கள். அச்சார்மேயன் மிகுந்த துயரத்தையடைந்து, தன் தாயாகிய சரமையினிடத்துச் சொல்லித் துக்கித்தான். அதைக் கேட்டமாத்திரத்தில் அந்தச் சரமை அதிவேகமாய்வந்து, யாகசாலையிலிருந்த ஜெனமேஜெய மஹாராஜனைக் கண்டு, ஓ அரசனே! யான் பெற்ற மக்களில் மிகுந்த இளமைப்பருவத்தை யுடைய சார்மேயனென்பவனை யாதொருகாரணமுமின்றி உமது தம்பிமார் அடித்தார்களாம். அது தருமமா? தருமசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து என்போலிய ஏழைகளைப் பாதுகாக்கின்ற மஹாராஜனேயென்று முறையிட்டு, பொறுமையைப் பூஷணமாக உடைய அந்தச் சரமை அந்தர்த்தானமாய்ப் போய்விட்டாள். உடனே அரசன் திகிலடைந்து, இதென்ன ஆச்சரியமென் றேங்கி, விரைவில் அந்தச் சத்திரயாகத்தை நிறைவேற்றித், தன்னகரமாகிய அஸ்தினபுரத்திற்கு வந்து, பழையபடி சிலநாள் அரசுசெய்து, ஒரு நாள் சரமைசொல்லிய வாக்கியத்தை நினைத்து புத்திமயங்கி, இந்தப் பொல்லாங்குக்கு என்னசெய்கிறது; அந்த அம்மனிருந்தால் அவளிஷ்டப்படி நிறைவேற்றி விடலாம்; அதற்கு அந்த அம்மன் அந்தர்த்தானமாய்ப் போய்விட்டனள். இனி இதற்கு பென்னசெய்யலாமென் றேங்கித், தனது மந்திரி முதலானவர்களை நோக்கி, நான் வருகிறபரியந்தம் சகல ஜீவாத்துமாக்களுக்கும் யாதொரு குறைவும்வராமல் விசாரணை செய்துகொண் டிருங்களென்று கட்டளையிட்டுத், தான் காட்டுக்குப்போய்ச் சிலநாளிருந்து, பின்பு சோமாசிரவசுவென்னும் முனிவரைக் கண்டு, மிகுந்த அன்புடனே வணங்கி எழுந்துநின்று, சரமையென்பவளால் தனக்கு நேரிட்டிருக்கிற குறையையும் யாக விக்கினத்தையுஞ் சொல்லி முறையிட, அம்முனிவர் சாந்தியாகஞ் செய்தால் உன் மனக்குறை நீங்குமென, அவ்வாறே அரசன் அம்முனியைக் குருவாகக்கொண்டு, அந்த யாகத்தை அவ்வனத்திலேயே நிறைவேற்றி, அனேக தான தருமங்களைச் செய்து தன்மனக்குறை நீங்கி, எப்போதும் போல நற்குணமுடையவனுய்த் தன்னகரத்தில்வந்து அரசாட்சி செய்துகொண் டிருந்தான்.

ஜெனமேஜெயன் அரசியற் சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது
## உதங்கமுனிச் சருக்கம்

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வரச னிவ்வாறிருக்க, உதங்கனென்னும் பெயரை யுடைய பிரமசாரிப் பிராமணனொருவன், சகல சாஸ்திரங்களிலும் வல்லவராகி ஞான சுரூபியாய் விளங்குகின்ற பயிலவமுனிவ ரிடத்தில், நாலுவேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்துநாலு கலைக்கியானம் முதலாகிய வித்தைகளைக் கற்கவிரும்பி அவரையடுத்து, அந்த முனிவர் தன்மேல் அன்புடையவரா யிருக்கும் பொருட்டுப் பயபக்தியுடனே வழி பட்டுவருகிற நாளில், அம்முனிவர் இந்த உதங்கன் நினைத்துவந்த கருத்தின்படி, ஐயந்திரிபில்லாமலிருக்க எல்லா நூல்களையு முணர்த்தினர். அதன்மேல் அவ்வுதங்கன் மகிழ்ந்து, குருவாகிய பயில்வமுனிவரை வணங்கி, என்னிமித்தந் தாங்கள் கல்வியி லெடுத்துக்கொண்ட பிரயாசைக்குக் குரு தக்ஷிணை கொடுக்கவிருப்புற்றேன்; அதற்குத் தங்கள் கருத்தை வெளியிடவேண்டுமென்று பிரார்த்தித்தான். அம்முனிவர் உதங்கனை நோக்கி, எனக்கு ஒன்றுந் தேவையில்லை என்று மறுத்தார். மறுபடியும் உதங்கன் வேண்டினன். அம்முனிவர் உதங்கனைப் பார்த்து, அப்பா! எனக்கொன்றும் வேண் டுவதில்லை என்றாலும் உனதுமனந் திருப்தி யாகாமையால், என் பத்தினியிடத்திற் சென்று கேள்; உன் தாயாகிய என்பத்தினி எதைக்கேட்பாளோ அதைக் கொண்டுவந்து கொடுவென்று கட்டளையிட்டார். அவ்வுதங் கன் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு சென்று, குருபத்தினியாரைக்கண்டு வணங் கிக், குருவினிடத்து நிகழ்ந்தவைகளைச் சொல்லிப், பயபக்தியுடனே யெதிர்நின்று, அம்மணீ! இதற்குத் தங்கள் கருத்தை வெளியிட வேண்டுமென்று கேட்க; அந்த அம்மன் இந்த உதங்கன் பக்தி விசுவாசத் துக்கு மகிழ்ந்து, ஓ உதங்கா! மனுசாஸ்திர விதி பிசகாமற் செங்கோல் செலுத்தித், தன் னுயிர்போல மன்னுயிரனைத்தையும் புரக்கும் பௌடியந்த மஹாராஜனுடைய மனைவி செவியிலணிந்திருக்கிற கோடி சூரியப்பிர காசமாகிய நாகரத்தினக் கம்மலைக் கொண்டு வந்து கொடுப்பாயாகில், அதுதான் குரு தக்ஷிணையென்று சொல்ல; உதங்கன்கேட்டு மிகுந்த களிப்படைந்து, அந்தக் கம்மலை இத்தனை நாளிற் கொண்டுவந்து கொடுக்கி றேன் என்று கெடுவிட்டு வணங்கி விடை பெற்றுக்கொண்டு, பௌடியந்தமகாராஜன் நகரத்தைக்குறித்துவருகிறபோது, தாவள்ய மான வெள்ளை எருதின்மேல் ஒரு திவ்யபுரு ஷன் வந்து இவனைவழிமறிக்க; அதுகண்டு உதங்கன் அப்புருஷனுக்குவந்தனைசெய்து, குருதக்ஷிணை நிமித்தம் பௌடியந்த மஹா ராஜன் நகரத்திற்குப் போகின்றேன்; நீர் ஏன் என்னைமறிக்கின்றீரென; அப்புருஷன் இந்தவழியில்என்னுத்தரவில்லாமற்செல்ல வொண்ணுது. நீ குருதட்சணை நிமித்தம் செல் லுகிறபடியால், இவ்வெருதின் கோமயம் அருந்துவாயாகில், உன்னை இவ்வழியிற் செல்லவிடைகொடுப்பேனென; அவ்வாறே அவ்வுதங்கன் அவ்வெருதினது கோமயத் தையருந்தி, அந்தப்புருஷனுடைய உத்த ரவுபெற்று, மலையைப்போலத் திரண்ட தோளையும், அளவற்ற புகழையு முடைத் தாகியபௌடியந்தமஹாராஜன் அரண்மனை க்குவந்து, தன்வரவைக் காவலாளர்களால் அவ்வரசனுக்குத்தெரிவித்து, அவ்வரசன் வந்தனை வழிபாடுசெய்ய அதனையேற்று, அவ்வரசனுக்குப் பல ஆசீர்வசனங்கள் சொல்லி, அவ்வரசனிட்ட பொற்பீடத்திலி ருந்து, ஓமகாராஜனே! எனக்குக் கல்விபயிற் றிய பயிலவமுனிவருக்குக் குருதட்சணைகொ டுக்க யத்தனித்துவணங்கிநிற்க; அதற்கம் முனிவர் நமதுபத்தினியார்கருத்துக்கிசைந் ததைக் கொடுவென்றார். உடனே அந்த அம்மனைக்கண்டு வணங்கி, என்கருத்தினைக் கூறி, தாயேதங்கட்குஎன்னவேண்டுமென்று கேட்டதற்கு உமது நாமத்தைக்கூறி, உமது மனைவியாரணிந்திருக்குங் கம்மலைக்கொண்டு வந்து கொடுவென்று கூறினர். அந்த அம் மனுக்கு இத்தனைநாளில் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று கெடுவிட்டு, உமதிடத் துக்கு வந்தேனென; அதை அவ்வரசன் கேட்டு மகிழ்ச்சியடைந்து, அந்தப்புரத்தில் என்மனைவியிருக்கிருள், நீர் போய் நான் கொடுக்கச் சொன்னேனென்றுசொல்லி அக் கம்மலைவாங்கிக்கொள்ளுமென்து அனுப்ப, அவ்வுதங்கன் அந்தப்புரத்திற் சென்று எங்கெங்குந்தேடி, அந்த ராஜன் மனைவி யாரைக் காணுமல் மறுபடியும் அவனிடத்

தில் வந்து, ஓ மகாராஜனே! உமது மனைவியார் அந்தப்புரத்திலில்லையென; அரசன் கேட்டு, ஓ மகானுபாவா! என் மனைவி அசுசியாயிருக்கிறவர்கள் கண்களுக்குத் தோற்ருள். நீர் அசுசியா யிருக்கிறதாய்த் தோற்றுகிறது. சுசியாய்ச் செல்லுவீராகில் உமது கண்களுக்குத் தோற்றி நீர்கருதிய பொருளைக்கொடுப்பாளென; உதங்கன் ஆ! ஆ! நான் வெளிதிரிந்து வந்தவனுதலால் அசுசியாக விருக்கலாமென்று ஒப்புக்கொண்டு, தீர்த்தக்கரைக்குப் போய், ஸ்நான-சந்தி-செப-தபமுதலியவற்றை முடித்துக்கொண்டு சுசியாய்மீட்டுமவ் வரண்மனையிற்சென்ருன். உடனே அந்த மஹாபதிவிரதை எதிரில் வந்து வணங்கி, அவ்வுதங்கன் கேட்காததற்கு முன்னமே தானணிந்திருக்கிற கம்மலைக்கையிலே நந்தி, இதோவாங்கிக்கொள்ளுமென்று கொடுத்து ஒருவசனஞ் சொல்லுகிருள்.

சொற்கவாசியாகிய ஒருபெரியவர் ஏதோ ஒரு காரியார்த்தமாய் நாகலோகத்திற்குச் சென்று, ஆதிசேஷனைக்கண்டு திரும்பி வருகிற தருணத்தில், அந்த ஆதிசேஷன் அந்தப்பெரியவர்க்குக் காணிக்கையாகத் தனது சிரோரத்தினங்களில் சிலது கொடுத்தான். அவைகளைப் பெற்றுக்கொண்டு அப்பெரியவர்சொற்கத்துக்குப் போகிறபோது, எனது அரசனது நல்லொழுக்கத்தைக் கேள்விப்பட்டுக் காணவந்தார். அப்போது நானும் என்னரசனும் சிங்காரவனத்தி லிருந்தோம். அந்த விடத்திற்கு அவர்வந்து, எங்களால் செய்யப்பட்ட வந்தன வழிபாடுகளைப் பெற்று ஆசீர்வாதஞ்செய்து என்னைப் பார்த்து, ஓ அம்மா! மகாலட்சுமியைப்போலே ரூபவதியாகி அருந்ததியைப்போலே கற்புடைத்தா யிருக்கின்ற உன்னை எவராகிலும் பார்ப்பாராகில் உனது ரூபத்துக்கு இச்சை கொள்வார்கள் அதனுல்ஏதாகிலுங்கிஞ்சித்து வருத்தம் நேரிடும். அவ்வகைப்பட்ட வருத்த முனக்கு நேரிடாதிருக்கும்படி இதோ இந்த இரத்தினத்தைக் கொடுக்கிறேன். இந்த ரத்தினத்தைக் கம்மலிலழுத்திச்செவியில் அணிந்துகொள். நல்லொழுக்கத்தின் கண்நின்ற மகத்துக்களுக்கும் உன்புருஷனுக்குமே யன்றி, மற்ற துராத்துமாக்கள் கண்ணுக்கும் கிஞ்சித்து அசுசியாயிருக்கிறவர்களுக்கும், உன்ரூபுதெரியாது. அதனுலே உன் கற்புக் கழிவுவராதென்று வாழ்த்திக் கொடுத்துப்போயினர். அப்படியே நான் அந்த நாகரத்தினத்தை ஓராபரணமாக்கிக் காதி லணிந்திருந்தேன். பின்பு ஆதிசேஷன் இந்தச் சேதிதெரிந்து நமது லோகத்துப்பொருள் சொற்கலோகத்தி லன்றிப் பூலோகத்திலிருக்கிறது தகுதியல்லவே; இதற்கென்ன செய்வோமென்று தனது மந்திரிகளோடு யோசிக்கும்போது, தக்ஷகன் எழுந்து வணங்கி, யான் எவ்விதத்திலும் அந்த இரத்தினத்தைக்கொண்டுவந்து சேர்க்கிறேனென்று உறுதிகூறிவந்து, இந்த நகையைக்கொண்டுபோக இங்ஙனேதானே வெகுசாக்ரதையாகக் காத்துக்கொண்டிருக்கிருன். ஆகையால் இந்த உடைமையைமறதியாயெங்கேயாகிலுந்தரையில்வைக்கப்போகிறீர். அப்படி வைப்பீராகில் மோசம்வருஞ் சொன்னேன். மேலும் இக்கம்மலை அணிந்துகொள்ளப் போகிற பயிலவமுனிவின் மனைவியோ மிகுந்த கற்புடையவளா யிருந்தபோதிலும், இப்போது நான்சொல்லிய சங்கதியையும் கிஞ்சித்துத் தெரியப்படுத்துமென்றுசொல்லி அந்த நகையைக்கொடுத்தாள். இந்த உதங்கன் அந்த கம்மலைப் பெற்றதைவிட அந்த அரசன் மனைவியாருடைய கற்புடைமைக்கு அதிக மகிழ்ச்சி யடைந்தவனுய் அரசனிடத்துவந்து, கம்மலை பெற்றுக்கொண்டேன் விடைதரவேண்டும் அரசனேயென, அரசன் இந்த உதங்கனை நோக்கி, ஓ மஹானுபாவா! இன்றையத்தினம் என் மனையிற் புசித்து பின்பு உமதிடத்திற்குச் செல்லுமென்று அன்புடனே கேட்டுக்கொள்ள, உதங்கன் ஒத்துக்கொண்டு, அவ்வரசனேடு அந்தப்புரத்திற் சென்று அவ்வரசனுந் தானும் உண்கிறபோது, அந்தச்சாதத்தில் ஓர் மயிரிருக்கக்கண்டு, அவ்வுதங்கனுக்குக் கோபம்பிறந்து அரசனை நோக்கி, கலத்திற் சோற்றையிட்டுக் கழுத்தை யறுத்தது போல அசுசியாயிருக்கிற அன்னத்தைப் படைப்பித்து என்னைப் பசித்திருக்கச் செய்தனையே! இந்தக் குற்றத்தினுல் உனது கண்ணொளி இழந்துபோகக் கடவதென்று சாபமிட, அரசன் ஐயா! இக்குற்றம் என்னுலே நேரிட்டதல்ல. அப்படியல்லவென்று அக்குற்றத்தை என்னதாகப் பாவித்தாலும், குற்றத்துக்கு தகுந்த சாபமிடாமல் விபரீத சாபு

யிடலாமா? யோசிக்காமல் சினங்கொண்டு எனக்கு சாபமிட்டதினால்; நீர் கலியாணமின்றித் தேசசஞ்சாரியா யிருக்கக் கடவதென்று அந்த உதங்கனுக்கு அரசன் மறுசாபமிட, அதனால் கோபமாறிய உதங்கன் அரசனை நோக்கி, எனக்கு கொடுத்தசாபம் என்னை யடையாதிருக்க கிருபை செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அரசன் நகைத்து, ஐயனே! உலகத்தையாளும் அரசர்கள் இட்ட சாபத்திற்கு மறுசாபங் கொடுப்பதை எங்கேயாகிலும் கேட்டதுண்டா? இல்லையே; ஆதலால் நானிட்டசாபத்திற்கு மறுசாபமில்லை. தேவரீர் எல்லா நூல்களையுங் கற்றுணர்ந்து சித்தசாந்தமடைந்த பரமாத்மாவாகையால் எளியேன்மீது கிருபைகூர்ந்து, நீர் இட்ட சாபத்தை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள உதங்கன்மகிழ்ந்து, தான் அவ்வரசனுக்கு முன்னிட்ட சாபத்தை நீக்கி விடைபெற்றுக்கொண்டு, அந்தக்கம்மலை கைசோர விடாமல், மிகுந்த சாக்கிரதையுடனே தனது குருவாகிய பயிலவமுனிவர் ஆசிரமத்தை நோக்கிச் செல்லுகையில், சூரியன் அஸ்தமித்தான். அதுகண்டு சந்தியாநுஷ்டானஞ் செய்ய இந்த உதங்கன் ஓர் கயத்தருகில் வந்து அந்நகையைப் பூமியில் வைத்துச் சந்தியாநுஷ்டானத்தைச் செய்துகொண்டிருக்கையில், துஷ்டனாகிய தக்ஷகன் ஒரு பிராமணனாய் வேடந் தரித்துவந்து அந்நகையை யெடுத்துக்கொண்டுபோக, அதனைக்கண்ட உதங்கன் அத்தக்ஷகனை விடாமற் பின்பற்றி அதிவேகமாய்ச் செல்லுகையில், அத்தக்ஷகன் தனது லோகத்திற்குச் சென்றான். இந்த உதங்கனும் அந்த நாகலோகத்திற்குச் சென்றான். இதனையுணர்ந்து தக்ஷகன் நாகலோகத்தி லிருக்கிறவர்களில் ஒருவராகிலும் இம்முனிவன் கண்ணுக்குத் தோன்றாமலிருக்க மாயஞ்செய்து மறைய, இம்முனிவன் மிகுந்த துன்பத்தை யடைந்து, எரிந்த கோபத்தைக்கொண்டிருப்பதைவிட அதிக மகிழ்ச்சியில் மறதியைக்கொண்டிருக்கிறதுகெடுதிக்கெல்லாமேலான கெடுதியென்று நூல்களா லறிந்திருக்கிறதுமன்றி, இந்நகையைக்கொடுத்த அந்த அம்மனும் நமக்கு ஞாபகப்படுத்தி யிருந்தும் (விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுந்தவர்போல) ஆனோமேயென்று பலவாறு தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டு, அந்த நாகலோகத்தை சுற்றி சுற்றி வருகிறபோது, பார்க்குமிடமெல்லாம் ரத்நமயமாகிய மாடமாளிகைகளும், சிங்காரவனங்களும், தாமரைத்தடாகங்களுமேயன்றி, வேறொருவருந் தனது கண்ணுக்குத் தோன்றினதில்லை. ஆனால் ஒருபக்கத்தில் இரண்டு ஸ்திரீகள் பவளம்போன்ற தமது விரல்களில் கறுப்பு நூலையும் வெள்ளை நூலையும் சுற்றிக்கொண்டிருக்கிறதையும், அதற்கப்புறம் பன்னிரண்டிதழுடன்கூடி அறுகோணம்போ லிருக்கிற ஒரு பீடத்தையும், அப்பீடத்தின் கோணங்கடோறும் பொருந்திய ஆறு குமாரர்களையும் பார்த்து வியந்து; பின்பு நாகலோகத்திலிருக்கிறவர்களைத் துதித்தாலல்லது நமது குறை நீங்காதென்று கருதி, அவ்வுலகத்தாரைத் துதிக்க யத்தனித்துச் சொல்லுகிறான். ஓமஹாதபோநிதியான காசிபமுனிவருடைய புத்திரரே! பார்வதி சமேதனாய் விளங்கும் ஸ்ரீ கைலாசபதியாகிய பரமன் கைவில்லுக்கு நாணியாகித், திருமருமார்பனாகிய திருமாலுக்குப் பாயலாகி, இந்த ஏழுலோகத்தையும் பணமுடியிற்றாங்கி, தேவர்களுக்கு அமுதத்தைக்கொடுத்து விளங்குகின்ற உபகாரிகளே! என் குருபத்தினியார்க்காகக் கொண்டுவந்த நகையைக்கொடுத்து இரக்ஷிக்க வேண்டுமென்று பலவாறு தோத்திரஞ்செய்தும் (அபாத்திரத்திற் பிக்ஷை இட்டதுபோலப்) பயன்படாம லிருக்கக்கண்டு மிகுந்த வல்லமையையுடைய இந்த உதங்கன் மனங்கலங்கி ஒன்றுந்தோன்றாமல் விடர்வெளியில்வந்துபிராணனை விட்டுவிடுவோமென்று நிற்கிற தருணத்தில் வாயுகதியோடு கலந்த திவ்ய அஸ்வத்தின்மேல் அக்கினிசுரூபியாகிய ஒருதேவபுருஷன் இந்த உதங்கன் கண்ணுக்குத் தோற்றப்பட்டான். உடனே அவ்வுதங்கன் தரித்திரனுக்குத் தனப்புதை கிடைத்தால் எப்படியோ அப்படிபோல மகிழ்ந்து, அந்தத் திவ்யபுருஷனை வணங்கித், தான் குருநிமித்தம் வந்ததையும் வந்தவிடத்தில் நடந்ததையுஞ் சொல்லி முறையிட்டான். அந்தப் புருஷன் உன் கருத்தென்னவென்று வினவ, என்னை வஞ்சித்த இந்த நாகலோகத்தாரெல்லாம் நடுங்கி எனக்கு வழிபடவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, ஆனாலிந்த அஸ்வத்தின்செவியில் ஊது என்று வந்த புருஷன்கூற, உதங்கன் அவ்வஸ்வத்தின் செவியில் ஊதினான். உடனே ஒரு அழற்சி

யுண்டாயிற்று. அதனால் பஞ்சாயுதங்களையுடைய திருமால் செய்யுஞ் சங்கத்தொனியைக்கேட்ட அசுரரைப்போல, பாதாளலோகத்திலிருக்கிற யாவரும் துடிதுடித்துப் பதைபதைத்து நடுநடுங்கிக் கடுகடுத்து விடவிடத்து நெஞ்சுலர்ந்து, ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம். இந்தச்சத்தமும் அழற்சியும் ஒருநாளும் கண்டதில்லையே! இன்றையதினம் இவ்வகைப்பட்ட கெடுதி நேரிட்டது என்னகாரணம்? ஐயோ! வைதிக நிலைமை பூண்ட ஒரு மஹாத்மாவை நம்மினத்திலொருவனாகிய தக்ஷகன்செய்த கோரமான வஞ்சனையே இப்படிக்கு வந்து நேர்ந்ததென்று பலவாறு நினைந்துருகி, அந் நாகலோகத்திலிருக்கிற யாவரு மொருமிக்கக்கூடி, எடுத்துவந்த கம்மலை அத்தக்ஷகனாலேயே அம்முனிக்குக் கொடுப்பித்தார்கள். அவ்வுதங்கன் கம்மலை வாங்கிக்கொண்டு, பரமானந்தத்தை யடைந்து, இந் நகையை நமது குருபத்தினிக்குச் சேர்ப்பிக்க வேண்டுமே, நாமோ நாகலோகத்தி லிருக்கிறோம். இனி இதற்கென்ன செய்வோமென்று இடிவிழுந்த மரம்போல் ஏங்கி நிற்கிறதருணத்தில், மறுபடியும் முன்குறித்த மஹாபுருஷன் பின்னும் அஸ்வத்துடன் தோன்றி, ஓ பிர்மசாரி! இன்னும் நீ கிலேசப்படவேண்டிய காரணமென்னென்றுவினவ, ஆண்டவனே! இத்தனை நாளில் இந்த நகையைக் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று என் குருபத்தினிக்குக் கெடுவிட்டு வந்தேன். நான் அந்த கெடுவுதப்பாமல் நகையைச் சேர்க்கவேண்டுமென்று யோசித்து வருந்துகிறேனென்று உதங்கமுனிகூற; அப்புருஷன் இதோ இந்தக் குதிரையின்மேலேறு, ஒருநொடியில் உன் குருபத்தினியாரிடத்தில் கொண்டுபோய் விடுமென; இவ்வுதங்கன் மிகுந்த களிப்படைந்து அக்குதிரையின்மே லேறினான். அக்கணம் பயிலவமுனிவர் ஆசீர்மத்திற் கொண்டுவந்து விட்டு அவ்வஸ்வம் மறைந்துபோயது.

அப்பால் அந்த உதங்கன் குருபத்தினியைக்கண்டு வணங்கிக் கம்மலைக்கொடுத்தான். அந்த அம்மன் உதங்கனை வாரித்தழுவி, அப்பா மகனே! இந் நகைக்கு வெகு பிரயாசைப்பட்டுக் கொண்டுவந்த உன்பக்திக்கு மெச்சினேனென்று வாழ்த்த, உடனே உதங்கன் அந்த அம்மன் உத்தரவு பெற்றுக் கொண்டு, தனது குருவாகிய பயிலவமுனிவரிடத்துக்கு வந்து வணங்கிப் பயபக்தியுடனே எதிர் நின்றான். அப்படி நின்ற சீஷனைப் பார்த்து, அப்பா மகனே! குருவிசுவாசத்தில் உன்னைப்போல இவ்வுலகி லொருவருமில்லையென்று அவனைத்தழுவி, மிகுந்த அன்புடனே நோக்கி ஒருவசனஞ் சொல்லுகிறார். ஓ சகலசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்களிலும் சகல பற்றினையு நீக்கின மகாத்மாக்களிலும் சிறந்த சற்புத்திரனே! பௌடியந்த மஹாராஜன் மனைவி காதிலிருக்குங் கம்மலைக் கொண்டுவந்து கொடுக்கப்போயின நீ, இத்தனை நாள்வரைக்கும் தாமசப்பட்டு வராதிருந்ததற்குக் காரணமென்னவென்று கேட்க; உதங்கன் அரசனிடத்திற்சென்று கம்மலைப்பெற்று நாகலோகம்போய் இவிடம் வந்து சேர்ந்த விர்த்தாந்தத்தை ஆதியோடந்தமாகச்சொல்லி, மறுபடியும் உதங்கன் குருவைப்பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறான். ஓ ஐயனே! நான் இவ்விடம்விட்டுப் பௌடியந்தமஹாராஜன் பட்டணத்தை நோக்கிச் செல்லுகையில், வெள்ளை எருதின் மேலேறி ஒருதிவ்யபுருஷன் வந்து என்னை மறித்து இவ்வழியே போகிறதற்கு உனக்கு மனமிருந்தால் இந்த எருதின் கோமயத்தைப்புசித்தால் போகலாம் இல்லாவிட்டால் நான் உன்னைப் போகவொட்டேனென்று சொன்னான். பின்பு நாகலோகத்திற் செல்லுகையில், இரண்டு ஸ்திரீகள் தமது விரல்களில் கறுப்பு நூலையும் வெள்ளை நூலையும் சுற்றிக்கொண் டிருந்தார்கள். மற்றோரிடத்தில் அறுகோணபீடமும் கோணத்துக்கு இரண்டிதழும் ஆறுகுமாரரு மிருந்தார்கள். நான் அந்த நாகலோகத்திற்சென்று திக்கொன்றுந் தெரியாமல் இருக்கிற தருணத்தில் அஸ்வத்தின்மேல் ஒரு சௌந்தரிய புருஷன் வந்து என்னை இவிடத்துக்கு வரும்படி செய்வித்தான். இவர்களை எல்லாம் என்னாற் கூடியமட்டும் யோசித்துப் பார்த்தும், அவர்களின்னாரென்று என்கருத்துக்குத் தோன்றவில்லை. ஆண்டவனே! கிருபைபுரிந்து அவர்களை இன்னாரென்று யான் உணர்ந்து கொள்ளப் போதிக்க வேண்டுமென; பயிலவமுனிவர் உதங்கனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

தம்பி உதங்கா! பௌடிகராஜனைக்காணப் போகிறபோது வழியில் வெள்ளை எருதிலேறிவந்து மறித்தவன் இந்திரன். அவ்வெருதோ வெள்ளையானை. கோமயமோ அமுதம். பாதலலோகத்தில் கறுப்புநூலும் வெள்ளைநூலும் விரலிற் சுற்றிக்கொண்டு இரண்டுஸ்திரீகளிருந்தார்களே, அவர்களில் ஒருத்தி தாதை. மற்றொருத்தி விதாதை. கறுப்புநூலும்வெள்ளைநூலும்இரவும்பகலுமாம். அறுகோணமும் கோணங்கடோறும் இரண்டிதழும் ஆறுகுமாரரும் என்னவென்றால், அறுகோணம்பூமி. கோணங்கடோறும் இரண்டிதழிருந்தது பன்னிரண்டு மாதம். அந்த ஆறு குமாரரும் ஆறு இருதுக்கள். உன்முன்குதிரையோடு தோன்றினபுருஷன் வருணன். அக்குதிரையோ அக்கினிபகவான். நீகுருபக்தியுள்ளவனுதலால் உனக்குத்தேவரெல்லாஞ்சகாயப்பட்டார்கள். உன்னைப்போல கனவான் இவ்வுலகத்தில் யாவருமில்லை. இனி நீதவநிலைசேர்ந்துதவஞ்செய்யென்று பயிலவமுனிவர் சொல்ல, அதனுல் உதங்கன்மகிழ்ச்சியடைந்து குருவாக்கியத்தை சிரமேற்கொண்டு சிலநாள் தவம்புரிந்து, தன்னைவருத்தபடுத்திய தக்ஷகனுக்கு ஒருகெடுதி செய்யவேண்டுமென்று மனதில் நினைத்து, சந்திரவமிசசிகாமணியாகிய ஜெனமேஜெய் மஹாராஜன் சபைக்கு வந்தான். உடனே அரசன் கண்டு எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து, சோடசஉபசாரஞ்செய்து, பொற்பீடமளித்து இருக்கச்சொல்லி, யோகக்ஷேமமுங்கேட்டு, ஓமுனிசிரேஷ்டராகிய ஐயனே! தேவரீர் இவ்விடத்திற்கு எழுந்தருளிய காரணமென்னமோ எளியேனுக்குத் தெரியவில்லையென்று மிகுந்தபயபக்தியுடனேவினவ, உதங்கமுனிசொல்லுகிருர்; ஓ மஹாராஜனே எனக்குக்கல்விபயிற்றியபயிலவமுனிவர்க்குக் குருதக்ஷிணையாகப் பௌடியந்தமஹாராஜன் மனைவி தரித்திருந்த கம்மலை வாங்கி வருகிறபோது, என்னை வஞ்சித்து அந்நகையைக் கொண்டுபோய் எனக்கு மிகுந்த வருத்தத்தையுங் கொடுத்த தக்ஷகனையும் அவனோடு சம்பந்தப்பட்டவர்களையுந் தண்டிக்க வேண்டி சர்ப்பயாகஞ்செய்ய உம்மை நாடி வந்தேனென்ன, அரசன்முனிவனைநோக்கி, ஐயனே! சிறியோர் செய்த பிழை பொறுப்பது பெரியோர்தன்மை; அப்படியல்லவென்று தண்டிக்கப்புகுந்தால் குற்றவாளியைத் தண்டிக்க வேண்டுமேயன்றி, அவர்களின் இனத்தாரையுந்தண்டிப்பதுதகுதியாவென; உதங்கன் அம்மொழியைக்கேட்டுக் குலத்திலொருவன் சிறப்படைந்தால் அச்சிறப்பைக் குலமுழுதும் அடையும்; அதுபோலக் குலத்திலொருவன் குற்றவாளியானுல் அக்குலமுழுதும் குற்றமாகும். இது திருஷ்டாந்தமாகும்படி இங்ஙனம் ஒருகதை சொல்லுகிறேன் கேளுமென்று உதங்கமஹாரிஷி சொல்லுகிருர்.

உதங்கமுனிச் சருக்கம் முற்றிற்று.

---

மூன்ருவது

## பிருகுமுனிச் சருக்கம்

ஓ அரசனே! ஒருவனத்தில் பிருகுமுனி தன்மனைவிபுலோமிசையோடு கூடிக்குலாவி வாழ்ந்து மகிழ்ச்சியடைந்திருக்கிற நாளில், புலோமிசை கர்ப்பவதியாயினள். அப்படியிருக்க அம்முனிவன் வழக்கப்படி ஔபாசனுக்கினி பூசித்துவந்தான். ஒருநாள் சூரியன் அஸ்தமனமடையக்கண்டு தன் மனைவியையழைத்து, நான்வருகிறபரியந்தம்இந்த ஓமத்தை நடத்திவாவென்று கட்டளையிட்டுத், தான்சந்தியாவந்தனஞ் செய்யப்போயினன். அந்த அம்மன்பூரணகர்ப்பமாயிருந்தபோதிலும், கணவனிட்டகட்டளையைத்தள்ளாமல் அந்த ஓமத்தைப் பூசித்துவந்தாள். அப்படி செய்கிறதருணத்தில், ஓமகுண்டத்தெழுந்த அக்கினிதேவன் பிரசன்னமாகி, அந்தஅம்மன்கொடுக்கிற ஆபூதியைஏற்று, அக்குண்டத்தின்மத்தியிலிருந்தான். அந்த வேளையில் ஒரு அரக்கன் அவ்வனத்திற் பிரவேசித்து, அந்த ஓமவெளிச்சத்தைக்கண்டு வந்து, ஓமஞ்செய்கிற முனிபத்தினியைப் பார்த்து, துராத்மா வாகையால் கெடுதியான நினைப்பைமனதில்வைத்து, அந்த ஓமகுண்டத்தில்விளங்கும் அக்கினிதேவனைநோக்கி, அடா அக்கினி! உனக்கு முன்னிருக்கிற பெண் யார்? உனக்குத் தெரியுமாவென்று வினவினன். அக்கினிதேவன்இவன்யாரோ அரக்கன் என்றுமதித்து, ஓ அரக்கனே! இந்த அம்மன் பிருகுமுனிபத்தினியாரென்று உள்ளபடிசொல்ல அரக்கன்கேட்டு, இந்தப்பெண்பிருகுமுனி மனைவியா? சீ! சீ! நான் சொல்லுகிறதைக் கேள். நான் சிறு

போது இவளைவிவாகஞ்செய்தேன். என்னை மோசஞ்செய்து அந்தமுனிவ னெடுத்துக் கொண்டுவந்து கலியாணஞ் செய்துகொண்டான். இவளைத்தேடித்தேடி எனதுகாலுந் தேய்ந்துபோய்விட்டது. இந்தவனத்தில் இப்போது கண்டேன். இனிவிடப்போகிறதில்லை என்றுசொல்லி அதிவேகமாய்வந்து அந்த அம்மனைத் தூக்கிக்கொண்டு சென்றான். அந்த அம்மன் அதிர்ந்து நடுங்கி மிகுந்த கூக்குரலிட்டு அலறிக்கொண்டு போகிறபோது, பூர்ணகர்ப்பவதியாகையால் அவ்வரக்கன் தோளிலேயே புத்திரனைப் பெற்றாள். அப்புத்திரன் ஞானசிகாமணியாய், தன்தாய்க்குக் கெடுதிநினைத்ததுராத்மாவைக்கோபித்து நோக்கினான். அந்த நோக்கத்தில் இரண்டு அக்கினிப் பொறிகளுண்டாகி, அவனுடலைப் பஸ்மீகரமாக்கிவிட்டன. இந்த மகத்துவத்தைக் கண்ட புலோமிசை புத்திரன்மேல் மிகுந்த அன்புடையவளாய் வாரித்தழுவியெடுத்துக்கொண்டு தன்னாசிரமத்துக்கு வந்தாள்.

உடனே பிருகுமுனி சந்தியாநுஷ்டானத்தை முடித்துக்கொண்டுவர, அவரைப் புலோமிசைகண்டு அலறிக் கூக்குரலிட்டழுது சொல்லுகிறாள்: ஆண்டவனே! ஓமஞ்செய்யச்சொல்லி எனக்குக் கட்டளையிட்டுப் போனபின்பு அவ்வாறு நான் அந்த ஓமத்தைநடத்த, அக்கினிபகவான்பிரசன்னமாகி அக்குண்டத்தின் மத்தியிலிருந்து, நான் கொடுக்கும் ஆகுதியை ஏற்றுநிற்கிற தருணத்தில், ஒரு அரக்கன்வந்து என்னை எடுத்துக்கொண்டுபோயினான். அப்போது நான் பயந்து அலறிக்கூக்குரலிட்டழுதுகொண்டு அவன் தோண்மேற் செல்லுகையில் இக்குமாரனைப்பெற்றேன். இக்குமாரன் அந்தத் துராத்மாவைக்கோபித்துநோக்கினான். அந்தவேளையில் இவனது நேத்திரத்திலுண்டாகிய தீயினால் அவ்வரக்கனுடல் சாம்பராயிற்று. உடனேகுமாரனை எடுத்துக்கொண்டு இவிடம்வந்து சேர்ந்தேனென; பிருகுமுனி கோபித்து, ஓபெண்ணே! வீட்டிலிருந்த உன்னை அவன் எவ்விதத்திலுணர்ந்துஎடுத்துப்போனான். அவன் எடுக்கிறபோது அக்கினிதேவன் சும்மாயிருந்தானா வென்று கேட்க, அந்த அரக்கன்வந்து என்னை யாரென்று அக்கினிதேவனைக்கேட்டான். அத்தேவன் தங்கள் நாமத்தைச்சொல்லி இன்னார்மனைவி என்றுசொன்னான். அதன்மேல் என்னை அவ்வரக்கனெடுத்தானென, பிருகுமுனி அந்த அக்கினிதேவனை அழைத்து, என்மனைவியை அரக்கனுக்குக் காண்பித்தபடியினாலே நற்கந்தமாத்திரம் புசிக்கிற நீ இனிமேல் துர்க்கந்தத்தையும் புசிக்கக்கடவதென்று சாபமிட, அக்கினிதேவன் மிகுந்த வருத்தத்தையடைந்து, ஓமுனிநாதா! அவ்வரக்கனுன் பத்தினியைப்பார்த்து இவள் யாரென்று என்னைக்கேட்டான். உண்மை கூறுவதேபரலோகத்தின்பமென்று மேலோருரைத்திருக்கிறபடியாலும், நான் எல்லாவற்றிற்குஞ் சாட்சியானபடியாலும், உண்மையைச் சொன்னேன். அதற்காக எனக்கு இவ்வகைப்பட்டசாபமிடலாமா? நீபிராமணனாகையால் என்னகுற்றஞ் செய்தபோதிலும் பொறுப்பது என்போலியர்கடமையென்று பெரியோர்கள் விதித்திருக்கிறார்களாதலால், உனக்கு மறுசாபங்கொடாமல் பொறுத்தேனென்றுசொல்லி, உலகமுழுதும் நிறைந்திருக்குந் தன் அமிசையைக் கிரகித்துக் கொண்டு ஓரிடத்திற் பதுங்கியிருந்தான். பின்பு உலகத்தில் அக்கினியில்லாமையால் யாகாதிக்கிரமங்கள் யாதொன்றும் நிறைவேறாமல், எல்லா உலகத்தார்களும் கனவருத்தமடைந்து இந்திரனிடத்துவந்து முறையிட, இந்திரன் பிரமனிடத்துச் செல்ல, பிரமன் யாவரையுமழைத்துக்கொண்டு அக்கினிதேவனிருக்கிற யிடத்துக்கு வந்து அவனையழைத்து, ஓஅக்கினிதேவா! பிருகுமுனிகொடுத்த சாபத்துக்கு மறுசாபம் கொடுக்கிறேன். அஃதென்னவென்றால்,பிருகுமுனி யிட்ட சாபத்தின்படி துர்க்கந்தத்தைப் புசித்தாலும் அதனால் வருங்குற்றம் உன்னை யடையாதிருக்கக்கடவது. மேலும் நீஇப்போதிருக்கிறவிதத்திலுமேலாய் இனி விர்த்தியாகவேண்டுவது. நீவந்து முன்போல உலகங்களில் நிறைந்திருவென்று கட்டளையிட்டு, அந்தப் பிருகுமுனி பத்தினியழுதகண்ணீர் வீணாகப் போகவொட்டாமல் ஒரு நதியாக்கி, அதற்கு வதுசரை என்று பெயரிட்டு தனது லோகத்துக்குப்போய்ச் சேர்ந்தான். பின்பு பிருகுமுனி தன் குமாரனுக்குச் சவுனகனென்று பெயரிட்டு அதிக விருப்பத்துடனே வளர்த்து, நாலுவேதம் ஆறுசாஸ்திரம், அறுபத்துநாலு கலைக்யான

முதலியவற்றைப் போதித்தான். அப்புத்திரனும் அவைகளைக்கற்று நல்ல கியானஸ்தனாய் ஒரு வனத்திற்சென்று தவத்திலிருந்தான்.

அந்தச் சவுனகமுனி நெடுங்காலந் தவத்திலிருந்தமையால், அம்முனிவனைப் புற்று மூடிக்கொண்டது. இப்படி சில நாள் சென்ற பின்பு, இரவிகுலதிலகனான யயாதிமஹாராஜன் வேட்டையாட யத்தனித்து, மந்திரி பிரதானி முதலானவர்களோடு மற்ற நால் வகைத்தளமும் தன்னைச் சூழ்ந்துவர, தன் மகளாகிய சுகன்னியோடு பிரயாணப்பட்டு ஒரு வனத்தில்வந்து, விலங்கினங்களெல்லாங்கலங்கி நெட்டுயிர்ப்போடு மரணவஸ்தையடைய வேட்டையாடி, அவ்வேட்டையினாலுண்டாகிய இளைப்பாற, நெருங்கித் தழைந்த சோலைகள் சூழ்ந்த இந்தச் சவுனகமுனி தவஞ்செய்யும் வனத்தில்வந்து, தனது தண்டு தளங்களை விட்டிறங்கி யிருந்தான். அந்தவேளையில் அவ்வரசன் குமாரத்தியாகிய சுகன்னி சில தாதிமார்களுடனே அவ்வனத்திலுள்ள விநோதங்களைப் பார்க்கச் சென்றாள். அப்படிச் செல்லும்வழியில் இந்தச் சவுனகமுனியை மூடியிருக்கிற புற்றிருந்தது. அதில் முனிவன் கண்ணொளி பாய்ந்திருந்ததை யறியாமல், இதென்ன இந்தப் புற்றில் இரண்டு ஒளி உண்டாகி இருக்கிறதென்று அந்தச்சுகன்னி ஒருசுப்பலெடுத்து, அவ்வொளிவழியாகக் குத்திவிட்டு வந்துவிட்டாள். சுப்பலால் குத்தினகுத்து அந்தச் சவுனகமுனி கண்ணிற்பட்டது. அதனாலே அம்முனிவனுக்குக் கோபமுண்டாகி, முனிவரிருக்கிற இடத்துக்கு ஒருவர் வரக்கூடாது. வந்தும் இவ்வகைப்பட்ட துஷ்டத்தனஞ் செய்கிறதாவென்று கொதித்து, அந்த யயாதிமகாராஜனும் அவன் மந்திரியுந்தவிர மற்றவர்க்கெல்லாம் கண்ணொளி மழுங்கச் சாபமிட்டான். உடனே அவ்வரசன் சேனைகளனைத்தும் தத்தித்தடுமாறிக் குருடு பரவி இதென்ன ஆச்சரியமென்று கூக்குரலிட, அதனை அரசன்கண்டு, ஓ மந்திரி! இதென்னவிந்தை, நமது சேனைகள் கண்ணொளி மழுங்கி வருத்தப்படுகின்றன. ஐயோ! இதுபெரிய நிந்தையாதலால் இதனையுணர்ந்து சொல்லென, மந்திரி சற்றுநேரம் ஆலோசித்து, ஓ அரசனே! இந்த வனம் முனீஸ்வரர்களுடையதா யிருக்கவேண்டும். நமது சேனைகளாலே ஏதோ ஒரு குற்றம் நேரிட்டிருக்கவேண்டும். அதனாலே இத்துன்பம் வந்ததாய்த் தோன்றுகின்றதென, அரசன் தனது தளத்தைநோக்கி, இவ்வனத்தில் யாராவது துஷ்டத்தனஞ் செய்திருந்தால் தெரிவிக்கிறதென்று பறைசாற்றுவித்தான். அப்பறையோசையைச் சுகன்னிகேள்விப்பட்டு, தன் தந்தை தாளில் வந்துவணங்கி, ஒருபுற்றில் இரண்டொளி உண்டாயிருந்தது கண்டு அவைகளைச் சுப்பலால் குத்தினேனென, அரசன்கேட்டுத் திகிலடைந்து, அப்புற்றைக் காட்டச்சொல்லி, அந்த இடத்துக்குப்போய் அப்புற்றைச் சோதிக்கும்போதில், சவுனகமுனிவர் தோற்றப்பட்டார். அம்முனிவரை அரசன்கண்டு, மிகுந்த பயபக்தியுடனே வணங்கி, அநேகவிதமாய்த் தோத்திரஞ்செய்து, என்புத்திரிசெய்த பிழையைப்பொறுத்து இரக்ஷிக்கவேண்டுமென்றுவேண்ட, அம்முனிவர் மகிழ்ந்து முன்னிட்ட சாபத்தை நீக்கி, அவ்வரசனுக்கும் பல ஆசிர்வாதஞ்செய்தார். அதன்மேல் அரசனுக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாகி, ஓ முனிநாதா! இந்தச்சுகன்னி என்புத்திரி. இவள் செய்த குற்றத்தை மன்னித்ததற்காக இப்பெண்ணையுமக்குக் கலியாணஞ்செய்து கொடுக்க விருப்புற்றிருக்கிறேனென, அம்முனிவர் அவ்வரசன் கருத்தின்படி சம்மதிக்க, உடனே அரசன் அவிடத்திலேயே கலியாணமண்டபமியற்றி தன் குமாரத்தியைக் கன்னிகாதானமாகக்கொடுத்து, அம்முனிவரிடத்து விடைபெற்றுத் தனது நகரந்திற்குப்போய்ச் சேர்ந்தான். பின்பு இந்தச்சுகன்னியை அம்முனிவர் பணிவிடை செய்ய வைத்துக்கொண்டார். இப்படி சிலகாலஞ் சென்றபின்பு, ஒருநாள் அந்தச் சுகன்னி தனதுகணவன் பூசைக்குச் சலந்திரட்டிவரச் சென்றாள்.

அப்போது அவ்வழியில் அஸ்வனிதேவர்கள் இருவரும்எதிர்வந்து, ஓபெண்ணே! நீயார்? உனது பெயரென்ன? உனது கணவன் யார்? அவன் பெயரென்னவென்று கேட்க, அதற்கு அந்தச் சுகன்னி யான் யயாதிராஜன்பெண், என்கணவன் சவுனகமுனிவர், என்பெயர் சுகன்னியென, அஸ்வனிதேவர்கள் அப்பெண்ணின் கற்பினிலை

யையறிய ஒரு வசனஞ் சொல்லுகிறார்கள்: ஓ பெண்கள் நாயகமே! உன்னிளமைப்பருவத்துக்குத்தகுந்த கணவனைத் தேடிக்கொள்ளாமல், மிகுந்த கிழத்தனத்தையுடையவராய் ஐம்புலனுமொடுங்கினவராய் விளங்குகின்ற சவுனகமுனிவரைக்கணவனாகக்கொண்டதில் நீ கண்ட பலனென்ன? ஒன்றுமில்லையே! ஆதலால் எங்களிருவர்களில் யார்பேரில் உனக்கிச்சையிருக்கிறதோ அவர்களைக்கணவனாக்கிக்கொள். அதனாலே நீபெற்ற அழகுக்குப் பயனடைவாயென; அக்கன்னிகை மறுவுத்தரவுசொல்லாமல், மவுனமாய்த் தனது கணவனிடந்துவந்து வணங்கி, தன்னை இருவர்வந்து மறித்துக்கூறிய வசனங்களைப் பிசகில்லாமல் சொல்லி நின்றாள். முனிவர் தமது ஞானதிருஷ்டியினால் அஸ்வனிதேவர்களென்று உணர்ந்து, ஓ பெண்ணே! நீ அவர்களிடத்திற் சென்று, உங்களிலொருவரை மணஞ்செய்து கொள்ளுகிறேன் ஒருவர் ஏற்படுங்களென்று சொல்லு. அவ்விருவருக்கும் வழக்கு நேரிடும். அதன்பின்பு என்னிடத்துக்கு வருவார்கள். அதன்மேல் பேசவேண்டியதைப் பேசிக்கொள்ளலாமென்று அனுப்ப, அந்தச்சுகன்னி மகாபதிவிரதையாதலால், கணவன் கூறியபடி அஸ்வனிதேவதைகளிடத்து வந்து, உங்களிருவரில் ஒருவரைக் கணவனாகக் கொள்ளுகிறேன் ஏற்படுங்களென, அதைக்கேட்ட அவ்விருவரும்ஒருவர்க்கொருவர் வழக்கிட்டு, இவ்வழக்குத்தீர்ப்பு சவுனகமுனிவர்தான் சொல்லவேண்டுமென்று கருதி, அப்பெண்ணை அழைத்துக்கொண்டு சவுனகமுனிவரிடத்துக்குப்போய், தங்கள் வழக்கைச்சொன்னார்கள். அச்சவுனகர் அவ்விருவரையும் பார்த்து, இப்பெண்ணுக்கு நானுமோர்பாத்தியனாதலால், உங்களைப்போல எனக்கும் வழக்கிருக்கிறதென்றுகூற; ஆனால் முனிவரே! நாமெல்லோருமற்றொருவரிடத்திற்சென்று வழக்கைத் தீர்த்துக்கொண்டு, மூவரிலொருவர் இந்தச் சுகன்னியை மணஞ்செய்து கொள்வோமென்று பேசிக்கொண்டு போகிறபோது, ஒருசுனையைக்கண்டு, தங்களுக்குள் ஒரு தீர்ப்புச்செய்து, அக்கன்னிகையைப் பார்த்து, ஓபெண்ணே! இச்சுனையில் மூவருமுழுகி யெழுந்து வருகிறோம்; உனக்கு இஷ்டமான புருஷனைத் தொடுவென்றுசொல்லி, அம்மூவரும்அந்தச் சுனையில்முழுகி வெளிப்பட்டார்கள். அக்கால்கிழத்தனத்தையுடைய சவுனகரும் அந்த அஸ்வனிதேவர்கள் எவ்வுருவத்தோடு வெளிப்பட்டார்களோ அவ்வுருவத்தைக்கொண்டு, மூவரும் ஒருருபமாய் நின்றார்கள். அதுகண்டு அக்கன்னிகை தன் கணவனைத் தியானித்து, தெய்வகடாக்ஷம் எப்படியோவென்றுமனதில்நினைத்துக், கடவுளைச் சாஷ்டாங்கமாய் வணங்கி எழுந்து நின்று, ஒருவரைத் தொட்டாள். அப்படி தொட்ட புருஷன் சவுனகமுனிவரா யிருக்கக்கண்டு, அஸ்வனிதேவர்கள் மஹாபதிவிரதையென்று மதித்து வாழ்த்தி, அவ்விருவரும் விடைபெற்றுத் தமது லோகம்போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு சவுனகமுனியும் அந்தச்சுகன்னியும் இரதியும் மதனும்போலக் கூடிக்குலாவி வாழ்ந்து, ஒரு புத்திரனைப்பெற்று, அப்புத்திரனுக்குச் சனகனென்று பெயரிட்டார்கள். அச்சனகன் சகல கலைக்கியான சுரூபியாய் மகா நிலைபெற்ற தவசிலாக்கியனாகி, ஒருமகாமுனி புத்திரியை விவாகஞ்செய்து உருருவனைப்பெற்றான். அவ்வுருருவன் ஒருமுனி புத்திரியை விவாகஞ்செய்து பிரியாவிடையாயிருக்கிறநாளில், ஒருநாள் சந்தியாநுஷ்டானஞ் செய்யப்போயினான். அப்படி அவன் போய் வருகிறதற்குள், ஆசிரமத்தி லிருந்த அவன்மனைவி பாம்பினாற்கடியுண்டு விஷந்தலைக்கேறி கைகால்களை யுதறிக்கொண்டு மரணவஸ்தையி லிருந்தாள். அந்த உருருவன் வந்து கண்டு, இடிவிழுந்த மரம்போலேங்கி மதிமயங்கி, யாதொன்றுந் தோன்றாமல் பிரமைகொண்டு நின்று, சற்றுநேரத்திற்குப்பின் ஒருவிதமாய்த் தேறி, அவ்விஷத்துக்குத் தகுந்த சிகிச்சைகள் செய்தும் பயன்படாமல் மனைவி யிறக்கக்கண்டு, சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்து, பின்பெழுந்து அழுது, ஐயோ! பெண்ணே! இதுவரைக்கும் பூவும் மணமும்போலும் பாலும் நீரும் போலும் வேற்றுமையின்றிக் கூடிக் கலந்திருந்த உன்னை, இப்போது இறக்கவிட்டுத் தனியே பிரிந்திருக்க என்னால் சக்தியில்லையே! என்னசெய்வேனென்று பலவாறு துக்கித்து, தன்னுயிரையும்விட யத்தனித்தபோது, ஆகாயவாணி அதட்டினாள். உருருவன் இந்தச் சத்த மேதென்று நாலுதிசையும் நோக்குகிறபோது, மறுபடியும் ஆகாயவாணி

ஓஉரூருவாவென்று அழைத்தாள். அதனல் ஆகாயவாணியென்று அறிந்து வந்தனே வழிபாடு செய்து நின்ருன். அப்போது ஆகாயவாணி சொல்லுகிருள்: ஓ உரூருவா! உன்மனைவி விதிகிழிந்து பாம்பின் வாயிற் பட்டால், அவளுக்காக நீயும் உயிர்விட யத்தனிப்பது தகுதியா? அந்த மனைவியின்பேரில் மிகுந்த அன்பு உனக்கு உண்டாயிருந்தால், உனது ஆயுளில் பாதிகொடுத்தால் அவள் முன்போல் உயிர்பெறுவாளென்று உறுதிகூற, அந்த உரூருவன் அக்கணம் தன்னுயுளில்பாதி தத்தஞ்செய்தான். உடனே மனைவி உயிர்பெற்று, நித்திரைசெய்து எழுந்ததுபோல எழுந்தாள். உரூருவன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தவனுய் அவளை வாரித்தழுவி, நடந்த விருத்தாந்தத்தைக் கூறி, இவ்வளவு வருத்தத்தை யுண்டாக்கினது பாம்பல்லவோ? அப்பாம்பினத்தை யெல்லாம் நிர்மூலப் படுத்துகிறேனென்று சபதஞ்செய்து, ஒரு தண்டினையேந்தி, யமனைப்போலக் காட்டிற் பிரவேசித்துப் பாம்பினத்தை வதைத்து, நித்தம் நித்தம் ஆயிரம் பதினுயிரம் லக்ஷம் கோடி இப்படியாகக் கொன்று வருகிறநாளில், ஒரு புற்றடியில் பெரும்பாம்பிருந்தது. உரூருவன் அதனைப் பார்த்து, அதிவேகமாக ஓடி கையிலிருக்கிற தண்டைவீசி அடிக்கப் போம்போது, அந்தப்பாம்பு ஹரி ஹரி! கோவிந்தா! பரந்தாமா! சர்ப்பசயனு! என்று ஓலமிட்டது. அதைப் பார்த்து அதிசயப்பட்டு, ஓ நாகமே! நீயேன் கடவுளைத் தியானித்தாயென்று உரூருவன் கேட்க, நாகம் ஓமகாநிலைபெற்ற தவசிரேஷ்டரே! யாதொரு குற்றமுஞ்செய்யாத என்னை அடித்துக் கொல்லவந்தீர். அவ்வடிக்குத் தப்பிப் பிழைத்துப்போக என்னுற் கூடியமட்டும் இப்புற்றில் நுழையலாமென்று அதிவேகமாக ஓடிவந்தும் உமதுகதைக்கு இறையாகப் போய்விட்டோமே எனக்கருதி கடவுளை நினைத்தேனென்று சொல்லிப், பின்னும் உரூருவனைப்பார்த்து, ஓ முனிவரே! நீர் இவ்வகைப்பட்ட கொடுமையான செய்கையில் பிரவேசித்த காரணமென்னென்று கேட்டது. உரூருவன் முன்னேர் நாகத்தினுல் தன்மனைவிக்கு நேரிட்ட துன்பத்தை விளம்பி, அன்றுமுதல் இந்த விரதங்கொண்டு பாம்பினத்தை நாசப்படுத்தி வருகிறேனென்று சொல்லி மீட்டுங் கதையினுல் மோதுகிற சமயத்தில், அந்நாக மறைந்து, காவிகாம்பர சடாடவி தண்டு கமண்டலதாரியாய் எதிரில்ஒருமுனிவர்போல்தோன்றிற்று. உரூருவன்பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தவனுய் நிற்கிறதருணத்தில், அம்முனிவன் உரூருவனை வணங்க, உரூருவனும் அம்முனிவரை வணங்கி ஒருவர்க்கொருவர் வந்தனை வழிபாடுகள் செய்தபின்பு, உரூருவன் அம்முனிவரை வணங்கி, அகஸ்மாத்தாய் இந்த இடத்தில் தோன்றின உமது விருத்தாந்தமென்னவென்று கேட்க, அம்முனிவர் சொல்லத் தொடங்கினுர்.

ஓ முனிநாதா! முன்னம் நான் பிராமணத் திருமேனி. எனக்கு ஆயிரபாதனென்று பெயர். ஒருநாள் ஒரு மகாமுனிவர் தவஞ்செய்கிற விடத்திற்குப்போய், அவர் பேரில் ஒரு துரும்பை எடுத்துப்போட்டுப் பாம்பு பாம்பு என்று பரியாசஞ்செய்தேன். அதன்மேல் அம்முனிவருக்குக் கோபம்பிறந்து, பாம்பு பாம்பு என்று பரியாசஞ் செய்தபடியால், நீ பாம்பாய்ப்போகக்கடவதென்று சபித்தார். உடனே நான் பயந்து நடுங்கி, அவரை வணங்கி, இச்சாபம் என்றைக்குத் தொலையுமென்று கேட்டுக்கொண்டேன். தேவரீருடைய நாமதேயத்தைச்சொல்லி,உமது தரிசனமானவுடன் சாபவிமோசனமாமென்று அருளினுர். இன்றையதினம் உமது தரிசனத்தைக்கண்டு என்சாபத்தை நீக்கிக்கொண்டேன். இனி தங்களுக்கொரு விண்ணப்பம். அஃதென்னவெனில்: இப்போது கொண்டிருக்கிற விரதம் தாங்கள் பூண்டிருக்கிற தவவேடத்துக்குத் தகுதியானதல்ல. அப்படியல்லவென்று தவவேடத்தை மதிக்காமல், அவ்விரதத்தை நிறைவேற்ற வேண்டுமென்று துணிவுகொண்டாலும், உம்க்குச் சத்துருவாகிய நாகங்களைப் பற்றறச் செய்வதற்கு உம்மாற்கூடுமா? ஏனென்ருல், அவைகள் இந்தப் பூலோகத்தில் மாத்திரமன்றி, சொற்கலோகத்திலும்அண்டங்களிலும் நாகலோகங்களிலும் நிறைந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் எவ்விதத்தில் நாசஞ்செய்வீர்? ஆதலால், ஓ முனிசிரேஷ்டரே! பாம்பினத்துக்கெல்லாம் அப்பாம்பினத்தைப்பெற்ற மாதாவால் இட்டசாபமொன்றிருக்கின்றது. அஃதென்னவென்ருல்: சந்திரவமிசத்தில் ஜெனமேஜெயனென்ருெரு அரசனுதி

க்கிருன். அவன்செய்கிற சர்ப்பயாகத்தில் எல்லாரு மடிவீர்களென்று சாபமிட்டிருக்கிருள். அதற்குள் நீரேன் வீண்வருத்தமெடுத்துக்கொள்கிறீரென, உரூருவன் அதனைக்கேட்டுத் தனது கோபத்தை யடக்கி, தன் ஆசிர்மஞ்சேர்ந்து மனைவியோடு வாழ்ந்திருந்தான். கேட்டீரோ ஓ ஜெனமேஜெய மகாராஜனே! குலத்தில் ஒருவன் தீமைசெய்தால்அக்குலமுழுவதும்துன்பப்படுமென்று உதங்கமுனிபுகல, ஜெனமேஜெயன் அவ்வுதங்கமுனியை வணங்கி, ஓ முனிநாதா! பெற்ற மாதாவானவள் பிள்ளைகள்பேரில் இரக்கமில்லாமல் சாபமிடவேண்டிய காரணமென்னவென்றுவினவ, உதங்கமுனி சொல்லுவதானுர்.

பிருகுமுனிச் சருக்கம் முற்றிற்று.

நான்காவது

## கருடபகவான் சருக்கம்

ஓ அரசனே! சாபானுக்கிரக சாமார்த்தியத்தையுடைய காசிபமுனிவர்க்குப் பதின்மூன்று மனைவிபருண்டு. அவர்களில் விநுதை-கத்துருவை என்னு மிருவரும் புத்திரரில்லையென்று மிகுந்த துன்பத்தை யடைந்து, நமது கணவனைநோக்கித் தவஞ்செய்வோமாகில் அவர் கிருபையினுல் புத்திரசந்தான முண்டாகுமென்றுகருதி, அவர்தவஞ்செய்யும் கந்தமாதன வெற்பின் சாரலிஞேரிடத்தில்வந்து தவஞ்செய்தார்கள். இப்படியவர்கள் தவஞ்செய்கிறதைக் காசிபருணர்ந்து, அவ்விருவர்க்கும் பிரசன்னமாகி, உங்கள் கருத்தென்னவென்று வினவ, விநுதையென்பவள் வணங்கி, ஆண்டவனே! யாவராலும் வெல்லக்கூடாத வல்லமையுடைய இரண்டு புத்திரரை யான்பெறக் கிருபைசெய்யவேண்டுமென்று கேட்டாள். மற்ருெருத்தியாகிய கத்துருவை வணங்கிச், சிறந்த பராக்கிரமமுள்ள நூற்றுநாலு புத்திரரும் ஒரு புத்திரியும் யான்பெறத் தயைசெய்ய வேண்டுமென்று கேட்டாள். அவ்விருவர் கருத்து மகிழ்வெய்தப் புத்திரகாமேஷ்டியாகஞ்செய்து, அதிற்கிடைத்த பிண்டத்தை அவர்கட்குக்கொடுத்துத், தான் எப்போதும் போல் கந்தமாதனத்தில்வந்துதவஞ்செய்திருந்தார். பின்பு அவ்விரண்டு ஸ்திரீகளும் அநேகநாள் கற்பவதிகளாகஇருந்து, விநுதையென்பவள் இரண்டுமுட்டையும், கத்துருவை யென்பவள் நூற்றைந்து முட்டையும்பெற்ருர்கள். இம்முட்டைகளில் கத்துருவையீன்ற நூற்றைந்து முட்டைகளும் ஐந்நூறு வருஷகாலஞ் சென்றபின்பு தனக்குத்தானே விரிந்து, ஆதிசேஷன்-வாசுகி-தக்ஷகன்-கார்க்கோடகன்-தனஞ்சயன்-காளியன்-நாகபுராணன்-புஞ்சன்-புரஞ்சன்-ஏலாபுத்திரன்-வாமன்-நிலன்-அநிலன் - கல்மாஷன்-சபலன்-ஆரியகன் - புண்டிரகன் - விசாலன்-போதகன் - சுமநோகன் - ரதிமுகன் - ததிமுகன்-விமலன் - குண்டன் - பிண்டகன் - பந்தகன்-ஆப்தன்-கோடரகன்-சங்கபாதன்-சிகன் நிஷ்ரேகன்-ஏமன் - உக்கமுகரன் - நகுஷன்-பிங்கலன் - கோகர்நன் - அவ்வியகர்நன் - அவிர்முகன்-முதகரன்-கம்பளாசுவன்-அஸ்வநரன்-தாளியகன்-உருத்தன்-சுவுருத்தன்-சம்வாதகன்-சங்கநகன் - பிண்டரகன் - அஜரன் - க்ஷேமகரன் - சமுகன் - பிண்டநகன்-ரக்ஷேமுகன் - பிடரகன் - கரவீரன் - புட்பதவுஷ்டரன்-நகரன்-பலரகன்-சாலகன்-பகன்-வில்வபாண்ரேன்-பாதகபராசிதன் - பதங்க்கிரீவன்-ரத்தாக்ஷன் - அபராதிகன் - மூஷிகாதன்-சங்கசரன்-புண்ணியதமுஷ்டரன் - அரித்திரகன்-அபானமித்திரன் - ஜோதிகன்-ஸ்ரீவகன்-பிராதீதன்-அயக்கிரீவன்- கவுர்வியன்-திரிதராஷ்டிரன்-புஷ்கரன் - சல்லியன் - விரஜன்-சாலுண்டன்-கபோதவன் - வில்வகன்-சுபாகு-சலபிண்டன்- அஸ்திபத்திரன்-முகரகோணன்-நாசிகன்-குஞ்சரன் - குரங்கன்-பிரஹாரன் - தித்திரி - புரிலன் - பாலிகண்டன்-குண்டரன் - குதரன் - பிரபகரசுமுதகாண்டகன்-வீரன்-குடாரன்-அருகுஷன் - காகோதரன்-அரிதி-கர்க்கரன்-அகர்க்கரன்-குண்டோதரன் - மகோதரன் - என்னும் நூற்றுநாலு புத்திரரும், சலர்க்காரை என்னும் ஒருபுத்திரியும் உதித்தார்கள். இவர்களைக்கண்டு கத்துருவைமிகுந்த களிப்புடனே வளர்த்து வந்தாள்.

அப்புத்திரர்கள் சகலகலைக்கியான சுரூபிகளாகி மிகுந்த திறலுடையவராய் விளையாடிக்கொண்டிருப்பதை விநுதை யென்பவள்கண்டு மனம்பொருமல், தான்பெற்ற முட்டைகளைப்பார்த்தாள். அவைவைத்தது வைத்தாப்போ லிருக்கக்கண்டு, இதென்ன

ஆச்சரியம்! இம்முட்டைகள் முன்போலவே இருக்கின்றனவென்று ஒரு முட்டையை யுடைத்தாள். அம்முட்டையில் எல்லா அவயவமுங்கூடிக், கால்மாத்திரங் கூடாமல் ஒருவன் தோன்றினன். அப்படி தோன்றினவன் தன் தாயைப்பார்த்துத், தாயே! எல்லா அவயவமுங் கூடிவருகிற தருணத்தில் ஆத்திரப்பட்டு முட்டையையுடைத்து விட்டையே! ஐயோ! நான் பராக்கிரமசாலியாயிருந்தும்பிறர் நிந்திக்க உன்னால் முடவனனேன்! ஆதலால் நீ உன் தங்கையாகிய கத்துருவைக்குத் தாதியாகக் கடவதென்று சாபமிட்டான். இச்சாபத்தைப்பெற்றும் விநுதை சஞ்சலித்து வருத்தப்படாமல், புத்திராபேக்ஷையினாலே முட்டையை யுடைத்ததற்கு வருத்தமுற்று, (ஆத்திரக்காரருக்குப் புத்தி மட்டு) என்ற பழமொழி நம்மிடத்தில் திருஷ்டாந்தமாயிற் றென்று, தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டிருக்கிற தாயைப் பார்த்து, ஓ அம்மணி! என்னைப் பின்னப் படுத்தினதினால் கோபங்கொண்டு சாபமிட்டேன். இந்தச்சாபம் நீங்க மறுசாபங் கொடுக்கிறேன். அஃதென்னவென்றால்: இதோ யிருக்கிற முட்டையில் எனக்கிளையவனிருக்கிறான். அவனே மிகுந்த பராக்கிரமசாலியாயிருப்பான். அவனாலே உன் சாபம் நீங்கி மகிழ்ச்சி யடைவாயென்று பிரதி சாபங் கூறி, நானிருந்த முட்டையை யுடைத்து என்னைப் பின்னப்படுத்தினதுபோல இந்த முட்டையை யுடைக்காதே பத்திரமென்று உறுதி கூறினன். பின்பு அந்த விநுதை அந்தப் புத்திரனுக்கு அருணனென்றுபெயரிட்டு வளர்த்து வருகிற நாளில், சூரியனானவன் தனது ரதத்தை நடாத்தத் தகுந்த வல்லமையை யுடையவர்கள் யாரென்று எங்கணுந்தேடி, இந்த அருணன் வல்லமையைக் கேள்விப்பட்டுவந்து, அப்பா அருணனே! என் இரதத்துக்குத் தகுந்த சாரதி நீயேயன்றி வேறொருவருமில்லை; ஆதலால், கிருபைகூர்ந்து எனக்குச் சாரதியா யிருவென்று வேண்ட, அப்படியே அருணன் ஒத்துக்கொண்டு சூரியனுக்குச் சாரதியாய் அமைந்தான்.

பின்பு விநுதையானவள் மூத்தகுமாரன் இட்ட கட்டளைப்படி மறுமுட்டையைப் பாதுகாத்துக்கொண்டு வருகிற நாளில், சொர்க்கலோகத்தில் இனிதுவீற்றிருந்து மூன்று லோகத்தையும் காத்துவருகிற இந்திரன், நரை திரை மூப்பு பிணி இவையுறு திருக்கக் கருதி, முப்பத்து முக்கோடி தேவர்களையும் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களையும் மற்றப் பரிசனங்களையும் அழைத்துக்கொண்டு வைகுந்தத்திற்குச் சென்று சங்கு-சக்கரம்-வாள்-கதை,கோதண்டதரனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவைக்கண்டுவணங்கி, ஓபரந்தாமா! ஓகோவிந்தா! ஓ அநாதரட்சகா! ஓ அன்பர்க்கெளியனை நாராயணவென்று பலவாறுதோத்திரஞ் செய்ய, நெடுமால் அன்புகூர்ந்து, ஓ தேவராஜனே! நீ நினைத்துவந்த கருத்தென்னவென்று கேட்க, இந்திரன்-ஆண்டவனே! நரை திரை மூப்பு பிணி என்னும் இவைகளை யாங்கள் அடையாதிருக்கக் கிருபை செய்யவேண்டுமென, திருமால் களிப்படைந்து, ஓ தேவராஜனே! நீ கொண்ட கருத்துக்குத் திருப்பாற்கடல் கடைந்தால் அதில் அமுத முண்டாகும். அந்த அமுதத்தைப் புசித்தால் நரை திரை மூப்பு பிணி இவைகளணுகா. அதற்கு உங்களில் யாராவது சென்று மந்தரகிரியைக் கொண்டுவந்தால், அதனை மத்தாக்கித் திருப்பாற்கடல் கடையலாமென்று திருவாய் மலர்ந்தார். இந்திரன் முதலான தேவர்கள், இதைக் கேட்ட மாத்திரத்தில், ஆ! அந்த மந்தரகிரியென்ன சிறியதா? இவ்வுலகத்துள்ள எல்லாக் கிரிகளினுமிகவும் பெரிதாயிருக்கிறதே! அதைக் கொண்டு வருகிறவர் யாவரிருக்கிறார்களென்று திடுக்கிட்டு நின்றார்கள். அப்போது கத்துருவையின் மூத்த குமாரனான ஆதிசேஷன் இந்திரனைப் பார்த்து, ஓ தேவராஜனே! நீ யேன் கிலேசப்படுகிறாய்? இதோ நான்போய் மந்தரகிரியைக் கொண்டு வருகிறேனென்று உறுதிசொல்லி அதிவேகமாய்ச் சென்று, அந்த மந்தரகிரியை வேரோடும் பிடுங்கி எடுத்துவந்தான். இதைக் கண்ட இந்திரன் முதலானவர்கள் ஆதிசேஷன் பராக்கிரமத்துக்கு மெச்சிப், பலவாறு புகழ்ந்து, பின்பு திருமாலை வணங்கி, இதோ மந்தரகிரி வந்திருப்பதால், நாங்கள் கொண்ட கருத்து நிறைவேறக் கிருபைகூர்ந்து திருப்பாற்கடல் கடைந்து அமுதம்பாலியுமென்று வேண்ட, உடனே திருமால் திருப்பாற்கடலிற்சென்று, மந்தரகிரியை மத்தாக்கிச், சந்திரனைத் தறியாக்கி, ஆதிசேஷனுக்கு இளவு

லாகிய வாசுகியைத் தாம்பாக்கி, ஒரு பக்கத்தில் தேவரும் மற்றொரு பக்கத்தில் அசுரருமாக அத்தாம்பைப்பற்றிக் கடையக் கட்டளையிட்டார். அப்படியே இருதிறத்தாரும் வலித்து வலித்துக் கடைந்தார்கள். இப்படி சில நாள் கடைந்துவர, வாசுகிக்கு மிகுந்த வருத்தம் நேரிட்டு விஷத்தைக் கக்கிவிட்டான். அவ்விஷம் வடவையைப்போற் சீறி, யாவரையும் பஸ்மீகரப்படுத்த வெளிப்பட்டது. அது கண்டு இந்திரன் முதலாகிய தேவரும் திடுக்கிட்டு நடுநடுங்கி, இதென்ன விபரீதமென்று அலறிக் கூக்குரலிட்டு இந்தவேளையிற் பரமன் வந்துதான் இத்துன்பத்தை நீக்கவேண்டுமென்றுன்னி, ஓ கயிலாசவாசா! ஓ பார்வதி சமேதா! ஓ பன்னகாபரணா! ஓ சிருட்டி திதி சங்கார திரோபவானுக்கிரகா! ஓ அகண்டித அலங்கிருத கிருபா சமுத்திர திரிநேத்திர பலகூஸ்திர சாஸ்திர ஸ்தோத்திர பூஜிதாவென்று பலவாறு துதிக்க, அன்பர்க் கெளியவனாகிய சாம்பசிவமூர்த்தி அங்ஙனம் எழுந்தருளி அவ்விஷத்தை உண்டு, தேவர்களிடுக்கத்தை நீக்கிக் கயிலைக்கெழுந்தருளினார். பின்பு தேவரெல்லா மனமகிழ்ந்து வந்து முன்போலக் கடலைக்கடைகிற தருணத்தில், சங்கநிதி - பதுமநிதி - சிந்தாமணி - இரதி - இலக்குமி - அகலிகை-இந்திராணி-அறுபத்தாறுயிரம் அப்சரசுகள்-காமதேனு-கற்பகவிருக்ஷம்-அயிராவதம்-உச்சைசிரவம்-இவைமுதலாகிய பல வஸ்துக்களுந் தோன்றின. அதன் பின்பு அமுதமும் பிறந்தது. அமுதத்தைக் கண்டமாத்திரத்தில் தேவர்களெல்லாம் கடைவதைவிட்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்து, திருமாலை வணங்கிப் பலவாறு துதித்து நின்றார்கள். திருமால் பாற்கடலிற் பிறந்த வஸ்துக்களையெல்லாம் நோக்கி, இரதியை-மாரனுக்கும், காமதேநு-கற்பகவிருக்ஷம்-வெள்ளையானை - வெள்ளைக் குதிரை - ஐராணி - அரம்பாஸ்திரீகள் - சங்கநிதி-பதுமநிதி-இவைமுதலாகிய வஸ்துக்களை இந்திரனுக்கும், அகலிகையைக் கவுதமருக்கும் கொடுத்து, இலக்குமியையும்-கவுத்துவ மணியையும்- தமக்குரியதாகக்கொண்டு, அந்த அமுதத்தை யாவர்க்கும் பகுந்து கொடுக்கக்கருதித், தமக்குள் ஒன்றைநினைத்துக் கொண்டார்.

அஃதென்ன வெனில்: அசுரர்களுக்குச் சுபாவத்திலேயே அதிக வல்லமையும் துர்நடத்தையு மிருக்கின்றன. நரைதிரைமூப்பு பிணி முதலாகியவற்றை நீக்குகின்ற இந்த அமுதத்தையும் புசிப்பாராகில் நெருப்பில் நெய்யை விட்டதுபோல் அதிகபாபத்தைப் பண்ண வாரம்பிப்பார்கள். அதனாலே உலகத்துக்குக்கெடுதி நேரிடும். இதற்கொரு தந்திரஞ் செய்யவேண்டுமென்று கருதி, தமது அமிசையில் ஒருமோகினியை உண்டாக்க நினைத்தார். அப்படி நினைத்த மாத்திரத்தில் சண்பகமலர்போலும் செம்பொன்போலும் சொலிக்கின்ற தேககாந்தியையும், முகிலையொத்த குழலையும், மூன்றாம்பிறையன்ன நெற்றியையும், வில்லனைய புருவத்தையும், வேலைமானும் கண்களையும், வள்ளைபோன்ற செவியையும், எள்மலர்புரையும்நாசியையும், இலவம்பூநிகர்த்த வாயையும், முல்லையென விளங்கும் பல்வரிசையையும், தேனைப் பாகைக்கற்கண்டை நிகர்த்தசொல்லையும், சந்திரவிம்பத்துக்கு நேரானமுகத்தையும், கண்ணாடியையொத்த கபோலத்தையும், கமுகையொத்தகழுத்தையும், வேய்புரைதோளையும், மகரயாழ் நிகர்த்த முன்கையையும், கமலமொத்த அகங்கையையும், கெளிற்றுமீன் போன்ற விரல்களையும், கிளிமூக்கனைய நகங்களையும், மலையை நிகர்த்தமுலையையும், வடபத்திரம்போன்ற உதரத்தையும், எறும்பூர்வரிசைபோன்ற ரோமவரையையும், பிடியினிலடங்கு மிடையினையும், நீர்ச்சுழியொத்த உந்தியையும், அரவப்படம்போன்ற அல்குலையும், வாழையொத்த தொடையையும், ஞெண்டுபோன்ற முழந்தாளையும், சினைவராலனையகணைக்காலையும், ஆமையொத்தபுறவடியையும், தராசையொத்த பரட்டையும், பந்துபோன்றகுதிகாலையும், பவளத்துண்டனைய கால்விரல்களையும், முத்துப்போன்ற நகத்தையும், தாமரை மலர்போன்ற பாதத்தையு முடைத்தாகி; திரண்டு பரந்து நிமிர்ந்து வளர்ந்து நெருங்கி ததும்பி சுணங்கு படர்ந்த இருமுலைகளுங் குலுங்க, அன்ன நடைபோல் நடந்து, பரிமளவாடை வீசச் சுராசுரர்கள்மத்தியில் அகஸ்மாத்தாய் ஜெகன்மோகினி வந்துநின்றாள். அவளைக் கண்ட சுராசுரர்கள் வியந்து, சொற்க மத்திய பாதாள மென்னும் மூன்று தலங்களில் இவ்வண்ணமான திவ்யஸ்திரீ இல்லையேயென்று தமக்குள் பலவாறு நினைத்துப், பிரமைகொண்டு நின்றார்கள். இவர்களில்

தேவர்கள்மாத்திரம் அசுரரை மோசஞ் செய்ய நமது திருமாலே ஜெகன்மோகினி யாய்த் தோன்றினதாகத் தோற்றுகின்றது. எல்லாம்இன் னுஞ்சற்றுநேரத்தில்வெளியா குதென்று கருதித், தங்கள் கருத்தைக் காமத் தின்வழி செல்லவொட்டாமல் அடக்கி யிரு ந்தார்கள். அசுரரோ, யார் யார் எந்தெந்த அவயவங்களைக் கண்டார்களோ, அவ்வவ் வவயவங்களிலேயே தங்கள் கருத்தைச்செ லுத்திச், சித்திரப் பிரதிமை போலவும் உட் காரவைத்த சவம்போலவும் சற்று மசைவின் றி, நெட்டுயிர்ப்போடு வாயைத்திறந்துகொ ண் டிருந்தார்கள்.

அந்தவேளையில் கபட நாடக சூத்திராவ தாரியாகிய பரந்தாமன் யாவரையும் நோக்கி, ஓ சுராசுரர்களே! அமுதத்தைப்பங்கிட ஒரு வர் வேண்டுமே! இதோ யிருக்கிற ஸ்திரீ யைப் பங்கிடக் கட்டளையிடுகிறேன் புசியுங்க ளென்று, ஒரு கிண்ணத்தையும் ஒரு கரண்டி யையுமுண்டாக்கி, அந்த மோகினி கையிற் கொடுத்து, ஓ பெண்ணே! இந்த அமுதத் தை யாவர்க்கும் பங்கிடென்று கட்டளையிட் டார். அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, அசுரர்கள் தன் கண்வலையிற்சிக்கி வருத்தப் பட நடைநொடி பாவனைகளைக் காட்டித், தேவர்களுக்கு அமுதத்தைப் பங்கிட்டு வரு கிருள். அப்படி வருகிறதருணத்தில், ஆதி சேஷன் சகோதரர்களில் இருவர்கள் இது ஏது சுத்த மோசமா யிருக்கின்றது; ஐயோ! பந்தியில் வஞ்சனை செய்யலாமா? நியாய மாய் எல்லாரும் கஷ்டப்பட்ட சொத்து யாவர்க்கும் உபயோகப்பட வேண்டியதுதா னே! அப்படிக்கு உபயோகப்படாமல் விரல் நீக்கி மோர் குடிப்பதுபோல், கஷ்டப்பட்ட நம்மையும் அசுரரையும் நீக்கித் தேவர்கள் மாத்திரம் அமுதம் புசிக்கிருர்களேயென்று தங்களுக்குள் தாமேநினைத்து, இனி நாமும் தேவர்களைப்போல வேடங்கொண்டு தேவ பந்தியில் சேர்ந்தால்தான் அமுதங்கிடைக் கும்; இல்லாவிட்டால் கிடைக்காதென்று தீர்மானித்துத் தேவரூபங்கொண்டு, தேவ பந்தியி லொருபக்கத்திலிருந்தார்கள். அந்த ஜெகன்மோகினி தேவர்களுக்கு அமுதம் பங்கிட்டதுபோல இவ்விருவருக்கும் பங்கிட் டாள். உடனே அவ்வமுதத்தை அசுசியாய் உட்கொண்டார்கள். அதை அருகிலிருந்த சந்திர சூரியர் கண்டு திடுக்கிட்டு, இவ்விரு வரும் உருவத்தில் தேவராயிருந்து, செய் கையில் அசுரரா யிருக்கிருரென்று கருதி, முகம் வேறுபடச் சைகை செய்தார்கள். அதைக்கண்டு அந்த ஜெகன்மோகினி தன் கையிலிருக்கிற கரண்டியால் அவர்கள் மண் டைபிளக்க உடைத்துவிட்டு, அப்பால் அமு தத்தை முன்போலவே தேவர் கூட்டத்துக் குப் பங்கிட்டு வந்தாள். தேவர்களெல்லாம் தாங்கள் பெற்ற அமுதத்தை, அஷ்டாக்ஷர சுரூபியாகிய கடவுளைத் தியானஞ்செய்து உட்கொண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார் கள். மாறுரூபங்கொண்டு அமுதம்புசித்த இருவரும், சந்திர சூரியரால் அல்லவோ நமக்குக் கெடுதி நேரிட்டதென்று வஞ்சின ங்கொண்டு, அவ்வஞ்சினத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு தவஞ்செய்து, பரமன் கிரு பையால் ஒருவன் சூரியனையும் மற்றொருவன் சந்திரனையும் நாளதுவரையில்பற்றிவிழுங்கு கிறதும் கக்குகிறதுமாக இருக்கிருர்கள். இச் செய்கைகளை உலகத்தில் சூரிய கிரகணமென் றும் சந்திர கிரகணமென்றும் வழங்கி வரு கின்றன. பின்பு பங்கிட்டு மிகுந்து நின்ற அமுதத்தை ஒரு பொற்குடத்திற் புகட்டி ஆகாயத்தில் வைத்து, அதற்குப் பல திவ் யாஸ்திரங்களையும் தேவகணங்களையும் காவ லாகவைத்துத்திருமால்முதலானவர்களோடு ஜெகன்மோகினியும் மறைந்து அவரவர் தலத்துக்குச் சென்றுர்கள்.

இடைவிடாது மோகினியினுடையரூப லாவண்யத்தைப் பார்த்துக் கொண்டிருந்த அவ் வசுரர்களோ வென்றால், (வாய்த் தவி டும் போய் அடுப்பு நெருப்பும் போனது) என்ற பழமொழிபோல் அமுதத்தை இழ ந்து, இளித்த வாயராய் யாதொரு பயனு மடையாமல் ஏமாந்து, அடடா!! திருமால் முதலாகிய தேவர்கள் நம்மை ஏமாற்றி அமு தத்தைக் கொடுக்காமற் கொண்டுபோய் விட் டார்களேயென்று அதிக கோபங்கொண்டு, யாவரும் ஒருமிக்கக்கூடி யுத்தஞ்செய்யத் தீர் மானித்துத், தேவர்கள்பேரில் படை யெடுத் துக்கொண்டுவந்து பொன்னுலகத்தி லடர் ந்து இந்திரன் முதலானவர்களோடு யுத்தஞ் செய்தார்கள். இந்தச்செய்தி பிரமனும் திரு மாலும் உணர்ந்து, அதிவேகமாய்வந்து, அவ் வசுரர்களையெல்லாம் நாசப்படுத்தினர்

கள். பின்பு இறந்த அசுரர்கள்போக மற்ற அசுரர்கள் யாவருங்கூடி, இனிஇவ்விடத்தி லிருந்தோமாகில் அடிக்கடிக்கு அபாய நேரி டுமென்று நினைத்துப் பாதாளலோகத்தில் சென்றொடுங்கி நடுங்கி இருந்தார்கள். அப் பால் இந்திரன் முதலான தேவர்களெல் லாம் மிக மகிழ்ச்சி யடைந்திருந்தார்கள். இப்படி யிருக்கிற காலத்தில் திருப்பாற்கட லிற் பிறந்து திருமரு மார்பினனால் இந்திர னிடத்திற் சேர்ந்திருக்கின்ற அயிராவதம் உச்சைசிரவ முதலியவற்றுள், உச்சைசிரவ மென்கின்ற வெள்ளைக் குதிரையானது ஒரு நாள் கடலோரத்தில் வந்திருந்தது. அப் போது ஆதிசேஷன் முதலானவர்களைப் பெற்ற கத்துருவையும் அருணனைப்பெற்ற விநுதையும் வந்து, அக் கடலோரத்தில் நின்று வேடிக்கை பார்த்திருக்கிறபோது, அந்த உச்சைசிரவ மென்கிற வெள்ளைக்குதி ரையைக் கண்டார்கள். இவர்களில் விநுதை யென்பவள் தன் தங்கையாகிய கத்துருவை யை நோக்கி, இதோ இருக்கிற குதிரையைப் பார்த்தையா? புண்ணியவான் புகழைப்போல சுத்த வெண்மையா யிருக்கின்றதென்று சொன்னாள். அதைக் கேட்ட கத்துருவை இந்தக்குதிரைக்கு வாற்புறத்தில் கிஞ்சித் துக் கறுப்பிருக்கிறதென்றாள். சுத்த வெண் மையாயிருக்கிற குதிரைக்குக் கிஞ்சித்துக் கறுப்பிருக்கிறதென்று ஏன் பொய்மை கூறு கிறாய்; நன்றாய்ப்பாரென்று விநுதை சொல் லினாள். இந்த மொழியைக் கேட்ட கத்துரு வை, ஓ அக்கா! இக்குதிரை நீ கூறியபடி முழுவதும் வெண்மையா யிருந்தால் நான் உனக்குப் பணிவிடைப்பெண்ணு யிருக்கிறே ன். நானுரைத்தபடி வாற்புறத்துக் கறுப் பிருந்தால் நீ யெனக்குப் பணிவிடைப்பெ ண்ணு யிருக்கிறையா வென்றாள். விநுதை யொத்துக்கொண்டு, அக்குதிரையை நெருங் கிப் பார்ப்போம் வாவென்று கத்துருவையை அழைக்கக், கத்துருவை நாம்வந்து வெகு நேரமாயிற்று நாளைய தினம் பார்ப்போம் வாவென்ன, விநுதை அதையும் ஒத்துக் கொண்டு, இருவரும் தம திருப்பிடத்துக்கு வந்துசேர்ந்தார்கள். பின்பு கத்துருவைதன் பிள்ளையாகிய ஆதிசேஷன் முதலானவர் களை நோக்கி, ஓ புத்திரர்களே! நானும் என் தமக்கை விநுதையும் கடலோரத்திற்சென்ற போது, உச்சைசிரவ மென்கிற வெள்ளைக் குதிரையைக் கண்டோம். என் தமக்கைசுத்த வெள்ளை இக்குதிரை யென்றாள். நான் அக் குதிரைக்கு வாற்புறத்துக் கறுப்பிருக்கிற தென்று சொன்னேன். என் வாக்குப் பழு தாகாமல் அக்குதிரையின் வாற்புறத்தில்கிஞ் சித்துக் கறுப்புண்டாக்குங்கள். அப்படிச் செய்தீர்களாகில் என் தமக்கையைப் பணி விடைப்பெண்ணாக்கிக் கொள்வேன். இல்லா விட்டால் நானவளுக்குப் பணிவிடைப் பெ ண்ணாகவேண்டுமென்று சொன்னாள். ஆதி சேஷன் முதலானவர்கள் கேட்டுத் திடுக் கிட்டு, ஆ தாயே! அந்த உச்சைசிரவமென் கிறகுதிரை பாற்கடலிற் பிறந்தது. அதற் கொரு மறுவுண்டா? மறுவற்ற குதிரைக்கு ஒரு மறு உண்டாக்குவமாகில் மிகுந்தபாபத் துக்காளாவோம். மேலும் தாயினளவிலேயா சூதிழைப்பது? நாங்கள் அச்செய்கைக்குப் பாத்தியப்படோமென்று மறுத்தார்கள். உட னேகத்துருவை கோபங்கொண்டு, ஜெனமே ஜெயமகாராஜன் செய்கிற சர்ப்பயாகத்தில் நீங்களெல்லாம் மடியக்கடவதென்று சாப மிட்டாள். இதைக்கேட்ட புத்திரர்களில்ஒரு வன் அச்சாபத்துக்குப்பயந்து, அந்தக்குதி ரையின் வாற்புறத்தில் கிஞ்சித்துக் கறுப்பு தோன்ற ஒன்றியிருந்தான். மறுநாள் கத்து ருவை விநுதையை அழைத்துக்கொண்டு அக்குதிரை இருக்கிறயிடத்தில் வந்து, ஓ அக்கா! இதோ பார்த்தையா வாற்புறத்தில் கறுப்பிருக்கிறதென்று காட்டினாள். விநுதை சரிதான் முன்சொன்னவண்ணம் உனக்குத் தாதியாகிறேனென்று ஒத்துக்கொண்டு, அவ ளுக்கு அடக்கமாயிருந்து, அவளிட்டவேலை யைச் செய்துவந்தாள்.

இப்படிச் சிலநாள் சென்றபின்பு, இந்த விநுதை உயிர்த்த மற்றொரு முட்டை பருவ காலம் வந்து தனக்குத்தானே விரிந்தது. அப்படி விரிந்த மாத்திரத்தில் அழகிய சிற கினையும், பழகிய ஆற்றலையும், இளஞாயிறு போன்ற தேககாந்தியையும்பெற்று, இரணி யனை வதைக்கத்தூணில் நின்று வெளிப் பட்ட நரசிங்கமூர்த்திபோல் ஒரு புத்திரன் உற்பத்தியானான். அந்தப்புத்திரன் உடனே ஆகாயத்திலெழும்பிப் பறந்து தன் தாயாகிய விநுதையிடத்து வந்து வணங்கி நின்றான். அதை விநுதை பார்த்து, இன்றல்லவோ பெண்ணாற் பெறும்பேறு பெற்றேமென்று

மிகமகிழ்ச்சியாய்ப் பரமானந்தத்தை யடைந்திருந்தாள். கத்துருவையென்பவள் இந்தப் புத்திரனது புஜபல பராக்கிரமத்தையும் சவுந்தரியத்தையும்கண்டு, பெற்றாலும் இவ்வண்ணமான புத்திரனைப் பெறவேண்டுமேயல்லாமல் பன்றி பலகுட்டிபோட்டதுபோலப் பல புத்திரர்களைப் பெற்றென்னபயனென்று தனக்குள் தானே வருத்தப்பட்டு அப்புத்திரனைப்பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறாள்: ஓ கலுழனே! நீ என் தாதிவயிற்றிற் பிறந்தவனாதலால், என் வயிற்றிற் பிறந்த மக்களுக்குப்பணிவிடைக்காரனாயிருவென்று கூற, அப்புத்திரன் அதற்குஒத்துக்கொண்டு, ஆதிசேஷன் முதலானவர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். இவன் செய்துவருகிற பணிவிடை என்னெனில், ஆதிசேஷன் முதலான நூற்று நால்வரையும் தீவு தீவாந்திரங்களி லெடுத்துப்போய் அவ்விடத்திலுண்டான விநோதங்களையும் இமயம்-மந்தம்-விந்தரம்-நிடதம்-ஏமகூடம் கந்தமாதனம்-நீலகிரி முதலான பர்வதாலங்காரங்களையுங் காண்பித்து வருகிறது.

இப்படி இடைவிடாமல் ஆதிசேஷன் முதலானவர்களைச் சுமந்துசுமந்து வருந்தி மனநொந்து ஒருநாள் தன் தாயினிடத்து வந்து பணிந்து, ஓ அம்மணி! என்னுடைய ஆற்றல்முதலாகியவற்றைஅஷ்டாக்ஷரசுரூபியாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியேயல்லது மற்றொருவராலும் அளவிடக்கூடாது. அவ்வளவு ஆற்றலைப்பெற்றும், சபையைக்கண்டு அஞ்சி மெய்நடுக்கங் கொள்வோர்களுடைய கல்வியும், சபைக்கஞ்சாமல் பேசுகின்ற மூடனுடைய சொல்லும், பிறர்க்குதவியில்லாத செல்வமும், தரித்திரனுக்குண்டாகிய அழகும், நற்குண செயலில்லாத இல்லாளை உடையவன் செய்யும் இல்லற தருமமும் எக்காலத்தும் பயன்படாதவாறுபோல, யான் யாதொரு பயனுமடையாமல் எனக்குப்பணிவிடை செய்பவருக்கு நான் பணிவிடை செய்பவனாகி மல்ல யுத்தத்தினால் காய்ப்பேறுந் தோள்களெல்லாம் ஆதிசேஷன் முதலானவர்களைச் சுமந்து சுமந்து காய்ந்து போயின. இதை யுய்த்து நோக்க நோக்க மனது புண்ணாகிறது. இது என் தலைவிதியென்று தீர்மானித்திருந்தாலும் நீ படுகிற அவஸ்தையைப் பார்த்தால் (உகிர்ச்சுற்றின் பேரில் அம்மிவிழுந்ததுபோலே) அதிக துன்பத்தைக் கொடுக்கின்றது. ஆதலால் தாயே! அந்தக் கத்துருவைக்கு நீ சுபாவத்தில்பணிவிடைப் பெண்ணானையா? அல்லது ஏதோ ஒரு காரணத்தினாலே பணிவிடைப் பெண்ணானையா? எனக்கு விளங்க உரைக்க வேண்டுமென்று கேட்க, விநுதைகேட்டு, அனலிடு மெழுகுபோல மனமது உருகி, அப்பா மகனே! நான் அந்தக் கத்துருவைக்குத் தமக்கை. இன்னும் என்னுடனே பிறந்தவர்கள் பதினொரு பெண்கள். நாங்கள் பதின்மூன்று பெயரும் காசிப முனியின் மனைவிகள். ஒரு காரணத்தினாலே என்சகோதரியாகிய இந்தக் கத்துருவைக்குத் தாதியாகினேன். அந்தக் காரண மென்னவென்றால், உன் தமயனாகிய அருணனிட்ட சாபம். அஃதுயாதெனில், அவ்வருணனிருந்தமுட்டையை பருவமாகாததற்குமுன்னமே உடைத்தேன். அப்போது உன் தமயனுக்கு எல்லா அவயவமுங்கூடிக் கால்மாத்திரங் கூடாமலிருந்தது. அதன்மேல் அவன் கோபங்கொண்டு உன் தங்கைக்குத் தாதியாகக்கடவதென்று எனக்குச்சாபமிட்டான். நான் அந்தச் சாபத்துக்கு வருத்தப்படாமல் அவயவப் பழுதாயிற்றேயென்று துன்பப்படுகிறபோது உன் தமயன் கண்டு அம்மா! என்னைப் பங்கப்படுத்தினதினால் சபித்தேன். இந்தச் சாபம் என் தம்பியால் நீங்குமென்றுகூறிச் சூரியனுக்குத் தேர்ப்பாகனாகப் போய்விட்டான் என்று சொல்லி, அச்சாபப்படி தாதியான விருத்தாந்தத்தையும் விளங்க உரைக்க, கலுழன் கேட்டு வியப்படைந்து தாயை வணங்கி விடைபெற்று, முன்போலவே ஆதிசேஷன் முதலானவர்களுக்குப் பணிவிடைக்காரனாகவிருந்தான்.

இப்படி இருக்கிற நாளில் ஒருநாள் ஆதிசேஷன் முதலானவர்கள் கலுழனைப் பார்த்து, ஓ கலுழனே! மாலிய பர்வதம் விநோதமாயிருக்கிறதென்று கேள்வியாதலால் அதனைப்பார்க்கவேண்டு மென்றார்கள். கலுழன் நல்லது வாருங்கள் கொண்டுபோய்க் காண்பிக்கிறேனென்று சொல்லி யாவரையும் தனது தோளில் ஏற்றிக்கொண்டுபோய் அப்பருவதத்தில் விட்டு, தான் அம்மலைச் சருவி லொருபக்கத்திலிருந்து, அடடா! இதென்னவிதிவசம் கத்துருவை தான்கிஞ்சித்

தேனும் இரக்கமில்லாமல் அடிக்கடி நமது தாய்க்கு வேலையிடுகிருள். இந்தப் புத்திரர் கள் மூடர்களல்லவே! சகல கலைகளையுங் கற் றுணர்ந்தவர்கள். இவர்களில்ஆதிசேஷனே மஹா பண்டிதன். இப்படி யிருந்தும் என் னைத் தம்பியென் றெண்ணுமல் கர்னகரேமா னபணிவிடைகளைச்செய்யச்சொல்லுகிருன். நல்லது பராக்கிரமத்தினுலே இவர்களை அத மாக்குவோமென்ருல், தாய்சொல் தவருகின் றது. இதற்கென்ன செய்கிறதென்று தனக் குள் தானே நினைத்து வருத்தப்படுகிற தரு ணத்தில், நாரதர் அக்கலுழன் கண்முன் தோன்றினுர். அவரைக்கண்டு யாரோ ஒரு மஹாத்துமா வருகிருனென்று விரைவி லெ ழுந்து எதிர்கொண்டுபோய் வணங்கி நிற்க, நாரதர் கலுழனுக்குப் பல ஆசீர்வாதஞ் செ ய்து ஒருவசனம்சொல்லுகிருர்: ஓகலுழனே! உன்னைக்கண்டு தரிசிப்பவர்களுக் கெல்லாம் யாதொரு துன்பமு மடையாது. நீ துன்பப் படுகிற முகத்துடனிருக்கிறதை நோக்கினுல் மிகுந்தஆச்சரியமாயிருக்கின்றது. ஆனதால் உன் மனவருத்தத்தைக் கூறென்று வினவ, கலுழன் தன் தாய்க்குத் தமயனிட்ட சாப மும், அச்சாபம் வந்தடைந்த விதத்தையும் சொல்லி, ஐயா! உச்சைசிரவமென்கிறவெள் ளைக் குதிரைக்கு வாற்புறத்துக்கறுப்புண்டா வென்று வினவ, நாரதர் ஓ கலுழனே! அ ந்த உச்சைசிரவம் சுத்த வெண்மையானது தான். அதற்கு வாற்புறத்துக் கறுப்புண்டா னது உன் சிறியதாயாகிய கத்துருவைசெய்த சூது என்று அந்தச்சூதை விவரமா யெடுத் தோதி மறைந்துவிட்டார். அதற்குள் ஆதி சேஷன் முதலானவர்கள் அம்மாலிய பர்வ தத்தின் விநோதங்களைப் பார்த்துவிட்டுத் திரும்பினுர்கள். அவர்களை முன்போலவே யெடுத்துவந்து இருப்பிடத்திற் சேர்த்து, கத்துருவையும் அவள்புத்திரரும் தாயையும் தன்னையும் செய்கிற துர்நடத்தையை மன தில் நினைத்து, நமது வல்லமையை அவர்க ளுக்குத் தெரிவிப்போமாகில் அப்போது அ வர்களுக்கு நம்மிடத்தில் கிஞ்சித்துப் பய முண்டாகி அதிக வருத்தங்கொள்வார்களெ ன்று கருதிக் காலம் பார்த்துக்கொண் டிருக் கிற தருணத்தில், ஆதிசேஷன் முதலான வர்கள் இந்தக் கலுழனை யழைத்து, ஓ கலு ழனே! கடல்சூழ்ந்த நெடியவுலகத்தி லிருக் கிற எல்லா விநோதங்களையுங் கண்டோம். இனி ஆகாயத்திலிருக்கிற வாயு மண்டலம்- வருணமண்டலம் - சந்திரமண்டலம் - சூரிய மண்டலம் - நக்ஷத்திரமண்டலம் - அக்கினி மண்டலம் - திரிசங்குமண்டலம் முதலாகிய வற்றின் அலங்காரத்தைப் பார்க்கவேணு மென்று கேட்டார்கள். கலுழன் அப்படியே பார்ப்பீர்கள் வாருங்களென்று அவர்களை யெடுத்துக்கொண்டு கேசரிமார்க்கத்தி லெழு ம்பி ஒவ்வொரு மண்டலமாகக் காண்பித்து, தான் கொண்ட கருத்தை நிறைவேற்றப் பருதி மண்டலத்தைத் தாவினுன்.

உடனே ஆதிசேஷன் முதலானவர்கள் அந்தச் சூரிய அழற்சியினுல் சரீரமெங்குங் கண்ணி மிகுந்த துன்பத்தையடைந்து, ஓ கலுழனே! (யானை தன் தலையில் தானே மண் போட்டுக் கொள்வதுபோல) எங்களாலேயே எங்களுக்கு வருத்தம் தேடிக்கொண்டோம். சூரியவழற்சியினுலே பிராணவஸ்தைப் படு கிருேம். எங்களிருப்பிடத்திற்குக் கொண்டு போய் விடென்று பலவாறு பிரியவசனஞ் சொல்லி முறையிட்டார்கள். அதைக் கலு ழன் கேட்டு, இவ்வளவுதானு உங்கள் வல் லமையென்று பின்னும் சிலதூரங் கொண்டு போய்,அவர்கள்கேட்டுக்கொண்டபடி இருப் பிடத்திற் கொண்டுவந்து சேர்த்தான். அப் போது ஆதிசேஷன் முதலானவர்க ளெல் லாம் சூரிய அழற்சியினுலே நொந்து பிரா ணவஸ்தையிலிருந்தார்கள். அதைக்கத்துரு வைகண்டு, ஓ கலுழனே! ஏன்மக்களை இவ் வண்ண மாக்குவித்தையே! இதென்ன விப ரீதமென்று வினவ, கலுழன் ஓ அம்மா! நா னென்ன செய்வேன்? அவர்கள் ஆகாயத்தி லிருக்கிற மண்டலங்களின் விநோதங்களைப் பார்க்கவேண்டு மென்ருர்கள். அவர்கள் கட்டளைப்படி கொண்டுபோய்க் காண்பித்து வந்தேனென்ன, கத்துருவையதுகேட்டுவரு த்தப்பட்டு வருணமந்திரத்தை யுச்சரித்தாள். உடனே மிகுந்த மழைசொரிந்தது. அதனு லே அந்த ஆதிசேஷன் முதலானவர்கள் சூரிய அழற்சியினுல் தங்களுக்கு உண்டாகிய வருத்தத்தை நீக்கி முன்போலானுர்கள். அதுமுதல் இந்தக்கலுழனிடத்துக் கிஞ்சித் தஞ்சி நடப்பார்கள். இப்படி இருக்கிற கால தில், ஒருநாள்கலுழன் கத்துருவையை நோ க்கி, ஓ அம்மா! இப்போது என் தாயும் நா னும் உனக்கு அடிமையா யிருக்கிருேம்.

இந்த அடிமையை நீக்கிக்கொள்ள எனக்கு மனமிருக்கின்றது. இதற்காக நீ என்ன வஸ்து கேட்டபோதிலும் கொண்டு வந்து கொடுக்கிறேன் கேள் என்று வினவ, கத்துருவை இதைக்கேட்டு உன் கருத்தின்படி அடிமைத் தொழிலை நீக்குகிறேன் என் மக்கள் சுகப்பட தேவாமுதத்தைக் கொண்டு வந்துகொடுத்தால் உன்கருத்து நிறைவேறுமென்றாள். கலுழன் அதற்கொத்துக்கொண்டு தன் தாயிடத்துவந்து, கத்துருவைக்கும் தனக்கும் நடந்ததைக்கூறி மறுபடியும் தாயைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ அம்மா! கத்துருவை கருத்தின்படி அத்தேவாமுதத்தைக்கொண்டுவர ஆசீர்வாதஞ்செய்து என்தந்தையிருக்கிற இடத்தையுஞ் சொல்லி எனக்கிருக்கிறபசிநோயுந் தீரக் கட்டளையிட வேண்டுமென்று வினவ, விநுதை கலுழனைப்பார்த்து, அப்பா மகனே! உன் தந்தையாகியகாசிபர் கந்தமாதன பர்வதத்திலிருக்கிறார். நீ கொண்ட பசிக்கு இறைவடகிழக்குச் சமுத்திரத்தின் மூலையிலொரு திட்டிருக்கின்றது. அதில் மகா பாதகர்களாகிய வேடர்களிருக்கிறார்கள். அவர்களைப் புசி. ஆனால் அவர்களில் ஒரு பிராமண னிருக்கின்றான். அவனைப் புசியாதேயென்றுகூறிப் பலஆசீர்வாதஞ்செய்தாள். உடனே கலுழன் மகிழ்ந்து, வேடர்களோடு வேடனுயிருக்கிற பிராமணனை எப்படி யறிந்துகொள்ளுகிறதென்று கேட்டான். அதற்கவள் மகனே! அந்தப் பிராமணனை விழுங்குகிறபோது நெஞ்சில் அழற்சி உண்டாயிருக்கும். அதைக்கண்டு அவனை நீக்கென்றுகூற, கலுழன் கேட்டு மகிழ்ச்சியடைந்து கேசரிமார்க்கத்திலெழும்பி, அந்த வடகிழக்குமூலையை நோக்கிப் பார்க்கும்போது, அவ்வேடர் கூடியிருக்கிற திட்டுத் தோன்றிற்று. உடனே அங்கு சென்று, அவர்களையெல்லாம் வாழைப்பழத்தை விழுங்குகிறதுபோல விழுங்கத் தலைப்பட்டான். இப்படி விழுங்கிவருகிற தருணத்தில் தன் நெஞ்சில் அழற்சியுண்டாயிருந்தது. அதுகண்டு பிராமணனென்று கருதி, அப்பிராமணனை வெளியில் வாவென்றழைத்தான். அப்பிராமணன் என் மனைவிவந்தால் நான் வெளியே வருவேனென்று கூற, கலுழன் அப்படியே அவன் மனைவியையும் அவனையும் கக்கி, அவனுக்குச் சில புத்திசொல்லி விட்டு, மற்றவரையெல்லாம் புசித்தபின்பு தந்தையிருக்கிற கந்தமாதனத்தில் வந்து சேர்ந்தான்.

கருடபகவான் சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## கந்தமாதனச் சருக்கம்

அரிச்சந்தனம்-சந்தானம் - மந்தாரம்-பாரிசாதம் - கற்பகம்-என்னும் ஐந்து தருக்களையொத்திருக்கின்றன. சந்தனம்-அகில்-பாதிரி-மகிழம் - கோங்கு - நாரத்தை - குருக்கத்தி-வாழை-வாகை-செருந்தி-அழிஞ்சில் - குங்குமம்-அனிச்சை-கமுகம்-பலா - தேமா - புளிமா-கருவிளம்-கூவிளம்-அசோகம் - சிந்தூரம்-தேக்கு-இலந்தை-கொன்றை-நாவல்-வேம்பு-ஆத்தி-தேக்கு-விளா-தணக்கு-நெல்லி-பச்சிலை-பாலை-பிராய்-புளி - புன்னை - மருதம் - வெட்பாலை - வேங்கை-வேல் - ஆச்சா - இத்தி-இலவம்-இலுப்பை - ஈந்து - எட்டி-எலுமிச்சை-கடவு-கடுக்காய்-தென்னை-பனை-சண்பகம்-நார்த்தை-கச்சூரம்-வன்னி-குருந்தம்-ஆல்-அரசு-நறுவிலி முதலாகிய மரங்களையும், வனமல்லிகை-மலைமல்லிகை-கொடிமல்லிகை-முல்லை-இருவாட்சி-வெகுளி-அலரி செவ்வந்தி-நந்தியாவர்த்தம்-குன்றி-குமிழ்-நொச்சிமுதலாகிய செடிகளையும், வெண்டாமரை-செந்தாமரை-அல்லி-ஆம்பல்-குவளை-காந்தள் - நீலோற்பலம் முதலியவைகள் நிறைந்த தடாகங்களையும், சிங்கம் - யாளி-புலி-யானை-குதிரை-பசு-எருது- ஆடு-பன்றி-கவரிமான்-புள்ளிமான்-வேசரி-ஒட்டகம்-நரி சுவானம்-இற்பூனைபுநுகுபூனை- சவ்வாதுபூனை-செங்குரங்கு-கருங்குரங்கு-வெண் குரங்கு-எலி-கரடி-எருமை-பாம்பு இவை முதலாகிய மிருகங்களையும், மயில்-அன்னம்-குக்குடம்-கழுகு-அசுணம்-கிளி-சிம்புள்-சக்ரவாகம்-வலியன்-சிச்சிலி-சம்பங்கோழி - காடை-கவுதாரி-நாரை-வண்டு முதலாகிய பறவைகளையும், பரமன் சடாடவியில் நின்றிழியும் கங்கையொத்த அருவியையும் உடைத்தாகி, வேதாகமங்களை யுணர்ந்து நல்லொழுக்கத்தின்கண் நின்றோர்க்கெல்லாம் ஆதரவாகி, சிற்றின்பத்துக்குக்காரணம் ஸ்திரீகளுடைய கந்தமாதன மென்று சொல்லுவதுபோலப் பேரின்பத்துக்குக் காரணம் இந்தக் கந்தமாதனந்தானென்று யாவரும் சொல்ல உயர்

ந்து பருத்து விளங்கியிருந்தது. விநுதை யின் புத்திரனுகிய கழலுன் அந்தகந்தமாத னத்தின் விந்தைகளனைத்தையும் பார்வை யிட்டு, முனிவர்களையும் முனிவர்களிருக்கிற ஆசிரமங்களையும் நோக்கிப் பலவாறு புகழ் ந்து, பின்பு தன்தந்தையாகிய காசிபமுனிவ ரிருக்கிற ஆசிரமத்தைக்கண்டு, மெய்-வாய்-கண்-மூக்கு-செவி-வழியாகிய சப்தம்-பரிசம் ரூபம்-ரசம்-கந்த மென்னும் ஐம்புலன்களை யும் அடக்கி அறிவைப் பிரமத்தினிடத்திற் செலுத்தித் தியானஞ் செய்துகொண்டிருக் கும் காசிபரைக்கண்டு சாஷ்டாங்கமாக நம ஸ்காரஞ் செய்தான். உடனேகாசிபர்பன்னக கேசரிக்குப் பலஆசிகள்வழங்கித் தேககாந்தி யினையும் ஆற்றலையும் நோக்கி உடல் முழு தும் புளகம்போர்ப்பக்கலுழனை வாரித்தழுவி அப்பா மகனே! தற்காலம் என்னிடத்தில் வந்தகாரண மென்னவென்று வினவ, கலு ழன் தான்வந்த காரணத்தை விரித்துரைத்து அடிமைத்தொழில் நீங்க அமுதங் கொண்டு வரவும் தங்களிடத்தில் வரப்பிரசாதம் பெற வும் என்பசியாறவும் வந்தேனென, காசிபர் கேட்டு மகழ்வடைந்து நீசிறந்த ஆற்றலைப் பெற்று அமுதத்தைக் கொண்டுவரக்கடவது. உன்பசியாற ஆகாரங்காட்டுகிறேன். அதனை யும் புசியென்று சொல்லிக் கூறுகிறார்.

அளகாபுரியென்னும் நகரத்தில் சுக்கி ரன் நதிபன்என்று இரண்டுபிராமணருண்டு. அவர்கள் ஒருவர்க்கொருவர் சகோதரர்கள். ஒருநாள் நதிபன் தன் தமயனுகிய சுக்கிரனை வணங்கி என்பாகத்தை எனக்குக் கொடு வென்று வினவ, சுக்கிரன் பாகங்கொடுக்க மனமில்லாதவனுய் நதிபனை வைய, அதன் மேல் ஒருவர்க்கொருவர் விரோதப்பட்டுகர்ன கடூரமானவசனங்களை வழங்கினார்கள். அதில் மூத்தவனுகிய சுக்கிரன் நதிபனைப் பார்த்து அடா துன்மார்க்கா! மரியாதை யில்லாமல் என்னை இகழ்ந்ததினுல் நீ ஆறுயோசனையக லமும் பன்னிரண்டு யோசனை யுயரமுமாகிய யானையாகக் கடவதென்று சபித்தான். நதி பன் பார்த்து எனக்குச்சேரவேண்டிய பிதுர்ப் பாகத்தைக் கேட்டால் எனக்குக் கொடுக்கா மல் என்னைத் தூஷித்தது மல்லாமல் என் னைச் சபிக்கிறையா? சபாசு! இது நன்ருயிருக் கின்றது. ஞாயமில்லாமல் சாபங் கொடுத்த படியால் நீ மூன்றுயோசனை அகலமும் ஆறு யோசனை யுயர்வாகிய ஆமையாகக் கடவது என்று சுக்கிரனைச்சபித்தான் அப்படியே யிரு வரும் அவ்வுருவங்கொண்டு வடமேற்குச் சமுத்திர மூலையில் என்னேரமும் யுத்தஞ் செய்துகொண் டிருக்கிருர்கள். அதனுல னேக சீவன்கள்வருத்தப்படுகின்றன. ஆகை யால் நீ அவ்விருவரையும் புசிப்பாயென்று கட்டளையிட, கலுழன் மஹாபாக்கியமென்று அக்கட்டளையைச்சிரமேற்கொண்டு வணங்கி விடைபெற்று ஆகாயத்திலெழும்பிப்பறந்து வடமேற்குச் சமுத்திர மூலையை நோக்கும் போது, யானையும் ஆமையும் தோற்றப்பட் டன. அவைகளைக் கலுழன் கண்டு, உடனே அவைகள்மேல் பாய்ந்து, அவ்விரண்டை யுந் தனது காலில் ஏற்றிக்கொண்டு கேசரி மார்க்கத்திலெழும்பி இவ்விரண்டையும் ஓரி டத்தில் வைத்துப் புசிக்கவேண்டுமே! இவ ற்றை எவண்வைக்கலாமென்று நாலுதிசை யும் உற்றுப்பார்க்கும்போது, நூறுயோசனை விஸ்தீர்ணமுள்ள அனேகங் கிளைகளையுடை த்தாய் உயர்ந்து பெருத்திருக்கிற ஒரு ஆல மரத்தைக் கண்டு, அதனிடத்திற் சென்று, ஒருகிளையில் அந்த இரண்டு ஜெந்துக்களை யும் வைத்துத் தானுமிறங்கினுன். உடனே அக்கிளை கனம் பொறுக்காமல் முறிந்தது. கலுழன் முறிந்துவிழுகிற கிளையைப் பார்த் தான். அதில் அங்குஷ்டப் பிரமாணமுள்ள வால்கில்லியர் என்கிற முனிக்கூட்டங்கள் இலைக்கொவ்வொருவராயிருந்து தவஞ்செய் தலைக் கண்டு திடுக்கிட்டு, அடடா! மோசம் வந்தது. வெற்று மரமென்று நாம் வந் தோம். இதில் மகாநிலைபெற்ற தபசிகளிருக் கிருர்கள். இக்கிளை பூமியில் விழுந்தால் இவர்கள் தவத்துக்குப் பின்னம் வரும். அத னுல் நமக்குக் கெடுதி நேரிடும். ஆதலால் இவர்கள் தவத்துக்குப் பின்னம் வராமல் இக் கிளையைக் காலினுலிடுக்கிக்கொண்டு நமது தந்தை யிடத்துச் சென்று வினவினுல் நல முண்டாகும். இல்லாவிட்டால் பழுது நேரி டுமேயென்று யோசித்து, அந்த இரண்டு ஜெந்துக்களுடனே அக்கிளையையும் ஏற்றுக் கொண்டு காசிப ரிடத்தில்வந்து வணங்கி இதனைச் சொல்லுவான்.

ஓ ஐயனே! தாங்களிட்ட கட்டளைப்படி யே சென்று அந்த இரண்டு ஜெந்துக்களை யும் எற்றிக்கொண்டுபோய் புசிக்க, ஒரு ஆல

மரத்தின் கிளையிலிறக்கி நானுமிறங்கினேன் கனம் பொறுக்காமல் கிளைமுறிந்தது. அக்கிளையைப் பார்த்தால், அங்குஷ்டப்பிரமாணமுள்ள முனிவர் மயமாயிருக்கின்றது. இக்கிளையைப் பூமியில் விட்டால் அவர்கள் தவத்திற்கு கெடுதிவருகிறதுமன்றி, எனக்குஞ் சாபம் வருமென் றஞ்சி வந்தேன். இதற்கென்ன செய்வேன் என்று முறையிட, காசிபர் விரைவிலெழுந்து வந்து, அக்கிளையிலிருக்கும் வால்கில்லியரைப்பார்த்து, ஓமஹாதபோநிதிகளே! நீங்களிருந்து தவஞ்செய்கிற கிளையை முறித்தவன் ஆதியில் உங்கள் கிருபையினாலே புத்திர காமேஷ்டி யாகஞ் செய்தேனே! அந்தயாகத்தில் உதித்த எனது புத்திரன். அவன் நீங்கள் தவஞ்செய்கிற மரமென்று அறியமாட்டான். வெற்று மரமென்று நினைத்து அம்மரத்தின்மேல் வந்திறங்கினான். அதனாலே கிளை முறிந்தது. நீங்கள் சினங்கொண்டு என்புத்திரனைச் சபிக்காமல் காப்பாற்றவேண்டுமென்று வேண்ட, வால்கில்லியர் காசிபரைநோக்கி, ஓ ஐயனே! உமது புத்திரன்பேரில் எங்களுக்குக் கோபமில்லை. எங்களைப் பூமியில் விடுவானாகில் எங்கள் கருத்துக்கிசைந்த விடத்துக்குச் செல்கிறோம் எனவும், காசிபர் மகிழ்ந்து கலுழனைப் பார்த்து, அப்பா மகனே! மெதுவாய்க் கிளையைப் பூமியில் விடென்று கூற, கலுழன் மகிழ்ச்சியடைந்து கிளையைப் பூமியில் விடுத்தான். உடனே வால்கில்லியர் பூமியிலிறங்கிக் காசிபரையும் கலுழனையும் வாழ்த்திப் போயினார்கள். போயின பின்பு கலுழன் காசிபரைநோக்கி, இக்கிளையை எந்தவிடத்திற் சேர்க்கிறது? இந்த ஜெந்துக்களை எந்தவிடத்தில் வைத்துப் புசிக்கிறதென்று வினவ, காசிபர் கலுழனைப் பார்த்து, ஓ புத்திரசிகாமணியே! இந்தக் கிளையை இமயமலைக்கருகிலிருக்கிற நரமேத பர்வதத்தில் வைத்துவிட்டு நீ இமயமலையின்மேலிருந்து இச்செந்துக்களைப் புசித்து தெய்வலோகத்திற் சென்று அமுதங் கொண்டுபோவென்று கட்டளையிட்டார். கலுழன் அவ்வாறே அக்கிளையை நரமேதபர்வதத்தில் வைத்துவிட்டு இமயமலையில் வந்து அந்த இரண்டு செந்துக்களையும் புசித்துப் பசியாறினான்.

கந்தமாதனச்சருக்கம் முற்றிற்று.

---

ஆறுவது

## அமுதங்கொணர்ந்த சருக்கம்

கலுழன் அமுதத்தைக் கொண்டுவரையத் தனித்துத் தன் தாயையும் தந்தையையும் மனதிலே தியானித்து உயர எழும்பி, அமுதமிருக்கும்நாட்டை நாடிவருகிறான். இப்படி வருகிறபோது தனது செட்டைக் காற்றினாலே மூகிலினங்களெல்லாம் திகிலடைந்து இவ்வகைப்பட்ட கரேமானகாற்றை எப்போதுங் கண்டதில்லை யாதலால், சற்றுநேரம் இங்கு நிற்பமாகில் நின்றவிடந் தெரியாமற் போகும்படி நேரிடுமென்று நினைத்துத் தக்ஷணம் அண்டர் நாட்டிற்சென் றடைந்தன. மலைகளெல்லாம் வேரற்றன வாயுபகவானும் திடுக்கிட்டுக் காற்றுக்குத் தலைவனாக நாமிருந்தும், இக்காற்று ஏது ஊழிக்காற்றோ என்னமோ வென்று மருண்டு ஒளித்தான். இப்படியாகக் கலுழன் மஹா உக்கிரத்துடனே வருகிறதருணத்தில், இந்திரனானவன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கின்னரர்-கிம்புருடர்-சித்தர் - வித்தியாதரர் முதலானவர்களோடு கொலு விருக்கிறபோது, அவன் கண்முன் சில துர் நிமித்தங்கள் தோன்றின. அந்தத் துர் நிமித்தத்தை இந்திரன் நோக்கி, ஆ! இதென்ன ஆச்சரியம்! ஒருநாளுங்காணாத துர் நிமித்தத்தை இன்றையதினங் கண்டோம். இதனால் என்னவிளையுமோவென்று திகிலடைந்து, தனது குருவாகிய வியாழபகவானிடத்திற் சென்று வணங்கி எதிர்நின்று தான்கண்ட துர்நிமித்தத்தையுரைக்க, வியாழபகவான் கியான திருஷ்டியினாற்பார்த்து இந்திரனைநோக்கி, ஓ தேவராஜனே! அந்த துர் நிமித்தத்துக்குக் காரணமென்னெனில், காசிபருக்கு விநுதையினிடத்து உதித்த புத்திரன் கலுழன். அவன் தன் தாயின் அடிமைத்தொழிலை நீக்க உனதிடத்திலிருக்கிற அமுதத்தைக் கொண்டுபோகவருகிறான் அதனால்தான் இத்துர்நிமித்தந் தோன்றிற்று என்றுகூற, இந்திரன் ஓ ஆண்டவனே! ஒரு பறவை என் சுவாதீனத்திலிருக்கிற அமுதத்தைஎடுத்துப்போகுமா? நானென்ன அவ்வளவுபேதையா? எனக்குத் தெய்வப்படை இல்லையா? இதென்ன ஆச்சரிமென்றுகூற, வியாழபகவான் நகைத்து, ஓ தேவராஜனே!

என்ன நீமறந்துபேசுகிருய்? முன்னம் காசிபர் புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்தபோது நாமெல்லோரும் போயிருந்தோம். அந்தப் புத்திரகாமேஷ்டி யாகத்துக்கு வால்கில்லியர் என்னு முனிவர்கள் தாங்கள் சுமக்கத்தக்க ஓமதிரவியங் கொண்டுவந்தார்கள். நீ அவர்களைப்பார்த்து ஆ! இவர்களென்ன அங்குஷ்டப் பிரமாணமுள்ளவர்களா யிருக்கிருர்களென்று சற்றே இகழ்ச்சியாக நினைத்தாய். அதனை அந்த வால்கில்லியர்கள் உணர்ந்து இந்தத் தேவேந்திரனுக்கு இவ்வளவுகர்வமாவென்று மனதில் நினைந்து இதோசெய்யப்போகிற புத்திரகாமேஷ்டி யாகத்திலுதிக்கிறவன் இந்திரனுக் கிந்திரனைக் கடவதென்று இந்திர மந்திரத்தைச் செபித்தார்கள். அது கண்டு நீ நடுங்கிப்பயந்து அவர்களை வேண்டிக் கொண்டதின் பேரில் பறவைகளுக்கெல்லாம் இந்திரனைக்கடவதென்று வேருரு விதமாய் மந்திரத்தைத்திருப்பி உச்சரித்தார்கள் அதிற்பிறந்தபுத்திரன்தான் கலுழன் அவன்தான் அமுதத்தை எடுக்க வருகிருன். அந்த வால்கில்லியர் இந்திரமந்திரத்தையே யுச்சரிப்பாராகில் உனக்கு இந்திரப்பட்டமேது? அவ்வளவு பராக்கிரமத்தையுடைய சிலாக்கியவான் வருகிருன். அவன் எப்படியும் அமுதத்தைக்கொண்டு போவானென்ருர் அதற்குஇந்திரன்-தெய்வகணங்களும் - தெய்வப்படைகளும் காவல் பூண்டிருக்கிற அமுதத்தை எவ்வாறு எடுத்துப்போவான் பார்ப்போமென்று சொல்லி, குருவை வணங்கி விடைபெற்றுத் தனது சபையிற்சேர்ந்து தன்சேனைகளனைத்தையும் வரவழைத்துக் கலுழன் அமுதத்தை எடுக்க வருகிருனுதலால், மிகுந்த சாக்கிரதையோடு காவலாயிருங்களென்று கட்டளையிட்டுத் தானும் போர்க்கோலங்கொண்டிருந்தான்.

கலுழன் யுகாந்தகாலங்களில் பிரசண்டமாருதம் வெளிப்பட்டா லெப்படியோ அப்படியே சொற்கலோகமெல்லாந் தத்திக்கெட்டுத்தடுமாற மிகுந்த காற்றைத் தனது சிறகினு லுண்டாக்கி, பார்ப்பவர்களெல்லாம் மனந் திடுக்கிட்டுக்கலங்கிச் சித்திரப்பதுமைபோல அசைவற்றுநிற்கத் தனது பராக்கிரமத்தைக்காட்டி,மகா வேகத்துடன்அமுதமிருக்குந் தானத்தில் வந்தான். அந்த அமுதத்துக்குக் காவலாளிகளா யிருக்கிறவர்களோடு கூட இந்திரன் கட்டளைப்படி வந்திருக்கிற அஷ்டவசுக்களும் மற்ற தேவகணங்களும் ஒருமிக்கக்கூடி,தங்கள் தங்கள் கையிலிருக்கிற வேல்-வாள்-கதை-சூலம் பிண்டி-பாலம்- சக்ரம்-தோமரம்-இருப்புலக்கை-ஈட்டி-பாங்கு -கடாரி-சுருள்கத்தி இவைமுதலாகியஆயுதங்களைக் கலுழன்மீதெறிந்து எதிர்த்து அட்டகாசஞ் செய்து நின்ருர்கள். கலுழன் கண்டு குஞ்சிரிப்புகொண்டு,தனது சிறகினலே அப்படைகளையெல்லாம் சிதற அடித்து,அச்சிறகினலும் சிறகின்காற்றினலும், காலினலும், கால்நகத்தினலும் புடைத்து, மூக்கினல் எவரையும் அண்டவொட்டாமற் பாய்ந்து கொத்தி தேவகணங்களை யெல்லாந் திக்கிலொருவரா யோடிப்பதுங்கும்படியாகத் துரத்தினன். அதனலேதேவகணங்களெல்லாம் ஒருவர் போனவழி ஒருவர்போகாம லோடினர்கள். அதுகண்ட அனலன், அணிலன், ஆபச்சவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என்னும் அஷ்டவசுக்களும்வந்தெதிர்த்து, தங்கள்கைவில்லைவளைத்துச் சோனைமாரிபோலச் சரவருஷஞ் சொரிந்தார்கள். உடனே அக்கலுழன் அச்சரங்களையெல்லாம் தன் சிறகினல் தவிடுபொடியாக்கி, அந்த வசுக்கள்பிடித்திருக்கும் வில்லுகளைத் தன் காலினலெற்றி முறித்தான். அதற்கவர்கள் மிகுந்த கோபங்கொண்டு, அவரவர்கள்தபஞ்செய்துபெற்ற இந்திராஸ்திரம், சந்ராஸ்திரம், நாகாஸ்திரம், அக்கினியாஸ்திரம், வாயுவாஸ்திரம், மாயாஸ்திரம், குபேராஸ்திரம், வருணஸ்திரம், அந்தகாஸ்திரம், சூரியாஸ்திரம், இடியாஸ்திரம், பிரம்மாஸ்திரம் முதலான திவ்வியாஸ்திரங்களை எடுத்துவிட்டார்கள். அவைகளைக்கண்டு, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தியானித்து ஒரு அஸ்திரமாகிலும்தன்மேற்படாமலிருக்கத் தன் சாகசத்தினல் தப்பித்துக்கொண்டு அவ்வசுக்களைத் தன் காலால் புடைத்துத் தள்ளினன். அவ்வசுக்கள் உடனே திக்குத்திசை தெரியாமல் சாவுக்குச் சரியான மூர்ச்சை யடைந்தார்கள். கலுழன்மீறி அமுதகலசத்தி னருகில் வந்தான். அந்த அமுதகலசத்தி னருகில் வடவாமுகாக்கினி போலஅக்கினிக்காவலிருந்தது அதைகண்டு அட்டா! இதற்கென்ன செய்கிறதென்று யோசித்து, உடனே ஆகாயத்திலெழும்பி வானநதியில் முழுகிச் சலத்தைச்சிறகிலேந்

திவந்து அந்த அக்கினியில் விட்டு க்ஷண நேரத்தில் அவித்து அப்புறஞ் செல்லுகையில், ஒருசக்கரம் சுழன்றுகொண்டுமேல்வந்தது, அதைக்கண்டு விரைவில் தன் உடலைச் சுருக்கி அச்சக்கரத்துக்குத் தப்பித்துக்கொண்டு அமுத கலசத்தை எடுக்கிறபோது அந்த அமுதகலசத்தை பின்னிட்டுக்கொண்டிருந்த இரண்டு நாகஞ்சீறிஎழுந்தன, அந்நாகங்களை ஒரே அறையாகத் தன்கால் நகத்தால் அறைந்து உடலைப் பிளந்துவிட்டு அமுதக்கலசத்தைஎடுத்துக்கொண்டுமிகுந்த மகிழ்ச்சியுடன் திரும்பினன். இந்தச் சேதியை தூதுவரால் இந்திரன்கேட்டு அதிவேகமாய்வந்து தன்கையிலிருக்கிற வச்சிராயுதத்தை விட்டெறிந்தான். அந்தவச்சிராயுதம் வந்து கலுழன்மேல் விழுந்து ஓரிறகைப் பறித்துக்கொண்டு போயிற்று. அப்போது கலுழன் இந்திரனைப்பார்த்து, ஓ தேவராஜனே! நீயார்? நானர்? வேறொருவருமல்ல. எல்லாங்காசிபருடையபுத்திரர்தான். ஆனல் நீ மூத்தவன் நீயேஎன்மேல்வச்சிராயுதத்தை ஏவினல்அதைப்பழுதாக்கலாமா? அதற்காக ஓரிறகு கொடுத்தேன். இனிமேலென்னைச் செயிக்கலாமென்னும் ஆசைவைக்காதேயென்றுசொல்லி, அமுதகலசத்தை எடுத்துக் கொண்டு கேசரிமார்க்கத்திற் சென்ருன்.

அதை இந்திரன்பார்த்து, இனி நம்மால் இக்கலுழனை வெல்லக்கூடாது நமக்காதாரமான அமுதத்தை நாமடையவேண்டியதற்கு முன்னம் இந்த அமுதத்தை நமக்குக் கொடுத்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை நினைத்தால்தான்ஒருவழியுண்டாகுமென்றுகருதி, ஓ ஹரி ஹரி! கோவிந்தா! வைகுந்தவாசா! அநாதரக்ஷகா! அன்பர்க்கெளியோனே யென்று இந்திரன் பலவாறு தோத்திரஞ் செய்கிறபோது, எங்கு நிறைந்திருக்கிற ஸ்ரீமந் நாராயணமூர்த்தி வைகுந்தத்தைவிட்டு, அமுத கலசத்தை எடுத்துச் செல்கின்ற கலுழன்முன் சங்கு-சக்கரம்-வாள் - கதை - கோதண்டபாணியாய்த் தோன்றினர். கலுழன் அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, ஓ பரந்தாமா! ஓ பரமதயாளா! ஓ பக்தரக்ஷகா! ஓ பன்னகசயனு! ஓ கோவிந்தா! ஓ மாதவா! ஹரிஹரி! என்று துதிக்க, திருமால் மகிழ்ந்து, ஓ கலுழனே! அருளுடைமை-அன்புடைமை - ஒழுக்கமுடைமை-வலிவுடைமை முதலியவற்றைப் பெற்ற எல்லாரிலும் நீ மகா சிலாக்கியவான். ஆதலால் உன்னைக்காணவந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேளென்ருர். கலுழன் மகிழ்ந்து, ஓ ஐயனே! நல்லொழுக்க வழியில் நின்று பிசகாதவனுய்த் தங்களிடத்தன்புள்ளவனுய் எந்நாளும் அழிவில்லாதவனு யிருக்கக் கிருபை செய்யவேண்டுமென்று கூற, திருமால் அவ்வாறு வரங்கொடுத்துக் கலுழனைப் பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிருர்: ஓ ககபதி! நீ நமக்கு வாகனமாகவும் துவசமாகவு மிருக்க வேண்டுமென்று கூற, கலுழன் மகிழ்ந்து அப்படியே ஆகிறேனென்று கூற, உடனே திருமால் வைகுந்தத்திற்கு எழுந்தருளினர். அந்தவேளையில் இந்திரன் கலுழனை நெருங்கி, ஓ பன்னகவைரீ! நீயும் நானும் வேறல்ல. நான் காசிபர் மனைவிகளில் அதிதி பெற்ற புத்திரன். நீயோவிநுதைபெற்ற புத்திரன். ஒருவர்க்கொருவர்சகோதரர்கள்தான். ஆதலால் எங்களுக்கு ஆதாரமாயிருக்கிற அமுதத்தைக் கொடுத்தால், உன்னல் அமுதங் கிடைத்ததென்று நினைத்துக் கொள்வோம். கிருபை செய்யென்றுகூற, கலுழன் இந்திரனைப் பார்த்து, ஓ தேவராஜனே! எனது அன்னை உனது அன்னையல்லவா? அவள் ஒருவர்க் கடிமையா யிருக்கிறது நலமா? ஆகையால் அவ்வடிமையை நீக்கிக் கொண்டு போகிறதை நீ யேன் மறிக்கிருயென்றுகூற, இந்திரன் அதைக் கேட்டு, ஓ கலுழனே! உன்னிஷ்டப்படி நீ கொண்டுபோ! ஆனல் எனக்கொரு வாக்குச் சகாயஞ் செய். அஃதென்னெனில் - அமுதத்தைக் கொண்டுபோய்க் கத்துருவைபி னிடத்திற் சேர்த்து, எங்கள் அடிமைத்தொழில் நீங்கிற்ருவென்று கேட்டுக்கொண்டு, உன்தாயும் நீயும் வெளிப்படுங்கள் அப்போது ஆதிசேஷன் முதலானவர்கள் அமுதத்தைப் புசிக்க அந்தக்குடத்தை மொய்த்துக்கொள்ளுவார்கள். அந்தவேளையில் நீ ஆதிசேஷன் முதலானவர்களைப் பார்த்து, இது தேவாமுதமாயிற்றே; ஸ்நானஞ்செய்து சுசியாய்ப் புசியுங்களென்றுகூறினல் அவர்கள் ஸ்நானஞ் செய்யப்போவார்கள். அப்போது நான் ஒரு மாயஞ்செய்து அமுதத்தைக்கொண்டுபோகிறேனென கலுழன் அதற்குச் சம்மதித்து, அவ்வாறு சொல்லுகிறேன் நீ எனக்கொரு வரங்கொடுக்கவேண்டும், அதென்னவென்

ருல், என்னை மதியாமல் எனக்கு அதிவேலை யிட்ட ஆதிசேஷன்முதலானவர்கள் எனக்கு இரையாக வரங்கொடுவென்று வினவ, இந்திரன் அந்த வரத்தைக் கொடுத்து, ஒருவித மாய் வேடங்கொண்டு அக் கலுழனுடனே சென்ருன். கலுழன் அமுதகலசத்தைக் கத்துருவையிடத்தில்சேர்த்து, அம்மா! இதோ அமுதகலசங்கொண்டுவந்தேன். இதை ஏற்றுக்கொண்டு எங்கள் அடிமைத்தொழிலை நீக்கென்று வேண்ட, கத்துருவை ஒருவர்க்கும் அகப்படாத அமுதத்தைப் பார்த்தமாத்திரத்தில் அதிகமகிழ்ச்சியடைந்து, ஓ கலுழனே! இன்றுமுதல் நீங்கள் கருத்துக்கிசைந்த விடத்திற் சென்று சுகமாயிருங்கள். இனி அடிமையென்கிற பெயரே யில்லையென்று கூற, கலுழன் மகிழ்வடைந்து தன் தாயை அழைத்துக்கொண்டு வெளிப்பட்டான். அப்போதுஆதிசேஷன்முதலானவர்கள் அமுதகலசத்தைக்கண்டு, மிகுந்த ஆவலோடுவந்து புசிக்க மொய்த்துக்கொண்டார்கள். கலுழன் அதுகண்டு, ஓ கத்துருவை புத்திரர்களே! இதென்ன இலேசான வஸ்துவா? தேவாமுதமல்லவா? இதனை அசுசியாய்ப் புசிக்கலாமா? சுசியாய்ப் புசியுங்களென்றுசொல்லி தன் தாயும் தானும் வைகுந்தம்போய்ச் சேர்ந்து, ஸ்ரீமந் நாராயணமூர்த்திக்கு வாகனமும் துவசமுமாயினன். இந்தக் கலுழபகவான் சரித்திரத்தைக் கேட்டவர்களுக்கு இகபர சுகமிகும்.

இங்கே ஆதிசேஷன் முதலானவர்கள் கலுழன் கூறியபடி சுசியாய்ப் புசிப்பது நலமென்றெண்ணி, ஸ்நானஞ்செய்துவர யாவரும் சென்ருர்கள். அந்த வேளையில் இந்திரன் ஒருவித மாயவேடங்கொண்டு, அந்த அமுதகலசத்தை யெடுத்துக்கொண்டு தனது லோகத்திற் சென்று, அந்த அமுதகலசத்துக்கு முன்னிருந்த காவலைவிட அதிக காவல் வைத்து மிகுந்த மகிழ்ச்சியுடனிருந்தான். ஸ்நானஞ்செய்யப் போயிருந்த ஆதிசேஷன் முதலானவர்கள் அதனைமுடித்து மகா சுசியுடனே அமுதகலசம் வைத்திருந்த விடத்துக்குவந்து பார்த்தார்கள். அவ்விடத்தில் அமுதகலசத்தைக் காணமல் திடுக்கிட்டுத் தாயாகிய கத்துருவையிடத்திற்சென்று, தாயே! அமுதகலச மெங்கேயென்று கேட்டார்கள். ஐயோ மக்களே! அங்கிருந்ததே எங்கேபோயிற்றென்று அலறிக்கையை நெறித்துக்கொண்டு வந்து பார்த்தாள். அங்கு அமுதகலச மில்லாமையைக் கண்டு ஆ புத்திரர்களே! உங்களைப்போல் உலகத்தில் அபாக்கியவான்களில்லை. கைக்கெட்டின பொருள் வாய்க்கு எட்டாமற்போயிற்று. இனி அதற்காகத் துன்பப்படுவதில் ஒரு பயனுமில்லை. மகா பலவானுன கலுழன் அடிமையும் நீங்கிற்று. (கலையுமம்பைக்கண்டு கட்டியிருந்தவிதை வட்டிக்குவிட்டான்) என்கிற பழமொழி நமக்குத் திருஷ்டாந்தமாயிற்றே என்றுகூறி மனையிற்சென்ருள் ஆதிசேஷன் முதலானவரும் ஏங்கி ஐயோ மகா பராக்கிரமசாலியாகிய கலுழனுல் கிடைத்த அமுதம் நமக்குப் புசிக்கிறதற்குப் பிராப்தியில்லை யென்று வருத்தப்பட்டு, அவ்வமுதகலசத்தை வைத்திருந்த தருப்பை மணக்கிறதைப் பார்த்து, இந்தத் தருப்பையில் கிஞ்சித்து அமுதம் சிந்தினதாயிருக்கிறதென்று நினைத்து, யாவரும் ஒன்ருகக்கூடி அத்தருப்பையை நாக்கினுல் நக்கினுர்கள். அப்படி நக்கினமாத்திரத்தில் அவர்கள் நாக்குகளெல்லாம் இரண்டு பிரிவாகப்பிளந்தன. அதன்மேல் ஆதிசேஷன் முதலானவர்கள் துன்பமுற்று இருந்தார்கள். சில நாள் சென்றபின்பு ஆதிசேஷன் தன்னந்தனியே யிருந்து கலுழன் பெற்ற வரங்களையும் திருமாலுக்கு வாகனமும் துவசமுமாயின திறத்தையும் நினைத்துஇனி நாம்கலுழனுக்கிறையாவதேயன்றிப் பிழைக்கப்போகிறதில்லை. நமது தம்பிமார்களோ துஷ்டர். இந்தத் துராத்மாக்களை நீங்கி நாம் பிழைக்கும் வழிகளைத் தேடிக்கொள்ள வேண்டுமென்று பலவாறுசிந்தித்து ஒரு வனந்திற்சென்று பிரமனை நினைத்து அநேககாலந் தவத்திலிருந்தான். பிரமன் அந்த ஆதிசேஷனுக்குப் பிரசன்னமாகி, ஓ அனந்தனே! உனக்கு வேண்டிய வரமென்ன கேள் தருகிறேனென்ருன். ஆதிசேஷன் அனேகவிதமாய்த் துதித்து ஐயனே! ஜெனமேஜெய மகாராஜன்செய்கிற சர்ப்பயாகத்தில் மடியும்படி எனக்கு நேரிட்டிருக்கிற அன்னையின் சாபத்தை நீக்க ஒருவழியும், கலுழனுல் துன்பப்படாமலிருக்கவும், என் சகோதரர்களின் சம்பந்தம் எனக்கில்லாமலிருக்கவும்கிருபை புரியவேண்டுமென்று வேண்ட, பிரமதேவன் சொல்லுகிருன்: ஓ ஆதிசேஷா! உன் சகோதரியின் வயிற்றில் ஒருபுத்திரன் உதிக்கப்

போகிறான். அவனால் சர்ப்பயாகத்தின் இமிசை நீங்கும். நீ பாதாள லோகத்திற்சென்று அங்கிருக்கிற சர்ப்பங்களுக்கெல்லாம் தலைவனாகி இந்தப் பூமியைத் தாங்கிக்கொண்டிரு. கலுழன் பயமும் உன் சகோதரர்களின் தொடர்ச்சியுமில்லாம லிருவென்று கட்டளையிட்டுப் பிரமன் தனது லோகத்திற் சென்றான். பின்பு ஆதிசேஷன் பிரமனிட்ட கட்டளைப்படி பாதாளலோகத்திற் சென்று இவ்வுலகத்தைத் தாங்கி அங்கிருக்கும் பாம்புகளுக்கெல்லாம்தலைவனாகி இனிதுவீற்றிருந்தான் இந்த விருத்தாந்தத்தைக் கத்துருவையின் புத்திரர்கள் கேள்விப்பட்டு மிகுந்த வருத்தத்தை யடைந்து தாயிட்ட சாபத்தை நினைத்துத் துன்பப்படுகிறவர்களா யிருந்தார்கள். அதன் பின்பு நடந்த விருத்தாந்த மென்னெனில்.

அமுதங்கொணர்ந்த சருக்கம் முற்றிற்று.

---

## ஏழாவது
## சலற்காரமுனிச் சருக்கம்

சலக்காரனென்று பெயருடைய ஒரு முனியுண்டு அவன்இளமையிலே எல்லாவற்றையும் நீக்கி இல்லறங்கெட்டதென்று விலக்கி துறவறத்தையே அநுசரிந்து மனம் - புத்தி - சித்தம் - காயம் என்பனவற்றை ஒரு வழிப்படுத்தி சுத்தக் கியானசுரூபியாய் விளங்கி பிரமசாரியத்தின் ஒழுக்கநெறி பிசகாமல் தனக்கிச்சையான வனங்களில் சஞ்சரித்து வருகிறநாளில்,ஒரு,நாள்ஒருவனத்திற்சென்றானவ்வனத்தில் உயர்ந்துபருத்துத் தழைத்திருக்கிற ஒரு ஆலமரந் தோன்றிற்று இந்த சலர்க்காரமுனி அந்த மரத்தருகிற்சென்று அந்த மரத்தை நோக்கினான். அறக்கடவுளாகிய இயமன் கட்டளையின்படி இருபத்தொரு புருஷர் அம்மரத்திற் பொருந்தி வௌவால்போல் தலைகீழாய்த் தொங்கித் துன்பப்பட்டுக்கொண் டிருக்கிறதைக் கண்டு, அடடா! இவர்கள் யாரோ மகா முனிவர்கள் மிகுந்த வருத்தமான தவஞ்செய்கிறார்கள். இப்படி தவஞ்செய்கிறது நாம் எந்த நூலிலும் கண்டதில்லை கல்வி கரையில்லை யாதலால் இப்படியுந்தவஞ்செய்ய சாஸ்திரங்கள் கூறியிருக்கின்றதோ என்னமோ எல்லாம் இவர்களைக்கண்டுவணங்கி வினவினால்தெரியுமென்றுமதித்து மரத்தடியிற்சென்று அவர்களைப்பார்த்துவணங்கி, ஓமகாந்துமாக்களே! இவ்வகைப்பட்ட வருத்தந்தோடுதவஞ்செய்கிற காரணமென்னவென்று வினவினான். இந்தவசனத்தை அந்த இருபத்தொரு புருஷரும்கேட்டு, ஓ மகாத்மாவே! நாங்கள் தலைகீழாகத் தொங்குகிறதேயொழிய தவஞ்செய்ததல்ல எங்கள்மரபில் சலர்க்காரன் என்று ஒரு புத்திரன் பிறந்திருக்கிறான் அவன் இளமையிலேயே இல்லறத்தை வெறுத்துத் துறவறத்தை யனுசரித்துபிரமசாரியா யிருக்கிறான் அதனாலே யமன் கோபங்கொண்டு உங்கள் மரபு விளங்கவில்லையாதலால், நீங்களெல்லாம் நரகவேதனைக் குள்ளாகுங்களென்று இந்த மரத்தில் தலைகிழா யிருக்கக் கட்டளையிட்டான் அக்கட்டளைப்படி நாங்கள் தொங்குகிறோமென்றார்கள். சலர்க்காரன் திடுக்கிட்டு நடுநடுங்கிச் சரீரம் வெயர்த்து மொழிகுளறி சாஷ்டாங்கமாக அவர்களுக்கு நமஸ்காரஞ்செய்து ஓ ஐயன்மீர்! சலர்க்காரனென்பவன் நான்தான் கோபித்துக்கொள்ளாதீர்கள் இல்லறம் நல்ல பயனைக் கொடுக்காதென்று கருதித் துறவறத்தை மேற்கொண்டேன் இனி உங்கள்நிமித்தம் கிரகஸ்தனாகுகிறேன். ஆனால் எனக்கு ஒருவரங் கொடுக்கவேண்டும். அஃதென்னெனில், என் பெயர் கொண்ட ஸ்திரீயைவிவாகஞ்செய்து கொள்ளுகிறேன் அப்படி சித்திக்கும்படி கிருபை செய்யுங்களென்றுவேண்ட அவர்கள் அவ்வாறுவரங் கொடுக்க அவ்வரத்தைப்பெற்ற சலர்க்காரன் அவர்களைவணங்கி விடைபெற்றுக் கிரகஸ்தனாகக் கருதி தன்பெயர்கொண்ட ஸ்திரீயை நாடி எங்கணுந்தேடி இந்தக் கத்துருவைக்குச் சலற்காரையென்னும் பெயரால் ஒரு பெண்ணிருப்பதாய்க் கேள்விப்பட்டு அவர்கள் இருக்கிற இடத்துக்கு வந்தான்.

கத்துருவையும் தக்ஷகன் முதலான புத்திரர்களும் விரைவிலெழுந் தெதிர்கொண்டு போய் அழைத்துவந்து, பொற்பீடமளித்து அதிலிருக்கச்சொல்லி, வந்தனை வழிபாடு செய்தார்கள். அப்போதுகத்துருவைபெற்ற சலர்க்காரை யென்னும் பெண்ணும் வந்து வணங்கிநின்றாள். இந்தச் சலர்க்காரன் யாவர்க்கும் பல ஆசிகள் வழங்கி, தக்ஷகன்முதலானவர்களை நோக்கி, ஓ நாககுமாரர்களே! இதோ நிற்கிற பெண் யார்! இவள் பெய

ரென்ன? இவளையாருக்காவது விவாகஞ்செய்துகொடுத்தீர்களா சொல்லுங்கள் என்று வினவ, தக்ஷகன் ஓ ஐயனே! இந்தப் பெண் எங்கள் தங்கை. இவள் பெயர் சலர்க்காரை. இன்னும் விவாகமில்லை என்று கூற, சலர்க்காரன் மிகுந்த மகிழ்ச்சியடைந்து, தன் விருத்தாந்தத்தை விளம்பி, இப்பெண்ணை எனக்கு விவாகஞ்செய்து கொடுங்களென்று கேட்டான். தக்ஷகன் முதலானவர்கள் திடுக்கிட்டு, இதென்ன ஆச்சரியம்! நமதுதங்கையை விவாகஞ்செய்து கொடுவென்று இந்த மகாத்மா கேட்கிறார். மறுத்தோமாகில் அன்னையிட்ட சாபத்துக்கே அவலித்துக்கொண்டிருக்கிற நமக்கு என்ன சாபம் நேரிடுமோவென்று பயந்து, ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறபோது, அதிலொரு நாகம்தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்குஞ் சகோதரர்களைநோக்கி, ஒருவசனஞ் சொல்லுகின்றது: ஓ சகோதரர்களே! நீங்களேன் மயங்குகிறீர்கள்? சில நாளைக்குமுன் நான், நமக்குவந்த சாபத்தையும் கலுழன் பெற்ற வரத்தையும் நினைத்து நித்திரை செய்கிறபோது, ஜெனமேஜெயமகாராஜன் சர்ப்பயாகஞ் செய்யவும், அந்த யாகத்தில் நாமெல்லாம் இறக்கவும் நமக்காகத் தேவர்களெல்லாம் பிரமனிடத்து முறையிடவும், அப்பிரமன், தேவர்களே! நீங்களேன் வருந்தப்படுகிறீர்கள்? தக்ஷகன் முதலானவர்களோடு ஒரு பெண் பிறந்திருக்கிறாள்; அவளை ஒருமுனி விவாகஞ் செய்கிறார்; அவர் கிருபையினால் அவளிடத்தில் ஒரு புத்திரன் உதிக்கிறான்; அதனால் நாகங்களுக்கு நேரிடும் துன்பம் நீங்குமென்று சொல்லக்கனவுகண்டேன். அக்கனவை நினைவென்று நினைத்திருந்தேன். இப்போது திருஷ்டாந்தமாயிற்று. இந்த முனி கருத்தின்படி நமது தங்கையை விவாகஞ்செய்து கொடுக்கிறதே நமக்கெல்லாம் நலமென்று கூற, தக்ஷகன் முதலானவர்கள் மகிழ்ச்சியடைந்து, அம்முனிவனைவணங்கி, ஓ ஐயனே! உமது நினைப்பின்படி எங்கள் சகோதரியாகிய சலர்க்காரையை விவாகஞ் செய்துகொள்ளுமென் றுரைத்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் அம் முனிவனுக்குச் சலர்க்காரையை மணஞ்செய்வித்துக் களிப்படைந்தார்கள்.

சலர்க்காரமுனி தன்மனைவியாகியசலர்க்கார்ரையை அழைத்துக்கொண்டு ஒருவனத்திற்சென்று, பன்னகசாலை ஒன்று இயற்றி, அதிலிருந்து மனைவி பணிவிடை செய்யத் தான் தவத்திலிருந்தான். இப்படி சிலநாட் சென்றபின்பு, ஒருநாள் சலர்க்காரமுனி தனது மனைவி செய்துவருகிற பணிவிடைக்குமகிழ்ச்சியடைந்து, மனைவியையழைத்து ஓ பெண்ணே! மணம்புரிந்தகாலமுதல் இதுவரைக்கும் நீசெய்துவந்த உபசாரங்களினால் உன்மீது எனக்கு மகிழ்வுண்டாயிற்று. இனி இருவருங் கூடிக்குலாவி வாழ்ந்திருக்கலாம். ஆனாலொன்று சொல்லுகிறேன். அஃதென்னெனில்: நீ எனக்கொரு குற்றஞ் செய்வையாகில், அன்றையத்தினமே உனக்குமெனக்குஞ்சம்பந்தமில்லை. இந்தச்சொல்லைஉறுதியாய் நினைத்துக்கொள் என்று கூறி, அன்றுமுதல் ரதியும்மதனும்போலக் கலந்துவாழ்ந்திருந்தார்கள். இப்படி சிலநாட் சென்றபின்பு, ஒரு நாள் அந்திவேளையில் இந்த சலர்க்காரை ஓ! ஓ! சூரியனஸ்தமிக்கிறானே! முனிவர்களெல்லாம் சந்தியாநுஷ்டானஞ் செய்கிறார்களே! நமது கணவனார் நித்திரை செய்கிறாரே! இந்தவேளையில் நமது கணவனை நாம் எழுப்பவேண்டுமென்று கருதி, கணவனிடத்துவந்துநின்று, இவரைஎழுப்பினால் ஒருவேளை கோபங்கொள்ளுவார். எழுப்பாவிட்டாலும்குற்றங்கூறுவார். இதற்கென்ன செய்கிறதென்றுநினைத்து தெய்வச்செயலெப்படியோ அறியேனென்று சஞ்சலப்பட்டு, கணவனது பாதத்தைப் பிடிப்பதுபோல பற்றினாள். உடனே சலர்க்காரமுனி நித்திரைவிட்டு எழுந்து கோபங்கொண்டு, ஓ பெண்ணே! நீ நித்திரைபங்கஞ் செய்ததினால், இனி உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று சொல்லிவிட்டு எழுந்து, தன் கருத்துக்கிசைந்த விடத்துக்குப்போக யத்தனித்தான். அந்த வேளையில் சலர்க்காரை கணவன் காலில்விழுந்து வணங்கி, ஓஸ்வாமி! சந்தியாநுஷ்டான காலமாயிற்றே! இன்னும் நித்திரை செய்கிறீர்களேஎன்று எழுப்பினேன். (வேண்டாப்பெண்டீர் கைபடக் குற்றம் கால்படக்குற்றம்) என்று சொல்லும் பழமொழிபோல், குற்றமில்லாதவற்றைக் குற்றமாகப் பாவித்து என்னைத்துறிவெளிப்பட்டீர். எனக்கொருவழி காட்டுமையாவென்று மிகுந்த ஆருமையோடு வேண்ட, ஓ பெண்ணே! நீ ஏன்வருத்தப்படுகிறாய்? உன் வயிற்றில் ஒருபுத்திரனிருக்கிறான். அவனு

லே உனக்கும் உன் சுற்றத்தாருக்கும் நல மூண்டாகும். ஆனதால் உன்தாய்வீடு போய்ச்சேரென்று கட்டளையிட்டு, சலர்க்காரன் தனக்கிஷ்டமான விடத்துச்சென்றுதவத்திலிருந்துவிட்டான். பின்பு சலர்க்காரை தாய் வீடு வந்து சேர்ந்து, தன் விருத்தாந்தத்தைத்தாய்க்கும் சகோதரர்களுக்குஞ்சொல்ல, அவர்கள்கனவருத்தமடைந்து, இனிஎன்ன செய்கிறது? வருத்தப்படாமல் சும்மாயிரு அம்மாவென்று ஆதரித்துவந்தார்கள். சில நாள் சென்றபின்பு சலர்க்காரை பிரசவவேதனைப்பட்டு, மாணிக்கம்போல்ஒருபுத்திரனைப் பெற்றாள். தக்ஷகன் முதலானவர்கள் அப்புத்திரனை மிகுந்த அன்புடனே வளர்த்து, அவனுக்கு அத்திகனென்று பெயரிட்டுஆதரித்துவந்தார்கள். அப்புத்திரன் சகல கலைக்கியான சுரூபியாகிய சலர்க்காரமுனி வழியாய்த் தோன்றினவனாதலால், ஞானசுரூபியாகி, திரிமூர்த்திகளாலும் அளவிடப்படாத தவசிரேஷ்டனாகி யிருந்தான்.

கேட்டீரோ ஜெனமேஜெய மஹாராஜனே! காரணங்கள் இப்படியிருக்க, நீர் ஏன் சர்ப்பயாகஞ்செய்யஜயப்படுகிறீர்? விரைவில் யாகத்தை நிறைவேற்றுமென்று உதங்க முனிகூற, அரசன் உதங்கமுனியை வணங்கி, ஓ ஐயனே! தாங்கள் இதுவரைக்கும் கூறி வந்தது தகுதிதான். ஆனால் அந்தத்தக்ஷகன் எனக்கொருகுற்றமுஞ்செய்யவில்லையே! நான் எப்படி யாகத்தைச் செய்கிறதென்று ஆக்ஷேபித்தான். அதற்கு உதங்கமுனி, ஓ அரசனே! அத்தக்ஷகன் எனக்குச் செய்த குற்றம் பெரிதல்ல. உமக்குச் செய்த குற்றந்தான் பெரிது. இதுவரைக்கும் அந்த விருத்தாந்தம் உமக்குத் தெரியாதா? ஆ! ஆ! இதென்ன ஆச்சரியமென்றார். அரசன், ஐயனே! அத்தக்ஷகன் எனக்கொரு குற்றமுஞ் செய்யவில்லை. யான் அறியேன். அப்படியேதாகிலும் ஒரு குற்றம் அந்த தக்ஷகன் செய்திருந்தால் விவரித்துச் சொல்லுமென்று வினவ, ஓ அரசனே! அவன் உமக்குச்செய்த குற்றத்தைக் கூறுகிறேன் கேளுமென்று உதங்கமுனி சொல்லத் தொடங்கினார்.

சலற்காரமுனிச் சருக்கம் முற்றிற்று.

எட்டாவது

## பரிச்சித்து மகாராஜன் சருக்கம்

கேளும் ஜெனமேஜெய மஹாராஜனே! குருகுல திலகனான உன்பிதா பரிச்சித்து மஹாராஜன் இந்த அத்தினபுரி வாசியாயிருந்து, ஐம்பத்தாறு தேசங்களையும் தன்னாணையில் நடாத்தி, நீதியுடன் அரசுசெலுத்தி வருகிறநாளில், ஒருநாள் வேட்டையாடயத்தனித்து, மந்திரி முதலாகிய தளங்களுடனே காட்டிற்சென்று, யாளி, சிங்கம், புலி, கரடி, யானை, செந்நாய் முதலாகிய விலங்கினங்களை நாசப்படுத்தி வருகிறபோது, ஒரு வேங்கையானது வேடர்கள் போட்ட வலையைத் தாண்டி ஓடிற்று. அதனைக்கண்டு வேடர்கள் ஓடிவந்து அரசனுக்குக் கூற, அரசன் கேட்டுக் கோபங்கொண்டு, ஆ! வலையையுங் கடந்ததா? எதோ அந்தப் புலி என்று வாயுகதியோடு கலந்த குதிரையின் மேலேறிப் புலியைத் தேடப்புறப்பட்டான். அப்புலி அதிவேகமாய்க் காடுமலை முதலியவற்றில் விழுந்து ஓடிற்று. அரசனும் விடாமற் பின்சென்று புலியைத் துரத்துகிறபோது, புலி ஒருபெரியமலையிலேறி, அருவிச்சருவில் மறைந்துவிட்டது. புலிமறையவே அரசன் நாலுதிசையும் சுற்றிச்சுற்றித்தேடியுங்காணமல், மகா உக்கிரத்துடனே அம்மலையை விட்டிறங்கி வருகிறான். அப்படி வருகிறபோது, பயிரவமுனியென்பவர் அவ்வழியிலோரிடத்தில் விழித்தகண்ணுடனே தவஞ்செய்திருந்தார். அவரை அரசன்கண்டுவணங்கி, ஓ முனிநாதா! இவ்வழியாய் ஒருபுலி போயிற்றா சொல்லுமையாவென்று கேட்டான். அம்முனி யோகத்தி லிருக்கிறவராதலால், ஒன்றுஞ் சொல்லாமல்மௌனமாயிருந்துவிட்டார். அதன்மேல்அரசனுக்குக்கோபம் பிறந்து, பக்கத்திலிறந்துகிடக்கிற சர்ப்பத்தை வில்லினாலெடுத்து அவர் கழுத்தில் மாட்டிவிட்டு, பின்புஅப்புலிபோயினசாடையிற் சென்று தேடியுங்காணமல், மறுபடியுந் தன்சேனைகளோடு கலந்து, முன்போலவே அந்த அத்தினபுரத்தில் வந்து அரசு செலுத்தி யிருந்தான். அங்கே தவஞ்செய்திருந்த பயிரவமுனிக் கெதிரில் மற்றொரு பெரியவர் தவஞ்செய்திருந்தார். அவர் உன் தந்தையாகிய பரிச்சித்து மஹாராஜன் அம்

முனிவர் கழுத்தில் இறந்த பாம்பை யெடுத்து சுற்றும்போது பார்த்திருந்து, உடனே அந்தப் பயிரவமுனிவர் புத்திரனாகிய சிரிங்கி முனி தவஞ்செய்கின்ற இடத்துக்குப்போய், நடந்த விருத்தாந்தத்தைச் சொல்ல, அந்தச்சிரிங்கிமுனி கோபங்கொண்டுஎன்தந்தை கழுத்தில் இறந்த பாம்பைச் சுற்றின அரசன் இன்றைக் கேழா நாள் தக்ஷகனென்ற பாம்புக் கிரையாகக் கடவானென்று சபித்துத் தன் தந்தையிடத்து வந்து, கழுத்தில் சுற்றியிருக்கிற பாம்பை எடுத்தெறிந்து வணங்கி நின்றான். பயிரவமுனிவர் யோகநிலையைவிட்டுப் பிரிந்து, ஐம்பொறிகளின் வழியாய் ஐம்புலனைச் செலுத்தி நோக்கினர். எதிரே புத்திரன் இருப்பதைக் கண்டு, ஆ மகனே! நீ தவஞ்செய்கிறவன் இவிடத்துக் கேன் வந்தாய்? என்றுவினவ, சிரிங்கிமுனி, ஓ ஐயா! யாரோ ஓரரசன் புலியைத் தேடி வந்து தங்களைக் கண்டு, இந்த வழியாய்ப் புலிபோயிற்றா வென்று வினவினதாகவும், அதற்குத் தாங்கள் உத்திரவுகொடுக்காதிருந்ததாகவும், அதன்மேல் அவ்வரசன் கோபங்கொண்டு இதோ கிடக்கிற இறந்த சர்ப்பத்தைத் தங்கள் கழுத்தில் சுற்றிப்போய் விட்டதாகவும் இம் முனிவர்வந்து சொன்னர். உடனே கோபங்கொண்டு, இன்றைக் கேழா நாள் தக்ஷகனென்கிற பாம்புக்கு அந்த அரசன் இரையாகக் கடவதென்று சபித்துவிட்டுத் தங்களிடத்துக்கு வந்து பார்த்தேன். இம்முனிவர் கூறியபடி கழுத்தில் பாம்பிருந்தது. அதை எடுத்தெறிந்து நின்றேனென்றார். பயிரவமுனிவர் ஞான திருஷ்டியால் நோக்கி, வந்தவனின்னனென் றுணர்ந்து, மிகுந்த வருத்தத்தை யடைந்து. புத்திரனைப்பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறார்.

அப்பா மகனே! உண்டி முதலியவற்றைச் சுருக்கலும், உயிர்க்கிடையூறு செய்யா திருத்தலுமாகிய இவ்விரண்டுந்தானே தவத்துக்கு உருவம். இதனை யுணர்ந்திருந்தும், உலகாதிபனை குருகுல சிகாமணிக்கு கடினமான சாபத்தைக் கொடுத்தாய். ஐயோ! அந்தப்பரிச்சித்துமகாராஜன் இருக்கிறதினலல்லவா தரும தேவதை நாலு பாதத்தில் நடக்கின்றது. அவ்வரசன் இறந்துவிட்டால் இனி எவன் வருவானே? உலகமெவ்வாறுமோ? "மழையின்றி மானிலத்தார்க்கில்லை மழையும், தவமிலா ரில்வழி யில்லை தவமும், அரசுளா ரில்வழி யில்லை யசுரம், இல்வாழ்வா ரில்வழி யில்" என்று சொல்லு மேலோர் வாக்கியத்தின்படி, உலகிலிருப்பவர்களுக்கு எல்லா நலமும் மழையினு லடையவேண்டும். அம்மழை தவத்தினுற் பெருகும். அத்தவம் அரசனல் நிலைபெறும். எல்லா நூல்களையும் கற்று, மநுதர்ம சாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல் செலுத்தி, நம்போலியர்க் கெல்லாம் யாதொரு குறையும் வராமலிருக்கப் பாதுகாத்துவரும் அரசன் எதோ கிஞ்சித்துப் பிசகிப்போனலும், நாம் பிசகி விபரீத சாபமிடலாமா? என்று சொல்லி வருத்தப்பட, சிரிங்கிமுனி தந்தையை வணங்கி, கோபத்தினல் முன்பின் யோசிக்காமல் கடின சாப மிட்டுவிட்டேன். இனி அச்சாபத்தை நீக்க மறுசாபங் கொடுப்போமென்றால், இன்னும் அவ்வளவு தவம் நான் அடையவில்லை. இதற்கென்ன செய்வேனென்று தந்தையோடு தானும் வருத்தப்பட, பயிரவ முனிவர் தமதருகி லிருக்கிறவர்களில் சிலரை நோக்கி, ஓ முனிவர்களே! நீங்கள் பரிச்சித்து மகாராஜனிடத்திற் சென்று அவரைக் கண்டு, சாபம்வந்த வரலாற்றைச் சாற்றி, ஏழு நாளைக்கு மாத்திரம் பாம்பு வராதிருக்கிற இடத்திலிருந்து தப்பித்துக்கொள்ளச் சொல்லுங்க ளென்று சொல்லி அனுப்புவித்தார். அம்முனிவர்கள் அவ்வாறே உனது தந்தையைக்கண்டு, சாபம் வந்த விருத்தாந்தத்தைச் சொல்லி, ஏழு நாளைக்கு மாத்திரம் பாம்புவராதிருக்கிற இடத்திலிருமென்று சொல்லிவிட்டுப்போயினர்கள். அவர்கள் போயினபின்பு, உனது தந்தை மந்திரி முதலாகிய புத்திமான்களிடத்தில் ஆலோசித்து, அவர்கள் கூறிய யுக்தியின்படி கடலில் ஒரு ஸ்தம்பத்தை நாட்டி, அந்த ஸ்தம்பத்தின்மேல் ஒரு திவ்விய மண்டபமியற்றி, அதில் உன் தந்தை அரவின் விஷத்தை அடக்கு மருத்துவர் மந்திரவாதிகளோடு இன்னுஞ் சில காவலாளிகள் தன்னைச் சூழ்ந்திருக்க ஆறு நாள் பரியந்தம் யாதொரு குறைவு மில்லாமல் இனிது வீற்றிருந்தான்.

ஏழா நாள் தக்ஷக னென்பவன் சிரிங்கி முனியிட்ட சாபத்தை நிறைவேற்றக் கருதி, பாதாள லோகத்தைக் கடந்து பூலோகத்தில்

வந்து, இங்கே உன் தந்தையிருக்கிற எச்சரிக்கையை அங்கங்கே சொல்லிக் கொள்ளுகிறதினால் அறிந்துகொண்டு, ஓராலமரத்தடியில் வந்துநின்று, மகா எச்சரிக்கையா யிருக்கிற அரசனை எவ்வாறு நாம் கொல்லுகிறது? இந்த காத்திரமான தேகத்தோடு செல்லுவோமாகில் ஒருவீரன் நம்மைக் கொன்றுபோடுவான். அப்படியல்லவென்று அரசனை விட்டுப் போவோமென்றால் நமது தலை ஆயிரஞ்சுக்கலாகப் பிளந்துபோமே! இதற்கென்ன செய்கிறது? என்று யோசித்திருக்கிற தருணத்தில், காசிபனென்று பெயரையுடைய ஒரு பிராமணன் அதிவேகமாய் ஓடிவருவதைக் கண்டான். அப்பிராமணன் சேரவருகிறதற்கு முன்னமே தனது தேகத்தை மறைத்து, தானும் ஒரு பிராமணன்போல் வேஷங்கொண்டு தக்ஷகனிருந்தான். விரைவில் அந்தப் பிராமணன் அருகில் வந்தான். அந்தப் பிராமணனைத் தக்ஷகன் கண்டு, ஓ ஐயனே! அதிவேகமாய் வருகிற நீர் எவ்விடத்திற்குப் போகவேண்டும்? நீர் நினைத்து வந்த காரியமென்ன சொல்லும் என்று வினவ, காசிபன், ஓ பிராமணா! சந்திரகுல திலகனான பரிச்சித்து மகாராஜனை அரவு தீண்டச் சாபம் நேரிட்டிருக்கிறதாயும், அதற்கு மருத்துவர்களையும் மந்திரவாதிகளையும் அழைப்பிக்கிறதாயும் கேள்வி, அதற்காக அந்த அரசனிடத்திற்சென்று என் மந்திர வன்மையைக் காண்பித்து, என்னை யடிமையாக்கிக் கொண்டிருக்கிற தரித்திரத்தை அதமாக்கக் கருதி, அச்சாபம் நிறைவேறுகிறது இன்றைக்குத்தானே ஆதலால், அரசன் சமூகங்காண விரைவாகச்செல்லுகிறேனென்றான். தக்ஷகன் ஓ பிராமணா! அந்த அரசனைக் கொல்ல வருகிற சர்ப்பமென்ன எளிதா? சொர்க்க மத்திய பாதாள லோகங்களி லிருக்கிற சர்ப்பங்களுக் கெல்லாம் தலைமையான சர்ப்பம். அது கடிக்கிறதே யில்லை. ஒரு முனியிட்ட சாபக்கட்டளைப்படி கடித்துக்கொல்ல வருகிறது. அந்த விஷஞ் சந்திரசடாதரனாகிய பரமன் ஒருவன்தவிர மற்றவர்களுக்கு அசாத்தியமா யிருக்கும். அதை நீ யடக்குகிறேனென்று நினைத்துவந்ததை யோசிக்கும்போது, தரித்திரக்கொடுமை யென்று தோற்றப்படுகின்றதே யன்றி மந்திர சக்தி இருக்கிறவ னென்று தோற்றப்படவில்லை யென்றான். அச்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் காசிபனுக்குக் கோபம் பிறந்து, ஓ பிராமணா! நீரென்ன சொன்னீர்? அனந்தன் தக்ஷகன் முதலானபேரோடெல்லாப்பாம்புகளும் ஒன்றாய்க்கூடி ஒருவனைத் தீண்டினாலும், க்ஷணப்பொழுதில் அவ்விஷத்தை நீக்கிச் சுகப்படுத்துவேன் என்று உறுதியாகக் கூற, தக்ஷகன் பார்த்துச் சிரித்து, ஓ பிராமணா! நான்தான் தக்ஷகன். இதோ யிருக்கிற ஆலமரத்தை என்விஷாக்கினியினாலே பஸ்மீகரப் படுத்துகிறேன். உன் மந்திரப் பலத்தினால் முன்போல் மரந் தளிர்த்திருக்கும்படி செய்கிறாயா வென்று கேட்டான். பிராமணன் நல்லது அப்படியே என் மந்திர பலத்தைக் காண்பிக்கிறே னென்றான். உடனே தக்ஷகன் தனது ரூபத்தைக்கொண்டு, அந்த ஆலமரத்தைக் கடித்து விஷத்தை கக்கினான். அந்த ஆலமரம் பஸ்மீகரமாயிற்று. பிராமணன் பஞ்சாக்ஷரத்தோடு கலந்த சஞ்சீவி மந்திரத்தை ஒருதரம் உச்சரித்தான். அந்த ஆலமரம் முன்போல் தளிர்த்து தழைத்து நின்றது. தக்ஷகன் அதனைப் பார்த்து, ஓ! ஓ! மோசம் வந்தது. இதென்ன விபரீதம்? இந்த மகாபுருஷன் அரசனிடத்துச் செல்லுவானாகில், நாம் கடித்தென்ன பலன்? இந்தப் புருஷனை அரசனிடத்துச் செல்லாதிருக்கச் செய்யவேண்டு மென்று மனதில் நினைத்து, ஓ மகாத்துமாவே! இவ்வளவு வருத்தப்பட்டு வருகிறது திரவியத்திற்குத் தானே! இருமை யின்பத்திற்கும் காரணம் திரவியமாதலால் உமக்கு வேண்டிய திரவியத்தைக் கொடுக்கிறேன். அரசனிடத்துச் செல்லாமல் உமதிடத்திற்குச் செல்லுகிறீரா வென்று தக்ஷகன் கேட்டான். காசிபன் எனக்கு வேண்டிய பொருளைக் கொடுத்தாற் போய்விடுகிறே னென்று சம்மதித்தான். தக்ஷகன் அந்தக் காசிபனுக்குத் திருப்தியடைய திரவியத்தைக் கொடுத்து அனுப்பி விட்டான். அக்காசிபன் தன்னிடத்திற்குப் போய்ச் சுகப்பட்டான்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இந்தச் சேதி தக்ஷகனும் அக்காசிபனு மறிந்ததேயன்றி வேறொருவரு மறியார்களே! இஃதெப்படிவெளிப்பட்டதென்றால், அந்த ஆலமரத்தில் இரண்டு பிராமணப் பிள்ளைகள் இலைபறித்திருந்தார்கள். மரம் பஸ்மீகரமாகிறபோது தாங்களும் பஸ்மீகர

மாகி, மரம் தளிர்த்தபோது தாங்களும் முன் போலாகியிருந்து, காசிபனென்கிற பிராமணனும் தக்ஷகனும் சென்றபின்பு அம்மரத்தை விட்டுவந்து, நாடு நகரங்களிற் பிரசித்தப் படுத்தினார்கள். இங்கே தக்ஷகனானவன் தனது தேகத்தோடு சென்றால் சாபம் நிறைவேறாதென்று கருதிப் பிராமணனைப் போல வேஷங்கொண்டு, தனது விஷத்தை ஒரு எலுமிச்சங்கனியாகக் கையிலேந்திக் கடலருகில் வந்து, அரசனிருக்கும் எச்சரிக்கையைக்கண்டு வியந்து, அந்த மண்டபத்துக்குச் சென்றான். அங்கிருக்கிற காவலாளிகள் யாரோ ஒரு பிராமணனென்றெண்ணி மறிக்காம லிருந்துவிட்டார்கள். தக்ஷகன் காலதாமதஞ் செய்யாமல் விரைவிற்சென்று உமது தந்தையைக் கண்டான். உடனே உமது தந்தை எழுந்து வந்தனை வழிபாடு செய்து, ஒரு பொற்பீடமளித்து இருக்க வேண்டிக்கொண்டான். அத்தக்ஷகனாகிய பிராமணன் அப்போதாயினும் மனமிரங்காமல், தான் கொண்டுவந்த எலுமிச்சங் கனியைக் கொடுத்தான். அதனை உமது தந்தை வாங்கி, அதில் வாசனை இருப்பதை நோக்கி ஆக்கிராணித்தான். உடனே இந்தத் தக்ஷகனாகிய பாவி பிராமண வேஷத்தை நீக்கிப் பூநாகத்தைப் போ லுருவுகொண்டு, உமது தந்தை நாசியிற் கவ்வி மறைந்தான். தக்ஷணம் உமது தந்தைக்கு விஷந் தலைக்கேறி, ஒரு நிமைநேரத்தில் பரமபதஞ் சேர்ந்தான். இந்தச் சேதி மந்திரி முதலாகிப் பலரும் அறிந்து வந்து பார்த்து, அலறிக் கூக்குரலிட்டுப் புலம்பி, அரசனுக்குச் செய்யுங் கிரியைகளை நடத்தி அடக்கஞ்செய்து, பின்பு நகரத்திற்கு வந்து உமக்குப் பட்டங்கட்டினார்கள். மகா பாதகனாகிய தக்ஷகன் செய்த குற்றந் தோன்றிற்றா? இவ்வகைப்பட்ட துராத்மாவையும் அவனோடு சம்பந்தப்பட்டவர்களையும் பஸ்மீகரப்படுத்தினால் குற்றமா? ஓ அரசனே! இனி தடையில்லாமல் சர்ப்பயாகஞ் செய்ய யத்தனியுமென்று உதங்கமுனி கூற, ஜெனமேஜெய மகாராஜன் இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுக் காலாக்கினி ருத்திரன் போற்சீறி, ஓ ஐயனே! மகாபாதகனாகிய தக்ஷகனையும், அவனோடு சம்பந்தப்பட்டவர்களையும், இன்றைய தினத்திலேயே பஸ்மீகரப் படுத்துகிறேன். அந்தச் சர்ப்பயாகத்தின் விதியென்ன? அதற்கு என்னவேண்டுஞ் சொல்லுமையாவென்று வேண்ட, உதங்கமுனி சொல்லுகிறார்.

பரிச்சித்து மகாராஜன் சருக்கம் முற்றிற்று.

ஒன்பதாவது

## சர்ப்பயாகச் சருக்கம்

ஓ அரசனே! வேதாகமங்களில் வல்ல பிராமணர்களையும், தவசிரேஷ்டராகிய முனிவர்களையும் வருவிக்கவேண்டும். விசாலமான இடத்தில் பெரிய யாகசாலையொன்று இயற்றி, அந்த யாகத்துக்குத் தகுந்த சமித்து ஓமத் திரவிய முதலானவையும் அழைப்பியுமென்று சொல்ல, அரசன் மந்திரிகளுக்குக் கட்டளையிட, மந்திரிகள் ஐம்பத்தாறுதேச அரசர்களுக்கும் முனிவர்களுக்கும்விண்ணப்பப் பத்திரிகை யெழுதி தூதுவர்கள் கையிற் கொடுத்தனுப்பியாகசாலையை சாஸ்திரவிதிப் படி இயற்றி, அதற்கு வேண்டிய வஸ்துக்களையும் சேகரித்துவைத்து, அரசனிடத்து வந்துவணங்கி, ஆண்டவனே! தங்கள் கட்டளைப்படி எல்லாவஸ்துவும்சேகரமாயிற்று. அரசர்க்கும் முனிவர்க்கும் விண்ணப்பப் பத்திரிகை போயிருக்கிறது என்று புகல, அரசன் அவர்கள் வருகிற வழியைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அத்தருணத்தில் அரசன் தூதுவர்கள், நாடு-தேசம்-காடு-மலை முதலியவற்றிற் சென்று, விண்ணப்பப் பத்திரிகைகளை அவ்விடத்திலிருக்கிற அரசருக்கும் முனிவருக்குங் கொடுத்தார்கள். கொடுத்த தக்ஷணம் விண்ணப்பத்தின் கருத்தையுணர்ந்து, அரசர்களெல்லாம் வந்து ஜெனமேஜெய ராஜனைக் கண்டு வணங்கி, அரசன் இட்ட கட்டளையின்படி அவரவர்களுக்குத் தகுந்த இடத்திலிருந்தார்கள். பின்பு அகத்தியமுனி-அத்திரிமுனி - ஆங்கிரசமுனி-இரணியவமுனி - உரோமமுனி - ஏரண்டமுனி-கலைக்கோட்டுமுனி - காசிபமுனி - கௌதமமுனி-சத்தகூன்முனி - சச்சிதானந்தமுனி - சனகமுனி -சனற்குமாரமுனி-சுகமுனி- துருவாசமுனி-நாரதமுனி-பதஞ்சலிமுனி - பரத்துவாசமுனி-பராசமுனி - பற்பமுனி - பிருகுமுனி-பிஙகிமுனி-புலத்தியமுனி -மார்க்கண்டமுனி-வசிட்டமுனி-வால்மீகமுனி - விஸ்வாமித்திரமுனி-வியாக்கிரபாதமுனி -வியாசமுனி முதலான முனிவர்களுங் கேள்விப்

பட்டு, உலகாதிபனென்று செய்யக்கருதி நம்மை வருவித்தால் போகத்தான்வேண்டு மென்று நினைத்து யாவரும் வந்தார்கள். அரசன் எதிர்கொண்டுபோய் அவர்களுக்கு வந்தனை வழிபாடு செய்து, பொற்பீட மளித்து இருக்கச்சொல்லிச் சோடசவுப சாரஞ்செய்து, மஹாபயபத்தியுடனே எதிர் நின்றான். முனிவர்களெல்லாம் மிகுந்த மகிழ்ச்சியடைந்து பல ஆசீர்வாதங்கள்வழங்கி, ஓ மஹாராஜனே! இனிதாமதஞ்செய்யாமல் யாகத்தை நிறைவேற்றும் என்று நவில, அரசன் வியாசர், வசிஷ்டர், கலைக்கோட்டு முனி, இவர்களைக் குருவாகக்கொண்டு, தானும் தன்மனைவியும் ஸ்நானஞ்செய்து யாக தீக்ஷை பெற்று பீடத்திலிருந்துவேதவேதியர்கள் மந்திரங்களை யுருவேற்ற யாகத்தை வளர்த்தினான். மந்திரங்களை யுச்சரிக்க உச்சரிக்க சொர்க்க மத்திய பாதாள லோகங்களிலிருக்கின்ற சர்ப்பங்களெல்லாம் திரண்டு வந்து யாகத்தில் விழுந்து மடிந்தன. கத்துருவையின் புத்திரர்களின் சந்ததிகளெல்லாம் வெந்து சாம்பராயினதுமன்றி, அவள் புத்திரர்கள் அந்த மந்திர உறுதியினால் உடன்முழுதுந் தளர்ந்து மிகுந்த வருத்தத்துக் குள்ளானார்கள். அதில் ஆதிசேடன், தக்ஷகன், அனந்தன், வாசுகி, இவர்கள் தவிர, மற்றவர்களெல்லாம் யாகத்தில்வந்து விழுந்து மடிந்தார்கள். அரசன் வேதவியாசரை நோக்கி, தக்ஷகன் முதலானவர்கள் இன்னும் வரவில்லை யாதலால, விரைவில் வரும்படி செய்யுங்களென்று விதித்தான். அவர்கள் மந்திர தேவதைகளை அதிகமாகத் தூண்டினார்கள். அம்மந்திர தேவதைகள் உடனே ஓடி, ஆதிசேஷன் முதலானவர்களைச் சுற்றிக்கொண்டு இழுக்க ஆரம்பித்தன. அதன்மேல் அவர்கள் மனங்கலங்கி, நிலைதளர்ந்து, நெஞ்சுலர்ந்து, திகிலடைந்து, மாதாசாபத்தை நினைத்து வருந்தித் துன்பப்பட்டார்கள். இவர்களில் தக்ஷகன் இந்திரபதவியிற்சென்று இந்திரனை வணங்கி, முறையோ! முறையோ! என்று கூவி, என்னை ஜெனமேஜெய மஹாராஜனகொல்லாமலிருக்கக் காப்பாற்ற வேண்டுமென்று பணிய, இந்திரன தக்ஷகன் முறையைக்கேட்டு, எப்போதும் உலகிலுள்ள அரசர்கள் அபயமென்று வந்து சரணடைந்தவனைக் காப்பாற்றுகிறார்கள். நாம் அவ் வரசர்களுக்கு மேலான அரசனாயிருந்தும், இந்தத் தக்ஷகன் நமக்குத் தோழமையாயிருந்தும், இவனைக் காப்பாற்றுமற்போனால் நமது பெருமை என்னவென்று தனக்குள்தானே மதித்து, ஓ தக்ஷகா! நீ அஞ்சாதே என்னருகிலிரு. அந்த ஜெனமேஜெய மஹாராஜனால் உனக்குக் கெடுதி வராமல் காப்பாற்றுகிறேனென்று உறுதி கூற, தக்ஷகன் கிஞ்சித்து மகிழ்ந்து இந்திரனிடத்திலிருந்தான்.

இரண்டாயிரம்யோசனை யுயர்ந்திருக்கிற மந்தரகிரியை இரண்டாயிரஞ் சுற்றுச்சுற்றி எடுத்துவந்து தேவர்களுக்கு அமுதமுங் கொடுத்த ஆதிசேஷன் மந்திர தேவதைகளின் தொந்தரைக்குள்ளாகிச் சிந்தை நொந்து மிகுந்த துன்பமடைந்து, எந்தவிதத்தில் தப்பிப் பிழைக்கப் போகிறோமென்று மனங்கலங்கி, தன்னைப்பெற்ற தாயாகிய கத்துருவையிடத்துக்கு வந்து வணங்கி,அம்மா! நீ முன்பின் யோசிக்காமல் சாபமிட்டாயே! அந்தச் சாபம் நிறைவேறுகிற காலம் வந்து என்னுடன் பிறந்தவர்களும் மடிந்தார்கள். இதோ இறக்க நானுஞ் செல்லுகிறேனென்று கோவென்றுகதறித் துக்கித்தான். இதனைப் பார்த்துக் கத்துருவையும்-சலர்க்காரையும் கையை நெரித்து, இனியென்ன செய்யப்போகிறோம்? எல்லாரும் மடிந்தார்களே! என்று கூக்குரலிட்டுப் புலம்பினார்கள். ஆதிசேஷன் சலர்க்காரையைப் பார்த்து, ஓ அம்மா! நீயேன்வருத்தப்படுகிறாய்? இந்தவேளையில் உன் புத்திரனாகிய அத்திகனை ஜெனமேஜெய மகாராஜானிடத்தி லனுப்புவித்தால், அவனாலே மடிந்தவர்கள்போக மற்றவர்கள் பிழைப்பார்கள். ஆதலால் அவ்வளவு உபகாரஞ்செய் அம்மணியென்று சொல்ல, சலர்க்காரை களிப்படைந்து, தன் புத்திரனிடத்திற் சென்று, அப்பா மகனே! உன் மாமன்மாரெல்லாம் ஜெனமேஜெய மஹாராஜன் செய்கிற சர்ப்பயாகத்தில் மடிந்தார்கள். இன்னும் நாலைந்துபேர்கள் தான் இருக்கின்றார்கள். அவர்களு மடிவதற்கு முன்னமே ஜெனமேஜெய மஹாராஜனிடத்திற் சென்று, அந்த யாகத்தை நிறுத்தும்படி கேட்டுக்கொள்ளென்றாள். அத்திகன் நல்லது தாயேயென்று வணங்கி, தாயிடத்திலுத்திரவுபெற்று, காவிகாம்பர தண்டு கமண்

டலதாரியாய் அநேக முனிவர்கள் தன்னைச் சூழ்ந்துவர ஜெனமேஜெய மகாராஜன் யாகஞ் செய்கிற இடத்துக்கு வந்து, தன் வரவைக் காவலாளிகளால் தெரிவித்து, அரசனுத்திரவின்மேல் யாகமண்டபத்திற் சென்று, அங்கிருக்கும் முனிவர்களுக்கு வந்தனை செய்து நின்ருன். உடனே அரசன் எழுந்து வணங்கிப் பொற்பீடமளித்து இருக்கச்சொல்லி, சோடச உபசாரஞ் செய்து, பயபக்தியுடனே யெதிரில் நின்ருன் அத்திகமுனி அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி ஒருவசனங் கூறுகிருர்: ஓ அரசனே! இவ்வுலகத்தில் வீரம் கோபமுதலிய கொலைத்தொழிலுக்கும்,புகழுக்கும், புஜபலபராக்கிரமத்திற்கும், வாய்மைக்கும், அருளுக்கும், தருமத்துக்கும், யாகத்துக்கும், தானத்துக்கும், அரசுக்கும், செல்வத்திற்கும், அழகுக்கும், சாந்தத்துக்கும், நீயொருவனேயன்றி உனக்கு ஒப்பானவர்கள் வேருெருவருமில்லை. மேலும்-ஸ்ரீமந் நாராயணமூர்த்தியாகிய வியாசர் உனக்குக் குருவாயமைந்தபோது, உனக்குக் குறை யென்ன? நீ இந்த மூன்று லோகத்தையும் தகிக்கக் கருதினுலும் அப்படியே செய்வாய். அவ்வளவு வல்லமையுடைய மஹா முனிவர்களையும் தருந்தபராக்கிரமத்தையும் பெற்றிருக்கிற நீ, உன் தந்தையைக் கொன்ற தக்ஷகனைக் கொல்லக் கருதிச் சர்ப்பங்களை யெல்லாம் வதைத்தாய். இனி உனக்கு ஒப்புவமையாரிருக்கின்ருர்கள்? உங்கள் முன்னோர்களில் ஒருவனன் விஜயன் அபிமன்னனைக் கொன்ற சயிந்தவனைக் கொல்லுகிறேனென்று உறுதி கூறி, மறுநாள் அந்திவேளையிற் கொன்ருன். அதுபோல நீயும் செய்தாய். உன்னைப்போற் பராக்கிரமசாலி இவ்வுலகத்திலில்லை. ஆதலால்-ஒரு காரியத்திற்காகஉன்னிடத்தில்வந்தேனென்ருர். அரசன் இத்துதியைக் கேட்டுத் தனக்குள் தானே வருத்தமுற்று, இவர்யாரோ மஹாமுனிவர். யாதுகாரியத்தைப்பற்றி வந்தாரோ? என்று நினைத்து, என்னிடத்துக்கு வந்த காரியத்தைத் தெரிவித்தால் அக்காரியம் என்னுயிரா யிருந்தபோதிலும் கொடுப்பேனென்று கூற, அத்திகமுனி, ஓ அரசனே! தற்காலத்தில் யாகதீட்சைபெற்றிருக்கிற கோலத்தைநீக்கி யாகத்தை நிறுத்த வேண்டும். அதுதான் நான் நாடிவந்தகாரியமென்ருர். அந்த யாகமண்டபத்திலிருக்கிற



முனிவர்களும் அரசனை நோக்கி, ஓ அரசனே! இம்முனிவர் கருத்தின்படி யாகத்தை நிறுத்தும். இம்முனிவர்யாரென்ருல்,சலர்க்கார முனிவருடைய புத்திரன். இவர் மகாதவசி. திரிமூர்த்திகளும் ஸ்துதிக்கின்ற மகத்துவத்தை யுடையவர். இவர் வாக்குக்கெதிர் வாக்கு இல்லையென, அவ்வரசன் அத்திகமுனிவரைவணங்கி, ஓஐயனே! தங்கள் கருத்தின்படி யாகத்தை நிறுத்தினேனென்று சொல்லி, வேதவேதியர்களை நோக்கி யாகத்தைப் பூர்த்திசெய்யுங்களென்று வேண்ட, அந்தவேளையில் இந்திரனருகிலிருந்த தக்ஷகனை மந்திரதேவதைகள் போய்ச் சூழ்ந்து, தட்சகனையும் அவனைக் காப்பாற்றுகிறேனென்றுஉறுதிகூறிய இந்திரனையும்பிடித்திழுத்துக்கொண்டு யாககுண்டத்துக்குச் சரியாய் அந்தரத் தானத்தில் வந்தன. இங்கே அரசன் கட்டளைப்படி வேதவேதியர்கள் யாகத்தைப் பூர்த்திசெய்யவே, மந்திர தேவதைகள் இழுத்துவந்த இந்திரனையும்தட்சகனையும் விட்டுவிட்டன. உடனே இந்திரனும் தட்சகனும் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு அரசன் யாகத்தைப் பூர்த்திசெய்து, வேதவேதியர்களுக்கெல்லாம் திருப்தியடையச் சொர்னமாரி பெய்து, கோதானம்-பூதானம் - கன்னிகாதானம் முதலானவைகொடுத்து, முனிவர்களுக்கு வேண்டியவற்றையுதவி, அவரவர்கள் இருப்பிடத்துக்குச் செல்லவணங்கி விடைகொடுத்து, வந்த அரசர்களுக்கு மகிழ்ச்சியுண்டாக வேண்டியவற்றை வரிசை வரிசையாகக்கொடுத்து நின்ருன். அத்திகமுனிவர் அரசனைப் பார்த்து, ஓ அரசனே! எனக்கு நீகொடுத்த ஒருவரத்தினுல் மான் மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரதரனுகிய பரமன் பூனூல் பெற்ருன். சங்குசக்கர கதாகட்க கோதண்டதரனுகிய திருமால் சயனம் பெற்ருன். திசைமுகன்பெருமைபெற்ருன். வச்சிரப்படையையுடைய இந்திரன் உயிர்பெற்ருன். தேவர்கள் அமுதங் கடைகிற மத்துக்குத் தாம்பு பெற்ருர்கள். உலகிலுள்ளோர் ஆதரவுபெற்ருர்கள். என்ருல் நீபெற்றபுகழுக்கு அளவில்லை. இனி உனக்கொரு குறைவில்லை என்று வாழ்த்தி அரசனிடத்து விடைபெற்றுத் தன் தாயினிடத்துச் சென்று, நடந்த விருத்தாந்தத்தை நவின்று வணங்கிவிடை

பெற்று அத்திகமுனிவர் தவநிலையைச் சேர்ந்தார்.

சர்ப்பயாகச் சருக்கம் முற்றிற்று.

---

பத்தாவது

## ஜெனமேஜெயனைப் பிரமஹத்தியடைந்த சருக்கம்

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இப்பால் அரசன் உதங்கமுனியை வணங்கி, ஓ ஸ்வாமி! என் தந்தை ஆறு நாள் பரியந்தம் என்னகாலக்ஷேபம் செய்திருந்தாரென்று வினவ, உதங்கமுனி, ஓ அரசனே! உன் தந்தை சுகமுனிவரால் ஸ்ரீமத்பாகவதத்தைக் கேட்டிருந்தாரென்று அதனைக் கிளர்த்த, மகிழ்ச்சி யடைந்து அவ்வுதங்க முனியைவணங்கி விடைகொடுத்து, பின்பு அரசன் கோடிசூரியப்பிரகாசமாகிய சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்து அரசுசெலுத்தி, பிரமசாரி-கிரகஸ்தன் -வானப்பிரஸ்தன்-சந்நியாசி-ஆதுலர்-தெய்வம்-பிதுரர் - விருந்தினர்-சுற்றத்தார்முதலானவர்களுக்கு யாதொருகுறைவராமலிருக்க அவரவர்களுக்குத் தகுந்தபடி வேண்டியவற்றையுதவி, தன்னுயிர்போல மன்னுயிர்களைக் காப்பாற்றி வருகிற நாளில், ஒருநாள் மந்திரி முதலானவர்கள் புடைசூழச் சிங்காதனத்திலிருக்கிற தருணத்தில், பயிலவமுனி-வைசம்பாயனமுனி-ஜையமுனி-சுமந்தமுனி- நாரதமுனி-தேவலமுனி சுகமுனி முதலாகிய மாணுக்கர்களுடனே வேதவியாசர்வந்து, தமது வரவைக்காவலாளிகளால் தெரிவித்தார். உடனே அரசன் எழுந்து, எதிர்கொண்டுபோய் வணங்கி அழைத்துவந்து, பொற்பீடமளித்து இருக்கச் சொல்லி, சோடச உபசாரஞ்செய்துவணங்கி எதிர்நின்றான். வியாசரும் அவருடைய மாணுக்கரும் அரசனுக்குப்பலஆசிகள்வழங்கிச் சிங்காதனத்தி லிருக்கக்கட்டளையிட்டார்கள். அரசன் சிங்காதனத்திலிருந்து தவசிரேஷ்டராகிய வியாசமுனிவரை நோக்கி, ஐயனே! எங்கள் முன்னோர்களாகிய பாண்டவர்களும் சுயோதனன் முதலாகியவர்களும் ஒருவர்க்கொருவர்விரோதப்பட்டுவீணுய்மடிந்துவிட்டார்களாமே அக்காலத்தில் தாங்கள் ஒருபுத்திசொல்லித் தடுத்தால் அவர்கள் மீறுவார்களா? (தெருச்சண்டைக் கண்ணுக்கின்பம்) என்கிற பழமொழிபோல வேடிக்கைபார்த்திருந்தீர்களோ? தாங்கள் வமிசக்கர்த்தாவாகவும்குலகுருவாகவும்இருக்க, அவர்களை இவ்வாறுக்குவது தருமமா? எனவும், வியாசர் நகைத்து ஓ அரசனே! நீசிறுபிள்ளை,என்ன சொன்னபோதிலும் எனக்கு மகிழ்வேயன்றி இகழ்வில்லை. நீ இப்போது உரைத்தசங்கதிக்கு அந்தத் திரிமூர்த்திகள்வந்து தடுத்தபோதிலும் பாண்டவர்களும்சுயோதனர்முதலானவர்களும்கேளார்கள்ஏனென்றால் வினைப்பயன்யாரைவிட்டது? அதை நீக்க ஒருவராலுங்கூடாது. காலகதி அப்படியிருந்தது. அதற்காக என்னைத்தூறிக்கொள்வது தகுதியல்ல என்றிசைக்க, அரசன் சிரித்து, ஓ ஸ்வாமி! சுயோதனன் முதலானவர்கள் ஒருவர் வார்த்தையைக் கேளாதவர்களாயிருந்தபோதிலும், பாண்டவர்களென்ன சொற்புத்தி கேளாதவர்களா? நீங்கள் தடுத்தால் அவர்கள் மீறுவார்களா? இது ஒரு உத்தரவாவென்றான். வியாசர்,ஓஅரசனே! நீவீண் வழக்கிடுகிறாய். உனக்கு அதுதிரிஷ்டாந்தப்பட ஒன்றுசொல்லுகிறேன்அதைமாத்திரம் தப்பித்துக்கொள்வையேயாகில் அப்பாண்டவர்களுஞ் சுயோதனாதியரும் மடிந்தகுற்றத்தைஎன்பேரில் வைக்கலாம். அதைத் தப்பித்துக்கொள்ளாவிட்டால் காலகதியென்றுணர்ந்துகொள்ளுக என்று கழற, அரசன் மகிழ்ந்து, ஓ ஐயனே! அஃதென்னவென்றான். வியாசர், ஓ அரசனே! இன்றைக்குப் பத்தாநாள் உனக்கொரு பிரமஹத்தி வருகிறது. அதைமாத்திரம் தப்பித்துக்கொள்ளும்பார்ப்போம் என்றுசொல்லி,அரசனிடத்துவிடைபெற்றுத்தமது ஆசிரமத்துக்கு மாணுக்கருடனெழுந்தருளினர். அரசன் சகலசாஸ்திரநிபுணராகிய வேதவேதியர்களையும் பண்டிதர்களையும் அழைப்பிக்கத் தனது மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான். மந்திரிகள் அக்கட்டளைப்படி அந்தக்ஷணம் வேதவேதியர்களையும் சாஸ்திரிகளையும் அழைப்பித்து அரசனுக்கு அறிவித்தார்கள். அரசன் வந்தவர்களுக்கெல்லாம் வந்தனை வழிபாடுசெய்து, பொற்பீடமளித்து இருக்கச்சொல்லி, அவர்களைப் பார்த்து, ஸ்வாமிகளே! இன்றைய பத்தாநாளில் எனக்கொரு பிரமஹத்தி வருகிறதாயிருக்கிறது. அதுவராமலிருக்க ஒரு உபாயஞ்சொல்லுங்கள் என்றுவினவ, வேத

வேதியர்களும் சாஸ்திரிகளும் யோசித்து, ஓ அரசனே! ஓமங்களினாலும் யாகங்களினாலும்சகலபாவமும்நிவர்த்தி ஆதலால், அவற்றில் ஒன்றை இராப்பக லொழிவில்லாமல் இந்தப்பத்து நாளுஞ்செய்தால் அந்தப்பிரமஹத்திவந்தடையாது என்றுரைக்க, அரசன் கேட்டுமகிழ்வடைந்து அப்படியேசெய்வோமென்று அதற்குவேண்டிய கருவிகளை வருவிக்கமந்திரிகளுக்குக்கட்டளையிட்டான். மந்திரிகள்வேண்டிய சாமக்கிரிகைகளை வருவித்து, ஒரு ஓமகுண்டமியற்றி அரசனுக்கறிவித்தார்கள். அரசன் அதற்குமேல் வள்ளுவரைக்கொண்டு, (பத்து நாள்வரைக்கும் இரவும்பகலும் ஒழியாமல் மந்திரமுச்சரித்து ஓமஞ்செய்யவேண்டும். அப்படி செய்பவர்க்கு வேண்டியவற்றைக்கொடுக்கிறது. இதற்குச் சம்மதித்தவர்கள் வருகிறது.) என்று பறை சாற்றுவித்தான். இவ்வோசையைக் கேட்டவர்கள் யாவரும்பத்து நாள் கண்விழிக்கவேண்டுமாதலால் கனவருத்தமான வேலையென்று சும்மாயிருந்துவிட்டார்கள். அத்தருணத்தில் பிறவித் தரித்திரனாகிய ஒரு கிழப்பிராமணன் இவ்வோசையைக் கேட்டு, நமது தரித்திரம் அதமாகுங்காலம் இதுதானென்று தீர்மானித்து, அரசனிடத்துக்கு வந்து ஆசீர்வாதஞ்செய்து, ஓ இராஜனே! நான் உமது கருத்தின்படி இரவும் பகலுமாகப் பத்து நாளுமிருந்து ஓமத்தை நிறைவேற்றுகிறேனென்றான். அரசன் மகிழ்ந்து அவ்வேதியனை குருவாகக்கொண்டு, தானும் தன்மனைவியும் ஸ்நானஞ்செய்து ஓமமண்டபத்திற்சென்று, வேதியன் மந்திரமுச்சரிக்க ஒன்பது நாள் பரியந்தம் யாகத்தைச் செய்து வந்தான். பத்தா நாள் இராத்திரி ஓமத்தை நடத்தும் வேதியன்முதிர்ந்தவயதுடையவனாதலாலும், ஒன்பது நாள்பரியந்தம் கண்விழித் திருந்ததினாலும், மிகுந்த தளர்ச்சியுடையவனாய்க் களையின்மேல் வாயினால் மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டே நித்திரை போயினான். அந்த நித்திரையில் தானொரு பெருங் காட்டிற் சென்றதாகவும், அந்தவிடத்தில் தன்னை ஒருபுலிபாய்ந்து கொல்லயத்தனித் திருப்பதாகவுங் கனவு கண்டுக்கொண்டிருக்கையில் அரசன் இதென்ன மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டே வேதியன் நித்திரைசெய்கிறானென்று தன்கையி லிருக்கிற தருப்பையினால் அவ்வேதியனைத் தட்டினான். உடனே வேதியன் மிகப்பயந்து அலறி, எதிரிலிருக்கும் ஓமகுண்டத்தில் விழுந்தான். உடனே அந்த ஓமத்தீ வேதியனைப் பஸ்மீகரமாக்கிவிட்டது. அரசனுக்கு வியாசரிட்ட கட்டளைப்படி கெடுவுதப்பாமல் பிரமஹத்தி வந்தடைந்தது. அரசன் பிரமைகொண்டவனாய் ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! நாம் தருப்பையால் வேதியனைத் தட்டவும், அவ்வேதியன் திடுக்கிட்டு ஓமத்தில் விழுந்திறக்கவும் நேரிட்டதே: இது வினைப்பயனே! இதை வெல்லுவதற்கு ஒருவராலுமாகாது - நமது குலகுருவாகிய வியாசமஹாமுனி கூறியதே சரி. இனி நாமடைந்த பிரமஹத்தியை அவ்வியாச மகாமுனிவர்தான் அகற்றவேண்டும் என்று கருதி, அவ்வேத வியாசரைப் பலவாறு துதித்தான். அந்த வேளையில் அரசனையடைந்த பிரமஹத்தி நீங்க வியாசர் வருகிறதுபோல் உலகத்தையடைந்த இருள் நீங்கச் சூரியனுதயமானான்.

உடனே வியாசரும் முன்போலவே மாணக்கருடன் அரசன் அரண்மனைக்கு வந்து, தன் வரவைக் காவலாளிகளால் தெரிவித்தார். அரசன் அவரை எதிர்கொண்டு போய் அழைத்துவந்து, தவிசளித்தல்-கைகழு நீர்தரல்-கால்கழு நீர்தரல்-முக்குடி நீர்தரல்-முப்புரி நூல்தரல்- நீராட்டல் - ஆடைசாத்தல்-தேய்வை பூசல்-மலர்சூட்டல்-மஞ்சளரிசி தூவல்- நறும்புகை காட்டல்-விளக்கிடல் - கற்பூர மேற்றல் - அமுதமேந்தல் - அடைக்காய்த்தரல் - மந்திரமலரா லருச்சித்தல்-என்று சொல்லப்பட்ட சோடச வுபசாரமுஞ்செய்து, ஓ ஐயனே! தங்கள் மகிமை தெரியாமல் தங்களைத் தூறிக்கொண்டேன். என்பேரில் கோபிக்காமல் கிருபைகூர்ந்து, என்னைப் பற்றிய பிரமஹத்தி நீங்க ஒருவழி காட்டவேண்டுவது மன்றி, இந்தப் பிரமஹத்தி வந்தவிதத்தையும் கூறுமென்று வேண்டவியாசர் நகைத்து, ஓ அரசனே! ஓமஞ்செய்தவேதியன் நித்திரையில் தன்னைப்புலி அடிக்கயத்தனித்து இருப்பதாகக் கனவுகண்டான். அந்தவேளையில் நீ தருப்பையால் தட்டவே, அந்தவேதியன் திடுக்கிட்டுப் பயந்து இறந்துபோய்விட்டான். இது வினைப்பயன். இதை ஒருவராலும் வெல்லப்போகாது. ஆதலால்-ஐந்தாம் வேதமாகிய ஸ்ரீ மஹாபாரதத்தைக்கேள். அதனாலே இந்தப்

பிரமஹத்தி நீங்குவதுமன்றி, உங்கள் முன்னோர்களின் காலகதியும் இன்னதென்று விளங்கும் இந்தப் பாரதம் நமது மூதாதைகளுடைய சரித்திரந்தானேயென்று இலேசாக நினைக்காதே! இது மஹா சிலாக்கியமானது. நான்கு வேதங்களோடு ஒப்புவமைப்பட்டு, ஐந்தாம்வேதமென்று கூறப்பட்டது. இப்பாரதத்திற்கு வகுத்துள்ள பர்வங்கள் பதினெட்டினுள் ஆதிபர்வத்தை முற்றும் படித்துப் பிராமணர்களுக்குப் பாயாசத்தினால் திருப்தி செய்வித்தால், அவர்களுக்குப் புத்திர சந்தானம் உண்டாகும். சபாபர்வத்தைப் பூரணமாகப் பக்தியோடு படித்துப் பிராமணர்களுக்குப் பசுவின்பாலால் திருப்தி பண்ணுவித்தால், அதிபாக்கியமுண்டாம். ஆரண்ய பர்வத்தை மனம் புறம்பே செல்லாமற்படித்து முடித்துப் பிராமணர்களுக்கு வாழைக்கனி முதலிய கனிகளால் திருப்தி ஆக்குவித்தால் வெற்றியுண்டாம். விராடபர்வத்தை விசுவாசத்தோடு முற்றும் படித்து வேத வித்துக்களாகிய பிராமணர்களுக்குத் ததியோதனத்தால் திருப்தி செய்வித்தால், இஷ்டபலங்கள் சித்திக்கும், உத்தியோக பர்வத்தை முழுதும் விசுவாசித்துப் படித்துப் பிராமணர்களுக்குச் சந்தர்ப்பணஞ்செய்து நூதன வஸ்திரதானஞ்செய்தால், இஷ்டகாமிய சித்தியுண்டாம். பீஷ்மபர்வத்தை உள்ளன்போடுமுடிய வாசித்துப் பிராமணர்களுக்குக் கருப்பஞ் சாற்றினால் (அதாவது கருங்கழைகளைத்தந்து) திருப்தி செய்வித்தால், ஆடையாபரணங்கள் குறைவின்றிப் பெருகும். துரோண பர்வத்தைப் பிரீதியோடு படித்துப் பிராமணர்களுக்கு வெண்குடை கொடுத்தால், தானிய சம்பத்துண்டாகும். கர்னபர்வத்தை அன்போடு முழுமையும் படித்துப் பிராமணர்களுக்குச் சுவர்ன தானம் பண்ணினால், ஆயுள் விருத்தியுண்டாம். சல்லிய பர்வத்தை முற்றும் படித்துப் பிராமணர்களுக்கு ஷட்ருசிரான்னங்களால் திருப்தி செய்வித்தால், பசுவிர்த்தியுண்டாம். சௌத்திக பர்வத்தைப் படித்து நிறைவேற்றிப் பிராமணர்களுக்குச் சந்தனபுஷ்ப பலகாரங்களால் திருப்தி செய்வித்தால், திரவிய லாபமுண்டாம். ஸ்ரீ பர்வத்தை உள்ளன்போடு படித்துமுடித்துப் பிராமணர்களுக்குத் திவ்விய போசனஞ்செய்வித்தால், துக்க நிவாரணமாகும். சாந்திபர்வத்தை முழுதும் படித்து வைதிக பிராமணர்களுக்குத் திவ்விய போஜனஞ் செய்வித்துத் தக்ஷிணை கொடுத்தால், வாகனலாபமுண்டாம். அநுசாஸனிகபர்வத்தைப் பக்திபூர்வமாகப் படித்து முடித்துப் பிராமணர்களுக்குக் கந்தபுஷ்ப பத்திரதானஞ்செய்தால், மகைசுவரியமுண்டாம். அஸ்வமேதபர்வத்தைச் சம்பூரணமாகப் படித்துப் பிராமணர்களுக்குப் போசன திருப்திசெய்தால், பெரும்பொருளுண்டாம். ஆசிரமவாச பர்வத்தைப் படித்து முடித்த பின் பிராமணர்களுக்குச் சோடசதானஞ் செய்தால், இஷ்டசித்தியுண்டாம். மௌசல பர்வத்தைப்படித்து முற்றுவித்துப் பிராமணர்களுக்குப் போசனதிருப்தி செய்தால், பாபநிவர்த்தியுண்டாம் மகாபிரஸ்தானிகபர்வத்தைப் பிரீதியாக முழுமையும் படித்துப் பிராமணர்களுக்குப் பட்டுக்குடை தானஞ் செய்தால், பெருஞ்செல்வமுண்டாம். சுவர்க்காரோகண பர்வத்தைப் பக்தி பூர்வமாகப் படித்துமுடித்தபின் பிராமணர்களுக்குச் சந்தன புஷ்ப தாம்பூல போசன வஸ்திர தட்சனைகளால் திருப்தி பண்ணினால், அஷ்டைசுவரியமு முண்டாம். ஆகையால் - இதின் மகத்துவம் உனக்குத் தோன்ற வேண்டுமானால், ஒரு கரிய வஸ்திரத்தைக் கொண்டு வந்து பேழையிலடக்கிவைத்து இந்தப் பாரதக்கதையைக் கேட்பாயாகில், கதை நிறைவேற நிறைவேற அந்தக் கரியவஸ்திரம் வெள்ளைவஸ்திரமாகிவரும் கரியவஸ்திரமே வெள்ளை வஸ்திரமானால், அக்கதையைக் கேட்பவர்கள் அடையும் பயனுக்கு ஓரளவுண்டா? என்று சொல்ல, அரசன்-ஓ ஐயனே! தேவரீர் கருத்தின்படி அந்த ஸ்ரீமஹா பாரதத்தைக் கேட்கிறேனென்றான். வியாசர் தமதருகிலிருக்கிற வைசம்பாயனரை நோக்கி, ஓ முனிசிரேஷ்டரே! ஸ்ரீமஹா பாரதத்தை இந்த அரசனுக்கு விளங்க உரையென்று கட்டளை இட்டு, அரசனிடத்து விடைபெற்றுத் தமது ஆசிரமத்திற் சென்றார். பின்பு வைசம்பாயனர் அரசன் செய்தவந்தனை முதலியவற்றை யேற்றுப் பல ஆசிகள் வழங்கி, ஓ அரசனே! நீயும் உன் மனைவியும் ஸ்நானஞ்செய்து சுசியாய் வாருங்களென்று விதித்தார். அரசன் அவ்வாறு தானும் தன்மனைவியும் ஸ்நானஞ்செய்து சகல நியமத்துடனேயும் வந்து வைசம்பாயனரை வணங்கி, அவர் உத்திரவின்படி நல்ல சுசியான இடத்

திலிருந்து, ஓ ஸ்வாமி! இனி ஸ்ரீமஹா பாரதக்கதையை அடியேங்களுக்கு விளங்க உரைக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். உடனே வைசம்பாயனர் அப்பாரத கதாப் பிரசங்கத்தைக்குறித்துச் சங்கற்பாதி சற்கிரியா நியம பூசனைகளெல்லாங் கிரமப்படி நடாத்தி, தமது உபாசன மூர்த்தியை அகத்தினும் புறத்தினும் ஆராதித்து, தம்மெதிரில் அஞ்சலியஸ்தராய் நிற்கின்ற இருவரையும் ஆசனத்தி லிருக்கச்செய்து, அவர்களுங் கேட்போராதலால் அச்சங்கற்பாதி நியதிகளை அவர்களால் நடப்பித்து ஆசீர்வாதஞ் செய்து, ஓ அரசனே! இந்த மேலான காவியத்தை யாவராயினுஞ் சிரத்தையோடும் பக்தியோடும் சகலபுவனாதார ஸ்வரூபியாகிய ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைப்பூசித்து வந்தனை வழிபாடு செய்து திரிகரணங்களும் ஒருமிக்க விருந்து கேட்பாராயின், அவர்களுக்குச்-சனனம்-மரணம்-இடர் - வறுமை - வியாதி-துக்கம்-சோகம்-மோகம்-பாவம் - அரிட்டம்-பகை-பயம்-இடையூறு முதலிய துன்பங்களி லொன்றேனு நெருங்காது. அன்றியும்-சூரியகிரகணமுஞ்சந்திரகிரகணமு மாகின்றகாலத்தில் உருத்திரபூமியிற்சென்று, ஆயிரபாரம் பொன்னைக் கிரமப்படி சற்பாத்திரமறிந்து தானஞ்செய்த பயனும், போர்முகத்தினின் றுஞ் செயம்பெற்று வெற்றிமாலை சூடிவந்தவர்கள் பெற்றத்தக்க பயனுமடைவார்கள். வேள்வி முன்னிலையில் யானைமுதலிய சகல பொருள்களையுந் தக்ஷணையோடு தானங்கொடுத்தவர்கள் அடையும்பயன் இக்காவியத்தை ஒருதரம் வாசிக்கின்றவர்கள் அடையும் பயனுக்குச் சரியாகாது. மேலும், இக் காவியத்தைத் தன்கரத்தா லெழுதினவனும், ஒருவனுக்குத்திரவியந்தந்து எழுதுவித்தவனும், கோடி கன்னிகாதானங்களையுங் கோடிகோதானங்களையும் நல்ல நியமத்தோடு செய்தவன் அடையும்பயன் யாதோ, அதனைத் தடையின்றி யடைவன். இக்காவியத்தை யெழுதி வைத்திருக்கிற வீட்டில், அஷ்ட ஐசுவரியம் வந்து குதிகொள்ளும். அன்றியும், பூதங்கள்-பிரேதங்கள்-பேய்கள் - பாலக்கிரகங்கள்-முதலானவை நெருங்காவண்ணம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் சதாகாலமுங் குடியாயிருந்து அவ்வீட்டிலுள்ளோர்கட்கெல்லாம் எத்துன்பமும் அணுகவொட்டாமற் பாதுகாத்துவருவார். இக்காவியத்தை அனுதினம் பாராயணஞ்செய்கிற புண்ணியசீலர்கள், பிரமனாதி தேவர்களாலும் அகத்தியராதி முனிவர்களாலும் தொழற்குரியவர்கள். அவர்கட்கே, அணிமா-மகிமா-கரிமா - இலகிமா-பிராப்தி-பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம்-என்கிற அஷ்டமாசித்திகளுங் கைகூடும். அவர்கட்கே, கற்பகவிருக்ஷம் - காமதேனு-சங்கநிதி-பதுமநிதி-சிந்தாமணி-முதலானவைகள் எதிர்நின் றேவல்புரியும் அவர்களே-அக்கர விலக்கணம் - இலிகிதம் - கணிதம்-வேதம்-புராணம்-வியாகரணம்-நீதிசாத்திரம் - சோதிடசாத்திரம் - தருமசாத்திரம் - யோகசாத்திரம்-மந்திரசாத்திரம்-சகுன சாத்திரம்-சிற்பசாத்திரம்-வைத்தியசாத்திரம் - உருவசாத்திரம்-இதியாசம்-காவியம்-அலங்காரம்-மதுரபாடனம்-நாடகம்-நிருத்தம் - சத்தப்பிரமம்-வீணை-வேணு-மிருதங்கம்-தாளம் அத்திரபரீக்ஷை - கனகபரீக்ஷை - இரதபரீக்ஷை-கஜபரீக்ஷை-அசுவபரீக்ஷை - இரத்தினப்பரீக்ஷை-பூமிபரீக்ஷை-சங்கிராம விலக்கணம்-மல்லயுத்தம் - ஆகருடணம் - உச்சாடனம்-வித்துவேடனம்-மதன சாத்திரம்-மோகனம்-வசீகரணம்-இரசவாதம்-காந்தருவவாதம்-பைபீலவாதம்-கவுத்துகவாதம்-தாதுவாதம்-காருடம்-நட்டம்-முட்டி-ஆகாயப்பிரவேசம்-ஆகாயகமனம் - பரகாயப்பிரவேசம் - அதிரிசியம்-இந்திரசாலம்-மகேந்திரசாலம்-அக்கினித்தம்பம் - சலத்தம்பம் - வாயுத்தம்பம்-திட்டித்தம்பம்-வாக்குத்தம்பம்-சுக்கிலத்தம்பம்-கன்னத்தம்பம்-கட்கத்தம்பம்-அவத்தைப்பிரயோகம்-என்கிற அறுபத்துநான்கு கலைஞானங்களினும் வல்லவராவார்கள் அன்றியும்-இக்காவியத்தை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சந்நிதியின்முன்னிருந்து அன்புடன்கேட்பார்களாயின், அவர்கள் கொலை-களவு-கள்-குருநிந்தை-பொய்-ஆகிய பஞ்சமாபாதகங்களும், ஸ்திரீஹத்தி-கோஹத்தி - சிசுஹத்தி-முதலாகிய அளவற்ற தீவினைகளும் நீங்கப்பெற்று, அழகு-குணம்-ஆயுள் - குலம் - சம்பத்துவித்தை-விவேகம்-தனம்-என்கிறஅஷ்டபாக்கியங்களையும் அடைந்து, கிடைத்தற்கரிய இந்திரபதவியையும் பெற்றுவாழ்வார்கள். மேலும், இக்காவியத்தை இம்மையிற் சூத்திரர்கேட்டால், மறுமையில் வைசியராவார்கள். வைசியர்கேட்டால், க்ஷத்திரியராவார்கள் க்ஷத்திரியர்கேட்டால், பிராமணராவார்கள். பிராமணர்கேட்டால், தேவ

ராவார்கள். தேவர் கேட்டால், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய சாரூபத்தை யடைவார்கள். ஆசார வீனர்களாயினும் இக்காவியத்தை ஆவலோடுங் கேட்பார்களாயின், பின்னர் தமக்கொருவர் நிகரில்லாத ஆசார பூசிதராவார்கள். இக்காவியத்தைக் கன்னிகைகேட்டால், நல்லகணவனைச் சேருவள். மலடிகேட்டால், அழகியமக்களைப் பெறுவள். தரித்திரன்கேட்டால், மிக்க பாக்கியமுடையவனுவன். வித்தையில்லாதவன்கேட்டால், சிறந்தவித்துவானுவன். அன்றியும், எவனெவன் எந்தெந்தப்பொருள்களை யடையவிச்சைகொண் டிருக்கின்ருனே, அவனவன் அந்தந்தப் பொருளையடைந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய கிருபையைப் பெற்று வாழ்ந்திருப்பன். இக்காவியத்தின் கேள்விமகத்துவத்தாற், குறள்-கூன்-ஊமை-செவிடு-குருடு-முடம்-உறுப்பு மயக்கம்-உறுப்பில் பிண்டம் ஆகிய எண்வகையுடற் குறைகளுநீங்கும் பதினெண்புராணங்களை முழுவதுங்கேட்டபயனும், சகல தீர்த்தங்களினுஞ் சென்முடியபயனும், இவ்வொரு பாரதகதைகளைக் கேட்பதினு லுண்டாகும். ஆதலால் எனதுகுருசுவாமிகள் இட்டருளிய கட்டளையின்படி அந்த மகாசிலாக்கியமுள்ள பாரதக்கதையைச்சாங்கோபாங்கமாகக் கூறுகிறேன்; நீங்களிருவரும் ஒருமனதாயிருந்துகேளுங்களென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினுர்.

## ஜெனமேஜெயனைப் பிரமஹத்தியடைந்த சருக்கத்தோடு

ஸ்ரீ மகாபாரதவரலாறு முற்றிற்று.



சூதபுராணிகர் சௌனகர்களுக்கு ஆதிபர்வம் கூறுதல்.

வைசம்பாயனர் சொல்ல ஜெனமேஜெயன் வபுஷ்டா தேவியுடன் கேட்குதல்.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:







ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## ஆதிபர்வம்

### கண்ணன் துதி.

ஆரணனை யாரணத்துட் பொருளையண்ட மளந்தானை யளக்கரிய வாடலானைக்
காரணனைக் காரணங்கண் கடந்தோன்றன்னைக் கண்மணியைக் கண்மணிக்குளொளியாய் நி
பூரணனைப் பூரணப்பொற் கலசக்கொங்கை பூமாது நாயகனைப் பொருவிற்செங்கை [ன்ற
வாரணனை வாரணமுன் வந்து தோன்று மாதவனைக் காதலுடன் வணங்கி வாழ்வாம்.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சவுனகாதி முனிவர்களே! சந்திரகுல சிகாமணியாகிய ஜெனமேஜெய மஹாராஜனை வைசம்பாயனர்பார்த்து, ஓ அரசனே! ஸ்ரீ மஹாபாரதம் ஆதிபஞ்சகம்-உயுத்தபஞ்சகம் - சாந்தித்திரயம்-அந்தியபஞ்சகம் என நான்கு வகுப்புக்களால், இந்த நான்கும் ஆதிபர்வம்-சபாபர்வும்-ஆரண்ணியபர்வம் - விராடபர்வம்-உத்தியோகபர்வம் - வீஷ்மபர்வம்-துரோணபர்வம்-கர்னபர்வம்- சல்லியபர்வம்-சவுத்திகபர்வம்-ஸ்ரீபர்வம்-சாந்திபர்வம் அனுசாசநிகபர்வம்-அஸ்வமேதபர்வம்- ஆசிரமவாசபர்வம்-மௌசலபர்வம்-மஹாபிரஸ்தானிகபர்வம்-சொற்காரோகணபர்வம்ஆகிய பதினெட்டு பர்வமாக இருக்கும். இருதிறத்தார்சேனைகளும் கஅ அக்குரோணி. ஒரு அக்குரோணிக்குத் தொகை என்னெனில் தேர்-க, யானை-க, குதிரை-ங, காலாள்-ரு, இது ஒருபந்தி; இப்படி மூன்றுகொண்டது, தேர்-ங, யானை-ங, குதிரை-கூ, காலாள்-கரு, இதுசேனுமுகம். இப்படி மூன்றுகொண்டது, தேர்-கூ, யானை-கூ, குதிரை-உஎ, காலாள்-சரு, இது குமுதம். இப்படி மூன்றுகொண்டது, தேர்-உஎ, யானை-உஎ, குதிரை-அக, காலாள்-கஙரு, இதுகணகம் இப்படி மூன்றுகொண்டது, தேர்-அக, யானை-அக, குதிரை-உசங, காலாள்-ச௦ரு, இதுவாகினி இப்படி மூன்றுகொண்டது, தேர்-உசங, யானை-உசங, குதிரை-எஉகூ, காலாள்-கஉகரு, இது புலுதம். இப்படி மூன்றுகொண்டது தேர்-எஉகூ, யானை-எஉகூ, குதிரை-உகஅஎ, காலாள்-ஙசாசரு, இதுசமுத்திரம். இப்படிமூன்றுகொண்டது, தேர்-உகஅஎ, யானை-உகஅஎ, குதிரை-சாருசாக, காலாள்-க௦கூஙரு, இது சமாக்கியம் இப்படி பத்துகொண்டது, தேர்-உகஅஎ௦, யானை-உகஅஎ௦, குதிரை-சாருசாக௦, காலாள்-க௦கூஙரு௦, இது அக்ரோணித் தொகை. பாண்டவர் இப்படி ஏழு அக்குரோணியும், சுயோதனன் முதலானவர் பதினொரு அக்ரோணியு முடைத்தாகி, இருதிறத்தாரும் போர் செய்தது பதினெட்டுநாள்.

இந்தப் பதினெட்டுநாளில் சேனாதிபதியாயிருந்தவர்கள் யாரெனில், பத்துநாள் வரைக்கும் காங்கேயன். ஐந்துநாள் வரைக்கும் துரோணாசாரி. இரண்டுநாள்வரைக்கும் கர்னன் மற்ற ஒருநாள் உதயாதிபதினேந்து நாழிகைவரைக்கும் சல்லியன். மற்றப்பதினேந்து நாழிகைவரைக்கும் சுயோதனன். முடிவில் பாண்டவர்கள் வெற்றிபெற்று, உலகமுழுதையுங் கைக்கொண்டு அரசுசெலுத்திப் பரமபதம்போய்ச் சேர்ந்தார்கள். இது காலகதி இந்தக்காலகதியையாவரு முணரும்படியாக இந்த ஸ்ரீமஹாபாரதத்தை இலக்ஷத்திருபத்தையாயிரம் கிரந்தமாகச்செய்து வெளிப்படுத்தினவர் என்குருவாகிய வேதவியாசர். ஆதலால் அவர்பிறப்பை முன்னங் கூறுகிறேன் கேட்பாயாகவென்று, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

---

முதலாவது

## வேதவியாசர் உற்பவச் சருக்கம்

கையிலாழி யெடுத்தருள் கண்ணனை
மையுலாமழை வண்ணனைப் பாண்டவர்
உய்யவத் துதயஞ்செய்த பானுவை
வையமுண்ட செவ்வாயனை வாழ்த்துவாம்.

கடல்சூழ்ந்த நெடிய உலகத்தில் நீர்வளம், நிலவளம் பெற்று குடிவளமுதலிய யாவும் விளங்குகின்ற நாடெவற்றினும் சிறப்புற்றிருக்கின்றது சோதி நாடு. அந்தச் சோதிநாட்டிலிருந்து உலகம்முழுதும் தன்னை வணங்கச் செங்கோல் நடாத்திவருகின்றவன் இரவிகுலதிலகனை வசுவென்பவன் அவ்வசு மந்திரி முதலானவர்கள் தன்னைச் சூழ்ந்துவர வெளிப்பட்டு, காட்டிற்சென்று வேட்டையாடி இளைப்பாற முனிவர்கள் தவஞ்செய்கிற ஒரு பெரிய சோலையில் வந்தான். அச்சோலையில் தவஞ்செய்துகொண்டிருக்கிற முனிவர்களை அவ்வரசன் பார்த்து தவத்துக்கு மிஞ்சினபொருள் யாதொன்றுமில்லை ஆதலால் நாமும் தவஞ்செய்ய வேண்டுமென்று கருதி மந்திரிமுதலானவர்களை அழைத்து, ஓ அன்பினர்களே! இதுவரைக்கும் நான் அரசுசெய்துவந்ததுபோல் யாவர்க்கும் ஒருகுறைவுவராமல் அரசுசெலுத்துங்களென்று கூறி, தனது முத்திரைமோதிரத்தைக் கொடுத்துவிட்டான். மந்திரிமுதலானவர்கள் அரசன் முகக்குறியைக்கண்டு, தடுத்துப்பேச சக்தியில்லாதவர்களாகி அரசன் கட்டளைப்படி சோதிநாட்டில் வந்து யாதொரு குறைவும்வராமல் அரசுசெலுத்தி வந்தார்கள் இங்கேவசுவென்பவன் முனிவர்களிடத்திற் சென்று வணங்கி அவர்கள்கிருபையினால் தவநிலைசேர்ந்து அநேகநாள் தவஞ்செய்திருந்தான் இப்படிஅருமையான தவஞ்செய்கிற வசுராஜனுக்கு முன் இந்திரன் வந்து ஓ வசுராஜனே! உலகிலுள்ள எல்லா அரசர்களிலும் நீ மநுசாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல்நடாத்தி தருமதேவதையை நாலுபாதத்தில் நடக்கச்செய்து குடிகளைக் காப்பாற்றிவருகிறவன். அப்படிப்பட்ட நீ தவநிலைசேர்ந்து தவஞ்செய்கிற காரணமென்னவென்றுவினவ, வசுராஜன் இந்திரனைவணங்கி ஓஐயனே! தவத்துக்குமிஞ்சின பொருள் வேறொன்றுமில்லையென்று நினைத்து சஞ்சலத்திற்கிடமாகிய உலகத்தை நீங்கி இத்தவத்தைச் செய்யக்கருதினேனென்றான் இந்திரன் ஓவசுராஜனே தவத்துக்குயர்ந்தபொருள் வேறொன்றுமில்லையென்பது உண்மைதான். அத்தவம் அரசனால் பெருகவேண்டுவதாதலால் அந்தவத்துக்கும்உயர்ந்தது அரசரன்றோ? அந்த அரசை மநுநெறிவழுவாமல் நடாத்திவந்தால் அதைவிட மேலானபயன் என்னயிருக்கின்றது. ஆதலால் உனக்கென்னவரம் வேண்டுமோ அந்தவரத்தைக் கொடுக்கிறேன், அதைப்பெற்று முன்போலவே அரசுசெலுத்திவாவென்றுகூற, வசுராஜன் ஓ ஐயனே எந்தெந்த லோகங்களைக் காணவிரும்புகிறேனோ அந்தந்த லோகங்களைக் காணவேண்டுமென்றுசொல்ல, இந்திரன் அவ்வரசன் கருத்தின்படி ஒரு திவ்யவிமானங் கொடுத்து சத்துருவை நாசஞ்செய்ய ஒரு காலதண்டமும் கமலமாலையும், சொர்ண நிறமும் பாலித்து இந்திரன் தனதிருப்பிடத்திற் சென்றான் வசுராஜன் அவ்வரத்தைப்பெற்றுக்கொண்டு தவநிலைவிட்டுத் தன்னாட்டிற்சென்று, காவிகாம்பர சடாதாரதண்டு கமண்டலங்களை நீக்கி, கங்கை முதலாகிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து நல்ல வஸ்திரங்களை யுடுத்தி மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலான ஆபரணங்களை யணிந்து மல்

விகை முல்லை முதலாகிய பரிமளமிகுந்த நறுமலர்மாலைகள்சூடி சந்தனம் புனுகு கஸ்தூரி கற்பூர சவ்வாது பூசி நவரத்தினமிட்டிழைத்த சிங்காசனத்தில் இனிது வீற்றிருந்து தேசத்தரசர்களெல்லாம் வணங்கவேத வேதியர்கள் பலஆசிகள்கூற மகுடாபிஷேகனாகி மநுசாஸ்திரவிதி பிசகாமல் முன்போலவே அரசுசெலுத்தி தனக்கு நாலுவரங்கொடுத்த இந்திரனுக்கு மகிழ்வுண்டாக சிறந்த திருவிழா நடத்திவந்தான். அதனாலே நீர்வளம்நிலவளமிகுதியாகிகுடிவளமிகுந்தது. இச்செய்கையை மற்ற அரசர்கள் கண்டுங் கேட்டும் அவரவர்கள் தனித்தனியே இந்திரனுக்குத் திருவிழா நடத்தினார்கள். அதனாலே இந்திரனுக்கு அதிகமகிழ்ச்சி யுண்டாகி எல்லாவளமும் பெருகும்படி நீர் வளத்தைப் பெருகச் செய்தான். இப்படி உலக முழுதுஞ் சுகமடைந்தது.

இப்பால் அந்தவசுராஜன் இந்திரன் கொடுத்த விமானத்தின் மீதிலேறி தன்கருத்தில் நினைத்த லோகங்களுக் கெல்லாம் சென்று அவ்விடத்திலிருக்கும் அதிசயங்களைப் பார்வையிட்டுக்கொண்டு அரசுசெலுத்திவருகிற நாளில், ஒருநாள் மந்திரிமுதலானவர்கள் புடைசூழ வேடிக்கையார்த்தமாய் வெளிப்பட்டு தன் நகரத்தின் மருங்கி லிருக்கிற மிகவுங் குளிர்ச்சியையுடைய சுத்தமதியென்னும் பெயர்பெற்ற நதியருகில்வந்து அவ்விடத்திலிருக்கிற விநோதங்களைப் பார்த்துக்கொண்டு வருகிறபோது, தனது பராக்கிரமத்தை மந்திரிகளுக்கும் மற்றவர்களுக்கும் அறிவிக்கவேண்டி அங்கே வுயர்ந்து பருத்திருந்த கோலாகல மென்கிற வெற்பைத் தன் காலினால் எற்றி அந்நதியில் தள்ளித் தன்னகரத்திற்குச் சென்றான். பின்பு சுத்தமதியென்கிற நதி போகத்தை யனுபவிக்கக்கருதி ஒரு பெண்ரூபந்தரித்து கோலாகல மென்னும் வெற்பைக் கணவனாகக் கொண்டுகூடி வசுபத்தனென்று ஒரு புத்திரனையும் கிரிகை என்று ஒரு புத்திரியையும் பெற்றாள். அந்த இரண்டுமக்களையும் மிகுந்த அன்புடன் வளர்த்துவருகிற நாளில்,கிரிகையென்பவள் பேதைப்பருவம் பெதும்பைப் பருவங்கடந்து மங்கைப்பருவமான காலத்தில், ஒருநாள் தன்னந்தனியே அந்நதியினருகில் விளையாடிக்கொண்டிருந்தாள். அத்தருணத்தில் முன்போல வசுராசன் வேடிக்கையார்த்தமாய் அந்நதி யருகில் வந்து விநோதங்களைப் பார்த்து வருகிறபோது நதியருகில் விளையாடித் திரிகிறகிரியை என்பவளைக்கண்டு இந்தக்கன்னிகை யார்? மஹாரூபவதியாய் இரதியைப்போல் பிரகாசிக்கிறாள். இவள் வதனமோ சந்திரவிம்பம். குழலோ முகில். நெற்றியோ மூன்றாம் பிறை. புருவமோ கருப்புவில். கண்ணோ கருவிளமலர். நாசியோ குமிழம்பூ. கன்னமோ கண்ணாடி. வாயோ சேதாம்பல். பல்லோ முல்லை. கழுத்தோ கமுகு. முலையோ மலை. தோளோ வேணு. முன்கையோ மகரயாழ். அகங்கையோ தாமரை. இடையோ அந்தரம். அல்குலோ அரவப்படம். தொடையோ வாழைத்தண்டு.முழந்தாளோஞெண்டு கணைக்காலோ வரால். பாதமோ புத்தகம். இவளுக்கொப்பு இவளே யன்றி வேறொருவ ரில்லையென்று அதிகமையலாகிப் பிரமைகொண்டு அந்தக் கிரிகை விளையாடுகிறதைப்பார்த்து அரசன் சித்திரப் பிரதமைபோல் நிற்கிறதை மந்திரிகளறிந்து, ஓ ஓ நமது அரசன் அக்கன்னிகையின்மேல் மையலாகினானென்று குறிப்பினாலுணர்ந்து, அக்கன்னிகை இடத்திற்சென்று, ஓஅம்மணி! நீயார்? உன்பெயரென்ன? என்றுவினவ, கிரிகை, ஓ! புண்ணியவான்களே! நான் இந்த நதியின் புத்திரி. என்பெயர்கிரிகையென்றுகிளற்றிஅந்நதியிலிறங்கி விட்டாள். மந்திரிகள் அரசனிடத்தில்வந்து ஓ அரசனே! அப்பெண் இந்த நதியின் புத்திரியாம். அந்த அம்மணுக்கு கிரியை என்னும்பெயராம் என்றுகூறினார்கள். அதுகேட்ட அரசன் அந்நதியருகிற் சென்று சொல்லுகிறான் உலகுக்குத்தாயாகி எவர்களையும்பாதுகாக்கின்றதேவதாசொரூபி! அடியேன் மனங்களிக்க நின்னிடமா யிருக்கிற கிரியை என்னும் கன்னிகையை மணஞ்செய்து கொடுக்க வேண்டும் அம்மணீயென்று பிரார்த்தித்தான். அந்தச் சுத்தமதியென்னும் நதி ஒரு பெண் உருவந்தரித்து இரண்டுமக்களுடன் அரசன் முன்றோன்றி இரண்டுமக்கள் வந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லி ஓ அரசனே! நீ மஹா புண்ணியவானும் உலோகாதிபனுமாதலால், உன் ஸ்திதிக்கு மகிழ்ந்து இந்த இரண்டுமக்களையும் உனக்குக் கொடுத்தேன். கன்னிகையாகிய கிரியையை மணம்புரிந்து இந்தப் புத்திரனைச் சேனாதிபதியாய் வைத்

துக்கொள்ளென்று கட்டளையிட்டு முன்போல் நதிவுருவமாயினுள். அரசன் கிரியையென்னுங்கன்னிகையை ஐம்பத்தாறு தேசத்தரசர்களுமறிய வேதவேதியர் ஆசிகள்பகர மங்கலம் புனைந்து வசுபதத்தனுக்குச் சேனுதிபதியங்கொடுத்து, பின்பு கிரியையோடு பள்ளியறைசேர்ந்து பஞ்சணை மஞ்சத்தி லிருந்து தாம்பூலந்தரித்து, ரு-வித ஆலிங்கனமும், கக-வித அதரபானமும், எ-வித நகக்குறியும், எ-விதத்தொழிலும், அ-வித தந்தக்குறியும் புரிந்து, அமுதமிருக்கும் யிரு-தானத்தையுமுணர்ந்து, அ-வித தாடனமும், அ-வித புட்குரலுமுண்டாக, கஉஅ-விதக் கரணங்களைப்புரிந்து, கலவிப்போரிலுண்டாகும் கசு-விதநயமுமியற்றி, ஆகமுமாகமும் ஆவியுமாவியும் ஒன்றெனக்கட்டிமுத்தமிட்டு, அவளது வட்டமிட்ட செப்புத்தனத்தைக் கைத்தலத்திற் பற்றிப் பிடித்துக் குழைத்துக் களித்து, இரதியுமதனுமெனக் கூடிக்கலந்து, அப்பருவக்கிரியை மகிழ்வுறச் சிறந்த லீலைகள் புரிந்து, சரசவைபோக சையோக சம்போகமடைந்து வாழ்ந்துவருகிற நாளில் கிரியை யென்பவள் கர்ப்பவதியாயினுள். அரசன் கர்ப்பங்கொண்ட தன்மனைவிக்கு நல்ல மாமிசங்களைக் கொண்டுவந்துகொடுக்கக் கருதி, மந்திரிமார்கள்-இரதகஜதுரகபதாதிகள்-வேடர்கள்-நாய்கள் - வலைஞர் முதலானவர்கள்புடைசூழ வெளிப்பட்டுக் காட்டிற்சென்று, யானை-கரடி-சிங்கமுதலானபெரியமிருகங்களை அதஞ்செய்து, நல்லருசியுள்ள மாமிசமிருகங்களை வதைத்து, அதன் மாமிசத்தை எடுத்து அரண்மனைக்கு அனுப்புவித்து, சேனைகளோடு மஹா விநோதமுள்ள ஒரு சோலையில் வந்திறங்கி, அவ்விடத்தில் பெரிய மாளிகையைப்போல் வஸ்திரங்களினுலியற்றி, அக்கூடார மாளிகையில் சப்ரகூடமஞ்சமிட்டு அன்றிரவில் சயனித்திருந்தான். அப்போது சந்திரோதயமாயிற்று. இளந்தென்றல் வீசிற்று. புஷ்பங்களெல்லாம்பரிமளித்தன. அரசன் அதுகண்டு மிகுந்த காமங்கொண்டு, கிரியையினது உருவத்தை மனதில் நினைத்துத் தன்னந்தனியே புரண்டு அயர்ந்து நித்திரைசெய்தான். அப்படி நித்திரை செய்கிறபோது, கிரியைவந்து தன்னைக் கூடிக் கலந்ததுபோல் கனவுகண்டு வீரியம் கலிதமாயிற்று. உடனே அரசன் விழித்து, ஓ! ஓ! மோசம் வந்தது. நாம் காமவெறிகொண்டு நித்திரை செய்ததினுல் வீரியம் வெளிப்பட்டது. இது வீணுகப்போமானுல் மகா குற்றம் நேரிடும். இதற்கென்ன செய்கிறதென்று சற்றுநேரம் ஆலோசித்து, தன்னெதிரில் வைத்திருக்கிற வல்லூரு என்கிற பக்ஷியைச் சைகைசெய்தழைத்து, ஓ பக்ஷி அரசே! இதோ யிருக்கிற வீரியத்தை எடுத்துப்போய் என் மனைவிக்குக் கொடுவென்று கட்டளையிட்டு, ஒரு இலையைப் பறித்து வட்டில்போலத் தைத்து, அவ்வீரியத்தை அதிற் புகட்டி அந்த வல்லூருவினிடத்திற் கொடுத்து அனுப்பினுன். அந்த வல்லூரு அவ்வட்டிலை மூக்கினுலேற்றுக்கொண்டு, கிரியையினிடத்து வரக்கருதி யமுனையாறு வரைக்கும் வந்தது. அங்கு ஒரு ஆலமரத்தில் பசியினுல் கனவருத்தமடைந்து ஒரு இராஜாளி யிருந்தது. அஃதிந்த வல்லூரு செல்கிற அரவந்தெரிந்து பறந்து வந்து பார்த்து, இஃதிரையெடுத்துப்போகின்றதால், இதைமறித்து அதைப்பறித்துப் புசிக்கலாமென்று கருதி வல்லூரைத் தடுத்தது. அந்த வல்லூரு இராஜாளியை நோக்கி, நீயேன் என்னை மறிக்கிருய்? நான் அரசன் அலுவலாகச் செல்கிறேன். வீணுய் வருத்தத்துக் கிடம்வைத்துக் கொள்ளாதே வழிவிடென்று கூற, இராஜாளி சீ! சீ! நானென்ன உன்னை விடுவனு? உன் மூக்கிலிருக்கிற இரையை நான் புசிக்காமற் போகிறதில்லையென்று எழும்பிப் பறந்துவந் தடித்தது. வல்லூர் அதுகண்டு, அடடா!! நீ எனக்கொரு அணுமாத்திரமென்று இகழ்ந்து இதுவும் எழும்பிப் பறந்து அந்த இராஜாளியை அடித்தது. இப்படி இவ்விரண்டு பக்ஷிகளும் போராடுகிறபோது இராஜாளியினது மூக்கு அந்த வீரியமிருக்கிற வட்டிலிற்பட்டு இலை கிழியவே, வீரியம் யமுனையாற்றில் இரண்டு துளியாய் விழுந்தது. உடனே வல்லூர் இராஜாளியை விட்டுவிட்டு அரசனிடத்து வந்து நடந்த விருத்தாந்தத்தைக் கூறிற்று. அதை யரசன் கேட்டுக் கனவருத்தமடைந்து, அன்றிராத்திரி அங்கிருந்து, மறுநாள் காலமே தன்னகரம் வந்து சேர்ந்து மனைவியைக் கண்டு மகிழ்ந்து, முன்போல் அரசு செலுத்தி இருந்தான்.

இங்கே யமுனையாற்றில் அப்சர ஸ்திரீகளிலொருத்தி பிரமன் சாபத்தினுலே மச்ச

மாகி சஞ்சரித்திருந்தாள். அவள் இரண்டு
பிரிவாக வீழ்ந்த அந்த வீரியத்தைப் புசித்
தாள். அன்றுமுதல் அவள் கர்ப்பவதியாகி,
பிரசவகாலம் சமீபித்திருக்கிற தருணத்தில்,
மீன் பிடிக்கிற வலைஞர் வந்து அந்த யமுனை
யாற்றில் வலையை விசிறினார்கள். அப்போது
அவ்வலையில் மீனமாயிருக்கிற அப்சரஸ்திரீ
அகப்பட்டாள். அதை வலைஞர் பார்த்து,
இந்த மீன் மிகவும் பெரிதா யிருக்கிறது
மன்றி, இதன்வயிறும் பெருத்திருக்கின்றது.
இதை நமது அரசனிடத்தில் சேர்க்கவேண்
டும் என்று கருதி அதைத் தாசராஜனிடத்
திற் சேர்த்துவிட்டார்கள். தாசராஜன் அந்த
மீனத்தின் வயிற்றைப்பக்குவமாய்க் கிழித்
துப் பார்த்தான். அதில் ஒருபுத்திரனும் ஒரு
புத்திரியு மிருந்தார்கள். புத்திரர்க ளில்லை
யென்று கனவருத்த மடைந்திருக்கிற தாச
ராஜன்கண்டு பரமானந்தத்தை யடைந்தவ
னாய் விழித்தகண்விழித்தபடி பார்த்திருக்கிற
தருணத்தில், மீனமாயிருந்த அப்சரஸ்திரீ
அந்தரத்தில் ஒரு திவ்ய விமானத்திற்றோன்
றி, ஓ தாசராஜனே! என்று அழைத்து,
அதோ உன்னருகிலிருக்கிற மீன்வடிவு நான்
தான். அப்புத்திரர்களோ உலகமுழுதும்
அரசுசெலுத்தும் வசுராஜன் வீரியத்தினால்
வந்தவர்களென்று அந்த விருத்தாந்தத்
தைச் சொல்லி, பின்னு மவ்வரசனைப்பார்த்
து, ஓ தாசராஜனே! என்வரலாற்றைக் கூறு
கிறேன் கேள்: அந்தரவாசிகளாகிய அப்சர
ஸ்திரீகளில் நானுமொருத்தி. பிரமனிடத்
தில் பூசைக்குரிய பணிவிடைப்பெண்ணாகி
யிருந்தேன். ஒருநாள்பூசைக்குச்சலந்திரட்ட
யமுனையாற்றுக்குவந்து அந்த ஆற்றிலிருக்
கிற மீன்களின் விநோதங்களைப் பார்த்திரு
ந்து, அதனால் பூசைவேளை தப்பினபின்பு
பிரமனிடத்திற்சென்றேன். பிரமன்என்னைப்
பார்த்து, ஓ பெண்ணே! இந்நேரவரையில்
என்னசெய்தாயென்று கேட்டதின்பேரில்
உண்மையைக்கூறினேன். அதன்மேல் பிர
மன் சினங்கொண்டு நீ மீன்விநோதங்களைப்
பார்த்திருந்தமையால் அவ்வாற்றிலேயே
மீனமாகி இருவென்றுசாபமிட்டார். அதன்
மேல் மிகுந்த துன்பமடைந்து பிரமனை மிக
வும்வேண்டிக்கொண்டேன்பிரமன்மகிழ்ந்து
வசுராஜன் வீரியம் யமுனை யாற்றில் விழப்
போகிறது. அதை நீபுசிப்பாய். வலைஞர்கள்
பிடித்துத் தாசராஜனுக்குக் கொடுப்பார்கள்.
தாசராஜன் உன் வயிற்றைக்கிழிப்பான். அப்
போது நீபெற்றசாபந்தீருமென்று கூறினார்.
அப்படியே இன்றையதினம் அச்சாபந் தீர்
ந்ததென்று கூறி முன்போலப் பிரமனிடத்
திற் சென்றாள். அதைக்கேட்ட தாசராஜன்
திடுக்கிட்டு இம்மக்கள் நமதரசனாகிய வசுரா
ஜனுக்குப் பிறந்தவைகள். இனி நாம் வைத்
திருக்கிறதுதகுதியல்ல. அரசனிடத்திற் சேர்
த்து அரசனிட்டகட்டளையின்படி நடப்பது
உத்தமம் என்று கருதி அம்மக்களைப் பொற்
றட்டிலேந்தி அரசனிடத்திற் கொண்டு
வந்து அப்சரஸ்திரீ கூறியவற்றைத் தெரி
வித்து நின்றான். அரசன் மகிழ்ந்து மக்
களை எடுத்துக்கொண்டு அவருட் புத்திரனு
க்கு மச்சராசன் என்றுபெயரிட்டுவளர்த்துத்
தன் சேனைக்குத்தலைவனாய் வைத்துக்கொண்
டுபுத்திரியைத் தாசராஜனுக்குக்கொடுத்து
அனுப்பினான். தாசராஜன் மிகுந்த களிப்
புடன் அந்தப்புத்திரிக்கு மச்சகந்தி என்று
பெயரிட்டு வளர்த்துவந்தான். அந்தமச்ச
கந்தி பேதைப்பருவங்கடந்து பெதும்பைப்
பருவத்தையடைந்து தந்தையாகிய தாச
ராஜனிடத்திற்சென்று வணங்கி ஐயா! என
க்கு ஒருபடவுகொடுத்தால் நமது குலாசாரப்
படி யமுனையாற்றிலிருந்து வருகிற பெரி
யோர்களுக்குப் படவுவிட்டுக்கொண் டிருக்கி
றேனென தாசராஜன் அவ்வாறே சிறிய பட
வொன்றுசெய்துகொடுத்தான்மச்சகந்திஅப்
படவை சிலபேரால் எடுத்து யமுனையில் விடு
த்து வருகிறபெரியோர்களுக்கும் மற்றவர்க
ளுக்கும் படவுவிட்டிருந்தாள். இப்படி சில
காலஞ்சென்றபின்பு ஒருநாளில் பிரமன்
மைந்தன் வசிஷ்டன், வசிஷ்டன்மைந்தன்
சத்தி, சத்திமைந்தன் பராசன், அந்தப்
பராச மஹாமுனி தன்னாலே உலகத்துக்கு
நன்மையுண்டாகவேண்டுமென்றும்அதற்கு
ஒரு புத்திரனைப் பெறவேண்டுமென்றுங்
கருதி இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஒரு
நக்ஷத்திரம் உச்சமாகிறது. அந்த நக்ஷத்தி
ரம் உச்சமாகிற காலத்தில் ஒரு ஸ்திரீயைக்
கூடவேண்டும் என்றுயோசித்து அந்தக்
காலம் வருகிறபரியந்தம் தவத்திலிருந்தார்.
அந்தக்காலம்சமீபித்ததுஅதுகண்டுதவநிலை
விட்டெழுந்து நகரங்களுக்குச் செல்ல அதி
வேகமாய்வந்தார். குறுக்கே யமுனையைக்கண்
டார். அந்தயமுனையோ மிகவும் பெருக்கெடு
த்திருந்தது. பராசர்அதையறிந்துஅவ்வாற்

றங்கரையில்படவோடுமிருக்கு மச்சகந்தியரு கில்வந்து, ஓ பெண்ணே! நானொரு கோரிக் கையை உட்கொண்டு நகரங்களுக்குப்போக வந்தேன்.வழியில் இந்தஆறுதோன்றிற்று. இதைக்கடந்து போவோமென்றால் பெருக் கெடுத்திருக்கின்றது.தயவுசெய்துபடவுவிடு வாயாகில் ஆற்றைக்கடந்து என்கோரிக்கை யைமுடித்துக்கொள்வேனென, மச்சகந்தி ஓ ஐயா பெரியவரே! ஆறேபெருக்கெடுத்திரு க்கின்றது. உம்மைமாத்திரம் படவிலேற்றிச் செல்வேனாகில்,படவுக்குத்தகுந்தபாரமல்ல. ஒருவேளை படவுகவிழ்ந்தால் மோசம் வரும். சற்றுநேரமிருந்தால் யாராவது இன்னுஞ் சிலபேர்கள் வருவார்கள். அப்போது தடை யின்றி உம்மை அக்கரையிற் சேர்க்கிறே னென, பராசர் மச்சகந்தியைப் பார்த்து, ஓ பெண்ணே! படவுக்குத்தகுந்த பாரம் எவ் வளவோ அவ்வளவுக்கு நான் பாரமாயிருப் பேன். நீ சந்தேகப்படாமல் படவைவிடு வென்றுகூற, மச்சகந்தி இவர் யாரோமஹா த்மாவென்று நினைத்து, ஓ ஐயா! வாரும் படவிலேறுமென்றாள். பராசர் மகிழ்வடை ந்து, தமது தவமகிமையால் படவுக்குத் தகுந்த பாரமிருக்க நினைத்துப் படவிலேறி னார். மச்சகந்தி படவை யாற்றிற்செலுத்தி வருகிறபோது படவு கனத்திருக்கிறது தெரி ந்து, இவர் மஹாதவசி என்றுமனதில் நினை த்து, மிகுந்த சாக்கிரதையுடன் படவைத் தள்ளிவருகிறாள். படவிலிருந்தபராசர் ஆகா யத்தைநோக்கினார். அப்போது இவர் நாடிய நக்ஷத்திரம் உச்சத்தில் வருகிற தருணமா யிருந்தது. அதைப்பார்த்துக் கனவருத்த மடைந்து ஓ! ஓ! நாம் கோரியகாலமாகிற தருணமாயிற்றே! இனியென்ன செய்யப் போகிறோமென்றுவருத்தப்பட்டு, இனிஇந் தப் படவைத்தள்ளும் பெண்ணினிடத்தா வது காலந் தப்பாமல் கூடவேண்டுமென்று நினைத்து மச்சகந்தியைப்பார்த்து, ஓ பெண் கள் நாயகமே! இவ்வளவு வருத்தப்பட்டு வந்தும், நான் உட்கொண்ட கோரிக்கை நிறைவேற்றுவதற்குக்காலந்தப்பிப்போகின் றது. நான்உட்கொண்ட கோரிக்கையென்ன வென்றால், இதோவானத்திலிருக்கிற நக்ஷத் திரம் உச்சியில் வருகிறபோது ஒரு ஸ்திரீ யைச் சேர்ந்து, உடனே ஒரு புத்திரனைப் பெறக் கருதிவந்தேன். நக்ஷத்திரமோ இன் னும் சற்றுநேரத்திற்குள் உச்சமாகப் போகி றது. நானோ ஆற்றிலிருக்கிறேன்.ஆதலால் நீ கிருபைகூர்ந்து, திரண்டு பரந்து நிமிர் ந்து வளர்ந்து வருகிற உன்குயம் என் மார்பி லமுந்த அணைவாயாகில் என்கோரிக்கை நிறைவேறுவது மன்றி, இவ்வுலகத்தில் நீயும் அழிவில்லாத புகழைப் பெறுவா யென்று இனிய வார்த்தைகளாற் கூறினார்.

அந்தமொழியைக்கேட்டமாத்திரத்தில் மச்சகந்திநாணமுற்று, ஆ! பெரியவராயிருக் கிற இவர் நம்மைப்புணர அழைக்கிறார் என்று மனதில் நினைத்து, ஓ ஐயனே நீர் மஹாதவசி. நானோ இன்னு மங்கைப்பருவ மடையாதவள். என்னைப்பார்த்து உம்மைக் கூடென்று சொல்வது தகுதியா? அம்பைக் கசக்கி முகர்ந்தால் பரிமளிக்குமா? அது போல் பருவகால மல்லாத என்னைக் கூட வேண்டுமென்று கருதினது முறைமையா? அப்படியல்லவென்று புணர யத்தனித்தா லும், என் உடல்முழுதும் மச்சகந்தம். நீர் தான் எப்படி சகிப்பீர்? மேலும் நான் கன் னிகை.இதை யோசிக்காமல் இவ்வாறு கூறு கிறது தருமமாவென்ன, பராசர் மச்சகந்தி யைப்பார்த்து, ஓ பெண்ணே! உன்னுடலில் இருக்கும் மச்சகந்தம் நீங்கி, இன்று முதல் பரிமளகந்தியென்று உனக்குப் பெயராகக் கடவது. நீ என்னைக்கூடினு முன்போலக் கன்னிகையாகவேஇருப்பாயென்ன, மச்சகந்தி இவ்வசனத்தைக் கேட்டவுடன் உடல்முழு தும் பரிமளம் வீசுகிறதைப்பார்த்து, ஓ! ஓ! இவர் தவசிரேஷ்டர். மறுக்கக்கூடாதென்று கருதிக்கூறுகிறாள்: ஓ ஸ்வாமீ! தங்கள் கருத் துக்கிசைந்தபடி நானும் சம்மதித்தேன். ஆனால் நான் மங்கைப் பருவத்தினளல்ல. தாங்கள் நினைத்த நினைப்புக்குத் தகுதியான காலமுமிடமுமில்லை. இது பகற்காலமாகவும் திவ்ய நதியாயு மிருக்கிறது. இதற்கென்ன செய்கிறது?என்றுகூற, பராசர்மச்சகந்திக்கு மங்கைப்பருவத்தை அநுக்கிரகஞ்செய்து, ஆற்றின்மத்தியில் ஒருதிட்டு தோன்றும்படி உண்டாக்கி, திருநீற்றில் கொஞ்சமெடுத்து ஆகாயத்தில்ஊதினார். உடனே ஆயிரங்கதிர் களோடு பிரகாசிக்கிற சூரியனை மறைக்கமூடு பனி சூழ்ந்தது. அப்பனியினால் இரவுபோ லாயிற்று.அப்போது பராசர் மச்சகந்தியைப் பார்த்து, ஓ பெண்கள் நாயகமே! உன்கருத் தின்படி மங்கைப்பருவத்தை உனக்குக் கொ

டுத்ததன்றி, தருந்தஇடத்தையும் காலத்தையும் சேகரித்தேன். இனித்தடையின்றி என்னைக்கூடி என்று வேண்ட, மச்சகந்தி அதிக மகிழ்ச்சியை அடைந்து கருத்தொத்து, அந்த ஆற்றின் மத்தியில் தோன்றிய திட்டில் இறங்கி, இருவருங் கூடிக்கலந்தார்கள். அப்போது பராசருக்குவீரியங்கலிதமாயிற்று உடனே பராசர் எழுந்து, யாதொன்றும் பேசாமல் ஆற்றைக்கடந்து நடந்தார். மச்சகந்தி உடனே கர்ப்பவதியாகிய மூன்றேமுக்கால் நாழிகைக்குள் பரப்பிரம வஸ்துவாகியும் என் குருவாகியும் விளங்குகின்ற வேதவியாசர் உதயமானார். கேளும் ஜெனமேஜெய மஹாராஜனே! இப்படி வேதவியாசர் உதயமானபோதே மான்றேல்-புலித்தோல்-காவிகாம்பரசடாடவிதரராய் வேதத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு உதயமானார். மச்சகந்தி அவரைப்பார்த்து மஹா வியப்படைந்திருக்கிறபோது அவர்தன் தாயை வணங்கி, ஓ அம்மணி! என்தந்தை எதோவென்று கேட்டார். மச்சகந்தி அப்பா மகனே! உன் தந்தை அதோ செல்கிருரென, வேதவியாசர் தாயைநோக்கி, ஓ அம்மா! நீ நினைத்தபோது வருகிறேன் என்று வாக்குத்தத்தஞ்செய்து தந்தையிடத்திற் சென்று, அவரோடு தாமுந் தவஞ்செய்திருந்தார். அப்போது சில காலமாய் உலகத்தில் காலகதியாய் வேதங்கள் ஒன்ருகக்கலந்து, கருத்துகள் வேருய்ப் பலவிதமாக மாறுபட்டிருந்தன. அந்த வேதத்தை அவ்வேதவியாசர் சிக்கறுத்து, இருக்கு-எசுர்-சாமம்-அதர்வணம்-என்று நான்கு வகையாகப் பிரித்து, பதினெண் புராணங்களை வெளிப்படுத்தி, பின்பு யாவர்களுக்கும் புண்ணியலோகத்தை யளிக்கும் இந்த ஸ்ரீமஹாபாரதத்தை நான்கு வேதங்களோடு ஐந்தாம் வேதமென்று யாவரு மேற்றுக்கொள்ள, ஸ்ரீமஹா கணபதி தனது கொம்பை எழுத்தாணியாகவும் மஹாமேருவை ஏடாகவுங்கொண் டெழுத முடித்தார்.

ஸ்ரீவிநாயகமூர்த்தி இம்மஹாபாரதத்தை எழுதவேண்டிய காரணமென்னெனில், பராசரும் வேதவியாசரும் இதற்கு முன்னம் கைலாசபதியைத் தரிசிக்கச் சென்ருர்கள். அப்போது கைலாசபதி பராசரை நோக்கி உமக்குப் பின்னிற்கிறவர் யாரென்றுவினவ; பராசர், ஓ ஸ்வாமி! என்னால் உலகத்துக்கு நலமுண்டாக வேண்டுமென்று கருதி இப்புத்திரனைப்பெற்றேன். இவனுக்கு வியாசனெனப் பெயரிட்டேனென்றுகூற, சாம்பமூர்த்தி மகிழ்ச்சியடைந்து ஓபராசரே! இந்த வியாசனால் உலகத்துக்கு உண்டாகும் நலமென்னென்று வினவ, பராசர் ஓ ஸ்வாமி! இப்போது மாறுபட்டிருக்கிற நாலுவேதமும் சீர்ப்பட்டு இவனால் வழங்கப்போகிறதுமன்றி, நாலுவேதங்களோடு ஒப்புமைப்பட்டு ஐந்தாம்வேதமென்று பெயர் வருக்கப்போகிற ஸ்ரீமகாபாரதகதையென ஒன்று செய்யப்போகிருன். அதனாலே உலகத்தில் தர்மார்த்த காமமோக்ஷம் என்கிற புருஷார்த்தங்கள் நான்கும் பரிஷ்காரமாய் விளங்கப்போகிறது என்று கூற, சாம்பமூர்த்தி மகிழ்ந்து, இனிமேல் நடக்கப்போகிற ஸ்ரீமகாபாரதத்தை இப்போதே எழுதுகிறதாய் நீர் கூறியபடியால், நமது குமாரனாகிய விநாயகமூர்த்தியை எழுதச்சொல்லுகின்றேன், உமதுபுத்திரனைச் சொல்லச்சொல்லுமென்றுரைக்க, பராசர் அதற்கொத்துக்கொண்டு வியாசரை நோக்கினர். வியாசர் அக்குறிப்புணர்ந்து ஸ்ரீ மகாபாரதத்தைக் கூறத்தொடங்கினர். விநாயகர் எழுதினர். அதுதான் ஆதிபாரதம். பின்பு வியாசர்கூறியதற்கும் பாரதம் நிறைவேறினதற்கும் ஒத்திருந்தது. அதனாற்ருன் இந்த ஸ்ரீமகாபாரதம் எல்லா நூலிலும் மேலான சிறப்படைந்தது. பின்பு வியாசர் அந்த ஸ்ரீமகாபாரதத்தைச் சபாலக்ஷங்கிரந்தமாக்கி, எனக்கும்-நாரதர்-சுகர்-தேவலன்-சுமந்தர் முதலானவர்களுக்குங் கற்பித்து, சொற்கலோகத்துக்கு நாரதரையும், யக்ஷகருக்குச் சுகரையும், பிதுர்த்தேவதைகளுக்குத் தேவலனையும், பூலோகத்துக்குச் சுமந்தரையும் நியமித்து; உமக்குச்சொல்ல இப்போது எனக்குக் கட்டளையிட்டார். அந்த ஸ்ரீமகாபாரதம் வேதமென்று கொள்வதற்குக்காரண மென்னெனில், அந்த பாரதவீரர்களோ திருமால்முதலாகிய தேவர்களாதலால், அப்பாரதத்தை வேதமென்று கூறப்பட்டது என்று வைசம்பாயனர் சொல்ல, ஜெனமேஜெய மகாராஜன் கேட்டு வைசம்பாயனரை வணங்கி ஒரு வசனஞ் சொல்லுகிருன்: ஓ ஸ்வாமி! பாரதவீரர் எங்கள் மூதாதைகளாயிருக்கத் தேவர்களென்று உரைத்தீர்கள். அந்தக் காரணத்தை எனக்கு விளங்க உரைக்கவேண்டுமென்று வேண்ட, வைசம்பாயனர்சொல்லுகிருர்:கேளும் மஹா





ராஜனே! பிரபஞ்ச ருற்பவஞ்சொல்லி அதன்மேல் பாரதவீரர் உற்பவஞ்சொன்னுல் விளங்கும். ஆதலால் பிரபஞ்சருற்பவம் முன்னஞ் சொல்லுகிறேனென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினுர்.

வேதவியாசர் உற்பவச் சருக்கம் முற்றிற்று.

இரண்டாவது

## பிரபஞ்ச ருற்பவச் சருக்கம்

கண்ணன் துதி.

உருவ மாயரு வாயகம் புறத்தினு முலாவும், ஒருவன் மூவுல கோரடி யளந்தசே வடிகள், வருவ தாகியும் போவதா கியுந்தடு மாறுங், கருவெ னும்பெருங் கடற்கரை யேறலாங் கலமே.

கிரேதாயுகத்தில் சூரியவமிசதிலகனுகிய கார்த்தவீரியார்ச்சுனன் சமதக்னியினது சிரசைத் துணித்தகாலத்தில், அந்தச்சமதக்னி மனைவி இருபத்தொருதரம் தன் மார்பில் புடைத்தழுதாள். இந்தச்சேதி சமதக்னிக்கு மூத்த குமாரனுன பரசுராமர் கேள்விப்பட்டு, தாயிடத்து வந்து வணங்கி, ஓ அம்மணி! நீ வருத்தமுருமலிரு. நீஅடைந்த வருத்தத்துக்கு எண்மடங்கான வருத்தம் அந்தச் சூரியவமிச ராஜஸ்திரீகளெல்லாம் அடையவும், சூரியவமிசம் இவ்வுலகி லில்லாமற் போகவும் சங்கரித்து, அந்த அரசர்களுதிரப்பிரவாகத்தில் என்பிதாவுக்குச் செய்யுங் கர்மமுதலியவற்றை முடிக்கிறேன். அஞ்சாதேஎன்று உறுதிகூறிப் போர்க்கோலங்கொண்டு, உலகிலுள்ள இரவிகுல அரசர்களையெல்லாம் அதஞ்செய்து, அவர்கள் உதிரப்பிரவாகத்தில் தந்தைக்குச் செய்யுங் கடனை நிறைவேற்றி, உலகத்தைக்காசிபருக்குத் தத்தஞ்செய்து தான் தவத்திலிருந்தார். காசிபர் உலகமுழுதையுங் கைப்பற்றி, மநுசாஸ்திர விதி பிசகாமல் செங்கோல்செலுத்தி வருகிற நாளில், சூரியவமிச ராஜஸ்திரீகளெல்லாம் ஒருமிக்கக்கூடி, இனிநாம் பூமியிலிருந்து பயனென்ன? கணவனிறத்தபோது மனைவியுமிறக்கவேண்டும். எக்காலத்தும் கணவனை விட்டிருக்கலாகாது. நமக்குக் கணவனுமில்லை புத்திருமில்லை. ஆகையால் நாமெல்லோரும் அக்னிப்பிரவேசமாகிறதே உத்தமமென்று ஆலோசித்து, யாவரும் அக்னிப்பிரவேசமாக யத்தனித்தார்கள். அதைக் காசிபரறிந்து ஓ! ஓ! மோசம்வந்தது, நீதிதெரியாமல் சூரியவமிச ஸ்திரீகளெல்லாம் அக்னிப்பிரவேச மாகிருர்கள். அவர்களுக்குச் சில நியாயஞ்சொல்லி, முன்போல் சூரியவமிசத்தைப் பெருகச்செய்ய வேண்டுமென்று அந்தப் பட்டத்தரசிகளிடத்திற் சென்று, ஓ ராஜஸ்திரீகளே! நான் சொல்லும் வசனங்களின்படி நின்று உலகத்தை யாதரியுங்கள். அதனுல் இம்மை மறுமை லாபம் சித்திக்கும். வீணுய் நெருப்பில்விழுந்திறந்தால் இம்மை மறுமை லாபங்கெட்டுப் பிசாசுகளாவீர்கள். ஆதலால் சற்று நில்லுங்களென்று மறுத்தார். அந்தராஜஸ்திரீகளெல்லாம் காசிபரை நோக்கி நமஸ்காரஞ்செய்து ஒரு வசனஞ் சொல்லுகிருர்கள்: ஓ ஐயனே! நாங்கள் இப்பூமியி லிருந்தென்னபயன்? கணவனிறந்த போதே மனையாளும் இறக்கவேண்டியது தருமம். ஆதலால் எங்களுடைய கணவர்களெல்லாம் இறந்தபின்பு நாங்கள் இருந்தென்னலாபம்? எங்கள் கருத்தின்படி உத்திரவுகொடுத்தால் நாங்கள் அக்னிப்பிரவேசமாகுகின்ருேமென்றுகூற, காசிபர் சொல்லுகிருர்: ஓ பட்டத்தரசிகளே! ஸ்திரீகளுக்கு முக்கியமான கடமை என்னெனில் புத்திரனைப்பெற்று குலத்தைப் பெருகச்செய்கிறது. அதைவிட்டு இறக்கிறது தகுதியல்ல. ஆதலால் நான் வேதத்திற் கூறிய விதியைச் சொல்லுகிறேன். அவ்வாறு நீங்கள் சம்மதித்துப் புத்திரரைப்பெற்றுக் குலத்தை விர்த்தியாக்குங்களென்றுகூற, பட்டத்தரசிகள் காசிபரை நோக்கி, ஓஐயனே! எங்களைக்குறித்து வேதத்தில் என்னசொல்லுகின்றது சொல்லுமென்றுகேட்க, காசிபர் சொல்லுகிருர்.

ஓ பட்டத்தரசிகளே! புருஷனிருந்தாலும் புத்திரனில்லாமற்போனுல், பட்டத்தரசிகள் அந்தந்தப்பட்டத்து ஆசாரியரைச் சேர்ந்து புத்திரனைப்பெற்று குலத்தை விர்த்திசெய்யலாமென்று வேதத்தில் முறையிடுகிறது. ஆகையால் நீங்களெல்லாம் உங்களுடைய ஆசாரியரைச்சேர்ந்து புத்திரர்களைப் பெற்றுக் குலத்தை விர்த்தியாக்குங்கள். இதனுலே ஒருகெடுதியுமில்லை. நீங்கள் யாவரும் நெருப்பில் விழுந்து மடிவது தருமமல்ல. இனி விருப்பமுடன் நான் சொன்னபடி

சேர்ந்து கருப்பவதி யாகுங்களென்று கட்டளையிட, பட்டத்தரசிகள் சற்றுநேரம் யோசித்து, இந்தக் காசிபரோ பிரமனுடைய புத்திரர். இவர்சொல்லுக்குப்பழுதுவரக்கூடாது இவரும் பொய்மை கூறுர் என்று ஒத்துக் கொண்டு யாவரும் காசிபரை வணங்கிச் சொல்லுகிறுர்கள்: ஓ மஹானுபாவா! வேதமே ஸ்வரூபமாக இருக்கிற நீர் ஒரு கட்டளையிட்டால் இந்திரன் முதலான தேவர்களே கடக்கமாட்டார்களென்றுல், பூலோகத்து ஸ்திரீ சாதிகளாகிய நாங்கள் கடக்கப்போகிறுேமா? தங்கள் கருத்தின்படி நடக்கிறுேமென்று கூறி, அவரவர்கள் தங்கள் குலாசாரியரை அழைப்பித்து, காசிபர்கூறிய கட்டளையைத் தெரிவித்துக் கூடிக்கலந்து, எவ்வெட்டுப்புத்திரர்களையும் இரண்டிரண்டு புத்திரிகளையும் பெற்று வளர்த்து, சூரியகுலத்தை விர்த்தியாக்கினுர்கள். அப்போது காசிபர் தமது வசத்திலிருக்கிற பூமியை அந்தந்தப்பட்டத்தரசிகளுடைய புத்திரர்களுக்குப் பகுத்துக் கொடுத்து முடிசூட்டி, அரசுசெய்யக் கட்டளையிட்டார். அந்தத்தப் பட்டத்துப் புத்திரர்கள் மனுசாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்தி வருவதினுலே, பிணிபயம் - கள்ளர்பயம் - சத்துருபயம் - விஷபயம் - ஐம்பூதபயம் முதலானவைகள் நீங்கி, தரும தேவதை நாலு பாதத்தினுலேயும் நடந்தது. அதனுல் உலகில் பிரஜைகள் பெருகி நின்றுர்கள். அப்பால் பூமிதேவி பிரஜாபாரத்தைச் சுமக்கச் சக்தியில்லாமல் கனவருத்தமடைந்து, இந்தப் பிரஜாபாரத்தைத் திரிமூர்த்திகள் தீர்க்கவேண்டுமே ஒழிய மற்றெருவர் தீர்க்கார்களென்று கருதி, அந்தத் திரிமூர்த்திகள் ஒன்றுகக் கூடியிருக்கிற சமயத்தைப் பார்த்துவந்து, அந்த மும்மூர்த்திகளையும் கண்டு வணங்கிக் கூறுகிறுள்: ஓ மஹாமூர்த்திகளே! பூமியில் அரசர்கள் மனுசாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்துகிருர்கள். அதனுல் பிரஜைகள் விர்த்தியாகி எனக்குப் பாரமாயிற்று. அவர்களைச் சுமக்க என்னுல் சக்தியில்லையென்று முறையிட்டாள். அதை மும்மூர்த்திகளும் ஆலோசித்து, பூமிபிராட்டியைப் பார்த்துச் சொல்லுகிறுர்கள். ஓ லோகமாதாவே! நீ வருத்தப்படவேண்டாம். இதோ ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும், தேவர்களும், அசுரர்களும் மானுஷதேகராய் உலகில் வந்து உன் பாரத்தை நீக்குவார்கள். அஞ்சவேண்டாம். உனது இருப்பிடத்துக்கு நீ போய்ச் சேரென்று கட்டளையிட்டு பின்பு ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் தேவர் அசுரர் முதலானவர்களும் மானுஷதேகமெடுத்து, பூமி பாரத்தை நீக்கி, பூமிதேவியை ஆதரித்தார்கள். அந்த விருத்தாந்தத்தை விவரமாகக் கூறுகிறேன் கேளென்று வைசம்பாயனர் சொல்லுவ தாயினுர்.

சிருஷ்டித் தலைவனுகிய பிரமனுடலில் அத்திரி - அரிசி-புலத்தியன்-கிரன்-கிருத்து-புலகன் என்னும் ஆறு புத்திரரும், அப்பிரமன் வலது பாதத்தின் பெருவிரலில் தக்கனும், இடது பாதத்துப் பெருவிரலில் தரணி யென்னும் ஒரு பெண்ணும் உதித்தனர். அந்தப் பிரமன் உடலிலுதித்த ஆறு புத்திரர்களில், அரிசியின் புத்திரன் காசிபர். அக்காசிபரால் இவ்வுலகம் விர்த்தியாயிற்று. அது எவ்வகையெனில்: பிரமன் வலது பாதத்துப் பெருவிரலிற் பிறந்த தக்கனென்பவன், பிரமன் இடதுகாற் பெருவிரலிற் பிறந்த தரணி யென்பவளைக்கூடி ஆயிரம் புத்திரர்களைப் பெற்றுன். அப்புத்திரர்கள் பிரமசரியத்தை மேற்கொண்டு தவஞ்செய்து ஞானபதமடைந்தார்கள். அதைத் தக்கன் கேட்டு, மறுபடியும் தரணி யென்பவளைக்கூடி ஐம்பது பெண்களைப் பெற்றுன். அந்த ஐம்பது பெண்களில் கீர்த்தி-லட்சுமி-துருதி-மேதா-புஷ்டி-சிரத்தை-கிரியை-விருத்தி-இலச்சாமதி என்னும் பதின்மரைத் தருமனென்கிற மநுவுக்கும், அஸ்வனி-பரணி-கார்த்திகை-ரோகணி-மிருகசீரிடம்-திருவாதிரை-புனர்பூசம்-பூசம்-ஆயிலியம்-மகம்-பூரம் - உத்திரம்-அஸ்தம்-சித்திரை-சுவாதி - விசாகம் - அநுஷம்-கேட்டை-மூலம்-பூராடம்-உத்திராடம்-திருவோணம்-அவிட்டம்-சதயம் - பூரட்டாதி-உத்திரட்டாதி-இரேவதி என்னும் இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும், அதிதி-திதி-தநு-காலை-ஆயு-சிங்கிகை-மநு-சுரபி-முனி-குரோதவசை-அநுகை-விநுதை - கத்துருவை என்னும் பதின்மூன்று பெண்களைக் காசிபருக்கும் விவாகஞ் செய்து கொடுத்தான். இவர்களில் அதிதிக்குத் தாதுருமித்திரன்-அரியமான்-சக்கரன்-வருணன் - அமிசுபகன்-தரணி-இருதுவன்-விவசுதன்-பூஷன்-சவித்திரன்-துவஷ்டரன்-விஷ்ணு ஆகிய பன்னிரண்டு சூரியர் பிறந்தார்கள். திதி

யென்பவளுக்கு, இரணியன் பிறந்தான். அந்த இரணியனுக்குப் பிரகலாதனன் பிறந்தான். பிரகலாதனனுக்குக் கும்பன்-நிருபன்-விரோசனன் என்னு மூவரும் பிறந்தார்கள். இவர்களில் விரோசனனுக்குப் பலிச் சக்கிரவர்த்தி பிறந்தான். பலிக்குப் பாணாசுரன் பிறந்தான். தநுவென்பவளுக்கு விப்பிரசித்தி- நமுகாசி-சங்கவருணன்-பலோமன்-விலோமன் முதலான நாற்பது குமாரர்கள் பிறந்தார்கள். அந்த நாற்பது பேருக்கும் சந்ததி விர்த்தியாகி அளவற்ற அசுரர்களுதித்தார்கள். காலை யென்பவளுக்கு, விநாசன்-குரோதனன் முதலாகிய ஐம்பது புத்திரர்கள் பிறந்து அபிவிர்த்தியாயினார்கள். ஆயுவுக்கு, விஜயன்-விஜரன்-வீரன் - விருத்திரன் என்னும் நாலு புத்திரர்கள் பிறந்து விர்த்தியாயினார்கள். சிங்கிகை யென்பவளுக்கு, இராகு பிறந்தான். மநுவென்பவளுக்கு, பீமசேனன்-உக்கிரசேனன் முதலாகிய பதினாறு கந்திருவர் பிறந்தார்கள். சுரபி யென்பவளுக்கு, மேனகை முதலாகிய அப்சர ஸ்திரீகளும் தேவசுரபிகளும் பிறந்தன. முனி யென்பவளுக்கு, கணன் பிறந்தான். குரோதவசைக்கு, மற்றொரு கணன் பிறந்தான். அநுகை யென்பவளுக்கு, சித்தகணங்கள் பிறந்தார்கள். விநுதைக்கு, அருணனும்-கருடனும் பிறந்தார்கள். அருணனுக்கும் அவன் மனைவி சேதிக்கும் சம்பாதி சடாயு பிறந்தார்கள். கத்துருவைக்கு, ஆதிசேஷன்-வாசுகி முதலாகிய நூற்று நாலு உரகபதிகளும் சலர்க்காரை என்கிற ஒரு புத்திரியும் பிறந்தார்கள். இது காசிபர் சந்ததி.

இதுபோலவே அப்பிரமன்புத்திரர்களாலும் அப்புத்திரர் வருக்கத்தாராலும் உண்டான உற்பவங்களைச் சொல்லுமிடத்து, அங்கீரசனுக்குப் பிரகஸ்பதிமுதலாகிய புத்திரர்களும் யோகசித்தியென்னும் ஒரு புத்திரியும் பிறந்தார்கள். அதில்பிரகஸ்பதி தேவகுருவானான். அத்திரிக்குவேதவேதியர்களும் பிரமரிஷிகளும் பிறந்தார்கள். புலகனுக்கு விச்சிரவாகுமுதலாகிய அரக்கர்கள்பிறந்தார்கள். அதில் விச்சிரவாகுவென்பவனுக்குக் குபேரன்பிறந்தான். புலத்தியனுக்கு, கின்னரர்கிம்புருடர்பிறந்தார்கள். கிருதுவுக்கு அழிவில்லாத நிலைமையையுடைய நாலுமுனிவர்கள் பிறந்தார்கள். பிரமன் புத்திரனாகிய தேவலனென்கிற முனிக்குப் பிரசாபதிபிறந்தான். அந்தப்பிரசாபதிக்குத்தூமிறை-புத்தி மனஸ்வனி-ரதை-சுசனை - சாண்டிலி-பிரபாசலை-என்னுமேழு மனைவிகளுண்டு. அவர்களில் தூமிறைக்கு வருணனும், புத்திக்கு துருவனும், மனஸ்வநிக்கு சோமனும், ரதைக்கு நகுஷனும், சுவசனைக்கு அணிவனும், சாண்டிலிக்கு-அக்கினியும், பிரபாசலைக்கு-பிரபாசன்-பிரத்தியூசன் முதலாகிய வசுக்களும் பிறந்தார்கள். வருணனென்கிற வசுவுக்குத் திரவணனும், துருவனென்கிற வசுவுக்குக் காலனும், சோமனென்னும் வசுவுக்கு மனோகரமென்னும் பெண்ணுக்கும், புரோசனன்-வர்ச்சிசன்-சிசிரன் - பிராணன்-வருணன்-புரதை என்கிற பிள்ளைகளும் பெண்ணும் பிறந்தனர். புரதை யென்பவளுக்குப் பதினொரு கந்திருவர் பிறந்தார்கள். நகுஷனென்கிற வசுவுக்குச் சோதி பிறந்தான். அனிலனென்னும் வசுவுக்கும் சிவையென்பவளுக்கும் புரோஜனனும் அவிக்யாதமதியும் பிறந்தார்கள். அக்நி யென்கிற வசுவுக்குக் குமாரன்பிறந்தான். பிரத்யூஷனென்னும் வசுவுக்கு முனிவனாகிய தேவலன் பிறந்தான். பிரபாசனனென்கிற வசுவுக்கும் பிரகஸ்பதி சகோதரியாகிய யோகசித்திக்கும் விசுவகன்மன் பிறந்தான். தரனென்கிற வசுவுக்கு மானச புத்திரர்களாகிய மாதேவன்-அரன்-உருத்திரன்-சங்கரன்- நீலலோகிதன்- ஈசானன்-விசயன் வீமதேவன்-பவோற்பவன்-காபாலி-சவுமியன் என்னும் ஏகாதச ருத்திரர்கள் பிறந்தார்கள். பிரமன் வலது கையில் தருமனென்கிற மநுபிறந்தான். அந்தத்தருமனுக்குச் சமன்-ராமன்-அருஷன் என்பவர் பிறந்தார்கள். அந்தமூவரும் கிரமமாய் அப்பிராப்தி- நிருதி- நந்தி என்கிற மூன்று மனைவியரோடு வாழ்ந்திருந்தார்கள். சவித்துவுக்கும் வடவாக்கினி ரூபமாகிய துவஷ்டரைக்கும் அஸ்வனிதேவதைகள்பிறந்தார்கள். பிரமன் மார்பிலே பிருகுமுனிவர் பிறந்தார். அந்தப் பிருகுக்குச் சுக்கிரன் பிறந்தான். அந்தச் சுக்கிரன் அசுரர் குருவாயினான். சுக்கிரனுக்கு துவஷ்டரன்- தாத்திரி-பத்திரன் - கன்னன்-என்கிற நாலுபுத்திரர்கள் பிறந்து அசுரருக்குப் புரோகிதர்களாயினார்கள். பிருகுமுனிக்குச் சவுனகன் பிறந்தான். அந்தசவுனகனுக்கும் மநுவாகிய யயாதிபுத்திரி சுகன்னிக்கும் சனகன் உருசிகன் முதலாகிய நூறு புத்திரர்

கள்பிறந்தார்கள். உருசிகனுக்குச் சமதக்கினி பிறந்தான். சமதக்கினிக்கும் ரேணுகைக்கும் புத்திரரும் புத்திகளுமாக நாலுபேர் பிறந்தார்கள். அவர்களில்மூத்தகுமாரன் சிரேஷ்டனுயினுன். மறுபடியும் பிரமனுக்கு தாதை விதாதை அலக்குமி என்னு மூன்று ஸ்திரீகள் பிறந்தார்கள். இவர்களில் அலக்குமி அனேகம் புத்திரர்களைப் பெற்றுள். வருணனென்பவனுக்கும் சேஷ்டைக்கும் தருமனென்று ஒரு புத்திரனும் சுனநகை என்று ஒருபெண்ணும் பிறந்தார்கள். தருமனுக்கும் நிருதியென்பவளுக்கும் மஹாபயன் பயன் மிரததீவு என்கிற மூவரும் பிறந்தார்கள். மற்றும் அத்தருமனுக்கு காசி சேனை பாசினி திரிதராஷ்டரை சுகி என்னும் ஐந்துபெண்கள் பிறந்தார்கள். இவர்களில் காசியென்பவளுக்குக் காக்கைகள்பிறந்தன. சேனை என்பவளுக்குப் புறுக்கள்பிறந்தன. திரிதராஷ்டரைக்கு விச்சுளிகள் பிறந்தன. பாசினியென்பவளுக்குப் பருந்துகளும் ஆந்தைகளும் பிறந்தன. சுகியென்பவளுக்குக் கிளிகள்பிறந்தன. முன்கூறிய காசிபமுனி மனைவியாகிய முனியென்பவளுக்குமறுபடியும் மிருகை-மந்தை-அரிணி - பத்திரமதி - மாதங்கி - சார்த்தூலி-சுவேசை-சுரசை என்கிற எண்மரும்பிறந்தார்கள். இவர்களில் மிருகை யென்பவளுக்குப் பன்றி முதலாகிய மிருகங்கள் பிறந்தன. மந்தை என்பவளுக்கு உயிருள்ள பல ஜெந்துக்கள் பிறந்தன. அரணிக்குக் குரங்கினம் பிறந்தன. பத்திரமதிக்கு ஐராவதம் பிறந்தது. ஐராவதத்துக்குத் தேவநாகங்கள் பிறந்தன. மாதங்கி என்பவளுக்கு யானைகள் பிறந்தன. சார்த்தூலி யென்பவளுக்குச் சிங்கங்களும் புலிகளும் பிறந்தன. சுவேதையென்பவளுக்குத் திக்குக் கஜங்கள்பிறந்தன. சுரதை என்பவளுக்கு உரோகணி - பத்திராங்கி - கந்திருவை என்கிற மூன்று ஸ்திரீகள் பிறந்தார்கள். உரோகணிக்கு மான்கள் பிறந்தன. பத்ராங்கிக்கு, மரங்களும் - கொடிகளும் - புதல்களும் பிறந்தன. கந்திருவைக்குக் குதிரைகள்பிறந்தன. இதுவே பிரபஞ்ச உற்பத்தி. இனி பாரதவீரர் உற்பத்தியைக் கூறுகிறேனென்று வைசம்பாயனர் ஜெனமேஜெய மஹாராஜனைப் பார்த்துச் சொல்லுகிறுர்.

பிரபஞ்சருற்பவச் சருக்கம் முற்றிற்று.



மூன்ருவது

## பாரதவீரர் உற்பவச் சருக்கம்

### கண்ணன் துதி.

இணையிலாதவ னிறப்பொடு பிறப்பெனுங் கடற்கோர், புணையுமானவன்புநிதர்கண் மனத்துறை புநிதன், பணைகொடிண்புயப் பாண்டவர்க் கிகத்தினும் பரத்துந், துணையதானவன் றுணைப்பத நமக்கினித் துணையே.

சிறப்புப் பொருந்திய வரத்தினை யடைந்த யாதவகுல சிகாமணியாகிய வசுதேவனுக்கு தேவகி என்றும், உரோகணி என்றும் இரண்டு மனைவியருண்டு. அவர்களில் தேவகிக்கு கிருஷ்ணஸ்வாமி என்றும், உரோகணிக்குப் பலராமனென்றும் இரண்டுருவமாகத் திருமால் அவதரித்தார். அஷ்டலட்சுமிகள் அமிசையால் உருக்குமணி முதலாகிய எட்டு பட்டப ஸ்திரீகள் பிறந்தார்கள். அப்சரஸ்திரீகள் அமிசையால்கோபியர்கள் பிறந்தார்கள். சனற்குமாரர் முதலாகிய முனிவர்களும் அம்முனிவர் புத்திரர்களும், குந்திபோசன் முதலாகிய யாதவ அரசர்களாய்ப் பிறந்தார்கள். பிரபாசனரென்கிறஎட்டாம்வசுஅமிசையால் காங்கேயன் பிறந்தான். அசுரர் குலகுருவாகிய சுக்கிராச்சாரி அமிசையால் துரோணச்சாரிபிறந்தார். காமக்குரோதத்தின் அமிசையால் அஸ்வத்தாமன் பிறந்தான். ஏகாதசருத்திரர் அமிசையால் கிருபாச்சாரிபிறந்தான். சூரியன் அமிசையால் கர்னன் பிறந்தான். துவாபரயுக புருஷன் அமிசையால் சகுனிபிறந்தான். கந்திருவர்க்கு அரசனுகிய அமிசன் அமிசையால் திரிதராட்டிரன் பிறந்தான். வசுமதி என்னும் தேவதை அமிசையால் காந்தாரி பிறந்தாள். திரிதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் கலிபுருஷன் அமிசையால் சுயோதனன் பிறந்தான். விச்சிரவாகுவென்னும் அசுரன்வழியிற் ருேன்றிய அசுரர்கள் அமிசையால் சுயோதனன் தம்பிமார்கள் பிறந்தார்கள். இரணியகசிபன் அமிசையால் சிசுபாலன் பிறந்தான். பிரகலாதனன் அமிசையால் சல்லியன் பிறந்தான். பிரகலாதனனுக்கு இளையவனுகிய அநுகுலாதன் அமிசையால் துஷ்டகேதுபிறந்தான். சிபி அமிசையால் சுருதசேனன் பிறந்தான்.

பாஷக்கலன் அமிசையால் பகதத்தன் பிறந்தான். விப்பிரசித்தனென்னும் அரக்கன் அமிசையால் ஜராசந்தன் பிறந்தான். நயசீரன் அமிசையால் நஸ்வசீரன் பிறந்தான். சங்கன்-ககனமூர்த்தி-வேகவந்தன் முதலானவர்கள், கேகயராஜர்களாகப் பிறந்தார்கள். கேதுவந்தனென்பவன் அமிசையால் சுதேரிசனன் பிறந்தான். சுவர்ப்பானு என்பவன் அமிசையால் உக்கிரசேனன் பிறந்தான். சங்கமன் அமிசையால் சோமகன்பிறந்தான். அஸ்வபதி அமிசையால் கிருதவன்மன்பிறந்தான். உருஷபாவன் அமிசையால் தீர்க்கபிரக்கியன் பிறந்தான். நஜரன் அமிசையால் மல்லன் பிறந்தான். அஸ்வக்ரீபன் அமிசையால் உரோசமானன் பிறந்தான். சூக்குமனென்பவன் அமிசையால் பிருகத்திருது பிறந்தான். துருவென்பவன் அமிசையால் சேனுபிந்தன் பிறந்தான். சகரன் அமிசையால் பிறத்திவிந்தியன் பிறந்தான். விருபாக்ஷன் அமிசையால் சித்திரவன்மன் பிறந்தான். பவுத்திரன்-அசாங்கன்-அமிசையால் கிருபபாக்கிவீகர் பிறந்தார்கள். சந்திரவக்கரன் அமிசையால் பூரிசிரவன் பிறந்தான். நிகும்பன் அமிசையால் ருஷிகன்பிறந்தான். மயூரன் அமிசையால் விசுவன் பிறந்தான். சுபாரன் அமிசையால் குரோதகீர்த்தி பிறந்தான். அந்தக் குரோதகீர்த்திக்கு நந்தகன்-கண்டகன்-வேஷன்-சித்தராத்தகீஷன் - சுவீரியபாகு-மஹாவீரியன்-குதரன்-சித்திராதன் - நீலன்-வீரதாமன்-தந்தவந்தரன் - துரஜெயன்-ஜெநமேஜெயன்-ஏகலவ்யன்-எனப் பல அரசர்கள் பிறந்தார்கள். பக்தர்ஸ்தன் அமிசையால் நந்தகன் பிறந்தான். தீர்க்கசிகவன் அமிசையால் காசிராஜன் பிறந்தான். விஜயன் அமிசையால் வசுமித்திரன் பிறந்தான். சித்தென்பவன் அமிசையால் பரசுராஷ்டரன் பிறந்தான். வீரன் அமிசையால் பவுண்டிரமச்சன் பிறந்தான். உருத்திரன் அமிசையால் மணிமந்தன் பிறந்தான். காலபுத்திரர் அமிசையால் ஜெயசேனன்-பராசிதன்-நாதிகன்-நிஷ்காதிபன்-ஸ்ரீமந்மகோதன் - மத்தியன்-சமுத்திரசேனன் - புரகதன் என எட்டு அரசர்கள்பிறந்தார்கள். குரோதவசை புத்திரனுகிய கண்ணன் அமிசையால் கஜ புத்திரன் பிறந்தான். அலிஎன்னும் அரக்கன் அமிசையால் சிகண்டிபிறந்தான். பிரகஸ்பதி அமிசையால் புருக்க்கீர்த்தியென்னு முனிபிறந்தான். மருத்துவர் அமிசையால் பாஞ்சாலன்-விராடன்-சாத்தகி-பிறந்தார்கள். திரிகுணன் அமிசையால் விதுரன்பிறந்தான். யக்ஷகஅரசன் அமிசையால் பாண்டுராஜன் பிறந்தான். சித்தி-புத்தி-என்கிறதேவதைகள் அமிசையால்குந்தி-மத்திரை இரண்டுபேர்பிறந்து, அந்தப் பாண்டுராஜனுக்கு மனைவியாயினர். யமன் அமிசையால் தருமராஜன் பிறந்தான். வாயு அமிசையால் வீமன்பிறந்தான். இந்திரன் அமிசையால் விஜயன் பிறந்தான். அஸ்வனிதேவர்கள் அமிசையால் நகுலசகாதேவர் பிறந்தார்கள். ஸ்ரீதேவி அமிசையால் திரௌபதி பிறந்தாள். அக்கினி அமிசையால் துஷ்டத்தூய்மன் பிறந்தான்.

இது பாரதவீரர் உற்பத்தி. இவர்கள் உலகத்திற்பிறந்து, பலுகிப் பெருகி முடிவில் போர்க்கோலங்கொண்டு பூமிபாரத்தை நீக்கி அவரவர்கள் இருப்பிடத்துக்குப்போய்ச்சேர்ந்தார்கள். இந்த உற்பத்தியைக் கேட்டவர்கள் யாவராலு மளவிடப்படாத பிர்ம்மானந்தத்தை அடைவரென்று வைசம்பாயனர் சொல்ல, ஜெநமேஜெயமஹாராஜன் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து வைசம்பாயனரை வணங்கிச் சொல்லுகிறுன். ஓ ஸ்வாமி! தேவர்களும் அரக்கரும் இவ்வுலகத்தில் அரசர்களாகப் பிறந்தார்களென்று உரைத்தீர்கள். இவ்வுலகத்தில் பிர்ம்ம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திர ரென்கிற நாலுவருணமும் வந்தவரலாற்றையுங் எங்கள் வமிசபரம்பரையையும் விளங்க வுரைக்கவேண்டுமென்று வேண்ட, ஓ அரசனே! தக்கன் மகளான அதிதிக்கும் காசிபருக்கும் சூரியன் பிறந்தான். சூரியனுக்கும் சாயாதேவிக்கும் வைவசுதன் - யமன் - சனி-யமுனை-தபதி என்னும் ஐந்து மநுக்கள் பிறந்தார்கள். இவர்களில் வைவசுதமநுவால் பிர்ம்ம - க்ஷத்திரிய - வைசிய - சூத்திரரென்னும் நாலு வருண முண்டாயிற்று. இனி உன் மரபினது விருத்தாந்தையும் உன் மரபினது அரசர்கள் சரித்திரத்தையுஞ் சொல்லுகிறேன் கேளென்று, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

பாரதவீரர் உற்பவச் சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது

# குருகுலச் சருக்கம்

## கண்ணன் துதி.

சங்கமுந் திகிரியுந் தனுவுந் தண்டமுஞ்
செங்கைவாளுட னருட்செலுத்துஞ் சீரியோ
மங்குனேர் வடிவமும் வனசவுந்தியும் [ன்
பங்கயப் பதமுமியான் பார்க்கும்பாங்கெலாம்.

ஆதியில் திருமாலும் தேவருங்கூடித் திருப்பாற்கடல் கடைகிறபோது மந்தரகிரியாகிய மத்துச் சுழலத் தானே தறியாகி இருந்தும், விஷந் தோன்றினபோது அவ்விஷத்தின் சுவாலை அடங்க அவ்வமுதத்திற்ரேன்றியும், உலகம் குளிர்ச்சிபெறத் தனது சோடசகலைகளை வீசியும், எங்கும்பிரகாசிக்கப் பரமன் சடாடவியி லினிது வீற்றிருந்தும், சகல லோகங்களிலு மிகவும் சிறப்புற்ரேங்கிய சந்திரன் புதனென்கிற ஒரு புத்திரனைப் பெற்ருன். புதன் புரூருவனைப் பெற்ருன். அப்புரூருவராஜன் ஆறுசாஸ்திரம் - நாலுவேதம்-அறுபத்துநாலு கலைக்கியான முதலானவைகளை யுணர்ந்து, தருமதேவதை நாலுபாதத்தினலேயும் நடக்க அறத்தை நடாத்தி, மநுசாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல் செலுத்தி, சக்கரவர்த்தி யென்கிற பெபரைவகித்து, மஹாசிறப்புடன் அரசுசெய்திருந்தான். இப்படி சிலநாள் அரசுசெலுத்தி வருகிறகாலத்தில், ஒரு நாள் சொற்கலோகத்துக் கதிபதியாகிய இந்திரனுடைய நாடகசாலைப் பெண்களில் ஊர்வசி யென்பவள், மலர்கொய்து விளையாடப் பூங்காவனத்திற் சென்ருள். அவளை அசுரர்கள் மறித்து துராக்கிர்தமாகத் தங்கள் தேரிலேற்றித் தங்களிருப்பிடத்துக்குக் கொண்டுபோகிருர்கள். அப்போது அந்த ஊர்வசி மிகவும் நடுங்கி, என்னையாதரிப்பவரில்லையா வென்று ஓலமிட்டிரைந்தாள். அந்த ஓசையை இந்திரன் முதலாகிய தேவர்கள் கேட்டு, அவ்வசுரரோடு போராடச் சக்தியற்றவராய்ச் சும்மாயிருந்துவிட்டார்கள். இந்த ஓசையைப் புரூரவச்சக்கரவர்த்தி கேட்டு, தன்னருகிலிருக்கிற சாரதியை அழைத்து, ஓ சாரதி! தெய்வப்புரவியைப் பூட்டி என் இரதத்தைக் கொண்டுவாவென்று கட்டளையிட்டான். அச்சாரதி அரசன் கட்டளைப்படி தெய்வப்புரவியைப் பூட்டி இரதத்தைக்கொண்டுவந்து நிறுத்தினன். புரூருவச்சக்கரவர்த்தி அந்த ரதத்திலேறி ஆகாயத்திற் சென்று, அந்த ஊர்வசியைக் கொண்டுபோகிற அசுரரைமறித்துத் தன்வில்லைவளைத்துச் சரமாரிபொழிந்து, அரை நொடியில் அவர்கள் கையிலிருக்கிறவில் முதலாகிய படைகளைமுறித்து அதஞ்செய்து, ஒருவர்போனவழி ஒருவர் போகாமலோட அவர்களைத் துரத்திவிட்டு, அந்த ஊர்வசியைத் தன்னிரதத்தில் ஏற்றி, அவள் விருத்தாந்தத்தைக் கேட்டான். அந்த ஊர்வசி தான் வந்ததையும், வந்த இடத்தில் அசுரர் பிடித்ததையும் சொல்லி, தன திருப்பிடத்தையுங் கூறினள். அரசன் அந்த ஊர்வசியின் சௌந்தரியத்தைக்கண்டு மிகுந்த காதலுடையவனய், இந்த ஸ்திரீயை நாம் கூடுவோமென்ருல் இவள்சொற்கலோகத்துக்கதிபதியாகிய இந்திரனுடைய நாடகசாலைப் பெண்ணுதலால், இந்திரனது உத்திர வில்லாமல் புணரக்கூடாது என்று கருதித்தன் இரதத்தை இந்திரலோகத்திற்செலுத்தி, இந்திரனிடத்திற் சென்று இந்த ஊர்வசியைக் கொலுவில் நிறுத்தி இந்திரனை வணங்கிச்சொல்லுகிருன்: ஓ தேவராஜனே! இதோ நிற்கிற ஸ்திரீயைஅசுரர்பிடித்துப்போயினர். இவள் முறையிட்டுச்சென்ருள். இவள் முறையிட்டதைக் கேட்டு அவ்வசுரரை அடித்துத் துறத்திவிட்டு இவளை மீட்டுவந்தேன். இவள் தங்களுடைய நாடகசாலைப் பெண்ணுதலால் என்மனதில் ஒன்றைக் கருதித் தங்களிடத்துக்கு வந்தேனென்று கூற, இந்திரன் கேட்டு மகிழ்ந்து, ஓ புரூருவச்சக்கரவர்த்தி! நீ மகா நீதியையுடையவன் மேலும் உலகத்தில் தருமதேவதையை நாலுபாதத்தில் நடக்கச் சக்கர நடாத்துகிற கனவான். அன்றியும் எங்களால் வெல்லக்கூடாத அசுரரை வென்று, இந்த ஊர்வசியை மீட்டுவந்த மகா பராக்கிரம சாலியாகிய நீ நினைத்த காரியம்நிறைவேருமற் போகுமா? உன் கருத்திலிருக்கிறதை வெளிப்படுத்தினல், அக்காரியத்தை நிறைவேற்றுகிறேன். வெளியிடென்று கேட்க, புரூருவச்சக்கரவர்த்தி இந்திரனை நோக்கிச் சொல்லுகிருன்: ஓ ஐயனே! இந்த ஊர்வசி மிகுந்த சௌந்தரியத்தையுடைத்தாயிருக்கிருள். இவளோடுயான் கூடமனங்கொண்டிருக்கிறேன். இவளோதங்கள்

சுவாதீனமாதலால் தங்களுத்திரவில்லாமல் புணருதல் தகுதியல்லவென்று மதித்துத், தங்களிடத்தில் அறிக்கையிட்டேன். இது தான் என் கருத்து. தாங்கள் கிருபை கூர்ந்து என்ன கட்டளை இடுகிறீர்களோ அக்கட்டளைக் குள்ளாகுகிறே னென்றான். இந்திரன்மகிழ்ந்து புரூருவனைப்பார்த்து, ஓ அரசனே! இந்த ஊர்வசியை அசுரர் கொண்டு போகாததற்கு முன்னம் இவள் என் சுவாதீனம். அசுரர் கொண்டுபோனபோது இவள் அவ்வசுரர்சுவாதீனம். அவ்வசுரரை வெற்றி பெற்று நீ இவளை மீட்டுக்கொண்டபோது இவள் உன் சுவாதீனம். இது மநுசாஸ்திர விதி. இந்தமநுசாஸ்திரவிதி நீயறிந்திருந்தும், இவளை அபகரிக்காமல் என்னிடத்தில் கொண்டுவந்து விட்ட உன் புனிதமான குணத்தை என்னால் துதிக்க வசமல்ல. மிகுந்த பிரயாசைப் பட்டு அவளை மீட்ட உன் கருத்து மகிழ்வெய்த அவளைக்கூடிக் கலந்து வாழென்று கட்டளையிட்டு, ஊர்வசியைப் பார்த்து, ஓ பெண்ணே! உன்னை மீட்டுவந்த இந்தப் புரூருவச்சக்கரவர்த்தியோடு உலகத்திற் சென்று, இந்த அரசனைக்கூடிவாழ்ந்து ஒரு புத்திரனைப் பெற்றுவைத்து, யதாப்பிரகாரம் என்னிடத்துக்கு வந்து சேரென்று கட்டளை யிட்டான். இந்தக் கட்டளையை இருவருஞ் சிரமேற்கொண்டு தேரேறி உலகத்தில் வந்து இரதியும் மதனும்போற்கூடி வாழ்ந்தார்கள்.

பின்பு ஊர்வசி ஆயு வென்கிற புத்திரனைப் பெற்று வைத்து, முன்போல் இந்திரனிடத்திற் சென்றாள். இந்த ஆயுவென்கிற புத்திரன் சகலகலை வல்லவனாகி, தந்தையினும் எண்மடங்கதிகமாய்த் தருமத்தைச் செய்து தன்னுயிர்போல்மன்னுயிரனைத்தையுங் காத்து அரசுபுரிந்தான். அந்த ஆயுவுக்கு நகுஷன் பிறந்தான். அந்த நகுஷன் மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசுசெலுத்தி நூறு அஸ்வமேதயாகஞ்செய்து, சொற்கத்துக்குத் தலைமையாகிய இந்திரப் பட்டம் பெற்று, பழைய இந்திரன் மனைவியாகிய புலோமிசைமேல் காதல் கொண்டு, அப்புலோமிசையை அழைத்துவரச் சில தேவ தூதரைவிட்டான். அதையவளறிந்து குருவிடத்து முறையிட, பிரகஸ்பதி சொல்லுகிறார்: ஓ அம்மணீ! நீ அஞ்சாதே! உன்னிடத்துவந் தழைக்கிற தூதருக்கு ஒரு உத்திரவு சொல்லு. அஃதென்னெனில்: பழைய இந்திரன் என்னிடத்துக் கெவ்வாறு வருவானோ அவ்வாறு உங்கள் அரசனை வரச் சொல்லுமென்றாள், அந்தப்புதிய இந்திரன் சப்த முனிவர்களால் சுமக்கப்பட்ட முத்துச் சிவிகையில் வருவான். அப்போது அவன் சும்மாயிராமல் ஏதாவதொரு வசனஞ் சொல்லுவான். அதன்மேல் அம்முனிவர்க்குக் கோபமுண்டாகிச் சபிப்பார்கள். பின்பு உன் மனத்துயரம் நீங்கும் என்று புகலவும், புலோமிசை குருவுரைத்த சூட்சியை மனதில் வைத்துத் தேவதூதரை நோக்கி, ஓ தேவதூதர்களே! உங்கள் அரசனாகியஇந்திரனை என் வீட்டுக்குப் பழைய இந்திரன் எவ்வாறு வருவானோ அவ்வாறு வரச்சொல்லுங்களென்றாள். தூதர் இந்திரனாகிய நகுஷனுக்குப் புலோமிசை புகன்றனவற்றைச் சொல்லினார்கள். உடனே நகுஷனானவன் அகஸ்தியர்-அத்திரி - ஆங்கிரசர் - கவுதமர்-காசிபர்-புலத்தியர்-வசிஷ்டர் என்னும் ஏழு முனிவர்களையும் அழைப்பித்துச் சிவிகையைக் கொண்டுவரச் சொல்லி, அச்சிவிகையில் ஏறிச் செல்லுகிறபோது, சும்மாயிருக்காமல் விரைவிற் போங்களென்னும் பொருள் கொடுக்கும் (சற்ப) என்னும் தேவபாஷை மொழியை அவன் கடுகடுத்துக் கூற, இந்தக் கடின வார்த்தையை அகஸ்தியர்கேட்டு, எங்களை மதிக்காமல் விரைவிற் செல்லச் சொன்னபடியால், நீ பெரும்பாம்பாய்ப்போகக்கடவதென்றுசாபமிட்டார். அச்சாபத்தையேற்று மிகுந்த நடுக்கமுற்றவனாய் அகஸ்தியரைவணங்கி, ஓ ஐயனே! இந்தச் சாபம் என்றைக்குத் தொலையுமையாவென்றுவேண்ட, அகஸ்தியர்மனமிரங்கி, ஓ நகுஷனே! உன்சந்ததியில் தருமன்-வீமன்-அர்ச்சுனன்-நகுலன்-சகாதேவன் என்னும் ஐவர் பிறக்கப்போகிறார்கள். அவர்கள் ஒரு காரியார்த்தமாய் வனத்துக்கு வருவார்கள். அவர்களில் வீமனை நீ விழுங்குவாய். அப்போது உன் சாபம் நீங்கும் என்றுசாபத்தீர்வு கூறி, அவ்வகஸ்தியர் முதலானவர்கள் அவரவ ரிருப்பிடத்துக்குச் சென்றார்கள். நகுஷன் அகஸ்தியர் சாபப்படி பெரும்பாம்பாக வனத்திலிருந்தான்.

குருகுலச் சருக்கம் முற்றிற்று.

## யயாதிராஜன் சரித்திரம்

இந்த நகுஷன் உலகத்திலிருக்கும்போது, இவனுக்கு-யயாதி-சங்கியாதி - பிரயாதி என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் யயாதியென்பவன், ஒன்ருகிய கடவுளினது திருவடியை மனதில் நிறுத்தி, இம்மைமறுமையென்னு மிரண்டினது தன்மையை யுணர்ந்து, சாத்துவிக-ராஜச - தாமசமென்னு மூவகைக் குணங்களுள் சாத்துவிகத் தன்மையை அதிகமாகக்கொண்டு, அறம்-பொருள் - இன்பம்-வீடென்னு நாற்பொருள்களைத் தேர்ந்து, மந்திரிகள் - புரோகிதர் - சேனுதிபதியர் - தூதர்-சாரணர் என்னும் அரசர்க்குப் பொருந்திய கூட்டம் ஐந்தையும்பெற்று, படை-குடி-பொருள்-அமைச்சு-நட்பு-அரண் என்னும் அறுவகைப் பொருளையு மடைந்து, நாவல்-இரலி-குசை-கிரவுஞ்சம் - புஷ்கரம் - தெங்கு-கமுகு என்னும் ஏழுதீவுகளும் தன் ஆணையில் நடக்க, இராஜாங்கம்-மக்கள்-சுற்றம்-பொன்-மணி-நெல்-வாகனம் அடிமை என்னும் அஷ்ட ஐஸ்வரியத்தைப் பெற்று, கீழவிதேகம்-மேலவிதேகம் - வடவிதேகம் - தென்விதேகம்-வடவீரேபதம் - தென்னிரேபதம்-வடபரதம்-தென்பரதம்-மத்திமகண்டம் என்னும் நவகண்டத்துக்கு மதிபதியாகி, செங்கோல்-மலை-ஆறு நாடு-ஊர்-மாலை - புரவி-யானை-முரசு-கொடி என்கிற தசாங்கங்களை வகித்து, கங்கை-யமுனை - சரஸ்வதி - நருமதை-காவேரி-குமரி-கோதாவரி - சிந்து - தாம்பிரபரணி-துங்கபத்திரி-கிருஷ்ணி என்னும் பதினெரு திவ்யநதி தீரங்களிலுஞ் சத்திரங்களியற்றி, அன்னதான முதலிய தானங்களை நடாத்தி, தருமதேவதையை நாலு பாதத்திஞலேயும் நடப்பித்து, தன்னுயிர்போல மன்னுயிரையும் பாதுகாத்து, மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்தி வந்தான். இன்னும் இந்த யயாதியினுடைய சிறப்பை என் குருவாகிய வேதவியாச மஹாமுனிவரே புகழ்வாரென்ருல், என்னுல் அவ்வரசனது சிறப்பை யுரைக்கவசமா? அவ்வளவு சிலாக்கிய சிரேஷ்டனுகிய யயாதி அரசு செலுத்தி, அசுரர்குல குருவாகிய சுக்கிரபகவான்பெற்ற தெய்வயானையென்னும் ஸ்திரீயை விவாகஞ் செய்து, அந்தத் தெய்வயானை இடமாய் இரண்டு புத்திரரையும், அசுரர் குலத் தலைவனுகிய விடப்பன்மன் மகளான சன்மிஷ்டையைக் கூடி அவளிடமாய் மூன்று புத்திரரையும் பெற்ருன் என்று வைசம்பாயன ருரைக்க, ஜெனமேஜெய மஹாராஜன் கேட்டு வியப்படைந்து, ஓ ஸ்வாமி! மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்தும் யயாதி மஹாராஜன், பிர்ம்மகுல ஸ்திரீயை மணம்புரிந்தானென் றுரைத்தீர்கள். பிராமணர் மாத்திரம் மற்ற மூன்று குலத்து ஸ்திரீகளை மணம் புரியலாமென்றும், மூன்றுகுலப் புருஷர் பிர்ம்மகுல ஸ்திரீயை மணம்புரியலாகாதென்றும் வேத முறையிடுகின்றது. யயாதி பிர்ம்மகுல சுக்கிராசாரியின் மகளான தெய்வயானையை எவ்வாறு மணம் புணர்ந்தான். அசுரர்குலத் தலைவனுகிய விடப்பன்மன் மகளான சன்மிஷ்டையினிடமாய் எவ்வாறு புத்திரரைப் பெற்ருன். அந்த வரலாற்றை விளங்க வுரைக்கவேண்டுமென்று வேண்ட வைசம்பாயனர் கூறுகிருர்.

கேளும் ஓ அரசனே! முன்னம் விடப்பன்மன் என்னும் பெயரையுடைய ஒரு அரக்கன் மிகுந்த பராக்கிரமசாலியாய் உலகத்தில் அரசு செலுத்தி, சொற்கலோகத்தையுங் கைப்பற்றப் படையெடுத்து, இந்திரனேடெதிர்த்து யுத்தஞ்செய்தான். இந்திரன் தனது தேவப்படைகளைக்கொண் டெதிர்த்து, அந்த விடப்டன்மன் என்கிற அரக்கன் ஒருவன் தவிர மற்றவர்களையெல்லாம் கண்டதுண்டமாகக் கண்டித்து வெற்றிபெற்ருன். விடப்பன்மன் தன் சேனை முறிந்ததையும் இந்திரன் வெற்றிபெற்றதையும் மனதில் நினைத்து, அதிக துன்பத்தை அடைந்து, தன் குருவாகிய சுக்கிரபகவானிடத்துவந்து வணங்கி, ஓ ஐயனே! என் சத்துருவாகிய இந்திரன் என் சேனைகளை அதமாக்கி என்னையும் பதாதி யாக்கினுன். உங்களைப்போலொத்த மஹாத்மா எனக்குச் சொந்தமாயிருந்தும் நான் அபஜயப்பட்டால் உலகம் உங்களைப் பழிக்குமேயன்றி என்னைப் பழிக்காது. ஆகையால், யான் வெற்றியடையும்படி ஒரு உபகாரஞ் செய்யவேண்டுமென்று வேண்ட, சுக்கிரபகவான் சிரித்து விடப்பன்மனைப் பார்த்துச் சொல்லுகிருர்: ஓ விடப்பன்மனே! நானென்ன யுத்தரங்கத்துக்கு யோக்கியனு? நான் உன் கருத்தின்படி யுத்த

ரங்கத்தை மேற்கொண்டால் எனக்குக் குருவென்கிற பட்டமேது? நீ என்னிடத்து வந்து முறையிட்டதால் உனக்கு நான் ஒரு உபாயஞ் சொல்லுகிறேன். அஃதென்னெனில், இப்போது மடிந்த உன் சேனைகளனைத்தையும் இனி மடிகிற சேனைகளையும் எழுப்பித்தருகிறேன். அதனால் நீ தேவர்களை வென்றிபெறுவை என்று விளம்ப, விடப்பன்மன் பரமானந்தத்தையடைந்து, ஓ ஐயனே! இவ்வளவு சகாயஞ் செய்தால் இந்திராதி தேவர்களை யெல்லாம் சண்டமாருதத்தைக் கண்ட மேகம் பறப்பதுபோல் இறக்க அடித்து வெற்றி பெறுகிறேனென்று வணங்க, சுக்கிரபகவான் தான் கூறியபடி இறந்த சேனைகளைச் சஞ்சீவி மந்திரத்தைச் சொல்லி எழுப்பிவிட்டார். விடப்பன்மன் அந்தச் சேனைகளைக்கொண்டு இந்திரனை எதிர்த்து, தேவப்படைகளை முறிய அடித்து, வெற்றி பெற்று இனிது வீற்றிருந்தான். இந்திரன் மிகுந்த வருத்தமடைந்து, சுக்கிராசாரியரால்லவோ விடப்பன்மன் வெற்றிபெற்றான். நமது குருவால் நாம் வெற்றியடைய வேண்டுமென்று நினைத்து; தன் குருவாகிய வியாழபகவானிடத்திற் சென்று வணங்கி, ஓ ஐயனே! என் சத்துருவாகிய விடப்பன்மன் சுக்கிராசாரியரால் என்னை வெற்றிபெற்றான். சந்திரசடாதர சாம்பவமூர்த்திக்கு ஒப்பாகிய தாங்கள் எனக்கு குருவாயிருந்தும், நான் வெற்றியடையாதிருந்தால் உலகம் யாரை நகைக்கும். ஐயனே! கிருபை கூர்ந்து நான் வெற்றியடைய இரட்சிக்கவேண்டும் என்று வேண்ட, வியாழபகவான் மிகுந்த வருத்தத்தை யடைந்து, ஓ தேவராஜனே! என்னால் யுத்தஞ்செய்யச் சக்தியுண்டா? இல்லையே: சுக்கிரபகவான் மிகுந்த தவஞ்செய்து காளகண்ட திரிநேத்திரனை பரமனிடத்துச் சஞ்சீவி மந்திரத்தைப் பெற்றான். அந்த மந்திரத்தினால் இறந்தவர்களை யெல்லாம் எழுப்பிவிடுகிறான். அதனாலே விடப்பன்மன் வெற்றியடைந்தான். அந்த மந்திரம் சுக்கிரபகவானொருவனுக்கேயன்றி மற்றச் சொர்க்க மத்திய பாதாள லோகங்களி லிருப்பவர்களுக்குள் ஒருவருக்கு மில்லையே. நானென்ன செய்வேனென்ன, இவையனைத்தையும் இந்திரன் கேட்டுச் சுக்கிராசாரி கற்றிருக்கிற மந்திரத்தை எவ்விதத்திலாவது கிரகித்துக்கொண்டு வரத்தக்க சாமர்த்தியத்தை யுடையவர் விண்ணுலகத்தி லில்லையா வென்று அங்கிருப்பவர்கள் வதனத்தை நோக்கினான். அங்கிருந்தவர்களில் வியாழபகவானுடைய புத்திரனாகிய கஜன் இந்திரன் முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ தேவராஜனே! நீ வருந்தப்பட வேண்டியதில்லை. நானந்த சுக்கிராசாரியாரிடத்திற்சென்று பணிசெய்பவனா யிருந்து, அவர்க்கு என்மேல் கிருபை வரும்படி நடந்து, அந்த மந்திரத்தை அவர் அனுக்கிரகஞ் செய்ய யான் கற்றுக்கொண்டு வருகிறேன் என்று உறுதிகூறி, சுக்கிராசாரியாரிடத்துக்கு வந்து அவரைக் கண்டு வணங்கி, ஓ ஐயனே! உமதிடத்தில் பணிவிடைக்காரனா யிருக்கிறேன். என்மேல் என்றைக்கு மிகுந்த அன்பு கூறுகிறீர்களோ அன்றையத் தினத்தில் மஹா அருமையான தவத்தைச்செய்து சாம்பவமூர்த்தி யிடத்துப் பெற்ற சஞ்சீவி மந்திரத்தை எனக்குக் கிருபைசெய்ய வேண்டும் என்று புகல, சுக்கிராசாரி தன் மனதில் கன வருத்த மடைந்து, நாம் அந்தச் சஞ்சீவி மந்திரத்தை அருமையான தவஞ்செய்து பெற்றோம். அம்மந்திரத்தினாலல்லவா அசுரர்கள் நமதிடத்தில் அன்புடையவரா யிருக்கிறார்கள். அந்த மந்திரத்தை இவனுக்குச் சொல்லிவிட்டால், அதன்மேல் அந்த மந்திரம் நமக்குப் பலிக்காது. அந்த மந்திரத்தைச் சொல்லாதிருக்கலா மென்றால், எப்படியாவது பணிவிடைக்காரன்மேல் சந்தோஷப்பட வரும், அந்தக் காலத்தில் அகத்தியம் சொல்லவேண்டியதுதான். இவனைப் பணிவிடை செய்யவேண்டா மென்றால், தரும சாஸ்திரத்துக்கு விரோதமாகின்றது. இவ்வாறு தன் மனதுக்குள் நினைத்து, கஜனைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ கஜனே! நீ தேவகுல குருவின் புத்திரன். நீயே வந்து பணிவிடைக்காரனா யிருக்கிறே னென்றதினால், நான் ஒத்துக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் நீ எனக்குச் சந்தோஷம்வர நடக்கிறதினம் என்றைக்கோ அன்றையத் தினம் உன் கருத்து மகிழும்படி செய்கிறேனென்று சொல்லி அந்தக் கஜனைப் பணிவிடைக்காரனாய் வைத்துக்கொண்டார்.

அதுமுதல் கஜன் அந்தச் சுக்கிராசாரிக்கு எல்லாப் பணிவிடையும் செய்துவருகிறதுமன்றி, அந்தச் சுக்கிராசாரியின் புத்திரி

யாகிய தெய்வயானையோடு நித்தம் வேத சாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்துவருவான். இப்படி செய்துவருகிறதினாலேயும் நல்ல அழகுடையவனா யிருக்கிறதினாலேயும் இந்தக் கஜன்பேரில் தெய்வயானை மிகுந்த காதலா யிருப்பாள். இப்படி சிலகாலம் சென்றபின்பு, சுக்கிராசாரியாரிடத்துக் கஜன் பணிவிடைக்காரனா யிருக்கிறதை அசுரர் தலைவனாகிய விடப்பன்மன் கேள்வியுற்று, தன் தூதர்களை அழைத்து, ஓ தூதர்களே! நமது குருவாகிய சுக்கிராசாரி கற்றிருக்கிற சஞ்சீவி மந்திரத்தைக் கற்றுக்கொண்டு போகக் கஜன் என்கிறவன் அவருக்குப் பணிவிடைக்காரனாகி, அவ் வாசாரியரிடத்தி லிருக்கிறான். ஆகையால், நீங்கள் அந்தச் சுக்கிராசாரிக்குத்தெரியாமல் அந்தக் கஜனைக் கொன்றுவிடுங்கள் என்று உறுதியான கட்டளை யிட்டான். தூதர் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, கஜனைக் கொலை செய்யச் சமயம் பார்த்திருந்தார்கள். ஒரு நாள் கஜன் தருப்பை சமிதை முதலானவைகளைக் கொய்துவரக் காட்டிற் சென்றான். அந்தச் சமயம் பார்த்து அரக்கர் வந்து கஜனைச் சூழ்ந்து கழுத்தை யறுத்துப் பூமியிற் புதைத்துப்போயினர். பின்பு தெய்வயானை க்ஷணப்போதாயினும் கஜனைக் காணாமல் இருக்கமாட்டாள். அன்றையத்தினம் வருகிற வேளை தப்பியும் கஜன் வராதிருக்கவே, மிகுந்த வருத்தமடைந்து, தன் தந்தையாகிய சுக்கிராசாரியரிடத்து வந்து வணங்கி, ஓ ஐயனே! தங்களுக்குப் பணிவிடைசெய்திருக்கிற வேளைபோக மற்ற வேளை என்னோடிருந்து வேத சாஸ்திரங்களைப் படித்துவருங் கஜன் இன்றையத்தினம் இன்னும் வரவில்லை. அவனைத் தேவரீர் எங்கனுப்புவித்தீர்கள்? என்று வினவி, அந்தக் கஜனை விரைவில்வரும்படிக் கிருபை கூறுமையாவென்று வேண்ட, சுக்கிராசாரி தனது கியானதிருஷ்டியினால்நோக்கி, கஜன் அடைந்த கதியைக் கண்டு கனவருத்தமுற்று, சஞ்சீவி மந்திரத்தை யுச்சரித்து இறந்த கஜனை எழுப்பினார். உடனே கஜன் நித்திரையிலிருந்து எழுந்தவன்போ லெழுந்து, சுக்கிராசாரியரிடத்து வந்து வணங்கித் தெய்வயானை யிடத்திற் சென்றான். தெய்வயானை மிகுந்த மகிழ்ச்சியடைந்து, ஓ தேவகுரு புத்திரா! இன்றையத்தினம் எங்குற்றீர்? இந்நேரம் வரையில் வராதிருந்ததற்குக் காரணமென்ன? என்று வினவ, கஜன் நான் காட்டிற் சென்றவிடத்தில் கன நித்திரையினால் மறந்து தூங்கிவிட்டே னென்று கூறி, முன்போல் தன் வேதமுயற்சியி லிருந்தான். இப்படி சில நாட் சென்றபின்பு அசுரர்குலத் தலைவனான விடப்பன்மன் கஜன் பிழைத்திருப்பதைக் கேட்டு, கொலைத்தொழிலுக்குரிய அசுரரிற் சிலரை அழைத்து, ஓ அசுரரே! முன்னம் ஏவலாளிகளால் இறந்த கஜன் நமது குருவினால் பிழைத்திருக்கிறான். நீங்கள் சென்று நமது குருவுக்குத் தெரியாமல் அந்தக் கஜனைப் பிடித்துக் கொலைசெய்து, மதுவோடு சேர்த்து நமது குருவுக்கே அந்த மதுவைக் கொடுத்து பானஞ்செய்யச் செய்வித்து வாருங்களென்று கட்டளையிட்டான். அசுரர் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு சென்று, சமயம் பார்த்து அக்கஜனைப் பிடித்துக் கொலைசெய்து மதுவிற் கலந்து, அந்த மதுக் குடத்தைச் சுக்கிராசாரியரிடத்துக் கொடுத்து, ஓ ஐயனே! இந்த மது திவ்யமானது. தங்களுக்குப் பாதகாணிக்கையாகக் கொண்டுவந்த எங்கள்பேரில் கிருபைகூர்ந்து இந்த மதுவைத் தாங்கள் உட்கொள்ள வேண்டும் என்று வேண்ட, குடியருக்குக் கள் வலியக்கிடைத்தால் பிர்மானந்தத்தை யடைந்தவரைப்போல் அதிக மகிழ்ச்சியைக் கொண்டு முன்பின் யோசிக்காமல் புசிப்பது வழக்கமாதலால், இந்தச் சுக்கிராசாரியு முன்பின் யோசிக்காமல் அந்த மதுக்குடத்தை யெடுத்து மடமடவென்று வாயில் விட்டுக் கொண்டார். பின்பு அசுரர் சென்று தமது இறைவனாகிய விடப்பன்மனுக்கு நடந்ததைக் கூறினார்கள்.

இங்கேசுக்கிரபகவான் மதுவினால் அதிக மயக்க மடைந்திருக்கிறார். தெய்வயானை கஜன் வராதிருப்பதைக் கண்டு தன் தந்தை இடத்து வந்து வணங்கி, ஓ ஐயனே! கஜன் ஏன் இன்னும் வரவில்லை? அவன் எங்கு சென்றான்? விரைவில் அழைப்பியும் என்று வேண்டவும், சுக்கிராசாரி தெய்வயானையைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ அம்மணி! பணிவிடை செய்பவனாகிய கஜனை நீ ஏன் அடிக்கடி வந்து கேட்கிறாய்? போனவன் வருகிறான், உனக்கென்ன? நீபோய் வீட்டிலிரு என்று கடுகடுத்துச் சொல்ல, தெய்வயானை

மறுபடியுந் தந்தையை வணங்கி, ஓ ஐயனே! சொற்கமத்திய பாதாள லோகத்தி லிருக்கிற வர்களில் உங்களைச் சகலகலை வல்லவரென்று மும்மூர்த்திகளும் மதித்திருக்க, தாங்கள் இப்போது வழங்கிய சொற்களை நோக்கினால், ஏதோ கிஞ்சித்து மதிமயங்கி இருக்கிறதாகத் தோன்றுகின்றது. ஏனென்றால், எல்லாப் பொருள்களிலும் சிறந்தது உயிர். அந்த உயிரிலுஞ் சிறந்தது சிநேகம். அந்தச்சிநேகத்திலும் எனக்குக் கஜன் பாலிய சிநேகம். அவனைப் பிரிந்திருக்க என்மனமென்ன கல்லா? என்று மிகுந்த இரக்கத்தோடு இனியவசன முரைக்க, சுக்கிராசாரி மகிழ்ந்து தெய்வயானையைப் பார்த்து, ஓ அம்மணி! நீ வருத்தப்பட வேண்டாம். அந்தக் கஜன் எங்கிருந்தாலும் அழைப்பிக்கிறேன். நீ வீட்டிற் செல்லென்று விடைகொடுத்து, கஜன் எங்கிருக்கிறானென்று தனது கியான திருஷ்டியில் நோக்கினார். அப்படி நோக்கும்போது சொற்கமத்திய பாதாளமென்னும் மூன்று தலங்களிலும் கஜனைக் காணாமல், எங்குற்றான் கஜனென்று ஐயுற்றுத் தன் யாக்கையுள் நோக்கினார். கஜன் தன் வயிற்றில் அடங்கியிருக்கிறதை யறிந்து, கள் வெறியினால் புத்திமயங்கித் தனக்குக் கெடுதி வருவதை யோசிக்காமல் சஞ்சீவி மந்திரத்தை யுச்சரித்தார். உடனே கஜன் அவர் வயிற்றிற்றானே உயிர்பெற் றெழுந்தான். அதற்குள் சுக்கிராசாரியை அடிமையாகக் கொண்டிருந்த கள்வெறியும் நீங்கிற்று. சுக்கிராசாரி சுயபுத்தியை அடைந்து, வயிற்றில் கஜனிருப்பதை நோக்கி, அடா! மோசம் வந்தது. நமது சிஷனாகிய விடப்பன்மன் தனக்கு நன்மை கிடைக்க ஒன்று நினைத்தான். அவனுக்குக் கெட்டகால மாதலால் அந்த நினைப்பே கெடுதியானதுமன்றி, நமக்கும்கெடுதிநேரிட்டது. இனி யென்செய்வதென் றொருவாறு துணிந்து வயிற்றிலிருக்கும் கஜனுக்குச் சொல்லுகிறார்: ஓ கஜனே! உன் கருத்தின்படி சஞ்சீவி மந்திரத்தைக் கற்பிக்கிறேன். எனக்கொரு உபகாரஞ்செய். அஃதென்னெனில், என் வயிற்றைக் கிழித்துத்தான் நீ வெளியில் வரவேண்டும். நீ வெளியில்வந்து சஞ்சீவி மந்திரத்தைச் சொல்லி மறுபடியும் என்னை எழுப்பிவிடு. அதுதான் எனக்குச் செய்யவேண்டிய உபகாரமென்று கூற, கஜன் அங்கிருந்தவண்ணம் சஞ்சீவி மந்திரத்தைக் கற்றுக்கொண்டு, சுக்கிராசாரியின் வயிற்றைக்கீறி வெளியில் வந்து, முன்போலவே சுக்கிராசாரியை எழுப்பி, அவருக்கு வந்தனைவழிபாடு செய்து தெய்வயானை யிடத்திற் சென்றான். தெய்வயானை மிகுந்த மகிழ்வடைந்து எதிர்வந்து, ஓ தேவகுரு புத்திரா! இந்நேரம் எங்குற்றீர்? என்று வினவ, கஜன் தெய்வயானையைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ கன்னிகையே! நான் சென்றவிடத்தில் கிஞ்சித்து நேரமாய்விட்டதென ஒரு போக்காய் விடைகொடுத்துவிட்டுச் சிலகாலம் பணிவிடைக்காரனாயிருந்து, ஒருநாள் சுக்கிராசாரியை வணங்கி ஓ நாதனே! நான் உத்தேசித்து வந்த பொருள் தங்கள் கிருபையினால் கிடைத்தது. இனி என்னிருப்பிடத்திற்குச்செல்ல விடை கொடுக்கவேண்டுமென்று வேண்ட, சுக்கிராசாரி மகிழ்ந்து, அப்பா கஜனே! நீ சுகமாக உன்னிருப்பிடத்திற்குச் செல்லென்றுவிடைகொடுக்கவும், கஜன் சுக்கிராசாரியை வணங்கித் தெய்வயானை யிடத்து வந்து, ஓ கன்னிகையே! நான் நாடிவந்த பொருள் சித்தியாயிற்று. இனி என்னிருப்பிடத்துச் செல்கிறேன். மகிழ்வுடன் விடைகொடு என்றுரைக்க, தெய்வயானை திடுக்கிட்டு, ஆ! இதென்ன ஆச்சரியம்? நாம் நினைத்திருக்கிற நினைப்பென்ன? இந்தக் கஜன் தன்னிருப்பிடத்துக்குச் செல்லுகிறேனென்று நம்மிடத்தில் வந்து விடை கேட்கிறான். நமது கருத்தை வெளியிட்டால் அதன்மேல் இந்தக் கஜன் தன்னிருப்பிடத்துக்குச் செல்லானென்று மனதில் மதித்து, அந்தக் கஜனைப் பார்த்துக் கூறுகிறாள்.

ஓ ஐயா! நீ தேவர்குரு புத்திரன். நான் அசுரர்குரு புத்திரி. நாமிருவரும் சமம். என்னை விவாகஞ் செய்து இவ்விடத்திலேயே யிருந்து எல்லா நலமு மனுபவி. ஒருவேளை இந்தவிடத்தி லிருக்க உனக்கு விருப்பமில்லாதிருந்தால், என் தந்தையோடுசொல்லி உமது தந்தையையும் அழைப்பித்து என்னை விவாகஞ்செய்துக்கொண்டு, பின்பு உன்இருப்பிடத்துக்குச் செல்லென்று மிகுந்த பரிதாபத்துடனே இனிய வசனங்களினால் வேண்டிக்கொண்டாள். கஜன் இவ்வார்த்தைகளைக் கேட்டு இரண்டு கரங்களினால் செவிகளைமூடிச் சொல்லுகிறான்: ஓ அம்

மணி! வேதசாஸ்திரங்களை கற்றுணர்ந்த என்னிலும் மீசுரவிவேகத்தைப்பெற்றிருந்தும் நீ என்ன சுத்தமவுடிகர்போல் வசனிக்கிருய்? உன் தந்தையிடத்து சாஸ்திரங்களை கற்று யாவராலும் பெறுதற்கரிய சஞ்சீவி மந்திரத்தையும் பெற்றேன். உலகத்தில் மக்களைப்பெற்றேன்-இடர்தனைத்தீர்த்தோன்-அன்புடன் அன்னமளித்து ரக்ஷித்தோன்-நூலைகற்பித்தோனென்றைஉபதேசித்தோனுகியஐந்துபேரும்தந்தையென்று வேதங்களில்முறையிட, அதையுணர்ந்தும்உன்னை விவாகஞ்செய்வது தகுதியா என் குருபுத்ரியாகையால் நீ எனக்கு தங்கையாகினை என்றுகூற தெய்வயானை அடடா!! மோசம் வந்தது, நம் மொழியை மறுத்தானென்று கடிந்துகஜனை பார்த்துசொல்கிருள். ஓகஜனே! என்மொழியை மறுத்தமையால், நீ விசுவாச காதகன். நீ என் தந்தையிடத்திற்கற்ற சஞ்சீவி மந்திரம் பலிக்காமற்போகக்கடவதென்றுசாபமிட்டாள். கஜன் இந்தசாபத்தைக் கேட்டு, ஓ குருபுத்ரியே! நீயிட்டசாபப்படி மந்ரம்பலிக்காமற்போனுல் போகட்டும். என்னிடம் கற்றவர்க்குபலிக்குமே அதுபோதும். தருமசாஸ்திரம் கற்றுணர்ந்து மந்த சாஸ்திரத்துக்கு விரோதமாக என்னை சபித்தபடியால் மறையவருன்னை மணம்புரியாமல் பூலோகத்தரசர் மணம்புரியக் கடவதெனச் சபித்து, தன்னிருப்பிடத்திற்குச் சென்று தந்தைதாளில்வணங்கி, மந்திரத்தை உபதேசஞ்செய்து அவராலிந்திரனுக்கு வெற்ற்றிசெய்வித்தான். இங்கே தெய்வானை அசுர குலத்தலைவனுகிய விடபன்மன்புத்ரி சன்மிஷ்டையோடு நேசஞ்செய்து, விளையாடி வருவாள். ஒருநாள் தெய்வானையும் சன்மிஷ்டையும் சோலையிற் சென்று நீராடினுர்கள். அங்கே ஒரு சுழல்காற்றுதோன்றி, வஸ்திரங்களையெல்லாம் ஒன்ருய்கலக்கச் செய்தது. இதிலிருந்திறத்தார்களுடைய தாதிகள் தங்களுக்குக் கிடைத்ததுகிலைஎடுத்துஉடுத்திகொண்டார்கள் சன்மிஷ்டையும் தெய்வயானையும் மாற்றிமாற்றி வுடுத்திக்கொண்டார்கள். அதைப் பார்த்து சனமிஷ்டையின் வஸ்திரமென்றுகூறி இவ் வஸ்திரத்தைவைத்து என்வஸ்திரத்தை கொண்டுவாருமென்று தாதிக்குக்கட்டளையிட்டாள்.

தாதிகள் தெய்வயானையை வணங்கி ஓஅம்மணி! உன்வஸ்திரத்தை சன்மிஷ்டை தரித்திருக்கிருளென்றுசொல்லினர். அதைக் கேட்டு அவள்வ் வஸ்திரத்தை நான் கையிலேயுந் தொடேனென்றுமறுத்தாள். இந்தசேதி சன்மிஷ்டைக்கு தெரிந்து தெய்வயானை யருகில் வந்து, ஓகுருபுத்ரியே! சொற்பமாகிய வஸ்திரத்தை நானுடுத்தி என் உயர்ந்த வஸ்திரத்தை கொடுத்தால் ஏன் வெறுக்கிருயென்று வினவ, தெய்வயானை சன்மிஷ்டையைபார்த்து, ஓசன்மிஷ்டாய்! எப்படியிருந்தபோதிலும் நீ ராஜபுத்ரிதானே. நானுன் தந்தையின் குருபுத்திரி மேலும், நான் பார்ப்பினி. நீயுடுத்திய வஸ்திரத்தை நானுடுத்திக்கொள்வேனுவென்றனள். சன்மிஷ்டை இந்த வசனங்களைக் கேட்டு, ஓ குருபுத்ரியே! உன்தந்தை என்தந்தையிடத்து வந்து கைபோந்திநிற்க, நீ என்னகொர்வமடைந்து என்னை அல்பமாகஎண்ணி இகழ்ந்தாய்? உனக்கிவ்வளவுவாயா? என்றுசீறி தாதியரோடு தானும் அந்த தெய்வானையைபிடித்து ஒருபாழ்கிணற்றில்வீழ்த்திவிட்டுபோனுர்கள். இங்கே கிணற்றில்வீழ்ந்த தெய்வானைகிணற்றினருகில் முளைத்துப்படர்ந்திருக்கும் ஒருகொடியை பற்றிக்கொண்டு, தப்பியிருந்தபயத்தையடைந்து கொண்டிருந்தாள்ந்த சமயத்தில் யயாதிமகாராஜன் வேட்டைக்குவந்து நல்ல ஜலந்தேடி, தெய்வானை விழுந்திருக்கிற கிணற்றை எற்றி பார்த்து, கிணற்றிலிருக்கிற தெய்வானையைக் கண்டுதிடுக்கிட்டு, ஓபெண்கள் நாயகமே! நீயார்? உன்னிருப்பிடமெது? உன்தந்தையாவர் கிணற்றில் விழுந்திருக்க வேண்டிய காரணமென்ன? என்றுகேட்க, தெய்வானை சொல்கிருள்: ஓ அரசனே! நான்சுக்ராசாரியின்புத்ரியாகியதெய்வானை என்று சொல்லி, சன்மிஷ்டை கிணற்றில் விழுத்திப்போயின விருத்தாந்தத்தை சொல்லாமல் வேறொரு விதத்தைச்சொல்லி என்னை கரையேற்றுமென்றுவினவினள். அதற்கரசன் வியப்படைந்து, தன்கரத்தால் தெய்வயானையின் துகரத்தைப்பற்றிஎடுத்து கரையிற்சேர்த்து உன்னிருப்பிடத்துக்கு நீ செல்லென்று விடை கொடுத்துவிட்டு தன்னகரம்வந்துசேர்ந்தான். இங்கே தெய்வானை ஒரு சோலையில்வந்து தன்னந்தனியே இருந்து மிகுந்த துன்பத்தை யடைந்தவளாகி, நாம் சுக்ராசாரியின் புத்ரியாயிருந்தும், அசுரன்மகள் சன்மிஷ்டை கிணற்றில்தள்ளவும், நாம் பூலோகத்தரசர்களில் ஒரு மகாராஜனது வலக்கைபற்றி வெளியில்வரவுமாயிற்றே! நாம்இதுவரைக்கும் ஒருபுருஷனை தொட்டறியோம் அப்படியிருந்தும் பூலோகத்தரசன் நம்மைத்தொட்டான். இனியந்தஅரசனைத்தான்மணம்புரியவேண்டும். அவனைவிட்டு மற்றொருவனை மணம்புரிந்தால் கற்புக் கழிவு வரும். இதுவெல்லாம் வியாழபகவானுடைய

புத்ரனாகிய கஜனிட்ட சாபமேயென்று தீர்மானித்து, பின்பு சன்மிஷ்டை செய்தசெய்கையை நினைத்து கனவருத்தமடைந்தோர் மரத்தருகிலிருக்கிறாள். அப்போ சன்மிஷ்டையின் தந்தையாகியவிடபன்மனுடையசாரதிஏதோகாரியார்த்தமாய்சோலையில்வந்துதெய்வானையைக்கண்டுமிகுந்த ஆச்சரியமடைந்தவனாய் அம்மணி நீ எங்களரசனுடைய குருபுத்ரியல்லவா? இவ்விடத்திலிருக்கக் காரணமென்னவென கேட்டான். தெய்வானைசாரதியைபார்த்து ஓசாரதி உன்னரசன்மகளும்நானும்நீராடவனத்துக்கு வந்தோம். வந்தவிடத்தில் என்சேலையை உன்னரசன்மகள் உடுத்திக்கொண்டு தன் சேலையை எனக்குகொடுத்தாளதையுடுத்திகொள்ளமனஞ் சகிக்காமல் சேலையை வேண்டாமென்று மறுத்தேன் அதன்மேல் கோபங்கொண்டு என்னை கிணற்றில் தள்ளிவிட்டுபோய்விட்டாள். இந்த சேதியைஎன்தந்தைக்குமாத்திரம்தெரியப்படுத்துவையாகில் இப்போது நானடைந்திருக்கிற துன்பத்தை நீக்கினபலன் உன்னைச் சேரும். என்றுசொல்ல, சாரதிசம்மதித்து விடைபெற்றுச் சுக்ராசாரியாரிடத்துச் சென்று வணங்கி, தெய்வானை கூறியவற்றை சொல்லி தன்னிருப்பிடத்திற்குச் சென்றான். சுக்ராசாரி திடுக்கிட்டு, நமது புத்ரியை சன்மிஷ்டைகிணற்றில் தள்ளிவிட்டாளா? ஐயோ! நாம் தவத்தாற்பெற்ற புத்திரியாயிற்றே! என்று வருத்தமடைந்து, வேகமாய் தெய்வானை யிருக்கும் சோலையில் வந்து, புத்ரியைக்கண்டுதழுவி, ஓ அம்மணி! உனக்கும் இவ்வகைப்பட்ட துன்பம் வருமா? நிதம் சன்மிஷ்டையோடு விளையாடி வருகிறவளாதலால், இன்றையதினமு மப்படியேவிளையாடி வருவாயென்றுஎண்ணி உன்னை தேடாமலிருந்துவிட்டேன். என்மேற்கோபங்கொள்ளாமலிருஎன்று சொல்ல, தெய்வானை தந்தைதாளில்விழுந்து, ஓவென்று கதறிசொல்கிறாள்: ஐயா! நீசனாகிய அரசன்புத்ரி என் வஸ்திரத்தைஎடுத்து உடுத்திக்கொண்டதுமன்றி என்னையுந்தூறி என்னுயிர்க்குக் கெடுதிவரக் கிணற்றில் வீழ்த்திப்போனாள். என்ன நமதுபிழைப்பு? அருமைதெரியாதவரிடத்து மிருந்துநித்தம் கோடிகோடி பொருள்தேடி சீவனஞ் செய்வதைவிட, விவேகிகளிடத்தும் அருமை அறிகின்றவரிடத்தும்சிறுமைபட்டுக்கொண்டு சொல்பசீவனஞ்செய்வது மேலான நன்மையென்று நூல்களாலறிந்திருக்கிறோம். ஆதலால், விடப்பன்மனிடத்தில் அரை நாழிகையு மிருக்கக் கூடாதென்று முறையிட்டாள். சுக்ராசாரி தெய்வானையின் கண்ணீரை துடைத்து, ஓ அம்மா! நீயும் சிறுபெண், சன்மிஷ்டையும் சிறு பெண். ஒருவர்க்கொருவர் சச்சரவுபட்டபோது சன்மிஷ்டை பால்ய புத்தியால்தெரியாமற்கெடுதியைசெய்தாள். அதற்காக சன்மிஷ்டையின் தந்தையைவெறுப்பது தருதியல்ல. அம்மணி! இப்போது உன் கருத்தின்படி இந்தயிடத்திலேயே சௌக்கியமான இடமொன்றைபார்த்து இருப்போம்வா என்று இருவரும்ஒருசோலையிற்சென்று பன்னகசாலையொன்றியற்றி அதிலிருந்தார்கள். பின்புவிடப்பன்மன் தன்சபைக்குசுக்ராசாரியார்வராதிருப்பதைநோக்கி, மந்திரிகளைபார்த்து, ஓஅமைச்சர்காள்! குருவாகிய சுக்ரபகவான் 2-3-தினமாய் சபைக்குவரவில்லை. அதென்னவிசாரியுங்களென்றுகட்டளையிட, மந்திரிகள் தூதுவரையனுப்பினார்கள். தூதுவர்சுக்ராசாரியின்மனையிற்சென்று சுக்ராசாரியைகாணாமல்மீண்டுவந்துஓஆண்டையீர்! சுக்ராசாரியார் வீட்டிலில்லை என்றார்களதை மந்திரிகள்கேட்டு அரசனுக்கறிக்கையிட, அரசன்திகிலடைந்து, இதென்ன ஆச்சர்யம்? நமது குருநம்மையன்றிஒருகாரியத்தையுமனுசரியார். அப்படியிருக்க அவர் எங்குற்றாரென்றுமந்திரிகளைநோக்கி, ஓநண்பர்களே! நமதுகுரு எங்கிருந்தாலும் அறிந்து வந்து ஒரு முகூர்த்தத்திற்குள் தெரிவிக்கவேண்டுமென்றுகட்டளையிட்டான். மந்திரிமுதலானவர்கேட்டுதிடுக்கிட்டு, தேடயத்தனித்தார்கள். அப்போது விடப்பன்மன் ரதசாரதியறிந்து, அடடா! வீணாய் மந்திரிமுதலானவர்கள் திரிந்தலையச் செல்கிறார்கள். இந்தவேளையில் நாமறிந்ததைதெரிவிக்காமல் விட்டால் துரோகமாயிற்றே யென்று சுக்ராசாரியை தேடிச்செல்கிற மந்திரிகளை மறித்து, சுக்ராசாரி இருக்கிற விடத்தையுமவர் அரசனுத்தரவின்றி சென்றதையும், நான் தெரிவிக்கிறேன் வாருங்களென் றழைத்துக் கொண்டு, அரசன் சபைக்கு வந்து வணங்கி சொல்கிறான்.

ஓஆண்டவனே! தங்கள் குமாரத்தியும் தங்கள்குருபுத்ரியும் ஒருவனத்திற்சென்று நீராடினதாகவும், அங்கொருசுழற்காற்றுண்டாகி அவர்களுடைய வஸ்திரங்களை கலக்கவைத்த தாகவும், அப்போது தங்கள்குமாரத்தி குருபுத்ரியின் வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டதாகவும், அதன்மேல் குருபுத்ரிஇகழ்ந்ததாகவும், பின்பு தங்கள்குமாரத்தி சினங்கொண்டு குருபுத்ரியை கிணற்றில் வீழ்த்தினதாகவும், அப்போது பூலோகத்து அரசரிலொருவர் அவ்வனத்தில் வந்து அந்த குருபுத்திரியை எடுத்ததாகவும்,

அந்தக் குருபுத்திரி என்னுடன் சொல்லி, இந்தச் சேதியைத் தன் தந்தைக்கு மாத்திரம் தெரிவிக்கக் கட்டளையிட்டாள். நானக் கட்டளைப்படி வந்து நமது குருவுக்கு அந்தச் சங்கதியைத் தெரிவித்தேன். அவர் புத்திரியிடத்தில் போயிருக்கிறார். இப்போது அவரைத் தேடிப் புறப்பட்டமையால் அந்தக் குருபுத்திரி இருந்த வனத்தைக் காட்டுகிறேனென்றான்.

விடப்பன்மன் கனவருத்த மடைந்து விரைவிலெழுந்து, அந்தச் சாரதியை அழைத்துக்கொண்டு மந்திரி முதலானவர்களோடு தெய்வயானை இருந்த சோலையில் வந்து, அவ்விடத்தில் தெய்வயானையும் குருவும் இல்லாமையைக் கண்டு, அச்சோலைக் கருகிலிருக்கிற வனங்களில் வந்து பார்த்தான். அங்கொரு வனத்தில் பன்னகசாலை யொன்றியற்றி அதில் சுக்கிராசாரி தவஞ் செய்திருத்தலைக் கண்டு, சரேலென்று சென்று சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, மிகுந்த பயபக்தியுடனே எதிர்நின்று கைகூப்பி, ஓ ஐயனே! சிறியோர் செய்த பிழை பொறுப்பது பெரியோர்கள் கடமை. அதிலும் தங்கள் மனதுக்கு வருத்தம் நேரிடும்படி செய்த குற்றவாளி பெண்பால். அப்பெண்பாலும் பாலியத்தை யுடையவள். (பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்) என்று நூல்களால் அறிந்திருந்தும், எல்லாந் தெரிந்த தாங்கள் மனம் வேறுபட்டு என்னை வெறுத்தது மிகுந்த ஆச்சரியமா யிருக்கின்றது. அப்படித்தான் என் புத்திரி செய்த செய்கையைக் குற்றமாக வகித்தாலும் எனக்கறிவித்தால், நானென்ன தண்டிக்காமல் விட்டுவிடுவேனா? நான் செய்வது அரசல்லவா? அரசுக்குத் தன்மானம் பிறர் மானமென்று பேதமுண்டா? இதை யோசிக்காமல் தாங்கள் என்னை வெறுத்துவிட்டால் என்னரசு அரைக்கண மிருக்குமா? என் சத்துருக்களாகிய அமரர் என்னை நாசப்படுத்தார்களா? என்னரசும் என் செல்வமும் என் வெற்றியும் தங்களுடைய தல்லவா? ஆண்டவனே! கிருபை கூர்ந்து என்னை இரக்ஷிக்க நகரத்துக் கெழுந்தருளுமையா வென்று பலவாறு வேண்ட, சுக்கிராசாரி மகிழ்ந்து, தன் புத்திரி யனுமதியில் தான் வரவேண்டு மென்றும், அதற்காக அவளைப் பிரார்த்தித்துக் கொள்ளுமென்று கண்ணாற் சைகை செய்தார். விடப்பன்மன் அதை அறிந்து, குருபுத்திரி யாக்கையால், தெய்வயானையின் பாதத்தில் விழுந்து நமஸ்காரஞ் செய்து, ஓ அம்மணி! என் புத்திரி செய்த குற்றத்தைப் பொறுக்கவேண்டும். அப்படி பொறுக்காவிட்டால் உமது வாக்கினால் என்ன தண்டனை விதிக்கிறீர்களோ, அத் தண்டனையை என் புத்திரிக்கு நடத்துகிறேன். தங்கள் கருத்தை வெளியிடவேண்டும் என்று பிரார்த்திக்க, தெய்வயானை மிகுந்த சினங்கொண்டு, கண்களில் நெருப்புப்பொறி பறக்க விடப்பன்மனைப் பார்த்துச் சொல்லுகிறாள்: ஓ விடப்பன்மா! உன் புத்திரி செய்த குற்றத்தினுக்கு எவ்வளவேனும் தாக்ஷண்ய மின்றி உயிர்க்கொலை செய்யவேண்டும். நீ மிகுந்த தவப்பயனாற் பெற்று அருமையாய் வளர்த்து வருகின்றதினாலும், மிகுந்த வணக்கத்துடன் நீ வேண்டிக்கொள்வதினாலும், நானொரு தண்டனை செய்யச்சொல்லுகிறேன். அஃதென்ன வென்றால், உன் புத்திரியும் உன் புத்திரியின் தாதிகளும் எனக்குப் பணிவிடைப் பெண்களாகச் செய். அவ்வாறு செய்வையாகில் அதுவே உயிர்க்கொலை செய்யுந் தண்டனையைவிட எண்மடங்கதிகமான தண்டனையாயிருக்கும் என்றாள். அதற்கு விடப்பன்மன் ஒத்துக்கொண்டு, அம்மணி! அவ்வாறு என் குமாரத்தியை உங்களுக்குப் பணிவிடைப் பெண்ணாக்குவிக்கிறேன். முன்போல எனது நகரத்துக் கெழுந்தருள வேண்டும் என்று மிகுந்த ஆராமையோடு கூற, தெய்வயானை சம்மதித்து, தன் தந்தையோடு விடப்பன்மனும் தானும் முன்போல இருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். விடப்பன்மன் தன் புத்திரியை அழைத்து, நீ குருபுத்திரியென் றெண்ணாமல் அந்த அம்மனைக் கிணற்றில்விழத் தள்ளினதினால், நீ அந்த அம்மனுக்குப் பணிவிடைப் பெண்ணா யிருவென்று கட்டளையிட்டு, தெய்வயானையிடத்து அழைத்துவந்து, தன் புத்திரியைவிட்டுத் திட்டஞ் செய்துப் போய்விட்டான். அன்றுமுதல் சன்மிஷ்டை தெய்வயானைக்குப் பணிவிடைப் பெண்ணாயிருந்து ஏவற்றொழிலைச் செய்து வந்தாள்.

இப்படி சில நாட் சென்றபின்பு, ஒருநாள் தெய்வயானையானவள் தன் தாதியாகிய சன்மிஷ்டையோடு மலர்கொய்து விளையாட ஒரு பூஞ்சோலையிற் சென்று, அங்கிருக்கும் மலர்களைக் கொய்து வேடிக்கையாயிருக்கிற தருணத்தில் யயாதி மஹாராஜன் முன்போல வேடிக்கையார்த்தமாய் அந்தப் பூங்காவனத்துக்கு

வந்து, தென்றலினது சுகத்தையும் புஷ்பங்களின் பரிமள யின்பத்தையும் உணர்ந்து மஹா களிப்புடன் அச்சோலையைச் சுற்றிப்பார்த்து வருகிறான். அப்போது இந்தத் தெய்வயானையையும் சன்மிஷ்டையையும் கண்டான். கண்டவுடன் சித்தம் பிரமித்து, ஆ! இவர்கள் பூலோக ஸ்திரீகளோ? அல்லது சொர்கலோக ஸ்திரீகளோ? மற்றவர் யாரோ அறியவேண்டுமென்று அவர்களை நெருங்கி, முன் கிணற்றிலிருந்து எடுத்த ஸ்திரீயென்று தோன்றாமல் மறந்து, ஓ பெண்ணரசிகளே! நீங்கள் யாரென்று வினவினான். முன்னமே தெய்வயானை இந்த ராஜனையே விவாகஞ் செய்யக்கருதி உமா மஹேஸ்வரியைத் தியானித்திருக்கிறவளாகையால் விரைவி லெழுந்து, அரசனுக்கு ஓராசன மளித்து அதிலிருக்கச் சொல்லி, பற்பல உபசாரங்களைச் செய்து கூறுகிறாள்: ஓ அரசனே! நீரென்ன என்னை அறியீரா? முன்னம் நான் கிணற்றில் விழுந்தபோது கமலம் போன்ற என் வலக் கரத்தைப் புயலனைய உமது வலக்கரத்தினாற் பற்றிக் கரைசேர்த்தவரல்லவா? அரசர்க்கு இவ்வளவு மறதியாவென்று மறுபடியுங் கூறுகிறாள்: ஓ அரசனே! நான் சுக்கிராச்சாரியார் புத்திரி. இதோ நிற்கிறவள் அசுரர்குலத் தலைவனாகிய விடப்பன்மன் புத்திரி, இவள்தான் முன்னம் என்னைக் கிணற்றில் வீழ்த்தினவள், அந்தக் குற்றத்துக்காக இப்போது இவள் எனக்குத் தாதியா யிருக்கிறாள். நான் பிழைத்தும், தேவர்கள் நடுங்கத்தக்க பராக்கிரமத்தை உடைத்தாகிய விடப்பன்மன் புத்திரியாகிய இந்தச் சன்மிஷ்டையை நான் தாதியாகப் பெற்றதும் உமது கிருபையாதலால், அன்றையதினம் கிணற்றில் விழுந்திருந்த என் கரத்தைப் பற்றிக் கரைசேர்த்து ஆதரித்ததுபோல, இன்றையதினம் என்னை மணம்புரிந்து இன்ப சுகத்தைக் கொடுக்க வேண்டுமென்று வேண்டினாள். அரசன் இந்த வசனங்களைக் கேட்டுத் திடுக்கிட்டுச் சொல்லுகிறான்: ஓ பெண்கள் சிகாமணியே! பிராமணர் மாத்திரம் க்ஷத்திரிய வைசிய சூத்திர ஸ்திரீகளை மணம்புரியலாமென்றும், மற்ற மூவகைப் புருஷரும் பிராமண ஸ்திரீயை மணம்புரிய லாகாதென்றும் வேதங்களிற் கூறியிருக்க, உலகாதிபனாய் மநு சாஸ்திர விதி பிசகாமல் அரசு செலுத்தி வருகின்ற நான் உன்னை மணம்புரிவது தகுதியல்லவென்று மறுத்தான். தெய்வயானை இவ்வசனங்களைச் செவியுறக் கேட்டு, ஓ அரசனே! பிரமன் விதித்த விதிக்கு ஒரு மாறுபாடுண்டா? ஆதலால், என் தந்தை அநுமதியினாலேயே நான் உம்மை விவாகஞ் செய்துக்கொள்ளுகிறேன். நீர் இனி மறுக்கவேண்டாம் என்று கூற, அரசன் ஓ பெண்கள் நாயகமே! உன் தந்தை நாலுவேதம்-ஆறுசாஸ்திரம்-அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றை யுணர்ந்தவர். அவர் சம்மதித்து விவாகஞ் செய்வித்தால் அவர் வாக்கை மறுக்காமல் மணம்புரிவே னென்றனன். அதை தெய்வயானை கேட்டு மகிழ்ந்து, தன்னருகிலிருக்கிற ஒரு தாதியைப் பார்த்துத் தன் தந்தையை அழைத்துவரக் கட்டளை யிட்டாள்.

உடனே அத்தாதி சுக்கிராசாரி இடத்திற் சென்று பணிந்து, ஓ ஸ்வாமி! தங்கள் புத்திரி தங்களை அழைத்துவரக் கட்டளையிட்டாளென்றறிவித்தனள். உடனே சுக்கிராசாரியெழுந்து மகளிருக்கும் பூங்காவனத்துக்கு வந்தார். தெய்வயானை யெழுந்து எதிர்கொண்டுபோ யழைத்து வந்து, ஓராசன மளித்து இருக்கச் சொல்லி, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ ஐயனே! முன்னம் நான் கிணற்றில் விழுந்திருந்தபோது இதோ நிற்கிற மஹா புருஷன்தான் என் வலக்கரத்தைப் பற்றிக் கரைசேர்த்தவன். இந்தப் புண்ணியவானையே யான் மணம்புரிய வேண்டுமன்றி மற்றொருவர் என்னை மணம் புரிவது தகுதியல்ல. தாங்கள் கிருபை கூர்ந்து என் கருத்தின்படி விவாகத்தை நிறைவேற்றும் என்று நிகழ்த்த, சுக்கிராசாரி மகிழ்ந்து அரசனை நோக்க, அரசன் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து பயபத்தியுடனே நின்றான். சுக்கிராசாரி அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, ஓ அரசனே! இவள் என் புத்திரிதான். இவளை நீ விவாகஞ் செய்துக்கொள், மறையோர் பெண்ணை மன்னர் விவாகஞ் செய்தல் தகுதியல்லவாயினும், இவளுக்கு வியாழபகவான் புத்திரனாகிய கஜனால் மறையவர் மணம்புரியாமல் உலக மன்னவர் மணம்புரிய சாபம் நேரிட்டிருந்தது என்று அச்சாபத்தின் வரலாற்றையு மெடுத்துச் சாற்ற, அரசன் சுக்கிராசாரியார் மொழியை வேதவாக்கியமாகக் கொண்டு, தெய்வயானையை மணம் புரியச் சம்மதித்தான். உடனே எல்லா வல்லமையுமுடைய சுக்கிராசாரி அந்த இடத்திலேயே விவாகத்துக்குத் தகுந்த பலவஸ்துக்களையும் அழைப்பித்து,

நல்ல சுபமுகூர்த்தத்தில் மங்கலாரோஹணம் செய்வித்து, சாஸ்திரவிதி பிசகாமல் ஓமம் வளர்த்தி, எல்லா நலமும்பெறப் பல ஆசிகள் வழங்கி, நீங்களிருவரும் சுக சீவனர்களாய் வாழ்ந்திருங்களென்று வாழ்த்தி ஒரு வசனஞ் சொல்லுகிறார்: ஓ அரசனே! என் பெண் பார்ப்பிணி. அவளைக் கூடி வேறொரு ஸ்திரீயைக்கூடினால் கெடுதி நேரிடும். ஆதலால், உனக்கு இந்த உறுதி இருப்பதோடுகூட, இதோ இருக்கிற பெண் அசுரர் குல அரசன் புத்திரி. அவள் பெயர் சன்மிஷ்டை, அவளுக்குப் புருஷபோகம் ஒன்று தவிர மற்றப்போக மெல்லாவற்றையு முதவி அவளையும் இந்தத் தாதிகளையுங் காப்பாற்றுமென் றுரைத்து, அரசனிடத்து விடைபெற்றுத் தன்னிருப்பிடத்துக்கு சென்றார். பின்பு அரசன் தெய்வயானையோடு சன்மிஷ்டையை அழைத்துக்கொண்டு தன்னகரத்துக்கு சென்றார். பின்பு அரசன் தெய்வ்வயானையோடு சன்மிஷ்டையை அழைத்துக்கொண்டு தன்னகரத்துக்கு வந்து சகல ஜெனங்களும் களிப்புற விருந்து முதலானவைகளை இயற்றி, சன்மிஷ்டைக்கு அந்தப்புரத்தில் ஒரு மாளிகை கொடுத்து அதில் அவளை வைத்து, தானும் தன் மனைவியாகிய தெய்வயானையும் இரதியுமதனும்போல அரண்மனையிற் சேர்ந்து கூடிக் கலந்து மஹா களிப்புடன் இரண்டு புத்திரர்களைப் பெற்று வாழ்ந்திருந்தார்கள். அந்நாளில் ஒருநாள் இராத்திரி அரசன் தன் மனைவியாகிய தெய்வயானையோடு பள்ளியறை சேர்ந்து பஞ்சணையில் சயனித்தான் உடனே தெய்வயானை நித்திரை போய்விட்டாள். அரசனுக்கு நித்திரை வராமற் சுற்றுநேரம் சும்மாயிருந்து, நித்திரை வருகிற பரியந்தம் அந்தப்புரத்தி லிருக்கிற சோலையில் உலாவி வருவோமென்று எழுந்துவந்தான்.

அச்சோலை - மாதவி - கொன்றை - அசோகு - பலா - சூதம் - ஆல் - அரசு - வேம்பு - வாழை முதலாகிய மரங்கள் நெருங்கி இருக்கிறதினாலும், மல்லிகை - முல்லை - இருவாக்ஷி முதலாகிய செடிகள் புஷ்பித்து மிகுந்த பரிமளத்தைக் கொடுப்பதினாலும், இளந்தென்றல் வீசுவதினாலும், சந்திரோதயத்தினாலும், அரசனுக்கு மகிழ்வுண்டாகி அச்சோலையில் அங்கங்கும்இருக்கிற விநோதங்களைப் பார்வையிட்டு வருகிறான். இப்படி வருகிற தருணத்தில், அச்சோலையின் மத்தியில் சந்திரகாந்தக் கல்லினாற்செய்த மாளிகையில் நல்ல பருவத்தையும் மிகுந்த செல்வத்தையு மடைந்து புருஷனில்லாம லிருக்கிற சன்மிஷ்டையானவள் தான் தன்னந்தனியே இருக்கிறதைத் தன்மனதில் நினைத்து, நமக்கு எல்லாப் பாக்கியமு மிருந்தும் ஒரு புருஷனில்லாமையால் தாமரையில்லாத தடாகம்போலவும் - சந்திரனில்லாத இரவுபோலவும் - பயன்படாம லிருக்கிறோம். இப்படி யிருப்பதற்குக் காரணம் நமது குலகுருவாகிய சுக்கிராசாரியின் புத்திரியைக் கிணற்றில் வீழ்த்தின துற்நடத்தையேயாம். இதற்கு யாரைநொந்துகொள்ளுகிறது? இது நமது தலைவிதி என்று தன்னைத்தானே நொந்துகொண்டு, பள்ளியறையை விட்டு மேலுப்பரிகையில் வந்து சந்திரோதயத்தின் விநோதத்தையும், தென்றல் வீசுகிற திறத்தையும், புஷ்பித்திருக்கிற பூவாடையின் பரிமளத்தின் சுகத்தையும் உணர்ந்து, ஆ! ஆ! நாம் பெற்ற பருவத்துக்குச்சுகம் இதுதான். ஆனால் புருஷன் மாத்திரமில்லையே! ஐயோ! இந்த வேளையில் புருஷனிருப்பானாகில், எந்தலோகத்தின் பதத்துக்கும் மேலான இன்பத்தை இவ்விடத்திலேயே அநுபவிக்கலாமே! இதற்கென்ன செய்கிறது? என்று மிகுந்த காமவெறிகொண்டு உலாவிவந்தாள். இப்படி உலாவி வருகிற தருணத்தில் சோலையில் ஓர் ஆளரவம் தோற்றக்கண்டு, ஓ! ஓ! இதென்ன ஆச்சரியம்? இந்த இடத்தில் அரச னொருவனன்றி மற்றொருவர் வரக்கூடாது இந்நேரத்தில் அரசன் வருகிறதற்குக் காரணமென்ன? அல்லால் நாம் கொண்ட கருத்தின் பிரமையோ? உண்மையாக அரசன்தான் தென்றலுக்காக வந்து உலாவுகிறானோ? நாம் சென்று நோக்கினால் எல்லாந் தெரியும் என்றெண்ணி உப்பரிகையை விட்டிறங்கி, அரசன் உலாவும் இடத்தில் வந்து பார்த்தாள். பார்த்தவுடன் அரசனாக இருக்கக்கண்டு, மிகுந்த மகிழ்ச்சி யடைந்து, அவனுக்கு நமஸ்காரஞ் செய்து நின்று, ஓ மன்னவனே! நான் அசுரர்குலத் தலைவன் மகளாயிருந்தும், சுக்கிராசாரி புத்திரியாகிய உமக்கு மனைவியாயிருக்கிற தெய்வயானைக்கு யான் முன்னஞ் செய்த குற்றத்தினால் தாதியாயிருந்தபோதிலும், உமக்கு நானு மனைவிதான், எப்படியென்றால், நான் பரம்பரையாகிய தாதியல்ல. காலகதியால் தாதியானேன். உமது மனைவி தெய்வயானை அசுரர்குல குரு புத்திரியா யிருந்தபோதிலும், சிநேகத்தில் இருவரும் ஒருவரேயன்றி வேறல்ல. ஆத

லால், நானும் மனைவியாவதற்குச் சந்தேகமென்ன? கிருபைகூர்ந்து என் மனங் களிப்பெய்த என்னைக் கூடும் என்றுவேண்டி, மிகுந்த நாணத்தோடு நிற்க, அரசன் சன்மிஷ்டையினது அன்புக்கு மகிழ்ந்து, ஓ பெண்கள் நாயகமே! நீ கூறியபடி உன்னைக் கூடிக்கலந்து வாழ்வதற்குக் கூடாது. ஏனென்றால், ஆதியில் தெய்வயானையை மணஞ்செய்து வருகிறபோது சுக்கிராசாரி உன்னை என்கையிற் கொடுத்து, புருஷபோகம் ஒன்று தவிர மற்ற உண்டி வஸ்திராபரண முதலியவற்றைக் கொடுவென்று கட்டளையிட்டிருக்க, அக்கட்டளையை மீறி உன்னைக் கூடுவது நான் செய்யும் அரசுக்குத் தகுதியல்லவென்றிடைந்தான். சன்மிஷ்டை வருத்தமடைந்து, மறுபடியும் அரசனை மறித்து ஒரு வசனஞ் சொல்லுகிறாள்.

ஓ அரசனே! சொல்லியசொல் பிசகி நடக்கிறது அரசுக்கு உரியதல்லவென்று கூறுகிறீர். அது சரிதான். ஆனால், அந்தக் கட்டுரை வேதியர் முன்னிலைக்கும், பசுமுன்னிலைக்கும், ஓருயிர்க்கு இடையூறு வருகிறபோதும், ஆசைப்பெருக்கத்தினால் பெண்களை மணஞ்செய்யுமிடத்தும், அக்கட்டுரை பிசகினால் தோஷமில்லை. மேலும், நீர் உலகாதிபர். சரணென்றடைந்தவர்க்கு ஆதாரமா யிருக்கிறவர். உமது திருவடியில் யான் சரணமடைந்து எனக்கு நேரிட்டிருக்கிற சத்துருபயத்தைக் கூறுகிறேன். நீர் ஆதரித்து அச்சத்துருவை நீக்கி என்னை இரட்சியும். எனக்குச் சத்துரு யாரென்றால், இதோ வடவானலம்போலச் சொலித்து வருகிற சந்திரனும், கருப்பு வில்லைப் பிடித்துப் புஷ்பபாணத்தைத் தொடுத்து உடல்முழுதும் துளைத்து இன்னும் அரைநொடியில் ஆவியைக் கொள்ளைகொள்ள வீரசிங்கம்போலச் சீறி எதிர்த்திருக்கும் மாரனுமாம். இவ்விருவரையும் அடக்கி என்னை அண்ணலே! யாதரியும் என்று பணிய, அரசன் ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருக்கக் கண்ட சன்மிஷ்டை பின்னும் அரசனைப் பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறாள்: ஓ அரசனே! நீரேன் மயங்குகிறீர்? உமக்குக் கருத்தில்லாமலிருந்தால் இருக்கட்டும். இப்போது நானொரு வரங்கேட்கிறேன். அவ்வரங் கொடுமென்று வேண்டினாள். அரசன் ஓ பெண்கள் நாயகமே! நீ கேட்கிற வரமென்ன கேள், தருகிறேனென்றான். உடனே சன்மிஷ்டை வணங்கி, ஓ ஸ்வாமி! என் சிநேகியாகிய தெய்வயானை புத்திரசம்பத்தைப் பெற்றிருக்கிறாள். நானும் புத்திரசம்பத்தை யடைய வேண்டும் எனக்கொரு புத்திரசந்தான முண்டாகுவதான வரத்தைப் பாலியும் என்று கேட்க, அரசன் திடுக்கிட்டு, அடா! மோசம் வந்தது. இவள் கேட்ட வரத்தைக் கொடாவிட்டால் தருமத்துக்கு விரோதம். இவள் கருத்தின்படி வரத்தைக் கொடுத்தால் சுக்கிராசாரியரால் நமக்குக் கெடுதி வரும். இதற்கென்ன செய்கிறது? எப்போதும் உலகத்தில் மேலோர்களெல்லாம் தம்மை யடைந்து கேட்டுக்கொண்டவர்கள் கருத்து மகிழ்வெய்த அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்துக் கீர்த்தியுடன் மகிமை பெற்றிருக்கிறார்கள். ஒருவரிடத்து ஒன்றை இரக்கிறவன் தனக்குண்டாகிய வருத்தத்தினால் வானாபரணமாகிய மானாபரணத்தை நீக்கி, அடங்கி ஒடுங்கி நடுங்கிக் கேட்கிறான். அப்படிக் கேட்டவன் கருத்து நிறைவேறக் கொடாதவன் மஹா காதகன். அவன் இருந்தென்ன? இறந்தென்ன? அவனால் எவர்க்கும் ஒரு பலனில்லை. நாம் அரசனாக இருந்து நம்மை வந்து வணங்கி இவள் கேட்ட கர்ப்பாதான வரத்தைக் கொடுக்காமற் போவோமாகில், சுக்கிராசாரியரால் இனி வரும் கெடுதியைவிட மேலான கெடுதியாம் என்று தீர்மானித்து, ஓ பெண்கள் நாயகமே! என்னை இந்த வேளை வந்து வணங்கி நீகேட்டுக்கொண்ட வரத்தைக் கொடுத்தேன். நீ சந்தோஷத்தோடு என்னுடன்கூடவே வா; என்று அழைத்துக்கொண்டு அச்சோலையிலிருக்கும் சந்திரகாந்தக் கல்லினாலியற்றிய மாளிகையிற் சென்று, குழலுக்கு மலர்சூடி, நெற்றிக்குத் திலதமிட்டு, கண்ணுக்கு மையெழுதி, கனத்த தனத்துக்குச் சந்தனத்தை யணிந்து, பஞ்சணை மஞ்சத்தில் வஞ்சியோடு தொஞ்சி, அங்கஜனஞ்சித் தியங்கிட இணங்கி, அசுரர்குல சன்மிஷ்டை சிறந்த மதனகலை இன்பத்தைப் பொருந்த மகிழ்வொடு அணைத்து, விரைவினிற் பிரிந்து அரண்மனையில் வந்து தன் மனைவி ஐயப்படாதிருக்கப் படுத்திருந்தான்.

இப்படியே நித்தம் நித்தம் சன்மிஷ்டையினிடத்துச் சென்று சுகத்தை யனுபவித்துக் கொண்டு வந்தான். (அறைவீட்டுச்சேதி அம்பலத்தில் வரும்) என்கிற பழமொழிபோல் அரசன் களவுப்புணர்ச்சியை வெளிப்படுத்தக்

சன்மிஷ்டை கர்ப்பவதியாயினாள். இதை அறிந்த அரசன், அடடா! இவள் கர்ப்பவதியாயினளே! நம்மனைவி யறிவாளாகில் என்ன கெடுதி நேரிடுமோ? நம்மனைவியின் தந்தையோ அசுரர் குலத்துக்குக் குருவாயிருக்கிறவர். இந்தச் சன்மிஷ்டை கர்ப்பவதியானதைக் கேட்பாராகில் அவரால் என்ன அவஸ்தை வருமோ? ஆண்டவன்செயலெப்படியோ? என்று நித்த நித்தம் இதுவே ஏக்கமாயிருந்தான். சன்மிஷ்டை பூரண கர்ப்பவதியாகி, நல்ல சுபமுகூர்த்தத்தில் ஒரு புத்திரனைப் பெற்றாள். இந்தச்சேதி தெய்வயானை யறிந்து, அப்புதிரனுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து, பின்பு தான் தனியேயிருந்து, நமது தாதியாகிய சன்மிஷ்டைக்குப் புத்திரனுதித்த காரணமென்ன? அவளோ அல்பமானவளல்ல. மஹா கற்புடையவள். அதற்குத் தகுதியாகவே அவளிருக்குஞ்சோலை மிகவுங் காவலோடிருக்கின்றது. இது ஆச்சரியம்! ஆச்சரியம்! இதனை நேராய் நாமேபோ யறியவேண்டுமென்று கருதி, தனது தாதிமார்களோடு சன்மிஷ்டை இடத்துக்கு வந்தாள். சன்மிஷ்டை வந்து பட்டத்தரசிக்கு எழுந்து வந்தனை செய்து பொற்பீடமளித் திருக்கச்சொல்லி வேண்ட, தெய்வயானை அவளிட்ட பொற்பீடத்திலிருந்து, ஓ சன்மிஷ்டாய்! அதிக காவலையுடைய அந்தப்புரத்துச் சோலையில் இருக்கிற நீ புத்திரனை எவ்விதத்திற் பெற்றாய்? அதனை எனக்கு ஒளியாமற் சொல்லவேண்டுமென்றாள். சன்மிஷ்டை உண்மையை வெளிப்படுத்தினால் அரசனுக்குக் கெடுதி வரும். ஆதலால், தன்னைக்கேட்ட அந்தப் பட்டத்தரசிக்கு ஒரு போக்குக் காட்டவேண்டுமென்று கருதிக் கூறுகிறாள்: ஓ அம்மணி! ஒரு நாள் இரவில் நித்திரை வராமல் மேலுப்பரிகையில் நிலவி லுலாவித் திரிகிறபோது, ஒரு மஹா முனிவர் அந்தரத்திலிருந்து உப்பரிகையிலிறங்கினார். அவரைக்கண்டு இவர் யாரோ பெரியவரென்று மதித்துச் சென்று வணங்கினேன். அவர் என்னை ஆசீர்வதித்து, உனக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். நான் புத்திரசந்தானம் வேண்டுமென்று கேட்டேன். அவர் மகிழ்ந்து இதோ இந்தத் திருநீற்றை யுட்கொள், புத்திரசந்தான முண்டாகுமென்று சொல்லிப்போயினார். நான் அந்தத் திருநீற்றை யுட்கொண்டேன். அன்று முதல் கர்ப்பவதியாயிருந்து இப் புத்திரனைப் பெற்றேன் எனவும், தெய்வயானை ஐய நீங்கி மகிழ்ந்து, தன் புத்திரர்களைப்போல அப்புத்திரனையும் பாதுகாக்கக் கட்டளையிட்டு அரண்மனையில் வந்து சேர்ந்தாள். அரசன் அன்றிரவில் சன்மிஷ்டையினிடத்து வந்து, ஓ பெண்ணே! தெய்வயானை இங்குவந்து உன்னைக் கேட்டதென்ன? நீ கூறிய மறுமொழியென்ன? என்று வினவ, அதற்குச் சன்மிஷ்டை தெய்வயானை வந்து புத்திரனைப் பெற்றவாறு எனக்குஉரையென்று கேட்டாள். நான் ஒரு முனிவர் வரத்தினாற் பெற்றேனென்று மறுமொழி கூறினேன். தெய்வயானை மகிழ்ந்து அரண்மனைக்குச் சென்றாளென்றாள். அரசன் மகிழ்ச்சி அடைந்து, முன்போலவே மனைவிக்குத் தெரியாமல் சன்மிஷ்டையுடன் கூடிக்குலாவி வந்தான். மறுபடியும் சன்மிஷ்டை இரண்டு புத்திரர்களைப் பெற்றாள். இதை யறிந்த தெய்வயானை சன்மிஷ்டையினிடத்து வந்து புத்திரர்களேதென்று வினவ, சன்மிஷ்டை முன்போலவே முனிவர் வரத்தினாற் பெற்றேனென்று கூற, தெய்வயானை ஒத்துக்கொண்டு அரண்மனை சேர்ந்தாள். இந்தச் சன்மிஷ்டை புத்திரர் மூவரும் வளர்ந்து வீதிகடோறும் விளையாடித் திரிந்தார்கள். ஒரு நாள் அரசனும் தெய்வயானையும் மேலுப்பரிகையில் உலாவித் திரிகிறபோது, அந்த மூன்று புத்திரர்களும் வீதியில் விளையாடித் திரிந்தார்கள். தெய்வயானை அப் புத்திரர்களின் ரூபசவுந்தரியங்களை நோக்கி, அரசனையும் நோக்கினாள். இந்தப் புத்திரர்கள் அரசனுக்கு ஒப்பாயிருக்கவே ஐயங்கொண்டு, தன் தாதிகளால் வீதியிலிருக்கிற மூன்று புத்திரரையும் அழைத்துவரச் சொல்லி, ஓ சிறுவர்களே! நீங்கள் யார்? உங்களைப் பெற்றவருடைய பெயரென்ன? தந்தை யார்? இவைகளை எனக்குத் தெரியச்சொல்லுங்கள் என்று கேட்கவும், அப்புத்திரர்கள் எங்கள் தாய் சன்மிஷ்டை. தந்தை இதோ யிருக்கிற அரசன்தான் என்று சிறுவர்களாதலால் உண்மையைக் கூறினார்கள். உடனே அரசனுந் திகைத்து நின்றான்.

தெய்வயானை இவ் வசனங்களைக் கேட்டு மிகுந்த சினங்கொண்டு ஒன்றுஞ் சொல்லாமல் தன் தாதிகளை அழைத்துச் சிவிகை கொண்டு வரச் சொல்லி, அதிலேறித் தன் தந்தையாகிய சுக்கிரபகவானிடத்திற் சென்று கோவென்று அலறி, அவர் திருவடியில் விழுந்து அழுதாள். சுக்கிராசாரி திடுக்கிட்டு, ஓ அம்மணி!

உனக்கு வந்த கெடுதியென்ன கூறுக என்று வினவ, தெய்வயானை, ஓ ஐயனே! என்னைச் சந்திரவம்ச அரசனுக்கு விவாகஞ்செய்து கொடுத்து எனக்குத் தாதியாயிருக்கிற அசுரர் குலத்தரசன் மகளை என்னுடன் அனுப்பு விக்குங்காலத்து, அவளைக் குறித்து நீர் ஒரு கட்டளை அரசனுக் கிட்டிருந்தீரே; அக் கட்டளையை அரசன் மீறி, அவளோடு கூடிக் கலந்து மூன்று புத்திரரைப் பெற்றான். இனி நானென்ன செய்கிறதென்று முறையிட்டாள். சுக்கிராசாரி மிகுந்த கோபத்துடனே எழுந்து, அதிவேகமாய் அரசனிடத்து வந்து, அரசன் செய்த வந்தனைகளை எவ்வளவு மேற்றுக் கொள்ளாமல், அடா யயாதி! நான் இட்ட கட்டளையை மீறி நடந்தையே! என் கட்டளையை மீறச்செய்தது உன் வாலிபமல்லவா? இனி இன்றுமுதல் மிகுந்த வார்த்திபத்தை யடைவதுமன்றி, இருமல் முதலாகிய வியாதி தொந்தரையும் அனுபவிக்கக்கடவை யென்று சபித்தார். அரசன் சுக்கிராசாரிக்குத் தயவுவரும்படி அநேகவிதமாய்த் துதித்து நமஸ்காரஞ் செய்து, ஓ ஐயனே! உங்கள் கட்டளையை மறுப்பதற்கு அவ்வளவு வல்லமை எனக்கில்லை. அந்த விருத்தாந்தத்தைக் கூறுகிறேன் சற்று நிதானித்துக் கேட்டு அதன் பின்பு என்னைத் தண்டியும், அஃதென்னவென்றால், ஒரு நாள் இரவில் நித்திரைவராம லிருந்தது. நித்திரை வருகிற பரியந்தம் உலாவுவோமென்று அந்தப்புரத்திலிருக்கிற சோலையிற் சென்றேன். அப்போது சன்மிஷ்டை என்னிடத்து வந்து, தன்னைக் கலந்துகூட அநேக விதமாய்ப் பிரார்த்தாள். தாங்களிட்ட கட்டளையை அவளுக்குத் தெரிவித்துப் பின்னிடைந்தேன். சன்மிஷ்டை மறுபடியும் என்னை மறித்து, எனக்கொருவரங் கொடுவென்று கேட்டுக்கொண்டாள். அவ்வரத்தைக் கொடாவிட்டால் அரசுக் கழகல்லவென்று யோசித்து, நீ கேட்ட வரத்தைக் கொடுக்கிறேன், கேளென்றேன். சன்மிஷ்டை புத்திரசந்தான வரம் பாலியுமென்று கேட்டாள். வாக்குத்தத்தம் நிறைவேற அவளைக் கூடிக்கலந்தேன். அதற்காக எனக்குக் கனவருத்தமான துன்பத்தை யனுபவிக்கும்படி சபித்தது தகுதியல்ல என்றுவேண்டவும் சுக்கிராசாரி கொண்ட கோபந் தணிந்து, அடடா!! மோசம் வந்தது. முன்பின் யோசிக்காமல் சாபத்தைக் கொடுத்துவிட்டோமே, அச்சாபம் அனுபவிக்காமல் நீங்காதே! இதற்கென்ன செய்கிறது? என்று யோசித்து, அரசனைப் பார்த்துக் கூறுகிறார்: ஓ அரசனே! நான் கொடுத்த சாபத்தை அனுபவிக்கத்தான் வேண்டும். ஆனால், நீ வேண்டிக்கொண்டதினால் உன் புத்திரர்கள் வாலிபதிசை யடைகிற பரியந்தம் அனுபவி. அதன் பின்பு உன் வார்த்திப தசையை அப்புத்திரர்களில் ஒருவனுக்குக் கொடுத்துவிட்டு, உனக்கு இஷ்டமானவைகளை யனுபவித்து மறுபடியும் எந்தப் புத்திரனிடத்தில் உனது வார்த்திப தசையைக் கொடுத்தையோ, அப்புத்திரனுக்கே அந்த வாலிப தசையையும் அரசையும் கொடுத்துவிட்டு, வார்த்திப தசையோடு காட்டிற் சென்று தவஞ்செய்து பரமபதஞ் சேர்க என்று சாபத் தீர்வு கூறிப் புத்திரியைப் பார்த்து, ஓ அம்மணி! கணவன்தான் பிசகினாலும் அதை மனதி லடக்காமல் எனக்கு வெளிபடுத்தினாய். அதனால் யோசிக்காமல் சாபத்தைக் கொடுத்துவிட்டேன், இதனாலே உனக்குத்தான் கெடுதி. இனியாகிலும் பொறை யுடைமையையே நிறை உடைமையாகத் தரித்திரு என்று புத்தி சொல்லிச் சுக்கிராசாரி மகளிடத்து விடைபெற்றுத் தமது இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தார்.

இங்கே அரசனுக்குச் சுக்கிராசாரி இட்ட சாபம் வந்தடைந்து, உடல்முழுவதும் தளர்ந்து, நரைதிரை யுண்டாகி, இருமல் வாதிக்கக் குழகுழெனு உமியும்போது வழவழென ஒழுகிய கோழைகள் மார்பிலும் வயிற்றிலும் வீழக் கடல்சூழ்ந்த நெடியஉலகத்தை ஒருதோளினிற்றாங்கிய தன்னைச் சிலர் எடுக்கவும் சிலர் பிடிக்கவுமா யிருந்து பலவகை இமிசையடைந்து, புத்திரர்கள் வாலிபதசையையே இதற்கு அவுஷதமென்று நினைத்து, அப்புத்திரர்கள் வாலிபதசை எப்போ தடைவார்களென்று கருதியிருந்தனர். இப்படி சில நாட் சென்றபின்பு, தெய்வயானை வயிற்றிற் பிறந்த இரண்டு புத்திரர்களும் சன்மிஷ்டை இடத்துதித்த மூன்று பிள்ளைகளும் வாலிபதசையை அடைந்தார்கள். அரசன் சொந்த நாயகியாகிய தெய்வயானையின் புத்திரர்களை அழைத்து, அப்பா மக்களே! உங்களில் ஒருவருடைய வாலிபதசையை எனக்குக் கொடுத்து, என் வார்த்திபத்தைக் கைக்கொண்டு வருத்தத்தை நீக்குங்கள். சிலநாட் சென்றபின்பு உங்கள் வாலிபதசையை உங்களுக்குக் கொடுப்பதன்றி, இவ்வரசையுங் கொடுத்து என் வார்த்திபத்தை வாங்கிக்கொண்டு தவத்துக்குச் செல்

கிறேன் என்று சொல்ல, புத்திரர்கள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, அரசன் படுகிற அவஸ்தையும் நோக்கி, அரசன் கருத்தின்படி நமது வாலிபத்தைக் கொடுத்து வார்த்திபத்தை நாமேற்றுக் கொண்டு துன்பப் படுகிறதைவிட அரசனிடும் சாபத்தை யேற்று வருத்தப்படுதல் நன்மையென்று மதித்துச் சொல்லுகிறார்கள். ஓ ஐயனே! நீர் எல்லாப் பாக்கியங்களையும் அநுபவித்திருக்கிறீர்; நீரே இன்னும் இம்மை இன்பத்தைக் கருதி எங்கள் வாலிபத்தைக் கேட்கிறீர். நாங்களோ இன்னும் யாதொரு சுகத்தையும் அறியோம். ஆதலால், கிருபை கூர்ந்து எங்களை மன்னிக்கவேண்டும் என்று கூற, அரசன் மிகுந்த கோபங்கொண்டு, புத்திரருக்குக் கடமை தந்தை வாக்கை நிறைவேற்றல். அந்த தருமத்தை யுணராமல் என் வாக்கை மறுத்தீர்கள். அதனாலே நீங்களிருவரும் அரசரில் பிறந்தும் கிராதர் தன்மையை ஏற்றதனால், மகாபாவிகளாகி எனது அரசினை யுமிழந்து மேடராகக் கடவீர்களென்று சபித்தான். புத்திரர்கள் அச்சாபத்தை ஏற்றுக் கிராதராகி, காட்டிற் சென்று அங்கிருக்கும் கிராதருக்கெல்லாம் அரசரா யிருந்தார்கள்.

அப்பால் அரசன் அசுரர் குலத்தலைவன் பெற்ற சன்மிஷ்டையி னிடத்து உதித்த மூன்று புத்திரர்களையும் அழைப்பித்து, ஓ புத்திரர்களே! உங்களில் ஒருவருடைய வாலிபத்தை எனக்குக்கொடுத்து என் வார்த்திபத்தைக் கைக்கொள்ளுங்க ளென்று வேண்ட, மூவரி விருவர் மனமில்லாமல் பின்னிடைந்தார்கள். அவ்விருவர்க்கு மூத்தவனாகிய பூரு வென்பவன் பார்த்து, ஆ! ஆ! உலகத்தில் தந்தையின் சொல்வழி நடப்பதே புத்திரர்களுக்குக் கடமையென்று வேதாகமங்கள் முறையிடுகின்றன. நம்மைப் பெற்றுவளர்த்த பிரயாசைக்கு இந்த உபகாரந்தானா செய்கிறது? இன்னும் அதிகமான உபகாரஞ் செய்ய வேண்டும். இந்த அல்பமான உபகாரத்துக்குநாம் சம்பந்தப்படாமற் போவோமாகில் நாமெடுத்த யாக்கைக்குப் பயனென்ன வென்று யோசித்து, அரசனைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ ஐயனே! இப்போது தாங்கள் கேட்ட கருத்தின்படி என் வாலிபத்தைக் கொடுத்தேன். உமது வார்த்திபத்தை எனக்குக் கொடும் என்று வேண்ட, அரசன் மகிழ்ந்து தன் வார்த்திபத்தைப் பூருவுக்குக் கொடுத்து, அவனது வாலிபத்தைத் தானேற்று மற்ற இரண்டு புத்திரர்களை நோக்கி, ஓ இரக்கமற்ற புத்திரர்களே! தந்தைவழி நிற்றல் மைந்தர்களுடைய கடமை. அதை நீக்கி என்னை வெறுத்தபடியால், ஒருவன் மது விற்கிறவனாகவும் மற்றொருவன் மச்சம் விற்கிறவனாகவும் போகக்கடவதென்று சாபமிட்டுத் தன் கருத்துக் கிசைந்தபடி இன்பத்தை யனுபவித்து, சில நாள் சென்றபின்பு தனக்கு வாலிபத்தைக் கொடுத்த பூருவை அழைத்து, அவன் பெற்றிருந்த வார்த்திபத்தைத் தானேற்று வாலிபத்தை அவனுக்குக் கொடுத்து, மந்திரி முதலாகிய பலரையும் அழைப்பித்து, யாவருமறியத் தன்னரசை அப்புத்திரனுக்குக் கொடுத்து மகுடாபிஷேகஞ் செய்து ஆசீர்வதித்து, அப்புத்திரனைப் பார்த்துச் சொல்லுகிறான்: அப்பா மகனே! நானிருந்து அரசு செலுத்தினதுபோல நீ அரசைச் செலுத்து. இதோ நான் தவஞ் செய்து மறுமைலாபத்தை யடைய வனத்துக்குப் போகிறேன். நீ சாக்கிரதையா யிரு என்று கூறி, புத்திரனிடத்து விடைபெற்று, அவ்விரண்டு ஸ்திரீகளையும் நீக்கி, மரவுரி தரித்துக் காட்டிற் சென்று முனிவர்க ளனுக்கிரகத்தினாலே தவனிலை சேர்ந்து, அநேக காலம் ஒற்றைக்காலினின்றும், அநேக காலம் சலத்தில் நின்றும், அநேக காலம் சலபானஞ் செய்யாமலும் தவசிரேஷ்டர்களெல்லாம் ஆச்சரியப்படத்தக்கதாகப் பிரமதேவனைக் கருதி ஒரே நிலையாய்த் தவஞ்செய்தான். இப்படிச் செய்த தவத்துக்குப் பிரமன் வியந்து, அரசனுக்குப் பிரசன்னமாகி, ஓ அரசனே! நீ மிகவும் அருமையான தவத்தைச் செய்தாயாதலால், உன் கருத் தென்னவென்று வினவினன். அரசன் பிரமனை வணங்கி, அநேகவிதமாய்த் துதித்து, ஆண்டவனே! உமது சத்தியலோக வின்பத்துக்குப் பாத்திரனாகவும், நான் எந்த லோகம் நினைக்கிறேனோ, அந்த லோகங்களுக்கெல்லாம் செல்லவும், அவனிருக்கும் விநோதங்களை யறியவும், ஒரு திவ்விய விமானம் உதவ வேண்டுமென்று பிரார்த்தித்தான். பிரமன் அரசன் கருத்துக் கிசைந்தபடி ஒரு திவ்விய விமானமும் மற்ற இரண்டு வரமும் கொடுத்துத் தன திருப்பிடத்திற்குச் சென்றான்.

உடனே அரசன் பிரமன் கொடுத்த திவ்விய விமானத்திலேறிச் சத்தியலோகஞ் சேர்ந்து, அவனிருக்கும் இன்பங்களைத் துய்த்து, தனக்கு எந்த லோகம் பார்க்க விருப்பமோ,

அந்த லோகங்களிற் சென்று அவ்விநோதங்களையெல்லாம் நோக்கி இனிது வீற்றிருக்கிற நாளில்; ஒரு நாள் அரசன் இந்திரலோகம் பார்க்கக் கருதி விமானத்திலேறித் தேவேந்திர லோகத்துக்கு வந்தான். அதை இந்திரனறிந்து மஹா தவசிரேஷ்டனாகிய அரசன் வருகிறான். நான் சும்மா யிருக்கலாகாது. எழுந்தெதிர் கொள்ளவேண்டும் என்று நினைத்து, அரசனுக்கு முன் வந்து தகுந்த மரியாதையை நடத்தி, தனது சிங்காதனத்துக்கு ஒப்பான சிங்காதனம் ஒன்றழைப்பித்து அதிலிருக்கச் சொல்லி, ஓ யயாதி மகாராஜனே! உன் கருத்துக்கிசைந்த நாள்வரைக்கும் இந்த லோகத்திலிருக்கலாமென்று கூறித் தன்னெப்பாக வைத்திருந்தான். இப்படி சில நாட் சென்ற பின்பு ஒரு நாள் இந்திரன் அரசனைச் சோதிக்கக் கருதி, ஓ மகாராஜனே! நீ மானுஷ தேகியாயிருந்தும் அசுரர்குல குருவாகிய சுக்கிராசாரி புத்திரி தெய்வயானையையும், அசுரர் குலத்தலைவன் மகளாகிய சன்மிஷ்டையையும் புணர்ந்து, முடிவில் பிரமதேவன் கிருபையை அடைந்து, சத்தியலோக வாழ்வைப்பெற்று, மற்ற எல்லா லோகங்களின் இன்பத்தையு மடைந்தாய். உன்னைப்போல கனவான் சொர்க்க மத்திய பாதாள லோகங்களிலுமில்லை. தவமென்பது உன்னிடத்தில்தான் உதித்தது என்று புகழ்ந்து புகல, அரசன் இந்திரன் கருத்தறியாமல், ஓ தேவராஜனே! தவத்தி லென்போல் உயர்ந்தவர் மூன்று லோகங்களிலு முண்டா? அப்படி இருப்பவர்களை ஒருவரைக் காண்பியும் என்று களிப்புடன் கழற, இந்திரன் சினங்கொண்டு அரசனைப் பார்த்து, ஓ யயாதி! எப்போதும் ஒருவன் தன்னைத்தானே புகழொணாது. அப்படிப் புகழுவானாகில் அன்றைய தினமே அவன் செய்த எல்லா நலமுங்குன்றி, இல்லாமையை மேற்கொண்ட பொல்லாதவன்போல் ஆவானென்று வேதங்கள் முறையிடுகின்றன. அதை யுணர்ந்தும் உணராதவர்போல் உன்னை நீயே புகழ்ந்தமையால், இனி இந்தச் சொர்க்கலோக வாழ்வைவிட்டுப் பூலோகத்திற் செல்லென்று கட்டளையிட்டுத் தனதருகிலிருக்கிற தூதரை நோக்கினான். உடனே தேவதூதர்கள் அரசனிடத்து நெருங்கினார்கள். அரசன் கண்டு திகிலடைந்து, ஆ! ஆ! மோசம் போனேம். தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுகிற ஒருவன் தண்ணீரை வார்த்து ஏற்றிய விளக்கைப்போ லாவானென்று நூல்களால் அறிந்திருந்தும் அதை மறந்து நம்மை நாமே புகழ்ந்தோம். அதனால் இந்திரன் பூலோகத்திற் செல்லக் கட்டளை யிட்டான். தூதர்களும் நெருங்கினார்கள். இனி க்ஷணப் பொழுதும் இந்த லோகத்தில் நம்மை வைக்கார்கள் என்று ஏக்கங்கொண்டு, இந்திரன் அடிமேல் விழுந்து, ஓ தேவராஜனே! நான் செய்த அபசாரத்தைப் பொறுத்துப் பூலோகத்தின்கண் அனுப்புவிக்காமல், அந்தரத்திலாவது மற்ற எந்த லோகத்திலாவது யிருக்கக் கிருபைபுரியு மையாவென்று மிகுந்த ஆராமையோடு பலவாறு புகழ்ந்தான்.

அதன்மேல் இந்திரன் மகிழ்ந்து தூதர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ தூதர்களே! (தன்வாய்ச் சீதேவி தன்னை யழித்தது) என்கிற வாக்கியம்போல் தன்வாக்கினால் தனக்குக் கெடுதி தேடிக்கொண்ட இந்த அரசனை சொற்கத்துக்கும் பூலோகத்துக்கும் மத்தியிலிராநின்ற அந்தரலோகத்திற் சேர்த்துவிடுங்களென்று கட்டளையிட, தூதர்கள் அவ்வாறே அரசனை அந்தரலோகத்தில் விட்டுவிட்டார்கள். அரசன் அந்தரலோகத்திலிருந்து ஒரு நாள் அந்த லோகத்தின் விநோதங்களைப் பார்வையிட்டு வருகிறபோது, ஓரிடத்தில் இரண்டுபேர் தோற்றக்கண்டு, அவர்களிடத்திற் சென்று சொல்லுகிறான்: ஓ கனவான்களே! நீங்கள் யார்? நீங்கள் என்ன தவஞ்செய்து இந்த அந்தரலோகத்தை அடைந்தீர்கள்? அதை எனக்குத் தெரிவிக்கவேண்டும். என்று வினவ, அவ்விருவரும் அரசனைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்: ஓ மஹாத்மாவே! நாங்கள் பூலோகத்தில் குருநாடென்றொரு நாடுண்டு. அந்த நாட்டில் ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் வணங்கச் செங்கோல் நடாத்திய யயாதிமகாராஜனுடைய புத்திரிவயிற்றிற் பிறந்த புத்திரர்கள். எங்களுக்குத் தபதி குமாரர்களென்று பெயர். நாங்கள் ஆத்ம லாபத்தைக் கருதித் தவஞ்செய்தோம். அதற்கு இந்த லோகங் கிடைத்ததென் றுரைத்தார்கள். அரசன் மகிழ்ந்து, அப்பா மக்களே! அந்த யயாதி யென்பவன் நான்தான். என் பேரன்மார் நீங்கள் உங்களைக் காணப்பெற்றது என் தவப்பயனென்று அம்மக்களை வாரித்தழுவி யாதரித்தான். அம்மக்கள் மூதாதையாகிய யயாதியை வணங்கிச் சொல்லுகிறார்கள்: ஓ ஐயா! எங்களுக்கு முன்னமே நீர் தவஞ்செய்ய வனத்

திற் சென்றவர், இதுவரைக்கும் எந்தலோகத்தி லிருந்தீர்? அந்த விருத்தாந்தத்தைக் கூறும், என்று வேண்ட, யயாதி தான் தவஞ்செய்ததும், சத்தியலோக மடைந்ததும், பின்பு இந்திரனால் அந்தரலோக மடைந்ததும் ஆதியோடந்தமாகச் சொல்ல; தபதி புத்திரர்கள், கேட்டு ஒரு வசனஞ் சொல்லுகிறார்கள்: ஓ ஐயா! புண்ணியமெது? பாவமெது? பிரமசாரி-கிரகஸ்தன் - வானப்பிரஸ்தன்-சன்யாசி என்கிற நால்வர்களின் ஒழுக்கமென்னை? கர்ப்ப உற்பத்தி எவ்வகைப்பட்டது? இவைகளை யாங்கள் உணர அநேக நாள் கருதியிருந்தோம். இன்றையதினம் எங்கள் கருத்து நிறைவேறக் கிருபைகூர்ந்து அவற்றை விளங்க வுரைக்கவேண்டு மென்றார்கள். யயாதி மகிழ்ந்து பேரன்மார்களைப் பார்த்துச் சொல்லுகிறான்.

ஓ மக்களே! புண்ணியமென்பது யாதெனில், பொறாமையும்-பேராசையும்-கோபமும்-கடுஞ்சொல்லும் ஆகிய நான்கினை நீக்கி நிற்றல். அதனுடன் அவரவர்க்கிசைந்த மாத்திரம் தருமத்தைப் புரிந்து, மனம் வாக்குக் காயங்களினாலே உபகாரங்களைச் செய்து, அவ்வுபகாரங்களைத் தான் வகித்துக்கொள்ளாமல் தங்கள் தங்கள் பகவதாற்பிதம் பண்ணுவது புண்ணியம். பகவதாற்பிதஞ் செய்யாமல் தாமே வகித்துக்கொள்வாராகில், அப்புண்ணியத்தை அனுபவிக்க மறுபடியுஞ் ஜனிக்கவேண்டும். பாவமென்பது யாதெனில், மேற்கூறிய பொறாமை-பேராசை-சினம்-கடுஞ்சொல் இந்நான்கினை வகித்தல். அதனிலும் பிறர்க்குபகாரஞ் செய்யாதிருத்தலும்-தன்னுயிர் போல் பிறவுயிரைக் கருதாமற் கொன்று தின்றலும்-பொய்மை கூறுதலும்-தூதியாசாரம் கெடுதலும் இவை முதலாகியவை பெரும் பாவமாம். பிரமசாரியத்தின் இயல்பு என்னெனில், ஐந்துவயதில் வேதவிதிப்படி முப்புரிநூ லணிந்து, குருவைச் சேர்ந்து, குருவின் கட்டளையில் நின்று, வேதாகம முதலியவற்றைக் கற்றுணர்ந்து, பதினாறு, வயதளவும் ஆசிரியர் நிருபித்த புசிப்பை அக்குரு வமிசபரம்பரையிற் பிச்சை யெடுத்துப் புசித்து, எண்ணெய்-தேன்-பரிமளம்-புஷ்பம் - தாம்பூலம் முதலிய வற்றை நீக்கி, மஹா புத்தியாய்க் காலையிலு மாலையிலும் சூரியனையும் அக்கினியையும் குருவையும் அன்புடன் வணங்கி, காமத்தின் வழியில் கருத்தைச் செலுத்தாமல்; ஸ்திரீகளைக் கனவிலும் நினையாம லிருப்பது பிரமசாரியம். கிரகஸ்த வியல்பு என்னெனில், பதினாறு வயதின்மேல் ஒரு கன்னிகையை வேதர்கம விதிப்படி மணந்து, இருவருங் கூடுங் காலமறிந்து கூடி, தருமத்தின் வழியினின்று பொருளைச் சம்பாதித்து, பிரமசாரி-வானப்பிரஸ்தன் சன்யாசி இம்மூவர்க்கும் நோய்-பசிபிணி முதலிய இடையூறு வராதிருக்கத் தகுந்த முயற்சியினின்று, அநாதைகளை ஆதரித்து, ஆதுலர்க்குக் களிப்புறக் கொடுத்து, தன்னிடத்தில் வந்திரந்தவர்க்கு நீர்க்கடன் முதலியவற்றை நடத்தி, தெய்வத்துக்கு நித்திய பூசை திருவிழா முதலியவற்றைச் செய்து, பிதிர்த்தேவர்களுக்கு யாகாதிக் கிரமங்களாலும் நீர்க்கடனாலும் திருப்திசெய்வித்து, வந்த விருந்தினரைப் பாதுகாத்து, இனிவரும் விருந்துக் கெதிர்பார்த்து, சுற்றத்தார்க்கு மகிழ் வுண்டாக வேண்டியவற்றை யுதவி, தானும் தன்மனைவியும் ஒரு வழிப்பட்டு, நடுவுநிலைமையை அனுசரித்து, அன்புடைமை-அடக்கமுடைமை - ஒழுக்கமுடைமை பொறையுடைமை இவையுற்று, பிறர்பொருளிச்சித்தலையும் புறங்கூறுதலையும் - பயனிலா தனவற்றை அநுசரித்தலையும்-பாலச்செய்கையையும் கைவிட்டு, உலக நடையினை யறிந்து நடந்து புகழுடம் பினராகி, யாவரிடத்தும் அன்புடையவராய் இனிய வசனங்களை வசனித்து, புத்திரபாக்கிய முதலியவற்றைப் பெற்று, இம்மையில்தானே அதிக இன்பத்தை யனுபவித்து, மறுமையிலும் தேவரெல்லாந் துதிக்கப் பரமானந்தத்தை அடைவது கிரகஸ்தம். வானப்பிரஸ்த மென்பது என்னெனில், மனைவியோடாவது, அல்லது மனைவியை மைந்தரிடத்தில் வைத்தாவது தான் வனத்திற் சென்று, மெய் - வாய் - கண் மூக்கு-செவி வழியாகிய, சத்தம்-பரிசம்-ரூபம் ரசம்-கந்தம் என்கிற ஐந்து ஆசைகளையும் நாளுக்குநாள் அடக்கி, விரத முதலியவற்றை அநுசரித்து, ஒருயிருக்கும் இடையூறு செய்யாமல் தவத்தில் நின்று, நல்ல முயற்சியை அதிகமாக அநுசரித்து, மனதை மிகவும் வருத்தாமல் (சிறுபிள்ளைகளை விநோத முன்னிலையில் சமாதானஞ் செய்து அணைப்பதுபோல்) நாளுக்குநா ளொடுக்கி, மனம் அறிவோடு கலந்து தற்பதத்தை யுணருகிறவரைக்கும் ஆசிரியன் கட்டுரையையும் சாஸ்திர விதியையும் கைப்பிடித்து, கோப

முதலியவற்றை அகற்றி நிற்றல் வானப்பிரஸ்தம். சன்யாசித்துவம் என்பது என்னெனில், வானப்பிரஸ்தத்தி னியல்பு முழுவதும் அடைந்து, இயமம் - நியமம் - ஆதனம் - பிராணயாமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம் - சமாதி என்னும் அஷ்டாங்க யோகத்தை வகிக்கவேண்டும்.

இவற்றுள் இயம மென்பது, கொல்லாமை - மெய்ம்மை கூறல் - கள்ளாமை - பிறர் பொருளை இச்சியாமை - இந்திரியமடக்கலுமாம். நியமமென்பது, தவம் - தூய்மை - தத்துவ னூலோர்தல் - மனங்களித் திருத்தல், தெய்வத்துக்கு வழிபடலுமாம். ஆதன மென்பது, சுவத்திகம் - கோமுகம் - பதுமம் - வீரம் - கேசரி - பத்திரம் - முத்தம் - மயூரம் - சுகம் என ஒன்பது வகையினை யுடைத்தாகும். அவற்றுள் சுவத்திக மென்பது, தொடைக்கும் முழங்காற்கு நடுவே இரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி இறுமாந்திருத்தல். கோமுக மென்பது, சகனப்பக்கத்தில் இருகாற்பரட்டையு மாறவைத்து அவ்விருகாற் பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல். பதுமமென்பது, இரு தொடைமேலும் இரண்டுள்ளங்காலையு மாறித் தோன்றவைத்தல். வீரமென்பது, வலத்தொடையி லிடக்காற் பரட்டைச் சேர்த்து இறுமாப்புற் றிருத்தல். கேசரி யென்பது, பீசத்தின்கீழ்ச் சீவினிடத்துப் பரட்டை வைத்து இடமுழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல். பத்திர மென்பது, பீசத்தின் கீழ்ச் சீவனியிடத்து இருகாற் பரட்டையும் வைத்து அவ்விரு பதத்தையு மிருகையாலிறுகப்பிடித்து அசையாதிருத்தல். முத்த மென்பது, இடக்காற் பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்காற் பரட்டின்கீ ழுந்தவிருத்தல். மயூரமென்பது, முழங்கை யிரண்டு முந்திப்புறத்தி லழுந்தப் புவியிற் கையூன்றிக் கால் நீட்டித் தலைநிமிர்ந் திருத்தல், சுகமென்பது, சுகமுந்திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ வவ்வாறிருத்தலாம். பிராணயாம மென்பது, பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தலாம். பிரத்தியாகார மென்பது, உபாதியை நீக்கி உண்ணோக்கலாம். தாரணை யென்பது, கண்டம் - இதயம் - நெற்றி - கபாலம் - நாபி இவற்றி லொன்றிற் சந்ததம் சிந்தை வைத்தலாம். தியானமென்பது, ஐம்புலனடக்கிச் சிவயோகஞ் சேர்தலாம், சமாதியென்பது, இந்திரிய முதலிய தத்துவச் சேட்டை கட் கேதுவாய் யாக்கையுனின்று அவற்றோடு கூடினும் அதிற் பற்றியிருக்கும் ஆன்மாவாகிய தன்னைத்தான் காணலாம்.

தத்துவம் - கூகூ. அவை, ஆன்மதத்துவம்-உச, நாடி-கம், அவத்தை ரு, மலம்-ந, குணம்-ங, மண்டலம்-ங, பிணி-ங, விகாரம்-அ, ஆதாரம்-சு, தாது-எ, வாயு-கம், கோசம்-ரு, வாயில்-கூ, ஆக கூகூ. இவற்றுள், ஆன்ம தத்துவமாவன, பூதம்-ரு, புலன்-ரு, ஞானேந்திரியம்-ரு, கருமேந்திரியம்-ரு, கரணம்-ச, ஆக-உச. பூதம்-ரு, நிலம்-நீர்-தீ-காற்று-விசும்பு. புலன்-ரு, சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம். ஞானேந்திரியம்-ரு, மெய்-வாய்-கண்-மூக்கு-செவி. கர்மேந்திரியம்-ரு, வாக்கு-பாதம்-பாணி-பாயுரு-உபஸ்தம். கரணம்-ச, மனம்-புத்தி-அகங்காரம் - சித்தம். நாடி-கம், என்பவை, சுழுமுனை-இடை - பிங்கலை-காந்தாரி-அத்திரி-சிகுவை-அலம்புடை-புருஷன்-குரு-சங்கினி. இவற்றுள் சுழுமுனை யென்பது, ஆதாரமாறினும் ஊடுருவி நிற்பது-இடை-பிங்கலை, என்னும் இரண்டும், கத்திரிகைக் கால்போற் பின்னி நிற்பன. காந்தாரி யென்பது நாபியிற் றோன்றி சத்த மேழுக்கும் ஏழு நாடியாய்க் கண்டத்தி னிற்கும். அத்திரி சிகுவை இரண்டும், பத்து நாடியுற்றுக் கண்ணில் நிற்பன. அலம்புடை- புருஷன்-இரண்டும், செவியில் நூற்றிருபது நரம்புட னிருப்பன. குருயென்பது, நாபியுறைந்து குய்யம் பற்றி நிற்பது. சங்கினி யென்பது, உபஸ்தத்தைப் பற்றியிருக்கும். அவஸ்தை-ரு என்பன, சாத்திரம்-சொப்பனம்-சுழுத்தி-துரியம்-துரியாதீதம். மலம் ஆவன, ஆணவம்-மாயை-காமியம் குணம்-ங ஆவன, சாத்துவிகம்-இராசதம்-தாமதம். இவற்றுள், சாத்துவிக மென்பது, ஞானம்-அருள்-தவம்-பொறுமை-வாய்மை - மேன்மை - மோனம் - ஐம்பொறியடக்கல் இவை யுற்றிருக்கும். இராசத மென்பது, மனவூக்கம் - ஞானம்-வீரம்-தவம் - தருமம் - தானம்-கல்வி-கேள்வி இவையுற்றிருக்கும். தாமத மென்பது, பேருண்டி-நெடுந்துயில்-சோம்பு - நீதிவழு - ஒழுக்கவழு-வஞ்சம்-மறதி-பொய்-கோபம்-காமம்-கொலை இவை யுற்றிருக்கும். இந்த மூன்று குணங்களில் ஒவ்வொன்று மூன்றையு மேற்றிருக்கும். ஆனால், எந்தக்குணம் அதிக சம்பந்தப்பட் டிருக்கின்றதோ, அக்குணத்தி னியல்பு பெருகி மற்

றக் குணங்களின் தன்மை குறைந்திருக்கும்.
மண்டலம்-௩, அக்கினி மண்டலம்-ஆதித்த
மண்டலம் சந்திர மண்டலம். பிணி-௩,
வாதம்-பித்தம் - சிலேஷ்மம். விகாரம் - ௮,
காமம்-குரோதம்-லோபம்-மோகம்- மதம்-ஆச்
சரியம்- இடும்பை-அசூயை. ஆதாரம்-௬,மூலா
தாரம்-சுவாதிஷ்டானம்-மணிபூரகம் - அநாக
தம்-விசுத்தி-ஆக்ஞை. இவற்றிற் கிடம் முறை
யே, குதம்-குய்யம்- நாபி- இதயம் - அடிநா -
நெற்றி. தாது-௭, இரதம்- இரத்தம்-சுக்கிலம்-
மூளை-தசை-என்பு-தோல். வாயு-௰,பிராணன்-
அபானன்-சமானன்-உதானன்-வியானன்- நா
கன்-கூர்மன்-கிருகரன்-தேவதத்தன் - தனஞ்ச
யன். இவற்றுள், பிராணன் இதயத்திருக்கும்.
அபானன் உச்சார்க்கத்தலத் திடையிருக்கும்.
சமானன் தொண்டையின் சந்தி லிருக்கும்.
உதானன் நாபியில் நிற்கும். வியானன் சரீர
முழுதும் வியாபித்திருக்கும். நாகன் நீட்ட
லும்-முடக்கலும் - கிளர்த்தலுமா யிருக்கும்.
கூர்மன், உரோம புளகத்தைக் கொடுக்கும்.
கிருகரன் முகத்திடை நின்று தும்மலும்-சின
மும்-வெம்மையும் விளக்கும்.தேவதத்தன்,ஓட்
டமும்- இளைப்பும்-வியர்த்தலும் கொடுக்கும்.
தனஞ்சயன் உயிர்போகினும் போகாது உடலி
னை வீக்கித் தலைகிழித்தகலும். இனிகோசம்-௫,
அன்னமயம்-பிராணமயம் - மனோமயம் - விஞ்
ஞானமயம்-ஆனந்தமயம். இவற்றுள், உடல்-
அன்னமயகோசம், கருமேந்திரியமும் பிராண
னும்-பிராணமய கோசம், கருமேந்திரியமும்
மனமும்-மனோமயகோசம். ஞானேந்திரியமும்
புத்தியும்-விஞ்ஞானமய கோசம். அவித்தை-
ஆனந்தமய கோசம். வாசல்-௯, கண்-காது-
மூக்கு-வாய்-குதம்-குய்யம். ஓ என்னருமைப்
பௌத்திரர்களே! இவற்றை யுணர்ந்து, தவத்
தால் வாய்மையை அடைந்து, வாய்மையால்
தூய்மையை யடைந்து, தூய்மையால் அவா
வைப் பற்றறச் செய்து, அதனால் மறுபடியும்
சனிக்காதிருக்கிற இயல்பையுடைய பரத்திற்
சேர்ந்து பேதமற நிற்றலே சன்யாசித்துவம்.

இப்பால் கருவுற்பத்தி எவ்வாறெனில்,
மாதர்கள் கைவிலக்கமாகிய நாலாநாள் ஸ்நா
னஞ் செய்து, அன்றைய தினம் இரவில் புரு
ஷனைக் கூடுகிறது. அன்றுமுத லேழுநாளில்
ஒருநாள் கருத்தரிக்கிறது. அக்கரு உருவாகி,
அவ்வுருவுக்குத் தாய் உயிரான வாயு கொஞ்
சங் கொஞ்சமாய்ப் பொருந்தி உருவை வளர்
த்துவரும். கர்த்தர் விதித்த நாள் நெருங்கி
னால் தாயினது பிராணவாயுவே அக்கரு வுரு
வை வெளிப்படுத்தும். அவ்வுரு பூமியில்
வந்தபின்பு ஐம்பொறியா லடையும் பயனைப்
பெறும் என்று சொல்லி வரும்போது, தபதி
புத்திரர்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்து, ஓ
ஐயா! அருமையாயிருக்கிற எவற்றினும் அதிக
அருமையாயிருக்கிற இந்தத் துறவற நெறி
எங்களுக்குக் கிடைக்குமோ சொல்லுமென்று
வினவ, அதற்கு யயாதி, ஓ பௌத்திரரே!
ஒருவர் ஒரு காரியத்தை உட்கொண்டு அதனை
அடைய வேண்டுமென்று உறுதியாய் நம்பி
முயற்சி செய்வாராகில், அக்காரியம் கைகூடு
மென்பதற்கு ஐயமில்லை. தாம் கருதிய காரியத்
தில் அதிக முயற்சியாயிருந்து வரவர இலே
சாக முயற்சி செய்வாராகில், அதனாலே சாகத்
தகுந்த கெடுதி நேரிடும். ஆதலால், உயிர்க்
கொரு தீங்கு வந்தபோதிலும் தாம் கருதிய
காரியம் நிறைவேறுகிறவரைக்கும் சரீர அவ
ஸ்தையையும் பசிநோயையும் நித்திரையை
யும் நீக்கி, யார்யார் என்ன தீங்கு செய்தபோதி
லும் அதனை நினைக்காமல், இது இழிவு
இது சிறப்பு என்று மனதிற் கொள்ளாமல்,
துணிவு வுடைமையைப் பூண்டு, மேலான
விநோதங்கள் தன்கண்முன் றோன்றினபோதி
லும் அதன்மேல் கருத்தைச் செலுத்தாமல்,
மலையைப் போலக் கலங்கா நிலைமையி லிருக்க
வேண்டும். அப்படி நீங்களும் இருப்பீர்களா
கில், பெரும்பய னடைதலுமன்றி, உங்கள்
முன்னோர்களும் பெறுதற்கரிய பேறு பெறு
வார்களென்று பேசித் தன திருப்பிடத்தில்
வந்திருந்தான். அம்மக்கள் அந்தரலோகத்
தில் சிலநாள் அருமையான நன்முயற்சியி
லிருந்தார்கள்.

இந்திரன் இவர்கள் செய்துவருகிற நன்
முயற்சியை அறிந்து, தன்னருகி லிருக்கிற
தூதுவர்களைப்பார்த்து, ஓ தூதுவர்களே! ஒரு
திவ்விய விமானத்தைக் கொண்டுபோய் அந்
தரலோகத்தி லிருக்கிற சந்திரவமிச தபதிபுத்
திரர்களை அழைத்து வாருங்களென்று கட்
டளையிட்டான். தூதர்கள் தேவவிமானத்தோடு
அந்தரலோகத்திற் சென்று, தபதி புத்திரர்
களை அழைத்தார்கள். தபதி புத்திரர்கள் எங்
கள் மூதாதை இந்த அந்தரலோகத்தி லிருக்க,
நாங்கள் மாத்திரம் சொற்கலோகத்தி லிருக்
கிறது தகுதியல்ல. ஆதலால், எங்கள் மூதாதை
யுங் கொண்டுபோகிறதா யிருந்தால் வருகிறோ
மென்றார்கள். தூதர்கள் இந்தச் சேதியை

இந்திரனுக்கு அறிவித்தார்கள். இந்திரன் யோசித்து, அப்புத்திரர்களையும் அப்புத்திரர் மூதாதையையும் விமானத்திலேற்றி வாருங்களென்று தூதர்க்குரைத்தான். தூதர்கள் அக்கட்டளைப்படி மூவரையும் விமானத்திலேற்றிச் சொர்க்கத்திற் சேர்த்தார்கள். குலத்திலொருவன் பெரும்பயனடைந்தால் அக்குல முழுதும் பெரும்பயனடையுமென்கிற வேதவிதி யயாதிக்குக் கிடைத்தது என்று வைசம்பாயனர் சொல்ல, ஜெனமேஜெய மஹாராஜன் பேரானந்த மடைந்தவர்போல் மகிழ்ச்சி கொண்டு, வைசம்பாயனரை வணங்கி, ஒரு வசனஞ் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! யயாதி சரித்திரத்தைக் கேட்டு ஆனந்தத்தை அடைந்தேன். இனி யயாதிமுதலுண்டாகிய சந்திரவமிச அரசரது மாக்ஷிமையையும், அவரவர் மரபினொழுங்கையும் புகலவேண்டுமென்று வினவ, வைசம்பாயனர் மகிழ்ந்துரைக்கிறார்.

---

## துஷ்டியந்த மஹாராஜன் சரித்திரம்

ஓ அரசனே! யயாதிக்குச் சன்மிஷ்டையினிடமாயுதித்த புரூரவன், நாலுவேதம்-ஆறுசாஸ்திரம்-அறுபத்துநாலு கலைக்கியானங்களைக் கற்றுணர்ந்து, மனுசாஸ்திர விதி பிசகாமல் அரசுசெலுத்தி வருகிற நாளில், கேகயராஜன் புத்திரியான கவுசலையை மணம் புரிந்து, இரதியும் மதனும்போற் கூடிக் கலந்து, ஜெனமேஜெயனென்றொரு புத்திரனைப் பெற்றான். ஜெனமேஜெயன் நந்தையென்னும் கன்னிகையைப் புணர்ந்து, பிராஜீனன் என்கிற புத்திரனைப் பெற்றான். பிராஜீனன் சத்தியென்கிற கன்னிகையை மணந்து, சய்யாதியைப் பெற்றான். சய்யாதி பானுமதி என்கிற கன்னிகையைச் சேர்ந்து, சார்வபூமனைப் பெற்றான். சார்வபூமன் கேகயன் புத்திரியாகிய சுநந்தையைக் கூடி, ஜெயசேனனைப் பெற்றான். ஜெயசேனன் விதற்பதேசத்தரசன் புத்திரியாகிய சுபத்திரையைக் கைப்பற்றி, நயுதனைப் பெற்றான். நயுதன் வசுமதி வசுபுத்திரியாகிய சுதையை வேட்டு, குரோதனைப் பெற்றான். குரோதன் கரந்துவைவையைக் கலியாணம் புரிந்து, தேவாபியைப் பெற்றான். தேவாபி ஒரு கன்னிகையை மணந்து, உருசகனைப் பெற்றான். உருசகன் தேவையென்னுங் கன்னிகையினால், அரிசகனைப் பெற்றான். அரிசகன் தக்ஷகன் புதல்வியாகிய சுவாலாதேவியைத் தழுவி, மதிவானைப் பெற்றான். மதிவான் கோதானம்-பூதானம்-கன்னிகாதானம்-வஸ்திரதானம்-அன்னதான முதலியவற்றைச் செய்து, அனேக சத்திர யாகங்களை நிறைவேற்றினான். இப் புண்ணியத்தினால் சரஸ்வதி யென்னும் நதி ஒரு பெண்ணுருவந் தரித்து வந்து அவன்மேல் மயல் கொண்டு கூடி, அவனுக்குத் திடன் என்னும் ஒரு புத்திரனைப் பெற்று வைத்துப் போய்விட்டாள். திடனென்பவன் காளிந்தியைக் கலந்து, நீலனைப் பெற்றான். நீலன் இரத்தினமாலையைப் பரிணயஞ் செய்து, துஷ்டியந்தனைப் பெற்றான். அந்தத் துஷ்டியந்தன் மஹாபராக்கிரமசாலியாய் விளங்கியிருந்தான். அவனாலே இந்தச் சந்திரவமிசம் மிகவுஞ் சிறப்புற்றது.

அஃதெவ்வாறெனில், அந்தத் துஷ்டியந்தமஹாராஜன் இளமையிலேயே தன் பூமியில் விளைநிலத்தில் உயர்ந்து பருத்து விளங்கியிருக்கும் பெரிய மலைகளையெல்லாம் பார்த்தவர்கள் திடுக்கிடத் தன் கைகளினாலெடுத்தெறிந்து, குடிகளுக்கு யாதொரு குறைவும் வாராமற் பாதுகாக்குந் தன்மையையுடையவனாயிருப்பான். மகுடாபிஷேகமாயின பின்பு தன்னுயிர்போல் மன்னுயிரனைத்தையும் இரக்ஷிக்கும் கருத்தையுடையவனாய் மநுசாஸ்திரவிதி பிசகாமல் செங்கோல் செலுத்தி வருகிற நாளில், ஒரு நாள் பதினெண்ணாயிர மந்திரிகளும்-ஆறுலக்ஷத் தறுபத்தாறாயிரம் பட்டவர்த்தனரும்-மூன்றுலக்ஷத்து முப்பத்தீராயிர மகுடவர்த்தனரும்-இமையபண்டிதர் - இராஜபுரோகிதர் முதலானவர்கள் சூழக் கோடிசூரியப் பிரகாசமான சிங்காதனமேறி வீற்றிருக்கின்றான். அத் தருணத்தில் குடிகள் யாவரும் திரண்டு கொலுமுக வாசலில் வந்து தங்கள் வரவைக் காவலாளிகளால் அரசனுக்குத் தெரிவித்து, அரசன் உத்திரவின்மேல் கொலுவிற் சென்று அரசனை வணங்கி நின்றார்கள். அரசன் குடிகளுக்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்து, யோகக்ஷேமமுங் கேட்டான். குடிகள் கும்பிட்டுச் சொல்லுகிறார்கள். ஓ அரசனே! நல்ல குலஸ்திரீகட்குக் கணவன் தெய்வமென்றும், அறிய வேண்டியவற்றை அறிந்த புத்திரர்க்குத் தெய்வம் தந்தைதாயென்றும், முழுதுந் துறந்த மகத்துக்களுக்கு ஆசிரியன் தெய்வமென்றும், மற்றவர்களுக் கெல்

லாம் அரசனே தெய்வமென்றும் நூல்கள் முறையிடுகின்றன. அவ்வாறே எங்களுக்கு யாதொரு குறைவும் வராதிருக்கத் தாங்களே தெய்வமா யிருக்கிறதினால் தாக்ஷியில்லை. ஆனால், நாங்களிடும் பயிர்களைப் பன்றி முதலிய மிருகங்கள் அதமாக்குகின்றன. அஃதொன்றேயன்றி மற்றொன்று மில்லையென்று சொன்னார்கள். அரசன் குடிகள் மகிழ்வடைய நல்ல பரிசளித்து, நீங்கள் உங்கள் ஸ்தானத்திற்குச் செல்லுங்கள் மிருகபய மில்லாதிருக்க நான் தகுந்த முயற்சி செய்கிறேன் என்றுத்திரவு கொடுக்க, குடிகள் அரசனை வணங்கி அவரவர்கள் இருப்பிடத்துக்குச் சென்றார்கள்.

பின்பு அரசன் மந்திரி முதலானவர்களைப் பார்த்து, நாம் வேட்டைக்குப் போகவேண்டும். வேடர்-வலைஞர் முதலியவர்களை வருவியுங்கள். நீங்களும் பிரயாணமாகுங்கள் என்று கட்டளையிட்டு அந்தபுரத்திற் சென்று வேட்டை மகுடமணிந்து, பல ஆபரணங்களைத் தரித்து, வில்-அம்பு-வாள்-கதை முதலியவற்றைத்தாங்கி நவமதனன்போல் வாயு கதியோடு கலந்த புரவியின்மேல் ஏறி வெளிப்பட்டான். இதற்குள் மந்திரி முதலானவர்கள் ரதகஜதுரக பதாதிகளையும், வேடர்-வலைஞர் முதலியவர்களையும் அழைத்துக்கொண்டு, விரைவில் வெளிப்பட்டு அரசனோடு கலந்தார்கள். அப்பால் யாவரும் ஒன்றுக்கூடி, முரசு-பேரிகை-டங்கா - டமாரம்-சிறுபறை - பெரும்பறை-தம்பட்டம்-மத்தளம் - மிருதங்கம்-டமரகம்-எக்காளம்-காளம்-சின்னம்-துத்தாரி முதலாகிய வாத்தியங்கள் கடல்போலொலிக்க, மிகுந்த களிப்புடன் பிரயாணமாய்க் காட்டிற் சென்றார்கள். வேடர்கள் முன்னதாகச்சென்று காடுமுழுவதும் வலைகட்டி, அங்கிருக்கு மிருகங்களெல்லாம் ஒரேமுகமாய் வரும்படிச் செய்தார்கள். அப்படி ஒரேமுகமாக வரும் சிங்கம்-புலி-கரடி - செந்நாய்-மான் முதலியவற்றை நோக்கி, தங்கள் தங்கள் கையிலிருக்கிற வில்லை வளைத்து நாணியேற்றிக் குணத்தொனி செய்து, அர்த்தசந்திர பாணம்-முள்ளம்பு முதலியவற்றைத் தொடுத்து, வருகிற மிருகங்களையெல்லாம் இரண்டிரண்டு துண்டமாகக் கண்டித்து, யானை-வரையாடு-பன்றி-முள்ளம் பன்றி முதலியவற்றைப் பல்லயங்களினாற் குத்திப் பூமியில் வீழ்த்தி, கண்டபேரண்டமுதலிய பக்ஷிகளையெல்லாம் சரத்தினாற் சிறகை யறுத்துத் தள்ளி, இப்படி பலவாறு தங்கள் தங்கள் கருத்துக்குத் தோன்றியபடி வேட்டஞ் செய்தார்கள். இதில் அரசன் கையினா லிறந்தசிங்கம் - யானை-புலி-கரடி - செந்நாய்-தண்டபேரண்ட முதலாகிய செந்துக்கள் அளவில்லை.

இவ்வாறு வேட்டஞ்செய்து வருகிறபோது, ஒரு மானானது சடுதியில் அரசன் பார்வைக்கு அகப்பட்டது. உடனே அரசன் ஒரு சரத்தை அதன்மேற் றொடுத்தான். அஃதச் சரத்தைத் தன்னுடலிலேற்றுக் கனவருத்தமடைந்து ஓடிற்று. அதனை அரசன் கண்டு, தானும் தன் மந்திரியும் அந்த மானைத் துரத்தினார்கள், அம்மான் அதிவேகமாய் நெடுந்தூரஞ் சென்று, பாலை நிலத்தைக் கடந்து மறைந்தது. அரசன் பாலைநிலத்தில் வந்தமாத்திரத்தில் அந்நிலத்தின் வெம்மையினால் மெய்முழுதும் வெயர்த்துத் தாகக்களை தாங்கி, பக்கத்திலிருக்கும் ஓர் மந்திரியைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ மந்திரி! இதோ பார்த்தையா! எலிகளுக்குப் பாம்பின் படத்தினிழலேயன்றி வேறொரு நிழலில்லை. இவ்வகைப்பட்ட வனத்தில் வந்து சிக்கிக்கொண்டோம். நமக்கோ தாகவிடாய் அதிகரிக்கின்றது. நம்மது சரீரத்தி லரும்பும் வியர்வை நீரேயன்றி வேறே ஜலமில்லை. இதற்கென்ன செய்யலாம்? என்றுவினவ, அம்மந்திரி இவ்வார்த்தைகளைக் கேட்டுச் சற்றாலோசித்திருக்கிற தருணத்தில், ஒரு பக்கத்திற் குளிர்ச்சியான காற்று வந்தது. அதனை அம்மந்திரி யறிந்து, அரசனை அழைத்துக்கொண்டு அக்காற்று வந்த முகமாகச் சென்றான். அங்கு சகல பாபங்களையும் நீக்கி உலக மாதாவாய் விளங்குகின்ற கங்கா நதி தோன்றிற்று. அந்தக் கங்கையைக் கண்டமாத்திரத்தில் இருவினைத் தொடர்பற்று, பரமபதத்திற் சென்றவர்கள் கண்ட ஆனந்தத்தைப்போல் மகிழ்வடைந்து, அரசனும் மந்திரியும் அக்கங்கையிற் படிந்து, தாகவெப்பத்தை நீக்கிக்கொண்டு, அங்கிருக்கும் விருக்ஷத்தி னீழலிற் சற்றிருந்திளைப்பாறி எழுந்து, அந்நதி தீரத்தருகிலிருக்கும் வனவிநோதங்களைப் பார்வையிட்டு, மந்திரியோடு தானும் சென்று உலாவி வருகிறான். இப்படி வருகிறபோது, ஒரு சூதவனந் தோன்றிற்று. அவ்வனத்திலிருக்கிற மகாவிருக்ஷங்கள் இலக்குமியின் மேனியையொத்த இளந்தளிர்களையும், சரஸ்வதியின்

மேனியையனைய சற்று வெளுத்த தளிர்களை யும், உமை மேனிபோன்ற முதிர்ந்த தழை களையும் உடைத்தாகி; அன்னவர் விழிபோன்ற வடுக்களையும், அன்னவர் தனம்போன்ற காய் களையும், அன்னவர் மாதுரிய வசனமொத்த கனிகளையுங்கொண்டு, காமசரங்களை யநேகம் வகித்து அம்மூன்று ஸ்திரீகள் நிற்கிறது போலத் தோன்றிற்று. அத்தோற்றத்தை அரசன் கண்டு வியப்படைந்து, அவ்வனத்தி லுள்ள வளப்பங்களைப் பார்வையிட்டு வரு கிறபோது, எதிரிற் சில முனிவர்கள் வந்தார் கள். அவர்களுக்கு அரசன் நமஸ்காரஞ் செய்து அவர்களால் ஆசிகளேற்று, ஓ ஸ்வா மிகளே! இந்தவனம் மஹாவிந்தையா யிருக் கின்றது. இவ்வனம் எவர்களுடையது? அவர்கள் நாம மென்ன? என்று வினவ, முனிவர்கள், ஓ அரசனே! இந்த வனம்பிரம சாரியாகிய கண்ணுவ மஹாமுனிவ ரிருக்கிற ஆசீர்மமென்றனர். அரசன் திடுக்கிட்டு, ஓ ஸ்வாமிகளே! நான் சந்திரவமிச ராஜன். என்பெயர் துஷ்டியந்தன். வேட்டையாட வெளிப்பட்டு வழிதப்பி இம்மார்க்கமாகவந்து விட்டேன். முனிவர்களிருக்கிற வனத்துக்கு அரசர்கள் வரக்கூடாது. ஒரு வேளை இந் தச் சேதி கண்ணுவருணர்ந்தால் சினங் கொள்ளுவாரோ? அல்லது போகட்டுமென்று மனங் கொள்ளுவாரோ? என்று பயபக்தி யுடனே வினவ, முனிவர்கள், ஓ அரசனே! அந்தக் கண்ணுவ மஹாமுனிவர் யாவரிடத் தும் நீடிய சாந்தமும், அரசர்களிடத்தில் ஏகாந்தமும் மிகுந்த அன்பு முடையவர். மேலும், உம்மிடத்தில் அதிகப் பிரீதி யுள்ள வர். ஆகையால், உம்முடைய விஷயத்திற் சினங் கொள்ளாமல் அகமகிழ்ந்து ஆசீர் வதிப்பார். நீர் சஞ்சலப்படாமற் சென்று அவரைத் தரிசித்துப் போமென்று உத்திரவு கொடுத்து, அவர்கள் கங்காஸ்நானத்துக் கெழுந்தருளினார்கள்.

அரசன் தன்னுடன் வந்த மந்திரிகளை நோக்கி, ஓ அமைச்சர்களே! இது கண்ணு வர்ஆசீர்மமாம். நான்மாத்திரம் சென்றுபார்த் து அவரைத் தரிசித்து வருகிறேன். நான் வரு கிற பரியந்தம் இவ்விடத்தி லிருங்கள் என்று சொல்லி நிறுத்தி, அரசன் அவ்வனத்தினுட் சென்றான். மயில்க ளாடுவனவும்-குயில்கள் பாடுவனவும்-வண்டுகள் ஒலிப்பனவும் - யாது போ லிருந்தன வெனில், அரசனைக் காண அவ்வனதேவதை நட்டுமுட்டு நாடகசாலைப் பெண்களோடு எதிர்வருதல் போலிருந்தது. அதனைக் கண்ட அரசன் மகிழ்ந்து செல்லு கிறபோது, புன்னைப்புஷ்பங்கள் எதிர்ந்திருத் தலையும்-மாந்தளிர்களோடு மாங்கனிதொங்கு தலையும் அத்தளிர்கள் தென்றலுக் கசைந் திருத்தலையும் கண்டான். அது எப்படி யிரு ந்த தென்றால், அந்த வனப்பெண் சுன்ன முதலிய பொடிகளைத் தூவி, காணிக்கையாகக் கனியை ஒரு கையி லேந்திக்கொண்டு, ஒரு கையினால் வாரும் வாரும் அரசனே! என்று பிரியவசனம் பேசி யழைப்பதுபோலு மிருந் தது. இந்த வேடிக்கைகளைப் பார்வையிட்டு வருகிறபோது, அங்கங்கு யாகசாலைகளும்-ஓமகுண்டங்களும் - வேதகோஷ்டங்களும் - மஹாமுனிவர்கள் திருக்கூட்டங்களும் தோன் றிற்று அவைகளை அரசன் கண்ணுற்றுக் கண்ணுவமஹாமுனிவரிருக்கிற ஆசீர்மத்திற் சென்றான். அங்கே அல்குலைத் தேராகவும்-இரண்டு தனங்களை யானையாகவும்-இடை யைச் சிங்கமாகவும்-புருவத்தை வில்லாகவும்-இரண்டு கண்களைச் சரமாகவுங் கொண்ட இரதிதேவியானவள், வீரகடகம் புனைந்து மதன்மேல் யுத்தஞ்செய்ய எதிர்த்து வருவது போல் ஒரு கன்னிகை அரசன் கண்முன் தோன்றினாள். பெண்களுக்கெல்லாம் சிரோ ரத்தினம்போல் பிரகாசிக்கின்ற பெருமாட் டியை அரசன் கண்டு, மையலாகித் திப்பிரமை கொண்டு, அசைவில்லாமற் சித்திரப்பிரதிமை போல் சற்றுநேரம் நின்று, தன் கல்வியின் றிறத்தால் மனதைக் காமத்தின் வழிசெல்ல வொட்டாமல் நிறுத்தி, இது முனிவர்களிருக் கிற ஆசீர்மம். இந்தக் கன்னிகையைக் கண்டு மயங்குவது நமக்குத் தகுதியல்ல. இக்கன்னி கையை நெருங்கி வாய்மொழி யறிந்து, அதன்மேல் நமது கருத்தை வெளியிட வேண்டுமென்று அக்கன்னிகையின் அருகிற் குறுகினான். அக்கன்னிகையு மிதற்கு முன் னமேதானே அந்தக் கண்ணுவராலும் அக் கண்ணுவரிடத்து வருமுனிவர்களாலும் இவ் வரசனது பெருமையையும் திருவுருவத் திறத் தினையும் கேட்டிருக்கின்றவ ளாதலால், அத னாலும், பிராரத்துவ சம்பந்தத்தினாலும், வந்த அரசனை துஷ்டியந்த மஹாராஜ னென்று தன் புத்தியா லுணர்ந்து, ஆச்சிரமத் தில் திடுக்கெனப் புகுந்து, ஒரு பொற்பீட மளித் திருக்கச்சொல்லி நாணத்தோடு தூண் மறைவில் நின்றாள். அரசன் அவள் கொடுத்த

பீடத்தி லிருந்து, கண்ணும் கருத்தும் அக் கன்னிகையின் அழகாகிய கடலில் ஆழ்ந்தி ருந்த போதிலும் பெரியோர்களின் பழக்க வாசனையினால் கருத்தைக் காமத்தின் வழியிற் செல்ல வொட்டாமல் அக் கன்னிகையைப் பார்த்து, ஓ தோகை மயிலே! ஓ தொனிக்குங் குயிலே! இவ்வாசிரமத்துக்குத் தலைவராகிய கண்ணுவ மஹாமுனிவர் எங்குற்றாரென்று வினவ, அக்கன்னிகை, ஓ மஹாராஜாவே! இந்நேரவரையில் இவ்விடத்திலிருந் தார். திவ்யக்கியான ஸ்வரூபியாகிய சதானந் தர் வந்து அழைத்துப் போயினர் இன்னும் இரண்டு மூன்று நாழிகையில் வருவார் என்று கூற, அரசன் ஓ பெண்கள் நாயகமே! முனிவர் களில் மிகவுஞ் சிறப்புற்றோங்கியவர் கண்ணு வர் இக்கண்ணுவருடைய ஆசிரமத்தில் நீ இருக்கவேண்டிய காரணமென்ன? நீ யார்? உன் பெயரென்ன? என்றுகேட்க, கன்னிகை ஓ அரசனே! நான் கண்ணுவருடைய புத்திரி என்பெயர் சகுந்தலை யென்றாள். அரசன் கேட் டுத் திடுக்கிட்டு, ஆ! பெண்ணரசி! ஆணவ மாயை காமியமென்கிற மும்மலத்தை அடக் கினவரில் மிகவுஞ் சிறப்புற்றுப் பிரமசாரி யத்துவத்தைப் பெற்ற பரிசுத்த மனத்தை யுடைய கண்ணுவமஹாரிஷிக்கு நீ புத்திரியா விர்த்தாந்தத்தையும் உனக்குநாமதேயம்வந்த வரலாற்றையும் விளங்க உரைக்கவேண்டு மென்றனன். அதற்குச் சகுந்தலை ஓ அரசனே! சில நாளுக்கு முன் இவ்விடத்துக்குச் சதானந் தர் வந்தார். நான் அவரைத் தரிசித்தேன். அவர் என்னைப் பார்த்து இந்தக் கன்னிகை யார் என்று கண்ணுவமுனிவரைக் கேட்டார். கண்ணுவமுனிவர் என் விர்த்தாந்தத்தை எல் லாம் சதானந்தருக்கு அறிவித்தார். அப் போது அருகிலிருந்து கேட்டிருந்தேன். அக்கண்ணுவர் கூறியபடி சொல்ல எனக்குச் சக்தியில்லா விட்டாலும், தெரிந்த மாத்திரம் கிஞ்சிற்றெடுத்துரைக்கிறேனென்று சொல்லு கின்றாள்.

கேளும் இராஜராஜேஸ்வரா! தேவர்க ளும் முனிவர்களும் மற்றுமுண்டான பிரஜை களும் ஸ்துதிக்கின்ற சிறப்புற்ற தவசிரேஷ்ட னாகி, பிரமசிருஷ்டிக்குப் பதிற்சிருஷ்டி செய்த மிகுந்த பராக்கிரம பாக்கிய சிலாக்கியனாகிய விஸ்வாமித்திரர் இமய மலைச்சாரலில் வந்து, ஐம்பொறிவழி செல்லும் புலனை ஒரு வழிப் படுத்தி, அறிவைப் பிரமத்தினிடத்துச் செலு த்தி, அநேககாலம் அருமையான தவஞ் செய் திருந்தார். அத்தவத்தில் எழுந்த அக்கினி திரிலோகங்களையும் தகிக்கத் தலைப்பட்டது. சொற்கலோகத்தி லிருக்கிற இந்திரன் இந்த அக்கினியினால் தனவருத்த மடைந்து, முப் பத்துமுக்கோடி தேவர்களையும் நாற்பத்தெண் ணாயிர முனிவர்களையும் - கிம்புருடர் - கருடர்- காந்தருவர் - சித்தர் - வித்தியாதரர் முதலாகிய யாவரையும் அழைப்பித்து, வியாழ பகவானு டன் சிங்காதனத்திலிருந்து வந்த பரிசனங் களை நோக்கிச் சொல்லுகிறான். ஓ தேவர்களே! ஓ முனிவர்களே! எக்காலத்திலும் கண்டறி யாத இந்த அழற்சி எவ்விடத்திருந் துதித் தது? இதனால் சொற்கலோகமெல்லாம் கரு கிப் பொல்லா வருத்த மடைகிறபோது பூலோ கம் எவ்வாறு அவஸ்தைப்படும்? இந்த அழற்சியோ வடவையையும் வாட்ட வல்லதே யிருக்கின்றதே. ஆதலால் விரைவில் அஃதுண் டான விதத்தை உணர்ந்து உரையுங்களென்று வினவத் தேவர்கள் முதலானவர்கள் இந்தி ரனை வணங்கிக் கூறுகிறார்கள். ஓ ஆண்ட வனே! இமயமலைச் சாரலில் விஸ்வாமித்திர முனி அகோரமான தவஞ் செய்கிறார். இஃது அத்தவத்தி லெழுந்த தபாக்கினி. இதைத் தணிக்க யாவராலும் கூடாது. இதற்குத் தாங் களே ஒரு யுக்தி சொல்லவேண்டு மென்று கூற, இந்திரன் அதுகேட்டு, அந்த விஸ்வா மித்திரன் மற்ற முனிவர்கள்போலல்ல. பிரம சிருஷ்டிக்குப் பதில் சிருஷ்டிக்கப்பட்டவன். அவன் தவத்தையழிக்க யத்தனித்து நாமெல் லா மொன்றாகக் கூடித் தடுப்போமாயினும் நம்மை பஸ்மீகரப்படுத்துவான். வடவை யையேவினால் அஞ்சாமல் அதனை யுட்கொள்ளு வான். சப்த மேகங்களையும் சண்டமாருதத்தை யும் விட்டால் அவைகளை அரைநொடியில் தபாக்கினியால் கொளுத்திப் போடுவான், இந்த அண்டரண்ட பிரமாண்டங்களெல்லாம் இடிந்து விழுந்தாலும் பூலோகம் சொற்க லோகமாய்க் கீழ்மேலானாலும், அஞ்சாத உறு தியான மனத்தை யுடையவன். இவன் தவ த்தை யழிக்கிறதற்கு ஸ்திரீகளே யன்றி வே றொரு யத்தனங்களினால் அழிக்கக்கூடாது என்று தீர்மானித்து மேனகையை அழைத்து வரத் தேவதூதர்களுக்குக் கட்டளையிட்டான். தூதர் மேனகை இடத்துச் சென்று தேவ ராஜன் கூறியவற்றைச் சொல்ல, மேனகை அதுகேட்டு அதிக விரைவில் வந்து இந்தி ரனை வணங்கி, ஓ ஸ்வாமி! என்னை அழைப்

பித்த காரணத்தைத் திருவுளம் பற்றவேண்டு மென இந்திரன் அம்மேனகையைப் பார்த்து, ஓ பெண்ணே! இமயமலைச்சாரலில் விஸ்வா மித்திரன் அகோரமான தவஞ் செய்கிருன், அத்தவத்தி லெழுந்த அக்கினி பூலோகத் தாரையும் சொர்க்கலோகத்தி லிருக்கிறவர்களை யும் வருத்துகின்றது. நீ விரைவாகச் சென்று அந்த விஸ்வாமித்திரன் தவத்தை அழித்து வரவேண்டும் என்றுரைக்க, மேனகை கேட் டுத் திடுக்கிட்டு, ஓ ஸ்வாமி! அந்த விஸ்வா மித்திருடைய தன்மையை யெல்லாந் தேவ ரீர் அறிந்திருந்தும், புலியிடத்து மானை அனுப்புவிப்பதுபோல் என்னை யனுப்பு விக்க யத்தனிப்பதை நோக்கிஞல் தங் களுக்கு நான் கனமான குற்றஞ் செய்ததாக வும், அதற்குப் பயத்திற் செய்யுந் தண்டனைக் கீடாக நயத்திற் செய்யுந் தண்டனையாக விருக் கின்றது. ஓ சுவாமி! என் மனமறியத் தங்க ளுக்கு ஒரு குற்றமுஞ் செய்ததில்லையே; என்று பிரியவசனம் புகல, இந்திரன் நகைத் து, ஓ பெண்ணே! நீ ஒரு குற்றமுஞ் செய்ய யவில்லை. உலகத்துக்கு ஒரு கெடுதி வந் தால் அதனை அரசன் நீக்கி உலகத்தை யாதரிக்கவேண்டும். இப்போது விஸ்வா மித்திரனல் உலகத்துக்கு வந்த கெடுதியை நான் நீக்கவேண்டும். இந்தக் கெடுதி என்னுல் நீக்கப்படுவதல்ல. உன்னுல் நீங் கும். அது எப்படியென்ருல், சினத்திலும்- கொலைத்தொழிலிலும் - சாபத்திலும் - தவத்தி லும் ஒவ்வொருவர் உயர்ந்திருப்பார்கள். இந் நான்கும் ஒருவர்க்கே இருந்தாலும், பெண் ணென்ற விடத்துச் சிறிதுஞ் செல்லா. ஆத லால், இந்த வேளையில் நாங்களெல்லாம் சுகப் பட நீ அந்த விஸ்வாமித்திரனிடத்துச் சென்று, உன் வல்லமையால் அவனை மயக்கித் தவத்தை யழித்து வரவேண்டும் என்று கூற, மேனகை மகிழ்ந்து இந்திரனை வணங்கி, ஓ ஸ்வாமி! யாவரேனும் ஐம்புலனையும் அடக்கி அறிவைப் பரப்பிரமத்தி னிடத்துச் செலுத் திச் சித்திரம்போ லசைவற்று யோகத்திலிருந் தாலும், அவர்களை அரைநொடிப்போதில் கைவசப்படுத்த எனக்குத் தெரியும். இதோ சென்று விஸ்வாமித்திரன் தவத்தைப் பொன் றுவித்து வருகிறேனென்று விடைபெற்று, தன் அரண்மனைக்குவந்து ஸ்நானஞ்செய்து, வஸ்திராபரணதிகளோடு குங்குமமுந்தரித்து, பரிமள வாடைவீச அரண்மனையை விட்டு வெளிப்பட்டு, கண்டவர்கள் காம வெறி கொண்டு திப்பிரமைபுற்றுப் பின் தொடர்ந்து நிற்க, இமயமலைச் சாரலில் விஸ்வாமித்திர முனிவர் தவஞ்செய்கிற இடத்தில் வந்து தென்றற் காற்றுவாடையில் நின்ருள்.

இப்படி இவள் நின்ற மாத்திரத்தில், வனசம்-சூதம்- அசோகு-முல்லை-நீலம்- என்கிற ஐந்து பாணத்துக்குத் தலைவனுகிய மதன ராஜன் கவுசிக ராஜனுகிய விஸ்வாமித்திரனை எதிர்த்து, கருப்புச் சிலையை வளைத்து வண்டு நாணியேற்றிக் குறைத்தொனிசெய்து முன்னம் இச்சையை விளைக்கின்ற தாமரை மலர்க்கணை யை எடுத்து அவ் விஸ்வாமித்திரன்மேற் ருெடுத்தான். அப்போது விஸ்வாமித்திரன் தவநிலை விட்டுக் கண்ணை விழித்துப் பார்க்கும் போது மேனகை யணிந்திருக்கிற சந்தனம்- புனுகு-கஸ்தூரி-கர்ப்பூரம்-சவ்வாது- குங்கும முதலான பரிமளங்களோடு, அளியின் மிகுந்த நறுமலர்க் காற்றினை புணர்ந்தான். அதனை மதனராஜன் கண்டு, இதுதான் சமயமென்று கருதி பரபரப்பாகக் காம வெம்மையை யுண் டாக்கும் சூதமலரைத் தொடுத்தான். உடனே விஸ்வாமித்திரன் விருச்சிகங் கொட்டப்பட்ட வனைப்போல தவநிலைவிட் டெழுந்து, அப் பரிமளக் காற்றின் வழிச் சென்ருன். அங்கே ஒரு சந்தன மரத்தடியி லிருக்கிற மேனகை (இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா?) என் கிற பழமொழி போலக் கடைக்கண் ணேக் கத்தை விஸ்வாமித்திரன்மேல் வைத்து, மற்ருேர் பொருளை நோக்குவது போலப் பராமுகமாக இருந்தாள். இவளை விஸ் வாமித்திரன் கண்ட மாத்திரத்தில் மதன ராஜன் களைத்துச் சிரித்து, மஹா உக்கி ரத்தோடு சகிக்கக் கூடாத வருத்தத்தைக் கொடுக்கும் அசோக மலர்க்கணையைத்தொடுத் தான் விஸ்வாமித்திரன் அதனல் மனங் கலங்கி அவளருகிற் சென்று, ஓ பெண்ணரசி! முனிவர்க்கு விரோதியாகிய மதனராஜன் என்னை மிகுந்த துன்பத்துக் குள்ளாக்கினன் அவனை வென்று வெற்றிபெற என்னுற் சக்தி யில்லாமல், அவன் பாணத்திஞல் அடிபட்டுப் பிடிபட்டு முறிபட்டு வெறிபட்டு ஓடிவந்தேன் தெய்வ கடாட்சத்திஞலே உன்னைக் கண்டேன் நீ முலையாகியமலையையும், அல்குலாகிய அகழி யையும், துடையாகிய பொற் கம்பத்தையு முடைத்தாகிய நல்ல காவலைச் செய்யாநின்ற கண்களாகிய வாயிலோடும் கூடிய உன்மனக் கோட்டையை என் வசப்படுத்தி, மதனராஜன்

பாணத்தால் என் மார்பிற்றேன்றிய புண்ணுக்கும், அதனு லுண்டாகும் சுரத்துக்கும், உன் ஸ்தனவேது கொடுத்து இதழ் மருந்தளித்து ஆதரிக்க வேண்டும் என்று இனிய வசனங்களால் பலவாறு வேண்ட மேனகை விஸ்வாமித்திரனை வணங்கிச் சொல்லுகிருள். ஓ ஸ்வாமி! நீரோ காமம்-வெகுளி-மயக்கமென்பனவற்றை நீக்கிக் கருத்தைப் பிரமத்தினிடத்துச் செலுத்திச் சற்று மசைவில்லாமற் றவத்திவிருக்கிறவர் உமக்காக இந்தக் கருத்து உண்டானதை நோக்கும்போது மிகுந்த ஆச்சரியமாக இருக்கின்றது. ஆயினும் அபயமென்று வந்தவர்களை யாதரிப்பது முறைமை அம்முறைமைப்படி தேவரீர் கருத்து மகிழ என்மனக்கோட்டையை உமது வசமாக்கி முலேவேது கொடுத்து இதழ்மருந்தளித்துக் காமநோயை மாற்றுவேன். ஆனுல், ஒரு சந்தேகம். அஃதென்னவென்ருல், முனிவர்களென்றபோதே அவர்களெல்லாம் ஸ்திரீ விரோதிகள் நீரு முனிவரானபடியால் உம்மை ஆதரிப்பதற்கு எனக்குக் கிஞ்சித்து அஞ்சிக்கையுண்டாயிருக்கின்றது என்றுகூற, விஸ்வாமித்திரன்சிரித்து ஓ பெண்கள் நாயகமே! நீ சொல்லியது சரிதான் விரோதியாயிருந்தபோதிலும் அவ்விரோதி சகிக்கொணுத் துன்பமடைந்து வந்து முறையமிட்டு அபயமென்று விழுந்தால், அவனைக் காப்பாற்றுவது முக்கியமான கடமை. மேலும் உபகாரஞ் செய்கிறதிஞலே அவமானம் வருகிறதேயில்லே வந்தாலும் உபகாரஞ் செய்யச்சொல்லி நூல்கள் முறையிடுகின்றன. ஆதலால் இந்த வேளையில் என்னை யாதரிக்க வேண்டும் என்று வணங்க மேனகை மகிழ்ந்து, விஸ்வாமித்திரன் களிப்புறத் தன் மனக்கோட்டையை அவன் வசப்படுத்தி அம்முனிவரன் கொண்ட காமநோயை மாற்றினுள், விஸ்வாமித்திரன் வீரியவிர்த்தியால் மேனகையிடமாக நான் பிறந்தேன். மேனகை தெய்வலோகப் பெண்ணுதலால், அவள் பிறந்த என்மேல் பிரீதியில்லாமல் ஓரிடத்தில் வைத்துப் போயினுள். விஸ்வாமித்திரர் முழுதுந்துறந்தவராதலால், என்மேல் அன்பு கூராமல், அவர் சிந்தைக்கிசைந்த விடத்துச் சென்ருர்.

பின்பு எனக்கு சூரியச் சுடரினுல் துன்பம்வராமல் சகுந்தலேப்பக்ஷிகள் வந்து தமது இறகு பந்தரிட்டுப் பாதுகாத்துவந்தன அவ்வழியில் முனி சிரேஷ்டராகிய கண்ணுவர் வந்து, நானழுதகுரலோசையைக் கேட்டு, அவருடைய சிவந்த கரங்களிலென்னையேந்தி ஆசிரமத்துக்கு எடுத்துவந்து சகுந்தலே யென்று பெயரிட்டு, மிகுந்த அன்புடன் வளர்த்து வந்தார். இது என் வரன்முறையென்று சொல்லி ஒருபால் மறைந்து ஒதுங்கி நின்ருள். இவையனைத்தையும் அரசன்கேட்டு பிரமானந்தத்தை அடைந்து, இவள் கவுசிக ராஜனுகிய விஸ்வாமித்திரனுக்கும் தெய்வலோகப் பெண்ணுகிய மேனகைக்கும் பிறந்தவள் நாம்கொண்ட கருத்தின்படி இவளைப் புணருதல் தகுதிதான் என்று மனதில் நினைத்துச் சகுந்தலேயைப் பார்த்து, ஓ பெண்கள் நாயகமே! நீ கவுசிக ராஜனுகிய விஸ்வாமித்திரன் புத்திரியாதலால், தடையின்றி உன்னை யான் கூடத்தகும் இனி என்பேரில் கிருபை கூர்ந்து என்னை யாதரிக்கவேண்டுமென்ருன். சகுந்தலே மிகுந்த நாணமுற்று முகத்தைக் கோட்டி, காலால் நிலத்தைக் கீறிப் பூமியைப் பார்த்தவண்ணமாய் ஒரு வசனஞ் சொல்லுகிருள். ஐயா! இது முழுதும் துறந்த மஹாத்மாக்களிற் சிரேஷ்டராகிய கண்ணுவர் ஆசிரமம். இதில் வந்தும் விரக்தியைப் பாராட்டாமல் என்னைக் கூறுமென்று சொல்வது அரசருக்குத் தகுதியல்ல. அவ்வாறு கூடுவோமென்ருலும், அருமை பாராட்டி வளர்த்த என் பிதாவாகிய கண்ணுவர் மனத்துக்கு அருவருப்புண்டாகும் உம்மையே நேரிற் கண்டு ஏதேனும் வினவுவாராயின், அதற்கு மறு உத்தரவு என்னவென்று கொடுக்கவல்லீர் என்று கேட்கவும், அரசன் மகிழ்ந்து ஐயப்படுகிருய்? பெண்மையாகப் பூமியிற் பிறந்தபோதே ஒரு புருஷன் முன்னமே பிறந்திருப்பான். மேலும் பெண்களைப் பெற்றவர்கள் ஒருவருக்கு அப்பெண்ணை விவாகம் செய்வித்துக் கொடுப்பார்களே யன்றி, மனையில் வைத்திருக்கப் போகிறதில்லை கண்ணுவரோ மகா தவசிரேஷ்டர் மேலும் பிரமசாரி அவரிடத்தில் வருகிறவர்களும் ஸ்திரீ விரோதிகள். ஆதலால், உன்னை எந்த அரசர்களுக்காவது மணஞ் செய்விக்கவே போகின்ருர். (கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல) அரசர்களில் ஒருவனுகிய நானே வந்துவிட்டேன் நீ கிருபை கூர்ந்து என்னை யாதரித்து விரக நோயைத் தீர்த்தால், கண்ணுவர் களிப்படைவாரே யன்றி விரோதிக்கார். ஆதலால் இந்த வேளை என்னை வருத்தும்படி வந்த ஐங்கணை வேளை முதுகிட்டோடும்படிச் செய்

என்று வேண்டச் சகுந்தலை அரசன் கூறிய
வற்றை நிதானித்து நோக்கி ஒப்புக்கொண்டு
ஓர் உத்தரவு சொல்லுகிறாள்.

உலகிலுள்ள பெண்கள் மணஞ் செய்யா
மல் ஒரு புருஷனைக் கூடினால், அப்பெண்ணை
உலகத்தார் இகழ்வாரே யன்றிப் புகழார்கள்.
ஆதலால், என் தந்தையாகிய கண்ணுவர்
வந்தவுடன் தமது கருத்தின்படி விவாகத்தை
நிறைவேற்றி, அப்பால் என்னுடைய கை
யைப்பற்றுவது தங்களை யொத்த காவலர்க்
குத் தகுதி என்றவள் புகல, அரசன் சிரித்து,
ஓ பெண்கள் பெருமாளே! நீ கூறிய வசனம்
எவ்வா றிருக்கின்றதெனில்? விஷம் தலைக்
கேறி மயங்கிப் பூமியில் விழுந்தவனுக்கு,
அவன் சிநேகன் மந்திரங் கற்றுக்கொள்ள
மலைவாசிக ளிடத்துச் சென்று சூரியகிரக
ணத்தை நாடியிருக்கிறதுபோ லிருக்கின்றது.
காமவெறிகொண்டு அவகோலமா யிருக்கிற
என்னைப்பார்த்தும் நீ மணஞ்செய்து கூடேன்
ருல், அதுகாறும் நான் எவ்வாறு சகிப்
பேன்? என் விரோதியாகிய மதன் எவ்வாறு
நீங்குவான்? ஆதலால் உன் கருத்தின் வண்ண
மும், உன் தந்தையாகிய கண்ணுவமுனிவர்
கருத்துக் கிசையவும் நானொரு உபாயஞ்
சொல்லுகிறேன் அஃதென்னெனில், உலகத்
தில் பெண்களை விவாகஞ்செய்து கூடுவது
தகுதிதான் அந்த விவாகம் எட்டுவகைப்
படும். அவையாவன: பிரமம்-பிரசாபத்தியம்-
ஆரிடம் - தெய்வம் - காந்தருவம் - அசுரம்-
இராக்கதம்-பைசாசமாம். இவற்றுட் பிரமாச
ரிக்குக் கன்னிகையைத் தீமுன்னர்க் கொடுப்
பது, பிரமமணம் தலைமகனினத்தார் வேண்ட
தலைமகளினத்தார் ருட்பட்டு அவளை ஓமத்தீ
முன்னர்க் கொடுப்பது, பிரசாபத்திய மணம்.
ஒன்றிரண்டு பசுவுமெருதும் வாங்கிக்கொண்டு
நங்கையைத் தீ முன்னர்க் கொடுப்பது, ஆரிட
மணம். வேள்வியால் வந்த பெண்ணை அக்
கினி முன்னர்க்கொடுப்பது, தெய்வ மணம்.
கொடுப்பாருங் கேட்பாருமின்றி இருவருந்
தன்னிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது,
காந்தருவமணம். பெண்ணுக்குப் பொன்பூட்
டிச் சுற்றத்தார்க்குப் பொன் வேண்டுவன
கொடுத்துக் கொள்வது அசுரமணம். பெண்
ணும் பெண்ணினத்தாரு முடன்படாமல்
வலிதிற் கொள்வது, இராக்கத மணம். துயின்
ருளைச்சென்றுகூடுவது, பைசாசமணம். இவற்
றுள் கொடுப்பாருங் கேட்பாருமின்றி இரு
வருந் தனித்தவிடத் தெதிர்ப்பட்டுத் தாமே
கலத்தலாகிய இந்தக்காந்தருவ மணம்புரிந்து
இருவருங் கூடுவோம். என்று அரசன் கழற
கூந்தலை மெய்தான்: இப்போது நீர்
பெற்றிருக்கிற காமநோய்க்குத் தருந்தபடி
இனிய வசனஞ் சொல்லிக்கூடி, காமநோய்
தீர்ந்தபின்பு உன்னை யார் கண்டவனென்று
மாறுபடப் பேசி வேறொரு ஸ்திரீயை
மணம் புரிந்தால், நான் அவமாவது மன்றி
என் வயிற்றிற்பிறந்த புத்திரனும் சுக
மடையானே இதற்கென்ன உத்திரவு? என்று
கேட்க, அரசன் நகைத்து, ஓ பெண்கள்
நாயகமே! உலகத்தில் அரசரா யிருக்கிறவர்
களுக்கு வெற்றியும் பாக்கியமும் கொடுக்
கின்றது வாய்மை. அவ்வாய்மையை மறப்
பார்களாகில் மும்மூர்த்திகளை நோக்கி அநேக
மான தவஞ்செய்து சிலாக்கியமான பாக்
கியத்தையும் அநேக திவ்யாஸ்திரங்களை
யும் பெற்றிருந்தாலும் அது அவைகளை
யெல்லாம் நாசப்படுத்தி, குடிக்கக் கஞ்சி
யும் கட்ட வஸ்திரமுமின்றி வருந்தச் செய்
விக்கும் நானோ வாய்மையிற் பிறழாம லிருக்
கும் அரசருக்கெல்லாம் அரசன் நான் சத்திய
மறக்கேன். ஆதலால், உனக்கொரு உறுதியான
வாக்கியம் கூறுகிறேன். அஃதென்னெனில்,
நீயே என் மனைவி உன் வயிற்றிலுதிக்கும் புத்
திரனே என் பட்டத்துக் குரியவன் இதற்குச்
சாக்ஷி ஆகாயவாணியும் பூமிதேவியுமே யாம்
இனி ஜாலஞ் செய்யாமல் என்னைக் கூடுவது
நின் கற்புக்கழகென்று வற்புறுத்திக்கூறினன்.
அப்பால் சகுந்தலை சம்மதித்து மிக மகிழ்ச்சி
அடைந்து, அரசன் மகிழ்வெய்தக் கடைக்
கணித்து, காமக் குறியைத் தெரிவிக்கின்றகுறு
நகை புரிய, அரசன் அது கண்டு, ஐந்துவித
ஆலிங்கனத்தோடு பதினொருவித அதரபான
முதலியவற்றை முறைமைப்படி இயற்றி, சுந்
தர மிகுந்திடு சகுந்தலை மனங்களி துளங்க
ரதிகேளி விளையாடி மலர்சூடி, ஓ பெண்கள்
சிரோமணியே! நானோ வேட்டையாட வந்
தேன். வந்தவிடத்தில் உன்னைக் கண்டேன்.
கருத்து மகிழ்வெய்தப் புணர்ந்தேன். இனி
என் சேனைகளோடு கலந்து நகரஞ் சென்று
மந்திரிகளால் உன்னை அழைத்துக்கொள்ளு
கிறேன், நீ வருத்தப்படாமல் மகிழ்வுடன்
விடை கொடு என்று வேண்டச் சகுந்தலை
கிஞ்சித்து மருத்தமடைந்து, ஓ அரசனே!
புருஷர் சொல்லுக்கு மனைவியர் மறுத்துக்
கூறுவது தகுதியல்ல. ஆதலால், உமது

இஷ்டப்படி நடவும். ஆனல், என்னைமாத் திரம் மறக்காதிருக்கப் பிரார்த்திக்கிறே னென்று மிகுந்த ஆருமையோடு விடை கொடுத்தனள். அரசன் அவ்விடையைப் பெற்று மீண்டும் மந்திரிகளோடு கலந்து, காட்டிற் கலைந்திருந்த சேனைகளெல்லாம் ஒன்றுபடக் கூடித் தன்னைச் சூழ்ந்துவர முன்போல் நகரம் வந்து சேர்ந்து அரசு செய்திருந்தான்.

இங்கே சகுந்தலையானவள் கணவன் பிரிந்த வருத்தத்தோடு திவ்யக்கியானியாகிய கண்ணுவர்க்கு என்ன உத்திரவு சொல்லப் போகிறே மென்னுங் கவலைக் காட்பட்ட வளாகி, ஐயோ கற்றறிவில்லாத ஸ்திரீ ஜனங் களுக்கே கலவிக்குறிகள் தெரியுமென்றால், சகல கலைவல்லவராகி உண்மைக் கியானத் தைப் பெற்றவர்க்குத் தெரியாமற் போகுமா? நாம் என்ன காரியம் செய்துவிட்டோம்? காமிகள் யாவற்றுக்கு மஞ்சார்க ளென்கிறது நமக்குத் திருஷ்டாந்த மாயிற்றே; இனி நாம் என்ன செய்யப்போகிறோம், என்றேங்கிப் பயந்திருக்கிற தருணத்தில் திரிகாலக்கியானி யாகிய கண்ணுவமுனிவர் வந்துவிட்டார். அவர் வரவே கலவியால் வெளுத்த இதழை யும், வியர்வையால் நிறைந்த முகத்தையும், வேகத்தினுல் சிவந்த விழியையும், பல்லாதி களாற் பட்ட குறியையும், ஆலிங்கனாதிக ளாற் கலைந்த அளகத்தையும், புத்திரனிருக் கும் ஆலிலைபோன்ற வயிற்றையு முடைத் தாகிய சகுந்தலை திடுக்கென்றெழுந்து, நமது முக்குறியினுலும், அனுபவத்திறத்தாலும், நாம் முடித்துக்கொண்ட காரியத்தை அறிந்துகொண் டிருப்பாரென நாணமேற் கொண்டு மெல்லெனை நடந்து, கல்விப் பிரவாகமாகிய கண்ணுவருடைய திவ்ய சரணம்புயத்தில் சாஷ்டாங்கமாக நமஸ் காரஞ்செய்து, சுவாமி! பேதைமை யென்பது மாதர்க் கணிகலம் என்பதற் கிணங்க, சுவாமி களுக் கறிக்கையிடாமல் ஓர் நொடிப்போதில் ஊழின் வசத்தினளாகி மயங்கி, எளியாள் செய்த குற்றத்தைப் பொறுத்து இரக்ஷிக்க வேண்டுமென் றிரந்தாள். அதுகேட்டுத் தாம் வெளியிற் சென்றது முதல் அதுகாறு நடந்த காரியங்களைத் தமது ஞானதிருஷ்டியாற் கண் டுணர்ந்த கண்ணுவர் அதற்கு மகிழ்ச்சி யடை ந்து, சகுந்தலையை முற்றும் நோக்கிச் சொல்லுகிறார். ஓ அம்மணி! உன் உதரத்தி லிருக்கிற புத்திரன் இந்த நெடிய கடல் சூழ்ந்த உலகத்தை யெல்லாம் ஆளும்படி யான வல்லமையை யுடையவன். உன்னைக் கூடின அரசனே துஷ்யந்த மஹாராஜன் நீ நல்ல காரியஞ் செய்தாய். அதற்கு உன் மேல் மகிழ்வேயன்றிக் கோபமில்லை. நீ அஞ் சாமல் நடந்த விருத்தாந்தத்தைக் கூறுக. என்று சொல்லவும், சகுந்தலை அரசன் வந்த தையும், தான் அவ்வரசனுக்கு மரியாதை செய்ததையும், அரசன் தன்னை யாரென்று கேட்டதற்குச் சொன்ன வரலாற்றையும், அதன்மேல் அரசன் விரகதாபப்பட்டு ஆகாய வாணியைப் பூமிதேவியைச் சாக்ஷிவைத்துக் காந்தருவ மணம் புரிந்து கூடிப் பின்பு மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறே னென்று சொல்லியவற்றையும் விளங்க உரைத்தாள். கண்ணுவர் கேட்டு மகிழ்ச்சி யடைந்து, ஓ அம்மணி! உலகத்தில் பெண்கள் பெறும்பேறு என்னவென்றால்: கல்வியையும், வல்லமையும், அழகினையும், வாலிபத்தையும், செல்வத்தையும் பெற்ற புருஷனை யுடைத் தாய், புத்திர பாக்கியத்தையும் பெறுவது மிகுந்த அருமையான பேறு இந்தப் பேறு எல்லாப் பெண்களுக்கும் கிடைக்காது. நீ தவ சிரேஷ்ட சிகாமணியாகிய விஸ்வாமித்திர முனிவருக்கும் மேனகைக்கும் பிறந்தவ ளாத லால், அவர்கள் வழியால் நீ சகல பாக்கியமும் பெற்றாய் இனி உனக்கு ஒரு குறைவுமில்லை. சுகமாயிரு அம்மாவென்று வாழ்த்தினார். சகுந்தலை பரமானந்தத்தை யடைந்தவளாய் கண்ணுவரை வணங்கி அந்தப்புரத்திற் சென்றிருந்தாள். இவ்வாறு சென்றபின்பு முதன்மாதத்தில் வெறுக்கத்தக்க பதார்த்தங் களில் விருப்பமும், குறைவுற்ற பசியும், உண வில் வெறுப்பும், புளி யேப்பமு முடைத்தாகி இரண்டா மாதத்தில் அடிவயிறு கருக்குழி யைச் சார்ந்து ஒட்டி உள்ளடங்கி, மூன்று மாதத்தில் மார்பின் நரம்புகளெடுத்து, நான்கா மாதத்தில் முகம் வெளுத்து முலைகறுத்து மசக்கை என்னும் நோயுற்று, ஐந்தாமாதத் தில் சுளுக்கு நோயும் வயிற்றுப் புரட்டலு முண்டாகி, ஆறுமாதத்தில் கண்களின் அடி நிமைக் கடுத்த நரம்பு பிரகாசமாகவும் கண்க ளினது நிறம் பேதமாகவும் காணப்பட்டு, ஏழாமாதத்தில் உட்காரும்போதும் எழுந்தி ருக்கும்போதும் புத்திரக் கருவாதலால் வலது கையை அடிக்கடி ஊன்றி எட்டாமாதத்தில் முலையிற் கிஞ்சித்துப் பாலுண்டாகி, ஒன்பதா

மாதத்தில் அதிக வருத்தமும் இளைப்புடனே வலது பக்கத்தில் பிண்ட மிருக்கிறதென்று அறியுந் தன்மையையு முடைத்தாகி, பத்தா மாதத்தில் கருப்பவேதனைப்பட்டு யாவரும் விரும்ப முற்றக்கச் சிறப்பினை வகிக்கப் போகிற புத்திரசிகாமணியைப் பெற்றாள்.

அப்புத்திரனுக்குக் கண்ணுவர் பல ஆசிகள் கூறி, செய்யும் சடங்குகளையெல்லாங் கிரமப்படி நிறைவேற்றிப் பரதனென்று பெயரிட்டு, ஐந்து வயதுக்குமேல் வேதாகமங்கள் அறுபத்துநாலு கலைக்கியர்னங்கள் முதலியவற்றைப் போதித்து ஏழாமாண்டு முதல் வில்வித்தை - அம்புவித்தை-யானையேற்றம் - குதிரையேற்ற முதலியவைகளையுங் கற்பித்து மஹா விருப்புடன் வளர்த்து வந்தார். அப்புத்திரனுக்குப் பன்னிரண்டு வயதான காலத்தில் கண்ணுவர் சகுந்தலையை அழைப்பித்து, ஓ அம்மணி! இனி நீ உன் கணவனாகிய துஷ்டியந்த மஹாராஜனிடத்துச் சென்று வாழ்ந்திருக்க வேண்டிய முறைமை. உன்னை மந்திரிகளால் அழைப்பிக்கிறே னென்று சொல்லிப் போன அரசன் இதுவரைக்கும் உன்னை அழைப்பிக்கவில்லை. இராச்சிய சம்பத்தினாலே மறந்து விட்டாற்போற் காணுகின்றது. இதோ நமது சீஷர்களிற் சிலரை அனுப்பிவிக்கிறேன். அவர்களைத் துணையாகக் கொண்டு நீஅத்தினபுரத்திற்குச் செல்லென்று கட்டளையிட்டுச் சீஷர்களை அழைத்து, ஓ சீஷர்களே! இந்தச் சகுந்தலையை அத்தின புரத்தில் விட்டு வாருங்களென்று சொன்னார். சகுந்தலை கனவருத்த மடைந்து, கண்ணுவருக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி! இதுவரைக்கும் யாதொரு குறைவுவராமல் என்னைப் பாதுகாத்தீர்கள். எனக்கு-மாதா-பிதா - குரு-தெய்வம் தாங்களே யன்றி வேறில்லை. எப்போதும் ஸ்திரீ சாதிகளுக்குக் கணவன்வீடு சதமேயன்றித் தாய் வீடு சதமல்ல. நானும் ஸ்திரீயாதலால் மரபு வழக்கப்படி தங்கள் கட்டளையை மீறுமற் செல்லுகிறேன் இதுவரைக்கும் எப்படி என்மேற் கிருபைவைத் திருந்தீர்களோ? அப்படியே இனிமேலும் எளியேன்மீது கிருபை கூர வேண்டுமென்று இனிய வசனங்களுடன் வணங்கி விடைபெற்று, சீஷரைத் துணையாகக்கொண்டு, புத்திரனோடு தானும் ஆசிரமத்தைக்கடந்து, அத்தின புரத்தருகில் வந்து சீஷரை அனுப்பிவிட்டுத் தான் தன் புத்திரனோடு நகரத்துச் சென்றாள். அப்போது நகரத்திலிருப்பவர்கள் இந்தச் சகுந்தலையையும் இராஜசிங்கமாகிய பரதனையும் பார்த்து, மிகுந்த ஆச்சரியமடைந்து, ஆ! ஆ! இந்த அம்மணிப்பார்த்தால் ஸ்ரீ மகாலட்சுமியைப்போ லிருக்கின்றாள். அருகிற் செல்லுகிற வாலிபனைப் பார்த்தால் மன்மதன்போ லிருக்கின்றான். இவ்வளவு சவுந்தரியமுள்ள இவர்கள் பாதசாரியாய் இந்நகரத்துட் பிரவேசித்த காரணமென்னவென்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ள, சகுந்தலை இராஜன் கொலுமுக வாயலில் வந்து, அங்கிருக்கும் காவலாளிகளைக் கொண்டு தன் வரவை அரசனுக்குத் தெரிவித்து, அரசன் உத்தரவின்மேல் கொலுவிற் சென்று, கணவனுதலால் புத்திரனோடு தானும் வணங்கி நின்றாள். அங்கு அரசனோடு வீற்றிருக்கும்-கூ௲-மந்திரிகளும், கூ,கூகூகூ - பட்ட வர்த்தனரும், ௬,௬கூகூ - மகுடவர்த்தனரும், இமபண்டிதர்-இராஜ புரோகிதர்-ஆசிரியர்கள்-௫கூ-தேசாதிபர்கள் முதலானவர்களும், சகுந்தலையையும் பரதனாகிய வாலிபனையும் நோக்கி, அவர்கள் அழகுக்காக மிகுந்த மகிழ்ச்சியையும், இந்த இராஜசபைக்கு வரும்படி இவ்விருவருக்கும் யார் என்ன தீங்கு செய்தார்களோ வென்கிற ஏக்கத்தையுங் கொண்டிருந்தார்கள். அரசன் நமஸ்காரஞ்செய்த சகுந்தலையையும் புத்திரனையும் உய்த்து நோக்கி, ஆ! ஆ! நாம் வேட்டையாட வனத்தில் சென்றபோது, கண்ணுவர் ஆசிரமத்திற் இவளைக்கண்டு பரவசஞ் செய்து காந்தருவமணம் புரிந்து கலந்து, மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறோமென்று சொல்லி வந்துவிட்டு, இதுவரைக்கும் நாம் அழைக்காதிருந்ததினால் இவளே வந்துவிட்டாள். இனி நாம் இவள் கருத்துக்கு விரோதம் வராமல் அழைத்துக்கொண்டோமாகில், இதோ யிருக்கிற நமது புத்திரனுக்கு நமக்குப்பின் நமது மந்திரி முதலானவர்கள் பட்டங் கட்டுவிக்க மாட்டார்கள். அல்லது நீக்கி விடுவோமாகில், இவள் மனம் நோகும் அதனால் நமது அரசுக்குக் கெடுதி நேரிடும். இதற்கென்ன செய்கிறதென்று சற்று நேரம் ஆலோசித்து, இவளை நிராகரிப்போம் அப்போது நாம் சாக்ஷிவைத்த ஆகாயவாணிவந்து, இந்தச் சபையிலிருக்கிறவர்கள் யாவரு மொத்துக்கொள்ள அக்காலத்தில் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுவள். அப்போது அச்சாக்ஷி முன்னிலையில் அழைத்

துக்கொண்டு, நம்மால் அவள் அடைந்த வருத்தத்தை மாற்றுவோமென்று மனதுக்குள் தீர்மானித்துச் சகுந்தலையைப் பார்த்துச் சொல்லுகிறான்.

ஓ பெண்ணே! நீ யார்? உன் பெயரென்ன? உன்னருகிலிருக்கிற சிறுவன் யார்? உன்னிருப்பிடம் எது? இந்த ராஜசபைக்கு வரவேண்டிய காரண மென்னவென்று வினவ, சகுந்தலையானவள் மிகவுந் திடுக்கிட்டு, ஆ! இதென்ன ஆச்சரியம்? அரசன் நம்மை யாரென்று வினவுகிறார். இவர் நம்மைப் பகற்காலத்திற் கூடினவராயிற்றே குறிப்பு தெரியாதா? இவரிப்படி கேட்டது யாது எண்ணங்கொண்டோ தெரியவில்லையே ஒருவேளைச் செல்வச் செருக்கினால் நம்மை அவமானப் படுத்தக் கருதி இருக்கிறாரோ? அல்லது மறந்து விட்டாரோ? என்னமோ எல்லாம் இன்னும் சற்று நேரத்துக்குள் தெரியவருகிறது நாம் உண்மையைக் கூறினால் தெய்வம்விட்ட கதியாகுதென்று தனக்குத்தானே யோசித்து, அரசனை வணங்கி, ஓ மஹாராஜனே! நான் உமது மனைவி என் பெயர் சகுந்தலை இதோ யிருக்கிற சிறுவன் உமது புத்திரன். என்னிருப்பிடம் கண்ணுவர் ஆசிரமம். நான் இவ்விடத்துக்கு வந்த காரணம் முன்னம் நீர் என்னைக்கூடின காலத்து மந்திரிகளால் அழைத்துக் கொள்ளுகிறேனென்று சொல்லிவந்து இதுவரைக்கும் என்னை அழைக்காமல் இருந்துவிட்டதினால், நானே உமது இடத்துக்கு வந்துவிட்டேனென்று மறுமொழி வழங்கினாள். அரசன் இம்மொழியைக் கேட்டு, புத்திரனையும் மனைவியையும் பார்த்த மகிழ்வைப் பரியாச மகிழ்வாற் செய்யுஞ் சிரிப்பாக வெளியிற் காட்டக் கருதிக் கலகலவென்று நகைத்து, அன்புடன் நோக்கும் நோக்கைக் கடும் பார்வையாகத் தாக்கி ஒரு வசனஞ் சொல்லுகிறான். பளா! பளா! மந்திரிகளே! இதென்ன ஆச்சரியம்? இதோ யிருக்கிற பெண் என் மனைவியாம் அவள் அருகிலிருக்கிற சிறுவன் என் முடியைத் தாங்கும் புத்திரனும் இவள் முன்னும் பின்னுங் கட்டிப்பேசுவது மெத்தமேலா யிருக்கின்றது பொய் சபாசு! நன்றாயிருக்கின்றது என்று ஏளிதஞ்செய்து, சகுந்தலையைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ பெண்ணே! நானோ அரசன் நான் கண்ணுவர் ஆசிரமத்துக்கு என்ன காரணத்தால் வரப்போகிறேன்? அப்படி வந்தாலும் தனித்து வருவேனா இதென்ன விந்தை? நானுன்னைக் கூடினதெப்படி? அந்த வரலாற்றை யாவர்க்குந் தெரிய உரையென்று கூற சகுந்தலை கனவருத்தமடைந்து சொல்லுகிறாள்.

ஓ அரசனே! நீர் வேட்டைக்கு வந்தபோது வெளியே யாவரையும் நீக்கி ஒருவராய்த் தனித்துக் கண்ணுவமுனிவர் ஆசிரமத்துக்குவர, நான் கண்டு எழுந்து மரியாதை செய்து பொற்பீடமளித் திருக்கச்சொல்ல இருந்து, என் வரலாற்றைக்கேட்டு மையலாகி, பூமிதேவி ஆகாயவாணி இவர்களைச் சாக்ஷி வைத்து, நாம் நடத்திக் கொள்ளப்போகிற காந்தருவ விவாகத்தினாற் பிறக்கும் புத்திரனுக்கு முடிசூட்டுகிறேனென்று உறுதி மொழி பேசி, அக்காந்தருவ விவாகஞ்செய்து என்னைக்கூடி, உடனே மந்திரிகளால் உன்னை வரவழைத்துக் கொள்ளுகிறேனென்று வாக்குதத்தஞ் செய்து வந்து, கூறிய அவ் வாக்குதத்தத்தை இப்போது மறந்துவிட்டீர். பின்பு நான் கர்ப்பவதியாகி ஒரு புத்திரனைப்பெற்றேன் கண்ணுவர் அப் புத்திரனுக்குப் பரதனென்று பெயரிட்டு, புதரோச்சவ முதலிய சட்கருமமு நடாத்தி, நாலுவேதம்-ஆறுசாஸ்திரம்- அறுபத்துநாலு கலைக்கியான முதலாகிய சாஸ்திரங்களும், அரசர்க்குரிய வில்வித்தை முதலியதுகளும் அப்பியாசஞ் செய்வித்து, என்னையும் இப்புத்திரனையும் உமது நகரத்தில் விட்டுவரச்சொல்லித் தமது சீஷருக்குக் கட்டளையிட, அச்சீஷர் அவ்வாறு உமது நகரத்திற் கொண்டுவந்து விட்டுப் போயினர். நான் உமது சபைக்கு வந்தேன் என்றாள். அரசன் இவ்வசனங்களைக்கேட்டு, இதெல்லா முண்மையென்று தோற்றப்பட்டும் தன் கருத்து நிறைவேறக் கருதி முகம் வேறுபட்டு, மஹா உக்கிரத்தோடு கடுகடுத்த முகம்போல் தன் முகத்தைக்காட்டி, மின்னுமல் இடி இடித்தாலெப்படியோ அப்படிபோல் அதட்டிச்சொல்லுகிறான்: ஆ! ஆ! பெண்ணே! நானென்ன அரசனல்லவா? நான் வேட்டையாடப் புறப்பட்டால் ஒருவனாகப் புறப்படுவேனா? அல்லது வேட்டையாடுகிற தருணத்தில் ஏதாவது ஒரு மிருகமீறி ஓடினாலும், அப்போது சேனைகளை விட்டுப்பிரியலாம். அப்படி பிரிந்தகாலத்தும் உயிர்க்குயிராயிருக்கிற மந்திரிகள் பிரிவார்களா? நான் எவ்விடத்துச்

சென்றாலும் அவ்விடத்துக்கு யாதொரு தடையுமின்றி உடனிருப்பார்களே நான் தனித்து வருகிறதென்ன? அப்படிதான் தனித்து வந்தாலும், முனிவர் ஆசிரமத்தில் வர வேண்டிய காரணமென்ன? வழிதப்பி முனிவர் ஆசிரமத்துக்கு வந்தாலும், அந்த இடத்தில் ஒரு ஸ்திரீயிருந்தால் மோகிக்கக் கூடுமா? இதையெல்லாம் யோசித்தால் சுத்தப் பொய்மையாயிருக்கின்றதேயன்றி, உண்மையென்று உன்னருகிலிருக்கிற சிறுவனும் நம்ப மாட்டான். இதுவுமன்றி, நீ சொல்லுகிறது என்னவென்றால், ஆகாயவாணி பூமிதேவி யறிய என்னைக் காந்தருவமணம் புரிந்தாயென்கிறாய் அது சபைக்குதவுமா? (முழுப்பூசினிக்காயைச் சோற்றோடு மறைத்தவள்) என்று உலகத்தர் சொல்லக் கேட்டிருந்தேனே யன்றிக் கண்டறியேன். இன்றைய தினம் உன்னை யோசித்தால் உலகாதிபனான என் பேரிலேயே வழக்காடத் துணிந்துவந்த நீ (யானையைச் சுளகால் மறைத்த கதைபோல்) இன்னும் சற்று நேரம் இச்சபையில் வைத்திருந்தால், எல்லாம் என்னுடையதென்று கைக்கொள்வாய்போலிருக்கின்றதே உன்னைப்போல ஸ்திரீகளைக் கண்டதில்லை. இனி அரைநொடிப் போதாகிலும் இவன் நிற்கவேண்டுவதில்லை வந்த வழியே நோக்கிச் செல்லென்று இவ்வாறு கடுகடுத்துக்கூற, சகுந்தலை இவ்வார்த்தைகளைக்கேட்டு கனவருத்த முற்று, ஆ! ஆ! தெய்வமே! ஆதியில் இந்த அரசனைக் கண்டபோது பெண்கள் பெறும்பேறு இன்று பெற்றேமென்று விருப்புற்று, அரசனைக்கூடி மிகுந்த களிப்படைந் திருந்தேனே! இன்றைய தினம் இவ்வரசன்சொல் அளவற்ற களிப்பை அதமாக்கிச் சகிக்கக்கூடாத துன்பத்தைக் கொடுத்ததே இதற்கென்னசெய்வேன் ஐயோ! இன்னும் சற்று நேரமிருந்து நடந்த விசேஷங்களை விவரித்துக் கூறுவோமென்றால் ஏவலாளிகளால் தள்ளிவிடுவார்போல் தோற்றுகின்றது இனி நாம் என்னசெய்யப் போகிறோமென்று தனக்குத்தானே மனதில் நினைத்து, அரசனைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

ஓ அரசனே! உலகத்தில் யாராவதொருவர் கொலை-களவு-காமம் - சூது - வாது முதலான அக்கிரமங்களில் ஒன்றைச்செய்தால், அவர்களை அரசன் தண்டிக்கிறது. அவ்வரசனே சூது வாது அக்கிரமத்துக்குப் பாத்தியப்பட்டால், அவனைத் தண்டிப்பவர் யார்? ஒருவருமில்லை. நீர் உலகாதிபன் உமது வாக்குக் கெதிர்வாக்குண்டா? இல்லை. ஆதலால், (வேலி பயிருக்காதாரம் அவ்வேலி தானே பயிரைமேய்ந்தால் விளையுமாறெப்படி) மலை போன்ற புயமுடைய மன்னனே! என்னைக் கண்டபோது சத்திய வாக்குடனும் நிலை பெற்ற அறிவுடனும் இன்சொல்லுரைத்து, என்னைக் கலந்து பிரிந்தபிற்பாடு கல்லைப் போல் மனமும் கரவடமுங் கற்று, இப்போது இப்படி பேசுவீரென்று அப்போது பேதைமையாகிய சிறியேன் அறியாமற்போனேன். மாரிபோற் பொழியுங் கரத்தையுடைய வள்ளலே! உடலும் உயிரும்போலவும், மலரும் மணமும்போலவும், இரத்தினமும் அதனது தேஜசும்போலவும், கணவனுடன் ஸ்திரீகள் இங்கிதமாகப் பொருந்தி வாழ்வதல்லாது, அன்னியரைப்போல் ஒருவர்க்கொருவர் பிரிவுற்றுத் துன்பத்தால் வருந்தித் துயரப் படாத நின்ற தோகைமார் என்போலுமுண்டோ? இறைவனே! தனக்கு வழிபடு கடவுள் - தனக்குண்டாகிய இன்பம் - தனக்குள்ள வலிமை-தனக்கிசைந்த அழகு-இன்னமுள்ள சுபங்களியாவும் தனது நாயகனென்றே வந்தித்துச் சிந்திக்கும் பதிவிரதைகளை மனநோவச் செய்வது விவேகமோ? நீதியோ? தருமமோ? அன்னீதியும் அசத்தியமும் உம்மிடத்திலிருக்குமாகில், நன்னீதியும் சத்தியமு மிருக்குமிட மெங்கே? ராஜனே! அரசர்க்குண்டாகிய பெருமை-கீர்த்தி-இன்பம்-பேறு-யாகம்-வெற்றி முதலிய சகல கருமங்களுங் கற்புடைய மனைவியைப் படைத்தவர்க் குண்டென்றும், அவர்கட்கே உரிமையென்றும் வேதத்திற் சொல்லி யிருப்பதை அறிந்திருந்தும், என்னையும் அருமை மகனையும் அவமதித்துத் தள்ளிவிடுவது ஞாயமோ? அண்ணலே! தனது தலைவராயினோர் வாழ்வைப் பெற்றாலும் தாழ்வைப் பெற்றாலும், இருந்தாலும் இறந்தாலும், கூடப்பொருந்தி அனுபவிப்பவளாகிய குலநாயகியின் மனந்தளரும்படிக்கு (மேலெழுந்து ரக்கையையாட்டி உள்ளிருக்கு மீனை வெளிப்படுத்தி வீழ்ந்து உமிஞ்சிக்கொண்டு தேகத்தில் ஜலம் ஒட்டாமல் உதறிவிட்டுப் போகின்ற மீன்கொத்திக் குருவியைப்போல்) பசையற்றுப் பற்றற்றுப் போகின்ற புருஷரையடுத்தால் அவர் அவளைக் காப்பாரோ? காவலனே! ஒரு புத்திரன் பிறக்கவேண்டுமென்று புத்திரகாமேஷ்டி யாகமும் - தருமமும்-விரத

மும் - நோன்பும் செய்து, சத்திரம் - சாவடி- மடம்-தடம்-சோலை - சாலை-தெய்வப் பிரார்த்தனை மந்திரம்-யந்திரம்-சக்கரம்-அவுஷதம் முதலிய முயற்சிகளை நடத்திப் பிள்ளையைப் பெற்றுக் கொள்வார்கள். திவ்வியமான குமாரனைக் கண்டும் நீராரோ நானுரோ வென்று வெறுத்த பேர்களை எக்கதையிலுங் கேட்டறியேன். எக்காசினியிலுங் கண்டறியேன். ஓ சந்திரவம்சோத்தாரகனே! இவ்விடத்தில் சந்ததியைக் குறித்துச் சலிக்க உம்மைக் கண்டேன். மேலும் நெருப்பிற் கொளுத்திய தீபமும்-காட்டிய லன்துவைக் காட்டும் கண்ணடி நீழலும்-வெவ்வேறு பெயரைப்பெற்றுலும், பொருளொன்றே யல்லது வேறில்லை. அது போல தந்தையின் ஸ்வரூபமே புத்திர ஸ்வருபமென்று புராதனமாகிய வேதஞ்சொல்லுவது பொய்யாகுமோ? ஐயா! தங்கள் கான் முளையாகிய இச்சிறுவனை ஆரோவென்று அவமதித்தால். அந்த அவமதிப்பு உம்மதல்லவோ? ஏனிந்த யோசிக்கவில்லை. இறைவனே! நூறுவாவிகள் வெட்டிய பலன் ஒரு தடாகம் வெட்டினுலுண்டாகும். நூறு தடாகம் வெட்டியபலன் ஒரு யாகஞ்செய்தால் கிடைக்கும். நூறுயாகஞ்செய்த பலன் ஒரு சற்புத்திரனைப்பெற்று லுண்டாகும். நூறு சற்புத்திரனைப் பெற்றபலன் சத்தியந்தவறுதிருக்கிற் கிடைக்குமென்று கருதி முறையிடுகின்ற துணர்ந்தும், சொற்சோர்வு படப்போமா தோன்றலே! இதன்றியும் உலகாளும் இராஜர்களுக்கு முக்கியமாயிருக்க வேண்டியது குற்றமற்ற இல்லாளும், சொல்லுதற் கருமையான மைந்தனும், சத்தியவாக்கும், நன்னீதியும், நடுவு நிலைமையுமாம். இவைகளை யோசிக்குமிடத்தில் என்னையும் இப்புத்திரனையு மகிட்சியுடன் சேர்த்துக் கொள்ளுவீராகில், மற்ற சத்தியமுதலிய யாவும் உமக்கெளிதி லுண்டாகும். ஓ இராஜசிங்கமே! உம்முடைய புத்திரன் பிறந்த அன்றைக்கு நினைத்தற்கரிய யாகங்களெல்லாஞ் செய்தபோது, ஆழிசூழ்ந்த அம்புவி யனைத்தும் ஒரு குடையில் ஆள்வான் சத்துருசெயமும் படைப்பானென்று ஒரு அசரீரி வாக்குப் பிறந்தது. அப்பேர்ப்பட்ட மகனை ஆதரித்தருள் செய்யக்கடவை யென்றுள்.

இவ்விதமாகச் சகுந்தலை சொன்ன மொழியனைத்துங் குறைவில்லாமற் கேட்ட துஷ்டியந்த மகாராசன், ஓ பிறைபோன்ற நெற்றியையுடைய மின்னே! முன்னே உன்னை இன்றுளென் றறியமாட்டேன். சும்மாய்ப் பன்னிப் பன்னிப் பேசுகிறுயே. நீ அன்னம்போல் நடந்து முன்னமிருந்த இடம்போய்ச் சேரென்று பொன்னைப்போற் சாயலையுடைய அணங்குக்குச் சொல்லிப்போட்டு, அரசன் வேறு வேலையி லிருப்பவன்போல் உள்ளமுடைந்து விசனப்பட்டுக் கொண்டிருந்தான். அப்போது சகுந்தலை கண்ணீர் விட்டுத் துன்பக்கடலிலாழ்ந்து, வேலாயுதமுடைய மன்னனை நோக்கி, ஓ அரசனே! நீர் பூர்வத்தில் கண்ணுவ ரிஷியின் ஆச்சிரமத்திற்கு வந்து, சந்தோஷ வார்த்தை சொல்லிப் புணர்ந்து, சத்தியம் ஒரு நாளுந் தப்பேனென் றுபசரித்து இருவர் மனமும் ஒன்றுபடக் கலந்து, என்னை இல்லாளாக அநுபவித்ததுண்டு. அப்போது பேசிய சொற்களெல்லாம் இப்போது மறந்து சொல்லுகிறீர். இது என்ன மர்மமோ? அல்லது தர்மமோ? என் கர்மமோ? ஈதெல்லாம் உமது பேரிற் குற்றமில்லை. என்னுடைய தீவினையாக்களும். மிகுந்த அறிவிற்சிறந்த தாயுந் தந்தையும் நான் பிறந்தபோதே துறந்துவிட்டார்கள். இப்போது என் பட்சத்திற் சிறந்தவனென்று எண்ணி இருந்த நாயகன் மறந்துவிட்டார். என்னைப்போற் பெண்ணுருக் கொண்டவர்களில் மகா தீய பாவிகள் வேறுண்டோ விஸ்வாமித்திரருக்கும் மேனகைக்கும் பெண்ணாய்ப் பிறந்தும், கண்ணுவமஹாரிஷியின் கண்ணருளால்வளர்ந்தும், சிங்காசனுதிபதியாகிய சந்திரகுலத்து இராஜாதிராஜனுக்கு உரியமனைவியாய்ப் பிறந்தும், சூரியனைப்போன்ற வீரியனை யீன்றும், பரவசமாகிய துன்ப நீங்கிற்றில்லை. ஆதலால் ஒருவரையும் வெறுக்கத் தக்கதன்று. இது யான் செய்தபாவம். ஆகிலும் இவ்வுலகில் நல்லோர்-புல்லோர்-புருஷாள்-ஸ்திரீகள்-பசு-பக்ஷி இவைமுதலியயெல்லாவற்றிற்கும் காரணமாகிய கடவுள் ஒருவனுண்டாகில், அவன்றான் உள்ளபடி யாவையும் வெளிப்படுத்திக் காக்கவேண்டுங் கடமை. இக்காரியத்தை முடிவுசெய்ய மற்றெவராலுமாவ தன்றென்று இளமையாகிய சகுந்தலை இளவரசாகிய தன் பிள்ளையைக் கரத்திற் பற்றித் திரும்புகிறவள், அரசனே! நீர் சுகமாக வாழும். நான் செலவுபெற்றுக் கொள்ளுகிறேன். அப்பால் என் தலைவிதி என்றுசொல்லி, மகா துன்பத்தோடு இராஜசபையை விட்டு இரண்டடி எடுத்துவைத்தாள். இதற்குள் அரசனுக்கு மனங்கலங்கி, இன்னும் ஆகாயவாணி பூமிதேவி ஏன் வரவில்லை நாம் பொய்

முதலாகிய குற்றங்களை நீக்கி அரசு செய்தா லும், தற்காலத்தில் இந்தச் சகுந்தலைக்காக இச்சபையறிய நடந்ததை இல்லை யென்று மறுத்தோமே, அதனாற்றான் வரவில்லையோ? அல்லது இன்னும் என்ன நேரிடப் போகின் றதோ? கண்ணுவர் சாபா நுக்கிரக சாமர்த்திய ராயிற்றே அவர் இவ்விருத்தாந்தத்தை அறிந் தாற் கனவருத்தம் அடைவரே, ஐயோ! இதற் கென்ன செய்வோமென்று பலவாறு மனதில் நினைத்து, தன்கண்ணையும் கருத்தையும் சகுந் தலைமீது வைத்து வாடியிருந்தான்.

அத்தருணத்தில் ஆகாயவாணி சபையார் அறிய அரசனை நோக்கிச் சொல்லுகிறாள். ஓ அரசனே இந்தச்சகுந்தலை மஹாபதிவிரதை. ஆதியில் இவளைக் கூடும்போது என்னைச் சாக்ஷிவைத்துக் கூடினை. இவள்சொல்லியவை யெல்லாம் உண்மைதான் இனித் தடையின்றி அவளை மனைவியாகக் கொண்டு, அச்சிறுவ னுக்குப் பட்டங் கட்டுக. அச்சிறியவனால் உன் வமிசத்துக் கெல்லாம் பெருமை கிடைக்கப் போகிறது. விரைவில் சகுந்தலையை ஆதரி யென்று சொல்ல, அரசன் பேரானந்தத்தை அடைந்து ஓடோடி வந்து, சகுந்தலையினது இரண்டு கரத்தையும் பற்றி அழைத்துவந்து, சிறுவனாகிய பரதனை வாரித்தழுவி முத்தமிட் டுச் சபையைப் பார்த்துச் சொல்லுகின்றான்: கேளுங்கள் சபையார்களே! சிலகாலத்துக்கு முன்னம் வேட்டையாடக் காட்டிற் சென்ற போது ஒரு மானைத் துரத்திச் சென்று, மந்தி ரியும் யானும் தனித்து ஒரு சோலையிற் போய் அதிலிருக்கும் தடாகத்திற் சலபானஞ்செய்து, களை நீங்க ஓர் மரத்தடியிலிருந்து, சற்றுநேரம் சென்றபின்பு தனியே அவ்வன விநோதத் தைப் பார்க்கச்சென்றேன். என் கண்ணுக்குக் கண்ணுவர் ஆசிரமந் தோன்றிற்று. அதிற் சென்றபோது இம்மடவரலைக்கண்டு, ஆகாய வாணி முதலானவர்களைச் சாக்ஷிவைத்துக் காந்தருவ விவாகஞ் செய்து கூடினது உண் மைதான். ஆனால் அழைப்பித்துக் கொள்ளு கிறேனென்று சொல்லிவிட்டு வந்தேனே யன்றி, கூறியபடி அழைப்பித்துக் கொள்ள வில்லை. அதன்மேல் இவள் என் சபைக்கு வந்து விட்டாள். வந்தவளை அங்கீகரிப்பே னாகில் எனக்குப் பிற்காலம் என் புத்திரனாகிய இச்சிறுவனுக்குக் கிஞ்சித்து மரியாதைத் தாழ்வு வருமென்று யோசித்து, சாக்ஷிகளாயி ருக்கிற ஆகாயவாணி முதலானவர்களி லொரு வர் வாக்குகொடுக்கிற வரைக்கும் உண்மையை வெளிப்படுத்தாதிருக்க வேண்டுமென்று தாறு மாறான உத்தரவு கொடுத்துவந்தேன். இப் பால் எனது கோரிக்கை முடியவும் அவள் படுந் துயர் தீரவும் சபையிலுள்ளோர் சந்தேக மாறவும் யாவருங் கேட்கும்படியாய் முன்பு எங்களுக்குள் அந்தரங்கமாய் நடந்த காரி யங்களனைத்தையும் அசரீரி கூறியபடியால், இனி இப்புத்திரனை எனக்குப் பின்பு என்னைப் போல் அங்கீகரியுங்கள். நடந்ததெல்லா முண்மைதான். இவளையும் இப்புத்திரனையும் நான் ஒப்புக்கொண்டே னென்று சொல்ல, மந்திரி முதலானவர் திடுக்கென்றெழுந்து, சகுந்தலைக்கு நமஸ்காரஞ் செய்து சொல்லு கிறார்கள்: ஓ லோகமாதாவே! எங்களை யாதரிப் பது தங்கள் கிருபை. எளியேங்கள்மீது விரோதம் வைக்காமல் ஆட்கொள்ள வேண்டு மென்று வேண்டி வணங்கிய மந்திரிமுதலான வர்களைச் சகுந்தலை யாசீர்வதித்துச் சொல்லு கிறாள்: ஓ மந்திரிகளே! ஜல ஓட்டத்திற் பட்ட தெப்பமும் அரசன் வழிப்பட்டவர்க ளும் ஒன்றாதலால், அரசன் ஒன்றை இகழ்ந் தால் அவனையடுத்த அமைச்சராதியோர் ஒக்க இகழவேண்டியது. ஒன்றைப் புகழ்ந்தால் ஒக் கப்புகழவேண்டும். அப்படி இருந்தும் என் னோடு தற்கித்த அரசனோடுங்கூடி யாதொரு மொழியும் வழங்காமல், உள்ளக் கருத்து வள்ளலுக்குத தெரியுமென்று பாரிய வாலோ சனை செய்து சும்மா யிருந்தபோதே, நீங்கள் மிகுந்த விவேகிகளென்பதற்கு ஐயமில்லை. இனியுங்களுக்கொரு குறைவில்லை என்று ஆத ரித்தாள். பின்பு அரசன் சகுந்தலையோடு அந்தப்புரத்திற் சென்று கூடிக்குலாவிச் சகல இன்பத்தையும் அநுபவித்து வருகிற நாளில், ஒருநாள் அரசன் உலக இன்பத் தின்மேல் வெறுப்புற்று மறுமைப்பயனை யடையவேண்டினவனாய் அம்மேலாகிய பய னுக்குத் தவம்புரிய வேண்டுமென்று கருதித் தன் புத்திரனாகிய பரதனை அழைத்து, வேத வேதியர்கள் ஆசிகள் கூற ஐம்பத்தாறு தேசத் தரசர்களும் மந்திரிகளுங் கொண்டாட மகுடா பிஷேகஞ் செய்வித்து, தான் தன் மனைவி யோடு காட்டிற் சென்று அருமையான தவத் தைச் செய்து, சில நாளையில் துஷ்யந்த மகா ராஜனும் சகுந்தலையும் பரமபதஞ் சேர்ந்தார்கள்.

இங்கே பரதமகாராஜன் மநு சாஸ் திர விதி பிசகாமல் செங்கோற் செலுத்தி,

அநேக யாகங்களைச் செய்து தேவர்களுக்கு மகிழ்வுண்டாக்கி, தரும தேவதை நாலுபாதத்தில் நடக்கத் தன்னுயிர்போற் பிறவுயிரையும் பாதுகாத்து கேகய அரசன் மகளான சுனந்தையை மணம் புரிந்து பரிந்து வாழ்ந்தான். அவன் முதல் சந்திரவமிசத்துக்கு பரதவமிசமென்றும், அம்மரபின் அரசர் கதைக்குப் பாரதமென்றும் பெயர். இந்தப் பரதனுக்குஞ் சுனந்தைக்கும் பவுமன் பிறந்தான். பரதன் அப் பவுமனுக்குத் தான் மகுடாபிஷேகஞ் செய்துவிட்டு, காட்டிற் சென்று தவத்தைச் செய்துவிட்டு, பரமபத மடைந்தான். அப் பவுமன் தசானவர்த்தன் மகளான் விசையையை மணம் புரிந்து கூடிச் சுகோத்திரனைப் பெற்றான். சுகோத்திரன் பட்டாபிஷேகனாகி, வீமராஜன் புதல்வியாகிய கவுசலா தேவியை மணந்து அஸ்தனைப் பெற்றான். அஸ்தன் சூரகேது மன்னன் மகளான சந்தனவதி சமேதனாகி, மநுசாஸ்திரவிதி பிசகாமல் அரசு செலுத்தி, இந்நகரத்தைப் புதுக்கி வீதிக ளேற்படுத்தினான். அதனால் அஸ்தினபுர மென்று இந்நகரத்துக்குப் பெயராயிற்று. அஸ்தனுக்கும் நிரும்பன் பிறந்தான் நிரும்பன் பட்டாபிஷேகனாகிச் சுதேவையை மணந்து அவளிடமாய் அரசர்மீளி என்றொரு புத்திரனைப் பெற்றான். அரசர்மீளி மகுடாபிஷேகனாகி உருக்காதேவி கவுசலா தேவி விசாலாதேவி என்கிற மூவரை மணந்து, நூற்றிருபத்துநாலு புத்திரர்களைப் பெற்றான். அப்புத்திரர்களில் சவ்வருணனென்பவன் மாத்திரம் அரசுக்கு யோக்கியனாயிருந்தான். அரசர்மீளி சவ்வருணனுக்குப் பட்டங்கட்டித் தான் பரமபத மடைந்தான்.

---

## சவ்வருணன் சரித்திரம்

சவ்வருணன் உலகாதிபனாகிய அரசு செலுத்தி வருகிற காலத்தில் ஒரு நாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிகள் வேடர் முதலானவர்கள் புடைசூழக் காட்டிற் சென்று, யானை-சிங்கம்-புலி-கரடி-சார்த்தூல முதலாகிய பெரிய மிருகங்களை நாசஞ் செய்தான். அதனால் அவனுக்குக் களைபுண்டாகி, ஒரு வனத்திற் சென்று அதிலிருக்குந் தடாகத்திற் சலபானஞ்செய்து களைமாறி, ஒரு மரத்தின் நிழலிற் சற்றுநேர மிருந்து, அவ்வன விநோதங்களைப் பார்க்க யத்தனித்து உலாவி வருகிறபோது, சூரியன் மகளான தபதி அங்கிருந்தாள். அவளைச் சவ்வருணன்கண்டு, அவளுடைய அழகுக்கு மகிழ்ந்து மையலாகி, அவளருகிற்சென்று, ஓ பெண்கள் நாயகமே! நீ மஹா ரூபவதியா யிருக்கிறாய்! எனக்கு உன்மேல் மனமிருக்கின்றது என்னை விவாகஞ் செய்துகொள்ளென்றுகூற, தபதி புன்னகை காட்டி மறைந்தாள். சவ்வருணன் திடுக்கிட்டு, ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! நமது கண்முன் தோன்றிய மாது எப்படி மறைந்தாள்? இவளைக் காண்ப தெவ்வண்ணமென்று சவ்வருணன் அவ்வன முழுதுந் தேடி, மிகுந்த காமவெறிகொண்டு திரிகிறதைத் தபதி கண்டு மன மிரங்கி அவன் கண்முன் தோன்றி, ஓ அரசனே! நீயேன் வீணாக வருத்தப்படுகிறாய்? நான் சூரியன் புதல்வி என் தந்தையோடு ஒரு வார்த்தை சொல்லிவிட்டு என்னை விவாகஞ் செய்துகொள்ளென்று உத்தரவு கொடுத்து மறைந்தாள். சவ்வருணன் இம் மொழியைக் கேட்டு, சூரியனை நாம் காண்பது எவ்வண்ணமென்று கனவருத்த மடைந்து, நகரத்துக்கு வந்து இரவும் பகலும் தபதிமேற் காதலாகி ஏக்கங்கொண்டு தூக்கமின்றி யிருந்தான். இப்படி யிருக்கிற நாளிற் சூரியகுல அரசருக்குக் குருவாகிய வசிஷ்டர் இந்தச் சவ்வருணனுக்கும் குருவாதலால் அவனைப் பார்க்கவந்தார். சவ்வருணன் எழுந்து எதிர்கொண்டு அழைத்துவந்து, பொற்பீட மளித்து இருக்கச் சொல்லி, சோடச வுபசாரமுஞ் செய்து எதிர் நின்றான். வசிஷ்டர் சவ்வருணனுக்குப் பல ஆசிகள் வழங்கி, அவனுடைய பிரகாசமான தேஜசோடுங் கூடிய தேகம் இளைத்திருப்பதைக் கண்ணுற்றுத் தமது ஞானதிருஷ்டியினாற் பார்த்தார். சூரியன் குமாரத்தியாகிய தபதியால் நேரிட்ட விரகநோயென்று அறிந்து, நாம்குருவா யிருந்தும் இந்தச் சவ்வருணன் வருத்தமடைகிறதா? இக்கணம் இந்நோயைத் தீர்க்கவேண்டுமென்று கருதித் திடுக்கென் றெழுந்தார். சவ்வருணன் அதனைக் கண்டு, திகிலிட்டுப் பயந்து, குறுக்கேவந்து நமஸ்காரஞ் செய்து சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! அடியேனுக்கு அநேக காலம் தரிசனம் கொடுக்காம லிருந்து இப்போது தரிசனம் கொடுத்தும், ஒன்றும் வசனியாமல் திடீரென் றெழுந்து செல்கிறதை எளியேன் மீது தாங்கள் சித்தம் வெறுப்புற் றிருக்கின்றதாகத் தோற்றுகின்றது. தங்கள் கருத்தை

வெளியிட்டால் தாங்கள் மகிழும்படி நடந்துக் கொள்ளுகிறேன் என்று வேண்ட, வசிஷ்டர் சவ்வருணனைப் பார்த்துச் சொல்லுகிருர்.

ஓ சவ்வருணு! இடம்-பொருள் - ஏவல் முதலியவற்றைப் பெற்ற நீ வாடியிருப்பதை என் கியானதிருஷ்டியால் நோக்கும்போது சூரியன் புதல்வியாகிய தபதியின்மேல் மோகங்கொண்டு, அதனல் நீ வாடியிருக்கிருயென்கிறதாக எனக்குத் தோற்றப்பட்டது. அதற்காகச் சூரியனிடத்துச்செல்லுகிறேன். நீ அஞ்சாமலிருவென்று வாழ்த்தி விடை பெற்றுக் கணப்பொழுதுக்கு லக்ஷத்திருபத்தையாயிரம் யோசனை தூரம் போகின்ற சப்தமா வென்னும் பரிபூட்டிய ரதத்திற்செல்கின்ற சூரியனை வந்து கண்டார். சூரியன் அதிக பயபக்தியுடன் அவரை வழிபட்டுச் சொல்லுகிருன்: ஓ ஐயனே! அதிவேகத்தோடுங் கூடிய என் இரதத்துக்கு முன் வந்து நின்ற காரணமென்ன? அதனை எளியேன்மீது கிருபைவைத்துத் திருவுளம் பற்றவேண்டுமென்று கூற, வசிஷ்டர் சூரியனைப்பார்த்து, ஓ ஆதித்தனே! உலகத்திலிருக்கும் அரசர்களுக்கெல்லாம் சிரேஷ்டனுகிச் சந்திரவமிச திலகனு யென்னைக் குருவாகக் கொண்டிருக்கிற சவ்வருணன், உன் புத்திரியாகிய தபதியின்மேல் காதலாகிக் காமநோயினல் ஆகமிக நொந்து, அரசின் மேலும் கியாபகமின்றி யிருக்கிருன். நான் அவனுக்கு குருவாக யிருந்தும், அவன் வருத்தப்படுவது தகுதியல்ல. ஆதலால், நீ களிப்புடன் உன் புத்திரியைச் சவ்வருணக்கு விவாகஞ் செய்விக்கவேண்டுமென்று கேட்டார். ஆதித்தன் மிகவு மகிழ்ந்து வசிஷ்டரை வணங்கிச் சொல்லுகிருன். ஓ ஸ்வாமி! தங்களிடவாக்கினல் மிகுந்த யோக்கியன் சவ்வருணன் என்றபோதே அடியேனுக்கு வேருரு திருஷ்டாந்தம் வேண்டுவதில்லை. ஆனல் நான் செய்யும் தொழில் தங்களுக்குத் தெரியுமே எனக்கு வரக்கூடாது தாங்களே என் புத்திரியை யழைத்துக் கொண்டுபோய் விவாகத்தை நிறைவேற்றி வையுமையாவென்றுசொல்லி, வசிஷ்டரை வணங்கி விடைபெற்றுத் தன்தொழிலை நிறைவேற்றிச் சென்ருன். வசிஷ்டர் தபதியிடத்து வந்து, அவள் செய்த பூசையைக் கைக்கொண்டு, நடந்தவிருத்தாந்தத்தைச் சொல்லி அழைத்துக்கொண்டு வந்து, ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் மற்ற பந்து ஜனங்களு மறிய விவாகத்தை நிறைவேற்றினர். சவ்வருணன் வசிஷ்டருக்குச் சாஷ்டாங்கமாக நமஷ்காரஞ் செய்து, ஓ ஆண்டவனே! நான் கொண்ட கருத்தை வெளிப்படுத்தாததற்குமுன் அதை அறிந்து, அவ்வெண்ணத்தை நிறைவேற்றிச் சந்திர வமிசத்தைப் பாதுகாத்த தயாநிதியேயென்று துதிசெய்ய, வசிஷ்டர்மகிழ்ந்து,பலஆசிகள் வழங்கி விடைபெற்றுத் தமது ஆசிரமத்துக்கு எழுந்தருளினர். இங்கே சவ்வருணன் தபதியுடனே கூடி ஒரு புத்திரனைப் பெற்று, அப்புத்திரன் குருவாற் கிடைத்தவனுகையால், அவனுக்குக் குருவென்று பெயரிட்டு வளர்த்து வந்தான். அவனுல் இந்தச் சந்திரவமிசத்துக்குக் குருகுலமென்று பெயராயிற்று. அப்புத்திரன் மகுடாபிஷேகனுகித் தன் தந்தையிலும் எண்மடங்கதிகமாகத் தருமத்தை நடாத்தி, அநேக யாகங்களைச்செய்து, தன்னுயிரைப்போல் மன்னுயிரையுங் காப்பாற்றி, மகததேசாதிபதி புத்திரியாகிய சுவாலையை மணம்புரிந்து கூடி வாழ்ந்திருந்தான். அவன் செய்த யாகத்தின் இடத்துக்குக் குருக்ஷேத்திரமென்று பெயராயிற்று. அவ்வளவு பிரபலத்துடனே அரசு செய்து ஒரு புத்திரனைப் பெற்று, அவனுக்குச் சூட்டிப் பரமபதம் சேர்ந்தார்.

குருகுலச்சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது,

## சம்பவச்சருக்கம்

கண்ணன் துதி

சித்தசித்தொ டீசனென்று செப்புகின்ற
மூவகைத், தத்துவத்தின் முடிவுகண்ட சதுர்
மறைப் புரோகிதன், கொத்தவிழ்த்த சோலை
மன்னுகுருகையாதி நெஞ்சிலே, வைத்தமுத்தி
நாதனன்றி வானநாடர் முதல்வர்யார்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அப்பரிச்சித்து மகாராஜன் கேகய தேசாதிபதி புத்திரியாகிய சுபத்திரையை மணந்து, பிரதீபனென்று ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குமுடிசூட்டிப் பரமபதமடைந்தான். பிரதீபன் வீமராஜன் புதல்வியாகிய சுனந்தையைக்கூடித், தேவாபி - சந்தனு - என்னும் இரண்டு புத்திரர்களைப் பெற்ருன். இவ்விரு

வர்களில் மூத்தோனாகிய தேவாபி காட்டிற் சென்று தவஞ்செய்திருந்தான். இளையோனாகிய சந்தனு மகுடாபிஷேகனாகித், தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் காப்பாற்றிச், சிலநாளில் மிகவும் சிறப்புற்று விளங்கிப், பாகீரதியை மனைவியாக வைத்துக்கொண்டு, அவளிடமாய் வீஷ்மாசாரியைப் பெற்று,அப்பால் மச்சகந்தியைக்கூடிச், சித்திராங்கன்- விசித்திர வீரியன் என்று இரண்டு புத்திரர்களைப்பெற்றான் இவர்களிற் சித்திராங்கன் யுத்தகளத்தில் மடிந்தான். விசித்திர வீரியன் மகுடாபிஷேகனாகிக் காசிராஜன் புதல்விபர்களில் இருவரை மணந்து சந்ததியில்லாமல் இறந்தான். அந்த இரண்டு ஸ்திரீகளில் ஒருத்தியை, எனக்குக் குருவாகிய வேதவியாசமூர்த்தி கூடித் திருதராட்டிரனையும் பாண்டுராஜனையுந் தந்து, மற்றொரு ஸ்திரீயினிடமாய் விதுரனைப் பாலித்தார். இம் மூவர்களில் மூத்தோனாகிய திருதராட்டிரன் காந்தாரியைக்கூடிச் சுயோதனன் முதலாகிய நூறு புத்திரரைப் பெற்றான். இளையோனாகிய பாண்டுராஜன் குந்தி - மாத்துருவை என்னு மிரண்டு ஸ்திரீகளை மணந்து, குந்தியினிடமாமாய்த் தருமராஜன் - வீமன் - அர்ச்சுனன் - என்னும் மூவரையும் மாத்துவையினிடமாய் நகுலன் - சகாதேவன் என்னும் இருவரையும் பெற்றான். இந்த ஐவர்க்கும் பூர்வபுண்ணிய வசத்தாற் பாஞ்சாலியாகிய திரௌபதை மனைவியானாள். இந்தப் பாஞ்சாலி தருமராஜனுக்குப் பிரதிவிந்தனையும், வீமனுக்குச்சுருதசேனனையும்,அருச்சுனனுக்குச் சுரதகீர்த்தியையும், நகுலனுக்குச் சதானீகனையும், சகாதேவனுக்குச் சுதசேதனனையும் பெற்றாள். மற்றுந் தருமராஜன் சுயம்வரமூலமாக மாளவதேசாதிபதி புத்திரியாகிய வேதிகையை மணம்புரிந்து, மிகுந்த சாந்தத்தையுடைய சாதேயனைப் பெற்றான். வீமன் சலதரை யென்னுங் கன்னிகையை மணந்து சுகுணனையும், இடும்பி என்னும் அரக்கியை மணந்து மிகுந்த அழகையுடைய கடோர்க்கஜனையும் பெற்றான். அர்ச்சுனன் சுபத்திரையை மணந்து அபிமன்னனையும், உரகபதி மகளாகிய நாககன்னிகையை மணந்து அரவானையும் பெற்றான். நகுலன் இலகீர்மதி யென்னும் கன்னிகையை மணந்து, மித்திரனைப் பெற்றான். சகாதேவன் விஜையையை மணந்து, வேத்திரனைப் பெற்றான். இந்த ஐவர்க்குப்பிறந்த பன்னிரண்டு புத்திரர்களில், அர்ச்சுனன் புத்திரனாகிய அபிமன்னன் விராடன் மகளாகிய உத்தரையைக் கூடி, உன் தந்தையாகிய பரிச்சித்துமஹாராஜனைப் பெற்றான். அப் பரிச்சித்து மாத்திரை யென்னுங் கன்னிகையைக் கூடி, ஜெனமேஜெய னென்னும் பெயரை வகித்த அரசனே உன்னைப் பெற்றான். நீ கற்புடைய இவ்வபுஷ்டையைக் கூடிச் சதாநிகனைப் பெற்றாய். சதாநிகன் வைதேகியை மணந்து அஸ்வமேதனைப் பெற்றான். இனி அஸ்வமேதனுக்கு யார் பிறப்பார்களோ தெரியாது. இதுதான் சந்திரவம்சபரம்பரை. சந்திரன் முதல் அஸ்வமேதனீறாக சஎ-தலைமுறையாயின. ஓ அரசனே! சந்திரகுல அரசர்களின் சரிதைகளைச் சொல்ல யாவரால் முடியும் ஒன்றாகிய பரப்பிரம ஸ்வரூபி ஸ்ரீமந் நாராயணராகிய வேதவியாசரது அநுக்கிரகத்தினாற் கிஞ்சித்துச் சொன்னேனென்று வேதவியாசரைத் தியானித்து அஞ்சலி செய்தார். இவை யனைத்தையுங் கேட்ட ஜெனமேஜெயன் பிரம்மானந்தத்தை யடைந்து, இரண்டு கைகளையும் சிரமேற்கொண்டு, வேதவியாசரைத் தானுந்தியானித்து, வைசம்பாயனரை வணங்கி, ஓ ஸ்வாமி! தாங்கள் கூறியவற்றை யெல்லாங் கேட்டு மகிழ்வடைந்தேன். அடியேன் கருத்தில் ஒருவிருப்ப மிருக்கின்றது. அதென்னவென்றால், சந்தனுமஹாராஜன் பாகீரதியைக்கூடி வீஷ்மாசாரியைப் பெற்றதும், வேதவியாசரால் திருதராட்டிரன் முதலானவர்கள் பிறந்ததும், அவர்களால் நூற்றுவராதியோர் வந்ததும், இவை யெல்லாம் விளங்க உரைக்கவேண்டு மென்று வேண்ட, வைசம்பாயனர் ஜெநமேஜெய மஹாராஜனை நோக்கி, விவேகத்திற் சிறந்த ஓ அரசனே! முன்னம் சந்தனுராஜன் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளென்றுசொல்லத் தொடங்கினார்.

---

## சந்தனுராஜன் சரித்திரம்

பிரத்தீபன் இளையகுமாரனாகிய சந்தனுவென்பவன், இளமையிலேயே நாலுவேதம்-ஆறு சாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியானம்-முதலாகிய வற்றைக் கற்றுணர்ந்து, வில்வித்தை யானையேற்ற முதலியவற்றை அப்பியாசஞ் செய்து, எல்லாக் காரியங்களிலுஞ் சுகுண சிகாமணியாகி விளங்கினான். இவனது நற்குண நற்செய்கையைக் கண்ட பிரத்தீபன்

மனமகிழ்ந்து, தன் பட்டத்தை அவனுக்குக் கொடுக்க நினைத்து, வேதவேதியர்களையும் ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் அழைப்பித்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் அழகிலுயர்ந்த அச் சந்தனுவுக்கு மகுடாபிஷேகஞ் செய்து, தான் ஆத்ம லாபத்தைக்கருதிக், காட்டிற் சென்று அருமையான தவத்தைச் செய்து பரமபத மடைந்தான். அவனவ்வாறாக அவனரசைக் கையேற்ற சந்தனுமஹாராஜன் அநேகயாகங் களைச் செய்து, தேவர்களுக்குத் திருப்தி செய்வித்து, பிரமசாரியர்-கிரகஸ்தர்-வானப்பிரத்தர்-சன்னுசிகள்-ஆதாரமற்றுத் துறக்கப்பட்டவர் - ஆதுலர் - தன்னிடத்து வந்திரந்தவர் - விருந்தினர் - சுற்றத்தார் முதலானவரைப் பாதுகாத்து, தன்னுயிர் போல் மன்னுயிரனைத்தையும் கருதி, எவர்க்கும் யாதொரு குறைவு முறுதிருக்கச் செங்கோல் செலுத்தி வருகிற நாளில், ஒருநாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிகள் - வேடர்கள்-முதலாகிய தளத்தோடு நகரத்தைவிட்டு வெளிப்பட்டுக் காட்டிற்சென்று வேட்டையாடி, மந்திரி முதலானவர்களைப் பிரிந்து தனித்து விடாய்ப் பட்டுக், கங்காநதி தீரத்துக்கு வந்தான் அங்கே கங்காநதி முகில்போலக் கறுத்து, சைவலத்தைப்போல் நெருங்கி, கொன்றைக் காயைப்போல் நீண்டு, கருமணலைப்போற் சொலித்துவிளங்குகின்ற குழலையும்; பார்ப்பவர் கண்ணைக் கிரகிக்கும் வனப்புடைத்தாகிப், பொன்னிறமாகிய சிந்துரதத் திலகமிட்டுச் சிறந்த மூன்றும்பிறை ஒன்றிருந்தால் அதற்கொப்பாகும்படியான நெற்றியையும்; மதன் கைக் கரும்புவிற்போன்ற கரும்புருவத்தையும்; வாளை நிகர்த்தகண்களையும்; சந்திரபிம்பத்தையொத்த வதனத்தையும்; வள்ளைபோன்ற செவியையும்; ஆம்பலனைய இதழையும்; முல்லை மலரனைய பல்வரிசையும்; கமுகையொத்த கழுத்தையும்; வேய்புரை தோளையும்; பொருப்பனைய இருதனத்தையும்; நூலனைய மருங்குலையும்; அரவப் படம்போன்ற அல்குலையும்; கமலமொத்த அடியையு முடைத்தாக்கிய பூலோகப் பெண்ணுருவந் தரித்து, சந்தனுராஜன் அருகிலிருக்க விருப்புற்றவளாதலால், தன்னந்தனியே இராமல் சந்தன மரத் தருகிலிருந்தாள். அவளை விடாய்ப்பட்டுக் கங்கையைத் தேடி செல்லுகிற சந்தனு மகாராஜன் கண்டு பிரமைகொண்டு, விடாய்த் தணியும்படியாக்க் கங்கை வெள்ளத்திற் படியவந்த கருத்தை விட்டு, இம்மங்கையின் வனப்பென்னுங் கடலிலாழ்ந்து, அக்கடலுட் பூத்த முகமாகிய கமலத்தினிடத்துத் தன்னிரு கண்ணுகிய வண்டுகளைப் படியவைத்து, அவ்விடத்துத் தோன்றி யமயலாகிய மதுவைப் பருகித் தாகவிடாய் நீங்கிக், காமவிடாய் கொண்டு, ஆ! இம்மங்கை பூதலமங்கையோ! பூமங்கையோ! திருமங்கையோ! வரமங்கையோ! வானமங்கையோ! நீர்மங்கையோ! என்று ஐயமுற்று, கண்ணிமைப் பதினுலும் நிலத்திற் கானூன்றி நிற்றலினுலும் - மாலை வாடுவதினுலும் - வியர்வுண்டா யிருத்தலினுலும் பூதலமங்கை யென்று நிச்சயித்து, அவளருகிற் சென்று, ஓ பெண்கள் நாயகமே! நீ யாருடைய புத்திரி? இந்த வனத்தில் தன்னந்தனியே இருக்கவேண்டிய காரண மென்னவென்று வினவ, பாகீரதி சொல்லுகிறுள்: ஓ அரசனே! நான் திருமால் புத்திரி பிரமன் சாபத்தால் இங்கு வந்தேனென்று ஒரு போக்காக உண்மையை வெளிப்படுத்தினுள். அதைக் கேட்ட சந்தனுமகாராஜன் அவளைக் கூடவேண்டுமென்கிற விருப்பத்தினுல், சாபத்தின் வரலாற்றைக் கேட்க விருப்புறுமற் றுரிதப்பட்டு கூறுகிறுன்: ஓ பெண்கள் சிரோமணி! பிரமன் சாபத்தினுல் இங்குவந்தது உண்மையா யிருக்குமாகில், இவ்வுலகத்தில் என்னை விட உயர்ந்தவரில்லை. மேலும் எனக்குப் பட்டத்தரசி யில்லை. ஆதலால், நீ என்னை மணஞ்செய்து கொள்ளென்று இனிய வசனங்களினுல் வேண்ட, கங்காதேவி இவ்வசனங்களைக்கேட்டு நாணங்கொண்டவளாய்ச் சந்தனம் பொருந்திய தனது தனத்தின் முகத்தை நோக்கிச் சொல்லுகிறுள்:

ஓ சந்திரகுலோத் தாரகனான மகாராஜனே! நீர் இப்போதுரைத்த கருத்தின்படி நடக்கிறேன். ஆனல் ஒரு உறுதி கூறுகிறேன்; அவ்வுறுதிக்கு எப்போது கெடுதிவருமோ, அப்போதே ஒருவர்க்கொருவர் சம்பந்தமில்லை. அவ்வுறுதி யென்ன வென்றால், என் வயிற்றிற் பிறக்கும் சிறுவர்களைப் பார்ப்பவர்கள் குலை நடுங்கும்படி கொடிய கொலைசெய்து விடுவேன். அதற்கு நீர் தடைசொல்லாம லிருக்கிறதுதான் அப்படிக்கு மனமிருந்தாற் கைகொடும் என்று கேட்க, இதைக்கேட்ட அரசன் அதிக காமவெறி கொண்டவனுதலால் அதற்கொத்துக்கொண்டு கை கொடுத்துக், கங்காதேவியை நகரத்திற் கொண்டு வந்து, நகரத்தாரும் மற்ற அரசர்களும் வேத

வேதியர்களும் சூழ அக்கினிசாக்ஷியாய் மணம் புரிந்து, இரதியு மதனு மிவ்விருவருந்தா னென்று யாவரும் மகிழ்ந்து புகழக்கூடிக் கலந்து வாழ்ந்து வருகிறகாலத்தில், பாகீரதி கர்ப்பந்தரித்து ஒரு புத்திரனைப் பெற்று, உடனே அச்சிசுவைத் தாதிகளுள்ளம் நடுங்கக் கங்கையிலெறிந்து விட்டாள். இந்தச்சேதி அரசனுக்குத் தெரிந்து, கனவருத்தமடைந்து, முன் கொடுத்த வாக்குதத்தத்தை நினைத்து, ஒன்றுமறியாதவனைப்போ லிருந்து விட்டான். இந்தப் பரகீரதியோ புத்திரனைப் பெறுகிறது கங்கையிலெறிகிறது இவ்வாறு ஏழுபுத்திரர்வரையில் நஷ்டஞ்செய்து வந்து, மறுபடியும் கருப்பவதியாயினள். இந்தப் பாகீரதி செய்துவருகிற துற்செய்கையைக் கண்டுங்கேட்டு மிருக்கிற பிரசைகள் பலவாறு இகழ்ந்ததுவுமன்றி; சத்தியந் தப்பாமல் அரசு செய்துவருகிற அரசனையும் நிந்தித்தார்கள். இந்தச்சேதி தனக்குத் தெரிந்திருந்தும் அதுகாறுங் கேட்காதிருந்த அரசன், எட்டாவது புத்திரனைப் பாகீரதி எப்போது பெறுவாளென்று மிகுந்த சாக்கிரதையோடு காலம் பார்த்திருந்தான்.

## வீஷ்மர் உற்பவம்

இப்படி யிருக்குந் தருணத்திற் பாகீரதி பத்து மாதமும் நிறைவேறி, எட்டாவது புத்திரனைப் பெற்றாள். அங்கிருந்த தாதிகளால் அரசன் கேள்வியுற்று, அதிக விரைவில் அந்தப் புரத்திற்சென்று, பிரசவித்த இடத்தில் அச்சமில்லாமற் பிரவேசித்துச், சிசுவைக் கையிலேந்திக்கொண்டு, கங்கா தேவியின் பாதத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ பாகீரதி! என்னால் சந்திரவமிசம் விர்த்தியாக இச் சிறுவனை யெனக்குத் தானமாகக்கொடு. ஆதியில் உனக்குக்கொடுத்த வாக்குதத்தை மறந்தவனல்ல பிள்ளைப்பிச்சை கேட்கிறேன். கிருபைகூர்ந்து பாலியுமென்று வேண்ட, பாகீரதி கடுகடுத்து, மஹா உக்கிரத்தோடு அரசனை நோக்கிச்சொல்லுகிறாள்: ஓ அரசனே! இவ்வுலகாதிபனான நீ கூறிய கட்டுறை மறந்து, என் விரதத்துக்குக் கெடுதி நினைத்தபடியால், இன்று முதல் உனக்கும் எனக்கும் சம்பந்த மில்லையென்று சொல்லி விட்டு, எழுந்து செல்ல யத்தனித்தாள். அரசன் அது கண்டு, ஆ! பெண்கள் பெருமாட்டி! உன்னைப்பிரிந்து அரை நொடிப்போதாவது உயிர் தரித்து வாழேன். நீ எங்குற்றாலும் அங்கு வந்து பணிவிடைக்காரனாகி யாகிலு மிருப்பேன் என்றுமறிக்க, பாகீரதி நகைத்து, ஓ அரசனே! இனி நீ என்னை நம்பாதே நான் கொண்ட கருத்து நிறைவேறிற்று. நான் வந்ததும் உன்னிடமாய் எட்டுப்புத்திரரைப் பெற்றதும் வினைவசம். நீயும் வினைவசத்தாற் சந்திரவமிச அரசனாகப் பிறந்தாயென்று, இதைக்கேட்ட அரசன் திடுக்கிட்டு, ஓ பெண்ணரசி! முன்னம் உன்னைக்கண்டு யாரென்று கேட்டபோது, பிரமன் சாபத்தால் இங்கு வந்திருக்கிறேனென் றுரைத்தாய் அந்தவேளையில் நான் காமவெறியால் அச்சாபத்தின் வறலாற்றைக் கேளாமலும், நீ கூறிய உறுதி மொழியைக் கவனிக்காமலும் வாக்கு தத்தஞ் செய்து உன்னை மணம்புரிந்தேன். இன்றைய தினம் அந்தச் சாபத்தின் வரலாற்றையும், என்னிடமா யெட்டுப் புத்திரர்களைப்பெற்ற விதத்தையும், என் பிறப்பையும் விளங்க உரையென்று கேட்க, பாகீரதி அரசனைப் பார்த்துச் சொல்லுகிறாள்:

ஓ அரசனே! முன்னம் சத்தியலோகத்திற் பிரமதேவனானவன் இந்திரன் - அக்கினி - இயமன் - நிருதி - வருணன் - வாய்வு - குபேரன் - ஈசானன் - அஷ்டவசுக்கள் - முப்பத்து முக்கோடி தேவர்கள் - நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கின்னரர் - கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - சித்தர் - வித்தியாதரர் - முதலானவர்கள் புடைசூழச் சபைகூடி இருக்கிற தருணத்தில், வானதியாகிய கங்கையும் அச்சபைக்குச்சென்றாள். அங்கே ஒரு காற்றுண்டாகிக், கங்கை அணிந்திருக்கிற வஸ்திரத்தை விலக்கிற்று. அதனால் கங்கையினது அவைபவந் தோன்றிற்று. அப்போது அச் சபையிலிருக்கிற யாவரும் மஹா பதிவிரதையான கங்கைக்கு மானக்கேடு வந்ததேயென்று கனவருத்தமடைந்து, அவரவர்கள் அக் கங்கையினது அவயவத்தை நோக்கொணா தென்று கருதித், தங்கள் தங்கள் நயனத்தை மூடிக்கொண்டார்கள். அங்குவந்திருக்கிற மேறிசைக் காவலாளியாகிய வருணன் மாத்திரம், அக் கங்கையின் அவயத்தின்மேற் கண்ணைச் செலுத்தினான். பிரமன் அதுகண்டு, மிகுந்த சினங்கொண்டு வருணனை அழைத்து, ஓ வருணா! தேவர்களுக்குள் உயர்ந்த பீடத்திலிருந்தும், பூலோக புருஷரைப்போல் அசேதனப் புத்தி

யைவகித்து, மஹா கற்புடைய கங்கையின்
அவயவத்தைக் கண்ணுற்றாய்! கண்ணுற்ற
போதே காதல் முன்னமே தோன்றிற்று காத
லுற்றபோதே ஜனன முண்டாயிற்று. ஆத
லால், நீ இப்போதிருக்கிற உயர்ந்த பீடத்தை
நீங்கிப்,பூலோகத்திற் சந்திரவம்ஸ ராஜபரம்
பரையிற்றோன்றி, நெடுநாள் ராஜ்ய சம்
பன்னாய் நீ காதல்கொண்ட கங்கையை
மணந்து சில புத்திரரைப்பெற்று பின்னுஞ்
சிலகாலமிருந்து, மறுபடியும் முன்போல் உன்
பீடத்தைச் சேரக்கடவையென்று சாபமிட்டுக்,
கங்கையை நோக்கி ஓ லோக மாதாவே! இத்
தேவசபையில் உன் அவயவந்தோன்றின படி
யால், நீயும் பூலோகத்திற்சென்று மங்கைப்
பருவமாயுதித்துச், சந்திரவமிச ராஜனைக்
கூடிச் சில புத்திரரைப்பெற்று, முன்போல்
நதி உருவமாகென்று சாற்றிவிட்டான். அவ்
வருணன் அச் சாபத்தை ஏற்றுச் சந்திர
வமிச பரம்பரையிற்றோன்றி, குருகுல சிகா
மணியாயிருக்கும் பிரத்தீபனுக்குப் புத்திர
னாகப் பிறந்து, சந்தனுவென்னும் காரணப்
பெயர் வகித்தான். அவன்தான் நீ, பின்பு
கங்கையாகிய யான் அச்சாபத்தை நிறைவேற்
றக் கருதிப் பூலோகத்தை நோக்கி வருகிற
போது, அனவன்-அணிலன்-ஆபச்சைவன்-
சோமன்-தரன்-துருவன் பிரத்தியூசன் - பிர
பாலன் என்கிற அஷ்டவசுக்களும் வாடின
முகத்துட னெதிர்ப்பட்டு, எனக்கு நமஸ்கா
ரஞ்செய்து நின்றார்கள். நான் அவர்களை
வாழ்த்தி, ஓ அஷ்டவசுக்களே! நான்தான்
பிரமன் சாபத்தினாலே பூலோகத்திற் சென்று
பெண்ணாகப் பிறக்கப் போகிறேன். அதற்காக
என்முகம் வாடவேண்டியது. நீங்களேன்
முகம்வாடி யிருக்கிறீர்கள்? என்று வினவி
னேன். வசுக்கள் எனக்கு மறுபடியும் நமஸ்
காரஞ் செய்து ஓ அம்மணி! (தேடிப் போன
மருந்து திருஷ்டிக்கப்பட்டது) என்கிற பழ
மொழிபோல், வசிஷ்டர் சாபத்தினால் பூலோ
கத்தில் மானிடராய்ப் பிறக்கப்போகிறோம்.
அதற்காக முகம்வாடிச் செல்கிறபோது உம்
மைக் கண்டோம். இனி எங்களுக்கு யாதொரு
குறவுமில்லை. எங்கள் சாபத்தின் வரலாற்றைச்
சொல்லுகிறோம் அதனைக்கேட்டு, அவ்வாறு
எங்களைக் கிருபை கூர்ந்து ஆதரிக்க வேண்டு
மென்று கேட்டுக்கொண்டு, ஓ பாகீரதி! முன்
னம் தவசிரேஷ்ட சிகாமணியாகிய வசிஷ்ட
ரைத் தரிசிக்கத் தேவர்களெல்லாஞ் சென்றார்
கள். அவர்களோடு நாங்களும் போய் வசிஷ்
டருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்
தோம். வசிஷ்டர் வந்தவர்களை யெல்லாம்
ஆதரித்து ஆசீர்வாதஞ்செய்து, இன்றைய
தினம் யாவரும், நமது அன்னம் புசிக்க
வேண்டுமென்று கட்டளையிட்டார். அவர் வாக்
குக்கு அழிவு வரக்கூடாதென்று யாவரும் ஒத்
துக் கொண்டோம். வசிஷ்டர் காமதேனுவை
அழைத்து, இவ்விடத்தில் வந்திருக்கிற யாவ
ருக்கும் அன்னமிட உத்திரவு செய்தார். அது
அவர் கட்டளைப்படி சிற்றுண்டி முப்பழம்-
பொறிக்கறி - முதலியவற்றோடு அன்னமிட்டு,
யாவரும் புசித்த பின்பு, சந்தனம்-புஷ்பம்
தாம்பூல முதலியவற்றைக் குறைவின்றிக்
கொடுத்துப் போய்விட்டது. பின்பு நாங்கள்
யாவரும் அவரவ ரிருப்பிடத்துக்குச் சென்
றோம்.

இப்பால் எங்களில் ஒருவராயிருக்கிற பிர
பாசன் தன் மனைவியோடு வசிஷ்டரிடத்திற்
சென்றதையும், காமதேனு விருந்திட்டதை
யும் சொன்னோம். அதனைக்கேட்ட இவன்
மனைவி அக்காம தேனுவின்மேல் இச்சை
கொண்டு, அதனை எனக்குக் கொண்டுவந்து
கொடுத்தால்தான் உன்னோடு இணங்குவேன்
இல்லாவிட்டால் இணங்கேனென்று பிணங்கி
னாளாம். அதற்கு இந்தப் பிரபாசன் மறுத்
துக் கூறச் சக்தியில்லாதவனாய், அவள்மேற்
கொண்ட காதலினால் அக் காமதேனுவைக்
கொண்டு வருகிறேனென்று வாக்கு தத்தஞ்
செய்து, எங்களிடத்து வந்து சங்கதியைத்
தெரிவித்து, எங்களையும் துணைப்படச் சொல்
லிக் கேட்டுக்கொண்டான். அதற்கு நாங்
கள் வசிஷ்டருடைய மகத்துவத்தை எடுத்
துக்காட்டி மறுத்தோம் அதன்மேல் இவன்
நீங்கள் என்னுடன் கூடத்துணையாக வந்தி
ருங்கள்; அக்காமதேனுவை நான் கொண்டு
வந்து விடுகிறேனென்று வேண்டிக்கொண்
டான். வினைவழி மனஞ்சொல்லுகிற துண்
மையாதலால், மறுத்த நாங்கள் ஒத்
துக்கொண்டு வசிஷ்டர் இருப்பிடத்துக்குச்
சென்றோம். அப்போது இவன் தனியே
சென்று அக்காமதேனுவைப் பற்றிப் பிடித்து
வந்து, மனையாள் களிக்க வீட்டிற் சேர்ந்தான்.
பின்பு வழக்கமாக வந்து அக்காமதேனுவி
னிடத்துத் தருப்பை சமிதை முதலியவற்
றைப் பெற்று ஓமஞ்செய்கிற முனிவர்கள்,
அன்று போய் மறுநாள் உதயத்தில் வந்து
காமதேனுவை அழைத்தார்கள். அப்போது

காமதேனு வராதிருப்பதைக்கண்டு, வசிஷ்ட
ரிடத்துச் சென்று வணங்கிக் காமதேனு எங்
குற்றதையா வென்று வினவ, வசிஷ்டர் ஆச்
சரியப்பட்டு, நமது காமதேனுவை அசுரர்
கள் பற்றமாட்டார்கள். இந்தப் பூலோகத்தார்
பற்றுவது மஹாதுல்லபம் மற்ற தேவர் முத
லானவர்கள் நினைக்கவேமாட்டார்கள். ஆயின்
காமதேனு எங்குற்றது? சுபாவத்தில் அக்காம
தேனு மிகுந்த பராக்கிரமத்தை யுடையனவா
யிற்றே யென்று பலவாறு நினைத்து, தமது
கியான திருஷ்டியால் நோக்கினர். காமதேனு
போய்ச் சேர்ந்திருக்கிற இடம் தெரிந்து,
மிகுந்த சினங்கொண்டு, இந்த அஷ்ட வசுக்
கள் அஷ்டதிக்குப் பாலகருக் கிணையானவரா
யிருந்தும், நம்மை மதிக்காமல் காமதேனு
வைக் களவு செய்தாரென்று கடுகடுத்து, ஒரு
மந்திரத்தை யுச்சரித்தார். அந்த மந்திரதேவ
தைகள் ஓடோடியும் வந்து, எங்கள் எட்டுப்
பெயரையும் பற்றி இழுத்துக்கொண்டுபோய்
வசிஷ்டர் பாதத்தில் வீழ்த்தின. நாங்கள்
மனங்கலங்கி, அநேக உபசார வழிபாடுகளைச்
செய்து, பயபக்தியுடனே நமஸ்கரித்தோம்.
வசிஷ்டர் எங்களை உய்த்து நோக்கி, அடா!
துராத்மாக்களே! என்னைச் சற்றுமெண்ணுமல்
என் காமதேனுவைக் களவு செய்தமையால்,
நீங்கள் பூலோகத்தில் மானிடயோனியிற் பிற
வுங்களென்று சபித்தார். நாங்கள் மனவருத்த
மடைந்து நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி!
நாங்கள் தங்களுடைய காமதேனுவைப் பற்ற
உண்மையான கருத்தைக் கொண்டவர்களல்ல
எங்களி லொருவனுகிய பிரபாசன் மாத்திரமே
அக்கருத்தை யுடையவன் அது தங்களுக்கு
நன்ருய்த் தெரிந்திருக்கலாம். ஆகவே யாவ
ருக்கும் ஒரே சாபம் கொடுப்பது தகுதியல்ல.
ஆதலால், எளியேங்கள்மீது சுவாமிகள்
கிருபை கூர்ந்து பாதுகாக்க வேண்டுமென்ருர்
கள். அதனுல் வசிஷ்டர் கொண்ட கோபம்
சிறிது தணிந்து, ஓ அஷ்டவசுக்களே! உங்க
ளில் எழுவர் இந்தத் துற்செய்கைக்கு
அதிகமாகப் பாத்தியப்படாமையால், அவ்
வேழுபேரும் என் சாபப்படி மானிடயோனி
யிற் பிறந்தாலும், உடனே கங்கையி லெறியப்
பட்டிறந்து பழைய தேவரூபங் கொள்ளக்
கடவது அதிகமாகப் பாத்தியப்பட்ட பிரபா
சன் மாத்திரம் மானிட யோனியிற் பிறந்து,
அஅசு - வயது வரைக்கும் பூலோகத்தி
லிருக்கக்கடவன் அப்படி யிருந்தாலும் இவன்
மனைவி முன்னிலையில் இந்தத் துற்செய்கை
யைச் செய்தபடியால், பூலோகத்தில் இவ
னுக்கு மனைவியின்றி, மற்றப் பூலோக இன்
பங்களையும் அதிக புகழையும் பெறக்கடவ
னென்று சாபங் கொடுத்தார்.

அச்சாபத்தை யாங்கள் ஏற்றுக்கொண்டு,
நம்மைப் பெற்றவுடன் கொலை செய்பவர்கள்
யார்? பூலோக ஸ்திரீகள் செய்யமாட்டார்களே
யென்று ஏக்கங் கொண்டு வருகிற எங்கள்
முன்னே, தங்களைக் கண்டோம் எங்கள் குறை
யையும் விண்டோம் தாங்கள் பிரமன் சாபத்
தினுல் பூலோக ஸ்திரீயாகப் போகின்றபடி
யால், உங்கள் கருப்பத்தில் யாங்கள் ஜனிக்
கிறோம் ஜனித்தவுடன் எங்கள்மீது கிருபை
கூர்ந்து, சொற்படி கங்கையி லெறிந்துவிடும்
அம்மாவென்று பிரார்த்திக்க, நான் அதற்
கொத்துக் கொண்டு, ஓ வசுக்களே! நான் சந்
தனுமகாராஜன் மனைவியாகப் போகிறேன்
வருஷத்துக் கொருவர் வந்து பிறவுங்க
ளென்று கட்டளையிட்டு, கங்கா நதி யருகில்
வந்து, பூலோக ஸ்திரீபோல் உருவங் கொண்
டேன் காலகதி இப்படி யிருந்தபடியால், உன்
னிடத்தில் மர்மமாக வாக்குதத்தம் பெற்றுக்
கொண்டு, இதுவரைக்கும் அவ்வாறு நடந்
தேன் இன்றையதினம் நீ மறுத்தபடியால்,
உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை யென்று
சாற்ற, அரசன் மிகுந்த ஆச்சரியத்தை
அடைந்து, ஆ! பாகீரதி! உனது ஸ்வரூபந்
தெரியாமல் பூலோக ஸ்திரீ யென்றே இலே
சாக நினைத்திருந்தேன் இன்றையதினம் உன்
வரலாறு தெரிந்ததுவுமன்றி, என் வரன்
முறையுந் தெரிந்தேன் இதோ இருக்கிற சிறு
வன் அஅசு - வயதளவு மிருப்பானென்று
கூறினையே, இவனுல் என்ன விளையுமோ அத
னையும் அருள வேண்டுமென்று வேண்ட,
கங்கை சொல்லுகிறுள்: ஓ அரசனே! வசிஷ்
டர் சாபப்படி இச்சிறுவன் மனைவியின்றி மற்
றப் பூலோக இன்பங்களை யெல்லாம் அடை
ந்து, ராஜராஜர்களெல்லாம் நடுங்கிப் பணி
யும் பராக்கிரம வியாக்கிரம்போலே இனிது
வீற்றிருந்து, சந்திரகுல மூதாதையாய் விளங்
குவனென்று புகல, அரசன் இவ்வசனங்
கேட்டுக் கங்கையைநோக்கிச் சொல்லுகிறுன்.

ஓ பாகீரதி! இச்சிறுவன் மனைவியின்றி,
இருப்பா னென்றபோது, இப் புத்திரனேடு
சந்திரவமிசம் அதமாகும். ஆதலால், இன்னம்
சில்காலம் நீயும் நானும் கூடிவாழ்ந்து, ஒரு
புத்திரனைப் பெற்றுவைத்து, இருவரும் அவ

ரவர்கள் யதாஸ்தானம் போய்ச் சேருவோமென்று வேண்ட, பாகீரதி அரசனைப் பார்த்துச் சிரித்துச் சொல்லுகிறாள்: ஓ அரசனே! ஸ்திரீகளுக்கு புருஷ இன்பம் ஒன்றே யன்றி மற்ற இன்பங்களில் இச்சையில்லை புருஷருக்கோ வென்றால் ஸ்திரீ இன்பத்தோடு பலவித இன்பங்களுமுண்டு. அதுபோல நீரும் புருஷனாகையால் உமக்குப் பூலோக இன்பம் வெறுக்கவில்லை. இன்னுஞ் சிலகாலம் நீர் அரசு செலுத்தவேண்டும். அப்போது என்னிலும் எண்மணங் கதிகமான ஒரு மாதை மணம்புரிகிறீர். அவள் வயிற்றில் சந்திரகுல மரபுக்குப் புத்திரருண்டாகிறார்கள். நீர் வருத்தப்படாமல் எனக்கு உத்தரவு கொடும்; மேலும் இப்புத்திரனைப் பாதுகாத்து வளர்ப்பது உமக்கு அதிக வருத்தமாக இருக்கும். என்னிடத்திற்கொடும்; கூ-வயது வரைக்கும் வளர்த்து, சகல கலைக்கியான ஸ்வரூபியாக்கி. வில்வித்தை முதலாகியவற்றையும் கற்பித்து உன்னிடத்திற் சேர்க்கிறேன். அல்லது கங்கையருகில் வந்தால் அவ்விடத்திலாவது ஒப்புவிக்கிறேனென்று உணர்த்தி, புத்திரனை வாங்கிக்கொண்டு அரசனை ஒருதரம் முத்தியிட்டு அணைத்தாள். அதற்கு அரசன் மகிழ்ந்தானாயினும், அவளது பிரிவுக்குச் சகிக்க மாட்டாதவனாய், அதிக மன வருத்தத்தோடு நல்லது பெண்ணே போய்வாவென்று ஒருக்கால் சொல்லியவுடன், கங்கை ஓரடி எடுத்து வைத்துப் பின்பு மாயமாய்ப் போயினாள். அரசன் அதுகண்டு திகைத்து, அதுமுதல் கங்கைமீது காதல் கொண்டவனாகிப் பல வருத்தமடைந்து, பின்பு சித்திரக்காரரை அழைத்து, கங்கையினது உருவத்தைப் போல எழுதச்சொல்லி, அவ் வுருவத்தைப் பார்த்துக் காலத்தைத் தள்ளி வந்தான். இப்படி சிலகாலஞ் சென்றபின்பு, ஒருநாள் கங்கை கூறிய வாக்கியத்தை நினைத்து, வருஷத்தைக் கணக்கிடுகிறபோது கூ - வருஷமாயிற்று. உடனே மந்திரி முதலானவர்களை நோக்கி, நான் வேட்டையாட வேண்டுமாதலால் தகுந்த தளத்தோடு புறப்படுங்களென்று பேசி, தான் வீட்டிற் சென்று பலவகை பதார்த்தங்களோடு அன்னம் புசித்து, ஆடையாபரணாலங்கிரதனாய் வேட்டைமுடி தரித்து, வில்லம்பு கையிலேந்தி, ஒரு திவ்வியப் புரவியிலேறி வெளிப்பட்டான், அதற்குள் இங்கே மந்திரி முதலானவர்கள் சகல சேனைகளோடு வெளிப்பட்டு அரசனோடு கலந்தார்கள் அரசன் காட்டிற் சென்று, யானை-சிங்கம்-கரடி-புலி-செந்நாய்-காண்டா மிருக முதலிய பல மிருகங்களைக் கண்டதுண்டமாகக் கண்டித்து மிகுதியுங் கொன்றான். வந்த மந்திரி முதலானவர்களும் அநேக மிருகங்களை வதைத்தார்கள்.

இப்படி அவரவர்கள் நாலுதிசையிலுஞ் சென்று மனம்போனபடி வேட்டை யாடுகிற போது, அரசன் மந்திரி முதலானவர்களைப் பிரிந்து தனி வேட்டையாடி விடாய்ப்பட்டு, முன்போல கங்காநதியைத் தேடிச்சென்று இவ்விடத்திற்றானே முன்னம் கங்கையென்னும் பெண்ணைக் கண்டது என்று நிதானித்து, இப்போது முன்போலவே ஒருவேளை வந்திருப்பாள். அப்படிவந்தால் ரூபத்தையாகிலும் பார்க்கலாம். மேலும் நமது புத்திரனையும் காணுகிற தருணமான நாளென்று மனதில் நினைத்து, அவளிருக்கும் சோலையை நோக்கும்போது, அச்சோலையில் கங்கையினது தேககாந்தியைப் போலச் சண்பகமலர்களும், தனத்தைப்போலக் கோங்குமலர்களும், பல் வரிசைப்போல முல்லைமலர்களும், இடையைப்போல வல்லிக்கொடி யசைதலும் கண்டு, கங்கைவந்து நின்றதுபோல் அரசன் கண்ணுக்குத் தோன்ற அதிக மகிழ்வுகொண்டு, நெருங்கி நோக்கும்போது உருவெளித்தோற்றமென் றுணர்ந்து, அந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டே கங்காநதியை ஒரு கண்ணினாலும் மதவேள் வருகிற தென்றிசையை ஒரு கண்ணினாலும் நோக்கி நின்றபோது, தாமரை- நீலோற்பலம் - ஆம்பல் - சைவலம் - வள்ளை இவையெல்லாம் அரசன் கண்ணுக்குங் கங்கையினது, முகம் - கண்-செவ்வாய்-அளகம்-செவி- இவையாகத் தோன்றிற்று அதனைக் கண்டு மகிழ்ச்சியடைந்த அரசன் அப்படி உய்த்து நோக்கும்போது, ஜலநிதி என்று யாவராலுங் கொண்டாடப்பட்ட கங்காநிதி யென்று உணர்ந்து வியப்படைந்து, அக் கங்கையை நினைத்துக்கொண்டு நதியருகில் நின்றான். அப்போது அக்கங்கை யாற்றின் மத்தியில் ஒரு வாலிபன் விற்பிடித்து அம்பு தொடுத்து விளையாடத்தோன்றினான். அரசன் அவனைக் கண்டு, மன்மதன் வந்துவிட்டானோ வென்று திடுக்கிட்டுக், கருப்புவில் இல்லாமையைக் கண்டு, அவனல்லவென்று தேறி, சாம்பவமூர்த்தி யநுக்கிரகத்தினாற் கங்கையினிடமாய்ப் பிறந்து காங்கேய னென்று பெயரைக்

கொண்ட முருகக்கடவுளோ வென்று ஐயுற்று
ஆறுமுகமில்லாமல் வேறுமுகங் கொண்டிருப்
பதால் அவருமல்லாமல் தெரிந்து; அப்பால்
இவ்வாலிபனார்? நமது மனைவியாகிய கங்கை
யின் புத்திரனோ வென்று நினைத்து, இப்படி
பலவாறு சிந்தித்து நிற்கிறபோது, அச்சிறு
வன் அரசனை நோக்கி, ஆ! ஆ! இவரார்?
நிதானித்து நோக்கினால் க்ஷத்திரியனைப்போற்
காண்கிறது. வேட்டைமுடி தரித்திருக்கிறார்.
வில்லம்புடையவராய் விளங்குகிறார். இவரது
சாமர்த்தியத்தை அறிவோமென்று தன் வில்
வில் தொடுத்திருக்கிற மோகனாஸ்திரத்தை
விட்டான். அவ்வஸ்திரம் பிசகாமல் அரசன்
மார்பிற் பட்டது. உடனே கங்கைமீது காதல்
கொண்டிருக்கிற அரசனுக்கு மோகனாஸ்திரம்
படவே மோக மதிகப்பட்டு, தாபசோபத்து
டனே ஸ்மரணையற்றுப் பூமியில் விழுந்தான்.
அரசன் விழுந்த செய்கையைச் சிறுவன்
கண்டு திகிலடைந்து, (இளம்பிள்ளை பயமறி
யாது) என்பதுபோல பாலிய சேஷ்டையால்
பயப்படாமல் மோகனாஸ்திரத்தைத் தொடு
த்துவிட்டோம். அரசனோ பூமியில் விழுந்
தான். இனி யென்ன செய்கிறதென்று அதிக
விரைவில் மாதாவாகிய கங்கை யிடத்துச்
சென்று, பயக்கிராந்தனா யொன்றுஞ் சொல்
லாமல் ஒளித்தான். அக்கங்கை புத்திரனது
முகக்குறியைக் கண்டு, நமது புத்திரன் முகம்
என்ன வேறுபட் டிருக்கின்றது தினந்தோ
றும் குறி கற்றுக்கொள்ளச் சென்றால் நெடு
நேரமிருந்துவருவான். இன்றைத்தினம் போ
யின உடனே திரும்பினதுமன்றி, பயந்த
முகத்துடனே யிருக்கிறானென்று கருதி,
கியான திருஷ்டியினாற் பார்த்தாள். அதனால்
சந்தனு மஹாராஜன் வந்ததும், அவன் தன்
மேற் காதல்கொண்டு தன் வரவை எதிர்ப்
பார்த்திருந்ததும், அந்த வேளையிற் சிறுவன்
மோகனாஸ்திரத்தைத் தொடுத்ததும், அதனா
லவ்வரசன் களைத்ததும், அதுகண்டு சிறுவன்
பயந்ததுந் தெரிந்துகொண்டு திடுக்கென்றெ
ழுந்து, புத்திரனை அழைத்துக்கொண்டு, அதி
வேகமாய்க் கங்கையைவிட்டு வெளியில்வந்து,
அரசன் அடைந்திருக்கிற கதியைக்கண்டு,
தான் தேவதையாயிருந்தாலும் தனக்கவன்
சிலநாள் கணவனாகயிருந்தமையால் அனலிடு
மெழுகுபோல் மனமது உருகி, மிகுந்த ஆரு
மையோடு அரசனருகில் வந்து, அவ்வரசன்
ஸ்மரணை தப்பி யிருப்பதையறிந்து, அவனை
எடுத்து மடியில் வைத்து அநேக சயித்திய
உபசாரங்களைச் செய்தாள். அதனால் அரச
னுக்குச் சோப நீங்கிச் சற்றே தெளிந்து வரு
கிற தருணத்தில், ஓ அரசனேயென்று கங்கை
ஒருதரம் அழைத்தாள். கங்கையின் குரலைக்
கேட்டவுடன் அரசனும் சோகநீங்கி அலறி
எழுந்தான். கங்கை முகத்தோடு முகமழுந்தப்
புல்லி ஒரு முத்தமிட்டு, சற்றிடைந்து நின்று
அரசனை நோக்கிச் சொல்லுகிறாள்.

ஓ அரசனே! முன்னம் நான் உமக்குப்
பூர்வ ஜனன வரலாற்றைப் போதித்தும் அத
னைத் தெளியாமல் ஜகமாய்யயிற் சிக்கி வருத்
தப் படுகிறீர். இனி வருத்தப்பட்டதினால்
நான் மறுபடியும் உம்மைச் சேரக்கூடுமா?
என்மேல் வைத்த விருப்பத்தை வெறுத்து,
நான் சொல்லும் சில வசனங்களைக் கேளும்.
முன்னம் உமக்குக் கொடுத்த வாக்கு தத்தத்
தின்படி உமது புத்திரனைக் கொண்டுவந்
தேன் இவனைக் கைக்கொண்டால் சகல துன்ப
மும் நீங்கும், ஆனால் ஸ்திரீகளிடத்து அகப்
பட்ட சிறுவர் கல்விப் பயிர்ச்சியுடையவரா
யிருத்தலருமை. அப்படி இச் சிறுவனைக் கரு
தாதே. இச்சிறுவனுக்கு வசிஷ்டர் முன்னிலை
யில் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்து
நாலு கலைக்கியான முதலியவற்றைக் கற்பித்து
தவசிரேஷ்ட சிகாமணியாகிய பரசுராம
மூர்த்தி முன்னிலையில் அரசர்க்குரிய வில்
வித்தை முதலியவற்றைப் பயிற்றி, சாம்பவ
மூர்த்திக் கொப்பாகிய சனகாதி யோகீஸ்வரர்
கள் முன்னிலையிற் கியானோபதேசம் செய்
வித்து, ஆண்பிள்ளைகளுக்குரித்தாகிய சகல
லக்ஷணங்களில் ஒன்றாகிலும் குறைவில்லாமல்
ஓங்கச் செய்திருக்கிறேன். இவனாலே சந்திர
குலம் மஹா சிறப்படையும். இனி இவனை நீர்
கைப்பற்றிக்கொள்ளும். ஆனால் நானிவனை
வளர்த்தமையாற் காங்கேய னென்னப் பெய
ரிடுமென்று சொல்லி, அருகிலிருக்கிற புத்திர
னைப்பார்த்து, அப்பா மகனே! இதோ இருக்
கிற அரசன்தான் உன் தந்தையென்று
விளம்பினாள். அச் சிறுவன் முன்னம் தான்
மோகனாஸ்திரந் தொடுத்த குற்றத்தை மனதி
னினைத்து நடுக்குற்று விரைவில், தந்தை
தாளில் வணங்கி, ஓ ஐயனே! அடியேன்
செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டுமென்று
அநேக விதமாகத் துதித்தான். புத்திரனில்லா
மல் வருத்த மடைந்திருக்கிற அரசன் தரித்
திரனுக்குத் தனப்புதை கிடைத்தா லெப்படி
யோ அப்படி மகிழ்ந்து, கங்கைமீது கொண்ட

காதலை மறந்து, பாதத்தில் வணங்கிய புத்திரனை வாரித்தழுவி ஆசீர்வதித்து, உச்சி மோந்து, உடல் பூரித்து, இந்திர பதவி வாய்க்கக் கிடைத்தவன்போல் மகிழ்வடைந்து, புத்திரனை அருகில்வைத்துக் கங்கையை நோக்கினான். கங்கை அரசனைப்பார்த்து, ஓ அரசனே! இனி என்னை நாடி வருத்தப்படாமலிருமென்று விடைபெற்று, கங்காசலத்தில் மறைந்தாள். அரசன் புத்திரனை அழைத்துக்கொண்டு, மந்திரி முதலாகிய தளத்தோடு சேர்ந்து, சந்திரனும் புதனும்போல் ஒரு இரதத்தின்மேற் புத்திரனும் தானும் ஏறி அத்தினபுரத்துக்கு வந்து, ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் வேத வேதியர்களையும் மற்றக் குடிகளையும் அழைப்பித்து, நல்ல சுப முகூர்த்தத்தில் - கங்கை-யமுனை - சரஸ்வதி- முதலாகிய தீர்த்தங்களினால் புத்திரனுக் கபிஷேகஞ் செய்து, இன்றுமுதல் இந்தப் புத்திரன் விதித்த விதிப்படி யாவரும் நடக்கிறதென்று இளவரசு பட்டத்துக்குரிய முடி சூட்டி, கங்கை சொல்லிய கருத்தின்படி காங்கேயனென்று பெயரிட்டான். அன்று முதல் அச் சிறுவன் காங்கேய னென்று பெயர் கொண்டு, தந்தையிலும் சதமணங் கதிகமாகப் பிரஜைகளுக்கு நன்மையை விளைவித்து தன்னுயிர்போல் யாவரையும் பாதுகாத்து வந்தான்.

இப் புத்திரனுடைய குணாதிசயங்களைத் தந்தையாகிய சந்தனுமஹாராஜன் கண்டு, சிறந்த மகிழ்வைக்கொண்டு, இன்று முதல் உலக சவரக்ஷணையைக் குறித்து நாம் வருத்தப்பட வேண்டியதில்லை யென்றும், எல்லாக் காரியங்களையும் புத்திரனிடத்து ஒப்பித்துவிட்டோம் இனி நமக்கொரு சஞ்சலமில்லை யென்றும் மகிழ்ச்சியாய் வாழ்ந்து வருகிறநாளில், ஒரு நாள் வேட்டையாட யத்தனித்து, சிற்சில மந்திரியர் தந்திரியர் முதலானவர்கள் புடைசூழ மேற்றிசைக் காட்டிற்சென்று, சிறந்த பலமிருகங்களை வாட்டியும், சில மிருகங்களை யோட்டியும், சில மிருகங்களை வதைத்தும் வருகிறபோது, அரசன் விடாய்ப்பட்டு, அவ் விடாயைத் தணிக்கத் தானும் தன் சாரதியும் தனித்து யமுனாநதிக்குச் சென்று, தாகவிடாய் தணிய ஜலபானஞ் செய்து, அங்கிருக்கும் பிநோதங்களை ஆயாசந்தீரப் பார்த்துவருகிறபோது, சிறந்த பரிமள வாடை வீசிற்று. அதனை அரசன் அறிந்து வியப்படைந்து, சாரதியைப் பார்த்து, ஓ சாரதி! இவ்வனத்தில் புஷ்பித்திருக்கிற புஷ்பசாதி வாசனை யல்லாமல் வேறே ஒரு சிறந்த பரிமளவாடை வீசுகிறது. அதனை அறியவேண்டும். நமது ரதத்தை மேற்றிசையிற் செலுத்தென்று கட்டளையிட, பாகன் அரசன் கட்டளைப்படி ரதத்தை உந்தினான். சிலதூரம் சென்றபின்பு, யமுனா நதி யருகில் பராசரராற் பரிமளகந்தி யென்று பெயர்வகித்த மச்சகந்தி யென்னும் ஓர்பெண் ஒரு மரத்தடியி லிருந்தாள். அரசன் அவளைக் கண்டு பிரமைகொண்டு, அப்பால் சிறிது தெளிந்து, யாம் இதுகாறும் இவ்வளவு சுந்தரத்தையுடைய மாதரைக் கண்டதில்லை. இம் மாதோ மற்றொருவருடைய ஸ்வாதீனத்துக் குட்படாதவளா யிருக்கிறாளென்று குறிப்பினாலறிந்து, இவளை நாம் மணம் புரியலாமென்று மனதில் நினைத்து, முன்னம் இவள் வரலாற்றைக் கேட்டறிவோமென்று தேரை விட்டுப் பூமியிலிறங்கி, அவளருகிற் சென்று ஓ பெண்கள் நாயகமே! நீயார்? இந்த நதியருகிலிருக்கவேண்டிய தென்னவென்று வினவ, பரிமளகந்தி அரசனை நோக்கி, ஆ இவர் யாரோ ராஜனென்று வியந்து நாணமுற்று, பயபக்தியுடனே அஞ்சலி செய்து சொல்லுகிறாள். ஓ மண்டலேஸ்வரா! நான் நெய்தனிலத்துக்குரிய பரதர் வமிச ராஜனாகிய தாசராஜன் புத்திரி. குலாசாரப்படி நான் இந்நதியில் ஓடம் வைத்துக்கொண்டு வருகிறவருக்குப் படவு விடுகிறது நல்ல வெய்யில் வேளையாதலால் இம்மரத்தின் நிழலில் இருக்கிறேனென்று புகல, அரசன் இந்த வசனங்களைக் கேட்டு, இவள் தந்தை அனுமதி யில்லாமல் நம்மை மணம் புரியாளென்று தீர்மானித்து, தாசராஜனிடத்துச் செல்வோமென்று கருதி, ரதத்திலேறிச் சாரதியைத் தாசராஜன் நகரத்துக்குச் செலுத்தச் சொன்னான். சாரதி அவ்வாறு ரதத்தைச்செலுத்தித் தாசராஜன் நகரருகில் நிறுத்த, அரசன் சாரதியால் தன் வரவைத் தாசராஜனுக்குத் தெரிவித்தான். தாசராஜன் அரசன்வரவைக்கேட்டு, மண்டலேஸ்வரனாகிய மஹாராஜன் நம்மை அழைக்க வேண்டிய காரண மென்னவென்று ஒரு ஏக்கமும், நம்மை ஒருபொருளா யெண்ணி அழைத்துவரச் சாரதியை விட்டாரே என்று ஒரு மகிழ்வு முண்டாகி, விரைவில் அரசனுக்குக் காணிக்கை முதலானவைகளோடு வெளிப்பட்டு, அரசனிடத்து வந்து, தான் கொண்டு வந்த காணிக்கையை வைத்துச் சாஷ்டாங்க

மாக நமஸ்காரஞ் செய்து, பயபக்தியுடனே வாய் பொத்தி, ஓ மண்டலேஸ்வரா! எளியேனை ஒரு பொருளாயெண்ணி வரவழைத்த காரணத்தைத் திருவுளம்பற்ற வேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடனே கேட்க, அரசன் காணிக்கை முதலியவற்றை யேற்று, தாசராஜனைப் பார்த்துச் சாரதியை எச்சரித்தான். சாரதி அச் சைகையை அறிந்து தாசராஜனைப் பார்த்து, ஓ தாசராஜனே! உன் புத்திரியாகிய பரிமளகந்தியை என் னரசனுக்கு மணஞ் செய்துவை அதற்காகத்தான் இவ்விடம் வந்தது என்றுகூற தாசராஜன் பரமானந்தத்தை யடைந்து, ஓ ஐயா! இப்போது கூறியவாக்குக் கெதிர் வாக்கில்லை ஏனென்றால், அவரோ சாம்பவ மூர்த்தியினது திருமுடியிலிருக்கிற சந்திரனுடைய பரம்பரையிற்றோன்றி, சந்திரகுல அரசனென்று பெயர் வகித்து, என்போலியர்க்கு அரசராயிருப்பவர்களெல்லாம் திரைகட்ட அரசு செலுத்தி வருகிற மஹாராஜன் எங்கள் குல இழிவையுணர்ந்தும் என் புத்திரியை மணஞ் செய்யக் காதல்கொண்டால் எனக்கு நலந்தான். ஆனால், ஒரு குறைவு மாத்திர மிருக்கின்றது அதனைத் தெரிவிக்கிறேன் அதற்கு ஒப்புமைகூறிச் சுகமாக மணஞ் செய்து கொள்ளட்டுமென்றான். பாகன் தாசராஜனை நோக்கி அஃதென்னவென்று வினவ, தாசராஜன் சொல்லுகிறான்.

ஓ சாரதி! எங்கள் குலம் இழிகுலம் இவ்விழிகுலத்துப் பெண்ணை அரசன் மணம் புரிந்து அப்பெண் வயிற்றிற் புத்திரர்கள் பிறந்தால், அப்புத்திரர்களுக்கு அரசன் மகுடாபிஷேகஞ் செய்யச் சந்திர வமிசத்தாரும் மற்ற மந்திரி முதலானவர்களும் குடிகளும் ஒப்பமாட்டார்கள். அதன்பின்பு என் புத்திரியும் புத்திரி வயிற்றிற் பிறந்த புத்திரரும் அம்பலமாவார்கள் இதுதான் என் கருத்திலிருக்கிற குறை. இதற்கொரு சமாதானஞ்சொன்னால் சுகமாக என்மகளை மணம் புரியட்டுமென்று சொல்ல, சாரதி அரசன் முகத்தை நோக்கினான். அரசன் இவ்வசனங்களை யெல்லாம் நிதானித்து, இதற்குத்தரம் நம்மாற் கூறச் சக்தியில்லை அப்பெண் நமக்கு வாய்க்கப் போகிறதில்லை. இனி விரகாக்கினியால் சரீரம் வாதிக்கப்பட்டு, நாளுக்கு நாள் பலஹீனமாய்ப் பூர்வ சனனத்தை யடையுங் காலம் நேரிட்டதென்று தீர்மானித்து, தாசராஜன் கேள்விக்கு, உத்தரவு சொல்லாமற் சாரதி முகத்தை நோக்கி, ஓ சாரதி! நமது நகரத்துக்கு ரதத்தைச் செலுத்து என்று கட்டளையிட்டான். சாரதி அவ்வாறு ரதத்தைச் செலுத்தி நகரத்திற் சேர்த்தான். அரசன் தேரைவிட்டிறங்கி, ஒருவரோடும் வசனியாமல் அந்தபுரத்திற்சென்று, கந்தர்ப்பன் பாணத்தினாற் சிந்தை நொந்து வருந்தி, தன்னைக் கவளங்கொண்ட காமநோயைச் சகிக்கமாட்டாதவனாய்ப் பஞ்சணை மெத்தையிற் படுத்து, பரிமளகந்தியின் வனப்பில் கருத்தைச் செலுத்தினவனாய் ஏக்கங்கொண்டு, சிறிதுந் தூக்கமின்றிப் பலவாறு புரண்டுக்கொண் டிருந்தான். மந்திரிமுதலானவர்கள் அரசன் கொலுமுகத்திற்கு வராதிருப்பதை யறிந்து, அரசனிடத்திற் சென்று வணங்கி, ஓ மண்டலேஸ்வரா! இதுவரைக்கும் யாதொரு குறைவின்றி மகிழ்வுடன் கொலு வீற்றிருந்த தாங்கள், ஏதோ ஒரு மனவியாதியைக்கொண்டு வெளியில் வராமலும் அக்கருத்தை வெளியிடாமலுமிருந்தால், வந்த மனவியாதி எந்தவிதத்தில் நீங்கும் கிருபை கூர்ந்து தங்கள் கருத்தை வெளியிட்டால், அதற்குத் தகுந்த முயற்சி செய்து நிறைவேற்றுகிறோம் என்று புகல, அரசன் உண்மையை வெளிப்படுத்தாமல், ஓ மந்திரிமார்களே! ஏன் என்னை வருத்தப் படுத்துகிறீர்கள். ஒருவர்க்குண்டாகும் யவ்வனமானது நீரிற்பிறந்த குமிழியை யொக்கும். ஆக்கையோ அந் நீரிலெழுதும் எழுத்தாகும். செல்வமோ வென்றால், அந் நீரிலுண்டாகும் அலையை நிகர்க்கும் இவ்வித அளவையுடைய தேகத்தைக் குறித்துப் பலவிதமாக யோசிக்க வேண்டுவதென்ன? ஏதோ சரீரக்கூறு நாளுக்குநாள் வாடி வருகிறது என்று கடுகடுத்துக் கூற மந்திரிகள் மன நடுங்கி, ஒன்றுஞ் சொல்லாமல் அரசனை வணங்கி விடைபெற்று, இளவரசு பட்டம் பூண்டு அரசு செலுத்தி வரும் காங்கேய மஹாராஜனிடத்து வந்து வணங்கி, ஓ ராஜராஜேஸ்வரா! உமது தந்தை காட்டிற் சென்று வேட்டையாடி வந்த நாள் முதல், ஏதோ ஒரு மனவியாதியுற்று, சிந்தை நொந்து வருந்தி வெளிப்படாமல், அந்தப்புரத்திலேயே படுத்திருக்கிறார் என்று விளம்பக் காங்கேய மஹாராஜன் கேட்டுத் திடுக்கிட்டு, மந்திரி முதலானவர்களுக்கே கருத்தை வெளிப்படுத்தாத நமது தந்தை தமக்கு வெளிப்படுத்துவ தருமையாதலால், அன்றைய தினத்தில் நமது தந்தைக்குத் தேரைச் செலுத்தினபாகன் யாரோ அவனை அழைத்து

விஞவிஞல் அரசன் கருத்து வெளிப்படு மென்று யோசித்து, சில தூதரையனுப்பி அச்சாரதியை அழைப்பித்தான். சாரதி காங்கேய மஹாராஜனுக்கு நமஸ்காரஞ் செய்து, ஓ ஆண்டவனே! எளியேனே அழைத்த காரண மென்ன வென்று வேண்ட, காங்கேயன் சில தினத்துக்குமுன் என் தந்தை வேட்டையாடக் காட்டிற் சென்றபோது ரதத்தைச் செலுத்தினவன் நீயாதலால், அன்று முதல் அரசன் மனவியாதியா யிருக்கிருர். அக்காட்டில் ஏதாவது ஒரு அதிசயத்தைக் கண்டதுண்டா? அப்படிக் கண்டிருந்தால் உனக்குத் தெரியுமல்லவா? தெரிந்திருந்தால் சொல்லென்றுவினவ, சாரதி வணங்கி வாய்பொத்தி பயபக்தியுடனே சொல்லுகிருன்.

ஓ ஸ்வாமி! அரசன் மேற்றிசையிற்போய் வேட்டையாடித் தாகக்களே தாங்கி யமுனு நதியிற் சென்றபோது, அங்கே மிகுந்த பரிமள வாடை ஒன்றுண்டாயிருந்தது. அதனை அவர் அறியப் போனபோது, ஓர் மரத்தருகில் ஸ்ரீ மஹா லட்சுமியைப்போல் ஒரு கன்னிகையிருந்தாள். அரசன் அக்கன்னிகையைக் கண்டு மயக்கங்கொண்டு நீயார் உன் தந்தை யாரென்று வினவ, அக்கன்னிகை நான் பரதர் குலமடந்தை என்றும், என் தந்தை தாசராஜனென்றுங்கூற, அதை யறிந்து தாசராஜனிடத்திற் சென்று அவளைக் கேட்டதற்கு அப் பெண் வயிற்றிற் பிறந்த புத்திரனுக்குப் பட்டங் கட்டுகிறதா யிருந்தால் உங்கள் கருத்தின்படி நடக்கிறேனென்று சொன்ஞன். அதைக்கேட்ட அரசன் ஒன்றுஞ் சொல்லாமல் நகரத்திற்கு வந்துவிட்டார். இதுதான் எனக்குத் தெரியுமையா வென்று சொல்லி வணங்கிஞன். காங்கேயன் மனச்சஞ்சலம் நீங்கி, இனி என் தந்தைக்குவந்த மனவியாதியை நொடிப்பொழுதில் மாற்றி விடுகிறேனென்று தீர்மானித்து, மந்திரிமார்-பட்டவர்த்தனர்-மகுடவர்த்தனர்-ரதகஜதுரகபதாதிகள் தன்னேச் சூழ்ந்துவர அச்சாரதியை அழைத்துக்கொண்டு, தாசராஜன் நகரத்திற்குச் சென்று, அந்தத் தாசராஜனே அழைப்பித்து, ஓ தாசராஜனே! உனது குமாரத்தியை என் தந்தைக்கு மணஞ் செய்து கொடுப்பதற்கு உன் கருத்திலிருக்கிற குறை யென்னவென்று வினவ, தாசராஜன் வணங்கிச் சொல்லுகிருன்: ஓ மஹாராஜனே! எங்கள் குலம் இழிகுலம் உங்கள் குலமோ மகாலட்சுமியுடன் பிறந்த சந்திரகுலம். அக்குலத்தரசர் என் புத்திரியை மணம்புரிவது தகுதியல்ல அவர்களே இழிவு நோக்காமல் மணம் புரிய யத்தனித்தால் தடை சொல்லுகிறதற்கு யாவரால் முடியும்? ஆகிலுமொரு தடை யிருக்கின்றது அஃதென்னெனில், அவள் வயிற்றிற் பிறந்த புத்திரன் பட்டத்துக்குரியவஞவாஞ? அரசன் தான் பட்டாபிஷேகஞ் செய்தாலும் மற்றவர் சம்மதிப்பார்களா? இதராள் சம்மதித்தாலும் இப்பட்டத்துக்குத் தாங்கள் தலைமையாளியா யிருக்க என் பெண் வயிற்றுப் புத்திரர்களுக்குப் பட்டங் கிடைக்குமா? இதற்கு ஒரு ஒப்புமைகூறி, என்மகளே அரசனுக்கு மணஞ் செய்வியுமென்று புகன்ருன். காங்கேயன் இவ்வசனங்களைக்கேட்டுக் கலகலவென்று நகைத்துத் தாசராஜனே நோக்கிச் சொல்லுகிருன்.

ஓ தாசராஜனே! நீ என்ன அரசஞயிருந்தும் இராஜ தருமம் தெரியாதவன் போல் வசனிக்கிருய். வித்துச் சிலாக்கியமேயன்றி நிலம் சிலாக்கியமல்ல அதுபோல எக்குலத்து ஸ்திரீயா யிருந்தபோதிலும் அரசனுக்குதித்த புத்திரஞ யிருப்பாஞகில் அப் புத்திரனுக்குப் பட்ட முதலாகிய எல்லா நலமு முண்டு. ஆஞல், நான் பட்டத்துக் குடையவஞ யிருக்கிறபடியால், உன் பெண் வயிற்றுப் புத்திரனுக்குப் பட்டங் கிடைப்பது அருமைதான் என் தந்தை மனவியாதி உன்ஞல் நீங்கப்போகிறபடியால், என் பட்டத்தை உன் பேரனுக்குக் கட்டுகிறேன். மேலும், எனக்குப்பின் யாதொரு வழக்கு மில்லாமற்போக இன்றுமுதல் ஒரு வைராக்கிய விரதங் கைக்கொள்ளுகிறேன். அஃதென்னெனில், நான் ஒரு கன்னிகையை மணம் புரிவஞகில் எனக்குப் பிறக்கும் புத்திரர்கள் என் காலத்துக்குப்பின் வழக்கிடுவார்கள். ஆதலால், சந்திரர் சூரியர் முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகாயவாணி முதலானவர்களும், ஸ்ரீமந் நாராயணமூர்த்தியு மறிய நான் ஒரு ஸ்திரீயை மணம்புரிகிறதில்லை என்று உறுதியாக யாவருங் கேட்கக்கூறி, இவ்வாக்கியத்திற்குப் பழுது தேடுவேஞகில் தாய் தந்தையரைப் போற்ருதவரும், தன்னே நம்பினவருக் கிடையூறு செய்தவரும், ஜலத்தில் ஆடையில்லாம லிறங்கினவரும், பெரியவர்களே மதிக்காம லுட்கார்ந்திருந்தவரும், தருமஞ் செபவரைத் தடுப்பவரும், பிச்சையிட்டுப் புசியாதவரும், இவர்களுக்கு வரும்

கதி எதுவோ அக்கதியை யடையக்கடவே னென்று சபதஞ் செய்தான். இதைக்கேட்ட மந்திரி முதலானவர்கள் திடுக்கிட்டுக் காங்கே யனை வணங்கிச் சொல்லுகிறார்கள்: ஓ தரும மூர்த்தி! பட்டத்தைத்தான் கொடுத்துவிட் டது தகுதி. மணம்புரிகிறதில்லை யென்று சப தஞ் செய்கிறது தருமமா? புத்திரனில்லாத வர்க்குப் புண்ணியலோக மில்லையென்று வேத முறையிடுகின்றதே; இதற்கென்ன செய்கிறது? என்று வினவ அதற்குக் காங்கேயன் இது தந்தை மூலமாய் வந்த தேகமாதலால், இந்த யாக்கையா லத்தந்தை மனதுக்கு வருத்தம் நேரிடாமலிருந்தால் அச்செய்கையே புண் ணிய லோகத்தைக் கொடுக்குமென்று விடை கொடுத்தான். இந்தக்காங்கேயன்கூறியவற்றை அந்தரத்தில் முன்னமே வந்திருக்கிற இந் திரன்-அக்கினி-யமன்-நிருதி-வாயு-குபேரன்-ஈசானன் ஆகிய எழு திக்குப்பாலகரும், அன லன் - அணிலன் - ஆபச்சைவன் - சோமன் - தரன் - துருவன் - பிரத்தியூசன் ஆகிய எழு வசுக்களும், முப்பத்து முக்கோடி தேவர் களும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், கின்னரர்-கிம்புருடர்-கருடர் - காந்தருவர் முத லானவர்களுங் கேட்டு, காங்கேயனுடைய மன வுறுதிக்கு மெச்சி மிகுந்த மகிழ்வடைந்து, பாரிசாத புஷ்பங்களை வருஷித்து, தேவ துந் துமி முழங்க, அரம்பை யூர்வசி முதலியோர் நடனஞ்செய்ய, அப்சர ஸ்திரீகளெல்லா மங் களம்பாட, அவ்விந்திரன் முதலானவர்கள் காங்கேயனை வாழ்த்தி அங்கு வந்திருக்கும் தளங்களை நோக்கிச் சொல்லுகிறார்கள்.

ஓ பிரஜைகளே! இந்தக் காங்கேயன் தந்தை முன்னிலைக்குப் பட்டாபிஷேகத்தை நிராகரித்து விட்டதன்றி மனைவியையும் வெறுத்து வீஷமஞ் செய்தபடியால், இன்று முதல் இவனுக்கு வீஷ்மாசாரி யென்று பெய ராகுகவெனக்கூறி, பல ஆசிகள் வழங்கித் தேவர்களெல்லாம் தங்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள் இங்கே தாசராஜன் முதலான வர்களும் காங்கேய மகாராஜனை அநேக வித மாகத் துதித்து, தேவர்கள் கூறிய நாம தேயத்தைக் கொண்டு யாவரும் ஒருதரம் கூவி நமஸ்காரஞ்செய்து, பேரானந்தம் பெற்றவர் போல் அதிக மகிழ்வை அடைந்தார்கள். வீஷ் மாசாரி தாசராஜனைப் பார்த்துச் சொல்லு கிறார்: ஓ தாசராஜனே! என் தந்தைக்கு உன் புத்திரியை மணம்புரிய இன்னும் தடை யென்னவென்று வினவ, தாசராஜன் வீஷ்மா சாரியின் மன வுறுதியை நன்றாக மதித்து, இனித் தாமசஞ்செய்தால் மனதுக்கு விரோ தம் வருமென்று கருதிச் சொல்லுகிறான்: ஓ மண்டலேஸ்வரா! என் புத்திரியை அழை த்து வருகிற தடையேயன்றி வேறொருதடையு மில்லையென்று வணங்கி விடைபெற்று தன் அரண்மனைக்குச்சென்று, சில தூதுவர்களாற் புத்திரியை அழைப்பித்து ஸ்நானஞ் செய் வித்து, ஆடை ஆபரணங்கள் அழகுபெற அக்கன்னிகைக்குத் தரிப்பித்து, முத்துச் சிவிகையிலேற்றி, தானும் தன் சுற்றத்தார் முதலானவர்களுமாக வீஷ்மாசாரி யிடத்து வந்து வணங்கி நின்றார்கள். வீஷ்மாசாரி பரிமளவாடை வீசுகிறதைக்கண்டு அதிக வியப்படைந்து, தானும் மந்திரி முதலான வர்கள் புடைசூழப் பரிமளகந்தியை அழைத் துக்கொண்டு விரைவில் அத்தினபுரம் வந்து சேர்ந்து, அந்தப் புரத்திற்சென்று தந்தை தாளில் வணங்கிச் சொல்லுகிறார். ஓ ஸ்வாமி! தற்காலத்தில் தாங்கள் கொண்டிருக்கிற கருத் தை நிறைவேற்றத் தாங்கள் நாடிய கன் னிகையைக் கொண்டு வந்தேன். தாங்க ளெழுந்து வந்து அக்கன்னிகையை மணம் புரிந்து மனவியாதியை நீக்குமையாவென்று வேண்ட, அரசன், இவ்வசனங் கேட்டுச் சிறந்த மகிழ்வடைந்துப் புத்திரனை வாரித் தழுவி உச்சியை முகந்து முத்தமிட்டு, அப்பா புத்திர சிகாமணியே! என் கருத்தில் நாடிய பொருள் உனக்கு எவ்வாறு தோன்றிற்றோ அதனைக் கூறுகவென்று வினவ, வீஷ்மாசாரி வணங்கி, ஓ எந்தையே! தங்கள் சாரதியினால் தங்கட்கு நேர்ந்திருக்கு மனவியா கூலத்தை அறிந்து, தாசராஜனிடத்துச் சென்று, அவன் கேட்ட கேள்விக்கு ஒப்புமை கூறி அக் கன்னிகையைக் கொண்டு வந்தேனென்று சொன்னவுடன் மந்திரி முதலானவர்களை அழைத்து அவர்களைப் பார்த்து, ஓ மந்திரி மார்களே! தாசராஜன் கேட்ட கேள்வி என்ன? அதற்கு என் புத்திரன் சொன்ன சமாதான மென்ன? அதனை ஒளியாமற் சொல்லுங்க ளென்று வினவ, மந்திரிகள் அரசனை வணங் கிச் சொல்லுகிறார்கள்.

ஓ மண்டலேஸ்வரா! உமது புத்திரனது மன உறுதியை எங்கள் நாவினாற் சொல்லவச மல்ல. ஆயினும், எங்களால் இயன்றமட்டுங் கூறுகின்றோம் அதனைக் கேட்டருள்க. தாங்

கள் மனவியாதிகொண் டிருப்பதைப் புத்திரருக் கறிக்கையிட்டோம் அவர் சாரதியை அழைத்து, அவனால் தாங்கள் கொண்டிருக்கிற கருத்தை அறிந்து, உடனே தாசராஜனிடத்துச் சென்று, என் தந்தைக்கு உன் கன்னிகையைக் கொடுக்கிறதற்குத் தடையென்னவென்று வினவ, தாசராஜன் புத்திரி வயிற்றுப் புத்திரனுக்குப் பட்டங் கொடுக்கிறதாயிருந்தால் என் கன்னிகையைத் தருகிறேனென்று சாற்ற, நமது புத்திரன் அவ்வார்த்தைக்கு ஒத்துக்கொண்டு, உமது புத்திரி வயிற்றின் புத்திரனுடைய பட்டமே இந்தப் பட்டமென்று வாக்கு தத்தஞ்செய்து, எனக்குப் பிற்காலத்தும் ஒரு வழக்கில்லாதிருக்க நானும் விவாகம் செய்துக்கொள்ளுகிறதில்லை என்று சகலதேவர்களு மறியச் சபதஞ்செய்தார். அதனைக்கேட்டிருந்த தேவர்களெல்லாம் புஷ்ப மாரி பொழிந்து, உமது புத்திரரைப் புகழ்ந்து, இன்று முதல் நீ வீஷ்மாசாரியென்று இவர்க்கு வேறு பெயர் கொடுத்தார்கள். அதன் பின்பு தாசராஜன் யாதொரு தடையுங் கூறுமல், தன்து புத்திரியை அழைத்துக்கொண்டு உமது வாயலில் வந்திருக்கிறுனென்று விடை கூற, அரசன் கேட்டு ஆச்சரிய மடைந்து, மூத்த குமாரனுயிருந்தும் பட்டத்துக் குரியவனுதலை நீக்கினுனென்று ஒரு விதத்தில் வருத்தத்தையும், தந்தைக்குப் புத்திரர் செய்யுங் கடமைக்கு எண்மடங்கதிகமான கடமையை இயற்றினுனென்று ஒரு விதத்தில் மகிழ்வையுங்கொண்டு, புத்திரனை வாரித்தழுவி, ஓ என்னருமைச் செல்வனே! என் முன்னிலையில் நீ புண்ணிய லோகத்துக் கேதுவாகிய மனைவியை நீக்கி நின்றபடியால், நானிரண்டு வரங் கொடுக்கிறேன். இஃதென்னெனில், புண்ணிய லோகம் உனக்குச் சித்திக்கக்கடவது. மேலும், உனக்கு யமவாதையில்லாமல் நீ எப்போது உயிர்விட நினைக்கின்றையோ? அப்போது உயிர் நீங்கக் கடவது என்று இரண்டு வரத்தைத் கொடுத்துப் பஞ்சணை மெத்தையை விட்டெழுந்து, கொலுமுக வாசலில் வந்து மந்திரிகளை நோக்கினுன். உடனே மந்திரிகள் பார்வையின் குறிப்புணர்ந்து, நிசு-தேசத்தரசர்களுக்கு மண ஓலை போக்கி, வேத வேதியர்களை அழைப்பித்து, நல்ல சுப முகூர்த்தத்தில் பந்தற்கால் நாட்டி, நகர முழுவதும் அலங்கிரதஞ் செய்யச் சொல்லிக் கட்டளையிட்டுக் கலியாணத்துக்கு வேண்டிய வஸ்துக்களையெல்லாம் சேகரித்தார்கள். இதற்குள் நிஅ-தேசத்தரசரும் மற்ற பந்து ஜனங்களும் வந்து சேர்ந்தார்கள். வந்தவர்களுக்கெல்லாம் மந்திரிகள் தகுந்த மரியாதைநயைச்செய்து விடுதி விட்டார்கள். நகரத்தி லிருப்பவர்களும் மிகுந்த மகிழ்வை அடைந்து, மாடமாளிகை கூடகோபுரம் வீதி முதலியவற்றை நன்ருக அலங்கரித்து, இலக்குமி சமேதனுகிய நாராயண மூர்த்தியின் நகரத்தை யொப்பாகச் செய்தார்கள். பின்பு மந்திரிகளும் பெரியோர்களும் அரசனிடத்து வந்து வணங்கி, மாரன் இடைவிடாமல் மணக்கோலஞ் செய்து வருத்தி வந்த அரசனைத் தாங்கள் மணக்கோலஞ்செய்து அவ்வருத்தத்தைத் தணிக்க யத்தனித்து, கங்கை முதலிய தீர்த்தங்களால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினுல் அலங்கிரதஞ் செய்து அழைத்து வந்து மணவறையில் வீற்றிருக்கச் செய்து, தாசராஜனிடத்துச் சென்று, அவன் புத்திரியாகிய பரிமள கந்தியை அந்தப்புரத்தில் இருக்கும். தாதிகளால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினுல் அலங்கிரதஞ் செய்வித்து, நல்ல சுப முகூர்த்தத்தில் அரசனிருக்கு மணவறையில் ஒக்க விருக்கச் செய்தார்கள். அப்போது வேத வேதியர்களும் மற்றுமுள்ள பெரியோர்களும் கலியாண மண்டபத்தி லெய்தி, வேத மந்திரங்களை யுச்சரித்தார்கள். அச்சமயத்தில் தாசராஜன் எழுந்து, மன்னர் மன்னர்களுக் கெல்லாம் தகுந்த மரியாதையைச் செய்து அச்சபையில் நின்று சொல்லுகின்றுன்.

ஓ ராஜ ராஜர்களே! இதோ அரசனருகிலிருக்கிற கன்னிகை என் புத்திரியல்ல. இக்கன்னிகையின் வரலாற்றைக் கூறுகிறேன் அதனை யாவருஞ் செவிகொடுத்துக் கேளுங்கள். முன்னம் சூரியவமிசத்து வசுராஜனென்பவன் கிரியையாகிய தன் மனைவி கருப்பவதியா யிருக்குங்காலத்து நல்ல மாமிசங் கொண்டுவந்து கொடுக்கக் கருதி வேட்டைக்குச்சென்று, அன்றிரவில் அவ்வனத்தில் நித்திரை செய்யும்போது கிரியை மேற்கொண்ட காதலால் வீரியம் வெளிப்பட்டது. அவ்வீரியத்தை ஒரு பக்ஷி இடத்துக் கொடுத்துக் கிரியையின் வசஞ் சேர்க்கச் சொல்லிக் கட்டளையிட, அப் பக்ஷி அக் கட்டளைப்படி வரும் போது யமுனநதி மத்தியில் மற்றெரு பக்ஷி எதிர்த்துப் போராடிற்று. அதனுல் அவ்வீரியம் அந்நதியில் விழுந்தது. அந்நதியிற் பிர

மன் சாபத்தால் மீன்வடிவமா யிருக்கிற அப்
சரஸ்திரீ அந்த வீரியத்தை இரண்டு பிரி
வாகப்புசித்துக் கருப்பவதி யாயினாள். சில
நாள் சென்ற பின்பு எனக்குக் கீழ்ப்படிந்
திருக்கிற வலைஞர் அந் நதியில் மீன் பிடிக்க
வலை வீசுகிறபோது, மீனமாயிருக்கிற அப்சர
ஸ்திரீ அகப்பட்டாள். அதனை அவர்கள்
என்னிடத்தில் ஒப்பிவித்தார்கள். நானந்த
மச்சத்தின் வயிற்றைக்கிழித்துப் பார்க்கும்
போது, இந்தக் கன்னிகையும் ஒரு புத்திரனு
மிருந்தார்கள். இவர்களை நோக்கி வியப்புற்
றிருக்கும் காலையில், மச்சமாயிருக்கிற அப்சர
ஸ்திரீ தன்னுருவைக்கொண்டு, அந்தரத்தி
னின்று தன் வரலாற்றையும் மக்களது வர
லாற்றையும் கூறிப் போய்விட்டனள். அதன்
மேல் இரண்டு மக்களையும் வசுராஜனிடத்து
ஒப்பிவித்தேன். அவ் வரசன் புத்திரனை
எடுத்துக் கொண்டு, இக் கன்னிகையை எனக்
குக் கொடுத்தான் மக்களில்லாத நான் மகளா
கப் பாவித்து வளர்த்துவந்தேன். இக் கன்
னிகை இராஜ புத்திரியே யாதலால், காக்கை
யினாற் பெற்று வளர்க்கப்பட்டுப் பருவம்
வந்தபோது தன்னினத்தைத்தைத் தழுவிய
குயிலினம் போல், சந்திரவமிச ராஜனுக்கே
மனைவியாயினாள். இனி யாதொரு தடையு
மின்றி மணத்தை நிறை வேற்றுங்களென்று
கன்னிகாதானஞ் செய்தான். இதைக் கேட்ட
அரசர்களும் வேத வேதியர்களும் வியப்
படைந்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் மந்தி
ராக்ஷதை முதலிய பூசைபெற்றிருக்கிற மங்க
லத்தை அரசன் கையிற் கொடுத்துப் பரிமள
கந்தியின் கழுத்தில் அணிவித்து, வேதாகம
விதிப்படி ஓமம் வளர்த்தி, யாதொரு குறைவு
மில்லாமற் கலியாணத்தை நிறைவேற்றினார்
கள். பின்பு வீஷ்மாசாரி மந்திரிமார் முத
லான வர்களைக் கொண்டு அநேகதான தரு
மஞ்செய்வித்து, வந்த அரசர்களுக்கெல்லாம்
தகுந்த பரிசுகொடுத்து, யாவரும் மகிழவுற
உண்டி முதலியவற்றை யளித்து உபசரித்தார்.
அவ் வுபசரிப்பினால் அவ்வவர்கள் மகிழ்ந்து
ஆனந்த மடைந்தவர்களாய் வந்த தாச
ராஜன் முதலான சகலரும் வீஷ்மாச்சாரி
யிடத்தில் விடைபெற்று அவரவரிருப்பிடம்
போய்ச் சேர்ந்தார்கள்.

இங்கே சந்தனு மஹாராஜன் பரிமள
கந்தியோடு கூடிக்கலந்து, மதன ராஜனால்
நேரிட்ட போரை வெற்றிகொண்டு கலவியிற்
களித்து வாழ்ந்து வருகிற நாளில், சூரியனைப்
போலவும் சந்திரனைப்போலவும் இரண்டு புத்
திரர்களைப்பெற்று, சித்திராங்கதன்-சித்திரவீரி
யனென்று இருவர்க்கும் பெயரிட்டு வளர்த்து,
நாலுவேதம்-ஆறு சாஸ்திரம்-அறுபத்து
நாலு கலைக்கியான முதலியவற்றைப் போதி
த்து, வில் வித்தை முதலியவற்றையுங் கற்பித்
தான். அப்புத்திரர்கள்-கரு-ககூ-வயதுடைய
வர்களான காலத்து, சந்தனு மஹாபரம
பதஞ்சேர்ந்தான். வீஷ்மரும் இவ்விரண்டு
புத்திரர்களும் தந்தைக்குச் செய்யவேண்டிய
விந்தையான கடமைகளை இயற்றி, நீர்க்கடன்
முதலியவற்றை நல்கி, பின்பு வீஷ்மர் முன்
கூறிய வாக்குதத்தத்தின்படி ஐம்பத்தாறு தே
சத்தரசர்களும் அறியத் தன் பட்டத்தைச் சித்
திராங்கதனுக்குக் கட்டினார். சித்திராங்கதன்
பட்டாபி ஷேகஞகித் தந்தையிலும் எண்
மணங்கதிகமாகத் தான தருமங்களைச் செய்து,
தன்னுயிரைப்போல் மன்னுயிர்களைப் பாது
காத்து வருகிற நாளில், அந்தர லோகத்தி
லிருந்து கந்திருவர்க்கெல்லாம் தலைமையாளி
யாய் அரசுசெய்து வருகிற சித்திராங்கத
னென்பவன், நமது பெயரைத் தரித்துப்
பூலோகத்தில் ஒரு மானிடன் அரசு செலுத்து
கிறதா வென்று பொறாமைகொண்டு, அவ
னுடனெதிர்த்துப்போர் கொடுத்து வெல்லு
வோமென்றால் வீஷ்மனிருக்கிறான். அவன்
வில்லெடுத்தால் நமது உயிரைக்கொள்ளை
கொள்ளாமல் விடானென்று அஞ்சி, அவ
னோடு நேரிற் சென்று போர்கொடுப்பது
தகுதியல்ல வாதலால் சமயம்பார்த்து இரவிற்
சிரச்சேதஞ் செய்யவேண்டுமென்று யோ
சித்து, அச்சமயம் எந்நாளில் நேரிடுமென்று
எதிர் பார்த்திருந்தான். இங்கே சித்திராங்
கதன் ஒரு நாள் இரவில் வேடிக்கை யார்த்த
மாய் ஓரிடத்திற் றனித்து இருந்தான். அந்
தச் சமயத்திற் கந்தருவர்க் கரசனான சித்தி
ராங்கதன் இச் சித்திராங்கதனுடைய சிரசைக்
கொண்டுபோய் விட்டான். இந்த சேதி பரி
மளகந்தி யறிந்து, வீஷ்மரிடத்துச் சென்று
ஓவென் றழுதாள். வீஷ்ம ரதுகேட்டு மன
வருத்த மடைந்து, சித்திராங்கதன் என்னும்
கந்தருவன் நேராக வந்து போராடப்பயந்து
நமது சிராளனைக் கொன்றான். அவனோடு
போர்க்கொடுப்பது தகுதியல்ல இதோ யிருக்
கிற சித்திர வீரியனுக்குப் பட்டங்கட்டுகிறேன்
தாயே என்று இனிய வசனங்களினால் சில
நீதி யெடுத்தோதி, அச் சித்திர வீரியனுக்குப்

பட்டங் கட்டினுர். அச் சித்திர வீரியன் மநு சாஸ்திரவிதி பிசகாமல் தரும தேவதையை நான்கு பாதத்திலேயும் நடக்க செய்து செங் கோல் நடாத்தி வந்தான். இந்த சித்திர வீரி யனுக்கு உ௦-வயதாயிற்று. பரிமளகந்தி மூத் த குமாரனுகிய வீஷ்மரிடத்து வந்து, சிறுவ னுக்கு மணம் புரியவேண்டுமே அதற்குத் தகுந்த முயற்சிசெய் மகனே யென்று கூற, வீஷ்மர் அன்னை வாக்கியத்தை அங்கிகாரஞ் செய்து, அவ்வாறே மணஞ்செய்விக்கிறே னென்று உறுதி கூறி, அந்த அம்மனை அந் தப் புரத்துக்கு அனுப்பிவித்து, தான் தனியே யிருந்து விவாக விஷயத்தைக்குறித்து யோ சித்திருக்கிற தருணத்தில் சில தூதர்கள் வீஷ்மரிடத்து வந்து வணங்கி, பயபக்தி யுடனே வாய் பொத்தி எதிர் நின்று சொல்லு கிறுர்கள்.

### வீஷ்மர் சித்திரவீரியனுக்கு விவாகஞ் செய்வித்தல்.

ஓ ஸ்வாமி! காசி தேசத்தரசன் அருமை யான தவஞ்செய்து, அம்பா-அம்பிகை-அம் பாலிகை-என்று மூன்று புத்திரிகளைப்பெற்று, மிகுந்த காதலோடு வளர்த்துவந்தான். அப் புத்திரிகள் பருவகாலத்தை அடைந்தார்கள். அரசன் அதுகண்டு சுயம்வரஞ் சாட்டி, ஐம் பத்தாறு தேசத்தரசர்களுக்கும் தூதுவர் களால் தெரிவித்தான். தங்களுக்கு அச் சேதி யைத் தெரிவிக்க வந்தோமென்ன, வீஷ்மர் இவ்வசனங்களைக்கேட்டு, நாம் ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்கும் தலைவனுக இருக்க, இந்தக் காசிராஜன் ஏன் நமக்குத் தெரிவிக்க வில்லை. தாசராஜனேடு சம்பந்தஞ் செய்ததை மனதில் வைத்தவனு யிருக்கிறுன் போலும், நல்லது நாமே சென்று நமது தம்பிக்கு அம் மூன்று கன்னிகையையு மணஞ் செய்விப் போம். யாராவது நிந்தை கூறுவாராகில் அவர்களையெல்லாம் யமபுரத்துக்கனுப்பி விடு வோமென்று மனதில் தீர்மானித்து, தம்பி யாகிய சித்திர வீரியனை அழைத்து. இவ்வர லாற்றைக்கூறி, அங்குதானே கங்கை முதலிய தீர்த்தங்களினுல் ஸ்நானம் ஆட்டி, ஆடை ஆபரணங்களினுல் அலங்கிரதஞ்செய்து திரு மணக் கோலமுஞ் செய்வித்து, மந்திரி முத லானவர்களை அழைத்து, காசிராஜன் சுயம் வரத்துக்குச் செல்லவேண்டும். ஒருவேளை யுத்தமும் நேரிடும். நீங்களெல்லாம் போர்க் கோலங்கொண்டு நமது சேனைகளோடு வா ருங்களென்று கட்டளையிட்டு, தாமும் போர்க் கோலங்கொண்டு தம்பியைத் தேரின்மேலே ற்றி வெளிப்பட்டார். மந்திரி முதலானவர் களும் சேனைகளோடு வந்து கலந்தார்கள். வீஷ்மர் அதி வேகமாக ரதத்தை நடத்தச் சாரதியை எச்சரித்தார். சாரதி அவ்வாறு நடத்திக் கங்காதீரத்தினருகில் வருகிறபோது, கங்கை தன் புத்திரனது வரவைப்பார்த்து மகிழ்ச்சியடைந்து வதனத்தைத் தடவிக் கொஞ்சுகிறதுபோலத் தென்றலா லெழும் கங்கா நதியினலைகளின் திவலை வீஷ்மர் முகத் திற் படிந்து மிகுந்த குளிர்ச்சியைக் கொடு த்தது. வீஷ்மர் அக்கங்கை யருகிற் சற்றுநேர மிருந்து இளைப்பாறி, மீண்டும் ரதமேறி காசி நகரத்தருகிற் சென்றுர். இந்தச்சேதி தூது வர்களாற் காசிராஜன் அறிந்து, தனது தளத்தோடு எதிர்கொண்டு வந்து வந்தனை வழிபாடு செய்து அழைத்துப்போய் மணப் பந்தலில் ஒரு திவ்ய சிங்காதனத்தி லிருத்தி செய்யவேண்டிய மரியாதையைக் குறைவின் றி நிறை வேற்றினுன். வீஷ்மர் தமது தம்பி முன்னிருக்கத் தாம் பின்னிருந்தார். வீஷ் மரைக் கண்ட அரசர்கள் முகமெல்லாம் சந்தி ரனைக்கண்ட தாமரையைப்போல் வாடி யிருந் தன. பின்பு காசிராஜன் தாதிகளை அழை த்து, என் புத்திரிகளை அலங்கிரதஞ் செய்து கொண்டு வாருங்களென்று கட்டளை யிட்டான். தாதிகள் அவ்வாறு அம் மூன்று புத்திரிகளை யும் ஆடை ஆபரணங்களினுல் அலங்கிரதஞ் செய்து மூவர் கையிலும் மூன்று மாலையைக் கொடுத்து அரசர்கள் நிறைந்திருக்கிற மணப் பந்தலில் அழைத்து வந்தார்கள். அங்கே சில தாதிகள் அம் மூன்று கன்னிகைகளுக்கும் வந்திருக்கிற அரசர்களுடைய பேர் ஊர் குல முதலியவற்றைக் கூறிக்கொண்டு வந்தார்கள் இவ்வாறு கூறி வருகிறபோது சந்திரகுல மணியாகிய சந்தனு மஹாராஜன் புத்திரன் சித்திரவீரியன் இருக்கிற விடத்து அம்மூன்று கன்னிகைகளும் வந்து நின்றுர்கள். தாதிகள் அவ்வரசனது நாடு நகர முதலிய சிறப்புகளை எடுத்தோதி, மறுபடியும் அத்தாதிகள் சொல் லுகிறுர்கள்.

ஓ காசிராஜன் தவத்துதித்த கன்னியர் களே! இவ்வரசன் பரதகுலத்துக் கதிபதி யாகுந் தாசராஜன் புத்திரியாகிய பரிமளகந்தி யின் குமாரனென்று கூறினுர்கள். அக் கன் னிகைகள் இவ்வசனங்களை கேட்டும் அச் சித்

திர வீரியனுடைய சவுந்தரியத்துக்கு மகிழ்ந்து மாலையிட யத்தனித்தபோது, பக்கத்திலிருக்கிற அரசர்களெல்லாம் இழி குலத்தானுக்கு மாலையிடுகிறது தகுதியாவென்று கூறத் தொடங்கினார்கள். அந்தச் சத்தம் சீராய்ச் சபையிலிருக்கும் அரசர்கள் செவியிற் படுகிறதற்கு முன் வீஷ்மருடைய கைவில்லின் குணத்தொனி அவ்வவர்கள் செவியிற் பட்டது. உடனே தம்பி சித்திர வீரியனும் அவனோடு சேர்ந்த மந்திரி முதலானவர்களும் வில்லை வளைத்துக் குணத்தொனி செய்தார்கள். வீஷ்மர் கொண்ட கோபாக்கினிக்கு உருத்திர மூர்த்தியினுடைய நுதலாக்கினியும் ஓர் நிகரன்று. இப்பால் மலையிலிருந்து இரண்டு சிங்கங்கள் குதித்தாற்போல இருவரு மஹா உக்கிரங்கொண்டு சிங்காதனத்தை விட்டிறங்கி, வந்திருக்கிற அரசர் முகத்தைக் கடுகடுத்து நோக்கிச் சொல்லுகிறார்கள்: ஓ சிறந்த குலத்திற் பிறந்த அரசர்களே! இழி குலத்திற் பிறந்த எங்களை வெற்றி கொண்டு இக் கன்னிகைகளை மணமாலை இடுங்கள், இந்த க்ஷணம் எங்களோடெதிர்க்கத் தயை செய்து வாருங்களென்றழைத்துச் சாரதிகளை நோக்க, சாரதிகள் அவர்கள் ரதத்தைக் கொண்டுவந்து எதிரில் நிறுத்த, அவ்விரதங்களில் மகா வீரதங்கொண்டிருக்கிற வீஷ்மரும் சித்திர வீரியனுமாகிய இருவரும் ஏறித் தங்கள் தங்கள் ஜெய சங்கத்தை வாயில்வைத்துத் தொனித்தார்கள். அரசர்கள் இவ்விருவர் கூறிய வசனங்களைக் கேட்டும் இவர்கள் கொண்ட போர்க்கோலத்தைக் கண்டும் மானந்தலைக்கொள்ள வெழுந்து போர்க்கோலங்கொண்டு, தங்கள் தங்கள் ரதங்களில் ஏறிச்சேனைகளோடு கலந்து, வீராவேச மேற்கொண்டவர்களாய்ச் ஜெய சங்கத்தைச் சப்தித்து, வில்லை வளைத்துக் குணத்தொனி செய்தார்கள். வீஷ்மர் தன் சேனைகளை எச்சரித்து ரதத்தை அரசர்கள் மேற் செலுத்தினார். மற்ற அரசர்களும் தங்கள் தங்கள் சேனைகளை எச்சரித்து ஒரே முகமாக வீஷ்மர்மீது திரும்பினார்கள். அப்போது காலாளோடு காலாள்களும் குதிரை வீரரோடு குதிரை வீரரும் யானை வீரரோடு யானைவீரரும்-தேர் வீரரோடு தேர் வீரரும்-வில்லாளிகளோடு வில்லாளிகளும் எதிர்த்து ஒருவரையொருவர் வெற்றி பெற விருப்பங்கொண்டு, வாள்-கதை-இருப்புலக்கை-பிண்டி-பாலம் வேல்-சக்கரம்-தோமரம்-ஈட்டி-எறிஈட்டி-பாங்கு-கடாரி-குடோரி-பல்லயம்-கத்தி-சுருள் கத்தி-சூலம்-முஷ்டி-முதலாகிய படைகளால், வெட்டியும் குத்தியும் தள்ளியும் மிதித்தும் உதைத்தும் அடித்தும் இவ்வகையாக இருதிறத்தாருடைய சேனைகளும் போராடுகிறபோது, வீஷ்மரும் சித்திர வீரியனும் வளைத்திருக்கிற வில்லில் அனேக திவ்ய பாணங்களைச் சோனைமாரி வருஷித்ததுபோல் வருஷித்தார்கள். அதனாற் பகைத்த அரசர்களுடைய சேனைகள் அனைத்தும் சின்னபின்னமாகி, மரணமடைந்தவர் போக மற்றச் சேனைகளில் அவயவம் பழுதுறாதவர்களில்லை. இதனை நோக்கிய அரசர்கள் கனவருத்தமடைந்து, ஆ! ஆ! கடலுடைபட்டதுபோலிருக்கிற நமது சேனைகளை ஓர் வாவியுடைபட்டதுபோல் பின்னமாக்கினானென்று சினங்கொண்டு, சகல அரசர்களும் ஏககாலத்தில் ஒன்றாகக்கூடி, வீஷ்மரையும் சித்திர வீரியனையும் சூழ்ந்து அஷ்டதிசையிலும் நிறைந்து யுத்தஞ் செய்தாலன்றி நாம் வெற்றி பெறோமென்று உய்த்துணர்ந்து மநுசாஸ்திர விதி தப்பி, எல்லா அரசர்களும் ஒன்றாக வந்து சூழ்ந்து, தங்கள் தங்கள் கையில் வளைத்தபடி பிடித்திருக்கிற கார்முகத்திற் போர்முகத்துக்குரிய கூறிய பாணங்களை ௧-௰-௱-ஆயிரம்-கோடி-பத்து கோடியாகத் தொடுத்து வீஷ்மர் சேனைகளை அதாகதப் படுத்துகிறபோது, வீஷ்மர் கண்களிற் புகையெழ நோக்கி, அண்டகடாகங்களும் பொடிபட அட்டகாசஞ் செய்து, தாமொருவராகவே எழுந்து, கார்முகத்தில் அனேக திவ்ய பாணங்களைத் தொடுத்து, தம்மீதுந் தம்பிமீதும் சேனைகள் மீதும் வருகின்ற பாணங்களையெல்லாம் கண்டதுண்டமாகக் கண்டித்து, மறுபடியுந் தமதுவில்லில் திவ்விய அர்த்தசந்திர பாணங்களை அளவில்லாமற் றொடுத்துச் சில அரசர்களுடைய சாரதிகளையும் குதிரைகளையுங் குறைத்து, சில அரசர்களின் அவயவங்களைப் பழுதாக்கி, சில அரசர்களின் மகுடத்தை உடைத்து மார்பைப் பிளந்து, சில அரசர்களின் வில்லை முறித்துக் கவசத்தைப் பொடியாக்கி, சில அரசர்களினுயிரைக் கொள்ளைகொண்டு, நன்றாகப் புஷ்பித்திருக்கிற தாமரைத் தடாகத்தில் யானைகள் விழுந்து கலக்கினாலெப்படியோ அப்படிபோலச் சேனைகள் மீது கவிழ்ந்து சகல தளத்தையும் நாசப்படுத்துகிறபோது, உயிர்விட்ட அரசரும் உயிரின்மேலிச்சைவைத்த அரசரும் போக மற்ற அரசர்கள் யாவரும் ஒன்றாகக்கூடி, மறுபடியும்

எதிர்த்து வில்லே வளைத்து, இந்திராஸ்திரம்-வருணஸ்திரம்-வாய்வாஸ்திரம்-குபேராஸ்திரம்-சூரியாஸ்திரம்-யமஸ்திரம்- முதலாகிய அஸ்திரங்களைத் தொடுத்து, மஹா உக்கிரத்துடனே நின்றார்கள். வீஷ்மர் அப் பகைவர் தொடுத்த அஸ்திரங்களை வருகிற குறிப்பினால் இந்த இந்த அஸ்திரங்களென்று உணர்ந்து, ஏககாலத்தில் வருகிற அஸ்திரங்களுக்குத் தனித்தனி அஸ்திரந் தொடுத்தால் அதற்குள் அஸ்திரங்கள் வந்து விடுமென்று யோசித்து, எல்லா அஸ்திரங்களையும் கவுளீகரஞ் செய்யத் தகுந்த காந்தருவாஸ்திரத்தை எடுத்து நிறுத்தி, பூசை நைவேத்தியங் கொடுத்து, மந்திரோபதேசஞ் செய்து தொடுத்து விட்டார். இந்த அஸ்திரம் வில்லே விட்டு வெளிப்பட்ட மாத்திரத்தில் ஒருபக்கம் மின்னல் - ஒரு பக்கம் மழை - ஒருபக்கம் இடி - இவை முதலிய வற்றை வெளிப்படுத்தி, அஷ்ட திக்குப்பாலகரையும் அஷ்ட வசுக்களையும் அவரவர்கள் வாகன யுதங்களோடு உண்டாக்கிற்று. அதனால் எதிரிகள்விட்ட அஸ்திரங்களெல்லாம் நாசமாயின. உடனே வீஷ்மர் தன் வில்லை வளைத்து, அநேக முள்ளம்பையும் பிறைமுக வம்பையும் தொடுத்தார். இவ்வம்புகளினால் அரசர்கள் யாவரு மனநொந்து, இனி வீஷ்மனோடு போராட எண்ணுவது துன்பமென்று தீர்மானித்து, இவனிடத்தினின்றுந் தப்பி எந்தவிதமாய் ஓடிப்போவோமென்று அவ்வவர்கள் வந்த திசையை நோக்கினார்கள். இந்தக் குறியை வீஷ்மர் கண்டு, உடனே தமது ஜெயசங்கத்தைச் சப்தித்தார். சித்திர வீரியனும் மற்றவர்களும் தங்கள் தங்கள் சங்கத்தைத் தொனித்தார்கள். அவ்வாறு தொனித்தும் ஓரரசரும் வந்தெதிர்க்கா திருத்தலை யுணர்ந்து, வீஷ்மர் தமது தளத்தில் ஜெய பேரிகையை முழக்கக் கட்டளையிட்டு, அம்பா - அம்பிகை - அம்பாலிகை என்கிற மூன்று கன்னிகைகளையும் முத்துச் சிவிகையிலேற்றிக்கொண்டு தமது நகரத்தை நோக்கிச் சென்றார். அம்பா என்னுங் கன்னிகை தன் தாதியர்களில் ஒருத்தியை அழைத்து, ஓதாதி! நான் சாளுவ ராஜன்மீது காமியா யிருக்கிறேனாதலால் இந்தச் சேதியை வீஷ்மாசாரிக்குத் தெரியப்படுத்தென்று கூற, தாதி வீஷ்மாசாரியிடத்துச் சென்று வணங்கி அம்பா கூறிய வற்றைச் சொல்ல, வீஷ்மர் அந்த அம்பா கருத்தின்படி சாளுவராஜனை மணஞ் செய்து கொள்ளச்சொல்லி உத்தரவு கொடுத்து, தமது காவலாளிகளிற் சிலரைக் கூட்டிச் சாளுவ ராஜனிடத்து அவளை விட்டுவரும்படிக் கட்டளையிட்டு, மற்ற இரண்டு கன்னிகைகளை அழைத்துவந்து, தமது நகரத்தை அலங்கரித்து, நல்ல முகூர்த்தத்திற் சித்திரவீரியனால் அவ்விரண்டு கன்னிகைகளுக்கு மங்கிலியஞ் சூட்டிவித்து, அனேக தான தருமங்கள் செய்து, வேத வேதியர்கள் மகிழச் சொர்ன வருஷம் பொழிந்து, நகரத்தி லுள்ளவர்க்கெல்லாம் விருந்து செய்து, மிகுந்த சிறப்புடன் கலியாணத்தை நிறைவேற்றினார்.

பூமிப்பிராட்டி கமலப்பிராட்டி சமேதனாகிய திருமால்போல் சித்திரவீரியன் அம்பாலிகை அம்பிகை என்னு மிரண்டு கன்னிகை சமேதனாகி, இரண்டு ரதியு மதனும்போல மூவருங் கூடிக் கலந்து மகிழ்ந் திருந்தார்கள். வீஷ்மரிடத்து விடைபெற்றுச் சாளுவ ராஜனை மணம் புரியக் கருதிச்சென்ற அம்பா சாளுவராஜனைக்கண்டு வணங்கிச் சொல்லுகிறாள்: ஓ ராஜனே! நெடுநாளாக நின்மீது காமியாயிருந்த என்னை நீயே மணம் புரிய வேண்டும். ஒரு வேளைவீஷ்மர் என்னை அழைத்துப்போனதைக் குறித்து நீ யோசிக்க வேண்டுவதில்லை. ஏனென்றால், என் கருத்தை நான் வெளியிட்டேன் அதற்கவர் ஒத்துக் கொண்டு உன்னிடத்துக்கனுப்பினார். ஆதலால் என்னை நீ தடையின்றி மணம்புரியென்று வேண்ட, சாளுவ ராஜன் நகைத்து, ஓ பெண்ணே! உன்னை வீஷ்மன் சிறையெடுத்துப் போயின பின்பு நான் மணம் புரிந்தால் என்னோடொத்த அரசர்கள் நகைப்பார்கள். ஆதலால் உன்னை மணம் புரியேன் வீஷ்மனிடத்திற் சென்று அவனையே மணம் புரியென்று மறுத்து விட்டான். அம்பா நெடு மூச்செறிந்து, கன வருத்தத்தோடு அத்தின புரத்துக்குவந்து, வீஷ்மரைக் கண்டு வணங்கி, ஓ மஹாநுபாவா! சாளுவ ராஜனிடத்துச் சென்ற என்னை ஒருவர் கையில் அகப் பட்டுப்போயின உன்னை மணம் புரியேனென்று மறுத்து விட்டான். இனி உமது பாதமே புகலிடமாக எண்ணி வந்தேன். என் கருத்து மகிழ்வெய்த நீங்களாவது உங்கள் தம்பியாவது மணம்புரியுமென்று நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்கிற நான்கையும் விட்டுச் சொன்னாள். வீஷ்மர் அதற்குச்சிரித்து அவளை நோக்கிச்

சொல்லுகிறார்: ஓ அம்பா! நீ ராஜகுமாரத்தியாயிருந்தும் சொல்ப ஜாதி ஸ்திரீகள் வசனிக்கிறது போல் வசனிக்கிறாய் முன்னம் சாளுவராஜன்மீது காமியா யிருக்கிறேனென்று தாதியால் தெரிவித்தாய் அக்காதலைக் கெடுக்கொணாதென்று உன்னை விடுத்து மற்ற இரண்டு கன்னிகைகளை என் தம்பிக்கு மணஞ்செய்வித்தேன். இப்போது சாளுவராஜன் மணம்புரியேனென்றால் என்னிடத்து வந்து முறையிடுகிறாய் நானோ மணம் புரிகிறதில்லை. தேவர்களறியச் சத்தியஞ் செய்திருக்கிறேன். என் தம்பிக்கோ இரண்டு மனைவியரிருக்கிறார்கள். மேலும் நீ ராஜ புத்திரியாய் ஒருவர் மீது காதலுற்றபோதே அவனே உனக்குக் கணவன். அவனையே எவ்விதத்திலேனுங் களிப்புறச்செய்து மணம் புரியவேண்டும். அவன் வெறுப்புற்று நீக்கிவிடுவானாகில் வேறொரு புருஷனைத் தேடுவது தகுதியல்ல. ஆகையால் உனக்கு இச்சையான விடத்திற்றானே நடவென்று கடுகடுத்துக் கூற, அம்பா மிகுந்த துன்பத்தை யடைந்து, நமது வாயினால் நமக்கே கெடுதி தேடிக்கொண்டோமே யென்று தனக்குள் தானே நினைத்துக்கொண்டு, தன் நகரத்துக்கு வந்து தந்தை தாளில் வணங்கி, ஓவென்றலறி நடந்த விருத்தாந்தத்தை உரைத்தாள். காசிராஜன் இதற்கென்ன செய்கிறதென்று சற்றுநேரம் ஆலோசித்து, மகளைப்பார்த்துச் சொல்லுகிறான்: ஓ அம்பா! வீஷ்மன் உன்னை மணம்புரிய என்னாற் கூடியமட்டும் சில பெரியோர்களைக் கொண்டு தெரிவிக்கிறேன். அதன்மேல் ஒத்துக்கொண்டால் இஷ்டப்படி நீ மணம்புரி ஒத்துக்கொள்ளாவிட்டால் அவன் பலவான் நான் என்ன செய்யப்போகிறேன்? அப்பால் உன் தலைவிதி என்று பிரியவசனஞ் சொல்லி சில பெரியோர்களை விட்டு வீஷ்மருக்குச் சமாதானங்கூற, வீஷ்மர் மறுக்க, அந்தச் சேதியை அப் பெரியோர் காசிராஜனுக்குத் தெரிவிக்க, காசிராஜன் தன் புத்திரிக்கு உரைக்க, புத்திரி இதனை கேட்டு மிகுந்த வருத்தமடைந்து சில பெரியோர்களை அழைப்பித்து, வீஷ்மன் இப்பூமண்டலத்திலிருக்கிறவர்களில் யார்சொல்லைச் சிலாக்கியமாயெடுத்துக் கொள்வானோ அவர்களைத் தெரிவியுங்களென்று வினவ, அப் பெரியோர்கள் அவ் வீஷ்மருக்குக் குருவாகியும் அதிக அன்பாகியு மிருக்கிற பரசுராமமூர்த்தி வாக்கைத் தடுக்கானென்று விளம்பினார்கள்.

இப்பால் அம்பா அப் பரசுராம மூர்த்தியிடத்துச்சென்று நமதுகுறையை நிறைவேற்றிக் கொள்ளுவோமென்றெண்ணி எழுந்து, தந்தையிடத்து விடை பெற்று, சில தாதிகள் தன்னைச் சூழ்ந்துவர முத்துச்சிவிகையிலேறி, பரசுராம மூர்த்தியினுடைய ஆசிரமத்துக்கு வழி கேட்டுக்கொண்டு செல்கிறபோது ஒரு வனத்தில் ஒரு முனிவர் எதிர்ப்பட்டார். அம்பா அவரைக்கண்டு, முத்துச் சிவிகையை விட்டிறங்கி அவரடியிற்பணிந்து, தன் ஊர்பெயர் தந்தை பெயர் தன் பெயர் எடுத்துரைத்து, தன் வரலாற்றையுங் கூறினாள். அம் முனிவர் கேட்டு வியப்படைந்து, அம்மா! நான் உன் தந்தையின் சகோதரியின் புத்திரன். நீ இந்த வழியே சென்றால் இவ்வழி கந்தமாதனத்திற் கொண்டுபோய்விடும். அம் மலையிற் பரசுராம மூர்த்தியிருக்கிறார். அவரைக்கண்டு உன்குறையைக் கூறுவையாகில் உன் கருத்து நிறைவேறும். மற்றொருவரால் நிறைவேறாதென்றுரைத்துப் போயினர். பின்பு அம்பா முத்துச் சிவிகையிலேறி, அவ் வழியே சென்று கந்தமாதனம் வந்து, பரசுராம மூர்த்தியினுடைய ஆசிரமத்தைத் தேடிக் கண்டவளாய் அவ்வாசிரமத்தின் வாயற்படியி லிருக்கிற அம் மூர்த்தியின் மாணாக்கருக்கு நமஸ்காரஞ் செய்து சொல்லுகிறாள்: ஓ மஹாத்மாக்களே! நெடுந் தூரத்திலிருந்து ஒரு ராஜகுமாரத்தி தங்கள் பாத தரிசனத்திக்காகக் கடைவாயலில் வந்திருக்கிறாளென்று பரசுராம மூர்த்திக்குத் தெரிவியுங்களென்று கூற, அவ் வாயிலோர் அவ்வாறு சென்று பரசுராமமூர்த்தியை வணங்கிச் சொல்ல, பரசுராமமூர்த்தி வியப்புற்று உள்ளேவரக் கட்டளை யிட்டார். வாயிலோர் அம்பாவைக் கண்டு ஆசிரமத்துக்குவர உத்தரவாயிற்றென்றார்கள். அம்பா ஆசிரமத்துட் சென்று, சந்திர சடாதர சாம்பவ மூர்த்திக்கொப்பாகி விளங்குகின்ற பரசுராம மூர்த்தியைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து பயபக்தியுடனே வாய்பொத்தி எதிர் நின்றாள். பரசுராமர் அம்பாவை ஆசிர்வதித்து, ஓ அம்மணி! நீ யார்? இவ்விடத்துக்கு வரவேண்டிய காரணமென்ன சொல்லென்று கேட்க, அம்பா சொல்லுகிறாள்.

### பரசுராமருக்கும் வீஷ்மருக்கும் போர்

ஓ ஸ்வாமி! நான் காசி ராஜனுடைய சிரேஷ்ட புத்திரி நானும் என் சகோதரிகள் இருவரும் பக்குவ காலமடைந்ததை என் தந்

தை அறிந்து சுயம்வரஞ் சாட்டினர். அச் சுயம்வரத்திற் சந்திரவமிச சிகாமணியாகிய சந்தனு மஹாராஜன் சிரேஷ்ட புத்திரனாகிய வீஷ்மாசாரி வெற்றிபெற்று எங்கள் மூவரையும் தன் தம்பிக்கு மணம்புரியக் கொண்டு போகிறபோது, நான்சாளுவராஜன்மீது காதலாகி, அக்காதலை வீஷ்மாசாரிக்குத் தெரிவித்தேன். அவர் என் கருத்தின்படி என்னை விட்டுவிட்டார். சாளுவனிடத்துச் சென்றபோது அச்சாளுவன் ஒருவர் கைக்குள்ளாகிய உன்னை மணம் புரியேனென்று மறுத்தான். மறுபடியும் வீஷ்மாசாரி யிடத்துச் சென்று நாணம்-மடம்-அச்சம் பயிர்ப்பென்கிற நான்கையும் விட்டு என்னை மணம்புரியுமென்று அநேக விதமாக வேண்டிக்கொண்டும். அவர் ஒத்துக்கொள்ளாமல் மறுத்துவிட்டார். தங்களிடத்து முறையிட்டுக்கொண்டால் அவ்வீஷ்மாசாரிக்குச் சொல்லி என் மனக்குறையை முடிப்பீரென்று தங்களை நாடி வந்தேன். இப்பால் தங்களிஷ்டம் என் பாக்கியம் என்று இரங்கினள். அதற்குப் பரசுராமமூர்த்தி மகிழ்வடைந்து, ஓ அம்பா! உன் கருத்தின்படியே செய்கிறேனென்று பக்கத்தி லிருக்கிற ஏவலாளிகளை நோக்கி, என் ரதத்தைக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட ஏவலாளிகள் ஒரு நிமை நேரத்திற் சாரதியோடு சகல படைகளும் நிறைந்திருக்கிற மஹா ரதத்தைக்கொண்டு வந்து நிறுத்தினர்கள், பரசுராமமூர்த்தி அம்பாவோடுதானும் ரதமேறி, பத்தாநாள் அஸ்தினா புரத்துக்கு வந்து, தமது வரவை வீஷ்மாசாரிக்குத் தெரிவித்தார். வீஷ்மாசாரி இவர் வந்தசேதி தெரிந்த உடன் திடுக்கென்றெழுந்து, பூசாதிரவியம் காணிக்கை முதலிய வற்றை எடுத்துக்கொண்டு மந்திரிகள் புடைசூழ அதிவேகமாகவந்து, பரசுராமமூர்த்தியைக்கண்டு வலம் வந்து, சோடச உபசாரங்களோடு சாஷ்டாங்க நமஸ்காரமுஞ்செய்து, பயபக்தியுடனே வாய் பொத்தி எதிர் நின்று, ஓ குருஸ்வாமி! எங்கள் குலத்தோர் செய்த மாதவமோ? நான் செய்த பூஜாபலமோ? தேவரீர் எளியேன்மீது கிருபை கூர்ந்து இந் நகரத்துக் கெழுந்தருளியது என்று அநேக விதமாகத் துதித்தார். பரசுராமமூர்த்தி மகிழ்வடைந்து ஆசீர்வதித்து, வீஷ்மரை நோக்கிச் சொல்லுகிறார்: அப்பா வீஷ்மா! நீ சந்திரவமிச சிகாமணியாக இருந்தும் இதோ விவாகமில்லாமலிருக்கிறது தகுதியல்ல இதோ இருக்கிற அம்பாவை மணம்புரி அதன்மேல் இம்மை இன்பமடைதலோடு மறுமை இன்பமுமடைவாய். என் வாக்கைத் தடுக்காமல் ஏற்றுக்கொள்ளென்று கூற, வீஷ்மாசாரி இவ்வசனங்களைக் கேட்டு, இரண்டு செவியிலுங் கரத்தை வைத்து மூடி, நாம் செய்திருக்கிற சபதம் குருஸ்வாமிக்குத் தெரியாததலால் இவ்வசனங்களைகூறினர்: அறிவித்தால் பின்பு இவ் விஷயத்தைக்குறித்து வசனியாரென்று கருதி, பரசுராமமூர்த்தியை வணங்கி, தந்தை வியாகூலம் தீரும் பொருட்டுச் செய்த சபதத்தை ஆதி யோடந்தமாகத் தெரிவித்து, நான் மணம் புரியேனென்று பரசுராமமூர்த்தியின் வாக்கையுந் தடுத்தார். பரசுராமமூர்த்தி நமது வாக்கைத் தடுத்தானே என்று சினங்கொண்டு, கண்களில் நெருப்பெழ நோக்கி, அடா வீஷ்மா! என் வாக்கைத் திரிமூர்த்திகளுந் தடுக்கார்கள் நீ ஒரு ராஜன் என் சொல்லைத் தடுத்தாயல்லவா? என் வாக்கின்படி அம்பாவை மணம்புரிந்தா லாச்சு இல்லாவிட்டால் வில்லெடுத்துப் போர்செய்ய வா உன்றலையை சூரிய வமிசராஜர்கள் தலைபோ லுருட்டிகிறேனென்று வீரா வேசங்கொண்டு மஹா உக்கிரத்துடன் அழைக்க, வீஷ்மர் சுற்றுலோசித்து, தேவர்களறியக் கூறிய சப்தத்தைக் கெடுப்பதைவிட நமது குருமுன்னிலையில் தேகத்தை விடுதல் சிறப்பும் புகழு முண்டென்று தீர்மானித்து, பரசுராமரை வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! உமது வில் வணங்கினல் சொற்கமத்திய பாதாள லோகமும் வணங்கும் நான் ஒருவன் வணங்காதிருப்பனே? ஆகிலும் நான் கூறிய சப்தத்தை மாத்திரம் தடுக்கேன் அது முன்னிலையில் உயிரைக் கொடுப்பேன் - இது என் உறுதி அப்பால் தங்களிஷ்டம் என்றார் பரசுராமமூர்த்தி இவ் வசனங்களைக்கேட்டுக் கடுகடுத்து, வடவா முகாக்கினியைப்போலக் கோபாக்கினி சொல்லிப் வீஷ்மரை நோக்கிச் சொல்லுகிறார்: அடா வீஷ்மா! (வளர்த்தகடா கையிற் பாய்ந்ததுபோல்) கற்ற கல்வியெல்லாம் என்னிடத்தில்தானே-ஓதவந்தா யல்லவா? நல்லது இனித் தாமசம் செய்யாமல் போர்க் கோலங்கொண்டுவா வென்று புகல, வீஷ்மாசாரி இனியொரு தீர்ப்பில்லை நமது உயிர் முடிவதே தீர்ப்பென்று நினைத்து நால் வகைச் சேனைகளையும் நீக்கி, பரசுராமரைப் போலத் தாமும் ஒரு தேர்க்காரராகிப் போர்க் கோலங்கொண்டு யுத்தபூமியில்வந்து நின்றார்.

அப்போது பரசுராமரும் தமது ரதத்தை
யுத்த பூமியிற் செலுத்தி வீஷ்மரை நோக்கிச்
சொல்லுகிறார்: அடா வீஷ்மா! இனி ஏன் தா
மசம்? எடுவில்லை தொடுசரத்தை என்று புகல
வீஷ்மர் தேரிலிருந்தபடி பரசுராமமூர்த்திக்கு
அஞ்சலிசெய்து சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி!
நான் மிஞ்சிப் பாணம் தொடுக்கிறது தகுதி
யல்ல தாங்களே முன்னம் பாணம் தொடுக்க
வேண்டுமென்று வருந்திக்கேட்கப் பரசுராம
மூர்த்தி சினங்கொண்டு, கலகலவென்று
நகைத்துக் கண்களில் நெருப்புப் பொறி
பறக்க நோக்கி, நல்லது வீஷ்மா! உன் கருத்
தின்படியே இதோ தொடுக்கிறேன் பாணத்தை
என்று சொல்லிச் சூரியவம்சத்தை நாசப்
படுத்தின கோதண்டத்தை மூதண்டம் பிளக்க
வளைத்து, நாணியேற்றிட்டுத் தேவர்கள் செவி
செவிடுபடத் தக்கதாகக் குணத்தொனி செய்து,
அண்டங்களிடியச் சங்கத்தொனி காட்டி, (ரு)
அர்த்தசந்திர பாணங்களைத் தொடுத்துச்
சாரதியையும் குதிரைகளையும் இரண்டு
பாணத்தினால் நோகச் செய்து, மூன்று
பாணத்தால் வீஷ்மரைக் களைக்கப் படுத்தினார்
அவ் வீஷ்மர் அந்த ஐந்து பாணத்தையும்
ஏற்றுக்கொண்டு, தமது போர்முகத்துக் குரிய
கார்முகத்தை வளைத்து, நாணி ஏற்றிட்டுக்
குணத்தொனி செய்தார். அதுகண்டு பரசு
ராமமூர்த்தி தன் வில்லிற் கழுகிறது பூண்டு
மஹா கூர்மை பொருந்தி மின்னலைப்போற்
பளீர் பளீர் என்று ஜொலிக்கும் திவ்ய கணை
களில் நூறு கணைகளைத் தூண்டினார் வீஷ்மர்
அந்த நூறு கணைகளுந் தன்னிடத்து வருவ
தற்குமுன் சில கணைகளைவிட்டுக் கண்டித்தார்
பரசுராமமூர்த்தி கணைகள் வெட்டுண்டதை
நோக்கி வெகுண்டு, மிகுந்த வல்லமையையும்
பெற்றிருக்கிற பிறைமுக அம்பு-முள்ளம்பு-
கூடரம்பு - முதலியவைகளைக் கோடி கோடி
யாகச் சோனைவருஷம் சொரிந்தாற் போல்
ஓயாமல் தொடுத்தார் வீஷ்மர் எவ்வளவு கணை
கள் தன்னிடத்துக்கு வருகின்றனவோ அவ்
வளவு கணைகட்கு வெவ்வேறு கணைகளைத்
தொடுத்து அறுத்துப் பூமியிற் றள்ளினார்
பரசுராமமூர்த்தி வீஷ்மர் கைச் சாதுரியத்
தைக்கண்டு கிஞ்சித்து மகிழ்ந்து, இவனோடு
ஜாக்கிரதையா யிருந்து போராடவேண்டும்.
ஏனென்றால்-விளக்கில் தீவட்டி யுற்பத்தி இது
யாவர்க்கும் தெரியும் - தீவட்டி செய்கையி
லுயர்ந்தது அதுபோல் வீஷ்மன் நமது
மாணாக்கனா யிருந்தாலும், நம்மைவிட எண்
மடங்கதிகமான புத்தியும் சாதுரிய யுக்தியு
முடையவனா யிருக்கிறானென்று நிதானித்து
க-௰-௱-௲ - பதினாயிரம் - நூறாயிரம் - பத்து
நூறாயிரம் கோடி - சதகோடி - சங்கமாக சரங்
களைத் தொடுத்து, வீஷ்மருடைய ரதத்தை
அப்படி இப்படி அசையவொட்டாமற் சரக்
கூடம் போட்டார்.

வீஷ்மர் அனேக பாணங்களை விடுத்துத்
தன்னிரதத்தைக் கவிந்திருக்கிற பாணங்
களைக் கண்டித்து, இனி நாம் சும்மா யிருக்
கிறது தகுதியல்லவென்று பரசுராமமூர்த்திக்
கும் சாரதிக்கும் குதிரைகளுக்கும் சில பாணங்
களைத் தொடுத்து நோவச்செய்து பரசுராம
மூர்த்தியினுடைய ரதத்தை அப்பாற்போக
வொட்டாமற் றானும் சரக்கூடம் போட்டார்.
பரசுராமருக்கு மிகுந்த கோபாக்கினி மூண்டு,
கண்களை நெருப்பெழ நோக்கி, பிரமதண்டம்-
கால தண்டம் சத்தி - முதலியவற்றை விடுத்
ததுவுமன்றி, திவ்யாஸ்திரங்களையும் தொடுத்
துச் சரக்கூட்டை அதஞ்செய்து, விட்டார்.
வீஷ்மர் தன்மேல் வருகிற காலதண்ட முத
லியவற்றை யெல்லாம் அவ் வவற்றைக்
கொண்டு துணித்துப் பரசுராமமூர்த்தியை
நோவச் செய்தார். பரசுராமர் கைமிஞ்சிச் சில
கணைகளை விட்டு வீஷ்மர் மார்பைப் பிளந்தார்.
வீஷ்மர் சற்றுநேரம் மூர்ச்சையா யிருந்து
எழுந்து வில்லைவளைத்து, அநேக திவ்ய
பாணங்களைத் தொடுத்து, குதிரைகளை ரத்த
மயமாக்கி, சாரதியைச் சல்லடைக் கண்க
ளாகத் துளைத்து, பரசுராமர் சரீரத்தைச்
சக்கை சக்கையாகப் பிளந்தார். பரசுராமர்
மனங்கலங்கி மூர்ச்சையடைந்து எழுந்து,
மறுபடியும் வில்லைவளைத்து, அதிக தீக்ஷணிய
மான பாணங்களைத் தொடுத்து, வீஷ்மர் தன்
னைத் துன்பப்படுத்தினதுபோலத் தான் அவ்
வீஷ்மரைத் துன்பப் படுத்தினார். அதற்கு
வீஷ்மர் அஞ்சாமல் சஞ்சலப்படாமல் எதிர்
நின்று, திவ்வியாஸ்திரங்களைத் தொடுத்துப்
பரசுராமமூர்த்தியை வருத்தப்படுத்தினார். இப்
படி ஒருவர்க்கொருவர் விரோதப்படுத்
தேவர்களெல்லாம் அஞ்ச திவ்வியாஸ்திரங்
களையும் திவ்விய பாணங்களையும் தொடுத்து,
அன்னந் தண்ணீர் ஆகாரமில்லாமல் பத்து
நாளிரவும் பகலுமாகப் போராடினார்கள்.
முடிவில் வீஷ்மர்கை மிஞ்சிப் பரசுராம
ருடைய கைவில்லை யொடித்து, கவசத்தைப்
பிளந்து, கொடியை அறுத்து, குதிரைகளைக்

கொன்று, தேரைச் சிதற் சிதலாய்ப் போர்த்தெறிந்தார். பரசுராமமூர்த்தி இங்கு நின்றேமாகில் மானத்திற்குச் சேதம் வருமென்று யோசித்து, இனி அரசருக்கு வில்வித்தை கற்பிக்கிற தில்லையென்று சபதஞ்செய்து, தேரைவிட்டுப் பூமியிற் குதித்துப் பதாதியாக ஓடிப்போனார். வீஷ்மர் அதுகண்டு ஜெயசங்கத்தைத் தொனித்து, தேவர்கள் துதிக்கத் தன்னகர்த்திற் சென்றார்.

இப்பால் வீஷ்மரை மணம்புரியவந்த அம்பா பரசுராமர் செய்கையைக் கண்ணுற்றுக் கனவருத்த மடைந்து, நமது சகோதரிகளோடு செல்லுகிறபோது மவுனமாயிராமல் நமது கருத்தை வீஷ்மனுக்குத் தெரிவித்ததினாலல்லவா இவ்வளவு அவஸ்தை வந்தது? அதுவுமன்றி நமக்காக இந்தப் பரசுராமமூர்த்தியும் போர்முகத்தில் முதுகிட்டோடினார். இனி நாம் செய்வதென்னவென்று தனக்குள்தானே யோசித்து, இவ்வளவு வருத்தத்துக்குக் காரணம் வீஷ்மனுதலால், அவனைக் கொல்லாமல் விடுகிறதில்லையென்று தீர்மானித்து, அவனைக்கொல்ல நாமொரு சூரனாக வேண்டுமென்று அதற்குத் தகுந்த பலம் சித்திக்க நல்ல தவஞ்செய்வோமெனக் கருதி, அப் பெண்ணுருவத்தைத் தவவுருவாகக் கொண்டு, ஒரு வனத்தில் வந்து தவநிலை இயற்றி, அநேக காலம் பதுமாசனத்திலிருந்தும், அநேக காலம் ஒரே நிலையாய் நின்றும், அநேக காலம் ஒரு பாதத்தை யூன்றியும், அநேக காலம் ஒரு காலின்மீது மற்றொருகாலை மடக்கி வைத்தும், அநேக காலம் இரண்டு கரங்களையும் தலைமீது குவித்து வைத்துக் கொண்டும், இவ்வாறு விழித்தகண் விழித்தபடி காளியை நோக்கி அருமையான தவஞ் செய்தாள். காளி அம்பாசெய்கிற தவத்துக்கு மகிழ்ந்து, பிரசன்னமாக எதிரில் வந்து நின்றாள். அம்பா அநேக விதமாகத் துதித்து இரண்டு கண்களினு மானந்தக் கண்ணீர் வடிய நோக்கிச் சொல்லுகிறாள்: எளியேன் செய்த தவத்துக்கு மகிழ்ந்து என்னை யொருபொருட்டாக எண்ணி வந்ததாயே! உன் கிருபைக்கு என்ன உவமான மிருக்கின்றதென்று புகழ்ந்தாள். காளி அம்பாவை நோக்கி. ஓ அம்மா! உன் கருத்தில் நாடியிருக்கிற பொருளென்ன கேள் தருகிறேனென்று சாற்ற, அம்பா வணங்கி, ஓ அம்மா! என்னை யாதொரு பலனு மடையாம லிருக்கச்செய்த வீஷ்மனைக் கொல்லவேண்டும். அதுதான் நான் நாடி யிருக்கிறேனென்று நவில, காளி அம்பாவை நோக்கிச் சொல்லுகிறாள்: ஓ அம்பா! நீ இந்த ஜென்மத்தில் அந்த வீஷ்மனைக் கொல்லமாட்டாய் இந்தவடிவத்தை நீக்கியாக சேனனிடத்தில் அலியாகப் பிறந்து, அதன் மேல் அவன் உன்னைப் பிள்ளையென்று பாராட்டி மணமுதலியவற்றைச் செய்யப்போகிறான். அப்பால் பாரதப்போர் வரும் அப்போருக்கு நீயும் செல்லுகிறாய் அக்காலத்தில் உன்னால் வீஷ்மனிறக்கப் போகிறானென்று விளம்பிக் காளி மறைந்தாள். பின்பு அம்பா ஒரு தீக்குழி வளர்த்தி, அதை வலமாக வந்து வணங்கி, நான் வீஷ்மனைக் கொல்லக் கடவேனென்று அத்தீயில் விழுந்து அவ்வுருவத்தை நீக்கி, யாகசேனனிடமாய்ப் பிறந்து வளர்கின்றாள்.

இங்கே அம்பிகை அம்பாலிகை என்னுமிரண்டு மனைவிகள்மீது மிகுந்த காதலாகி இரவும் பகலும் பிரியாமற் கூடிக் காமக்கடலிலாழ்ந்த சித்திரவீரியன் தன் வாயிற் பிறக்கும் சொல்லொன்றினால் உலக முழுமையும் வசப்படுத்தி, மாறுபட்ட ராஜ ராஜாக்களை யெல்லாம் போரில் வீரிட்டழுது முதுகிட்டோடச் செய்து, எல்லாப் பகைகளையுங் கடிந்து மிகுந்த சிறப்புடன் செங்கோல் நடத்துகிறவனாயிருந்தும் அகப்பையாகிய காமப்பகை ஒன்றைமாத்திரம் வகித்திருந்தான். அதனாற் சந்திரவமிசம் விர்த்தியாவதற்குப் புத்திரபாக்கியம் அற்றுப் போயினதுமன்றி, மற்றப் பாக்கியங்களும் அவ்வாசைப் பெருக்கத்தினாற் புறம்பாகி, பல வியாதிகட்குந் தலைமையாகிய பெருவியாதி தோன்றி, இப்பாரினிலிருக்கும் சகல வைபோகங்களையும் பற்றறச் செய்வித்து, உம்பரி லிருக்கும் பரமபதத்துக் காளாக்கி விட்டது. இந்தச்சேதி வீஷ்மரறிந்து, இரண்டு கண்ணிலும் நீர்பெருக்க் கோவென் றலறி, அன்னை சுற்றத்தார் மந்திரியர் நகரத்தார் முதலானவர் கதறி தன்னைச் சூழ்ந்து நிற்கத் தான் அச் சித்திரவீரியனுக்குச் செய்யுங் கடனை நிறைவேற்றி யடக்கஞ்செய்து, பின்பு அன்னைக்குத் தேறுதலை சொல்லித் தன்னந்தனியே யிருந்து, ஆ! தெய்வமே! சந்திரவமிசம் புதன்முதல் சந்தனு மஹாராஜன் வரைக்கும் வாழையடி வாழையாக விர்த்தியாகவந்து, என் நாளில் விர்த்தியில்லாமல் என்றலை முறையோடு அற்றுப் போகும்படி நேர்ந்ததே; நானோ தந்தைக்காக மணம்புரியே னென்று

தேவர்களறிய வீஷ்மித்துக் கொண்டேனே; தேவர்களும் அப்பெயரை எனக்கு நாட்டினார்களே; இனி நான் என்ன செய்வேனென்று தனக்குள் தானே நினைத்து, தாமரை யிலைச் சலம்போலத் தத்தளித்து மனவருத்தமடைந்திருந்தார்.

### பரிமளகந்திக்கு வீஷ்மர் தருமசந்தான விதி யுரைத்தல்

அது காலத்திற் சந்தனு மஹாராஜன் மனைவியாகிய பரிமளகந்தி தன் இரண்டு புத்திரர்கள் பரமபதஞ் சேர்ந்ததற்கு மிகுந்த வருத்தமடைந் திருப்பதோடு குலம் விர்த்தியில்லாமற் போயிற்றே என்று கன வருத்தமடைந்து, மனதுக்கு ளொன்றை நினைத்து மூத்த குமாரனாகிய வீஷ்மரிடத்து வந்தாள். வீஷ்மர் சிற்றன்னையின் சீரடி வணங்கி, ஓ அம்மா! எளியேனிடத்து வந்த காரணமென்னென்று வினவ, தன் கருத்தை வெளியிடக்கருதிச் சொல்லுகிறாள்: அப்பா மகனே வீஷ்மா! உலகத்தில் அரசரா யிருக்கிறவர்களுக்குப் புத்திரனில்லாவிட்டால் தரும சந்தானம் பெற்றுக்கொள்வது தகுதி. பட்டத்துக்கு யோக்கியவானாக நீ இருக்கிறபோது புத்திரர்களில்லை யென்று வருத்தப்படுவது நீதியல்ல நீ ஒரு ஸ்திரீயை மணம்புரியாவிட்டாலும், என் புத்திரனுடைய மனைவியரைக்கூடிப் புத்திர சந்தானமுண்டாக்கலாம் அதனால் தோஷமில்லை. மாதா சொல்லை வேத வாக்கியம்போல் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றுவேதங்கள் முறையிடுகின்றன. நீ என் வார்த்தையைத் தடுக்காமல் ஒத்துக்கொள்ளுக வென்றுரைக்க, வீஷ்மர் திடுக்கிட்டு மிகுந்த துன்பமடைந்தவராய், இரண்டு செவியில் இரண்டு கரங்களை வைத்து மூடிக் கடவுளைத் துதித்து, சிற்றன்னைக்கு நமஸ்காரஞ்செய்து, ஓ அம்மணி! என் தந்தையின் மனக்குறைநீங்க தேவர்களுமறிய மணம் புரியேனென்று சபதஞ் செய்திருக்கிற என்னைப்பார்த்து இந்த வார்த்தை கூறுவது தகுதியல்ல பட்டத்துக்குப் புத்திரனில்லாவிட்டால் தரும சந்தானம் பெற்றுக்கொள்ளுகிறது என்றையே அது உண்மைதான் வேத விதியும் அவ்வாறே கூறுகின்றது அதற்கொப்பாக அநேக அனுபவமும் உண்டு அவ்வாறு செய்து தருமசந்தானம் பெற்றால், எனக்கு மாத்திரமல்ல என்னோடொத்த அரசருக்கும் சம்மதிதான். ஆதலால், அந்தவிதிப் படியே செய்யென்று வீஷ்மர் பின்னுஞ் சொல்லுகிறார்: ஓ அம்மணி! முற்காலத்தில் பவ்வியரென்று ஒரு முனிவரிருந்தார். அவர் சந்திர சடாதர சாம்பவமூர்த்திக்கு ஒப்பான சாபானுக்கிரக சாமார்த்தியத்தை யுடையவர். அவர் மதை என்னும் கன்னிகையைமணந்து, அவள் மிகுந்த கற்பும் பொற்பு முள்ளவளாயிருந்ததினால் அவளைப்பிரியாமல் இருந்தார். சொர்க்கலோகத்துக் கதிபதியாகிய இந்திரனுக்குக் குருவாகி விளங்கும் வியாழபகவான் இந்த மமதையினது திருவுருவத்தைக்கண்டு மிகுந்த காதலுடையவராகி இரவும் பகலு மிதுவே ஏக்கமாக இருந்து கனவருத்தமடைந்து நாளுக்குநாள் உடல்வாடி, மமதையின் திருவுருவத்தை மனதில்வைத்து உருகி. தனது இருப்பிடத்தில் வந்து, கணவன் அவளை நீங்காம லிருக்கிறதைக்கண்டு சமயங் கிடைக்காமற் சஞ்சலப்பட்டு வருவார். இப்படி இருக்கிறகாலத்தில் அந்த மமதை கருப்பவதியாயினாள். ஒருநாள் அந்த மமதை கருப்பவதியால் அயர்ந்து மல்லாந்து படுத்து நித்திரை போய்விட்டாள். பவ்வியரென்கிற பிராமணர் மனைவி நித்திரை செய்கிறதறிந்து, இவளெழுந்திருப்பதற்கு முன்னம் ஸ்நானஞ்செய்து வருவோமென்று நினைத்துத் தடாகத்திற்குச் சென்றார். அந்த வேளையில் வியாழபகவான் இந்த மமதை இடத்து வந்து, இவளை நமது சுய உருவத்தோடு புணருவோமாகில் விழித்துக் கொள்வாள் பின்பு சாபம் நேரிடுமென்று கருதித் தன் ரூபத்தைமாற்றி, வேறுருவிதமாய் ரூபங்கொண்டு புணர்ந்தார். அப்படி புணருகிற தருணத்தில் அந்த மமதையின் வயிற்றி லிருக்கிற சிசுவானது பவ்வியருடைய வீரியமாதலால், நல்ல பிரமக்கியானமுள்ளதா யிருந்தது. அது இந்த வியாழபகவான் செய்கிற துர் நடத்தையைக்கண்டு மனம்பொறுக்காமல், கருப்பத்தி லிருந்தபடியே வியாழபகவானைக் கூவிச் சொல்லுகின்றது. ஓ தேவ குருவே! நீரோ தேவராஜனுக்குக் குருவாயிருக்கிறவர். வேதாகம விதி உம்மால் மூன்று லோகத்திலும் விளங்குகின்றது. அவ்வளவு சிலாக்கியவானாகிய நீர் கீழ்ப்போயின மானிட சாதியிலும் சுத்த மவுடிகரா யிருக்கிறவர்களும் நடத்தாத துற்செய்கையை நடத்துகிறீர். இது உமக்குத் தருமமா வென்று கூற, வியாழபகவான் இவ்வசனங்களை கேட்டுத் திடுக்கிட்டு, இச்சத்தம் எங்கிருந்து உற்பந்

தியாயிற்றென்று நாலு திசையையும் நோக்கிப், பின்பு கருப்பத்தி லிருக்கிற சிசுவென்றுணர்ந்து, அச் சிசுவைப்பார்த்து அதிக சினங்கொண்டு சொல்லுகிறார். ஓ சிசுவே! அநேக நாளாகக் கொண்டிருந்த என் காதலை நிமை நேரத்தில் நீ கெடுத்து என்னைப் பங்கப்படுத்தினதினால், உனக்கிரண்டு கண்ணும் தெரியாமற் போகக்கடவதென்று சாபமிட்டுப் போய் விட்டார். இந்தச்சிசு தனக்கிரண்டு கண்ணு மொளி யிழந்த தென்றறிந்து வருத்தமுற்று மவுனமா யிருந்துவிட்டது. பின்பு மமதை துயின் றெழுந்து எப்போதும்போல் தன் கணவனோடு கூடி வாழ்ந்து வருகிறநாளில் பிரசவகாலம் வந்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் இளஞ் சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற புத்திரனைப் பெற்றாள். தாய் தந்தையர் இப்புத்திரனுடைய அழகினை நோக்கி, பிரதானமான கண்ணில்லாமையா யிருக்கிறதை நினைத்துக் கனவருத்த முற்றவரா யிருந்தபோதிலும், அப்புத்திரனை வளர்ப்பதில் அதிக விருப்பமுடையவர்களாகிப் பாதுகாத்து, அப் புத்திரனுக்குத் தீர்க்கதமனென்று பெயரிட்டு, உபநயன மில்லாமையை நோக்கி அவ்வுபநயன மளிப்பதுபோல் தங்கள் மரபிற்குரிய உபநயனச் சடங்கினைப் பொருந்தச் செய்தார்கள். இச்சிறுவராகிய தீர்க்கதமர் அன்றுமுதல் தாய் தந்தையர்களின் சுவாதீனத்தி லிருக்காமற் பிரமசாரியத்தி னியல்பு பெற்று, வீடுகடோறுஞ்சென்று மாதவ கவளம் வாங்கிப் புசித்து வருவார். இப்படி வருகிறகாலத்தில் ஒருநாள் தீர்க்கதேவரென்னு முனிவ ரிருக்குமிடத்துச் சென்றபோது, அவர் இச்சிறுவரது சௌந்தரியத்தை முற்றும் நோக்கிக் கண்ணில்லா திருத்தலுக்கு வருத்தமுற்று, இவருக்கு ஞானக்கண் கொடுக்கவேண்டு மென்று கருதி, அச் சிறுவரை யருகிலழைத்து வரன் முறைகளைக் கேட்டு, பின்பு தன் வல்லமையினால் அச்சிறுவருக்கு நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியானம் முதலியவற்றைப் போதித்தார். அச் சிறுவர் சகல கலை வல்லவராகி, ஆசிரியரை அன்போடு வணங்கி விடைபெற்று, முன்போலவே வீடுகடோறும் சென்று மாதவ கவளம் வாங்கிப் புசித்து வருகிற நாளில், அன்ன மென்று வந்தவர்க்கு முன்னம் சென்று வந்தனை வழிபாடு செய்து மிகுந்த காதலோடு அவ்வன்னம் படைத்து வரும் விரதத்தை தன்னுயிராகக் கொண்ட ஒரு வேதியன் வீட்டிற்குச் சென்று, தான் வந்திருக்கிறதைச் சதா வேத கோஷங் கொண்டிருக்குந் தனது வாயோசையாற் றெரிவித்தார். அந்த வேளையில் அவ் வேதியன் போசனம் செய்கிற தருணமா யிருந்தும் அந்த ஓசையைக் கேட்ட மாத்திரத்தில் விரைந்து வந்து, தீர்க்க தமருக்கு உபசாரங்களைச் செய்து அழைத்துப்போய் தன்னோடு கூட வைத்துக்கொண்டு, யாதொரு குறைவும் வராமல் அன்னம் வட்டித்துப் போசனஞ் செய்வித்து, பின்பு இன்பமுடனிருவரும் வீற்றிருக்கிறபோது தீர்க்கதமர் வேதபாராயணஞ் செய்தார். அதனை அவ்வேதியன் கண்டு ஆ! ஆ! இச் சிறுவர் கண்ணில்லா திருந்தும் வேத மோதுகிறார். இதனை யுய்த்து நோக்கினால் நல்ல தவசிரேஷ்ட சிகாமணியின் புத்திரராக இருக்கின்றாரென்று நினைத்து தீர்க்க தமரை யழைத்து அவரது வரலாற்றைக் கேட்டு மிகுந்த களிப்படைந்து, தன் புத்திரனைப்போலப் பாவித்து வளர்த்து, தன் குமாரத்தியை இவருக்குக் கன்னிகாதானமாகக் கொடுக்கவேண்டுமென்று கருதி, நல்ல சுபமுகூர்த்தத்தில் தன் குமாரத்தியை அத்தீர்க்க தமருக்கு மணஞ் செய்வித்துச் சிலநாள் வைத்திருந்து, பின்பு மருமகராகிய தீர்க்க தமரை நோக்கி, ஐயா! இனி உமது மனைவியோடு நீர் கருத்துக்கிசைந்த விடத்துச் சென்று நன்மையை அனுபவியுங்களென்று கூற, தீர்க்கதமர் சம்மதித்துத் தன் மனைவியை அழைத்துக்கொண்டு, ஒரு திவ்ய க்ஷேத்திரத்திற் பன்னகசாலையொன் றியற்றி, மனைவி பணிவிடை செய்யத் தான் நல்ல தவம்புரிந்தார். இப்படி யிருக்கிற நாளில் ஒரு நாள் அக்கன்னிகை பிரதோஷ காலத்தில் தன் கணவராகிய தீர்க்க தமரை வணங்கி, ஓ மஹாத்மாவே! இன்றையதினம் இந்த வேளையில் என்னைக்கூடிக் கலந்தால்தான் என் மனங் களிப்புறும். இல்லாவிட்டால் அதிக பாவம் உமக்குச் சித்திக்குமென்றுகூற, தீர்க்க தமர் ஆ! ஆ! பெண்ணே! உலகத்திற் பெண்ணாகப் பிறந்தவர்க்குப் புருஷ இன்பம் ஒன்றே யன்றி வேறொரு இன்பமில்லை. அது எனக்கு நன்றாகத்தெரியும். ஆகிலும் கல்வித் தொழிலுக்குத் தகுதியான காமமல்லாத பிரதோஷ காலத்தில் வந்து கூடென்று சொல்வது தகுதியல்ல. அப்படி அல்லவென்று கூடினால் அதிக பாவம் நேரிடுகிறதுமன்றி கருப்பந்தரித்தால் அக்கரு பிறதோஷத்துக் கெல்லாம் பாத்திரமா யிருக்குமாதலால், இந்த

வேளை அக் கருத்தை மறந்தால் மற்றொரு வேளையில் உன்மீதெதிர்த்து மலர்க்கணையைத் தொடுத்து வருத்துகின்ற அந்தவேளையென்று உனக்கு இன்பத்தைப் பெருகுவிக்கிறேனென்று மறுக்க, கன்னிகை கணவன் கூறிய வசனங்களை ஆற்றிற் கரைத்த புளிபோலாக்கிக், காமவெறிகொண்டு மேல் விழுந்து, கல்வித்தொழிலை இயற்றச்சொல்லிப் பலவிதமாகத் தொந்தரை செய்தாள். உலகத்திற் புருஷர்க்குப் பேதைப்பருவமென்றும் - பாலப்பருவமென்றும் - யௌவனப்பருவமென்றும்-வார்த்திபப் பருவமென்றும்- நால்வகைப்படும். அவற்றுள், ரு-வயதளவும் பேதைப்பருவம், கரு-வயதளவும் பாலப்பருவம், சஉ-வயதளவும் யௌவனப் பருவம், அதற்குமேல் வார்த்திபப்பருவம், யௌவனதசை அடைந்தவர்கள் பல சாஸ்திரங்களை அறிந்து அதன் பயனை யுணர்ந்து அந்நெறியைக் கைவிடாதுபற்றி நடக்கும் தீர அறிவையுடையோரா யிருந்தாலும், மனமாகிய பொந்தில் ஒளித்திருக்கும். காமமென்னும் பசாசினால் அதையுண்டு திப்பிரமைகொண்டு, கல்வி கேள்வி முதலியவற்றை மறந்தவராகி, கார்காலத்து ஜலத்தைப்போலத் தெளிவின்றி அக் காமத்தின்வழி செல்லுதல் யௌவனதசையின் வல்லமை யாதலால், அந்த யௌவனதசை அடைந்த இந்தத் தீர்க்கதமன் தன் மனைவி மகிழ்வெய்தக் கலந்தான். உடனே இவனுடைய வீரிய விர்த்தியினின்றும் அக்கன்னிகை காலபேதத்தினுற் கொடிய கிராதர் தன்மைபூண்ட நூறு புத்திரர்களைப் பெற்றாள். இல்லறத்திலிருந்து சகல பாக்கியத்தையும் சம்பாதித்து இனிது வீற்றிருக்கிற கிரகஸ்தரும் ஒரு புத்திரனை வளர்ப்பதற்கு அதிக வருத்தப் படுவாரென்றால், துறவறஆசிரமத்தி லிருந்து அதிலும் கண்ணில்லாத கணவனைப் பெற்ற அக்கன்னிகை தான்பெற்ற நூறு பிள்ளைகளை வளர்ப்பதற்கு அதிக வருத்த மெடுத்துக்கொள்ள வேண்டு மாதலால், அப்புத்திரரை வளர்ப்பதில் அக்கன்னிகை அதிக சிரத்தை யுடையவளாகிக் கணவன்மீது அன்பில்லாதவளா யிருந்தாள். அதனைத் தீர்க்கதமர் கண்டு மனைவியை அழைத்து, ஓ பெண்ணே! என்ன என்மீது எள்ளளவேனும் உள்ளன்பில்லா திருக்கிறு யென்று கூற, அக்கன்னிகைக்குக் கோபமுண்டாகி, இரவும் பகலும் உமது புத்திரரைப் பாதுகாத்து வருகிறதே பெரிய ஊழியமாயிருக்க, நீர் இப்படி சொல்லுவது தகுதியாவென்று கூறி, என்னை நிந்தித்தபடியால் இனி உமக்கும் எனக்கும் சம்பந்தம் வேண்டியதில்லையென்று கடுகடுத்தாள். தீர்க்கதமர் இவ்வசனங்களைக்கேட்டு அதிக கோபங்கொண்டு, அவருஞ் சில துர்வசனங்களை வழங்க, அதன்மேல் ஒருவர்க்கொருவர் கலகப்பட்டார்கள். இதில் அக் கன்னிகை சினங்கொண்டு, முன்பின் யோசிக்காமல் தன் புத்திரர்களை அழைத்து, ஓ புத்திரர்களே! இந்தக் கண்ணில்லா தவனைத் தூரத்தி லழைத்துப்போய் உயிர்க்குச் சேதம் வராமல் நன்றாயடித்து, ஒரு தெப்பங்கட்டி அதில் இவனைவைத்து வரிந்து கட்டி ஆற்றில்விட்டு வாருங்களென்று கட்டளையிட்டாள். அன்னையின் ஆதரவி லிருக்கிறவர்களாதலால் எள்ளளவேனுந் தாக்ஷிண்யமில்லாமற் கண்ணில்லாத தந்தையை இழுத்துப்போய் ஒரு வனத்தில் நிறுத்தி நன்றாயடித்து மாதா சொற்படி அந்த தீர்க்கதமரைத் தெப்பத்திலேற்றிக் கங்கையில் விட்டுப்போயினர். தீர்க்கதமர் அதிக துன்பத்தை அடைந்து, ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை மனதில் நினைத்து, எந்தெந்த காலத்தில் எந்தெந்த வேதனைப் படவேண்டுமோ அந்தந்த வேதனையை அனுபவிக்கத்தான் வேண்டும். இது பூர்வ ஜன்மாந்திர பாவமென்று தீர்மானித்து, எல்லாப் பாவத்துக்கு மருந்தாகி யிருக்கிற வேதத்தை யோதிக்கொண்டு கங்கையிற் செல்லும்போது, கங்கை இந்த மஹா புருஷரது மகிமையை அறிந்து இரக்கமுற்று, இந்தத் தீர்க்கதமருக்கு யாதொரு நீங்கும் நேரிடாதிருக்கப் பாதுகாத்து, நல்ல துறையருகில் அத்தெப்பத்தை யொதுக்கினாள். அத்தெப்பம் கரையருகில் வந்தது அப்போதும் பிறவிக்கடலைக் கடந்த இந்தத் தீர்க்கதமர் வேதபாராயணஞ் செய்வதிற் சோர்வடையாமலிருந்தார். இப்படி இருக்கிற தருணத்தில் இரவிகுல திலகனை பலிசக்கரவர்த்தி தனக்குப் புத்திரசந்தான மில்லாமையாற் கன வருத்த மடைந்து, கொலுவில் வந்திருந்து மந்திரிமார்களை நோக்கி, ஓ புண்ணியவான்களே! நானே தருமதேவதை நாலுபாதத்தில் நடக்கக்கூடிய மட்டும் அனேக தான தருமங்களைச் செய்தும், யாகாதிகளால் தேவர்களுக்குத் திருப்தி பண்ணியும், எனக்குப் புத்திர சந்தான மில்லா திருக்கின்றது. உலகத்தில் மானிடருக்குப் புத்திரசந்தான மில்லாவிட்டாற் புண்ணியலோக மில்லையென்று வேத

முறை யிடுகின்றது. ஆதலால், நான் எல்லாப் பாக்கியத்தைப் பெற்றும் புத்திர பாக்கியத்தைப் பெருதிருக்கிறது எனக்குக் கனவருத்தமா யிருக்கின்றது. அதுபற்றிப் புத்திர பாக்கியங் கிடைக்கக் கடவுளை நோக்கி அருமையான தவஞ் செய்ய வேண்டும். தவஞ் செய்கிறதினுல் புத்திர சந்தானங் கிடைத்தால் இங்கு வருகிறேன். புத்திர சந்தானம் பெருவிட்டாற் புண்ணியலோக மடைகிறேன். நீங்கள் நானிருந்து அரசு செலுத்தினதுபோற் குடிகளுக்கு யாதொரு குறைவும் வராமலிருக்கச் செங்கோற் செலுத்துங்களென்று தனது முத்திரை மோதிரத்தை மந்திரிகள் கையிற் கொடுத்துத், தவ வேடங்கொண்டு நகரத்தைவிட்டு வெளிப்பட்டுக் கங்காநதி யருகில் வந்தான்.

அப்படி வந்தபோது தெப்பத்திற் கட்டு பட்டுக் கங்கைக்கரையில் வேத பாராயணஞ் செய்துகொண் டிருக்குந் தீர்க்கதம முனியைக் கண்டு அருகில்வந்து அவரிருக்கிற அவகோலத்தைப் பார்த்துத் திடுக்கிட்டு, ஆ! ஆ! இவர் யாரோ பெரியவர். மேலும் அதிக நயமுடையவரா யிருந்தாலும் நயனமில்லாதவரா யிருக்கிருர். எந்தத் துராத்மாவோ இவரைக் கட்டித் தெப்பத்தில் வைத்துக் கங்கையில் விட்டு விட்டதாகத் தோன்றுகிறதென்று தீர்மானித்து, அவருக்கு நமஸ்காரஞ்செய்து, தனது பெயரைத் தெரிவித்து கட்டுப்பட்டிருந்த அந்தத் தீர்க்கதமனைக் கட்டில் நின்றும் நீக்கி, வேறோரிடத்தில் தருப்பையாசனமிட்டு, அதிலிருத்தி, வந்தனை வழிபாடுசெய்து, ஓ ஸ்வாமி! தங்களுடைய வரலாறென்னவென்று வினவினன். தீர்க்கதமன் இருவினைக்குட்பட்டுக் கனவருத்த மடைந்தவர் சுகானந்தத்தை யடைந்தால் எவ்வளவு மகிழ்வடைவரோ அவ்வளவு மகிழ்வை அகத்தும் புறத்து மடைந்து, அரசனை ஆசீர்வதித்து, தான் பிறந்தது முதல் தெப்பத்திலேறிக் கங்கைக் கரையில் வந்திருந்த மட்டும் எடுத்தோதினுன். அரசன் கனவருத்த மடைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து சொல்லுகிருன். ஓ ஸ்வாமி! தங்களை யொத்தவர்களின் கிருபையினுல் எல்லாப் பாக்கியத்தையும் பெற்றுச் செங்கோல் செலுத்தி இரவிகுலஞ் சிறப்பெய்த வாழ்ந்து வந்தேன். ஆனுற் புத்திர பாக்கியம் ஒன்று மாத்திரமில்லை. அதனுற் கனவருத்த மடைந்து, தவம்புரிந்தாவது அல்லது தங்களை யொத்த துறவிகளாலாவது அப்புத்திர பாக்கியத்தைப்பெற்று, இரவி குலத்தைப் பெருகச்செய்து புண்ணிய லோகத்தை யடையலாமென்று கருதி, என்னரசு முதலிய வற்றை மந்திரிமார் வசத்தில் ஒப்புவித்துத் தவவேடங் கொண்டுவந்தேன். வந்த விடத்தில் தங்களைக்கண்டேன். இனி அந்தச் சஞ்சலமும் நீங்கிற்று. தேவரீர் கிருபை கூர்ந்து என்னரண்மனைக் கெழுந்தருளி, என் மனைவியரிடத்து ஒரு புத்திரனைப் பாலியுமையா வென்று மிருந்த அன்புடன் வேண்ட, தீர்க்கதமன் அரசன் கருத்துக்கிசைந்து அரண்மனைக்குச் சென்றுன்.

அரசன் தீர்க்கதமனுக்கு நல்ல விடுதி யொன்று விட்டு, அறுசுவை முதலானவைகளோடுங் கூடிய அன்னம் உண்பித்து, சகல பரிமளத் திரவியத்தோடு தாம்பூல மளித்து, பின்பு அரசன் தன் மனைவியிடத்துச் சென்று, தான் சென்றதும் சென்றவிடத்து ஒரு பெரியவரைக்கண்டதும் அவர் மூலமாகப் புத்திரசந்தானம் பெறக் கருதிய கருத்தையும் வெளியிட்டபோது மனைவி கிஞ்சித்துஐயங்கொண்டு, அரசன் கருத்துக்கு விரோதம் வரப் பேசினுள். அதற்கு அரசன் சில நீதியை எடுத்தோதிச் சம்மதிக்கச் செய்து தீர்க்க தமனிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! தேவரீர் இதோ யிருக்கிற பள்ளியறையிற் சேர்ந்திருமென்று கூறி அழைத்துவந்து சேர்த்து, தன் மனைவியையும் எச்சரித்து, தானொரு விடுதியிற் போய்ச் சயனித்திருந்தான். அரசன் மனைவி கிஞ்சித்து நாண முற்றவளாகித் தன்னையொத்த தாதியை அழைத்து, தன்னைப்போல் ஆடை ஆபரணங்களினுல் அலங்கிரதஞ்செய்து தீர்க்கதம னிருக்கும் பள்ளியறைக்கு அனுப்பிவித்தாள். தாதி பள்ளியறைக்குட்சென்று தீர்க்கதமனைத் தழுவினுள். தீர்க்கதமன் வந்தவள் தாதி என்று ஞானக்கண்ணு லறிந்தும், நமக்கேன்? அரசன் மனைவி மனம் வேறுபட்டிருந்தாலும் நம்மை நாடிய அரசன் கருத்துக்கு இசைய நாம் நடக்கவேண்டுமென்று நினைத்து, அத் தாதியைத் தழுவிப் புணர்ந்தான். அப்போது தீர்க்கதமனுடைய வீரியவிர்த்தியால் தாதியினிடமாகப்பதினொரு புத்திரர்கள் உற்பத்தியாயினுர்கள் இந்தச்சேதி அரசனுக்குத் தெரிந்து கனவருத்தமடைந்து மனைவியிடத்து வந்து, ஓ பெண்ணே! நான் கூறியதென்ன? நீ என்ன காரியஞ் செய்தாய்?

தாதி இடமாக எத்தனை புத்திரர் பிறந்தாலும் பட்டத்துக்குரியவ ராவார்களா? நம்மிருவர்க்கும் நீர்க்கடன் முதலியவற்றைக் கொடுப்பதற்கு யோக்கியதையுண்டா? இல்லையே. இனியேனும் அவ்விரண்டு செய்கைக்கும் உரித்தாகும்பொருட்டு நீயே அப்பெரியவ ரிடத்துச்சென்று கூடென்று பின்னுஞ் சில தர்மங்களை யெடுத்தோதி, தீர்க்கதமனிடத்து வந்து வணங்கி ஓ ஸ்வாமி! அடியேன் செய்த விண்ணப்பத்தின்படி தாங்க ளிசைந்தும் இடம் பேதப்பட்டது. ஆகையால், எளியேன் மீது கிருபை கூர்ந்து என் மனைவியினிடமாக ஒரு புத்திரனைப் பாலிபுமென்று மிகுந்த ஆருமையோடு வேண்ட, தீர்க்கதமன் சம்மதித்து உமது மனைவியை வரச்சொல்லுமென்றுகூற, அரசன் மனைவியை எச்சரித்து முன்போலத் தான் ஒரு விடுதியிற் சயனித்திருந்தான். அரசன் மனைவி ஸ்நானஞ்செய்து, நல்ல ஆடை ஆபரணங்களினால் அலங்கிரதஞ்செய்து, பரிமளத் திரவியத்தையணிந்து, தீர்க்கதமனிருக்கும் பள்ளியறையிற் சென்று அவர்க்கு நமஸ்காரஞ்செய்து, ஓ ஸ்வாமி! "பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்" என்னும் நீதி வாக்கியத்திற் கிணங்க, முன்னமே நான் வராமல் தாதியை அனுப்பிவித்த குற்றத்தை மன்னிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தாள். தீர்க்கதமன் முன் குற்றத்தை மனதில் நினைக்காமல் மகிழ்ந்து அரசன் மனைவியைத் தழுவி உனக்கு ஒரு புத்திரனுண்டாகக் கடவதென்று மறைந்தான். அப்படியே புத்திரனுண்டானன். இந்தச்சேதி அரசனறிந்து, புத்திரன் பிறந்தானென்று மகிழ்வை அடைந்து, பள்ளியறைக்குள் வந்து பார்க்கும்போது பெரியவரில்லாமையைக் கண்டு மனவருத்தமடைந்து, இப்பெரியவர் துறவியாதலால் எவ்வூற்றூரோவென்று கருதி அப்பால் ஒரு விதமாகத்தேறி, அப்புத்திரனை அதிக காதலோடு வளர்த்து அங்கஜராஜனென்று பெயரிட்டுப் பட்டத்துக்கு உரித்தாக்கிக் கொண்டான்.

மேலும் முன்னம் பரசுராமமூர்த்தியாற் சூரிய வமிசம் நாசமடைய அச் சூரியவமிசப் பட்டத்தரசிகள் அக்கினிப் பிரவேசமாக யத்தனித்தபோது அச் செய்கையைக் காசிபருணர்ந்து அவர்களுக்குச் சில நீதிகளை யெடுத்தோதிச் சம்மதிக்கச்செய்து, அந்தந்தப் பட்டத்தரசிகள் அவ்வவர்களுடைய ஆசிரியர்களைப் புணர்ந்து புத்திரர்களைப் பெற்றுச் சூரிய குலத்தை விர்த்தி செய்யக் கட்டளையிட்டார். அந்தப் பட்டத்தரசிகள் அவ்வாறே அந்தந்த ஆசிரியர்களைப் புணர்ந்து புத்திரர்களைப்பெற்றுச் சூரிய வமிசத்தைப் பெருகச் செய்தார்கள். இதுவுமன்றி கன்மாடபாத மஹாராஜன் தனது மனைவியாகிய மதயந்தியைச் சாபத்தினாற்கூடக் கூடாதவனாகி, பின்பு வசிட்டரைக்கொண்டு புத்திர பாக்கியத்தை யடைந்தான். வேதமுஞ் சந்தானமு மில்லாதவர்கள் இவ்வாறு கர்ப்பதானம் பண்ணிக் கொள்ளச்சொல்லி முறையிடுகின்றது. ஆதலால், தாயே! நீ ஐயப்படாமல் எந்தப் பெரியவரைக் கொண்டாவது இப்போது கணவனில்லா திருக்கிற பட்டத்தரசிகளினிடமாகப் புத்திரனைப் பெற்றால் எனக்குச் சம்மதிதான். அவ்வாறு செய்ய யத்தனியென்று வீஷ்மர் அறைய, பரிமளகந்தி அப்பா மகனே! நான் பேதைப்பருவ மடைந்திருக்கிற காலத்தில் நான் பிறந்த குலாசாரப்படி யமுனா நதியில் வருகிற பெரியோர்களுக்குப் படவு விட்டிருந்தேன். அந்தக் காலத்தில் தவசிரேஷ்ட சிகாமணியாகிய பராசர் அவ்விடத்துக்கு வந்து என்னைப் படவு விடச்சொன்னார், அப்படியே நான் அவர் ஒருவரை மாத்திரம் படவி லேற்றிச் செல்லுகையில் அவர் வல்லமையைச் சில செய்கைகளாற் கண்டு, மிகுந்த பயபக்தியுடனே படவைச் செலுத்துகிறபோது பராசர் வானத்தை நோக்கி என் முகத்தைப் பார்த்து, ஓ பெண்ணே! நான் நாடிவந்த நக்ஷத்திரம் உச்சியில் வருகிற தருணமாயிற்று, அத்தருணத்தில் ஒரு ஸ்திரீயைக் கூடவேண்டுமென்று விரதங்கொண்டு வந்தேன் நதியால் தடை நேரிட்டது நீயாகிலும் அவ் விரதத்தைப் பாதுகாப்பையாகிற் சந்திரசூரிய ரிருக்கிற வரையில் உலகத்தில் உன் பெயரிருக்கும். ஆனதால், என்னைக் கூடென்று குறிக்க, நான் நாணமுற்று சுவாமி நான் மங்கைப்பருவ மடையாதவள், மேலும் மச்சகந்தத்தை யுடையவள் இனிமேல் ஒருவர்க்கு மணமாலை சூடப்பட்டவள். ஆதலால் உமது கருத்துக்கிசைவது எவ்வாறென்று மறுமொழி கூறினேன். உடனே அம்முனிவர், எனக்குண்டாயிருந்த மச்சகந்தத்தை நீக்கிப் பரிமள கந்தத்தைக் கொடுத்து என்னை மங்கைப் பருவமாக்கி, ஓ பெண்ணே! என்னோடு சேர்ந்தாலும் நீகன்னிகையாக இருக்கக்கடவதென்று ஆசீர்வதித்

திரிதராட்டிரன், பாண்டு, விதுரன் உற்பவம்.



கர்னனுற்பவம்.

தார். அதனால் நான் மிகுந்த வியப்பையும் மகிழ்வையுங் கொண்டு, அவர் கருத்தின்படி களிப்பெய்தக் கூடினேன் அவருடைய வீரிய விர்த்தியால் அக்கணம் காவிகாம்பர தண்டு கமண்டல தாரியாய் வேதத்தைக் கையிலேந்தியபடி, ஒரு புத்திரன் என்னிடமாகப் பிறந்தான் அப்புத்திரனுக்கு வேதவியாசனென்று பெயர். அப்புத்திரன் என்னைவிட்டுப் பிரியும் போது, தாயே! நீ எப்போது நினைக்கின்றையோ அப்போது நான் வருகிறேனென்று வாக்குத்தத்தஞ் செய்து போயிருக்கிறான். அந்த மஹாத்மாவாலே அம்பிகை அம்பாலிகை இடத்துப் புத்திரனை யுண்டாக்கிக் கொள்ளலா மென்று நினைக்கிறேன். அக்கருத்து உனக்குச் சம்மதிதானு வென்று வினவ, வீஷ்மர் அதிக மகிழ்வை யடைந்து அன்னையை வணங்கி, தாயே! அவ்வாறு செய்தால் (பொங்கியும் பால்புறம் போகாதிருந்தது) என்கிற பழமொழிபோல் அவர் மூத்தகுமாரனுக இருக்கிறபடியால், அச்செய்கை எனக்கு மாத்திரமல்ல மற்றை யாவருக்கு மொப்புமையாகவே இருக்கும். அவ்வாறுசெய் அம்மணி யென்று உத்திரவு கொடுக்க, பரிமளகந்தி அந்தப்புரத்திற் சென்று, தன் மருமக்கள்மாராகிய அம்பிகை அம்பாலிகையை அழைப்பித்து, ஓ பெண்களே! உங்கள் மூலமாகப் பட்டத்துக்குப் புத்திரன் வேண்டும். அதற்காக வேதவிதிப்படி ஒரு ஆலோசனை செய்திருக்கின்றது. அவ்வாறு நீங்கள் நடந்துகொண்டு குலத்தை விருத்தியடையச்செய்வீர்கள் என்று அவ் வாலோசனையை வெளிப்படுத்திச் சகல நீதிகளையுந் தெரிவித்து, இருவரையுஞ் சம்மதிக்கச்செய்து அவரவர்களை அலங்கிரதமாக இருக்கச்சொல்லி, தான் என் குருவாகிய வேதவியாசரை வரும்படி மனதில் நினைத்தாள்.

### திரிதராட்டிரன் பாண்டு இவர்கள் உற்பவம்

இப்படி நினைத்த மாத்திரத்தில் திவ்யக்கியான சுரூபியாகிய வேதவியாச ருணர்ந்து, கணப்பொழுதில் தன் மாதாவாகிய பரிமள கந்தி யிருக்கிறவிடத்துக்கு வந்து, தமது நெற்றியி லிருக்குந் திருநீற்றுற் பாதத்தைத் துலக்கி, அன்பின் ஆருமையினுலே உண்டாகிய தமது கண்ணீராற் சுத்திசெய்து, மந்திர புஷ்பாகைஷிதைகளால் அருச்சனை புரிந்து, அஷ்டாங்க பஞ்சாங்காதி நமஸ்காரங்களால் வணங்கி, தாயே! அடியேனை நினைத்த காரண மென்னவென்று வினவ, பரிமள கந்தி அப்பா புத்திர சிகாமணியே! உன்னைப் பெற்றதின் பின்பு சந்திரவமிச சிரேஷ்டனை சந்தனு மஹாராஜனுக்கு மனைவியாகி இரண்டு புத்திரரைப் பெற்றேன். அவர்களில் ஒருவன் கந்தருவனு லிறந்தான் மற்றொருவன் அம்பிகை அம்பாலிகை என்னும் இரண்டு ஸ்திரீகளை மணந்து, புத்திர பாக்கியம் ஒன்று தவிர மற்றப்பாக்கியங்களை யெல்லாம் அநுபவித்து இறந்தான். புத்திர னில்லாமையாற் சிரமமாக விளங்கி வந்த சந்திரவமிசம் பனி பெய்யும் சம்பவச்சர மேகம்போ லாயினது மன்றி, என் புத்திரனோடு அஸ்தமித்தது. ஆகையால், என்மேல் கிருபை கூர்ந்து, எனக்கொரு இழிவு வராமலிருக்கவும் சந்திரகுலம் விர்த்தியாகவும் உன் சகோதரனுகிய சித்திர வீரியன் மனைவிகளைக் கூடிப் புத்திர சந்தானம் பாலித்தருளென்று பகர, மாதா கூறிய வாக்கியம் வேதவாக்கிய மாதலால், என்னுண்டவனுகிய வேதவியாசர் அன்னை கூறியதற்கிசைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ அம்மணி! உமது கருத்தின்படி நடக்கிறேனென் றுரைக்கப் பரிமளகந்தி அவ் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் மகிழ்வை யடைந்து, உடனே மருமக்கள்மா ரிடத்துச் சென்று அவர்களை எச்சரித்துவந்து, புத்திரனுகிய வேதவியாச முனிவரைப் பார்த்து அந்தப்புரத்துக்குச் செல்லக் கட்டளையிட்டாள்.

அதுகேட்ட வேதவியாசர் அந்தப்புரத்துக்குச் சென்று அம்பிகை யிருக்கும் பள்ளியறையிற் புகுந்தார். அம்பிகை அம் முனிவரவைக் கண்டு, எதிர்கொண்டு வந்து வந்தனை வழிபாடுகள்செய்து, பஞ்சணையிலிருத்தி மகரகுண்டல ஆரகேயூர கடக கங்கண முதலாகிய ஆபரணு லங்கிருதனுகிய தன் கணவனைப்பார்த்து மகிழ்ந்து அவள், காவிகாம்பர சடாடவிகாரியாகித் தவத்தால் தேக மிளைத்து மீசை தாடி யுடைத்தாய் வேறொரு விதமாக இருக்கு முனிவரை முற்றுநோக்கி நாணமுற்று, இரண்டு நயனத்தையு மூடிக்கொண்டு பஞ்சணையிற்சயனித்தாள். முனிவர் மாதாவாக்கியத்தை நிறைவேற்றவந்தவ ராதலால், அம்பிகை இருக்குங் கோலத்தைக் கண்டும் அவளைப் புணர்ந்து எழுந்து, தாயிடத்து வந்து வணங்கி, ஓ அம்மணி! உமது கருத்தின்படிருக் கார்ப்பதானஞ் செய்தேன். புணருங்காலத்து அம்பிகை கண்ணை மூடி, யிருந்ததினுலே,

பிறக்கும் புத்திரன் நெடிய கடல் சூழ்ந்த உலகத்திலிருக்கும் அரசர்க ளெல்லாம் பணிய ஆயிரம் யானை வல்லமையை யுடையவனா யிருந்தாலும், நேத்திர மாத்திர மில்லாதிருப்பானென்று விளம்பினார். பின்னும் பரிமள கந்தி வேதவியாசரைப் பார்த்து, அப்பா மகனே! அரசருக்கு நேத்திரமில்லாவிட்டால் யோக்கியதை யல்ல. ஆதலால், அம்பாலிகையைப் புணர்ந்து ஒரு புத்திரனைப் பாலியென்றிரந்தாள். முனிவர் அதற்கும்ஒத்துக்கொண்டு அம்பாலிகை இடத்துச் சென்றார். அம்பாலிகை எழுந் தெதிர்வந்து வணங்கி, அழைத்துப்போய்ப் பஞ்சணை மஞ்சத்திலிருத்தி அம்முனிவரைக் கண்ணார நோக்கின மாத்திரத்தில் மெய் நடுக்கங்கொண்டு, சரீரம் வியர்ப்ப வஸ்திரத்தால் மூடிச் சயனித்தாள். அம்பாலிகை அவ்வாறிருக்குங் கோலத்தைக் கண்டும் வாக்கு தத்தத்தின்படி முனிவர் அந்த அம்பாலிகையைப் புணர்ந்து எழுந்து, தாயிடத்துவந்து வணங்கி, ஓ அம்மணி அம்பாலிகை என்னைக்கண்டு மெய் நடுக்கங்கொண்டு சரீரம் வியர்த்து வியர்த்தாள். அவளிடமாகப் பிறக்கும் புத்திரன் மன்னர் மன்னனாக இருந்த போதிலும், வியாதியை யுடையவனாய் வெளுத்திருப்பானென்று சொல்லி விடைபெற்றுத் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

### விதுரனுற்பவம்

இங்கே அம்பிகை ஒரு புத்திரனையும் அம்பாலிகை ஒரு புத்திரனையும் பெற்றார்கள். அம்பிகை பெற்ற புத்திரனுக்குத் திரிதராஷ்டிரன் என்றும், அம்பாலிகை பெற்ற புத்திரனுக்குப் பாண்டு என்றும் பெயரிட்டு மிகுந்த காதலோடு வளர்த்து வருகிறகாலத்தில்,மரிமள கந்தி அச் சிறுவர்களைக்கண்டு, ஒரு புத்திரன் பகைவர்க்கு அந்தகனா யிருந்தபோதிலும் பார்க்கிறவருக்கும் அந்தகனாக இருக்கிறான். மற்றொரு புத்திரன் நல்ல விவேக வியாபகனா யிருந்தும் வியாதியையுடையவனாயிருக்கிறான். ஆ! ஆ! இதென்ன குறைவந்து நேரிட்டது? இது தகுதியல்ல. இனி ஒரு நல்ல புத்திரனை அடையவேண்டுமென்று யோசித்து; அம்பாலிகையை அழைத்து, ஓ பெண்ணே! மற்றுமொருதரம் முன் கூடிய முனிவரை உன்னிடத்துக்கு அனுப்பிவிக்கிறேன் நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பென்னு நான்கினையு நீக்கிக் களங்கமற்றுக் கூடென்று சில நீதி எடுத்தோதி, பின்பு பரிமளகந்தி என் குருவாகிய வேதவியாசரை வரும்படி நினைத்தாள். அம்முனிவர் அக்கணம் வந்து அன்னையை வணங்கி, ஓ அம்மணி! என்னை நினைத்த காரண மென்னவென்று வினவ, அன்னை-அப்பாமகனே! முன்னமளித்த இரண்டுபுத்திரரும் அரசுரிமைக்குச் சிறப்படையாதவர்களாயிருக்கிறார்கள். முன்போல் மற்றுமொருதரம் அம்பாலிகையைப் புணர்ந்து நல்ல புத்திரனைப் பாலித்தருளென்று பகர்ந்தாள் முனிவர் அதற்கிசைந்து அம்பாலிகை இடத்துச்சென்றார். அம்பாலிகை தனது அன்னையை யொத்த ஒரு தாதியை அழைத்து, ஆடை ஆபரணங்களினால் நன்றா யலங்கிரதஞ்செய்து பள்ளியறைக்கு அனுப்பிவித்தாள். அத்தாதி வேதவியாசருக்கு நமஸ்காரஞ் செய்து அழைத்துப்போய் பள்ளியறையி லிருத்தி, தானே முந்தி மதனகலை விதிப்படி ஆலிங்கன முதலியவற்றைப் புரிந்து, முழுதுந் துறந்த முனிவருள்ளம் பூரிக்கப் புணர்ந்தாள். அம்முனிவருமகிழ்ந்து, அவளை அன்போடு தழுவியணைந்து எழுந்துவந்து, அன்னையை வணங்கி, ஓ அம்மணி! இப்போது பிறக்கும் புத்திரன் தென்றிசைக் கடவுளின் அமிசையில் வருவான். மேலும் சகலகலை வல்லவனாகி, மிகுந்த பராக்கிரமத்தையுற்று, பாக்கிய சிலாக்கிய யோக்கியனாகவும் ஞானவானாகவும் இருப்பான். ஆனால், இடம் பேதப்பட்டது அது தான். ஒரு குறையன்றி மற்றொரு குறையுமில்லையென்று தாயை வணங்கி, ஓ அம்மணி! இனி நீ எனக்கு இவ்வகைப்பட்ட வேலையிடாம லிருக்கவேண்டும் இனி என்னிச்சையிற் செல்ல எனக்கு விடைகொடுமென்று விடைபெற்றுத் தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார். இங்கே தாதியானவள் தென்றிசைக் கடவுளாகிய தருமன் அமிசைபெற்ற ஒரு புத்திரனைப்பெற்று, விதுரனென்று அப்புத்திரனுக்குப் பெயரிட்டு வளர்த்து வந்தாள்.

---

## ஆணி மாண்டவியர் சரித்திரம்

ஜெனமேஜெய மஹாராஜன் வைசம்பாயனரை வணங்கி, ஓ ஸ்வாமி! தென்றிசைக் கடவுளாகிய யமனுடைய அமிசம் பூலோகத்தில் வரவேண்டிய காரணமென்ன? அதனை வெளியிட வேண்டுமென்றுவினவ, வைசம்பாயனர் சொல்லுகிறார்: கேளும் ஜெனமேஜெய

மஹாராஜனே! மாண்டவிய ரென்னும் முனி
வர் முன்னம் தீர்த்தயாத்திரை முதலியவற்
றைச் செய்து யோகத்திலிருக்க வேண்டுமென்
று கருதி, சாளுவதேசத் தருகிலிருந்த ஓர்
வனத்திற் பன்னக சாலையொன் றியற்றி அதி
லிருந்து; சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம்-
என்னும் ஐம்புலனையுமடக்கி, அறிவைப் பிர
மத்தினிடத்திற்செலுத்தி, விழித்தகண் விழித்
தபடி யோகத்தி லிருந்தார். சில திருடர் ஓரி
டத்துக்கூடி, இதுவரைக்கும் அல்ப குடும்பிக
ளிடத்துச் சென்று அவர்களுடைய சொல்ப
ஸ்திதியைக் களவுசெய்து வந்தபடியால், நம்
மை அடிமையாக்கிக் கொண்டிருக்கும் தரித்
திரம் தொலையாம லிருக்கின்றது. உலகத்துக்
குக் தலைமையாளியாயிருந்து அரசு செலுத்தி
வரும்சாளுவமஹாராஜனுடைய அரண்மனை
யிற் சென்று, பொக்கிஷத்திற் கை வைத்து,
நல்லகால மிருந்து தப்பி வந்துவிட்டால்
நம்மை வருத்தும் தரித்திரம் அதமாகும்.
அல்லது நமக்கு அகாலதசை யிருந்து அகப்
பட்டுக்கொண்டால், அரசன் ஆக்கினைக் குள்
ளாவோம் அப்போது (கூண்டோடு போயி
ற்று குளிர்காச்சல்) என்கிற பழமொழிபோல்
உயிரோடு தரித்திரமும் போய்விடும். மேலும்
(எடுத்தாலும் பங்காரு பெட்டி எடுக்கவேண்
டும், இருந்தாலுஞ் சிங்காரக்கழுவி லிருக்க
வேண்டும்) என்று யாவரும் சாதாரணமாகச்
சொல்லுகிறார்கள். ஆகையால், அப்படி செய்
வோம் வாருங்களென்று ஒருவரை ஒருவர்
வினவியபோது, அவர்களில் உயிர்மேல்
ஆசையுற்றவர் போக மற்றவர் துணிந்து,
சாளுவராஜன் அரண்மனையிற் புகுந்து, தங்
கள் நேர்ப்பினால் அங்கிருக்குங் காவலாளிக
ளின் கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்தி
ருந்து, அன்றிரவு நடுநேரத்தில் அரசன்
பொக்கிஷ அறையின் கதவைப் பிளந்து உட்
பிரவேசித்து, தங்கள் கருத்துக் கிசைந்தமட்
டுந் திரவியத்தை எடுத்துச் சிப்பங் கட்டிக்
கொண்டு வெளிப்பட்டார்கள். அதற்குள் அர
சனுக்கு ஒரு சொப்பனந்தோன்றி, திடுக்கென்
றெழுந்து, அருகில் காவலிருக்குஞ் சேவகரை
நோக்கி, நமது பொக்கிஷத்தினருகில் ஆளர
வமாகத் தோன்றுகிறபடியால் அஃதென்ன
போயறிந்து வாருங்களென்று கட்டளையிட,
சேவகர் பொக்கிஷ மிருக்கிற அவகோலத்
தைக் கண்டு, மறுபடியும் அரசனிடத்துச்
சென்று வணங்கி, ஓ ஸ்வாமி! நமது பொக்
கிஷத்துக் கபாடம் உடைபட் டிருக்கின்றதல்
லாமற் களவு போனதுபோலுந் தோன்று
கின்றதென்ன, அரசன் கடுஞ்சினமுற்று, ஆ!
ஆ! நாம் உலகிலுள்ள குடிகளுக்குக் கள்ளர்
பயமில்லா திருக்கச்செய்து வருகிறோம் நமது
அரண்மனைக்கே கள்ளர் வருகிறதா யிருந்
தால், நாம் நடத்திய செங்கோலும் காவலும்
நன்று யிருக்கிறதென்று தன்னைத்தானே நிந்
தித்துக்கொண்டு, காவலாளிகளாகிய தலையாரி
களை அழைப்பித்து, ஓ தலையாரிகளே! சில
கள்ளர் நமது பொக்கிஷ அறையின் கபா
டத்தை யுடைத்துத் திரவியத்தைக் கொள்ளை
யிட்டுப் போயினார். அவர்களைப் பிடித்து வந்
தால் உங்கள் தலை யறுபடாதிருக்கும் இல்லா
விட்டால் உங்கள் தலை உடனே போய்விடு
மென்று மகா உக்கிரமோடுரைத்தான்.

அவ்வாக்கினையைக் கேட்ட தலையாரிகள்
குலை நடுங்கி, அரசனுக்கு நமஸ்காரஞ்செய்து,
பொக்கிஷத்தருகிற் சென்று, அங்கிருந்துகால
டிக்குறியைநோக்கிக்கொண்டு அந்நகரத்தைக்
கடந்து, மாண்டவியர் யோகஞ்செய்கிற வனத்
தில் வந்தார்கள். கள்ளர்கள் தலையாரிகள் வரு
கிற அரவத்தைத்தெரிந்து, அடடா! மோசம்
வந்தது நம்மைப்பிடிக்கத் தலையாரிகள் வருகி
றார்கள் நாம் இரண்டடி எடுத்து அப்பால்
வைப்போமாகிற் பிடித்துக்கொள்வார்கள். இ
தோயிருக்கிறபன்னசாலையிற் சற்றுநேரம்ஒளி
த்திருப்போமென்று யோசித்து, அந்த மாண்
டவியரிருக்கு மடத்தில் ஒளித்தார்கள் தலையாரி
கள் அடிச்சுவடு நோக்கிக்கொண்டு அப்பன்
னகசாலையிடத்துச் சென்று, அங்கு விழித்த
கண் விழித்தபடி யோகஞ் செய்திருக்கிறமாண்
டவியரை நோக்கி, யோகத்திலிருக்கிறா ரென்
றுணராமல் அவரை வணங்கி, ஓ ஐயா! இவ்
வழியாக யாராவது சென்றார்களா வென்று
வினவ, அவர் சித்திரப்பிரதிமைபோல் யோக
த்திலிருக்கிறவ ராதலால் இவர்கள் கேள்விக்கு
உத்தரவு கொடுக்காம லிருந்துவிட்டார். தலை
யாரிகள் பெரியவர் பேசப் போகிறதில்லை இந்
தப் பன்னகசாலையை யாவது சோதிப்போ
மென்று சில தலையாரிகள் உள்ளே பிரவேசித்
துக் கையாற் றடவிப் பார்க்கும்போது, ஒளித்
திருந்த கள்ளர்கள் எடுத்துவந்த திரவியத்
தோடு தலையாரிகளின் கைக்குள்ளாயினார்கள்.
உடனே தலையாரிகள் பாபிகளை யமதூதர்
பாசக் கயிற்றாற்கட்டி இழுத்துப் போவது
போலக் கள்ளரைக்கட்டி இழுத்துக்கொண்டு,
விழித்தகண் விழித்தபடி யோகத்திலிருக்கும்

மாண்டவிய ரிடத்துவந்து, இவன் வெகுநா ளைய திருடனாய்க் கள்ளருக்கெல்லாங் குருவா யிருத்தலால் நாம் கேட்ட கேள்விக்கு விடை கொடுக்காமல் யோகத்தி லிருப்பவனைப்போல வேடங்காட்டி மௌனமா யிருந்தான். இவ னையுங் கட்டிப்பிடித்துப் போகவேண்டு மென்று ஒருவர்க்கொருவர் கலந்துபேசி, மாண்டவியரையுங் கட்டிப்பிடித்துப் போய் அரசன் சபையில் விட்டனர். அரசன் இக்கள் ளர்களைச் சிரச்சேதஞ் செய்யுங்களென்று கட் டளையிட்டு, மாண்டவியரை முற்றுநோக்கித் தலையாரிகளைப் பார்த்து, ஓ காவலாளிகளே! இதோ நிற்கிற பெரியவர் யார்? இவரை என் கட்டிவந்தீர்களென்று வினவ, தலையாரிகள் அரசனை வணங்கி, ஓ ஸ்வாமி! இவன் திரு டர்க்கெல்லா முதற்பாதம் இவனுடைய பன் னகசாலையில் இந்தக் கள்ளருமிருந்தார்கள். முன்னம் நாங்கள் இவனைப் பெரியவரென் றெண்ணி வணங்கி இவ்வழியாக யாராவது போயினராவென்று வினவினதற்கு, விழித்த கண்ணுட னிருந்த இவன் ஒன்றுஞ் சொல் லாம லிருந்தான். பின்பு பன்னகசாலையைச் சோதனை செய்யும்போது கள்ள ரகப்பட்டார் கள். ஆகையால் இவனையுங் கட்டிவந்தோம். இவனை விட்டுவிட்டால் இன்னஞ் ஜதை கூட்டுவானென்று சாதிக்க, இதைக்கேட்ட அரசன் நீதிதவருத நிலையி லிருக்கிறவனு யிருந்தும், மாண்டவியருக்கிருக்கிற பிராரத் துவவினை வல்லமையினுல் கருத்து மயங்கி அப்படியானு லிவனைக் கழுவிலேற்றுங்க ளென்று கட்டளையிட்டான். காவலாளிகள் அக் கள்ளர்களைச் சிரச்சேதஞ்செய்து, மாண்டவிய ரைக் கழுவிலேற்றி அரசனுக்குத் தெரிவித் தார்கள்.

அரசன் காவலாளிகளைப்பார்த்துச்சொல் லுகிறுன். ஓ காவலாளிகளே! கள்ளருக்கெல் லாம் குருவாகி யிருக்கிறவனென்று நீங்களே கூறியபடியால் அக் கழுமரத்தடியிற் பதிவிரு ந்து பார்த்துவாருங்கள். கள்ளர்கள் அவனைப் பார்க்கவருவார்கள். அப்படி வருகிற கள்ளரை யும் பிடித்து வாருங்களென்று கட்டளையிட் டனுப்பினுன். காவலாளிகள் அவ்வாறு கழு மரத்தடியிற் பதிவிருந்தார்கள். மாண்டவியர் தனக்கு நேரிட்ட துன்பத்தை நோக்கி, எல் லாங் கடவுள் செயலேயன்றி வேறொரு செய லில்லை யென்று துணிந்து, முன்பு வனத்தில் எவ்வாறு யோகத்திலிருந்தாரோ அவ்வாறு கழுமரத்திலகப்பட்டும் யாதொரு துன்பமு மில்லாமல் விழித்த கண் விழித்தபடி யோ கத்திலிருந்தார். சிலநாட் சென்றபின்பு பல தேவர்களும் அநேக முனிவர்களும் அவ்வழி யாய் அந்தரத்தானத்திற் செல்லும்போது, மாண்டவிய ரிருக்கிற கோலத்தைக்கண்டு பூமியிலிறங்கி, அவரை நோக்கிக் கனவருத்த முற்றவராகிச் சொல்லுகிறுர்கள். தவசிரேஷ்ட சிகாமணியாகிய மாண்டவியரே! நீர் முழுதுந் துறந்தவரா யிருந்தும் உமக்கு இவ்வகைப் பட்ட துன்பம் நேரிடும்படி வந்த காரண மென்ன? உலகத்தில் அசேதனராயும் இழி குலத்தராயு மிருந்தாலும், ஜன்மாந்திர புண் ணிய மேலிட்டுத் தவவுருவம் அமைந்தாற் சகல பாவமும் நிவர்த்தியாம். அத்துடன் அகப்பற்று புறப்பற்றுகள் நீங்கி யிருப்பாரா கில் அப்போதே பழவினை யென்கிற பெயர் அற்றுப்போம் நீர் விவேகியாகியும், சிறந்த குலத்திற் பிறந்தவராகியும், முழுதுந் துறந் தவராகியு மிருக்கிறவர். உமக்கு இந்தத் துன் பம் வந்ததை நோக்கினுல் எங்களுக்கே மிகுந்த ஆச்சரியமாக இருக்கின்றது. ஐயோ! நீர் இப்போதிருக்கிற இமிசை ராஜனுல் நேரிட்ட இமிசையாயிருக்கின்றதே அவ்வரச னென்ன மௌடிகனு? உருவத்தைப் பார்க் கும்போதே யோக்கியா யோக்கியதை யறிந்து கொள்ளவேண்டுமே "கண்ணுக் கணிகலங் கண்ணேட்டம் அஃதின்றேல், புண்ணென் றுணரப்படும்'' என்று நீதிவாக்கிய மிருக்க, உமது வுருவத்தைக் கண்டும் உம்மை இவ் வளவு இமிசைக் குள்ளாக்கின அரசன் இன் னும் உயிரோடிருக்கிறுனு? தருமதேவதையா இல்லையா? கழுவி லேற்றியபோது சுவாமிகள் எப்படி சகித்ததோ? இப்போது என்ன வேத னையைக் கொடுக்கின்றதோ? என்று மிகுந்த ஆற்றுமையோடு பலவாறு வருத்தப்படுகிற தை மாண்டவிய ருணர்ந்து சொல்லுகிறுர்.

ஓ தேவர்களே: ஓ முனிவர்களே! இந்தச் சாளுவராஜன் மற்ற ராஜாக்களுக்குள் நீதி மான். அவனை வெறுக்க வேண்டுவதில்லை. பிராரத்துவ சம்பந்த மிருந்தால் யார்தான் என்ன செய்யலாமென்று சொல்லி அவர் களுக்கு விடைகொடுத்து, முன்போல் யா தொரு துன்பமுமின்றி யோகத்திலிருந்தார். இதனைப் பதிவிருந்த தலையாரிகள் கண்டு உள்ள நடுங்கி, அரசனிடத்து ஓடிவந்து, அவனடியில் அடியற்ற பனைபோல் விழுந்து

வணங்கி, ஓ மண்டலேஸ்வரா! தங்கள் கட்டளைப்படி கழுவி லிருக்கிறவரிடத்துப் பதிவிருந்தோம். கழுவி லிருக்கிறவர் கள்ளர்க்குக் குருவல்ல ஐம்புலக் கள்ளரையும் அதமாக்கித் தங்களை யொத்த அரசரும் மற்றவரும் வணங்கத்தக்க மேலான தவசிரேஷ்ட சிகாமணி. நாங்கள் பதிவிருக்கும்போது சில தேவர்களும் முனிவர்களும் அவரிடத்து வந்து அவரிருக்கிற அவகோலத்தைக்கண்டு துன்பப்பட்டுப் போயினர். இந்தச் சேதியைத் தங்களுக்குத் தெரிவிக்க வந்தோமென்று கூற, இவ் வசனங்களைக்கேட்ட அரசன் மெய்மறந்து உள்ளம் பயந்து, ஆ! ஆ! உலகாளும் அரசனாயினேன். தனக்குத் தூதுவர்களா லறிக்கையிடப்பட்ட ஒன்றை உடனே அங்கீகாரஞ் செய்யாமல், தான் ஒருவித வேடம்பூண்டு தனித்துச்சென்று, அது உண்மையோ பொய்மையோ வென்று ஆராய்ந்துணர்ந்து, அதன்மேல் அச் செய்கைக்குச் சம்பந்தப் பட்டவருடைய குணாதிசயத்தை அக்கம் பக்கங்களி லிருப்பவர்களாலறிந்து, அதன்மேல் தீர்க்காலோசனை செய்து ஒரு தீர்ப்புக் கொடுக்கவேண்டும். அதுதான் செங்கோலென்றும் மநுசாஸ்திர முறைமையென்று மிருக்க, அதனை மறந்து காவலாளிகள் சொல்லை நம்பிப் பெரியவரைக் கழுவிலேற்றினோம். இக்குற்றம் நமதே யன்றிக் காவலாளிகளால் நேரிட்ட தல்லவென்று தன்னைத்தானே நொந்துக்கொண்டு, சிங்காதனத்தை விட்டிறங்கி மந்திரி முதலானவர்கள் பின்வர அதிவேகமாக வந்து மாண்டவிய ரிருக்கும் கழுமரத்தடியில் விழுந்து ஓவென்றலறி, ஓ ஸ்வாமி! உமது மகிமையை யறியாமற் செய்த குற்றத்தை மன்னித்து என்னைப் பாதுகாக்க வேண்டும். அரசுக்குரியவன் உலகத்திலுள்ளவர்க்குத் தந்தையும் தெய்வமுமாம் அவ் வரசனுக்குத் தந்தையும் தெய்வமும் தங்களை யொத்த மஹாத்மாக்களாதலால், எளியேன் செய்த குற்றத்தை க்ஷமித்து என்னை இரக்ஷிக்கவேண்டுமென்று பலவாறு துதித்துக் கழுமரத்தை மெதுவாய் பூமியிற் சாய்த்து, அவருக்கு வருத்த முறாமல் நெஞ்சிலிருக்கும் சூலத்தைவாங்க யத்தனித்தபோது, நெஞ்சிலிருக்கிற கழுமுனை வருத்துமாதலால் அதனைக்கண்டு அரசன் சகிக்காமல் அரத்தால் அச் சூலத்தை இருபுறமும் உராவிவிடக் கட்டளையிட்டான். கம்மியன் அவ்வாறு உராவிப் போட்டான். அவ்வாறு உராவியும் நெஞ்சிற் கழுவாணி மாத்திரம் நின்றுவிட்டமையால் அன்று முதல் ஆணிமாண்டவிய ரென்று அவர்க்குப் பெயர் வந்தது.

பின்பு அரசன் மாண்டவியர்க்குச் சோடச உபசாரமுஞ்செய்து பலவாறு துதித்தான். மாண்டவியர் மகிழ்ந்து, ஓ அரசனே! நீ நீதிமான் எனக்கு வந்த துன்பம் பிராரத்துவ மாதலால் உன்மேல் எனக்குக் கோபமில்லை. நீ சுகமாக இருவென்று வாழ்த்தி விடை கொடுத்துக் கழுமரத்தடியை விட்டு நீங்கி, முன்போல் ஒரு வனத்தில்வந்து சில காலம் யோகத்திலிருந்து, ஒருநாள் தனக்குக் கழுமர நேரிட்டதைக் குறித்து யோசித்து இவ்வகைப்பட்ட ஆக்கினை நமக்கு வரவேண்டியதென்ன? இந்தச் சந்தேகம் உலகிலுள்ள சீவ கோடிகளுக்குத் தலைமையாயிருக்கிற நடுவணுகிய யமனிடத்துச் சென்றால் தீருமென்று தெளிந்து, சில முனிவர்களுடனே யமபுரத்திற் சென்றார். யமபுரத்துக் கதிபதியாகி அறக்கடவுளென்று பெயர்பெற்ற யமன் எதிர்வந்து வணங்கி அழைத்துப்போய் ஓ ராசனமளித்து இருக்கச்சொன்னான். முனிவரன் யமனை நோக்கி, ஓ தென்றிசைத் தலைவனே! யான் கழுவால் வருத்துவந்த காரணமென்ன? அதனைக் கூறென்று வினவ யமன் வணங்கி, ஓ ஸ்வாமி! வாலைப்பருவமாக இருக்குங் காலத்தில் தும்பிகளைப்பிடித்து அவற்றின் வால்களில் முட்களைக்குத்தித் தூண்டிவிட்டீர். அவ்வினைதான் உமக்கு நேரிட்டதென்றான். அதைக்கேட்ட மாண்டவியர் யமனை நோக்கி, ஓ தென்றிசைத் தேவே! அவ் வகைப்பட்ட பாவம் புரிந்தபோதிலும் பின்பு வேதமோதினேன். வேத விதிப்படி நடந்து துறவியாகித் தவஞ் செய்தேன். விளக்கொளி பாய்ந்தவிடத்து இருள் மாய்வதுபோலத் தருமமேலிட்ட விடத்துப் பாவமாய்ந்து போமென்று வேத முறையிட்டிருக்க, இதனை நோக்காமற் சகிக்கக்கூடாத இம்சையை என் எனக்குக் கட்டளையிட்டாயென்று கடுகடுத்துக் கேட்க, யமன் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! அதிக செல்வத்தைப் பெற்றவருக்கும் அரசுரிமை பெற்றவருக்கும் மமதை மேற்கொண்டிருக்கும். அதனால் உயிர்க்குக்கெடுதி நேரிடும். அக்கெடுதி நீங்கச் செல்வவான்களுக்குப் பெரியோர்களும், அரசர்களுக்குப் பெரியோர்களோடு மந்திரிகளும் இருந்து, அவ்விருதிறத்தார் வேதாகமவிதி தப்புங் காலத்

துத் தகுந்த புத்தி சொல்லவேண்டும். அது மநுசாஸ்திரம் பெரியோர்களையும் மந்திரிகளையும் அடையாத செல்வ வான்களும் அரசரும் உயிருள்ள உயிர்களுக்கு இடையூறு செய்யுங் கருவியாக இருக்கின்றதுமன்றி அவ் விருவரும் எல்லாக் கெடுதிக்கும் உள்ளாவார்கள். ஆகையால் கடவுள் எனக்கொரு நியமஞ்செய்திருக்கிறார். அஃதென்னெனில், பெரியோர்களுக்குப் பதில் மலையையும், மந்திரிகளுக்குப் பதில் அக்கினியாற்றையும் வைத்து, ஓ தருமனே! நீதிவழுவுவையாகில் இம்மலை உன் தலையில்விழும் அப்பால் நீ அக்கினியாற்றிற் பிரவேசிப்பாயென்று பேசி யிருக்கிறார். இதோ பாரும் ஒரு மயிரிற் பெரிய மலை தொங்குகின்றது. அதன்கீழ் என் சிங்காதனம் இருக்கின்றது. இச் சிங்காதனத்தின்கீழ் அக்கினியா றிருக்கின்றது. கிஞ்சித்துப் பிசகுவேனாகில் மலையறுந்து என் தலைமேல் விழும். அப்பால் அடியேன் சிங்காதனத்தோடு அக்கினியாற்றிற் பிரவேசமாவேன். தங்களுக்கு நேரிட்ட துன்பம் நீதி யல்லாமையாயிருந்தால் தாங்கள் என்னைக் காண்பதுவு முண்டா? நீங்கள் வரு முன்னமே அக்கினியாற்றிற் பிரவேசமாகி இருப்பேனென்றான். இவையனைத்தையுங்கேட்ட மாண்டவிய முனிவர் அதிக கோபங்கொண்டு, ஓ தென்றிசைத் தலைவனே! பதின்மூன்று வயதுவரைக்குஞ் செய்த பாவ புண்ணியம் பிள்ளைகளுக்கு நிமித்தமில்லை அதனைப் பாவமென்று யார் சொல்லுகிறார்களோ அவர்களைச்சேரும். ஆதலால், நீ இன்று முதல் இப்படி நீதி நடத்தவேண்டியதென்று நிகழ்த்திப் பதின்மூன்று வயதுக்குள் செய்த தீங்கை யெனக்கு ஏற்றியபடியால் நீ பூலோகத்திற் சந்திரவமிச ராஜ ஸ்திரீகளின் தாதிவயிற்றிற் பிறந்து விதுரனென்று பெயர்கொண்டு, அரசர் துதிக்கச் சிறப்புற்றிருவென்று சபித்துவிட்டுத் தமக்கிசைந்த விடத்துச்சென்றார். யமன் அச் சாபத்தை ஏற்று, அச்சாபப்படி தாதிவயிற்றி லுதித்தானென்று வைசம்பாயனர் சொல்ல, ஜெனமே ஜெயன் மகிழ்ந்து உள்ளம்பூரித்துவணங்கி, ஓஸ்வாமீ! தென்றிசைக் கடவுளுடைய சரித்திரத்தைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்தேன். இனி மூதாதைகளின் சரித்திரத்தைக் கூறுமையா வென்று வேண்ட வைசம்பாயனர் சொல்லுகிறார்.

கேளும் ராஜ ராஜேஸ்வரா! எனது குருவாகிய வேதவியாசர் அநுக்கிரகத்தினால் அம்பிகை யிடமாகப் பிறந்த திரிதராட்டிரனையும், அம்பாலிகை யிடமாகப் பிறந்த பாண்டுவையும், தாதியிடமாகப் பிறந்த விதுரனையும், பரிமளகந்தி வீஷ்மாச்சாரி இவ்விருவருமிகுந்த காதலோடு எடுத்து வளர்த்தார்கள். இம்மூன்று பிள்ளைகட்கும் இம்மூவகைப் பெயர் யாரால் யாது காரணத்தா லிடப்பட்டதெனில், வியாசமுனிவர் கூறியபடி அந்தச் சந்திரவமிசத்தாருக்கு ஆதிக்கம் மூன்று தேசமாதலால், அதுபற்றி அம்பிகை யிடத்துப் பிறந்தவனுக்குத் திரிதராஷ்டிரன் என்று பெயரிட்டு, அம்பாலிகை யிடத்துப் பிறந்தவனுக்குப் பண்புபற்றிப் பாண்டுவென்று பெயரிட்டுத், தாதியிடத்துப் பிறந்தவனுக்கு விவேகத்தைப் பற்றி விதுரனென்று பெயரிட்டு அரசர்க்குரிய உபநயன முதலாகிய கடனை இயற்றி, நாலுவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்து நாலுகலைக்கியான முதலியவற்றை வீஷ்மர் போதித்து, வில் வித்தை யானை ஏற்றம் குதிரை ஏற்ற முதலியவற்றையுங் கற்பித்து வந்தார். சிறுவர்கள் வாலைப்பருவ மடைந்த காலத்திற் பாண்டு ராஜனுக்குப் பட்டங்கட்டவேண்டுமென்று நினைத்த பரிமளகந்தியும், வீஷ்மரும் அவனிடத்துச் சொல்ல, அப் பாண்டு தன் தமயனாகிய திரிதராட்டிரனுக்குப் பட்ட முரியதென்று தடுத்துவர, ஒரு நாள் வீஷ்மர் சிங்காதனத்தில் வந்திருந்து, மந்திரிமார் - சேனைத்தலைவர் - யூகத்தலைவர் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர் - குடித்தனக்காரர் முதலியவர்களை அழைப்பித்து அவர்களை நோக்கி, ஓ புண்ணியவான்களே! இப்போது நான் பெற்றிருக்கிற பட்டத்தை மூன்று குமாரருக்குள் யாருக்குக் கொடுக்கலாம் யோசித்துச் சொல்லுங்களென்றார். மந்திரி முதலானவர்கள் நிதானித்து, அரசுரிமைக்குப் பெருந்தன்மை வேண்டியது. ஆகையால், மூத்த குமாரனாகிய திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு இப்பட்டத்தைக் கொடுக்கலாமென்று யாவருஞ் சொல்ல, அதனைக் கேட்ட வீஷ்மர் அதிக மகிழ்வை யடைந்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் ௫௬-தேசத்தரசர்களையும் வரவழைத்து, திரிதராஷ்டிரன் முதலான மூவர்களையும் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடையாபரண அலங்கிரதஞ்செய்து, வேத வேதியர்கள் ஆசிகள் கூறத் திரிதராஷ்டிரனைச் சிங்காதனத்திலிருத்தி, யாவரு மங்களங்கூறி ஜெயா விஜ

பவரென்று வாழ்த்த வீஷ்மர் மகுடாபிஷேகஞ் செய்து, பாண்டு மஹாராஜனுக்கு இளவரசு பட்டங்கட்டி, விதுரனை எல்லா மந்திரிகட்குந் தலைமையான மந்திரியாக்கி, வந்த ஜனங்களுக்குச் சந்தனம் புஷ்பம் தாம்பூல முதலியவற்றைக் குறைவு வராம லியற்றி, அனேக தானதருமஞ் செய்து, மந்திரிகள் தவிர மற்றவர்களுக்கு விடை கொடுத்து, வீஷ்மர் மிகுந்த மகிழ்வடைந்து இனிது வீற்றிருந்தார்.

## காந்தாரி மணம்

திரிதராஷ்டிரன் மநுசாஸ்திர விதிபிசகாமல் தானதரும முதலியவற்றைச் செய்து செங்கோல் செலுத்தி வந்தான். பாண்டுமகாராஜன் அரசர்கள்பேரி லெதிர்த்து யுத்தஞ் செய்து சில தேசங்களைத் தன் தமயன் வசப்படுத்தினான். விதுரன் காலத்துக்குத் தகுந்த புத்தி முதலியவற்றைச் சொல்லித் தருமம் வழுவாம லிருக்கச்செய்து வந்தான். இப்படி நடந்துவருங் காலத்திற் பரிகளகந்தி வீஷ்மரிடத்து வந்து, சிறுவர்கள் யவ்வன திசையை அடைந்திருக்கிறார்கள். விரைவில் விவாகஞ் செய்யவேண்டும். அதற்குத் தகுந்த முயர்ச்சி செய் மகனேயென்று வார்த்தையாடிப் போயினாள். வீஷ்மர் பாண்டுவுக்கும் விதுரனுக்கும் பெண் கிடைக்கும். திரிதராஷ்டிரனுக்குப் பெண் கிடைப்பது அருமை. இதற்கென்ன செய்யலாம்? உலகத்திற் பெண்ணைப் பெற்றவர்கள் அப்பெண்ணை ஒருவர்க்குக் கொடுக்கயத்தனித்த காலத்து, தந்தை கல்வியை நோக்குவன். தாய் செல்வத்தை நோக்குவள். பெண்ணோ (கைநிறைந்த பொன்னைவிடக் கண்ணிறைந்த கணவனே யினிது;) என்கிற பழமொழிபோல் அழகை நோக்குவள். இம்மூவர் கருத்தில் முற்கூறிய இருவர் கருத்துக்கிசைந்தபடி கல்வித்திறமும் நமது புத்திரன் பெற்றினும், பின்கூறிய பெண் கருத்தின்படி அழகை யடையாமல் அந்தகனா யிருக்கிறான். ஆனால் பெண் கருதிய கருத்து அதமம். ஏனென்றால் - அழகு நிலையல்ல செல்வமு மப்படியே தந்தை கருதிய கருத்து எப்போதும் நிலைபெற்றிருக்கும். இதனை யறிந்தவர்தான் இவனுக்குப் பெண் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் வலியப் போர்செய்து பெண் கொள்ள வேண்டுமென்று யோசித்துச் சில தூதர்களை அழைத்து, எந்தத்தேசத்து அரசனுக்குப் பெண்ணிருக்கின்றதோ அந்தத் தேசத்துப் பெயரையும் அரசன் பெயரையும் பெண்ணின் திறத்தையு மறிந்துவந்து சொல்லுங்களென்று கட்டளையிட்டார். தூதர்கள் அக்கட்டளையைத் தலைமேற்கொண்டு, தேசங்கள் தோறும்போய் ஆராய்ந்து எங்குங் காணுதவர்களாய் முடிவிற் காந்தார தேசத்துட் சென்று, அத்தேசத்தை ஆளும் சுவேத மகாராஜனுக்கு ஓர் பெண்ணிருப்பதாகக் கேட்டு, அப்பெண்ணின் குணாதிசயத்தையும் விசாரித்தறிந்து, வீஷ்மரிடத்து வந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, ஓ மண்டலேஷ்வரா! தாங்கள் கூறிய கட்டளைப்படி தேசங்கள் தோறுஞ் செல்லும்போது காந்தாரதேசத்துக்குச் சென்றோம். அத்தேசத்துக்கு அரசன் சுவேத மஹாராஜன். அவனுக்கு ஒரு புத்திரி உண்டு. அப்புத்திரியோ மஹாலட்சுமியைப்போல் ரூபவதியாகி அருந்ததிபோற் கற்புடைத்தா யிருக்கிறாள். என்றுரைக்க, உடனே வீஷ்மர் சாம பேததான தண்டமென்னுஞ் சதுர்வித உபாயத்தை நன்குயறிந்த சில மந்திரிகளையும் வேதியர்களையும் அழைத்து அத்தூதரோடு கூட்டி, நீங்கள்போய் சுவேத மஹாராஜனைக் கண்டு பெண்கேட்டு வாருங்களென்று திட்டஞ் செய்து அனுப்பினார். அம்மந்திரி முதலானவர்கள் வீஷ்மர் கட்டளையைச் சிரமேற்கொண்டு காந்தாரதேசத் தரசனிடத்துச் சென்று தங்கள் வரவைக் காவலாளிகளால் தெரிவிக்க, அரசன் அவர்களை அழைத்துத் தகுந்த மரியாதையைச் செய்திருக்கச் சொல்லி வந்த காரணமென்னென்றுவினவ, மந்திரிகள் சொல்லுகிறார்கள்:

ஓ காந்தாரதேசத் தலைவனே! பூமண்டலாதிபதியா யிருந்த சந்தனு மஹாராஜனுடைய சிரேஷ்ட புத்திரசிகாமணியான வீஷ்மாச்சாரியார் ஒரு காரியார்த்தமாக யெங்களைத் தங்களிடத் தனுப்புவித்தார். அஃது என்ன காரிய மென்றால், அந்த மஹா மூர்த்தியின் சகோதரரின் மனைவிகளில் அம்பிகை இடமாகப் பிறந்து உலக முழுதையும் ஒரு குடையிற் காத்துவரும் திரிதராஷ்டிர மஹா ராஜனுக்கு மணம் புரியக்கருதி, உமது குமாரத்தியைக் கேட்டு வரச்சொன்னார். அதற்காகத்தான் நாங்கள் வந்தோம். அதற்கு உமது கருத்தென்னவென்று வினவ அரசன் மிக மகிழ்வடைந்து ஓ மந்திரிமார்களே! இது காறும் என் பெண்ணைக்குறித்து நான் கொண்டிருந்த எண்ணத்திற்கு நீங்கள் வந்து கேட்

டதுபழம் நழுவிப் பாலில் விழுந்தா லெப்படியோ அப்படி போலாயிற்று. எனக்கு மிகுந்த மகிழ்வுதான். வீஷ்மர் சுகமாக வந்து என் புத்திரியைத் திரிதராஷ்டிர மகா ராஜாவுக்கு மணஞ்செய்து கொள்ளட்டுமென்று புகல பக்கத்திலிருக்கிற அரசர்களும் மந்திரிகளும் அவனை வணங்கி, ஓ ராச ராசேஸ்வரா! தாங்களென்ன யாதொன்றையும்யோசிக்காமல் திரிதராஷ்டிரனுக்குத் தங்கள் குமாரத்தியைப் பாணிக்கிரகணஞ் செய்து கொடுக்கிறேனென்று சொல்லுகிறீர்கள். திரிதராட்டிரன் குறைதிசயத்தை அறிவீர்களோ வென்றீ வினவ அரசன் அம் மந்திரி முதலானவர்களைப் பார்த்து, திரிதராஷ்டிரன் குறைதி சயமென்ன வென்றுகேட்டு, சங்கதி யறிந்துகன வருத்த மடைந்து, வீஷ்மரிடத்தி லிருந்து வந்த மந்திரிகளை நோக்கிச் சொல்லுகிறான். மந்திரிமார்களே! உங்களரசன் வரன் முறையை நோக்குங்கால் ஒரு விதத்திற் குற்றமாயிருக்கின்றது. அக் குற்றத்தை வேத விதியென்று பரிகரித்துக் கூறிய வாக்கைப் பாதுகாப்போமென்றாலும், உங்கள் அரசனுக்குக் கண்ணில்லை. மேலும் கன்னிகைகள் கை நிறைந்த பொன்னைவிடக் கண்ணிறைந்த கணவனே இனிதென்று சொல்லுவார்கள். ஆதலால் உமது அரசனுக்குப் பெண் கொடுப்பது தகுதியல்லவென்று தடுக்க, மந்திரிகள் அரசன் வாக்கியத்தைக் கேட்டுக் கலகலவென்று நகைத்துச் சொல்லுகிறார்கள்:

ஓ அரசர் சிகாமணியே! உலகத்தில் மேகம் நல்ல ஜலத்தைக் கொடுக்கிறது. அச்சலம் எந்தெந்த நிலத்திற் படியுமோ அந்தந்த நிலத்தில் படிந்து வேறு படுகிறது. அது போல் தாங்கள் நீடிய ஆலோசனை செய்து பெண்ணைக் கொடுக்கிறோமென் றொப்பிக்கொண்டு, மந்திரிகளுடைய துர்ப்போதனையால் இப்போது மாறுபட்டு முன் சொலிய வாக்கை மறுக்கிறீர். அதனாற் கெடுதி விளையும். அக்கெடுதி என்னவென்றால், முதலாவது செங்கோல் செலுத்தும் அரசர்கள் ஒன்றைக் கொடுக்கிறோமென்று வாக்கு தத்தஞ் செய்தால், பின்பு அவ்வாக்கு தத்தத்திற்கு என்னகெடுதி வந்த போதிலும் அக்கெடுதிகளை நீக்கித் தாம் கூறிய வாக்கு தத்தத்தை நிறைவேற்ற வேண்டும். அப்படி நிறைவேற்றாமல் விட்டு விட்டால், அரசுரிமைக்கு யோக்கியதையல்ல. மேலும் ஒரு விஷயம் சொல்ப காரியமாக இருந்த போதிலும் அதனை நன்றாய் நிதானித்து, அதனால் வரும் பலாபலனை அறிந்துகொண்டு, பெரியோர்களோடுயோசித்து, மந்திரிகளோடும் உசாவி, அதன்மேல் அக்காரியம் யோக்கியதையாயிருந்தால் அங்கீகாரஞ் செய்ய வேண்டும். யோக்கியதை யல்லாமையாயிருந்தால் (சட்டி சுட்டது கைவிட்டது) என்கிற பழமொழிக்கிணங்கக் கிணற்றிற் கற் போட்டதுபோல் சும்மா யிருக்கவேண்டும். இது அரசர் தருமம். தாங்கள் அவ்விதியைக் கைவிட்டு, முன்னம் உங்கள் கருத்துக்கு ஒத்துப் பின்பு வேறுபட்டதால் உமது வாக்குக் கழிவு வந்ததுவுமன்றி, இந்த வார்த்தைகளை எங்கள் தலைவருக்குத் தெரிவிக்கும்போது அவர்க்கு அதிக கோபமுண்டாகி, உமது ஆக்கத்துக்குங் கெடுதி நேரிடப் போர்க்கோலங் கொண்டுவருவார். அப்பால் ஜெயாப ஜெய மெப்படியோ. மேலும் பிரமனுக்குத் தலைக்குறையுண்டு. திருமாலுக்கு விஷதோஷத்தாற் கரிய நிறமுண்டு. சாம்பவ மூர்த்திக்கு வாதக்காலுண்டு. இந்திரனுக்கு யோநி மயமான உடம்புண்டு. சூரியனுக்குப் பல்லில்லை. சந்திரனுக்குக் களங்கமுண்டு. ஆதிசேஷனுக்கு விஷமுண்டு. இப்படி மும்மூர்த்திகள் முதலானவர்க்கும் பழுதிருக்கின்றது. பூமண்டலத்திற் பழுதிராமலிருக்கிறவர்களில்லை. ஆதலால் மந்திரி, முதலானவர்களின் துர்ப்போதனைக் குட்படாமல் முன் கூறியபடி உமது குமாரத்தியை எங்களரசனுக்கு மணம்புரியப் பாரும். அப்பால் உமதிஷ்டம். மேல் வருவதை நீர்தான் அனுபவிக்க வேண்டுமென்று நயபயமாய்ப் பேசினார்கள். அரசன் மனங்கலங்கிச் சற்றுநேரம் மவுனமாயிருந்து பின்பு வந்த மந்திரிகளை நோக்கி, ஓ புண்ணியவான்களே! வருவதெல்லாம்வரட்டும். திரிதராட்டிர இராஜனுக்கு என் பெண்ணைக் கொடுக்கிறதில்லை. என்று கூறித் தகுந்த மரியாதைசெய்து அவர்களை அனுப்பிவிட்டார். மந்திரிகள் வீஷ்மரிடத்து வந்து, சுவேத மஹாராஜனிடத்துச் சென்றதையும் அங்கு நடந்த விருத்தாந்தத்தையுங் கூற, வீஷ்மர் கேட்டு மிகுந்த சினங்கொண்டு, சகல சாஸ்திர சிகாமணியாதலாற் சற்று நிதானித்து, ஆ! ஆ! நமது குமாரன் என்ன சாமார்த்திய வழகுடையவனா யிருந்தபோதிலும் சரீரவழகிற்குப் பிரதானமான கண்ணில்லாதவனா யிருக்கிறான். இவனுக்குப் பெண் கொடுப்பதற்கு யார்தான் சம்மதிப்பார்கள்.

(முதுகிற் புண்ணிருக்கிறவன் செடியில் நுழைவானு?) என்னும் வாக்கியம் பொய்யாகாது. ஆயினும் இவ்விஷயத்திற் பின்னிட்டு நயத்திற் காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்று யோசனை செய்திருந்தனர்.

இங்கே காந்தாரதேசத் தரசன் வீஷ்மரால் என்னகெடுதி நேரிடுமோவென்று பலவாறு யோசித்திருக்கிற தருணத்தில், அந்தப்புரத்தி லிருக்கும் காந்தாரியைச் சில தாதிகள் கண்டு சொல்லுகிறார்கள். ஓ அம்மணி! இன்றையதினம் இராஜசபையில் ஒரு சங்கதி நடந்தது. அஃ தென்னவெனில், அத்தினபுரத்துக் கதிப்தியான திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு மணஞ்செய்யவேண்டு மென்று கருதி சிலமந்திரிகள் வந்து உமது தந்தையைக் கேட்டபோது, அவர்கள் கருத்துக்குச் சரியாய் உமது தந்தை யொத்துக்கொண்டு, பின்பு அந்தத் திரிதராஷ்டிர மஹாராஜனுக்குக் கண்ணில்லா திருப்பதை மந்திரிகளாலறிந்து, முன்கூறிய வாக்கை மறுத்துப் பெண்கொடுக்கிற தில்லையென்று கூறினர். பெண்கேட்க வந்தவர்கள் சில நியாயஞ் சொல்லிப் போய்விட்டார்கள். இந்தச் சங்கதி உமக்குத் தெரியப்படுத்தினே மென்றார்கள். காந்தாரி சில தாதிகளைக் கூப்பிட்டு, அவர்களால் தந்தையைத் தன்னரண்மனைக்கு வரவழைத்து, அவர்க்கு வந்தனை வழிபாடு செய்து ஒரு பொற்பீடத்தி லிருக்கச்சொல்லி, ஓ ஐயா! உமது வாக்கினுல் எனக்கு ஒருகணவனை நியமித்தபோதே அவர்தான் எனக்குக் கணவர். நீர் நியமித்தபின்பு அவருக்குக் கண்ணில்லை யென்று நீக்குவது தகுதியல்ல. இக்கணம் முன்கூறிய வாக்குதத்தத்தின்படி என்னை அவ்வரசருக்கே மணஞ்செய்வியும் ஒருவேளை கண்ணில்லாதவ ரென்று ஐயப்படுவீராகில் அதற்கு ஞாயங்கொடுக்கிறேன். உலகிலுள்ள பெண்களின் கருத் தென்னவென்றால், அவயவப் பழுதில்லாமல் அழகிலுயர்ந்தவர்களில் ஒருவரை மணம்புரிய வேண்டுமென்று கருதுவார்கள். அவர்களெல்லாம் மத்திம ஸ்திரீகள். உத்தம ஸ்திரீகள் தேகசவுந்தரியத்தை நோக்காமற் குண சவுந்தரியத்தை நோக்குவார்கள். அதனால் நான் இராஜஸ்திரீ இனி வேறொரு புருஷரை விரும்பேன். முன்பு நீங்கள் குறித்த கருத்தின்படிக்கு நிறைவேற்றுமையாவென்று வேண்ட, அரசன் அதிக மகிழ்வடைந்து கொலுவுக்கு வந்து, மந்திரி முதலானவர்களை யழைத்து இதனைக் கூறுவதாயினன்.

ஓ மந்திரிகளே! திரிதராஷ்டிர மகாராஜனுக்கே நமது குமாரத்தியைப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்கப் போகிறோம். நமது ரதகஜதுரகபதாதிகளோடு யாவரும் பிரயாணமாகுங்களென்று கட்டளையிட்டு அரண்மனைக்குட்சென்று ஸ்நானஞ் செய்து போஜனஞ் செய்து ஆடை ஆபரணங்களை யணிந்து தானொரு ரதமேறி, குமாரத்தியை அலங்கிரதஞ்செய்து முத்துச்சிவிகையிலேற்றித் தனது சகல பரிசனங்களோடும் நகரத்தை விட்டு வெளிப்பட்டான். இதற்குள் மந்திரி முதலாகிய சேனைகளும்வந்து கலந்தார்கள். இப்பால் யாவரும் ஒன்றாய்க்கூடிக் கடலொலிபோல் வாத்தியங்கள் முழங்க அதிக மகிழ்வோடு சென்று அஸ்தினுபுரத்தை யடைந்து, தனது வரவைச் சில தூதர்களால் வீஷ்மருக்குத் தெரிவித்தான். தூதர்கள் கல்யாண விஷயத்தைக் குறித்துப் பலவாறு யோசித்தும் ஒன்றும் பிரியாமல் தேனில் விழுந்த ஈயைப்போல மயங்கி யிருக்கிற வீஷ்மரை வணங்கி, ஓ ஸ்வாமி! தங்கள் குமாரசிகாமணிக்கு விவாகஞ்செய்யத் தன் குமாரத்தியோடு காந்தாரதேசத் தலைவனுகிய சுவேதமகாராஜா வந்தார். இந்தச்சேதியைத் தங்களுக்குத் தெரிவக்க வந்தோமென்று கூறினர். வீஷ்மர் இவ்வசனங்களைக் கேட்டமாத்திரத்தில் இம்மைப்பயன் யாவும் பெற்றவர்போல் மகிழ்வுற்றுச் சில மந்திரிகளை யழைத்து, ஓ மந்திரிகளே! திரிதராஷ்டிரனுக்குக் கல்யாணஞ் செய்துகொடுக்கத் தன் குமாரத்தியோடு சுவேத மகாராஜன் நமது பட்டணத்தில் வந்திருக்கிறான். நீங்கள் எதிர்கொண்டு போய்த் தகுந்த மரியாதை செய்து அழைத்து வாருங்களென்று கட்டளை யிட்டார். உடனே அம்மந்திரிகள் சுவேத மகாராஜனைக்கண்டு, தகுந்த மரியாதை செய்து அழைத்துவந்தார்கள். சுவேத மகாராஜன் வீஷ்மரிடத்து வந்து வணங்கி, ஓ மண்டலேஸ்வரா! தாங்க ளனுப்பிவித்த மந்திரிகள் கூறிய கருத்துக்கு யா னிசைந்து பின்பு மாறுபட்டதைக் குறித்துக் குற்றம் பாராட்டுவது தருமமல்ல. இதனைத் தாதியரா லுணர்ந்த என் குமாரத்தி என்னை நேரில் வரவழைத்து, தாங்கள் முன்னதாகக் கொடுக்க விசைந்த புருஷரெவரோ அவரே எனக்குக் கணவனென்று கூறியபடியால், நான் வந்

தேன். என்னை யாதரித்து உமதிஷ்டப்படி என் குமாரத்தியை உமது குமாரனுக்கு விவாகஞ் செய்வியு மென்று இரங்கினான். வீஷ்மர் சுவேத மஹாராஜனை யாதரித்து ஒரு விடுதியிலிருக்கக் கட்டளையிட்டு,தன் மந்திரிகளை நோக்கிக் கல்யாணத்துக்குத் தகுந்த முயற்சி செய்யுங்களென்றுரைத்தார். மந்திரிகள் அக்கணத்திற் கல்யாணத்துக்குத் தகுந்த வஸ்துக்களைச் சேகரித்து, நாடுநகரங்களுக்கெல்லாம் மணவோலை போக்கி, அத்தின புரியைத்தெய்வ லோகத்தைப்போல் அலங்கரிக்கக் கட்டளையிட்டு வீஷ்மரிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! தாங்கள் கட்டளை யிட்டபடி கல்யாணத்துக்குத் தகுந்த முயற்சிகளைச் செய்து வந்தோமென்று விண்ணப்பஞ் செய்ய வீஸ்மர் எழுந்து, சிற்றன்னை யிடத்துக்கு வந்து வணங்கிப் பெண் கேட்டது முதல் பெண்ணைப்பெற்ற அரசன் தன் நகரத்துக்கு வந்தவரைக்கும் நடந்த விர்த்தாந்தத்தைச் சொல்லப் பரிகளகந்தி மகிழ்வுற்று வீஷ்மரை நோக்கி, அப்பா மகனே! நமது குலம் விர்த்தியாக விரைவிற் கல்யாணத்தை நிறைவேற்றுக வென்றாள்.

வீஷ்மர் மந்திரிகளையழைத்து, நல்ல சுபமுகூர்த்தத்திற் கல்யாண மண்டபஞ் சிங்காரிக்கக் கட்டளையிட்டார். மந்திரிகள் அவ்வாறே கல்யாண மண்டபத்திற் பற்பல விநோதமாக்கினார்கள். இதற்குள் ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் வேதவேதியர்களும் பந்து ஜனங்களும் வந்தார்கள். மந்திரிமார்கள் வந்தவர்களையெல்லாம் தகுந்த மரியாதையுடன் கல்யாண மண்டபத்தி லிருக்கச் செய்தார்கள். உடனே வீஷ்மர் மந்திரிகளுக் கெல்லாந் தலைமை பூண்டிருக்கிற விதுர மஹாராஜனை அழைத்து, உன் தமயனாகிய திரிதராஷ்டிரனை மணக்கோலஞ் செய்து அழைத்துவாவென்று கட்டளையிட்டு, சுவேதமஹாராஜனை நோக்கிக் கல்யாணப் பெண்ணைச் சகல அலங்கிரதமுஞ் செய்துகொண்டுவரக் கட்டளையிட்டார். அப்படியே விதுரன் தமயனாகிய திரிதராஷ்டிரனை வணங்கி, வீஷ்மாச்சாரியார் தனக்கு உத்திரவு செய்ததை விளம்பி அழைத்துப்போய் நல்ல கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினால் அலங்கிரதஞ்செய்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் மணவரையிற் கொண்டுவந்து உட்காரவைத்தான். சுவேதமஹாராஜனும் தாதிகளால் தன் குமாரத்தியை ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினாற் கோலஞ் செய்து, வேத வேதியர்கள் ஆசிகள் கூற, மங்கலவோசை கடலொலிபோலொலிக்க பல வாத்தியங்கள் கணகணவென்று முழங்க, சகல வைபவத்தோடும் அலங்கரித்த மணவரையில் அழைத்துவந்து உட்காரவைத்தான். வீஷ்மர் வேதவேதியர்களை நோக்கி, முகூர்த்தத்தை நடப்பிக்கும்படியாக உத்திரவு செய்தார். உடனே அப் பிரமக்கியான வேதியர்கள் வேதாகமவிதிப்படி மந்திரங்களை உச்சரித்து, மங்களகரமான முகூர்த்தத்தில் மந்திராக்ஷதைகளாற் பூசை பெற்றிருக்கிற திரு மாங்கல்யத்தைப் பெரியோர்கள் ஆசீர்வதித்துச் சபை முழுதும் தொட்டு வாழ்த்தத் திரிதராஷ்டிர மஹாராஜன் கையிற் கொடுத்து, காந்தாரி கண்டத்திற் றேவர்களும் மற்ற யாவர்களும் புஷ்பவருஷஞ் சொரிந்து வாழ்த்தும்படியாகத் தரிப்பித்து, இன்னும் செய்யவேண்டிய முறைமைகளையு முடித்தார்கள். பின்பு வீஷ்மர் விதுர மஹாராஜனால் வந்தவர்களுக்கெல்லாம் யாதொரு குறைவும் வராமல் தாம்பூல முதலியவற்றை நடாத்தி, அவ்ரவர்களுக்கு வேண்டிய வஸ்துக்களைக் குறைவறக் கொடுத்து, அன்னதானம்-கோதானம் - பூதானம்-கன்னிகாதான முதலியவற்றைச் செய்து வந்த அரசர்களுக்கெல்லாந் தகுந்தபரிசுகொடுத்து, அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேரக் கட்டளையிட்டார். பின்பு திரிதராஷ்டிரனும் காந்தாரியும் அந்தப்புரத்திற் சென்று, இரதியும் மன்மதனும்போலக் கூடிக் கலந்து வாழ்ந்திருந்தார்கள்.

### கர்னனுற்பவம்

பாண்டு மஹாராஜன் இளவரசு பட்டம் பூண்டு மநுசாஸ்திர விதி பிசகாமல் நடந்து வருகிற காலத்தில், குந்தி போஜர் வம்ச பரம்பரையிற் றோன்றிய சூரசேனன் என்பவனுக்கு ஒரு புத்திரியுண்டு. அவளோ அழகில் இலக்குமியையும்-கல்வியில் வாணியையும்-கற்பில் அருந்ததியையும் ஒத்து யாவருந் தொழப் பிரதை என்று பெயர்பெற்று வாழ்கிற காலத்தில், அசுரர்பரம்பயிரயிற்றோன்றி ஜகப்பற்றை எல்லாந் துறந்து கோபத்தை மாத்திரம் குறையவிடாமல் இருக்கிற தூருவாச மஹா முனிவர் அவ்வரச னிடத்துக்கு வந்தார். அரசன் அவரை எழுந்து யெதிர் கொண்டுபோய் அழைத்துவந்து, பொற் பீடமளித்து இருக்கச்சொல்லி, சோடச உபசார

முஞ் செய்து, பயபக்தியுடனே வாய் பொத்தி எதிர் நின்று, ஓஸ்வாமி! தாங்கள் இந்நரத்துட் பிரவேசித்து எனக்குத் தரிசனங் கொடுத்ததை நோக்கினல், இன்னகர் செய்த பூஜா பலமோ! எங்கள் மேலோர் செய்த புண்ணிய வசமோ! எளியேனுக்கு ஒன்றுந் தோன்றவில்லை என்று இனிய வசனங்களால் அம்முனிவரைக் களிப்புறச் செய்தான். அம்முனிவர் வணங்கி நின்ற அரசனுக்குப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிறுர். ஓ அரசனே! நாம் சில நாள் இந்த இடத்திலிருந்து சாதுர்மாத விரதம் அநுஷ்டிக்க வேண்டும். என்க்கு ஊழியஞ்செய்ய ஒரு ஆள் அமைக்கக்கடவை. யென்று கூற அரசன் மகிழ்வடைந்து, ஓஸ்வாமி! தங்கள் கருத்தின்படியே இங்கிருக்கலாம். தங்கள் பணிவிடைக்கு யோக்கியதையுள்ள ஆள் என் குமாரத்தி ஒருத்திதான். அவளையே பணிவிடைப் பெண்ணுக வைத்துக் கொள்ளுமையா வென்று சொல்லித் தன் புத்திரியை அழைத்து முனிவரிடத்தில் ஒப்பிவித்தான். முனிவர் அக் கன்னிகையைப் பணிவிடைப் பெண்ணுகக் கொண்டு, இரண்டு மூன்று தினம் ஆத்மலாபத்தைக் கொடுக்கிற சிவ பூஜை முதலியவற்றைச் செய்து வந்தார். இக்கன்னிகை பணிவிடை செய்வதில் மிகுந்த சாக்கிரதையும் அன்பும் உடைத்தா யிருக்கிறதை முனிவர்கண்டு ஆ! ஆ! உலகத்தில் நமக்கு ஒரு நாழிகை உளம் பொறுத்துப் பணிவிடை செய்பவர் இல்லை இக் கன்னிகை யாதொரு குறைவும் வராமற் பணிவிடை செய்துவருகிறுள் இவளது குணதிசயத்தை இன்னும் சில நாளிருந்து பார்ப்போம் என்று பின்னும் பல நாளிருந்தார்.

அப்போது இக்கன்னிகை கழங்காடல் நீராடல் பூக்கொய்தல் முதலிய விளையாட்டுத் தொழில்களைவிட்டுவிட்டு, அதிக ஜாக்கிரதையாய் நாளுக்குநாள் விஷேப்பணிவிடைகளைச் செய்துவந்தாள். அதற்கு முனிவர் அதிக மகிழ்வை அடைந்து, அக்கன்னிகையை அருகில் அழைத்து, ஓ அம்மணி! இவ்வுலகத்தில் எனக்குப் பணிவிடை செய்தவர்கள் சாபத்தை அடைந்தார்களே யன்றி லாபத்தை அடைந்தவரில்லை. இப்போது நீ ஒருத்திதான் என்மனமகிழும்படி பணிவிடை செய்துவந்தாய் அதனுல் உன்மீது எனக்குப் பக்ஷமுண்டாயிற்று இப்பவும் சில மந்திரங்கள் சொல்லுகிறேன் அவைகளைக் கற்றுக்கொள் அதன் பெருமை என்னவென்றுல், அந்த மந்திரங்கள் உச்சரித்தவுடன் அந்தந்த மந்திரங்களுக்குரிய தேவர்கள் பிரசன்னமாகி உன்னைக் கூடிக்கலந்து, தங்களைப்போன்ற புத்திரசந்தானங் கொடுத்துப் போவார்கள். இதனைப் பத்திரமாக மனதில் வைத்திருவென்று திட்டஞ்செய்து, அவள் செவியில் அஞ்சு மந்திரத்தை உபதேசித்து ஆசீர்வதித்துத் தமது தபோ வனத்துக்குச் சென்றுர். இக்கன்னிகை அம்மந்திரங்களைக் கவனித்துத் தனது அரண்மனையில் வந்து தனக்குக் கட்டியிருக்கிற கன்னிகாமாடத்திற் களிப்புற்றிருக்கிற நாளில், ஒருநாள் சந்திரோதய மானவுடனே தன்னந்தனியே அம்மாடத்தின்மிசை உலாவிவருகிற பிரதையானவள் முனிவர்கூறிய மந்திரத்தை நினைத்து, பெதும்பைப் பருவமாக இருக்கிறேமே யென்று கிஞ்சித்தேனும் யோசிக்காமல் ஒரு மந்திரத்தை உச்சரித்தாள். அந்த மந்திரம் சூரிய மந்திர மாதலால், உச்சரித்தவுடனே அதற்குரிய மந்திரவேதை ஓடிப்போய்ச் சூரியனைப்பற்றிப் பிரதை என்னும் கன்னிகை உம்மை வருந்தி அழைக்கிறுள் வாருமென்று இழுக்கச் சூரியன் திடுக்கிட்டு, ஆ! இதென்ன ஆச்சரியம்! பூலோகத்து ராஜ கன்னிகை நம்மை அழைக்க வேண்டியதென்ன? அவளுக்கு இந்த மந்திரம் ஏது? இதென்ன முழுமோசமா யிருக்கின்றதென்று யோசித்துத் தனது கியான திருஷ்டியால் நோக்கும்போது, கன்னிகை இன்னுளென்றும் அக் கன்னிகைக்கு மந்திரங் கிடைத்த காரணம் இன்னதென்றும் நன்றுய் விளங்கவே, இது ஊட்டிவைக்கும் வினை நாம் அகத்தியம் போகத்தான் வேண்டும். போகாவிட்டால் இந்த மந்திரோபதேசஞ் செய்த முனிவருடைய சாபம் நேரிடும். மேலும் நமது ஸ்வரூபத்தைக் காட்டினுல் இதுகாலப் பேதப்படுவது மன்றி நமது வரவை யாவருமறிவார்கள். என்று நினைத்துத் தனது ஸ்வரூபத்தை மாற்றி வேதியர் வேடங்கொண்டு, அதி வேகமாக அந்த மந்திர தேவதையோடு கூடக் கன்னிகையிடத்துக்கு வந்தான்.

கன்னிகை வேதியனுக வந்த சூரியனைப் பார்த்துத் திடுக்கிட்டு, உள்ளம் நடுங்கிச் சரீரம் வெயர்த்து, மெய் மயிர்ச்சிலிர்த்துத் தன்னைத் தானே மறந்து, சற்றுநேர மயர்ந்து பின்பு தெளிந்து, ஆ! தெய்வமே! நானிருக்குங் கன்

ணிகாமாடத்தின்மேல் ஆண் பக்ஷிகளும் பறக்கொணாதென்றால், இதோ கோடி சூரியப்பிரகாசம்போல் ஒளிவீசும் தேகத்தையுடைய ஒரு மஹா புருஷர் கன்னிகா மாடத்துக்கு வருகிறது மன்றி என்னையே பார்த்து வருகிறார். இவர்யாவர்? பூலோகவாசியாகில் நமது தந்தை வைத்திருக்கிற காவலைக்கடப்பது அருமை சொர்க்கவாசியாகிற் பூலோகத்து ஸ்திரீகளை நோக்கக்கூடாது ஆதலால் வருகிறவர்களாரோ வென்று ஐயுற்று நிற்கும்போது சூரியபகவான் வந்து நின்று கன்னிகையைப்பார்த்துச் சொல்லுகிறான்: ஓ கன்னிகையே! நான் நெடியகடல் சூழ்ந்த உலகத்திலுள்ள இருளை நீக்கிப் பல பொருளையும்விளங்க வைக்கிறபானு. இரவுக்கு விரோதியாகிய என்னை இந்தயிரவில் நீயழைக்கவேண்டிய காரண மென்னவென்று வினவ கன்னிகை கரங்குவித்து நமஸ்காரஞ்செய்து, ஓ ஸ்வாமி! அடியேன் சிறுவயதா யிருக்குங் காலத்துத் தவசிகாமணியாகிய துருவாசமுனிவர் வந்தார். அவர்க்குப் பணிவிடைசெய்தேன் அவர் களிகூர்ந்து என்னை யருகிலழைத்து அஞ்சுமந்திரத்தையுபதேசித்து, அவைகளின் பெருமைகளையும் எடுத்துக் கூறி ஆசீர்வதித்துப்போயினர் அவைகளிலொரு மந்திரத்தை யுச்சரித்துப்பார்த்தேன் தாங்கள் வந்தீர்களென்று பதறிப்பயந்து சொன்னாள் சூரியன் கன்னிகையை நோக்கி, ஓ பெண்ணே! இந்த மந்திரத்தைப்பெற்றபோதே சொர்க்கத்திலிருக்கும் திதி என்கிற ஸ்திரீயின் பெருமை எவ்வளவோ அவ்வளவு பெருமையை வகித்தாய். மேலும் உனக்கு நல்லகாலம் ஆதலால் இப்போது என்னைக் கூடென்று கூற, கன்னிகை திடுக்கிட்டு, ஆ தெய்வமே! இதென்ன ஆச்சரியம்? நாமோ பெதும்பைப் பருவத்தை யடைந்திருக்கிறோம் இவரோ தேவருள் சிறப்பான சூரியபகவான் நம்மை நோக்கிக் கூடென்றுரைக்கிறார் நாம் மறுத்தாற் சாபம் நேரிடும்போ லிருக்கிறது துருவாச முனிவர் இம் மந்திரத்தாற் புத்திரசந்தான மடைவாயென்று கூறியிருக்கிறார். மந்திர சக்தியால் வந்து இவரைக் கூடாமல் நீக்கி விடுவோமாகில் அம் முனிவராலும் சாபம் நேரிடும் கூடுவோமாகிற் கற்புடைக்கு அழிவு வருதலுமன்றிப் பல பேராற் கன்னிகை பிள்ளை பெற்றனளென்று நிந்திக்க நேரிடும் கற்புடைமையையும் நிந்தனையையும் நீக்கி முனிவர் கூறியபடி கூடுவோமென்றாலும், கல்விக்குரிய மங்கைப் பருவத்தை இன்னும் நாமடையவில்லை இதற்கென்ன செய்கிறது? என்று சிந்தித்துக் காலமல்லாத காலத்தில் மந்திரத்தை யுச்சரித்தபடியால் அதனால் வரும் நய நஷ்டத்தை நாமே அநுபவிக்கவேண்டியதென்று தீர்மானித்துக் கொண்டு சூரியபகவானை நோக்கி, ஓ ஸ்வாமி! இப்போது தாங்கள் கூறியபடி கூடுவதற்கு நானோ பருவகாலமடையாதவளா யிருக்கிறேனாதலால், இதற்கு விடையென்ன வென்று வினவ, பானு ஓ கன்னிகையே! கல்விக்குரிய பருவத்தை நாம் கொடுக்கிறோம் நீ கூடென்று கூறி மங்கைப் பருவத்தை அநுக்கிரகஞ் செய்தான். உடனே கன்னிகை மங்கைப்பருவ மடைந்து தனக்கு வந்த மங்கைப் பருவத்தை நோக்கி வியப்புற்றுச் சூரியனை வணங்கிச் சொல்லுகிறாள்: ஓ ஸ்வாமி! பெதும்பைப்பருவமா யிருந்த என்னை மங்கைப்பருவ மாக்கினீர்கள் இனிப் புணர்வதற்குத் தடை சொல்லொணாது தடை கூறாமற் புணர்வேனாகில் உலகிலுள்ளோர் கற்பிழிவானவளென்று நிந்தை கூறுவார்கள் ஆதலால் இதற்கென்ன செய்வேனென்றாள். சூரியபகவான் சொல்லுகிறான்: ஓ பெண்ணே! நீ அதற்கஞ்சாதே நான் சொல்வதைக்கேள் என்னைக்கூடு உடனே உனக்கு ஒரு புத்திரனுண்டாவான். அப் புத்திரனை ஒரு பேழையில் வைத்துக் கங்கையில் விட்டுவிடு கங்கை அச் சிசுவைக் காப்பாற்றிக் கரைசேர்ப்பாள். மேலும் இப்போது கிடைத்திருக்கிற மங்கைப் பருவமு நீங்கி முன்போலப் பெதும்பைப்பருவத்தை அடைந்திருப்பாய் அஞ்சாமல் என்னைச் சேரென்றான். பிரதை அதற்குச் சம்மதித்துச் சூரியப்பகவானை அழைத்துப் பொற்பஞ்சணை மெத்தையிலிருத்தித் தானும் உள்ளும் புறம்பும் ஒத்து ஐந்துவித ஆலிங்கன முதலியவற்றை இயற்றிக் கூடிக் கலந்தாள். உடனே சூரியன் தனது கிருபாநோக்கத்தை இவள்மேற் செலுத்தித் தனதிடத்துக்குச் சென்றான்.

கேளும் இராஜாதிராஜனே! இங்கே கன்னிகை கருப்பவதியாகி ஒரு முகூர்த்தத்துக்குள் மூன்றுலகமும் புகழத்தகுந்த சிறப்பினை வகித்த ஒரு புத்திரனைப் பெற்று, இப் புத்திரனை வைத்திருப்போமாகிற் சூரியோதயமானவுடனே பலருமறிவார். அதன்மேல் நமக்கும் நமது தந்தையினிதிக்கும் பழுது நேரிடுமென்று தன்க்குள்ளே யோசித்து, ஒரு பேழையில் தன் வஸ்திரத்தி லொன்றை விரித்து,

அதில் அச்சிறுவனை வளர்த்தி, பல தேவதைகளைத் துதித்துக் கங்கையில்விட்டு அக் கங்கையையும் பலமுறை துதிசெய்து வணங்கித் தன் கன்னிகாமாடத்துக்கு வந்தாள். வந்தவுடன் மங்கைப்பருவமும் கருப்ப வுற்பத்திக் குறியுமாறி முன்போற் பெதும்பைப் பருவத்தை அடைந்து, சூரியபகவானை அணைந்தது முதல் நடந்தவை யெல்லாங் கனவுபோ லெண்ணிச் சுகமாக இருந்தாள். இங்கே பிருதையால் விடுத்த பேழை கங்கையிற் செல்லும்போது கங்கை அதிக மகிழ்வை யடைந்து, அச்சிறுவனுக்கு யாதொரு குறைவு முறாதிருக்க அலைகளாகிய கையினால் அப்பேழையை யேந்தி அஸ்தினபுரத்துத் துறையருகில் விட்டனள். உதயத்தில் அத்தினபுரத்துக்கு அரசனாகிய திரிதராஷ்டிர மஹாராஜனுக்குச் சாரதியாகும் ரதையனும் அவன் மனைவி ராதையும் ஸ்நானஞ் செய்யக் கங்கைக்குவந்து, அங்குள்ள பற்பல வேடிக்கைகளைப் பார்த்து நிற்கிறபோது பேழையைக் கண்டு, அதிக ஆவலைக்கொண்டு கங்கையிலிறங்கி, அப்பேழையைக் கரையிற் கொண்டுவந்து திறந்து, அதிலிருக்கும் சூரியப்பிரகாசமான புத்திரனைப் பார்த்தவுடன் பெருத செல்வம் பெற்றவர்போலாகி, புத்திரபாக்கியமில்லாத ரதையனும் அவன் மனைவியு மனமகிழ்ந்து, அப்புத்திரனை எடுத்து உச்சிமுகந்து, உள்ளங்கால் முத்தமிட்டு, அவனிருக்கும் சுந்தரத்தை நோக்கிப் பூரிப்படைந்து புத்திரனில்லையென்று வருத்தமுற் றிருந்த நமக்குக் கங்காதேவியே புத்திரனைப் பாலித்தாளென்று அந்த அம்மனைப் பிரார்த்தித்து வந்தனை வழிபாடு செய்து, புத்திரனையும் பேழையையும் எடுத்து வந்து தன் வீடுசேர்ந்து, தானதருமங்களைச் செய்து, நல்ல சுபமுகூர்த்தத்தில் நாமகரண மிடவேண்டுமென்று கருதி என்ன பேரிடலாமென்று யோசித் திருக்கிறபோது சூரியபகவான் ஆகாயவாணியை யழைத்து, ஓ ஆகாயவாணி! என் வீரிய விர்த்தியி லுண்டாகிய சிறுவன் ரதையன் வீட்டிலிருக்கிறான். அச்சிறுவனுக்குப் பெயரிட யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். சீக்கிரம் நீபோய் அச்சிறுவனுக்குக் கர்னனென்று பெயர் கூறிவா என்று அனுப்ப அவ்வாறே ஆகாயவாணி ரதையன் முதலிய சபையோர்கள் செவிக்குக் கேட்கும்படிச் சொல்ல, அதைக் கேட்ட ரதையன் வியப்படைந்து ஆகாயவாணி கூறியபடி கர்னனென்று பெயரிட்டு, வேத வேதியர்களுக்கெல்லாந் தானதருமஞ்செய்து, மிகுந்த அன்புடன் அப்புத்திரனை வளர்த்து, நாலுவேதம் - ஆறுசாஸ்திரம்-அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றைக் கற்பித்து, வில்வித்தை யானையேற்றம் குதிரையேற்ற முதலியவுங் கற்கச் செய்தான்.

### பரசுராமனாற் கர்னன் சாபம் பெற்றது.

திரிதராஷ்டிரன் முதலானவர்களுக்கு வீஷ்மர் வில்வித்தை கற்பித்திருக்கிறதைக் கர்னனுணர்ந்து, பூர்த்தியாக அவ்வில்வித்தையைக்கற்க வெண்ணிப் பரசுராமமூர்த்தியிடத்து வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி! அநாதையாகிய அடியேன் வில் வித்தையின்மேல் காதற்கொண்டு வந்தேன் என்னாசை நிறைவேறக் கிருபா நோக்கம் புரிந்தருள வேண்டுமென்று பலவாறு துதிக்கப், பரசுராமமூர்த்தி ஆசீர்வதித்து, நீ என்ன பிராமணனா வென்று கேட்க, கர்னன் ஆமென்றுறைந்தான். பரசுராமர் அவன் கருத்துக்கு ஒத்துக்கொண்டு தாங்கற்றிருக்கும் வில்வித்தை முதலியவற்றை யெல்லாங் குறைவில்லாமல் அவனுக்குக் கற்பித்துவருகிற காலத்தில், கர்னன் க்ஷத்திரியத் தன்மையை வெளிப்படுத்தாமற் பிராமணத் தன்மையாகவே யிருந்து, வித்தைகளை யெல்லாங் கிரகித்து, நெடிய கடலைக் கையிலடக்கி உட்கொண்ட அகத்திய முனியைப்போல் அதிக விரிவாகியும் அருமையாகியு மிருக்கின்ற தனுர்வேத சமுத்திரத்தைப் பரசுராமமூர்த்தியால் எளிதிற் கடந்து, திரிமூர்த்திகளும் வியப்புறத் தகுந்த வித்தைகளிற் சிறப்புற்றும் ஒன்று மறியாத அன்பேதையைப் போல் அபினயித்து, அந்தப் பரசுராமமூர்த்திக்குப் பயபக்தியோடு பணிவிடை செய்து கொண்டு வந்தான்.

ஒரு நாள் பரசுராமமூர்த்தி கர்னனை அழைத்து, அவனது தொடையின்மேற் சிரசை வைத்துச் சயனித்து நித்திரை செய்தார். அப்போது தெய்வகதியால் இரத்தவாரியென்கிற ஒரு புழுவந்து கர்னனுடைய தொடைச் சந்தில் நுழைந்து துளைத்தது. அதற்குக் கர்னன் அஞ்சாமல், தொடையை அசைத்தாற் குருவுக்கு நித்திரைபங்கம் வருமென்று யோசித்து அசையாம லிருந்துவிட்டான். அந்த ரத்தவாரி யென்கிற புழு விடாமற் றுளைக்கவே கர்னன் தொடையிலிருந்து

ரத்தவெள்ள முண்டாகிப் பரசுராமர் தேகத்தை நனைத்தது. பரசுராமமூர்த்தி எழுந்து ரத்தவெள்ளத்தைக் கண்ணுற்றுப் பிரமைகொண்டு, அக்கர்னன் தொடையையும் முகத்தையும் நோக்கும்போது கர்னன் முகம் இந்த ரத்தத்துக்குக் கிஞ்சித்து மஞ்சாம லிருக்கிற குறிப்பைப்பார்த்து, ஐயுற்று, ஆ! ஆ! இதென்ன ஆச்சர்யம்? பிராமணனா யிருப்பானாகில் ரத்தத்தைக் கண்டவுடன் உடல் நடங்கும் இவன் சிறிதும் உதறலும் நடுக்கமு மில்லாம லிருக்கின்றபடியால் இவன் க்ஷத்திரியனே யன்றிப் பிராமணனல்லவென்று தீர்மானித்து அதிக கோபங்கொண்டு; அடா கர்னா! நீ யார்? உண்மையை வெளிப்படுத்தென்று வினவ, கர்னன் பதிற்சொல்ல நாவெழாமல் மவுனமாயிருக்க, பரசுராமர் மிகவுஞ் சினங்கொண்டு அடாகர்னா! இந்த ரத்தத்தைக்கண்டு சற்று மஞ்சாமலிருந்தமையால் நீ க்ஷத்திரியனென்பதற்குச் சந்தேகமில்லை. நானோ வீஷ்மன் முன்னிலையில் க்ஷத்திரியருக்கு வில்வித்தை கற்பிக்கிறதில்லை யென்று சபதம் செய்திருந்தேன். அச் சபதத்தைக்கெடுத்து என்னிடத்து வில்வித்தையைக் கற்றுக்கொண்டமையால், நீ யென்னிடத்திற் கற்ற வில்வித்தை நல்ல சமர் முகத்தில் உதவாமற் போகக்கடவதென்று சாபமிட்டார். கர்னன் அச்சாபத்தை ஏற்று மிகுந்த வருத்தமுற்றுத் தன்னரண்மனை சேர்ந்து வாழ்ந்திருந்தான்.

## குந்திதேவி மணம்

இங்கே குந்திபோஜன்பெற்ற குந்திதேவியாகிய பிரதை பெதும்பைப் பருவங் கடந்து மங்கைப்பருவ மடைந்தாள். இவளை மிகுந்த அன்புடன் வளர்த்து வருகிற சூரசேனன் மங்கைப்பருவ மடைந்த தன் பெண்ணைக் கருதி சுயம்வரஞ் சாட்டி, ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்குந் திருமுகமெழுதித் தூதுவர்கள் கையிற் கொடுத்து அனுப்புவித்தான். தூதுவர்கள் அந்தந்த அரசர்களுக்குத் திருமுகங் கொண்டுபோய்க் கொடுக்க, அத் திருமுகத்தின் கருத்தை யுணர்ந்த சகல ராஜர்களுந் தங்கள் ரதகஜ துரகபதாதியாகிய நால்வகைச் சேனையோடும் சூரசேனன் நகரத்துக்கு வந்தார்கள். வீஷ்மரும் திருமுகத்தை யுணர்ந்து, பாண்டுராஜனை அழைத்துக் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, அங்கு தானே மணக்கோலமுஞ் செய்து, இரதகஜ துரகபதாதிகள் சூழ அப்பாண்டு ராஜனையழைத்துக்கொண்டு சூரசேன மஹாராஜன் நகரத்துக்கு வந்தார். சூரசேன மஹாராஜன் வந்த அரசர்களுக்கெல்லாந் தகுந்த மரியாதையைச் செய்து விடுதிவிட்டு, சந்திரபலந் தாராபலங்கூடிய காலவோரையில் தன் மகளாகிய குந்திதேவியைக் கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடை ஆபரணங்களினால் அலங்கிரதஞ் செய்தான். பின்பு அரசர் சபைக்கு வருவித்தான். வந்திருக்கிற அரசர்களெல்லாம் குந்திதேவியினது சௌந்தரியத்தைக் கண்டு மிகுந்த ஆவலைக்கொண் டிருந்தார்கள். குந்திதேவிக்குத் தாதிகள் அந்தந்த அரசர்கள் பெயரையும் தேசத்தையும் பெருமையையும் எடுத்தோதிப் பாண்டுமஹாராஜன் அருகில் வந்து, ஓ அம்மணி! இளஞ் சூரியனைப்போற் பிரகாசிக்கிற இவ்வரசன் சந்திரவமிசத் தலைவன். அத்தினபுரத்துக் கதிபன் பாண்டுவென்னும் பெயரையுடையவன். அரசருள் இராஜசிங்கம் போன்றவனென்று கூறக் குந்திதேவி பாண்டு மஹாராஜனைத் திருந்த நோக்கி, கையிலிருக்கும் பூமாலையை அப்பாண்டு மஹாராஜனது தோளில் வீசி வணங்கினாள். உடனே சூரசேனன் வேதவேதியர்களை அழைப்பித்து, மகளையும் மருமகனாகிய பாண்டு ராஜனையும் மணவறையி லிருத்தி, நல்ல சுபமுகூர்த்தத்தில் அங்கு வந்துள்ள சகல தேசத் தரசர்களும் வியப்படைய மாங்கல்யத்தைத் தரிப்பித்து, அக்கினிபகவான் திருப்தி அடைய ஓம முதலிய சடங்குகளையும் நிறைவேற்றினான்.

## மத்திராதேவி மணம்

அப்போது வந்திருந்த அரசருள் மத்திர் தேசாதிபதி எழுந்து, சூரசேனன் முதலான அரசர்களை நோக்கி, ஓ அரசர்களே! நான் செய்யும் விண்ணப்பத்தை அங்கீகாரஞ் செய்யவேண்டும். அஃதென்னென்னில், மிகவும் அருமையான தவஞ்செய்து பெற்ற என் குமாரத்தியாகிய மத்திரா தேவியை இப்பாண்டுமகா ராஜனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க விருப்பமுடையவனாக இருக்கிறேன். அம்முகூர்த்தம் நிறைவேறுகிற பரியந்தம் யாவரும் இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, தன் குமாரத்தியை அழைப்பித்து நல்ல கங்கை முதலிய தீர்த்தங்களினால் ஸ்நானஞ் செய்வித்து, ஆடையாபரணங்களினால் அலங்கிரதஞ் செய்தானவுடன் அழைத்து வந்து, வீஷ்மர் முதலானவர்கள் களிப்புறக்

கன்னிகாதானஞ் செய்து, நல்ல சுபமுகூர்த்தத்திற் பாண்டுராஜனால் மாங்கல்யந் தரிப்பித்து, வேதவேதியர்கள் மகிழ்வெய்தத் தான தருமங்களைச் செய்துவந்த அரசர்களுக்கு விருந்திட்டு, அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச்சேர விடைகொடுத்தனுப்பினான். இவ்வாறு எல்லாக் காரியங்களும் சம்பிரமமாய் நிறைவேறின. பின்பு பாண்டு ராஜன் குந்திதேவி மத்திராதேவி என்னும் இரண்டு தேவியரை ரதத்திலேற்றி, வீஷ்மருடனே தனது நகரம் சேர்ந்து, பட்டணத்தை வலமாக வந்து, குடிபடை முதலிய போர்கள் மகிழ்வெய்த விருந்துடன் வெகுமதி செய்து, பூமிப்பிராட்டி கமலைப்பிராட்டி சமேதனாகிய திருமால்போற் குந்திதேவி மத்திராதேவி சமேதனாகிய பாண்டுராஜன் இன்பமுடன் வாழ்ந்து வருகிறான். அக்காலத்தில் ஒருநாள் வேட்டையாட யத்தனித்து, மந்திரிமார்களோடு மற்ற நால்வகைச் சேனைகளையும் வில்லியர் வலைஞர் வேடர்களையும் பிரயாணமாகும்படி கட்டளையிட்டு, தான் அந்தப்புரத்துட் சென்று, ஸ்நானம் பண்ணி போசனஞ் செய்து, வஸ்திராபரணங்களையணிந்து, வேட்டைமுடி தரித்து, வில்லம்பு முதலிய படைகளை யெடுத்துக்கொண்டு, மனைவியரிடத்துச் சென்று வேட்டையாடக் காட்டிற் செல்கிறேன் விடை கொடுங்களென்று கேட்க, மனைவியரிருவரும் அரசனை வணங்கி, ஓ ஸ்வாமி! எளியேமும் காட்டின் விநோதங்களைப்பார்க்க நெடுநாளாக விருப்பங்கொண்டிருக்கிறோம் இன்றையதினம் தாங்களே செல்லுகிறபடியால் அடியேங்களும் வருகிறோமென்றனர். அதற்கு அரசன் ஒத்துக்கொண்டு, வீஷ்மர் பரிமளகந்தி இவர்களுத்தரவின் பேரில் இரண்டு மனைவியரையும் அழைத்து ரதத்திலேற்றிக்கொண்டு நகரத்தை விட்டு வெளிப்பட்டான். அதற்குள் நால்வகைச் சேனைகளோடு மந்திரிகள்வந்து கலந்தார்கள்.

**அமுதந்திமுனிவரால் பாண்டு சாபம் பெற்றது.**

அப்பால் யாவரும் ஒன்றாகத் திரண்டு சகல வாத்தியங்களும் கடல்போல முழங்க ஆரவாரத்துடனே காட்டிற் சென்று, யானை-புலி-கரடி - சிங்கம் - காண்டாமிருகம் - மான் - பன்றி - முயல் - முதலியவற்றைக் குத்தியும் வெட்டியும் அடித்தும் கிழித்தும், இப்படி நானாவிதமாக விலங்கினங் கலங்கி உயிர்சோர வேட்டையாடுகிறபோது, ஒருபெரிய காண்டாமிருகம் அந்த அரசன் கண்ணுக்குத் தோன்றி மறைந்தது. அதை அரசன் கண்டு வதை செய்ய வேண்டுமென்று பின்றொடர்ந்து வருகிறபோது, வழியில் அமுதந்தி என்னு முனிவரன் தானும் தன்மனைவியுமாக அநேககாலம் தவத்திலிருந்து, ஒருநாள் காமத்தின்மேல் கருத்தைச் செலுத்தித் தன் மனைவியை அழைத்தார். மனைவி அக் குறிப்புணர்ந்து, ஓ ஸ்வாமி! அடியேன் கருத்தும் காமத்திற் சென்றிருக்கின்றது ஆனால் ஒரு விண்ணப்பம்: இக் காமமென்பது உலகிலுள்ள எல்லாவுயிர்க்கும் முள்ளதுதான் இவ்வுயிர்களில் எவ்வுயிர் அதிக காமத்தை யுடையதோ அதை யுரைத்தால் அவ் வுருவங்கொண்டு புணரலாம் அப்போது இன்ப மதிகரிக்கின்றதுமன்றிப் பகற்காலத்துக்கும் அஞ்சவேண்டிய தில்லையென்று பகர, முனிவரன் தனது மனைவி கூறியவற்றிற்கு மகிழ்வடைந்து, ஓ பெண்கள் நாயகமே! எல்லா வுயிர்களிலும் மான்சாதி அதிக காமத்தை யுடையதாதலால் அந்த மானுரு வெடுத்துப் புணரலாமென்று வகுக்க, இருவரும் அவ்வுருகொண்டு புணர்ந்திருந்தார்கள். அரசன் அஃதுணராமல், மான்தானே யென்று வில்லில் தொடுத்திருக்கிற பாணத்தை விட்டுவிட்டான். அப்பாணம் குறிபிசகாமல் ஆண்மானின்மேற் பட்டுருவிற்று. உடனே முனிவரன் தன்னுருவங்கொண்டு, மிகுந்த கோபத்துடன் அரசனை நோக்கி, ஓ அரசனே! நீ சந்திரவமிச தராபதியாயிருந்தும் கெடுதி சம்பாதித்துக்கொண்டாய் வேட்டையாடுகிறபோது எதிர்ப்பட்ட மிருகங்களைக் கொல்லுகிறதென்று விதியிருந்தாலும், புணர்ச்சியிலிருக்கும் உயிர்களைக் கொல்லுதல் புண்ணியமல்ல இவ்வாறு மநுசாஸ்திர முறைத்திருக்க, அதை யுணர்ந்தும் கலவியிலிருக்கிற என்னுயிரைப் பாணத்தார் கொள்ளைகொண்டாய் நீ உன் மனைவியரோடு புணர்ச்சி செய்வையாகில் அக்கணம் உன்னுயிர் நீங்கக்கடவதென்று சாபமிட்டுப் பூமியில் விழுந்து இறந்தார். அவர் மனைவி கணவனிறந்ததைக் கண்டு உடனே தானும் உயிரைவிட்டாள். அரசன் இச் செய்கையை நோக்கி, அடடா!! மோசம் வந்தது நாம் சுபாவமான மானென்று நினைத்துப் பாணத்தை விட்டோம் முனிவராகயிருந்தார். நம்மாலிரண்டுயிர் சேதமாயிற்று, இதற்கென்ன செய்கிறதென்றேங்கிக் கனவருத்தமடைந்து, சேனைகளோடு வந்து கலந்து மந்திரிகளை நோக்கிக் கூறுகிறான்: ஓ மந்திரி

களே! இம்மை இன்பங்களில் முக்கியமான
இன்பம் காமம் அக் காமத்துக்கு ஒரு முனிவ
னாலே அபாத்திரனானேனென்று அவ்வர
லாற்றைக்கூறி, இனி நான் அரசனுக்குரியவ
னாயிருந்தும் என்ன பயன்? துறவறத்தை
அடைந்து தவத்தைச் செய்து நல்லகதி
யடைகிறேன் நீங்களெல்லாம் நகரத்துக்குச்
சென்று, என் மூதாதையாகிய வீஷ்மர்
முதலியவர்களுக்கு என் விர்த்தாந்தத்தைத்
தெரிவியுங்களென்று கட்டளையிட்டான். மந்
திரி முதலானவர்கள் அதைக்கேட்டுக் கனவரு
த்த மடைந்து, நால்வகைச் சேனையோடும்
நகரம் வந்து, வீஷ்மர் முதலிய அரசர்களை
வணங்கி, பாண்டுராஜனுக்கு நேரிட்ட அபாக்
கியத்தைச் சொன்னார்கள். வீஷ்மரும் பெரிய
ராஜனும் பரிமளகந்தியும் மகா துக்கத்தோடு
மிக்க வருத்தமடைந்து, யாதொன்றுந்தோன்
றாமலிருந்து விட்டார்கள்.

இங்கே பாண்டுராஜன் இரண்டு மனைவி
யரையுமழைத்துத் தனக்குநேரிட்ட சாபத்
தின் வரலாற்றைச்சாற்றி, இனி நான் தவத்
துக் குறியவனேயன்றி உங்களிருவர் போகத்
திற் குரியவனன்று. உங்கள் தாய்வீடுசேர மன
மிருந்தார் சேரலாம். அல்லது மாமிவீடுசேர
மன்மிருந்தாற் போய்ச்சேர்ந்திருக்கலாம். ஆத
லால் உங்கள் கருத்தென்னவென்று வினவ,
மனைவியரிருவரும் இவ்வசனங்களைக் கேட்ட
வுடன் செவியில் நாராசத்தை யேற்றியது
போற் மனவருத்தமடைந்து, அடியற்ற கூந்
தற் பனைபோல் அரசன் திருவடியில் விழு
ந்து, ஓ அரசனே! என்னவார்த்தையுரைத்
தீர்? கணவனைவிட்டு உயிர்வைத்து வாழ்
வதைவிட இறப்பது மிகுந்த நலமென்று
ஸ்திரீகளுக்கு விதியிருக்க, உம்மைவிட்
டுப் பிரிந்து நாங்கள் உயிரோடு வாழ
மாட்டோம். தேவரீர்க்குப் பணிவிடைப்
பெண்களாகவாவது மிருப்போமே யல்லது
தங்களுக்குப் பிரியமாகிய நாங்கள் ஒருக்
காலும் பிரியோமென்று பேச அரசன் அம்
மனைவியர் கருத்துக்கிசைந்து, அவ்விருவ
ரையு மழைத்துக்கொண்டு ஒரு வனத்திற்
சென்று, மணிமகுடத்தை நீக்கிச் சடைமுடி
தரித்து. ஆடை ஆபரணங்களை நீக்கிக் காவி
காம்பர தண்டு கமண்டல தாரியாகி, தவஞ்
செய்திருக்கும் பெரியோர்களை அடுத்து உப
தேசம்பெற்று, தவத்தாலடையும் சிலாக்கிய
மான பாக்கியமெதுவோ அதனையடைய
வாளேந்திய கரத்தால் ஓமதிரவியங்களையேந்
திச் சில நாள் ஓமத்தை வளர்த்தும்-சில நாள்
ஜலத்தில் நின்றும்-சில நாள் ஒருகாலூன்றி
யும்-சிலநாள் பஞ்சாக்கினிமத்தியிற் பொருந்தி
யும்-இப்படி அநேக நாள் தவஞ்செய்திருந்
தான். இத்தன்மையாயிருக்கிற காலத்திற்
கருத்தைப் பிரமத்தினிடத்திற் செலுத்தித்
தவஞ்செய்து திவ்யக்கியானத்தை யடைந்த
மகாமுனிவர்களெல்லாம் வந்து தவஞ்செய்
கிற பாண்டுராஜனது மனவுறுதியைக்கண்டு,
மிகுந்த மகிழ்வையும் வியப்பையுமடைந்து,
அப் பாண்டுராஜனுக்கு வேதத்தினுட் கரு
த்தை விளங்கவுரைத்தார்கள். அதனாலும்
பாண்டுராஜன் நாளுக்குநாள் தவத்தில்
அதிக முயற்சியை யுடையவனாகி, தவத்தால்
அடையும் பயனாகிய மனப்பகையை வென்று
அறிவின்மயமாக நின்றான்.

ஒருநாளவன் வடபுறத்திலிருக்கும் சிரிங்கி
வனத்துக்குச் செல்லக் கருதி மனைவியரை
நிறுத்தித் தனியேசென்று, அவ்வனத்திலிரு
க்கும் சதானந்த முனிவர் முதலியபேர்களைக்
கண்டு வணங்கி நின்றான். சதானந்த முனிவ
ரும் இன்னுஞ் சில முனிவர்களும் ராஜமுனி
வனைக் கண்டு மகிழ்வடைந்து பல ஆசிகள்
வழங்கி, அரசனாக இருந்தும் தவசிரேஷ்ட
னாகிய தன்மையை நோக்கிச் சகல கலைக்கியா
னாதி நுட்பங்களையும் மஹா மந்திரங்களின்
ரகசியத்தையும் போதித்தார்கள். பாண்டு
ராஜன் அம் மஹாமுனிவர்கள் கூறிய கருத்
தையுட்கொண்டு, மறுபடியு முன்போலத் தவ
த்தி லிருந்தான். இவ்வாறு சில நாட் சென்ற
பின்பு, ஒருநாள் சதானந்தர்-வசிஷ்டர்-வால
மீகர்-விஸ்வாமித்திரர்-முதலான முனிவர்கள்
கைலாயத்தைத் தரிசிக்கக்கருதி வடதிசையை
நோக்கிச் செல்லுகின்றவர்கள் பாண்டுராஜன்
தவஞ்செய்கிற வனத்துக்கு வந்து அப்
பாண்டுராஜனைக் கண்டார்கள். பாண்டுராஜன்
திடுக்கென்றெழுந்து, வந்தவர்களுக்கு வந்
தனை வழிபாடு செய்து பயபக்தியோடு எதிர்
நிற்கிறபோது முனிவர்கள் பாண்டுராஜனுக்கு
ஆசிகள் வழங்கிச் சொல்லுகிறார்கள்: ஓ ராஜ
முனியே! நாங்கள் கைலாயத்தைத் தரிசிக்கக்
கருதி வடதிசை நோக்கி வந்தோம். உம்மை
யும் பார்த்துப் போவோமென்று இங்கடைந்
தோமென்றுரைக்கப் பாண்டுராஜன் முனிவர்
களை வணங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி
களே! அக்கைலாயத்தை அடியேனுந்தரிசிக்க

வேண்டு மென்னும் அபேக்ஷை யுள்ளவனுயிருக்கின்றே னுதலால், நானும் வருகிறேனென்று புகன்று அவர்களைப் பின்றொடர்ந்து சென்றான். அம்முனிவர்கள் அதற்கு ஒன்றுஞ் சொல்லாமற் கைலாயத்தருகிற்சென்று நின்று ராஜனைப் பார்த்து, ஓ ராஜமுனியே! எங்களுடன் இதுவரைக்கும் பின்றொடர்ந்து வரச் செய்தது நீசெய்த தவப்பலன். இனி நீ வரக் கூடாது. ஏனென்றால், உலகத்தில் அளவற்ற புண்ணியத்தைச் செய்தபோதிலும் புத்திரனில்லாதவர்க்குப் புண்ணிய லோகமில்லை. ஆதலால், உனக்குப் புத்திரனில்லை. நீ கைலாயத்தைத் தரிசிப்பதற்கு யோக்கிய னல்லவென்று மறுக்கப் பாண்டுராஜன் மனங் கலங்கி அம் முனிவர்களுக்கு வந்தனைசெய்து சொல்லுகிறான். ஓ ஸ்வாமிகளே! புத்திரனில்லாவிட்டாற் புண்ணிய லோகமில்லை யென்று கட்டளையிட்டீர்கள். அஃதுண்மைதான். அடியேன் புணர்ச்சிசெய்தால் மரணமடைவதாகச் சாபம்நேரிட்டிருக்கின்றது. எளியேன் என்ன செய்வேன்? தங்களுடைய கிருபை யிருந்தால் எல்லா நலத்தையும் ஒரு நொடிப்பொழுதிலடையலாம். ஆதலால் அடியேன்மீது கிருபைவைத்துக் கைலாயத்தைத் தரிசிக்க அருள் புரிய வேண்டுமென்று வேண்ட, முனிவர்கள் அரசனை நோக்கிப் புன்னகை புரிந்து சொல்லுகிறார்கள்.

### பாண்டுராஜனுக்கு முனிவர்கள் தருமசந்தான விதியுரைத்தல்.

ஓ ராஜமுனிவரே! நாங்களே வேத விதியை விலக்குவமாகில், உலகி லுள்ளவர்கள் அவ் வேதத்தை மதிப்பார்களா? வல்லமையிருக்கின்ற தென்று மீறி நடப்போமாகில், எளியவர்க் காசைசொல்லி பலதரந் தன்னிடத்திற்கு வரும்படி செய்து பின்பு, ஒருதவியுஞ் செய்யாமற் கடிந்து இல்லையென்று கைவிரிப்பவன் எக்கதி யடைவானே அக்கதி எங்களுக்கும் வருமாதலால், நாங்கள் கூறுவதைக்கேள்! புணர்ச்சி செய்தால் மரண மடைகிறதென்று உனக்குச் சாப மிருக்கிறபடியால், தேவர் அல்லது முனிவர் இவ்விருதிறத்தாரி லொருதிறத்தாரால் புத்திரசந்தானம் பெற்றுக்கொள்ளலாம். வேதத்தில் தருமசந்தானம் பெறலாமென்று விதியிருக்கின்றது. இவ்விதிப்படியே முன்னம் பரசுராமரால் நாசமடைந்த சூரிய குலம் முனிவர்களால் உலகில்விர்த்தியாயிற்று. இன்னும் அநேக அநுபவ மிருக்கின்றது. அவைகளைக் குறித்து உதாரணங் கொடுக்க வேண்டுவதில்லை. ஏனென்றால் உங்கள் பரம்பரையே போதுமான திஷ்டாந்தரமா யிருக்கின்றது. ஆதலால் நீ போய்ப் புத்திர சந்தானம் பெற்றுக் கொள்ளுமென்று நிறுத்தி, இன்னுமவன் மனந் தேறும்படி பல அநுபவங்களையும் பற்பல விதிகளையும் தக்கபடி ஓதி உபதேசித்து, அவ்வரசன் பின்றொடராதிருக்கத் தங்கள் சக்தியால் உருவத்தை மறைத்து அந்தரத் தியானமாகச் சென்றார்கள். பாண்டுராஜன் மிக வருத்தத்தோடு மீண்டு, முன்பு தவநிலை யுற்றிருந்த ஸ்தானத்தையணுகி, அங்கு தனித்திருக்கின்ற தன் இரண்டு மனைவியரையும் நோக்கி, ஓ துணைவியர்களே! முனிவர்க ளெல்லாம் கைலாயத்தைத் தரிசிக்கச்சென்றார்கள். யானும் அவர்களோடு சென்றேன். கைலாயத்தருகிற் போனபோது அம்முனிவர்கள் என்னைநோக்கி உனக்குப் புத்திரனில்லையாதலால், நீ கைலாயத்துக்கு வரக்கூடாது என்று மறுத்து, தருமஸந்தான மாகிலும் பெற்றுக்கொள்ளென்று உத்திரவு கொடுத்து மறைந்துவிட்டார்கள். நான் இந்தப் பூதலத்திற் பிறந்து என்ன துற்பாக்கியத்தை அடைந்தேன்? என்னைப் போற்பாவி உலகிலில்லை. நீங்களிருவரும் என்கருத்தின்படி நடந்தீர்களானால் அப்போது உலகிலுள்ள எல்லாப்பாக்கியத்தையும் பெறுவதுமன்றி, மேலான புண்ணிய லோக வாழ்வையும் அடையலாம். அக்கருத்தென்னென்னில், கோதானம்-பூதானம்-கன்னிகாதானம் - வஸ்திரதானம் - அன்னதானம் - சொர்ணதான முதலிய தானங்களையும், இரப்போர்க்குக் குறிப்பறிந்தீதல்- நல்விரதங்களை நடாத்தல்- அநேகயாகங்களைச்செய்தல் முதலிய சற்கருமங்களையும் இடைவிடாது செய்து வந்தாலும், ஒருவராலுங் கற்றுக்கொள்ளக் கூடாத மாதுரியத்தையுடைய மழலைச்சொல்லைப் பொழிந்து மார்பின் மேலும் தோளின் மேலும் ஏறிவிளையாடி, பிரியமான சொல்லாற் பிறர்மனதையு முருகச்செய்யும் ஒரு புத்திரபாக்கிய மில்லாவிட்டால் எல்லாப்பாக்கியமும் நிறைந்து திருவிளக்கில்லாத வீட்டை நிகர்க்கும். ஆதலால் நீங்கள் மனமகிழ்ந்து யாரையாவது கூடிப் புத்திரனையளித்தால் எனக்கு அதிக நல்லுண்டாவது, உங்களுக்கும் கணவனிருக்க மற்றொருவனைச் சேரச் சொல்லுகிறேனென்பதில் ஐயமும் வருத்தமும் வேண்டுவதில்லை. முன்னம் பரசுராம

பஞ்சபாண்டவர்களின் உற்பவம்



துரியோதனாதியர்களின் உற்பவம்.

ரால் நாசமடைந்த சூரியவமிசம் அவ்வம்ச பட்டத்தரசிகளுக்கு ஆசிரியராகிய முனிவரால் செய்த கர்ப்பதானத்தினுல் விர்த்தியாயிற்று. இஃதன்றி மற்றொரு ராசனுகிய கனமாடபாத னென்போன் தன் குருவாகிய வசிஷ்டரால் ஒரு புத்திரனைப்பெற்றுக் கொண்டான். பலி சக்கரவர்த்தி தீர்க்கதமனுற் புத்திர பாக்கியத்தை அடைந்தான். கேகயதேசத்துராஜன் சுரதன் அவன்பத்தினி சுரதசேனை. இவ்விருவரும் புத்திரனில்லாமற் பெரியோரைக் கொண்டு மூன்று புத்திரரைப் பெற்றுக் கொண்டார்கள்.

இதன்றியும் உத்கிர்ஷ்டமான புத்திரர் ஆறுபேர். அவர்கள் யாரெனில், அவுரசன் க்ஷேத்திரசன்-தத்தன்-குறித்திமன்-கூடசன்-அபவிந்தன் - என்னுமிவர்களாம். இவர்களுள்-பெண்சாதியிடத்திற் பிறந்தவன், அவுரசன். புருஷன் வமிசத்தில் மூத்தவருக்குப் பிறந்தவன், க்ஷேத்திரசன். ஸ்விகாரம் பெற்றுக்கொண்டவன், தத்தன் தாய்தந்தை யில்லாமல் தன்னுஸ்தியைக்கொடுத்து வளர்த்துக் கொண்டவன் குறித்திமன் தன் பத்தினி தன் வமிசத்தாருடன் சேர்ந்து பெற்றபிள்ளை, கூடசன் தாயுந்தந்தையும் வளர்க்க நிர்வாகமில்லாமற் போட்டுவிட வளர்த்துக்கொண்டவன். அபவிந்தன் இப்படிக்கு ஆறுபிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளவேண்டும். இதற்கு வழியில்லாவிட்டால், நிகர்ஷ்டமான பிள்ளைகள் ஆறுபேர் அவர்கள் யாரெனில், கரனீனன்-சடோகன்-பிறந்திமன்-பவனற்பவன்-சுயந்தத்தன்-சவுத்திரன்-என்னு மிவர்களாம். இவர்களுள் கன்னிகையீன்ற பிள்ளை, கரனீனன் - கல்யாணம் பண்ணும்போது கர்ப்பமாயிருந்து பெற்றபிள்ளை, சகோடகன்-மாதாபிதாவிற்றுப் போட வாங்கி வளர்த்தபிள்ளை. பிறித்திமன்-புநர் விவாகம்பண்ணிப் பெற்றபிள்ளை, பவனற்பவன் - ஒருவனுக்குப் பிள்ளையென்று வந்து சரணம் புகுந்தவன், சுயந்தத்தன்-பெண் வயிற்றிற்பிறந்து சொந்தப் பிள்ளைக்குச் சரியானவன். சவுத்திரன் இந்த ஆறுவித புத்திர சந்தானமாவது பெறவேண்டுமென்று வேத முறையிடுகின்றது. எனக்கு வேறு வழியில்லை. நீங்கள் தடைகூறாமல் ஏந்த முனிவரையாவது கூடிப் புத்திரனைப் பெறுங்களென்று வேண்டினன். இவ் வசனங்களைக் கேட்ட இரண்டு மனைவியரும் அனலில் வீழ்ந்த அரவிந்த மலர்போல் வதங்கி, கணவன் திருவடியில் விழுந்து எழுந்து நின்று, ஓ மஹானுபாவா! நீர் வழங்கிய சொற்களை நிதானிக்குமளவில் மானங்கெட்டாற் கெடுக புத்திர னுண்டானுற் போதுமென்று நினைக்கிறதாய்த் தோன்றுகிறது. இது தகுதியா? அவ்வாறு நாங்கள் செய்யலாமாவென்று மறுக்க, அரசன் மனைவியரை நோக்கிச் சொல்லுகிறான்: புண்ணியவதிகளே! எனக்கில்லாத மானமு மீனமும் உங்களுக்கு வந்ததென்ன? கனவனொரு கட்டளையிட்டால் அது கெடுதியா யிருந்தபோதிலும் அக் கட்டளைக் குட்பட்டு நடத்தல் கற்புடைய மாதர்களினிலக்கணம். நானே கெடுதியான கட்டளையை உங்களுக்குஇடவில்லை தர்மத்தைப்போதித்து நடவுங்களென்றால் ஏன் மறுக்கிறீர்கள்? நான் கூறுவது பழுதல்ல, நானும் என் தமயன் திரிதராஷ்டிரனும் தம்பி விதுரனும் என் தந்தையாகிய சித்திர வீரியனுடைய புத்திரரல்ல. எங்கள் வரன் முறையைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று வேதவியாசரால் தாங்கள் வந்த வரலாற்றை ஆதியோடந்தமாகச் சொன்னான்.

### தருமனுற்பவம்

அதுகேட்ட குந்திதேவி கணவன் சொல்லை மறுப்பது தகுதியல்லவென்று கருதி, முடித்தாலும் நல்ல மலரை முடிக்கவேண்டும் ஆதலால் யாரைச் சேர்ந்து புத்திர பாக்கியம் பெறலாமென்று தனக்குள் ஆலோசித்திருக்கிற தருணத்தில், துருவாசர் தனக்கு உபதேசித்த திவ்விய மந்திரங்களை நினைத்துக் கொண்டு கணவனை வணங்கி, ஓ மஹானுபாவா! எளியேன் ஒரு விண்ணப்பம் செய்கிறேன். அது தங்கட்கு உத்தமமா யிருந்தால் அவ்வாறு செய்வேன். அதாவது நான் சிறுவயதா யிருந்த காலத்தில் துருவாசருக்குப் பணிவிடைப் பெண்ணுக இருந்தேன். அவர் யான் பய பக்தியுடனே செய்து வரும் பணிவிடைக்கு மகிழ்ந்து சில மந்திரங்களை உபதேசித்தார். அம் மந்திரங்களின் மாட்சிமை யென்ன வென்றால், எந்தத் தெய்வத்தை நினைத்து மந்திரத்தை யுச்சரிக்கின்றேனே அந்தத் தெய்வம் வந்து என்னைக் கூடி புத்திர பாக்கியத்தைக் கொடுக்கும். அவ்வாறு செய்வது தங்களுக்குச் சம்மதிதானு வென்று கேட்க இவ்வசனங்களைக் கேட்ட பாண்டுராஜன் மகிழ்ந்து சொல்லுகிறான்: ஓ பெண்கள் நாயகமே! இப்போது நீ கூறிய வசன மெவ்

வாறிருந்த தென்றல், சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தா லெவ்வளவு இனிப்பைக் கொடுக்குமோ அவ்வள வினிப்பைக் கொடுக்கின்றது. அவ்வாறு செய்வது அதிக உத்தமம் எனக்கு எல்லாவித்திலும் இது மிகவுஞ் சம்மதிதான் செய்யென்று கட்டளை யிட்டான். அதற்குக் குந்திதேவி ஒத்துக்கொண்டு, பன்னகசாலையிற் சென்று, இராஜ அரண்மனையிலிருக்கும் பள்ளியறை போற் புட்பங்களால் அலங்கரித்து, அந்தி வேளையில் நல்ல தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, ஆடை ஆபரணங்களை நிரம்ப வணிந்து, மீட்டு மப்பன்னக சாலையிற் புகுந்து, தூறுவாசரைத் தியானித்து, அவர்கூறிய மந்திரத்தில் ஒன்றை யமனை நினைத்து உச்சரித்தாள். அம்மாத்திரத்தில் மந்திர தேவதைகள் ஓடிப்போய்யமனைச் சூழ்ந்து, ஒரு ராஜகன்னிகை உம்மை அழைக்கிறாள் வாருமென்று பற்றி இழுக்க யமன் மந்திர தேவதைகளைக் கண்டு வியப்புற்று, அம்மந்திர தேவதைகளின் கருத்தின்படி பூலோகத்தி லிறங்கி, குந்திதேவி யிருக்கிற பன்னகசாலைக்குட் புகுந்தான். குந்திதேவி அவனை எதிர்கொண்டு வந்து அழைத்துப் போய் மலரணையிலிருத்தி, சோடச உபசாரமுஞ் செய்து, யானை மருப்பையும் கனகப் பொருப்பையும் வென்று வெற்றி பெற்ற முற்று முலையை யமனது மார்பூடுருவ அழுத்திப் புல்லினாள் யமன் சற்று ஆலோசித்து, ஸ்திரீகள் வலிய அணையத்தனித்தால் யாராயிருந்த போதிலும் தடைகூருமற் புணர வேண்டுமென்று வேத முறையிடுகின்றதினால், இனி நாம் தடை சொல்லொணுதெனக் கருதி அதிக மகிழ்வை யடைந்து, குந்தி தேவியை இறுகத் தழுவி, ஆலிங்கன முதலிய புறத் தொழிலையும் சண்ட வேக முதலிய அகத்தொழிலையும் புரிந் தணைந்தான். உடனே யமனது வீரிய விர்த்தியாற் குந்திதேவி வயிற்றிற் கருவுண்டாகி, குருவாரத்தில் நவக்கிரகங்களும் நல்ல நிலையிலிருக்கிற தருணத்தில் உலகை யெல்லாம் ஒரு குடையிலாளத் தகுந்த சிறப்பினை வகித்த ஒரு புத்திரன் பிறந்தான்.

அப் புத்திரன் பிறந்த மாத்திரத்தில் தேவர்களெல்லாம் கற்பகப் பூவை வாரி மாரி போற்றூவி, துந்துமி வாத்திய முதலியவைகள் முழக்கி, ஜயா விஜீபவரென்று அக்ஷதைகளை இறைத்துப் பல ஆசிகளுங் கூறினார்கள். அரம்பை ஊர்வசி இருவரும் நடனஞ் செய்ய மேனகை திலோர்த்தமை முதலிய பெண்கள் பாடினார்கள். உலகத்திற் பட்டுப்போன மரங்களெல்லாம் தளிர்த்தன கங்கை பொங்கிக்களித்தாள் பூர்க்காத மரங்களெல்லாம் புஷ்பித்துத் தேன்மாரி பொழிந்தன. தருமதேவதை அதிக மகிழ்வோடு நாலு பாதத்திலேயும் நடந்தனள். மேகங்கள் சப்தித்தன குளிர்ந்த காற்று வீசிற்று வேதவேதியர்களுக்கும்-தவசிரேஷ்டசிகாமணிகளாகிய முனிவர்களுக்கும் தங்களுக்குள் தற்செயலாய் மகிழ்வுண்டாகி உள்ளம் பூரித்தவரானார்கள். இவ்வாறான நன்னிமித்தமுண்டாகவே சதானந்தர் - வசிஷ்டர் - வால்மீகர்-விஸ்வாமித்திரர் முதலாகிய முனிவர்கள் இன் னிமித்தத்தைக்கண்டு வியப்படைந்து, நிர் நிமித்தமாக இந் நிமித்த முண்டான தற்குக் காரண மென்னவென்று தங்களுக்குள் தாங்களே யோசித்து, தங்கள் தங்கள் கியான திருஷ்டியால் நோக்கும்போது பாண்டு ராஜனுக்கு யமன் அமிசையாற் புத்திரனுண்டானது தெரிந்து, இனி உலகம் நன்மையை அடைவதுமன்றி நமக்கும் அதிக நலமுண்டாமென்று மகிழ்வடைந்தார்கள். குந்திதேவி புத்திரனை வாரித்தழுவி எடுத்துவந்து கணவன் கரத்திற் கொடுத்தாள். கணவனாகிய பாண்டுராஜன் அப் புத்திரனைக்கண்ட மாத்திரத்தில் இரு வினைகளாகிய ஆலையிலகப்பட்டு வருத்தமுற்று அவ்வினையை நீங்கிப் பரமபதமடைந்தவர்கள் எவ்வளவு மகிழ்வை அடைவார்களோ அவ்வளவு மகிழ்வை அடைந்து, புத்திரனை வாரியணைத்து உச்சிமுகந்து, உள்ளங்கால் முத்தமிட்டு பலகாற் கண்ணிலொதிக்கொண்டு, இப்புத்திரனுக்கு என்ன பெயரிடலாமென்று யோசிக்கும்போது ஆகாயவாணி ஓ! பாண்டுமகாராஜனே இந்தப்புத்திரனுக்குத் தருமராஜனென்று பெயரிடுவென்று விளம்ப, பாண்டுராஜன் அந்த அசரீரி வாக்கியப்படி அதிக மகிழ்வோடு தருமராஜனென்று பெயரிட்டு மூன்றுதரம் அழைத்து, அங்கிருக்கும் பெரியோர்களுக்கும் மற்றவர்களுக்கும் தன்னாற் கூடியமட்டும். பேருதவியைச்செய்து, கண்ணையுங் கருத்தையும் புத்திரன்மீது வைத்துப் பாதுகாத்து வந்தான்.

கேட்டீரோ ராஜராஜேஸ்வரனானஜென மேஜெய மஹாராஜனே! அங்கே அஸ்தினபுரத்தில் நடந்த விர்த்தாந்த மென்னவென்றால்-எங்கும் வியாபித்து எல்லாச் சமாசாரங்களையுமறிந்து வருகிற நாரதர் பாண்டுராஜன்

புத்திரபாக்கியம் பெற்றதை அறிந்து, அஸ்தின புரத்துக்குச் சென்ருர். அவரை வீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் முதலானவர்கள் எதிர்கொண்டுவந் தழைத்துப்போய் பொற்பீடமளித்து, சோடச வுபசாரத்துடன் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, ஓ சுவாமி! அடியேங்கள்செய்த மாதவப்பேறல்லவா தங்களைத் தரிசிக்கச் செய்வித்தது. என்று பலவாறு புகழ்ந்து நின்ருர்கள். நாரதர் அம் மூவருக்கும் ஆசிகள் வழங்கி, ஓ புண்ணியவான்களே! ஒரு நல்லசங்கதிகேளுங்கள் அஃதென்னவெனில், பாண்டுமஹாராஜன் வேட்டைபாடக் காட்டிற் சென்று ஓர் முனிசிரேஷ்டனுற் சாபம்பெற்று, அவ் வியாகூலத்தினுற் பின்பு தவவேடம் பூண்டு தவத்திலிருந்து, சதான்ந்த முனிவர் முதலிய முனிவரோடு கைலாயத்தைத் தரிசிக்கச் சென்றபோது முனிவர்கள் பாண்டுராஜனை நோக்கி, புத்திரனில்லாதவர்கள் புண்ணிய லோகத்தைப் பார்க்கொணுதாதலால் தருமசந்தானமாவது அடைவையாகில் உன் கருத்து மகிழ்வெய்தப் புண்ணிய லோகத்தைப் பார்க்கலாமென்று மறுக்க, அதன்மேல் பாண்டுராஜன் மனைவியரிடத்து முறையிட அம்மனைவியரிற் குந்திதேவி தூறுவாச முனிவராற் பெற்ற மந்திரங்களி லொன்றை நினைக்க, அந்த மந்திரத்துக்கு அதி தேவதையான யமன் வந்துகூடி ஒரு புத்திரனை அளித்துப் போயினன். அப்புத்திரன் பிறந்தபோது நன்னிமித்தங்களுண்டாயின. உடனே ஆகாயவாணி பாண்டுவை அழைத்து, இச் சிறுவனுக்குத் தருமராஜனெனப் பெயரிடுவென்று கட்டளையிட்டாள். பாண்டுராஜன் அவ்வாக்கின்படி தருமராஜனென்று பெயரிட்டு மஹர்களிப்புடன் வளர்த்து வருகிருன். இந்தச் சேதியை உங்களுக்குச் சொல்லவந்தேனென்ருர். இதைக்கேட்ட வீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் மந்திரிகள் பிரதானிகள் முதலிய யாவரும் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்கள். இந்தச் சங்கதியை நிறைந்த கருப்பத்தோடும் அந்தப் புரத்திலிருக்கிற காந்தாரி கேட்டு மிகுந்த வருத்தமடைந்து, நாம் பட்டத் தரசன் மனைவியாயும் மூத்தவளாயுமிருக்க நமக்குமுன் நமது மைத்துனன் மனைவி புத்திரனைப் பெற்ருளேயென்று பொருமைகொண்டு, ஒரு குழவிக்கல்லை யெடுத்து அடிவயிற்றுக்கு நேரிற்பிடித்து, இது என் பாவமா? நானுண்டாயிருப்பது பிள்ளையா? பேயா? பூதமா? அல்லது பெருவயிரு? ஐயோ! என் தீவினைப்பய னிவ்வாறும் இருக்குமாவென்று இடித்துக்கொண்டாள்.

துரியோதனுதிய ருற்பவம்.

அப்போது காந்தாரி கருத்தரித்து முப்பத்தாறு மாதமாயிற்று கல்லாற் குத்திக்கொள்ளவே அக்கருப்பங் கலங்கி இரத்தம் வெளிப்பட்டது. இதைப்பார்த்த தாதிகள் பரிமளகந்தியிடத்திற் பதறிச்சொன்னுர்கள். அதையவள் வீஷ்மராதியர்களுக்குத் தெரிவித்தாள். அவர்கள் கனவருத்த மடைந்தவர்களாய் அதற்கொரு உபசாரமுஞ் செய்யாமல் தம்மை மறந் திருந்தார்கள். அப்போது பரிமளகந்தி தனது முதற் குமாரனுகிய முனிவனை நினைத்தாள். திவ்யக்கியான ஸ்வரூபியும் எனக்குக் குருவாகியும் விளங்குகின்ற வேத வியாசர் அதிவேகமாக வந்து, தாயைப் பணிந்து, சங்கதி யறிந்து அந்தப்புரத்திற் சென்று, காந்தாரியைத் தூறி, அங்கிருப்பவர்களாற் சில பாத்திரங்களை அழைப்பித்து, அவற்றுள் பெரிய தபலேயொன்றில் அவ்வுதிரத்தை (கூகூ) சிறு ஜாடியிலடைத்து, சிந்திய உதிரத்தை வாயகன்ற ஓர் பாண்டத்தில் நிரப்பிவைத்து, காந்தாரியை அழைத்து, ஓ அம்மணி! பாவங்க ளெல்லா வற்றிலும் மேலான கெடுதியை விளைக்கின்ற பொருமையாகிய பொருளை ஏன் வகித்திருக்கிருய் அதனுல் மஹா பராக்கிரமசாலியாகிய இவ்வுலகத்தையெல்லாம் ஒருகுடையி லாளத்தகுந்த சிறப்பினை வகித்த புத்திரப்பேற்றைக் கெடுத்தனையே! இனி பொருமையை மேற்கொண்டிராதே இங்ஙனம் அமைத்த பாண்டங்களிலிருக்கிற நாதங்களின்மேற் கருத்துடையவளாய், இப் பாண்டங்களுக்குக் கருப்பச் சூடுபட அணைத்து, நித்தம் நித்தம் நெய் பால்-தேன்-இம் மூன்றையும் அறுகினுல் தோய்த்துப் பதலேகளின் பக்கத்தில் ஈரம் உலராமல் ஒத்திக்கொண்டு வருவையாகில், அதிலுள்ள கருவனைத்தும் உருவாகி, பெரியபதலேயிலிருக்கின்ற கரு முன்னதாக அதனை புடைத்துக்கொண்டு வெளிப்படும் மற்றச் சாடிகளிலிருக்கிறவைகள் ஒவ்வொருநாளைக்குவொவ்வொன்ருகப் பிறக்கும் அதுவரைக்கும் அதிக ஜாக்கிரதையாகப் பாதுகாத்துவாவென்று கட்டளையிட்டு, சில மந்திரங்களை யுச்சரித்து, தாயிடத்தில் விடைபெற்றுத் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந்தார். காந்தாரி வியாசர் கூறியபடி அப்பதலேகளைப் பாதுகாத்துவந்தாள். அவ்வாறு

காத்துவருகிற காலத்திற் பெரும்பதவி விருந்த உதிரம் உருவாகி, அந்திப்பொழுதில் அசுரவேளையில் பதலேயை யுடைத்து முதலேயை நிகர்த்த ஒருமதலே வெளிப்பட்டான்.

## வீமனுற்பவம்.

இப்பால் மற்றச் சாடிகளிலிருக்கிற உதிரங்களும் உருவாகி, நாளுக்குநாள் ஒவ்வொன்ருகச் சாடிமூடியைத் திறந்து பிறந்து உதித்த அத்தினமே நாரதமுனிவர் சிருங்கி வனத்திற் சென்று பாண்டுராஜனைக் கண்டு, அவன் செய்த பூசையை ஏற்றுப் பல ஆசிகள் கூறிச் சொல்லுகிருர். ஓ மஹாத்மாவே! திரிதராஷ்டிரன் மனைவி உங்களுக்குப் புத்திரன் பிறந்தானென்பதை அறிந்து, தன் வயிற்றில் ஒரு குழவிக்கல்லாற் குத்திக்கொண்டாள். அதனுல் கருப்பங் கலங்கி உதிரப்பிரவாக முண்டாயிற்று. வியாசர் அதனை யுணர்ந்து, அவ்வுதிரங்களை நூற்றெரு பதலேகளி லேந்திவைத்தார். அவையனைத்துங் கருவுருவாய்த் திரண்டு இன்றையதினம் பெரிய பதலேயை யுடைத்துக்கொண்டு ஒரு புத்திர னுண்டானுன். மற்றப் பதலேகளி லிருக்கிற உதிரங்களும் நாளுக் கொவ்வொன்ருக உருவாகிப் பல புத்திரர் உதிப்பார்களென்று புகன்று போயினர். இவையனைத்துங் கேட்ட பாண்டுராஜன் தன் மனைவியாகிய குந்திதேவியை அழைத்து ஓ பெண்கள் நாயகமே! உன் மூத்தார் மனைவி இன்று ஒரு புத்திரனைப் பெற்றதல்லாமல், இன்னும்நூறுபுத்திரரைப் பெறப்போகின்ருளாமே. நீ ஒரு புத்திரனைப் பெற்ருல் பயனென்ன? அருமையான தவத்தாலடையும் திவ்ய மந்திரங்கள் உனக்கு இலேசிற் கிடைத்திருக்க நீ ஏன் அந்த மந்திரங்களை வீணுக்குகிருய்? வல்லமையிற் சிறந்த வாயுபகவானை நினைத்து ஒரு மந்திரத்தைச் செபியென்று கட்டளையிட, குந்திதேவி கணவன் சொல்லிய கட்டளைப்படி ஸ்நானஞ் செய்து, பன்னகசாலேயிற் சென்று, நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து, மலரணையிட்டு, அன்றிரவில் வாயுபகவானை நினைத்து ஒரு மந்திரத்தை யுச்சரித்தாள். அம்மந்திர தேவதைகள் ஓடோடியும் சென்று வாயுபகவானை சூழ்ந்தழைக்க, வாயுபகவான் குந்திதேவி யிருக்கும் பன்னகசாலேக்கு வந்தான். குந்திதேவி எதிற்கொண்டு போயழைத்து, மலரணையி லிருத்திச் சோடசஉபசாரமுஞ் செய்து, தனது இரு முலேகளுமழுந்தப் புல்லினுள். வாயுபகவான் அதற்கு மனமகிழ்ந்தவனுய்க் கட்டியணைந்து புணர்ந்தான். உடனே அவ் வாயுபகவான் வீரியவிர்த்தியால் குந்திதேவி கருப்பந்தாங்கி, கரிய மேகம்போல் நிறத்தையுடைய ஒரு புத்திரனை நல்ல சுபமுகூர்த்தத்திற் பெற்ருள்.

அப் புத்திரன் காந்தாரியினது பெரும் பதலேயிலிருந்து வெளிப்பட்ட புத்திரனுக்கு ஒருநாள் இளையவனுகியும், மற்ற நூறுபுத்திரர்களின் வல்லமைக்கு மேலான வல்லமையையுடையவனுகியு மிருந்தான். இவனைப் பாண்டுராஜன் பார்த்து, இப் புத்திரனுக்கு என்ன பெயரிடலாமென்று யோசித்து இருக்கும்போது ஆகாயவாணி பாண்டுராஜனை அழைத்து, இப் புத்திரன் வல்லமையில் மாருதிக்கொப்பாக இருப்பதனுல் இவனுக்கு வீமனென்று பெயரிடுமென, பாண்டுராஜன் அவ்வாறே வீமனென்று பெயரிட்டு மூன்றுதரம் அழைத்து, தானதருமங்களைச்செய்து மகிழ்ந்திருந்தான். வீமன் பிறக்கும்போது தடாகம் ஏரி முதலானவைகளி லிருக்குஞ் சங்குகள் முழங்கின. அஸ்தினுபுரத்திற் புத்திரர்கள் பிறந்தவுடனே ஓரியும் நாயும் ஒருங்கே அழுதன. இரத்தமழை பொழிந்தது. வெள்ளெலும்பும் சிவந்த மலரும் ஆகாயத்தினின்றும் விழுந்தன. இவ்வாறு பல துர் நிமித்தங்களைக் கண்ட வீஷ்மர் முதலானேர் கனவருத்தமடைந்து, இப்புத்திரர்களால் என்ன விபரீதம் நடக்கப்போகின்றதோ வென்று மனதுக்குள் நினைத்து அப்புத்திரருக்கு அரசருள் நடக்கும். சடங்கினை எல்லாங் குறைவரநடத்தி நல்ல பெரியோரை அழைப்பித்து நாமகரணமிடும்படி கேட்டுக்கொண்டார்கள். அப் பெரியோர்கள் இப்பிள்ளைகள் உதிரமாகிப் பதலேயிலிருந்து பிறந்தமையால், துரியோதனனென்று முதற் பிள்ளைக்குப் பெயரிட்டு, மற்றவர்க்கு துச்சாதனன் - துர்த்தருஷன் - துன்முகன்-சலந்தன்-சகன்-சமன்-விந்தன் - அநுவிந்தன் - துருவாகன் - சுபாகு- துஷ்பதருஷ்ணன்-துஷ்டத்தன் - சித்திரயோதி - துஷ்கிரமன்-விம்சதி - விகருணன் - சலசந்தி-சுலோசனன்-சித்திரன்-சித்திராகவன்-சாருசித்திரன் - சாரசன்-துன்மருஷ்ணன்-விவிக்ஷன் - விகபசமன்-பூரணநாமன்-சுநாபன்-நந்தன் - உபநந்தன்-சேநாதிபதி-சுஷேணன்-குண்டோதரன்-மகோதரன் - சித்திரத்துவம்சன் - சித்திரதன் - சித்திரபாகு - அமித்திரசித்து - சித்திரபாணன்-சித்திரவன் - மிசுவன்மி - துருவிமோ

க்ன்-சித்திரசேனன்-சித்திரகண்டன் - சுதித்திரன்-சித்திரவன்-மதரன்-அபராகிகன் - பண்டிதன்-விசாலாக்ஷன்-மார்பரன் - அசிதன் - சுயந்தன் - சுவேச்சை - துர்ச்சயன்-துருடஸ்தன்-சுகஸ்தன் - பர்தவேகன் சுவரசேனன்-ஆதித்தகேதன்-பாகசி- நாகதத்தன்- உக்கிரசாயி-கவசி-நிஷங்கி-பாசிதண்டதரன்- தனுக்கிரகன்-பீமரதன் - பீமவேகன் - பீமவாகு-அலோலகன்-பீமகருமன் - சுபாகன்-பிவிக்கிராந்தன்-அபயன் - ருடிகருமன்-துருடிரதன்-அநாதி-ருக்ஷியன் - குண்டபேதி-விராவி- தீர்க்கலோசனன் - தீர்க்கவசன்- தீர்க்கபுஜன்-அதீர்க்கன்-தீர்க்கன்-தீர்க்கபாகன் - மகாபாகு-விபூடோரஸ்கன்-கனகத்துவசன்-மகரகுண்டன் - குண்டன் - குண்டசன்-அநசுவன்-சித்திரகன் - நுக்கிராயுதன் - பாலகீர்த்தி - காந்தாயு - விரோசன் - சகுண்டலன்-விகடன்-என்று தொண்ணூற் றென்பது புத்திரர்களுக்கு பெயரிட்டானபின், மற்றொரு பதலையிலிருந்த உதிரம் கருவுருவாகி, அப்பதலையை யுடைத்துக்கொண்டு ஒரு புத்திரி தோன்றினாள். அப் புத்திரிக்கும் அப் பெரியோர்கள் துர்ச்சலையென்று பெயரிட, வீஷ்மர் முதலிய யாவரும் அப் பிள்ளைகளையும் பெண்ணையும் அதிக மகிழ்ச்சியோடு சீராட்டி வளர்த்து வந்தார்கள்.

## அருச்சுனனுற்பவம்.

இங்கே குந்திதேவி கணவனை வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! இன்னுமிரண்டு மந்திரமிருக்கிறதென்று சொல்லப் பாண்டுராஜன் இந்திரனை நாடி ஒருமந்திரத்தை யுச்சரியென்றான். குந்திதேவி அவ்வாறு இந்திரனை நினைத்து ஒரு மந்திரத்தை யுச்சரித்தாள். இந்திரன் வந்து மனமொத்துப் புணர்ந்தான். உடனே இந்திரன் வீரியவிர்த்தியார் குந்திதேவிக்குக் கர்ப்பந்தரித்துக் கருவுருவாகி, பங்குனி மாதம் உத்திர நக்ஷத்திரம் பூர்ண சந்திரோதயத்தில் அருமையான நன்னிமித்தங்கள் தோன்றவும் தேவர்கள் கொண்டாடவுமாக ஒரு புத்திரனைப் பெற்றாள். அப் புத்திரன் மன்மதன்போல வடிவும் திருமால் வல்லமையும் பெற்று விளங்கினான். அப் புத்திரனைக் குந்திதேவிவாரித்தழுவிஎடுத்துவந்து,கணவனிடத்துக் கொடுத்தாள். பாண்டுராஜன் அப் புத்திரனுடைய சுந்தரத்தையும் இராஜ அமிசையையும் நோக்கி மகிழ்வையடைந்து, இப் புத்திரனுக்கு என்னபெயரிடலாமென்று நினைத்தமாத்திரத்தில் ஆகாயவாணி பாண்டுவை அழைத்து, இப் புத்திரனுக்குப் பற்குணனென்று பெயரிடுவென்ன, அவ்வாறேபாண்டு ராஜன் பற்குணனென்று பெயரிட்டு மூன்று தரம் அழைத்துத் தான தருமங்களைச் செய்தான்: இவ்வாறு மூன்று புத்திரர்களும் வளர்ந்து வருகிறகாலத்தில் ஒருநாள் மத்திராதேவி தன் கணவன் தனித்திருக்கிற வேளையறிந்து வந்து வணங்கி ஒரு வசனஞ் சொல்லுகிறாள்.

ஓ ஸ்வாமி! என் தமக்கையான குந்திதேவி வேறு நான் வேறல்ல. அவள் வயிற்றிற்பிறந்த புத்திரர் என் வயிற்றிற்பிறந்தபுத்திரர்தான் ஆகிலும் எனது கருப்பக்குறை தீர என் வயிற்றினிடமாக இரண்டு புத்திரரைப் பெற வேண்டுமென்று காதல் கொண்டிருக்கிறேன். அதற்குத் தங்களுக்குச் சாபம்நேரிட்டிருக்கின்றது. இக்காத லெவ்வாறு நிறைவேறுமென்று வேண்ட, பாண்டுராஜன் மத்திராதேவி கொண்டிருக்கிற கருத்தை யுணர்ந்து, ஓ பெண்ணே! உன் கருத்தின்படி இரண்டு புத்திரரைப் பெறும்படி செய்கிறேனென்று சொல்லிக்கொண்டிருக்கையிற் குந்திதேவி வந்துவிட்டாள். பாண்டுராஜன் குந்திதேவியை நோக்கி, ஓ பெண்கள் நாயகமே! உன் தங்கை இரண்டு புத்திரரைத் தன் வயிற்றிற் பெறவேண்டு மென்று காதல்கொண்டு, இருக்கிறாள். உன்னிடத்தில் இன்னும்ஒரு மந்திர மிருக்கின்றதே அதை அவளுக்கு உபதேசித்து, அந்த விதியையுஞ் சொல்லென்று நயிச்சிகமாக வுரைத்தான். அதற்குக் குந்திதேவி மகிழ்வடைந்து சொல்லுகிறாள்: ஓ ஸ்வாமி! தாங்கள் இப்போது கூறியகருத்தின்படி நடக்க முன்னமே என் கருத்திலுண்டு. அவ்வாறே மந்திரோபதேசம் செய்கின்றேனென்றுசொல்லித் தன் தங்கையான மத்திராதேவியை வேறொரு விடத்தி லழைத்துப் போய் ஸ்நானஞ் செய்துவரச்சொல்லி, வந்தவுடன் மந்திரோபதேசஞ் செய்து அந்த விதியையுங் காட்டினாள். மத்திராதேவி கணவனிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! நானிரண்டு புத்திரர்களைப் பெறவேண்டும். ஆதலால் தங்கள் உத்திரவெப்படியென்று வினவ, பாண்டுராஜன் ஓ பெண்கள் நாயகமே! அஸ்வனிதேவர்களை நாடி மந்திரத்தை யுச்சரித்தால் இரண்டு புத்திரருண்டாகுமென்றான்.

## நகுல சகாதேவ ருற்பவம்

மத்திராதேவி அன்றிரவில் ஸ்நானஞ் செய்து, நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து, பன்னகசாலையைச் சுத்திசெய்து, மலரணையிட்டு, அஸ்வனி தேவர்களை நாடி அம்மந்திரத்தை யுச்சரித்தாள். உடனே அஸ்வனி தேவர்கள் வந்து, அம்மத்திரா தேவியைக் கூடிக்கலந்து போயினர். அஸ்வனி தேவர்கள் இருவராதலால் மத்திரா தேவி கருத்தரித்து, முன்னும் பின்னுமாக இரட்டைப் புத்திரரைப்பெற்று, அப்புத்திரர்களை வாரித்தழுவி யெடுத்துவந்து கணவனிடத்துக் கொடுத்தாள். பாண்டுராஜன் அப்புத்திரர்களை உச்சி முகந்து முகத்தோடு முகஞ்சேர்த்து முத்தமிட்டு, மடியில்வைத்து இப்புத்திரர்களுக்கு என்ன பெயரிடலாமென்று யோசித்திருக்கும்போது ஆகாயவாணி பாண்டுராஜனை அழைத்து, நகுலனென்றும் சகாதேவனென்றும் பெயரிடுவென்று திருவாக்கருளினாள். பாண்டுராஜன் அவ்வாறு பெயரிட்டு மூன்றுதரம் அழைத்துத் தான் தருமங்களைச் செய்தான். தருமராஜன் - வீமன் - பற்குணன் - நகுலன் - சகாதேவன் - இவ்வைவரும் பாண்டு மைந்தர்களாதலால், பஞ்சபாண்டவரென்று பெயர்கொண்டு அங்கங்கு சென்று விளையாடுகிறது, பெரியோர்களைக்கண்டு வணங்கி அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுச் சிறப்படைகிறதும், மிகுந்த வணக்கத்துடன் முனிவர்களுக்கு மகிழ்வுண்டாக நடந்து பலவரங்களைப் பெறுகிறதுமாகி யிருந்தார்கள். இவ்வாறு இவர்கள் நடந்து வருகிற நாளில் அவ்வனத்திலிருக்கும் முனிவர்களும் பெரியோர்களுங்கூடி இப்புத்திரர்கள் சிறந்த விவேகிகளாக இருக்கிறார்களென்று உபநயனஞ் செய்து, நாலுவேதம்-ஆறுசாஸ்திரம்-அறுபத்துநாலு - கலைக்கியான முதலியவற்றைப் போதித்து, இராஜபுத்திரர்களாதலால் தனுர் சாஸ்திரத்தையும் கற்பித்தார்கள். இப்புத்திரர்கள் விளக்குமுன் காண்பித்த கர்ப்பூரம் எவ்வாறுபற்றுமோ அவ்வாறு முனிவர்கள் கூறியவற்றையெல்லா மனதிலழுத்தியும், சிறுவர்களாதலால் அவர்கள் கருத்துக்கிசைந்தபடி விளையாடியும் வருவார்கள். அக்காலத்திலேயே இவர்களிற் சிரேஷ்ட குமாரனாகிய தருமன் வேதாகமாதிகளைப் பயின்ற விவேகிகளோடு பழகி அவைகளைக் கற்றான். வீமன் சிங்கம்-புலி - கரடி - யானை இவற்றை வாலைப் பற்றி இழுத்து, முனிவர்களிருக்கு மிடத்துக்குக் கொண்டுவந்து தரையிலுருட்டி, அம்முனிவர்கள் வீமன் வல்லமைக்கு மெச்சி விட்டுவிடச் சொல்லி உத்திரவு செய்ய அவர்கள் உத்திரவின்படி விட்டு விடுவான். பற்குணன் பற்பல பராக்கிரமத்தோடு திசை யனைத்திலுஞ் சென்று, தனுர்வித்தை ஜாலவித்தை முதலிய விநோதங்களைக் காட்டுவான். நகுல சகாதேவர்கள் நாற்றிசையோடு மகிழ்வெய்தக் கலைக்கியான விளையாடல்களைக் கற்பார்கள். பாண்டுராஜன்-குந்திதேவி - மத்திராதேவி இவர்கள் தங்கள் புத்திரர்கள் இவ்வாறு விளையாடி வருவதைக் கண்ணுற் கண்டு பரமானந்தத்தை அடைந்து, தங்கள் கருத்தையும் கண்ணையும் அப்புத்திரர்கள்மேற் செலுத்தி இடைவிடாமற் பாதுகாத்து வருகிற காலத்தில் வசந்தகாலம் வந்தது. அசோகு புன்னை சண்பக முதலிய மரங்களெல்லாம் புஷ்பித்து நறுமணம் வீசத் தென்றல்வந் துலாவிற்று. அக்காலத்திற் குந்திதேவி ஸ்நானஞ் செய்ய நதிக்குச் சென்றாள். ஐவரும் தாயைப் பின் றொடர்ந்தார்கள்.

## பாண்டு மரணம்

இங்கே பாண்டுராஜனும் மத்திராதேவியும் தனித்திருந்தார்கள். அக்காலம் முற்றத்துறந்த முனிவருக்கு மோகமுண்டாகித் தங்கள் மனதை வசந்தப்பச் செய்யுங் காலமாதலாற் பாண்டுவுக்குக் காம மேலிட்டு, (கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது) என்கிற பழமொழி போல் தனக்கு நேரிட்டிருக்கிற சாபத்தைக் காலகதியால் மறந்து அதிக மோகங்கொண்டு, மத்திரா தேவியைப் பார்த்துக் கைச்சரசஞ் செய்தான். அந்த மத்திராதேவியும் கணவனுக்கு நேரிட்டிருக்கிற சாபத்தை நினையாமல் மறந்து மதிமயங்கி, கணவன் கருத்துக்கிசைந்து, மதன சாஸ்திர விதிப்படி ஆலிங்கன முதலியவற்றைச் செய்து புணர்ந்தாள். இரதியு மதனும் போலப் பாண்டுராஜனும் மத்திராதேவியும் கூடிப் புணருகிறபோது, வீரியங் கலிதமாகுந் தருணத்தில் அமுதந்தி முனிவரிட்ட சாபப்படி ராஜன் பூமியில் விழுந்து மரண மடைந்தான். மத்திராதேவி கணவன் விழுந்ததை நோக்கி நெடுநாள் புணர்ச்சி யில்லாதிருந்தபடியால் அதிக காம மேலிட்டுச் சோபித்து விழுந்தானென்று அரசனுக்குச் சில சயித்திய உபசாரத்தைச் செய்தாள். அவ்

வாறு செய்தும் அரசன் அசைவற்றிருக்கிறதைக் கண்டு தட்டி எழுப்பினாள். அப்போதும் பேசவில்லை. இதென்ன விபரீதம் மென்று புரட்டிப் பார்த்தாள். அதற்கு அசையாமல் கட்டைபோல் உடல் முழுதும் விறைத்துப் போகவே மனம் நடுங்கி, ஓ! ஓ! ஸ்திரீகளைப் புணர்ந்தால் மரணமடைவை யென்று அமுதந்தி முனிவர் சாபமிட்டிருந்தாரே, அதனை மறந்து அரசன் புணர்ந்தார். அதற்கு நாமும் ஒத்திருந்தோம். சாபப்படி இறந்து விட்டார். இனி யென்ன செய்யப் போகிறோமென்று ஓ வென்றலறி, அரசன் மேல் விழுந்து, குயிலின மெல்லாம் நாணக் கதறி யழுதாள். அதற்குள் குந்திதேவி ஸ்நானஞ் செய்து பன்னகசாலை யருகில் வருகிறவள், அங்கு மத்திராதேவி யழுகிற குரலோசையைக் கேட்டுத் திடுக்கிட்டு, என் நமது தங்கை யழுகிறாள்? ஏதோ அரசனுக்குக் கெடுதி நேரிட்டதாக்கும். அதனால் தான் அழுகிறாளென்று மனதில் மதித்து ஐந்து புத்திரர்களும் ஆச்சரியப்பட்டுப் பின்னோடிவரத் தான் முன்னோடி வந்து, பன்னக சாலையில் நுழைந்து கணவனை நோக்கும்போது கணவ னிறந்திருக்கிறதை அறிந்து, ஐயோ!! ஈதென்ன கொடுமை தெய்வமே யென்று மேல் விழுந்து புரண்டு கோவென்று அழத் தொடங்கினாள். அப்போது மத்திராதேவி நடந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லினாள். குந்திதேவி இதனைக் கேட்டு, இது காலகதி என்று தீர்மானித்துப் புலம்புகிறபோது பிள்ளைகள் ஐவரும் தாதிமார் முதலானவரும் கோவென் றலறவே இவ் வோசையை அங்கு யிருக்கின்ற முனிவர்களாகிய பெரியோர்களிற் சதானந்தர் வசிஷ்டர் வால்மீகர் முதலான தவசிரேஷ்டசிகாமணிக ளறிந்து, யாவரு மொன்றாகத் திரண்டு வந்து, அரசனிருக்கும் அவகோலத்தைக் கண்டு கனவருத்த மடைந்து, குந்திதேவி மத்திராதேவி ஐந்து சிறுவர்கள் தாதியர் முதலானவர்க்குத் தேறுதல் சொல்லி, பிள்ளைகளாகிய ஐவரைக் கொண்டு நடத்த வேண்டிய கிரியா விதிகளை யெல்லாங் குறைவற நடாத்திப் பாண்டு ராஜனை அடக்கஞ் செய்தார்கள். இதற்குள் மத்திராதேவி குந்திதேவியை வணங்கி, ஓ அம்மணி! உன் கிருபையினால் நான் இரண்டு புத்திரர்களைப் பெற்றேன். இவர்கள் உன் புத்திரர்களேயன்றி என் புத்திரர்களல்ல. இனி நான் பூமியிற் யிருந்தாற் கணவனுக்கு நேரிட்டிருக்கிற சாபத்தை யறிந்திருந்தும் காமத்தை மேற்கொண்டு கணவனைக்கூடி கொன்று விட்டாளென்று உலகம் நிந்திக்கும். ஆதலால், அரைக்கணம் பூமியிலிருக்கேன். கணவனோடு நானு மிறப்பேனென்று விரையும்போது குந்திதேவி சமாதான முதலிய தேறுதல்களினால் பலவாறு கூறியவற்றை யெல்லா மறுத்து நகுல சகாதேவரைக் குந்திதேவியிடத் தொப்பிவித்துத் தானும் உயிரை விட்டாள். குந்திதேவி நகுல சகாதேவரைக் கொண்டு செய்யுங்கடனைச்செய்து, மத்திராதேவியை அடக்கஞ் செய்து, ஐந்து புத்திரர்களைத் தானே வைத்துக்கொண்டு அநாதைபோற் பரதவித்திருக்கிற தருணத்தில் வசிஷ்டர்-வால்மீகர் - விஸ்வாமித்திரர் - சதானந்தர் இவர்களெல்லா மொன்றாகக் கூடிவந்து, குந்திதேவியைக்கண்டு தேற்றி ஒரு வசனஞ் சொல்லுகிறார்கள்.

ஓ அம்மணி! இச்சிறுவர்கள் ஐவரும் சொற்கமத்திய பாதாளமென்னு மூன்றுலோகத்தையும் ஆளத்தகுந்த வல்லமையானவர்கள். அவர்களை வீணாகக் காட்டில் வைத்திருந்து பயனென்ன? உன் நகரத்தைப் போய்ச்சேர்ந்து மூத்தாராகிய திரிதராஷ்டிரனிடமாயிருந்தால் புத்திரர்கள் சிறப்படைவார்கள். ஆதலால், அத்தினபுரத்துக்குச்செல்லென்று கட்டளையிட குந்திதேவி அம்முனிவர்களுக்கு வந்தனஞ்செய்து, ஓ சுவாமிகளே! அத்தினபுரஞ் செல்ல அடியேனுக்கு வழிதெரியாதே நான் என்ன செய்வேனென்று மறுமொழி கூற, முனிவர்கள் ஆலோசித்து நாமே கொண்டுபோய் அத்தினபுரத்தில் விடவேண்டு மென்று கருதி, அம்முனிவர்களையும் அழைத்துப்போய் வீஷ்மர் திரிதராஷ்டிரன் முன்விட்டு, ஓ புண்ணியவான்களே! இந்த ஐவரும் பாண்டுராஜன் புத்திரர் இதோ யிருக்கிறவர்கள் குந்திதேவி பாண்டுராஜன் வேட்டையாடக் காட்டிற்சென்றதுமுதல் மரணமடைந்த பரியந்தம் நடந்த விருத்தாந்தம் இதுவிதுவென்றெடுத்தோதி, ஓ மஹாராஜாக்களே! இப்புத்திரர்களை அற்பமாயெண்ணப்போகிறீர்கள். இவர்களால் இக்குலமும் இக்குவலயமு மல்லாமல், தேவர்களும் நாங்களும் சுகமும் கீர்த்தியும் அடையப் போகிறோம். இவர்களை மிகுந்த அன்புடன் வளர்த்து அரசுக்குரிய தொழிலையுங் கல்வியையுங்கற்பித்து வாருங்களென்று கட்டளையிட்டு,

அவரவர்கள் செய்த வந்தனையை யேற்றுப் பல ஆசிகள் வழங்கித் தங்கள் தங்களிருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். வீஷ்மர் திரிதராஷ்டிரன் இவ்விருவரும் குந்திதேவியையும் சிறுவர்களையும் ஆதரித்து, இனிய வசனங்களினால் தேறுதல்சொல்லி, குந்திதேவியை அந்தப்புரத்துக்கு அனுப்பி, புத்திரர்களை மடியில் வைத்துச் சீராட்டி மிகுந்த காதலோடு வளர்த்து வந்தார்கள். பின்பு வீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் மூவருங்கூடிப் பாண்டு ராஜனது நிர்யாணத்தை நமது சம்பந்திகளுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று உத்தேசித்துத் திருமுகங்களெழுதி, குந்திதேவியைப் பெற்ற யாதவகுல சூரசேன மகாராஜனுக்கும் குந்திதேவியை வளர்த்த குந்திபோஜனுக்கும் சூரசேனன் குமாரனாகிய வசுந்தவனிடமாய்ப் பிறந்து முன்னம் பூமிதேவிக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றக் கருதி யிருக்கிற ஸ்ரீகிருஷ்ண சுவாமிக்கும், மத்திரதேசத்துக் கதிபனான மத்திரராஜனுக்கும் திரிதராஷ்டிரனுக்கு அம்மானாகிய காந்தாரதேசத்துச் சுவேத மஹாராஜனுக்கும், மற்றுமுண்டான நெருங்கிய பந்துக்களுக்கு மனுப்பினார்கள். அத் திருமுகத்தை அவரவர்கள் கண்ணுற்று, அக்கணம் பிரயாணமாகி அஸ்தினாபுரத்துக்கு வந்தார்கள்.

இந்தச்சேதி வீஷ்மர் முதலானவர்களறிந்து, எதிர்கொண்டுபோய் அவரவர்களுக்குத்தகுந்த மரியாதைகளைச்செய்து அழைத்து வந்து, கொலுமுகக் கூடத்திலிருக்கிற திவ்யாசனங்களிலிருத்தி பாண்டுராஜன் மரண வரலாற்றை விளங்க உரைத்தார்கள். வந்த அரசர்கள் மனங்கலங்கிக் கனவருத்த முற்று, இவையனைத்துந் தெய்வகதியென்று ஒருவிதமாகத்தேறி, அந்தப்புரத்திற்சென்று குந்திதேவியைக்கண்டு வினவித் தேறுதல்சொல்லி மறுபடியும் கொலுமுகக்கூடத்தில் யாவரும் ஒருமிக்கக்கூடி இருக்கிற தருணத்தில் திரிதராஷ்டிரன் புத்திரர்களும் பாண்டுராஜன் புத்திரர்களும்வந்து, கொலுமுகக் கூடத்திலிருக்கும் குந்திபோஜன் முதலான அரசர்களுக்குச் சாஷ்டாங்கமாக தெண்டனிட்டு நின்றார்கள். வணங்கின புத்திரர்களை அவரவர்கள் வாரித் தழுவி ஆசிர்வதித்து, பாண்டுராஜன் புத்திரர்களாகிய ஐவரையும் நோக்கி, புத்திரர்களிருக்கிறநெறிகளுக்கும் அவர்களது ஒழுக்கத்துக்கு மகிழ்ந்து பாண்டுராஜனை நினைந்துருகி, குந்திபோஜன் முதலான அரசர்கள் வீஷ்மர் திரிதராஷ்டிரன் விதுரன் முதலானவர்களை நோக்கிச் சொல்லுகிறார்கள்: ஓ அரசர்களே! துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பாண்டுராஜன் புத்திரர்களாகிய இந்த ஐவரும் உங்களுக்கொரு கண்ணா யிருக்கிறார்கள். ஒரு வேளை காலகதியால் ஒருவரையொருவர் பிரிவார்களாகில் அப்போது நடந்து கொள்வதற்கு நாங்கள் பாத்தியஸ்தராகையால் ஒருமொழி கூறுகிறோம். அஃதென்னெனில், திரிதராஷ்டிர மஹாராஜனுக்கு நூறு புத்திரர்கள். பாண்டுராஜனுக்கு ஐந்து புத்திரர்கள் இந்த இருதிறத்தாருக்கும் இப்போதிருக்கிற சலநிதி பாஷாணம் மாவிடை மரவிடை அசையும்பொருள் அசையாப் பொருள் யாவும் பேர்பாதி பங்கேயன்றிக் குறைவான பங்குகொடுப்பது தகுதியல்ல. இக் கருத்தை உட்கொண்டிருங்க ளென்றுரைக்க வீஷ்மர் முதலான மூன்றரசர்களும் இது சரிதானென்று சொல்லி ஒத்துக்கொண்டார்கள்.

அதற்குள் அந்தப்புரத்திலிருந்து சில நாதுவர் வந்து, போஜன வேளையாயிற்று எழுந்திருங்களென்று வணங்கினர். வீஷ்மர் முதலான அரசர்களும் வந்த அரசர்களும் எழுந்துபோய் ஸ்நானஞ்செய்து பூசை முடித்து, உள்ளறையி லிட்டிருக்கிற பொற்பீடத்திலிருந்து, கைத்தல்-புளித்தல் - கார்த்தல்-உவர்த்தல் - துவர்த்தல் - தித்தித்தலென்னும் அறுசுவையோடு கூடிய-உண்டல்-தின்னல் - நக்கல் - பருகல் - என்னும் நால்வகையுண்டியையும் புசித்து, கைகால்களைச் சுத்திசெய்து, விடாயாற்றி மண்டபத்தில் வந்து, சந்தனம்-புனுகு-கஸ்தூரி-கற்பூரம்-சவ்வாது முதலிய கலவைச் சாந்தணிந்து, பரிமள மலர் மாலைகளைப் புனைந்து, தாம்பூலந் தரித்து, சற்றுநேர மிளைப்பாறிய பின்பு கொலுமுகக் கூடத்தில் வந்து யாவரும் மிக மகிழ்வோடிருந்து வந்த அரசர்களெல்லாம் வீஷ்மர் முதலியவர்களிடத்து விடைபெற்றுத் தங்கள் தங்கள் நகரம் சேர்ந்தார்கள். இவர்களில் வசுதேவ புத்திரராகியும்-தருமராஜனுக்கு நல்லம்மானாகியும் - பூமிதேவியினது சுமையைத் தொலைக்கின்றவராகியு மிருக்கிற நீலமேக ஸ்வரூபனாகி விளங்குகின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் தருமராஜனுக்குப் பதினைந்து நாழிகை இளையவராதலால், அத்தருமராஜனை வணங்கி ஓரிடத்தில் தனியே

அழைத்துப் போய் ஓ மண்டலேஸ்வரா! உமக்கு இந்தத் திரிதராஷ்டிரனுலாவது அவன் புத்திரர்களாலாவது இன்னும் மற்றவர்களாலாவது ஒருகெடுதி நேரிடுகிறதாயிருந்தால், அப்போது எனக்குத் தெரிவியும். நான் என் தமையன் தம்பி முதலானவர்களோடு வந்து அந்த இக்கட்டைத்தீர்த்துப் பக்கத்துணையா யிருக்கிறேன். இதனை உறுதியாய் நம்பியிருமென்று ஸ்திரம்பேசி, மற்ற நால்வரிடத்திலும் விடைபெற்றுத் தமது நகரத்துக்குச் சென்ருர். சுவேத மஹாராஜன் புத்திரர்கள் நூற்றுவரில் யாவர்க்கு மிளையவனுகிய சகுனி துரியோதனனுக்கு நல்லம்மானுதலால் தன் தந்தையோடு சொல்லாமல் அத் துரியோதனனுக்குப் பக்கத்துணையாயிருந்து விட்டான். பரசுராமரிடத்து வில்வித்தை கற்றுத் தேர்ப்பாகன் வீட்டிலிருக்கிற கர்னன் ஒருநாள் வேடிக்கையார்த்தமாய் வீதியில் வரும்போது, துரியோதனன்கண்டு, பிராரத்துவ சம்பந்தத்தால் நிரேதுவாக ஓடி அவனைத் தழுவி, தமயனென்னு முறைகொண்டு சொல்லுகிருன், ஓ அண்ணு இன்றுமுதல் நாமிருவரும் பாலும் நீரும் போலும் - எள்ளும் எண்ணெயும் போலும் உடலுயிரும்போலும் வேற்றுமையின்றி இருக்கவேண்டும். போஜன முதலியவைகளும் என்னேடொப்புமையாக விருந்து இங்குதானே புசியும். என்னைவிட்டுப் பிரியாமலிருமென்று உறுதிகூறினன். கர்னன் அதற்கு ஒத்துக்கொண்டு, துரியோதனன் முதலான நூற்றுவரோடும் வேற்றுமையின்றி இருந்தான். கேட்டீரோ ஜெனமேஜெய மஹாராஜனே! இதுவரையில் நூற்றுவர்க்கும் பாண்டவர்க்கும் விரோதமில்லை. இந்தச் சகுனி சேர்ந்ததின் பின்பு நடந்த விர்த்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளுமென்று கூறுகிருர்.

சம்பவச் சருக்கம் முற்றிற்று.

---

## ஆருவது,
## வாரணுவதச் சருக்கம்

---

கண்ணன் - துதி.

தொழுவார்தம் வினைதீர முற்கோலமாய் வேலைசூழ் பாரெயிற், முழுவானை நன்னுமமொன்ருகிலுங் கற்ருே ருருவோதினர், வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன், புழுவாக வொன்றிற் பிறந்தாலு நரகிற்புகார் காணுமே.

நூற்றுவரும் பாண்டு மக்கள் ஐவரும் வேற்றுமையின்றி இரு திறத்தாரும் ஒரு தாய்வயிற்றுப் பிள்ளைகள்போலக் கலந்து கற்றுணர்ந்த பெரியோர்களுடைய சினேகம் போற் குற்றம்பாராட்டாமல் நேசித்துப்பந்து கழற்காய்முதலிய சிறுபிள்ளைகளுக்குரிய விளையாடல்களைப் பேதமில்லாமல் விளையாடிவருகிறகாலத்தில், வீமன் தன் விளையாட்டுத்தொழிலின் அவசரத்திஞற் போகிறபோதும்-வருகிறபோதும்-ஓடுகிறபோது-நடக்கிறபோதும்-கைகாற்படுகிறபோது - துரியோதனன் தவிர மற்றச் சிறுவர்களிற் சிலர் பூமியில் விழுவர் சிலர் கண்சுழன்று வருத்தமுறுவர் சிலர் களைப்பர் சிலர் இளைப்பர் இவர்களை வீமன் நோக்கி விழுந்தவனை யெடுக்கிறதும், வருத்த முறுபவரை ஆதரிக்கிறதும், களைப்பவரைக்களையாற்றுகிறதுமா யிருப்பன். இதனை வீஷ்மர் முதலிய பெரிய அரசர்களும் மந்திரி பிரதானிமுதலிய சேனைத்தலைவர்களும் பார்த்து வியப்படைந்து வீமனைப் புகழ்ந்து, இவ் வீமன் வலியினுற் கருடனை யொப்பானென்றுங் கல்லைப் போல்பவனென்றும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுவார்கள். இவ்வார்த்தைகளைத் துரியோதனன்கேட்டுப் பொருமை கொண்டு, மனதில் வருத்தமுற்றுவருவான். இப்படி வருகிறகாலத்தில் ஒருநாள் துரியோதனன் கர்னனையும் நல்லம்மானுகிய சகுனியையும் அழைத்துக்கொண்டு, தனியே ஒரு சிங்காரவனத்திலிருக்கும் சந்திசகாந்த மண்டபத்திற்புகுந்து, அங்கோரிடத்திலிருந்து துரியோதனன் சொல்லுகிருன்: ஓ ஆப்தரே! உலகில் அரசர்கள் சிறியபகைகளை வைத்துக்கொள்ளுகிறதில்லை ஏனென்ருல் கயத்தின் நீரில்-தன்சாயல் தோன்றுவதைக் கண்டு மகிழ்வுற்றிருக்கிற யானையின் மன்மானது அல்ப வுயிராகிய ஒருதவளை கலக்குமாகில் உடனே தன்னுருவழிந்ததாக வருந்திருப்போம். ஆதலால் நான் அத்தின புரத்துக்குச் சிரேஷ்ட அரசனுடைய புத்திரன் இன்னுஞ் சிலநாட் சென்ருல் அப்பட்டம் எனக்குக்கிடைக்கும். அக்காலத்தில் என் சகோதரர்களும் ஐவரும் என்னிடமாகவே யிருப்பார்கள் இப்போதே வீமன் பலவானு யிருக்கிருன் எனது சகோதரர்கள் அவன் நடக்கிற விசையில் அகப்பட்டுக்கொண்டு மிக வருத்தப் படுகிருர்கள். அக்காலத்தில் அவனை ஒருவேளை நான் கடிந்து கொள்வனுகில், மற்றத் தருமன் - பற்குணன்-நகுலன் - சகா

தேவன் - இவர்கள் சும்மா யிருப்பார்கள் இந்த வீமன் முறடன் உடனே எதிர்த்துக் கொள்ளுவான். அப்போது ஒரு வேளை தகுந்த தண்டனை செய்ய யெத்தனிப்போமாகில் நம்மையெல்லாம் அரைநொடியில் யம தண்டனைக் குட்படுத்தி விடுவான். ஆதலால், எவ்விதத்திலாவது அந்த வீமனைக் கொல்ல வேண்டும் அப்படிக் கொல்வதிலும் நம்மாலிறந்தானென்று ஒருவர்க்குந் தெரியக்கூடாது. அவ்வண்ணமான ஒரு தந்திரஞ் சொல்லுங்களென்று வினவ சகுனி சொல்லுகிறான்.

### வீமனைக் கங்கையில் வீழ்த்தல்.

ஓ மருமகனே! நீ யேன் கிலேசப்படுகிறாய்? இன்றையதினம் நாமெல்லோரும் இங்ஙனேதானே இருந்து, மற்ற உன் சகோதரர்களையும் அழைத்து வரச்செய்து விளையாடுவோமாகில் அவர்களோடு ஐவரும் வந்து விளையாடுவார்கள். நாமின்றிரவில் இங்குதானே சயனித்துக் கொண்டால், நம்மோடு ஐவரும் சயனித்துக் கொள்வார்கள். கும்பகர்னனைப்போல் வீமன் தூங்குவான் நடுராத்திரியில் நாமெழுந்து அவனைக் கட்டித் தூக்கிக் கொண்டுபோய்க் கங்கையிற் போட்டுவிட்டால், நீகொண்டிருக்கிற துன்பத்தை நீக்கிவிடுவாய் இதுதான் யுத்தியென்று சகுனிகூற, அதனைக் கர்னனும் சரியென்று சொல்ல, துரியோதனன் அக்கருத்துக்கிசைந்து வெளியில் வந்து அங்கிருக்கும் காவலாளிகளை அழைத்து என் சகோதரர்களை இங்குவரச் சொல்லுங்களென்று கட்டளையிட தூதர்கள் ஓடி துர்ச்சாதனன் முதலானவர்களுக்குச் சொல்லவே யாவரும் ஒன்றாகத்திரண்டு சிங்காரவனத்திற்கு வந்தார்கள். யாதொரு களங்கமுமில்லாத ஐவரும் அவர்களோடு கூடப் போனார்கள் துரியோதனன் வந்தவர்களை நோக்கி, ஓசகோதரர்களே! நாமெல்லாம் இங்குதானே விளையாடுவோமென்று பந்தாடல் முதலியவற்றில் தன் சகோதரரோடு கருத்தைச் செலுத்தினான் பாண்டு மக்களும் அவர்களோடு கூட விளையாடினார்கள். பொழுது அஸ்தமான மாயிற்று யாவருமொன்றாகக்கூடி இன்றிரவுக் கிங்குதானே யிருப்போமென்று தீர்மானித்துக்கொண்டு அரண்மனையிலிருந்து போஜனம் வரும்படி தூதர்களுக்கு உத்தரவுசெய்ய, தூதுவர்கள் போஜனங்கொண்டுவர, நூற்றுவரும் பாண்டு மக்களும் சகுனியும் கர்னனும் புசித்து, அவரவர்களுக்கு இஷ்டமான இடத்திற் சயனித்துக்கொண்டார்கள். அத்தினம் விளையாட்டினால் யாவரும் அயர்ந்து நித்திரை செய்தாலும் துரியோதனன் கர்னன் சகுனி இம்மூவரும் நித்திரை கொள்ளாமலிருந்து, நடுராத்திரியில் எழுந்து வீமன் நித்திரைசெய்கிற விடத்துக்கு வந்து அவன் நெடுமூச்செறிகிறதைக்கண்டு, நாசிக்கு நேராகச் சென்றால் காற்றினால் வருந்த நேரிடுமென்று ஒரு பக்கமாய் வந்து, இந்திரஜித்து இலக்குமண மூர்த்தியை நாகபாசத்தாற் கட்டி யுருட்டினது போல ஊனுங்கொடியாற் பிணித்து, மந்திரகிரியைத் திருப்பாற்கடலி லிட்டதுபோல் வீமனை யெடுத்துப்போய் கங்கையிற்போட்டு விட்டார்கள்.

பின்பு வீமன் கங்கையில் விழவே சில்லென்று தேகத்திற் சலம்பட்ட மாத்திரத்தில் துயிலொழிந்து, கைகால்களை யுதறிக்கொண்டெழுந்திருக்கப் பார்த்தான். ஊனுங்கொடி தன்னைப் பிணித்திருப்பது தெரிந்து ஒரு முறைத்த திமிர்விட்டுக் கூவி யெழுந்தான். உடனே கட்டறுந்து, முன்னொருபோது இந்திரனுக்குப்பயந்து கடலி லொளித்திருக்கிற மைநாக பர்வதம் சிறகுகொண் டெழுந்தது போலக் கங்கையைவிட்டுக் கரையில்வந்து ஈரந்துடைத்து, சற்றுநேரம் சென்றபின்பு அடடா! நாமென்ன இங்குவந்து கங்கையில் விழுந்தோம் நம்மை யாராவது கட்டிக்கொண்டுவந்து போட்டார்களோவென்று கருதுவோ மாகில் நமக்குப் பகைவர் யார்? ஒருவருமில்லையே! நாம் தூக்கத்தினாற் புரண்டுவந்து கங்கையில் விழுந்தோம் அப்படிபுரண்டுவந்ததினால் நம்மை ஊனுங்கொடி சுற்றிக்கொண்டதென்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு, இதை ஒருவரோடு சொல்லினால் வெட்கக்கேடென்று நினைத்து, மீட்டுந் தான் படுத்திருந்த விடத்தில் வந்து படுத்துக்கொண்டான். இதற்குள் பொழுதுவிடிந்தது யாவரும் துயிலொழிந்து எழுந்திருந்தார்கள் எப்போதும் போல் அவரவர்கள் தங்கள் கருத்தின்படி விளையாட யத்தனித்தார்கள். துரியோதனன் வீமன் வந்து விளையாடுகிறதைக்கண்டு, அதிக ஆச்சரியத்தையும் மனவருத்தத்தையு முற்று சகுனி கர்னனிருவரையும் சைகையாலழைத்துப்போய் வீமன்வந்து விளையாடுகிறதைப் பாருங்களென்றான். அவர்களும் உடனே வந்து நோக்கி, சீ! சீ! நாம் கட்டினகட்டுப் பலமான கட்டல்லவென்று தங்களைத் தாங்கள்

நிந்தித்துக்கொண்டு கிணற்றில் கல்லைப்போட்டதுபோற் பிறர்க்குத் தெரியாமல் மௌனமா யிருந்தார்கள். இப்பால் முன்போலவே இருதிறத்தாரும் வேற்றுமையின்றி விளையாடிவருகிறபோது, சிலநாட் சென்றபின்பு, துரியோதனன் சகுனியையும் கர்னனையும் தம்பிமார்களையும் ஓரிடத்தில் அழைத்துப்போய் உட்காரவைத்துச் சொல்லுகிறான்: ஓ ஆப்தர்களே! முன்னம் வீமசேனனைக் கட்டிக்கொண்டுபோய்க் கங்கையி லழுத்திவந்தோம் அதற்குத் தப்பிப்பிழைத்தான் இனி அவனை உயிரோடு வைக்கலாகாது வைத்தால் நமக்குக் கெடுதி நேரிடும் ஆதலால் அவனைக் கொல்வதற்கு உபாயமென்னவென்று வினவ சகுனி சொல்லுகிறான்.

## சர்ப்பத்தால் வீமனைக் கடிப்பித்தல்.

ஓ மண்டலேஸ்வரா! நீ ஏன் விசாரப்படுகிறாய்? ஒரு நிமைப்போதில் அவ் வீமன் உயிரைக் கொள்ளையிடுகிறேன் அதற்கு உபாயமென்னவென்றால், நமது நகரத்திலிருக்கும் பாம்பாட்டுகிற ஜோகிகளிற் சிலரை ரகசியமாக அழைப்பித்து, அவர்களாற் சர்ப்பங்களை விட்டு வீமனைக் கடிப்பிக்கச் செய்வோமாகில் தக்ஷண மரணமடைவானென்று கூற, துரியோதனன் அக் கருத்துக்கிசைந்து, நகரத்திலிருக்கிற ஜோகிகளிற் சிலரை ரகசியமாக் அழைப்பித்து, தன் கருத்தை அவர்களுக்கு விளங்கவுரைத்து, அவர்களைச் சிங்கார வனத்தில் வந்திருக்கச்செய்து, தான் வீமனிடத்துக்கு வந்து, ஓ தம்பீ! நாமெல்லாம் சிங்கார வனத்திற் சென்று விளையாடுவோம் வாவென்று அழைக்க வீமன் அதற்கு ஒத்துக்கொண்டவனாய் அவர்களோடு சென்று, அன்று பகல் முழுவதும் ஓயாது விளையாடினான், பொழுது போகவே துரியோதனன் சில தூதர்களால் அரண்மனையிலிருந்துபோஜனத்தை அழைப்பித்து, வீமனோடு மற்ற யாவரையும் வைத்துக்கொண்டு புசித்தான பின்பு, வீமனைப்பார்த்துத் துரியோதனன் சொல்லுகிறான்: தம்பி வீமா! நீ தனியாகப் படுக்கிறவனாகையால் இதோ யிருக்கிற அறையிற் படுத்துக் கொள்ளென்று கூறித் தான் தம்பிமார்களோடு போய்ச் சயனிப்பான்போலச் சென்று சயனித்திருந்து, சற்றுநேரஞ் சென்றபின் பொழுது போய் முன்னமே வந்திருக்கிற ஜோகிகளை எச்சரித்து விட்டு முன்போலவே வந்து சயனித்துக் கொண்டான். ஜோகிகள் வீமன் படுத்திருக்கிற அறைக்குள் வந்து, அவன் கொடிய நித்திரையிலிருப்பதை அறிந்து, இதுதான் சமயமென்று நினைத்து உடனே மந்திரத்தை யுச்சரித்தார்கள். மந்திரதேவதைகள் நல்ல காளசர்ப்பங்களையெல்லாம் அழைத்துவந்து விட்டன. ஜோகிகள் அப்பாம்புகளை நோக்கி, ஓ சர்ப்பங்களே! இதோ படுத்திருக்கிற வீமனைக் கடித்து, உங்கள் விஷாக்கினியினாலே கொல்லுங்களென்று மந்திரத்தை முடுக்கினார்கள். அந்நாகங்கள் வீமனைக் கடித்து விஷத்தைக் கக்கிப் போய்விட்டன. ஜோகிகளும் போய் விட்டார்கள், அப்பால் வீமன் திடுக்கென்று விழித்து, அடடா! இந்த அறையில் மற்குணமென்னு மூட்டுப்பூச்சிகள் மிகுதியா யிருக்கின்றனவாதலால் நம்மைக் கடிக்கிறதென்று தீர்மானித்து, நூற்றுவர் படுத்திருக்கிற அறையுட் சென்று அவர்களோடு தானும் சயனித்திருந்தான். வீமன்வாயுபகவானுடைய புத்திரனாகையால் விஷம் துன்பப் படுத்தவில்லை. பொழுது விடிந்தது. நூற்றுவரும் துயிலொழிந்து எழுந்திருந்தார்கள். அவர்களோடு கூட வீமனும் எழுந்து முன்போலவே ஒன்றாகச் சேர்ந்து விளையாடிவந்தான். துரியோதனன் வீமன் வந்து தங்களோடு விளையாடுகிறதைக் கண்டு அதிக வியப்பை அடைந்து, கர்னன் சகுனி இவர்களுக்குச் சொல்லினான்.

## வீமனை வசிநாட்டிக் குதிப்பித்தல்.

அவ்விருவரும் வீமனைக் கண்டு அதிக வியப்படைந்து, இவ்வைவரும் தேவ பிண்டமென்று நம்முடைய பெரியோர்கள் கொண்டாடி வருவது சரியாகவே யிருக்கின்றது. இவ்வீமனுக்கு எதிலும் அழிவரவில்லை. இனி மற்றொரு தந்திரத்தினாற் கொலைசெய்ய வேண்டுமென்று கருதி சிலநாட் சென்றபின்பு, நகரத்திலிருக்கும் தச்சர்களை இரகசியமாக அழைப்பித்து, கங்கைத்துறையில் எழுக்களினாலும் இரும்புகளினாலும் செம்மரங்களினாலும் வசிநாட்டச்சொல்லி திட்டஞ்செய்து, துரியோதனன் வீமனிடத்து வந்து சொல்லுகிறான். தம்பி வீமா! இக்காலம் வெப்பமா யிருக்கின்றதால் கங்கைதுறைக்குச் சென்று நீர் விளையாடலாம் வருகிறையா வென்றழைக்க வீமன் ஒத்துக்கொண்டு துரியோதனனோடு கங்கை துறையருகிற் சென்றான். துரியோதனன் சொல்லுகிறான். தம்பிவீமா! நீ நீர் விளையாட்டில் திறமையானவனாயிற்றே இத்துறை

யிலிருந்தெழும்பி அத்துறையிற் குதிக்கிறை யாவென்று வினவ, கிஞ்சித்தேனும் கபடமில்லாத வீமன் சொல்லுகிறான். ஓ அண்ணேன் இங்கிருந்து அங்கு குதிக்கிறதும் அங்கிருந்து இங்கு குதிக்கிறதுமா பெரிது? இதோ குதிக்கிறேன் பாரென்று சொல்லிக் கங்கைத்துறையை நோக்கினான். தெய்வானுகூலமாக இவன் கண்ணுக்கு அச்சல ஓட்டமான கங்கைத்துறையில் வண்டுகள் அசையாமல் உட்கார்ந்திருந்தன. அவைகளை வீமன் கண்டு அதிக வியப்படைந்து, ஆ! ஆ! இதென்ன சகல ஓட்டமான கங்கைத்துறையில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றனவென்று உய்த்து நோக்கும்போது சலத்துக்கு மூன்றங்குலங் கீழ்வசி முனைகள் தோற்றப்பட்டன. அவைகளை வீமன் கண்ணுற்று, நமக்கென்ன? சொன்னவாக்குத் தப்பாமல் வசியைக்கடந்து அப்பாற் குதிப்போம் என்று கருதி, அங்கிருந்து ஒரு பாய்ச்சல் பாய்ந்து வசியில்லா இடத்திற் குதித்து விளையாடி மற்றொரு துறையாகக் கரையேறினான். துரியோதனன் வீமன் வசியைக்கடந்து குதித்ததற்கு மெச்சி, இந்த வசிக்குந் தப்பினானேயென்று கனவருத்தமுற்றுத் தானும் ஒருபுறத்திற் குதிப்பவன்போலக் குதித்து வெளியே வந்து வீமனோடு அரண்மனைசேர்ந்து, சகுனி கர்ணன் தம்பிமார் இவர்களோடு இருவருமாய்க் கலந்து பேசிக்கொண்டு, முன்போலவே பாண்டு மக்களோடு வேற்றுமையின்றி மருவியிருந்தான்.

### வீமனுக்கு விஷ விருந்திடல்

இப்பால் சிலநாட் சென்ற பின்பு துரியோதனன் கர்னனையும்-சகுனியையும்-ஓரிடத்தில் தனித்து வரும்படி செய்து, ஓ ஆப்தர்களே! இந்த வீமனைக் கொல்லப் பலவித தந்திரஞ் செய்தோம். அந்தத் தந்திரங்களுக்கெல்லாந் தப்பிப் பிழைத்தான். இப்போதென்ன யோசிக்கிறீர்கள் சொல்லுங்க ளென்றான். அப்போது சகுனி சொல்லுகிறான்: ஓ மருமகனே! அந்த வீமனைக் கொல்வது பெரிதா? அதற்காக நீ வருத்தப் படாதே. நமது வேலைக்காரரிற் சிலரை அழைப்பித்துச் சிங்கார வனத்திற் சமயற் செய்யத் திட்டப் படுத்தி, அன்னத்திலும் பதார்த்தங்களிலும் வச நாபியைக் கலந்து, நமக்கு நாபியில்லாமல் வேறே சமைக்கத் திட்டஞ் செய்து, வீமனை மாத்திரம் சாப்பிடக் கூப்பிட்டாற் போஜனப் பிரியனாகையால் வருவான். நாம் எல்லோரும் ஒன்றாகக் கூடி உட்கார்ந்து நஞ்சிட்ட அன்ன முதலியவற்றை அவனுக்கிட்டு, நல்ல அன்னத்தை நாம் புசிப்போம். வீமன் புசித்துத் தலை மயக்குற்று இறப்பான். என்று கூற துரியோதனன் அம்மான் கூறியபடி வேலைக்காரர்களை ரகசியமாக அழைத்து சமையற் செய்ய விட்டு, வீமனிடத்துக்கு வந்து சொல்லுகிறான். தம்பி வீமா! இன்றையதினம் நமது சிங்கார வனத்தில் விருந்து நடத்துவோம் நீயும் வருகிறையா? வென்று கேட்க, வீமன் அதற்கு ஒத்துக் கொண்டு, கைகால்களைச் சுத்தி செய்து, பொற் பீடத்தில் தனித்தனி துரியோதனன் சகுனி கர்னன் இவர்களோடு தானும் உட்கார்ந்தான். வேலைக்காரர்கள் நஞ்சிட்ட அமுதத்தை வீமனுக்குப் படைத்து நஞ்சில்லாத அமுதத்தை துரியோதனன் முதலான வர்களுக்குப் படைத்தார்கள். வீமன் அவ் வன்னத்தையும் பதார்த்தத்தையும் விடாமற் புசித்தான். உடனே நாபியின் தீக்ஷண்ணியத்தால் தாக மேலிட்டு, வேலைக்காரரைத் தாகத்துக்குக் கேட்டான். இந்த வசனங்களைத் துரியோதனன் அறிந்து, வேலைக்காரரை எச்சரித்து, சீக்கிரத்தில் தாகத்துக்குக் கொண்டு வந்து கொடுங்களென்று மிகுந்த பரிவோடு சொல்லுகிறவனைப்போலே சொல்ல வேலைக்காரர் அந்தச் சலத்திலும் அதிகமாக விஷத்தைக் கலந்து கொண்டு வந்து கொடுத்தார்கள். வீமன் அந்நீரை வாங்கி அருந்தினான். அருந்த மயக்கம் அதிகமாகி ஸ்மரணை தப்பிப் பூமியில் விழுந்தான். வீமன் பூமியில் விழுந்த வுடனே துரியோதனன் முதல் மூவரும் எழுந்து வந்து, நமதெண்ணப்படி இன்று முடிந்ததாகையால், இனி என்ன யோசனை? இவனை இவ்விடத்தில் வைத்தால் நம்முடைய பெரியோர்களால் நமக்கு ஒரு கெடுதி நேரிடும். இவனை ரகசியமாகக் கொண்டு போய்க் கங்கையிற் போடவேண்டுமென்று யோசித்து, இவர்கள் மூவருங் கூடி வீமனை வாரி எடுத்துக் கொண்டு போய்க் கங்கையில் ஒரு பக்கமாகப் போட்டுவிட்டு சிங்கார வனத்துக்கு வந்து, சஞ்சலமின்றிக் கைகால்களைச் சுத்தி செய்துகொண்டு, சந்தனம் புனுகு கஸ்தூரி முதலியவற்றைப் பூசி, புஷ்பமாலைகளை யணிந்து ஆடையாபரணங்களை அழகா யுடுத்திக் கொண்டு, வேடிக்கையாய் மற்றத் தம்பிமார்களையு மழைத்துக் கொண்டு அரண்மனை வந்து சேர்ந்தார்கள்.

## வீமன் நாகலோகஞ் சென்று விஷாமுத பானஞ் செய்தல்

இவ்வாறு மகா களிப்புடன் அரண்மனை வந்து சேர்ந்த யாவரும் திரிதராஷ்டிரனையும் வீஷ்மரையும் வணங்கி, ஓ ஐயமீர்! நாங்கள் பெருநாள் கொண்டாட விருப்புற்றிருக்கிறோம், அந்நாளைக் கொண்டாட உத்திரவு கொடுங்களென்று வினவ அப்பெரிய அரசர்கள் அவர்கள் கருத்துக் கிசைந்து, அப்படியே பெருநாளைக் கொண்டாடுங்களென, துரியோதனன் தன் தம்பிமார்களோடும் சினேகிதர்களோடும் மஹாகளிப்புடன் பெருநாளைக் கொண்டாட யத்தனித்தான். இந்தச்சேதி நகரத்தாருக்குத் தெரிந்து தங்கள் தங்கள் வீடுகள் தோறும் நன்றாய் அலங்காரஞ் செய்து, தோரணங்கள் கட்டி வீதிகளைச் சிங்காரித்தார்கள். துரியோதனன் இந்த விளையாட்டி விருக்கிறான். அங்கே கங்கையாற்றில்விழுந்த வீமன் விழுந்த விடம் பிலத்துவாரமா யிருந்தது. வீமன் அப் பிலத்துவாரத்தின் வழியிற் சென்று, அதலவிதல சுதல தராதல இரசாதல மஹாதலமென்றும் ஆறுலகங்களையுங்கடந்து பாதாளலோகத்திற்போய் விழுந்தான். விழுந்தவுடன் அங்கிருக்கும் நாகவீரர்களாகிய பெரும்பாம்புகள் கண்டு, ஓ! ஓ! பூலோகத்து மனிதன் இவ்வுலகத்துக்கு வந்துவிட்டானென்று சினங்கொண்டு, இவனை உயிரோடு வைக்கலாகாதென்று நினைத்துக் கும்புகும்பாகக் கூடி வீமனைக் கடித்தன. பெரும்பாம்புகள் கடித்த மாத்திரத்தில் நாபியின் கெடுதி அழிந்து, வீமன் துயின்றெழுந்தவர்போல் எழுந்தான். அந்நாகங்கள் வாடாமலெழுந்த வீமனைப் பார்த்து, நீ யார்? இங்கே நீ வந்த காரியமென்ன? என்று வினவ வீமனுக்குப் பேசச் சத்தியில்லாமற் கைச்சைகையால் தாகத்துக்குக் கேட்டான். நாகங்கள் அதைக்கண்டு தாங்கள் அரசனாகிய வாசுகியை வணங்கி, ஓ ஸ்வாமி! யாரோ ஒரு மனிதன் பிலத்துவாரத்தின் வழியாய் வந்து விழுந்தான்; விழுந்தவனை யாங்கள் கூடி நன்றாய்க் கடித்தோம். அவனிறக்காமல் எழுந்து எங்களைத் தாகத்துக்கு கேட்கிறானென்று சொல்ல வாசுகி வியப்படைந்து, ஓ நாகங்களே! நீங்கள் கடித்து மிறக்காமலிருக்கிறானல்லவா? இதோயிருக்கிற விஷாமுர்த கலயங்களைக் கொண்டுபோய்க் கொடுங்கள் எத்தனை கலயங் குடிக்கிறானோ பார்ப்போம். இக் குடங்களிலிருக்கிற விஷாமுர்தத்தைக் குடித்தும் இறக்காதிருந்தால், அவன் வாயுபகவானுடைய அமிசையாக யிருக்கவேண்டும். ஆகையால், உடனே எனக்குத் தெரிவியுங்களென்றான். அவ்வாறே அந்நாகங்கள் விஷாமுர்த கலயங்களை எடுத்து வந்து வீமனுக்குக் கொடுக்கவே வீமன் வாங்கி வாங்கி எல்லாக் கலயங்களையும்புசித்துத் தாகந்தணிந்து, முன்னிருந்த பலத்தைவிட அதிக பலவானாகி மகாரூபத்தோடு விளங்கினான். இதனை நாகங்கள் கண்டு ஓடி வாசுகிக்குத் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட வாசுகி உடனே எழுந்துவந்து வீமனைப் பார்த்து நீயார்? இவ்விடத்துக்கு யென்னகாரணமாக வந்தாயென்று வினவ வீமன் வாசுகியை வணங்கிச் சொல்லுகிறான். ஓ நாகேந்திரா! நான் பூலோகத்துச் சந்திரவமிச சிகாமணியாகிய சந்தனு மகாராஜனுடைய பேரனும் பாண்டு மகாராஜாவின் மனைவி குந்திதேவியின் புத்திரன். என் பெரிய தந்தையின் புத்திரனாகிய துரியோதனன் சிங்காரவனத்தில் விருந்து செய்தான். அந்த விருந்துக்கு நான் போயிருந்து அன்னம் அருந்தினேன். அதுதான் யானறிவேன். இவ்விடம் வந்தது எனக்குத் தெரியாது. என்றுகூற வாசுகி தன் கியானதிருஷ்டியால் நோக்கித் துரியோதனன் செய்ததை யுணர்ந்து, அதைத் தன் மனதுக்குள் வைத்துக்கொண்டு வீமனைத் தன்னரண்மனைக் கழைத்துப்போய் போஜனமிட்டு, கலவைச் சாந்தும் புஷ்பமாலையும் தாம்பூல முதலானவைகளு மளித்துத் தனக்கொப்பாக வைத்திருந்தான்.

இங்கே தருமராஜன் - பற்குணன் - நகுலன் - சகாதேவன் - இந்நால்வரும் சகோதரனாகிய வீமனைக் காணமற் கனவருத்தமுற்று, நாடு நகர முழுதுந்தேடி, கண்களில் ஆறுபோல நீர்சொரியக் கோவென்று புலம்பிப் போய்த் தாயாகிய குந்திதேவியை வணங்கி, ஓ அம்மணி! எங்கள் சகோதரனாகிய வீமன் எங்களை விட்டுப்பிரிந்தான். எங்கையோ அலுவலாகப் போயிருப்பவன், வருவானென்று இரண்டு மூன்று நாள் பார்த்தோம் வராதிருப்பதைக் கண்டுப் பல விடங்களில் தேடித்திரிந்தோம்; இதுவரையில் அந்த வீமனைக் காணோம். தாங்கள் அவனுக்கு எந்த வேலையாவது இட்டீர்களா வென்று உருகின சிந்தையோடு அழுத கண்ணுடனே வினவினார்கள். இவ் வசனங்களைக்கேட்ட குந்திதேவி சாவுக்குச்

சரியான மூர்ச்சை யடைந்து, எழுந்து, ஆ! மகனே வீமா! என்று கதறிப் புத்திரர்களைப் பார்த்துச் சொல்லுகிருள். உங்களையல்லாமல் நான் வீமனுக்கு வேலையிடுவனு? ஒருவேளை உங்கள் மூதாதை யல்லது உங்கள் பெரிய தந்தை வீமனுக்கு வேலையிட்டார்களோ என்னமோ? அவர்களிடத்திற் சென்று வினவுவோம் வாருங்களென்று நாலு மக்களையும் அழைத்துக்கொண்டு வீஷ்மரிடத்துச் சென்று வணங்கி, இளைய குமாரனுகிய வீமன் எங்கேயென்று கேட்டாள். வீஷ்மர் திடுக்கிட்டுச் சற்று ஆலோசித்து, ஓ! ஓ! வீமன் பலவானுதலால் துரியோதனன் பொருமைகொண்டு என்ன சூதுசெய்து கொன்றுவிட்டானே? மற்றென்னமோ வென்று ஐயுற்றுக் குந்திதேவியை நோக்கிச் சொல்லுகிருர். ஓ அம்மணி! வீமனை நான்கண்டு நெடுநாளாயிற்று பதருத காரியம் சிதருது. துரியோதனன் பெருநாட் கொண்டாடுகிறபடியால் ஒருவேளை அங்கிருந்தாலு மிருப்பான். ஆரையாவது போய்ப்பார்த்துவரச் சொல்லுகிறேன் சற்று நிதானியென்று கூறிச் சில தூதர்களை அழைத்து, வீமன் பெருநாள் கொண்டாடுகிற இடத்தில் இருக்கிருனு பார்த்து வாருங்களென்று கட்டளையிட்டார். தூதர் சென்று எங்குந் தேடி வீமனைக் காணுமல் ஓடிவந்து வீஷ்மரை வணங்கி, ஸ்வாமி! எங்கும் வீமராஜனைக் காணேமென்று சொல்ல வீஷ்மரும் குந்திதேவியும் தருமராஜன் முதலாகிய நால்வரும் மிகுந்த கிலேசமுடையவ ராஞர்கள். இவர்களில் வீஷ்மர் குந்தியை நோக்கிச் சொல்லுகிருர். ஓ அம்மணி! நீ அஞ்சாதே வீமன் உயிருடனிருக்கிறதும் இறந்ததும் பார்த்துச் சொல்லுகிறேன் என்று ஒரு துணிவுகூறி சோதிட சாஸ்திரத்தில் வல்லவ ராகையால் ஜோசியம் பார்த்தார். வீமன் உயிருட னிருக்கிறதாகத் தோற்றப்பட்டது. உடனே குந்திதேவியைப் பார்த்துச் சொல்லுகிருர்.

ஓ அம்மணி! உன் புத்திரனுக்கு அழிவில்லை நாளதுவரையில் உயிருடனிருக்கிருன். இன்றைக்குள் அவன் வருவான். அஞ்சவேண்டாம் என்று ஆதரித்து அந்தப்புரத்துக்கு அனுப்பினுர். குந்திதேவி அந்தப்புரத்துக்கு வந்து, தெய்வக்குறி தீபக்குறி முதலிய வெல்லாவற்றையும் பார்த்து மனநொந்திருந்தாள். தருமராஜன் முதலான நால்வரும், கிழக்கு-தெற்கு-மேற்கு-வடக்கு என்கிற நாற்றிசைக்கும் நால்வராகச் சென்று, கண்ணெரிக் கெட்டின வரைக்கும் பார்த்து நின்ருர்கள். இப்படி நிற்கிற தருணத்தில் அங்கே வீமன் வாசுகியை நோக்கிச் சொல்லுகிருன். ஓ நாகேந்திரா! பூவு மணமும் போலவும் பாலும் நீரும் போலவும் வேற்றுமையின்றிப் பிரியாமலிருந்து என் சகோதரர்களும் என் தாயும் என்னைக் காணுமல் வருந்துவார்கள். ஆதலால், நான் பூலோகத்துக்குப் போகவேண்டுமென்று வேண்ட வாசுகி வீமனை நோக்கிச் சொல்லுகிருன். ஓ வீமராஜனே! இங்கு வந்ததற்குப் பெரிதான லாபம் நீ அடைந்தாய். அதென்னவெனில், நீ தாகங்கேட்டபோது விஷாமுர்தகலயம் 64-எடுத்துக் கொடுத் தனுப்பினேன். அக்கலயங்களை யெல்லாம் அருந்திச் செரிப்பித்துக்கொண்டாய். அவைகளால் உனக்கு முன்னமிருந்த பலத்தைவிடப் பதினுயிரங் கஜேந்திர பலமும் கிடைத்தது. இனி உலகத்தில் உன்னைவிட பலவானில்லை. ஆதலால் என் குமாரத்தியை விவாகஞ் செய்துகொண்டு உன் பதிக்குச்சேர் என்றுவிளம்ப, வீமன் ஓநாகேந்திரா! அடியேனுக் கதிக பலங் கிடைத்தது உமது திருவருளாக்கும். அதற்கு நான் வந்தனஞ் செய்தேன் உமது குமாரத்தியை விவாகஞ் செய்துக் கொள்ளென்று கட்டளையிட்டீர். அக்கட்டளைப்படி நடக்க ஒருதடையிருக்கின்றது. அஃதென்னவெனில், எனக்குத் தமயனிருக்கிருர். அவருக்கு இன்னும் விவாகமில்லை. ஆகையால், தாங்கள் கூறிய கட்டளையைத் தள்ளக் கருத்துடையவனு யிருக்கிறேன். அதற்காகத் தாங்கள் கோபிக்காமல் என்னை யாதரித்து, என் சகோதரரைக்காணக் கிருபை செய்யவேண்டுமென்று வேண்ட வாசுகி மகிழ்ந்து, சில நாககுமாரர்களை அழைத்து இந்த வீமனை அஸ்தினபுரத்தருகில் விட்டுவிட்டு வாருங்களென்று கட்டளையிட்டு வீமனுக்கு மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய ஆபரணங்களை யளித்து ஆசீர்வதித்து அனுப்புவித்தான். உடனே நாககுமாரர்கள் வீமனை அழைத்துக்கொண்டு பிலத்துவாரத்தின் வழியாய்ச் சென்று, அத்தினிபுரத்துக்கருகில் வந்து வீமனை நோக்கி, ஓ ராசனே! இதோ அத்தினபுரம் செல்லுமென்று விடுத்து, நாககுமாரர்கள் மீண்டும் நாகலோகம்போய்ச் சேர்ந்தார்கள். வீமன் அத்தினபுரத்திற் சென்ருன். சென்றவுடன் அந்நகரத்தி லிருப்பவர்கள் யாவருங் கண்டு

மகிழ்வுகொண்டு கைதட்டி, இதோ வீமராசன் வந்துவிட்டான் வந்துவிட்டான் என்று கூறினார்கள். அந்த வோசை அலைகடல் முழக்கம்போ லிருந்தது. இந்த ஓசையைக்கேட்ட தருமராசன் முதலானவர்களும் ஓடிவந்து வீமனைக்கண்டு, மிகுந்த ஆருமையோடு கட்டிக்கொண்டு, எங்குற்றாய் வீமா வென்று வினவி அரண்மனைக்கு அழைததுப்போயினார். வீமனனவன் அங்கிருந்த வீஷ்மர் திரிதராஷ்டிரன் முதலான பெரியோர்களுக்கு நமஸ்காரஞ்செய்து, குந்திதேவி முதலாகிய அன்னையர்களையும் வணங்கினான். அவர்கள் இவனை ஆசீர்வதித்து, வாரித்தழுவிக் கட்டி முத்தமிட்டு ஆதரணை செய்தார்கள்.

இவர்களில் வீஷ்மர் வீமனை யழைத்து, அப்பா வீமா! நீ இந்த எட்டுநாள் பரியந்தம் எங்கிருந்தாயென்று வினவ, வீமன் சொல்லுகிறான் ஓ ஐயா! என் தமயன் துரியோதனன் சிங்காரவனத்தில் விருந்து செய்து என்னை யழைத்தான் அவ்விருந்துக்குப் போய்ப்புசித்தேன் பின்பு பாதாளலோகத்திற் சென்றிருந்து நாகேந்திரனாகிய வாசுகியின் கிருபையினால் இவண் வந்தேனென்று கூறித் தன்னை வினவியர்களுக்கெல்லாம் இவ்வாறே புகன்றான். வீஷ்மர் மிகுந்த யுக்தி சாலியாகையால் இவ்வசனங்களைக் கேட்டமாத்திரத்தில், ஓ! ஓ! ஏதோ மாறுபாடு நடந்திருக்கிறது என்று தன் கருத்தில் நிதானித்து, முளையில்தானே இவ்வளவு கெடுபுத்தி யுடையவனா யிருக்கிற துரியோதனன் வரவர விபரீதத்தை விளைவிப்பான். இனி நாம் சும்மாயிருப்பது தகுதியல்ல அரசர்க்குரிய வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்கவேண்டும். நாமே கற்பிக்கப் புகுந்தாற் சிறுவர்கள் எல்லாம் நமக்கஞ்சி இருக்க மாட்டார்கள். அவரவர்கள் புத்திக்கும் யுக்திக்கும் தக்கபடியே வித்தையேறும். அதனால் பின்னடிக்கு ஒருவர்க்கு நன்றாகச் சொன்னான் ஒருவர்க்கு நன்றாகச் சொல்லவில்லை என்கிற ஒரு குற்றமான பழிச்சொல் நமக்குவரும் அப்பழிக்கும் அஞ்சாமல் வில்வித்தையைக் கற்பிப்போமாகில், நாம் மூதாதையாகையாற் சிறுவர்கள் பயமுடன் கற்றுக்கொள்ளார்கள். ஆதலால், வேறொரு வில்லாசிரியனைக்கொண்டே கற்பிக்க வேண்டுமென்று தீர்மானித்து, இதற்கு யாரை நேமிக்கலாம்? வில்லாசிரியன் எங்கிருக்கிறான்? என்று தம்மிடத்திலிருக்கும் பெரியோர்களை உசாவிய போது அப்பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

## கிருபாசாரி வரலாறு.

ஓ மண்டலேஸ்வரா! முன்னம் பிரமன் பேரனாகிய சரத்துவந்த முனிவர் ஒரு வனத்திற் சென்று அருமையான தவஞ்செய்தார். அத் தவத்தை அழிக்க இந்திரன் தன்னுடைய சாலைப் பெண்களில் அரம்பை என்பவளை அழைத்து, ஓ பெண்ணே! பூலோகத்திற் சரத்துவந்தர் அருமையான தவஞ்செய்கிறார். நீசென்று அத்தவத்தை யழித்துவா வென்று வேண்ட அரம்பை அதற்கு ஒத்துக்கொண்டு, வீட்டிற் சென்று ஸ்நானஞ்செய்து நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்து, காதமணக்கும் பரிமளத் திரவியங்களைப் பூசி, மலர்மாலை சூடி, இவளைக்கண்ட திவ்யக்கியான ஸ்வரூபிகளெல்லாம் எப்படி இவளைப் பின்றொடருவார்களோ அப்படியே இவள் சாயலைக்கண்ட மயிலும் - குரலோசையைக் கேட்ட குயிலும்- நடையைப்பார்த்த அன்னமும்-பின்றொடரப் பூலோகத்திலிறங்கி சரத்துவந்தர் தவஞ்செய்யும் வனத்தில் வந்து, அவர் நோக்கம் தன்மேற் பாயும்படியான இடத்தில் நின்றாள். சரத்துவந்தர் கண்விழித்துப் பார்த்து, தனக்கெதிரிலே நிற்கிற அவளைக் கண்டு மிகுந்த விரதமடைந்து, இவ்வளவு ரூபத்தோடுகூடிய ஸ்திரீகள் உலகத்தி லிருக்கிறார்களாவென்று நினைத்துத் தன் கருத்தைக் கிஞ்சித்து காமத்தின் வழியிற் செலுத்தினார். உடனே வீரியம் வெளிப்பட்டு இரண்டு துளியாக அவரிருந்த தருப்பாசனத்தில் விழுந்தன. இந்தச் செய்கையை அரம்பை யறிந்து, இனி நின்றோமாகிற் சாபம் நேரிடுமென்று கருதி உடனே மறைந்து சொற்கலோகம் போய்ச் சேர்ந்தாள். சரத்துவந்தர் தமது வீரியம் வெளிப்பட்டதைக் கனவருத்த மடைந்து, மிஞ்சிபோயினதற்கு வியாகூலப்பட்டாற் பயனென்ன வென்று ஒருவிதமாகத் தேறி, தன் கையிலிருந்த வில்லையும் திவ்யாஸ்திரங்களடங்கிய அம்புக் கூடினையும் அந்தத் தருப்பாசனத்தில் வைத்துவிட்டு, மற்றொரு வனத்திற் சென்று நற்றவம் புரிந்திருந்தார். தருப்பாசனத்தில் விழுந்த இரண்டுதுளி வீரியமும் மகா முனிவரது விந்தாதலால் பழுதுபடாமல், ஒரு துளி பிள்ளையாகவும் மற்றொரு துளி பெண்ணாகவும் தோன்றி அழுதுகொண்டிருந்தன. அப்போது உமது பிதாவானவர் இளவரசு பட்டம் நீங்கி மகுடாபிஷேகனாகிச் செங்கோற் செலுத்தி வந்து, ஒருநாள் வேட்டையாடக்

காதல் கொண்டு, வில்லியர்-வலைஞர் - மந்திரிகள்-பிரதானிகள் முதலானவர்கள் புடைசூழ நாலுவகைச் சேனையோடுங் காட்டிற் சென்று, அநேக மிருகங்களை அதமாக்கி வனத்தில் வரும்போது அச் சிறுவர்களின் அழுகுரலைக் கேட்டு விரைவிற் சென்று அம்மக்களை நோக்கி வியப்புற்று, ஓ! ஓ! இம்மக்களைப் பார்த்தால் மகா சுந்தரத்தோடு விளங்கி யிருக்கிறார்கள். இவர்களைப் பெற்ற தாய் தந்தையர் எங்கே யாவது அருகிலிருப்பார்கள். வனத்தைச் சுற்றிப்பார்த்து வரவேண்டுமென்று தூதர்களுக்கு கட்டளையிட்டார். தூதர்கள் வன முழுதும் பார்த்து வந்து அரசனை வணங்கி, ஓ ஸ்வாமி! இவ் வனமுழுவதும் முனிவர் மயமேயன்றி இக் குழந்தைகளுக் குரியவரை காணோமென்று கூற அரசன் மந்திரிகளை நோக்கிச் சொல்லுகிறான்.

ஓ மந்திரிமார்களே! பூலோகத்தில் அரசரா யிருக்கிறவர்கள் உலகத்தி லுள்ளவர்க்கு யாதொரு குறைவு வராதிருக்க நடக்கவேண்டும் சத்துருவா யிருந்த போதிலும் காட்டில் நின்று தவித்தால் அவர்களை ஆதரிக்க வேண்டியது நமது கடமை. இப்படி மநு நூல்கள் முறையிடுகின்றதை யுணர்ந்தும், மிகவும் இளமையாகிய இம் மக்களது அழு குரலை கேட்டு நாம் நகரத்துக்குச் செல்வது யோக்கியதையல்ல. நாம் எடுத்துப்போய் வளர்த்தால் இச்சிறுவருக்கு உரித்தானவர்கள் ஒரு வேளை நம்மிடத்தில் வர நேரிடும் அப்படி வந்து கேட்டால் அப்போது தடை சொல்லாமல் அவர்களிடத்து இச் சிறுவர்களைக் கொடுப்போம். ஆதலால், இச்சிறுவர்களை இப்போது நாமெடுத்துப் போவோ மென்று அவர்களோடுகூட வைத்திருந்த வில்லையும் அம்புக் கூட்டையும் அச் சிறுவர்களையும் மந்திரிகளாலே யெடுப்பித்துக் கொண்டு நகரத்துக்கு வந்து, அச்சிறுவர்களை மிகுந்த அன்புடன் வளர்த்து வந்தார். சரத்துவந்தர் ஒரு நாள் நமது வீரியம் எவ்வாருயிற்றோ பார்த்து வருவோமென்று அவ்வனத்துக்கு வந்து தாமிருந்த இடத்தை நோக்கும்போது, வில்லும் அம்பும் கூடு மில்லாமையைக் கண்டு நமது வீரியம் உருவாகிச் சிறுவர்களாக இருக்க வேண்டும். அச்சிறுவர்களைக் கைப்பற்றினவர் அவ் வில்லையும் கைப்பற்றி யிருக்க வேண்டுமென்று நினைத்து, அச்சிறுவர்களை யார் கொண்டு போயினர் அறியவேண்டு மென்று தமது கியான திருஷ்டியால் நோக்கி, உமது பிதாவாகிய சந்தனுமகாராசன் எடுத்துப்போயினதை யுணர்ந்து, இந்நகரத்துக்கு வந்து அரசனைக் கண்டார். அரசன் திடுக்கென்றெழுந்து, சரத்துவந்த முனிவரைப் பொற்பீடத்தி லிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து, பயபத்தியுடனே எதிர் நின்று சொல்லுகிறார், ஓ ஸ்வாமி! எளியேன்மீது கிருபை வைத்து இவ்விடம் எழுந்தருளியதற்கு யான் என்ன புண்ணியஞ் செய்தேன்? இம்மனையை நாடி வந்த காரியமென்ன? ஏதாவதிருந்து வெளியிட்டால் தங்கள் கருத்தின்படி நடக்க விருப்புற்றிருக்கிறே னென்று வேண்ட, சரத்துவந்த மகாமுனிவர் வணங்கிய அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கிச் சொல்லுகிறார். ஓ மண்டலேஸ்வரா! நீர் வேட்டையாடி முனிவர் தவஞ் செய்யும் வனத்தில் வந்த போது என் வீரியத்தா லுண்டாகிய ஒரு பிள்ளையையும் ஒரு பெண்ணையுங் கண்டு எடுத்து வந்தீரே. அக் குழந்தைகளை நான் பார்க்க வேண்டுங் கொண்டுவாரு மென்றார். அரசன் அருகிலிருக்கிற மந்திரிகளை நோக்கினார். மந்திரிகள் அரசனது குறிப்புணர்ந்து அக்குழந்தைகளை எடுத்து வந்து அரசன் கையிற் கொடுத்தார்கள். அரசன் அக்குழந்தைகளைச் சரத்துவந்த முனிவரிடத்துக் கொடுத்து, ஓ ஸ்வாமி! தேவரீர் சொத்து தேவரீரைச்சேர்ந்தது என்று வந்தனத்தோடு வணங்கினார். சரத்துவந்தர் அரசனை வாழ்த்தி இரண்டு மக்களையும் எடுத்துப் போய் தன்னிருப்பிடத்தில் வைத்து வளர்த்து, பிள்ளைக்குக் கிருபனென்றும், பெண்ணுக்குக் கிருபி யென்றும். நாமகரணமிட்டு, புத்திரனுக்கு-நாலுவேதம் ஆறு சாஸ்திரம் - அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றைப் போதித்து தநுசாஸ்திரத்தையும் அதனது மர்மங்களையும் நன்றாக உணர்த்திப் பூரணமாகக் கற்பித்தார். அதன் மேல் வில்லாளியாகிய சகல அரசர்களும் துதிக்கக் கிருபாச்சாரி யென்று பெயர்பெற்று இதோ விளங்கி யிருக்கிறார். இவரைக் கொண்டு சிறுவர்களுக்கு வில் வித்தையைக் கற்பித்தால் நன்மையா யிருக்கு மென்று சொல்ல, வீஷ்மர் அவரை அழைத்துச் சொல்லுகிறார்.

### துரோணசாரி வரலாறு

ஓ ஸ்வாமி! அரசுக்குரிய திரிதராஷ்டிரனுடைய புத்திரர்கள் நூறுபேர். பாண்டுபுத்தி

ரர்கள் ஐந்துபேர். இந்த நூற்றைந்து புத்திரர்களும் தாங்கள் கிருபைகூர்ந்து இன்று முதல் வில்வித்தைக் கற்பித்து வில்லாசிரியனாக இருக்கவேண்டியது என்றார். கிருபாசாரி அதற்கு ஒத்துக்கொண்டு, நல்ல முகூர்த்தத்தில் நூற்றைந்து பேர்களையும் அழைப்பித்துக் குருவணக்கஞ்சொல்லி, வில்வித்தையைக் கற்பித்துவந்தார். குருகுமாரர்களாகிய இந்த நூற்றைந்து பேர்களும் வில்வித்தையைக் கற்றுக் கொள்ளுற்றதை நாள்தோறும் வீஷ்மருணர்ந்து இப்புத்திரர்களால் அதிக நலமுண்டாகு மாதலால் எத்திசையரசர்களும் பத்தி செய்து வணங்கும்படி நேரிடும். அதற்கு மூல காரணமாக யிருக்கிற வில்வித்தையை இன்னு மேலானவரைக்கொண்டு அதிகமாகக் கற்பிக்க வேண்டுமென்று கருதியிருக்கிற தருணத்தில், ஓ ஜெனமேஜெயனே! முன்னொருபோது பாரத்துவாச மகாமுனிவர் ஒரு வனத்திற் சென்று தவநிலை யியற்றி துரோணகும்பம் நிறுத்தி, மந்திராக்ஷதை முதலிய பூசா திரவியங்களாற் கருத்தனைக் கருத்தில் வைத்து ஆராதித்து அருச்சனை செய்து வந்தார். இந்திரன் இந்தப் பாரத்துவாச மகாமுனி செய்து வருகிற தவத்தை அழிக்கவேண்டுமென்று கருதி, மேனகையை அழைப்பித்து, ஓ பெண்ணே! பாரத்துவாச மகாமுனி அருமையான தவஞ் செய்கிறார். அத்தவத்தாற் சொற்கருத்துக்குக் கிஞ்சித்து வருத்தம் நேரிடும். அவ்வருத்தம் நேரிடாததற்கு முன்னம் நீ சென்று அவர் தவத்தை அழித்துவாவென்று கட்டளையிட, மேனகை இந்திரனை வணங்கி, ஓ ஸ்வாமி! சொற்கமத்திய பாதாள லோகங்களுக்குத் தலைமையான அரசனாயிருக்கிற தாங்கள் ஒரு கட்டளையிட்டால் என்னால் மறுக்கத் தரமா? இதோ சென்று அந்தப் பாரத்துவாசர் செய்கிற தவத்தை அழித்து வருகிறேனென்று விடைபெற்று வீட்டிற் சென்று ஸ்நானஞ் செய்து பரிமள வர்க்கங்களை மின்னலைப் பழித்த தேகத்தில் திமிர்ந்து, புஷ்ப மாலை சூடி, ஆடை ஆபரணங்களினால் அலங்கிர்தஞ் செய்து நிலைபெற்ற தவசிரேஷ்ட சிகாமணியாகிய முனிவர்களெல்லாம் மனங் கலங்கிக் காமனுக்குள் ளாகும்படியாய்ச் சொற்கத்தை விட்டுப் பூலோகத்திற் சென்று பாரத்துவாசர் தவஞ்செய்யும் வனத்தில் வந்து, அவரை நோக்கி அவருடைய மகிமைக்கு வியப்படைந்து, மகா உறுதியா யிருந்து தவஞ்செய்கிற இவரை எவ்வாறு கைவசப்படுத்தப் போகிறோமென்று நினைந்து, நாம் அணிந்திருக்கிற பரிமளவாடை அவர் நாசி மேற்படக் காற்றுமுகமா யிருந்தோமாகில் தெய்வச்செய லெப்படியாக முடியுமோ பார்ப்போமென்று ஒரு சந்தன மரத்தடியில் வந்து நின்றாள். இந்த மேனகை அணிந்திருக்கிற பரிமள வாடையானது காற்றினாற் பாரத்துவாசர் நாசியிற் பட்டது. பாரத்துவாசர் அவ்வாசனையை யுணர்ந்து, திவ்ய பரிமளவாடை ஏதென்று நோக்கும்போது சந்தன மரத்தடியி லிருக்கிற மேனகை தோற்றப் பட்டாள். அவளைக் கண்டவுடன் பாரத்துவாசர் அதிக மோகங் கொண்டார். கருத்தில் மோகத்தை வகித்த மாத்திரத்தில் உடனே அவருக்கு வீரியம் வெளிப்பட்டு எதிரிலிருக்கும் துரோண கும்பத்தில் விழுந்தது. இதைக் கண்ட மேனகை இனி நின்றே மாகிற் பெரியோர் மனநோதல் நேரிடும் நாம் நாடிவந்த காரியம் நிறைவேறிற்று. இனி ஒரு மாத்திரைப்போது மிருக்கொணாதென்று கருதிச் சொற்கம்போய்ச் சேர்ந்தாள்.

பாரத்துவாசர் வீரியம் வெளிப்பட்டதைக் குறித்து வருத்தமடைந்திருக்கிற தருணத்தில் பூரணகும்பத்தில் விழுந்த வீரியம் கருவுருவாகி, மூன்றே முக்கால் நாழிகைக்குள் அக்கும்பத்தை விரித்துக்கொண்டு ஒரு புத்திரனைக் கண்டு மிகுந்த களிப்படைந்து, அப்புத்திரன்மீது அதிக காதலைவைத்து வளர்த்து, துரோணகும்பத்தி லவதரித்தமையால் துரோணனென்று நாமகரணமிட்டு, ஐந்து வயது சென்றவுடன் உபநயனஞ் செய்து, நாலுவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றோடு தநுசாஸ்திரத்தையும் போதித்து, இப் புத்திரனைப் பிரமன் - மால் - சிவன் - என்கிற மூவரு மதிக்க இன்னும் அதிகமாகக் கற்பிக்கவேண்டுமென்று கருதி பரசுராமரைக் கொண்டுச் சொல்லிவைத்து, அதுவும் போதாமல் அக்கினி கோத்திர முனிவரிடத்தில் இப் புத்திரனை அழைத்துப் போய்விட்டார். அம் முனிவரன் துரோணாசாரியர் புத்தியையும் யுக்தியையும் மதித்தறிந்து, தான் கற்றிருக்கிற தேவாஸ்திரப் பிரயோக மந்திரங்களை எல்லாங் கற்பித்து வந்தார். இப்படி வருகிற காலத்திற் பாஞ்சால தேசத்துக் கதிபதியாகிய சோமகன் புத்திரனாகிய துருபதன் வில்வித்தையைக் கற்க அக்கினி கோத்திர முனிவரி

டத்து வந்து வணங்கித் தன் கருத்தைத் தெரிவித்தான். அக்கினி கோத்திரமுனி துரோணுசாரியருக்குக் கற்பிக்கிறது போல் அவனுக்குங் கற்பித்து வந்தார்.

துரோணுசாரி வில்வித்தையிற் சிறந்தவராதலால் துருபதன் அவரையு மடுத்து, நல்ல வார்த்தை சொல்லி வந்தனை வழிபாடுசெய்து வருவான். அதனுல் துரோணுசாரியார் மனமகிழ்ந்து, தாம் கற்றிருக்கிற அருமையான வில்வித்தையிற் சில வித்தையைக் கற்பித்தார். உடனே துருபதன் தந்தையின் அரசுக் குரியவனுகுங் காலம் நேரிட்டது. அக்காலத்தில் துருபதன் துரோணுசாரியை வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! என் தந்தை பட்டணம் வரும்படி கட்டளையிட்டார் நான் போகிறேன் உன் தந்தையின் செங்கோல் என் கைவசமாகில் தங்களுக்கு என் தேசத்திற் பாதி பங்கிட்டுக் கொடுப்பேன். இதனை உறுதியாக நம்புமையா வென்று சத்தியமாக உரைத்து, தன் முதலாசிரியராகிய அக்கினிகோத்திர முனிவரையுங் கண்டு விடைபெற்றுக்கொண்டு தன் நகரத்துக்குச் சென்றுன். அவன் தந்தை சோமகன் மிகவுஞ் சந்தோஷமடைந்து, தன் செங்கோலைப் புத்திரன் வசமாக்கித் தவத்திற்குப் போனுன். துருபதன் ஏகசக்கிராதிபதி போல் அரசு செய்திருந்தான்.

## அஸ்வத்தாமர் சரலாறு

இங்கே துரோணுசாரி வில்வித்தை யெல்லாவற்றையு முணர்ந்து, யாவரும் புகழப் பெயரெடுத்து, இனி தவத்தைச்செய்து சிலாக்கியமாகிய பாக்கியத்தை யடையக் கருதித் தந்தையிடத்து வந்து வணங்கி, தமது கருத்தை வெளியிட்டார். தந்தையாகிய பாரத்துவாசர் புத்திரனைப் பார்த்துச் சொல்லுகிருர். அப்பா மகனே! நீ தவஞ்செய்கிறதற்கு இது காலமல்ல முன்னங் கிரகஸ்தாசிரம மடைந்து பின்பு துறவற மடையவேண்டியது என்று விளம்பிக் கிருபாசாரி சகோதரியாகிய சௌபாக்கியவதி கிருபையைத் துரோணுசாரியார்க்கு விவாகஞ் செய்வித்தார். துரோணுசாரி கிருபி என்பவரோடு இல்லறத்திற் பொருந்தித் தருமம் வழுவாமல் நடத்திவருங் காலத்தில், நாரதர் கிருபையினது நற்குண நற்செய்கையையும் கற்புடைமையையுங் கண்டு கைலாயத்திற்குச் சென்று, நந்திதேவரது விடைபெற்றுக் கைலாயத்தின் மத்தியி லிராநின்ற கோடி சூரியப் பிரகாசமாக ஒளிசெய்யும் மகா மண்டபத்தி லெழுந்தருளி யிருக்கிற ஸ்ரீ சாம்பவ மூர்த்தியைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து நின்றுர். சாம்பவமூர்த்தி நாரதரை இருக்கச்சொல்லி, ஓ நாரதரே! நீர் உலகமெல்லாம் வியாபித்து எல்லாச் சங்கதிகளையு மறிந்திருக்கிறவ ராயிற்றே, ஏதாவது அதிசயமிருந்தாற் சொல்லுமென்று வினவ, நாரதர் சொல்லுகிருர்: ஓ ஸ்வாமி! பாரத்துவாசர் புத்திரனுகிய துரோணுசாரியின் மனைவி கிருபி என்பவளுடைய கற்புடைமையை என்னென்று சொல்லுவேன். அவளைப்போல் கற்பிற் சிறந்தவர்கள் வேறொருவர் இல்லை இவ்வுலகத்துள்ள பெண்டீர்களில் அவளுக் கொருவரை உபமானஞ் சொல்லத் தக்க தன்றென்று வணங்கி விடைபெற்றுத் தன் கருத்துக்கிசைந்த விடத்துக்குச் சென்றுர். சாம்பவமூர்த்தி அந்தக் கிருபையினது கற்பினிலையை யறியவேண்டுமென்று சன்னுசி வேடம்பூண்டு, கைலாயத்தைவிட்டுத் துரோணுசாரி இருக்கிற வனத்துக்கு வந்து, அவருடைய ஆசிரமத்துக்குள் சென்றுர். துரோணுசாரி சன்னுசியைக் கண்டு எழுந்து வணங்கி பொற்பீடமளித்து இருக்கச்சொல்லி, ஸ்வாமிகளே! தேவரீர் இவணெழுந்தருளிய காரணமென்னென்றுவினவ, சன்னுசி சொல்லுகிருர்.

ஓ புண்ணியாத்மாவே! எனக்குப் பசியாக யிருக்கின்றதால் அன்னம் படைக்கவேண்டுமென்றுர். துரோணுசாரி மனமகிழ்ந்து, ஐம்பொறிகளின் வழியாகிய ஐம்புலன்களை அடக்கும் பெரியோர்களுக்கும் அடக்கக்கூடாமையானது பசிநோய் அப்பசிநோயை நீக்குவது அப்பெரியோர்களுடைய வல்லமைக்கு மேலான வல்லமை யென்று, இல்லறத்தானுக்கு இதைவிட தருமமில்லை என்று வேதங்கள் முறையிடுகின்றன. மேலும் நாம் இல்லறத்தி லிருக்கின்றே மாதலால் நம்மா லிசைந்தமட்டு மன்னமிட வேண்டும் என்று மதித்துச் சன்னுசியை வணங்கிச் சொல்லுகிருர்: ஓ ஸ்வாமி! தாங்கள் கூறிய கருத்தின்படி அன்னம் புசித்துப்போமென்று இனிய வார்த்தை யுரைத்துத் தன் மனைவி யிடத்து வந்து, ஓ பெண்ணே! ஒரு பெரியவர் அன்னம் வேண்டுமென்று நமதிடத்துக்கு வந்தார். நீ அவர்க்குப் பசியடங்கி மகிழ்வெய்த அன்னம்படை நான் ஸ்நானஞ்செய்து வருகிறேனென்று சென்றுர். உடனே கிருபி ஸ்நானம்

பண்ணி வீட்டில்வந்து சமயல்செய்து, சன்ஞசியிடத்துவந்து வணங்கி, ஓ ஸ்வாமி! நெடுநேரமாகப் பசிநோயில் வருந்துகிறீர் எளியேன்மீது கிருபை கூர்ந்து எழுந்து வாருமையா வென்று வணங்கினுள். சன்ஞசி எழுந்து உள்ளறையிற் சென்று, அங்கிட்டிருக்கும் பீடத்திலிருந்தார். கிருபி ஒரு தட்டிற் சில திவ்ய பதார்த்தங்களோடு அன்னத்தை எடுத்துவந்தாள். அதைத் தபசி கண்டு சொல்லுகிருர். ஓ புண்ணியவதி! எனக்கு அன்னம் படைப்பவள் நிருவாணியாக இருந்து உண்பிக்க வேண்டும். அவ்வண்ணமாக அன்னம் படைத்தால் நான் புசிப்பேன். இல்லாவிட்டால் நான் புசியேனென்ருர். கிருபி ஆ! இதென்ன விரதம்? நாம் நிருவாணியாயிருந்து அன்னம் படைத்தாற் கற்புக் கழிவு வருமே அவ்வண்ணஞ் செய்யாவிட்டால் நமது கணவன் கட்டளைக்குக் குறைவு வருமே இதிற் கணவன் கட்டளையை மீருதிருப்பதே கற்புடைமை யாதலால் இவரிஷ்டப்படி இருந்து அன்ன மிடுதலே உத்தமமென்று மதித்து, வீட்டிற் சென்று வஸ்திரத்தை நீக்கித் தன்னுடல் முழுதையும் அளகத்தால் மறைத்து அன்னத்தை எடுத்து வந்தாள். அது கண்ட சன்ஞசி அவள் கற்புடைமைக்கு மெச்சி, அவளது சுந்தரத்தை நோக்கினுர். நோக்கும்போது சன்ஞசிக்கு வீரியங் கலிதமாயிற்று அது இந்தக் கிருபியின் கரத்திலிருக்கிற அன்னத்தில் விழுந்தது உடனே சன்ஞசியு மறைந்தார். கிருபி அவர் வீரியம் விழுந்ததையும் உடனே அவர் மறைந்ததையுங் கண்டு, அந்த அன்னத் தட்டை அவ்வண்ணமே வைத்துக்கொண் டிருந்தாள்.

இதற்குள் ஸ்நானஞ் செய்யச் சென்ற துரோணர் வந்தார். கிருபி அவரை வணங்கி நடந்த விர்த்தாந்தத்தை சொன்னுள். துரோணர் சன்ஞசித்துவ மடைந்தவர்க்கு இந்த நினைப்பேது? ஒருவேளை நமது மனைவியின் மீது கருத்துக்கொண்டு இராவணன் சீதைமேல் இச்சைவைத்துச் சன்ஞசி வேடந்தரித்தது போல் யாராவது வந்தாரோ வென்று தமது கியான திருஷ்டியால் நோக்கினுர். வந்தவர் கைலாசபதி என்று தெரிந்து மனைவியை நோக்கிச் சொல்லுகிருர். ஓ பெண்ணே! சன்ஞசியாக வந்தவர் கைலாசபதி அவர் வீரியம் வீணுகக் கூடாது. ஆதலால், நீயே இவ்வன்னத்தைப் புசியென்றுசொல்ல, அக்கிருபி அவ்வன்னத்தை எடுத்துப் போய்த் தான் புசிக்காமல் துரோணுசாரியின் வாகனமாகிய பெண் குதிரை யிடத்து வைத்தாள். அக்குதிரை அவ்வன்னத்தைப் புசித்து உடனே அவ்வீரியம் கருவுருவாகி, மூன்றே முக்கால் நாழிகைக்குள் அக்குதிரையினின்று நாகரத்தினம் போல் ஒரு புத்திரன் பிறந்தான். துரோணுசாரி இதனை அறிந்து துரிதமாய் வந்து, அச்சிறுவனைப் பொற்றட்டி லேந்தி ஆசிரமத்தில் வைத்துக்கொண்டு, தானும் தன் மனைவியும் அச்சிறுவனது சுந்தரத்தை நோக்கி மிகுந்த வியப்படைந்து, இப்புத்திரனுக்கு யென்ன பெயரிடலா மென்று யோசிக்கும்போது ஆகாயவாணி துரோணுச்சாரியை அழைத்து, அச்சிறுவனுக்கு அஸ்வத்தாமனென்று பெயரிடுவென்ன துரோணுசாரி அவ்வண்ணமே அஸ்வத்தாமனென்று நாமகரணமிட்டு, அச்சிறுவன்மீது இருவரும் அதிக காதல்கொண்டு, அவனை வளர்ப்பதில் மிகவுங் கருத்தைச் செலுத்திப் புல்லரிசி - பால் - இவை முதலியவற்ருல் வளர்த்து வந்தார்கள். மேலும் தருமப்பால் வாங்கி வார்த்து வளர்த்து வருகிறதாயிருப்பதாற் பால் போதாமல் குழந்தை இளைத்துப் போயிற்று. இதைக் கிருபி கண்டு துரோணுசாரியை வணங்கி, ஓ ஸ்வாமி! இரவற் பால்வாங்கி அருந்துவதிற் குழந்தை இளைத்துப் போகின்றது. உமக்கு அநேகம்பேர் மாணுக்க ரிருக்கின்ருர்களே அவர்களிடத்திற் சென்ருல் ஒரு பசுவாகிலுங் கொடுக்க மாட்டார்களாவென்று தூண்டினுள்.

### துருபதனுக்கும் துரோணருக்கும் சம்வாதம்.

அப்போது துரோணுசாரி பாஞ்சாலன் சொல்லிய உறுதியை நினைத்துக்கொண்டு மனைவியை நோக்கிச் சொல்லுகிருர்: ஓ பெண்ணே! எனக்குப் பாலிய சினேகனுகியும் என்னிடத்தில் வில்வித்தையிற் சில அருமையான வித்தை கற்றுக்கொண்டவனுகியு மிருக்கிறவன் பாஞ்சாலன் அவனிடத்துச் சென்ருல் வேண்டிய பாக்கியங் கிடைக்கும். ஆதலால், நாமிருவரும் அவனிடத்துச் செல்வோம் வாவென் றழைத்துக்கொண்டு பாஞ்சாலனுடைய நகரத்துக் கருகாய்வந்து, சிறுவனை மனைவி கையிற் கொடுத்து, அவளை அங்கு நிறுத்திப் போட்டுத் தாம் தனியே பாஞ்சாலன் சபைக்குட் சென்ருர். பாஞ்சாலன் இவரைப் பார்த்தவுடன் முன்கொடுத்த வாக்குதத்தத்தை நினைத்துக்கொண்டு, அதை நிறைவேற்ற மனமில்

லாதவனாகிப் பாராதவன்போ லிருந்துவிட்டான். துரோணாசாரி அரசன் விசாரணையிலிருக்கிறதினால் நம்மை நோக்கவில்லை. இன்னுஞ் சற்றுநேரஞ் சென்றாற் பின்பு விசாரிப்பானென்றுன்னி அங்கோ ரிடத்திலிருந்தார். அரசன் நீதி விசாரணை செய்துவிட்டுக் கொலு நீக்கி, அங்குள்ளவர்களையெல்லாம் அவரவர்கள் இருப்பிடத்துக்குச் செல்லும்படி உத்திரவு கொடுத்தான். அந்த வேளையில் துரோணாசாரி அரசனைக் கண்டுகொண்டார். அப்போதும் வந்தனை வழிபாடு செய்யாமல் நீர் யார்காணுமையரே? இங்கு ஏன் வந்தீரென்று முகமறியாதவன் பேசுவது போற் பேசினான். துரோணாசாரி அவ் வசனங்களைக் கேட்டு, நமக்குமிவனுக்கும் சிநேகமாகி நெடுநாளாயிற்றே கியாபகமில்லாமல் நம்மை யாரென்று கேட்கிறானென்னக் கருதிக் கோபங்கொள்ளாமல், ஓ அரசனே! என்னை யறியாயா? அக்கினி கோத்திர முனிவரிடத்து நாமிருவரும் வில்வித்தை கற்றுக்கொள்ள வில்லையா? வென்று புகன்றார். பாஞ்சாலன் அப்போதாகிலும் வந்தனை வழிபாடு செய்யரமல், என்ன காணும் விப்பிரரே! உன்னை அவ்விடத்தில் நான் ஒருநாளுங் கண்டதேயில்லை. ஏன்பொய்மை கூறுகிறீரென்று சீறினான். துரோணர் அரசனைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ அரசனே! நீ என்ன சுத்தமறதியை யுடைத்தாயிருக்கிறாய்? என்னிடத்திலுள்ள வில் வித்தைகளில் அருமையாயிருக்கிற சில வித்தைகளைக் கற்றுக்கொண்டையே அது கியாபகமில்லையா வென்று கேட்க, அரசன் நகைத்து மந்திரிகளை நோக்கி, ஓ மந்திரிகளே! முன்னம் இவன் ஒரு ஆசிரியனிடத்து நாமிருவரும் வில்வித்தை கற்கவில்லையா வென்று கேட்டான். இப்போது தன்னிடத்தில் வில்வித்தை கற்றுக்கொண்டவன் நீ யல்லவா வென்று சொல்லுகிறான். இப்பிராமணர் சொல்லுகிறது சொல்லோடு சேர்க்கையா? நீங்களே யோசியுங்களென்று கூறத் துரோணருக்கு அதிக கோபமுண்டாகி, அடா பாஞ்சாலா! என்னைச் சரணாகதி யடைந்து வில்வித்தை கற்கிறபோது, எனக்குப் பட்டமானவுடனே தங்களுக்குப் பாதி பூமி கொடுக்கிறேனென்று வாக்குதத்தஞ் செய்தாயே அதையு மறந்தையாவென்று சொல்ல, அரசன் பின்னும் நகைத்து மீண்டு மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிறான்.

ஓ மந்திரிகளே! இந்தப்பிராமணன் சொல்லியவற்றைக்கேட்டீர்களா? முன்னம் நாமிருவரும் ஒரு ஆசிரியனுடைய மாணாக்கரென்றான் பின்பு தன்னிடத்திற் கற்றவனென்றான் இப்போது பாதிபூமி உண்டென்றான் இதை யோசிக்கும்போது இந்தப் பிராமணன் வல்லிடிவழக்கனா யிருக்கிறானென்று தோன்றவில்லையா? இன்னுமிந்தப் பிராமணனை என் சபையில் வைத்திருக்கிறீர்களே என்றுகடுகடுத்தான். அதுகேட்ட மந்திரிகள் தம்மைச் சேவகர்களாற் சபையை விட்டகற்றக் கருதுவதைத் துரோணர் அறிந்து, அரசனைநோக்கி, அடா பாஞ்சாலா! என்னிடத்தில் மாணாக்கனாயிருந்தும் என்னைப் பரியாசஞ்செய்தாய் அது கிடக்கட்டும் நீ வாக்குதத்தஞ் செய்தபடி பூமியைக் கொடாவிட்டாற் போகிறது எனக்கொரு குழந்தையுண்டு அதற்குப்பாலில்லை. ஆதலால், ஒரு பசுவாகிலுங் கொடுவென்று கேட்க, அரசன் சிரித்து, ஓ பிராமணா! முன்னமே நீ கேட்டாற் கொடுப்பேன். முன்பு சிநேகனென்று சொல்லிப் பின்பு ஆசிரியனென்றும் பங்காளியென்றுங் கூறி, இப்போது ஒரு பசு வேண்டுமெனச் சொல்லுகிறாய் இதைக் கேட்ட பெண்களும் நகைப்பாரெனில் இச்சபையார் நகைப்பது அருமையோ? போபோபின்புத்தியுடைய பிராமணா வென்று சேவகர்களுக்குச் சைகை செய்தான். சேவகர்கள் அருகில் வர யத்தனித்தார்கள். அதைத் துரோணாசாரி கண்டு அதிக சினங்கொண்டு கோபச்சிரிப்பு சிரித்து, அடா பாஞ்சாலா! இதோ யிருக்கிற வில்லுக்கே உன்னைப் பலியிடுவேன். நான் உன்னை எதிர்ப்பது தகுதியல்ல. உன்னோடொத்த ராஜபுத்திரருக்கு என் வித்தையைக் கற்பித்து, அவர்களால் உன் மதத்தையடக்கி, மடலோடு மடல் விரியத் தேர்க்காலிற் கட்டி என்னிடத்திழுத்துவரச் செய்து, அங்கிருக்கும் உன்னையொத்த அரசர் முன்னே பங்கப்படுத்தி உன் ராச்சிய முழுதும் பெறாமற் போவேனாகில் என் கையிலிருக்கிற வில் வில்லல்ல என் பெயரும் துரோணனல்ல நானும் பிராமணனல்ல என்று சபதங்கூறி சபையைவிட்டு மனைவியிருக்கிற இடத்தில் வந்து, நடந்த விர்த்தாந்தத்தைச் சொல்லிக் குழந்தையைக் குறித்து வருத்தப்பட்டார். கிருபி கணவனை வணங்கிச் சொல்லுகிறாள்:

ஓ ஸ்வாமி! நீரேன் வருத்தப்படுகிறீர்? என் தமயன் கிருபாசாரி அஸ்தினபுரத்திற் குருகுல சிகாமணிகளாகிய திரிதராஷ்டிரன் பாண்டுவென்னு மஹா ராஜாக்களுடைய புத்

திரர்களுக்கு வில்வித்தை கற்பிக்கிறார். அவரிடத்துச் செல்வோம் வாருமென் றழைக்க, துரோணர் அதற்கு இசைந்து, அத்தினபுரியை நோக்கிச் சென்று, நகரத்தருகில் வந்தபோது அங்கே குருகுலமக்கள் நூற்றைந்து பேரும் இரண்டு பிரிவாகப் பிரிந்து பந்து விளையாடினார்கள். அவ் விளையாட்டில் வீமன் பந்தை எடுத்து விசறி எறிந்தான். அது துரியோதனன் முதலானவர்கள் கைக்குத் தப்பிக் கிணற்றில் விழுந்தது. அதுகண்ட துரியோதனன் வீமனிடத்து வந்து, வீமா! நீ எறிந்த பந்து கிணற்றில் விழுந்தது. அதனை நீதான் எடுத்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்க, வீமன் சீ! சீ! நானெறிந்த பந்தை நீங்கள் பிடிக்காதபடியால் அது கிணற்றில் விழுந்தது அதை நானெடுக்கவேண்டிய தில்லையென்று மறுக்க, இப்படி இருதிறத்தாரும் பேசிக் கொண்டு கிணற்றைச் சூழ்ந்திருந்தார்கள். துரோணர் இவர்களைக் கண்டு அருகிற் சென்று, நீங்கள் யாருடைய புத்திரர்கள் இக் கிணற்றை ஏன் சூழ்ந்திருக்கிறீர்கள் என்று வினவ, இருதிறத்தாரிற் பற்குணன் வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! நாங்கள் இந்த நகரத்துக்கதிபராகிய ராஜபுத்திரர் பந்து விளையாடினோம் அந்தப் பந்து கிணற்றில் விழுந்தது. அதற்காக நீயெடு நானெடென்று வழக்கிட்டுக் கிணற்றைச் சூழ்ந்திருக்கிறோமென்று கூற, துரோணர் சிரித்து, உங்களுக்கு வில்வித்தை கற்றுக்கொடுக்கிற வில்லாசிரியர் கிணற்றில் விழுந்த பந்தை எடுக்கக் கற்றுக்கொடுக்க வில்லையாவென்று சொல்லித் தன் வில்லைப் பற்குணன் கையிற்கொடுத்து, ஒரு சுப்பலையெடுத்து ஒரு சின்ன மந்திரத்தை அவன் செவியிலோதி, அந்தச் சுப்பலை அவ்வில்லிற் றொடுக்கச் சொன்னார். பற்குணன் அப்படியே அந்தச் சுப்பலை வில்லிற் றொடுத்துவிட்டான். அந்தச் சுப்பல் பந்தில் தைத்துக்கொண்டது. மற்றொரு சுப்பல் அச்சுப்பலின்மேற் றொடுக்கச் சொல்லி மாட்டி, அவ்வாறே பல சுப்பல்கள் பிரயோகித்துச் சுப்பலிற் சுப்பல் தொடுத்துக் கொள்ளும்படி செய்யப் பற்குணன் பந்தை எடுத்தான். இதைக்கண்ட யாவரும் மகிழ்ச்சியடைந்து, துரோணசாரியை வணங்கித் துதித்தார்கள். துரோணசாரி அவர்களை ஆசீர்வதித்துக் கிருபாசாரி எங்கிருக்கிறாரென்று வினவ, சிறுவர்கள் கிருபாசாரி இருக்கும் வீட்டின் குறிப்பைச் சொன்னார்கள். துரோணசாரி கிருபாசாரி அரண்மனைக்குச் சென்றார். கிருபாசாரி இவர் வரவை அறிந்து எதிர்கொண்டு போயழைத்து வந்து, வந்தனை வழிபாடு செய்து, தங்கையை ஆதரித்து, மைத்துனர்முறையாதலால் துரோணசாரியை நோக்கி, ஓ அத்தான், தாங்கள் இதுமுதலென்னைவிட்டுப் பிரியாமல் இவ்விடத்திலேயே யிருக்கவேண்டுமென்று வேண்டினார். துரோணர் அதற்கொத்துக்கொண்டு, அவ்விடத்திலேயே தன் பத்தினியோடு மிருந்து தன் குழந்தைக்கு யாதினுங் குறைவில்லாதபடி பாதுகாத்து வந்தார். ஈதிப்படி யிருக்க,

இங்கே குருகுல மக்கள் வீஷ்மரிடத்து வந்து வணங்கி, ஓ ஐயா! நமது நகரத்திக்கு ஒரு வில்லாசிரியர் வந்திருக்கிறார் அவர் திறத்தை எங்களாற் சொல்ல வசமல்ல நாங்களாடும் பந்து கிணற்றில் விழுந்தது அதனை நீ யெடு நானெடு என்று வழக்கிட்டிருக்கிற தருணத்தில், அவர் வந்து பற்குணனால் வில்லிற் சுப்பல்களைத் தொடுக்கச் சொல்லிப் பந்தை வெளியிலெடுத்துக் கொடுத்து, இப்போது, கிருபாசாரியார் வீட்டிற்குப் போயிருக்கிறார் என்ன, வீஷ்மர் இவ் வசனங்களைக் கேட்டுக் கிருபாசாரியை வரும்படி செய்தார். கிருபாசாரி அதிக விரைவில் வீஷ்மரிடத்துக்கு வந்தார் வீஷ்மர் எழுந் தெதிர்கொண்டு போ யழைத்து வந்து, ஓர் பொற்பீடத்திலிருத்திச் சோடச உபசாரமுஞ் செய்து வணங்கிச் சொல்லுகிறார். ஓ ஸ்வாமி! உமது அரண்மனைக்கு யார் வந்தது சொல்லுமையாவென்று கேட்க, கிருபாசாரி சொல்லுகிறார். ஓ மண்டலேஸ்வரா! பாரத்துவாசர் புத்திரர்கியும், என் சகோதரியின் கணவராயு மிருக்கிற துரோணசாரியர் வந்தாரென்று விளம்ப, வீஷ்மர் அதிக மகிழ்ச்சியை அடைந்து, சில பெரியோர்களை விட்டுத் துரோணசாரியை அழைத்து வரும்படி உத்திரவு செய்தார். அப் பெரியோர்கள் சென்று துரோணசாரியைக் கண்டு வணங்கி, ஓ ஸ்வாமி! மஹாராஜனாகிய வீஷ்மர் தங்களை அழைத்துவரச் சொன்னாரென்று கூற, துரோணசாரியார் அரசராயிருக்கிறவர் அழைத்தால் வரத்தான் வேண்டுமென்று எழுந்து, அப் பெரியோர்களோடு வீஷ்மர் சபைக்கு வந்தார். வீஷ்மர் அவர் வருகின்றதை யுணர்ந்தெழுந்து, எதிர்கொண்டு போய் அழைத்துவந்து, பொற்பீடத்திலிருத்திச் சோடச உபசாரங்கள் செய்து அநேக விதமாகத் துதித்தார். துரோ

ஞ்சாரி பாஞ்சாலன் சபையிற் கூறிய சபதம்
எவ்வாறு நிறைவேறப் போகின்ற தென்கிற
ஏக்கத்தைக் கொண்டிருந்தாலும், வந்தனை
வழிபாடுசெய்து நிற்கும் வீஷ்மரை ஆசீர்வதி
த்து இருக்கச்சொல்லி கட்டளையிட்டார். வீஷ்
மர் அவ்வாறே சிங்காதனத்திலிருந்து, துரோ
ணாசாரியின் திருவுருவத்தை நோக்கி, வாடின
முகத்துடனிருப்பதை உணர்ந்து, ஓ ஸ்வாமி!
பிர்ம்மகுல திலகராகவும் தவசிரேஷ்ட சிகா
மணியாகவுமிருந்து, கல்வியிலருமையா யிருக்
கிற வில்வித்தையிலு மகாமூர்த்தியாகிய உமது
முகம் வாடியிருக்க வேண்டியதென்ன? இவ்
வுலகத்தில் யாவர்க்கேனும் உள்ளத்திலொரு
குறையிருந்தால் கண்ணாடி தன் வயப்பட்ட
பொருளை யெவ்வாறு விளக்குமோ அவ்வாறு
அவர்கள் முகம் அக்குறையை விளக்கும்.
அதுபோலத் தங்கள் முகம் ஏதோ ஒருகுறை
யைக் காட்டுகின்றது. ஆதலால், நீங்கள் கொண்
டிருக்கிற குறையைத் தெரிவிக்க வேண்டு
மென்று செப்பத் துரோணாசாரி வீஷ்மரு
டைய புத்தி நுட்பத்துக்கு வியப்படைந்து,
குறிப்பறிந்து கேட்கும் கோமகனுக்கு நாம்
கொண்டிருக்கும் குறையைச் சொல்லத்தான்
வேண்டுமென்று துணிவுகொண்டு சொல்லு
கிறார்.

### வில்லாசிரிய ரிருவரையும் வீஷ்மர் சன்மானித்தல்

ஓ மண்டலேஸ்வரா! நான் வில்வத்தை
யைக் கற்க யத்தனித்து என் தந்தையிடத்தும்
பரசுராமரிடத்துங்கற்று, இன்னும் சாதுரிய
மான வித்தையைக் கற்கவேண்டுமென்று
கருதி அக்கினிகோத்திர முனிவரிடத்திற்கற்று
வருகிறகாலத்தில், அவரிடத்தில் பாஞ்சால
னும் வந்து வில்வித்தைகற்றான் அவன் எனக்
கும் வழிபட்டு, என்னிடத்திற் சில வித்தை
யைக்கற்று, தனக்கு மகுடாபிஷேகமானகாலத்
திற் பாதிராச்சியங் கொடுக்கிறேனென்று வாக்
குதத்தஞ்செய்துபோய் பின்பு மகுடாபிஷேக
னாக இருக்கிற காலத்தில் நான் சென்றேன்.
என்னை அவன் அயலார்போலெண்ணி ஏளி
தஞ்செய்தான். அதனால் நான் சினங்கொண்டு
ஒரு சபதஞ்செய்தேன் அஃதென்னவென்றால்,
ராசபுத்திரருக்கு என் வித்தையைக் கற்பித்து,
அவர்களால் உன்னைப்போரில் வீழிட்டலறச்
செய்வதுமன்றி தேர்க்காலிற்கட்டி என்சபையி
லிழுத்து வரச்செய்து பங்கப்படுத்துகிறே
னென்று கூறிவந்தேன். அந்தச் சபதம் எப்
போது நிறைவேறுமென்கிற ஏக்கந்தானென்
றிருக்கின்றதென்றார். வீஷ்மர் துரோணரை
வணங்கிச் சொல்லுகிறார்: ஓ ஸ்வாமி! உலகத்
தில் அரசராயிருக்கிறவர் தம்மையடைந்தவர்
க்கு ஒருகுறைவு நேரிட்டால் தங்களுடம்பின்
மேல் இச்சைவைக்காமற் புகழுடம்பை வகிக்க
வேண்டுமென்று கருதி, மேல்வரும் லாபத்தை
நோக்காமல் அக்குறைதீர மனம் வாக்கு
காயங்களினாற் சகாயப்படுவார்கள். இப்போது
தாங்கள் கூறிய குறைக்கு நானுதவி செய்
வது எனக்கு நல்ல லாபமாகத்தா னிருக்கின்
றது அதற்கு நான் ஒரு விண்ணப்பம் செய்கி
றேன் அதனை யேற்று உமது குறையைத்
தீர்த்துக் கொள்ளும். அஃதென்னெனில்:
குருகுலமக்கள் நூற்றைந்துபேர் இருக்கிறார்
கள். அவர்களுக்கு உமது வில்வித்தை கற்
பித்து, உமது குறையை நீக்கிக்கொள்ளும்.
மேலும் தாங்கள் உயிருள்ளளவும் இந்த ஆதீ
னத்தைவிட்டுப் போகவேண்டியதில்லை. எங்க
ளொப்பந்தம் மகரகுண்டல ஆரகேயூர கடக
கங்கண மதாணிப்பதக்க முதலாகிய இராஜ
பூஷணங்களை யணிந்து, ஆலோசனைக் கர்த்
தர்களில் தாங்களும் ஒருவராக இருக்கவே
ண்டுமென்று வேண்டி, கிருபாசாரிக்கும் இவ்
வண்ணமாகச் சொல்லி, அப்போதே ஆபர
ணங்களைக் கொண்டுவரச்செய்து இருவர்க்கும்
கொடுத்து, அதற்குத்தக்க இடம் பொருள்
ஏவலனைத்தையுமீந்தார். அஸ்வத்தாமாவென்
னுஞ் சிறுவனுக்கும் நாளுக்குநாள் யாதொரு
குறைவுமின்றி மீறி வளர்ந்து, நான்கு
வேதம் - ஆறு சாஸ்திரம் - அறுபத்துநாலு
கலைக்கியான முதலியவற்றோடு வில்வித்தை -
மல்வித்தை - அத்திரவித்தை - சத்திரவித்தை
முதலிய சகல வித்தைகளினு மேதையா
யினன்.

### குரு புத்திரர் நூற்றைவரும் வில்வித்தை பயிற்றல்

இதற்குள் சில குருமக்கள் 105-பெயரும்
வந்தார்கள். வீஷ்மர் அவர்களைநோக்கி, ஓ மக்
களே! இதோயிருக்கிற பெரியவரிடத்தில் வில்
வித்தையைக் கற்றுக் கொள்ளுங்களென்று
கூற, அந்த 105-பெயரும் துரோணாசாரியை
வணங்கித்துதித்தார்கள். துரோணாசாரி அவர்
களுக்குப் பல ஆசி கூறினர். வீஷ்மர் இந்த
105-பெயரையும் பிடித்துத் துரோணாசாரியா
ரிடத்தி லொப்பித்து, உமக்கே சொல்லுகிற
தற்கு அக் கரையிருக்கிறபடியால் நான் தங்

களுக்கு விரித்துரைக்க வேண்டியதில்லை யென்று வணங்கினர். துரோணசாரியார் வணங்கிய வீஷ்மருக்குப் பல ஆசிகள்பகர்ந்து விடைபெற்று, வீஷ்மர்விட்ட விடுதியில்வந்து போஜனஞ்செய்து இனிது வீற்றிருந்தார். பின்பு துரோணசாரியார் நல்ல சுப முகூர்த் தத்தில் நூற்றுவரையும் ஐவரையும் அழைத் துக்கொண்டு, சிலம்பக் கூடத்துக்கு வந்து, தேவாராதனை செய்து, வில்வித்தையை நூற் றைந்து பெயர்களுக்குங் கற்பித்தார். துரோ ணச்சாரியார் பாஞ்சாலன் சபையிற் பேசிய சபதத்தை நிறைவேற்ற விருப்புற்றிருக்கிறவ ராதலால், அப் புத்திரர்களுக்கு வில்வித்தை யைக் கற்பிக்கிறதில் அதிக சிரத்தை யுள்ளவ ராயிருந்து, யானை யேற்றங் குதிரையேற்ற முதலிய யாவற்றையுங் கற்பித்ததல்லாமல், தேரிலிருந்து யுத்தஞ்செய்யுந் திறமும், தேர்ச் சாரதி ஒருவேளை யில்லாதிருக்கிற காலத்தி லும் அவரவர்களே சாரதித் தொழிலைச் செய்துகொண்டு யுத்தஞ்செய்யு மர்மமும், ஒரு பாணம் 10-100-1000-10000-100000-கோடி இப்படி விர்த்தியாகும் பாண மந்திரத்தையும், மற்றுமுள்ள வாள்-கதை-தோமரம்-சக்தி- சூல முதலிய ஆயுத வித்தைகளுங் கற்பித்து, அஸ்திரப் பிரயோகமும் அவ்வவ் வஸ்திரங் களுக்குத் தகுந்த மந்திரோப தேசமும் பூஜா விதியும் தெளிவுற உணர்த்திவருகிற காலத் தில், இந்தக் குருகுல குமாரர்கள் நூற்றை வரிற் பற்குணன் துரோணசாரி கற்பித்து வருகிற வில்வித்தைக்குத் தன் மனோதருமத் தினற் பதின்மணங் கதிகமாக வில்வினோதஞ் செய்து வருவான். துரோணசாரி இதை யறிந்து, இந்த நூற்றைவர்களில் இப் பற்குணன் வைகுந்த வாசியாகியும்-அடியவர் விசுவாசியாகியும்-தசரத மூர்த்தியாகியு மிருக் கிற ஸ்ரீராமனை யொப்பானென்று மதித்து, அவன்மேல் மிகுந்த அன்புடையவராகி, வில் வித்தையில் அதிக சாதுரியமான வித்தைகளை எல்லாங்கற்பித்து ஒரு நாள்பற்குணனையழைத் து, அப்பாபற்குண! இன்றைய தினம் ஒருவில் வித்தையைக் காண்பிக்கிறேன். அது எனக்கும் என் குருவாகிய அக்கினி கோத்திர முனிவரு க்குமே யன்றி, மற்றவருக்குத் தெரியாது அ தனை யுனக்குச் சொல்கிறேன். அஃதென்னெ னில், ஒரு பாணத்தை எடுத்துத் தூண்டினல் அப்பாணம் நாலாகி நாலுதிசை முகத்தும்பர மென்று பாலித்து, அவ்விந்தைக்குரிய மகா மந்திரோபதேசமுஞ் செய்தார். இப்படி இன னும் மகா மகிமையாகிய வில் விநோதங்களைக் கற்பித்து வருவார். மற்றைக் குருபுத்திரர் நூற்று நால்வர்க்கோ வென்றால், பற்குண னுக்கு முன்பிருந்த வில்வினோத மொன்று தவிர, மற்ற வித்தைகளை யெல்லாம் கற்பித்து வந்தார்.

### ஏகலைவன் கதை

இப்படி கற்பித்து வருகிற காலத்தில், ஒருநாள் குருகுமாரர்கள் நூற்றைந்து பேரும் போசனத்துக்குச் சென்றார்கள். துரோண சாரியார் தனித்திருந்தார். அந்தச் சமயத்திற் குறிஞ்சி நிலத்துக்குரிய வேடராஜன் புத் திரனாகிய ஏகலைவன் வில்வித்தையின்மேற் சிரத்தை யில்லாதவனாகி, வீண்விளையாட்டிற் கருத்தைச் செலுத்தி, வயது வந்த காலத் தில் அவ்வித்தையில் ஆசை யுடையவனாகித் துரோணசாரியின் பெருமையைக் கேள்விப் பட்டு, அவரிடத்து வந்து வணங்கித் தன் கருத்தை வெளியிட்டான். துரோணசாரி ஏகலைவனை நோக்கி, அப்பா! நான் குருகுமா ரர்கள் நூற்றைந்து பேருக்கும் வில்வித்தை யைக் கற்பிக்கிறேன். எனக்கு ஒழிவில்லை யென்று மறுமொழி சொன்னார். ஏகலைவன் பின்னு மொருதரம் துரோணசாரியைப் பணிந்து, ஓ ஸ்வாமி! உம்மால் வில்வித்தை யைக் கற்காமற் போனாலும், உம்முடைய அனுக்கிரகத்தினால் இந்த வில்வித்தையைக் கற்றுக்கொள்ளுகிறேன் பாருமென்று தன் னிருப்பிடத்துக்கு வந்து, ஒரு சிலம்பக் கூடங் கட்டி துரோணசாரியைப்போல உருவஞ் செய்து ஒரு மேடைமேல் நிறுத்தி, தான் அவ்வுருவின் முன்வந்து நின்று, ஓ ஸ்வாமி! இவ்வாறுதானா விற்பிடிக்கிறது? இப்படித் தானா சரந்தொடுக்கிறது? இந்த அஸ்திரத் துக்குத் தகுந்த மந்திர மிதுதானாவென்று எல்லாந் தானே சொல்லிக்கொண்டு, இவ் வண்ணமாக அவ்வில் வித்தையைப் பயின்று வருகிறான். இவனுக்குத் துரோணசாரியின் மேற் கொண்டிருக்கிற நம்பிக்கையே குரு வாக இருந்து வித்தைக ளெல்லாவற்றை யும் கற்பித்தது. அதுவுமல்லாமல் துரோ ணசாரியி னிடத்து இன்னு மிருக்கிற அதிக சாதுரியமான வில் வினோதங்களும் தனக்குத்தானே விளங்கின. இவ்வாறு ஏகலை வன் வில்வித்தையைக் கற்றுவருகிற காலத் தில், குருகுலமக்களாகிய நூற்றைந்து பெய ரும் வேட்டையாட யத்தனித்து, வேடர்-வலை

னுர் முதலியவர்களோடு கூடிக் காட்டிற் சென்று, அவரவர்கள் தனித்தனி தங்கள் தங்கள் கருத்துக்கிசைந்தபடி யானை-புலி-கரடி-சிங்கம் - பன்றி - மான் -காண்டாமிருக முதலியவற்றை வெட்டிக் குத்திக்கொன்று வேட்டையாடி வருகிறபோது, பற்குணன் ஒரு வனத்திற் சென்று மிருகங்களை அதம் படுத்தினுன். அந்தப் பற்குணன் மிகுந்த அன்புடன் வளர்த்து வருகிற நாயானது ஒரு மிருகத்தைத் துரத்திக்கொண்டுபோய், அம்மிருகம் அதன் கண்ணுக்குத் தோன்றுமல் மறையவே நாயானது தன் எஜமானைத்தேடி, ஏகலைவன் சிலம்பக்கூட மிருக்கிற வழியாக ஓடிவந்து துரோணசாரியைப்போற் செய்து வைத்திருக்கிற மேடையினிடத்து சலவிசர்ச்சனஞ் செய்தது.

அதை ஏகலைவன் பார்த்துச் சினங்கொண்டு, தன் வில்லை வளைத்து அதன் மேல் ஒரு பாணத்தைத் தொடுத்தான். அந்தப் பாணம் நாலாகி நாயின் முகத்தில் நாலு திசையிலும் பட்டன. உடனே நாய் பற்குணனிடத்துவந்துஓலமிட்டழுதது. பற்குணன் நாயை நோக்கி, முகத்தில் நான்கு சரம் பட்டிருப்பதைப் பார்த்து, அடாடா! இவ்வண்ணமாகச் சரந்தொடுப்பதற்குத் துரோணசாரி அக்கினி கோத்திரமுனிவர் நாம் இந்த மூவர்க்குத் தானே தெரியும். இந்தச் சுவானத்துக்கு இவ்வண்ணமாகப் பாணம் பிரயோகித்தவர் யார்? அவரை நாம் பார்க்கவேண்டுமென்று நினைத்து அச்சுவானத்தின் பின் சென்றுன். சுவானம் ஏகலைவன் சிலம்பக்கூடத்திற் போய் நின்றது. பற்குணன் அச்சிலம்பக் கூடத்தில் சென்றபோது ஏகலைவன் பார்த்துத் திடுக்கிட்டு, ஓ! ஓ! மஹாராஜாவின் புத்திரனுகிய பற்குணன் இங்கு வரவேண்டியதென்னவென்று மனங்கலங்கி, ஓடோடியும் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து சொல்லுகிறுன். ஓ ஸ்வாமி! தாங்களிங்கேவந்தது அடியேன் செய்த மாதவப்பேரு? அல்லது இவ்வனஞ் செய்த புண்ணியவசமோ? அல்லது எங்கள் குலஞ்செய்த பூஜாபலமோ? என்று பலவாறு துதித்து நின்றுன். பற்குணன் வணங்கிய வேடனை ஆதரித்து, அப்பா இந்த நாயை எய்தவர் யாரென்று கேட்க, ஏகலைவன், ஓ ஸ்வாமி! தங்களுடைய சுவானமென்று தெரியாது இந்த இடத்துவந்து என் குரு வுருவமிருக்கிற மேடையின்மேல் நீர்விட்டது. அதனைப் பார்த்து உடனே நான் மனம் பொருமல் நானே யெய்தேனென்று கூற, பற்குணன் அவனைப் பார்த்து, ஓ ஏகலைவனே; உனக்கு குரு யாரென்று கேட்டான். ஏகலைவன் வணங்கிய முடியனுகிச் சொல்லுகிறுன். ஓ ஸ்வாமி! நான் வில்வித்தையின்மே லாவல்கொண்டு துரோணசாரியைக் கண்டு என் கருத்தை வெளியிட்டபோது, துரோணசாரி எனக்கு மிகுந்த அலுவலிருக்கின்றது உனக்கு வில்வித்தை கற்பிக்க ஒழிவில்லை என்று கூறினுர். அதன் பின்பு அவருடைய திருவுருவத்தைப்போல் ஒரு உருவுசெய்து, அதனைக் குருவாக வைத்துக்கொண்டு வில்வித்தை கற்றுவருகிறேனென்று சொன்னுன்.

பற்குணன் இந்த வசனங்களைக் கேட்டு அதிக வியப்படைந்து, ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? நமது குருவாகிய துரோணசாரியார் இந்த ஏகலைவனுக்கும் குருவாக இருக்கிறுர். நமக்குத் தெரியக்கூடாதென்று இந்த ஏகலைவன் மாறுபாடாகச் சொல்லுகிறுன். இவனிருக்கட்டும். முன்னம் நமக்கு ஒரு வில்விநோதங் கற்பித்து இது ஒருவர்க்குந் தெரியாதென்று சொன்னுரே, இந்த வேடன் அந்த வில்விநோதத்தைச் செய்தானே எல்லாம் குருவைக் கண்டு அவர் கருத்தைத் தெளியவேண்டுமென்று மனதில் நினைத்து, மீண்டுங் காட்டிற் சென்று சில மிருகங்களை வதைத்து, பின்பு தமயன் தம்பிமார் முதலானவர்களோடுகூடி நகரத்துவந்து ஸ்நானம் பண்ணி போஜனஞ்செய்து, யாவரோடும் தானும் சிலம்பக்கூடத்துக்குவந்து, வழக்கப்படி வில்வித்தைகளை அப்பியாசஞ் செய்து அரண்மனைக்குப் போம்போது யாவரும் ஆசிரியருக்கு வழக்கப்படி வணங்கி விடைபெற்றுர்கள். இந்தப் பற்குணன் தூர நின்று அஞ்சலி செய்து போயினுன். துரோணசாரி பற்குணன் நடத்திய மரியாதையைக் கண்டு மனதுக்குள் கனவருத்த மடைந்து, ஓ! ஓ! இவனுல் நமது மனக்குறையை நிறைவேற்ற எண்ணி யிருக்கிறேமே இவன் இன்றையத் தினம் நம்மேல் வெறுப்புடையவனுய்த் தூர நின்று அஞ்சலி செய்து போகவேண்டிய தென்ன? அதனை அறிய வேண்டுமென் றிருந்தார். ஒரு நாள் பற்குணனும் துரோணசாரியரும் தனியே சந்திக்கத் துரோணசாரியார் பற்குணனை நோக்கி, அப்பா! உனக்கென்மேல் வெறுப்புண்டாக நான் என்ன செய்தேன் அதனைக்

கூறென்று வினவ, பற்குணன் வணங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! முன்னமொரு வில் விநோதத்தை எனக்குக் கற்பித்து, இவ்வித்தை மற்றொருவர்க்குந் தெரியாதென்றுரைத்தீர்கள். நமது மலைச்சாரலிலிருக்கும் ஏகலைவனென்கிற வேடன் அவ்வித்தையைக் கற்றிருக்கிறான். அவனைக் கண்டு உனக்குக் குரு யாரென்று கேட்டபோது, தங்களுடைய நாமதேயத்தைச் சொன்னான். அன்றுமுதல் தங்கள்மீது வெறுப்புடையவனாக இருக்கின்றேனென்றான். துரோணாசாரி அதிக வியப்படைந்து, நல்லது பற்குணா! அந்த வேடனை எனக்குக் காண்பிக்கின்றனையா வென்று கேட்டார். பற்குணன் காண்பிக்கிறே னென்னவு மிருவருங் கூடிக்கொண்டு வனத்திற் சென்று, ஏகலைவனிருக்கிற விடத்துக்குப் போயினர்.

ஏகலைவன் இவ்விருவர் வரவையறிந்து, பரிந்துவந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, சிலம்பக் கூடத்துக் கழைத்துப் போய்ச் சோடச உபசாரமும் நடத்தி, கண்களில் ஆனந்தநீர் ததும்ப இரண்டு கரத்தையும் சிரமேற்கொண்டு, அநேக விதமாகத் துதித்துச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமிகளே! எளியேன்மீது கிருபை கூர்ந்து என்னிடத்துக்குவர என்னபாக்கியம் பெற்றேன்? நீங்களிருவரும் இங்குவந்த காரணம் என்னவென்று வினவ, துரோணாசாரி வணங்கிய ஏகலைவனை ஆசீர்வதித்து, ஓ வேடராஜனே! உனக்கு வில்லாசிரியன் யார்? நீ அதிக அருமையான வில் விநோதங்களைச் செய்கின்றாயாம். அதனைப் பார்க்க வந்தோமென்ன ஏகலைவன் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! ஆதியில் வில் வித்தை கற்கத் தங்களிடத்துக்கு வந்தபோது எனக் கொழிவில்லை யென்று தாங்கள் மறுத்துவிட்டீர். அதன்பின்பு நான் இவ்விடம் வந்து சிலம்பக்கூடங் கட்டி, அதில் தங்களைப்போல ஒரு திருவுருவஞ் செய்து வைத்து, அது முன்னிலையில் வில்வித்தையைக் கற்றேன். இதோ நான் கற்றிருக்கிற வில் வித்தையைக் காண்பிக்கிறேன் என்று, ஆசாரிய வணக்க முதலிய சம்பிரதாயப் பிரகாரம் ஆவலுடன் காண்பித்தான். அவனுடைய பக்தி விசுவாசத்துக்கு மெச்சி, ஏகலைவனை வாழ்த்திச் சொல்லுகிறார். குரு விசுவாசம் யாருக் கிருக்கின்றதோ அவர்களுக்குத் தெய்வானுகூல முண்டு. தெய்வானுகூல முண்டானபோதே எல்லாத் திறமு முண்டாகும். அப்பா பற்குணா! அதற்குத் திருஷ்டாந்தம் இந்த ஏகலைவன்தானென்று காண்பித்தார். அதற்குப் பற்குணன் குரு வாக்கியத்தை மனதில் மதித்து, அடா! இந்த ஏகலைவன் தனது பக்தி விசுவாசத்தினால் வில்திறமுடையவனானான். இதனை யுணராமல் ஆசிரியர் மேல் வெறுப்புற்றிருந்தோமென்று தன்னைத் தானே வெறுத்துக்கொண்டு, துரோணாசாரியருக்கு அதிக விருப்பமுண்டாக வந்தனை வழிபாடு செய்தான். துரோணாசாரி மீண்டும் ஏகலைவனை நோக்கி, ஓ ஏகலைவா! நீ குரு விசுவாசி ஆகையால், அருமையான வில்வித்தைகளெல்லாம் கை தேர்ந்தாய் எங்களுக்கு விடை கொடு நாங்கள் இருப்பிடத்துக்குச் செல்கிறோமென்றுரைக்க, ஏகலைவன் வணங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! நான் எளியவனா யிருந்தாலும் தங்களுடைய திருவுருவத்தியானத்தால் வில் வித்தையைக் கற்றேன். இப்போது தாங்களே நேரில் எழுந்தருளியதால் குரு தக்ஷணை கொடுக்க மனமுடையவனா யிருக்கிறேன். எளியேன்மீது கிருபை கூர்ந்து என்ன வேண்டுமோ அதனைக் கேளுங்களென்றிசைத்தான். அதற்கு ஒன்றும் வேண்டாமென்று துரோணாசாரி மறுத்தார். ஏகலைவன் மறுபடியும் வேண்ட, அதன்மேல் பற்குணனுக்குத் தம்மேற் பத்தியும் பயமுமுண்டாகத் துரோணாசாரி அவ்வேடனைப் பார்த்து, ஓ ஏகலைவா! நீ எனக்குத் தட்சணை கொடுக்க மனதிருந்தால் உன் வலக்கைப் பெருவிரலைக் கொடுவென்று கேட்டார். ஏகலைவன் தட்சணம் சூரி யெடுத்துத் தன் வலக்கைப் பெருவிரலை அறுத்துத் துரோணாசாரியின் பாதத்தில் வைத்து வணங்கினான். துரோணாசாரி அதிக மகிழ்வை அடைந்து உள்ளம் பூரித்துச் சொல்லுகிறார். ஓ ஏகலைவா! முற்காலத்திற் குருபக்தியிற் சிறந்தவன் உதங்கனென்று கேள்வி இக்காலத்தில் நீதான் குருபக்தியுள்ளவன் இதுவரையில் உனக்கு ஏகலைவனென்று பெயர் வழங்கி வந்தது குரு விசுவாசத்தினால் வில் வித்தையைக் கற்றபடியால் இனி உனக்கு ஏகவல்லியனென்று பெயர் வழங்கக்கடவது என்று கூறி விடைபெற்றுத் துரோணாசாரியும் பற்குணனும் பட்டணம் வந்து சேர்ந்தார்கள். பற்குணன் அன்றுமுதல் குருவின்மேற் குரோதமின்றி முன்போலவே அன்புடையவனாகி வில் வித்தையைக் கற்று வந்தான்.

துரியோதனாதியர் ஆசாரிய நிந்தை செய்தல்

இப்படி நூற்றுவரும் பாண்டு மக்களும் வில் வித்தையைக் கற்று வருகிறபோது, பாண்டு மக்கள் வில்வித்தையிலும் மற்ற ஆயுத வித்தைகளிலும் வல்லவர்களாகி யாவரும் புகழும்படி நாளுக்கு நாள் திறமுடையவர்களாய் வருகிற காலத்தில் துரியோதனன் கண்டு பொறாமை கொண்டு, தன் தாதையிடத்தும் மூதாதையிடத்தும் சென்று வணங்கி, ஓ ஐயமீர்! வில்லாசிரியர் பாண்டுமக்கள் மீது அன்புடையவராகி அதிக வித்தையைக் கற்பிக்கிறார். எங்கள் மீது ஊக்கமுடையவரா யிருக்கவில்லை யென்றான். வீஷ்மரும் திரிதராஷ்டிரனும் துரோணசாரியை அழைத்து அவர்க்கு வந்தனை செய்து, ஓ ஸ்வாமி! குருமக்களாகிய நூற்றைவரும் உமக்கு ஒரு நேத்திரமாகக் கருத வேண்டும். அவ்வாறு கருதாமல் ஒரு திறத்தாருக்கு ஒரு விதம் மற்றொரு திறத்தாருக்கு ஒருவிதமாகக் கற்பிக்கிறீர்களாமே? அது தங்களுக்குத் தகுதியா வென்று வினவ, அதற்குத் துரோணசாரி கனவருத்த முற்றுச் சொல்லுகிறார். ஓ மண்டலேஸ்வரர்களே! உங்கள் மக்கள் நூற்றைவரும் எனக்கு ஒரு கண்மணியாக எண்ணி வித்தையைக்கற்பித்து வருகிறேன். அவர்கள் புத்தி யுத்திக்குத் தக்கதாக வித்தை யேறுகின்றது. அதற்கு நான் என் செய்வேனென்று அவர்களிடத்து விடை பெற்றுச் சிலம்பக் கூடத்துக்கு வந்து, நூற்றைவரையு மழைத்து, ஓ குருபுத்திரர்களே! நாமெல்லாம் கங்கைக்குப் போய் ஸ்நானஞ் செய்து வருவோம் வாருங்களென்று அழைத்தார். குருபுத்திரர் அதற்கு ஒத்துக்கொண்டு யாவரும் ஒன்றாகத் திரண்டு துரோணசாரியோடு கூடிக் கங்கைக்குச் செல்வதானார்கள். அவ்வாறு செல்கிறபோது துரோணசாரி தன்னிடத்து மிகுந்த அன்புடையவனாயிருக்கிற பற்குணனை நோக்கி, அப்பா பற்குண! நமது அரண்மனைக்குச் சென்று எண்ணெயும் நலங்கும் வாங்கிவா, வருகிறபோது எண்ணெயின் வட்டிலையும் நலங்கின் வட்டிலையும் பூமியில் வைக்காமற் கொண்டுவாவென்று கூற, அவ்வாக்கியத்தைச் சிரமேற் கொண்டு அவர் அரண்மனைக்குச் சென்றான். இங்கே துரோணர் மற்ற நூற்றுநால்வரையும் அழைத்துக்கொண்டு கங்கையை நோக்கிப் போகிறபோது வழியில் ஓர் பெரிய ஆலமரந் தோன்றிற்று துரோணசாரி அம்மரத்தடியில் யாவரையு மழைத்துப் போய் துரியோதனனைப் பார்த்து, அப்பா துரியோதனா! இதோ இருக்கிற ஆலமரத்தின் இலைகளை யெல்லாம் ஒரு பாணத்தினால் ரந்தரஞ் செய்யும் ஒரு வில் விநோதம் காண்பிக்கிறேன். அதனை நீ கற்றுக்கொள் என்று அருகிலழைத்துப் பூமியில் ஒரு சக்கரம் எழுதி, அச்சக்கரத்தில் பீஜாக்ஷரங்க ளமைந்து, அம்மந்திரத்தை அவன் காதி லுபதேசித்து வில் வளைத்துப் பாணந்தொடு வென்று கட்டளை யிட்டார். துரியோதனன் அவ்வாறு வில்லை வளைத்து ஒரு பாணத்தைத் தொடுத்தான். அப்பாணம் சென்று ஆலமரத்தின் இலைகளை யெல்லாம் ஒவ்வொரு ரந்தன மிருக்கும்படி செய்தது. அதைத் துரியோதனன் கண்டு மகிழ்வெய்தி ஆசிரியனைத் துதித்தான். பின்பு துரோணசாரி அங்கெழுதிய சக்கரத்தைக் கலைக்காமல் யாவரையு மழைத்துக்கொண்டு கங்கைக்குச் சென்றார்.

துரோணர் முதலைவாயி லகப்பட்டது

இங்கே பற்குணன் குருபத்தினியைக் கண்டு வணங்கி எண்ணெயும் நலங்கும் வாங்கிக்கொண்டு அதிக வேகமாகக் கங்கையை நோக்கி வருகிறபோது, வழியில் ஆலமரந் தோன்றிற்று; அம்மரத்தடியில் வந்து சற்றே நின்றான். அங்கே குரு குமாரர்கள் அடி நெருக்கமாக இருந்தது. அடடா! இங்கு நமது ஆசிரியர் ஏதோ ஒரு வில் விநோதம் செய்தார். அதற்காக நமது தமயன் தம்பிமார்கள் கும்பு கூடிப் பார்த்திருந்தவர்களாக வேண்டும் என்று கருதி ஆலமரத்தடியைச் சுற்றிப் பார்க்கும்போது அங்கொரு சக்கரந் தோன்றிற்று. அந்தச் சக்கரத்தையும் சக்கரத்துக் குள்ளிருந்த பீஜாக்ஷரத்தையும் பார்த்து, அவைகளை மனதி லழுத்திக்கொண்டு மரத்தை நோக்கினான். அம்மரத்திலிருக்கிற இலைகள் துளைக்கப்பட்டிருப்பதை உணர்ந்து, அடடா! இந்த வித்தைதான் நமது குரு இங்கு கற்பித்தார் என்று அந்த மந்திரத்தை மனனஞ்செய்து, நாம் வில்லெடுத்துப் பாணம் தொடுப்போமென்றால், கைகளில் எண்ணெய் வட்டிலும் நலங்குவட்டிலுமிருக்கின்றன. பூமியில் வைத்தாற் குருவின் கட்டளைக்கு விரோதம் வருகின்றது ஆகிலும் நாம் இந்த இரண்டு வட்டிலையும் அந்தரத்திலேற்றி அவைவருகிறதற்குள் பாணந்தொடுப்போமென்று வில்லை வளைத்து நாணேற்றிட்டு

ஓர் மந்திரக் கணையையுந்தி வட்டில்களை அந்தரத்திலேற்றி, ஆசாரியரைச் சிந்தித்து மற்றொரு அஸ்திரத்தை யெடுத்து துபதீப நைவேத்தியஞ் செய்து தூண்டினான். அப்பாணம் சென்று இலைக்கொரு துளையுண்டாக்கிற்று, இதற்குள் அந்தரத்திலெறிந்த வட்டில்களும் வந்தன. அவைகளைக் கரத்தி லேந்தி மரத்தை நோக்கினான். இவைகளெல்லா மிரண்டு துளைபட்டிருந்ததுகள். அதனைக் கண்டு மகிழ்வடைந்து பூமியிலிருந்த சக்கரத்தைக் கலைத்துவிட்டுக் கங்கைக்கு வந்து குருவைக் கண்டு வணங்கி தன் கரங்களினால் குருவுக்கு எண்ணெய் தேய்த்து நலங்கிட்டுவிட்டு தான் தன் தமயர்களும் தம்பியர்களும் விளையாடும் துறையிற் சென்று நீர்விளையாடினான்.

துரோணசாரி கங்கைத்துறையி லிறங்கி ஸ்நானஞ் செய்கிறபோது ஒரு முதலை வந்து அவர் காலைப் பற்றிக்கொண்டது. அதனால் கனவருத்தமடைந்து தன் சக்தியளவு காலை யுதறியும் அம்முதலை விடாது பற்ற, அது கண்டு முற்காலத்தில் தாகத்திற்குச் சலமருந்தக் கயத்திற் சென்று முதலை வாயிற் சிக்கிய கஜேந்திரன் ஆதிமூலமென்றெப்படி அழைத்தானோ அப்படியே குருகுல மக்களைக் கூவி அழைத்தார். அந்தச் சத்தம் நீர் விளையாடுகிற குருகுல மக்கள் காதிற் கேட்கவில்லை. பின்பு துரோணசாரி அவ்வழியில் வருகிறவர்களோடு தான்படும் அவஸ்தையைச் சொல்லியனுப்பினார். வழிப்போக்கர்கள் குருகுல மக்களிடத்து வந்து, ஓ ராசகுமாரர்களே! உங்கள் ஆசிரியரை முதலை பற்றி யிழுக்கின்றது இன்னேரம் பிராண னிருக்கின்றதோ போயினதோ வென்று புகன்றார்கள். அதுகேட்ட துரியோதனனும் அவன் தம்பிமார்களும் அதிவேகமாக வந்து கல்லுங் கட்டியு மெடுத்து அடித்தார்கள். அம்முதலை முன்பற்றினதைவிட அதிகமாகப் பற்றிக் கங்கையில் வலிக்க, இதற்குள் பற்குணன் பார்த்து தன் வில்லை வளைத்து நாணேற்றிட்டு, ஒரு பாணத்தை எடுத்து வில்லிற்பூட்டி முதலையின் கண்டமும் அதன் உடலும் துண்டமாகப் போகும்படி தூண்டினான். அப்பாணம் ஆதிமூலமென் றழைத்த யானைக்குத் திருமாலேவிய ஆழிபோர் புகுந்து அம் முதலையைக் கண்டித்தது. அந்தக் கஜேந்திரன் எவ்வாறு ஆனந்தத்தை யடைந்து கரையேறினானோ அவ்வாறு துரோணசாரி அதிக மகிழ்வைக் கொண்டு முதலைவாயினின்று வெளிப்பட்டுப் பற்குணனைத் தழுவி, அப்பா பற்குணா! நீ யெனக்குப் பிராணதாரமா யிருந்தாய். உன்னாலுயிர் பெற்றேன். உயிருதவி செய்தவர்க்குச் செய்யு முபகார மென்னை யிருக்கின்றது? நீயே கஜேந்திர வரதன் என்று பலவாறு புகழ்ந்து ஆடையாபரணங்களை யணிந்து யாவரையு மழைத்துக்கொண்டு முன்வந்தவழியாக வந்து ஆலமரத்தருகிற் சேர்ந்து அம் மரத்தை நோக்கினார். அப்போது அந்த மரத்திலிருக்கிற இலைகளெல்லாம் இரண்டு துளையாக இருக்கின்றதைப் பார்த்து வியப்படைந்து, ஓ குருகுமாரர்களே! முன்னம் துரியோதனனால் இம்மரத்தினிலைகளை ஒவ்வொரு துளையாகத் துளைத்தோம். இப்போது இரண்டு துளைகள் இருக்கின்றன. இதை யார் செய்தது? என்று வினவ, பற்குணன் வணங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! அடியேன் எண்ணெயும் நலங்கும் கொண்டுவருகிறபோது இம் மரத்தடியிற் சக்கரம் போட்டிருந்தது. அந்தச் சக்கரத்தையும் அதிலடங்கி யிருந்த பீஜாக்ஷரத்தையும் என் மனதிலழுத்தி ஆலமரத்தைப் பார்த்தேன். மரத்திலைகளெல்லாம் துளைபட் டிருந்தன. நாமும் அவ்வண்ணம் செய்வோ மென்று கரத்திலிருந்த எண்ணெயின் வட்டிலையும் நலங்கு வட்டிலையும் தாங்கள் கட்டளைக் கழிவு வராமல் ஆகாயத்திற் போக்கி, அவைகள் வருகிறதற்குள் வில்லை வளைத்து ஒரு பாணத்தைத் தொடுத்து வட்டில்களைப் பிடித்துக் கொண்டேன். அந்தப் பாணம் இந்த இலைகளைத் துளை செய்தது. ஆகையா லிரண்டு துளைபட் டிருக்கின்றதென் றுரைத்தான்.

துரோணசாரி அதிக மகிழ்வடைந்து, அப்பா பற்குணா! முன் செய்ததுபோல் இப்போது செய்தால்தான் என்மனதுக்குத் திருப்தியாயிருக்கும். எதோசெய் பார்ப்போமென்றிசைக்க பற்குணன் வில்லைவளைத்து, ஒரு கணையினால் இரண்டு வட்டிலையும் அந்தரத்திலே யெறிந்துஒருபாணத்தையெடுத்துமந்திரோபதேசஞ்செய்து தூண்டிவிட்டான். இதற்குள் அந்தரத்திலெறிந்த வட்டில்கள்வர, அவைகளைப் பூமியில் விழவொட்டாமற் கைப்பற்றினான். தொடுத்தபாணம் சென்று இலைகளையெல்லாம் துளைத்துவிட்டது. துரோணசாரி மற்றுமுள்ள குருகுலமக்களும் ஆச்சரியப்பட்டு பற்குணனை புகழ்ந்தார்கள். இவர்களில்

துரியோதனன் மாத்திரம் பற்குணன் செய்த அருமைக்கு மகிழாமற் பொருமை கொண்டு முகமாறுபட் டிருந்தான். துரோணசாரி துரியோதனனை நோக்கி, அப்பா துரியோதனா! பற்குணனது புத்தியையும்யுக்தியையும் பார்த்தையா? அவனுக்குச் சொல்லாததற்குமுன் நிலத்தி லெழுதியிருந்த சக்கரத்தைக் கண்டு அதன்மேல் அந்த வித்தையை கற்றுக்கொண்டான். நீ யென்னிடத்திற் கற்றுக்கொண்டனையே ஏதோ இப்போது செய் என்று சொல்ல, துரியோதனன் முன் செய்ததை மறந்து ஆலமரத்தோடு தானுமொரு வேலாமரம்போ லிருந்தான். துரோணசாரி அது கண்டு, அப்பா துரியோதனா! அவரவர்கள் பூர்வம்செய்த பூஜாபல மெவ்வளவோ அவ்வளவுதான் கிடைக்கும். அதை நோக்காமல் எனக்கு நன்றாகச் சொல்லவில்லை பாண்டு மக்களுக்கு நன்றாகச் சொல்லுகிறேனென்று உங்கள் மூதாதைகளோடு முறையிடுகின்றாயே பார்த்தையா? உனக்குச் சொல்லியதை நீ மறந்துவிட்டாய். அந்தப் பாண்டு புத்திரன் நிலத்திலிருந்ததை மனதிலிருத்தி அவ்வித்தையைக் கிரகித்தான். இதற்கு யாரை நோக்லாமென்று யாவரையு மழைத்துக்கொண்டு நகரத்துக்குச் சென்று அவரவர்களைப் போசனஞ் செய்துவரச் சொல்லிக் கட்டளையிட்டு தாமும் அரண்மனைக்குப்போய் குருபுத்திரர் போசனஞ்செய்து சிலம்பக் கூட்டத்துக்கு வந்து சேர்ந்தார்கள். துரோணசாரியும் நாளுக்குநாள் விசேஷமாய் வில்வித்தைகளைக் கற்பித்து வந்தார்.

இப்படி சில நாட்சென்றபின்பு வில்வினோதங்களிலும் மற்ற ஆயுத வித்தைகளிலும் பாண்டுமக்கள் சிறப்புற்று யாவராலும் புகழப்பட்டார்கள். அதனைக் கண்டு துரியோதனன் மிகுந்த பொருமைகொண்டு, தாய் தந்தை மூதாதை இவர்களிடத்துச் சென்று வணங்கி, ஓ என்னருமைக் குரவர்களே நாங்களெல்லாம் துரோணசாரி யிடத்துப் பாண்டு மக்களைப் போல் தநுசாஸ்திரத்தையும் ஆயுத பரிக்ஷைகளையும் கற்றுவந்தாலும் துரோணசாரியார் அவர்கள்பேரில் வைத்திருக்கிற அன்பு எங்கள்மீதில்லை. அவர்களுக்கு ஒருவிதமாகவும் எங்களுக்கு ஒருவிதமாகவுங்கற்பிக்கிறார் என்று முறையிட வீஷ்மர் - திரிதராஷ்டிரன் - விதுரன் முதலானவர்கள் சற்றாலோசித்து தனுவாசாரியரை யழைத்துக் கேட்கவேண்டுமென்று தீர்மானித்து சில தூதுவர்களால் துரோணசாரியரை வரவழைத்து, அவர்க்கு வந்தனை வழிபாடு செய்து ஒரு பொற்பீடத்திலிருத்தி, ஸ்வாமி! குருபுத்திரர் நூற்றைவரையும் ஒன்றாக நினைக்கவேண்டியது என்று முன்னமே ஒருவிசை சொல்லி யிருக்கின்றோம். அதை விட்டு இன்னமும் ஒருத்தரை ஒருவிதமாகவும் மற்றொருத்தரை மற்றொருவிதமாகவும் பார்க்கின்றீராமே? அது தங்களைப்போலொத்தகியானவான்களுக்குத் தகுமாவென்று வினவ, துரோணர் அரசர்களை ஆசீர்வதித்துச் சொல்லுகிறார்: ஓ அரசர்களே! நமது கையிலிருக்கிற விரல்கள் ஒன்றுக்கொன்று குறையாமலிருக்கின்றனவா? அதுபோல் மக்களது புத்தியுக்தி யெவ்வளவோ அவ்வளவு வித்தை ஏறுகின்றது அதைப்பற்றி என்னை வினவுகிறது தங்களைப்போ லொத்த மண்டலேஸ்வரர்களுக்குத் தகுதியல்லவென்று மறுத்து, உங்கள் புத்திரருடைய புத்தி யுக்தியை நீங்களே யாதேனுமோர் காரியமூலமாகப் பரிக்ஷை செய்து, நான் சொன்னதை ஆலோசித்துப் பாருங்களென்று சொல்லி விடைபெற்றுத் தமதிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்.

குருபுத்திரர் வினோதப் பரிக்ஷை.

வீஷ்மரும் திரிதராஷ்டிரனும் மந்திரி முதலானவர்களுடன் கூடி குரு புத்திரர் நூற்றைந்து பெயரையு மழைப்பித்து, திரிதராஷ்டிரன் புத்திரராகிய துரியோதனன் முதலாகிய நூற்றுவர் கையிற் கொஞ்சந் திரவியங் கொடுத்து, நீங்கள் இந்தத் திரவியத்துக்கு வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கி வைத்திருங்களென்று கூறி பாண்டு மக்களை யழைத்து அவர் கையில் அவ்வளவு திரவியங் கொடுத்து அவர்களுக்கு சொன்னபடியே இவர்களுக்குந் திட்டஞ் செய்து அனுப்பினார்கள். நூற்றுவரும் ஓரிடத்திற் கூடி சகுனியையும் கர்னனையும் அழைத்து, வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கிவைக்கச் சொல்லிக் கொஞ்சந்திரவியங்கொடுத்த நமதுபெரியோர்கள் மனங்களிக்க என்ன பதார்த்தம் வாங்கலாம் சொல்லுங்களென்று கேட்க, சகுனி கர்னன் முதலானவர்கள் யோசித்துச் சொல்லுகிறார்கள். ஓ துரியோதன மஹாராஜனே! நமது பெரியோர்கள் கொடுத்த திரவியமோ கொஞ்சம் அதில் வீடுநிறைந்த பதார்த்தம் வாங்கிவரக் கட்டளை யிட்டிருக்கிறார்கள். ஆதலால் வரகு வைக்கோல் வாங்கினால் வீடு நிறைந்தி

ருக்கும் இதைவிட வேறொரு பதார்த்தம் வீடு நிறையாதென்றார்கள். துரியோதனன் ஆம், ஆம்; இதுதான் சரி, இந்த யுக்தி பாண்டவர் களுக்குத் தெரியாதென்று வடக்குவீதியி லிருக்கும் ஒரு பெரிய வீட்டில் தங்கள் கையிலிருக்கிற தொகைக்கு வரகுவைக்கோல் வாங்கி அவ் வீட்டை நிரப்பி, யாராகிலும்பார்த்துப் பாண்டவர்கட்குச் சொல்லப் போகிறார்களென்று கபாடபந்தனஞ் செய்து, தெருத்திண்ணையிற் சகுனி கர்னனோடு நூற்றுவரும் உட்கார்ந்திருந்தார்கள்.

தருமராஜன் தான்பெற்ற சொல்பத் தொகையை எடுத்துப் போய்த் தென்வீதியி லிருக்கும் வீட்டிற் சென்று, தன் தம்பிமார் நால்வரையு மழைத்து, நமது பெரியோர்கள் வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கி வைக்கச்சொல்லிக் கொஞ்சந் திரவியங் கொடுத்தார்களாதலால், ஓ வீமா! நீ ஒரு பொன்னை யெடுத்துப் போய் அறுசுவையோடுங் கூடிய பதார்த்தமும் அன்னமும் சமையற் செய்துவை. ஓ பற்குண! நீ இந்த ஒரு பொன்னுக்குத் தாம்பூலம்-புஷ்பம்-கலவைச்சாந்து-பஞ்ச விடையங்கள் முதலானவைகள் சேகரித்துவை. ஓ நகுலா! நீ இந்த ஒரு பொன்னுக்கு விளக்கு நெய் வாங்கிவந்து வீடெங்குந் திருவிளக்கிடு: ஓ சகாதேவா! நீ மீதியிருக்கிற பொன்னுக்குத் திண்டுதலைக்கணை-பட்டுப்பாய் முதலியவற்றை வாங்கிப் போட்டுவை யென்று கட்டளையிட்டார். தம்பியர் நால்வரும் அவரவர்களுக்கிட்ட கட்டளைப்படி நடத்தி ஸ்நானஞ்செய்து, அலங்காரமாக உடுத்திக்கொண்டு, தமையனாகிய தருமராஜனோடு தலை வாயற்படியில் வந்து பெரியோர்கள் வரவுக்கெதிர்பார்த்திருந்தார்கள்.

வீஷ்மர் திரிதராஷ்டிரன் இவ்விருவரும் குருபுத்திரர் திறமையைப்பார்க்க மந்திரிமுதலானவர்களை அழைத்துக்கொண்டு, வடவீதியிலிருக்கிற துரியோதனனிடத்துச் சென்றார்கள். துரியோதனன் எதிர்கொண்டுபோய் நமஸ்காரஞ்செய்து, தந்தையையும்மூதாதையையும் நோக்கிச் சொல்லுகிறான்: ஓ ஐயமீர்! உங்கள் கருத்துமகிழ்வெய்த வீடுநிறைந்த பதார்த்தம் வாங்கிவைத் திருக்கிறே னென்று மேன்மைப் பாராட்டினான். திரிதராஷ்டிரன் சொல்லுகிறான். அப்பா மகனே! என்ன பதார்த்தம் வாங்கினாய் சொல்லென்று வினவ, துரியோதனன் ஐயா! வீடுநிறைந்த பதார்த்தம் வரகு வைக்கோல் ஒன்று தவிர மற்றப் பதார்த்தத்தால் வீடு நிறையாது இது பெரிய வீடு அவ் வரகுவைக்கோலை வாங்கிக் கதவுதிறப்பதற்குக் கூட இடமில்லாமையா யிருக்க நிறைத்து வைத்தோமென்ன, இதைக்கேட்ட திரிதராஷ்டிரன் முதலானவர்கள் உள்ளே போய்ப் பார்க்க இடமில்லாமையால் வெறுப்படைந்து அங்கிருந்து தக்ஷணம் பாண்டுமக்களிருக்கிற இடத்துக்குச் சென்றார்கள். தருமராஜன் அஃதுணர்ந்து தம்பியரோடு எதிர்கொண்டுவந்து வணங்கி அழைத்துப் போய் திருவிளக்கிட்டு அலங்காரமாகச் சிங்காரித்திருக்கும் வீட்டினுட்காரவைத்து இனிய வார்த்தை பேசி, ஓ எங்களருமைத் தலைவர்களே! தாங்கள் இங்கிருந்து போஜனம் அருந்தவேண்டுமென்று வருந்த, பெரிய அரசர்கள் அகமகிழ்ந்து, கைகால்கள் சுத்திசெய்து உள்ளறையிற் சென்று உட்கார்ந்தார்கள். உடனே வீமபாகமாகிய பதார்த்தங்களையும் அன்னத்தையும் வட்டிக்க, பெரிய அரசர்கள்போசனஞ்செய்து பதார்த்தங்களிருந்த இனிமைக்கு மகிழ்ந்து, கை வாயலம்பிச் சபையில் வந்து உட்கார்ந்து பற்குணன் தாம்பூல சந்தன புஷ்பமாலைகளைக் கொண்டுவந்து வைத்தான். பெரிய அரசர்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து தருமராஜன் முதலாகிய ஐவரையும் நோக்கி, தங்கள் மகிழ்ச்சி வெளிப்படாதபடி சொல்லுகிறார்கள். அப்பா மக்களே! உங்களை வீடு நிறைந்த பதார்த்தம் வாங்கி வைக்கச் சொன்னோமே எதோ அந்தப் பதார்த்த மென்று வினவ, அவர்கள் அவ்விருவரையும் வணங்கி, ஓ ஐயமீர்! வீடுநிறைந்த பதார்த்தமாவது திருவிளக்கே யன்றி மற்றொன்று மில்லை. ஆகையால், நாங்கள் திருவிளக்கு இட்டோம். வீட்டுக்கு வருகிறவர் புசியாமற்போவது தகுதியல்ல வென்று எங்களாற் கூடியமட்டும் சமையற் செய்து வைத்தோ மென்றார்கள். பெரிய அரசர் மிகக் களிப்புற்று மக்களைத் தழுவி முத்தமிட்டுச் சீராட்டி மக்கள் நூற்றைவரையும் அழைத்துக்கொண்டு அரண்மனை வந்து சேர்ந்தார்கள். பின்பு இந்த இருதிறத்தாரும் முன்போலவே துரோணாசாரியாரிடத்துச் சென்று வில்வித்தையைக் கற்று வந்தார்கள். அன்று முதல் திரிதராஷ்டிரன் வீஷ்மர் இவர்களிருவருந் துரியோதனன் துரோணாசாரியார் மேற்சொல்லுங் கோளை ஏற்றுக்கொள்ளுகிற தில்லை.

## குருபுத்திரர் விற்பரிக்ஷை

இவ் வண்ணமாகச் சிலநாள் சென்ற பின்பு துரோணாசாரியர் பெரிய அரசர்களிடத்து வந்து, அவர்கள்செய்த பூஜையைக் கொண்டு ஆசிகள் வழங்கிச் சொல்லுகிறார்: ஓ அரசர்களே! குரு குமாரர்கள் நூற்றைந்து பேர்களுக்கும் யான் கற்றிருக்கும் வில்வித்தைகளெல்லாவற்றையும் கற்பித்திருக்கிறேன் நல்ல வேளையில் விற்பிடித்த அரசர்கள் முனிவர்கள் எல்லாருமறிய அரங்கேற்ற வேண்டுமென்று கூறி அரண்மனைக்குச் சென்றார். பெரிய அரசர்கள் அதற்கிசைந்து ஒரு நல்ல நாள் நியமித்து, அந்நாளில் விற்பிடித்தவர் யாரோ அவர்களெல்லாம் வரவேண்டுமென்று திருமுகமெழுதித் தூதர்கையிற் கொடுத்தனுப்பினார்கள். தூதர்கள் விற்பிடித்த அரசர்க்கும் முனிவர்க்கும் அளித்தார்கள். திருமுகத்தைக் கண்ட தக்ஷணம் அரசரும் முனிவரும் மிகுந்த ஆவல்கொண்டு ஆடை ஆபரணங்களணிந்து, இரதாரூடராய் அத்தின புரத்துக்கு வந்தார்கள். வந்த அரசர்களுக்கெல்லாம் பெரிய அரசர்களாகிய வீஷ்மர் திரிதராஷ்டிரன் இவர்கள் தகுந்த மரியாதை செய்து விடுதிகள் விட்டார்கள். அவரவர்கள் தங்களுக்கு விட்ட விடுதிகளிற் பொருந்தி, ஸ்நானம் பண்ணி போஜனஞ் செய்திருந்தார்கள். வீஷ்மர் நகர்ப்புரத்தில் விசாலமாக இருக்கிற ஒரு இடத்திற் பிர்ம்மாண்டமான காவணமியற்றி, அதில் வந்தவர்களிருக்க ஆசனமிட்டு தாம் திரிதராஷ்டிரன்-விதுரன்-மந்திரி-தண்டத்தலைவர்-மகுடவர்த்தனர்-பெரியோர்-நாட்டிலுள்ள குடிகள் முதலானவர்களோடு, வேத வேதியர்களெல்லாந் தம்மைப் புடை சூழ்ந்திருக்கக் கொலுவீற்றிருந்து, அவ்வணி வந்திருக்கிற முனிவர்கள் அரசர்கள் முதலாயினோரை வரும்படி அறிக்கையிட, விற்பிடித்த அரசரும் தனுர் சாஸ்திரம் படித்த முனிவரும் மற்றுமுள்ள யாவரும் காவணஞ் சேர்ந்து மரியாதைகளைப் பெற்று, அங்கிருக்கும் சிங்காதனங்களில் தங்கள் தங்கள் தகுதிக்குத் தக்கபடி இருந்தார்கள். சொற்க வாசிகளோடு இந்திரன் முதலாகிய தேவர்கள் தங்கள் தங்கள் வாகன அந்தரத்தில் வந்து நிறைந்தார்கள்.

வீஷ்மர் துரோணாசாரியையும் குருமார்களையும் அழைத்துவரும்படி கட்டளையிட்டார். துரோணாசாரி அஃதுணர்ந்து, தமது மாணாக்கர் நூற்றைந்து பெயரையும் அழைத்துக்கொண்டு காவணத்துக்கு வந்தார். அவரைக் கண்டவுடன் வீஷ்மர் முதலான அரசர்களெல்லாம் எழுந்து, எதிர் கொண்டுபோய் அழைத்துவந்து ஓர் பொற்பீடத்தி லிருத்தி சோடச உபசாரமுஞ்செய்து துதித்தார்கள். துரோணாசாரியர் அவ் வரசர்கட்கெல்லாம் ஆசிகள் வழங்கி, மஹாமுனிவர்கட்கெல்லாம் வந்தனை வழிபாடுகள் செய்து சொல்லுகிறார்: ஓ அரசர்களே! இது நல்ல சுபமுகூர்த்த காலமாதலால் வில்லரங் கேற்றுங்களென்று விளம்ப, வீஷ்மர் ஆயுதசாலைத் தலைவரை நோக்கி ஆயுதப் பெட்டிகளைக் கொண்டுவரக் கட்டளையிட்டார். அப்படியே அப்பெட்டிகளைச் சபையிற் கொண்டுவந்து வைத்தார்கள். வீஷ்மர் துரோணாசாரியரைப் பார்த்து ஓ ஸ்வாமி! ஆயுதப் பேழைகள் இதோ யிருக்கின்றன. இனித் தாமதப் படுத்தாமல் தங்களுடைய மாணாக்கர் கற்றிருக்கும் வில்வித்தை முதலியவற்றை இங்கு வந்திருக்கும்படியான சகலரும் வியப்பெய்த விளையாடச் செய்வீர்களென்று கட்டளையிட்டார். துரோணாசாரி தமது மாணாக்கரை நோக்கி, ஓ குருபுத்திரர்களே! இது சமர்பூமியல்ல பரிக்ஷைக்கூடம். ஆகையால், ஒருவர்க்கொருவர் விரோத மில்லாமற் கற்ற வித்தைகளை இச்சபை நிறைந்திருக்கிற யாவருங்கண்டு களிக்கக்காண்பியுங்கள். அந்த ஆயுதப் பேழைகளைத் திறந்து அவரவர்களுக்கு இஷ்டமான ஆயுதங்களை எடுத்து விளையாடுங்களென்றனர். குரு புத்திரர்கள் குருவே துணையென்று முனிவர்களையும் சபை நிறைந்த ராஜர்களையும் வீஷ்மர் திரிதராஷ்டிரன் முதலானவர்களையும் வணங்கித் தேவாராதனை செய்து, பேழையைத்திறந்து அவரவர்களுக் கிஷ்டமான ஆயுதங்களைச் ஜெயம் ஜெயமென்று எடுத்துச் சபையில் நின்று ஒருவர்க்கொருவர் எதிர்த்து வில் - வேல் - வாள் கதை - கத்தி - தோமரம் - சூலம் - பிண்டி - பாலம் - பாங்கு - ஈட்டி - கடாரி - கண்டகோடாலி முதலிய ஆயுதங்களினால் வெட்டியும், தட்டியும், எறிந்தும், குத்தியும், எத்தியும் இவ்விதமாக யாவருமகிழ விளையாடினார்கள். இவர்களில் துரியோதனன் வீமனும் எதிர்த்துப் பல ஆயுதப்பயிர்ச்சியைக் காண்பித்தார்கள். துரியோதனன் தன்னோடு வீமன் இளைக்காமல் நின்று விளையாடுகிறதற்குப் பொறாமை கொண்டு, முன்னமே அவ்வீமன்மீது வஞ்சினங்கொண்டு வயிரம்பற்றிய மனதையுடைய

வனுகையால் இந்த வேளையில் விளையாட்டுப் போலவே கதையினால் ஒரே அடியாக அடித்து நீட்டிவிட்டால் நமது குறை நீங்கும் மேலும் கொன்றுவிட்டதைக் கண்டு சபையார் கேட்டால் நானென்ன செய்வேன் சாஸ்திரப்படி விளையாடினேம் அவன் ஏமாந்திருந்தான். அதனுற் கைதவறி அடிபட்டது என்று சொல்லிவிடுவோமென்று அதிக கோபங்கொண்டு கதையைக் கையி லேந்தினன். வீமனும் கதையை கையிலேந்தி யெதிர்த்து மனதில் யாதொரு விகற்பமுமில்லாமற் கதாயுத வித்தையைக் காண்பித்து வருகிறபோது துரியோதனன் அதிக சினங்கொண்டு வீமன் உயிர் நிலையைப் பார்த்து அடித்தான். வீமன் அதனை யறிந்து, அடடா! இவனென்ன விளையாடுகிறபோது சத்துருவை அடிக்கிறது போல் நம்மையடிக்கிறுன். நல்லது நாம் சாக்கிரதையா யிருக்கவேண்டுமென்று நினைத்து துரியோதனனேடு சமமாய் விளையாடி வந்தான். துரியோதனன் வரவர வெகுளிகொண்டு அவன் உயிர் நிலையையே பார்த்துப் பார்த்து முகம்வேர்த்து அடிக்கிறுன். வீமன் அவ்வடிகளுக்குத் தப்பித்துக்கொண்டு இவன் ஏதோ ஒரு கபடம் மனதில்வைத்து நம்மைக் கொல்லக் கருதி யிருக்கிறபோது நாம் சும்மாயிருக்கலாகாதென்று வீராவேசங்கொண்டு மேகங் கொர்ச்சித்ததுபோற் கொர்ச்சித்து கையிலிருக்கிற கதையை அந்தரத்தி லெறிந்து அது கைக்கு வருகிறதற்குள் கையைப் பிசைந்து தோளைத் தட்டிக் கதையைக் கையிற் பற்றி, மலை நடந்து வருகிறதுபோல் துரியோதனனை எதிர்த்துக்கொண்டான்.

துரியோதனனு முறைத்து, ஒருவர்க்கொருவர் குத்தியும், தட்டியும், எத்தியும், போராடுகிறுர்கள். இதனைச் சபையிலிருக்கிற பெரிய அரசர் முதலானவர்கள் கண்டு, ஓ! ஓ! மோசம் வந்தது. (விளையாட்டுச் செய்கை வினையாக முடிந்தது) என்கிற பழமொழி போல் இவ்விருவரும் ஆயுதப் பயிற்சியைக் காண்பிக்க வந்தவர்கள் ஆவியைக் கொள்ளை கொள்ள யத்தனித்தார்கள். இதற்கு என்ன செய்கிறது என்று மனநடுங்கி ஒருவர் முகத்தையொருவர் பார்த்திருக்கிறபோது வில்லாசிரியராகிய துரோணுசாரியர் புத்திரன் அசுவத்தாமன் எழுந்து இருவர்க்கு மத்தியில் வந்து நின்று, ஓ துரியோதனு! ஓ வீமா! நில்லுங்கள் நில்லுங்கள் ஒருவர்க்கொருவர் துவேஷங்கொண்டு ஆவியை கொள்ளைகொள்ளவா உங்களை ஆயுதப் பயிற்சி செய்யச் சொன்னது? சபாசு! நன்றுயிருக்கின்றது. ஒரு ஆதீனத்துப் புத்திரர் இப்போது தானே இவ்வளவு வயிரங் கொண்டிருந்தால், இனி வரவர எவ்வாறு இருப்பீர்களென்று இடியிடித்ததுபோற் கூவினுன். அக்கால இடி கேட்ட நாகங்கள் எவ்வாறு நடுங்கிப்போமோ அவ்வாறு துரியோதனன் - வீமன் இவ்விருவரும் குருபுத்திரன் வாக்கியத்தைக் கேட்டு ஒதுங்கி விட்டார்கள்.

இப்பால் பற்குணன் துரோணுச்சாரியர் முதலாகிய பெரியோரை வணங்கித் தன்வில்லை வளைத்து நாணி ஏறிட்டுக் குணத்தொனி செய்து, முதுகிற் கட்டியிருக்கிற அம்புப் புட்டிலிற் கரத்தைவைத்து, ஒரு சரத்தை எடுத்து மானதபூசையாய்த் தூபதீப நைவேத்தியஞ்செய்து மந்திரோபதேசத்தோடு அவ் வில்லிற் றெடுத்துவிட்டான். அச்சரம் வானத்திலெழுந்து மின்னல்-இடி-மழை இவை கூடிய மேகங்களையும், காற்றையும், பர்வதங்களையும், இன்னும் வியப்படையத்தக்க வினோதங்களையும்காண்பித்தது. பின்னும் பற்குணன் மற்றெரு கணையைத் தொடுத்துத் தூபதீப நைவேத்திய முதலியவற்றைச் செய்து வில் லிற் பூட்டிவிட்டான். அக்கணை யொன்று 10, 100, 1000, 10,000, 100000, கோடி - சதகோடி-சங்கம்-மகாசங்கம் என்னும் கணக்குக்கு அதிகப்பட்டு வானத்தை மூடிற்று. மேலும் பற்குணன் கஜாஸ்திரத்தை எடுத்து விட்டான். அது அநேகம் யானைமயமாகவே, உடனே அக் கஜாஸ்திரத்துக்கு வயிரியாகிய கேசரியாஸ்திரத்தை விட்டான். அதனுல் மிகவாகிய சிங்கரூபங்கள் வெளிப்படலும் அதனை மறுத்துச் சர்ப்பாஸ்திரத்தை விடுத்து, உடனே அதற்கு வைரியாகிய கருடாஸ்திரத்தைத் தொடுத்து, அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்து அவ்வஸ்திரத்துக்குப் பிறவியாகிய வருணுஸ்திரத்தை யேவிக் கெடுத்துப் பின்பு இருளாஸ்திரத்தை உய்த்து, அதனைச் சூரியாஸ்திரத்தால் மறைத்து அசுராஸ்திரத்தை யுந்தி, உடனே அதனைக் கந்தர்வாஸ்திரத்தாற் சிந்தி, இப்படி இன்னு மநேகமாகிய தேவாஸ்திரங்களையும் அருமையானசெய்கைகளையுஞ் செய்தான். இதனைக் கண்ட வரசர்களு முனிவர்களு மிக மகிழ்ந்து பற்குணனைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

கர்னன் வாது

இவ்வாறு யாவரும் பற்குணனைப்புகழ்ந்து கொண்டாடுவதை ரதைய னென்கிற தேர்ப் பாகனிடத்து வளர்ந்தமையாற் சூத்த க்ஷத்திரியனு யிருந்தும் நீறுபூத்த நெருப்புப்போ லிருக்கிற கர்னன் கேட்டு, தவசிரேஷ்ட சிகாமணியாயும் வில்வித்தையிற் சிறந்தவராயுமிரா நின்ற பரசுராமமூர்த்தியி னிடத்து வில்வித்தையைக் கற்ற அதிகமான வன்மையையும் வில்திறத்தன்மையையும் உடையவனு யிருந்தும் அவ்விரண்டையுந் தனக்குள் அடக்கிக் கொண்டிருந்த அடக்கத்தைச் சிதைத்தவனுய் உடனே எழுந்து சபையாரை வணங்கிச் சொல்லுகிறான். ஓ அரசர்களே! நீங்களெல்லாம் வில்விநோதத்திற மறியாதவர்கள்போல (ஆலையில்லாவூரில் இலுப்பைப்பூவே சருக்கரை) என்கிற பழமொழிக்கிணங்கச் சிறுவனுகிய பற்குணன் செய்த வில்வித்தையைக் கண்டு மிகவும் வியந்து புகழ்ந்தீர்கள். யான் கற்ற வித்தையைக் காண்பிக்கிறேன் அதனையும் கிஞ்சித்து நோக்குங்க ளென்று தன் வில்லை வளைத்து நாணேறிட்டு, பரமசாரிக் கொப்பாகிய பரசுராமமூர்த்தியைத் துதித்துக் குணத்தொனி காட்டி, சில சரங்களை எடுத்துத் தூப தீப நைவேத்தியஞ் செய்து வில்லிற்பூட்டி மந்திரோபதேசத்தோடு தூண்டி, இந்திரன் குமாரனுகிய பற்குணன் ஏதேது விநோதஞ் செய்தானே அதற்கதிகமாக அநேக வல்லமைகளைக் காட்டினன். அவைகளைச் சபையார் நோக்கிப் பற்குணனைப் புகழ்ந்ததிலும் பதின் மடங் கதிகமாகப் புகழ்ந்தார்கள். துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் அகங்களித்தார்கள். பற்குணன் மாத்திரம் கிஞ்சித்து நாணமுடையவனு யிருந்தான். அந்த வேளையிற் கர்னன் பற்குணனை நோக்கி, ஓ விற்குணு! நீ கற்ற வில்வித்தையைப் பார்ப்போம், இங்கு வந்திருக்கும் விற்போரிடும் வேந்தர்கள் நோக்கும்படியாய் வருகிறையா வா வென்றான். அதற்குப் பற்குணன் மனம் நெய்யைவிட்ட நெருப்புப்போ லிருந்தாலும், இவன் தேர்ப் பாகனுக்கு வளர்ப்புப்பிள்ளையா யிருந்தும் அரசர் புத்திரர்போல் வருத்தப்பட்டு வில்வித்தையைக் கற்றுக்கொண்டானென்று அருமையை மதித்துத் தணிவான மனதுடனே சொல்லுகிறான். ஓ கர்னு! நீ அழைத்தபடி விற்போர் செய்ய இசைவேன். ஆனால், ஒரு சங்கடமிருக்கின்றது. அஃதென்னெனில், நீ எங்கள் தேர்ப்பாகனுக்கு அபிமான புத்திரன் நானே இவ்வுலகாதிபனுன ராஜபுத்திரன் நீயும் நானும் விற்போரிடுவது தகுதியல்ல நீ வில்வித்தையிற் சிறந்தவன்றான் குறைவில்லையென்றான்.

கர்னன் அதிக சினங்கொண்டு, அடா பற்குணு! என்ன சொன்னுய்? இச் சபையார் முன் என்னைப் பங்கப் படுத்தாதவன்போற் பங்கப்படுத்த எண்ணி, நீ தேர்ப்பாகனுடைய புத்திரன் நான் இராஜபுத்திரனென்று ஜாதி முன்னிலையில் இழிவு கூறினுயல்லவா? சபாசு! ஆண்ஜாதி பெண்ஜாதி என்கிற இருவகைச் சாதியே யல்லாமல் மற்றொரு ஜாதியில்லை. உயர்ந்தோ ராவதும் தாழ்ந்தோ ராவதும், அவரவர்கள் கன்ம அனுஷ்டிப்பினுலும் நற் செய்கையினுலுந்தான். நீ சிறுவன் உனக்கென்ன தெரியும்? நீ ராஜபுத்திரன்தான் நான் தேர்ப்பாகன் புத்திரன்தான் எதோ பார்ப்போம் நீயும் வில்லெடு நானும் வில்லெடுக்கிறேன். இச் சபையார்கள் மகிழ்வெய்த என்னைச் சாதியீன னென்றுரைத்த உன் முகமாகிய கமலத்தை இந் நிமிடத்திற் கொய்து அரங்குபூசை செய்கிறேனென்று வில்லை வளைத்து நாணியேறிட்டு, அங்கிருந்த அரசர் மன நடுங்க விற்குணம் பண்ணினன். அதற்குப் பற்குணன் அதிக சினங்கொண்டு கர்னனை நோக்கி, அடா கர்னு! என்முக சரோருகத்தைக் கொய்து அரங்குபூசையா செய்யப் போகிறாய்? நல்லது அதுவரைக்கும் நீ யிருந்தா லன்றோ செய்வாய் இதோ என்கணையால் உன் தலையைப் பூமியி லுருட்டுகிறேன். ஒருவேளை இச்சபையிலிருக்கிற பெரியோர்களால் இந்த வேளை தடுக்கப்பட்டாலும், இனி எந்த வேளையிலாவது பலபேரறிய உன் சிரத்தைக் கொய்யாமல் விடேன். அப்படிச் செய்யாமல் விட்டால் நான் பிடித்தது வில்லல்ல நானும் க்ஷத்திரியனல்ல என்று சபதங்கூறித் தன் வில்லை வளைத்து நாணி ஏறிட்டுத் தேவரும் அரசரும் முனிவரும் திகைக்கக் குணத்தொனி காட்டினன்.

இதனைக்கண்ட வீஷ்மர் முதலான பெரியோர்கள், இதென்ன விபரீதம்? இவ்விருவரும் என்ன காரணத்தாற் கடுஞ்சினமுற்று அடுந்தொழிற்குப் பிரவேசித்தார்கள்? இதற்கென்ன செய்கிறதென்று வருத்தப்பட்டுக் கொண் டிருக்கிற தருணத்தில், முதிர்ந்த தேகத்தையுடையவராயுந் தவசிலாக்கிய முடைய

வராயுமிருக்கிற கவுதமர் எழுந்து, காவிகாம் பர சடாடவிகள் பக்கங்களிற் புரள ஓடோடி யும் வந்து, இருவர் மத்தியில் நின்று, அவ் விருவரையும் நோக்கி வில்நாணியை தளர்த் தச் சொன்னார். இருவரும் பெரியோர் வாக் கைத் தடுக்காமல் தங்கள் தங்கள் கையிலிருக் கிற வில்நாணியைத் தளர்த்தினார்கள். அந்த வேளையில் வீஷ்மர் கோபங்கொண்டு,சபையை நோக்கி ஒரு வசனஞ் சொல்லுகிறார். கேளுங் கள் சபையாரே! துரோணாச்சாரியார்தம்மிடத் தில் வில்வித்தையைக் கற்ற குமாரர்கள் நூற் றைவரையும் அரங்கேற்ற வைத்தால், இந் தத் தேர்ப்பாகன் புத்திரனாகிய கர்னன் நமக் கென்னவென்று சும்மா யிருக்காமல், தான் கற்ற வில்வித்தையைக் காட்டவந்தான். ஆகி லும் வித்தை எல்லோர்க்கும் பொதுவென்று ஒப்புக்கொண்டு, வில் வித்தையைக் காட்ட உத்திரவு செய்தோம். அப்படியே வில்வித் தையைக் காட்டினான். இவன் வில்லிற் திற வான்தான். அஃதிருக்கட்டும் இந்த வாதீ னத்துக்குடைய ராஜகுமாரனாகிய பற்குணனை நோக்கி விற்போரிடுவோம் வாவென்றெப் படி அஞ்சாமல் அழைக்கிறான். அதற்குப் பற்குணன் நீ தேர்ப்பாகனுடைய புத்திரனாத லால் உன்னுடன் விற்போரிடுவது எனக்குத் தகுதியல்லவென்று கூறினான். இவனந்தப் பற்குணன் முகமாகிய கலமத்தைக் கொய்து அரங்குபூசை செய்கிறேனென்று எப்படி துணிவுற்றுரைக்கிறான். இஃதுங்களுக்குத்தரு மமாக யிருக்கின்றதா வென்றனர். அச்சபையி லிருந்த யாவரும் நீரோட்டத்திற் றெப்பம் செல்லுந் தன்மைபோல் வீஷ்மர் கருத்துக்கு விரோதம் வராம லவர்க்கேற்ற வசனங்களைப் பேசினார்கள். இதனைக்கேட்ட கவுதமர் சந்ததி யாராகிய கிருபாசாரியாரும் அக்கர்னனைப் பார்த்து, இந்த ராஜசபையிற்கிஞ்சித்து மஞ் சிக்கையில்லாமல் என்ன சொன்னாய்? கர்னா! தேர்ப்பாகனுக்குப் புத்திரனாகிய நீ ஏழுகடல் வளைந்த பூமிக்கதிபனாகிய மகாராஜனுடைய மைந்தனுடன் நடுக்கமில்லாமல் இடுக்கமான சபதத்தைச் சொல்லுந் தரமா? மநுநீதி- இராஜநீதி-வேதநீதி முதலிய யாவற்றினுஞ் சாதியர்சாரம் - குலாசாரம் - வரன்முறை - ஆளடிமை இன்னதென்று விபரித்திருக்க நீ பெரிய சக்தியையுடையவனே இலேசாகப் பேசவந்தாய். இனி இப்படி அத்துமீறிப் பேசாதேயென்றும் கடுகடுத் துரைத்தார். இப் படி வீஷ்மரும் கிருபரும் கடுகடுத்துக் கூறிய வார்த்தையைக் கேட்டுச் சபையிலுள்ளோர் பலரும் நடுங்கினார்கள். அக்காலையிற் கவுதமர் வெகுண்டெழுந்து, அங்குள்ள அரசர் முத லானவர்களுடைய மனம் நடுங்கும்படியாக முன்னம் வீஷ்மரைப் பார்த்து இவை பேசத் தொடங்கினார்.

### கர்னன் மகுடாபிஷேகம் பெறல்

அடா வீஷ்மா! என்ன சொன்னாய்? கர் னன் தேர்ப்பாகனுடைய புத்திரனென்றும், பற்குணன் இந்த ஆதீனத்துக்குரிய புத்திர னென்றும் கண்டவன்போலக் கூறி, கர்னனை இழிகுலத்தனென்று இந்த இராஜ சபையறி யச் சொன்னா யல்லவா? சபாசு! சபாசு! நன்று யிருக்கிறது. உலகத்தில் ஜாதியாசாரமுறை விசாரணை செய்தால் (அத்திப் பழத்தைப் புட்டால் அத்தனையுஞ் சொத்தை) என்கிற தரியாயா? ஐயோ! அது நிறையப் புழு வென்று குறியாயா? இந்த அண்டமும் அப் படித்தா னல்லவா? ஆத்ம கோடிக ளத்தனை யுங் குற்றமே. நீ சாஸ்திர விசாரணை செய்த தும் அனர்த்தமே. நல்லது; வீஷ்மா! திரு மால் கருங்கற்றூணிற் பிறந்தான். சிவன் மூங் கிலிற் பிறந்தான். நெடிய கடல்நீரைக் குடித்த அகத்தியமுனியும், இதோயிருக்கிற துரோணா சாரியும், கும்பத்திற் பிறந்தவர்கள். முருகக் கடவுள் கங்கையிற் பிறந்தவர். இந்தக் கிரு பன் தருப்பைப் புல்லிற் பிறந்தவன். ஐயா, வீஷ்மரே! தாங்க ளெங்கே பிறந்தீர்கள்? தேவா ளுற்பத்தி ஸ்தானம் தேவாளுக்குத் தெரியாமலிருக்க, ஒருவரை இழிவு கூறுவது எப்படி? இவ்வாறு பிறந்தவர்க ளெல்லாம் உலகத்திற் சிறப் படைந்தார்களே யன்றிப் பிறந்த விடத்தா லிழிவடையவில்லை. ஆதலாற் கல்வியிற் கைதேர்ந்தவர்களுக்கும் கன்னிகா ஸ்திரீகளுக்கும், கொடையி லுயர்ந்தவர்களுக் கும், அதிக வீரத்தை யுடையவர்களுக்கும், அஷ்டலட்சுமி சமேதராகிய அரசர்களுக் கும், குற்றமற்ற ஞானிகளுக்கும், ஜாதிபேத நோக்குவதில்லை. அஃதிருக்கட்டும்; உலகத் தில் வல்லமை யடைந்தவனெவனோ, அவன் தான் உலகாதிபன். அவனைத்தான் நல்ல குலத் திற் பிறந்தோரும் வணங்குவார்கள். ஆத லாற் சிறந்த குலத்திற் பிறந்தும் சிறப்பில்லா திருந்தால், அவர்கள் சிறந்த குலத்தா ரல் லர். கீழான குலத்திற் பிறந்து கீழான செய் கையை நீங்கி நின்றால், அவர்கள் கீழான வர்க ளல்ல. ஓ கிருபனே! நீ பெரியோர்களி

லொருவனு யிருந்தும், இந்தக் கர்னனைக் குறித்துப் பேசியது தகுதியல்ல. நானேதோ தாறுமாருகப் பேசினேனென்று மனஸ்தாபம் வேண்டாம். ஓ வீஷ்மரே! இக்கணம் இக் கர்னனை உன் மனமகிழ அரசனுக்கினல் என்மன மகிழுமென்று கூற, வீஷ்மர் கவுதமருடைய வசனங்களைக் கேட்டுத் திடுக்கென் றெழுந்து வணங்கி, ஓ சுவாமி! தாங்கள் கருத்து மாத்திரமல்ல இங்கிருக்கும் எல்லாருடைய கருத்துங் களிக்கும்படியாக இக்கணம் இக்கர்னனை அரசில்லாதிருந்த அங்கதேசத்துக்கு அரசனுக்கி, அச்சபையார் அறிய மகுடாபிஷேகஞ் செய்து செங்கோல் ஆழி முதலியவற்றைக் கொடுத்து, இரதகஜ துரகபதாதிகளிலுஞ் சிலது கொடுத்தார். இதனைப் பற் பலருங் கண்டு பிரமானந்த மடைந்தவர்போல் மகிழ் வெய்தினர்கள். மற்றப் பாண்டு மக்களும் புகழ்ந்தார்கள். சபையிலிருந்த அரசரும் முனிவரும் பெரிய அரசர்களிடத்தில் விடை பெற்றுத் தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அந்தரத்தில் வந்து வேடிக்கை பார்த்திருந்த தேவர்களும் தங்கள் தங்கள் யதாஸ்தானம் போய்ச் சேர்ந்தார்கள். இங்கே வீஷ்மர் முதலிய அரசர்கள் தங்கள் பிள்ளைகளின் கல்விப் பயிற்சியைக் குறித்துத் துரோணுசாரியை அநேகவிதமாகத் துதித்து, அவரவர்கள் புத்திர மித்திரர்களோடு தங்கள் அரண்மனைக்குப் போனர்கள்.

### பாஞ்சாலனேடு கௌரவ புத்திரர் உயுத்தம்

கேளும் மகாராஜனே! துரியோதனனும் கர்னனும் சாம்பவ மூர்த்தியும் குபேரனும் போல நேசித்துப் பாண்டு மக்கள் திடுக்கிட உலக முழுவதும் தமதென்று கைக்கொண்டு வாழ்ந்து வருகிற காலத்தில் துரோணுசாரியார் பாஞ்சாலனுடைய சபையிற் கூறிய சபதத்தை மனதில் நினைத்து, அடடா, நாம் புகன்ற சபதம் நிறைவேருவிட்டால் நமக்கென்ன பெருமை! நமது மாணுக்கர்கள் ஆயுதத் திறத்திலும், இரத கஜ துரக மிவைகளிலும், அதிக திறம்பெற்று வல்லமையாளராயிருக்கிறர்கள். இவர்களைக் கொண்டு சபதத்தை நிறைவேற்ற வேண்டுமென்று குருபுத்திரர்களை வரவழைத்து, பல ஆசிகள் வழங்கி, ஓ குருபுத்திரர்களே! என்னிடத்தில் வில்வித்தையைக் கற்றவர்க்கும், முன்னம் சகல அரசர்களுமறிய நீங்கள் வில்லரங் கேற்றியதற்கும், எனக்கு இன்னுஞ் சிலதினத்தில் குரு தக்ஷிணை கொடுக்கப் போகின்றீர்கள்; அஃதெனக்குத் தெரியும் அப்படி வேண்டாம். எனக்கொரு குறைவில்லாமல் உங்கள் பெரியோராதரித்து வருகிறர்கள். ஆதலால், எனக்குக் கொடுக்கும் தக்ஷிணையை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அவ்வாறு செய்வீர்களாகில், அது தான் தக்ஷிணை யென்று சொன்னர். ஓ குரு சுவாமி! அஃதென்னவென்று குருபுத்திரர்கள் வணங்கி வினவ, துரோணுசாரியார், ஓ மாணுக்கர்களே! பாஞ்சாலன் என்னிடத்து வில்வித்தை கற்கிறபோது பாதிராச்சியங் கொடுக்கிறேனென்று சொல்லி, பின்பு இல்லையென்று வாக்குதத்தம் பிசகிப் பேசினதுமன்றித் தன் சபையி லிருந்தவர்கள் நகைக்க என்னைப் பங்கப்படுத்தினன். அப்போது நான் சினங்கொண்டு, என் மாணுக்கரால் உன்னைப் புறங்கொண்டு, மடலோடு மடல் விரியத் தேர்க்காலிற் கட்டி இழுத்து வரச் செய்து, என் சபையில் உன்னைப் பங்கப் படுத்துகிறேனென்று சபதம்பண்ணினேன் என் வாக்கின்படி அந்தப் பாஞ்சாலனேடு போராடி, அவனைத் தேர்க்காலிற் கட்டிக்கொண்டு வந்தால், அச்செய்கைதான் எனக்குமேலான நன்மையுங் குருதக்ஷிணையும் என்று கூற, இதனைக் கேட்ட குருபுத்திரர்கள் நூற்றைவரில் துரியோதனன் முதலாகிய பேர்களெழுந்து துரோணுசாரியை வணங்கி, ஓ ஸ்வாமி! எளியேங்களுக்கு விடை கொடும் அந்தப் பாஞ்சாலனைக் கட்டிக் கொண்டு வருகிறேமென்று சொல்லி, ஆசாரியர் முதலிய பெரியோர்கள் விடைதரப் பெற்றுத் தங்கள் தங்கள் ரதங்களிலேறி இரதகஜ துரக பதாதிகள் புடைசூழப் பாஞ்சாலதேசத்துக்குச் சென்று, துருபதேய னிருக்கும் கோட்டையைச் சூழ்ந்து, வில்லை வளைத்து நாணியேற்றிட்டுப் பாணங்களைத் தொடுத்துச் சிங்கநாதமும் அட்டகாசமுஞ் செய்தார்கள்.

அப்போது கோட்டைக் காவலாளிகள் பயந்து ஓடிவந்து பாஞ்சாலனை வணங்கி, ஓ ஸ்வாமி! யாரோ அத்தினபுரத்து அரசரின் புத்திரர்களாம். நூறு பெயர் இரதகஜ துரக பதாதிகளோடு வந்து, நமது கோட்டை நாற்றிசையிலும் வளைந்து, வில்லை வளைத்துப் பாணங்களைத் தொடுத்து சிங்கநாதத்துடன் அட்டகாசஞ் செய்கிறர்களென்று சொன்னர்கள். பாஞ்சாலன் ஆ! இதென்ன ஆச்சரியம்? திரிமூர்த்திகளும் நமது நகரத்தின்மேல் யுத்தஞ்செய்யக் கிஞ்சித் தஞ்சுவார்களாகில், இந்த

அத்தினபுரத்து அதிபதிகள் எதிர்ப்பார்களோ? ஒருவேளை வீஷ்மர் எதிர்த்தால் எதிர்க்கலாம். அவர் நீதிக்கு மாறுபடமாட்டார். நாமொரு குற்றமுஞ் செய்யவில்லை. அப்படியிருக்க, இப்போது வந்தவர் யார்? இன்னாரென்று அறியாமல் போராடுவது தகுதியல்லவென்று சில தூதர்களை அனுப்பி விசாரித்து வரச் சொன்னான். அத் தூதர்கள் துரியோதனன் சேனாசமுத்திரத்தி னுட்புகுந்து, அவர்கள் படை யெடுத்துவந்த காரணத்தை அங்கிருக்கும் சில பெயர்களாலறிந்து வந்து பாஞ்சாலனை வணங்கி, ஓ ராஜமார்த்தாண்டா! முன்னம் துரோணசாரி கூறிய சபதப்படிக்குத் தங்களைக் கட்டிக்கொண்டு போகத் திருதராஷ்டிரன் புத்திரர்களாகிய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் வந்திருக்கிறார்களென்ன, பாஞ்சாலன் கோபச் சிரிப்புச் சிரித்து, பக்கத்திலிருக்கும் அநேக யுத்தத்திற்கை தேர்ந்து சிறப்புற்றிருக்கிற சோமகேயாதிகளே! சில நாளுக்கு முன் நமது சபையில் ஒரு பிராமணன் வந்து சபதமிட்டான். அந்தச் சபதத்தை நிறைவேற்ற இன்று அத்தினபுரத்துக் கதிபதியாகிய திரிதராஷ்டிரன் புத்திரர்கள் துரியோதனன் முதலாகிய நூற்றுவர்வந்து, நமது கோட்டையை வளைந்து சிங்கநாதம் செய்கிறார்களாம். நீங்கள் சென்று அச்சிறுவர்கள் நமது தேசத்தை விட்டோட்டி வாருங்களென்று செப்பினான். சோமகேயாதிகள் தக்ஷணம் தங்கள் தங்கள் ரதத்திலேறி, நால்வகைச் சேனையோடுஞ் சென்று, குருகுல புத்திரர் திறத்தைப் பார்த்து, இவர்கள் வில்லாளிகளல்லவென்று தீர்மானித்து ஒருதரம் வில்லை வளைத்து நாணேற்றிட்டுச் சில பாணங்களைத் தொடுத்துக் குருகுலமக்களோடு வந்த நால்வகைச் சேனைகளையும் சிதற அடித்து அம்மக்கள் நூற்றுவரையும் வளைத்துக்கொண்டு அநேக பாணங்களைத் தொடுத்து, வில்லை முறித்து, நாணியை யறுத்து, தேரையுடைத்து, குதிரைகளை கொன்று, சாரதியை வெட்டி, மகுடத்தைப் பொடித்து, கவசத்தைக் கிழித்து, உடல் முழுவதும் இரத்தமாக்கிச் சிங்கநாதஞ் செய்தார்கள். அதனால் துரியோதனன் முதலானபேர்கள் சமர் முகம் கண்டறியாதவராகியும் அறியாதவர்களாகியு மிருந்தமையால், இரத்தப் பிரவாகத்தைக் கண்டு மனநடுங்கி, உயிர் பிழைத்தாற் போதுமென்று நினைத்துப் பாதசாரியாய்ப் புறங்கால் புட்டத்திற்பட ஓடி, அத்தினபுரியின் மத்தியில் வந்து திரும்பிப் பார்த்தார்கள்.

### பாஞ்சாலனோடு பாண்டு புத்திரர் உயுத்தம்.

இந்தச்சேதி துரோணசாரி அறிந்து கன வருத்த மடைந்து, மிகுந்த ஆறுமையோடு பாண்டுமக்களை நோக்கித் தமது குறையைச் சொன்னார். அதனைக் கேட்ட பாண்டவரிற் பற்குணன் எழுந்து பாதத்தில் விழுந்து, ஓ ஸ்வாமி! நீங்களேன் வருத்தப்படுகிறீர்கள்? என் பெரிய பிதாவின் புத்திரர்கள் வெற்றி பெறுகிறோமென்று சென்றமையால் நான் சும்மாயிருந்தேன். இதோ நானொருவனும் போய் அந்தப் பாஞ்சாலனைக் கொண்டுவருகிறேனென்றான். துரோணசாரி பற்குணனை வாழ்த்தி, அப்பா சுகுணபூஷணா! எவ்விதத்திலேனும் என்னெண்ணத்தின்படி வெற்றி பெற்று வருவையாகில் என்றும் நன்றியுள்ளனாயிருப்பேனென்று ஆசீர்வதித் தனுப்பினார். பற்குணன் குருவை வணங்கி விடைபெற்று, தன் மூதாதையாகிய வீஷ்மரை வணங்கி, அவருடைய ஆசீர்வாதத்தையும் ரதத்தையும் வாங்கிக்கொண்டு, தன் தம்பியாகிய நகுலனைச் சாரதியாக அழைத்து, இரதகஜதுரகபதாதிகளோடு அத்தேரிலேறிச் சென்றான். இதற்குள் தருமராசன் வீமராசனை அழைத்து, தம்பி வீமா! பற்குணன் தனியே போகிறானாதலால் நீ படைத்துணை செல்லென்று பகர, வீமன் விதுரனை வணங்கி அவன் ரதத்தை வாங்கிக்கொண்டு அதிலேறி சில சேனையோடு சென்று பற்குணனுடன் கலந்தான். வடவாமுகாக்கினியும் ஊழிக்காற்றும் ஒன்றாக்கூடினாலெப்படியோ? அப்படி பற்குணனும் வீமனுங் கூடி யப்பாஞ்சால தேசத்துக்குச்சென்று, பாஞ்சாலன் கோட்டையை அணுகி மேற்புறத்திற் பற்குணனும் கீழ்ப்புறத்தில் வீமனும் சூழ்ந்து, வில்லைவளைத்து நாணியேற்றிட்டு நகரிலுள்ளவர்கள் திடுக்கிட்டலறிப் பதறக் குணத்தொனிசெய்து, சிங்கநாதத்துடன் அட்டகாச முதலானவைகளைப் பண்ணினார்கள். காவலாளிகள் கடிகியோடிவந்து பாஞ்சாலனை வணங்கி, ஓ ஸ்வாமி! இந்திர நீலம்போல் தேககாந்தியையுடைய ஒருவர் மேற்கு வாசலிலும், காத்திரமான தேகத்தையுடைய யமனைப்போல் ஒரு திவ்ய புருஷன் கிழக்குவாசலிலும் வந்துவளைந்து, சிங்கநாத அட்டகாசஞ் செய்கிறார்களென்று சாற்ற, பாஞ்சாலன் நகைத்து, தன்னருகிலிருக்கிற சோமகேயாதி

களை நோக்கி, ஓ சோமகேயாதிகளே! முன்னம் வந்தவர் திரிதராஷ்டிரன் புத்திரர் இப்போது வந்தவர் பாண்டுபுத்திரர். தேவபிண்டம். ஆதலால், மிகுந்த எச்சரிக்கையோடு யுத்தஞ் செய்யவேண்டும். முன்னம் மேல் வாசலில் வந்திருக்கிற பற்குணனோடு நீங்கள் சென்று யுத்தஞ்செய்யுங்கள் பின்பு யான்வருகிறேனென்று விடைகொடுத்து, மந்திரி முதலானவர்களை நோக்கி, ஓ மந்திரிமார்களே! நீங்கள் நமது சேனையோடும் கீழ்வாசலிற் சென்று, அங்கு வந்திருக்கிற வீமனோடு யுத்தஞ் செய்யுங்களென்று, ஸ்நானசந்தி முதலிய பூசைகளை முடித்துப் போசனஞ்செய்து மகாகுண்டல ஆரகேயூர கடககங்கணமுதலாகிய ஆபரணாலங்கிர்தனாகி முதுகில் அம்பு புட்டிற் கட்டி, வில்லெடுத்துக்கொண்டு வெளியில் வந்தான். அதற்குள் சாரதி ரதத்தைத் திட்டமாகக் கொண்டுவந்தான். அதிலேறி மேலைவாயலை நோக்கி வருகிறான்.

இங்கே முன்னே புறப்பட்ட சோமகேயாதிகள் அரசன் கட்டளைப்படி ரதாரூடராய் மேலைவாசலுக்கு வந்து, அங்கும் பற்குணனை நோக்கி அவன் தேககாந்தியையும் சுந்தரத் தையும் நிற்கிற திறத்தையுங் கண்டு வியப்புற்று, தங்கள் தங்கள் வில்லைவளைத்து நாணியேறிட்டு விற்குணத்தொனி செய்து திவ்விய பாணங்களைத் தொடுத்து சிங்கநாதஞ் செய்தார்கள். பற்குணன் அவர்கள் தொடுத்து விட்ட பாணங்களையெல்லாம் அறுத்துவிட்டு அநேக பாணங்களைவிடுத்து அவர்களை நோகச் செய்தான். சோமகேயாதிகள் கனவருத்தமடைந்து, அடடா! இவனோ சிறுவன். நாமோ அநேக யுத்தத்திற் கைதேர்ந்து பெருமையுற்று எவற்றிலும் பெரியோரென்று பெயர் பெற்றிருக்கின்றோம். இச்சிறுவன் பாணமெடுக்கிறதும் தொடுக்கிறதும் தெரியவில்லை. அதிக சாதுரியமாகப் பாணங்களைப் பிரயோகிக்கின்றான். இவனோடு கிஞ்சித்து சாக்கிரதையாகவே இருந்து போராடவேண்டுமென்று சோணமாரி பெய்வதுபோற் பாணமாரி பொழிந்தார்கள். அம்மாத்திரத்திற் பற்குணன் தனது ஒரு பாணத்தால் அச்சரங்களை யெல்லாம் நடுவது பாதியிற் கண்டதுண்டமாகச் செய்து, ஓர் நொடிபோதில்1-10-100-1000-10000-கோடி-சதகோடி-சங்கம்-மஹாசங்கம் என்னும் அளவுக்கதிகப்படும் பாணங்களை எடுத்துத்தொடுத்து, தேரைச் சக்கைச் சக்கையாகப் பேர்த்தெறிந்து கொடியையறுத்து, குடையை முறித்து, குதிரைகளைக்கொன்று, சாரதிகளை வெட்டி, வில்லை நறுக்கி, நாணியை யறுத்து, கவசத்தைப் பொடியாக்கி, மார்பைப் பிளந்து, உடல் முழுதும் ரத்தமயமாக நனைந்து, ரதகஜதுரக பதாதிகளைக் களைந்து, மேலுமேலும் சரங்களைப் பொழிந்து யாவரையுங் கண்டதுண்டமாக்கினான். சோமகேயாதிகள் ஸ்மரணை தப்பி, வில்லின் மேலும் மற்ற ஆயுதங்களின்மேலுஞ் செல்லுங் கருத்தைவிட்டு அவசமடைந்தார்கள், பலர் பின்னிட்டோடினார்கள், சிலர் வெந்திட்டாடினார்கள், பலர் தத்திக்கெட்டுத் தடுமாறிச் சென்றார்கள், சிலர் விக்கிக்கக்கித் தங்கள் அரசனை நோக்கி நின்றார்கள். இதற்குள் பாஞ்சாலனும் வந்துவிட்டான்.

பற்குணன் பாஞ்சாலனைக் கண்டு, அடடா!! இவன் குருத்துரோகி இவனைச் சித்திரவதைசெய்து கொல்லவேண்டும் நமது குரு இவனைக்கொல்லாமற் கட்டிவரக் கட்டளையிட்டிருக்கிறதினால், மரணாவஸ்தைக்குச் சரியான வருத்தத்தை இவனுக் குண்டாக்கவேண்டும். ஒருவேளை ஓடிப்போனாலும் போவான் இவனை விடக்கூடாதென்று கருமணலை வாரி இறைத்தாற்போற் பாணங்களைத் தொடுத்து தேரை அசையவொட்டாமற் றடுத்துச் சரக்கூடம் போட்டான். இதனை அக்கினி கோத்திர முனிவரிடத்தும் துரோணாசாரியிடத்தும் வில்வித்தையைக் கற்று மிகுந்த திறமுடைத்தாகி அநேக யுத்தத்திற் கைதேர்ந்து சிறப்புற்றிருக்கிற பாஞ்சாலன் கண்டு அதிக சினங்கொண்டு, போர் முகத்துக்குரிய கார்முகத்தை வளைத்து நாணியேறிட்டுக் குணத்தொனி செய்து, பிறைமுகப் பாணங்களிற் சில பாணங்களைத் தொடுத்து, அமோகமான பாணங்களைப் பற்குணன்மீது தூண்டினான். பற்குணன் அந்தப் பாணங்களி லொன்றையாகிலும் விடாமல் ஒடித்து, வேறே சில திவ்ய பாணங்களை யெடுத்துத் தொடுத்தான். அப்பாணங்கள் வெளிப்பட்டு வந்து பாஞ்சாலனை நோகச்செய்தன. அதனால் அவன் உடல் வருந்தி உக்கிரங்கொண்டு மீண்டும் அளவற்ற கணைகளைத் தொடுத்தான். இக்கணைகளால் இந்திரன் குமாரனாகிய விஜயன் மிக வருத்தமடைவானென்று யாவரும் பேசிக்கொண்டிருக்கையில், பற்குணன் அப் பாணங்களை யெல்லாம் நடுவது பாதியிற் கண்டித்து இவ

ஞேடு இந்நேரம் வரைக்குமா போராடுகிற தென்று மூலாக்கினியை மூட்டிக் கோலாகலக் கணைகளை மாட்டி அவன் வில்லை ஒடித்து சில பாணங்களால் தேரைக் குடையைக் கொடியைக் குதிரைச் சாரதியை இன்னுமுள்ளவைகளை யெல்லாம் அறுத்துத் தள்ளி, பின்னும் அநேகக் கணைகளைப் பிரயோகித்து மயிர்க்காலுக்கு மயிர்க்கால் தைக்கும்படி செய்து, அவனணிந்திரா நின்ற மகர குண்டல ஆர கேயூர கடககங்கண முதலாகிய ஆபரணங்களையும் கவசத்தையும் பொடியாக்கினுன்.

பாஞ்சாலன் பற்குணனுற் கட்டுப்படல்.

இதனுற் பாஞ்சாலன் பிரமை கொண்டு ஒன்றுந் தோன்ருமல் மனங்கலங்கிச் சித்திரம் போல் அசைவற்றிருக்கிற தருணத்தில் பற்குணன் தன் தேரை அவனருகில் நடத்திப் பாஞ்சாலன் தேறிற் குதித்து, தனது விஜய வில் நாணியால் அவனை மடலோடு மடல் விரியக் கட்டித் தன் தேர்க்காலிற் சேர்த்துச் சிங்கநாதஞ் செய்தான். இவனைக் கண்ட சோமகேயாதிகள் பற்குணன்மேல் விழுந்து, அனேக பாணங்கள் அழுந்தத் தொடுத்தார்கள். பார்த்தன் அக்கணைகளைக் கண்டதுண்டமாக்கி அவர்களையும் ஓடும்படி அடித்து, தன் ஜயத்தைச் சங்கத்தாற் கிழக்கு வாசலில் இருக்கும் வீமனுக்குத் தெரிவித்தான். வீமன் தன்ஞேடு வந்தெதிர்த்த வீரரை யெல்லாம் புறங்கண்டு, வெற்றிகொண்ட சங்கத்தொனி கேட்ட தக்ஷணம் அர்ச்சுனனிடத்து வந்தான். பின்பு இருவரும் கூடிக்கொண்டு கட்டின கட்டோடு பாஞ்சாலனை அத்தினபுரத்துக்குக் கொணர்ந்தார்கள். இந்தச்சேதி துரோணரறிந்து, வீஷ்மர்-திரிதராஷ்டிரன் கிருபாசாரி-மந்திரிகள்-பிரதானிகள்-வேதவேதியர்கள்-நாட்டில் நகரிலுள்ளவர்கள் யாவரையு மழைத்து வந்து, சிலம்பக் கூடத்திற் சபைகூட்டி, பற்குணன் வரவுக் கெதிர் பார்த்துக்கொண் டிருக்கும் போது விற்குணத்தொனியுடன் ரதத்தை அதிவேகமாகச் செலுத்தித் துரோணசாரியின் அரண்மனையின் அருகில் வந்து தேர்விட்டிரங்கி, பாஞ்சாலனைக் கட்டினகட்டோடு கொணர்ந்து துரோணசாரியை வணங்கச் செய்து, தானும் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தான்: சபையிலிருக்கிற பெரிய அரசர்களும் மற்றவர்களும் பாஞ்சாலனைக் கட்டிக்கொண்டு வந்த பற்குணனைப்பார்த்து மகிழ்ந்து புகழ்ந்தார்கள். துரோணசாரி நமஸ்காரஞ் செய்த பற்குணனை வாரித்தழுவி மடிமீதிருத்தி பல ஆசிகள்கூறி சொல்லுகிறுர். அப்பா பற்குணு! அன்று முதலைவாயிற் சிக்கி வருத்தமடைந்த போது கஜேந்திர வரதன்போல் வந்து அம் முதலையைக் கொன்று என்னைப் பிழைக்கச் செய்தாய். இன்று எனக்கொப்பாகிய வன்மையுடைய பாஞ்சாலனைக் கட்டிவந்து என் சபதத்தை நிறைவேற்றினுய். உனக்கு நீயே ஒப்பன்றி வேறு ஒப்பானவர்கள் எவ்வுலகத்திலுமில்லையென்று பலவாறு கொண்டாடி, கட்டோடு நிற்கிற பாஞ்சாலனை நோக்கிச் சொல்லுகிறுர்.

அடா பாஞ்சாலா! ஆதியில் அக்கினி கோத்திர முனிவரிடத்து வில்வித்தை கற்கிற போது என்னிடத்துஞ் சில வித்தைகளைக் கற்று, மகுடாபிஷேகம் பெற்று நான் வாழுங் காலத்திற் பாதிபூமி கொடுக்கிறே னென்று சொன்ன சொற்றப்பி, நானே வந்து கேட்கும் போதும் என்னேடு அன்புடன் வசனிக்காமல் கடுஞ்சொல் வழங்கினதுமன்றி வாக்குதத்தத்தை நிறைவேற்ற மனமில்லாதவனுயவனெஞ்செய்தாயல்லவா! அன்று நான் சினங்கொண்டு என் மாணாக்கரால் உன்னைத் தேர்க்காலிற் கட்டி என் சபையில் இட்டுவரச் செய்து பங்கப்படுத்துகிறே னென்று ஒரு சபதம் செய்திருந்தேனே அச்சபதம் இன்று நிறைவேறிற்று. நீ செய்த வாக்குச் சுவாதீனமாயிற்று. இனி அப்பூமிக்கும் உனக்கும் சம்பந்தமில்லை இப்போதும் நான் உன்மீது கிருபையுற்று, எனக்கு ஸ்வாதீனமாகிய பாஞ்சால தேச முழுமையும் என்பங்கு பாதிபோக, மற்றபூமியைத் தயாதர்மத்திற்கு உனக்குக் கொடுக்கின்றேன். அதுவுமன்றி உன்னுயிரும் வாழ்வும் உதவினேன் நீ இவற்றைக்கொண்டு முன்போலவே அரசுசெலுத்தி, என் பாதி பூமிக்குங் கப்பங் கட்டிவாவென்று கூறிப் பற்குணனை நோக்கி, அப்பா குழந்தாய்! இப்பாஞ்சாலன் செய்த குருத் துரோகத்திற்குத் தண்டனை இம்மட்டிற் போதும் இனி அவனைக்கட்டியிருக்கிறகட்டை அவிழ்த்துவிடென்று கட்டளையிட்டார். பற்குணன் உடனே அன்போடு அவிழ்த்துவிட்டான். பாஞ்சாலன் கைகால்களை யுதறி, இராச சபையையும் துரோணசாரியையும் பார்க்க வெட்கமுற்று நாணி யிருந்தான். அக்குறிப்பை வீஷ்மரறிந்து ஓ பாஞ்சால தேசாதிபதி! க்ஷத்திரியராய் பிறந்தவர்கள் ஒருவர் கையிலொருவர் இழிவடைந்தால், வந்த இழிவை

நோக்கி வருத்தப்படாமல் இழிவு செய்தவனை வெற்றி பெறுகிற காரியம் எதுவோ அதனை நாடி யோசிக்கத்தக்கது. ஆதலால் நாம் சிறுவனால் கட்டுப்பட்டோமே யென்று மனவருத்த முறாமல் இனி நடக்கவேண்டிய முயற்சி எதுவோ அதன்மேற் கருத்தைச் செலுத்தென்றார். பாஞ்சாலன் திடுக்கென் றெழுந்து, சபையிலிருக்கிற பெரியோர்களையும் மற்றவர்களையும் நோக்கி, கேளுங்கள் சபையாரே! இந்தத் துரோணர் துறவறத்தை அடைந்தும், சிறுவனாகிய யான் செய்த குற்றத்தை மன்னிக்காமல் ராஜசபையில் என்னை அவமானப் படுத்தினாரல்லவா? இவரைக் குறித்து நானொரு சபதம் செய்கிறேன். அஃதென்னில் என்னை இவ்வாறுகண்ட இத்துரோணருயிரை வாங்க ஒரு புத்திரனையும், என்னுடன் கார்முகத்தை வளைத்துப் போர்முகத்தி லெதிர்த்து யுத்தஞ் செய்து வெற்றி பெற்று வந்த சிறுவனுக்கு ஒரு பெண்ணையும் பெறுகிறேனென்று சபையாரறியச் சபதங்கூறி, மலைப்போன்ற தேரிலேறி இராகு விழுங்கி யுமிழ்ந்த மதியம் போல் தனது நகரத்தினை நோக்கிச்சென்றான்.

### பாஞ்சாலன் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்தல்.

இங்கே குருகுல சிகாமணிகளாகிய நூற்றுவரும் பாண்டுமக்களும் பெரிய அரசர்கள் முதலாகிய பெயரும் துரோணரை வணங்கித் தங்கள் தங்க ளிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். அங்கே பாஞ்சாலன் தன் நகரத்திற் சென்று, மந்திரி முதலானவரை அழைத்துத் தன் முத்திரை மோதிரத்தை அவர்கள் கையிற் கொடுத்து, ஓ மந்திரிமார்களே! நானும் என் மனைவியும் வனத்திற்குச் செல்கிறோம். நீங்கள் நானிருந்து எவ்வண்ணங் காத்துவந்தேனோ அவ்வாறு பிரஜைகளைக் காப்பாத்தி வாருங்களென்று கட்டளையிட்டு, மனைவியை அழைத்துக்கொண்டு காட்டிற் சென்று, பற்பல பெரியோர்களை யடுத்துச் சில மந்திரோபதேசங்களைப் பெற்றுத் தவஞ் செய்து, இன்னும் மேலான முனிபுங்கவர்களுடைய தரிசனமாக வேண்டுமென்று வனங்கடோறும் திரிந்து வருகிறபோது, ஒரு வனத்தில் அழிவில்லாத தவசிரேஷ்டர்களாயும் திவ்யக்கியானிகளாயு மிருக்கிற உபையாசன்-யாசன் என்று இரண்டு முனிவர்களிருந்தார்கள். அவர்களிடத்துப் பாஞ்சாலனும் அவன் மனைவியுஞ் சென்று வணங்கினார்கள். அவ்விருவரும் நீங்கள் யார்? இவ்வனத்தில் வந்த காரணமென்ன? என்று வினவ, பாஞ்சாலன் தன்னூர் பெயர் முதலியவற்றை யெடுத்தோதி, துரோணச்சாரியரால் தனக்கு நேரிட்ட துன்பத்தைச் சொல்லி, அவரைக் கொல்ல ஒரு புத்திரனும், அந்தத் துரோணச்சாரி சபதத்தை நிறைவேற்ற என்னோடெதிர்த்து யுத்தஞ்செய்து வாலிபன் தோளுக்கிசைய ஒரு புத்திரியும் பெறவேண்டுமென்று கருதிப் பெரியோர்களுடைய தரிசனஞ் செய்து வருகிறேன். அக் கருத்தை நிறைவேற்றத் தங்களால்தான் முடியுமென்று உண்மையாய் நம்பி வணங்கினேனென்றிணங்க, இரண்டு முனிவரும் பாஞ்சாலன் கூறியவற்றிற் கிசைந்து, ஓ பாஞ்சால தேசாதிபதி! நீ கருதியிருக்கிற புத்திர பாக்கியம் புத்திரகாமேஷ்டியாகம் செய்தால்தான் நிறைவேறுமென்ன, அரசனதற் கிசைந்து, சில தூதர்களைப் புத்திரகாமேஷ்டி யாகத்துக் குரிய திரவியங்களை அனுபவிக்கச் சொல்லி மந்திரிகட்குக் கட்டளையிட, அப்படியே தூதர்கள் மந்திரிகளுக் கறிக்கையிட, மந்திரிகள் புத்திரகாமேஷ்டி யாகத்துக்குரிய திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு, தாங்களும் வந்து அரசனைக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தார்கள். அரசன் வணங்கிய மந்திரிகளை ஆதரித்துவந்த யாக திரவியங்களைக் கண்ணுற்று, முனிவரிடத்துச் சென்று நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமிகளே! புத்திரகாமேஷ்டி யாகத்துக்குரிய திரவியங்கள் வந்திருக்கின்றன. இனி தாங்கள் எழுந்து அந்த யாகத்துக்குத் தகுந்த முயற்சி செய்ய வேண்டுமென்று வணங்க, முனிவர்கள் எழுந்து, விசாலமான ஒரு இடத்தைப் பார்த்து அவ்விடத்து நின்று, அரசனுடைய மனிதர்களால் யாககுண்டம் வெட்டுவித்து, அருகில் வேதிகைபோட்டு வேத விதிப்படி யாகசாலையைப் புதுக்கி, நல்ல சுப முகூர்த்தத்திற் பாஞ்சாலனையும் அவன் மனைவியையும் ஸ்நானஞ் செய்வித்து, யாகசாலையில் உட்கார வைத்து யாகதீக்ஷை செய்து, வேதவிதிப்படி யாகத்தைத் தொடங்கி, மந்திரத்தை யுச்சரித்து, அக்கினியை யுண்டாக்கி ஓமம் வளர்த்தி அரசனால் நெய்யைச் சொரிவித்து, தூபதீப நைவேத்தியத்துடன் சாங்கமாக யாகத்தை நடத்தி வருகிறபோது, அந்த ஓமகுண்டத்தின் அக்கினிச் சுவாலையிற் பிண்டத்தோடு ஒரு பொற்றட்டு தோன்றிற்று. அவ்வாறு தோன்றிய யாகபிண்டத்தை இரண்டு முனி

வரும் எடுத்து, அரசன் மனைவியை அழைத்து அவள் கையிற் கொடுக்கிற தருணத்தில் பூப்பாயினள்.

துஷ்டத்தூய்மன் திரௌபதி இவர்களுற்பவம்

அதுகண்ட அரசன் அடடா! இதென்ன விபரீதம்? பிண்டம் புசிக்குந் தருணத்தில் மனைவி பூப்பாயினுளென்று கனவருத்த முற்ருன். முனிவரும் அரசனை நோக்கி, ஓ அரசனே! நீ அஞ்சாதே, இப்பிண்டம் பழுதாகாது இதோ யிருக்கிற ஓமகுண்டத்திற் போடுவோம் அதிற்றுனே உன் கருத்தின்படி ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் தோன்றுவார்களென்று மற்றொரு மந்திரத்தைச் செபித்து அப்பிண்டத்தை ஓமகுண்டத்திற் போட்டனர். போட்டவுடன் அதில் நின்று மகரகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய ஆபரணலங்கிர்தனுகி, விற்பிடித்த கரமும் - முடி பொறுத்த சிரமும் - வயிரக் கவசத்தை யணிந்த மார்பும் விளங்க, சொர்ன நிறமாகிய ரதத்திற் சிங்கக்குட்டியைப்போல ஒரு சிறுவனுதித்தவுடன், ஒற்றைச் சக்கரத்தையுடைய ரதத்திலேறி உதயகிரியிற் றேன்றும் ஆதித்தனை நோக்கிய தாமரைகள் எவ்வாறு நன்னிறங்கொண்டு மலருமோ? அவ்வாறு அங்குள்ளவர்கள் மனதில் மகிழ்வுற்று இமைக்கா நேத்திரத்தைப் பெற்றவராகிப் பார்த்திருந்தார்கள். புத்திரன் தேரோடும் வெளியில் வந்தான். பாஞ்சாலன் தன்னருகி லிருக்கிற மந்திரிகளை நோக்கி, ஓ மந்திரிமார்களே! அநேக நாளாகப் புத்திரபாக்கிய மில்லாமல் வருத்தமடைந் திருந்ததுவுமன்றி, என்னைப் பங்கப்படுத்தின துரோணரை வதைக்கக் கருதி அதற்காகவும் ஒரு வருத்தங்கொண்டிருந்தேன். இவ்விரண்டு வருத்தமும் நீங்கப் புத்திரனுதித்தான். இனி நீங்கள் நமது நகரத்துக்குத் தெரியப்படுத்திப் பட்டணத்தை அலங்கரிக்கச் செய்து, இயாவரையும் வெகு பெருநாள் கொண்டாடும்படி செய்வீர்களென்றுக் கட்டளையிட, மந்திரிகள் தூதுவர்களால் நகரத்தாருக்குத் தெரியப்படுத்தினுர்கள். நகரத்தார் பெருமகிழ்வுற்றுத் தெருக்களில் தோரணங்கள் தூக்கி அலங்கரித்து, நகரிலுள்ளவரும் அந்நகரத்திற் குட்பட்ட நாட்டுகளிலுள்ளவரும் களித்துப் பெரும்பண்டிகை கொண்டாடினுர்கள்.

இங்கே உபையாசன் யாசனென்கிற இருவரும் மற்றொரு பிண்டத்தை ஓமகுண்டத்தி லிட்டார்கள். இட்டவுடன் மின்னலைப் பழிக்கு மருங்குலையும், வேயைப்பழிக்குந் தோள்களையும், பொன்னைப்பழிக்கு மேனியையும், பூவைப் பழிக்கும் பதத்தினையும் உடைத்தாய், கோகனத்தி லுதித்த ஸ்ரீ மகாலட்சுமியைப்போல் ஒரு பெண் பிறந்தாள். உடனே ஒரு வில்லும் பிறந்தது. இப்பெண் பிறந்தபோதே ஆகாயத்தி லிருந்து, "மண்மே லொருத்தி யரக்கர்குல மாளப்பிறந்தாள் வாமனுதற், கண்மேனின்று மிவள் பிறந்தாள் கழற்காளலர் தங்குலமுடிப்பா, ளெண்மேலென்கொலினி" என்று ஒரு சொல்லுப் பிறந்தது. அதென்னவெனில், முற்காலத்தில் ராக்ஷதர் குலத்தை அதமாக்கச் சீதையென்று ஒரு பெண் பிறந்தாள். இன்று சாம்பவமூர்த்தியின் நெற்றிக் கண்ணிணையொத்த ஓமத்திலே இவள் பிறந்தாள். இக் கன்னிகை வீரகண்டாமணியைத் தரித்து வீராஜ்ய சிங்கம்போல் விளங்கும் அரசர்களையெல்லாம் அதமாக்குவளென்பதாம். இதன்றிப் புத்திரனுக்குத் துஷ்டத்தூய்மனென்றும், புத்திரிக்குத் திரௌபதை யென்றும் பெயரிடுங்களென்று ஒரு வாக்கியமு முண்டாயிற்று. பாஞ்சாலன் முன் பிறந்த புத்திரனது புஜபல பராக்கிரமத்தையும், பின்தோன்றிய புத்திரியினது ரூப சவுந்திரியத்தையுங் கண்ணுற்று, நமது எண்ணத்துக்குத் தகுதியானவர்கள்தா னென்று மனதில் மதித்து, நம்மைப்போல் புண்ணியவான்க ளில்லையென்னுஞ் சந்தோஷத்திலழுந்தி, புத்திர பாக்கியத்தை யளித்த முனிவரிருவரையும் வணங்கி அவர்கள் மகிழ்வெய்தத் துதித்து, அவர்கள் கூறிய ஆசீர்வசனத்துடன் விடைதரப் பெற்று, புத்திரியையும் புத்திரனையும் மனைவி மந்திரிமார் முதலானவர்களையு மழைத்துக்கொண்டு தன் நகரஞ் சேர்ந்து, இராஜவீதியை வலமாகவந்து தனது அரண்மனையிற் சேர்ந்தான்.

துஷ்டத்தூய்மன் துரோணரையடைந்து
வில்வித்தை பயிற்றல்

துஷ்டத்தூய்மன் நாலுவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றை யோதியுணர்ந்து, தன் குலவித்தையாகிய தநுர்வேதத்தையும் வில்லின் அப்பியாசத்தையும் கற்க விரும்பித் தந்தையிடத்து வந்து வணங்கிச் சொல்லுகிறுன். ஓ ஐயா! எனக்கு வில்வித்தையைக் கற்றுக்கொடுப்பதற்குத் துரோணுச்சாரியரே யல்லாமல்

மற்றொருவ ரில்லையாதலால் அவரிடத்திற்
சென்று வில்வித்தையைக் கற்று வருகிறேன்
விடை கொடுமென்று வேண்ட, பாஞ்சாலன்
நகைத்துச் சொல்லுகிறான். அப்பா மகனே!
அந்த துரோணரைக் கொல்லுவதற்காகவே
உன்னைப் பெற்றேன். நீ அவரிடத்திலேயே
சென்று வில்வித்தையைக் கற்கப் போகிறே
னென்றது வெகு நேர்த்தி! வெகுநேர்த்தி! நீ
யவரிடத்துஞ் செல்லலாமா? சென்றாலும்
அவர் வித்தையைக் கற்பிப்பாரா வென்றான்.
அதற்குத் துஷ்டத்துய்மன் தந்தையை
வணங்கி, ஓ ஐயா! நீர் தளர்வுறுதீர் எனக்கு
விரைவில் விடைகொடும். நான் சென்று என்
மேல் அவருக்கு மனம் வரும்படி பணிவிடை
செய்து வில்வித்தையைக் கற்று வருகிறே
னென்று வேண்ட, பாஞ்சாலன் சம்மதித்து
விடை கொடுத்தான். துஷ்டத்துய்மனென
வன் விடைபெற்றுக்கொண்டு அத்தினபுரம்
வந்து, துரோணரைக்கண்டு வணங்கி, தன்
பெயரையும் தந்தை பெயரையும் சொல்லி,
தான் நாடிவந்த கருத்தையும் நவின்றான்.
துரோணாசாரி நகைத்து, அடடா! இச்சிறு
வன் பாஞ்சாலன் புத்திரன் பாஞ்சாலன் நம்
மைக் கொல்லப் புத்திரகாமேஷ்டியாகம்
செய்து இப்புத்திரனைப் பெற்றான். இப்புத்
திரன் நம்மிடத்தில்தானே வில்வித்தையைக்
கற்க நாடிவந்தான். இவனுக்கு நாம் கற்பிக்
காமற் போனோமேயாகில் இச்சிறுவனுக்குப்
பயந்து துரோணர் வில்வித்தையைக் கற்பிக்க
மனமில்லாதிருந்தாரென்று ஒரு அபவாதம்
கிடைக்கும். ஆதலால், தெய்வகதியை ஒரு
வரால் தடுக்கக்கூடாது நாமுண்மையாக வஞ்
சனையின்றி வில் வித்தையை கற்பிக்கத்தான்
வேண்டுமென்று மனதில் மதித்து, வணங்கி
யிருந்த துஷ்டத்துய்மனை ஆதரித்து ஆசீர்
வதித்து, அப்பா துஷ்டத்துய்மா! உன் கருத்
தின்படியே வில்வித்தையைக் கற்றுக்கொள்
ளென்று தநுர்வேதவிதி பிசகாமல் எல்லா
வித்தையையும் பூரணமாய்க் கற்பித்தார்.
துஷ்டத்துய்மன் அவையனைத்தையும் ஐயந்
திரிபு அறியாமையறக் கற்று, குருவாகிய
துரோணாசாரியின் கிருபையைப்பெற்று தன்
நகரம்வந்து சேர்ந்து ராசகாரியங்களைப் பார்
வையிட்டுச் சுகமாக வாழ்ந்து வருகின்றான்.

### பரிமளகந்தி பரமபத மடைதல்

இங்கே திருதராஷ்டிரன் புத்திரர்களா
கிய நூற்றுவரும், பாண்டுமக்களாகிய ஐவரும்
அரசர்களெல்லா மதிக்கத்தக்க திறத்தினை
யுடையவராகி வளர்ந்து வருகிற காலத்தில்,
என் குருவாகியும் இந்தப் பாரதமாகிய ஐந்
தாம் வேதத்தை முந்திச் செய்தவராயுமிருக்
கிற வேதவியாசர் திரிகால வர்த்தமானங்களையு
முணர்ந்த திவ்யக்ஞானி யாகையால், குருகுல
மக்களா லினிமேல் நேரிடும் கெடுதியை யுணர்
ந்து, இனி நாம் சும்மாயிருப்பது தகுதியல்ல.
திருதராஷ்டிரன் புத்திரரும் பாண்டு புத்திர
ரும் விரோதப் படுவார்கள். அவ்வேளையில்
நமது தாயாகிய பரிமளகந்தி ஏதாவது ஒன்று
சொல்லுவாள் அவ் விருதிறத்தாரில் துரியோ
தனன் முதலானவர்கள் அச் சொல்லின்படி
நடக்கப் போகிறதில்லை. அதனால் நமது
தாய்க்கு இழிவு வருகிறதுமன்றி அவர்களோ
டிருந்தாற் சம்பந்த தோஷத்துக்குள்ளாவாள்
நம்மை யீன்ற மாதா குற்றமுடையவளாத
லால் நன்கல்ல வென்று மதித்து அத்தின
புரத்திற்கு வந்து, பரிமளகந்தி யிருக்கும்
அந்தப்புரத்துட் சென்று, தாயைக் கண்டு
சாஷ்டாங்கமாக வணங்கி, ஓ அம்மணி! இவ்
வுலகத்தில் அளவற்ற காலமிருந்தாலும் காம
வின்ப மொன்றே யன்றி ஆத்ம லாபமில்லை.
ஆதலால், பெரியோர்கள் தேகாபிமானத்தை
மேற்கொள்ளாமல் ஆன்மலாபத்தை அபிமா
னித்து லோக வியாபாரத்திற் சென்றபோ
தும், சோர நாயகியின் மனம்போலவும், திந்
திருணியோடு போலவுந், தங்கள் மனதை
அவ்வாத்ம லாபத்துக் கேதுவாகிய சைதன்
னியனிடத்துச் செலுத்துவர். காயமோ நிலை
யல்ல, ஞாயமோ பலமல்ல, தாயே! இனி நீர்
இவ்வுலக வாழ்க்கை விட்டுத் தவவேடங்
கொள்ளத்தக்கதே; திரிதராட்டிரன் புத்திர
ரும் பாண்டு மக்களும் விரோதப்பட்டுக் கடும்
போரிடப் போகிறார்கள். அதனைத் தாங்கள்
பார்வை யிடுவது தகுதியல்ல. சந்திரவமிசம்
யயாதி முதற் சந்தனு வரைக்கும் மநு நீதிக்கு
வழுவில்லாமல் நடந்து வந்தது. இனி மநு
சாஸ்திரம் துரியோதனனுடைய க்ஷாத்திரத்
துக்கு முன்னிற்காது தாங்கள் விரைவில் ஆத்ம
லாபத்தைத் தேடிக்கொள்ளுந் தாயேயென்று
வணங்கி வருந்திப் பரிமளகந்தி வணங்கிய
மகனைத்தழுவி ஆசீர்வதித்துப் புத்திரனுரைத்
ததற் கிசைந்தாள். வியாசர் அன்னைக்கு
மறுமை லாபம் கிடைக்கச் சில மந்திரங்களை
யுபதேசித்து, தவத்துக்குச் செல்லுந் தாயே
யென்று வணங்கி விடைபெற்றுத் தமதிருப்
பிடம் போய்ச் சேர்ந்தார். பரிமளகந்தி தன்

மருமக்கள் மாராகிய அம்பிகை அம்பாலிகை என்னு மிருவரையு மழைத்து, யான் தவஞ் செய்து மறுமை லாபமடைய வனத்திற்குச் செல்கிறேன் உங்கள் கருத்தென்னவென இரு வரும் வணங்கி, ஓ அத்தாய்! கணவன் இறந்த போதே இக்காயத்தை விரும்பாமலிருந்தோம் தங்களா லிதுவரைக்கும் இக்காயத்தைச் சுமந் தோம் தாங்கள் தவத்துக்குச் செல்கிறபோது எங்களுக்கு இவ்விடத்தில் வேலை யென்ன? தாங்களும் கூட வருகிறோ மென்கிறார்கள். பரிமளகந்தி மருமக்கள் மார்களையு மழைத் துக்கொண்டு வீஷ்மர் முதலானவர்களிடத்து விடை பெற்று, அவர்கள் கண்ணுங் கருத் தும் தங்களுக்குத் துணையாக வரக் காட்டிற் சென்று அருமையான தவத்தைச் செய்து, மூவரும் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தங்கள் தேகத்தை நீங்கி, எக்காலத்தும் அழிவில்லாத பேரின்பத்தைக் கொடுக்கும் பரமபதத்தை யடைந்தார்கள்.

### தருமனுக்கு இளவரசு பட்டங் கட்டுதல்

அஸ்தின புரத்திற்கு குருகுல மக்கள் நூற்றைவரும் பிறைவளர்வது போல் வளர்ந்து வருகிற காலத்தில், தருமராசன் அன்புடைமை-ஒழுக்கமுடைமை-இனியவைகூறல் நடுவு நிலைமை - பொறையுடைமை - வாய்மை அருளுடைமை - அறிவுடைமை முதலியவற்றைப்பெற்று, அழுக்காறு-கடுஞ்சொல்-சினம்-பேராசை-பொய்மை முதலியவற்றை நீக்கி, பெரியோர்கள் புகழ்ந்துரைக்கும் நன்னெறிக் கண்ணின்று, உலகம் துதிக்கச் சிறப்புற்று விளங் கினான். வீஷ்மர் தருமராசனுடைய நன் னெறியைக் கேட்டுங் கண்ணுற்றும் மிகுந்த மகிழ்வை அடைந்து, தருமராசனுக்கே இள வரசு பட்டங் கொடுக்கவேண்டு மென்று மன தில் நினைத்து, நாமே பட்டங்கட்டினால் பொறாமையே உருவாகத் திரண்டு வந்த துரி யோதனன் முதலாகிய நூற்றுவருக்கு மன தொப்பாதாகையால் சபை கூட்டி அச்சபை யார் கட்டளைப்படி நடக்க வேண்டு மென்று திரிதராஷ்டிரன் முதலானவர்க்கு ஒரு சபை கூட்டும்படி ஆக்கியாபித்தார். வீஷ்மர் ஆக் கினைப்படி திரிதராஷ்டிரன் கொலுவிருந்து சபை கூட்டுவித்தான். அச்சபையில் வந்தி ருக்கிற ஆறு லக்ஷத்து அறுபத்தாறாயிரம் பட்டவர்த்தனரையும், பதினெண்ணாயிர மந் திரிகளையும், ஐம்பத்தாறுதேசத்தரசர்களையும் பதினெட்டு மண்டலாதிபதிகளையும், குடி களையும், வேதவேதியர்களையும், பந்துக்களை யும், வில்லாசிரியர்களையும் வீஷ்மர் நோக்கி, ஓ சபையார்களே! திரிதராஷ்டிர மகாராச னுக்கு உதவியாக இளவரசுபட்டம் ஒருவர்க் குக் கொடுக்கவேண்டும் அதற்குத் திரிதராஷ் டிரன் புத்திரர் நூறுபெயர். பாண்டு புத்திரர் ஐவர். இவர்களில் யாருக்கு இளவரசு பட்டங் கொடுக்கலாம் விளம்புங்களென்று வினவ, சபையார் யாவரும் ஒரே மனமாகச் சொல்லு கிறார்கள்: ஓ மண்டலேஸ்வரா! இதுகாறும் பயர்தி முதல் திரிதராஷ்டிர மகாராசன்வரை யில் குணத்தி லெப்படி யிருந்தபோதிலும் வயதிலுணர்ந்தவருக்கே பட்டங் கொடுத்து வந்திருக்கிறது. இப்போது பாண்டுமக்களிலவ ரில் தருமராசன்தான் தற்காலத்தில் செங் கோல்செலுத்தவும் திருதராஷ்டிரமகாராஜன் புத்திரர் நூற்றுவருக்கும் வயதிலுணர்ந்திருப் பதுவுமன்றி அரசுக்குரிய தன்மையையும் பெற்றிருக்கிறார். அப்புத்திரனுக்கே இள வரசுபட்டம் கொடுப்பது யாவர்க்கும் சம்மதி யென்றார்கள். திரிதராஷ்டிரனோடு விதுரன் முதலானவர்கள் அவ்வசனங்களைக் கேட்டு மகிழ்வுற்றார்கள்.

இவர்களில் திரிதராஷ்டிரன் சபையை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ சபையோர்களே! நான் பட்டத்துக்குமாத்திர முரியவனுகிப் பட்டம் பெற்றேனேயன்றி, பட்டத்துக்குரிய செய்கைகளை யான் செய்தறியேன் என் சகோ தரனாகிய பாண்டுராசன் அரசுக்குரிய செய்கை களைச்செய்து, அநேக தேசத்தையும் என் கைவசமாக்கி வைத்தான். ஆதலால், இந்தப் பாக்கிய மனைத்தும் பாண்டுராசனுலாவது. அப்படி யிருக்கப் பாண்டு புத்திரனாகிய தரும ராசனுக்கு இளவரசுபட்டம் கொடுப்பதற்குச் சந்தேகமில்லை. இப்போதுதானே யாவரு மறிய இளவரசுபட்டங் கட்டுங்களென்று பரி வுடன் விளம்பினான். அதை வீஷ்மர் முத லானவர்கள் கேட்டுக் களிப்படைந்து, தக்ஷ ணம் தருமராசனை அழைப்பித்து, ஜெயப் பிரதானமான முகூர்த்தத்தில் கங்கை-யமுனை-துங்கபத்திரி - கோதாவரி - காவிரி முதலாகிய திவ்ய தீர்த்தங்களால் ஸ்நானஞ் செய்வித்து, மகரகுண்டல ஆரகேயூர கடக கங்கண முத லாகிய ஆபரணங்களினாலும் சரிகை வஸ் திரங்களினாலும் அலங்கிர்தஞ்செய்து, சந்த னம்-புனுகு-கஸ்தூரி-கர்ப்பூரம்-சவ்வாது முத லாகிய கலவைச் சாந்தணிந்து, நவமணிக

ளமூத்தியிருக்கிற சிங்காதனத்தி லிருத்தி வேத வேதியர்கள் ஜெயாவிஜிபாவாவென்று மந்தி ராட்சதை கொடுத்துப் பல ஆசிகள் வழங்க முரசு - எக்காளம் - தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி முதலாகிய வாத்தியங்கள் கட லொலிபோல் முழங்க, மாங்கில்யஸ்திரீகள் மங்களம் பாட, ஐம்பத்தாறு தேசத்தரசர்க ளும் தங்கள் தங்கள் கரகமலத்தைச் சிரமேற் குவித்துத் துதிக்க, இவ்வாறு சகலவித சம்பிர மத்தோடு சற்குணவானாகிய தருமராசனுக்கு மகுடாபிஷேகஞ் செய்தார்கள். அந்தரத்தில் வந்திருந்த இந்திரன் முதலான தேவர்கள் கற்பகப்பூமாரி பெய்தார்கள்; அந்தர துந் துமியுடனே மேனகையும் ரம்பையும் ஆடினார் கள். திலோர்த்தமையும் ஊர்வசியும் பாடினார் கள். இனி உலகத்தில் தருமதேவதை நாலு பாதத்தினாலேயும் நடப்பாளென்று தேவர் கள் ஆனந்தத்தை மேற்கொண்டு புகழ்ந்து சுவர்க்கஞ் சேர்ந்தார்கள்.

இங்கே வீஷ்மர் சபையில் வந்திருந்த யாவருக்கும் அவரவர்க்குத் தக்கபடி மரியா தைகளைச் செய்து, வேதவேதியர்களுள்ளம் பூரிக்கத் தானதருமங்களை நடாத்தத் திரித ராஷ்டிரன் தனது முத்திரை மோதிரத்தைத் தருமராஜன் கரத்திற் கொடுத்துச் சபையை நோக்கிச் சொல்லுகிறான். ஓ சபையோர்களே! இன்று முதல் இந்தத் தருமராஜன் கட்டளைக் குட்பட்டு நடந்து கொள்ளுங்களென்று உறுதிபெற மொழிந்து விடை கொடுத்தான். வந்த மன்னவர்முதல் யாவரும் வீஷ்மர் முத லானவரை வணங்கி, இளவரசு பட்டத்தைப் பெற்ற தருமராஜனைத் தொழுது, பழுதுபடா மொழிபெற்றுப் பட்டினம்போய்ச் சேர்ந்தார் கள். அன்றுமுதல் தருமராஜன் பெரிய பிதா வாகிய திரிதராஷ்டிரன் பரித்த பூமியைத் தான் பரித்து, துரியோதனன் முதலாகிய நூற்றுவரையும் தன் சகோதரற்போற் பாவி த்து, துரியோதனனைத் தனது சிங்காதனத் தில் வைத்துக்கொண்டு, எல்லாக் காரியங் களையும் அவனால் நடப்பித்துச் செங்கோல் செலுத்திவருகிற காலத்தில், கள்ளர் பயம், விஷபயம், நோய்பயம், சத்துருபயம் முத லியவை நீங்கி மாதமும்மாரி பெய்து, உலக மெல்லாம் வசுராஜன் காலத்து எவ்வளவு வளமையுற்றதோ அவ்வளவு வளமையுற் றுக் குடிகளெல்லாம் சீர்பெற்றார்கள். பெரி யோர்கள் தருமராஜன் நடாத்திவரும் செங் கோல் முறைமைக்கு வியப்படைந்து யாவ ரும் புகழத் தலைப்பட்டார்கள். பெரிய அரசர்க ளாகிய வீஷ்மர், திரிதராஷ்டிரன், மந்திரிகள் முதலாகிய பேர்கட்கெல்லாம் தலைமையாயிருக் கிற விதுரன் இவர்கள் மிக மகிழ்வடைந்து தருமராஜன் புத்திரனு யிருந்தபோதிலும் அவன் வாயிலிருந்து வெளிப்படுஞ் சொல் லைக் குரு வாக்கியம்போற் றலைமேற்கொண்டு சொற்பழுதுறாமல் நடந்து வருகிறார்கள்.

## துரியோதனன் துராலோசனை.

இவ்வாறு பெரிய அரசர்களே முதலிய யாவரும் தருமராஜன் வாக்கியத்தைச் சிலாக் கியமாகப்பேணி நடந்துவருவதை துரியோத னன் கண்டு பொறாமை கொண்டு, ஒருநாளிர வில் தனியே ஓரிடத்திற் சென்று, கர்னன் சகுனி துற்சாதனன் இவர்களை யழைப்பித்து சொல்லுகிறான். ஓ உயிருக்குயிரா யிருக்கிற அப்தர்களே! நெடுநாளாக என் கருத்திலொ ன்றை வைத்திருக்கிறேன். உங்களைவிட அன் பர்களெனக் கில்லையாதலால் ஒளியாமல் அதனை வெளியிடுகிறேன் அதனை நீங்கள் கேட்டு இது தகுதி இது தகுதியல்லவென்று உரைப்பீர்களாகில், அவ்வாறு நடக்கக் காத் திருக்கிறேன். அஃதென்னெனில், என் பிதா வின் சகோதரனாகிய பாண்டுராஜன் உயிரோ டிருக்குங் காலத்தில், வேட்டையாட வனத் திற் சென்று மானை எய்தபோது அம்மா னுருவாயிருந்த அமுதந்த முனிவரானவர் இன்றுமுதல் நீ ஸ்திரீயைப் புணர்ந்தால் மரண மடைவையென்று சாபமிட, அச்சாப த்தையேற்று அக்கணம் அரசுரிமையை நீக் கித் தவவேடங்கொண்டு இறந்துபோனான். அவனது பத்தினியர்களிற் குந்திதேவியார் பெற்ற புத்திரனாகிய தருமராஜன் இளவரசு பட்டம் பெற்றிருக்கிறதும், அரசுக்குரிமை பூண்டு பாண்டுராஜன் உயிரோ டிருக்கும்போ தும் அவனிறந்த பின்பும் செங்கோற் செலு த்திவந்த பெரியராஜன் புத்திரனாகிய நான் அந்த தருமனுக்குக் கீழ்ப்படிந்து அவனிடும் ஏவலைச் செய்கிறதும் உங்கள் கருத்துக் குத் தகுதியா யிருக்கிறதாவென்று துக்கித் தான். அதற்குச் சகுனி சொல்லுகிறான். அப்பா மருமகனே! உன் தந்தைக்கு நேத்திர மில்லாதிருந்தாலும் பல சாத்திரங்களை மூத் தோர்களாற் கேள்வியுற்று நாற்றிசையுந் தோத்திரஞ் செய்ய நீதிசெலுத்தி யிருந்தா ரென்று மதித்திருந்தேன். இப்போது ஐவர்

மேற் பக்ஷமுள்ள வீஷ்மர் கருத்தின்படி உன் பிதா புத்தி மயங்கினர். மேலும் மந்திரிகளுக் கெல்லாம் தலைமையான மந்திரியாகிய விதுரனும், வில்லாசிரியராகிய கிருபாசாரியரும் துரோணாசாரியரும் அந்த ஐவர்மேற் பக்ஷமுள்ளவர்களாதலால், வீஷ்மர் கருத்துக்கிசைந்து தருமனுக் கிளவரசு பட்டங் கொடுத்தார்கள். அதனுல் தருமராஜன் சிறப்புற்று உலக முழுமையும் தன்னொரு குடைநிழலிற் காத்து வருகின்றுன். இனி யதைக் குறித்து ஒருபேச்சும் பேசவேண்டிய தில்லையென்று கடுஞ்சினத்துடனுரைத்துப் பின்னுஞ் சொல்லுகிறுன்.

ஓ மந்தரகிரிக் கிசைத்த புயாசலத்தை யுடைய துரியோதன மகாராஜனே! உலகத்தில் ஒரே கர்ப்பத்திற் பிறந்த அண்ணன் தம்பிமார்களே காலவித்தியாசத்தால் ஜன்மப் பகையாளிகளாகிருர்கள். நியாயமாக நீயும் தருமராஜனும் பங்காளிகள், உனக்குச் சத்துரு அவன், அவனுக்குச் சத்துரு நீ, நீயே சத்துருவாகிய தருமனுக்கு வழிப்பட்டு வருவையாகில் இனி என்ன இருக்கின்றது? உலகத்தில் புத்தியில்லாதவர்க்கு வலியுடைமை-பொருளுடைமை-வீரம்-முயற்சி - மேன்மை - நீதி-சுற்றம்-சிநேகம் இவையெல்லா மிருந்தாலும் பயன்படாது. அதற்குத் திருஷ்டாந்தம் நீயேயன்றி வேறொருவரில்லையென்று கூற, அதற்குள் துற்சாதனனெழுந்து துரியோதனனை வணங்கி, அண்ணு! இப்போது தாங்கள் கூறிய வசனம் தகுதியென்றுரைப்பதற்கு எனக்கு மனம் வரவில்லை. ஏனென்றுல், மஹா வீரத்தன்மை யுடையவரென்று ஐவருக்கும் நமது பிதா பூமி முழுமைக்கும் இளவரசு பட்டங் கட்டி வைத்தார். இனி நாம் இப்பூமியின்கண் இருந்தென்ன பயன்? பெரிய ராஜாவின் புத்திரனுகிய உம்முடன் பிறந்த எனக்கும் என் சகோதரருக்கும் மேலான லாபந்தான். ஒரு குறைவுமில்லை. மேலும் உடம்பிற் புரைக் குழலுண்டானுல் உடம்பிற் பிறந்ததென்று நோக்காமல் உடனே அறுத்தெறிந்து விடுவது தகுதி; அதுபோல் நமக்கு நலமல்லாமையா யிருக்கிற ஐவரைப் போரிட்டு வீழிட்டோடும்படி செய்யவேண்டும் உம்மைப்போல் விவேகிகள் உலகத்தில் யார்? (பனங்காயையும் பங்காளியையும் பதம் பார்த்து வெட்டவேண்டும்) என்னும் பழமொழி கேட்டிருந்தும், நீங்களே முன்பின் யோசனை செய்கிறதா யிருந்தால் நாங்களென்ன செய்கிறதென்றுன்.

அதற்குள் கர்னமஹாராஜன் துரியோதனனை நோக்கி, தம்பி துரியோதனு! நீ என்ன முன்பின் ஆலோசனை செய்கிருய்? மானிடஜென்மமெடுத்தால் இம்மை மறுமை இன்பங்களை அடையவேண்டும். அதுதான் யாக்கையெடுத்ததற்குப் பயன். உலகத்தில் இன்பம் அடைய வேண்டுமானுல் சாமம் - பேதம் - தானம்- தண்டம் என்னும் சதுர்வித உபாயங்களுண்டு. அவற்றுள் அவரவர்களுக்குத் தகுதியான உபாயமெதுவோ அதனைச்செய்து எதிரிகளைக் கைவசப்படுத்திப் பொருளையடையவேண்டும். உனக்கும் அந்த ஐவருக்கும் இந்த அத்தினபுரம் சுவாதீனமா யிருந்தாலும், நீ பெரிய ராஜாவின் புத்திரனுகையால் இவ்வரசு உனக்கேசுதந்தரமாகும். இதை நோக்காமற் பெரிய அரசர்கள் தருமனுக்கு இளவரசுபட்டங் கொடுத்தார்கள். அதனுல் அவ்வைவர்கள் மீறிப்போயினர். இப்போது அவர்களுக்குப் பட்டந் தகாதென்று வழக்கிட்டால் அப்பட்டத்தை விட்டுவிடவேண்டும். விடாமல் ஐவர் மீறுவார்களாகில், அப்போது நடத்தவேண்டிய காரியத்திற்கு எனக்கு உத்திரவு கொடு, ஒரு முகூர்த்தத்திற்குள் அந்த ஐவரையுங் கொட்டாவி கொள்ளும்படி வெற்றிகொண்டு உனக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைக்கிறேன். என் வல்லமையை அன்று வில்லரங்கேற்றுஞ் சபையில் அறிந்திருக்கிறு யல்லவா? அப்படிப்பட்ட மிகுந்த திறத்தையும் பலத்தையும் பெற்றிருந்தென்ன பலன்? காட்டுக் கெறித்த நிலவைப்போலவும், ஆற்றிற் கரைத்த புளியைப் போலவும் பயன்படாம லிருக்கிறே னென்றுன். அச்சொல்லைக் கேட்ட துரியோதனன், அண்ணு! தாங்கள் கூறியபடி நேரிட்டு, அந்த ஐவரையும் போரிட்டு, அப்போரில் யாவரும் வீழிட்டோடும்படிச் செய்து டமுது முதுகு காட்டி யோடும்படிச் செய்து நமது பூமியை நாம் கைவசப்படுத்திக் கொள்ளலாம். அதற்கொரு சங்கடமிருக்கின்றது. அஃதென்னெனில், நமக்குப் பெரியோர்க ளிருக்கிருர்கள். அவர்க ளிருக்கும் போது நாம் யாதொன்றும் செய்யக் கூடாது. ஆதலால், தந்திரத்தினுல் அந்த ஐவரை நீக்கவேண்டும். அதற்கொரு யுக்தி மாத்திரம் சொல்லுங்க ளென்று துரியோதனன் கேட்க, சகுனி சொல்லுகிறுன்.

அப்பா மருமகனே! நீயேன் கிலேசப்படுகிறாய்? கர்னமகாராஜனிருக்கும்போது ஐவரையும் வெற்றி கொள்வது நமக்கு அருமையல்ல. ஆயினும், தற்காலத்தில் ஐவர்மேல் போர்க்கெழுவதுந் தகுதியல்ல. ஏதாவதொரு தந்திரத்தினால் ஐவரையும் இந் நகரத்தை விட்டு வெளிப்படுத்துவோமானால் உன் கட்டளைக்கு உலகமுட்படும், அதன்பின்பு ஐவர்க்கு ஒன்றுஞ் செல்லாது. அதற்கொரு தந்திரஞ் சொல்லுகிறேன்: அதென்னெனில், வேதத்திற் கூறிய யாகங்களனைத்தையுஞ் செய்வதற்கும், பிதுர் கர்மஞ் செய்வதற்கும் இன்னும் கருத்தில் நினைத்தபொருளையடைவதற்கும், ஆன்மலாபத்திற்குரிய மேலான தவத்தைச் செய்வதற்கும் யோக்கியமாக விளங்கி யிருப்பது கங்கா நதியிலிருக்கிற வாரணாவதம். அந்த வாரணாவதத்திற்கு ஐவரும் போகும்படி உன் பிதாவைக்கொண்டு செய்வையாகில், ஐவரும் அந்த நகரத்துக்குச் செல்லுவார்கள். அதன் பின்பு உன் மனதின்படி யிருக்கலாம். ஒருவேளை ஐவர் மீறுவார்களாகில் அக்காலத்தில் தகுந்த தந்திரஞ் செய்தாவது அல்லது போரிட்டாவது ஐவரையும் வெற்றிகொள்ளலா மென்றான். துரியோதனன் அதற்கிசைந்து, மாமனாகிய சகுனியையும் தலைவனாகிய கர்னனையும் தம்பியாகிய துற்சாதனனையும் நோக்கி, இப்போது நாம் செய்த ஆலோசனையின் கருத்துப் பிறருக்குத் தெரியக்கூடாது யென்று சொல்லி, உடனே நால்வருமெழுந்து தங்கள் தங்களிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். சிலநாட் சென்றபின்பு துரியோதனன் தன் பிதாவாகிய திரிதராஷ்டிரமகாராசன் தனியாயிருக்கிற வேளையறிந்து சென்று, பிதாவுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தான். நமஸ்காரஞ் செய்த அரவங் கேட்ட கண்ணில்லாத திரிதராஷ்டிரன் யாரென்று கேட்க, உமது மூத்த குமாரனாகிய துரியோதனன் யானென்று சொல்ல, திரிதராஷ்டிரன் புத்திரனை வாரித்தழுவி, அப்பா மகனே! நீ தருமராஜனோடு கொலுவிருக்கின்றவனாயிற்றே என்னைக் காணவந்தது என்ன காரணமென்ன, துரியோதனன் சொல்லுகிறான்.

ஓ ஐயா! எனக்கொரு குறை யிருக்கின்றது அதனைத் தங்களுக்குத் தெரியப்படுத்த வந்தேனென்றான். அதற்கு திரிதராஷ்டிரன் சொல்லுகிறான். அப்பா துரியோதனா! 56-தேசம் 18-மண்டல மிவையெல்லாம் உன் சுவாதீனமாயிருக்க, உமக்குக் குறையென்ன? உன்கருத்திற் குடிகொண்டிருக்கிறதை வெளியிடென்று கூற, துரியோதனன் வணங்கிய முடியனாகிச் சொல்லுகிறான். ஓ மன்னர் மன்னனாக விளங்கும் என் பிதாவே! (காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு) அதுபோல் கொடிய பாவியாகிய புத்திரனைப் பெற்றவரும் அவனைப் பாவியென் றிகழாமல் ஆதரணை செய்து வருவார்கள். நீங்கள் அக்கருத்துக்குடையவராயிருக்கவில்லை. மேலும் புத்திருக்குந் தந்தையே தெய்வமென்று வேதவாக்கியத்தி னுணர்த்தியிருந்தும் எங்கள்மீது உமக்குக் கிஞ்சித்தும் அன்பில்லாமல் யெங்களை இழிவாக்கி, எங்களுக்குப் பகைவராகிய ஐவர்மீது அன்புவைத்து தருமராஜனுக்கு இளவரசுபட்டங் கொடுத்தீர். இந்த அனியாயத்தைத்தான் தங்களிடத்துச் சொல்லவந்தேன் என்றான். இதனை கேள்வியுற்ற திரிதராஷ்டிரன் மனநடுக்கமுற்று, இரு செவியிலும் கையை வைத்து மூடிக்கொண்டு வருத்தமடைந்து, ஓ! ஓ! மோசம் வந்தது யயாதி மகாராஜன்முதல் இதுவரைக்கும் சத்தியத்துக்கு கெடுதி வராமல் செங்கோல் நடந்து வந்தது. இனி நமது புத்திரர்களாற் சத்தியங் கெடுவது மன்றி நமது வமிசமும் இழிவடையும்படி நேரிட்டிருக்கின்றது. தருமராஜன் இளவரசுப்பட்டம் பெற்றதற்கு நமது புத்திரன் பொறுமை கொண்டபோதே இனியென்னயிருக்கின்றது? இயற்கையிலேயே நமது புத்திரன் அறிவிலுயர்ந்தவனல்லன். இவனோடு செயற்கையானவரும் திறமையாளர்களல்லர். அவர்கள் ஆலோசனையினாலேதான் இப்புத்தி நமது புத்திரனுக்கு உண்டாயிற்று. என்று மனதில் மதித்துப் புத்திரனை நோக்கிச் சொல்லுகிறான்.

### திரிதராஷ்டிரன் துரியோதனனுக்கு அறிவுறுத்தல்

அப்பா மகனே! நான் தருமராஜனுக்கு இளவரசுபட்டங்கொடுத்தது தகுதிதான். எவ்வாறெனில், இந்த சந்திரவமிசம் தோன்றினதுமுதல் இதுவரைக்கும் வயதிலுதிர்ந்தவன் யாரோ அவனெவ்வாறு யிருந்தபோதிலும் அவனுக்கே அரசுரிமை கொடுத்து வந்தார்கள். அதற்குத் திருஷ்டாந்தம் என் தம்பியாகிய பாண்டுராஜன் அநேக தேசாதிபதிகளை வென்று புகழ்பெற்று விளங்கியிருந்தும் கண்ணில்லாத நான்தான் அரசனா யிருந்

தேன். மேலும் இப்போதிருக்கிற பாக்கியங்கள் எல்லாம் பாண்டுராஜன் சம்பாதனையேயன்றி என் சம்பாதனை ஒன்றுமில்லை. ஆதலால், பாண்டுராஜன் கண்ணில்லாத எனக்கு முடி சூட்டி எல்லாக் காரியங்களையும் அவன் முன்னிலையில் நடத்தி வரவேண்டியது உன்கடமையாதலால், வீணாய் நீதிக்கு விரோதந் தேடிப் பல பேர்களால் இழிவடையாதே அந்தத் தருமராசனும் இளவரசு பட்டம் பெற்ற பின்பு உன்னை யல்லாமல் கொலுவிலிருக்கிறதில்லை. எந்தக் காரியத்தையும் உனக்குத் தெரிவித்து உன் மனச்சம்மதியின்படி நடத்தி வருகிறான். அவனைப்போல் குணத்திலும் ஒழுக்கத்திலும் உயர்ந்தவர்கள் நமது தலைமுறையில் யாருமில்லை. மகனே துரியோதனா! இராஜசமுகத்தில் பலபேர் பலவிதமாக வசனிப்பார்கள். அவ்வசனங்களைப் புத்திமான்கள் கேள்வியுற்று நல்லதை நல்லதாகவும் கெட்டதைக் கெட்டதாகவும் மனதில் மதித்துக் கொள்ள வேண்டுமேயன்றி, நல்லதைச் சொல்லியவரைப் புகழ்ந்து கெட்டதைக் கூறியவரை யிகழ்ந்து வெறுக்கவும் கூடாது. அதனால் விரோதம் நேரிடும். விரோதம் நேரிட்டால் இராஜரகசியம் பிறருக்குத் தெரியவரும். பிறருக்குத் தெரிந்தால் அரசுக்கு மோசம் வரும். ஆதலால், இராஜனானவன் தன் மனதுக்குள்ளே அவரவர்கள் திறத்தை யறிந்துக் கொண்டு, நீதிக்கு விரோதப்படாமல் காரியத்தை நடப்பிக்க வேண்டும். வெண் காக்கையைக் கண்டோமென்றும் தாயைக் கொலை செய்தால் தகுதியென்றும் சொல்லுவர். அவர்களெல்லாம் தங்கள் கல்வித்திறத்தால் (தான் நாட்டித் தனது நிறுப்பே) என்றுஞ் சூஸ்திர விதிப்படித் தானொரு பொருளை யெடுத்து நாட்டி அதனை வருமிடந்தோறும் மதத்தா லழிவார்கள். மறுத்துக் கேட்டால் செயற்கையால் இப்படி நேரிடுமென்று கட்டுரை கூறுவார்கள். ஆதலால், நீ மரபுக்கும் நீதிக்கும் வழுவுறாமல் நடப்பதைக் கருத்திற் கடமையாய்க் கொள்வையேயன்றி, துர்மந்திரிகளுடைய துராலோசனைப் பேச்சை யுட்கொள்ளாதே என்று உண்மையாகப் பேசினான் திரிதராஷ்டிர மகாராஜன். அதற்குத் துரியோதனன் ஐயா! பரதராசன் முதலாக அனேகந் தலைமுறை பரியந்தம் தத்தம் புத்திரருக்கே மகுடாபிஷேகஞ் செய்திருக்க, தாங்கள் ஐவர்மீது பக்ஷம் வைத்திருக்கிற விதுரன் வில்லாசிரியர் வீஷ்மர் முதலானவர்கள் புத்தியைக் கேட்டுத் தருமராசனுக்கு இளவரசுபட்டம் நாட்டிவிட்டீர். அப்படி கொடுக்கலாமாவென்று யான் கேட்டால் எல்லாம் தருமராசன் தந்தையினுடைய பாக்கியமேயன்றி என் பாக்கியமொன்று மில்லை என்று கைசோரவிடுகிறதினால், அடியேனுக்கும் அடியேனுடன் பிறந்திருக்கிற சகோதரர்களுக்கும் இங்கு என்னவேலை யிருக்கின்றது. தாங்கள் உத்திரவுகொடுத்தால் தேசப் பிரஷ்டத்துவமாய் வனத்திற்சென்று தவம்புரிந்து, இனியொரு ஜன்மத்திற்காவது இம்மை இன்பம் அனுபவிக்கப் பெறுகிறோம் என்று கண்கலுழந்தான். இதைக்கேட்ட திரிதராஷ்டிரன் மனம் வேறாகி, காலகதியாற் புத்திரனாகிய துரியோதனன் கருத்துக் கிசைந்து சொல்லுகிறான்.

### திரிதராஷ்டிரன் துரியோதனன் கருத்துக் கூட்படல்

அப்பா துரியோதனா! ஐம்பத்தாறு தேசாதிபதிகளும் பதினெட்டு மண்டலத் தரசரும் வணங்கச் சிங்காதனத்திலிருந்து அரசு செலுத்திச் சக்ரேஸ்பரனென்று பெயர் பெற்றதுமன்றி நீதிபரனென்றும் பெயரெடுத்திருந்தேன். இப்போது தருமராஜனுக்குச் சூட்டிய இளவரசு பட்டத்தை உனக்கு கொடுத்தால், மன்னர் மன்னர் முதலானவர்கள் ஏளனஞ் செய்வதுமன்றி நீதிபரனென்கிற பெயர்க்கு கெடுதி வருகிறது என் வாய்மைக் கழிவும் எனக்கொரு இழிவும் வராமலிருக்கிறதாக ஒரு தந்திரஞ் சொன்னால், அவ்வாறு நடப்பிக்கிறேனென்று மகனுடன் ஆலோசித்தான். துரியோதனன் மகிழ்வுற்றுச் சொல்லுகிறான்: ஓ ஐயா! நீர் வருத்தப்படாதீர். நான் கருதியிருக்கிற தந்திரப்படி நடப்பித்தால், உமக்கும் உமது வாய்மைக்கும் இழிவுவாராது அப்படி நடப்பிக்கிறேன் என்று கைகொடுத்தால், அதன்பின் என் கருத்தை வெளியிடுகிறேனென்று சொன்னான். திருதராஷ்டிரன் அப்படியே கைபோட்டு கொடுத்தான். அப்பால் துரியோதனன் சொல்லுகிறான்: ஓ ஐயா! பாண்டுமகாராசன் இறந்துபோன நாட் சமீபிக்கும்போது தருமராஜனை அழைத்து உன் தந்தைக்குத் திதி வருகிறது கங்காநிதியருகிற் பிதுர் கருமத்திற்கும் மற்றவைகட்கும் மிகுந்த யோக்கியதையுள்ள வாரணாவத நகரத்திற் சென்று பிண்ட முதலிய தானங்களைச் செய்துவந்தாற் சாபத்தாலிறந்த என்

தம்பி கதிபெறுவானென்று தாங்கள் கூற வேண்டியது. அவ்வாறு கூறினால் தருமராஜன் ஒத்துக்கொண்டு, தம்பிமாருடனும் தாயாருடனும் அந்நகரத்துச் செல்லுவான். பின்பு நீங்கள் (சட்டிசுட்டது கைவிட்டது) என்கிற பழமொழிபோல் இங்குமீண்டும் அவர்களை வரவழைக்காது சும்மாயிருந்துவிட்டால் அவர்களிங்கு வரமாட்டார்கள். நானிவ்விடத்தில் இளவரசுபட்டம் பொறுத்து என் புத்தி சாதுரியத்தினால் உலகமெல்லாம் என்னை வணங்கச் செய்துகொள்ளுகிறேன். ஒருவேளை விதுரன் - வீஷ்மர் - துரோணாச்சாரி-கிருபாச்சாரி- அசுவத்தாமா இவர்கள் பாண்டு புத்திரரோடு செல்லுவாரென்று கருதுவீர்களாகில் அந்த ஐயம் உமக்கு வேண்டுவதில்லை. வீஷ்மர் இந்த ஆதீனத்தைவிட்டு நீங்கார். விதுரன் அந்த வீஷ்மரையும் உம்மையும் விட்டு நீங்கான். கிருபாச்சாரி வீஷ்மரைப் பிரியார். துரோணாச்சாரி மைத்துனனைவிட் டகலார். தந்தையைவிட்டு அசுவத்தாமா பிரியார். ஆகையால், நீங்கள் தருமராஜனை அழைப்பித்துக் கட்டளையிடுமென்று விளம்பினான்.

திரிதராஷ்டிர மகாராஜன் புத்திரன் கூறிய தந்திரத்துக்கு மகிழ்ந்து, அப்பா புத்திர சிகாமணியே! உன் கருத்தின்படியே தருமராஜனை வாரணாவதத்திற் கனுப்பிவிக்கிறேன் நீ அஞ்சாதே இங்கே நடந்த விருத்தாந்தத்தை வெளிப்படுத்தாதே என்று திட்டம் செய்து மகனை யனுப்பிவிட்டான். துரியோதனன் நமதெண்ணம் முடிந்ததென்று அதிக மகிழ்வை அடைந்து, சகுனி கர்னன் முதலானவர்களோடு கூடித் தன்னெண்ணம் நிறைவேறினதைச் சொல்லிச் சந்தோஷகரமாயிருந்தான். இப்படிச் சிலநாள் சென்ற பின்பு மண்டலேஸ்வரனாகிய திரிதராஷ்டிர மகாராஜன் கொலுமுகச்சாலைக்கு வந்தான். இராஜன் வரவைக்காணவே சபையிலிருந்த மந்திரிகள் பட்டவர்த்தனர் மகுட வர்த்தனர் மற்றுமுள்ள குடிகள் யாவருமெழுந்து வந்தனை வழிபாடு செய்தார்கள். இளவரசு பட்டந்தாங்கி ராஜ சிங்கம்போல் விளங்கும் தருமராஜன் தம்பிமார் நால்வரோடும் வந்து வணங்கினர். திரிதராஷ்டிரன் பெரியவராகிய வீஷ்மரையும் கிருபாசாரி துரோணாசாரியரையுந் தொழுது, நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்து சட்டதிட்ட முதலானவைகளோடு லோகவிசாரணையு நடாத்தி, அவ்வவற்றிலுள்ள நுட்பாநுட்பங்களை யறிந்துகொண்டு, சபையிலிருக்கிற யாவரும் கேட்க வீஷ்மரையும், துரோணாச்சாரி, கிருபாசாரி, விதுரன் இவர்களையும் அருகிலழைத்துச் சொல்லுகிறான்: ஓ சற்குண சிரேஷ்டர்களே! பிர்ம்ம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர் என்னும் நாற்குலத்திலும் என்னைப்போல பாக்கியசாலி யில்லை. எவ்வாறென்னில், நானோ கண்ணில்லாதவன், என்னுடன் பிறந்த தம்பியாகிய பாண்டுவோ அவயவ ஈனம் இல்லாதவனா யிருந்ததுவு மன்றிச் சகலகலை வல்லவனாகியும், அதிக சாமார்த்திய முடையவனாகியும் விளங்கினான். அவ்வகைப் பட்ட சிறப்பினையுடைய என் தம்பி கண்ணில்லாத என்னைச் சிங்காசனாதிபதியாக்கி, ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் பதினெட்டு மண்டலாதிபதிகளும் வணங்கச் செய்து இந்திரலோகத்துக் கொப்பாகிய போகத்திலென்னை வைத்துத் தான் ஒரு சேவகனைப்போல் எனக்குப் பணிவிடைசெய்து வர அவ்வளவு சிலாக்கிய சகோதரனைப் பெற்றிருந்தேன். இனி அவனைப்போற் சகோதரனைக் காணப்போகிறனோவென்று இரண்டு கண்ணிலும் நீர்சோரத் துக்கப்பட் டழுதான்.

இந்தத் திரிதராஷ்டிரன் மனதில் வைத்திருந்த கபடத்தை அறியாமல், உண்மையாக அழுகிறானென்று வீஷ்மர் முதலானவர்கள் இனிய வசனங்களாற் றேற்றிச் சொல்லுகிறார்கள்: ஓ மண்டலேஸ்வரா! கபட நாடக சூத்திராவதாரியாகிய திருப்பாற்கடலிற் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் திருவிளையாடலா லமைந்தது இவ்வுலகம். ஆனால், இவ்வுலகம் அழிகிறவஸ்துவே. அழியும்போது இவ்வுலகிலுள்ள உயர்திணை அஃறிணை என்னுமிவைகளா லழியாதிருக்குமோ? இறப்பும் பிறப்பும் துயின்றெழுவதுபோலாம். ஆதலால், இறந்த சகோதரனுக்காகத் துயரப்படுதல் தகுதியல்லவென்று சில திஷ்டாந்தங்களை எடுத்துக் காட்டினார்கள். அப்பால் திரிதராஷ்டிரன் அழுதலை நிறுத்தித் தருமராசனை நோக்கிச் சொல்லுகிறான்: அப்பா தருமநந்தனா! உன் தந்தை உலக காரிய மனைத்தையும் தானே சுமந்து என்னைச் சுகமாக வைத்திருந்ததுபோல், நீயும் உலககாரிய மனைத்தையும் சுமந்து என்னைச் சுகத்தில் வைத்தாய், உன்னால் என் சகோதரனாகிய பாண்டு இறந்த துன்பத்தை மறந்திருக்கி

றேன். ஆனல், அப்பாண்டுவுக்குநற்கதிகிடைக் கும்படி தகுந்த புத்திரர்கள்தான் பிறந்தீர்கள். இறந்துபோன உன் தந்தைக்கு இன்னும் அதிக நலமுண்டாகும்படியான ஒரு எண்ணம் என் கருத்திலிருக்கின்றது. அதனை வெளியிடுகிறேன் அவ்வாறு நீ நடப்பிப்பது உன் கடமை. அஃதென்னெனில், உலகத்தில்பிதுர்க் கருமம் செய்தலே நமக்கு முக்கியம், பிதுர்த் தினங்களிலும் மற்றப் புண்ணியகாலங்களிலும் கங்காநதி தீரத்திலிருக்கிற திவ்ய க்ஷேத்திரங்களில் சங்கல்ப தர்ப்பண யாகமுதலியவற்றைச் செய்தால் அதிக நலமென்றும் மிகுதி பலனென்றும் வேதமுறை யிடுகிறதினல், எனக்கு மிகுந்த நலனைத்தந்த என் தம்பி பாண்டுவுக்குச் சுபமுண்டாக கங்காநதி யருகிலிருக்கின்ற நமது வாரணவத நகரத்திற் சென்று உன் பிதுர்க்கருமத்தைச் செய்தால், எனக்கு மிகுந்த மகிழ்வாயிருக்கும் அது உன் கருத்துக் கொத்துமையா யிருக்கின்றதோ இல்லையோ சொல்லுக வென்ருன். அதற்குத் தருமராசன் வணங்கிக் கூறுகிருர்.

ஓ ஐயா! உலகத்தி லிருப்பவர்கள் புண்ணியலோகத்தை யடையக்கருதி அருமையான தவத்தைச் செய்தேனும் ஒரு புத்திரனைப் பெறுவது அஃதெனக்குத் தெரிந்திருந்தும் இதுவரையிற் பிதாவுக்குரிய கடன்களிற் கருத்தைச் செலுத்தாமல் லோக வியாபாரத்திலிருந்துவிட்டேன். இன்று தங்களாற் பிதாவுக்குரிய கடனைச் செய்யுங் கருத்துண்டாயிற்று. இனி அரைமாத்திரம் போதாவது இவணிருக்காமல் தாங்கள் சொற்றவண்ணம் வாரணுவதமென்னும் பதிக்குச் சென்று அங்கிருக்கும் திவ்விய நதியில் நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து, என் பிதாவுக்கு நலத்தை யுண்டாக்க விடைகொடுக்க வேண்டுமென்று மிகுந்த பக்தியோடு கேட்க, திரிதராஷ்டிரன் அப்பா மகனே! இந்த அத்தினபுரத்தி லிருந்து செலுத்திய இளவரசுபட்டத்தை அந்த வாரணுவதத்திற் செலுத்தலாம். அவ்வாரணுவதம் எவ்வகைப்பட்டதென்ருல், உன் தந்தைக்கு விருப்பமான இடம் வேதாகம கோஷ்டங்களும் சிவாலயங்களு மிருக்கப்பட்டது. திவ்விய கங்காநதியை வஸ்திரமாகத் தரித்திருக்கின்றது. வேதாகமந்தேர்ந்த பெரியோர்களுக்கெல்லாம் அந் நகரத்தைத் தாயென்றெண்ணத்தக்கது. பிர்ம்மா-விஷ்ணு-உருத்திரனென்னு மூவரும் தன்னை எக்காலத்தும் விட்டு நீங்காதிருக்கச் சிறப்புற்றிருக்கின்றது. இதல்லாமல் மாடமாளிகை கூடகோபுரங்களை யுடைத்தாகி அரசுக்கு யோக்கியமாயிருக்கிறதென்று சொல்லி, மந்திரிகளிற் சிறப்புற்றிருக்கிற புரோசனனென்பவனை அழைத்து, ஓ புரோசனு! இந்த அருமையான குணத்தையுடைய தருமராஜனுக்கு மந்திரியாயிருந்து, மற்றச் சகோதரர்களுக்கும் யாதொரு குறைவும் வராமல் இடம்பொருள் ஏவல்களனைத்தையும் சேகரித்துக்கொடுத்து, நமது கெடிஸ்தலவதிகாரஞ் செல்லவேண்டிய முறைமைப்படி கிள்ளாக்கு செலுத்தி, தருமராஜன் உருவும் நிழலும்போல அவனை விட்டுப் பிரியாமலிருவென்று கட்டளையிட்டுத் தருமபுத்திர மகாராஜனுக்கும் பல ஆசிகள் கூறி விடைகொடுத்தான்.

### பாண்டவர் வாரணுவதஞ் சேர்தல்

தருமராஜன் தனது அன்னையாகிய குந்திதேவியையும்சகோதரராகிய வீமன்-பற்குணன் நகுல சகாதேவர்களையு மழைத்துக்கொண்டு மந்திரியாகிய புரோசனன் பின்ருெடர்ந்துவரத் துரோணுசாரி-கிருபாசாரி-அஸ்வத்தாமன்-வீஷ்மர்-விதுரன் முதலாகிய பெரியோர்களைப் பணிந்து விடைபெற்று, அரண்மனையை விட்டு வெளிப்பட்டார். இவ் வைவரும் வெளிப்பட்ட மாத்திரத்தில் அந்நகரத்திற் குடிகொண்டிருக்கும் செல்வவான்களும், பெரியோர்களாகிய வீஷ்மர் வில்லாசிரியர் முதலியவர்களுக்கும் இது துரியோதனனல் நேரிட்டதென்று பலவாறு நினைந்துருகினுலும் விதுரன்-வீஷ்மர்-துரோணுச்சாரி-கிருபாசாரி இவர்கள், இத் தருமராஜன் இந் நகரத்தை விட்டு நீங்குகிறதாயிருந்தால் இச் செய்கை திரிதராஷ்டிரன் புத்திரனுகிய துரியோதனன் முதலாகியபேர் இம் மண்ணுலக வாழ்க்கையைவிட்டு விண்ணுலகவாழ்க்கையை அடைவதற்கு நெருங்கிய காலம் சமீபித்ததைக் காட்டுகின்றதென்று தாங்கள் தாங்களே கருதி, தருமராஜனை வாழ்த்தி விடைகொடுத்துத் திரும்பினுர்கள். மற்ற ஜனங்களோவென்ருல் தருமராசனைப் போலே இனி எந்த அரசனைக் காணப்போகிருே மென்றும், இந்த நகரத்துக்கு இனி வரப்போகிறதுண்டோவென்றும் பலவாறு நினைத்து, ஐயோ! திருமால்போற் கிருபையும், உருத்திர மூர்த்தியைப்போற் பராக்கிரமமும் பெற்று விளங்கும் இவர்களிவ்

விடம் விட்டு நீங்குவது என்ன காரணம்? பாவியாகிய துரியோதனன் செய்த வஞ்சனையோ? அல்லது அட்டமச்சனியனோ? இவர்களுக்கிந்த இம்சை விளைந்ததே ஆ! ஆ! இஃதென்ன ஆச்சரியம்? பட்டத்துக்குரிய புத்திரன் செல்ல கூடவந்த பெரிய அரசர்கள் ஒன்றும் பேசாமல், திரிதராஷ்டிரமகாராசன் உத்திரவின்படிக்குத் தாங்களும் விடைகொடுத்து நகரத்துக் கேகுகிறார்களே யென்று மிகுந்த ஆறாமை கொண்டு, கண்ணையுங் கருத்தையும் ஐவர்மீது வைத்துச் சித்திரப் பிரதிமெய் போற் சற்று மசைவின்றி நின்று விட்டார்கள்.

துரியோதனன் தருமராசனை வணங்கி, ஓ அண்ணா! நான் பாவியிலும் பாவி. ஏனென்றால், என் பிதா உங்கள்மீது வைத்திருக்கிற அன்பைப் போல் என்னிடத்தில் வைக்கவில்லை. அஃதெப்படி தெரிகிற தென்றால், எத்தனை காலம் உலகத்தில் வாழ்ந்தாலும், அதுவெல்லாம் வாழ்வல்ல. திவ்ய நதிகளில் ஸ்நானஞ் செய்கிறதும், திவ்ய க்ஷேத்திரங்களில் வாசஞ் செய்கிறதும், சிவ பூசை முதலிய தேவதார்ச்சனைசெய்தலுமே மேலான வாழ்வு. அப்பேர்ப்பட்ட வாழ்வினை அடைய உமக்கு உத்தரவு கொடுத்தாரே யன்றி எனக்கு உத்திரவு கொடுக்கவில்லை. எனக்குங் கட்டளையிட்டால் இப்போதே உங்களுடன் கூட வருவேன் எவ்வாறு உங்களை விட்டுத் தனித்திருக்கப் போகிறேனென்று கண்கலங்கி உபசரித்தான். கிஞ்சித்தேனும் கபடில்லாத தருமராஜன் சொல்லுகிறார்: அப்பா துரியோதனா! நீ யேன் கிலேசப்படுகிறாய்? தந்தை வாக்கியம் வேத வாக்கிய மாதலால் தந்தையின் கட்டளைப்படி தந்தைக்கு நலமுண்டாகத் திவ்விய க்ஷேத்திரத்துக்குச் செல்லுகிறேன். நீ தந்தை சொற்படி நின்று லோகவிசாரணை செய்து வரவேண்டியது நானும் போய் நீயும் வந்துவிட்டால் அரசு எவ்வாறு நடக்கும்? கண்ணில்லாத வயோதிகத் தந்தை எப்படி சகிப்பார். ஆதலால் நீ இங்கேதானே யிருவென்று கூறி விடை பெற்று நடந்தார். துரியோதனன் மிகவும் அன்புடையவனைப் போலே வேடங்காட்டி புரோசனனென்கிற மந்திரியைத் தனியே அழைத்து, ஓ புரோசனா! நீ நெடு நாளாக இந்த சமஸ்தானத்திற் காத்திருந்து இலவுகாத்த கிளிபோற் பயன்பெறாதிருந்தனை இப்போது இந்தப் பாண்டுமக்களோடு அதிக மனதாயிருந்து நான் கட்டளையிடுகிற பிரகாரம் நடத்துவையாகில், ஐவரென்கிற பெயர் அதமாகியதுமன்றி உன்னைப் பற்றி யிருக்கிற தரித்திரமு மதமாகும்படி செய்விக்கிறேன். அப்படி நடக்க உனக் கிஷ்டமுண்டாவென்று கேட்டான். புரோசனன் இனி நமக்கு நல்ல காலமென்றெண்ணி, அப்படியே நடத்துகிறேனென்றான். துரியோதனன் சொல்லுகிறான்: ஓ புரோசனா! நீ ஐவர்மீது அதிக பக்ஷமுள்ளவன்போல் ஏவல் முதலியவற்றைச் செய்து அவர்கள் நம்பும்படி நடந்துகொண்டு, அரக்கு-பஞ்சு - மெழுகு - குங்கிலியம் - அழிஞ்சில் மரம்-எண்ணெய் இவற்றால் பெரியகோட்டையொன்றியற்றி, அதில் அவர்களை வந்திருக்கும்படி செய்து, நித்திரை செய்யும்போது நெருப்பிட்டுக் கொல்லுவையா? தயிரிய மிருக்கிறதா? ஏதோ சொல் பார்ப்போமென்றான். பேராசைக்காரனுக்குப் புத்திமட்டாதலால் பிறவித் தரித்திரனாகிய புரோசனன் துரியோதனன் கருத்துக்கிசைந்து சொல்லுகிறான்: ஓ மண்டலேஸ்வரா! தாங்கள் எந்தெந்தகாலத்தில் என்னென்ன கட்டளையிடுவீர்களோ அக்கட்டளைப்படி நடக்கிறேனென்று விடைபெற்றுத் தருமராஜனோடு வந்து கலந்தான். துரியோதனனும் மற்றுமுள்ள ஜனங்களும் நகரம் வந்து சேர்ந்திருந்தார்கள். விதுரமகாராஜனவன் துரியோதனன் புரோசனனைத் தனியே அழைத்துப் பேசினதைக் கண்டு, அடடா! இப்பாவி என்னமோ கெடுதி செய்யக் கருதி யிருக்கிறானென்று நினைத்து, தருமராஜனிடத்துவந்து, அப்பா தருமநந்தனா! துரியோதனன் என்னமோ மோசஞ்செய்யக் காத்திருக்கிறான். புரோசனனை நம்பாமற் சாக்கிரதையா யிருங்களென்று சொல்லிப்போனான். தருமராஜன், தம்பிமார், அன்னை, மந்திரியாகிய புரோசனன் இவர்களை அழைத்துக்கொண்டு, நகரத்தைவிட்டுக் காடு மலைகளை எல்லாங் கடந்து, வாரணவதமென்னும் நகரத்துக் கருகில் வருகின்றார். இவர்கள் வருகிற சேதி அந்நகரத்துக் குடிகள் கேள்விப்பட்டு அதிக மகிழ்வைக்கொண்டு, சங்கீத வாத்தியத்துடன் எதிர்கொண்டுவந்து தருமராஜனைக் கண்டு வணங்கி அழைத்துப் போயினார்கள். புரோசனன் இவ்வைவரும் அந்நகரத்தில் தற்காலத்தி லிருக்கும்படியாய்ச் சந்திரவம்சத்தாருடைய பழைய அரண்மனையில் எல்லாப் பதார்த்தங்களையும் சேகரித்து வைத்து, இவர்களையும் அழைத்துப்போய் அரண்மனையிலிருக்கச் செய்தான்.

துரியோதனன் அரக்குமாளிகை கட்டுதல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! பாண்டுராஜ னிறக்கும்போது தருமராஜனுக்கு ஒன்பது வருஷம். மற்றத் தம்பிமார்கள் ஒவ்வொரு வருஷம் குறைந்தவர்கள். அத்தினபுரத்திலிருந்து வாரணவதத்திற்குப் போனபோது தருமராஜனுக்கு வயது பதின்மூன்று. இதற்குமேல் நடந்ததென்னெனில், துரியோதனனானவன் சகுனி - கர்னன் - துற்சாதனன் இவர்களோடு ஆலோசித்து, அரக்குமாளிகை கட்டத் தீர்மானித்து, சொர்க்கலோகத்திலிருக்கும் மயனென்னும் தெய்வ தச்சனுக்கு ஒப்பாகிக் கனகனென்னும் பெயர்கொண்டு தன்னுதீனத்திலிருக்கும் சிற்பாசாஸ்திரியை அழைத்து, அரக்குமாளிகை ஒன்று இயற்றும்படி நல்ல வார்த்தைகளா விசையச் செய்து, அவனை வாரணவதத்திற் கனுப்பி, அதற்குவேண்டிய சாமான்களை ரகசியமாகச் செலுத்தி, வெளிப்படையிற் பெரிய அரண்மனை கட்டுவதற்காக அனுப்பப்படுவதென்று யாவரும் நினைக்கும்படியாக கல்-மரம்-சுண்ண முதலிய சாமான்களை விடுத்து, புரோசனனுக்கு மகிழ்வுண்டாக அடிக்கடி அநேக திரவியாபரணங்களைக் கொடுத்து, விரைவில் முடிக்கும்படியாக அச் சிற்பிக்கும் நல்ல வார்த்தை சொல்லி யனுப்புவான். புரோசனன் துரியோதனனனுப்பவந்த கனகனென்கிற சிற்பசாஸ்திரியைக்கொண்டு, வாரணவத நகரத்துக்குப் பக்கத்திலுள்ள விஸ்தாரமான ஒரு இடத்திற் குங்கிலியம் - அழிஞ்சில் - எண்ணெய் - பஞ்சு - மெழுக்கு இவற்றால் கடைக்காலெழுப்பி, முன்னம் சுற்றுமதிலைச் சீர்திருத்தி கட்டிக்கொண்டு பின்னர் சொற்க மத்திய பாதாள லோகங்களிலிருக்கிறவர்களை யெல்லாம் இந்த மாளிகையைப்போற் கண்டதில்லை யென்று மதிக்கத் தக்கதாக உட்புறத்திற் சமயற்கட்டு - படுக்கை வீடு-சபாமண்டபம் - தென்றற்சாலை-போஜனச்சாலை - திருமஞ்சனச்சாலை - ஆடரங்கு-வித்வசபை - வேற்றரசர்சபை - சிங்கார மண்டபம்-உலாவியல் மண்டபம் இவை முதலியவற்றைப் புதுக்கி, பொன்மயமாகவும், முத்து-பவளம்-பச்சை முதலிய நவமணிமயமாகவும் அங்கங்கு விசித்திர வேலை செய்து, மூன்றே முக்கால் நாழிகைக்குள் வளைந்த மதில் முதலிய உட்புறமனைத்தும் வெந்து நீருரும்படி அம்மாளிகைக்கு அக்கினி மூலையிற் சரவத்தி வைத்து, நாற்புறமுங் குபீரென்று பற்ற மருந்துகணிறைத்து, எல்லா வேலையையும் நிறைவேற்றி, இன்னும் கிஞ்சித்து வேலை செய்யவேண்டி யிருக்கிறபோது கனகனென்றும் அச்சிற்ப சாஸ்திரி ஐவர்கண் மீது விசேஷ அன்பு வைத்திருக்கின்றவனாதலால் அவ்வைவரும் குந்திதேவியும் உயிர்ச்சேதமின்றி தப்பிப் பிழைத்துப்போக வீமன் பள்ளியறைக் கருகில் ஐந்துகால் மண்டபமொன்றியற்றி, அம்மண்டபத்தின் நடுக்காலை அந்தரமாகவும் பார்ப்பவர்க்கு நாலுகாலின் மேற் பளுவிருக்கிறதாகவும் வைத்து, அக்காலின் கீழ் இடும்பவனம் வரைக்கும் சுரங்கம் வைத்து, மற்றெல்லா வேலையையும் தீர்த்துவிட்டு அத்தினபுரத்துக்கு வந்து துரியோதனனுக்கு மாளிகை கட்டிய சேதியைத் தெரிவித்துத் தன் அரண்மனையை நோக்கி வருகின்றான்.

அப்படி வருகிறபோது அவனை விதுர மஹாராஜன் கண்டழைத்து, அப்பா கனகா! வாரணவதத்திலென்ன வேலை செய்கிறாய்? அதை ஒளியாமற் எனக்குச் சொல்லென்று கேட்க, கனகன் இவர் சத்தியவிரதர் அன்றியும் ஆஸ்தானபதி இவர்க்கு நாம் செய்த வேலையை ஒளித்தோமாகில் துரோகமாகிறது. ஒரு காலங்களில் வெளிப்பட்டால் தலைபோவது மல்லாமற் குடும்பத்துடன் வேர்களைந்து போடுவார்கள். இதன்றித் துரியோதனன் தான் செய்வித்த வேலையை வெளிப்படுத்தாதிருக்கக் கட்டளை யிட்டிருக்கிறான். அரசன் கட்டளைப்படி நடந்தால் அதனால் வரும் பாவம் அவ்வரசனைச் சேருமென்று துணிந்து கெடுதியான வேலைக்குப் பாத்தியப் பட்டோம், புத்தி கெட்டோம், மேலும் பாண்டவர்கள் நல்லவர்கள், அவர்கள் பொருட்டில் உண்மையைப் பேசாவிட்டால் நமக்குப் பாவம் நேரிடு மென்று கருதி, தன்னைக்கொண்டு செய்வித்த வேலையின் மர்மங்களை யெல்லாஞ் சாற்றினான். அதனை விதுரன் கேட்டுத் திடுக்கிட்டு மெய்சோர்ந்து ஒன்றுந் தோன்றாமல் திப்பிரமை கொண்டு, கைகால்கள் அசைவின்றி நின்று, சற்றுநேரஞ் சென்று தன்னறிவுதோன்றி, தெய்வமே! சந்திர வமிசத்தைப் பற்பலபேர் நகைக்கலாயிற்றே; ஐயையோ! பாண்டுமக்கள் இளவயதிலே பிதாவைப் பறிகொடுத்து, இவ்விடத்தில் வந்து இளவரசு பட்டம் பெற்று, பின்பு துரியோதனனுடைய துராலோசனையினால் அத

னையுமிழந்து வாரணவதஞ் சேர்ந்தும் அங்கும் உயிர்க்குத் தீங்குவரும்படி நேரிட்டதே; இதென்ன தீவினை ஆ தெய்வமே! தெய்வமே! என்று கனவருத்தமுற்று, கனகன் காலைப் பிடித்து வேண்டிக்கொள்வதற்குப் பதிலாக அவனிரண்டு கரங்களையும்பற்றி இறுகத்தழுவி, பலபல உபசார வார்த்தைகளைச் சொல்லி, அப்பா கனகா! உலகத்தில் இன்பமாகப் பெற்றோன், இடர்தனைத் தீர்த்தோன், அன்புடன் அன்னமளித் திரக்ஷித்தோன், நூல் கற்பித்தோன், உபதேசித்தோன் இவ்வைவரும் பிதாக்கள். நீ பாண்டவ ரைவருக்கும் உயிர்ச்சேதம் வராமலும், அரசனாகிய துரியோதனன் கட்டளைக் கழிவுவராமலும் ஒரு தந்திரஞ் செய்வையாகில் அந்தப் பாண்டவர்களுக்கு நாங்களெல்லாம் பிதாக்களல்ல. இறந்துபோன பாண்டுமஹாராஜன் நீயே இனி, யுனக்குச் சொல்லவேண்டிய தென்னை யென்று மிகுந்த ஆருமையோடு அணைத்து முத்தமிட்டான். கனகன் ஜாதியிற் கம்மியனாயிருந்தாலும் பதினெட்டு சிற்பிகளில் இவனும் ஒருவனாகியும், யாவர்க்கும் அதிகமான கல்விமானாகியும் பாண்டவர்கள்மீது, அதிக பிரீதி யுடையவனாகியும் இருப்பவனாதலால் மனங்களித்து ஒரு வசனஞ் சொல்லுகின்றான்.

ஓ ஸ்வாமி! தாங்கள் அஞ்சவேண்டாம், வஞ்சனைக்குக் கொள்கலனாகிய துரியோதனன் கட்டளைப்படி அரக்குமாளிகை செய்தேன். அப்படி செய்தாலும் பாண்டவர்கள் ஐவரும் குந்திதேவியும் உயிர்ச்சேத மின்றி தப்பிப் பிழைத்துப்போக அரக்குமாளிகையில் வீமன் பள்ளியறைக்கருகில் ஐந்துகாலால் ஒரு மண்டபமியற்றி, அம்மண்டபத்தை நான்கு காலில் நிற்கவைத்து, நடுக்காலின்கீழ் மனிதர் சஞ்சாரமில்லாத இடும்பாவனம் வரையிற் செல்லும் படியாய் ஒரு சுரங்கம் வைத்திருக்கிறேன். அந்த அரக்குமாளிகை தீப்படுகிற தினத்தில் வீமனுக்கு இந்த சூட்சந் தெரிந்திருந்தால், அவனால் மற்ற ஐவரும் தப்பித்துக்கொள்ளுவார்கள். இந்தக் கருத்தை வீமசேனனுக்கு நானே சொல்லிவிடுகிறே னென்றான். இவ்வசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் உலகத்தில் ஒருவன் கல்விமானாகியும், நன்றி யறியுந் தன்மையை யுடையவனாகியும், மண்டலேஸ்வரனாகியு மிருந்து, ஏதோ ஒரு முகாந்தரத்தால் தன் பரிவாரங்களை விட்டுத் தனியே காட்டிற் சென்று விடாய்ப்பட்டு நாவும் நாபியும் வறண்டு களைதாங்கிச் சோர்வுற்ற காலத்தில், புல்லரிசிக் கஞ்சி கிடைத்தால் அதற்கவன் எவ்வளவு மகிழ் வடைவானோ அவ்வளவு மகிழ்வை விதுரமகாராஜன் அடைந்து, அந்தக் கனகனுக்கு வேண்டிய வெகுமானங் கொடுத்து பற்பல உபசாரங்களைச் சொல்லி, அப்பா கனகா! இந்த விருத்தாந்தம் எங்கும் வெளிப்படாம லிருக்கவேண்டுமென்று சொல்லித் திட்டஞ்செய்து அனுப்பிவித்தான். உடனே அக்கனகனும் நல்லது ஐயாவென்று நமஸ்காரித்து தன் வீட்டிற்குப் போனான்.

### பாண்டவர் அரக்குமாளிகையிற் குடிபுகுதல்

இங்கே புரோசனன் தருமராஜனிடத்துப் பொய்யன்பு காட்டி மகா உபகாரிபோல் நடந்து வருகிறான். தருமராஜன் இந்தப் புரோசனனைப் பிதாவினால் அனுப்பிவிக்கப் பட்டபடியால் அவனைப் பிதாவைப்போற் பாவித்து, அவன் கருத்தின்படி தான் நடக்கிறதுமன்றித் தன் தம்பிமார்களையும் அவ்வாறு நடந்துகொள்ளும்படி செய்துவருவார். இப்படியிருக்கிற காலத்தில் ஒருநாள் புரோசனன் தருமராஜனிடத்துவந்து சொல்லுகிறான். ஓ மண்டலேஸ்வரா! பெரியவரச னுத்திரவுப்படிக்குத் தங்களுக்கு மகா விநோதமுள்ள ஒரு மாளிகை யேற்படுத்தி வைத்தேன் அதில் நல்ல தினத்திற் பிரவேசிக்க வேண்டுமென்றபிநயித்தான். தருமராஜன் தன் சபையிலிருக்கும் வேதவேதியர்களை நோக்கி, ஓ ஸ்வாமிகளே! கிரகப்பிரவேசத்துக்கு ஒரு தினம் நியமகஞ்செய்ய வேண்டுமென்று நமஸ்கரிக்க, வேதியர்கள் நல்ல சுபமுகூர்த்தமொன்று நியமகஞ் செய்தார்கள். அந்த முகூர்த்தத்தில் ஐவரும் குந்திதேவியும் ஸ்நானஞ் செய்து பூசை முடித்து காசி விஸ்வநாத மூர்த்தியைத் தரிசித்து, புதிய மாளிகையைப் புண்ணியாவசனஞ் செய்து, வேதியர்களுக்கும் மற்ற யாவர்க்கும் வேண்டியவற்றை யுதவி, ஐவரும் குந்திதேவியும் குடிவந்தார்கள். தருமராஜன் அம்மாளிகையின் உன்னத விநோதங்களைப் பார்வையிட்டு அதிக மகிழ்வடைந்து புரோசனனைப் புகழ்ந்து கொண்டாடி, அன்றுமுதற் பாண்டவர்கள் அம்மாளிகையிலே விருந்து முதலியவும் உண்டிருந்தார்கள்.

இப்பால் பாண்டவர்கள் அம்மாளிகையிற் குடி வந்திருப்பதைத் துரியோதனனுக்

திரௌபதி உற்பவம்.



அரக்கு மாளிகையை தீயிடுதல்.

குப் புரோசனன் தெரிவித்தான். துரியோதனன் கனகனென்கிற சிப்பியையும், சகுனிகர்னன் இவர்களையும் ஒரு அறையி லழைத்துப்போய், ஓ ஆப்தர்களே! ஐவரும் அரக்கு மாளிகையிற் குடிபுகுந்தார்களாம். இனி அக்கினி மூட்டுதற்குத் தாமிசமென்ன? இப்போது வருகிற கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி இராத்திரி பதினைந்து நாழிகைக்கு அனலிட்டு விடுவோ மென்ருன். அவர்களும் அதற்கிசைந்தார்கள். உடனே துரியோதனன் புரோசனனுக்குத் தெரிவித்தான். புரோசனன் அந்தச் சதுர்த்தசியை எதிர்பார்த்திருந்தான். சிப்பி சாஸ்திரிகளிற் அதிக சிறப்பு வாய்ந்த அக்கனகனைவன் ஒருநாளிரவில் தனதுருவத்தை மறைத்து யாசகர் வேடம்பூண்டு வாரணுவதத்துக்கு வந்து வீமனைக்கண்டு சாஷ்டாங்கமாகக் காலில் விழுந்து பணிந்தான். அப்படி வணங்கினவனை வீமன் நோக்கி, அப்பா! நீயார்? என்னை வணங்க வேண்டியதென்ன? என்று வினவ, கனகனெழுந்து கைகட்டிச் சொல்லுகிருன். ஓ ஐயனே! நானிந்த மாளிகையைக் கட்டிய சிற்பி. உங்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளவந்தேன். அதாவது, இம்மாளிகை அரக்கு-பஞ்சு-அழிஞ்சல்மரம்-எண்ணெய்-மெழுக்கு இவற்ருல் முடிந்திருக்கின்றது. இது உங்களைக் கொல்லும்படி துரியோதனன் செய்த கபடம் இந்த மாளிகையில் நீங்கள் நித்திரை செய்யும்போது, அக்கினி மூலையில் வைத்திருக்கும் சரவத்தியில் நெருப்பிடக் கிருஷ்ணபக்ஷச் சதுர்த்தசி இரவில் 15-நாழிகைக்கு நல்லவேளை பார்த்திருக்கின்றது. நான் உங்களின்மீது அன்புள்ளவனுதலால் உங்கட்கு யாதொரு தீங்குமின்றித் தப்பித்துக் கொள்ளும்படிக்கும், துரியோதனன் கட்டளைக் கழிவு வராமற்படிக்கும், ஒரு தந்திரஞ் செய்துவைத்தேன். அதனைத் தாங்கள் மனதில் வைத்து, சதுர்த்தசியி னன்றைக்கு மாளிகை நான்குபுறமுந் தீமூட்டிப் பற்றுமுன்னமே நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்களென்றுகூறித் தான் செய்துவைத்திருக்குந் தந்திரத்தைச் சொல்லுகிருன்.

ஐயா வீமராஜனே! உமது பள்ளியறைக்கு அருகில் ஐந்துகால் மண்டபம் கட்டியிருக்கிறேன். அதினடுக்கால் அந்தரமா யிருக்குமந்த அந்தரக்காலை மந்தரகிரிபோன்ற உமது புயத்தாற் பெயர்த்து அந்தக் கம்பமிருந்த பாறையைப் புரட்டினுல், அதிற் சுரங்கவழி தோன்றும், அவ்வழியி லிறங்கிப்போய் இடும்பாவனஞ் சேரலாம் என்றுரைத்து, எனக்கு விடைகொடுத்தருளும் விரைவில் விதுரமகாராஜனுக்கு இச்செய்தியை விளம்பிப் போகவேண்டுமென்று வேண்டினுன். வீமன் துரியோதனன் எண்ணிய எண்ணத்தைக் குறித்து வருந்தித் தாங்களாறுபேரும் அழியாமற் பிழைக்கும்படிக்கு உபாயஞ் சொல்லிய கனகனைத் தழுவிக்கொண்டு புகழ்ந்து மகிழ்ந்து, அப்பா சிற்பி! அன்று பாண்டுராஜன் வயிற்றிற் பிறந்தோம். உன்னுள்விஞ லிறந்த எங்கட்குயிருதவிசெய்தாய். உத்தமனே! உனக்கு நான் செய்யுமுபகாரமென்ன யிருக்கின்றது? இதோ நான் பூண்டிருக்கும் பணிகளெல்லாம் கொடுத்தேன் இவைகளை அங்கீகரித்துக் கொள்ளென்று பிரியவசனஞ்சொல்லி விடைகொடுத்துவிட்டு, மாளிகையிற் பிரவேசித்து, கனகனுரைத்த சூக்ஷியை யெல்லாம் ரக்ஷியமாகப் பார்வையிட்டு, தமயன் தம்பிமார்களோடும் சொல்லாமல் தன் மனதில் வைத்துக்கொண்டு புரோசனன்மேல் லக்ஷியமா யிருந்தான். சதுர்த்தசியும் வந்தது. அன்றையத்தினம் புரோசனன் உதயத்திலெழுந்து ஐவரிடத்து வந்து, மிகுந்த அன்புடையவனைப்போல் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, வாய் பொத்தி எதிர் நின்று, ஓ சுவாமி தருமநந்தனு! ஏதாவது அடியேனுக்குக் கட்டளையிட வேண்டியிருந்தா லிடுங்களென்று வினவ, தருமராஜன் காலகதியாற் சொல்லுகிருர். ஓ புரோசனு! நாமிந்நகரத்துக்கு வந்ததுமுதல் நாட்டைப் பார்த்தோமே யன்றிக் காட்டைப் பார்க்கவில்லை. ஆதலால், காட்டிற் சென்று நாம் வேட்டையாட வேண்டுமென்று கூற, புரோசனன் அக்கணமே வேட்டைக்குத் தகுந்த முயற்சி செய்தான். ஐவரும் காட்டிற் சென்று பெரிய மிருகங்களை யெல்லாம் அதமாக வேட்டையாடி, நகரத்துக்குவந்து அரக்குமாளிகை சேர்ந்து, ஸ்நானம்பண்ணி போசனஞ்செய்த பின்பு தாங்கள் புரோசனனை அழைத்து, அப்பா புரோசனு! நாங்கள் வேட்டையாடி தேகம் அலண்டிருக்கிருேம். நீ இங்கிருந்து காவலைச் செய்திரு நாங்கள் நித்திரை பண்ணச் செல்கிருேம் என்று ஐவரும் படுக்கையறையிற் சென்று மஞ்சத்திற் சயனித்துக் கொண்டு நித்திரை போனுர்கள்.

அரக்குமாளிகையை தீயிடுதல்

இவர்களில் வீமன்மாத்திரம் கனகனென்கிற சிற்பி கூறியவற்றை மனதில் மதித்து

இன்றைய தினம் இந்த மாளிகை தீப்படுமாதலால் நாம் ஜாக்கிரதையாக யிருக்கவேண்டுமென்று நினைத்துக் கண்டுயிலாதிருந்தான். அக்கினியிடுகிறதற்குக் குறித்த முகூர்த்தம் நெருங்கிற்று அந்தவேளையில்வீமன் எழுந்து புரோசனனிருக்கிற விடத்தில் வந்து பார்க்கும்போது, புரோசனனுக்கு இப்பூமியின் சம்பந்தம் நீங்கினபடியால் இருந்தவிடத்திலே தானே துயின்றுவிட்டான். அதனை வீமன் பார்த்து, இந்தப்பாவி உள்ளனுங் கள்ளனுமாயிருந்து நம்மைக் கொல்ல நினைத்தான். தெய்வமிவனைப் பெருந் தூக்கத்திற் சேர்த்தது. இவனிப்படியே தூங்கட்டும். நாமே சரவத்திக்கு அனலிட்டு விடுவோம் அதன்மேல் தூங்குகிறவன் தூங்கிப் போவான் எனக் கருதிச் சமையக் கட்டிற்சென்று, ஒரு கொள்ளிக் கட்டையை எடுத்துக்கொண்டு அக்கினி மூலையில் வைத்திருக்கும் சரவத்திக்கு நெருப்பிட்டு, ஓடோடியும் வந்து தருமராஜனை ஒரு புஜத்திலும், குந்திதேவியை முதுகிலும் மற்றொரு புஜத்திற் பற்குணனேயும் இரண்டுதம்பியரை இரண்டுகையிலுமேந்திக்கொண்டு, 5-கால் மண்டபத்தி னடுக்காலையுதைத்துத்தள்ளி, அதன் அடியிலிருக்கும் பாறையை எடுத்து உட்புகுந்து, முன்போல் அப்பாறையை மூடிவிட்டு அதிவேகமாக அச்சுரங்கத்திற் சென்று இடும்பாவனத்தில் வந்து, அங்கு மூடியிருக்கும் பாறையைத் தலையால் முட்டிக் கிளப்பி, அஞ்சுதலை நாகம் அஞ்சுதல் நீங்கி ஆறுதலையுடன் வெளிப்பட்டா லெப்படியோ அவ்வாறு ஐவரையுந் தாங்கி வெளியில் வந்து, அவ்விடத்தில் ஓர் சமமான பூமியில் தழைகளைப்பரப்பி, ஐவரையும் நித்திரை பங்கமில்லாமற் படுக்க வைத்து, அங்கு மிருக செந்துக்கள் அதிகமாகையால் தான் நித்திரைசெய்யாமற் காவலிருந்தான். குந்திதேவி, தருமராஜன், பற்குணன் நகுலன், சகாதேவன் இவர்களுக்கு அதிக நித்திரை மயக்கத்தால் வீமனெடுத்து வந்தது கனவுபோ லிருந்தது.

இங்கே சரவத்தியில் அனலிட்ட மாத்திரத்தில் குபீலென்று தணலதிகரித் தெழும்பிச் சுற்றி மதிலவளைந்து, உள்ளிருந்த மாளிகை முற்றும் நீறுக்கிவிட்டதுமன்றி மறந்து தூங்கி விட்ட புரோசனனையும், துரியோதனன் கட்டளைப்படி விஷம் கலந்த தேனைக்கொடுக்க அம்மாளிகையில் வந்திருந்த ஐந்து வேடரையும் அவ்வேடர்களின் தாயையும் சாம்பராக்கி விட்டது. வாரணவத புரியிலிருக்கிறவர்கள் யாவரு மெழுந்து, அரக்குமாளிகை எரிவதைக்கண்டு மன நடுங்கி, ஐயையோ! பிர்மா-விஷ்ணு - உருத்திரன் முதலானவர்கள் கதிக்கத்தகுந்த சிறப்பினைவகித்த சந்திரவமிச சிகாமணிகளான ஐவரும் தாயும் வெந்து நீருகி விட்டார்களே! இனி நாமென்ன செய்யப் போகிறோம்! ஹரி! ஹரி!! தெய்வமே! தெய்வமே யென்றலரி வயிற்றி லறைந்து கொண்டார்கள். சிலர் தரையிற் விழுந்து புரண்டுபுரண்டு அழுதார்கள். சிலர் பிரமை கொண்டு நின்றார்கள். இவ்வாறு யாவரும் வருத்தமடைந்து, உதயமானவுடன் அத்தினபுரத்திற்கு இச்சேதியைத் தெரிவிக்க தூதரை அனுப்பினார்கள். அந்தத் தூதர் கடுகி வந்து, வீஷ்மர்-துரோணர்-கிருபர் - அஸ்வத்தாமர்-கர்னன்-சகுனி-விதுரன் - மந்திரிகள் - பட்டவர்த்தனர்-மகுடவர்த்தனர் முதலானவர்களுடைசூழக் கொலுவிருக்கும் துரியோதனன் காலின் விழுந்து, ஓவென்றலரிச் சொல்லுகிறார்கள்: ஓ மண்டலேஸ்வரா! வாரணவதத்தில் வந்து இளவரசுபட்டத்தைச் செலுத்தி வந்த ஐவரும் தாயும் நூதனமாக இயற்றிய மாளிகையில் நித்திரை செய்திருக்கிறபோது, அம்மாளிகை தீப்பட்டுக் கரிந்து போயிற்றென்றார்கள். அச்சபையிலிருக்கிற யாவர்களு மிவ்வசனத்தைக் கேட்டமாத்திரத்தில் சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்து, சற்று நேரம் சென்றவுடன் மூர்ச்சைதெளிந்து, ஒவ்வொருவராக எழுந்து ஏங்கி விழுந்து மன நடுங்கிச் சரீரந் துடித்து, வாய் குழறி நாவரண்டு ஓவென்றழத் தொடங்கினார்கள். இவர்களோடு துரியோதனனும், சகுனியும், கர்னனும் உள்ளே மகிழ்வுற்றிருந்தாலும் உலகத்துக்கு மெய்ப்படப் புரண்டழுவார்களோடு தாங்களும் எதிர்சென்று நின்று மருண்டழத் தொடங்கினார்கள். இந்தச் சேதி திரிதராஷ்டிரனும் அந்தப்புரத்தி லிருப்பவர்களும் கேள்வியுற்று ஓவென்றலரத் தலைப்பட்டார்கள். அத்தினபுரத்து ஆஸ்தானத்திலெழுந்த அழுகை யொலியானது கடலொலி போ லிருந்தது.

இப்படி யாவரும் சிலநேரம் அழுது புலம்பிப் பின்பு ஒருவாறாய் மனந்தேற, துரோணர், கிருபர் இவர்கள் ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்? வீமன் வாயுபகவானுடைய

புத்திரனாயிற்றே, அவன் இருக்கும்போதே அவ்வாயுவுக்கு நண்பனாகிய அக்கினிபகவான் தன் கிரணத்தைத் தாக்குவானா? ஐயோ! இவ்வுலகிலுள்ள சுத்தவீரர்களிற் சிறந்த பராக்கிரமனாகியும் அதிக யுக்தியுடையவனாகியு மிருக்கிற பற்குனன் மெய்மறந்தானா? வில்லில் தேவாஸ்திரங்களி லொன்றாகிய வருணாஸ்திரமிருக்கிறதே அதனைத் தொடுத்துவிட்டால் அரைமாத்திரையில் அக்கினியை அவித்துவிடுமே அல்லது வில்லெடுக்க நேரமில்லாவிட்டாலும் ஒரு துரும்பை யெடுத்து வருணேஸ்வர மந்திரத்தை யுச்சரித்து விடலாகாதா? என்ன வித்தை கற்றாலும் காலம் நெருங்கினால் ஒன்றுந் தோன்றாமற் கெடுவரென்று ஆன்றோர்களுரைத்திருக்கின்றது ஐவரிடத்துத் திருஷ்டாந்த மாயிற்றே யென்று பலவாறு நினைந்துருகினார்கள். வீஷ்மர் பாவியாகிய துரியோதனன் செய்த சூதினால் பஞ்சகர்த்தாவைப் போல் விளங்கும் பாண்டவரைப் பறிகொடுத்தோம். இனி வருத்தப்பட்டதினால் பலனில்லையென்று திடச்சித்தத்துடன் தேறினார். இவர்களொப்பந்தம் விதுரராஜனும் தேம்பித் தேம்பி விசனப்பட்டுக் கனகனென்கிற சிற்பி சொல்லிய வாக்குதத்தத்தை நினைத்துத் தைரியங்கொண்டிருந்தான். திரிதராஷ்டிரன் முதலானவர்கள் (ஆடு நனைகிறதற்குக் கோணாயழுவதுபோல்) அழுதார்கள்.

பின்பு யாவரும் ஒன்றாகக்கூடி வாரணாவதம் வந்து அரக்குமாளிகையைச் சோதித்துப் பார்க்கும்போது, ஐந்து வேடரெலும்பும் அவ்வேடர்களின் தாயெலும்பும் தோன்றிற்று. அதனைப் பார்த்து யாவரும் கனவருத்த மடைந்தார்கள். விதுரன் அவ்வெலும்பைக் கண்ணுற்று முன்கொண்ட தைரியத்தை யிழந்து, இது ஐவருடைய எலும்பென்று தீர்மானித்து, சர்வுக்குச் சரியான மூர்ச்சை யடைந்து வீழ்ந்து மீண்டுந் தெளிந்தெழுந்து, ஐயோ மக்களே! ஐயோ மக்களே! என்று ஓவென்றலறி மதிமருண்டு, கோபமென்கிற வாயுமோதலிற் பட்டுப் பெருமூச்செறிந்து, சரீரமுழுவதும் காந்தி, விழிகளில் நீர்ப்பசுமையற்று, பிராணநிலை பெருமலலைந்து, உதிரம்பெருக வெயர்த்து, நடுநடுங்கிப் பதைபதைத்து, நிலத்தில் வீழ்ந்து புரண்டு, ஓ மதக்களிற்றனையொத்த மைந்தர்களே! எதிர்த்து வந்த சத்துருக்களுக்கு எமனைப்போன்றவர்களே! மதித்து வந்தோர்களை மஹாவிஷ்ணுவைப்போற் காக்குந் தீரர்களே! மகமேருகிரியை யொத்துப் பிரகாசிக்குங் கீர்த்திப் பிரதாபர்களே! சத்தியமே நித்தியமாகவுடைய உங்கட்கும் இத்தீங்கு நேர்ந்ததல்லவா? இந்தச் சந்திரகுலத்தை ஆலமரத்தின்கீழ் விழுதுபோல் அந்தியத்தில் நீங்கள்தான் ஆதரிப்பீர்களென்றெண்ணி யிருந்தேனே, அந்த எண்ணமெல்லாந் தற்காலத்தில் ஆற்றிற் கலக்கிவிட்ட ஆவின்பாலுக் கொப்பாய்விட்டதே! சர்வலோகரக்ஷகனாகிய அரிவாசுதேவன் நீங்கள் எங்கிருந்தபோதிலும் உங்களைப் பக்கத் துணையாயிருந்து பாதுகாப்பாரென்றெண்ணி யிருந்தேனே, அவருக்கும் உங்கள் மீதிற் கிஞ்சித்தும் கிருபையில்லாமற் போய்விட்டதா? முன்னம் நீங்கள் தந்தையைத் தருமவார்த்தை யென்றெண்ணி வாரணாவதத்திற்குச் செல்லும்போது, எங்களோடு பிரிவாற்றாமையால் பரிதாபிப்பவன்போல் வழிவிட வந்த வஞ்சகப் பாவியாகிய துரியன் புரோசனனைத் தனியே யழைத்து ரகசியம் பேசி யனுப்பியபோதே எனக்குச்சந்தேகமுண்டாகி, நானுமுங்கட்கு இரகசியமாய்ப் புரோசனனை நம்பவேண்டாம் ஜாக்கிரதையாயிருங்களென்று எச்சரிக்கை செய்து வந்தேனே அதனை மறந்தீர்களோ? அப்பால் இவ்வாரணாவதத்தில் நடக்கிற வஞ்சகத்தையெல்லாம் கனகனென்னுஞ் சிற்பியால் கேட்டறிந்தபோது, உடனே எனக்குண்டான மனவருத்தமாற அவன் சொல்லிய வார்த்தையானது ஒருவன் தன்னுயிர்போன்ற பொருளை வைத்துக் காணாமல் துக்கித்து மீண்டும் அப்பொருளைக் கண்டால் எவ்வித பூரிப்பை யடைவானோ? ஒருவன் தேகத்தைவிட்டு நீங்கிப்போன உயிரானது மீளவுந் தேகத்திற்றானே வந்து பிரவேசித்தால் எவ்வளவு மகிழ்ச்சி யடைவானோ? ஒருவன் மானிடனாய்ப் பிறந்தும் மோக்ஷம் பெறவேண்டிய முயற்சியில்லாமலிருந்து இறந்தவுடன் அம் மோக்ஷம் தற்செயலாய் கிடைக்குமாகில் அப்போது அவன் எவ்வகைத்தான் பிரம்மானந்தத்தை யடைவானோ? அவ்வகைத்தான் பூரிப்பும், மன மகிழ்ச்சியும், பிர்ம்மானந்தமும் உண்டாக்கத் தக்கதா யிருந்ததே? அஃதிப்போது அழலிற்பட்ட பஞ்சாய் விட்டதென்ன காரணமோ? ஐயா தருமநந்தனா! சத்தியமென்பதெங்குள்ளதோ அவைகளெல்லாம் உன்னுடைய அகண்ட சத்தியத்தின் அம்சமென்று சொல்லும்படியாக உருக்

கொண்டு வந்த உனக்கும் இவ்வித ஆபத்து நேர்ந்ததா? அப்பா வீமசேனு! பிரசண்ட மாருதத்திற் கொப்பான வேகத்தையும், ஆல காலத்திற் கொப்பான கோபத்தையும், வடவைக்கனலுக் கொப்பான வீரத்தையும், பெரும்புற கடலுக்கொப்பான தயையும், சர்வசங்கார உருத்திரமூர்த்திக்கொப்பான திடதைரிய பராக்கிரமத்தையும் எங்கிருத்திப் போயினையோ? தம்பி அர்ச்சுனு! வில்லாசிரியராகிய துரோணுசாரிக்கு முதலேயால் நேரிட்ட ஆபத்தை நீக்கி அவர் பொன்போன்றபடியான மேன்மை பெற்றதல்லாமல், அவர் பாஞ்சால னிடத்திற் பேசிவந்த சபதத்தை நிறைவேற்ற யெத்தனே பேர் சென்று எதிர்த்தும் ஆகாமற் பின்பு தனியே சென்று வென்று, அவனைத் தேர்க்காலிற் கட்டிக்கொண்டு வந்து ஆசாரிய ரெதிரில் விட்டு, அவர் சபதத்தையும் நிறைவேற்றினு யன்றோ? அது காலேயில் அப்பாஞ்சாலன் அவ்வாசாரியருக்கு மறு சபதங் கூறி, தன்னே வெற்றி கொண்ட உன் தோளுக்குரிய ஒரு புத்திரியைப் பெற்றுத் தரக்கடவேனென்று ஓருருதி செய்து கொண்டுபோய்ப் புத்திரகாமேஷ்டி யாகத்தால் திரிலோகமும் மெச்சத்தக்க புத்திரியைப் பெற்று வைத்திருக்கின்றனே, அவனெண்ணம் மண்ணுயதே, மகனே நகுலா! குழந்தாய் சகாதேவா! முற்றுந் துறந்த முனிவர்களும் உங்கள் முகாரவிந்தத்தை நோக்கும்போது இப்படிப்பட்ட புத்திர பாக்கியமே முத்திக்கு வித்தென்று இச்சை கொள்வார்களே அப்படிப்பட்ட உருவும் உணர்வும், உண்மையும், உபகாரமுமாகிய எல்லா நன்மைகளும் வாய்ந்த உங்களேயும் அக்கினிதேவன் இறிது மிரக்கமின்றித் தகித்து விட்டானல்லவா? ஆனதினுற்றுன் அவன் யாவராலும் (சேர்ந்தார்க்கொல்லி) என்றழைக்கப்படுகிறுன். ஆ! ஆ! மைந்தர்களே! நீங்களனேவரும் எனக்கெய்ப்பில் வைப்பானவர்க ளென்றெண்ணியிருந்தேனே, அவ் வெண்ணமுமின்று உங்களேத் தீய்த்த அனலிற் றீய்ந்தது போலானதே, ஐயோ! அரண்மனேயில் வெவ்வேறு தனித்து நித்திரை செய்யும் நீங்களனேவரும் தாயும் ஒரே விடத்தில் வந்து எரிந்து என்பாய்ப் போயிருப்பதைப் பார்த்தால், அனற்பட்டவுடன் வெளியில் வரலாமென்று ஓடி வந்தீர்களோ? அப்படி ஓடி வந்தும் உங்கள் தலேவிதி வசத்தால் வாசற்படியி லகப்பட்டு மடிந்தீர்களோ? அந்தோ! தெய்வமே! என்று பலவாறு தனக்குள் தானே அழுது புலம்பினுன். துரியோதனனு மவனேச் சேர்ந்த மற்ற மூன்று துராலோசனேக்காரரும் நாம் கருதியிருந்த வேலே இன்று முடிந்தது. இனி நமக்குச் சல்லியமில்லே என்று உளங்களித்து வெளிக்குக் காட்டாம லழுதார்கள். இப்பால் ஐவருக்கும் ஐவரை யீன்ற மாதாவுக்கும் நீர்க்கடன் முதலியவற்றைச் செய்துவிட்டு, யாவரும் அத்தினபுரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். துரியோதனன் முன் கொண்டிருந்த ஏக்கத்தை நீக்கி, பராக்கிரமத்துடன் ஆக்கத்தைப் பெற்றேமென்று மனவூக்கத்தைக்கொண்டு அரசு செலுத்தி வந்தான். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! துரியோதனன் தனக்கு இனி மேல் நேரிடும் பேரிடிக் கொப்பாகிய பெருந்துன்பங்கள் பலவாய் வருகிறதை யுணராமல், (கழுத்துமேல் வெட்டு விழுவதை யறியாமல் தனக்குக் கொடுக்கிற தூபதீபத்தையும் தழையையுங் கண்டு மகிழும் பலியாட்டைப்போல்) மகிழ்வடைந்து இனிது வாழ்ந்திருந்தான். இனி யங்கே இடும்பாவனத்திலிருந்த பாண்டு மக்கள் கதையைச் சொல்லுகிறேன் கேளுமென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினுர்.

வாரணுவதச்சருக்கம் முற்றிற்று.

---

ஏழாவது,

## வேத்திரகீயச்சருக்கம்

### கண்ணன் துதி

சீதநாண்மலர்க் கோயின்மேவுசெந் திருவினுயகன் றேவநாயகன், வேதநாயகன் பூதநாயகன் விரதநாயகன் விபுதநாயகன், போதகாதிபன் முதலேவர்யிடைப் பொறைதளர்ந்து முன் பெ.துவிலே நினே ந், தாதிமூலமேயென்னமுன்வரு மாதிநாயக னடிவணங்குவாம்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! வீமன் தன் தமயன் தம்பிமார் அன்னே இவ்வைவரும் நித்திரை செய்யத் தான் காவலாயிருக்கும்போது, அவ்வனம் இடும்பனென்கிற அரக்கனும், அவன் தங்கை இடும்பியும் வாழுமிடமாதலால், இடும்பனிவர்கள் வந்திருக்கிறதைக் காற்றுவாடையால் உணர்ந்து, தமது பசிக்கு இரை யகப்பட்டாற்போ லிருக்கின்றதென்று திடுக்கென் றெழுந்து வெளிப்பட்

டான். இடும்பி அதிவேகமாக வெளிப்பட்ட
தமயனை வணங்கி, எங்கு செல்லுகிறாய் அண்
ணாவென்று வினவினாள். இடும்பன் சொல்லு
கிறான். ஓ அம்மா! நமக்கு நெடுநாளாக நர
மாமிச மகப்படாம விருந்தது. இன்றைய
தினம் நரஜீவன் நமது வனத்தில் வந்திருக்
கிறதாகக் காற்றுவாடை காட்டுகிறதால், நான்
அவ்விடத்துக்குப் போகிறேனென்றான். இடு
ம்பி தமயனை வணங்கி, ஓ அண்ணா! நானும்
நரமாமிசம் புசித்து நெடுநாளாயிற்று எனக்கு
விடைகொடுத்தால் நானே சென்று வந்த
நரரை என் பசியாறத் தின்று தங்களுக்குக்
கொண்டுவருகிறேனென்று புகன்றாள். இடும்
பன் அவள் கருத்துக்கிசைந்து, நல்லது அப்
படியே நீ போய்ப் புசித்து எனக்குக் கொண்டு
வாவென்று சொல்லி, அவன் நின்றுவிட்
டான். இடும்பிசாதியில் அரக்கியாயிருந்தாலும்
வடிவில் மகா லட்சுமியையொத்து விளங்கு
வாள். அதனால் கமலக்கன்னி யென்றும் பெய
ருடையவள். அவ்விடும்பி விரைவாக நடந்து
வந்து வீமனைப் பார்த்தாள். அவனது தேக
காத்திரத்தையும், அழகையும் வலியுடைமையு
மதித்து, இவர் நரனாயிருந்தபோதிலும் திணி
வுடைமை முதலியவற்றால் நமதினமா யிருக்கி
றார். மேலும் அழகிலுயர்ந்தவர் இப்படிப்பட்
டவரை நாம் கணவனாகக் கொள்ளவேண்டு
மென்று கருதி, கொல்லவும், அடிக்கவும், பிச்
சவும், பிடுங்கவும், மெல்லவும், விழுங்கவும்,
வந்த கருத்தைவிட்டு, நாணம்-மடம்-அச்சம்-
பயிர்ப்பென்னு நான்கையும் நீங்கி அடங்கி
ஒடுங்கி அருகில் வந்துநின்று, ஓ நரேந்திரா!
நீர் யார்? உமது பெயரென்ன? உமது இருப்
பிடமெது? இவ்விடம் வந்த காரணமென்ன
வென்று வினவினாள்.

### இடும்பாசுரன் வதை.

வீமன் இடும்பியை நோக்கி, அடி பெண்
ணே! நீ யார்? உன் பெயரென்ன? இந்த நள்
ளிருளி லிங்குவந்த காரணமென்ன வென்று
கேட்க, இடும்பி அடடா! இவர் மகா பலவான்
நம்மைப் பார்த்த நரரெல்லாம் விடவிடத்
து, துடிதுடித்து, பதைபதைத்து, நடுநடுங்கி
யுயி ரொடுங்குவார்கள். நாம் அவர்களை வா
ழைப்பழம்போல் விழுங்கிப் போடுவோ மப்
படியிருக்க, இவர் நாம் கேட்ட கேள்விக் குத்
தரவு கொடுக்காமல் நம்மை எதிருத்தரங்
கேட்கிறார் நமக்குக் காரியமுடிகிறதே பெரிது
வீரியத்தைக் காட்டுவதற்கு வெளிப்படாமல்,

நமது கருத்திற்கொண்ட கோரிக்கை நிறை
வேறாது. ஆதலால் நாமே விடை கொடுப்போ
மென்று நிதானித்து மதித்து வீமனை நோக்
கிச் சொல்லுகிறாள். ஓ திடகாத்திர வீரசவுந்
தரிய நரேந்திரா! இவ்வனம் இராவணேஸ்
வரன் வல்லமைக் கொப்பாகிய இடும்பாசுர
னுக்கு நிவாசஸ்தலம். நான் அவன் தங்கை.
என் பெயரும் இடும்பிதான். நீரிங்கே வந்த
தைக் காற்றுவாடையி லுணர்ந்த என் தமைய
னாகிய இடும்பாசுரன், உம்மைப் புசிக்க எழு
ந்து அதிவேகமாக வந்தான். அவனை நிற்க
வைத்து நானும்மைத் தின்னவந்தேன். வந்த
விடத்தில் உமது வடிவத்தைப் பார்த்தவுடன்
அதிக மயலாகி நின்றேன். இப்போது என்
னைக்கூடி மனங் களிப்புறச் செய்தால் என்
தமயனாலும் இன்னும் யாவராலும் உமக்கு
கெடுதி வராமற் காப்பதுமன்றி, சொற்கமத்
திய பாதாளலோக விநோதங்களைப் பார்க்க
விருப்பங் கொண்டாலும் அவ்விடங்களி
லுள்ள பொருள்களின்மேல் ஆசை யிருந்தா
லும் அரைநொடியிற் கொண்டுபோய் விடுப்
பேன். அவ் வஸ்துக்களையும் கொண்டுவந்து
கொடுப்பேன். என்மீது அன்பு வைத்தென்னை
யாளுமென்று இனிய வசனங்களால் வேண்
டினாள்.

வீமனவளைப் பார்த்து சிரித்து, அடி
பெண்ணே! உன் வல்லமையை நீயேதான்
சொல்லவேண்டும் மற்றொருவர் யார் புகழப்
போகிறார்கள்? அஃதிருக்கட்டும் உன் தமயன்
இராவணன் வல்லமைக் கொப்பானவ னென்
றும், என்னை விவாகஞ் செய்துகொள்ளென்
றும் கூறினாய்? இது நன்றாயிருக்கின்றது.
இராவணனே ஒரு மானிடனாலிறந்தான் உன்
தமயன் அவனுக் கொப்பானவனென்றால்
அதிலென்ன பெருமை? எவராலும் ஒருவன்
இறக்காததல்லவோ பெருமையில்லை இரா
வணனுக் கொப்பானவனே யெனில், யாதாவ
தொருத்தர் கொன்று காலை வாரி யிழுத்துப்
போடுவார்கள் அவனைக் குறித்துச் சிறப்பாகச்
சொல்லவேண்டுவதில்லை என்னைக் கூடென்று
யோசியாமல் எதிர்நின்று புகன்றையே நான்
மானிடன் நீ அரக்கி உனக்கும் எனக்கும்
கணப்பொருத்தம் பொருந்தாது. ஆதலால்
இக்கணம் இந்த விடத்தைவிட்டுப் போய்விடு
அப்படிக் கல்லவென்றால் உன் சமர்த்தைக்
காட்டு, உன்னால் முடியாவிட்டால் உன் தம
யனை வரச்சொல்லென்று கடுகடுத்துக் கூறி
னான். இடும்பி வீமன் கொடுத்த உத்தரவைக்

கேட்டு, அதிக அன்பு வைத்திருக்கிறவளாதலால் தன் வல்லமையைவிட்டு மனம்தளர்ந்து இந்த நரேந்திரன் நமது கருத்துக் கெவ்வண்ண மிசையப் போகிருர் என்று நினைத்து நாலுதிசையும் நோக்கும்போது ஒரு திசையில் தருமன் முதல் ஐவர் படுத்து நித்திரை செய்வதை யறிந்து, ஓ! ஓ! இவரொருவரென்றிருந்தோம் அதோ ஐந்துபேர் படுத்திருக்கிருர்கள். இந்த மஹா புருஷர் பலவானுனதால், இவரைக் காவல் வைத்து நித்திரை செய்கிருர்கள். அவர்களைக் கொண்டாவது நமது எண்ணத்தை முடித்துக்கொள்ள வேண்டுமென்று கருதி யிருக்கிறபோது இடும்பன் வெகு நேரமாகத் தங்கை வராதிருப்பதைக் கண்டு, அடடா! நமது தங்கை நரமாமிசம் புசிக்கப்போனவள் ஏன் என்னும் வரவில்லையென்று அதிக வேகமாக ஓடிவந்தான். அக்கால் இடும்பி நாணமுற்று ஒதுங்கி யிருக்கிறதையும், வீமன் மதங்கொண்ட யானையைப் போல் இருமாப்புட னிருப்பதையுங் கண்டு, இந்த மானிடன் நமது தங்கையைக் கைவசப் படுத்த எண்ணியிருக்கிருன் என்று நினைத்துச் சினங்கொண்டு வீமனிடத்து வந்து, அடா நரா! நீ என்ன? உன் வல்லமை என்ன? என் தங்கையைக் கைவசப்படுத்திக் கொள்ளவா பார்க்கிருய்? சபாசு! நீ எங்களுக்குப் பலியாகிறதுபோய், கலியாண காரியமா நாடி யிருக்கிருய்? உனக்கு இக்கருத்து வந்தது என்ன காரணம்? உன்விதி கிழிந்தது? இதோ உன்னை எமபுரத்துக்கு அனுப்பி உன் தசைகளைப் புசிக்கிறோம் பாரடாவென்று தன் பலம் கொண்டமட்டும் ஓங்கி அடிக்க வந்தான்.

வீமன் புன்னகைகொண்டு, அடா! நான் சும்மாவிருக்க நம்மேல் வீண் வழக்கிட்டுப் போருக்கெழுந்தான். இவனை விடக்கூடாது என்றெழுந்து தன் பலம் கொண்டமட்டும் இரண்டு கரத்தாலும் கன்னத்திற் குத்தினன். அக்குத்தினுல் இடும்பனுக்கு வாயிலுள்ள பல்லெல்லாம் பலபல வென்று விழுந்து தொண்டை நெரிந்து மண்டை கலங்கிற்று. இடும்பாசுரன் சற்று நிதானித்து, அப்பா! நாம் எப்போதும் இப்போது பட்ட தெப்பல் பட்டதில்லை. இக்காட்டிலிருந்து அனேக நர சென்மங்களைப் புசித்தோம். நம்மைக் கண்ட நரரெல்லாம் கடகடத்து விலவிலத்து உயிர் சோர்வார்கள். இந்த நரன் நமது உக்கிரத்தைக் கண்டும், அஞ்சாமல் பெதராமற் சஞ்சலப்படாமல் தைரியத்துடன் தன்னெதிர் நின்றதுமன்றி, நம்மையும் பல்லுதிர உடைத்தான். இனி இவனுக்குத் திரிமூர்த்திகள் துணை வந்தபோதிலும் இவனைக் கொல்லாமல் விடலாகாதென்று மனதில் நினைத்து வடவானலத்தை நேத்திரத்திற் காட்டிப் பர்வதம் கால்கொண்டு நடந்து வருவதுபோல் வீமனுக்கு எதிர்வந்து நின்று தன் கையால் ஓரடி அறைந்தான். வீமன் அவ்வடியைத் தட்டி, அவனைப் பிடித்து ஆகாயத்தி லெறிந்தான். இப்படி ஒருவர்க்கொருவர் வாரி யெறிகிறதும் மோதுகிறதுமாக இருக்கும்போது, நித்திரை செய்கிற ஐவரும் விழித்துக்கொண்டு பார்த்தார்கள். நகரத்திற் படுத்திருந்த சியாபகமே அதிகமாகக் கொண்டிருக்கிறவராதலால், நாலு திசையையும் பார்த்து திடுக்கிட்டு மனநடுங்கி, ஆ! ஆ! கொடிய வனத்தில் வரவேண்டிய காரியமென்ன? வந்தவிடத்து வீமனுடன் யமனைப்போல் காத்திரமான யாரோ ஒரு வீரன் யுத்தஞ் செய்கிருன் இதென்ன ஆச்சரியம்? என்றுநொந்து பலவாறு நினைத்து வருத்தப்பட் டிருக்கையில், இங்கே வீமனும் இடும்பனும் ஒருவரையொருவர் வெற்றிபெற வேண்டுமென்கிற ஆசையினுல் குத்தியும், தட்டியும், உதைத்தும், மிதித்தும், தூக்கியும், தாக்கியும், அடித்தும், கடித்தும், இந்த வகையாக ஒரு முகூர்த்தம்வரையிற்போராடி, முடிவில் வீமன் அதிக உக்கிரங்கொண்டு, இந்த ராக்ஷதப் பயலோடு இன்னேரம் வரையில் யுத்தஞ் செய்கிறதா வென்று நினைத்துக் கோபித்து ஜொலிக்க எழுப்பி, இடும்பனைப் பிடித்துத் தூக்கிப் பூமியில்மோதி, காலைப்பற்றி இருபிளவாகக் கிழித்தெறிந்து, மஹா உக்கிரத்தோடு இன்னும் அரக்கர்கள் யிருக்கிருர்களாவென்று கர்ஜனை யிட்டான்.

### வீமன் இடும்பியை மணத்தல்

இடும்பி தமயனிறந்ததை நோக்கிக் கிஞ்சித்து வருத்தமடைந்தவளா யிருந்தாலும் வீமன் வல்லமைக்கு அதிக மகிழ்ச்சியுடையவளாகி, முன்னிருந்த அன்பைவிட எண்மடங்கதிகமான ஆசைவைத்து, என்னெண்ணம் எவ்வாறு நிறைவேறப் போகுதென்று ஏக்கத்தைக்கொண் டிருந்தவள் குந்திதேவியின் பாதத்திற்போய் விழுந்து வணங்கினுள். குந்திதேவி வணங்கிய அரக்கியைப் பார்த்து, அம்மா நீ யார்? என்னை வணங்கவேண்டிய

காரணமென்ன? என்று வினவ, இடும்பி வீமன் மேற் கொண்டிருக்கிற காதலைத் தெரிவித்துப் பின்னுங் கூறுகிருள். ஓ மாமி! இவ்வனத்தில் நெடுநாளாக இருக்கிறேன் என் கருத்துக்கிசைந்த கணவன் வரவில்லை. இன்று என் கண்ணுக்கினிய கணவன் உன் புத்திரனேயல்லாமல் வேறொருவரில்லை. என்னை அந்த மஹா புருஷன் ஏற்றுக்கொள்ளும்படி நீ கிருபை புரியவேண்டும் அப்படிக் கருள் செய்யாவிட்டால் உங்கள் முன்னிலையில் என் பிராணனை விட்டுவிடுகிறேனென்ருள். குந்திதேவி மனங் கலங்கித் தருமராஜனை நோக்கி, அப்பா தருமநந்தனு! இதோ நிற்கிற மாது நமது வீமன்மீது மையலாகி அதிக வருத்தப்பட்டு, தன்னை ஏற்றுக்கொண்டால் நலமென்றும் இல்லாமற்போனுல் தன்பிராணனை விட்டு விடுகிறேனென்றும் காலில் விழுந்து முறையிடுகிருள். வலிய வருகிற ஸ்ரீதேவியை ஏன் காலாலுதைத்துத் தள்ளவேண்டும்? அவளெண்ணப்படி இசைவிப்பது நன்மையென்ருள். தருமராஜன் இடும்பியைப் பார்த்து, ஓ பெண்பாவாய்! நீயோ அசுரச்சாதி, இவனே நரன், உங்கள் இருவருக்கும் பொருத்த மிருக்காதே இதற்கென்ன செய்கிறதென்று கேட்க, இடும்பி சொல்லுகிருள், ஓ புண்ணியமூர்த்தி! அசுரச்சாதிக்கும் மானிடச்சாதிக்கும் தேக பேதம் ஒன்று தவிர சுக்கில சுரோணித பேதமில்லை. முன்னம் விடப்பன்மனென்கிற அசுரன் புத்திரி சன்மிஷ்டையை யயாதி மஹாராஜன் காந்தருவமணம் புரிந்து சிங்காரவனத்திற் கூடினுன். அவன் வயிற்றிற் பிறந்த பூருவென்பவனுடைய கால் வழிதானே சந்திரவமிசம்.

ஓ தருமாத்மாவே! நானே எல்லா வல்லமையைத் தெரிவிக்கக்கூடாது. ஒருவன் தன் ஆற்றலை யறியாதாரிடத்துக் கூறவேண்டும் என்று விதியிருக்கிறபடியால் இரண்டொரு சொல்லில் என் திறமையைத் தெரிவிக்கிறேன். இந்த மூன்று லோகத்தும் அரை நொடியிலோடி வருவேன், அவனுற்ற பொருள்களைக் கேட்டால் அத்தனையும் கொணர்ந்து வந்து கொடுப்பேன், இறந்த காலம் நிகழ் காலம் எதிர்காலமாகிய மூன்றுஞ் சொல்லுவேன். ஆதலால், என்னை அங்கீகாரஞ் செய்யும்படியாய் அந்த மகா புருஷருக்குத் தெரிவியுங்களென்று செப்பினுள். தருமன் இடும்பியை நோக்கி, ஓ பெண்ணே! இறந்தகாலம் நிகழ் காலம் எதிர்காலங்கண்டு முன்னுதாய்ச் சொல்லுவேனென் றுரைத்தையே, எங்கட்கு முன்னடந்ததும் உதயத்தில் நடக்கப் போகிறதுஞ் சொல்லென்ருர். இடும்பி, ஓ ஐயனே! உமக்குத் திரிதராஷ்டிரன் இளவரசு பட்டம் கொடுத்ததற்காகத் துரியோதனன் பொருமை கொண்டு, தந்தையிடத்துமுறையிட்டு உம்மை வாரணவதத்துக் கனுப்பிவிக்கச் செய்து நீரவ்விடத்தில் வந்த பின்பு மிக உருக்கமுள்ளவனைப்போற் கனகனென்கிற சிற்பி புரோசனனென்கிற மந்திரி இவர்களைக்கொண்டு பஞ்சு-எண்ணெய்-அரக்கு-மெழுக்கு அழிஞ்சில் மரம் இவற்ருல் ஒரு மாளிகை இயற்றி, அதற்கு அக்கினி மூலையிற் சரவத்தி வைத்து உங்களைச் சாம்பராக்க ஒருநாள் நியமித்தான். கனகனென்கிற சிற்பியை உங்கள் சிறியதந்தை விதுரன் கண்டு, வாரணவதத்தில் என்ன வேலை செய்கிருயென்று கேட்டறிந்து மிக வருத்தமடைந்து அத்தீங்கினின்றுந் தப்பி வெளிப்படுத்துவதற்காக வைத்த சுரங்கத்தை உங்களுக்குச் சொல்லச் சொல்லி விடுத்தார். அந்தக் கனகன் அரக்கு மாளிகையின் சூட்சியை இதோ யிருக்கிற மகா புருஷனுக்குணர்த்த இந்தக் கனவான் துரியோதனன் நியமித்த முகூர்த்தத்திற் சரவத்திக்கு நெருப்புவைத்து, உங்களை யெடுத்துக்கொண்டு சுரங்க வழியாக வந்து, இக்காட்டில் நித்திரை பங்கம் வராமற் காவலிருந்தார். இவ்வனத்தில் நெடுநாளாக யெதிரில்லாமல் வாழ்ந்த நான் வந்து இந்தச் சௌந்தரியன்மேல் மையலாகினேன். என் கருத்தை இடும்பனறிந்து இவரை யெதிர்க்க, இந்த வச்சிரதேகன் அவனை வெற்றி கொண்டார். இதுவெல்லாம் காலகதி. இதற்காக நீங்கள் வருத்தப்படாதீர்கள். இந்த மணவாளனுக்கு சங்கதி தெரிந்திருந்தும் உங்களுடன் சொல்லாதிருந்ததற்குக் காரணமென்னெனில், உயிருதவி செய்த கனகன் உங்களுடன் சொல்ல வேண்டாமென்று கேட்டுக் கொண்டான். அவனுக்குத் தான் கொடுத்த வாக்கின்படி சொல்லாதிருந்தார். இனி உதயத்தில் திவ்யக்கியானஸ்வ ரூபியாகிய வேதவியாசரைக் கண்டு தரிசிப்பீர்களென்ருள்.

இவைகளையெல்லாந் தருமராசன் கேட்டு ஆச்சரியப்பட்டு, வேதவியாசரைக் காண்பீர்களென்று இடும்பி சொன்னதைச் சோதிக்க வேண்டுமென்று நினைத்தார். அக்கால் இதுவரையிலும் நரமாமிசத்தைத் தின்று

கொழுப்பேறியிருந்த இடும்பாசுரன் மாமிசத்தை விலங்கினம்-பறவை முதலியவை புசிக்கத் திருவிளக்கிட்டதுபோற் சூரியன் உதயமாயினன். இடும்பி தருமராசனை நோக்கிக் கூறுகிறாள்: ஓ மூத்தவரே! ஸ்திரீகளென்றால் எல்லாரும் ஸ்திரீகளல்ல, கற்புடைமை பெற்று விளங்குகிற மாது எவளோ அவளைத்தான் பெண்ணெனப்படும். என்னை அரக்கியென்று இலேசாய் நினைக்க வேண்டியதில்லை. என் மனவுறுதியும் நன்னிலையும் அனுபோகத்தில் விளங்கு மென்று கூறினாள். தருமராசன் வீமனை யழைத்து தம்பி வீமா! இதோ யிருக்கிற கன்னிகை குலத்தில் மாத்திரமரக்கி யல்லது, மற்றக் குணாதிசயத்திற் கமலையை நிகர்த்தவள். செங்கழுநீரு மலரும் நிலத்திற் பொன் முதலியவை முதிக்கின்றன. அவைகளை நிந்தித்து நீக்காமல் அங்கீகாரஞ் செய்வதுபோல் என் வாக்கைத் தள்ளாமல் இந்தக் கன்னிகையை ஆதரித்துக் கொள்ளென்று ஆசீர்வதித்தார். மற்ற மூன்று தம்பிமார்களும் தருமராசன் வாக்கியம்போற் சந்தோஷஞ் சொன்னார்கள். வீமன் தமயன் வாக்கியத்தை வேத வாக்கியமாகக் கொண்டு, தம்பிமாருந் தாயுங் களிக்க அவளை அங்கீகாரஞ் செய்தான்.

## பாண்டவர் வேதவியாசரால் மந்திரோபதேசம் பெறல்

உடனே ஐவரும் குந்தியுமெழுந்து நித்தியக்கடன் முடிக்கச் சலத்தைத்தேடிப் புறப்பட்டார்கள். அங்கு ஒரு திவ்விய நதி தோன்றிற்று. அந்த நதியைக் கண்டு யாவருமதிலிறங்கினார்கள். அந்நதி வியாசரால் நியமிக்கப்பட்ட நதியாகையால் அந்நதியில் யார் வந்து கால்வைத்த போதிலும் அவர்களுக்கு வேதவியாசர் தரிசனமாகிறது. அந்நதியில் பாண்டவர்கள் கால்வைத்த மாத்திரத்தில் அவர்களுக்கு இடும்பி சொற்படி வேதவியாசர் தோன்றினார். உடனே ஐவரும் எதிர்கொண்டுபோய் வணங்கி, ஓரிடத்தில் கொன்றைத்தழை முதலியவற்றால் ஆசன மமைத்து எழுந்தருளச்செய்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரம்புரிந்து நின்றார்கள். வேதவியாசர் ஐவருக்கும் பல ஆசிகூறி குந்திதேவியை ஆதரணை செய்து தருமரை நோக்கிச் சொல்லுகிறார். அப்பா தருமநந்தனா! நீங்கள் சஞ்சலமின்றி அதோ யிருக்கிற சாலிகோத்திர மகாமுனிவனத்திற் சிலநா ளிருங்கள். இதோ நிற்கிறவள் இடும்பனுடன் பிறந்த இடும்பி. இவள் மிகுந்த கற்புடையவள். மேலும் ஒரு நாளிராத்திரியில் விடாய்ப்பட்டுச் சலமருந்தி ஸ்நானஞ்செய்தாள். இந்நதி என்னாலுண்டாக்கப்பட்டதாகையால், இதில் யார் வந்து ஸ்நானஞ் செய்தபோதிலும் அவர்களுக்கு அதிக வல்லமையையும் இஷ்டகாமியத்தையும் கொடுக்கிறேனென்று வாக்குதத்தஞ் செய்திருந்தேன். இவள் ஸ்நானஞ் செய்யவே யான் தரிசனமாயினேன். இவள் நமஸ்கரித்து நின்றாள். இவளுக்கு யான் அதிக வல்லமையைக் கொடுத்ததுவுமன்றி, இஷ்டகாமியத்தையும் நீ யடையக்கடவதென்று வரங்கொடுத்திருக்கிறேன். இவள் இடும்பனுக்கும் அதிக வல்லமை யுடையவள் இவள் காலகதியால் வீமனை மோகித்தாள். நீங்கள் இவளுக்கு விரோதந்தேடாமற் காந்தருவமணம் புரிந்து இதோ யிருக்கிற சாலிகோத்திர வனத்திற் சிலநாளிருந்து, ஏகசக்கரவனத்தி லிருக்கும் வேத்திர கீயத்திற்போ யிருங்களென்று கட்டளையிட்டு, இதோ நானொரு மந்திரோபதேசஞ் செய்கிறேன். அதனை உச்சரிப்பீர்களாகில் உங்களுக்கு வேதியருருவம் வரும் எந்தவேளையில் அவ்வுருவம் வேண்டுமோ அந்தவேளையில் அவ்வுருவம் நீங்குமென்று மந்திரத்தை யுபதேசித்து, அந்தரத்தியானமாகி மறைந்தார். அதனைப் பெற்றுக்கொண்ட ஐவரும் குந்திதேவியும் வீமனையும் இணங்கச் செய்து, சாலிகோத்திரமுனி வனத்திற்சென்று அங்கொருவிடத்திற் பன்னசாலை யியற்றி அதிலிருந்தார்கள்.

## கடோற்கஜ னுற்பவம்

அக்காலையில் வீமன் கமலக்கன்னியுடன் கூடிக் காட்டிற்சென்று தேன்-கனி-கிழங்குமுதலியவற்றைக் கொண்டுவந்து தமயனுக்கும் தம்பிமார்களுக்கும் அன்னைக்கும் கொடுத்து இரவில் மிகுந்த ஜாக்கிரதையோடு காவலிருந்து காத்துவருங்காலத்தில், குந்திதேவி வீமனையழைத்து, அப்பாமகனே! இரவும்பகலும் எங்களுழியத்தி லிருக்கிறையே உன்மேலிச்சை கொண்டுவந்த கமலக்கன்னியின் கருத்து மகிழ்வெய்துகிற தெக்காலம் நீ இன்றுமுதல் இரவில் மாத்திரம் காவலைச்செய் மற்றவேளையில் நீ அவளுடன் சுகித்திருவென்று சொன்னாள். பெற்றாள் சொற்படி அன்றுமுதல் வீமன் கமலக்கன்னியோடு கூடி குலாவிக் கொண்டு, அன்னை தம்பியர் தமயன் இவர்

களையும் பாதுகாத்து வந்தான். இப்படி சில நாட் சென்றபின்பு வீமன் வீரியவிர்த்தியால் கமலக்கன்னி கருப்பந்தரிந்து கால அளவை யிற் கருவுருவாகி உடனே ஒரு புத்திரனைப் பெற்றாள். அப்புத்திரன் பிறந்தவுடன் ஆகாய வாணி கடோர்க்கஜனென்று பெயரிடுமி னென்ன, அவ்வாறு பெயரிட்டு அப்புத்தி ரனை ஆதரித்தார்கள். அப்புத்திரன் பிறந்த வுடன் தாயையும் ஐந்து பிதாக்களையும் குந்தி தேவியையும் வணங்கி, ஓ என்னருமைப்பெரி யோரே! எனக்கும் என் தாயாருக்கும் விடை கொடுத் தருளுங்கள். அம்மான் காணி பாழ டைந்திருக்கின்றது. அங்கு சென்று அசுர செலுத்தி வருகிறேன். தாங்கள் எப்போது நினைக்கின்றீர்களோ அப்போது வந்து ஒத் துக் கொள்ளுகிறே னென்று வினவினான். ஐவரும் அப்புத்திரன் கருத்துக் கிசைந்து விடைகொடுத்தார்கள். புத்திரரும் தாயும் அப் பிரியமானவர்களைப் பிரிய மனமில்லாமல் அரி திற் பிரிந்து விசனத்துடன் அம்மானிருந்த விடத்துக்கு வந்து, அந்த ஆதீனத்தைத் தன்வச மாக்கிக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந் தான். பிறந்த சிசுப் பேசுமாவென்றாற் சொல் லுகிறேன் கேளும்: ஓ ஜெனமேஜெய மகா ராஜனே! இராக்ஷசகுலம் உற்பத்தியான காலத்திற் பிறக்கிற சிசுவும் பேசும்படித் திசை முகன்வரம் கொடுத்திருக்கிறார். அதனால்தான் நாளையவரையில் இராக்ஷதக் குழந்தைகள் பிறந்தபோதே பேசிவருகிறதென்று பின்னுஞ் சொல்லுகிறார்:

### பாண்டவர் வேத்திரகீயமடைதல்.

கேளும் மகாராஜனே! பாண்டவர்கள் சாலியகோத்திரமுனிவர் வனத்திற் பன்னக சாலை ஒன்றியற்றி, அவ்வனத்தி லிருக்கும் சாலிகோத்திர முனிவரைக் கண்டு வணங்கித் துதித்தார்கள். சாலிகோத்திரமுனிவர் ஐவ ரையும் குந்திதேவியையும் ஆதரணை செய்து பல ஆசிகள் கூறினார். ஐவரும் அவரிடத்தி லிருந்து நன்னெறிக் கேதுவாகிய சில மந் திரங்களையும் வேதாகமங்களையும் கேட்டுக் கொண்டு, அவ்விடத்திற் சிலநாளிருந்து அப் பால் அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, பின்பு வேதவியாசர் கூறிய மந்திரத்தை யுச் சரித்து, பாண்டவரும் குந்திதேவியும் பிரா மண அதிதிவேட முடையவராய் வேத்திர கீயத்தைச் சேர்ந்தார்கள். அவ் வேத்திரகீயத் தில் முந்நூற்று மங்கலமென்னும் கிராமத்தி லுள்ள அக்கராகாரத்தி லிருக்கிற வேதியர்கள் அதிதிகளைக்கண்டால் ஒப்பற்ற கடவுளைக் கண் டதுபோல மிகுந்த அன்புட னெதிர்வந்து மரியாதைகளுடன் ஆதரணை செய்தல் வழக்க மாதலால், இவர்களைக் கண்டமாத்திரத்தில் மிகுந்த காதலோடு அழைத்துப்போய் அவ ரவர்கள் கருத்தின்படி விருந்திட்டார்கள். அப் பிராமணர்களில் முதிர்ந்த வயதுடையவராகி யும், மிகுந்த பாக்கியத்தை யுடையவராகியும், வேதாகமங்களில் தேர்ந்தவராகியும், ஒரே புத் திரனை யுடையவராகியு மிருந்த தர்மமுனி என் கிற ஒரு வைதீகப்பிராமணர் இந்த ஐவரையும் குந்திதேவியையும் அழைத்துப்போய்த் தன் வீட்டில் வைத்துக்கொண்டு அவர்களுக்குத் தேன்-கனி-பலகாரம் அறுசுவையையுடைய உண்டி முதலியவற்றை யுதவி, பிதாவைப் போற் பாதுகாத்துவந்தார். இந்த ஐவருமந்த வேதியரைப் பிதாவைப்போ லெண்ணி, மிகு ந்த பக்தியோடு நடந்துவந்தார்கள். இப்படி வருகிறகாலத்தில், அந்நகரத்து வேதியர்க ளெல்லாம் ஏகசக்கிர வனத்திலிருக்கும் பகா சுரனுக்கு ஐம்பது ஏர்கட்டிய வண்டியில் நிறைய அன்னமும், அதற்குத் தகுந்த கறி காய்களும், நெய் தயிர் பலகார வகைகளு மிட்டு, அதனுடன் ஒரு மனிதனையும் அனுப்பு விக்கிறது வழக்கம். பகாசுரன் அவ்வண்டில் அன்னத்தையும் நரனையும் புசித்துவிடுகிறது.

இப்படி வீடுகளின் விகிதப்படி பகாசுர னுக்கு விருந்திட்டு வருகிற முறை, இவ்வைவ ரையும் பரிவுடன் காத்துவரும் வேதியருக்கு வந்தது அவ்வேதியருக்கு ஒரே புத்திரன்தா னிருக்கிறான். அவ்வேதியன் மனைவி இன்று நமது புத்திரனைப் பகாசுரனுக் கிரையாக அனுப்பிவைக்கப் போகிறோமே ஐயோ தெய் வமே! வேறுதரவு மில்லையே என்ன செய் வேன்! அனுப்பாம லிருந்தாற் பாதகனாகிய பகாசுரன் நகரத்துட் பிரவேசித்து அக்ரா ரத்தி லுள்ளவர்களை யெல்லாம் கொன்றுவிடு வானே என்று உள்ளறையி லுட்கார்ந்து தலை விரிகோலமாக அழுதிருந்தாள். குந்திதேவி அந்தப் பார்ப்பினியிடத்தில் மிகுந்த அன்பு டையவளாதலால் அவளைக் கண்டு வார்த்தை சொல்லி வருவோமென்று வந்து உட்புறத் துச் சென்று, அந்தப் பார்ப்பினி நொந்தழு வதை நோக்கித் திடுக்கிட்டு, அருகிற் சென்று அந்த அம்மனைப்பார்த்து, ஓ அம்மணி! நாங் கள் இவ்விடத்திற்கு வந்தநாள்முதல் இது

வரைக்கு மிவ்வகையான வருத்தத்தைக் காதிஞலும்கேட்டதில்லை. என்னிரு கண்ணிஞலும் பார்க்கவில்லை. இன்று நீங்கள் வருத்தப்படுவதாயிருந்தால் என்மனங் கல்லா? அன்புடையவர் வருத்தப்படுவதைக் கண்டால் அவர்களைப் போன்றவர்க்கு அதிக வருத்தம் நேரிடுமென்று நூல்கள் முறையிடுகின்றன தங்கள்மீதன்புடைமை வைத்த நான் எவ்வாறு சகிப்பேன்? தங்கள் கருத்திற் குடிகொண்டிருக்கும் துயரத்தை தெரிவிக்கவேண்டுந் தாயே என்று பலவாறு மிகுந்த ஆருமையோடு வினவ, பார்ப்பிணி அழுதலை நிறுத்தி குந்திதேவியை நோக்கிச் சொல்லுகிருள்: ஓ அம்மணி! நான் துயரப்படுகிற காரணத்தைச் சொல்லுகிறேன் கேள். இந்நகரம் ஏகசக்கிர வனத்தைச் சேர்ந்தது. இதனைச் சீர்திருத்திப் பெரிய அக்ராரமாக்கி இதில் வேதியர்கள் குடிவந்திருந்தார்கள். இப்படியிருக்கிற காலத்திலிந்த ஏகசக்கிரவனத்தில் பகாசுரனென்று பெயர் வகித்த ஒரு அசுரன் வந்து சேர்ந்து, இந்த அக்ராரத்தைக் கண்டுபிடித்து தினம் தினம் பிரவேசித்து, ஆடுமாடு முதலியவற்றைப்பிடுங்கித் தின்பதும் போதாமல் வேதியரையும் புசிக்க ஆரம்பித்துக் கொண்டான்.

அதுகண்டு வேதியர்களெல்லாம் மெய் நடுங்கி, அந்த பகாசுரன் அடிமேல் விழுந்து முறையிட்டு ஒரு வாக்குதத்தங் கேட்டார்கள். அஃதென்னெனில், ஓ அசுரேந்திரா! தினந்தோறும் வந்து எங்களைப் புசித்துப் போவதிலுனக்கு லாபமென்ன? நீ எங்களை வருத்தப்படுத்தாமலிருந்தால் உன்னையே குலதெய்வமாகப் பாவித்து, இந்த அக்ராரத்திலிருக்கிற 316-தலைக்கட்டும் தினம்தினம் உன் பசியாற அன்னமும் ஒரு நரபலியுங்கொடுக்கிருேமிதற்கொத்துக்கொள்ள வேண்டுமென்று பலவாறு வேண்ட, அந்தப் பகாசுரன் அதற்கிசைந்தான். அன்றுமுதல் இவ்வேதியர்கள் அந்தப் பகாசுரனுக்கு முன்னஞ் சொல்லிய வண்ணம் அன்னமும் நரபலியும் அனுப்பிவிக்கிறது. இன்று அந்த முறை எனக்கு வந்தது என் கணவனே தளர்ந்த வயதுடையவர். புத்திரனே ஒருவன். அப்புத்திரனை அருமையான் தவஞ்செய்து பெற்றேன். அப்புத்திரனைப் பகாசுரனுக்குப் பலியாக்கிவிக்கிறதென்ருல் என் மனந் தாளவில்லை. பெற்ற வயிறு பற்றியெறிகின்றது. நான் சும்மாவிருந்தாலுமென்னுடல் பதைக்கின்றது. இதை நினைந்தால் நெஞ்சுலர்ந்து நாவறண்டு விடுகிறது. உயிருடன் பறிகொடுக்கச் சகலமுந் துறந்த சந்நியாசியுஞ் சகிப்பார்களோ? அதற்காகத்தான் நான் துயரப்படுகிறேனென் றலறிஞள். இதனைக் கேட்ட குந்திதேவி இருசெவியிலுங் கரத்தைவைத்து மூடி, ஹரிஹரி நாராயணு! பக்தரக்ஷகா! பரமதயாளா! ஓ ஸ்வாமி! இதுவரைக்கும் இந்தப் பார்ப்பினி சொல்லியது போன்றது யாம் கேட்டதில்லையே. இன்றைய தினம் கேட்கும்படி நேரிட்டதே. இனி நானென்ன செய்யப்போகிறேன். உலகத்தில் வருத்தப்படுவோரைக் கண்டால் அவ் வருத்தம் நீங்கத் தன்ஞற் கூடியமட்டும் உதவி செய்ய வேண்டுமென்று வேத முறையிடுகின்றதே! நான் காதிஞற் கேட்டேன் இதற்கோருபாயஞ் செய்யாவிட்டால் பாவம் நேரிடுகிறதேயென்று கடவுளை நினைத்து கனவருத்தமுற்று, ஒருவாருகத் தேறித் துணிவுகொண்டு அந்தப் பார்ப்பினியருகி லுட்கார்ந்து அவள் கண்ணீரைத் துடைத்து தாயே! நீர் வருத்தப்படாதீர் எனக்கு ஐந்து புத்திரர்களிருக்கிருர்கள் அவர்களில் ஒருவனை அனுப்பி விக்கிறேன் நீர் சஞ்சலப்படாமல் அந்தப் பகாசுரனுக்கு மாமூற்பிரகாரம் அன்னம்-கறிகாய் முதலியவற்றைச் சேகரிக்கத் தக்கதென்ருள்.

அந்தப் பிராமண ஸ்திரீயானவள் இவ்வசனங்கேட்ட மாத்திரத்தில் முன்கொண்ட வருத்தத்தைவிட எண்மணங்கதிகமான வருத்தமுடையவளாகி குந்தி தேவியை நோக்கிச் சொல்லுகிருள்: ஓ தருமசீலி! நீரிப்போது வழங்கியசொல் என்னை வருத்துகின்றதே! உன் புத்திரனை எவ்வா றனுப்பிவிக்கத் துணிவேன்? ஏனென்ருல், உலகத்தில் எவ்வளவு பொருளைச் சம்பாதித்தபோதிலும் பொருள்மேல் பொருள்தேடக் கருத்துண்டாகும். அதுபோலெத்தனை புத்திரனைப் பெற்ருலும் இன்னும் புத்திரனைப் பெறவேண்டுமென்று விருப்பங் கொள்வது மல்லாமல் ஒரு புத்திரனுக்கு யாதொரு கெடுதியாவது உயிர்ச்சேதமாவது நேரிட்டால் அக்காலத்து நமக்குப் பல பிள்ளைகளிருக்கின்றனவே அதில் ஒரு பிள்ளை போனுல் போகட்டுமென்று சும்மாயிருப்பார்களா? ஒரு புத்திரனைப் பெற்றவர்களுக்குப் புத்திர அபேக்ஷமட்டு, பல பிள்ளைகளைப் பெற்றவர்களுக்குப் புத்திர அபேக்ஷையதிகம் அதிலும் அன்னியராகிய எனக்காக நீ பாத்தியப்பட்டு உன் புத்திரனை உயிருடன்

பரிகொடுக்கத் துணிவுகொண்டாலும் உன் வயிறு குழம்பும் மனநடுக்கமு முண்டாகும். ஓ புண்ணியசீலி! பொன்னல்ல, பொருளல்ல, பூமியல்ல வஸ்திரமல்ல இன்னமுண்டான பற்பல வஸ்துக்களல்ல பத்துமாதஞ் சுமந்து மெத்த வருந்தியும் நொந்தும் பெற்றெடுத்த புத்திரனை நீ யனுப்புகிறேனென்றால், யார் தான் சம்மதிப்பார்கள்? போ போ பிச்சி யென்று மறுத்தாள். குந்திதேவி மனந் தளர்ந்து ஆ! ஆ! இந்தப் பார்ப்பினியம்மன் கருத்தென்ன பரிசுத்தமா யிருக்கின்றது. அகத்தியமிந்த அம்மன் மனங்களிக்கச் செய்யவேண்டுமென்று நினைத்து, ஓ தரும முதல்வி! நீரேன் சந்தேகப்படுகிறீர்? என் புத்திரர் ஐவரிற் கறுத்த தேகத்தோடுங்கூடிய சிறுவனை அனுப்பிவிக்கிறேன். அவனால் அந்தப் பகாசூரன் அதமாவான் அதற்கு யாதொரு சந்தேகமில்லை. அப்படி யல்லவென்று ஒருவேளை யந்தப் பகாசுரன் கையிலகப்பட்டு இறந்து விடுவானாகில் காலகதி யென்றும், நானந்தப் பிள்ளையைப் பெறவில்லை யென்றும், தீர்மானித்துக் கொள்ளுகிறேன். நீங்கள் தடுத்தும் நானுங்களைக் கேட்டுக் கொள்ளுகிறதற்குக் காரண மென்னவென்றால், வருத்தப் படுகிறவர்களைக் கண்டும், அவர்கள் துன்பத்தைக் கேட்டும் சும்மா யிருக்கலாகாது. ஆதலால் என் கருத்தின்படி நடத்துங்களென்று தொழுதாள்.

பார்ப்பினி குந்தி தேவியின் மனவுறுதியை முகக்குறியினாலறிந்து, இந்தம்மன் சொல்லுகிற தைரியத்தையும் உறுதியையும் நோக்கினால், நமக்கேதோ கிஞ்சித்து நலம் வரும் போல் தோற்றுகிறதென்று தீர்மானித்து, குந்திதேவியி னெண்ணத்திற் கிசைந்து சொல்லுகிறாள்: ஓ அன்னையே! நல்லது; இனி ஆக வேண்டிய காரியங்கட்கு யத்தனப் படுகிறேன் உன் பிள்ளையை அனுப்பென்று ஒப்புக்கொண்டு சமையற் செய்வதற்குத் தன் சுற்றத்தாரை அழைத்தனுப்பினாள். இதற்குள் ஸ்நானத்துக்குச் சென்ற தன் கணவனும் வந்தார். பார்ப்பனி எதிர்கொண்டுபோய்க் கணவனுக்கு நமஸ்காரஞ் செய்து, தான் வருத்தப்பட்டது முதற் குந்திதேவி புத்திரனை அனுப்பிவிக்கிறே னென்று உடன்பட்ட வரைக்குஞ் சொன்னாள். வேதியனாகிய தர்மமுனிவர் ஒருவாறாக மனமிசைந்து, நல்லது நீ சமையற் செய்யென்று கட்டளையிட்டார். பார்ப்பினி வந்த சுற்றத்தாரை வைத்துக்கொண்டு காய்வகைக் கறிகளும், கனிவகைக் கறிகளும், இலைவகைக் கறிகளும், இதழ்வகைக் கறிகளும், மூலவகைக்கறிகளும், முளைவகைக் கறிகளும், மரவகைக் கறிகளும், மதுவகைக் கறிகளும், தயிர்வகைக் கறிகளும், தாளவகைக் கறிகளும், பால்வகைக் கறிகளும், பலவகைக் கறிகளும் இன்னுமுண்டான பஞ்சபக்ஷண பரமானங்களுடன் மலை போல் அன்னத்தை வடித்துக்கொட்டி, அதற்குத் தகுந்த பருப்பு-நெய்-பணியாரம்-தயிர் முதலானவைகளைச் சேகரித்துச் சாக்கிரதையாயிருந்தாள்.

### பகாசுரன் வதை.

இப்பால் குந்திதேவி பார்ப்பினி யிடத்து விடைபெற்றுத் தன் மக்கள்பாற் சென்று தருமராஜனை நோக்கி, ஓ மைந்தனே! நம்மை ஆதரணைசெய்து வருகிற வேதிர் வீட்டிற்குச் சென்றேன். அவ்வேதியர் மனைவி வேஷ்டையோடழுதாள் நீயேன் வருத்தப் படுகிறாயென்று கேட்டேன் அந்தப் பார்ப்பினி என்னைப் பார்த்து, ஓ இரக்கமுள்ள மாதாவே! இந்த முந்நூற்று மங்கலத்தில் ஒரு அசுரன் பிரவேசித்து வேதியரை யெல்லாங் கொன்று தின்று வந்தான். அவனுக்கு இந்நகரத்தார் வந்தனை செய்து, நாள்தோறும் ஒரு நரபலியும் விருந்து மிடுகிறோ மென்று ஒப்பாசாரம் பண்ணிக் கொண்டார்களாம். இன்றையதினம் எங்கள் முறையாதலால் அந்த அசுரனுக்கு விருந்திடப் போகிறோம். அவனுக்கு நரபலியாக என்னொரு பிள்ளையை அனுப்பிக்கவேணும், அதற்காகத் துயரப்படுகிறே னென்றாள். அம்மொழியைக் கேட்டவுடன் மனந் தாளாமல், நமது வீமனை அனுப்பிவிக்கிறேனென்று வாக்கு விஜயஞ் செய்துவந்தேன். என் வாக்குப் பழுதுறாமல் வீமனை அனுப்பிக்க வேண்டுமென்று மெத்தவும் நைந்து புகன்றாள். அதைக்கேட்டதருமராஜன் தாயை வணங்கி, அன்னையே! துயர முற்றோரைக் கண்டால் அத்துயரம் நீங்கத் தன்னாற் கூடிய மட்டும் உபகாரஞ் செய்ய வேண்டு மென்று நீங்கள் வாக்குத்தத்தங் கொடுத்து வந்தது தகுதிதான். அதற்கு வீமனை அனுப்பினவு யென்று கட்டளையிடுகிறது எனக்கு மனமொத்துக்கொள்ளவில்லை. ஏனென்றால், வாரணவத நகரத்தில் நூதனமாகப் புதுக்கிய அரக்கு மாளிகையிலேயே நாமெல்லாம் யிறந்துபோக நேரிட்டது. அந்த இக்கட்டைத் தப்புவித்

துக் காட்டிற் கொண்டுவந்துவிட்டான். வந்த விடத்தில் யமனைப்போல் ஒரு அசுரன் வந்து நம்மைப் புசிக்கவந்தான். அப்போது இந்த வீமன் அவனைக் கொன்று வெற்றிபெற்று நம்மைக் காப்பாற்றினான். உயிருதவிசெய்த உபகார புருஷனை அனுப்பிவிட்டு நாமென்ன செய்வது? என் மனம் ஒப்பவில்லை யென்று உருகினார்.

அதற்கு குந்திதேவி சிரித்து, அப்பா தருமநந்தனா! நீயேன் வருத்தப்படுகிறாய்? வீமன் பலத்தை நீ அறியமாட்டாய். பிள்ளையின் திறமை யெனக்குத் தெரியும். எப்படியென்றால், நீ ஒன்றரை வருஷத்திய குழந்தை. வீமன் ஐந்து மாதத்துப் பிள்ளை. அக்காலத்தில் உன் தந்தையோடு நாங்களும் ஒரு பெரிய மலைமேலேறி வேடிக்கை பார்த்தோம். அங்கே ஒரு சிங்கம் அதிக உக்கிரங்கொண்டு கெர்ச்சனையிட்டு வந்தது. அது கண்டு உன் தந்தையும் யாங்களும் பயந்தோடினோம். அத்தருணத்தில் எனக்கு அதிக நடுக்கங்கண்டு, கையிலிருந்த வீமனைப் போட்டுவிட்டேன். விழுந்தவிடம் பாறைக்கல்லா யிருந்தும், வீமன் பாரத்தைப் பொறுக்காமற் பாறை பிளந்து நொய்யாய் நொறுங்கியது. இவன் விழுந்த சத்தத்தினால் மதுர்த்துவந்த சிங்கம் பயந்து பொறிகலங்கி யோடிப்போயிற்று. நானும் உன் சிறிய தாயாரும் கையை நெறித்துப் பிள்ளை யிறந்தானென்றெண்ணி, ஓடி வந்து பார்த்தோம். வீமன் தொட்டிலில் விளையாடுவதைப்போல் கையைக் காலை யசைத்துக் கொண்டிருந்தான். உடனே வாரி அணைத்தெடுத்து முத்தமிட்டோம். ஆதலால், உன் தம்பி அதிக பலவான். இடும்பாசுரனுக்கு நடந்த கதியைப்பார்த்தும் இன்னமேன் யோசிக்கிறாய்? அப்பனே நீ சஞ்சலப்படாமல் வீமனை யனுப்பு. அந்த பகாசுரனை இவனே கொன்று இவ் வூரிலுள்ளோரெல்லாம் நெடுநாட் சஞ்சலம் இன்றோடு நீங்கியதென்று கொண்டாடும்படியாக வருவானென்றனள். தருமராஜன் மனந்தேறி வீமனைப் பார்த்தார். வீமனெப்போ தெப்போவென்று முன் ஜாக்கிரதையாக எழுந்து தமயன் வாக்கிலிருந்து வருமுத்திரவுக்கு எதிர் பார்த்திருந்தவனாதலால் விரைவில் வந்து தமயனை வணங்கி நின்றான். தருமன் வீமனை நோக்கி, என்னருமைத் தம்பியாகிய வீமா! நீ சென்று அந்தப் பகாசுரனைக்கொன்று வெற்றி கொண்டுவா வென்று வாழ்த்தி விடைகொடுத்தார். அம்மாத்திரத்தில் வீமனானவன் அன்னை தமயன் தம்பிமார்கள் கையில் விடைபெற்று, வேதியனிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! பகாசுரனுக்கு விருந்திடுகிறது இன்றுதானே? இன்னும் தாமிஷமென்ன? விரைவில் எனக்குச் சோறுபோட்டு என்னை யனுப்பி வையுங்களென்று கூறினன். வேதியன் வீமன் கேட்கிற உதட்டியைக்கண்டு, இந்தக் கரிய பிராமணன் அந்தப் பகாசுரனுக்கு யமனாவானென்று எண்ணி வீமனை ஆசீர்வதித்து, ஸ்நானஞ்செய்வித்து, சிகப்புப்பூ-அக்ஷதை-சந்தனம்-பூமாலை முதலியவைகளோடு நல்ல வஸ்திராபரண அலங்கிரதஞ்செய்து, திருப்தியாய்ப் போஜனமிட்டு புனுகு கஸ்தூரி கற்பூர ஜவ்வாது குங்கும முதயவைகளைப்பூசி, வாசனைத் தாம்பூலங் கொடுத்து 50-ஏர் எருமைக் கடாக்களைப் பூட்டுஞ் சகடா வண்டிலை இழுத்து வந்து, அவ்வண்டிலிற் கயிலை மலைபோல் அன்னத்தைக் குவித்து, சமைத்த பதார்த்தத்தையெல்லா முதிற் பொருத்தி வைத்து நெய்க்குடம், தயிர்க்குட முதலியவற்றை ஏர்க்காலிற் கட்டி, எருமைக் கடாக்களையும் வண்டியிற் பூட்டி, வீமனை யதிலேற்றி, சுற்றத்தாரோடும் சிறு பறை முழக்கோடும் நகர்ப்புறம்வரையிற் கொண்டுவந்து விட்டு, தெய்வகடாக்ஷத்தால் ஒரு தீங்குமில்லாது க்ஷேமகரமாய் வரக்கடவாயென்று பலரும் வாழ்த்தி ஆசிகள் தூற்றித் திரும்பி வந்துவிட்டார்கள்.

வீமன் 50-ஏர் எருமைக் கடாக்களையும் அதட்டி யோட்டிக்கொண்டு அதிவேகமாக மலையடிவாரத் தருகில் வந்து, அங்கு வருகிற கான்யாற்றின் காலைக்கண்டு சலம் நன்றாயிருப்பதைப்பார்த் தடடா! இந்நீர் நன்னீரா யிருக்கின்றது. நமக்கோ பசிமேலிடுகிறது. வெண்ணெய் வைத்துக்கொண்டு நெய்க் கழவேண்டிய காரணமென்ன? உதவியற்ற இராட்சதப் பயலுக்கு நாமா சோறு கொண்டுபோய்ப் போடுகிறது? அவன் கெட்டான். இவ்வண்டி சாதமும் மற்றவைகளும் தேவாவமுதம்போல் நன்றா யிருக்கும், இதனை யிங்கேதானே புசித்தேப்பம் விடுவோம். அந்தப் பகாசுரன் எங்கிருக்கிறானோ பார்ப்போமென்று அவ்வண்டில் முனையிலேறி வளர்ந்து பார்த்தான். ஒரு யோசனை தூரத்திற் பகாசுரன் தோன்றினான். அவனைப் பார்த்து இவன் கெட்டான் நமக்கெவ்வளவு இந்த இராட்சதப் பயலென்று

அவமதித்தவனுய், வண்டி லடியில் வந்து, 50 - ஏர் எருமைக் கடாக்களையும் அவிழ்த்து நீங்களெங்காகிலும் போய்ப் பிழைத்துப் போங்களென்று துரத்திவிட்டு அவ்வண்டியை ஆற்றங்கா லோரமாக இழுத்து வைத்துக் கொண்டு, பின்பக்கம் வாயை விரித்துவைத்து இரண்டு கைகளினுலும் உள்ள அன்னத்தை யெல்லா மணைத்துத் தள்ளிக்கொண்டு விழுங்கி, அப்பாற் கறி முதலியவைகளை ஒன்ருகத்திரட்டி மூன்றுண்டையாக்கி, இரண்டுண்டையைத் தின்றுவிட்டு மூன்ரும் உண்டையைக் கையிலேந்தினுன்.

சாதம் வருமென்று வழி பார்த்திருந்த பகாசுரன் இன்னுமேன் அன்னம் வரவில்லையென்று சந்தேகித்து, வண்டில் வரும்வழியை நோக்கி வரும்போது வண்டியைக் கண்டவுடன் வண்டியிலொன்று மில்லா திருப்பதையுணர்ந் தடடா! நமக்கு சாதங் கொண்டுவந்த வண்டில்தானிது, இதிலுண்டி யில்லாதிருக்க வேண்டிய காரணமென்ன வென்று 4-திசையையும்நோக்கி பார்க்கிறபோது ஒரு திசையிற் கால்வாயருகி லிருந்து மொத்தையடிக்கிற வீமனைப் பார்த்து, அடா! நாம் நெடுநாளாக யிவ்வனத்திலிருந்து வேதியரா லனுப்பப்படும் உண்டியை புசித்துவந்தோம். நமது பெயரைக் கேட்டால் எமனு மஞ்சுவான். அப்படியிருக்க, இந்தப் பிராமணப்பயல் நமக்குக் கொண்டுவந்த உண்டியைப் புசிக்கிருன் பார்த்தையா? ஆ! ஆ! இதென்ன ஆச்சரியம்! இந்தப் பிராமணப்பயலுக்கு விதி கிழிந்ததது? ஐயையோ! நாமிவனைப் பார்க்கப் பார்க்க நமதுண்டியை யெல்லாம் புசித்து விடுகிருனே என்று மகா உக்கிரங்கொண்டு அதிக வேகமாக அதட்டிக்கொண் டோடிவந்து, வீமன் புஜத்தின்மேல் ஒரு குத்து குத்தினுன்.

வீமன் அக்குத்தைப்பட்டும் தன் கையிலிருக்கிற சாதத்தைச் சிந்தாமற் புசித்துவிட்டு அவன் குத்தக் குத்தத் தனது முதுகையுந் தோளையு மாறிமாறிக் காட்டித் தாகமருந்தி, அவனுக்கு மேலுமேலுங் கோபமுண்டாகும் படியாய்ச் சாவதானமாகக் கைகாற் சுத்தி செய்து, மிகுந்த இறுமாப்புடன் ஏப்பமிட்டுக் கருக்கோடிவரு மீசையை முறுக்கி மலை நிமிர்ந்து நிற்பதுபோல எதிரேவந்து நின்ருன். பகாசுரன் கர்வித்துநிற்கும் வீமனைப் பார்த்து, இவன் பிராமணப்பயலல்ல, பிராமணப்பயலாயிருப்பானுகில் அடிக்கு அஞ்சுவான். நாம் அடித்தும் கிஞ்சித்தேனும் லட்சியமில்லாமல் சம்ஹாரகால உருத்திரன்போல் நிற்கிருன். இவனை உயிரோடு விடக்கூடாது. இக்கணம் இந்தவிடத்திலேயே கொன்று கசக்சவென்றுமென்று தின்றுவிடவேண்டுமென்று தீர்மானித்து பார்த்து, அடா பிராமணப்பயலே! புலிக்குரிய உணவைப் பூனை புசிக்குமா? புசித்தாலும் அதற்குச் செரிக்குமா? அதுபோல் எனக்கு வந்த உணவை நீ புசிக்கலாமா? புசித்தாலுமக்கு பொறுக்குமா? என்னை மதிக்காமல் எனக்கு வந்த உணவைப்புசித்தாயே, உன்னை அரைமாத்திரையில் அடித்துக் கொன்று நீ தின்ற உணவோடு உன் மாமிசத்தையும் புசிக்கிறேன் பாரென்று அதிக சினங்கொண்டு, புஜத்தோடு புஜத்தைத்தட்டிக் கொர்ச்சித்தான். அதற்கு வீமன் ஏப்பமிட்டுச் சொல்லுகிருன்.

அடா பகாசுரா! என் வல்லமை உனக்குத் தெரியாது சொல்லுகிறேன் கேள். இடும்பனென்று ஒரு அசுரனுண்டு. அவன் வல்லமையை நீயு மறிந்திருப்பாய், அவனை ஒரு முகூர்த்தத்தில் வெற்றிகொண்டேன். நீ எவ்வளவு? இவன் நரன் நாம் அசுரனென்று என்னை அலட்சியமாக எண்ணுதே, உனக்கு வந்த உணவை யெல்லாம் நாஞெருவன் தானே புசித்தேன். இதனுலே நான் பலவானென்று உனக்குத் தோற்றவில்லையா? இப்பவும் ஒருதரம் நீதி சொல்லுகிறேன். அஃதியாதெனில், இன்றுமுதற் பிராமண ருண்டிக்கெதிர் பார்க்காமலும் இவ்வனத்தி லிருக்காமலும் எங்கேயாவது ஓடிப் பிழைத்துப்போ; இல்லாவிட்டால் உன் வல்லமையைக் காட்டு யமலோகம்போ வென்ருன். பகாசுரன் கோபச் சிரிப்பு சிரித்துத் திக்குத்திசைகள் நடுங்கக் கொர்ச்சித்துச் சொல்லுகிருன். அடா கறுப்புப் பார்ப்பாரப்பயலே! என்ன சொன்னுய்? இவ்வனத்தைவிட்டு ஓடிப்பிழைக்கவா சொன்னுய்? பளா நன்ருயிருக்கின்றது என்று இரண்டு புஜத்தையுந்தட்டி, உட்கார்ந்து எழும்பி மகா உக்கிரங்கொண்டு வீமனைக்குத்தினுன். வீமன் அக்குத்தை கையினுல் தட்டி அவன் கன்னத்தில் ஓரறை அறைந்தான். அந்த அறை பட்டமாத்திரத்தில் பகாசுரனுக்குப் பொறிகலங்கி, அதிக சினங்கொண்டு போய் ஓர்மரத்தைப் பிடுங்கிவந்து வீமனையடித்தான். வீமன் விரைவில்தானும் ஒரு மரத்தைப் பிடுங்கித் தன்மேல் வந்த அடியைத் தட்டிப் பகாசுரனை அடித்தான். பகாசுரன் அந்த

அடியைத்தட்டி வீமனைப் புடைத்தான். இவ்வாறு ஒருத்தரையொருத்தர் வெற்றிபெற வேண்டுமென்கிற விருப்பத்தினால் இருவராலும் ஒடிந்த மரங்கள் அளவில்லை. பின்னும் யிருவரும் பல மலைகளைப் பிடுங்கி ஒருவர்மீதொருவர் எறிந்தார்கள். இம்மலைகளோ ஒன்றோடொன்றுபட்டு பொடிப் பொடியாய்ப் பூமியிலுதிர்ந்தன. தப்பிவந்து மேல் விழுமாகில் அம்மலைகள் பொடியாகிறதேயன்றி அதனால் இருவர்க்கும் ஒரு வருத்தமும் நேரிடுகிறதில்லை. இவ்வாறு சிலநேரம் மரயுத்தம் மலையுத்தமுஞ் செய்து, பின்னு மல்யுத்தமுஞ் செய்ய ஆரம்பித்து ஒருவரை யொருவர் பூமியில் தள்ளுகிறதும், அந்தரத் தெறிகிறதும், வாரி அடிக்கிறதும், இந்தப்பிரகாரம் சில நேரம் போர்செய்து பின்னும் ஒருவர்க்கொருவர் இளைக்காமல் தொந்த யுத்தம் செய்யத் தலைப்பட்டார்கள். தலையோடு தலையும், நுதலோடு நுதலும், மூக்கோடு மூக்கும், பல்லோடு பல்லும், தோளோடு தோளும், மார்போடு மார்பும், தாளோடு தாளும் தாங்கி, இடசாரி வலசாரி, வலசாரி இடசாரியாகவும், முன்சாரி பின்சாரியாகவும் வந்து, தாங்கள் கற்றவித்தையெல்லாங் காட்டிப் போராடினார்கள்.

இவ் விருதிறத்தாரும் போராடுகிறதினால் அவ்வனமெல்லாம் தூளிபடலமாயிற்று. இப்படி ஒரு ஜாமபரியந்தம் போராடி முடிவில் வீமன் அதிக வேகங்கொண்டு ஒரு உதை உதைத்தான். அவ்வுதை அசுரன் விலாவிற் பட்டு விலாவெலும்பு முறிந்தது. உடனே மற்றொரு உதை உதைத்தான். அவ்வுதை தோளிற்பட்டு தோள் முறிந்தது. பகாசுரன் வீமன் பலத்துக்குச் சரியானவனாகையால், இவ்வுதைகளைப் பட்டுக்கொண்டும், சும்மாயிருந்தவனல்ல. தன் வல்லமை கொண்டமட்டும் குத்தியும், அடித்தும், உதைத்தும், இடித்தும், மிதித்தும், முட்டியும், தட்டியும், தூக்கியும், தாக்கியும் இவ்வாறு சிலநேரம் போராடுகிறபோது, பகாசுரனுக்கு முடிவுகாலம் நேரிட்டிருக்கிறபடியால் வரவரப் பலங் குறைந்து வருவதுமன்றிப் பசிவேதனையாலும் மெய் தளர்ந்து வந்தது. அதனாற் பகாசுரன் திகைத்து மனங்கலங்கி நெஞ்சுலர்ந்து ஆ! ஆ! இதென்ன விபரீதம் நெடுநாளாக இந்த வனத்திலிருந்து இவ்வகைப்பட்ட அனேகம் பெயரை நமது கையினாற் குத்தி ரத்தங்குடித்துத் தின்றிருக்கிறோம். இன்றையதினம் இந்தப் பிராமண பயலிடத்திற் சிக்கிக்கொண்டு பூனைவாய்ப்பட்ட எலியைப்போல துன்பப்பட நேரிட்டது. இனி என்னசெய்கிறது? ஓடிப் போவோமென்றாலும் காலோய்ந்துபோகிறது நின்று யுத்தம் செய்வோமென்றாற் பசிதாகத்தாற் மெய் சோர்ந்து விடுகின்றது. இனி தீராது காலகதிப்படி முடிகிறதென்று அங்ஙனே பெரிய வியாக்கிரமம்போல் ஒரு பாய்ச்சற் பாய்ந்து, அதிக ஆக்கிரமங்கொண்டு வீமனைக் குத்தினான். அந்த குத்து கோடைகாலத் திடி இடித்தாலெப்படியோ அப்படி யிருந்தது. வீமனுக்கு ஜெயகாலம் நேரிட்டிருக்கிறதாலும் நாகலோகத்தாரால் அதிக பலம் வந்திருக்கிற தாலும், கிஞ்சித்து வருத்தமடைந்தவனாகி, உடனே அதிக சினங்கொண்டெழும்பித் தேவருமஞ்சக் கெற்சித்துப் பகாசுரன்மேல் விழுந்து, அவனைப் பிடித்து உடலை யொடித்து, தலையைத் திருகித் தூரத்திலெறிந்து, உடலத்தை அங்கிருக்கும் வண்டியின்மீது ஏற்றி, வண்டிலை மசானபூமியி லிழுத்து வந்து அவ்வண்டிலையும் சில உலர்ந்த மரங்களையும், காஷ்டமடுக்கித் கவந்தத்தையதிற்கிடத்தி நெருப்பிட்டு, நீறாகிறபரியந்தம் அவ்விடத்திலிருந்து பின்பு ஒரு குளத்தில் வந்து ஸ்நானஞ்செய்து, நியம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு நகரத்தை நோக்கி வருகின்றான்.

இங்கே வேதியரிருக்கிற நகரத்துக்கு 50 - ஏர் எருமைக் கடாக்களும் முன்னமே வந்தன. அவைகளை வேதியர் கண்டு, ஓ! ஓ! மோசம் வந்தது. நாம் அனுப்பிவைத்த பிராமணன் பகாசுரனிடத்திற் செல்லவே யில்லை. சென்றால் எருமைக்கடாக்கள் வரமாட்டா. அவன் எங்கேயோ தூங்குகிறான். அல்லது அந்த பகாசுரனைப் பார்த்துப் பயந்து மாட்டை அவிழ்த்துவிட்டு வண்டியைக் காட்டில் நிறுத்தி ஓடிப்போய் விட்டானென்று தீர்மானித்து இனி தம்மால் இவ்வூருக்குக் கெடுதி நேரிட்டது. அரைக்கணத்திற் பகாசுரன் வருவான் யார்யாரைக் கொல்லுவானோ தெரியாதென்று கைநெரித்து, வருத்தமடைந்து, சுற்றத்தாருடன் கலந்து இவ்வசனங்களைப் பேசப் பயந்து, ஐயையோ! (கூலிப்படை குத்துமா தாலிப்படை தாங்குமா?) என்பது போலாயிற்றே, நாம் சுகப்படத்தானே நரபலி கொடுக்கிறது. அதற்கு அன்னிய மனிதனை யனுப்பிவைத்தால் அவனுக்கென்ன அக்கறை?

ஆர்தான் உயிர் கொடுக்கத் துணிவார்கள் இனி நாமென்ன செய்வோம், இதோ பகாசுரன் வந்து நம்மை அதமாக்குவான், இன்றோடே வேத்திரகீயம் பாழாகப்போமென்று பலபேர் பலவாறுகக்கூறி மனங்கலங்கி கடலொலிபோல கோஷ்டமிட்டழுதார்கள். பிராமணரெல்லாங் கூடியழுத பெருங் கோஷ்டத்தை அவ்வேதியன் வீட்டிலிருந்த குந்திதேவி தருமராசன் முதலானவர்கள் கேள்விப்பட்டு வெளியேவந்து, என்ன என்னவென்று வினவினார்கள். அந்நகரத்து வேதியர் முகவாட்டமுடையவராய், ஓ அதிதிகளே! பகாசுரனுக்குப் பலியிடுகிறதற்காக உங்களில் ஒருவனை அனுப்பி வைத்தோமே, அவன் அப்பகாசுரனைப் பார்ப்பதற்கு அஞ்சியோ? அல்லது அவனிடத்திற்குப் போவதென்னவென்று நினைத்தோ? வண்டியிற் பூட்டிய எருமைக் கடாக்களை அவிழ்த்து ஓட்டிவிட்டு ஓடிப்போனதாகத் தோன்றுகிறது. இதுவரையிற் நாமனுப்பும் வஸ்துக்களில் ஒன்றுந் திரும்பி வந்ததில்லை. இன்றைக்கு எருமைகள் வந்துவிட்டன. அதனைக் கண்டு இவ்வளவு கலவரப்படுகிறோ மென்றார்கள். தருமன் முதலானவர்கள் அவ்வேதியரை நமஸ்கரித்து, ஓ ஐயமீர்! அவசரப்படாதீர்கள். நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். பலிக்காகச் சென்ற மனிதன் லேசானவனல்ல. பகாசுரனுக்கு அவன் மிருத்தியு தேவதை யென்று நம்புங்கள். அந்த மனிதன் பகாசுரனைக் கொன்றுபோட்டு எருமைகளை அவிழ்த்து விட்டவனாகயிருக்கின்றது அதனால் எருமைகள் வீட்டுக்கு வந்தன. எல்லாம் இன்னும் சற்று நேரத்திற்குள் தெரியும் வாருங்களென்று யாவரையும் அழைத்துக்கொண்டு, வீமன் வரும் வழியை எதிர்பார்த்திருந்தார்கள்.

வீமன் பகாசுரனை வெற்றி பெற்ற மனக்களிப்பினால் மிகுந்த இறுமாப்புடன் பர்வதம் கால் கொண்டு நடந்து வந்தா லெப்படியோ அப்படி எதிர்வந்தான். அவனைப் பிராமணர்களெல்லாம் பார்த்து ஐயுற்று நிற்கிறபோது வீமன் குந்திதேவியையும், தமயனையும் வணங்கி, பின்பு எதிர்வந்தவேதியரையும்தொழுது தம்பிமார்களையும் ஆலிங்கனஞ் செய்துக்கொண்டான். இதற்குள் இந்த ஐவரையும் பாதுகாத்து வருகிற வேதியன் வீமனை நோக்கி அப்பா பிராமணோத்தமா! நீ அந்தப் பகாசுரனுக்குப் பலியாகச் சென்றவனாயிற்றே ஏது திரும்பி வந்ததென்று கேட்க, வீமன் வணங்கிச் சொல்லுகிறான். ஓ ஸ்வாமி! உங்களுடைய ஆசீர்வாத வல்லமையினால் அந்தப் பகாசுரனை எமபுரத்துக் கனுப்பி அவன் கவந்தத்தை அன்னங் கொண்டுபோயின வண்டியினால் நீருக்கிவிட்டு ஸ்நானஞ் செய்து வந்தேனென்றான். இதனைக் கேட்ட வேதியர்களனைவரும் முன்னம் எவ்வளவு வருத்தப்பட்டார்களோ அதற்குப் பதின்மணங்கான மகிழ்வைக்கொண்டு பூரித்து அங்கிருந்தபடி நகரத்தை அலங்கரிக்கத் திட்டஞ் செய்து, பூரணகும்ப முதலானவைகளையும் வரவழைத்து மாங்கல்ய ஸ்திரீகளெல்லாம் மங்களம் பாட, வேதவேதியர்கள் மந்திராக்ஷதை களிறைக்க நகரத்தை திருவலம் வந்து, அந்த ஐவரையுமவரவர்கள் வீட்டுக்கு அழைத்துப்போய் மரியாதைகளைச் செய்து இருப்பிடத்திற் கொண்டு வந்து விட்டு, வீமனையும் தருமன் முதலானவர்களையும் ஆதரணை செய்துவரா நின்ற வேதியரையும் அவர் மனைவியாரையும் நோக்கிச் சொல்லுகிறார்கள். ஓ புண்ணியவான்களே! இந்த ஒரு மகா புருஷனால் இவ்வக்ராரத்திலிருக்கும் நாங்களெல்லாம் உயிர்பெற்றதுமன்றி பெருவாழ்வு மடைந்தோம் அவனையும் அவனைச்சேர்ந்த மற்ற யாவரையும் பாதுகாத்துவரும் நீங்கள் சந்திரசூரியருள்ளளவும் பெயரும் கீர்த்தியும் பெரும் பயனும் படைத்தீர்களென்று பலவாறு புகழ்ந்து அன்று முதல் அதிதிகளாகிய ஐவருக்கும் அவர்கள் தாய்க்கும் யாதொரு குறைவில்லாமல் விருந்து போசன முதலிய வைபவங்களைச்செய்து தெய்வத்தைப்போல் எண்ணிப் பயபக்தியாய்ப் பணிந்து வந்தார்கள். இந்த ஐவரும் மிகுந்த வணக்கமுடன் அவர்கள் களிப்பெய்துமாறு சகல உபசாரத்துடன் வேண்டிய உபசாரங்களனைத்தையும் செய்துகொண்டு, அவர்களை மாறாமற் றொழுதிருந்தார்கள்.

வேத்திரகீயச்சருக்கம் முற்றிற்று.

---

எட்டாவது,

## சுயம்வரச்சருக்கம்

---

### கண்ணன் துதி

காயமும்புலனுமந்தக் கரணமுமாகி யெல்லாந், தேயமும் பரந்து நின்று மீளவுஞ்சித்துஞ்சுத்த, மாயமுமாகி நீங்கி வருபெருநாரு

னந்த, மாயவெம்பெருமானென்னை யாண்டருளாழியானே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவர்கள் சரிதமிவ்வாறாக, அத்தினபுரத்தில் துரியோதனன் முதலானவர்கள் ஐவர்க ளிறந்தாரென்கிற கருத்தை உட்கொண்டு மனவூக்கத்தோடுசிலாக்கியமான போகபாக்கியத்தை யனுபவித்து வந்தார்கள். அதற்குமேல் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளும். துரோணாச்சாரியைக் கொல்ல ஒரு புத்திரனையும் குருவின் வாக்கியப்படி தன்னைக் கட்டிக்கொண்டு போயின பற்குணன் தோளுக்கியைய ஒரு புத்திரியையும் பெற்ற பாஞ்சாலன், ஐவர் அரக்குமாளிகையி லிறந்துவிட்டாரென்கிற சேதியைப் பல பெயர்களாற் கேள்விப்பட்டு அதிக துன்ப மடைந்து கொலுக்கூடத்தில் வந்து, அங்கு நிறைந்திருக்கிற மந்திரிகள் பிரதானிகள் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் முதலானவர்களை நோக்கி, ஓ சபையாரே! ஆதியில் துரோணாச்சாரி என் சபைக்கு வந்தபோது அவரை அலட்சியப்படுத்தினதற்காகச் சினங்கொண்டு என் மாணாக்கரால் உன்னைக் கட்டிவரும்படிசெய்து நானிருக்கும் சபையைப் பங்கப் படுத்துகிறேனென்று சபதம் பண்ணி யிருந்தாரே, அவ்வாறு குருகுல மக்களிற் பற்குணனால் என்னைக் கட்டிப் போய்ச் சபையிற் பங்கப்படுத்தினார். அன்று சபையாரறிய நானொரு சபதங் கூறினேன். அஃதென்னெனில், என்னைப் பங்கப்படுத்தின துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், என்னை வெற்றிபெற்ற பற்குணன் தோளுக்கியைய ஒரு புத்திரியையும் பெருகிறேனென்று உறுதியாகச் சொல்லி, அந்தப்படி எனக்குக் கைகூடுமாறு அனேகம் பெரியோர்களை அடுத்து முடிவில் உபையாசன்-யாசன் என்னும் பெயர்வகித்த யிரண்டு பெரியோர்களால் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்து அந்த யாகத்தீயில் மக்களைப்பெற்று மகிழ்வடைந்திருந்தேன். இப்போது என் புத்திரிக்கு நியமித்த கணவனாகிய பற்குணன் தன் தமயன் தம்பிமார் அன்னை இவர்களோடு அரக்குமாளிகையில் வெந்து நீறாகிவிட்டதாக உலகப் பிரசித்தமா யாவரும் சொல்லுகிறார்கள். எப்போதும் நீங்காமல் என்னுள்ளத்திற் குடிகொண்டிருந்த மகிழ்வுக்கு அழிவு தோன்றிற்று. இனி நான் என்ன செய்யப் போகிறேன்? புத்திரியோ மங்கைப்பருவ மடைந்திருக்கிறாள். அவளைக் கன்னிகாமாடத்தில் வைத்து எவ்வாறு பார்ப்பேன்? அல்லது யாருக்காவது மணம்புரியலாமென்றால் என் வாக்குக் கழிவு வருகிறது மன்றி ஒருவனுக்கு நியமித்த பெண்ணை மற்றொருவனுக்கு மணம்புரிவித்தானென்கிற அபவாதமும் நேரிடும். இதற்கென்ன செய்வேனென்று மிகுந்த அருமைப்படுகிற அரசனை வணங்கி மந்திரிகள் சொல்லுகிறார்கள்:

ஓ மண்டலேஸ்வரா! உமது வாக்குக் கழிவு வராது. ஏனென்றால், குருகுலமக்களிற் பாண்டு புத்திரர்கள் ஐவரும் தெய்வானுகூலத்தினாற் பிறந்தவரென்று பெரியோர்களாற் கேள்விப்பட்டிருக்கிறோம். தங்கள் புத்திரர்கள் மந்திரானுகூலத்தினாற் பிறந்திருக்கிறாள். ஐவர்கள் அரக்குமாளிகையி லிறந்தார்கள். அப்படி அவர்க ளிறப்பார்களாகில், தெய்வமகத்துவம் என்ன இருக்கின்றது? அப்பால் வேதநிர்ணய மென்னத்திற்காம், பாண்டவர்களோ மெத்த மாட்சிமை யுடையவர்கள். அவர்களுள் வீமன் வாயுபகவானுடைய புத்திரன் அவனை மாருத சகாயனாகிய அக்கினிபகவான் தொடவேமாட்டான் சுடவுமாட்டான் அவனைப்பற்றி மற்ற நால்வரும் பிழைத்திருப்பார்கள். பிழைத்திருந்தாற் சேதி தெரியலாமென்றாலோ ஏதோ ஒரு காலகதியால் உருவமறைந்து பேழையிற் பாம்படங்கி இருப்பது போல் இருப்பார்களேயன்றி இறக்கவில்லை என்று உறுதியோடுரைத்தார்கள். பாஞ்சாலன் மந்திரிகள் சொல்லும் அவ்வார்த்தையைக்கேட்டு, ஓ மந்திரிகளே! நீங்கள் என்னைச் சுத்த பைத்தியக்காரனாகத் தீர்மானித்திருக்கின்றீர்கள், நானென்ன இலேசாய் விசாரித்திருப்பேனா? துரியோதனன் குந்தி முதலிய அறுவர்களின் அஸ்திகளைப் பொறுக்கிவைத்து நீர்க்கடன் முதலியவற்றைச் செய்தானாம், இன்னுங் குட்டிச்சுவற்றில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா? எங்கேயாவது சாவு சமாச்சாரம்பொய்யாகுமாவென்று துயரப்பட்டான். மந்திரிகள் துயரப்படுகிற அரசனை நோக்கி, ஓ மண்டலேஸ்வரா! தாங்கள் வருத்தப்படவேண்டியதில்லை. நாம் சோதிட சாஸ்திரங்களை அழைத்துக்கேட்டால் உள்ளது உள்ளது போல் விளம்புவார்கள். தாங்கள் சஞ்சலப்படாதிருங்களென்று விசனத்தை மாற்றி சோதிட சாஸ்திரத்தில் வல்லமையாளராயிருக்கிறவர்கள் இக்கணம் ராஜசமுகத்திற்கு

வருகிறதென்று தேச முழுவதும் பறையறைவித்தார்கள். இப்பறையோசையைக் கேள்விப்பட்டு அனேக சோதிட சாஸ்திரிகள் இராஜசபைக்கு வந்தார்கள். வந்தவர்களுக் கெல்லாம் தகுந்த மரியாதைகளைச் செய்து பொற்பீடத்தி லிருக்கச்சொல்லி, பாஞ்சாலனும் மந்திரிமார்களும் சொல்லுகிறார்கள்.

### பாஞ்சாலன் அசரீரியால் பாண்டவ ரிருக்கை யறிதல்.

ஓ சோதிட சாஸ்திரிகளே! குருகுல மக்களிற் பாண்டு புத்திரர்கள் உயிரோ டிருக்கின்றார்களா? அல்லது அரக்குமாளிகையில் வெந்து நீறாயினார்களா? இதனை நன்றாக வாராய்ந்து சொல்லுங்களென்ன, அவர்கள் சோதிட நூல்களைச் சோதித்துப் பார்த்து அரசனை நோக்கி, ஓ மண்டலேஸ்வரா! பஞ்சவர் எஞ்சவில்லை மகா கனவான்கள் அவர்களிறந்து விட்டதாய் லோகப் பிரசித்தமாக வழங்கின போதிலும் சோதிட சாஸ்திரத்தை ஆராய்ந்து பார்க்குமளவில் அவர்களிறந்ததாக காணப்படவில்லை. ஐவரும் பஞ்சகர்த்தர்களைப் போல் மேன்பாடான இடத்திலிருக்கிறார்கள். இதற்கொரு சந்தேகமில்லை என்றார்க ளதைக் கேட்ட பாஞ்சாலன் ஆச்சரியப்பட்டு, நல்லது யெல்லாம் அறிந்துகொள்ளுவோம் நமது குருவாகிய உலூகமாமுனியை அழைத்து வாருங்களென்று மந்திரிகளுக்குக் கட்டளையிட, மந்திரிகள் ஒருமுத்துச் சிவிகையை எடுத்துக் கொண்டுபோய் உலூகமாமுனியை வணங்கி, ஓ ஸ்வாமி! தங்களை அரசன் அழைத்துவரச் சொல்லி யெங்களுக்குக் கட்டளை யிட்டாரென்று விண்ணப்பஞ்செய்ய, உலூகமாமுனி தக்ஷணமெழுந்து, முத்துச் சிவிகையிலேறி இராஜன் சமுகத்துக்கு வந்தார். அரசன் குரு வருவதை யறிந்து எதிர்கொண்டுபோ யழைத்துவந்து, பொற்பீடத்தி லிருத்திச் சோடசோபசாரஞ்செய்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்தெதிர் நின்றான். உலூகமாமுனி வணங்கிய அரசனுக்கு ஆசிகள் புகன்று அருட்பார்வையுட் நோக்கி முகம்வாடி யிருப்பதை அறிந்து, அடடா! அரசன் ஏதோ துயரத்தை மனதில் வைத்திருக்கிறானென்று தீர்மானித்துச் சொல்லுகிறார்: ஓ ராஜராஜேஸ்வரா! சூரிய உதயத்தில் மலர்ந்திருக்கும் கமல மலர் போலிருக்கிற உன் முகம் சந்திரனைக் கண்ட தாமரைமலர்போ லிருக்கவேண்டிய காரண மென்னவென்று வினவ, ஐயனே! உல



கத்தில் அரசருக்குத் தாய்-தந்தை-தமயன்-தம்பி-மைத்துனன்-மாமன்-அன்பன்-மந்திரி இவர் முதலானவர்களெல்லாம் ஒவ்வொரு காரியங்களில் குருவாகின்றார்கள். ஆதலால், அவர்களிடத்தில் அரசனாயினவன் எந்தெந்த காலத்தில் எவ்வாறு வசனிக்க வேண்டுமோ அந்தந்தக்காலத்தில் அவ்வாறு வசனிக்க வேண்டிய முறைமை தற்காலத்தில் தாங்கள் அவர்களனைவருமாய் ஒருருக்கொண்டெழுந்தருளியதால் இனி அடியேனுக் கென்னகுறையென்று சொல்லி, இரண்டு கண்களினும் நீர் சோரக் கரங்களைக் கூப்பிச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு, ஓ திரிகாலக்கியான சம்பன்னரே! எளியேன் வமிசத்துக்குருவாகி விளங்கி எங்கள் முன்னோர்களுக்கு யாதொரு குறை வந்தபோதிலும் அதனைத் தங்களுடையதாக பாவித்து, அக்குறையைத் தீர்த்துக்காத்து ரட்சிக்கும் ஆண்டவர் நீரேயன்றோ? இன்று என்னை விழுங்கப் பிடித்த துன்பமென்னு முதலையைத் தங்கள் கிருபையாகிய சக்கரத்தை யேவி அறுத்து என்னை யாளவேண்டும் இதுதான் அடியேன் செய்துகொள்ளும் விண்ணப்பமென்று பலவாறு துதித்துப் பின்னுஞ் சொல்லுகிறான்:

ஓ ஸ்வாமி! ஆதியில் துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும், என்னை வெற்றிகொண்ட பற்குணன் தோளுக்கிணங்க ஒரு புத்திரியையும், தங்கள் கிருபா கடாட்சத்தினாலும், உபையாசன் - யாசனென்னும் பெரியோர்களாலும், புத்திரகாமேஷ்டியாகத் தீயிற் பெற்றுக்கொண்டே னன்றோ? அப்புத்திரிக்கு மங்கைப்பருவம் வந்தது. அவளுக்கு நியமகஞ் செய்திருந்த பற்குணன் அரக்குமாளிகையில் தமயன் அன்னை தம்பிமாரோடு மிறந்துவிட்டதாக லோகம் சொல்லிக்கொள்ளுகிறது இதற்குத் தங்கள் திருவடியே கதியென்று குப்புறவிழுந்து கும்பிட்டான். உலூகமாமுனி அரசனை ஆதரித்தெடுத்து, இனிய வசனங்களால் விசனத்தைமாற்றிச், சிங்காதனத்திலிருத்தி, தாமும் அருகிலுட்கார்ந்து, அப்பா இராஜசிகாமணியே! நீயேன் கிலேசப்படுகிறாய்? வருத்தப்படாதே நான் புகல்வதைக்கேள். உலகத்தில் யாராவது புத்திரனில்லாமல் வருத்தமுற்றுப் பெரியோரைப் போயடுத்தால், அவர்கள் முன்பின் யோசித்துத் தங்கள் கியான திருஷ்டியால் திரிகாலத்தையுமுணர்ந்து, யாதொரு தடையும் வராதிருப்ப

தாயிருந்தால்தான் யாகஞ் செய்ய யத்தனிப்
பார்கள். யாதாமொரு தடை வருகிறதாயிருந்
தால் யாகஞ்செய்ய பாத்தியப்படார்கள்.
உனக்குப் புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்தவர்
கள் மஹாமூர்த்திகள். அவர்கள் திரிகாலப்
பிரமாணங்கொண்டுதான் செய்தார்கள். உன்
புத்திரி பற்குணனுக்கு மாலையிடாமற்போகிற
தாயிருந்தால் யாகத்தில் அக்கினிபகவான்
அப்புத்திரியை யேந்திவருவானா? எந்தவித
த்திலாவது உன் புத்திரி பற்குணனை மாலை
புனைவாள். அந்த உபையாசன்-யாசனென்
னும் பெயர் வகித்த பெரியோர்கள் திறங்களை
என்னாற் சொல்லக்கூடாமையா யிருந்தபோதி
லும், ஒருவித திருஷ்டாந்தத்திலேயே அவர்
கள் வல்லமையாளரென்று தோன்றுகின்றது.
அஃதெப்படி யென்னில், புத்திர காமேஷ்டி
யாகத்தில் வந்த பிண்டத்தைக் கொடுக்கும்
போது உன் மனைவி தீண்டாதவளாயினாள்.
அக்காலத்தில் தங்கள் சக்தியினால் அக் குண்
டத்திற்றானே அப் பிண்டத்தையிட்டு, வே
றொரு மந்திரத்தை யுச்சரித்துப் புத்திரனை
யும் புத்திரியையும் வரும்படி செய்தார்கள்.
இந்த உலகத்தில் வெகுபெயர் அநேக யாகஞ்
செய்தார்கள். இவ்வாறு செய்தவர்களு முண்
டோ? அவ்வளவு வல்லமையாளர் செய்த
வேலைக்கொரு தீங்கு நேரிடுமா? நேரிடாது.
பஞ்சவர்கள் அரக்குமாளிகையி லிறந்துவிட்
டதாகக் கேள்விப்பட்டிருக்கிறோமே யென்
றாலோ அரக்குமாளிகை எரிந்தது உண்மை
தான் அதில் ஐவர்களிறந்தாரென்பது அபத்
தம். ஏனென்றால், பற்குணனென்ன சாமானி
யனா? அனேக காலந் தவஞ்செய்தாலும்
பெறக்கூடாத தநுசாஸ்திர வித்தைகளனைத்
தையும் அங்கை நெல்லிக்கனிபோலத் தன்னை
யடைந்திருக்கப் பெற்று விளங்குகிறவன்.
வில்விநோதன். மாளிகை அனற்பட்டபோது
அவனே அம்மாளிகையிலிருப்பானாகில் வில்
லெடுத்து வருணாஸ்திரந் தொடுக்க நேரமில்
லாமற் போனாலும் வருணேஸ்வரமென்கிற
தெய்வீக மந்திரத்தை யறிந்த அவன் அம்
மந்திரத்தை உச்சரித்தால் உடனே அனலவி
ந்துபோம் ஒருவேளை அனலைக் கண்டு அஞ்சி
மெய்மறந்தானென்று சொல்வோமாகில் சம
யத்தில் யுத்தி தோன்றுதல் அவனுக்குச் சுவா
தீனமாதலாற் சும்மா யிருக்கமாட்டான் நீ கவ
லைப்படவேண்டாமென்று கழறினார்.

இவை யனைத்தையுங் கேட்ட அரசன்
கிஞ்சித்து ஐயந்தீர்ந்து குருவை நோக்கி,
தங்கள் வாக்கின் உறுதியால் நம்பவேண்டி
யதா யிருக்கிறதேயன்றி என் மனவுறுதியால்
நம்பக்கூடவில்லை. ஆனாலும், அடியேன் ஒரு
விண்ணப்பம் பண்ணுகிறேன். அவ் விண்
ணப்பத்தை அங்கீகாரஞ் செய்து அருள்புரி
வீராகில் அப்போது என் சந்தேகம் நீங்கு
மென்றான். உலூகமாமுனி அதென்னை
யென, ஓ ஸ்வாமி! தங்களுக்கு அசரீரி வசிய
மாதலால் பூசை முகத்தில் அவ்வசரீரியை
வினவி எனக்குச் சொல்லவேண்டுமென்று
தொழுதான். உலூகமாமுனி அக்கருத்துக்
கிசைந்து, அரசனிடத்து விடை பெற்றுத்
தன் ஆசிரமத்துக்குச் சென்று ஸ்நானஞ்
செய்து அசரீரியை நோக்கித் தியானித்தார்.
உடனே அசரீரி தோன்றினள். அந்த அம்
மனை முனிவர் வணங்கி, ஓ அம்மணி! பாண்டு
புத்திரர் அரக்குமாளிகையில் எரிந்து நீறாகி
விட்டார்களா? அல்லது உயிர்ச்சேதமின்றி
யிருக்கிறார்களா? என்று வினவ, அசரீரி சொல்
லுகிறாள்: ஓ உலூகமாமுனியே! நீரேன் வருத்
தப்படுகிறீர் பாண்டுபுத்திரர்கள் உயிரோடிருக்
கிறார்கள். இதை உறுதியாக நம்புமென்று
சொல்லி மறைந்துவிட்டாள். உலூக மஹா
முனிவர் பூசையைப் பூர்த்திசெய்து அரச
னிடத்து வந்து, ஓ எனது அன்பனே! பூசை
முகத்திற் பாண்டு புத்திரர் பிராணனோடிருக்
கிறார்களென்று அசரீரி யுரைத்து மறைந்
தனள். இதைக் குறித்து யோசிக்கவும் நம
தெண்ண முடியவும் வேண்டி யிருக்கிறபடி
யால், வேதவியாசர் வரவேண்டும். அவர்
வந்தால் எல்லாம் நிறைவேறும். அவர்
விரைவில் வரும்படி உன் மனதிற் றியானி
யென்றார். அரசன் குரு வாக்கியத்தைச் சிர
மேற்கொண்டு, வேதவியாசரை மனதில் நினை
த்துப் பலவாறு துதித்தான். திவ்யக்கியான
ஸ்வரூபியாகியும், பாண்டவர்மீது அதிக சிரத்
தை யுள்ளவருமாகிய வேதவியாசர் பாஞ்சா
லன் நினைத்த தக்ஷணம் கொலுமுக வாசலைக்
குறுகினார். அரசன் திடுக்கென்றெழுந்து எதிர்
வந்து மகிழ்வடைந்து, சாஷ்டாங்க நமஸ்
காரஞ் செய்து, அழைத்துப்போய் திவ்விய
ஆசனத்திலிருத்திச் சோடச உபசாரமுஞ்
செய்து சொல்லுகிறான்.

ஓ ஸ்வாமி! கொடிய வெய்யலி லகப்பட்
டுத் துடிக்கும் புழுவுக்கு அகஸ்மாத்தாய் நிழ
லுண்டானது போலத் துன்பமாகிய வெய்
யலி லகப்பட்டு வருந்தித் தளரும் எளியே

னுக்குத் தாங்கள் வந்து முன்னின்றீர்கள். இனி எனக்கொரு குறையுமில்லை இன்று நான் புனிதனானேன். என் மனக்குறையும் நிறைவேறிற்று என்று பலவாறு புகழ்ந்து, ஓவேத நாதனே! பாண்டுமக்கள் அரக்கு மாளிகையிலிறந்துவிட்டதாக லோகவதந்தி யுண்டாயிருப்பதை யான் கேட்டு கன்வருத்தமுற்று என் குருவைக்கொண்டு பரிசோதித்தேன். அவர் அசரீரியாற் பாண்டவர்கள் உயிர்ச்சேதமின்றி யிருக்கிறார்களென்று தெரிந்து வந்து எனக்குரைத்தார். ஆனல்வர்கள் இன்னவிடத்தில் இன்னவுருவோடு விளங்குகிறார்களென்று தெரியவில்லை. என் புத்திரியோ மங்கைப்பருவ மடைந்தாள். அவளை ஐவரிற் பச்சை நிறத்தை யுடையவனாகி, திறத்தில் ருத்திரனைப்போல் விளங்கி, பங்குனிமாதத்திற் பிறந்தமையால் பற்குணனென்றும் வெற்றியால் விசயனென்றும், நிறத்தால் அர்ச்சுனனென்றும், பெயர் பெற்று விளங்குகிற கனவானுக்கும் மணஞ் செய்யவேண்டுமென்று கருதி யிருக்கிறேன். அக்கருத்து நிறைவேறவும், அந்த அர்ச்சுனனைக் கண்ணாற் கண்டு மகிழவும் ஒரு தந்திரஞ் சொல்லவேண்டுஞ் சுவாமி யென்றான். வியாசர் அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, ஓ பாஞ்சாலா! நீ யென்ன லேசாகப்பெற்ற புத்திரியா? அருமையான தவத்தைச்செய்து சாம்பவமூர்த்திக் கொப்பாகிய உபையாசன்-யாசனென்னும் பெரியோர்களுடைய வேதமந்திர அநுக்கிரகத்தினாற் பெற்ற கன்னிகையன்றோ? அவள் அர்ச்சுனனுக்கு மனைவியாகாமற் போவாளா! நீ வருத்தப்படாதே நானொரு உபாயஞ் சொல்லுகிறேன் அவ்வாறு நீ செய்தாற் பாண்டவர்கள் எந்தவிடத்தில் எந்த உருவத்தோடு யிருந்தாலும் அந்த உருவத்தோடும் வந்து, உன் குமாரத்தியை மணம்புரிந்து போவார்களென்று சொல்லி அவ்வுபாயத்தையுஞ் சொல்லுவதானார்.

## வியாசரனுக்ஞையாற் பாஞ்சாலன் லக்ஷயக் குறியோடு சுயம்வரஞ் சாட்டல்.

ஓ அரசனே! வில்லில் வல்லவராகியிருக்கிற அரசர்களெல்லாம் கண்டவுடனஞ்சித் தெண்டனிட்டு மெய்நடுங்கப் பர்வதாகாரமாக இருக்கிற ஒரு வில்லும், தேவாஸ்திர முதலியவை நிறைந்த ஒரு அம்புப்புட்டிலும் வைத்து, வெளியில் 70-அடி உயரமுள்ள தாயுள்ள இரண்டு கம்பங்களை 70-அடி நீளப் பரப்பில் நாட்டி, 70-அடி விட்டம்பூட்டி, அதற்குமேல் இரட்டித்த 70-அடிக்கம்பம் நாட்டி, அதன்மேல் இடைவிடாமற் சுழலும் சக்கரத்தைவைத்து, அந்தச் சக்கரமத்தியில் மச்ச குறியைப்பூட்டி, அதிற் போட்ட விட்டத்துக்கு மும்மூன்று துளையுண்டாக்கி, பூமியிற் பெரிய ஒரு வெள்ளிக் கடாரம் வைத்து, அதில் மஞ்சள் நீரை நிறைத்து, அவ்விட்டத்தின் துளைகள் அந்நீரில் தோன்றவும் உபாயமில்லாமற் பார்ப்பவர்கள் சாயல் அத்துளையை மறைக்கவும் நேர்படவைத்து, இந்த வில்லை வளைத்து நாணி ஏறிட்டு மஞ்சள் நீரிற்றோன்றும் துளைக்குறியின்வழியாக மூன்று கணைகளை தொடுத்து, மேற்சுழலும் சக்கரத்தின் மூளை வழியிற் கணைகளைப்போக்கி, மச்சக்குறியை மூன்றுதாய் விழுத்தி, உடனே அம் மச்சம் அச் சக்கரத்துக்குச்சரியாக வருகிறதற்குள் சக்கரத்தை விழுத்தி, மச்சத்தையும் சக்கரத்தையும் பூமியில் விழுமுன் கணைதொடுத்து அவ்விரண்டையுங் கரத்திலேந்தினவர் எவரோ, அவர் துரோபதையை மாலையிடுவதற்குரியவரென்று விளம்பரஞ் செய்வையாகில், இச்செய்கை அந்த அர்ச்சுனன் ஒருவனுக்கேயன்றி மற்றவருக்கு அசாத்தியமாக இருக்கும். உலகத்தில் வல்லமையான அரசர்கள் அநேகம் பெயரிருப்பார்களே அவர்களுக்கு இந்த வில் வளையாதிருக்குமாவென்று நீ நினைப்பாய், அதற்கு யாம் ஒரு நிர்ணயம் செய்கிறோம் அஃதியாதெனில், அர்ச்சுனனுக்கு மாத்திரம் வில் வளையவும், மற்றவர்களுக்கு அந்த வில் வளையாதிருக்கவும், அதில் தரும தேவதையை ஆவாகனஞ் செய்துவைக்கிறோம். நீ உன் புத்திரியின் வடிவத்தைப் படத்திலெழுதி, அப்படத்திலிந்த லக்ஷயத்தை விளங்கக் காட்டி, ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்து, அதற்குப் பதினோரா நாள் வில்லை வளைக்கிறதென்றும், அதற்கேழா நாள் மணம் புரிவதென்றும், நாளைக்குறித்து மணவோலை யனுப்பிவிடு ஐவரெங்கிருந்தபோதிலும் வருவார்கள். அவருள் அந்த அர்ச்சுனன் உன் புத்திரியை மணம் புரிவானென்று வாழ்த்தி அரசன் மனத்தைத் தேற்றினார்.

அதனால் அரசன் அதிக மகிழ்வையடைந்து, தன்னருகிலிருக்கிற மந்திரிகளை நோக்கி, புரோகிதரையும் சித்திரக்காரரையும் அழைப்பியுங்களென்று உத்தரவுபண்ணினான். மந்

திரிகள் தக்ஷணம் அவ்விரு வகையாளரையு மழைப்பித்து அரசன்முன் விடுத்தார்கள் அரசன் சித்திரக்காரரைநோக்கி, ஓ ஓவியரே! நீங்களென் புத்திரியைப்போற் படமெழுதிவாருங்களென்று கட்டளையிட்டு, அவர்கட்கு நடத்தவேண்டிய மரியாதைகளனைத்தும் நடத்தி அனுப்பிவிட்டுப் புரோகிதரை நோக்கி, ஓ ஸ்வாமிகளே! என் புத்திரிக்கு மணம்புரிய யத்தனித்திருக்கிறேன். அதற்குத் தம்பப் பிரதிஷ்டைக்கு நாளும், அந்த நாளுக்குப் பதினோராம் நாள் வில் வளைக்கிற நாளும், அதற்கேழாம் நாள் மணம்புரிவதற்கான நாளும், சந்திரபலம் தாரர்பலம் நிறைந்திருக்கிறதாக ஒரு திவ்ய லக்கினம் பார்த்துச் சொல்லுங்களென்று கேட்டான். அப் புரோகிதர்கள் அரசனினைத்தபடி பரிசோதித்து நன்னாளை நியமிக்க, அரசன் அத்தினத்தில் நகரத்துக்குள் விசாலமானவிடத்தில் அரசர்களுக்கும் வேதியர்களுக்கும் தகுந்த சிங்காதனத்தோடு கல்யாணமண்டப மியற்றி, (11-ம் கால் நாட்டி, லக்ஷயக் குறியைவைத்து, வியாசரால் தருமதேவதையை வில்லில் ஆவாகனஞ் செய்வித்து, அவ்வில்லையும் அம்புப் புட்டிலையும் வைத்துச் சுயம்வரஞ் சாட்டினன். சித்திரக்காரர் அரசன் கட்டளையைச் சிரமேற்கொண்டு, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, உலகத்தில் யோனிவாய்ப்பட்டு உதிக்கின்ற மாதர்களை எழுதுவதற்கே நமக்குக் கன வருத்தமா யிருக்கின்றது. அப்படி யிருக்கப் புத்திர காமேஷ்டி யாகத்தீயி லுற்பத்தியாகி, சொற்கமத்திய பாதாள லோகங்களிலிருக்கும் அழகி லுயர்ந்த மாதர்க ளெல்லா மயங்கித் தொழும்படியானசௌந்தர உருவத்தினைக்கொண்ட திரௌபதையை எவ்வாறு எழுதப் போகிறோம்? எழுதாமல் விடலாமென்றால் நாமெடுத்த பெயர்க்கு இழிவு வருகிறதுமன்றி, அரசனால் தலைக்கும் தீங்கு வருகின்றது இனி நாமென்னசெய்யப்போகிறோம்? இது விஷயத்தில் தெய்வச்செய லெப்படியோ அறியோம். ஆயினும், வீணாய்க் கவலித்திருப்பது காரியமன்று அந்தப்புரத்தில் நமது குடித்தெய்வமாய் குலாவியிருக்கும் திரௌபதியம்மனைக் கண்டு, நமது குலதேவதையும் இஷ்ட தேவதையையும் தியானித் தெழுதுவோம். அதன்பின்பு தெய்வம்விட்ட கதியாகுமென்று தெய்வத்தின்மேற் பாரம் வைத்து, அந்தப்புரத்திற் சென்று, தோழியர்களுக் கரசனிட்ட கட்டளையைத் தெரிவித்தார்கள்.

தோழியர்கள் அதை யம்மனுக்கு அறிவித்து, ஒருகூடத்திற் புகைபோல் திரையிட்டு அம்மனை யழைத்துவந்து அதில் நிறுத்தினார்கள். சித்திரக்காரர் அந்த அம்மனது திருவுருவத்தைத் திரைமத்தியிற் கண்டு ஒருவாறுகத் தெளிந்து, பாதாதி கேசம்வரைக்கும் அவயவங்களை எழுதி, எந்தெந்த விடங்களில் எந்தெந்த வர்ணம் வைக்கவேண்டுமோ அவ்வவ் வர்ணங்களை வைத்துக் கூடியமட்டும் குறைவில்லாதெழுதினார்கள். ஆனாலந்த அம்மனுருவம் சித்திரக்காரருக்கு மேல்வரிக் குறியாக இருந்ததேயன்றிச் சாத்தியமாக இருக்கவில்லை அம்ம னந்தப்புரத்துக்குட் சென்றாள். சித்திரக்காரர் எழுதியபடத்தை எடுத்துவந்து அரசனிடத்துவைத்து, மிகுந்த பயத்தோடு நமஸ்காரஞ் செய்தார்கள். அரசன் அப்படத்தை நோக்கிக் கிஞ்சித்து வியப்படைந்து தகுந்த பரிசு கொடுத்துச் சித்திரக்காரரை அனுப்பிவிட்டான். சித்திரக்காரர் பரிசுபெற்றதற்காக மகிழ்வுறாமல், அரசனால் ஒரு கெடுதியும் வராமற் காப்பாற்றின. தங்கள் தங்கள் குலதேவதைகளையும் இஷ்டதேவதைகளையும் நினைத்து வாழ்த்தி அதிக மகிழ்வையடைந்து அவரவர்க ளிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அரசன் மந்திரிகளை நோக்கி, ஓ மந்திரிகளே! இப்படத்தின் பின்புறத்தில் லக்ஷயக் குறியை விளங்க எழுதி, மணவோலையையும் தூதுவர்கள் கையிற் கொடுத்து இவ்வுலகத்துள்ள மன்னர்கட் கெல்லாந் தெரிவியுங்களென்று கட்டளையிட்டான். மந்திரிகள் அரசன் கட்டளைப்படி லக்ஷயக்குறி முதலியவற்றை எழுதித் தூதுவர் கையிற் கொடுத்து தேசாதிபதிகளாகிய மன்னர் மன்னர்களுக்கு அனுப்பிவித்தார்கள். தூதுவர்கள் படத்தையும் மணவோலையையும் எடுத்துக்கொண்டு, கடுங்காற்றினும் அதிவேகமாகச் சென்றார்கள். இங்கே வேதவியாசர் அரசனுக்குப் பல ஆசிகள் வழங்கி, மணத்துக்கு வருகிறோமென்று விடைபெற்றுசென்றார். தூதுவர்கள் அங்கம் அருணம்-அவந்தி-அந்திரம் இலாடம்-யவனம்-ஒட்டியம்-கருசம் - கலிங்கம் - கன்னடம் கன்னடம்-காசம்-காஸ்மீரம் - காந்தாரம்-காம்போசம்- திராவிடம் - குரு குடலம்-குருகு குந்தளம்-குலிந்தம்-கூர்ச்சரம்-கேகயம்-கேரளம் கொங்கணம் - கொல்லம் - கோசலம்-சகம்-சவீரம் - சாலவம் - சிங்களம்-சிந்து-சீனம்-சூரசேனம்-சோழம்-சோனகம்- திராவிடம்- துளுவம்-தெங்கணம்- நிடதம் - நேபாளம் - பாஞ்

சாலம்-பப்பரம்-பல்லவம்-பாண்டியம் - புலிந் தம்-போடம்-மகதம் - மச்சம்-மராடம்-மலேயா ளம்-மாளவம் - யுகந்தரம்-வங்கம்-வங்காளம்-விதற்பமென்னும் 55-தேசத்திற் பாஞ்சாலந் தவிர 55-தேசத்துஞ் சென்று, அவ்வவ் வர சர்களுக்குப் படத்தையும் மணவோலையையுங் காண்பித்து, இன்னும் குறுநில மன்னருக்கும் வேதியருக்கும் தெரிவித்து வந்துவிட்டார்கள்.

இப்படத்தைப் பார்வையிட்ட வரசர்கள் யாவரும் அதிக மகிழ்வெய்தி, அப்படத்தின் பின்புறத்தி லெழுதியிருக்கிற லக்ஷயக்குறியை நோக்கிக் கனவருத்தப்பட்டு, இந்தக் கன்னி கையை நாமெப்படி விரும்புகிறது? அப்பா! நமக்கிசைந்தபொரு ளல்லவென்று கைவிட்டு, இந்த லட்சயப்படி செய்பவர் நெடிய கடல் சூழ்ந்த உலகத்தி லொருவருமில்லை. ஆனால், கல்வி யொருவர் பங்கல்ல எங்காவது அதிக வல்லமையாள ரிருப்பார்கள் இந்த லட்சயப் படி செய்வார்கள். அப்படிப்பட்ட கனவான் களைக் கண்ணாரவாகிலுங் கண்டு வருவோ மென்று கருதி சில வரசர்கள் வந்தார்கள். சில அரசர் அந்தலட்சயத்தையும் கன்னியை யும் பார்க்கிறதற்குக் கருத்தைக்கொண்டு வந் தார்கள். துரியோதனன் முதலாகிய நூற்றுவ ரோடு கர்னனுஞ் சகுனியும், நாமென்ன வில் லாளிக ளல்லவா? நாமே அந்த லட்சயத்தை நிறைவேற்றி மகா ரூபவதியாகிய கன்னியை மணம் புரிவோமென்று கருதிப் புறப்பட்டார் கள். இந்தச் சேதியை யுணர்ந்த துரோணர் கிருபர் இவர்கள் அதிகமகிழ்வை யடைந்து, இந்த லட்சயத்தை நிறைவேற்றுவோர் ஒரு வருமில்லை. அர்ச்சுனனொருவன்றான் நிறை வேற்றுவான். இதுமுன்னிலையில் அந்த அர்ச் சுனனைக் காணலாமென்கிற கருத்தைக் கொ ண்டு, அவ்விருவரும் குருகுலமக்களோடு கூடி வந்தார்கள். மற்ற அரசர்களும் வேதியர்க ளும் பாற்கடற் புரண்டு பாஞ்சாலதேசத்தின் மேல் வந்தாற்போல, அந்தப் பிர்ம்ம க்ஷத்தி ரியகுலமடங்கலும் நகர்ப்புறத்துவந்து சேர்ந் தார்கள். வில்வளைக்க நியமித்த நாள் பதி னைன்றில் ஒன்பதுநாட் சென்றது. அது வரைக்கும் மலேச்சார்பான வேத்திரகீயத்தி லிருக்கும் ஐவருக்கு இந்தச் சேதி தெரியாது.

### ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பஞ்சவர்க்குச் சுயம்வரச்சேதி யறிவித்தல்

இப்படியிருக்கப் பத்தாநாள் பல்லாயிரங் கோடி அண்டங்களையும் தன் வயிற்றினிட மாகவைத்து வடபத்திரத்திற் சயனித்திருக் குஞ் சிறிய குழந்தையாகியும், இப்பாரதத்தை நடாத்திப் பூமிதேவிக்குச் சுமை நீக்குங் கருத் தை யுடையவராகியும், தேவகிதேவியிடமாகப் பிறந்து ஆயர்பாடியில் நந்தன்வீட்டில் வளர் ந்து வெண்ணெய் தயிர் பால் இவற்றைத் திருடி ஆச்சியராற் கட்டுண் டடிபட்டவராகி யும், ஐவருக்கு அம்மான் புத்திரனுகி அன்பு வைத்தவராகியும், கபட நாடக சூஸ்திராவ தாரியாகியும் விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் இஃதுணர்ந்து, பாஞ்சாலன் அருமையான யாகஞ்செய்து பெற்ற பெண்ணை அர்ச்சுன னுக்கே நியமித்திருந்தால், இப்போ தனுப் பிய மணவோலையும் படமும் ஐவருக்கேன் சேரவில்லை? வனச்சார்பான இடமாதலால் தெரியாமற் றவரிப்போயிற்று. இந்தசேதியை நாமே சென்று தெரிவிக்கவேண்டு மென்று தக்ஷணம் தமதுருவத்தை மறைத்து அதிக வார்த்தீபமாகிய பிராமண ரூபத்தைக்கொண்டு தண்டுகமண்டலம் குடையுடனே தத்தடியிட்டு நடந்து வேத்திரகீயத்துக்கு வந்து ஐவரிருக் கும் மாளிகையிற் சென்றார்.

இவரது வரவைக்கண்ட ஐவரும் குந்தி தேவியும் எதிர்வந்து அழைத்துப்போய் ஒரு பீடமளித் திருக்கச்சொல்லி நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி! தாங்க ளிருக்குமிடம் யாது? இந்த வேத்திரகீயத்துக்குவந்த காரண மென்னவென்று வினவ, கிழவேதியர் கிருபை கூர்ந்து ஐவரையும் பார்த்து, ஓ புண்ணிய வான்களே! யான் அதிதி கங்கை முதலிய நதி யில் ஸ்நானஞ்செய்து திவ்ய க்ஷேத்திரங்க ளைத் தரிசித்துப் பூமிபிரதக்ஷிணம் புரிவேன். இஃதல்லாமலும் மன்னர்வாழும் பட்டணங் களிலுஞ் சென்று, தருமசத்திரங்களிற் போ சனமுண்டு, அங்குநடக்கும் அதிசயங்களையும் பார்த்து வருகிறதுண்டு தற்காலத்தில் மேற் றிசையிற் சென்று, அங்கிருக்கும் கோகர்ண முதலிய திவ்விய ஸ்தலங்களைத் தரிசிக்கவும் திவ்ய நதிகளில் ஸ்நானஞ் செய்யவுங் கருதி வந்தேன். வந்தவிடத்தில் வழிதப்பிப் பெருங் காட்டிற் போய்விட்டேன். அக் காட்டைக் கடந்து வருகிறபோது இந்த நகரத்தைக் கண்டேன் இங்கு சற்றிளைப்பாறிப் போவோ மென்று இவண் வந்தேனென்றார்.

அந்த அதிதிபேச்சை ஐவரு நம்பி அவ ருக்கு அதிக உபசாரஞ்செய்து, ஓ ஸ்வாமி! தாங்கள் மன்னர்கள்வாழு மிடங்களிற்சென்று

அங்கு நடக்கும் அதிசயத்தைப் பார்த்து
வருபவரென்று புகன்றமையால், அரசர்களு
டைய நாட்டில் ஏதாவது அதிசய மூண்டா
யிருந்தாற் சொல்லவேண்டுமென்ன, வேதியர்
சொல்லுகிறார்: ஓ விப்பிரர்களே! தற்காலத்
தில் யாதொரு அதிசயமுமில்லை. ஆனால், 56-
தேசத்திலும் வளப்பங்களிற் சிறந்த பாஞ்
சாலத்து அரசனாகிய துருபதன் அக்கினி
வைசியரிடத்தில் வில்வித்தை கற்கிறநாளில்,
பாரத்துவாசர் புத்திரனாகிய துரோணாசாரி
யும் அந்த அக்கினி வைசியரிடத்தில் வில்
வித்தை கற்றுக்கொண் டிருந்தாராம். அவ
ரிடத்தில் இந்தத் துருபதன் அருமையா
யிருக்கிற சில வித்தைகளைக் கற்றுக்கொண்டு,
தனக்குப் பட்டாபிஷேகமான காலத்துப் பாதி
ராச்சியங் கொடுக்கிறேனென்று வாக்கு தத்தஞ்
செய்து போனானாம். பின்பு அந்தத் துரோ
ணாச்சாரி அவனிடத்திற் சென்றகாலத்து
அவ்வரசன் கூறிய வாக்கு தத்தத்தை நிறை
வேற்ற மனமில்லாமல் அயலாரைப்போல்
எண்ணி மரியாதை செய்யாம லிருந்ததின்
பேரில் துரோணர் சினங்கொள்ளாமல் ஆதி
யில் நடந்த வாக்கு தத்தத்தைச் சொல்ல,
அதை அரசன் மதிக்காமலிருக்க, துரோணர்
ஒரு பசுவாகிலுங் கொடென்றுகேட்க, அரசன்
அதுவுங் கொடாமல் ஏளனஞ் செய்தானாம்.
அதன்மேல் துரோணர் சினங்கொண்டு, அடா
பாஞ்சாலா! என் மாணாக்கரால் உன்னைக் கட்டி
வரச்செய்து பங்கப்படுத்துகிறேனென்று சப
தங்கூறி, அத்தினபுரத்துக் கதிபதியாகிய திரி
தராஷ்டிரன் சகோதரன் பாண்டுராஜன் புத்
திரர்களில் அர்ச்சுனனாற் கட்டிவரச்செய்து,
தன்சபையிற் பாஞ்சாலனைப் பங்கப்படுத்தினா
ராம். அதன்மேற் பாஞ்சாலன் கோபித்து
தன்னைச் சபையில் அவமானப்படுத்தின
துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனையும்,
தன்னை வெற்றிபெற்ற அர்ச்சுனன் தோளுக்
கிசைய ஒருபுத்திரியையும் பெறுகிறேனென்று
சபதங்கூறி, உபையாசன் - யாசனென்னும்
பெரியோர்களை யடுத்துப் புத்திரகாமேஷ்டி
யாகஞ்செய்து, ஒரு புத்திரனையும் புத்திரியை
யும் பெற்றானாம்.

அப்புத்திரி மங்கைப்பருவ மடைகிற
காலத்தில் (கூண்டோடு போயிற்று குளிருங்
காய்ச்சலும்) என்கிற பழமொழிபோற் பாண்டு
புத்திரரைவரும் அவர்களை யீன்றவளும்
அரக்குமாளிகையோடும் வெந்து நீறாயினார்
களாம் இந்தச் சேதி பாஞ்சாலனறிந்து சகிக்
கக்கூடாத வருத்தமுற்று, அதன்மேல் இனி
என்னசெய்கிறதென்று யோசித்து ஒருலக்ஷயம்
வைத்துச் சுயம்வரஞ்சாட்டி யிருக்கின்றான்.
அந்த லக்ஷயத்தைக் காதினாற் கேட்கும்
போதே மிகுந்த பயத்தைக் கொடுக்குமென்
றால், அதைக் கண்ணாற் காணத்தகுந்த அரசர்
கள் யார்? ஒருவருமில்லை அந்த லக்ஷயமென்
னெனில் வில்லில் வல்லவராயிருக்கிற அரசர்க
ளெல்லாம் கண்டவுடன் அஞ்சி மெய் நடுங்கப்
பர்வதாகாரமாக இருக்கிற ஒரு வில்லும் தேவ
சாஸ்திர முதலியவை நிறைந்த ஒரு அம்புப்
புட்டிலும் வைத்திருக்கின்றன. வெளியில்
70-அடி தோன்றத்தக்கதா இரண்டு ஸ்தம்பம்
70-அடி பரப்பில் நாட்டி 70-அடிவிட்டம்
மேற்பூட்டி, அதற்குமேல் 70 - அடிக்கம்பம்
நாட்டி விட்டம்பூட்டி, அதன் மேலும் 70-
அடி கம்பம்நாட்டி விட்டம்பூட்டி, அதன்
மேலும் இடைவிடாமற் சுழலும் சக்கரத்தை
வைத்து, அதன்மேற் மச்சக்குறியைவைத்து,
அந்த மூன்று விட்டத்துக்கும் மும்மூன்று
துளையுண்டாக்கி, பூமியிற் பெரிய வெள்ளிக்
கடாரம்வைத்து அதில் மஞ்சள் நீரை நிறை
த்து, அத்துளைகள் அந்நீரிற் றோன்றவும்
உபாயமில்லாமற் பார்ப்பவர்கள் சாயல் அத்
துளையை மறைக்கவும் நேர்படவைத்து, முன்
சொன்ன அந்த வில்லை வளைத்து நாணி
ஏறிட்டு மஞ்சள் நீரிற்றோன்றும் துளைக்குறி
யின் வழியாக மூன்று கணைகளைத் தொடுத்து
மேற்சுழலும் சக்கரத்தின் முனைவழியிற் கணை
களைப் போக்கி மச்சக் குறியை முன்னம் விழு
த்தி, உடனே அம்மச்சம் சக்கரத்துக்குச் சரி
யாக வருகிறதற்குள் சக்கரத்தை விழுத்தி,
சக்கரமும் மச்சமும் வெளிப்பட்டுப் பூமியில்
விழுமுன் கணைதொடுத்து அவ்விரண்டையுங்
கரத்தில் ஏந்த வேண்டுமாம். இதுதான் லட்
சயம் இந்த லட்சயம் வைத்து இன்றைக்குப்
பத்து நாளாயிற்று நாளைப் பதினோராநாள்
உதயத்தில் வில் வளைக்கிறது இந்த லட்ச
யத்தை நிறைவேற்றுபவன் எந்தப் புண்ணிய
வானோ? அக் கன்னிகையின் போகம் யாருக்கு
லபிக்கின்றதோ? எனக்கொன்றுந் தோன்ற
வில்லை. என் புத்தியால் எவரையுமறியேன்.
ஆ! ஆ! அக்கன்னிகையினழகை என்னென்று
சொல்லுவேன். ஆகிலும் என்னாற்கூடியமட்
டும் அவள் வனப்பின் வளப்பத்தைச் சிறிது
மாத்திரஞ் சொல்லுகிறேன் கேண்மின்க
ளென்று சொல்லுவதாயினார்.

மேகமானது ஓலமிட்டு அந்தரத்துச் செல்லவும், கமுகமரமானது வனத்திலடங்கவும், கருமணலானது நதிகளில் வீழவும், இருளானது குகைக்கு ளொலிக்கவும், பசியானது கடவிலிருக்கவும், இரவியினொளிமழுங்கவும், ஆகாயத்தின்கண் கறுத்தெழுந்த ஊழி மாலைப்பொழு தஞ்சவும் விளங்கும் அளகத்தினையும், பார்ப்பவர் கண்களைத் தன் வசப்படுத்தி, பொன்னிறமாகிய சிந்தூரத் திலதமிட்டுச் சிறந்த ஒரு பிறைமேகத்தின் மத்தியிற் றோன்றியதுபோற் பிரகாசிக்குந் திலதத்தையணிந்த நெற்றியையும், இரதியு மதனும் தங்கள் கரத்திலிருக்கும் கருப்புவில்லிரண்டையும் தங்கள்குடையாகிய சந்திரனிடத்து வைத்தாற்போல் திகழும் புருவத்தையும், கலங்கலிற் கடலையும் திரிதலிற் சேலையும் ஊடுருவப் பாய்தலில் வேலையும் புருட்சியில் மானையும் வெட்டுந்தொழிலில் வாளையும் இழிவுறச் செய்து, செவ்வரி கரிவரி பரந்து, காதளவு நீண்டகன்று, குழையைக் கிழித்து, சந்திரனைக் கண்டு மகிழும் நீலோற்பலம் போன்ற விழியையும், குமிழம் பூவினையும் எள்ளுமலரையும் குறைத்து, கண்களாகிய கடலிரண்டுங் கலவாதிருக்க நடுவண் கரையிட்டதென்ன விளக்கி நாகரத்தினத்தை யணிந்த நாசியையும், விழியின் கனியையும் கோவையின் கனியையும் முருக்கின் மலரையும் முள்ளிலவின் மலரையும் வெண்ணிறமென இகழ்ந்து, ஆழியிற் பிறந்த அமுதத்தை முகந்த பவளக் கிண்ணத்தையொத்த இதழையும், வெண்முத்தையும் முல்லையரும்பையும் மயிலிறகடியையும் வெற்றிபெற்று, மின்னலைப்போ லொளிரும் தந்த பந்தியையும், வள்ளையின் இலையை அழகிலையென வுரைத்து, நவமணிகளை யழுத்திய குழையைப்பொறுத்து, பார்ப்பவருள்ள மூசலாடுதற் கிசைந்த ஊஞ்சலொத்த செவியும், ரவியைகாணு காலத்தும் வாடாத கமலமும், தேய்வும் வளர்வும் மாசுமின்றி இருக்கு மதியுமிருந்தால், அவைகளும் நாணத்தகுந்த சிறப்பினை வகித்த முகத்தையும், தேவர்கள் பணிய மாண்பினையுடைய திருமால் கரத்திலிருக்கும் சங்கும் நாணப் பல இரேகைகளையுடைய அழகிய கழுத்தையும் கமலமலரையும் காந்தள் மலரையும் உவமானமாகக் கூறினு மமையாத அகங்கையையும் பவளத்துண்டும் கிள்ளையின் நாசியும் உவமானமாகக் கூறினுஞ் சரிப்படாத விரல்களையும், கிளியின் வாயினையொத்துச் சிவந்து பிரகாசிக்கின்ற அவ்விரல்களினது நகங்களையும், மலையென்றாற் புளகமில்லை. இளநீரென்றாற் சந்தனம், புனுகு, கஸ்தூரி, கற்பூர சவ்வாது குங்குமங்களை யணியாது கமலமொக்கென்றால், அழகிய தேமலை ஏற்காது, சக்கரவாகப் புள்ளென்றால் பறக்குந் தொழிலையுடையது மேலும் ஆபரணங்களைத் தரிக்காது கோங்கரும்பென்றால் முகங் கறுத்திராது, மாரன் மகுடமென்றால், தண்ணென்றும் வேச்சென்றுமிராது. ஆதலால், தானே தனக்குச் சரியாகி, திரண்டு பரந்து நிமிர்ந்து வளர்ந்து செறிந்து ததும்பி சுணங்கு படர்ந்து சனத்துக் கண்கறுத்து பொன் மலைக்கொத்து இங்கிதத்தைக்கொண்டு புளகித்துப் பூரித்துப் பாரித்த பயோதரத்தையும் உலகினை அளந்த நெடியமால் ஆலிலைமேற் சயனித்தல்போலும், ஒரு கரிய நாகம் மலையிலிருந்து அடிவாரத்திருக்குங் குகையிலடங்கச் செல்வதுபோலும் விளங்கி, ஆலிலைபோன்ற வயிற்றினிடத்திருக்கு மயிரொழுங்கினையும், கொடியைப்போல அசைந்து, நூலை விடச் சிறுத்து, பூரித்த பயோதரத்தின் கனத்தைப் பொறுக்காது தேய்ந்தது உவமையில்லாத சிற்றிடையென்று உலகின் மாதருக் குரைப்பர். பிரமன் இந்த மாதுக்கு எல்லா அவயவங்களையும் மிகவுஞ் சீர்பெறச் செய்தமையால், திருஷ்டி பரிகாரத்துக்காக இடையைச்செய்யாமல் விட்டானோ? அல்லது மறந்தானோ? இருக்கின்றதோ? இல்லையோ? இனிமே லிடையெய்துமோ? என்று ஐயப்படத்தக்கதான மருங்குலையும், நீர்ச்சுழியையொத்த உந்தியையும், மாரன் பொக்கிஷமென்றும், மாரன் தேரென்றும், அரசருக்கெல்லாம் ஒன்பதாமிடத்திலிருந்து நல்லின்பத்தைக் கொடுக்கின்ற ராகுவென்கிற பாம்பென்றும் ஐயுறத்தகுந்த அல்குலையும், வாழையையும் யானைத்துதிக்கையையும் வென்ற தொடையையும், சிறந்த வழகினையுடைய விரண்டுவரால் மீன்கள் கண்களாகிய சேல்களின்மேற் பகைகொண்டு பாயும் பொருட்டுப் பாய்ச்சல் கொள்ளச் சுழலுவதை யொத்த கணைக்கால்களையும், மதனசாஸ்திரத்தை எழுதுவதற்குச் சேர்த்த புத்தகத்தை யொத்த பதத்தையும், சண்பகத்தையும் மின்னலையும் பழிக்கும் தேககாந்தியையும், கடலை வெறுக்கும் கிருபையையும், கரும்பை மருட்டுஞ் சொல்லையும், குயிலை வெருட்டும் தொனியையும், மயிலை நாணுறச் செய்யும் சாயலையும், அம்சங்கள் வெட்கி தலைவணங்க நடக்கும் நடையையு முடையாள்.

கல்வியாற் கலைமகளையும், அவயவ லக்ஷணத்தால் லக்ஷ்மியையும், பொறையாற் பூமிதேவியையும், கற்பால், அருந்ததியையும், தருமத்தாற் பார்வதியையும் ஒத்தவள். அழுகுக்கழகுற அக்கினியிலுதித்த அந்த மாது அர்ச்சுனனுக்கே உரியவளென்று கருதியிருந்த பாஞ்சாலன் அந்தர்ச்சுனன் அன்னை தமயன் தம்பியரோடு அரக்குமாளிகையி லிறந்துவிட்டானென்கிறதாகக் கேள்வியுற்றுப் பெரியோர்களை யனுசரித்து, அவர்களால் ஐவர் உயிரோடிருக்கிறுரென்று தெரிந்து, அவர்களை வருவிக்க அப்பெரியோர்கள் கூறிய சூட்சியின்படி லக்ஷயம் வைத்து, தேச தேசாதியர்களுக்கு மணவோலையும் - பாஞ்சாலிபோல் எழுதிய படத்தையும்-அனுப்புவித்திருக்கிறுன். இது தான் நான்கண்ட வதிசயம் நான் மேற்றிசைக்குச் சென்று அங்கிருக்கும் திவ்விய நதிகளில் ஸ்நானஞ்செய்து, ஸ்தலங்களைத் தரிசிக்க விருப்புற்றிருக்கிறேன். அவ்விருப்பம் நிறைவேற யான் செல்லுகிறேனென்று சொல்லி ஐவர் செய்த வந்தனையை யேற்றுப் பல ஆசிகள் கூறி, நகரத்தைக் கடந்து அவ்வுருவை நீக்கித் தமது சுயஸ்வரூபந் தரித்து ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமதிருப்பிடஞ் சேர்ந்தார்.

### பாண்டவர் வேதவியாசரைத் தரிசித்துப் பாஞ்சால தேசத்திற்குச் செல்லுதல்

இங்கே தருமராஜனுனவர் வீமனர்ச்சுனன் முதலானவர்களை நோக்கி, ஓ தம்பிமார்களே! ஆதியிற் பாஞ்சாலன் நம்மிலொருவனுகிய அர்ச்சுனனுக்கு ஒரு பெண்ணும், நமதாசிரியனுகிய துரோணரைக்கொல்ல ஒரு புத்திரனையும் பெறுகிறேனென்று சபதங் கூறி, அவ்வாறு புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்து மக்களைப் பெற்றுக்கொண்டான். அது உண்மை யிதனை உலகமெல்லாமறியும் இப்போது அந்தப் பாஞ்சாலன் நாமெல்லா மரக்குமாளிகையி லிறந்துவிட்டதாகக் கேள்வியுற்றுப் பெரியோர்களை யடுத்து, நாமுயிரோ டிருக்கிறதாகவறிந்து, நம்மைக் காணும்பொருட்டு ஒரு லக்ஷயம் வைத்திருக்கிறுனென்று தீர்த்தவாசி வேதியராற் கேள்விப்பட்டோமாகையால் நாளையுதயத்தில் வில்வளைக்கிறதாக யிருக்கிறதினுலே, நாமிங்கிருந் தென்ன பயன்? நாமெல்லாம் நாளையுதயத்துக்குள் அவ்விடத்திற்குச் செல்லவேண்டும் இப்போதே போவோம் வாருங்களென் றழைத்தார். தம்பிமார்களும் அன்னையு மிசைந்து, உடனே பிரயாணப் பட்டார்கள். இவர்கள் பிரயாணமானதை அந்நகரத்தி லிருக்கும் வேதியர்க ளறிந்து, பூரி கொடுக்கும் பொருண்மேல் விருப்புற்றுப் புறப்பட்டார்கள். ஐவரும் நகரத்தை விட்டு வெளிப்பட்டுக் காட்டை யடைந்து வரவே, சந்திர னுதயமானதுபோ லிருந்தது. இவர்களைச் சூரியன்கண்டு இனி நாமிருப்பது தகுதியல்லவென்று கருதி நீங்குவது போல் சந்திரன் அரசுக்குரிய இராக்காலத்தை ஐவர் பாலில் விடுத்துத் தான் மேற்றிசைக் கடலிலாழ்ந்தான். வேதியர்கள் மாலைப்பொழுதைக் கண்ட மாத்திரத்தில் அதிவேகமாகச் சென்றுர்கள். அதைப் பாண்டவர்கள் கண்டு நல்லது நீங்கள் முன்னுதாகச் செல்லுங்களென்றுத்திரவு கொடுத்து, அன்னையை யழைத்துக் கொண்டு மெதுவாகச் செல்லும்போ தென் குருவாகிய வேதவியாசர் அவ்விடத்திற்கு வந்து தருமராஜனைத் தனிமையிலழைத்து, ஓ தருமநந்தனு! நீ இரவுக் கஞ்சாமல் தம்பிமாரோடு அதிவேகமாக நடந்து சூரிய வுதயத்திற்குள் பாஞ்சால நகரம் சேர்வீர்களாகில், அர்ச்சுனன் வில்லை வளைத்து லட்சயத்தைக் கொய்து, பாஞ்சாலியின் மாலைக் குரியவனுவான். அந்தப் பாஞ்சாலி வினைவசத்தால் உங்களைவருக்கு முரியவளாகுகிறுள். அதற்கு நீ இசைந்திரு, அந்தக்காலத்தில் நான்வந்து பாஞ்சாலன் சபையில் விளங்க உரைக்கிறேன். இக்கருத்தை வெளியிடாதென சொல்லி இரவிற்றுனே விரைவில் நடவுமென்று கட்டளையிட மறைந்து போயினர். இவ்வாறு வேதவியாசர் மறைதலும் தருமராஜன் தம்பிகளோடு கலந்து சந்தியானுஷ்டானஞ் செய்தற்கு நதியை நாடிச் சென்றுர். சில தூரம் போனவுடன் கங்காநதி தோன்றிற்று. அங்கே ஐவரும் காலக்கடனை முடித்துக் கொண்டார்கள். இருளு மூடிக்கொண்டது அருச்சுனன் தமயன் தம்பிமார்களை நாற்சவுக்கமாகப் பிரித்து, மத்தியில் அன்னையை வரச்சொல்லி, அங்கு கிடக்கிற கோராங் குச்சிகளில் ஒரு கத்தை யெடுத்துத் தலைப்பில் நறுக்கி, கல்லோடு கல் தாக்கி நெருப்புண்டாக்கி, அந் நெருப்பி லக்கத்தையைப் பற்றவைத்துத் தீவட்டியாகக் கையிலேத்தித் தான் முன்னே நடந்து வழிகாட்டி, அந்நாட்டு வழியை விட்டுக் காட்டு வழியைத் தொட்டு, கங்கை யோரமாகவே செல்லுவோமென்று கருதி நடந்தான். ஐவரும் பின்றெடர்ந்து வந்தார்கள். இவ்வாறு கங்கைக் கரையோரமாக

நெடுந்தூரம் நடந்துபோகிறபோது அங்கே ஒரு அதிசயம் நடந்தது. அதைச் சொல்லுகிறேன் கேளுமென்று வைசம்பாயனர் சொல்லுவதானார்:

### பாண்டவரைக் காந்தருவராசனாகிய சித்திராங்கதன் சிநேகித்தல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அந்தரவாசிகளாகிய தேவர் - முனிவர் - கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - வித்தியாதரர் என்னும் தேவ வருப்பிற் காந்தருவகுலத்தி லுதித்தவனாகியும் அந்தரலோக வாசியாயுமிருந்து, சொற்க மத்திய பாதாளமென்கிற மூன்றுலகங்களிலும் வெற்றியால் தன் பெயரை நாட்டி விற் பிடித்தவர்களை யெல்லாம் தன்னுண்மையினால் ஒரு திரணமாக எண்ணி, அஷ்டதிக்குந் துதிக்க வெற்றிபெறுந் திறத்திலுயர்ந்து மாரனென்ன விளங்கி வீற்றிருக்கும் சித்திராங்கதனென்னும் ஓர் அரசனுளன். அவ்வரசன் தன் தேவிமாரோடு கேளிவிலாசமாயிருக்கவும் ஜலக்கிரீடை செய்யவும் காதலித்து, கங்காநதியருகில் ஒரு சிங்காரவனம் வைத்து கங்கைக்கரையையும் வளைத்து வேலியிட்டு தினந்தினம் அவ்வனத்தில் வந்திறங்கி ஜலக்கிரீடை விளையாடிக்கொண்டிருந்து தன்னூருக்குப் போய்விடுவான். இந்தச் சித்திராங்கதன் வில்லாளியாதலால் உலகிலுள்ள அரசர்களும் தேவர்களும் அவ்வனத்தின் திசையைக் கண்ணுற்பார்க்க அஞ்சுவார்கள். அப்பேர்ப்பட்ட வனத்தின் வழியாகப் பாண்டு மக்களனைவரும் சென்றார்கள். குறுக்கே வேலியொன்று தோன்றிற்று முன்னேபோகிற அர்ச்சுனன் அவ்வேலியைப் பார்த்து, அடடா! இவ்வேலியைக் கடந்துபோனால் தருமத்துக்கு விரோதம், வேலியைத் தாண்டாமல் மற்றொருவழியாகச் செல்லுவோமென்றால் இவ் வேலிக்கு ஆதியுமந்தமுந் தோன்றவில்லை. மேலும் தண்ணீர்ப்பந்தல்-சத்திரம்-ஆலயம்-திருக்குளம் - நதி இவையெல்லாம் ஒருவர் ஆதினமல்ல. இது நதிதீரம் இந்த நதியைச் சேர்த்து வேலியிட்டிருக்கின்றது இது நீதிக்கு விரோதம் யாரோ மமதையினால் வேலிபோட்டிருக்கிறார்கள் இதனைக் கடந்து போவதிற் குற்றமில்லையென்று தனக்குள் தீர்மானித்து, அர்ச்சுனன் அவ்வேலியைத் தாண்டி நடந்தான். மற்ற ஐவரும் அர்ச்சுனனைப் போலவே கடந்து போனார்கள்.

அந்த வேளையிற் சித்திராங்கதன் தன் தேவிமாரோடு ஜலக்கிரீடை செய்திருந்தான். அவன் தேவிமார்கள் இந்த அறுவர்களையுங் கண்டு திடுக்கிட்டெழுந்தோடித் தங்கள் தங்கள் வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டார்கள். சித்திராங்கதன் ஆள் வரவைக்கண்டு மிகுந்த சினங்கொண்டு கரையேறி, ஆடை யாபரணங்களை யணிந்து, அம்புப்புட்டிலை முதுகிற் றாங்கிப் போர்க்கோலங் கொண்டு தேரிலேறி வில்லெடுத்துக் குணத்தொனிசெய்து டங்கார வோசை யெழுப்பி, பயமில்லாமல் இவ்வனத்தில் நடக்கிறவன் ஆரடா? ஆரடா? என்றதட்டி, அதிவேகமாக இரதத்தைச் செலுத்தி முன்னம் செல்லுகிற அர்ச்சுனனை வளைத்து, ஓ பஞ்சைப்பிராமணா! நீயும் உன் பின் வருகிறவர்கள் யார் எங்கு செல்கிறீர்கள்? இவ் வனத்திலேன் வந்தீர்கள்? என் பெயர் உங்களுக்குத் தெரியாதா, சித்திராங்கதனென்றால் திரிபுவனங்களிலுள்ள அரசர்களும் நடுங்கித் தலைகவிழ்ந்து படுத்துக்கொள்வார்களே பார்ப்பாராகிய நீங்கள் இவ்வனத்துக்கு வரக்கூடுமா? நீங்களென்ன செய்வீர்கள்? உங்கள் தலைவிதி கிழிந்தமையால் யிந்த வனத்துக்கு வந்தீர்கள் ஏன் ஓடுகிறீர்கள் நில்லுங்கள் நில்லுங்களுங்களுக்காகப் பிரமன் திருமால் உருத்திரனென்னு மூவர் துணைவந்த போதிலும் உங்களை என்பாணத்துக் கிரையாக்காமல் விடுகிறதில்லை என்று விசரம் பண்ணினான். தருமன் முதலானவர்கள் அவன் வார்த்தையைக் கேட்டு முன் செல்லுகிறவன் அர்ச்சுனனாகையால் அவனையன்றி நாம் விடைகொடுப்பது தகுதியல்ல. அப்படி யல்லவென்று பேசினால் அர்ச்சுனன் கோபிப்பானென்று வாய்பேசாமல் அர்ச்சுனனை நாடி நடந்தார்கள். சித்திராங்கதன் அதிக சினங்கொண்டு என்னடா பார்ப்பாரப்பயலே! நான் கேட்ட மொழிக்கு விடைகொடுக்காமலும், என்னைக் கண்டு அஞ்சாமலும் நடக்கிறாய் நில்லடா நில்லு என்றெதிர்வந்து மறித்தான்.

அருச்சுனன் அதிக சினங்கொண்டு அடா சித்திராங்கதா! உன் வனத்தில் வந்தோம் என்று சொல்லுகிறாய் உன் வனத்துக்கு வரவேண்டு மென்கிற கருத்தைக்கொண்டு வரவில்லை நாங்கள் பாஞ்சாலநகரத்துக்குச் செல்லக் கருதிக் கங்கைக் கரையோரமாக வருகிறோம். நீ ஆணவங்கொண்டு நம்மை கேட்பவரில்லையென்று இறுமாப்படைந்து கங்கைக்

கரை யாவருக்கும் பொதுவென் றுணராமல், தருமசாஸ்திரத்துக்கு விரோதமாக வேலியிட்டாய். உன்னிடத்தில் கனமான குற்றமிருக்க கங்கைக் கரைமீதே செல்லுகிற எங்களை மறித்து வாயில் வந்தபடி உளறுகிறாய்? கங்கைக் கரையை வளைத்து வேலியிட்டதற்கு உன்னைத் தண்டிக்க வேண்டியது. தெரியாமையாக நீ வேலி யிட்டமையால் மனம் பொறுத்தேன். இனி நீ இவ்விடத்தில் நிற்கவேண்டாம் உன்னிருப்பிடத்திற்குப் போ இல்லாவிட்டா லுன் வில்லின் திறத்தைக் காட்டு இங்கு நின்று கொண்டு வாயில் வந்தபடி பிதற்றாதே போ போ வென்றான். சித்திராங்கதன் காலாக்கினி ருத்திரனைப்போல் கோபித்து, திக்குத் திசைகள் நடுங்க அட்டகாசஞ் செய்து ஆமடா பிராமணப்பயலே! நீயா என்னைத் தண்டிக்கிறவன்? சபாஷ்! நன்றாய் இருக்கின்றது? யிதோ உன்னையும் உன்பின் வருபவரையும் யமலோகத்துக்கு அனுப்பி வைக்கிறேன் பாரடா வென்று கைவில்லில் அநேக பாணங்களைத் தொடுத்து, இந்திரன் கட்டளைப்படி ஆயர் பாடியில் வந்து பொழிந்த சோனைமாரிபோல் தூவினான். இதனைக்கண்ட தருமராசன் முதலானவர்கள் ஆயுத மில்லாதவர்களாய் ஐயோ! இதென்ன விபரீதம் (கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டதுபோல்) நாம் திரௌபதை மணத்துக்கு வெளிப்பட்டு யுத்தத்துக் காளானோம், நமக்கோ ஆயுதமில்லை நாமெல்லாமொருமித்து இவன்மே லெதிர்ப்போ மென்றால், முன்ன மிருக்கிறவன் அருச்சுனன் அவன் நானிருக்க நீங்களேன் வந்தீர்களென்று கோபிப்பான். வருகிற கணைகளோ அளவில்லை யிதற்கென்ன செய்கிறதென்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து நிற்கிறார்கள்.

அர்ச்சுனன் சித்திராங்கதன் விடுத்தகணைகளை யெல்லாம் தன் கையிலிருக்கும் கொள்ளிக் கட்டையால் தட்டிவிட்டுச் சித்திராங்கதனை நோக்கி, அடா சித்திராங்கதா! நீதான் வில்லாளி, நல்ல தீரன் உன்னைப்போல் வில்லாளி உலகத்திலில்லை. ஏனென்றால், வில் முதலிய ஆயுதமில்லா திருக்கிறவர்கள் பேரில் எதிர்க்கக்கூடாது அப்படி யல்லவென் றெதிர்த்தாலும் எதிரி எவ்வண்ணமாக யிருக்கிறானோ தானும் அவ்வண்ணமாக யிருந்து மல்யுத்தம் அல்லது வில்யுத்தம் செய்ய வேண்டியது. அந்த நீதியைத்தள்ளி, நீ தேரிலிருந்து வில்லை வளைத்து அநேக கணைகளைத் தொடுத்தாய் ஆ! ஆ! வீரனுடைய லட்சண மிதுதான் இருக்கட்டும், எதோ பார்ப்போம் உன் வீறிறத்தைக் காட்டென்றுசொல்லி மலைபோலெதிர் நின்றான். சித்திராங்கதன் உக்கிரங்கொண்டு, ஓரிலைவேல் முகக்கணை ஈரிலைவேல் முகக்கணை, மூவிலைவேல் முகக்கணை என்னு மிவைகளோடு மகாதேஜசோடுங் கூடிய பிறைமுகக்கணை கமலமுகக்கணை முதலியவற்றையும் 1-10-100-1000-10000-கோடி - பத்துகோடி-சங்கம்-மஹாசங்கமாகத் தொடுத்துவிட்டான். அக்கணைகள் ஒன்றோடொன்று உராய்ந்து, வடவா முகாக்கினிபோல் அனலைக் கக்கி இடிமுழக்கத்தோடும் வந்தன. அவைகளை அருச்சுனன் கண்டு புன் சிரிப்புகொண்டு இனி நாம் சும்மாவிருந்தால் இக்கணைகளி லொன்றுபடுமாகிற் கனவருத்த முண்டாகுமென்று தக்ஷணம் தன்கையிலிருக்கிற கொள்ளிக்கத்தைஎடுத்து நிறுத்தி அக்கினியாஸ்திரத்துக்குரிய மந்திரத்தை யுச்சரித்து மானதபூசைசெய்து, ஓ கொள்ளிக்காட்டமே! நீ இச்சித்திராங்கதன் விடுகின்ற எல்லாக் கணைகளையும் கமளீகரஞ் செய்து, தேரையழித்து வில்லை முறித்து சித்திராங்கதனையும்பிடித்து எரிக்கக்கடவையென்று எறிந்தான். அது கோராங்குச்சியா யிருந்தாலும் அதில் ஆவாகனஞ் செய்திருக்கிறது அக்கினியாஸ்திர மந்திரமாதலால் அக்கினி பகவான் அக்கொள்ளிக் குச்சின் முனையினின்று சித்திராங்கதன்விட்ட கணைகளையும் அவன் தேரையும் நீறாக்கி, கொடியையறுத்து வில்லை யொடித்து அம்புப்பெய் புட்டிலைப் பூமியிற்றள்ளி அவனையும் பற்றி எரிக்கத் தலைப்பட்டது.

சித்திராங்கதன் கடுகடுத்துக் கருகருத்து சகிக்கமாட்டாமற் பூமியில் விழுந்து, கடகடவென்று புரண்டுருண்டு, அரண்டு வெருண்டு பேச்சு மூச்சு விட்டு மூர்ச்சையாயினான். உடனே அர்ச்சுனன் அவன் சிகையைப்பற்றி இழுத்துவந்து, தன் தமயனாகிய தருமராஜன் பாதத்திற் போட்டான். தருமராஜன் தம்பியை வியந்து சித்திராங்கதன் அடங்கி யொடுங்கிக் கிடப்பதைப் பார்த்திருக்கும்போது சித்திராங்கதன் தேவிமார் இஃதுணர்ந்து ஓடிவந்து, குந்திதேவி காலில் விழுந்து தங்கள் தங்கள் முந்தாணியையேந்தி மாங்கலியப் பிச்சை கேட்டார்கள். குந்திதேவி தருமன் முகத்தை நோக்கினாள்: தருமன் அக்குறிப்பை யுணர்ந்து தம்பியைப்பார்த்து சொல்லுகிறார்:

தம்பி அர்ச்சுனு! இந்தச் சித்திராங்கதன் தெரியாமைத்தனமாக நம்மை எதிர்த்து வாய்வம்பு பேசினுன். அதற்குப் பிராயச்சித்த மாயிற்று. இனி இவனைச் சுகப்படச்செய் என்றுசொல்ல, அர்ச்சுனன் தமயன்சொல்லை மறுக்காதவனுதலால் உடனே அந்த அக்கினியாஸ்திரந் தணியும்படிக்கு மந்திரத்தை யுச்சரித்து, அனலாற் கருகிய சித்திராங்கதனைக் குளிரவைத்தான். சித்திராங்கதன் அனல்வேகந் தீர்ந்து, நித்திரைசெய் தெழுந்தவன்போல் எழுந்து ஐவரையும் குந்திதேவியையும் நோக்கி, ஆ! ஆ! இவர்கள் பஞ்சகர்த்தாக்களைப்போல் ஐந்து புருஷரும் பராசத்தியைப்போல் ஒரு அம்மனுமா யிருக்கிருர்கள். இவர்கள் தேகக்குறியையும் செய்கையும் யோசிக்கும்போது, பார்ப்பதற்குப் பிராமணரா யிருந்தாலும் செய்கையில் க்ஷத்திரியரா யிருக்கிருர்கள். இவ் வுலகத்தில் சந்திரவமிசதிலகனுகிய அர்ச்சுனன் ஒருவன் தவிர, மற்ற அரசர்கள் நமது பெய்ரை நினைக்கப் பயப்படுவார்க ளாதலால் இவ்வைவரும் பாண்டவர்களாக இருக்கவேண்டும். அதோயிருக்கிற அம்மன் குந்திதேவியாக்கும் என்று படிகநிறம்போ லிருக்கிற உதிட்டிரமகாராசனுகிய வேதியன் பாதத்தில் வணங்கி, ஓ ஸ்வாமி! நீங்கள் பிராமண ரல்ல, அத்தினபுரத்துக் கதிபதியாகிய பாண்டுராசன் புத்திராகத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் என்னை வெற்றிபெற மாட்டீர்கள். அர்ச்சுனன் ஒருவன்தான் என்னை வெற்றிகொள்ளத் தக்கவன். யிந்தவண்ணம் ஆதியில் வில்லரங்கேற்றும்போதே எனக்கு ஒரு வாக்குண்டு. ஆதலால், ஒளியாமல் உங்கள் வரலாற்றைச் சொல்லவேண்டுமென்று வினயத்துடன் கேட்டான்.

தருமராசன் தாங்கள் இளவரசு பட்டம் பெற்றுக் காசிக்கு வந்ததுமுதல் பாஞ்சாலன் நகரத்தை நாடிவந்தது பரியந்தம்சொன்னுர். சித்திராங்கதன் மகிழ்ந்து, ஓ ஸ்வாமி! என்னை வெற்றிபெற்ற அக்கினியாஸ்திர மந்திரத்தை யுபதேசிக்கும்படிக்கு உமக்கு இளையவனுகிய அர்ச்சுனனுக்குக் கட்டளையிடுமென்று பிரார்த்தித்தான். தருமராசன் அர்ச்சுனனை நோக்கினுர். அர்ச்சுனன் சித்திராங்கதனை யருகிலழைத்து, அம்மந்திரத்தை யுபதேசித்து சித்திராங்கதன் அம்மந்திரத்தைப் பெற்றுத் தருமராசனை வணங்கி, ஓ ஸ்வாமி! அடியேன் குருதட்சணையாகக் காந்தர்வப் புரவியில் 500-கொடுக்கிறேன், அதனை அங்கீகாரஞ் செய்ய வேண்டும். என்று வேண்ட, தருமராசன் ஓ சித்திராங்கதா! நீ கொடுக்கிறே னென்கிற குதிரை உன்னிடத்தில் தானே யிருக்கட்டும். நாங்கள் எப்போது ஊர்போய்ச் சேருகிறோமோ அப்போது கொடுவென்றுர். சித்திராங்கதன் மறுபடியும் வணங்கிக் கூறுகிருன். ஓ ஸ்வாமி! தாங்கள் பாஞ்சால நகரத்துக்குச் செல்ல வேண்டி யிருக்கிறதினுல் இன்னும் வெகு தூரம் போகவேண்டும். நீங்களோ உதயமாகிறதற்குட் செல்லவேண்டு மென்கிறீர்கள், கால் நடையாய் இவ்வழியாகச் சென்றுல் மூன்று நாட் செல்லும். என்னிடத்தில் தெய்வவிமானமும் வேண்டிய வாகனமு மிருக்கின்றன அவைகளில் தங்களுக் கிஷ்டமான ஊர்களிலேறிச் செல்லுங்களென்று வேண்டினுன். தருமராஜன் எங்கட்கு யாதொன்றும் வேண்டியதில்லை யென்று மறுத்தார். சித்திராங்கதன் மற்றுமொருதரம் வணங்கிச் சொல்லுகிருன். ஓ ஸ்வாமி! தேவரீருக்கு வாகனமேறச் சம்மதி யில்லாவிட்டால் அடியேன் கூட வந்து நேரான வழியாக அழைத்துப் போய்ப் பாஞ்சால நகரத்துக்கருகில் விட்டு வருகிறேன் வாருங்களென்று அழைக்க, தருமராசன் முதலானவர்கள் அதற்கிசைந்து நடக்க, சித்திராங்கதன் நேரானவழியிலழைத்துப் போகிறபோது தருமராசனையும் மற்றவர்களையும் பார்த்துச் சொல்லுகிருன்.

ஓ கனவான்களே! உலகத்திற் பெறுதற் கருமையா யிருக்கின்றவை அறிவுடைமை - அன்புடைமை - அருளுடைமை - அடக்கமுடைமை - பொருளுடைமை - ஒழுக்கமுடைமை ஆகிய இவைகளாம். இவைகளை யெல்லாம் குறைவறப் பெற்று, பொருமை - ஆசை - கடுஞ்சொல் - சினம் - புறங் கூறல் முதலியவற்றை நீக்கி நின்றாலும், யாதேனும் ஓர் காரியங் கைகூட வேண்டுமானுல் ஒரு ஆசாரியர்வேண்டும். குரு வில்லாவிடில் ஒருகாலத்தில் மேற்கூறிய பண்புகளெல்லா மிருந்தும் பயன் படாமற் போய்விடும். குருவிருந்தால் எக்காலத்து மழிவில்லாமல் நாளுக்கு நாள் பிரபலப்பட்டு வாழலாம். இதற்குத் திருஷ்டாந்தம் புறம்புற் காட்டவேண்டிய தில்லை. உங்கள் வமிசத்தில் தானே இருக்கின்றது. அதாவது, உங்கள் முன்னோர்களி லொருவனுகிய சவ்வருணன் பெறுதற் கருமையாகிய அவ்வறிவுடைமை முதலியவற்றைப் பெற்றுப்

பொறுமை முதலிய துற்குணங்களை நீக்கி, தருமதேவதை நாலுபாதத்தினுல் நடக்கவும், எல்லா அரசர்களும் தன்னை வணங்கவும், செங்கோல் நடாத்திய பராக்கிரமசாலி. அவன் ஒருநாள் காட்டிற்சென்று வேட்டையாடி தாக விடாய்த் தணிய ஒரு தடாகத்துக்கு வந்த போது, அங்கு சூரியன் புத்திரியாகிய தபதி தன் தாதிமார்களோடு ஜலக்கிரீடை செய்ய வந்தாள். அவளை அரசன் நோக்கி அதிக மையல் கொண்டான். அத்தபதியும் அரசன் அழகைக் கண்டு மையலாகினுள். ஆனுல் அக் கன்னிகை சூரியன் புதல்வியாதலால் தந்தை யின் அநுமதியிற் கூடவேண்டுமென்று கருதி சவ்வருணனை நோக்கி, ஓ அரசனே! உன்னை மணம்புரிய எனக்குக் கருத்திருந்தாலும் என் தந்தை உத்திரவின்பேரில் மணம்புரியவேண் டும். ஆதலால், என் தந்தையின் உத்தரவு கிடைக்கு முயற்சியை அதிக விரைவிற் றேடென்று கூறி மறைந்தாள். சவ்வருணன் அதிக பராக்கிரமசாலியா யிருந்தும், ஒரு நொடிக்குள் லட்சத் திருபத்தையாயிரம் யோசனை தூரம் செல்லும் வேகத்தையுடைய இரதத்தை நடாத்துகின்ற சூரியனேடு பேச வல்லமையற்றவனுகிக் கனவருத்த மடைந்து, நாளுக்குநாள் காமநோயால் வருந்தி, வடிவும் மனவூக்ககுண முதலியவற்றை இழந் தான். அக்காலத்தில் வசிஷ்டர் வந்து அர சன் தேகக்குறி கண்டு, அவன் மனதிற் குடி கொண்டிருக்கும் குறையைக் கியான திருஷ் டியா லுணர்ந்து தக்ஷணம் சூரியனிடத்து சென்று பேசி, தபதியைக் கொண்டுவந்து சவ் வருணனுக்கு மணம்புரிவித்தார் அந்தத்தபதி வயிற்றி லுதித்தவன்தான் குருமஹாராஜன். அவனுல் உங்கள் குலத்துக்குக் குருகுல மென்று பெயராயிற்று. ஆகையால், ஆசாரிய ரொருவ ரிருக்கவேண்டுமென் றுரைத்தான். இவ்வாறு சவ்வருணமகாராஜன் சரித்திரத் தைச் சாங்கோபாங்கமாகக்கேட்ட தருமராசன் முதலானவர்கள் அக்கருத்துக் கிசைந்தவராகி மிகுந்த மகிழ்வையடைந்தார்கள். இவர்களில் அருச்சுனன் சித்திராங்கதனை நோக்கிச் சொல் கிறுன்: ஐயா காந்தருவசிகாமணியே! எங்கள் மூதாதையர்க்கு உபகாரியாகிய வசிஷ்டர்கதை நன்றுயிருக்கின்றது. இன்னும் அவர் விஷய மாகிய கதைகளைக் கேட்க விருப்பங்கொண் டிருக்கிறேன். நீர் அக்கதைகளை வரன்முறை யாக விளம்புவீராகில் வழி நடக்கிற சிரமந் தோன்றுமலிருக்குமென்று கேட்கச் சித்திராங் கதன் அதற்கிசைந்து, அவ்வசிஷ்டமுனிவர் சரித்திரத்தை வரன் முறையாகச் சொல்லு கிறுன்.

### பாண்டவர் காந்தருவராசனுல் வசிஷ்டர் சரித்திரங் கேட்டு வழிநடத்தல்

கேளுங்கள் புண்ணியவான்களே! முன் னம் நாதி மைந்தனுகிய கவுசிக மஹாராஜன் மண்டலேஸ்வரனுகவிளங்கி அரசுசெலுத்தி வருங்காலத்தில், ஒருநாள் தன் புத்திரர் மித் திரர்கள் மற்றுமுள்ள மந்திரிமார்கள்-தண் டத்தலைவர்கள்-யூகத்தலைவர்கள் - படைத்தலை வர்கள் - அணித்தலைவர்கள் முதலானவர்க ளோடு காட்டிற்சென்று வேட்டையாடி வரும் போது கவுசிகராஜன் கண்முன் ஒருகலைமான் தோன்றிற்று. அரசன் அதனை எய்யக்கருதி, மந்திரிமாரிருபுறமும் சூழ்ந்துவர அம்மா னைப் பின் தொடர்ந்தான். அந்த மான் சூரி யன் இரதத்திற் பூட்டிய குதிரையைவிட அதிக வேகமாக எழும்பி தன்னையும் சூரியனை யுந் தூளிகளால் மறைக்கப் புறங்காலாற் பூமி யை உதைத்தோடிற்று. அரசனும் மற்றவர் களும் அதை விடாமல் தங்கள் தங்கள் வாக னங்களை முடுக்கிச்சென்றும், அம்மானை எய் வதற்குச் சக்தியற்றவர்களாய் மெய்சோர்ந்து மானுருவத்தைக் காணுமல் அதிக வருத்தமுற் றுத் திரும்பினுர்கள். அப்போது சூரியனும் உச்சியில் வந்தான். அந்தச் சூரிய அழற்சி யால் அரசன் முதலானவர்களும் விடாய்ப் பட்டுக் கனவருத்தமுற்று, தண்ணீரையும் நிழலையும் எப்போது காண்போமென்கிற ஏக் கத்தைக்கொண்டு வருகிறுர்கள். அப்படி வருகிற மார்க்கத்திற் குளிர்ந்த நிழலைக்கொடு த்து மாரன்படை வீடுபோல் விளங்கும் நெ ருங்கிய மரங்களையுடைய ஒரு மாஞ்சோலை யைக்கண்டு, இவ்வனம் தோன்றியது. நாம் பூர்வஞ்செய்த பூஜாபலந்தானெனத் தீர்மா னித்து அச்சோலையில் வந்து அங்கிருக்கும் தடாகத்திலிறங்கிக் கைகால் ஸ்நானஞ்செய்து நீரருந்தித் தாகவிடாய் தணிந்து, அங்கிரு க்கு மரத்தின் நிழலிற் சற்று இளைப்பாறி யிருந்தார்கள்.

அவ்விடத்தில் சில முனிவர்கள் வரக் கண்டு அரசன் திடுக்கிட்டு, இவ்வனம் முனி வர் வாசஞ்செய்யத் தக்கதாகையால் முனிவர் கள் வருகிறுர்களென்று நினைத்து, அவர்களை எதிர்கொண்டுபோய் நமஸ்காரஞ்செய்து, ஓ தவசிரேஷ்டர்களே! இவ்வனம் எந்த மகாத்

மாவுக்குரியதென்றான். அம்முனிவர்கள் பல ஆசிகள்கூறி, ஓ அரசனே! இவ்வனம் பிர்ம்ம ரிஷியாகிய வசிஷ்டருக்குரிய வனமென்று தெரிவித்தார்கள். அரசன் அக்கணம் வசிஷ்டரைத் தரிசிக்கவேண்டுமென்று அவருடைய ஆசிரமத்தைக்கண்டு உட்சென்று, சூரிய குல குருவைச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி! முனிவருடைய வனங்களுக்கு அரசர் வரக்கூடாது நான் காட்டிற்கு புகுந்து வேட்டையாடி ஒரு மானைக் கண்டு அதனை எய்யப்பின்றொடர, அம்மான் மறைந்துபோக, யானும் என்னைச் சூழ்ந்துவந்த சேனையும் அதிக களையடைந்து நிழலையும் ஜலத்தையுந் தேடிவருகிறபோது இவ்வனந் தோன்றிற்று. இதில் யாவரோடும் வந்து களைதீர ஸ்நானஞ்செய்து, தண்ணீர்குடித்து விடாய் தணிந்து மரநிழலிலிருந்தேன். அப்போது அங்கு சில முனிவரைக்கண்டு அவர்களால் இவ்வனந் தங்களுடையதென்று தெரிந்துகொண்டு தங்களைக் காணவந்தேன். ஆதலால், தாங்கள் கோபிக்காமல் என்னை ஆதரிக்கவேண்டுமென்று வேண்டினான். இப்படி வணங்கிய அரசனுக்கு வசிஷ்டர் பல ஆசிகள் வழங்கி முகமலர்ந்து, அவன் மனங்களிப்பெய்தும்படியாகச் சில இனிய வசனங்களை எடுத்துச் சொல்லுகிறார்: ஓ கவுசிக மஹாராஜனே! நீ வனத்திற்கு வந்ததினால் எனக்கொரு குறைவுமில்லை. என் வனந்தேடி வந்த உனக்கு என்னாற் கூடியமட்டும் விருந்திட எண்ணங்கொண்டேன். அந்த எண்ணத்தை நீ நிறைவேற்ற வேண்டியது. அதுதானொரு குறைவு. அக்குறைவு நீங்கும்படியாக விருந்துக் கொத்துக்கொண்டால் எனக்கொரு குறைவுமில்லையென்று ஆசான் சொல்ல, அரசன் சற்றுலோசித்து, ஓ ஸ்வாமி! தாங்கள் விருந்திடுவோமென்றீர்கள், உங்கள் வாக்குக் கழிவு வராமல் நானிருந்து விருந்துண்டு போவேனாகில், என்னுடன் வந்தபுத்திரர்-மித்திரர்-மந்திரிகள் முதலானவர்க்கும் வருத்தம் நேரிடுவதுமன்றி, நீதிக்குக் கெடுதியாகவும் இருக்கின்றது. ஆதலால், இதற்கென்னசெய்வதென்றான். அதற்கு வசிஷ்டர் புன்சிரிப்பு கொண்டு சொல்லுகிறார்.

ஓ அரசனே! உனக்கும் உன் பின்வந்த யாவர்க்கும் என்னாலியன்ற கந்தமூல பலாதிகள் கொடுக்கத்தான் விருப்புற்றிருக்கிறேன் என்னாலுதவப்பட்டது இராஜபோஜனமாகயிராதிருந்தாலும், அதனை யங்கீகாரஞ் செய்வது உனதுகடமை நீயும் உன்பின் வந்தவரும் ஸ்நான முதலிய நித்திய விதியை முடித்துக் கொள்ளுங்களென்றார். கவுசிகராஜன் அதற்கிசைந்து முன்னிருந்த விடத்திற்கு வந்து தன் மந்திரி முதலானவர்களை யழைத்து, தான் வசிஷ்டரிடத்துச் சென்றதையும் விருந்துக்கிசைந்து வந்ததையும் புகன்று, யாவரையும் ஸ்நானஞ் செய்திருங்களென்று கட்டளையிட்டான். அரசனேவலின்படி யாவரும் ஸ்நானஞ் செய்து, வசிஷ்டர் உத்திரவுக்கு எதிர்பார்த்திருந்தார்கள். வசிஷ்டர் தன்னருகிலிருக்குங் காமதேனுவைநோக்கி, நமது வனத்தில் வந்திருக்கிற யாவரு மனமகிழ விருந்திட்டு உபசரித்துவா வென்று ஆக்ஞாபித்தார். காமதேனு அவர் வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, அனேக மாதர் கூட்டங்களாகி, யார் யார் எந்தெந்த விடங்களி விருந்தார்களோ அவ்வவ்விடங்களில் இலை போட்டு, அவ்விலைகளிற் கைத்தல்-புளித்தல்-கார்த்தல்-கூர்த்தல்-துவர்த்தல்-தித்தித்தல் என்னும் அறுசுவையோடுங் கூடிய கறி வகைகளுடன் அன்னத்தையும் வட்டித்து, நெய்-தயிர்-வடை-பாயச முதலியவற்றையும் குறைவில்லாமற் படைத்து அவரவர்கள் கருத்து மகிழ்வெய்திய வஸ்துக்களைக் கொடுக்க, இன்றைய போசனத்தைப் போல் என்றும் புசித்ததில்லை யென்று யாவரும் மதித்துத் துதித்துப் புசித்துப் பசித்துவந்த களைதணிந்து, கைகால்கள் சுத்திசெய்து கொண்டார்கள். உடனே சந்தனம் - புனுகு-கஸ்தூரி-கற்பூரம் -சவ்வாது - முதலியவைகளோடு, குங்குமக்குழம்பும்-பூமாலையும்- தாம்பூலமும்-குறைவின்றி வைத்து, யானை-குதிரை-வேட்டை நாய்-புறு - வல்லூர்ப்பக்ஷி முதலாகிய இவைகளுக்குத் தகுந்த உணவை யளித்து, காமதேனு யதாப்பிரகாரந் தன்னுருவந் தாங்கிப் போயிற்று.

கவுசிகராஜன் காமதேனுசெய்த வற்புதத்தைக் கண்டு வியப்படைந்து நாமநேகம் பசுமந்தைகளை வைத்திருக்கிறோம். முனிவர்களிடத்துஞ் சில மந்தைகளைக் கண்டிருக்கிறோம். அவைகளெல்லாம் முலை வழியாகத் தாராளமாய்ப் பாலைச் சொரிகின்றனவே யன்றி, இப்பசு செய்த அற்புதம் போல் செய்யத் தகுந்தவைகளல்ல. இந்தக் காமதேனு நமக்கிருந்தாலரசென்னத்திற்கு? எவ்விதத்திலாவது இப்பசுவை நமக்குரியதாகக் கொள்ள

வேண்டுமென்றெண்ணிச் சில மனிதரோடு வசிஷ்டரிடத்துச்சென்று, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, ஓ ஆண்டவனே! தற்காலத்தில் நாங்களடைந்த களைநீங்க எங்கள் கருத்தறிந்து போஜனம் படைத்த பசு உங்களிடத்திலிருந்து பயனென்ன? என்னிடத்திலிருந்தால் உலகாதிபனுதலால் என்னைக்காண அளவற்ற பிரஜைகள் வருவார்கள் மகாமுனிவர்களும் பிராமணர்களுஞ் சேர்வார்கள். அவர்கள் மனங்களிக்க இப்பசுவால் உண்டி முதலியவற்றை உதவுவேன். அதனுல் தங்களுக்கும், அப்பசுவுக்கும் எனக்கும் புண்ணியமும் பெருமையுங் கிடைக்கும். ஆதலால், எளியேன்மீது கிருபைகூர்ந்து, நான் செய்யும் பிரதி உபகாரம் சொற்பமாயிருந்தாலும் அதனைச் சமமாகயெண்ணி அப்பசுவைக் கொடும், இக்கணம் நான் இந்த ஒரு பசுவுக்கு லட்சம் பசுகொடுக்கிறேனென்ருன். அதற்கு வசிஷ்டர் புன்சிரிப்புகொண்டு, ஓ சூரியகுல திலகனே! ஆரியருக்கும் முனிவருக்குந்தான் இப்பசு யிருக்கவேண்டும். ஏனென்ருல், உன் போல் வீரியர் அல்லது மற்றவர்கள் யாராவது தங்களிருப்பிடத்தைவிட்டுக் காட்டுக்குள் சென்று விடாய்ப்பட்டு வழிதப்பி இவ்வனத்துக்கு வந்துவிட்டால்யான் அவர்கள் விடாய் தணிய உண்டி முதலியவற்றை உதவவேண்டும். இந்த விருந்தோம்பு தலைவேதம் சிறப்பாகக் கூறுகின்றது. நாட்டிலிருக்கிறவர்கள் வீட்டிலுள்ள பதார்த்தத்தைக்கொண்டு யதார்த்தமான மனத்தோடு விருந்திடுவார்கள். முழுதுந் துறந்து காட்டிலிருக்கிற நான் என்னசெய்கிறது? இப்பசு ஒன்றிருந்தமையால் உனக்கும் உன் பின் வந்தவர்க்கும் களைதீர உண்டி உதவினேம். மேலும், இப்பசு உலகிலுள்ள பசுப்போலல்ல. இது திருப்பாற்கடல் கடைகிறபோது அவ்விடத்திற் பிறந்தது. ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் கட்டளையின்படி தேவராஜ னிடத்திருப்பது, அதனை உனக்குக் கொடுக்க எனக்குப் பாத்தியமில்லை. நீ இப்பசுவின்மேற் கொண்ட காதலைவெறுத்து உனது நகரம்போய்ச் சேரென்ருர்.

அரசன் வசிஷ்டரை வணங்கி, ஓ ஸ்வாமி! இப்பசு தங்களுடையதென்று எண்ணியிருந்தேன். தேவராஜன் பசுவென்ருல் அப்பசுவைப்பிடித்துப் போகிறேன். தேவேந்திரன் வந்தெதிர்த்தால் அவனை என் வல்லமையாற் பங்கப்படுத்தி, இப்பசுவை எனக்குரியதாகக் கொள்ளுகிறேன் என்று விரைவில் திரும்பித் தன் சேனைகளை யேவி, காமதேனு எங்கிருந்தாலும் பிடித்துக் கட்டிக்கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டான். அக் கட்டளையின்படி சேனைகள் யாவும் தும்பு-தாம்பு-கைக்கோல் முதலியவற்றைக்கொண்டு வனத்தை வளைந்து தேடிப் பசுவைக்கண்டு, அதனருகிற் சென்று பிடிக்க யத்தனித்தார்கள். அது கண்ட காமதேனு அவர்களை நிதானித்துப் பார்த்து, ஓ!ஓ! நம்மைக் கண்டு அவர்களெல்லாம் வந்தனை செய்வார்களென்ருல், இவர்களென்ன நம்மைக் கட்ட யத்தனித்தார்கள்? இதென்ன காரணம்? நம்மை இவர்கள் கட்ட யத்தனித்தால், உடனே இவர்களை யெல்லாம் நாம் யமன்பாசத்திற் கட்டுபடச் செய்விக்க வேண்டியதே முறைமை. ஆனுல், மகாரிஷியாகிய வசிஷ்டர் நம்மை இந்த வரசனுக்குக் கொடுத்தாரோ? அல்லது துராக்கிர்தமாக நம்மைப் பற்றவந்தானே? இதனை முன்னமறிந்து தன்மேல் நம்மெண்ணப்படி நடக்கலாமென்றுக் கருதி தட்சணம் வசிஷ்டரிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! என்னைக் கவுசிகராஜன் பிடிக்கத் தன் சேனைகளை யேவி யிருக்கிருன். தங்களுத்திரவினுற் பிடிக்க வந்தானு? அல்லது தனது சுயேச்சையாற் பிடிக்க வந்தானு? என்று வினவ, வசிஷ்டர் சொல்லுகிருர். ஓ காமதேனுவே! நான் உன்னைப் பிடித்துக் கொண்டுபோக உத்தரவு கொடுக்கவில்லை தன்னிச்சையால் துராக்கிருதமாய்ப் பிடிக்க யத்தனித்தான். ஆதலால், ஆண்மையாற் பிடிக்க வந்த அரசனிடத்து உன்னுண்மையைக் காட்டுதல் தகுதிதான். நீ போய் அவர்களை விரைவில் வென்று வாவென்று மொழிந்தார்.

இவ்வுத்தரவைப் பெற்ற காமதேனு அவரை வணங்கி விடைபெற்று, காற்றிற்கு மதிவேகமாக வந்து திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் தேவரை வருத்திய விஷத்தைப் போற் கவுசிகராஜன் சேனையிற் பாய்ந்து கலந்தது. கலந்த தட்சணம் அவ்வரசனுடைய சுத்த வீரர்கள் தும்பு-தாம்பு-கைக்கோல் முதலியவற்றைக் கழுத்திலும் உடம்பிலும் கொம்பிலும் போட்டுவலித்தார்கள். அத்தும்பு முதலியதைக் கண்டறியாத காமதேனு கிஞ்சித்து வருத்தமடைந்து காலாக்கினி ருத்திரனைப் போலச் சீறி இரண்டு கண்களிலும் அக்கினிப் பொறி பறக்க அங்ஙனே ஒரு பாய்ச்சல் பாய்ந்து, தன்னைக் கட்டவந்த அளவற்ற வீரரையு

மதாகதப்படுத்தி, திக்குகள் அதிரவுங் கண்டவர்கள் மூர்ச்சை யடையவும் அரசன் சேனையிற் புகுந்து, கூர்மையாகிய கொம்புகளினுலும்- நான்கு காலினுலும்- நீண்டு வெண்சாமரைப்போல் நுனியில் மயிர்க்குச்சையுடைய வாலினுலுங் குத்தியும் உதைத்தும் அடித்தும் கொல்லத் தலைப்பட்டது. அதை யரசன் ஆ! ஆ! இதென்ன வாச்சரியம்! பார்த்தாற் பசுவாயிருக்கின்றது, செய்கையை நோக்கினுல் யமனுயிருக்கின்றது. இனி நாம் சும்மாயிருந்தாற் சேனைகள் அபாயமடையுமே யன்றிப் பயனடையாதென்று நினைத்து, தன் புத்திரர் மித்திரர் மந்திரிமார்கள் யாவரையும் ஏவித் தானும் யெதிர்த்துப் பாணங்களைத் தொடுத்தான். காமதேனு அதுகண்டு அதிகவேகங்கொண்டு யானைக் கூட்டங்களிலும் குதிரைக் கூட்டங்களிலுஞ் சென்று பாய்ந்து, தன் கொம்பினுற் குத்தியுங் காலினுலுதைத்தும் வாலினுலடித்தும் யானைகளையுங் குதிரைகளையும் பூமியில் வீழ்த்தித் தேய்த்து, தேரை யுடைத்து, வில்லைப்பிடித்தவர்களையும் வாளைப் பிடித்தவர்களையும் சுழற்காற்றிற் சுழலுகின்ற மயிலிறகு போற் சென்றவிடந் தெரியாதிருக்கச் சிதைத்து, அவ்வனத்தைப் பிணமலை மயமாய்க் குவித்தது. யாவரும் தலைவிரிகோலமாக ஓடத் தலைப்பட்டார்கள். அப்படி ஓடுகிறவர்கள் பேரில் அங்கு கிடக்கிற சிறு கற்களைப் பின்னங்காலால் எத்தியது. அக்கற்கள் வந்து பட்டமாத்திரத்தில் முடிபோனவர் சிலர், தலைபோனவர் சிலர், தோள்போனவர் சிலர், துடைபோனவர் சிலர், இடையொடிந்தவர் சிலர், கொடியொடிந்தவர் சிலர், குடையிழந்தவர் சிலர், குறலொடிந்தவர் சிலர், வில்லற்றவர் சிலர், சொல்லற்றவர் சிலர், கண்போனவர் சிலர், கைபோனவர் சிலர், மூக்குபோனவர் சிலர், நாக்குபோனவர் சிலர், காதுபோனவர் சிலர், போதுபோனவர் சிலர் இவ்வாறு பின்னப்பட்டு ஒருவர் போனவழி ஒருவர்போகாமலோடினுர்கள். அப்படி யோடுகிறவர்களைக் காமதேனு கண்டு, இளைத்தவரைத் துறத்துதல் தகுதியல்லவென்று கோபந் தணிந்து வசிஷ்டரிடத்து வந்து தன்னுற் சேனைகள் அதமானதைச்செப்பி விடைபெற்று சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தது.

அந்தக் காமதேனு வசிஷ்டரிடத்துச் சென்றதையும் அவருத்திரவு பெற்றுப்போனதையும் கவுசிகராஜன் புத்திரர்கள் கண்டு, வசிஷ்டர் காமதேனுவைவிட்டு நமது சேனையை நாசப்படுத்தினுர். ஆதலால் அவரை நாம் இமிசைப்படுத்த வேண்டுமென்றெண்ணி வசிஷ்டரிடத்துச்சென்று வில்லைவளைத்து நாணேறிட்டு டங்கார ஓசை யெழுப்பி, ஓரிலைவேல்- ஈரிலைவேல் மூவிலைவேல் இவைகளைத் தொடுத்துவிட்டார்கள். இக்கணைகள் ஒன்றோடொன்றுரய்ந்து நெருப்பைக் கக்கிக்கொண்டு ஆலம்போற் சீறிவந்தன. வசிஷ்டர் அக்கணைகளும் அக்கணைகளைத் தொடுத்தவர்களும் சாம்பவமூர்த்தியின்மேல் எதிர்த்துக் கணைதொடுத்த மதன்போலாக உறுத்தினுர். அந்நோக்கத்தால் அப்புத்திரர் ஊக்கமழிந்து சாம்பராஞர்கள். கவுசிகராஜன் தனது புத்திரர் சாம்பரானதைக்கண்டு, சிறிது மஞ்சாமற் சினங்கொண்டு வேகமாய் வந்து தன் வில்லைவளைத்து நாணி யேறிட்டுக் குணத்தொனி செய்து, முன்பின் யோசிக்காமல் தேவாஸ்திரங்களைப் பிரயோகித்துச் சிங்கம்போல் கர்ச்சித்துநின்றான். அந்த அஸ்திரங்கள் மகா மகிமையோடும் அனல்களைக் கக்கிக்கொண்டு வந்தன. அவைகளை வசிஷ்டர் கண்டு, அந்தோ! இவனென்ன சுத்த மூடனுயிருக்கிறுன்? நாம் வில்லாளியாக யிருந்தால் வில்லெடுத்துப் போர்செய்யவேண்டும். நாம் வில்லும் மற்ற ஆயுதமுமில்லாமல் தபசியா யிருக்கிறோம். இவனோ அஸ்திரங்களைத் தொடுத்திருக்கிறுன் சற்றுநேரம் சும்மாயிருந்தாற் கொத்துக்கொத்தாய் மேல்விழும் அதனுற் கிஞ்சித்து வருத்தம் நேரிடும் இந்தவேளை நாம் சும்மாயிருக்கலாகாதென்று தட்சணம் ஒரு தண்டாயுதமெடுத்து முன்னம் நிறுத்தி, அரசன் விடுங்கணைகளை யெல்லாம் கமளீகரஞ் செய்யென்று கட்டளையிட்டார். அத்தண்டானது அரசன்விடும் அஸ்திரங்களையும் மற்ற ஆயுதங்களையுங் கமளீகரஞ் செய்தது.

அதை யரசன் கண்டு திடுக்கிட்டுத் திப்பிரமை கொண்டவனுய்ச் சற்றுநேர மயர்ந்திருந்து, பின்பு சிறிது தெளிந்து, நமது வீரம்- அரசு - வல்லமை முதலானவைகளெல்லாம் இந்த வசிஷ்டமுனிவருக்கு முன் அணுவாயிற்றல்லவா? ஆ! ஆ! தவப்பொருளே பொருள் மற்றவை யெல்லாம் அவப்பொருள் தவமொன்றிருந்தால் இவ் வரசைப்போல் அநேக அரசு பெறுதலுமன்றி, பிரமனுதி மூவர்களும் மதிக்கச் சிறப்புற்றிருக்கலாம். மேலும், நமது புத்திரரோ மாண்டார்கள்,

சேனைகளு மிறந்தன. இனி நகரத்திற்சென்று அரசு செய்வதிற் பயனென்ன? தவத்தைப் புரிந்து தவப்பொருளடைவதே பெருமையென்று நினைத்து மந்திரிகளை யழைத்து, தனது முத்திரை மோதிரத்தைக் கொடுத்து, நீங்கள் நகரத்திற் சென்று என்னரசைச் செலுத்துங்களென்று கட்டளையிட்டு, தான் இமயமலைச் சாரலிற் சென்று, சிலகாலம் ஒரே நிலையாய் ஒரு பாதத்தையூன்றி சலத்தினின்றுஞ் சிலகாலம் ஒரே நிலையாய் மற்றொரு பாதத்தை யூன்றிப் பஞ்சாக்கினி மத்தியினின்றும், தவசிரேஷ்டர்க ளெல்லோரும் வியப்படைய அருமையான தவத்தைச் செய்தான். உடனே யவனுக்குப் பிரமன் பிரசன்னமாகி கவுசிகன் செய்யும் வந்தனையை யேற்று, ஓ கவுசிகராசனே! நீ பிரமரிஷியாக வேண்டுமென்று கருதி நெடுநாள் அருமையான தவஞ் செய்கிறாய் நீ மக்கள் யாக்கையிற் புக்கினவனுதலால், தவத்தாற் பிரம்மரிஷியை யொப்பாயென்று கூறி மறைந்தான். கவுசிகன் அங்ஙன மகிழ்ந்து இருமாப்படைந்து, தவநிலைவிட்டெழுந்து, மான்தோல் காவிகாம்பர தண்டுகமண்டல தாரியாகிய வசிட்டமகா முனியிடத்து வந்து, வந்தனைவழிபாடின்றி அவருக் கெதிரில் மான்தோ லாசனமிட்டு முறப்பாக வீற்றிருந்தான். வசிட்டர் கவுசிகனுடைய உட்குறிப்பை யறிந்து, அடடா! இவன் தவத்திலுயர்ந்தோமென்று இறுமாப்படைந் திருக்கிறான் என மதித்துக் கவுசிகனை நோக்கிச் சொல்லுகிறார்: ஓ கவுசிகராசனே! உன்னரசு சிறந்துவருகின்றதா குடிகள் உன் வயப்பட்டு நடக்கின்றார்களா? உன் புத்திரரும் நீரும் சுகமாவென்று கேட்டார். கவுசிகன் வெகுளி மேற்கொண்டு, நமது புத்திரரை எறித்துவிட்டுப் புத்திரர் சுகமா வென்று வினவின இந்த வசிட்டன் புத்திரசோபத்திலாழ இவனுடைய புத்திரரைக் கொல்லுகிறேனென்று மனதிலெண்ணி வசிட்டரை நோக்கிச் சொல்லுகிறான்: ஆர்காணும் வசிட்டரே! என் புத்திரரை நீரெரித்துவிட்டும் உன் புத்திரர் சுகமாவென்று வினவினீர். இது வகந்தை யல்லவா? இந்த வகந்தையை யடக்குகிறேன் பார் என்று சொல்லி அவ்விடத்தினின்று நீங்கி அப்பால் வந்துவிட்டான்.

கேளுங்கள் புண்ணியவான்களே! இப்பாற் கவுசிகனுனவன் வசிஷ்டர் புத்திரருள் ஒருவராகிய சத்தியென்பவர் தவஞ் செய்கிற வனத்தில் வந்து வசிஷ்டருடைய நூறு புத்திரரையுங் கொல்லக்கருதி, இதற்கென்ன தந்திரம் செய்கிறதென்று யோசித்திருக்கிற தருணத்தில் மிகுந்த சிறப்பினை யடைந்த சூரிய வமிச அரசர்களில் மித்திர சகனென்னும் பெயரை வகித்த ஒரு மன்ன னிருந்தான். அவன் தயாத்துமாக்களுக்குத் தாயகமாகிய வயோத்திமா நகரத்திலிருந்து அரசு செலுத்துகிற காலத்தில், ஒருநாள் வேட்டையாடக் காட்டிற் சென்றான். அங்கிரண்டு ராக்ஷதர்வந்தெதிர்த்தார்கள். அரச னவ்வரக்கர்களில் மூத்தவனை ஓரம்பால் கொன்றுவிட்டான். அவன் தம்பி தன் தமயனிறந்ததைக் கண்டு, நம் தமயனைக் கொன்ற இவ்வரசனைக் கொல்ல நம்மால் முடியாது. சூதுசெய்து இவ் வரசனைக் கெடுக்கவேண்டு மென்று தட்சணம் தன்னுருவைமாற்றி மானிட ரூபந்தரித்து, அரசன் பாதத்தில் வந்து விழுந்து முறையிட்டான். அரசனவனை நோக்கி, நீயார்? இங்கு வந்து முறையிடுகிற காரணமென்னவென்று வினவ, அரக்கன் ஓ ஸ்வாமி! அடியேன் இந்த வனத்திலிருக்கிறவன் சமயல்வேலை எனக்கு நன்றாகத் தெரியும். சீவனமில்லாமல் அலைந்து திரிகிறேன். ஆதலால், எளியேனை ஆதரிக்கவேண்டும் என்று பிரார்த்தித்த வரசன் உண்மையான மானிடன்தானென்று நம்பி, என்மடைப்பள்ளி வேலைக்காரருக்குத் தலைமையான அலுவலை யுனக்குக் கொடுத்தேன் நீயவ்வேலையைப் பாரென் றழைத்துக்கொண்டு நகரஞ் சேர்ந்திருந்தான் அந்நாளில் ஓர்நாள் தன் குருவாகிய வசிஷ்ட ரங்குவந்தார். குருவைக்கண்ட வரசனெழுந் தெதிர்கொண்டுபோ யழைத்துவந்து பொசீட மளித்திருக்கச்சொல்லி, சோடசோபசாரமுஞ் செய்து வணங்கி எதிர் நின்று, ஓ சுவாமி! தேவரீர் இவண் வந்தது என்னகாரணம் அடியேனை நாடிவந்த கருத்தை வெளியிடவேண்டுமென்று கேட்ட வரசனுக்குப் பல ஆசிகள் கூறி வசிஷ்டர் கூறுகிறார்: ஓ மண்டலேஸ்வரா! நெடுநாளாக என் கருத்தில் ஒரு விருப்ப மிருக்கின்றது. அவ் விருப்பத்தை நிறைவேற்ற இங்குவந்தேன். அஃதென்னெனில் மாமிசவர்க்கத்தோடு போஜனஞ் செய்யவேண்டியதுதான் என் கருத்து இதனை நிறைவேற்ற வேண்டுமென்றார்.

அரச னக்கருத்துக் கிசைந்து, தக்ஷணம் எழுந்து அந்தப்புரத்துச் சென்றான். மனைவியாகிய மதயந்தி எதிர்வந்து வணங்கினாள்.

அந்தம்மன் நற்குண நற்செய்கையோடு அதிசுந்தரத்தையு முடையவ ளாதலால், தான் அவளோடு பலகாற் பரிவுற்றணைந்துள்ளோனுயினும், அவளைக் கண்டவுடன் விதிவசத்தால் தான் நினைத்துவந்த கருத்தை மறந்து, காமத்தின் வயப்பட்டுச் சரசஞ்செய்திருந்துவிட்டான். சூரியனு மஸ்தமித்தான். இந்த அரசன் சூரியகுல திலகனுக இருந்தபோதிலும், தேவர்களுக்கு நன்மைகளை விளைத்து அஞ்ஞான விருள்கெட விளங்கினவன். அப்படிக்கிருந்தும் காலகதியால் மதிமயங்கி மனைவியோடு விளையாடுகிறபோது, இன்னு மரை நாழிகையில் வசிஷ்டரால் அசுரர் குலாம்சையைக் கொல்லப்போகிறபடியால், அவ் வசுரர்கள் திரண்டுவந்து அரசனைக் காணவந்தது போல இருள்வந்து மூடிற்று. அவ்விருள் நள்ளிருளான காலத்து அரசன் தான் நாடிவந்தகருத்தை நினைத்துத் திடுக்கிட்டெழுந்து அதிவேகமாக மடைப்பள்ளிக்கு வந்தான். வேலைக்காரரெல்லாம் நித்திரை போய்விட்டார்கள். அரசனைக் கெடுக்க நினைத்து மடைப்பள்ளி வேலைக்காரனுகயிருக்கிற அரக்கன்மாத்திரம் விழித்திருந்தான். அவனை அரசன் கண்டு, ஓ சுவானக்காரா! என் குருவானவர் மாமிசத்தோடு உண்டிபுசிக்க வந்தார். அவர் கொலுக்கூடத்திலிருக்கிறூர். இவ்வேளை எவ்விதமாவது மாமிசத்தோடு உண்டி சமைத்தளிப்பாயாகில், உன் மனமகிழத்தகுந்த பரிசு கொடுப்பேனென்று சொன்னுன். அரக்கன் தன்னெண்ணம் நிறைவேறுங்கால மிதுதானென கருதி அதி மகிழ்வடைந்து, அரசனை வணங்கி, ஓ ஸ்வாமி! தங்கள் சித்தப்படி மாமிசத்தோடமுது படைக்கிறேனென்று சொல்லி, மடைப்பள்ளிசென்று, வேலைக்காரரை எழுப்பிச் சமயற்செய்யச் சொல்லிப்போட்டு, அரண்மனையைவிட்டு வெளிவந்து, நித்திரைசெய்த ஒரு குழந்தையை வதைத்து, அம்மாமிசத்தை பாகத்தால் உணவுக்குரிய பாகம்போற் பக்குவப்படுத்தி அரசனுக்குத் தெரிவித்தான்.

அரசன் உண்டி முதலியவற்றை யெடுப்பித்துக்கொண்டு, கொலுமுகக்கூடத்தி லிருக்கும் வசிஷ்டரிடத்துக்கு அதிவேகமாக வந்து நமஸ்காரஞ்செய்து, ஓ ஸ்வாமி! எளியேனுல் இதுபரியந்தம் பசியோடிருந்தீர். இனி கிருபைகூர்ந்து போசனஞ் செய்யுங்களென்று வேண்ட, வசிஷ்டர் எழுந்து போசனச்சாலையில் வந்து உட்கார்ந்தார். சுவானக்காரர் இலைபோட்டு சமைத்த மாமிசத்தையும் அன்னத்தையும் வட்டித்தார்கள். வசிஷ்டர் எதார்த்தமான மாமிசமென்று அவர்க்கொண்டு, முதலில் மாமிசத்திற் கிஞ்சித்தெடுத்து வாயிற் போட்டுக்கொண்டார். அது நரமாமிச மாதலால் ஒருவிதமாக இருந்தது. அதனை யோசித்து நரமாமிசமென் றுணர்ந்து அதிக சினங்கொண்டு அரசனை நோக்கி, அடா பாபி! நீ நல்ல மிருக மாமிசத்தோடு அன்னம் படைப்பாயென்று நாடிவந்த எனக்கு நரமாமிச மிட்டபடியால், நீ நரமாமிசத்தைப்புசிக்கின்ற அசுரனுகக் கடவதென்று சபித்தார். அரசன் திடுக்கிட்டு நடுங்கி நமஸ்காரஞ் செய்து, மீண்டும் எழுந்துநின்று, ஓ ஸ்வாமி! இக் குற்றம் என்னுல் வந்ததல்ல? வேலைக்காரரால் நேரிட்டதாக இருக்கின்றது. இதனை யோசிக்காமல் எனக்குச்சாபமிடலாமாவென்று கேட்க,வசிஷ்டர் கியானதிருஷ்டியால் நோக்கி இச்செய்கை அரசனைக் கெடுத்த மடைப்பள்ளியி லிருக்கிற அரக்கனுல் நேரிட்டதென்று தெரிந்து கனவருத்த மடைந்து, அரசனைப் பார்த்து சொல்லுகிறூர்: ஓ மண்டலேஸ்வரா! இக் குற்றம் உன்னுல் நேரிட்டதல்ல முன்பின் யோசிக்காமற் கோபத்தினுற் சாபமிட்டேன். இந்தச் சாபம் அனுபவியாமல் தீராது. பன்னிரண்டு வருஷமிருக்கும் அதன்பின்பு உன் சுய குணத்தை யடைவாயென் றுரைத்தார்.

அதைக் கேட்ட அரசன் சினங்கொண்டு, எள்ளுந் தண்ணீருங் கரத்திலேந்திச் சொல்லுகிறுன்: ஓ சுவாமி! நீங்கள் தவத்திலுயர்ந்தவரென்றும், அவசரப்பட்டு என்னைச் சபித்தீர்கள். இதோ நான் உங்களைச் சபிக்கிறேன் ஏற்றுக்கொள்ளு மென்றுன். இந்தச் சேதி மதயந்தி யுணர்ந்து விரைந்துவந்து, கணவன் காலில் விழுந்து நமஸ்காரஞ் செய்து, அரசன் கரத்தைப் பற்றிக்கொண்டு சொல்லுகிறுள்: ஓ பிராணநாதா! இதென்ன விபரீதம்? இதுவரைக்கும் நமது குலத்திற் குருவைச் சபித்தவர்களுண்டா? அல்லது மற்ற எந்தக் குலத்திலாவது ஆசானைச் சபித்தவரைக் கேள்விப்பட்ட துண்டா? எங்கும் நடக்காத காரியத்தைச் செய்யத் துணிவு கொள்வது தகுதியா? இப்படிச் சபிக்காதீரென்று மறுத்தாள். அரசனும் மனைவி வாக்குக் கெதிர்வாக்குக்கொடாமல், கரத்திலிருக்கிற எள்ளையும் தண்ணீரையும் தன் வலப்பாதத்தில் விட்டுக்கொண்டான். அந்தச் சலம் பட்ட

மாத்திரத்தில் அப்பாதகங்கள் கரிய நிறமாயின அன்றுமுதல் மித்திரசகனென்கிற நாமத்துடன் கல்மாஷ பாதனென்கிற பெயரோடும் விளங்கினான். வசிஷ்டர் தம திருப்பிடத்துக்குச் சென்றார் சூரியனு முதயமாயினன். அரசன் உதயத்தில் எழுந்து நித்தியகடனை முடித்து மகரகுண்டல ஆரகேயூர கடகங்கண முதலாகிய ஆபரணங்களைத் தரித்து, கொலு முகவாசலில், வந்து மந்திரி முதலானவர்களை நோக்கி, காட்டில் வேட்டையாட வேண்டும் பிரயாண மாகுங்களென்று வில்லம்பு முதலிய வற்றை யெடுத்துக்கொண்டு புறப்பட்டான். மந்திரி முதலானவர்களும் வந்து சேர்ந்தார்கள். அரசன் அவர்களோடு காட்டிற் சென்று, சற்றுநேரம் வேட்டையாடி, தன்னோடு வந்த சேனைகளையும் மந்திரிகளையும் நீங்கித் தனியாக ஒரு வனத்தில் வந்தான் வசிஷ்டருடைய சாபம்வந்து அரசனை யடைந்தது. அரசன் தன் சுயாமிசையை நீங்கி அரக்கரமிசையைக் கொண்டு, குணம் வேறுபட்டு மனம்போன படிக்குச் சென்று, நெடுந்தூரங் கடந்து பெரிய ஒரு ஆரண்ணியத்தில் வந்துவிட்டான். மந்திரி முதலானவர்கள் அரசனை இரண்டு மூன்று நாள் பரியந்தம் தேடியுங் காணமற் கனவருத்தமுற்று நகரத்திற் சேர்ந்தார்கள்.

அங்கே அரசன் கண்ட மிருகங்களையும் பக்ஷிகளையும் நரரையும் புசித்துக்கொண்டுசகல உயிர்களும் யமனைக் கண்டு நடுங்குவது போல நடுங்கச் சஞ்சரித்து வருகிறகாலத்தில், தவசிரேஷ்ட பாக்கியவானாகிய ஒரு முனிவருடைய புத்திரன் மற்றொரு முனிவருடைய புத்திரியை மணம்புரிந்து, மனைவியோடு தான் தன்னிருப்பிடம் செல்லக் கருதினவனாய், இக் கல்மாஷபாதன் சஞ்சரிக்கிற காட்டின் வழியாகவந்தான். கல்மாஷபாதன் அவனைப் பார்த்து, ஓ பிராமணா! ஓ பிராமணா! என்று அழைத்தான். பிராமணமுனிவன் அவனைப் பார்த்து யாரோ அரசன் அழைக்கிறான். போகத்தான் வேண்டும் என்று அருகில் வந்தான் அவனை அரசன் கட்டி இறுக்கிப் பிடித்துக் கொலை செய்ய எத்தனித்தான். அவ்வேதியன் மெய் நடுங்கிக் கைகாலுதறலெடுத்து, வாய் குழற லோடு மூச்சு திணறிச் சொல்லுகிறான்: ஓ மண்டலேஸ்வரா! நீ அரசனாயிருக்கிறாய் நீ என்னைப்பிடித்துப் புசிக்க யத்தனித்தாய் இஃதெனக்கு மிகுந்த ஆச்சரியமாக யிருக்கின்றது. மேலும், இத்தொழில் அரக்கர்க் குரியதேயன்றி அரசர்க்குரியதல்ல. இதென்ன விபரீதம் என்னைவிடுமையா என்று பல நீதிகளை எடுத்தோதியும் அரசன் அவனை விடாமற் பற்றி இறுக்குவதைக்கண்டு வேதியன் ஹரி ஹரி! கோவிந்தா! மாதவா! பரந்தாமா! பக்தசகாயா! பரமதயாளா! ஆபத்பாந்தவா! அனாதரக்ஷகா! அகண்டிதாலங்கிருத கிருபாசமுத்திர நேத்திர கபடநாடக சூத்திராவதாரியாகிய ஸ்ரீமந்நாராயணா! என்று பலவாறு பகவஸ்மரணை செய்தான். அவன் பகவஸ்மரணை செய்த ஓசையையும் அவன் இடுக்கத்தையும் அவ்வேதியன் மனைவி கண்டு, ஓவென்று ஓலமிட்டு அரசனிடத்து வந்து, முன்தானையைக் கையிலேந்தி எதிர் நின்று, இரண்டு கண்ணினும் அருவிபோல் நீர் சொரியச் சொல்லுகிறாள்: ஓ ராஜாதிராஜனே! ஓ தருமநீதி தவறாத சத்தியசந்தனே! ஓ மஹா மண்டலேஸ்வரா! ஓ சூரியகுலோத்துங்கா! ஓ மஹா பதிவிரதையாகிய மதயந்தியினுடைய முலைக்குவட்டின் சுவடுதோய்ந்த புயாசலா! தமியேன் இவ்வேதியனை மணந்து இரண்டு மூன்று நாள்தானாயிற்று. வேதியனைக்கொன்று விடுவையாகில் என்னுயிர் தரியாது. ஓ ஆண்டவனே! நீ அரசன். அரசரானவர்கள் உலகிலுள்ளவர்க்கு கடவுள் ஆதலால், மனமகிழ்ந்து மாங்கிலியப் பிக்ஷை கொடுக்கவேண்டுமென்று பல நீதிகளை யெடுத்தோதிப் பரிதாபமுற்றுப் பின்னுஞ் சொல்லுகிறாள்.

ஓ அரசனே! நீ மிருகமாமிசம் புசிப்பவன் ஒருவேளை காலகதியால் நரமாமிசம் புசிக்கத் தலைப்பட்டாலு மிந்தப் பிராமணனை மாத்திரம் விட்டுவிடவேண்டும். ஏனென்றால் இந்நரனை நீ புசித்தால் நாளைக்குப் பசியெடுக்காதிருக்கப் போகிறதா? எப்படியும் பசியெடுக்கும் நாளைக்கும்தான் அகப்படுவானா! அகப்படான். ஆகவே உனக்கெடுத்த பசிக்கு மிருகங்களைத்தான் புசிப்பாய். ஆகையால் இன்றைக்கு நமக்கு நான் அகப்படவில்லை யென்று எண்ணி, இந்த நரனை மன்னியும் மற்ற மிருகங்களைப் புசியும் இந்த நரனால் நானின்பமடையவேண்டும். இவனிறந்தால் நானெடுத்த யாக்கை காட்டிலெரித்த நிலவைப்போலும், என்னழகு கானலுக்குப் பேய்ந்த மழையைப்போலும் ஆகுமென்று கண்கலங்கினாள். பார்ப்பினி இவ்வளவு சொல்லியும் அரசன் இரக்கமில்லாமல் அவ்வேதியனைக் கொன்று இரத்தமாமிசங்களைப் புசித்து, எலும்புகளை

யெல்லாம் உமிழ்ந்துவிட்டுப் போயினன். அவ்வேதியன் மனைவி பலவாறு துக்கித்து, அவ்வெலும்புகளை எடுத்து மடியிற்கட்டி அக் காட்டிலிருக்கும் கட்டைமுட்டைகளைப் பொறுக்கி ஒன்றாக அடுக்கி, கல்லோடு கல்தாக்கி நெருப்புண்டாக்கி, அந்நெருப்பைக் கட்டைமுட்டைகளிற் பற்றவைத்து, தான் ஸ்நானஞ் செய்து அத்தீயை வலம்வந்து சொல்லுகிருள்: ஓ ஆகாயவாணி முதலாகிய தேவதைகளே! என் மனமொரிய என் புருஷனைக் கொன்ற பாவியாகிய கல்மாஷ்பாதன் அவன் மனைவியோடு புணருவானாகில் அவன் தலை வெடித்துச் சாகக்கடவதென்று சபித்து அக்கினியில் விழுந்திறந்தாள். இந்தச் சேதியை ஆகாயவாணி மகா பதிவிரதையாகிய மதயந்திக்குத் தெரிவித்தாள். மதயந்தி கனவருத்த முற்றிருந்தாள்.

இங்கே கல்மஷ்பாதன் காடு மலைமுதலியவற்றிற் சஞ்சரித்துக் கண்டது புசித்து யமனைப்போல் திரிகிறபோது, வசிஷ்டர் புத்திரர் நூற்றுவரில் யாவர்க்கும் மூத்த சத்தி என்னும் பெயரைவகித்த முனிவனிருக்கும் வனத்தில் வந்து தவநிலை யோரமாகச் செல்ல, அப்போது கம்பத்தில் நின்று தவஞ்செய்கிற சத்தியானவன் பூமியிலிறங்கி ஸ்நானஞ் செய்ய வந்தான். வருகிறபோது ஒருவர்க்கொருவர் சந்தித்தார்கள். கல்மஷ்பாதன் பித்தம் பிடித்தவர் தன்மைபோல் ஒருவேளை நல்ல குணம்; மற்றொருவேளை அரக்கர்குணங் கொள்பவனாதலால் சத்தி என்பவனைக் கண்டு, அடா பிராமணப்பயலே! நான் வருகிறேனென்றிடையாமல் என்னெதிராக வருகிறையா? இது ஞாயமா? நானென்ன உலகாதிபனல்லவா வென்று கேட்டான். சத்தி என்பவன் சொல்லுகிறன்: ஓ அரசனே! நாங்கள் தவசிகள் எங்கள் வனத்துக்கு அரசரானவர்கள் வரக்கூடாது. வந்தாலும் அவர்கள் தான் ஒதுங்கிப் போய்விட வேண்டியது. மேலும், நான் உன் குலகுருவினுடைய புத்திரனென்றான். அரசன் அவன் சொல்லியவற்றில் ஒன்றையும் யோசித்துப் பாராமற் கோபங் கொண்டு கையிலிருக்கும் கதையினால் மோத, சத்தியென்பவன் சீறி, ஓ அரசனே! நீயரக்கரைப்போ லிரக்கமின்றி என்னைக் கதையாலடித்தமையால், நீ அரக்கனாகக் கடவையென்று சபித்தான். அப்போது கல்மாஷ்பாதனுக்குக் கிஞ்சித்துத் தன்னறிவுவந்து திடுக்கிட்டு, சத்தியை வணங்கி அநேகவிதமாகத் துதித்து, ஓ ஸ்வாமி! என் புத்தி மயங்கியிருந்தமையால் அந்தவேளையில் தங்களை மதிக்காமல் இகழ்ச்சிசெய்து அடித்தேன். அக் குற்றத்தைப்பொறுத்துச் சாப விமோசனங் கொடுமையாவென்று மிகவும் பிரார்த்தித்தான். அச்சமயத்தில் தன் பிள்ளைகளைக் கொன்ற வசிஷ்டரிடத்திற் பழிக்குப்பழி வாங்கக் காத்திருக்கும் விஸ்வாமித்திரன் அதனைக் கண்டு, ஆ! ஆ! இந்தக் கல்மாஷ்பாதனால் வசிஷ்டர் பெற்ற நூறு புத்திரரையும் கொல்லவேண்டுமென்று கருதி, அச் சத்தி என்பவனுக்குத்தெரியாமற் சைகை செய்து, கல்மாஷ்பாதனைத் தன்னருகிலழைத்து, ஓவரசனே! நீயேனந்தச் சத்தியை வணங்கிக் கெஞ்சுகிருய்? அவன் சாபமிடுவானே அன்றி சாபவிமோசனஞ் செய்யான் சத்தியையும் அவனுடன் பிறந்த தொண்ணூற்றென்பது பெயரையும் கொன்று தின்றையாகில், அதன் பின்பு இந்நூற்றுவர்க்கும் தந்தையாகிய வசிஷ்டராற் சாபம் நீங்குமென்று பலவிதமாகப் போதித்து, அக் காட்டில் திரிகிற சிங்கராவேசத்தை அரசன்மேலேவினன். அவ்வாவேசம் அரசனை யடையவே அவன் குணம் பின்னும் வேறுபட்டு, மீண்டும் அதிக வெறிகொண்டு, சத்தி என்பவனைக் குத்திக் கொன்று தின்று, அச்சத்தியோடு பிறந்த 99-சிறுவர்களு மிருக்கிற விடத்தை விஸ்வாமித்திரனு லுணர்ந்து, யாவரையும் விடாமற்பற்றிக் கொன்று தின்றுவிட்டான் இந்தச் சேதியை வசிஷ்டரறிந்து, ஐயோ தெய்வமே! ஒரு புத்திரனல்ல நூறு புத்திரர்களு மிறந்தார்களாமே, இனி நாமென்ன செய்கிறதென்று யேக்கங்கொண்டு, பூமியில் விழுந்து புரண்டழுது, புத்திர சோபத்தால் பேச்சற்று மூர்ச்சையடைந்தார். இதனை அவ்வனத்திலிருக்கிற முனிவர்களுணர்ந்து ஓடிவந்து, வசிஷ்டரை வாரியெடுத்து உபசாரஞ் செய்து தேற்றினார்கள்.

வசிஷ்டர் அவ்வுபவாசத்தாற் கிஞ்சித்துச் சாந்தமடைந்து எழுந்து, புத்திரர் சோபமேற்கொண்டு இனி யரைமாத்திரைப் போதாவது உயிரோடு வாழேனென்று உயிர்விடத் துணிந்து கடலில் விழுந்தார். அதைக் கூடற்றலைவனாகிய வருணன் கண்டு நடுங்கி, நீராற் பிராணச்சேதம்வராமல் ஏந்திக்கரையில்விடுத் துபசரித்தான். பின்னும் வசிஷ்டர் தமது

புத்திசோப மாறுதவராய் எவ்விதத்திலேனு மாள்வதே சரியென்று துணிந்து, பெரிய ஒரு மலையின்மேலேறி அங்கிருந்து பூமியில் விழுந்தார். பூமிதேவி அஞ்சி தன் கைகளால் வசிஷ்டரையேந்தி ஒரு துன்பமும் நேரிடா மற் காப்பாற்றினாள். பின்னும் வசிஷ்டர் உயிர்விடத்துணிந்து வடவைத் தீயிற்போய் விழுந்தார். அத்தீ நல்ல ஜலம்போற் குளிர்ந் திருந்தது. பின்னும் வசிஷ்டர் உயிர்விடக் கருதி விஷத்தையருந்தினார். அவ்விஷமுமமு தம்போலாயிற்று. அப்பால் வசிஷ்டர் கனவரு த்தமுற்று, நாமெத்தனை விதத்தா லுயிர்விடக் கருதியும் உயிர் நீங்கவில்லை. ஆதலாவினி எவ்வாறு இந்தப் புத்திரசோபத்தை சகிக்கப் போகிறோமென்று வருந்தி யிருக்கிறபோது சத்தியின் மனைவியாகிய துச்சந்தை என்ப வள் கருப்பந் தாங்கி யிருக்கிறாளென்றும் அக் கருப்பம் பன்னிரண்டு வருஷ மாகின்றதென் றும் கேள்வியுற்று, புத்திரர்களின் கால்வழி இருக்கிறதல்லவாவென்று அப்புத்திர சோப த்தை ஒருவாறு நீக்கி இருக்கிறகாலத்தில் இந் தக் கல்மாஷ்பாதனாகிய அரக்கனந்தச் சத்தி மனைவியின் வயிற்றிலிருக்கும் கருவை விஸ்வா மித்திராலுணர்ந்து, அவளையுங் கொல்லத் தேடிவந்து கண்டு கொலை செய்யத் தொடர்ந் தான். அவன் வரவைச் சத்தியின் மனைவி கண்டு பயந்து, அம்மானாகிய வசிஷ்டரிடத்து ஓலமிட்டுச் சென்றாள். வசிஷ்டர் அஃது ணர்ந்து, அஞ்சாமல் வருகிற வரசனைக்கண்டு தக்ஷணம் நமது கமண்டலத்திலிருக்கிற ஜலத் தை வாரி அவ்வரக்கன் முகத்திலிறைத்தார். அந்நீர்ப்பட்ட மாத்திரத்தில் விஸ்வாமித்திர னால்யேவப்பட்ட சிங்காரவேசமும், சத்தியா லிடப்பட்ட சாபமும், முன்வசிஷ்டரால் நேரி ட்ட சாபமும் உடனே நீங்கின.

இப்பால் அரக்கனாயிருந்த அரசன் தன் சுவாமியைக் கொண்டு வசிஷ்டருடைய திரு வடியிற் பணிந்து அநேகமாகத் துதித்துச் சொல்லுகிறான்: ஓ ஸ்வாமி! எளியேன் பல வாற்றாலுங் கொடிய சாபத்தை ஏற்றதினால், தங்களுடைய புத்திரர்களை யெல்லாம் புசித் தேன், சினங்கொள்ளாமல் என்னைக் காக்க வேண்டுமென்று பலமுறை வணங்கினான். வசிஷ்டர் அஞ்சி நிற்கிற வரசனை யாதரித்து பல ஆசிகள் கூறி, புலவர்கள் துதிக்கப்பட்ட யரசனை அயோத்திமா நகரத்துக் கழைத்து வந்து, மன்னர் மண்டலீகர்களறிய நல்ல சுப முகூர்த்தத்தில் மகுடாபிஷேகஞ்செய்து தம திருப்பிடத்துக்கு வந்தார். அதுமுதலரசன் கொலுவிலிருந்து சகல விசாரணையுஞ் செய்து, மனைவிமேலதிக காதல்கொண்டு அந் தப்புரத்திற்குச் சென்றான். மனைவியாகிய மத யந்தி எதிர்வந்து வணங்கி, ஓ அரசனே! தேவரீரிப்போது என்னைக் காதல்கொண்டு வந்தீர் அஃதெனக்குத் தெரிந்தது. நீர்முன்ன மரக்கனா யிருக்கிறபோது ஒரு பிராமணனைக் கொன்று தின்றுவிட்டீர். அவ்வேதியன் மனைவி வயிறெரிந்து, நீர் பத்தினியோடு புணருங்காலத்தில் இறக்கக்கடவதென்று சாப மிட்டிறந்தாள். ஆதலால், நீரென்னைப் புணர் ந்தால் மரணமடைவீரென்று மறுத்தாள். அரசன் திடுக்கிட்டஞ்சி, ஆ! ஆ! உலகத்திற் பிறப்பது இவ்வொரு யின்பமடையத்தானே? இவ்வின்பத்தை யடையாதகாலத்து எடுத்த தேகம் என்னத்திற்கு? நாம் பிராமண கன்னி யின் சாபத்துக்குள்ளானோம். நமது குலம் விளங்குகிறதற்கும் ஏதுவில்லை இனி யிதற் கென்ன செய்கிறதென் றேங்கி, வசிஷ்டரிடத் துச் சென்று வணங்கித் தன் குறைகளைச் சொல்லி யழுது, பின்னுந் தன் பிழைகளை எடுத்துச் சொல்லுகிறான்.

ஓ ஸ்வாமி! நான் கொடிய சாபத்தை யேற்று அரிய காட்டிற் சஞ்சரித்திருக்கிற போது ஒரு பிராமணனைக் கொன்று தின்று விட்டேனும். அதனைக்கண் டவ்வேதியன் பத் தினி நீ மனைவியோடு புணர்ந்தா லிறக்கக்கடவ தென்றெனக்குச் சாபமிட்டிறந்து விட்டா ளாம் எனக்கோ புத்திரனில்லை. புத்திரனில்லா விட்டாலும் இருக்கிறபரியந்தம் உலக யின்ப மாகிய ஸ்திரீ போகத்தை அனுபவிக்கலா மென்றால், அதற்குஞ் சாபம் நேரிட்டிருக் கிறது. ஆதலாலெளியேன்மீது கிருபை கூர் ந்து, சகல பாவங்களையுந் தீர்த்து ஸ்திரீபோ கத்தை யனுபவிக்கவும் என் கால்வழி மாறும லிருக்கத் தங்களால் என்மனைவி ஒருபுத்திரனை பெறவும் நாடிவந்தேனென்று பேச, வசிஷ்ட ரக்கருத்துக் கிசைந்து அரசனோடு வயோத் திமாநகரத்திற் செல்ல, அரசன் அநுமதியில் மதயந்தி வசிஷ்டரிடத்து வந்து வணங்க, வசிஷ்டர் மதயந்தியைக்கூடி ஒரு புத்திரனைப் பாவித்து அரசனை நோக்கிச் சொல்லுகிறார். ஓ மண்டலேஸ்வரா! மகா பதிவிரதையாகிய பார்ப்பினியிட்ட சாபம் நீங்க நாமொரு தந்தி ரம் சொல்லுகிறோம். அஃதென்னெனில், மகா

பாதகங்களை நீக்குகின்ற தீர்த்தயாத்திரை செய்து, தேவஸ்தலங்களைத் தரிசித்தால் அச்சாபம் நீங்குமென்று வழிகாட்டித் தமதிருப்பிடம் சேர்ந்தார். அரசன் மந்திரிமார்களை யழைத்து தன் செங்கோலை அவர்கள் கையிற் கொடுத்துச் சொல்லுகிறான்: ஓ மந்திரிகளே! நான் தீர்த்தயாத்திரைச் செய்யச் செல்லுகிறேன் சென்றவிடத்தில் என்னெண்ணம் நிறைவேறிற்றானால் வருகிறேன் இல்லாவிட்டால் வரமாட்டேன் நீங்களென் புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து அவனை என்னைப்போற் பாவித்து அரசு செலுத்தி வாருங்களென்றழைத்து, அரசன் தீர்த்தயாத்திரை சென்று அனேக நதிகளில் ஸ்நானஞ் செய்து, திவ்ய ஸ்தலங்களில் வாசம்பண்ணி மேற்றிசை வழியாகச் சென்றான். அவ்வாறு செல்லும்போது வழியிற் கவுதமமுனியைக் கண்டு வணங்கி, அவராற் சிவராத்திரியின் மகிமை யுணர்ந்து, கோகர்னஞ்சென்று சாம்பவமூர்த்தியை யர்ச்சித்து, அவரது கிருபையினாற் சாபம் நீங்கி நகரம் வந்து முன்போல் அரசு செலுத்தி வந்தான்.

இங்கே வசிஷ்டர் தன் மக்களில் மூத்த குமாரனாகிய சத்திமுனிவனுடைய மனைவியின் கருப்பத்தின்மேற் கண்ணுண்டாகி, எக்காலம் புத்திரனைப் பெறுவாளோவென்று பார்த்திருந்தார். இப்படி யிருக்கிற காலத்தில் சத்தியின் மனைவியாகிய துச்சந்தையாள் தேவாதி தேவர்களும் மகிழ்வெய்த யானைக்கன்றுபோற் பராசரைப் பெற்றாள். வசிஷ்டரும் அருந்ததியு மின்னும் அவ்வனங்களோடு மற்ற வனங்களில் தவம் செய்திருக்கும் முனிவர்களும், முனிவர் பத்தினிமார்களும் பேரானந்தத்தை மேற்கொண்டு வந்து, புத்திரனைக் கண்டு அதிக மகிழ்வை யடைந்து, அப்பிள்ளை பிறந்தது முதல் ஐந்து வயதுவரைக்கும் செய்ய வேண்டிய சடங்கை சரிசெய்து ஐந்தாம் வயதில் உபநயனம் வேதாப்பியாசமும் செய்வித்தார்கள். அப்பராசரும் நாலுவேதமும் ஆறு சாஸ்திரம் அறுபத்துநாலு கலைக்கியான முதலியவற்றை யுணர்ந்து, நன்னிலைக்கணின்று தவநிலை சேர்ந்து, அநேக காலந் தவஞ் செய்து தவத்தாலடையும் பயனாகிய ஞானத்தைப் பெற்று வசிஷ்டரிடத் திருக்கிற காலத்தில், தனது பிதாக்களை அரக்கன் கொன்று தின்றான் என்கிற சேதியைப் பல பேர்களாலுங் கேள்வியுற்று, அதிக கோபங்கொண்டு மூதாதையிடத்து வந்து வணங்கி, ஓ ஸ்வாமி! என் தந்தையரை அரக்கன் கொன்று தின்றானதலால் அவ்வரக்கன் மாத்திரமல்ல அவ்வரக்கர் குலத்தையும் இல்வுலகத்தையும் தகிக்க நான் தவஞ்செய்ய வேண்டும் விரைவில் எனக்கு விடைகொடுமென்று வேண்டினான். வசிஷ்டர் பேரப்பிள்ளை வந்த உக்கிரத்தைக் கண்டு, அடடா! இவன் பிதாவைக் கொன்ற பழிக்கு உலகங்களை யெல்லாம் நசிப்பிக்க எண்ணங் கொண்டு தவஞ் செய்வதற்காக நம்மை உத்தரவுகேட்கிறான். இதற்குத்தன்மை கூறவேண்டுமென்று கருதி பேரப்பிள்ளையை வாரி மார்போடணைத்து, மடியில்வைத்தவண்ணம் உச்சி மோந்து உள்ளம் பூரித்து சொல்லுகிறார்:

அப்பா பௌத்திரா! பூர்வம் இவ்வாறு நடந்திருக்கின்ற ஓர் சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேள். முன்னம் கிருதவீரியனென்று பெயர் வகித்துத் தருமதேவதை நாலு பாதத்தில் நடக்கவும் மன்னர் மன்னர்களெல்லாம் வந்துவணங்கவும் செங்கோல் நடாத்திய அரசன் வேதமோதுதலாகிய பிரம யாகத்தையும் ஓமம் வளர்த்தலாகிய தெய்வ யாகத்தையும், பலிகொடுத்தலாகிய பூதயாகத்தையும், தருப்பண முடித்தலாகிய பிதுர்யாகத்தையும், இரப்போர்க் குணவு முதலியவற்றை ஈதலாகிய மானுட யாகத்தையும், வேதாகமங்களாற் சொல்லப்பட்டு அருமையாயிருக்கிற அக்கினிஷ்டோமம்-அத்தி அக்கினிஷ்டோமம்-உத்தியம்-சோடசீ-வாசபேயம் - அதிராத்தம்-அப்தொரியாமம் - அக்கினியாதேயம் - அக்கினிகோத்திரம்-தரிசபூரணமாசம்-சாதுர்மாசியம்-நிரூடபசுபந்தம் - ஆக்கிரயணம் - சௌத்திராமணி-அஷ்டகை-பராவணம்-சிரார்த்தம்-சிராவணி-அக்கிராயணி-சைத்திரி-ஆசுவயுசி என்னும் இருபத்தொரு யாகத்தையுஞ் செய்யக் கருதி, திவ்யநதிக்கரையிற் ஒரு பெரிய யாகசாலை யமைத்து, பிருகுமுனியை குருவாகக் கொண்டு, அவரால் மேற்கூறிய யாகங்களை நிறைவேற்றி, அனேக தானதருமங்களைச் செய்து அம்முனிவருக்கும் அப்புத்திரபவுத்திரர்களுக்கும் அதிகதிரவியங்கொடுத்து, நெடுங்காலமரசுசெய்து பரமபதமடைந்தான். பின்பு அவன் புத்திரர்கள் மகுடாபிஷேகராகி அரசு செலுத்தினார்கள். ஆனாலவர்கள் தேவபக்தியில்லாதவர்களாய்ச் சுற்றம் நட்பு இவைகளை பாராட்டாமல், தாங்கள் புசித்தலையும் சுகித்தலையுமே பெருமையாகக்கொண்டு பொருளா

சைவைத்து ஒருகாசை ஒருகோடி பொன்னைப் போற் கருதுங் கருத்தை யுடையவர்களாய் அவர்கள் தங்கள் காலத்தில் வந்த வரும்படியைக் கணக்கிட்டு, தமது தந்தை காலத்தும் இவ்வளவுத் தொகை வந்திருக்க வேண்டும்; பொக்கிஷத்திற் பிதுரார்ச்சனை யொன்றுமில்லையே, இவ்வித வருமானம் போனவழி யென்னவென்று நினைத்துத் தந்தையின் மந்திரிகளை யழைத்துத் தக்கபடி விசாரணைசெய்தார்கள். அம்மந்திரிகள் கைகுவித்து, ஓ இராஜ புத்திரர்களே! உங்கள் தந்தை யாகஞ் செய்யக் கருதிப் பிருகுமுனியைக் குருவாகக் கொண்டு, திரவியங்களை அனேகம் பெயர்களுக்கு அபாரமாகத் தானங் கொடுத்தார். அவர்களிற் பிருகுமுனிவருக்கும் அவர் புத்திரர்களுக்கும் அளவற்ற திரவியத்தைக் குவித்தார். அதற்கு நாங்கள் என்னசெய்வோம் என்று மறுமொழி கொடுக்க, இராஜகுமாரர்கள் அவசரப்பட்டு, பிருகுமுனிவருடைய புத்திரர்களை யெல்லாம் அழைத்துவரக் கட்டளையிட்டுத் துடிப்போடிருந்தார்கள்.

அக்கட்டளைப்படி மந்திரிமார்கள் தூதுவர்களை யனுப்ப, தூதுவர் பிருகுமுனி புத்திரரிடத்துச்சென்று இச்சேதியைத் தெரிவிக்க, அவர்தக்ஷணம் பிரயாணப்பட்டுவந்து இராஜ புத்திரர்களைக் கண்டார்கள். அப்புத்திரர்கள் குருபுத்திரர்களை நோக்கி, ஓ மகாத்துமாக்களே! நீங்கள் மும்மலச் சேட்டையை யடக்கி வேதநெறி நின்று நல்வழியிற் செல்பவர்கள் உங்களுக்குப் பொருளென்னத்திற்கு எங்கள் தாதை யளவற்ற திரவியத்தை உங்களுக்குக் கொடுத்திருக்கிறார். அத்திரவியம் நல்வழியில் வந்ததல்ல நீங்களதனை வைத்திருப்பதிற் பாபம் நேரிடுமேயன்றிப் புண்ணியம் நேரிடாது. ஆதலால், அந்த திரவியத்தை யெல்லாம் கொண்டுவந்து வைத்துவிடுங்களென்று கூற, பிருகுமுனி புத்திரர் அரசன் புத்திரர்களை நோக்கி, ஓ இராஜபுத்திரர்களே! பாபப் பொருள் புண்ணியப்பொருள் என்னும் இவற்றுள் எதுவாயிருந்தபோதிலும் பிராமணருக்குத் தத்தமானபொருளை நீங்கள் கேட்பது தகுதியல்ல நாங்களும் கொடோமென்று மறுத்தார்கள். அரசன் புத்திரர்கள் அதிக கோபங்கொண்டு, ஆர்காணும் பிராமணர்களே! என் தந்தையை ஏமாற்றி யாகத்துக்கென்றும் யாகபாகத்துக் கென்றும் எங்கள் திரவியத்தை யெல்லாம் கிரகித்துக்கொண்டு, நாங்கள் கேட்டால் கொடுக்கிறதில்லை யென்றும் அஞ்சாமற் பேசுகின்றீர்களா? அப்படியா என்றெழுந்து தங்கள் கையிலிருக்கிற வாளால் அவர்கள் தலைகளை வெட்டி ஆசிரமத்துக்குட் சென்று பொருளை யெல்லாம் எடுத்துக்கொண்டு, பின்னும் அந்தப் பிருகுமுனி புத்திரர்களை யெல்லாம் தேடித் தேடிக் கொலை செய்யத் தலைப்பட்டார்கள். இப்படி கொலை செய்து வருகிறபோது பிருகுமுனிவர் புத்திரருள் ஒருவருடைய மனைவி கருப்பவதியாயிருந்தாள். அவளிந்த ராஜபுத்திரர்கள் தன் கணவன் முதலானவர்களை யெல்லாம் வெட்டி யெறிகிறதைக் கண்டு நாம் கருப்பவதியா யிருப்பதைக் கண்டால் நம்மையுங் கொலை செய்வானென்றஞ்சி நடுங்கி, மகமேருச்சாரலிற் போய் ஒளித்திருந்தாள். இராசபுத்திரர் பிருகுமுனி வமிசத்தை நாசப்படுத்தி நகரத்திற் சென்று மனக்களிப்புடன் அரசு செலுத்தி வருகிறார்கள்.

இங்கே பிருகுமுனி பௌத்திரன் மனைவி நம்மைத் தேடிவந்து எங்கே கொலை செய்கிறார்களோ வென்று பயந்து, வயிற்றிலிருக்கிற கருவைத் தன் வல்லமையாற் சிலகாலம் தொடையில் வைத்திருந்து, நூறு வருஷம் சென்றபின்பு பெற்றாள். அப்புத்திரன் பிறந்ததை அங்கிருக்கும் தவசிரேஷ்ட சிகாமணிகள் வந்து பார்தது மகிழ்வடைந்து அப்புத்திரனைப் பெற்ற அம்மனை பலவாறு புகழ்ந்து, அந்தப் புத்திரனுக்குப் பகனென்று நாமகரணமிட்டு பிறந்தது முதல் அஞ்சு வயதளவும் செய்யும் பிராமணச் சடங்குகளை நிறைவேற்றி உபநயன முடித்து, வேதமோதுவித்து, தவத்துக்கு யோக்கியதையாகிய மந்திர முதலியவற்றையும் உபதேசித்தார்கள். அப்புத்திரன் வேதாகமங்களிலும் மனுக்கியான முதலியவற்றிலும் வல்லவனாகி, சிவத்தைப் பேணும்படியான சிறந்த தவத்துக்கு யோக்கியதை ஆயினான். அக்காலத்தில் தன் மூதாதை முதலியவர்கள் கிருதவீரியன் புத்திரர்களால் யிறந்ததைத்தாயினாலறிந்து, அப்புத்திரர்களை நீறுக்குவிப்பதுமன்றி இந்த அனியாயத்தைக் கேட்காமலிருந்த யிந்த உலகத்தையும் வேருக்கு சொற்கத்தையும் எரிக்கிறேனென்று மகாஉக்கிரத்தோடு தவநிலைசேர்ந்து, தவசிரேஷ்டரெல்லாம் வியப்படைய அருமையான தவஞ்செய்தான். அந்த வனத்திலெழுந்த அக்கினியானது கிருதவீரியன் வமிசத்தைப்பற்றி எரிக்கத்தலைப்பட்டது. அந்தக் கிருதவீரியன் வமிச

ஸ்திரீகள் ஏக்கங்கொண்டு நடுங்கி ஒடுங்கிப் பகனையீன்ற அன்னையிடத்து வந்து முறையிட்டு, பாதத்தில் விழுந்து தங்களுக்குண்டான குறையைச் சொல்லி, எங்களைக் காக்கவேண்டுமென்று பலவாறு துதித்தார்கள். அந்த அம்மன் ஒருவர் முறையிட் டழுகிறதைக் காதினாலுங் கேட்டறியாதவ ளாகையால், மிகுந்த தயாள குணத்தை யுடையவளாய்த் தன் கணவன் முதலானவர்க ளிறந்துபோயின துயரத்தையு நினைக்காமல், தக்ஷணம் மனமிளகி அவர்களை யாதரித்து ஓ ராஜஸ்திரீகளே! அஞ்சாதிருங்கள். இந்த தபாக்கினி தேவர்களால் நீங்கும் நீங்கள் உங்க ளிருப்பிடத்திற்குச் செல்லுங்களென்று கட்டளையிட்டனுப்பினாள்.

இங்கே பகன் செய்கிற அருமையான தவத்திலுண்டான அக்கினியானது, சொர்க்க மத்திய பாதாள மென்னும் மூன்று ஸ்தலங்களிலும் பற்றியெறிக்கத் தலைப்பட்டது. இதனைத் தேவர் கோமானாகிய இந்திரன் அறிந்து சில தேவர்களோடு பகனது பிதுர்க்களிடத்துச் சென்று அப்பிதுர்க்களை அனேக விதமாய்த் துதித்து, ஓ ஐயமார்களே! உங்கள்வமிசத்தி லுற்பத்தியான பகன் உங்களைக் கொலை செய்த கிருதவீரியன் வமிசத்தை நாசப்படுத்தத் தவஞ் செய்கிறான். அந்தத் தவத்தினால் எழுந்த அக்கினி அவர்களை நாசப்படுத்துவதுமன்றி சொர்காதி புவனங்களையும் பொரியாக்குகிறது. நீங்கள் விரைவிற்சென்று தவஞ் செய்தலை நிறுத்தி வாருங்களென்று பலவாறு வேண்ட, பிதுர்க்கள் தக்ஷணம் தெய்வ விமானத்திலேறி பகன் தவஞ்செய்கிற விடத்துக்கு சரியாக அந்தரத்தில் வந்து நின்று பகனை யழைத்துச் சொல்லுகிறார்கள்! அப்பா பௌத்திரசிகாமணியே! உன்னால் நாங்கள் அளவற்ற கீர்த்தியை வகித்தோம். இப்போது எங்கள் வசனத்தைக் கேட்டு அவ்வழி நடவென்று பணிந்தார்கள். பகன் பிதுர்க்களின் வரவைக் கண்டு எழுந்து, பலவித உபசாரத்தோடு நமஸ்காரஞ்செய்து, ஓ ஐயமீர்! ஆ! ஆ! என்ன மேலான தவம் யான் செய்தது ஏககாலத்தில் உங்களை யெல்லாம் என் கண்ணாரத் தரிசிக்கும் பாக்கியத்தையும் பெற்றேன். தற் செயலாய் எளியேன்மேல் கிருபைகூர்ந்து தாங்களனைவருங் கூடி இவன் வந்தகாரண மென்ன? நீங்கள் இப்போது சொல்லும் வசன மென்னவென்று வினவினான். பிதுர்க்கள் பேரனுக்கு ஆசிகள்கூறி, அப்பா பௌத்திரா! நாங்கள் கிருதவீரியன்புத்திரர்களால் அதமானோமென்கிற சேதியை யுணர்ந்து, அவர்களை நீறாக்கக் கருதித் தவஞ்செய்கிறாய் அத் தவத்தை இனி விட்டுவிடு. ஏனென்றால், உலகத்திற் பிறந்து மும்மலப் பேயிடத்து அகப்பட்டுவிம்மலாகிய வருத்தத்தை யடைந்திருந்த எங்களைப் புண்ணியலோகஞ் சேர்த்த கனவான்களை நீறாக்குவது தகுதியல்ல. இக்காயவேதனை நீங்கி எக்காலம் புண்ணியலோகமடையப் போகிறோமென்று வருத்தப்பட்டிருந்த எங்களை யெல்லாம் ஏக காலத்திற் சுவர்க்கத்துக் கனுப்பிவித்த தருமவான்களைக் கொல்லுவது நியாயமோ? எங்கள் வினைப்பயன் அப்படியாக வேண்டியிருக்க, மற்றவர்களை விரோதித்து நீ மனம் நோவதிற் பயனென்ன? இனியேனும் அக்குரூரத்தை விட்டுவிடென்று விளம்பினார்கள். பகன் பிதுர்வாக்கியத்தைத் தடுக்கக் கூடாமையால் தவஞ்செய்தலை நிறுத்தி, ஓ ஐயமீர்! என் தவத்தாலெழுந்த அக்கினிக்கு வழிகாட்டுவீராகில், இம்மட்டில் தவத்தை நிறுத்துகிறேனென்றான். அதற்குப் பிதுரர் சொல்லுகிறார்கள்: அப்பா பௌத்திரா! உன் தவத்திலெழுந்த அக்கினியைக் கடற்புறத்தில் வைப்பாயாகில் அது கடலிற் சுரக்கும் நீரைப் பானஞ்செய்துக்கொண்டு அங்குதானே யிருக்குமென்றறைந்து, அப்பகனுக்குப் பல ஆசிகள் வழங்கிப் புண்ணியலோகம் போய்ச் சேர்ந்தார்கள். பகன் பிதுர்க்களிட்ட கட்டளைப்படித் தபாக்கினியைக் கடற்புறத்திற் கனுப்பிவிட்டுத் தாயிடஞ் சென்று வாழ்ந்திருந்தான். அந்த தபாக்கினி கடற்புறத்துச் சென்று கடலிற் சுரக்கும் நீரையுண்டு, அங்குதானே வடவைக்கடலென்னும் பெயரால் விளங்கி யிருந்துவிட்டது.

அப்பா பௌத்திரா! அந்தப் பகமுனிக் கொப்பானவன் நீயாகையால் அம்முனியைப் போல மூன்றுலகத்தையும் தகிக்கக் கருதாமல் உன் தந்தைகளைக் கொன்றவர் அரக்கர் வம்சமாதலால் அவ்வரக்கர் குலத்தை மாத்திரம் நாசப்படுத்தென்று அருளுடன் விடைகொடுத் தனுப்பினார். பராசர் மூதாதையின் கட்டளைப்படி அருமையான தவஞ் செய்தார். அத் தவத்தா லக்கினியுண்டாகி உலகிற் பரவி அரக்கர் குலங்களைப் பற்றி எறிக்கத் தலைப்பட்டது. அரக்கர் இந்த தபாக்கினியைக் கண்டவுடனே திடுக்கிட்டு அஞ்சி நடுங்கி ஒடுங்கிச் சத்தியலோகஞ் சென்று பிரமதேவனைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்வாமி! நாங்

கள் வசிட்டருடைய புத்திரரைக் கொன்ருே மென்று கருதி, அவருடைய பௌத்திரராகிய பராசர் எங்களை நாசமாக்கத் தவஞ் செய்கிறார். ஆதலால், தேவரீர் அத்தவத்தை நிறுத்தி எங்களை ஆதரிக்க வேண்டுமென்று வேண்ட, பிரமன் தக்ஷணம் தனது அன்னவாகனத்திலெழுந்தருளி தவஞ் செய்கிற பராசர் கண் முன் தோன்றி, ஓ பராசரே! உமது மனவுறுதியையும் தவத்தினருமையும் கண்டு வியப்படைந்தோம். இனித் தவஞ் செய்தலை விட்டு நீங்க வேண்டும் என்று புகல, பராசர் பக்தி விசுவாசத்தோடு நமஸ்காரஞ் செய்து, ஓ சிருஷ்டி கர்த்தாவே! தமியேன் தந்தைகளைக் கொன்ற பாவியாகிய அரக்கனது வமிசத்தை நாசப்படுத்தினல், தங்களுக்கு வருத்தமென்ன சொல்லுங்களென்று கேட்டார். ஓ பராசரே! உமது தந்தைகளைக் கொன்றவன் அரக்கனல்ல.சூரியவமிசத்தரசன் முன்வினைப் பகுதியால் அரக்கனுயினன். உமது தந்தைகளுக்கு அந்தத் துன்பம் நேரிட்டது. சுயமாகிய அரக்கரால் நேரிட்டதல்ல. ஆதலால், நீர் தவஞ் செய்தலை விட்டுவிடு மென்ருர். அதற்குப் பராசர் சொல்லுகிருர். ஓ சதுமுகனே! தாங்கள் கொடுத்த விடையை நோக்கினல், அரக்கர்மேல் குற்றமில்லாவையா யிருக்கின்றது. ஆயினும், இப்போது நான் செய்த தவத்திலுண்டான அக்கினிக்குப் போக்கிடமெங்கே யென்று வினவ, பிரமன் மகிழ்ந்து, ஓ பராசரே! உமது தவத்திலெழுந்த தபாக்கினியை மேற்றிசையிலிருக்கும் பாலைவனத்தில் வையென்று உத்தரவு செய்து, மங்களாசனங் கூறித் தமதிருப்பிடஞ் சேர்ந்தார். பராசர் பிரமன் திருவாய் மலர்ந்தபடி தபாக்கினியை மேற்றிசையிலிருக்கிற பாலைவனத்தில் வைத்து மூதாதையாகிய வசிஷ்டரிடத்துச் சென்று வணங்கி, தாம் தவஞ் செய்ததும், அங்கு பிரமன் வந்ததும்,அப்பிரமன் வேண்டுகோளினல் அத் தவத்தணலை மேற்றிசையில் வைத்ததும் சொல்லிச் சுகமாயிருந்தார்.

### பாண்டவர் தவுமிய முனிவரை ஆசாரியராக நியமித்துக் கொள்ளுதல்

ஓ பாண்டுபுத்திரர்களே! இந்த வசிஷ்ட மகாமுனியினது பெருமையை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனலுஞ் சொல்லக்கூடாதென்ருல், என்னெரு நாவால் சொல்ல வசமாவென்று பேசினன் சித்திராங்கதன். அப்போது அருச்சுனன் முதலான ஐவரும் மிகுந்த ஆனந்தத்தை யடைந்தவர்களாய் அவர்களில் தருமராசன் சித்திராங்கதனை நோக்கி, ஓ காந்தருவ சிகாமணியே! குருவில்லாவிடில் அரசு பெருமை யடையாதென்று முன்னமொழிந்தீர் எங்களுக்குத் தகுமான அந்தணன் யார்? அவரையும் உமது வாக்கினற் சொல்லுமென்று வேண்ட, சித்திராங்கதன் ஓ தருமநந்தன! இவ்வழியே சென்ருல் இவ்வழிக்கருகில் உற்கயமென்று ஒரு நதியிருக்கின்றது. அந் நதிக்கரையில் தவுமியரென்னு மஹாத்துமா யிருக்கிருர். அவர் சிறந்த உத்தமர், காமம்-குரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாச்சரியம் ஆகிய அறுவகைக் குற்றங்களையுங் கடந்தவர். வேதாகம சாத்திரங்களைக் கரைகண்டவர், சாட்குண்ய மூர்த்தியாகிய சிவனுக் கன்பர், அவரைக் கண்டு வணங்கிக் குருவாகக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் நகரஞ் சேர்ந்து மகுடாபிஷேகங் கொண்டவுடனே உங்களுக்கு நான் வாக்குத்தத்தஞ் செய்தபடிக்கு அந்த ஐந்நூறு புரவியையும் அனுப்பிவைக்கிறேனென்று விடைபெற்றுச் சித்திராங்கதன் தன்னுலகஞ் சார்ந்தான். தருமன் முதலான ஐவரும் குந்திதேவியும் சித்திராங்கதன் காட்டிய வழியே போகிறபோது, உற்கயமென்கிற நதிதோன்றிற்று. அந்த நதியின் நாற்றிசைக் கரையும்போய்த் தேடித் தவுமியர் ஆசிரமத்தைக் கண்டுபிடித்து, அவரைத்தொழுது பலவாறு துதித்து, தங்கள் ஊர் பெயராகிய வரலாற்றை யெடுத்தோதி, ஓ ஸ்வாமி! அடியேங்களுக்குத் தாங்கள் குருவாயிருக்கப் பிரார்த்திக்கிறேம். அக்கருத்துக் கிசையவேண்டும் என்று வேண்ட தவுமியர் ஐவர் கருத்துக்கிசைந்து, தட்சணம் பிரயாணப்பட்டு நடந்தார்.ஐவரும் குருவாகிய தவுமியர் அழைத்துக்கொண்டு, சூரியன் உதயமாக இரண்டுநாழிகை யிருக்கும்போது பாலசூரியர்களைப்போல் முகமலர்ந்து பாஞ்சால தேசம்போய்ச் சேர்ந்தார்கள்.

சுயம்வரச்சருக்கம் முற்றிற்று.

---

ஒன்பதாவது,

## திரௌபதி மாலையிட்ட சருக்கம்

### கண்ணன் துதி

வேதமும் வேதம் விளம்பு மெய்ப்பொருளுமப்பொருள் வித்தங்களும்பஞ்ச, பூதமும் புலனும் புலன்களின்பயனு மப்பயன் பொலி

வுறநுகரு, ஞாலமுமுலகம் படைத்தளித் தழித்து ஞானமாயகிலமு நிறைவுற், ருதிவு நடுவுமுடிவுமாய் நின்ற வாதியானடியிணை பணிவாம்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! பிருதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயமென்னும் இப்பஞ்சபூதம்போல் விங்குகின்ற ஐவரும் அப்பஞ்ச பூதங்களையும் பெற்ற பராசத்தி போன்ற குந்திதேவியும் சதாசிவன்போல் விளங்கும் தவுமியரும் பாஞ்சால நாட்டுக்கு வந்தவுடன் அந் நாட்டாரவர்களுக்குப் பாண்டு புத்திரர்களாகிய ஐவரும் வந்தார்களென்று பறைசாற்றுவிப்பதுபோலச் சேவல்கள் ஒளிசெய்யச் சூரியனுதயமானான். பாண்டு புத்திரரைக் காணப்போகிறோமென்கிற மயக்கத்தைக் கொண்டிருந்த பாஞ்சாலன் இனிமேல் ஐவரைக் கண்டமாத்திரத்தி லவனுக்குண்டாகிய மயக்கம் எவ்வாறு நீங்குமோ? அவ்வாறு இருள் நீங்கிற்று. அவன் முகம் எப்படி மலருமோ? அப்படி தாமரை மலர்கள் மலர்ந்தன. அவன் கண்ணில் எவ்வித ஆனந்த நீருரும்புமோ? அவ்விதமாகத் தேன் றுளித்தது. அந்நகரம் எத்தன்மை மகிழ்ந் தொலிக்குமோ? அத்தன்மை பட்சிகளும் விலங்குகளும் மகிழ்வடைந் தொலித்தன. அருச்சுனன் அழகைக்கண்ட கற்புடையமாதர் தங்கள் தங்கள் கணவனைத் தக்களி கூர்வது போல, சேவலும் பேடும் சேர்ந்து மகிழ்ந்தன. இனித் திரௌபதை மாலையிட்டவுடன் அரசர் சீறி பொருக்கெழுந்தகாலத்து அர்ச்சுனன் ஒருவன் எதிர்த்து வெற்றிபெற்று முழக்கும் சங்கத்தொனிபோல் சங்கினம் சப்தித்தன. ஐவரும் காடு மலை முதலியவற்றில் இரவு முழுதும் பாதசாரியாக நடந்துவந்த வருத்தத்தை நீக்கும்பொருட்டு வனதேவதை உபசாரஞ் செய்வதுபோல் சோலைகளெல்லாந் தளிர்களாகிய கையாலழைத்துக் கனிகளைக் கொடுத்துத் தென்றற் காற்றை வீசி உபசரித்தன.

நெய்த நிலத்துக்குரிய விளரிப்பட்டை மருத நிலத்துத் தடாகத்திலிருக்கும் தாமரை மலரில் வண்டினம்பாட, அப்பாடலைக்கேட்ட நெய்த நிலமாதர் எட்டியந்தத் தடாகத்தை நோக்க, இம்மாதர்களின் முகச் சந்திரனைக் கண்டு தாமரைமலர் முகிழ்ப்ப, அம்மாதர் கோபித்துத் தங்கள் பாடலைத் திருடிவந்த வண்டினத்தைச் சிறைச்சாலையிற் போட்டது போல் அவைகள் குவிந்த தாமரை மலர்க்கு அகப்பட்டுப் பாடாமலொடுங்க மாதர்கள் வண்டினம்பாடக் காணோமென்று காதுகொடுத்து நன்றாய்க்கேட்க, அவர்கள் காதணியாகிய சூரியனைக்கண்டு முன்போல் தாமரை மலரெல்லாம் மலர, அதில் அகப்பட்ட வண்டினங்களின்பேரில் அம்மாதர் கிருபை வைத்துச் சிறைநீக்கி விட்டதுபோல் அவைகள் வெளிப்பட்டு ரீங்காரவோசை காட்ட, இந்த வேடிக்கையையும் நமது நாட்டிற் பிறந்த திரௌபதை நெடுநாள் கன்னியாமாடத்தில் இருக்கிறாளாதலால் அவளுக்கு முன்னமே நியமித்திருக்கிற அர்ச்சுனன்வந்து விரைவில் மணம்புரிய வேண்டுமென்று வனதேவதை வபலிலிருக்கும் பங்கமாகிய ஓமகுண்டத்தில் மாங்கனி ரசமாகிய நெய்யைச் சொரிந்து, புன்னைப் பூவென்னும் பொரியைச்சிந்தி, கிளிகள் நல்ல வேதமந்திரங்களைச் சொல்ல, யாசகர்கள் கையேந்தி நிற்பதுபோற் காந்தன்மலரெதிற்றேன்ற அவர்களுக்குச்சொர்ன மாரி பொழிவதுபோற் கொன்றைகள் மலரைச் சொரிய, இப்படி யாகஞ் செய்வதுபோற் றேன்றும் இவ் வேடிக்கையையும் யாவரும் கண்டு வியப்படைந்தார்கள்.

ஒரு தடாகத்தில் ஒரு தாமரைமலர் மலர்ந்திருப்பதைக்கண்டு அநேகம் வண்டுகளத்னது தேனையருந்தத் தாவி நெருங்கியபோது ஒரு வண்டுபறந்தோடி வந்து அவ்வண்டுகளை எல்லாம் சிறகாலடித்துத் துரத்தி அம்மலரின் தேனை யருந்தி மகிழ்வதை, ஐவருங் கண்டு, சுயம்வரத்திற்கு வந்த அரசர்களெல்லாம் ஏங்கி நாமே அத்திரௌபதையை மணம்புரிவோமென்பதற்கு இது நன்னிமித்தமென்றெண்ணி நடந்தார்கள். அங்கொருகுளத்திற் பெரிய ஒரு மாங்கனிவிழ, அம்மாங்கனியை அந்தக் குளத்திலிருந்த மச்சங்களெல்லா மிச்சை கொண்டு சுற்ற, அதைக்கண்ட ஒரு வாளைமீன் பாய்ந்து அம்மச்சங்களையடித்து துரத்திவிட்டு அம்மாங்கனியைக் கவ்விக்கொண்டு போயிற்றதனை ஐவர்கண்டு மகிழுற்று, நமது கருத்துக்கிசைந்த கன்னியைப் பெறுதற்கு இதுவுமோர் நன்னிமித்தமென்றெண்ணி நடந்தார்கள். பரிமள மிகுந்த நறுமலரணிந்து அளியினமுரன்று உறைதரு சுகந்த அளகபாரத்தையுடைய பாஞ்சாலியின் மணத்திற் குலகிலுள்ள வரசர்களும் வேதியர்களும் வந்தனர்கள் நீங்களும் விரைவில் வாருங்களென்று

தங்களை யழைப்பதுபோற் குயிலினங்கூவ, நம்மது நாட்டுத் தலைமைபூண்ட பாஞ்சாலன் குமாரியாகிய திரௌபதை அவள் கருத்தின் படி அர்ச்சுனனையே மணம்புரிவாள், வந்த வரசர்கள் நாணமுற்று ஒருவர்போனவழி ஒருவர் போகாமல் தனித்தனிப் பிரிந்தோடுவர். இது உண்மையென்று வள்ளைப்பாட்டிற் சேர்த்துக் கிள்ளைகள்பாட, மகரயாழ்போல் வண்டினமொலிக்க, மிர்தங்கத்தைப்போல் மேக முழங்க, மையலால் மகிழ்ந்து மயில்வந்தாட, பூங்கொத்துக்கள் தோறும் பொறியளிகள் சப்திக்க, ஜலங்களிற் பட்சிகளொலிக்க, ஆண் மிருகமும் பெண் மிருகமும் ஆலித்துக் காதலிக்க, கற்பக விருக்ஷத்தில் வல்லி ஜாதக்கொடி படர்ந்திருப்பதுபோல், மரங்கடோறும் பல வித புஷ்பக்கொடி படர்ந்திருப்ப இவைகளை யெல்லாங் கண்டு, நயந்து, சிங்கத்துக் கொப்பாகிய பராக்கிரமத்தை யுடைய ஐவரும் சிந்தை வியந்து, பூஞ்சோலையைக் கடந்து, பலிச்சக்கிரவர்த்திக்கு முன் திருமால் கொண்ட வடிவைப்போல அந்தரமட்டு மளாவிக் கோடி சூரியப் பிரகாசம்போல் விளங்கும் ரத்தின சிகர கோபுரங்களோடு கூடி அண்டப்புறச் சுவர்போல விளங்குகின்ற மதில்களையுடைய பாஞ்சால நகரத்தைக் கண்டார்கள்.

அந்த நகரில் மங்கலத்துக்குரிய மிர்தங்க முதலாகிய பல வாத்தியங்கள் முழக்கமும், ரதகஜதுரகபதாதி சேனைகளும், மன்னர் - மண்டலீகர் - பட்டவர்த்தனர் - மகுடவர்த்தனர்-அர்த்தரதர்-மகாரதர் முதலாகிய ராஜகூட்டங்களும், பிராமணர்-க்ஷத்திரியர் - வைசியர் - சூத்திரர் முதலான கூட்டங்களும் மற்ற மரபினரு முனிவர்களும் நெருங்கியிருக்கிற வைபவங்களைக் கண்டு அதனுட் சென்றார்கள். அந் நகரம் எப்படி யிருந்ததென்றால், யுகாந்த காலத்தில் உயிர்களனைத்தையும் தமது கெற்பத்தில் வைத்து திருப்பாற்கடலில் ஆதிசேஷ சயனத்திற் பள்ளிகொண்டு யோக நித்திரை செய்யும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை ஒத்திருந்தது. அப்படிப்பட்ட பாஞ்சால நகரத்தில் பாண்டவரைவரும் வீதியிற் செல்லும் போது காதளவு பாய்ந்த விழியிணையும் முல்லை மலரை யொத்த முறுவலையும், கோவைக்கனி போன்ற இதழையும், சந்திரனுக் கிணையான முகத்தையும், ஆர முதலிய ஆபரணங்களை யணிந்த பயோதரத்தையுமுடைய பாஞ்சாலிக்கு இன்றையதினந்தான் மாலை யிடுகிறது விரைவில் வாருங்கள் வாருங்களென் றழைப்பதுபோல் தெருக்கடோறும் கட்டியிருக்கிற கொடியாடைகள் ஆடின. இவ்விநோதங்களோடு வீதிகடோறும் போட்டிருக்கிற விதானங்களையும், அதின்சோபானங்களையும், பூரணகும்பம் அமைத்திருக்கிற நிதானங்களையும் நோக்கி மகிழ்ந்து, கடைவீதிகளைக் கண்டு வியப்படைந்து, அங்கங்கிருக்கும் பிரஜைகளையுங் கண்ணுற்று நடந்தார்கள். இவ் வைவரும் எந்த வீதியிற் சென்று நோக்கினாலும், அங்கங்கு பிரஜைகள் நிறைந்திருக்கிறார்கள். இவர்களிருக்கிற யிடந்தேடி அந்நகர் முழுவதுஞ் சுற்றிப் பார்த்தார்கள். அப்போது பார்க்கவனென்கிற ஒரு குயவன் இந்த ஐவரை நோக்கி, ஓ ஐயமீர்! நமஸ்காரம், என் வீட்டிலொரு சின்ன அறை யிருக்கின்றது. அது உங்களுக்குப் போதுமானதா யிருந்தால் இருங்களென் றிசைத்தான். உடனே தருமராஜன் அவ்வீட்டை நோக்கிப் போதுமென்று சொல்ல, குயவன் அதிலிருக்கிற சாமான்களை வெளியி லெடுத்துக்கொண்டு அவ்வீட்டைச் சுத்திசெய்து கொடுத்தான். ஐவரும் குந்திதேவியை அவ்வீட்டி லிருக்கச் சொல்லி, அத்தாயைப் பணிந்து விடைபெற்றுத் தௌமியரோடு இராஜ சபைக்கு வந்து, பிராமணருக்குச் செய்திருக்கிற சிங்கார மண்டபங்களில் வேதியரோடு தாங்களும் கலந்திருந்தார்கள்.

இப்பால் திரௌபதையின் செயல்களைச் சொல்லுகிறேன்: கேளும் மகாராஜனே! இப்பாஞ்சாலதேசத் தரசனாகிய துருபத மகாராஜன் துரோணாசாரியைச் சபையிற் பங்கப்படுத்தினதையும், துரோணாசாரி அர்ச்சுனனால் துருபதனைப் பிடித்துவந்து தன் சபையில் அவமானஞ் செய்ததையும் அதன்மேல் துருபதன் துரோணரைக் கொல்ல ஓராணும், தன்னை வெற்றிகொண்ட அருச்சுனன் கருத்து மகிழ ஒரு பெண்ணும் பெறுகிறேனென்று சபதம் செய்ததையும், அச் சபதப்படி பெரியோர்களை அடுத்து மக்களைப் பெற்றதையும் தாதியரால் திரௌபதை கேள்விப்பட்டு உள்ளம் பூரித்து, அருச்சுனனுடைய வல்லமை அழகு குண முதலியவற்றையுங் கேட்டறிந்து, மகிழ்ச்சியாகிய அமுர்தத்தை பானஞ்செய்து, நாளொருமேனி பொழுதொரு வண்ணமாக அத்திரௌபதை வளர்ந்து வருகிற காலத்தில், ஐவர் அரக்குமாளிகையி லிறந்துவிட்டார்களென்கிற சேதி லோகப் பிரசித்தமாகச்

சொல்லிக் கொள்வதை உயிர்ப்பாங்கிகளாலறிந்து, துக்கசாகரத்தில் மூழ்கி வருத்தப்பட்டு, தன் தந்தையாகிய துருபதன், ஜோசியர், உலூகமாமுனி, வேதவியாசர் இவர்களால் ஐவரும் உயிரோடிருக்கிறுரென்று தெளிந்ததை அவ்வம்மனுணர்ந்து, ஆதியில் நியமித்த புருஷன் நமக்குச் சித்திப்பான். இதற்கொரு சந்தேகமில்லையென்கிற தீர்மானத்தை உள்ளத்திற் கொண்டிருந்தாலும் நமக்கு நியமித்த புருஷனைக் கண்ணுற்காண்பதெக்காலமென்கிற ஏக்கத்தைக்கொண்டு அல்லும்பகலும் அதுவே நினைப்பாக உணவு முதலியவற்றிற் சிரத்தையில்லாதவளாயிருந்தாள். ஊழியஞ்செய்கிற தாதியர்களாலும் அன்னையர்களாலும் கிஞ்சித்து மனச்சஞ்சலந்தீர்ந்து, அடிக்கடி அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தையும் அழகையும் கேட்டு, மற்றச் சஞ்சலத்தையும் நீக்கினுள்.

அப்போது தன் தந்தை சுயம்வரஞ்சாட்டி லக்ஷயக்குறியை வைத்து ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்கும் மணவோலை அனுப்பிவித்ததைக் கேள்வியுற்று, அர்ச்சுனன் வருவானென்கிற களிப்பையும் இந்த மணவோலை ஐவர்க்குச் சேருமோ சேராதோ என்கிற சந்தேகத்தையும் உடையவளாகி, நல்லது அந்த வோலையைப் பார்வையிட்ட அவ்வைவர்கள் ஒருவேளை நம்மை லக்ஷயப்படுத்தாமல் எங்கே வராதிருக்கிறுர்களோ! அல்லது லக்ஷயப்படுத்தியும் நாம் வருந்துவதுபோற் காட்டில் ஒரு ஸ்திரீயைக் கொண்டுபோய் வருத்துவது தகுதியல்லவென்று நினைத்து வராதிருக்கின்றுர்களோ? அப்படி வரார்மற் போனுல் இந்த கல்யாணமண்டபம் என்ன பாடுபடுமென்கிற வருத்தத்தையும் உட்கொண்டு, தாமரையிலையிற் சலம்போல் தத்தளித்திருக்கிற வேளையில் துருபதராஜன் தாதிகளை அழைத்து, என் புத்திரியை ஸ்நானஞ் செய்வித்து அலங்கரித்து அழைத்து வாருங்களென்று கட்டளையிட்டான். சேடியர் உடனே திரௌபதி அம்மனிடத்துக்கு ஓடிவந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, ஓ பொறுமைசாலி! உமது தந்தையாகிய மகாராஜன் உங்களுக்குஸ்நானஞ்செய்து அலங்கரித்து அழைத்துவரக் கட்டளையிட்டார். தாங்கள் திருமஞ்சனச்சாலைக் கெழுந்தருள வேண்டுமென்று செப்பினுர்கள். அம்மன் தாதிகளை கண்ணுற்று ஓ தாதியரே! என் கருத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்: நான் பாண்டு புத்திரனுக்கு மாலையிடுவனேயன்றி மற்ற அரசர்களுக்கு மாலையிடேன். ஐவர் வராதிருந்தால் நான் மற்ற அரசர்களை விரும்பாமல், எனக்குத் தாயாகிய அக்கினிதேவியிடத்துக்குப் புகுவேன். இதுவே சத்தியம் இதைவிட்டு நீங்களாவது அல்லது என் தந்தையாவது வேறொரு நினைப்பைக் கொண்டால் எனக்குச் சம்மதமிராது. ஆதையால், நீங்கள் செய்யவேண்டிய வேலை எதுவோ, அந்த வேலையிற் சாக்கிரதையாக யிருந்தால் வருகிறேனென்றுள்.

## திரௌபதி சுயம்வர மண்டபமடைதல்

அதற்குத் தாதியர் வணங்கி, ஓ யெங்கள் குலதெய்வமே! ஏதோ சிலகாரியம் இருக்கிறதாகவும், அதன்மேல் தங்கள் கருத்துக்கு அழிவுவரப் போகின்றதென்றும் எண்ணங்கொண்டு, எங்களுக்கு புத்திசொல்லுகிறீர். நீங்கள் அப்படிச் சொல்லவேண்டாம். உங்கள் கருத்துக்கிசைந்த கணவனுக்கு மாலையிடுகிறதென்கிற தீர்மானத்தை யுட்கொண்டிருக்கிறீர் இராசன் கருத்தஃதல்ல, யாவர்க்கு மசாத்தியமாயிருக்கிற வில் அம்புடன் லட்சயக் குறிவைத்து, அந்த வில்லை வளைத்து அம்பைத்தொடுத்து லட்சயத்தை விழச்செய்தவனெவனே? அவனுக்கு என் மகள் மாலையிடுவனென்று தெரிவித்திருக்கிறுர். ஆனலந்த வில் முதலியவை அர்ச்சுனனுக்குச் சாத்தியமாகியும், மற்றையாக்கு அசாத்தியமாயுமிருக்கின்றன. ஆகையால், ஐவர் எவ்வுருவங்கொண்டிருந்தாலும் அவ்வுருவத்தோடு சபைக்கு வருவார்கள். அவர்களில் அர்ச்சுனன் வில்லை வளைத்து அம்பு தொடுத்து லட்சயத்தை விழச்செய்து, உனது கைமாலைக் குரியவனுவான் தாயே! சஞ்சலப்படாமல் எழுந்து வாரும் என்றுகூற, அம்மன் மகிழ்வடைந்து எழுந்து மஞ்சனச்சாலைக்கு வர யத்தனித்தாள். வருகிறபோது நன்னிமித்தங்கள் தோன்றினது மன்றி இடத்தோளும் இடக்கண்ணும் துடித்தன. இக்குறி நற்குறி என்றுணர்ந்து மகாசந்தோஷத்துடன் அம்மஞ்சனச்சாலைக்கு வந்தாள். உடனே தாதியர் சிரோரத்தினங்களாலிழைத்திருக்கிற ஓராசனத்தி லெழச்செய்து அங்கு வந்திருக்கின்ற இராஜசபையைச் சேர்ந்த மாங்கிலிய ஸ்திரீகளுக்கெல்லாம் வெவ்வேறு கனிவர்க்கங்களையும் வெள்ளடைப்பாகுகளையும் தங்கள் கைமிதப்பத் தந்து அவர்கள் யாவரும் புடைசூழ்ந்து மங்களவாழ்த்து கூறி

உபசரித்து நலங்கிட்டானபின்பு திருமஞ்சன மாட்ட யத்தனித்தவர்களாய், "புழுகுசட்டங் கோட்டமாரியக் கோட்டநாகப் பூமுத்தக் காசுசயிலேகம் விலாமிச்சம் பழுதிலிருவேரி மலையிருவேரி மாஞ்சில் பச்சிலை கச்சோலமதி மதுரந்தக்கோலம் வாழைமலர் நன்னாரிதீம்பூ வெண்ணெய்கண்டில் வகுளப்பூத்தா வரிசி ஏலஞ் சாதிக்காய் தண்மைசாள் மிலவங்க நாக மணஞ்சட்டி சண்பக மொட்டறுத்தை நரும் பிசின்றகாங்குக்குல் கூறியவோமாலிகை யெண் ணன் கொடுக்த்தூரி குங்குமங் கற்பூர மகில் சந்தன மை விரையும் வீறியபான்மா நான்கு திரிபலைமானவன் மிக்க கருங்காலி யெனுந் துவர்பத்து நல்லோர் தேறுவெள்ளி லோத் திரம்பூம் பொருக்கரைத்த சாந்துஞ் சேர்ந்த நறுநெய் பூசித் திமிர்ந்தருவி போல வூறிய மாமதகளிற்றுப் பிடரின் வருகங்கை யுவந் தாட்டித் திருமேனி பொற்றுடை புரிந்தார்" என்கிற சாத்திரவிதிப்படி புழுகுசட்டம்-கோட்டம்-ஆரியக்கோட்டம்-நாகப்பூ-முத்தக் காசு-சயிலேகம்-விலாமிச்சம்-இருவேரி-மாஞ் சில்-மலையிருவேரி-பச்சிலை-கச்சோலம் - அதி மதுரம்-தக்கோலம்-வாழைப்பூ-நன்னாரிப்பூ-கண்டில்வெண்ணெய் - மகிழம்பூ - தாவரிசி - ஏலம்-சாதிக்காய்-வெண் குங்கிலியம்-இலவங் கம்-நாகணம் - மஞ்சட்டி - சண்பகமொக்கு - ஆரத்தை-சாம்பிராணி-தகரம் - கருங்குங்கிலி யம்-வெட்டி-வேர் என்கிற முப்பத்திரண்டு பொருள்களோடு கஸ்தூரி - குங்குமம் - கற் பூரம் - அகில் - சந்தனம் என்கிற ஐவகை வாசனைத் திரவியங்களும், நாவல் கடுக் காய் - நெல்லிக்காய் - தான்றிக்காய் - ஆல் - அரசு - அத்தி - இத்தி - கோரைக்கிழங்கு - மாந்தளிர் என்கிற பத்துவகைத் துவர்ப்புச் சரக்குகளையுஞ் சேர்த்து, வெள்ளிலோந்திரப் பட்டையையும் அரைத்த சந்தனவண்டலை யுங் கலந்து மிக்க பக்குவத்தோடு காய்ச்சப் பட்டிருக்கின்ற பரிமள மிகுந்த தயிலத்தை கூந்தலிற் றிமிர்ந்து பின்னலகளை மெல்லெ னச் சிக்கறுத்து, யானையின் பிடரியிற் கொணர்ந்துவந்து பல கங்காஜலத்தினுலும் வேதவேதியர்களால் மந்திராவாகனஞ் செய் யப்பட்டு வாசனை யிட்டிருக்கின்ற பூரண கலசகங்காஜலத்தினுலும் திருமஞ்சனமாட்டி, பனியைப்போன்ற மெல்லிய ஒற்றாடையினுல் ஈரம்புலர்த்தி, இழையாயிரம் பொன்பெற்ற இந்திரவர்ணப்பட்டாடை யணிந்து, அலங் காரமண்டபத்தி லழைத்துவந்து பொற்பீட த்திலிருத்தி அளகத்தி லீரமில்லா திருக் கச் சாம்பிராணிப் புகையோடு அகிற்புகையும் புகட்டி இருதோளிலும் தன் துவசமெய்தி, கூர்வேல்விழிக்கு மையிட்டு, புருவங்களையுந் திருத்தி, தனத்துக்கு மேலும் கழுத்துக்குக் கீழுமானவிடத்தில் ஐந்துகணைகளையும் நாட் டினபடி மதன்வில்லெழுதி, தனத்திற்குச் சந் தனம்-புனுகு-கஸ்தூரி-கற்பூரம் - சவ்வாது-குங்குமம் இவைகளணிந்து கூந்தலுக்குச் சம் பங்கி நெய்யிட்டுச் சீப்பினுல் வாரி, மேகத்தின் மத்தியில் மீன்தோற்றினதுபோற் பாவட்டை யெடுத்து, உயர்ந்த ரத்தினங்களை யழுத்திய சடைபில்லையும் பிறைப்பில்லையும் வைத்துப் பின்னிய ஜடைக்கு குச்சு குப்பி யணிந்து, கிளியைப்போலவும், மயிலைப் போலவும், அன்னத்தைப்போலவும், புறவைப்போல வும் தாழம் பூவைப்போலவும் பசும்பொன் னற் செய்து ரத்தினங்களை அழுத்திய பல பூஷணங்களைப் பின் குழல் முடித்து, சந்திரப் பிரபை, சூரியப்பிரபை, முன்கொண்டைப்பூ, சிரபூஷணம், துராய் முதலியதுந் தலைக் கணிந்து சுட்டி, முகவீரபட்டம் மூக்குப் பொட்டு மூக்குத் தொங்கட்டம், நத்து முத லாகிய பணியை நெற்றியிலும் நாசியிலு மாட்டி, குண்டலம், கத்திரிப்பூ, ஒன்னப்பூ, கொப்பு, முருகுதாமரை முட்டையை ஒத்த நீரோட்ட நிறைந்த ஆணிமுத்துக் கோவை யாலாகிய மயிர்மாட்டி இவை முதலிய அணிகளைச் செவியிலணிந்து, உட்கழுத்தின் மணி, உயர்ந்த முத்துமாலை, மோகன்மாலை, பஞ்சரத்தினமாலை, நவரத்தினமாலை, பிறை வடம், கடலைமணித்தாழ்வடம், மின்னூல், கண்டசரம், உத்தரசஞ்ச மிவை முதலானவை களைக் கச்சணிந்தகுயாசலத்தை மறைக்கமார்பி லணிந்து வாகுவலயம், கடகம் கேயூரம், கங் கணம், அங்குலிக முதலிய பூஷணங்களைத் தோளிலும், முன்கையிலும், அகங்கையிலும், விரல்களிலுந் திருத்தி இடைக்கு 16-மணிக் கோவையையுடைய மேகலாபரணங்களைக் கட்டி, முகப்பில் மாணிக்கம் பதித்த ஒட்டியா ணத்தைப்பூட்டி, பாதகடகம், தண்டை, நூபு ரம் பாதசரமுதலிய காலணிகணிறைந்து, கால் விரல்களுக்கு மீன்போலும், மயில்போலும், உருவஞ் செய்திருக்கிற பீலியென்னு மேர்தி ரங்களையிட்டு, கூந்தற் சடைக்கு - மல்லிகை - முல்லை-சண்பகம் - சம்பங்கி முதலிய பரிமள மிகுந்த நறுமலர் மாலைகளை யணிந்து பாதத் துக்குச் செம்பஞ்சூட்டி இவ்வாறு, சகல வல்ங்

காரஞ்செய்தான பின்பு' தெய்வத்தை வாழ்த்தித் திருநீறிட்டு, திருஷ்டி கழிய நீராஞ்சன முதலிய ஆர்த்தி யெடுத்து, அரசன் உத்தரவுக்கெதிர் பார்த்துக்கொண்டு அம்மானை அலங்காரமண்டபத்தில் வைத்திருந்தார்கள்.

அரசன் வேதவேதியர்கள் நியமித்திருக்கிற முகூர்த்த வேளையிற் சில தாதிகளை யனுப்பித் திரௌபதி யம்மனை அழைத்துவரக் கட்டளையிட்டான். அத்தாதியர்கள் வந்து தாய்மாருக்கும் அவ்வம்மைக்கும் தெரிவித்தார்கள். உடனே அத்தாய்மார்கள் புடைசூழத் திரௌபதியம்மனெழுந்து, முரசு-பேரிகை-டமாரம்-நாகசுரம்-காகளம்-பேய்க்காளம்-துத்தாரி - சின்னம்-பேரியாழ் - கேடயாழ் - செங்கோட்டியாழ் - மகரயாழ் முதலிய வாத்திய முழங்க, விருத்தவேதியர் பூரணகலச மெடுத்துச்செல்ல, மங்களஸ்திரீகள் மங்களம் பாட, கிளி நாகணவாய்ப்பட்சி-கழங்கு அம்மனை பலவிதப் பிரதி-மெய்-வெள்ளிலை - அடைக்காய்-மான்-புழுகுபூனை - சவ்வாதுபூனை - சவுரிமிருகம்-அன்னம்-மயில்-குயில்-சிறுமணிக்குன்று-ஆடற்கருவிகள் முதலியவற்றைத் தாதியரெடுத்துப் புடைசூழ்ந்துவர, முத்துக்குடை சுற்றிலும் நெருங்க, ஆலவட்டம்போட, வெண்சாமரைவீச, அமரர்களோடு பல அரசர் மனங்களும் பின்செல்ல, அவ்வவர்கள் கண்களாகிய வண்டுகள் ஸ்திரீகள் முகமாகிய கமலத்தில் மொய்க்க, அனிச்சமலரும் அன்னத்தின் றூவியும், பரப்பிய வழியில் நடந்து வருகின்றாள். அப்போது பாஞ்சாலிக்குரிய கணவன் சபையில் வந்திருக்கிறான் நீங்களேன் யிலவு காத்த கிளிபோல் காத்திருக்கின்றீர்கள்? உங்கள் நகரத்துக்குச் செல்லுங்களென்று பூமிதேவி வாய் விட்டுச் சொல்லுவதுபோல் காலிலணிந்த நூபுரங்கள் கலீர் கலீரென்று சப்திக்கவும், பாண்டு புத்திரரை இந்தச் சுயம்வரச் சபையிற் காணலாமென்று கருதிச் சந்திரன் வந்தாற்போல் திருமுகமண்டலம் பிரகாசிக்கவும், காமனரசும் காவலர் பரிசும் சிறப்புற்றோங்கவும், அரசர்களாகிய மச்சங்கள் தன் கண்வலையில் அகப்பட வீசிச் சுயம்வர மண்டபத்தில் மகிழ்வோடு வந்து தோன்றி இரத்தினங்களிழை யியற்றிய பொற்பீடத்தில் இனிது வீற்றிருந்தாள்.

இவ்வாறு திரௌபதி அம்மன் அச்சுயம்வரமண்டபத்திற் கொலுவீற்றிருந்த தோற்றம் எவ்வாறிருந்த தென்னில், ஓமத்தீயிற் பிறந்தவளென் றெவ்வளவேனும் கருதாமற் காதல்கொண்டு, காமத்தீயினால் வருந்து மவர்கள் இன்னும் பாவத்தீயினால் வருந்திக் கனவருத்தப்பட அவ்வோமத்தீயக்குப் பின்னும் விறகிட்டு விர்த்திசெய்வதுபோ லிருந்தது. அன்றியும், மேகத்தின் மத்தியிற் றோன்றிய சூரியனைப்போல் ஒளிமழுங்கிய பாண்டுபுத்திரரைவரும் வேதியரோடு வேதியராக அச் சுயம்வர மண்டபத்தில் இருந்தபடியால், அவ்வம்மனுக்குப் பிராரத்துவ சம்பந்தத்தால் தனக்குத்தானே இருதயகமல மலர்ந்தது மன்றிக் கண்ணாகிய கமலமுமாகிய கமலமும் அலர்ந்து சபையை ஒருதர முற்றும் உய்த்து நோக்கினாள். அதுகாலையிற் பாஞ்சாலன் தன் புத்திரனாகிய துஷ்டத்துய்மனை அழைத்து, அப்பா மகனே! நமது திரௌபதிக்காக அநேக அரசர்கள் வந்து காத்திருக்கிறார்கள் நீ சென்று அவர்கட்கெல்லாம் லட்சியத்தின் இலக்கணத்தைப் புலப்படப் புகன்றுவாவென்று விடுத்தான். துஷ்டத்துய்மன் அக்கட்டளையின்படி சகல வேதியரும் புடைசூழக் கொலுவீற்றிருக்கும் அத் திரௌபதியம்மன் அவைக்கணின்று, சகல அரசர்களுங் கேட்கும்படியாக இதனைச் சொல்லுகிறான், "சிலையிதுசிலீமுகங்க ளிவைகடுத்திரிகை வேகத்திலைமுகத் துழலுகின்ற வெந்திரத்திகிரி நாப்ப, ணிலையிலாவிலக்குமஃதே நெஞ்சுற யாவனெய்தான், கலைவலீரவற்கேயந்தக் கன்னியுமுரியளென்றான்" என்றால், ஓ சகலகலைகளிலும் வல்ல அரசர்களே! இதோ யிருக்கிற வில்லை வளைத்து, இந்த அம்புபுட்டிலைத் தாங்கிக் கிடாரசலத்திற் றோன்றும் மூன்று துளைக் குறியைப் பார்த்து, அந்தரத்திற் சுழலும் சக்கரத்தின் முனைவழியிற் கணைகளைப் போக்கி, முன்னம் மச்சத்தை யறுத்து பின்பு சக்கரத்தைக் கொய்து, இரண்டையும் பூமியில் விழாமற் கணைகளால் எத்தி அவைகளைக் கைக்கொண்டு வருகிறவர் யாரோ? அவர்களுக்கு என் தங்கையாகிய இக்கன்னி மாலையிடுவளென்று வசனித்தான்.

இச்சொல்லைக்கேட்ட அரசர்கள் இடியைக் கேட்ட நாகம் எவ்வாறு நடுங்குமோ? அவ்வாறு நடுக்கங்கொண்டு பெருமூச்செறிந்தவர்களாய், அவருள் அதிக காதல்கொண்டு வந்த அரசர்களிற் சிலர் சித்திரப்பாவைபோற் சற்றுமசைவில்லாமல் பிரமைகொண்டிருந்தார்கள். பலர் அட்டா!! பாஞ்சாலியின் கரும்

புருவமாகிய வில்லையும் கண்ணாகிய அம்பை யுங்கொண்டு மாறுமல் மச்சக்கொடியும் லச்சை கெட்டுவிழ யுத்தஞ்செய்து வெற்றியடையலா மென் றெண்ணிவந்த நம்மைப் பார்த்து இந் தத் துஷ்டத்தாய்மன் வேறுருவில்லையும் அம்புப்புட்டிலையும் காண்பித்து மாறுபட்ட மச்சத்தைக்காட்டி விழச்செய்யுங்க ளென் றுனே? அவன் சொற்படி வில்லை வளைத்து நாணி ஏறிட்டுக் கணையைத் தொடுத்தாலும் அந்த மச்சக்குறியை எய்வதற்கு நம்மால் முடியாதே இதற்கென்ன செய்கிறதென்று ஏங்கி நாணினார்கள். சிலர் வில்லைப்பார்த்து நடுங்கினார்கள். பலர் பல்லைக்காட்டியொடுங் கினார்கள். சிலர் இவ்வில்லை வளைப்பதற்கு நம்மால் முடியாதென்றார்கள். பலர் சக்கரம் சுழலும் நேர்ப்பைக்கண்டு, நமதெண்ணம் நிறைவேறுவதில்லை யென்று தீர்மானித்தார் கள். சிலர் நிராசைகொண்டு, இந்த வில்லை வளைத்து மச்சத்தை விழச்செய்யும் அரசன் எவனோ அவனைக் காண்போமென்று கருதி யிருந்தார்கள். இவ்வாறு வந்த அரசர்களெல் லாம் தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கி, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்திருக்கிற தரு ணத்தில் திரௌபதை அம்மனுக்குச் சுயம்வர மண்டபத்தில் வந்திருக்கிறவர்களின் பெயரை யெடுத்துச் சொல்ல தாதிகள் யத்தனித்துச் சொல்லுவார்கள்.

### திரௌபதிக்குத் தாதிகள் அவ்வவ்வரசர்கள் ஊர் பெயர் முதலிய சிறப்புக்களைக் கூறிக் காண்பித்தல்

ஓவண்டினம் தொடர்ந்ததுபோன்றும் கரு மைகொண் டிழைத்ததுபோன்றும் மேகங்கள் கண்படுத் திருப்பனபோன்றும் பசிய சைவலத் தைப்போன்றும்இருந்து, கண்டவர்கள் வியப் பெய்த நீண்டு பரிமளித்து நெய்த்து இருண்டு தாழ்ந்து பூங்கொத்துகளைப் பொருந்தி விளங் குகின்ற கூந்தலினையுடைய கோதாய்! இதோ நவரத்தினங்களை அழுத்திய சிங்காதனத்தில் வீற்றிருக்கும் இவ்வரசன் சந்திரவமிச சிகா மணி திரிதராஷ்டிரனுக்குச் சிரேஷ்ட புத்தி ரர் எல்லா அரசர்களும் பணிய விளங்கும் மஹாமண்டலேஸ்வர மகுடாதிபர் சத்துருக் களுடைய கீர்த்தியையும் பிராணனையும் தனது கதாயுத மென்னுஞ் சர்ப்பத்துக்கு இரை யாக்கி வீரலட்சுமிக்குச் சிங்காசனமாக விளங் கும் புஜங்களை யுடையவர். தனது தேசத் துள்ள குடிபடைகளின் கூட்டமாகிய உத்தி யானவனத்தைக் காக்கும் வித்தியாக்ஞான வித ரணர் ஒன்றுபத்தாகப் பொருளை வளர்விக்குந் தனரேகை பாக்கிய முடையவர். இவரது அழகையும் லட்சணங்களையும் உன் கண்களே யுனக்கு அறிவிக்கின்றன. இவர்தான் துரியோ தனனென்கிற பெயரினால் விளங்கிக் கொண் டிருக்கிற துரைராஜரம்மா.

ஓ நவக்கிரக சக்கரரேகை-சீமந்தரேகை- வடித்தெடுத்த முத்தலைச் சூலரேகை முதலிய வைகள் வாய்ந்து, மூவிரலகமாய் அர்த்த சந் திர வடிவங்கொண்டு பிரகாசிக்கின்ற நாதலினை யுடைய நங்காய்! இந்தத் துரியோதன மகா ராசனுடைய பக்கத்திலே பலிச் சக்கிரவர்த்திக் கருகிலிருக்கும் அசுரர்களைப் போல வீற்றிருக் கின்ற தொண் ணூற் றென்பது பேரும் தம்பி மார்கள் உருவத்தினாலுங் குணங்களினாலும் அந்தத் துரியோதன மகாராசருக்கே சமமான வர்கள். மகாவீரர் அண்ணனுடைய சொற் படி நடப்பவர்களம்மா.

ஓ வள்ளைத் தண்டினைப்போல நீட்சி யுற்று, மலரிதழினை யொத்து நற்சுழிகளை யுடையனவாய், கண்டவர்கள் உள்ளங்களித்து விளையாடப் பெறுகின்ற பொன்னூசலென்று சொல்லும்படியாக விளங்குஞ் செவிகளை யுடைய செல்வீ! இவர்களுள் அம்மகாராச னுக்கு அருகில் வீற்றிருந்து வணங்கிக்கொண் டிருக்கிறவர் துரியோதன ராசனுக்கு இளவர சாகிய தம்பி துர்ச்சாதனனென்று பேர் பெற்ற வர் கொடுமையிலும் வஞ்சனையிலும் அவ் வண்ணனுக்கு அண்ணனம்மா.

ஓ இரதிதேவியாலும் மன்மதனாலும் சந் திரனாகிய குடையின் கண்ணே வைத்த அவ ரின் வில்லிணையை யொத்து விளங்கும் இரு புருவங்களையுடைய பொன்னே! இதோ துரி யோதனனுக்குப் பக்கத்திலிருந்து பார்க்கிறவர் காந்தாரதேசத்து மன்னவனாகிய சௌபல மகாராசாவின் குமாரர் சகுனி யென்று பெய ருடையவர். இத் துரியோதனனுக்கு நல்லம் மான் வஞ்சனைச் சூதாடுவதில் இவர்க்கிணை யாய் எவர்களையுஞ் சொல்லப்படாதம்மா.

ஓ தெளிந்த நீலமணிபோலச் சிறப்புறக் கறுத்து, வெண்மை யொளி கொண்டு, இடை யிற் செவ்வரி பரந்து, நெருங்கிய கருமை வாய்ந்த மெல்லிய ரோமங்களைப் பொருந்தி விளங்குகின்ற நீண்ட விழிகளையுடைய நல்

லாய்! இவர் பக்கத்தில் துரியோதனனுக்குள திரிற் சீரிய சிங்கம்போற் கம்பீர வீரியமாக நிமிர்ந்து நோக்குகின்றாரே அவர் கர்னனென்று பேர் பெற்றவர். காளபிருட்ட மென்கிற வில்லைக் கைகொண்டு சரமாரி பொழியுங் காளமேகம் போன்றவர். கொடிய வறுமையால் வருந்துவோர்க்குக் கற்பகத் தருவனையவர். சவுரியத்திலுஞ் சரசத்திலும் இணையில்லாதவர். பரசுராமனிடத்தில் அஸ்திரவித்தை கற்றவர். சத்தியசந்தனர், மகா தேஜசுடையவர், தேகத்தோடு பிறந்த கவசகுண்டலங்களுடையவர் இவர் சூதகுமாரரென்று சொல்லப்படுகிறார். ஆகிலும் பெரியோர்கள் சூரிய வரப்பிரசாதரென்று ரகசியமாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார்களம்மா.

ஓ வசந்த காலத்திற் குரிய மன்மதனை வன் தன்னழகு நோக்குதற்கு நான்முகனால் உண்டாக்கப்பட்ட கண்ணாடிகளோ? அல்லது கண்களாகிய வாள்களைத் தீட்டுதற் பொருட்டு தங்கிய சாணைக்கற்களின் வடிவமோ என்று சொல்லத் தக்கதாய் விளங்குங் கபோலங்களையுடைய காந்தா! இவருக்கருகிற் கறுத்த தேகமும் நரைத்த சிரசுமாக யாகவேதிகையி லக்கினிபோலே விளங்காநின்ற மகா புருஷர் துரோணரென்று மூவுலகு மேறிய நாமதேயமுடையவர், சாதியைப்பற்றிய பிராமணத் தன்மையினாலும், தொழிலைப்பற்றிய க்ஷத்திரியத் தன்மையினாலும் நரசிங்கம்போல விசித்திரமான தேகத்தையுடையவர். சாங்கோபாங்கமாக வேதங்களுலாவும் பூம்பொழில் போன்றவர். அஸ்திரவித்தியா மகிமையே இவ்வுருவங்கொண் டவதரித்ததென் றுரைக்கத் தக்கவர் தபோபலக்கடலாகியவர் பரத்துவாசகோத்திர சிகாமணி கவுரவருக்கும் பாண்டவருக்கும் தனுர்வேத ஆசாரியரம்மா.

ஓ துளைகள் சிறுத்து, இருபக்கங்களுஞ் சற்றுயர்ந்து, எள்ளின் மலரையொத்து, இரண்டு மூன்றுதரம் அதிசயமுற மெல்லெனத் தும்மலன்றிக் கல்லெனப் பல காற்றும் மூதலில்லாத நாசியினையுடைய நாரீ! இதோ யிவர் பக்கத்தில் அலங்காரமாக விளங்கிக்கொண்டிருக்கிறவர் இவருடைய குமாரர். அஸ்வத்தாமரென்னும் பெயருடையவர் சாக்ஷாத் பரமசிவனுடைய அம்சத்தினாற் பிறந்தவர். மகா பலபராக்கிரமசாலி சகல சாஸ்திரங்களுங் கற்றவர். அஸ்திர சாமர்த்தியத்திற் பிதாவுக்குக் குறையாதவரம்மா.

ஓ மயிலிறகினடிகளையும் வெளுத்த தாளங்களையும் ஒத்து, முத்துக்களைப் பவளக் கிண்ணத்திலுள்ளே கோத்தல் செய்து சேர்க்கப்பட்ட கோவையைப்போன்ற தந்த பந்திகளையுடைய தையல்! அதோ கறுத்த பட்டுடுத்து, வெளுத்த திருமேனியுடனே இருண்ட கானகத்தா லிடையிற் சூழப்பட்ட கைலாசபர்வதம் போல் விளங்கிக்கொண்டிருக்கிற மகானுபாவர் யதுகுலமாகிய கடலுக்குப் பூரணசந்திரன் போன்றவர் பலராம னென்கிற திருநாமமுடையவர். வசுதேவரென்னும் மகாராஜனுக்கும் ரோகணி தேவியாருக்கும் உற்பவித்தவர் வடிவுகொண்ட பராக்கிரமரென்று சொல்லத் தகுந்தவர் யமுனை என்னும் மகா நதியைக் கலப்பையினால் தன்னருகிலிழுத்த வல்லமையுள்ளவர் பிரலம்பாசுர னென்னும் பஞ்சுக்குச் சுழற்காற்றுடன் கூடிய நெருப்பானவர். மகா விஷ்ணுவினுடைய சங்கிர்ஷணாம்சத்தா லவதரித்தவர். ஆதிசேஷாம்ச னென்றும் சில மகாத்துமாக்க ளுரைக்கின்றார்கள். ஜராசந்த னென்னு மகாவீரனை யுத்தத்தில் உயிரோடு பிடித்துத் தயவினாலே மறுபடியும் விட்டுவிட்டவர். வருணதேவனாலனுப்பப்பட்ட வாருணீ தேவியானவள் இவருக்கு வேண்டியபோது மதுவைப் பெருக்கிக் கொண்டிருக்கிறாள். இவருடைய சரித்திரமும் மகிமையும் பரிசுத்தமும் விசேஷமாகியதம்மா.

ஓ மத்தியில் ரேகையாமூது. மதாறக்கருகாது. இடைவிட்டிராது. மேலுங் கீழுமொத்து, சிவந்த அல்லிமலரையும் பவளத் துண்டையும் வெற்றிகொண்டு சிறப்பினை யடைந்த வாயினையுடைய வஞ்சி! இவரோடுகூட ஓராசனத்தில் வீற்றிருக்கும் நீல மணியினுண்ணிறத்தைக் கொள்ளைகொண்ட திருமேனியும், காலையில் மலர்ந்த செந்தாமரையைக் காய்ந்து விளங்கிய கரதலமும், சிறந்த செவ்வலரிகள் மலிந்த சுந்திர நேத்திரமுமுடைய அப்புருஷசிகாமணியானவர் இவருக்குத் தம்பி ஸ்ரீகிருஷ்ண சுவாமியென்று திருநாமத்தைப் பெற்றவர். தேவகீ தேவியினுடைய வயிறாகிய சிப்பிக்குக் கருவாகிய முத்தோடொத்தவர். ஸ்ரீ நாராயணனுடைய அவதாரமாகியவர். அசுரப் பெண்கள் மாங்கிலியக் கொடியின் வேரைக்களையும் சுவாலாமாலைகளைப் புனைந்த சக்கிராயுத மேந்தியவர் யோகிகள் தியானிக்கும் பரம்புருஷர். பூதனை முதலிய அனேக அசுரரைச் சிறுமைப் பருவ விளையாட்டினாற்

கொன்றவர். கோவர்த்தன மென்னும் குன்றேந்தி, இந்திரன் பொழிந்த கன்மாரி தடுத்துக் கோவலரைக் காத்தவர். கோவலர் நித்திரை பண்ணும்போது காட்டுத்தீ மூடிய காலத்துத் துன்பமில்லாமல் அத்தீயை விழுங்கினவர். கஞ்சனைக் காய்ந்த கடோற்புய பலமுடையவர். தேவ கன்னியர்களினும் அதிசயமுடைய கோபாலக் கன்னிகைகள் காதலிக்குஞ் சிங்கார வடிவினர். பரிசித்தக்கள்ளர். சவுரிய தயிரிய சாதுரிய காம்பீரிய முதலிய நற்குண மணிக்குக் கடலாயிருப்பவர். நச்சினார்க்குச் சிந்தாமணி. இவரது பெருமையை ஆதிசேடனும் பேசத்திறமில்லை. இவனுடைய நல்லத்தையின் மைந்தராவார் பாண்டவர்கள். அவருள் அருச்சுனன் இவர் சாயலைப்போலிருப்பவர். இவர் அவரிடத்தில் அதிக பட்சமுள்ளவரம்மா.

ஓ சிறந்த பவளத்துண்டுபோற் றிரண்டு, இருபக்கமுங் குவிந்து, அழகிய ரேகையொன்று பொருந்திப் பிரகாசிக்கின்ற கீழ்தரத்தோடு அதற்குமேற் சற்றுயர்ந்து வனப்பு வாய்ந்திருக்கின்ற மேல் தரத்தையுடைய மெல்லீ! இக்கண்ணனருகிலிருக்கும் வீரர் இக்கண்ணனுக்குத் தம்பி சாத்தியகி யென்னும் நாமமுடையவர் வில்வித்தையில் அருச்சுன ராசனுக்குச்சீஷர். பராக்கிரமத்தில் அவ்வருச்சுனனுக்குச் சமானமானவர். இவரைச் சூழ்ந்திருக்கிறபே ரெல்லாம் அந்த யாதவகுலத்துதித்த புண்ணிய புருஷர்களம்மா.

ஓ இருபகுப்பாதல் பள்ளமிசைதல் நீண்டு வளைதல் முதலியனவின்றி, இருவிரலளவில் வட்டமாய், தசையை யுடைத்தாய், எழில் கொண்டு இன்பந்தருவனவாகிய மோவாயினையுடைய முத்தே! இவருக்கு நேரிலே போசனத்தில் விளங்கும் வீரர், இக் கண்ணனுக்குரிய ஒரு அத்தையின் பிள்ளை. சேதி தேசத்தைக் காக்குந் திறல்மேவுந் தோளுடையவர். சிசுபாலனென்று பேர் பெற்றவர். முன்னே குண்டின நகரியில் தனக்கு மாலை சூடும்படி நிச்சயப்படுத்தியிருந்த உருக்குமணிதேவியை வலிமையினால் இந்தக் கண்ணன் கொண்டு போய் விவாகஞ் செய்துகொண்டதினாலே இக்கண்ணனிடத்தில் இவர் பகைநாட்டி இருக்கிறாரம்மா.

ஓ தாமரைப்பூவில் வாசஞ் செய்கின்ற பிரமன் சோடசகலைகளாலு நிறைந்த சந்திரனிடத்து நிரம்பிய உயர்வாகிய சாரத்தைத் தன் கையால் மொண்டு படைத்தானென்று சொல்லும்படியாக விளங்கு முகாரவிந்தத்தினையுடைய வனிதா! அவர் பக்கத்தில் ஆதனம் நிறைந்து விளங்கிக்கொண் டிருக்கிறவர் அவ்வுருக்குமணியினுடன்பிறந்தவர் விதர்ப்ப தேசத்தை யாள்பவர். உருக்குமி யென்கிற பேருடையவர். மஹாவீரர். இவரும் உருக்குமணியைக் கொண்டுபோகும்போது அபஜயப் பட்டபடியாற் கிருஷ்ணனிடத்திற் சிசுபாலன் போல் துவேஷம் வைத்தவரம்மா.

ஓ குறுகல் நீளல் பருத்தல் முதலியன வகன்று, கமுக மரத்தினை நாணச்செய்து, நான்கு அங்குலத்தோடு மூன்று நல்ல ரேகைகளைப் பொருந்தி அழகு நிறைந்திருக்கின்ற கண்டத்தினையுடைய கண்ணே! அதோ மணி மஞ்சத்தின்பேரில் உட்கார்ந்து மதத்த யானைபோல் இறுமாந்து பார்த்துக்கொண் டிருக்கிற மஹாராஜன் மலைக்கோட்டை சூழ்ந்துயர்ந்த மகததேசத்தின் மன்னவர் ஜராசந்தனென்று பேருடையவர் சொன்னசொற்றவறாதவர். இரண்டு தாய் வயிற்றிற் பிறந்தவர். பிரதாபக் களஞ்சியமாயிருக்கிறவர். இவருடன் பதினெட்டுத்தரம் போர்செய்து தோல்வியடைந்த பயத்தினாலே கிருஷ்ணன் மதுராபுரியைவிட்டு, நடுக்கடலில் தனதாக்கினையினாலே விசுவகர்மா நியமித்த துவாரகை யென்னு நகரத்தை யடைந்தாரம்மா.

ஓ கவிகை கூர்மம் வலம்புரிச்சங்கம் நவக்கிரக சக்கரம் துலாக்கோல் வச்சிராயுதம் நேமி முதலியவைகளைப்போன்ற சிறந்த ரேகைகளைப் பொருந்தி, முயல்வற்றினு மிருதுவாகி, செவ்வாம்பன் மலரைப்போற் பிரகாசிக்கின்ற அகங்கையினையுடைய அன்னே! அதோ இருக்கிறவர் மத்திரதேசத்து மன்னவர் சல்லியராஜனென்று பெயருடையவர் சத்தியவாதி சவுரியங் குடியிருக்கத் திரண்டுருண்டு நீண்டு விளங்கிய பாகுவுடையவர் நகுல சகாதேவர்கட்கு நல்லம்மானம்மா.

ஓ புடைபரந்து, மேலெழுந்து, நீலமணி சேர்த்ததற் கொப்பான சிலீமுகம் வாய்ந்து, இடை தோன்றாமல் நெருங்கி, பெருமை பொருந்திய மார்பினிட முழுவது நிறைந்து, தடையில்லாமற் பூரித்து, தம்மு ளிரண்டு மொத்து, இடையினை வருத்தி நிமிர்ந்திருக்கின்ற குசங்களையுடைய கொடியே! அவர் பக்

கத்தி லிருப்பவர் பகதத்த னென்று பெயரை யுடைய மகாவீரர் சமுத்திர நடுவிலிருக்கும் மாகிஷ்மதீ நகருக்கு அரசர் நரகாசுரனுடைய குமாரர். சுப்பிரதீபக மென்னும் யானையை வாகனமாக வுடையவரம்மா.

ஓ பயோதர மென்னும் பங்கய முகைக ளைத் தேடிவரும் வண்டு வரிசையையும், மேக லாபரணத்திற் பதித்த நீல மணியினது சுட ரையும், இடை யொடியாதிருக்க மன்மதனாற் சேர்க்கப்பட்ட சலாகையையும் ஒத்த வயிற்று மயிரொழுங்கினை யுடைய மணியே! இங்கிருப் பவர் வாசனை பொருந்திய மலரையும் சிறு பெண்கள் இழைத்த சிற்றில்களையும் பொன் னையும் மணியையும் அகிற் றுண்டங்களையும் வாரிக்கொண்டு அலைகளை மடக்குகின்ற தெள் ளிய நீரையுடைய காவிரிசூழ்ந்த சோணாட் டையாளு மரசரம்மா.

ஓ சிருஷ்டிகாலத்து நான்முகக் கடவு ளானவன் தன்கையினால் இடையைப் பிடித்த வளவிலே அவன் கைவிரல்க ளானவை அழுத்திவரை யென்று சொல்லும்படியாய் விளங்கி, மங்கைப் பருவமாகிய பெண் ஊன்றி ஏறுதற் கமைத்த சோபானங்கள் போன்ற வயிற்று மடிப்புகளையுடைய வாழ்வே! இவ ரோ தமிழமுதம் பெருகவைத்த பாண்டி நாட் டரசர் இவரதுதேசத்தில் தாம்பிரபரணி என் கின்ற நதியானது பாய்ந்து கடலில் விழுந்த உயர்ந்த முத்துக்கள் அகப்படுகிறபடியினாலே, முத்தணிமேனியரா யிருக்கின்றாரம்மா.

ஓரளவாகிய சரங்களையுடைய இரத்தின ஹாரங்களைப் பூண்ட இரண்டு தனங்களையுஞ் சுமத்தலால் வளைந்து நாடோறுந் தேய்ந்த தோ? அழகென்னுங் கடலு ளாழ்ந்ததோ? மன்மதனுடைய கண்ணேறுபட்டுக் கழிந்த தோ? அல்லது அங்க மில்லாதவனாகிய அம் மன் மதனேயோவென்று யாவருஞ் சந்தேகப் படும்படியான இடையினை யுடைய இறைவி! இதோ பசிய பொன்னாற் செய்த ஆசனத்தின் மத்தியிலே சூரியன்போல் விளங்குகின்ற அர சன், பாட்டுகளையுடைய வண்டுகள் பேட்டி னோடும் பெரிய அரும்புகளை விரித்துத்தே னைக் கொள்ளைகொள்ளும் தாமரைத் தடா கங்களையுடைய கொற்கையப்பதிக் கரசனாகிய சேரமானம்மா.

ஓ மன்மதனுடைய பச்சை கிளிகள் பூட் டிய ரதத்திற்கும் பிரமனால் வருக்கப்பட்ட சக் கரத்தையும் பொற்றட்டையுமொத்து, கானை யரது அவாவினதள்வாய் வளர்ந்து பரந்தி ருக்கின்ற அளவின் பரப்பினையுடைய அல்கு லைத் தாங்கும் அமுதே! இங்கே யிருத்தலைப் பெற்ற அரசனானவர் உம்முடைய கண்ணைப் போன்ற அழகிய குவளைமலர்கள் பூத்திருக் கின்ற வளப்பம் பொருந்திய மருத நிலத்தை யுடைய காசிதேசத் ததிபதியம்மா.

ஓ பெண் யானையினது செழிய துதிக் கரத்தைக் திரத்தி, பஞ்சினு மெல்லினு குணத்தை யுடையனவாகி, நவமணிகளாகிய மேகலையைப் போர்த்து, கன்னியரம்பையின் குலங்கள் யாவையும் வருத்தமில்லாமல் வென்ற துடைகளையுடைய தோகாய்! அதோ யிருக்கின்ற குரிசில் அலைகளால் ஒதுக்கிய முத் துக்கள் உம்முடைய பல்வரிசையைக் காண பிக்கின்ற அமைவினையும் பரிமளத்தையு முடைய துறைகள் சூழ்ந்து தெளிவுபொருந் திய நீரையுடைய கங்கை நாட்டினைக் கடவு ளருமெச்சக் கனிந்தாளுவோரம்மா.

ஓ அழகிய கருப்புவில்லை வளைக்கின்ற வசந்த காலத்திற்குரிய மன்மதனது பூவம்பு களால் நிறைந்த பொன்மயமாகிய அம்புக் கூடானது, கண்டவுடன் நாணிப் புறங்கொ டுக்கும் கணைக்கால்களையுடைய அம்மணி! இதோ வீற்றிருக்கின்ற கோமான் மெல்லிய தாமரை மலரையுடைய தடாகத்தினுள்ளே நீரைக்கலக்கி, மேகங்களினுடைய வயிற்றை நோக்கி வாளைமீன்கள் தாவுகின்ற அகன்ற வயல்களையுடைய குருத் தேசத்தினர்க்குச் சிங்கவேற்றை யொத்தவரம்மா.

ஓ பருத்திடலுஞ் சுருங்குதலு மில்லாமல் மிருதுவாகி, அனிச்சமலரின்மேல் வைப் பினுங் குழைந்து, கொடிரேகை மச்சரேகை முதலிய பல ரேகைகளைப் பொருந்தி, அழ கிய செந்தாமரை மலரை வென்று சிவந்தி ருக்கின்ற பாதங்களையுடைய திரௌபதா! அதோ ஆணிப்பொற் றகட்டணிந்து நவமணி கள் இழைத்த திவ்விய மஞ்சங்களிலே சிங் கங்கள்போற் சிறப்புடையரா யிருப்பவர்கள், அங்க வங்க கலிங்க காஷ்மீர முதலிய பல தேசத் தரசர்களம்மா.

### அருச்சுனன் வில்வளைத்தல்

ஓ பாஞ்சால நாட்டரசன் பாவாய்! இது காற் சொல்லிவந்த பலதேசத் திராஜர்களெல் லாம் மங்கையர்க்கு அரசாகிய உமது பொரு

ட்டே வந்திருக்கின்றனர். ஆயினும், இக் குறியையடித்து உம்மைக் கைப்பிடிக்கும் மகானுபாவர்களுக்கே மாலையிடக் கடவீரென்று தாதிகள்சொல்லி, திரௌபதியினுடைய இதய கலக்கத்தினைப் போக்கி உல்லாசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்க, துஷ்டத்துய்மன் மகாராஜனெழுந்து அரசர்களையெல்லாம் பார்த்து, ஓ இராஜாதி ராஜாக்களே! ஓ வீராதி வீரர்களே! ஓ தீராதி தீரர்களே! ஓ சூராதி சூரர்களே! சும்மாயிருப்பதேன்? வீண்காலம் போக்கவேண்டாம். தத்தம் சாமர்த்திய மகிமையாகிய தங்கத்தை இந்த வில்லாகிய உரைக்கல்மீ துரைத்துக் காட்டுங்கள் நமக்கு வேண்டிய பதினுயிர மாற்றுத் தங்கத்துக்கு எங்கள் கற்பகவல்லி விலையாக்கப்பட் டிருக்கிறளென் றுரைத்தான். அப்போது அங்கிருந்த மன்னவரெல்லாம் யான் முன்னே யான் முன்னே யென்று சிங்காதனங்களை விட்டெழுந்து, அவ்வவர்கள் பட்டபாட்டையுஞ் சிறிது சொல்லுகிறேன் கேளும்: சீதள சந்திர குலோத்துங்க தீரனாகிய ஜெனமேஜெய மகாராஜனே! சிலரோடி வந்து தனுசைப் பார்த்துத் தளர்ந்தனர். சிலரருகிற்சென்று வில்லைப் பரிசித்து ஊக்கமிழந்தனர். சிலரசைத்து மனமுடைந்தனர். சிலரெடுத்து நாண்பூட்டுவதை யொழித்துத் தைரிய மிழந்தனர். இப்படி யெல்லாம் பலவரசர்கள் அக்குறியடிக்குந் திறன் குறைந்திருப்பதையும் அப்பெண்ணின் துருவம் தங்கள் தங்கள் மனதைக் கவருந்திறன் உயர்ந்திருப்பதையும் நினைத்துப் பதைபதைத்து, முன்போல் ஆசனங்களிற் சென்றிருந்தார்கள். இப்பால் சல்லியமகாராஜன் வல்லியம் போல் எழுந்துபோய் வில்லை யசைத்து எடுத்துப் பாதிவரைக்கும் நாண்பூட்டி, அப்பால் தனக்கு நிர்வாகமில்லாத புல்லிய தன்மையினுற் றயங்கி அயர்ந்து ஆசனத்தி லுட்கார்ந்து விட்டான். அதைக் கண்ட ஜராசந்த மகாராஜனுனவன் நகைத் தெழுந்திருந்து, வில்லை யெடுத்து நிறுத்தி தன் முழுப் பலத்தினுலும் வளைத்து நாணியைமாட்டி, ஒருசாண் குறைவாகக்காட்டி அப்பாற் சக்தியில்லாமல் சல்லியன் முகத்தாமரை மலரும்படியாகத் தனது முகதாமரைத்துக்கொண்டு வந்தான்.

பின்பு துரியோதன மகாராசன் உச்சாகத்துட னெழுந்திருந்து, வீரகர்ஜனையுடனே வில்லை இலேசாக எடுத்து வளைத்து நாணியை மாட்டிப் பூட்டுவதற்கு நான்கு விரற்கடை குறைவாயிழுத்து அதன் பிகுவினுலே அவ் வில்லுடன்கூட ஆகாயத்தி லெழும்பித் தரையில் விழுந்து, உடம்பெல்லாங் காயமடைந்து தலையிறக்கமா யுட்கார்ந்து கொண்டான். அதற்குப் பின்பு அந்தத் துரியோதனனுக்கு உயிர்த்தோழனுகிய கர்னன் எழுந்துபோய் ஒருகையினுலே வில்லையெடுத்து, நாணை ஒரு கையினுலெடுத்து விற்குதைதயில்மாட்டி, மறு குதைக்கு ஒரு மயிரிழை குறைவாக இழுத்து அப்பாற் கூடாமையினுலே அப்படியே நிற்க, அதுகண்டு சபையிலிருந்தோ ரெல்லாம் கர்னன் வளைத்தான் வளைத்தா னென்று ஒருவரோடொருவர் பேசுதனு லுண்டான கோஷத்தைக் கேட்ட பாஞ்சாலராசன் மகள் வேர்த்து, அவன் முகத்தைப் பார்த்து இவன்றுனே அருச்சுனன்? ஆகிலும் இவனும் மகா தேஜசுடனே விளங்குகின்றுன். என்று நினைத்துக் கொண்டே யிருக்க, அக் கர்னனும் அந்தத் தனுசின் வலிமையினுல் தவறி விழுந்தவனுப் தலையிலிருந்த கிரீடத்தையிழந்து தன்னுதனத்தை யடைந்து நின்றுன். இவனைக் கண்ட மற்ற அரசர்களெல்லாம் ஓ! ஓ! இந்தக் கர்னன் முதலிய வீரரே இப்பாடு படுவார்களாகில், நமக்கிந்த முயற்சி தகாது. நாணையேற்றுவதற்குப் போனுல் அது நமக்கே நாணையேறிடச்செய்து நமது தலையை வணங்குவிக்கிறதென்று சோர்ந்து, இருந்தவிடத்து னின்றுமெழாமற் சும்மா யிருந்தார்கள். இப்படி ஒரு நாழிகைவரைக்கும் சபையானது அலையற்ற கடல்போலிருக்குஞ் சமயத்தில், அந்த வில்லை வளைத்தற் கெழுந்திருக்க நினைத்த பலதேவனைக் கண்ணன் கையமர்த்தி நிறுத்தி அருச்சுனனுக்கு கண் சைகை காட்ட அதையறிந்த அவரும் மற்ற யாதவப் பிரபுக்களும் குந்தி போஜரும் தாமிருந்தயிடத்தைவிட்டு யெழாமலிருந்தார்கள். சிலர் இப்பெண்ணுக்கொரு கும்பிடு இப்பெண்ணேடுதித்த இப்பெருவில்லுக்கொரு கும்பிடு யென்று சொல்லிப் போனுர்கள்.

இவர்கள் இவ்வாருகப் பிராமணர் கூட்டத்திற் பிரம்மசாரி வேஷமாய் நீறுபூத்த நெருப்புபோலிருக்கும் அர்ச்சுனன் எழுந்து, உற்சாகத்துடனே துஷ்டத்தூய்மன் முதலானேரை நோக்கி, ஓ மகாராஜர்களே! இரண்டாவது வருணத்தி லுதித்தோரே இக்கன்னிகையை மணஞ்செய்ய வேண்டுமா? அல்லது நீங்கள் ஏற்படுத்திய வீரிய லக்ஷயத்திற் கனே

தொடுத்தபேர் மற்ற எந்த வருணத்துதித்தோராயினும் அவர்களே மணஞ்செய்யலாமா? இதை நமக்கறிவியுங்களென்று கம்பீரமாகக் கேட்டான். அவ்வாறு கேட்ட மாத்திரத்தில் அச் சபையிலிருந்த பலரும் கலகலவென்று சிரித்தார்கள். சிலர் இந்தப் புருஷன் மிகவும் கெம்பீரமும் ஒளியையுமுடையவச்சிரதேகத்தை யுடையவனுகி உச்சிதமாகிய வாக்கும் இவனிடத்தில் காணப்படுகிறபடியால் இவன் கேட்கிறபடி வில்லை வளைத்து நாணேயிட்டுக் குறியை அடித்துத் திரௌபதியைக் கைப்பிடித்துக் கொள்ளுவான்போற் றோற்றுகின்றதென்று பேசிக்கொண்டார்கள். சிலர் இவனுக்கு ஏதோ ஒரு தேவதையின் அனுக்கிரகம் நேரிட்டிருக்கும். ஆதலால், இவ்வளவு தைரியமாகப் பேசுகிருன். எந்தபுற்றில் எந்தப் பாம்பிருக்குமோ யார் கண்டதென்று சம்பாஷித்துக்கொண்டார்கள். சிலர் பின் புத்திக்காரராகிய பார்ப்பாரக்குலத்தின னுகையாலும், இதுவரையிற் பிரமசரியத்தி லிருந்தவனுகையாலும், ஒருவேளை பெண் பைத்தியம் பிடித்திருக்கலாமென்று சொல்லினுர்கள். சிலர் இவன் சிறுபிள்ளையாகையால் இந்த ராஜகன்னிகையினிடத்தில் ஆசை வைத்துப் பேய்போற் பிதற்றுகிரு னென்றுர்கள். இவ்வாறு பலபல விதமாய் ஊகித்து யாவரும் உரையாடிக் கொண்டிருக்கையில், பாஞ்சாலராஜன் குமாரனுகிய துஷ்டத்தூய்மன் அந்தணன் கேட்ட வினவையும் அதற்கு அரசர்கள் ஊகித்துரைக்குங் கனவையும் யோசித்துணர்ந்து, இந்தப் பிராமணனிடத்தில் அப்படிப்பட்ட சக்தியிருந்தாலு மிருக்கலாம். இதற்குத் திருஷ்டாந்தம் முற்காலத்தில் பரசுராமரும் இக்காலத்தில் ஏதோயிருக்கிற துரோணுச்சாரிகிருபாச்சாரியார், அசுவத்தாமா இவர்களும் அசாத்தியமான காரியங்களையெல்லாம் முடிக்கவில்லையா? ஆகையால், சந்தேகமில்லை. இல்லாவிட்டா லிந்தச் சபையில் இவ்வளவு தைரியமாகப் பேசமாட்டான். நல்லது இந்த ராஜர்களில் இன்னுனுக்குச் சக்தி யிருக்கிறது, இன்னுனுக்குச் சக்தியில்லையென்றுயோசித்தா வில்லை வளைக்கச் சொன்னேம்? ஆகையால், நம்முடைய ஜாதிக்கு மேலான ஜாதியாகிய இந்தப் புருஷனும் போய் ஒரு கை பார்க்க வேண்டியதுதானென்று தந்தையுடன்கலந்து வார்த்தை பகர்ந்து, அந்த அருச்சுனனுகிய பார்ப்பாரப்பிள்ளையைப் பார்த்துக் கை கூப்பி இதனைச் சொல்லுகிருன்.

ஐயா! இந்த வீரியத்திற்கு க்ஷத்திரியரென்றும் பிராமணரென்றும் நியமமில்லை. உமக்குச் சாமர்த்தியமிருந்தாற் சுகமாய் நீர் போய் ஒருகை பார்க்கலாமென்று அச்சபையிலுள்ள சகல அரசர்களும் முனிவர்களுமறிய உரைத்தான். அந்த வார்த்தையைக் கேட்டு வந்த வேதியகுமாரன் முகமலர்ச்சியுடனே புன்சிரிப்புக்காட்டி, மதயானை குட்டிபோல் நடந்துபோய் முன்னொருகாலத்திற் பரமசிவ னேந்திய மேருகிரியென்னும் வில்லைப்போல அவ்வில்லை மகா சாகசத்தோடும் ஓர் கையாற் றூக்கிப் பிடித்தான். அதைத் திரௌபதைப் பார்த்து இப்போதுவந்த மகாபுருஷன் இந்த வில்லைக் கையிலேந்திச் சொலிப்பது இந்திர தனுசுடன்கூடின காளமேகம்போற் காணப்படுகிருன். எனது மனதின் தாபத்தைப் போக்கும்படியான சந்தோஷ மழையைப் பொழிவான்போலு மிருக்கிறதென்று சிந்தித்தாள். அப்படியே அந்த அருச்சுனப் பிராமணனும் அந்த வில்லை வளைத்து, நாணிபூட்டி ஓசைகாட்டி அம்பையெடுத்துச் சந்தானம்பண்ணிக் காதளவுமிழுத்து, இயந்திர ஸ்தம்பத்தின் அடிவாரத்தில் ஒரு கடாரநிறைய வைத்திருக்கும் மஞ்சள் நீரில் அக்குறி நிழலை பார்த்துக்கொண்டே ஆகாயத்தில் அம்பைத் தொடுத்து அந்த மச்சிய யந்திரத்தை யறுத்துவிட்டான். அந்த யந்திரம் மகா இரைச்சலோடு எல்லா வரசர்களுடைய மனமுஞ் சுழலும்படி சுழன்றுக்கொண்டு அவ்வவர்கள் கீர்த்தி யனைத்துங் கலங்கிக் கீழேவிழுந்த தன்மைபோல வீழ்ந்தது. உடனே அம் மாதுசிரோன்மணியாகிய ராஜகன்னிகையின் சிங்கார விரசப்பெருக்கினுல் குளிர்ச்சிபொருந்திய கண்களின் வீழ்ச்சியாகிய கருநெய்தற் பூமாலையும், அக்கன்னிகையின் கைத்தாமரையிற் பற்றியிருந்த சுயம்வரமாலையும், தேவர்கள் வருஷித்த கற்பகப் பூமாலையோடு இப்புருஷ சிகாமணி புயத்தின்பேரில் வீழ்ந்தன. அப்போது அந்த யந்திரம் சுழன்று சப்தித்ததைப் பார்த்த பார்ப்பனக் கும்புகளெழுந்து ஆர்ப்பாடனம் பண்ணினுர்கள். இவ்வாறுக அக்கன்னிகை அவ்வீர சூடாமணிக்கு மாலைசூடிய உடனே இராஜ சேவகருடைய ஜயஜய வென்னுங் கோஷ்டமும், இராஜ பந்துக்களுடைய எக்களிப்பும், வேதியருடைய ஆசீர்வாதமுழக்கமும், ஜனங்கள் ஆச்சரியப்படுகின்ற தொனியும், மங்கள்வாத்தியங்களுடைய ஆரவாரமும் அந்த அருச்சுனகுமாரன் கண்டத்தில் விளங்

கானின்ற மாலையின் மதுவைப் பானஞ்செய்து சுழன்றுக்கொண் டிருக்கிற வண்டுகளின் ரீங் காரமும் ஒன்ருய்க்கூடி, திக்குகள்தோறுமுள்ள சகல பிராணிகட்கும் செவிடுபடச் செய்தன.

அதுகாலையில் அந்தச் சபையிலிருக்கும் வேந்தர்களில் நற்குணமுடைய சிலர், இவ ஞரோ மகத்வபுருஷன்; வீராதி வீரன்; சூராதி சூரன்; இவனுக்குப் இப்பெண் மாலைசூடுவது நியாயந்தான்; என்று சந்தோஷித்தே யிருந் தார்கள். சிலர் பொருமைகொண் டிருந்தார் கள். திரௌபதை இந்தப் புருஷன் அருச் சுனனுகவே யிருக்கவேண்டு மில்லாவிட்டால் நம்முடன் கூடப்பிறந்த வில்லை வளைக்கத் தகுந்த திறமை மற்றையர்க் கிராது. மேலும், தேவவாக்குப் பொய்யாக மாட்டாது. அன்றி யும் நாம் அருச்சுனனுடைய ரூபத்தைக் கேட் டிருந்தபடி இந்தப் புருஷனுடைய உருவ மும் அளவும் அழகும் சரியாகத் தோற்றுகி றது. ஆதலா லிவனே அவன்; அவனே இவன் என்பதற்குயாதொரு சந்தேகமுமில்லை என்று மனதில் நிச்சயித்துக் கொண்டு சந்தோஷத் துடனே யிருக்க, அருச்சுனன் துஷ்டத்துாய் மனை நோக்கி, ஓய் மகராச குமாரனே! உம் முடைய நிச்சயத்தின்படி அந்த யந்திரக் குறியை இதோ கையிலேந்தி நிற்கிறேனுகை யால் உம்முடைய உடன்பிறந்தாளையும் கைப் பிடிக்கிறேன் என்று அந்தப் பெண்ணினு டைய கையைப் பிடித்தான். அந்தத் தோகை யும் மகா ஓசையுடன் புன்னகையா லொளிரா நின்ற முகமதியைக் கொஞ்சம் வணங்கிக் கொண்டு, ஆனந்தக் கண்ணீர் ததும்பத் தேகத் திற் புளகமுற்று, கடைக்கண்ணினுல் தன் கண வனை நோக்கிக்கொண் டிருந்தாள். இவ்வாரு கிய பொற்கொடியைக் கையிற் பிடித்துக் கொண்ட அருச்சுனன் தன் அண்ணன் தம்பி யர்களாலும் வேத வேதியர்களாலும் சூழப் பட்டு, மங்கள கோஷத்துடனே நல்ல சகு னங்களையும் கண்டு களித்துத் தன்னிடத்துக் குப் போகப் புறப்பட்டான். அதைத் துரியோ தனன் பார்த்து மிகவும் பொருமைகொண்டு, மற்ற வரசர்களை நோக்கி இதனைச் சொல்லுவ தானுன்.

### துரியோதனன் கலகப்போர் விளைத்தல்

ஓ இராஜகுலத்துதித்த இறைவர்களே! உங்களுக்கு ஆண்மையில்லையோ? நமது குலப் பெண்ணைப் பார்ப்பான் கொண்டுபோகப் பார்க்கலாமோ? இவ் வுலகத்துள்ள பொருள் களிற் சிறந்த ரத்தினப் பொருள்களா யுள் ளனவற்றை அரசர்களடைய வேண்டியது. அப்படிக்கிருக்க, இந்தத் துருபத மகாராஜன் வீணுய் ஒரு வீரிய லக்ஷயத்தை ஏற்படுத்தி, மகா ராஜர்களையெல்லா மவமதித்து, பிச்சைக் காரப் பார்ப்பானுக்குத் தனது பெண் ரத்தி னத்தைக் கொடுத்தானே இது நியாயமோ? அந்தப் பார்ப்பாரப் பயலும் என்னமோ மந் திரபலத்தினுல் அந்த வில்லை வளைத்துக் குறி யடித்தான். அதினுலே அவன் பராக்கிரமசாலி யாவானே? முன்பு வசிஷ்டர் தம்முடைய பிர மத்தண்டத்தினுலே விஸ்வாமித்திரனுடைய அஸ்திரங்களை யெல்லாம் தகித்து விட்டார். ஆனுலவர் சவுரிய முள்ளவரோ? அவ்விஸ் வாமித்திரனே மற்றொருபோது அநேக ஜந் துக்களைச் சிருஷ்டித்து நட்சத்திரங்களைத் தெற்கு வடக்காக மாற்றிப்போட்டு வேறே தேவேந்திரனையுஞ் சிருஷ்டிக்கிறே னென்று யத்தினப்பட்டான். அதனு லவன் பிரமதேவ னுவானே? ஆதலால் அவ்வவனும் தத்தம் புஜபல பராக்கிரமத்தினுலே காட்டுஞ் சவுரிய மன்றே சவுரியம்? எதோ இந்தப் பார்ப்பானை நாமெல்லாங்கூடி எதிர்ப்போம் வாருங்கள்! ஆண்மை யுண்டானுற் சண்டையிற் நம்மைச் சயித்துப் பெண்ணைக் கொண்டு போகட்டும் இல்லாவிட்டால் நம்மில் யாராவது அந்தப் பெண்ணை யனுபவிக்கட்டும். இந்தத் துருப தனும் சைனியத்துடனே எதிர்த்தாலுமெதிர்க் கட்டும் நாமெல்லாம் ஒருமித்துப் போவோம் வாருங்கள். இல்லாவிட்டால் நமக்கபகீர்த்தி நேரிடுமென்று மிகவு மாக்குரோஷத்துடனே அரசர்களைச் சேர்த்து, ஆயுதங்களையுஞ் சேனைகளையும் சன்னுகப் படுத்திக்கொண்டு, அந்த மணவாளனை எதிர்த்து யுத்தத்துக்குப் போனுன்.

அப்போது அர்ச்சுனனும் அந்தக்கன்னி கையைத் தமயனிடத்தில்விட்டுத் தன் கையில் தனுசெடுத்துக்கொண்டு ஓ மகாராஜர்களே! ஏன் கும்பலாக வந்தீர்கள்? இந்த லோகத் தின்கண் அனுபவித்த போகத்தில் விரக்தி பிறந்ததோ? அதனுல் சுவர்க்கலோக போகத் தில் மோகங்கொண்டு வந்தீர்களோ? வாருங் கள் யாவருங் கிடைத்தற்கரிய நற்கதியைச் சேருங்கள். இந்தாருங்கள் விரைவில் மோட் சந் தருகிறேன் என்று புன்னகையுடனே தானும் யுத்தத்துக்கு ஆயத்தப்பட் டிருக்கக் கண்ட ராஜாக்களெல்லாம் வியந்து, அடா

பார்ப்பாரப்பயலே! ஏன் வீணுய்க் கர்வித்துப் பேசுகிருய்? கெட்டுப்போகாதே பார் ஒரு நிமிஷத்துக்குள்ளே உன்னையும் உனக்குப் பெண் கொடுக்க விசைந்த ராஜாவையும் உயிரோடு பிடித்துக் காவலிற்போட்டு இந்தக் கன்னிகையை எங்களிலொருவனுக்கு விவாகஞ்செய்விக்கிறேம், இதில் உன்னுடைய மந்திரபலமொன்று முதவாது தப்பிப்பிழைக்க மனமிருந்தால் பெண்ணைவிட் டோடிப்போ, தைரியமிருந்தால் நில்லுக என்று வீரவாதஞ் செய்யக் கேட்டுப் பூசுரரெல்லாம் எழுந்து, அடடா! ஓ ராஜப் பயல்களே! முன்னெருபோது அரசர்குலத்துக் கெல்லாம் பரசுராமனுல் நேரிட்டவாபத்து உங்களுக் கிப்போது நேரிட் டிருக்கிறதென்று குடுமிகளைத் தட்டி முடிந்து, வேஷ்டிகளை இழுத்துக் கட்டி, பூனூல்களைக் காதிற்சுற்றி, சிலர் தர்ப்பாசனத்தையும் சிலர் வியாக்கிர ஆசனத்தையும் சிலர் கிருஷ்ணுசனத்தையும் சிலர் புத்தகங்களையும் சிலர் பஞ்சாங்கங்களையும் சிலர் பலாசத்தண்டங்களையும் சிலர் சமித்துக்கட்டுகளையும் சிலர் தர்ப்பைக்கட்டுகளையும் சிலர் கிழவர் தடிகளையும் எடுத்துக்கொண்டு, ஜாதியபிமானத்தால் யாவரும் நான்முன்னே என்றுவாயினுல்வந்த மட்டும்வைது, மாட்டு மாட்டு அவளம்மையையோழியென்று ஆக்கிரமித்துக்கொண்டு சண்டைக்குப் புறப்பட்டார்கள். அந்த இந்திர குமாரனுன அர்ச்சுனன், ஓ சுவாமிகாள்! உங்களுக்கிவ்வளவு வருத்தம் வேண்டா மிந்தப் பஞ்சைகளைச் ஜெயிக்க உங்களாசீர்வாத பலம் பெற்றிருக்கிற நான் ஒருவன் போதாதோ? ஆதலால் சிறுமைப் படாதீர்கள். அடியேனிடத்திற் கிருபை செய்து சும்மா யிருங்களென்று அவ்வேதியரை நிறுத்தி, தானெருவனே வில்வளைத்து நாணிபூட்டி நாணேசைகொண்டு, பாணங்களைச் சந்தானம் பண்ணிச் சத்துருக்கள் மீதிற் சரமாரி பொழிந்தான். அதினுலே மிகவுங் கோபமுங்கொண்ட கர்னராஜனுனவன் தானும் வில் வளைத்துப் பாணங்களை வருஷித்தான். அவைகளை யெல்லாம் அர்ச்சுனன் தடுத்து, தீக்ஷண்யமாகிய ஓரம்பைவிடுத்துக் கர்னனுடைய மார்பி லுருவும்படி செய்தான். அதனுலே கர்னனறிவழிந்து மூர்ச்சையடைந்து கீழேவிழுந்தான். அதுகண்ட சல்லியன் மிகவும் பராக்கிரமத்துடனே தனுசெடுத்து யுத்தத்திற்கு ஆரம்பிக்கும்போது, வீமசேனன் நாமிப்போது சும்மா யிருக்கக் கூடாதென்று சுயம்வரப் பந்தலின் ஸ்தம்பத்தைப் பிடுங்கிக்கொண் டெழும்பி வந்து, அந்தச் சல்லியன்போடுகிற அம்புகளையெல்லாம் நொறுக்கித் தள்ளி, சல்லியன் மார்பில் தன்னுடைய கையினுல் ஒரு குத்துக் குத்தினன் அந்தக் குத்தினுலே மந்திரராஜனும் பதைபதைத்துப் பிரமித்து மூர்ச்சித்துக் கீழே விழுந்தான்.

இதற்குள்ளே சூரிய குமாரன் மூர்ச்சை தெளிந்தெழுந்து, அகங்காரத்துடனே அர்ச்சுனனை நோக்கிப் புலிபோற் பாய்ந்து வந்து நான்கு சரங்களைத்தொடுத்துவிட்டான். அந்தச்சரங்களும் கோபமுள்ள கிருஷ்ணசர்ப்பங்கள்போலே சீறிக்கொண்டு வரக்கண்டு, பற்குணன் சீக்கிரத்தில் நான்கு மறுசரங்களாலே அவைகளைத் துண்டித்து, மறுபடியும் காளகூட விஷத்துக்குச் சமமாகிய ஒருபாணத்தைத் தொடுத்து அவன்பேரிற் பிரயோகித்தான். அந்தப் பாணமானது மார்பின்மேல் விழுந்த மாத்திரத்திலே கர்னன் கைகால்கள் வில்விலத்து நடுக்கமுற்று, ஒன்றுந்தோற்ருமல் விழுந்துவிட்டான். இதற்குள்ளே சல்லியராஜனும் எழுந்து, தன்னைக்குத்திய வீமனைக்குறித்துச் சிங்கம்போற்பாய்ந்து அவன் மார்பிற் குத்த வாரம்பித்தான். அப்போது வீமனும் லாகவத்தினுலே அவனுடைய இரண்டு கால்களையும் பற்றிக் கறகறவென்று சுற்றி நிலத்தின்பேரிலே வீசினுன். அதனுலே சல்லியன் உடம்பு முறிந்து, வேதனை பொறுக்கமாட்டாமல் தானும் கர்னனும் தலைவிரி கோலமாய் ஒருவர்போனவழி யொருவர் போகாமல் ஓடிப்போனுர்கள். இச்சம்பவங்களைக் கண்ட மற்ற மன்னவர்க ளெல்லாந் திப்பிரமைகொண்டு, மிகவும் சமர்த்தரான இவர்களே நிற்கமாட்டாமல் ஓடினுர்களே ஆ! ஆ! என்ன காலம்! ஆ! ஆ! என்ன ஆச்சரியம்! இந்தப் பார்ப்பாருடைய பராக்கிரமத்தைப் பார்த்தீர்களா என்று சொல்லிக்கொண்டு தாங்களும் ஓட வழிபார்த்தார்கள். துரியோதனன் மாத்திரம் கோபத்தினுலும் மானத்தினுலும் பொருமையினுலும் வெட்கத்தினுலும் மனதில் கலக்கமுற்று, இப்போது நாமிந்தப் பூசுரரை வெல்லாமற்போவதைக்காட்டிலும் பிராணனை விடுவது மேலானதென்று பிடிவாதத்துடனே ஓடிப்போகிற வேந்தர்களை யெல்லாமடக்கி, திரும்பிப் போரிடுவதற்குத் தகுந்த ஆலோசனைகள் செய்துகொண்டு சித்தமா யிருந்தான். அப்போது ஸ்ரீ கிருஷ்ணசுவாமியானவர் ஒரு

பிராமணன்போலே வேஷங்கொண்டு, துரியோதனனிடத்துக்கு வந்து ஆசீர்வதித்து இதனைச் சொல்லுவதானார்.

ஓய் ராஜாதிராஜனே! நீர் ஏன் வீண் பிரயாசைப்படுகிறீர்? நாங்களு மிவ்வளவு காலம் ஏன் வருத்தப்பட்டோம் கடைசியில் விசாரிக்கிறபோது அவர்கள் பிராமணரல்லர் க்ஷத்திரியர்தான். அந்த வில்லை வளைத்தவன் அர்ச்சுனனும். சல்லியனைக்குத்தியவன் வீமசேனனும். இது நீரறியும் வெளிவிடாதேயுமென்று சொல்லிக் கும்பலில் மறைந்துவிட்டார். அது கேட்டுத் துரியோதனன் ஆச்சரியமடைந்து, மற்ற ராஜாக்களுக்கும் இதைத் தெரிவித்து, உயுத்தப் பிரயத்தினத்தை நிறுத்தி, பாண்டவர்களை நாம் அரக்குமாளிகையிற் கொளுத்தி அவரெலும்பையும் சாம்பலையும் கங்கையிற் கரைத்துப் போட்டுவிட்டோமே மறுபடியும் பாண்டவர்கள் வந்தவிதமென்ன? இது மகாவதிசயமா யிருக்கிறதே எனக்கும் அவர்களுடைய ரூபத்தைப் பார்த்தால் அப்படியே தோற்றுகிறதே காரியத்தை நிதானிக்கு மிடத்திற் சந்தேகப்பட வேண்டியதில்லை யென்று சொல்ல மற்றவரும் சரிதானிதுவென்று பேசிக்கொள்ள, இன்னு மிதை நன்றாயறிய வேண்டுமென்று எல்லாருமா யோசித்துத் தங்கள் நகரம்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு அர்ச்சுனன் தனது அண்ணன் தம்பிமார்களுடனே சேர்ந்து, சூழ்ந்துவருகிற பிராமணரைப் பார்த்து, சுவாமிகளே! எங்களுடைய தாயார் இங்கோரிடத்தி லிருக்கிறாள். அவளை நாங்கள் அழைத்துக்கொண்டு வருகிறோம் நீங்கள் உங்களுடைய இடங்களுக்குப் போங்கள் என்று அனுப்பிவிட்டுத் தங்களுடைய புரோகிதராகிய தவுமிய முனிவருடனே சிறிதுநேரம் தனித்துப்பேசி, அவரையும் போகவிடுத்துப் பார்க்கவனென்கிற குயவன் வீட்டுக்குள் சென்றார்கள். அப்போது பாஞ்சாலன் அர்ச்சுனனுக்குப் பெண்பெற்ற சரித்திரம் தமது தாயாகிய குந்திதேவியாருக்குத் தெரியுமென்கிற நிச்சயத்தினாலே, உள்ளே போகிறதற்கு முன்னமே அம்மா நாங்களொரு கனி கொண்டுவந்தோமென்று விளம்பினார்கள்.

அதுகேட்ட குந்திதேவி வெளியில் வந்து பாராமலே அந்தக் கனியைத் தேவாமிர்தம்போல் ஐவரும் புசியுங்கள் என்றுரைத்து உடனே வெளியில் வந்து பார்த்து, அர்ச்சுனன் பக்கத்தில் இரதிதேவிபோல் ஒரு கன்னிகை நிற்பதைக்கண்டு, ஓ! ஓ! நமது மக்கள் சொல்லியது இந்தக் கன்னிகைதான் நாம் கனியென்று யோசித்துப் பதறி ஐவரும் புசியுங்களென்று சொல்லிப் போட்டோம். இவர்களோ தாய் சொற்றவறாத சத்திய சீலர்களாய் இருக்கின்றவர்களாச்சே என்று சிந்தாக்கிராந்தையாய் நிற்க, அதுகண்ட ஐவரும் அம்மா! நீ யேன் கவலைப்படுகிறாய்? எம்மில் அர்ச்சுனனொருவனால் இக்கன்னி கிடைத்தாளாயினும், தாய் எவ்வாறு ஆக்ஞாபிப்பாளோ அவ்வாறு நடந்து கொள்ளுவோமென்று நாடிச் சொன்னோ மென்றார்கள். அம்மொழி கேட்டதாய் ஒருத்தியை ஐவரும் விவாகஞ் செய்வது தகாதே யென்று சிந்தித்தாள். உதிஷ்டிரர் தாயினது முகக்குறியைப் பார்த்து, அம்மா! நீ சிந்திக்கவேண்டாம் விதியின் பயன் உன் வாக்கினால் இப்படி சொல்லிவைத்தது இதற்குக் காரணமேதோ இருக்கிறது. இதன்றியும், இந்தக் கன்னிகை யிடத்தில் எங்களைவர்க்கும் மனஞ்சென்றது கூடாத விஷயத்தில் அப்படி மனஞ் செல்லாது. ஆதலால், இப்போது அதைக்குறித்து நாம் பலவாறாக விவரிப்போமாகில் அர்ச்சுனனுக்கு மனக்கவலை யுண்டாகுமென்று பின்னும் பல தருமங்களைச் சொல்லித் தாயார் பாதத்திலே வணங்கினார். அந்தத் துருபதமகாராஜன் மகளும் மாமியின் பாதங்களில் தண்டனிட்டு நின்றாள். அந்தக் குந்திதேவி மக்களுக்கும் மருமக்களுக்கும் நெடுங்கால நின்று நன்று வாழக் கடவீரென்று வாழ்த்திச் சுயம்வர மண்டபத்தில் நடந்த சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

அந்தச் சமயத்திலே ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் பலராமன் முதலாகிய தம்மினத்தினரை நோக்கி, கேட்டீர்களோ! இந்தச் சபையில் வில்வளைத்த பிராமணன் அருச்சுனனும் சல்லியனோடு போர்செய்தவன் வீமசேனனும் இவர்களோடு பிரியாமலிருந்த மற்ற மூன்று பேரும் உதிட்டரன் - நகுலன் - சகாதேவனும் நம்முடைய அத்தை குந்திதேவியும் இவர்களும் மேலண்டைத்தெருவில் ஒரு குயவன் வீட்டிலிருக்கிறார்களாம். இப்போ நாம் வருகிறபோது எனக்கு ஒரு பெரிய பிராமணன் வந்து சொன்னான். ஆகையால், அவர்கள் அரக்குமாளிகையினின்று எப்படியோ தப்புவித்துக் கொண்டதாய்க் காண்கிறது. அவர்

களை நானும் அண்ணாவும் விசாரித்து வருகிறோம் என்று சொல்லிப் புறப்பட்டு அந்தக் குலாலன் கிரகத்துக்குவந்து மொட்டைப்பாப் பாத்திபோலிருக்கிற தங்களத்தையைக் கண்டு பரிவுடனே தெண்டனிட்டுக்கொண்டு, மைத்துனர்களோடுந் தக்கபடி யுபசரித்து வார்த்தையாடினார்கள். பின்பு கண்ணனும் பலராமனும், அம்மா அத்தாய்! உங்களுக்கும் என்ன கஷ்டகாலம் வந்தது? ஆ! ஆ! எப்படி தப்பினீர்கள்? தெய்வாதீனம் உங்களைத்தொடர்ந்த சனிதொலைந்தது. இனி மேன்மேலும் உங்களுக்கு க்ஷேமந்தான் என்று காணுதுகண்டது போற் கண்ணீர் த்ததும்பக் குழைந்து பேசினார்கள். அப்படியே குந்திதேவியும் பாண்டவாளும், ஓ சற்குணவான்களே! மறுபடியும் உங்களைப் பார்க்கப் பாக்கியமிருந்தது; நீங்கள் யாவரும் க்ஷேமமாயிருக்கிறீர்களா? என்று கண்ணீர் மல்க ஆதரத்துடனே பரிந்து பரிந்து பேசினார்கள். இப்படி யொருவரை யொருவர் க்ஷேமவிசாரணை பண்ணிக்கொண்டு சற்றே சும்மாயிருந்தபின், கண்ணன் பாண்டவர்களைப் பார்த்து, அந்த அரக்குமாளிகையினின்றும் எவ்வாறு தப்பினீர்கள்? அதைச் சொல்லுங்கள் என்று கேட்க, அந்தச் சரித்திரத்தையெல்லாம் ஆதிமுதல் நன்றாய் விவரித்துச் சொன்னார்கள்.

பின்பு கண்ணனுக்குச் சந்தோஷம் பிறந்து, இந்தப் பெண் நேரிட்டது சத்துருக்களுடைய நாசத்திற்கும், இனி உங்களுக்கு இராச்சியலட்சுமி விலாசத்திற்கும் இடமாக இருக்கிறது. இனி அஞ்சவேண்டாம். கலியாணம் நடக்கிறவரையில் உங்கள் சுயரூபத்தைக் காட்டாம லிருங்கள் என்று சொல்லித் தாங்கள் போவதற்கு விடை பெற்றுக்கொண்டு யாதவதிலக ரிருவரும் தங்கள் பரிவாரங்களுடனே பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். இப்படியிருக்க அந்தப் பாஞ்சாலதேசத் தரசனாகிய துருபத மகாராசன் மெத்தவும் நைந்து, நாம் நினைத்த நினைவு வீணாச்சுதே; பெரியோர்கள் வாக்கும் பொய்த்துப் போகுமோ? ஒருக்காலும் போகாதே; என்று மனதிற் சற்றே சஞ்சலித்துத் தன் புத்திரனைக் கூவி, ஓ குழந்தாய்! நம்முடைய பெண்ணைக் கைக்கொண்டவன் அருச்சுனனென்று ஒரு வதந்தி யுண்டாயிருக்கின்றது. அப்படியே யிருக்கலாம். தெய்வத்தின் சங்கல்பம் வீணாகிறதில்லை வேத மூதலியவைகளை யுணர்ந்த பெரியவாள் பேச்சு பொய்க்கிறதில்லை. ஆகையால், நீ அவர்களிறங்கி யிருக்கிற விடத்துக்கு வேறு அவேஷத்தோடு போய் அறிந்துவா என்று சொல்லிய பிதாவின் வசனத்தைத் துஷ்டத்தூய்மன் சிரசில் தரித்துக்கொண்டு, ஒரு பரதேசிபோலே வேடம் பூண்டு, அந்தக் குலாலன் வீட்டுக்குப் போய் அங்கே இந்த ஐந்து பேர்களுடைய அளவு ரூபம் லட்சணம் தொனி முதலானவை களை நன்றாய் நிதானித்து, அவர்களுடைய வார்த்தையையும் நடக்கையையும் ஈன்றாளிருக்குஞ் செயற்கையையும் பார்த்துத் தன் பிதாவினிடத்தில் வந்து, அண்ணா! அவர்கள் அடையாளங்களை யெல்லாம் நன்றாய் நிதானித்துப் பார்த்தாற் பாண்டவாள்போற் காண்கிறது. அவர்களுடைய தாயாரொருத்தி யிருக்கிறாள். அவள் குந்திதேவி போலே தோன்றுகிறது. சந்தேகமில்லை இங்கே வில் வளைத்த காளையும், அரசர் சண்டைக்கு வந்தாற் பந்தற்காலைப் பிடுங்கிக்கொண்டு பாய்ந்த தெண்டு பார்ப்பானும், வீதியிற் சென்று பிட்சை யெடுத்து வந்து தாயினிடத்திற் கொடுத்தார்கள். அதை அவள் இரண்டு பங்காக்கி, ஒரு பங்கை அந்தகெண்டு பார்ப்பானுக்குக் கொடுத்து, மற்றொன்றை நான்கு பங்காக்கி, மற்ற நால்வருக்குங் கொடுத்து, துணியிலொட்டிய சோற்றைச் சிதறாமலெடுத்து இரண் டுருண்டையாக்கி அவைகளை நம்து குலக்கொடியாகிய மருமகளுக்கு மிட்டுத் தானும் புசித்தாள். ஆனால் நம்முடைய பெண் மகாசுகத்தை யனுபவித்தவள். ஆயினும் ஏதோர் வறுமையாளராகிய அவர்களுடனே மனங் கோணாமல் இசைந்திருக்கிறாள் என்று சொல்லக்கேட்ட துருபத மகாராசன் மிகவும் சந்தோஷமடைந்து, அவர்கள் பாண்டவர்களேயாகில் நம்முடைய மகள் மகா பாக்கியமுடையவள். தரித்திரமிருந்தா லிருக்கட்டும் அதை யலட்சியஞ் செய்யத்தக்கதன்று நமதுமகளும் அக் குறிப்பறிந்தே சந்தோஷத்துடனே இல்லாமையைப் பொறுப்பதாய்க் காண்கிறது. ஆகையால், இந்தச் சங்கதியை நன்றாய் விசாரிக்கவேண்டுமென் றெண்ணி ஒருபாயஞ் செய்வதானான்.

அஃதென்னவென்றால், வேதியர்க்குள் மிகவுஞ் சமர்த்தரான ஒருவரை அழைத்து, நீர் போய் அவர்கள் பாண்டவர்களா? வேறு மதம் பூண்டவர்களா? அதை விசாரித்துவர வேண்டுமென்றான். அந்தப் பிராமணோத்த

மனும் அங்கு சென்று அவர்களால் நமஸ்கரிக்கப்பட்டு, தானுந் தக்கபடி மரியாதை பண்ணி, மகானுபாவரா யிருக்கின்ற நீங்கள் யார்? உங்களுடைய சவுரியமும் புத்தியும் சாமர்த்தியமும் நிகரில்லாதவைகளா யிருக்கின்றன. ஆகையால், உங்களை யோசித்தாற் பிராமணாள் அல்லவென்றும், க்ஷத்திரியர்கள் தானென்றும் தோற்றுகிறது. உங்கள் ரூபத்தைப் பார்த்தாற் பாண்டவாளுடைய ரூபம் போலிருக்கிறது. மகாராசாவும் இப்படியே சங்கித்து உங்களுடைய குலத்தை அறிய வேண்டுமென்று நினைத்திருக்கிறார். எனக்கும் அதை யறிவதற்கு குதூகலமிருக்கின்றது. ஆதலால் என்னுடைய மனதுக்குத் திருப்திசெய்ய வேண்டுமென்று கேட்டார். அதற்குத் தருமபுத்திரன் சுவாமி! கொண்டு குலம்பேசப் போமா? கொடுத்துக் குறை கேட்கலாமா? மகாராசாவுக்கு எங்கள் குலகோத்திரங்களை விசாரிக்கவேண்டிய காரியமில்லையே. அவர் மகா புத்திமானாச்சுதே அப்படியேன் நினைக்கிறார்? மகா புத்திசாலியும் யோகிகளுமாகிய நீங்கள் எங்களை இப்படிக்குக் கேட்கலாமா? சிலேட்சையாக உத்தரஞ் சொல்லக்கேட்ட அந்தப் பூசுரரும் சரிதானென்று இராஜனிடத்திற்கு வந்து இந்தச் சங்கதி யனைத்தையுந் தெரியப்படுத்தினார். அந்த வார்த்தையை மகாராஜா கேட்டு, இந்த மொழியினாலே அவர்கள் பாண்டவர்களென்றே சித்தமாய்த் தோன்றுகின்றது. ஆகிலும், இன்னும் நன்றாய்ப் பரிசோதிப்போம் என்று தன்னுடைய மந்திரிகளை அழைத்து, ஓ அமைச்சர்களே! இந்தட்சணம் நீங்கள் நமது காவலிலுள்ள தேர் குதிரை யானை பல்லக்கு முதலான வாகனங்களையும், வில்-வேல்-கத்தி-தடி - வாள்-கதை இவை முதலாகிய ஆயுதங்களையும் பலவித ஆபரணங்களையும், நல்ல நல்ல வஸ்திரமான வஸ்திரங்களையும், அறுசுவை போசன பதார்த்தங்களை யெடுப்பித்துக்கொண்டு நமது குமாரனுடனேபோ யிவைகளையெல்லாம் நான் வரிசையனுப்பியதாகச் சொல்லுங்கள் அவர்களதை யங்கீகரித்து அணிந்துகொண்டபின், வாகனங்களின்மீதிலேறி தாயாருடனே நம்முடைய மாளிகைக்கு ஒருதரம் வந்து என்னைப் புனிதனாக்க வேண்டுமென்று நான் சொன்னதாய்த் தெரிவித்து அழைத்து வாருங்களென்று அனுப்பிவைத்தான்.

அப்படியே அந்த ராஜகுமாரனும் மந்திரிகளும் அவ்வரிசைகளை யெல்லாம் சகல மங்கள வாத்தியங்களுடனே கொண்டுபோய், மிகுந்த மரியாதையுடனே பாண்டவர்களைப் பார்த்து, ஓ ஐயமீர்! எங்கள் தகப்பனார் தங்களுக்கு வரிசை அனுப்பிவைத்தார். இவைகளைத் தயைசெய்து அங்கீகரித்துத் தகுந்த ஆபரணங்களுந் தரித்து, வாகனங்களிலேறிக்கொண்டு தங்கள் தாயுடனே எங்கள் கிரகத்துக்குவரும்படி பிரார்த்திக்கிறார். நீங்கள் அப்படியே தயைசெய்ய வேண்டுமென்று கைகூப்பிச் சொல்ல, தருமநந்தனன் நல்லது பாக்கியமாச்சுதென்று அரசர்க்குரிய ஆடையாபரணங்களையும் ஆயுதங்களையுந் தரித்து, தேர்களின்மீது ஏறி; தாயாரையும் ராஜகன்னிகையையும் அலங்கரித்துச் சிவிகையில் ஏற்றிக்கொண்டு, சகல பரிவாரங்களுஞ் சூழச் சென்று அரண்மனையிற் பிரவேசித்தார். அப்போது துருபதமகாராஜன் அவர்களை எதிர்கொண்டு மகா உபசாரத்துடனே தனது கொலுச்சபைக்கு அழைத்துப்போய் ஆதனங்களி லிருக்கவேண்டுமென்று சொல்ல, அவர்களும் அவனிட்ட ஆதனங்களிலே உட்கார்ந்தார்கள். இராஜ பத்தினியாகிய கோகிலா தேவியும் பந்து வர்க்கத்தாரும் எதிர்வந்து, தன் மகளையும் குந்தியையும் அந்தப்புரத்துக்கு அழைத்துக்கொண்டு போய் மரியாதையுடன் உபசரித்தார்கள். மகாராஜாவானவன் இவர்களுடைய செய்கைகளினாலே பாண்டவாளென்றே மனதில் நிச்சயித்து அவர்களைப் பார்த்து, நான் நெடுநாட் செய்த தவத்தினாலே இப்படிப்பட்ட உத்தமர்களுடைய சம்பந்தம் எனக்கு கிடைத்தது. தன்னியனானேன் இதற்கு மிஞ்சிய பாக்கிய மற்றொன்றுமில்லை. ஆனால், இந்தப் பெண்ணை இந்த அர்ச்சுனனுக்குக் கொடுக்க வேண்டு மென்று அக்கினியின் அனுக்கிரகத்தாற் பெற்றேன். உங்களுக்கு அரக்குமாளிகையின் மூலமாய் விபத்து வந்ததென்று கேள்வியுற்றுச் சஞ்சலப்பட்டுக்கொண் டிருக்கும்போது அசரீரி வாக்கினாலே நீங்கள் பிழைத்திருக்கிறீர்களென்று தெரிந்து, வேதவியாசராற் கடினமான இந்த லக்ஷயத்தை ஏற்படுத்திச் சுயம்வரத்துக்குச் சகல ராஜாக்களையும் வருவித்தேன். ஒருவராலும் ஆகாமற் போன அந்த யந்திரபேதத்தை உங்களில் இவர் நிர்வாகஞ் செய்ததினாலே ஆச்சரியத்தை யடைந்து, உடனே தெய்வத்தின் வாக்கு சத்தியமென்று நம்பி, நீங்களே பாண்டவர்களாக யிருக்கவேண்டு மென்று எண்

ணிக் கொண்டேன். ஆகிலும், ஸ்திரமாய்த் தெரியாமையாலே சித்தங் கலங்கி இருக்கின்றது. நீங்கள் தயை செய்து இந்தச் சந்தேகத்தை நீக்கினால் தெய்வத்தின் மெய்மையையும் பொய்மையையும் நிச்சயம் பண்ணிக் கொள்ளுவேன் என்று கேட்டான்.

இவ்வாறு சொல்லிக் கேட்ட பாஞ்சாலனுடைய வார்த்தையின் நயிச்சியத்திற்குஞ் சாதுரியத்திற்கும் பாண்டவர்கள் மெச்சிச் சந்தோஷித்து உதிட்டிரர் புன்சிரிப்புடனே சொல்லுவார்: வாரீர் மஹாராஜனே! புத்திமானுகியும் சத்திய சந்தனுகியும் இருக்கின்ற உம்முடைய எண்ணம் வீணுகுமோ? தெய்வத்தின் அருட்பழுதாகுமோ? உமக்கேன் மனதிற் கவலை? இனி அக்கவலை விட்டுவிடென்ருர். அதுகேட்ட பாஞ்சாலன் அரிய பேறுபெற்றதுபோல் ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்து, விழிகளில் ஆனந்த பாஷ்பம் பெருகி, உடலில் ஆனந்தமாய் மயிர்க்குச்செறிய, அவர்களைக் கட்டிக்கொண்டு ஒரு க்ஷணநேர பரியந்தம் ஒன்றும் பேசாமற் பிரமானந்தமயமாய் ஸ்தம்பித்து நின்று, ஓ என் பிராணனேடொத்த இராஜகுமாரர்களே! உங்களுடைய நிஜமான வடிவைக் காண்பிக்க வேண்டுமென்று துரிதப்படுகிறேன் கோபிக்காமல் என்மீது தயை செய்யுங்களென்று கைகூப்பிப் பிரார்த்தித்தான். அவர்களும் வியாச முனியை மனதில் சிந்தித்து மந்திரத்தை யுச்சரித்த மாத்திரத்திலே, சத்தியமான ரூபங்கள் வந்து விளங்கினுர்கள். எதார்த்தமாக அப் பாண்டவர்களைக் கண்ட அந்தப் பாஞ்சாலனும், அவனுடைய புத்திரன் முதலானவர்களும், மகா சந்தோஷத்தோடு நேத்திரோற்சவ மடைந்தார்கள். அப்பாற் பாஞ்சாலன் தருமபுத்திரனை நோக்கி, இனி விளம்பனம் வேண்டாம் உம்முடைய தம்பிக்குக் கலியாணத்தைக் குறித்துச் செலவு கொடுக்கவேண்டுமென்று கேட்க, உதிஷ்டிரர் ஓய் மஹாராஜனே! உம்முடைய பெண்ணை நாங்களைவரும் விவாகஞ் செய்யும்படி தெய்வ காரணத்தினுல் எங்கள் மாதாவின் வாக்குண்டாயது. அது தவறக்கூடாது என்று சொல்லக் கேட்டு இஃதென்ன ஆச்சரியம்? சகல தருமங்களு மறிந்தவரே இப்படிச் சொல்லுகிருர். உலோகத்தில் இல்லாத காரியமா யிருக்கிறதை நாம் எப்படி நடத்தலாம்? என்று மறுபடியும் வியாகுலத்துடனே துருபதேயன் ஏங்கியிருந்தான்.



சகல மஹா ரிஷிகளுக்கும் சிரபூஷணமாகிய வியாசபகவான் கருக்கொண்ட மேகம் போன்ற திருமேனியும் செந்நிறமுள்ள சடா முடியும் பொன்னிறமான தேஜசும் வெண்ணிறமுள்ள விபூதி தூளிதமும் புள்ளிநிறமுள்ள மான் தோலாடையுமாய், சூரிய கிரண மேற்றிசையிற் பரவியிருக்கக் கீழ்த்திசையிலிருக்கும் உதயகிரிபானுவைப்போலும் விளங்கித் தபோமகிமையாற் பிரகாசித்து, தண்டு கமண்டலமீதியுடனே அந்தப் பாஞ்சாலனுடைய சபையி லெழுந்தருளினுர். அவர் எழுந்தருளியதைப் பார்த்த பாஞ்சால ராஜனும் பாண்டவர்களும் எழுந்து, அவர்பாதங்களில் விழுந்து, அவரால் ஆசீர்வதிக்கப்பட்டு, அவரை அழைத்துப்போய் ஆசனத்தி லுட்கார வைத்து, அவரனுமதியினுலே தாங்களும் உட்கார்ந்தார்கள். பின்பு வியாசபகவான் ஓர் க்ஷணகாலம் க்ஷேமவிசாரணை செய்து ஓய் பாஞ்சால ராஜனே! உம்முடைய மனதிற் சந்தேகப்பட வேண்டியதென்ன? திரௌபதிக்கு ஐந்து புருஷர்கள்தான் நேமிக்கப்பட்டிருக்கிருர்கள். குந்திதேவி வாக்கினும் அப்படியே வந்திருக்கிறது இப்பாஞ்சாலிக்கும் இவ்வைந்துபே ரிடத்திலும் மனதுண்டு. இவர்களுக்கு மவ்வாறே சம்மதி. ஆனுல், அது இந்தச் சனனத்தைப் பற்றியதல்ல, முற்சனனத்தைப்பற்றிய தாகையால் அது சங்கதி உமக்குக் கேட்க மனதிருந்தால் விளம்புவேன் என்று அரசனைத் தனியே அழைத்துப்போய் அந்தச் சங்கதியைச் சொல்லத் தொடங்கினுர்.

### வியாசர் பாஞ்சாலனுக்குத் திரௌபதி பூர்வ சனன வரலா றுரைத்தல்

ஓ அரசனே! முற்செனனத்தில் இத் திரௌபதி நளராஜனுடைய மகளாய்ப் பிறந்து நளாயினியெனப் பெயருடையவளாகச் சிறந்து, மிகவும் சவுரியத்துடன் பருவமடைந்திருந்தாள். அவளை வெகு ராஜாக்கள் கேட்டதற்கு, அந்தப் விவாகத்துக்காகக் வேணுமென்கிற பெண் தனக்குப் புருஷன் கலியாணம் பண்ணிக் போது நான் அவனைக் கலியாணம் பண்ணிக் கொடுப்பேனே யல்லது, அதற்கு முன்னே கொடுக்க மாட்டேனென்று சொல்லிப் போட்டான். இப்படி யிருக்க, அந்தப் பெண் ஒரு நாள் எனக்குக் கலியாணம் வேணுமென்று பிதாவுடனே சொல்ல, பிதாவும் அதற்கு யத்தன்மா யிருக்கையில் ஒருதினம் மவுத்கல்ய

ரென்கிற மஹாமுனி இராஜனிடத்துக்கு வந்து, ஓ மன்னவனே! நானொரு கார்யமாய் வந்தேன். அதை நீ நிறைவேற்ற வேணுமென்றார். அந்த ராஜாவும் அவருடைய தபோமகிமைக்கு அஞ்சி மறுத்துச் சொல்லமாட்டாமல், அப்படியே யாகட்டுமென்று ஒப்பினார். அந்த ரிஷி உன் மகளை எனக்குக் கன்னிகாதானஞ் செய்யவேண்டுமென்று கேட்க, அந்த ராஜா அவருடைய முதிர்ந்த வயதையும் கோர ரூபத்தையுங்கண்டு, தன் மகளுடைய மங்கைப் பருவத்தையும் நல்ல சௌந்தரியத்தையும் நிதானித்து, சுவாமி! அப்படியே செய்கிறேன். ஆனால், அந்தப்புரத்துக்குப்போய் என் மகளைச் சம்மதிசெய்து, அதற்கு அடையாளமாக அவள் முத்திரை மோதிரத்தையும் வாங்கிவந்தால் உடனே தத்தம் பண்ணுகிறேனென்று சொன்னான்.

அதுகேட்ட அந்த முனிவரும் ஆகட்டுமென்று அந்தப்புரத்துக்குப் போகும்போது மன்மதனை நினைத்தார். அம்மாத்திரத்தில் அவன் அவருக்கெதிரில்வந்து நின்றான். உடனே முனிவர் அவனுடைய வயதையும் அழகையும் வாங்கிக்கொண்டு தன் வயதையும் ரூபத்தையும் அவனுக்குக் கொடுத்து, அப்பா! சற்றுநேரத்தில் உன் சொத்தை சேர்த்துவிடுகிறேனென்று அவனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, தாம் அந்தப்புரம்போய் அங்கிருந்த ராஜ கன்னிகையைப் பார்த்தார். அவள் இவருடைய ரூபத்தைக் கண்டமாத்திரத்தில் மோகித்து, இவரைப் பின்னும் ஏற நோக்கி உற்றுப் பார்த்து, நீ யார்? எங்கே வந்தீர்? என்று வினவினாள். அவரும் தமக்கு அவளிடத்திலிருக்கிற ஆசை வெளிப்பட, ஓ பொற்கொடியே! உன்னை விவாகஞ் செய்ய வேண்டுமென்று வந்தேன். உன் பிதா நீ சம்மதித்தால் அப்படியே செய்கிறேனென்றான். ஆகையால், உனக்கு என்னிடத்தில் ஆசையிருந்தால், உன் மனங் குவிந்ததற்கு அடையாளமாக நீ தரித்திருக்கிற முத்திரை மோதிரத்தை என் கையிற் கொடு, அதை உன் தகப்பனுக்குக் காண்பித்து உன்னை விவாகஞ் செய்து கொள்ளுகிறேன் என்று சொன்னார். அப்பெண்ணரசியும் புன்சிரிப்புடனேமௌனமாய்த் தன் மோதிரத்தைக் கழற்றித் தபோதனர் கையிற் கொடுத்தாள். அவர் அதை வாங்கிக்கொண்டு, மிகவும் சந்தோஷத்துடனே வரும்போது மன்மதனை அழைத்து, அவன் ரூபத்தை அவனுக்குக் கொடுத்துவிட்டு, தம்முடைய யதா ரூபத்தோடே, அரசனிடத்திற் சென்று, அவன் கையில் அம்மோதிரத்தைக் கொடுத்தார். அரசனு மதைப்பார்த்துத் தன் மகளை யழைப்பித்து, மகளே! இதோ நீ இஷ்டமாய் நினைத்த புருஷன் இவருக்கே உன்னைக் கன்னிகாதானம் பண்ணுகிறேனென்று சொல்ல, அந்தச் சுந்தரி அந்தப் புருஷனைப்பார்த்து, நான் இச்சித்த புருஷன் இவரல்லவென்றுசொல்ல, மகாராஜனு மிவர்தான் உன் மதிக்கு அடையாளமாக மோதிரங் கொண்டுவந்து என் கையிற் கொடுத்தார். இனிப் பேசியபேச்சு பிரளக்கூடாதென்றான்.

அந்தப் பெண் திடுக்கிட்டு, நமக்கு அமைப்பு இதுதானென்று நினைத்துக் கொண்டு ஐயா! ஆனால், அப்படியே செய்யுமென்றுசொன்னா ளப்பால் அந்த ராஜாவானவன் அந்த மவுத்கலியருக்கே நளாயினி என்னுந் தன் மகளைக் கன்னிகாதானஞ் செய்து சிறப்புடனே விவாகத்தையுநடத்தினான். விவாகம் நடந்தபின்பு அந்தமுனிவனிந்தப் பெண்பிள்ளையைப் பார்த்து, பெண்ணே! நீ என்னுடன் கூடியிருக்க மனமுடையவளா அல்லது உன் தகப்பனாரிடத்தில் விளையாடியிருக்கும் மினமு முடையவளா? என்று கேட்க, அந்தப் பெண் கற்புடையவளாதலால் சுவாமி! இனித் தகப்பனால் எனக்கென்ன பயன்? இப்பருவம் புருஷனோ டிருக்கத் தக்கதாதலால், தேவரீருடன்கூட வருவதற்கேமனமுடையவ ளென்று சொல்லினள். அப்படியானால் நான் கடின ஆரணியத்திலிருந்து தவஞ்செய்யப் போகிறேன். அங்கே நல்ல உணவு கிடைக்காது, காய் கிழங்கு தின்னவேண்டும், மெத்தென்னுஞ் சயனமில்லை, கல்லிலும் முள்ளிலும் காட்டிலும் படுக்கவேண்டும், திவ்யமான வாத்திய கோஷ்டமில்லை, பயங்கரமான மிருகங்களின் கர்ச்சிப்பைக் கேட்கவேண்டும். உயர்ந்த வஸ்திரமில்லை, மரவுரியுடுக்கவேண்டும். மாடமாளிகையில்லை, தழைகளாற் கட்டப்பட்ட குடிசையிலிருக்கவேண்டும். உனக்குக் காலங்களில் அன்னபனாதிகள் கிடைக்கமாட்டா மத்தியானத்திற்குமேல் கொஞ்சம் புல்லரிசிக் கஞ்சி கிடைக்கும். இராத்திரி போசனங் கிடைக்காது. அன்றியும், விடியற்கால மெழுந்தது முதல் நமக்கு ஸ்நானம், தேவபூசை, அக்கினி ஹோத்திரம், ஜாகரமுதலான வைதீகங்களுக்கும் ஆகாரமுதலான லௌகீகங்களுக்கும்,

வேண்டிய உபசாரங்களாலே மிகவும் மெய்
வருந்தவேண்டும். நித்திரையற் றிருக்கவேண்
டும் மேலும் நான் கிழவன். தவத்தில் நிற்ப
வன் ஒருவேளை சாப்பிடுகிறவன். உனக்குக்
காமசுகம் பெரும்பாலும் நேரிடாது. இதுவு
மல்லாமல் நினைத்தபோது எங்கேபோகவேண்
டுமோ அங்கே போய்விடுவேன். அனேக
தினங்கள் ஆகாரமே யில்லாமல் தவத்தில்
நின்றுவிடுவேன். அப்போதெல்லாம் நீ ஒருத்
தியாய் ஆகாரநித்திரைக ளில்லாம லிருக்க
வேண்டும் இப்படிக்கு அதிக துக்கத்திற்கே
காரணமாகியது வனவாசம்.

ஓ பெண்ணே! அந்தப்புரவாசலிற் சகல
சுகத்தோடும் சந்திரமண்டலம்போலே விளங்
காநின்ற மாளிகைமீதில், யானைத் தந்தங்களி
னாற்செய்து நவமணியிழைத்த மஞ்சங்களிலே
இலவம்பஞ்சிட்டுப் பட்டினால் தைத்த சுகு
மாரமாகிய பஞ்சணையில் தூங்கி, திவ்விய ஆச
னங்களி லிருந்து, அனேகவித உபசாரங்க
ளுடனே தகுந்த வேலைக்காரிகள் கொண்டு
வந்து கொடுக்கும் தேவாமிர்தத்திற்கு நிகரா
கிய அறுசுவையுண்டிகளை விளையாட்டாற் புசி
த்து எழிசைகூடிய வேணு வீணை முதலாகிய
வாத்தியங்களின் மதுரமான ஒலியைக் கேட்டு
அம்மானைகழங்குபந்து முதலியவைகளை விளை
யாடி, உன்னிச்சையின்படி எல்லா விநோதங்
களையுஞ் செய்துகொண் டிருக்கிற நீ என்
னுடன் வருவதற் கிசையமாட்டுவையோ
என்று அம்மகாமுனி சொல்லக்கேட்ட அந்த
ஸ்திரீயானவள் சொல்லுகிறாள்: ஓ ஸ்வாமி!
என்னகஷ்டம் நேரிட்டாலும், புருஷன் எப்
படிப்பட்டவனானாலும் பதிவிரதையா யிருக்
கிற ஸ்ரீகளுக்கு அப்புருஷனுடன் கூடயிரு
ந்து கணவனுக்குச் சிசுருஷை செய்வதே
சகல சாஸ்திரங்களுடையவிதி. இதனாலே
தான் அவளுக்கு இம்மையில் நற்கதியும் நல்
லின்பமும் உண்டாவதோடு, பிறந்த குலத்துக்
கும் புகுந்த குலத்துக்கும் புகழுடன் நடந்து
உலகத்தி லுள்ள சகலமானபோர்களாலு மகிழப்
படுவளப்பெண்மணியே பெண்மணி. சவுக்கிய
முதலிய மற்றவைசுகமல்ல. பிறந்தவீட்டில் எத்
தனை செல்வமிருந்தாலும் அதனாற் பெண்
ணுக்கு கிஞ்சித்தும் பெருமையில்லை. புகுந்த
யிடத்திற் குடிப்பது கூழாயினும் அருமை
யான பெருமைதான். அன்றியும் வருத்தத்
துடனாவது கணவனோடுகூட இருக்கிறதே
சுவர்க்கப்பதவி. அதைவிடுத்துத் தன்னிச்சை
போல நடந்து சுவர்க்கம் புகுந்தாலும் நரக
வாதனையாகையால் முன்னம் இராமன் பின்
னே ஜனகன்மகள் போனாள். நளனுடனே
தமயந்திசென்றாள். சுகன்னியென்பவள் பார்
க்க வச்சியவனரோடு ஆரணியவாசஞ் செய்
தாள் அரிச்சந்திரனைச் சந்திரமதி அனுசரித்
தாள் இப்படி அநேகப் பதிவிரதைகள் பதிசி
சுருஷையென்னுங் கல்பத்தை அநுஷ்டித்து
என்றும் நாசமுறாத கீர்த்தி யுடைமையைப்
பெற்று விளங்குகிறார்கள். இதெல்லா மறிந்த
யான் எப்பாடுபட்டாவது தேவரீரை அனு
சரித்திருப்பேனேயல்லது பிதாவின் வீட்டுப்
புசிப்பாகிய எச்சிலுக்கு இச்சிக்கமாட்டேன்.
என்று சொல்லக் கேட்டவர், ஆனால்இவ்வாடை
யாபரணங்களை விட்டு என்போல மரவுரி
யுடுத்திக்கொள்ளென்று முனிநாத னுரைக்க,
அவளுமப்படியே செய்தாள். அதுகண்ட
அந்த மவுத்கல்யரிஷியானவர் நளாயினியை
அழைத்துக்கொண்டு கங்காநதிதீரமாகிய ஒரு
புண்ணிய க்ஷேத்திரத்திற்போய் தமதிச்சை
யின்படி தவஞ்செய்ய ஆரம்பித்தார்.

அவளும் அவருக்கு வேண்டிய உபசாரம்
செய்துக்கொண்டு வருகையில், அந்த ரிஷி
அவளுடைய கற்பை இன்னம் நன்றாக சோதி
க்கவேண்டுமென்று கருதி, ஒருநாளாவது
காமதற்பாகத்தைக் கொடாமற் போனதுமன்
றித், தம்முடைய கிழத்தன்மையால் விகார
முற்ற தேகத்திற் பெருவியாதியையும் வரு
வித்துக்கொண்டார். அதனால் அவர் தேகமா
னது அந்தக்கொடிய வியாதியினால் அழுகிக்
குளுகுளுத்து, புண்கள் வெடித்துச் சீழ்வடி
ந்து, ஓர்புத்திரற் புழுக்கள் மொய்த்துத் துர்க்
கந்தம்வீசி மகாகோரமான ஸ்திதியில் வந்
தது. அப்பொழுதும் அவள் அருவருக்காமல்
உடம்பைத் தேய்த்துக் குளிப்பாட்டுகிறதும்
புழுக்களை எல்லாமெடுத்து அப்பாற்போட்டு
அந்தச் சீழ் முதலியவற்றைத் தன் வஸ்திரத்
தினால் துடைக்கிறதும் அவர் போஜனம்
பண்ணின பாத்திரத்திலிருக்கும் சேஷங்களு
டனே தானுண்கிறதும் அவருடைய பாதமுத
லிய அங்கங்களை வருத்தந்தீரப் பிடிக்கிறது
மாகப் பணிவிடை செய்து வந்தாள். ஒரு
நாள் அவர் தின்கலத்திலே தமது பெருவிற
லற்று விழச்செய்தார். அன்றைக்கும் புழுக்க
ளோடு சீழுஞ்சிலை நீருங் கலந்து நாற்றமாய்க்
கிடக்கிற அவ்விரலை எடுத்துப்போட்டு, மிகுந்
தயன்னபானாதிக ளன்போடு புசித்தாள். அம்

முனிவர் இதுகளையெல்லாம் பார்த்து மனதில்
மிகுந்த ஆனந்தத்தை யடைந்திருந்தாலும்
இன்னமும் பார்ப்போமென்று வெளிக்குமவ
ளைத் திட்டுகிறதும், கோபித்துக் கொள்ளுகிற
தும், உதைக்கிறதும், அடிக்கிறது மாகவே
இருந்தார். அப்படியிருந்தும் அந்த மாது
மனங்கோணாமல் நடந்தாள்.

இப்படி நடந்துவருநாளில் ஒருநாள்
அந்த வைதிகரானவர் தம் மனைவியை
நோக்கி! அடிபெண்ணே! நான் உன்னை கலி
யாணம் பண்ணுகிறதற்கு முன்னே ஒரு
வியாதியு மில்லாமற் சுகமாயிருந்தேன். துற்
பாக்கியவதியான உன்னைக் கலியாணஞ்செய்த
பின்பு இக்கொடிய வியாதியால் வருந்துகிறது
மன்றி, நினைத்தபோது தீர்த்தங்களுக்கும்
க்ஷேத்திரங்களுக்கும் போகக்கூடாமல் இங்
கேயே கிடக்கவேண்டியதாயிற்று. என்னசெய்
வேன் இது என் தலைவிதி அடி பாபிஷ்டி!
உன்னைத் தெரியாமலன்றோ விவாகஞ்செய்தே
னென்று கண்ணீருதிர்த்துக்கொண்டு விசனப்
பட்டார். அதைக்கேட்ட அக்கற்புடைய மாது
சிரோன்மணியானவள் ஓ ஸ்வாமி! நீர் ஏன்
விசனப்படுகிறீர். நான் மகா பாபிஷ்டிதான்.
இந்த வியாதிக்கு மாத்திரம் நானென்றுஞ்
செய்ய மாட்டாமற் போனாலும், மற்றென்ன
லாகிய பணிவிடைகளுக்கு ஒன்றுங் குறை
யில்லை. ஆகையால் தயைசெய்து தேவரீருக்கு
எவ்விடத்துக்குப் போக மனமிருக்கிறதோ
அதை அடியாளுக்குத் தெரிவித்தால் அவ்
விடத்திற் றங்களைக் கொண்டுபோய் விடுகி
றேன். தேவரீருக்குதவாத என் தேகமும்
பிராணனும் இவ்வுலகத்திருந்தென்ன பலன்?
சுவாமி! தங்கள் கருத்துக்கிசைய நான்
நடந்து கொள்ளவேண்டிய பணிகட்கு கட்
டளையிட வேண்டுமென்று வணங்கி கும்பிட்டு
கேட்டாள். அதற்கந்த முனிவர் அடிபெண்
ணே! என்னைத் தீர்த்தங்கள்தோறும் கொண்டு
போய் ஸ்நானம்பண்ணி வைக்கவேண்டும்
என்றுரைத்தார். அப்படியே அந்த ஸ்திரீ
யானவள் அவரை ஒரு கூடையிலெடுத்துத்
தலையில் வைத்துக்கொண்டு தீர்த்த யாத்திரை
போகும்போது ஒரு பட்டணத்திற்போய் அம்
முனிவரை இறக்கினாள்.

அவ்விடத்தி லிறங்கிய முனிவர் ஓ
பெண்ணே! நான் ஒரு வஸ்துவினிடத்திலே
ஆசைப்பட்டேன். அது எனக்கு லேசிற்
கிடைக்க மாட்டாதே என் செய்வேனென்று
விசனப்பட்டார். அதைக்கேட்ட அவள்
ஸ்வாமி! அதென்ன வஸ்து? அவ்வஸ்து
எவ்வகைப்பட்டதாயினும் எனக்குச் சொன்
னால் என்னாற் கூடியவரையிற் பிரயாசப்பட்
டுக் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று
சொல்லவந்தத் தபசி அதை உனக்குச் சொல்
வேனாகில் உன் மனதிற்குமிகுந்த வருத்தத்
தை யுண்டாக்கும் கடைசியில் நிறைவேற
மாட்டாது வீணாகச்சொல்லி என் வாக்கை
விருதாவாக்க மாட்டேனென்றார். அவ்விராஜ
புத்திரி! ஸ்வாமி! உம்முடைய மனதுக்கு
இஷ்டமாயிருப்பது என் மனதுக்கு விரோத
மாயிருக்க மாட்டாது. ஆதலால் அதைத்
தயைசெய்து சொல்லுவீராகில் அஃது எவ்
வாறதாயினும் அதை முடிக்கிறேனென்றாள்.
அதற்கவர் பெண்ணே! இந்தப் பட்டணத்
திற் கீழ்ப்புற வீதியில் ஒருவேசி யிருக்கிறாள்.
அவள் அரம்பையோ? ஊர்வசியோ? இரதி
யோ? என்று சந்தேகப்படத்தக்கவளா யிருக்
கிறாள். அவளைப் பார்த்ததுமுதல் யான்
மிகுந்த மோகமாயினேன் மையல் தலைக்கே
றிற்று எனக் கன்னபாணங்கள்கூட வெறுப்
பா யிருக்கிறது விசாரிக்குமளவில் அவளொரு
யிரவிற்கு நூறு பொன் வாங்குகிறவளாம்
எனக்குப் பொன்னுமில்லை அப் பொன்னிருந்
தாலும் அவளைப் போகிக்கும்படியான தேகமு
மில்லை இப்படிப்பட்ட காரியம் எவ்விதமாக
முடியுமென்று மவுத்கலியர் சொன்னார்.

அந்தப் பதிவிரதை தீர்க்காலோசனை
செய்து, நல்லதென்று மனதில் ஒரு நிச்சய
த்தையடைந்து, அந்த வேசியின் வீட்டு
வாசலை விடியற்காலையிலேபோய் நன்றாய்
மெழுகி, விசித்திரமாகக் கோலமிட்டு, அவர்க
ளெழுந்திருக்கிறதற்கு முன்னமே வந்துவிடு
வள். இப்படியாகச் சில நாள் செய்துவரும்
போது அவ்வீட்டுவேலைக்காரிகள் தங்களுடை
ய வேலையை ஆரோசெய்து போகிறார்களென்
றுச்சரிப்பட்டு தாசிக்கறிவித்தார்கள். அவ
ளும்பார்த்து, வியப்புற்று, ஆ! ஆ! நம் வீட்
டுக்குவந்து யாரிப்படிசெய்கிறார்க ளவர்களை
எவ்விதத்திலேயுங் காணவேண்டும் என்றிருக்
கும்போது, ஒருநாள் அந்த வேலைக்காரிகள்
பதுங்கியிருந்து, விடியும்போதே மெழுகிக்
கோலமிடுகிற இந்த பெண்பிள்ளையைக்கண்டு,
உடனே தங்கள் யசமானிக்குத் தெரிவிக்க,
அவள் ஓடிவந்து இந்த முனி மனைவியைப்
பார்த்து, அம்மா! மஹாலட்சுமியைப்போ

விருக்கின்ற நீர் யார்? என் வீட்டுக்குப் பணி
செய்வதேன்? உமக்குத்தகுமா? தேவஸ்திரீக
ளும் பணிவிடை செய்யத்தகுந்த மஹாதேச
சுடனே விளங்குகிற நீர், என்னை பயனைக்
குறித்து எனக்கு ஏவல்செய்யப் புகுந்தீர்?
என்ன வெண்ணங்கொண்டு அடியாளுடைய
வீட்டை புனிதமாக்கவந்தீர்? அதனைத் தயை
செய்து சொல்லம்மாவென்று நமஸ்கரித்துக்
கேட்க, அதற்கு அந்த மவுத்கல்யர் மனைவி
மகிழ்ந்து, இப்படி நீ என்னிடத்திற் காரண
மின்றி அன்புவைத்தபடியே என்னிஷ்டத்
தையும் நிறைவேற்றுகிறதானால் யான் சொல்
லுவேனென்றாள். அதுகேட்ட அந்த விலை
மாது அம்மா! என்னாற் செய்யத்தகும் ஊழி
யத்திற் தடையொன்றுமில்லை. ஆதலால் ஐய
மில்லாமற் பேசலாமென்ன, முனிமனையாள்
அம்மா! என் கணவன் மகானுபாவர் சகல
கலையு மறிந்தவர், தபோமகிமை விளங்கிய
வர், அவருக்குச் சிலகாலமாய் நான் புரிந்த
தீவினையாலே குஷ்டவியாதி சம்பவித்தது.
அவர் தீர்த்தயாத்திரையாய் இவ்வூருக்கு
வந்தவிடத்தில் உன்னைக்கண்டு மன்மதன்
போருக்கு வாணாளைக் கொடுத்துவிட்டு மயங்கி
இருக்கின்றார். அவரது மயக்கத்தை உன்
முக விலாசத்தினாலே தீர்த்துக் காப்பாற்றித்
தரவேண்டு மென்று மிகவும் வேண்டிக்
கொண்டாள். அவ்விலைமாது அவையனைத்
தையும் யோசித்து, இதென்னமோ காரணந்
தெரியவில்லை நல்லது உமது பாக்கியம் எனக்
கும் ஆகட்டும் அழைத்துக்கொண்டு வாரு
மென்றாள்.

அதுகேட்ட நளாயினி சந்தோஷத்து
டன் விரைவிற் போய் இச்செய்தியைத் தன்
புருஷனுக்குத் தெரிவித்து, அவரைக் கூடை
யிலே வைத்துக்கொண்டுவந்து தாசி வீட்டுக்
குத் தலைக்கடையில் விட்டாள். அவர் பெண்
ணே! நீ தெருவிலிரு நான் கூப்பிடும்போது
ஓடிவா என்று சொல்லித் தெருக்கதவை மூடிக்
கொண்டு, மன்மதனை நினைத்து, ஒரு க்ஷண
நேரத்திலே அவனழகைப்பூண்டு உள்ளே
போனார். அந்தத் தாசியும் மன்மதன்போல்
விளங்கு மிவரைப் பார்த்த மாத்திரத்திற் பிர
மித்து மோகித்து, தன் மனதில் ஒன்றுந்
தோன்றாமற் சிறிதுநேரம் ஸ்தம்பித்து நின்று
யோசித்து, அப்பால் சந்தோஷித்து ஓடி
வந்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு சகல
வித உபசாரங்களுஞ்செய்து, தேவேந்திர
னுடைய சபையைப்போல் அலங்கரிக்கப்
பட்டிருக்கிற தன் படுக்கையறைக்குள் அழைத்
துக்கொண்டுபோய்க் காமனுடைய பூஞ்சோலை
யொத்திருக்கிற அம்சதூளிகா மஞ்சத்தின்
மீது இருத்தி, நானாவித காமோபசாரஞ்
செய்து, அவருடைய சரீரத்தை இறுகக்கட்டி
முத்தமிட்டு என் சாமி! உம்மை உம்முடைய
மனையாள் ஏன் குஷ்டவியாதி பிடித்தவரென்
றுரைத்தாள்? பரிஹாசமாகச் சொன்னாளோ?
தாங்கள் என்னை யொருபொருளா யெண்ணி
இங்குவர நானென்ன தவஞ்செய்தேன்? இப்
படிப்பட்ட பாக்கியத்தை யானெளிதிற் பெறச்
செய்த அந்தப் பாக்கியவதி யாரோ? வலு
வில் வந்து எனக்குக் கற்கண்டையும் சர்க்க
ரைப் பாகையு மூட்டினாளே! தன்னுயிரையும்
பாக்யத்தையும் கொடுத்தவளுக்கு நானென்ன
பிரத்தி யுபகாரஞ் செய்யமாட்டுவேன்? என்
கண்ணே! உம்மைக் குற்றமுடையவராகச்
சொல்ல அவளுடைய நாவெப்படி துணிந்
ததோ? என்று ஆலிங்கனஞ் செய்து காமக்
கலை தாக்கினாள். இக்கபட மன்மதன், ஓ தாசி
குலமணியே! யானொரு காரணத்தினால் அவள்
கண்ணுக்கு வியாதியுடையவன்போல் தோற்
றுவேன். ஆதலால், அவள் அவ்வாறு
உரைத்தனள். இந்த ரகசியத்தை நீ வெளி
யிடவேண்டாம் வெளியிடுவையானால் உன்
சிரசு வெடிக்குமென்று உரைத்தார். அதற்
கவள், சுவாமி! அப்படியே யாகட்டும் உம்
முடைய கருத்துக்கு மாறுபட்டு நடக்க
மாட்டேனென்று சொல்லிச் சிலநேரம் வரை
யில் அவருடன் மதனசாம்பிராச்சிய வைபவ
ஐசுவரியத்தை அனுபவித்துவந்தாள். பின்பு
அவர் அவளை வேண்டி விடைபெற்றுக்
கொண்டு நடையில் வந்து, மன்மதனுக்கு
அவன் ரூபத்தைக் கொடுத்துத் தன் கொடிய
வியாதியை மீட்டுமடைந்து, கதவைத்திறந்து
பெண்ணே யென்று மெலிந்த குரலுடனே
கூப்பிட்டார். அம்மாத்திரத்திலே இந்தப் பதி
விரதையானவள் சுவாமி யென்று ஓடிவந்து,
கூடையில் உட்காரவைத்துத் தூக்கிக்கொண்டு
வருகிறாள்.

இப்படி வழி நடந்துகொண் டிருக்கும்
போது, கிருஷ்ணபக்ஷத் திராக்கால மாகையா
லும் ஆகாயத்தில் மேகங்கள் கம்மிக்கொண்டு
இடிமுழக்கத்துடனே தூறலைச் சொரிந்
திருந்த படியினாலும் வழிதெரியாமல் அலை
ந்து, ராஜாவின் ஆக்கினையினாலே கழுவிலேற்

றப்பட்டிருக்கிற மாண்டவியரென்னும் மகா முனிவரிருக்கிறவிடம் சேர்ந்து, அவர் பாதம் கூடையிற்படச் சென்றாள். அப்படிப் பட்ட மாத்திரத்திலே அவருக்கு நோய் அதிகமாகித் திடுக்கிட்டு, ஜாடையில் இவள் பெண் பிள்ளை யென்று அறிந்து பொழுது விடிந்தவுடனே உனது மாங்கிலியம் அறக்கடவதென்று சபித்தார். இச்சாபம் கேட்ட ரிஷி பத்தினி யானவள் இவர் யாரோ ஒரு பெரியவர் இதற் கென்னசெய்யலாம் என்றுநினைந்து பொழுது விடியாமற் போகக்கடவதென்று சொன்னாள். இப்படி யிவளுடைய பதிவிரதா தருமத்தி னாலே எட்டுநாள்வரையில் பொழுதுவிடியாம லிருந்தது. அதினாலே லோகமெல்லாம் தொந் திரவடைந்து நிற்கத் தேவர்கள் இச்செய லுண்டானதற்குக் காரணமின்னதென் றறிந் துக்கொண்டு மாண்டவிய மகாமுனியிடத்துக் குப்போய், சுவாமி! இதென்ன காரணமோ உலகம் அலைகிறது; பொழுது விடியும்படி கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க அம்முனிவர் என்னாலொரு விரோதமுமில்லை. ஒரு பதிவிரதையினுடைய மகிமையால் இப் படி நேரிட்டது. ஆகையால், அவளைக் கேளுங்களென்று சொன்னார்.

அதுகேட்ட தேவர்கள் இப்பதிவிரதை யைக் கண்டு, தாயே! உலகம் வருந்துதே, அவ்வருத்தந் தீர அனுக்கிரகம் செய்ய வேண்டும் இப்போது உம்மை யல்லது வேறு கதியில்லை. ஆதலால் உயிர்களின்மீது இரக்கம் வைத்துக் காப்பாற்று மென்று பிரார்த்திக்க அந்தப் பதிவிரதை, ஓ தேவர்களே! நீங்கள் சொல்வது சரிதான். என் மாங்கிலியத்தை யிழக்க நானே முயல்வது நியாயமா சொல் லுங்களென்றுகேட்க, அதற்குத் தேவர்கள், ஓ அம்மணி! இவ்வுலகத்துள் உத்தமராயினோர் தாம் எவ்வித வருத்தமடைந்தாவது பலருக் கும் நன்மை செய்வதே நன்று இது உமக்குத் தெரியாத தொன்றுமில்லை என்று சொல்ல அவள் மெய்தான். ஆகிலும் எதையிழந்தாலு மிழக்கலாம். புருஷனை யிழப்பது ஸ்திரீகட்கு நலமல்லவே யென்றாள். அப்பால் அத்தேவர் கள் அவள் கணவனாகிய மவுத்கலியரைப் பிரார்த்திக்க, அவர் அவளாலேயே அது தீரவேண்டுமென்று சொல்லிவிட்டார். உட னே அவளை வேண்டி மாண்டவியரிடத்துக்கு அழைத்துக்கொண்டு போய், சுவாமி! இவ் விலக்குமி மாங்கிலிய மிழக்கா திருக்கும்படி அனுக்கிரகம் செய்யு மென்று வேண்டினார் கள். அவருமப்படியே பிரதி சாபமளித்தார். பின்பு இவளும் பொழுது விடியும்படி சொன் னாள். உடனே பொழுது விடிந்து, உலகமெல் லாம் பூசை நைவேத்தியம் ஸ்நானம் சந்தி செபம் தபமுதலிய யாகங்களுடனே மங்களகர மாய் இருந்தன.

இப்படிப்பட்ட யிவளுடைய பதிவிரதத் தன்மையை இந்த மவுத்கலியரானவர் பார் த்து சந்தோஷித்து, பெண்ணே! இவ்வளவு காலம் நீ வருந்தியும் கற்பில் வழுவினவளல்ல. ஆதலால், மிகவும் உன்னிடத்தில் அனுக்கிர கம் வந்தது. நானிப்போது காணப்படுகிற படிக்கு ரூபனல்ல, குஷ்டனல்ல, மூப்பனு மல்ல உன்னை நானெப்படி கிரீடை செய்து சந்தோஷிப்பிக்க வேண்டுமோ அப்படிப் பட்ட வரங் கேளென்று சொன்னார். அதற்கு அவள், சுவாமி! அடியாளிடத்தில் அனுக்கிர கம் வந்து கட்டளை யிடுகிறபடியினாலே விண் ணப்பஞ் செய்கிறேன். அதாவது, தேவரீரே ஐந்து ரூபமா யிருந்துகொண்டு என்னைப் போகிக்க வேண்டும் மறுஜனனத்திலும் நீரே என்னை விவாகஞ் செய்து அனுபவிக்க வேண் டும். இதுதானெனக்கு வேண்டிய வரமென்று கேட்டாள். அதற்கந்த முனியானவர் உன்மன தின்படியே பின்னால் நடக்குமென்று சொல்லி, இத்தனை கால வருத்தமும் ஒரு நாளைய சுகத் துக்கு ஈடாகாதென்று சொல்லும்படிச் சில காலம் அவளைப் போகித்திருந்து அம்முனி திலகர் சுவர்க்கலோக மடைந்தனர். இந்தப் பதிவிரதையும் அநுமரணஞ்செய்து பதி யுடன் போய்ச் சேர்ந்தாள்.

பின்பு அவள் இந்திரசேனை யென்னும் பேருடையவளாகி, தன் புருஷனாகிய அம் முனிவருடனே மேருவின் சிகரங்களிலும், நந்தவனங்களிலும், சூரிய லோகத்திலும், சந்திரலோகத்திலும், இன்னு மனேக போக ஸ்தானங்களிலும் காமரூபியாகிய தன் கணவ னுக் கெந்தவேளையி லெந்த வடிவெடுத்துக் கொண்டு கூடவேண்டுமோ? அந்த வேளையில் அந்தப்படியே கூடி, நெடுங்காலம் வெகு போகமெல்லாம் அனுபவித்துக்கொண் டிருந் தாள். பின்பு அந்தப் புருஷன் பெண்ணே! இனி எனக்குப் போகத்தில் வெறுப்புண்டா யிற்று. ஆதலால் மேலாகிய பரப்பிரம லோகத் திற் பிரவேசிக்க மனதுண்டா யிருக்கிறதால் கானகஞ் சேருகிறே னென்று சொன்னார்.

அப்போதந்தப்பெண், ஓ என்னுயிர்போன்ற நாயகனே! உம்மைவிட்டு ஒரு நிமிஷமும் பிரிந்து உய்வேனே? பூவையார்க்குப் புருஷனல்லாது வேறு கதியுண்டோ! ஆதலால், நான் விடமாட்டேனென்று மோகத்தாற் றடுத்தாள். அம் மகாமுனிவர் கோபங்கொண்டு, அடி! நீ என் தவத்திற்கு விக்கினஞ் செய்கிறாய், ஆனபடியினாலே நீ மனுஷிய யோனியிற் பிறந்து ஐந்துபேரை விவாகஞ் செய்யக்கடவாயென்று சொல்லிவிட்டுத் தவத்திற்குச் சென்றார். இந்தப் பெண்பிள்ளையும் அன்ன பானாதிகளிழந்து, வெயில் காற்று மழை முதலிய துன்பங்களை யெல்லாம் சகித்துக்கொண்டு பரமனைக் குறித்து தவஞ்செய்தாள்.

இப்படி சிலகாலம் இவள் தவஞ்செய்துக் கொண் டிருக்கும்போதந்த உருத்திரமூர்த்தி பாலசந்திரனும் கங்கையையும் புனைந்த செஞ் சடாமுடியும் திருநீற்றால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியும் அக்கினிபோலொளிரும் நெற்றிக்கண்ணும் மான், மழு, சூலம், அபயவரதமிதுகள் தரித்த நான்கு திருக்கைகளும், மகரதப்பரவைபோல் விளங்கும் ஈஸ்வரியுடனே வெள்ளிமலைபோன்ற நந்தியின்மீதேறி, சிவகணங்களெல்லாம் சத்திரசாமராதிகள் போட, சிவயோகிகளெல்லாம் உருத்திரங் கோஷித்து துதிக்க, மகா விபத்துடனே தவஞ்செய்யும் இப்பெண்ணுக்கு முன்வந்து நின்றார். அம் மாத்திரத்திலிவள் காணாத காக்ஷியைக் கண்டவள்போற் பேரானந்தக்கடலில் மூழ்கி யெழுந்து அநேகபிரதக்ஷணங்களோடு சாஷ்டாங்க நமஸ்காரங்கள் செய்து நின்று, ஓ சுவாமி! சங்கரனே! ஓ சகல லோகநாயகனே! ஓ எல்லாம் படைத்தளித் தழிக்குங் காரணப் பொருளே! ஓ வேதங்கள் துதிக்கும் அரிய வித்தகனே! ஓ எட்டுத் திருமேனியாய் விளங்குகிறவனே! ஓ மகாதேவனே! ஓ ஞானனந்த மய வடிவினனே! ஓ மலைமகள் பங்கனே! ஓ பத்தர் பெருமானே! ஓ கருணைக் கடலே! ஓ எனது முற்பவத்துத் தவப்பயனே! உமது திருவடித் தாமரைகளுக்குச் சரணம் இவ்வுலகத்தில் யாதொரு கதியுமற்ற அடியாள் பெற்ற பேறு யார் பெருவார்கள்? ஆ! ஆ! என்ன பாக்கியஞ் செய்தேன் இன்றல்லவோ என்னின் மிக்காரில்லாத தன்னியை யாயினேன். என் பஞ்சேந்திரியத்திற்கும் பயன்கள் பலித்தன. ஓ பரஞ்சோதியே! ஓ சிருட்டி திதி சங்கார திரோபானுக்கிரக மூர்த்தியே! என்று இரு கரங்களையுஞ் சிரமேற்கூப்பித் துதித்துப் பிரார்த்திக்க, பரமசிவனு மந்தகாசத்தினாலே யமுதந்தங்கிய பவளக் கிண்ணம்போன்ற தமது திருவாயைமலர்த்தி, ஓ பெண்ணே! நின் தவத்தினாலே மிகவுங் களித்தேன் உனக்கென்ன வேண்டும் கேளென்று அருளிச்செய்தார்.

உடனே இந்திரசேனை மகிழ்ந்து, சுவாமி! தேவரீரைத் தரிசித்ததினாலே சகல பாக்கியங்களும் பெற்றேன். இதைவிட யாதெனக்குக் குறைவு? தேவரீரைக் காணும்பொருட்டேயன்றோ யோகிகளெல்லாம் மெய் வருந்திப் பலகாலம் தவஞ் செய்கின்றனர். ஆதலாலிப்படிப்பட்ட அரிய காட்சி எளிதி லெனக்குக் கிடைத்ததே போதும். ஆயினும், சுவாமிகள் தயைசெய்து வேறு வரமளிக்கத் திருவுள்ளமுடையவரா யிருந்தால் எனக்குப் புருஷபாக்கிய மொன்றே தரவேண்டும். பொருள்பட, ஐந்துதரம் (பதிந்தேகி) என்று பிரதியுத்தரஞ் சொன்னாள். சுவாமியும் அதுகேட்டு, குழந்தாய்! அப்படியே உனக்கு மனுஷிய லோகத்தில் உத்தமமான பிறப்புக் கிடைக்கும் அப்பிறப்பிலே தேவராஜனது மகிமையுடைய ஐந்து மகாபுருஷர் உனக்குக் கணவராவார்கள் அவர்களைச் சேர்ந்து நீ தேவர்களுக்கு மிகவும் அனுகூலமாகிய காரியம்செய்வாய் என்று வரமளிக்க, தவப்பெண்ணாகிய இந்திரசேனை அச்சிவனைப் பார்த்து, சுவாமி! நான் ஒரு கணவனையன்றோ வரித்தது. அப்படியிருக்க, ஒருத்திக்கு ஐந்து பர்த்தாக்கள் எப்படியுண்டாவார்களென்று கேட்க, சிவபிரான் பெண்ணே! நீ ஐந்துதரம் என்னை (பதிந்தேகி) என்று கேட்டபடியினாலே அப்படியே உண்டாகும்படி யனுக்கிரகஞ் செய்தேனென்று சொன்னார்.

அதற்கு இந்திரசேனை சொல்லுகிறாள்: எனது கடவுளே! முன்னம் சாஸ்திரங்களிலே பெண்பிள்ளைகள் ஒரு புருஷனையே விவாகஞ் செய்யவேண்டியதென்றும் ஆண்பிள்ளைகள் அநேகம் பெண்களை விவாகஞ்செய்யலாமென்றும், அந்தப் பெண்கள் புருஷர்களுக்கு கீழ்ப்படிந்து உபசாரஞ் செய்துவரவேண்டுமென்றும், இப்படியெல்லாம் தருமநிச்சயம் செய்திருக்கிறார்கள். அன்றியும், ஒரு ஸ்திரீயானவள் ஜென்மாந்தரவினையினால் நேரிடும் ஆபத்துக்களில் நியோகமென்னும் ஓர் விதியினால் அல்லது 2-வது புருஷனைசேர்ந்தா லுபாயப் பிராயச்சித்தமும், மூன்றாவது புருஷனைச் சேர்ந்தால் மகா பிராயச்சித்தமும், விதித்துச்

சேர்த்துக்கொள்ளலா மென்றும், நான்காவது புருஷனைச் சேர்ந்தால் அவள் பதிவிரதைக்கு தலா லவளுக்குப் பிராயச்சித்தம்செய்து சேர்த்துக்கொள்ளக்கூடா தென்றும், ஐந்தாவது புருஷனைச் சேர்ந்தால் அவள் பந்தகி என்று சொல்லப்படுதலால் அவளுக்கு பிராயச்சித்தமுமில்லை என்றும், அவள் வேசிக்கு சமானமாகியவ ளென்றும், காலத்தைப்பற்றியும் சாதியைப்பற்றியும் தக்கபடி பிராயச்சித்தங்களை விதித்திருக்கிறார்களே; அதுபோல் உலகத்திலும் பல புருஷரை மகளிர் தழுவுதலைக் காட்டிலும் இழிந்த செய்கை வேறு கூறப்படவில்லையே. இப்படி யிருக்க, தேவரீருடைய கிருபை என்னும் ஊன்றுகோலைப் பெற்ற நான் அந்த கொடிய துஷ்டச்செய்கை என்னுங் குழியில்வீழலாமோ? ஆதலால் அப்படிப்பட்ட சங்கடம் நேரிடாம லிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, சுவாமியானவர் பெண்ணே! நம்முடைய வாக்கில் வந்ததற்கு யிரண்டாவதில்லை. நீயும் அஞ்சவேண்டாம். நீ ஐவரை விவாகஞ்செய்து கொள்வதை உலகத்தில் யாரும் நிந்திக்கமாட்டார்களென்று அருளிச்செய்தார். மறுபடியும் அவள், ஸ்வாமி! அப்படியானால் அந்த ஐந்து புருஷர்களுக்கும் என்னுடைய சங்கம காலந்தோறும் கௌமாரவயதே யிருக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

அதுகேட்ட பரமேஸ்வரன், ஓ குணவதி! நல்லது அப்படியே நீ சென்மாந்தரத்தில் விசேஷமானரூபமும்-குணமும்-மேன்மையும் போகமு மடைந்து மகானுபாவை யாவாய். அதோ யந்தக் கங்கா நதியிற்போய் மூழ்கி எழுந்து, எந்தப் புருஷனைக் காண்கிறாயோ அவனை என்னிடத்திற் கழைத்துக்கொண்டு வா வென்று கட்டளையிட்டார். அவள் அக்கட்டளையைச் சிரசில் வகித்துக்கொண்டு, சுவாமியைப் பிரதட்சணம்வந்து தெண்டனிட்டு அருகில் இருக்கிற கங்கையில் மூழ்கினாள். அப்போது சுவாமி மறைந்துவிட்டார். இம்மைப்போகத்தை விரும்பிய பூங்குழலாள் நதியின் மூழ்கி யெழுந்து சுவாமியைப் பார்த்தாள். அப்பொழுது அவரைக் காணாமையாலே திகைத்துக் கோவென்று கதறி அழுதுக் கொண்டிருந்தாள். அவள் அழுத கண்ணீர்த் துளி கங்கையில் விழுந்து, விசித்திரமாகிய பொற்றாமரை மலராகப் பூத்திருந்தது. அந்தக்காதம் தேவர்கள் நைமிசாரணியத்தில் ஒரு யாகம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். அந்த யாகத்துக்கு இயமன் சாமித்திர மென்னும் ஆர்த்து விச்சியத்தைச் செய்துகொண் டிருந்தான். அதனாலே பூமியில் மனிதர்கள் பெருகி விர்த்தியாய் ஒருவரை யொருவர் மதிக்காம லிருந்தார்கள். அதுகண்ட இந்திரன் - வருணன்-குபேரன் முதலாகிய சில தேவர் பிரமதேவனிடத்திற்குப்போய், சுவாமி! இதென்ன தேவர்களுக்கெல்லாம் அபாயகாலம் நேரிட்டதேயென்று முறையிட்டுக்கொண்டனர். அந்தப் பிரமன் இவர்களைப் பார்த்து என்ன பயம் உங்களுக்கென்றுகேட்க, சாதலையுடைய மனிதரெல்லாம் சாகா தேவர்களோடு சமானராகித் தேவர்களை லக்ஷியஞ் செய்யாம லிருக்கிறார்கள் இதுதான் எங்களுக்குண்டாகிய பயம் என்று சொல்ல, ஓ தேவர்களே! இதற்குப் பயப்படவேண்டாம். இயமன் சாமித்திரத்தி லிருக்கிறபடியினால் இப்போ மனிதர்கள் ஆயுசு வளர்ந்திருக்கிறார்கள் அது முடிந்தவுடனே அவர்களெல்லாம் நசிப்பார்கள். அன்றியும், அந்த இயமதேவனுடைய தேகமே உங்களுடைய சக்தியோடுகூடி இவர்களுக்கெல்லாம் நாசகாரணமாகப் போகிறது. ஆதலாற் போங்கள் என்று பிரமதேவன் சொன்னான்.

அதுகேட்ட இந்திரன் முதலிய தேவர்கள் மறுபடியுந் திரும்பி, மற்றைத் தேவர்கள் யாகஞ் செய்கிற விடத்துவந்து ஓரிடத்தில் உட்கார்ந் திருக்கும்போது அவ்விந்திரன் முதலாயினோர் அந்தக் கங்கையி லிருக்கும் விசித்திரமான தாமரைமலரைக் கண்டார்கள். அதைக்கண்டு ஆச்சரிய மடைந்த அத்தேவருள் இந்திரனானவன் கங்கைக் கரையில் வந்து பார்த்தவுடனே, அங்கே அழுதுக் கொண்டிருக்கிற இந்திர சேனையைக் கண்டு, அவளுடைய கண்ணீர்த்துளி கங்கை நீரில் விழுந்து பொற்றாமரை யாகிறதையு நோக்கி மிகவும் வியப்படைந்து, ஓ மின்னலுக் கொப்பாகிய பாவாய்! நீயார்? இங்கு ஏன் வந்தாய்? ஏதுக்குக் கண்ணீர் சொரிகிறாய்? இதை யெல்லாந் தெரியச்சொல்வாய் என்று கேட்க, நான் யாரோ? எந்தக் காரியத்திற்கு இவ்விடம் வந்தேனோ இதுகளை நீரே விவரமா யறிந்து கொள்ளலாம் என் பிறகே வாருமென்று அப்பெண்பிள்ளை சொல்ல, இந்திரனும் அவ்வாறே அவள்பின்போய் அங்கொரு மலையின் மீதில் ஞாயிறுபோலே விளங்கிக் கொண்டிருக்கும் ஒரு மகா புருஷனைக் கண்டான். அந்த

மகாபுருஷன் அந்த அம்மனுக் கொப்பாகிய ஒரு ஸ்திரீயுடனே அந்த மலையின்மீதிற் சிம்மாசனத்தி லுட்கார்ந்து பாச்சிகை யாடிக்கொண்டிருக்க, தேவேந்திரனானவன் மூன்று லோகங்களுக்கும் இராஜனாகிய தன்னைக்கண்டு அவன் மரியாதை செய்யவில்லையென்று கோபங்கொண்டு, ஆரடா நீ? நான் திரிலோகநாதனாயிருக்க என்னைக் கண்டவுடன் மரியாதை செய்யாமல் நீ என்ன கர்வப்பட் டிருக்கிறாயென்று சொல்ல, அந்த மகாபுருஷன் சிரித்துத் தனது கடைக்கண்ணால் இந்திரனை நோக்கினார். அவரால் நோக்கப்பட்ட மாத்திரத்திலே இவன் ஸ்தம்பித்து நின்றான். அந்தப் பாச்சிகையாட்டம் முடிந்தவுடனே அழகிற பெண்ணை நோக்கி அவனை இங்கு அழைத்துவா வென்று சொல்ல, அவளும் அவனைத் தொட்ட மாத்திரத்திலே அவன் அங்கங்கள் தளர்ந்து கீழே விழுந்து பணிந்தான்;

அப்படிப் பணிந்த அவனைப் பரமசிவனாகி அந்தப் புருஷனானவர் ஓ இந்திரனே! இனிமேலிப்படி செருக்கடைந்து பேசாதே அடா மூடா! இதோ இந்தக் குன்றைப் புரட்டு அதில் உன் பெருமையைக் காட்டுகிறேனென்றனர் அவ் வானவர்கோன் அந்தப் புருஷன் சாக்ஷாத் ஈஸ்வரனும், அந்த அம்மன் பார்வதி தேவியுமென்று அறிந்து தன் முறுக்கழிந்து அவர் சொற்படி அக்குன்றைப் புரட்டினான். சிவன், அடா இந்திரா! இந்தப் பிலத்தைப் பார் என்றனர். அவனும் அந்தப் பிலத்தில் மகா தேஜசுடைய நான்கு இந்திரரைக் கண்டு, ஓ! ஓ! நமக்குக்கூட இப்படிப்பட்ட கதிவந்து நேரிட்டதோ என்று விசனப்பட்டான். பின்பு சுவாமியானவர், அப்பா தேவர்களே! நீ மதத்தினாலே என்னை அவமதித்தாய். ஆகையால், இவர்களுடனே நீயும் இந்தக் குகையிற் பிரவேசி யென்று கட்டளையிட்டார். அதற் கிந்திரன் பயமடைந்து, காற்றினாற் குலுக்கப்பட்ட அரசன் சருகுகள் போல் குலுங்கி விடவிடத்த அங்கத்துடனே கைகளைக் கூப்பிக்கொண்டு, ஓ ஸ்வாமி! அடியேனுக்கு இவ்வளவு தண்டனையே போதும் இனிச் சிக்ஷைவேண்டாம் என்று வேண்டிக்கொள்ள, அதற்கு உருத்திர தேவன் அது கூடாது உன்னைப்போலே இவராலும் சில காரியம் நடத்தவேண்டி யிருக்கிறபடியினாலே இந்தக் குகையிற் புகுந்திருக்கின்றனர். ஆதலால், நீயும் இவரோடுகூடச் சேருக என்று சொல்லி இதோ இந்தப் பெண் உங்கள் ஐவருக்கும் பாரியையாகிறாள். நீங்களெல்லாரு மானிடச் சனன மடையுங்கள். அப்படியாகச் சென்மித்துத் தேவராலுஞ் சாதிக்கக்கூடாத சில காரியங்களை முடித்து, அனேகரைச் சம்ஹாரஞ்செய்து, மிகவுங் கீர்த்திபெற்று, வானவராலுங் கொண்டாடப்பட்டு மறுபடியுஞ் சுவர்க்கலோகஞ் சேருவீர்கள் இப்படி நடக்கவேண்டியது அவசியமா யிருக்கிறபடியால், நம்மாலே இவ்வாறு உரைக்கப்பட்டது என்று சொன்னார்.

அப்போது முன்னிந்திரர்கள் ஈசனை நோக்கி, எதினாலே எங்களுக்கு இச்சிறை விடுமோ? அந்தச் சனனம் நாங்களடைகிறோம். ஆனால், தருமராஜனும் வாயுவும் இந்திரனும் அச்சுவினி தேவர்களும் மனிதயோனியை அடையும்போது, நாங்களும் அவர்களிற் சேருகிறோமென்றார்கள். இந்திரனும் தேவகாரியத்திற்காக என்னுடைய அம்சத்தினாலே ஒரு புருஷனை இந்த ஐவரிலொருவனாகத் தருகிறேன் என்றான். மகாதேவன் அவர்களிஷ்டத்தின்படியே செலவுகொடுத்து, இவர்களுக்கு நாயகியா யிருக்கச் சம்பத்தென்னும் லட்சுமியைப் பூமியிற் பிறக்கும்படி செய்தார். அவள் இவர்களோடுகூடவே வாக்குக்கும் மனதுக்கு மெட்டாத மகிமையையுடைய நாராயணமூர்த்தியி லிடத்திற்குச் சென்று இச்செய்தி யெல்லாஞ் சொல்ல, அவரும் அப்படியே அங்கீகரித்து தம்மிடத்திலிருக்கிற நரனென்பவரை இவர்களிலொருவராகும்படி கட்டளை யிட்டார். அவர்களெல்லாம் அப்படியே பூமியிற் பிறந்தார்கள். அந்த விஷ்ணுவானவர் தமது திருமேனியிலுள்ள வெளுத்த நேசமொன்றையும் எடுத்துப் பூமியிற் போக்கினார். அவைதான் யதுகுலத்துதித்த வசுதேவருடைய பாரியைகளாகிய உரோகணி கர்ப்பத்திலொன்றும், தேவகி கர்ப்பத்தி லொன்றுமாகப் பிரவேசித்து, பலராமனாகியும் கிருஷ்ணனாகியும் அவதரித்தன. இப்படி அந்த இந்திரரெல்லாம் இயமன் முதலான தேவர்களுடைய ஸ்வரூபத்திற் கலந்து பாண்டவர்களாகப் பிறந்தார்கள். அந்த இந்திரனுடைய அம்சமாகிய புருஷன்தான் அருச்சுனன் அவனிடத்திலேதான் நரனுடைய அம்சங் கலந்தது. அந்த லட்சுமிதான் முந்திய இந்திர சேனையிற் கல

ந்து, அவர்களுக்குப் பாரியையாகத் திரௌபதையாயினாள்.

அப்படி லட்சுமியின் அம்சமில்லாவிட்டால், யாகத்தின் முடிவில் அக்கினிவேதியினின்றும் புறப்படுவாளா? சூரியசந்திரரொத்த பிரகாச மிருக்குமா? இப்படிப்பட்ட பாக்கியங் கைகூடுமா? சற்குணமிருக்குமா? சண்பகப்பூ வாசனை இவளங்கத்தினின்றும் ஒரு கோசதூரம் வீசுமா? ஓ துருபதமகாராஜனே? உன்னிடத்திலிருக்கும் பிரீதியினாலே ஞானநேத்திரத்தைத் தருகிறேன்;முன் தேகத்தோடு கூடிய இந்தப் பாண்டவர்களையும் திரௌபதியையும் பார் என்று சொல்லித் தம்முடைய தபோமகிமையாலே அந்த ராஜாவுக்குக் கியானநேத்திரங் கொடுத்தார். அந்தப் பாஞ்சாலராஜன் வியாசரருளினாலே இவ்வைந்து பேரையும் தேவதேகங்களோடு தேவர்க்குரிய காந்தியடைந்து, பிரகாசமுள்ள பொற்கிரீடங்கள் தாங்கி, சூரியன்போல் விளங்கி, பொற்றாமரை மாலைதரித்து, உயர்ந்தும் பருத்திருக்கிற தேகமுள்ளவர்களாய்த் தேவலோகப் பட்டுடுத்திக்கொண்டு, இந்திர ரூபமாய் விளங்குகிறவர்களாகக் கண்டான். அந்தப் பெண்ணையும் அப்படியே இலக்குமியைப் போலிருக்கக் கண்டான். இப்படிப் பார்த்த மாத்திரத்திலே அதிக வியப்புஞ் சந்தோஷமும் ஆனந்தமுங் குடிகொண்டு, அங்கே நிற்கிற மகானுபாவரான வியாசமகாமுனியினது திருவடித் தாமரைகளிலே கிரீடகாந்தி சேர்ந்து குலவக்கீழ் விழுந்தெழுந்து கைகூப்பினின்று, சுவாமி! தேவரீரிடத்தில் இது ஒரு அதிசயமன்று: தேவரீருடைய மகிமைக் கடலிற் சகல விசித்திரமும் விளங்கிக்கொண் டிருக்கின்றதென்று மகிழ்ந்துத் துதித்தான். அந்த மகாரிஷி யனுக்கிரகத்துடனே பின்னும் அந்த ராஜனைப் பார்த்து, ஓ இராஜனே! இது போன்ற சில சரித்திரங்களையும் சொல்லுகிறேன் கொஞ்சம் கேளும்:

### வியாசர் பௌமாசுவீ முதலிய பெண்களின் சரித்திரங் கூறிப் பாஞ்சாலனைத் தேற்றுதல்

முற்காலத்தில் நிதந்து என்று ஒரு மகானுபாவனாகிய இராஜரிஷி யிருந்தார். அவருக்கு மகா பலசாலிகளாகிய ஐந்து குமாரர்கள் பிறந்தார். அவர்களுடைய நாமதேயங்கள் சால்வேயன்-சூரசேனன்-சுருதசேனன்-திந்துசாரன் - அதிசாரன் இவரெல்லாரும் தருமநிலை யுடையவர்கள். ஆதலால், ஒருவருடன் ஒருவர் நட்புக்கொண்டு அதிக்கிரமிக்காமலிருந்தார்கள். இப்படி யிருக்க, உசீநகரதேசத்துச் சக்கரவர்த்தியாகிய சிபியென்னும் மகாராஜன் தன் மகளாகிய பௌமாசுவீ என்பவளுக்குச் சுயம்வரம் ஏற்படுத்தினான். அதற்கு எல்லா தேசத்தரசர்களோடு இந்த நிதந்து ராசன் மக்களும் வந்தார்கள். அந்தச் சுயம்வர மண்டபத்திலே சிபிராஜ குமாரியானவள் இவ்வைந்து குமாரர்களையும் இச்சித்தாள். அப்படியே அந்த ஐவரும் விவாகம் செய்து கொண்டார்கள். அவளுக்கு ஐவராலும் ஐந்து மைந்தர்கள் பிறந்து விளங்கினார்கள். அதனாலே உலகத்தில் சால்வேயாளென்றும், சூரசேனனென்றும், சுருதசேனனென்றும், திந்துசாராளென்றும், அதிசாராளென்றும் ஐந்து க்ஷத்திரியவம்சத்தவர்கள் பிறந்து, அப்பெயரையுடைய தேசங்களை ஆண்டு வருகிறார்கள். இப்படி ஒருத்தி ஐவருக்குப் பெண்சாதியாகி மகா தருமநிலையி லிருந்து கீர்த்தி பெற்றாள். ஆகையால், உன் மகளும் பாண்டவர்களை விவாகஞ் செய்து பதிவிரதா மகத்துவத்துடனே விளங்கட்டும் உன் மனதிற் சந்தேகம் வேண்டாம் என்று சொல்லி மறுபடியுஞ் சொல்லுகிறார்.

கௌதம குலத்திற் பிறந்த ஜடிலரென்னும் ஒருவருடைய மகள் மகா தருமநிலையுடையவள். அவள் மஹானுபாவர்களாகிய ஏழு ரிஷிகளை விவாகம் செய்துகொண்டாள். இன்னும் தட்சகருடைய பெண் மாரிஷை என்பவள் பிரசேதர் என்கிற பெயரையுடைய சகோதரர்களாகிய பத்து ரிஷிகளை விவாகஞ் செய்துகொண்டாள். மற்றும் ஓர் காரணங் கேள்: முன்னே தபோவனத்தில் ஒரு ரிஷியினுடைய மகள் ரூபவதியாய் மங்கைப் பருவத்தை யடைந்திருந்தாள். அவள் தனக்குத் தகுந்த புருஷன் வேண்டுமென்று ஐந்து முகத்தையுடைய சதாசிவமூர்த்தியைக் குறித்துத் தவஞ் செய்யும்போது, அவர் பிரத்தியட்சமாகி உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க, அவள் மிகவும் யோக்கியனாகிய புருஷனைத் தரல்வேண்டுமென்று இரந்தாள். அதற்கவர் உன் மனதுக்குந் தக்கவராகிய ஐந்து புருஷர்களுண்டாவார்களென்று சொன்னார். அவள் சுவாமி சங்கரனே! நான் ஒரு நாயகனை யாசிக்க ஐவரைத் தந்தவித

மென்னவென்று கேட்டாள். நீ எமது ஐந்து முகத்தையுங் காதலித்தமையால் அப்படியே ஐந்து புருஷரைக் கொடுத்தேனென்று சொன்னார். ஓ துருபத மகாராஜனே! அந்தப் பெண் உன் மகளைப்போல் தவஞ்செய்த பாக்கியவதி. இவளும் சுவர்க்கலோக ஐஸ்வரிய லட்சுமி தான். மேலும், துரோணரைக் கொல்ல ஒரு புத்திரனும், பாண்டவர்ரைச் சேர ஒரு பெண்ணும் வேண்டுமென்று நீதானே தவஞ்செய்து இப்படி பிறந்தாள். இவளைக் குறித்து இந்திரசேனை யிடத்திற் பிரவேசிக்கும்படி ஈஸ்வரன் சொல்லியது இதுகளை நன்றாய் யோசித்துப் பார். தெய்வ சங்கல்பம் இவளுக்கு ஐந்து புருஷர் கிடைக்கவேண்டியதா யிருக்கிறது. ஆதலாற் புத்தியை விசாலப் படுத்திப் பாரென்று புகன்றனர். இப்படிச் சொல்லிய வியாசபகவானைத் துருபதமகாராசன் கும்பிட்டு, சுவாமி! தேவரீர் வார்த்தையைக் கேட்பதற்கு முன்னமே பாண்டவர்களைவருக்கும் என் பெண்ணை விவாகம் செய்விக்க வேண்டுமென்று சித்தமாயிருந்தேன். தேவரீர் வாக்கினாலே சகல பந்துக்களும் யானும் அவள் தற்பூர்வ ஜனனமுணர்ந்து சமுசயம் நீங்கினோம். தெய்வ சங்கல்பத்தைக் கடக்க யார் திறம்? அவரவர் கருமத்தினால் நேரிடுவதற்கு எதிருண்டோ? இதற்காக எத்தனையோ காரணங்கள் தேவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இது தருமமானாலும், அதருமமானாலும், தெய்வத்தின் மூலமாய் வந்ததை மனுஷியன் செய்தே தீரவேண்டும். ஆதலால், குந்திபுத்திரரைவரும் என்மகளைப் பாணிக்கிரகணஞ் செய்யட்டுமென்று சொல்லிப்போட்டு, அந்த வியாசமுனிவருடன் கூட தனது சபாமண்டபத்திற்கு வந்தான்.

இப்பால் அந்தச் சபையிலிருந்த குந்திதேவி, பாண்டவர்கள், துஷ்டத்துய்மன் முதலான போர்களெல்லாம் தாங்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்த பேச்சை நிறுத்திப்போட்டு யாவரும் பயபக்தியுடனே கைகட்டி நின்றார்கள். அம்முனிவர் எல்லாரையும் உட்காரும்படி நியமித்து தருமபுத்திரனை நோக்கி, குழந்தாய்! நீங்களைவரும் இந்த ராஜகுமாரியைக் கலியாணஞ் செய்யவேண்டியதாய்த் தேவ நிபந்தனை ஏற்பட்டது. உங்கள் மாதாவாகிய குந்திதேவியின் வாக்கும் அப்படி வந்தது. ஆகையால், இனித் தாமசம் வேண்டியதில்லை இப்போது சந்திரன் உரோகணி நட்சத்திரத்தோடே கூடுகிறான். இந்த திவ்வியமான நாளிலே உங்கள் புரோகிதரை முன்னிட்டுக்கொண்டு, க்ஷத்திரிய தர்மத்தையனுசரித்து, சாஸ்திர விதியின்படியே நீங்களைவரும் திரௌபதியை விவாகஞ் செய்து கொள்ளுங்களென்று நியமித்தருளினார். அந்தத் தபோநிதி சொல்லிய வார்த்தையைக் கேட்ட சபையிலிருந்த சகலமான பேரும் சந்தோஷம் சந்தோஷம் என்றும், எங்கள் கண்களுக்குத் திருவிழா நேரிட்டதென்றும், எங்கள் சிந்தைக்குக் களிப்புண்டாச்சுதென்று சொல்லி ஆரவாரித்தார்கள். அந்தக் குந்தி மக்களுள் மூத்த தருமராசனும் வியாசமகா முனிவருக்குக் கைகூப்பி, அப்படியே பாக்கியம் சுவாமி பாக்கியம் ஆகுகவென்று தொழுது எங்களுக்குத் தர்மாதர்மங்களை நியமித்தருளுங் குலகுருவானவர் தேவரீரன்றோ எங்களைவர்க்கும் மனதில் இப்படியேதோற்றியிருந்தும், எங்கள் மாதாவின் அருள்வாக்கும் அவ்வாறே கிடைத்தும், மனதிற் கொஞ்சம் கவலையிருந்தது அந்தக் கவலை இருள் தேவரீருடைய திருவாய் மொழியென்னும் பெரிய தீபத்தினாலே துறத்தப்பட்டது. பெரியோர்களுக்குச் சம்மதியாகியது எதுவோ? அதுவே பெரிய தர்மம். அவர்கட்குச் சம்மதியில்லாதது யாதாயினும் தர்மமன்று. இது வன்றோ சாஸ்திரங்களின் திரண்டகருத்து. ஆதலால், பரசுராமன் தன் பிதாவாகிய பிருகு மஹாமுனியின் சொற்கேட்டுத் தாயைக்கொன்றான். இராகவன், விஸ்வாமித்திரன் சொல்லுறுதியினால் தாடகையைக் கொன்றான். இனிச் சந்தேகமில்லை, சுவாமிகளிட்டருளிய கட்டளையின்படி நிறைவேற்ற இதோ காத்திருக்கிறேன் என்று சொன்னார்.

அதுகேட்ட வியாச மகாமுனிவர் பாஞ்சாலராசனைப் பார்த்து, இராஜனே! கலியாணத்திற்கு வேண்டியதெல்லாஞ் சீக்கிரம் ஜாக்கிரதையாய்ச் சேகரியுமென்று செப்ப, அவனும் சுவாமி அடியேனால் எவ்வளவும் தடையில்லை. முன்னமே விவாகத்திற்காக எல்லாஞ் சித்தப்படுத்தி யிருக்கிறேன். இன்னு மேதாவது சேகரிக்கவேண்டியதும் ஒரு நிமிஷத்திலே தருவிக்கிறேன் என்று சொல்லித் தன் குமாரனை அழைத்து, நம்முடைய பெண்ணுக்கு மங்களஸ்நான முதலியவைகளையும் சீக்கிரத்தில் நடக்கவேண்டுமென்று கட்டளையிட்டு வியாசரிடத்தில் விடைபெற்றுக்

கொண்டு சபையைவிட் டெழுந்திருந்தான். அந்தப்பராசர் புத்திரரும் பாண்டவர்களுக்கு விடைகொடுத்து எழுந்தருளினர். உடனே சபையி லிருந்தவர்களும் எழுந்தார்கள்.

திரௌபதி மாலையிட்ட சருக்கம் முற்றிற்று.

---

பத்தாவது,

## திருக்கலியாணச் சருக்கம்

கண்ணன் துதி

சேயபங்கயச் சிறுவிரலங்கையிற் றிரட் டியநறுவெண்ணெ, யாயர்மங்கைய ரிட்விட வமுது செய்தாடிய திருக்கூத்து, நேயமுங் குறு முறுவலும்புரிந்து பார்த்தருளியநெடுங் கண்ணு, மாயவன்திரு வடிவமுமழகுமென் மனத்தை விட்டகலாவே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு வேதவியாசர் தெருட்டி ஆக்யா பித்த பிரகாரம் விரைவில் நடத்தவேண்டுமென்று பாஞ்சாலராசன் தனது குமாரனுக்கும் அமைச்சர்கட்கும் அறிவித்தமாத்திரத்தில், அவர்கள் தமது பட்டணத்திலும் இதரதேசத்திலுமுள்ள சகலமான பந்துக்களுக்கும் சிநேகிதர்களுக்கும் பிராமணவுத்தமர்களுக்கும் நானுசாதிப் பெரிய மனிதர்களுக்கும் கலியாண சமாசாரந் தெரிவித்தார்கள். அவரவர்கள் விநோதமாகிய வஸ்திராபரணங்களைத் தரித்துக்கொண்டு, சந்தோஷத்துடனே அந்தப் பட்டணம் வந்துசேர்ந்தார்கள். அப்போது அனேகக் குதிரைகள்-யானைகள்-தேர்கள்-சிவிகைகள் முதலான வாகனங்களாலும் அந்தந்தத் தேசங்களிலிருந்துவரும் வரிசைகளாலும், இலக்கமற்ற ஜனங்களாலும், பட்டணத்திற்குப் புறத்திலிருக்கும் சகல விடங்களும் நிறைந்து, பேரோசைகளினுலே சமுத்திரம் போலவும், சகல போக பாக்கியங்களினுலே தேவலோகம் குபேரலோகம்போலவும் விளங்கிற்று அப்பாஞ்சால நகரம். மேலும் நானுவிதமாக அலங்கரிக்கப்பட்டு மங்கள வாத்தியங்கள் முழங்கவிளங்கும் அப்பட்டணமானது, தனது நாயகனுகிய துருபதமகாராசனுக்கு மகளாயிருக்கப்பட்டவள் தனக்கும் மகளுக்கு மகளாயிருக்கப்பட்டவள் தனக்கும் மகனுக்கு மகளாயிருக்கப்பட்டவள் தனக்கும் மக ளாகையாலே, அவளுடைய விவாகத்துக்காகத்தானே அலங்கரித்துக்கொண்டு கலியாணத்திற்கு வருகிறபேர்களைச் சந்தோஷத்துடனே எதிர்கண்டு உபசரிப்பதுபோலிருந்தது. சகல ஜனங்களும் பாண்டவர்களுக்கும் திரௌபதிக்கும் நடக்கும் திருக்கலியாணம் தங்கள் வீட்டுக் கலியாணமாகவே நினைத்து, உச்சாகத்துடன் மனக்களிப்படைந்து இலக்கினத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள். இப்படி பட்டணமெல்லாம் அலங்கரித்தவுடனே, மறுபடியும் ராஜ கிரகத்தையும்-கலியாண மண்டபத்தையும் - விசித்திரமான வஸ்திரங்களாலும், கண்ணுடிகளாலும், பூமாலைகளாலும், அகிற்புகையினுலும் பொற்ருேரணங்களாலும், புதுக்கினுர்கள் அந்தச் சிறப்புகளு மிந்த மகாகலியாணத்திற்கிடமாயினேமேயென்று சந்தோஷ மடைந்ததுபோற் பிரகாசித்தன. அம்மண்டபத்தி னடுவிலே விவாக வேதிகை செய்து பொற்றகட்டினு லலங்கரித்து, சுருக்கு - சுருவம்-சங்கு பாத்திரம்-தர்ப்பைகள் - பொறிகள் - அக்ஷதைகள் முதலான சுப வஸ்துக்களாலே நிறைந்து புரோகிதர்கள் சிறந்த வேதியர் கூட்டத்தோடு நிறைந்திருந்தார்கள். பாண்டவரும் தமது புரோகிதரை அழைப்பிவித்துச் சமாவர்த்தனஞ் செய்துகொண்டு அனேக வஸ்திரங்கள் பசுக்கள் சுவர்னங்கள் முதலியவைகளை வேதியருக்கு வழங்கி, மங்கள ஸ்நானஞ்செய்து, நவரத்தினங்க ளிழைத்த குண்டலமுதலிய ஆபரணங்களையும் விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்களையும் அணிந்து, பரிமள மிகுந்த கந்தமாதிகளைப் பூசிக்கொண்டு, புஷ்பசரங்களும் புனைந்து மணவாளக் கோலத்துடனே விளங்கினுர்கள். அப்போது திரௌபதிக்குக் கோகிலாதேவி முதலானவர்கள் வேதியரைக் கொண்டு மங்கள ஸ்நானமும் சாந்தியுஞ்செய்வித்து, அவர்கட்குப் போஜனங்களாலும் தக்ஷிணைகளாலும் திருப்தியுண்டாக்கி, அவர்களுடைய ஆசீர்வாதத்தினுற் சிறந்து விளங்கும்படியான அப்பெண்மணிக்கு கேசமுதற் பாதம் வரைக்கும் ரத்னபரணங்களினுலே அலங்கரித்தனர்.

அந்தக் கலியாணப் பெண்ணுனவள் ஒரு பொற்கொடியானது ரத்னமயமான பூங்கொத்துக்களினுல் வளங்கெழுமியதுபோல விளங்கினுள். அன்றியும், வெள்ளைமையின் இராத்திரியானது தீபங்களினுல் ஒளிர்வதுபோலுமிருந்தனள். கனகசித்திரஞ் செய்து மினுமினுக்கிட்ட வெண்பட்டு வஸ்திரத்தை இவ

திரௌபதி திருக்கலியாணம்.



தருமனுக்கு இளவரசு பட்டங் கட்டுதல்.

ளுக் குடுத்தியது எவ்வாறிருந்ததெனில், பொற்சிறகினையுடைய அன்னங்கள் சூழ்ந்து விளங்கிய கங்காநதியானது ஆசார வீனர்களாற் றனக்கு நேரிட்ட அசூசியை நீக்கிக் கொள்ளும்பொருட்டு மகா பரிசுத்தையாகிய இவள் தேகத்தைக் கட்டிக்கொண்டதுபோல விருந்தது. கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்கள் இவள் சரீரத்திலுண்டான சுபாவ வாசனைக்குத் தோற்றதினாலேயோ? மற்றயாதுகாரணத்தினாலேயோ? அவைகளை நைய அறைக்கப்பட்டுத் தனது திருமேனி முழுவதும் பூசப் பிரகாசித்தாள். பரிமள மிகுந்த மெல்லிய புஷ்பங்கள் பலவும் இவளியற்கை வாசனையோடுங் கூடிய சரீர மென்மைக்குத் தோற்றன வென்று புலவர்கள் மதிக்கும்படியாக அம்மலர்களை நாரினா லிறுகக்கட்டி அவள் முடியிலுங்கழுத்திலுஞ் சூட்டிச் சிறை செய்தார்கள். இப்படிக்கெல்லாம் சிங்காரிக்கப்பட்ட பாஞ்சால கன்னிகையைப் புரோகித பத்தினி முதலாகியப் பிராமணப் பெண்களுடனே கோகிலாதேவி முதலிய க்ஷத்திரிய சுமங்கிலிகள் கந்தபுஷ்ப தாம்பூலம் முதலிய மங்கள வஸ்துக்களுள்ள பொற்பாத்திரங்களை ஏந்திக்கொண்டு, அழகிய கலியாணப் பாடல்களைப்பாடி, சகல தேவஸ்திரீகளும் லட்சுமி தேவியைச் சூழ்வதுபோற் சூழ்ந்து, வாத்தியங்களும் சங்கீதங்களும் முழங்க மெள்ள மெள்ள அந்தப் புரத்தினின்றும் கலியாண மண்டபத்திற் கழைத்து வந்தனர். இப்படி திரௌபதியை அனேகஞ் சுமங்கலிகள் சூழ்ந்துவருந் தோற்றம் எவ்வாறிருந்த தெனில், ஆகாயத்தின்க ணிறைந்த மின்னல்களானவை இவளுடைய தேககாந்திக்குத் தாங்கள் தாழ்ந்தமையாலே விசேஷ சமயத்திலே இவளிடத்திற் சேவகம் பண்ணியேனும் அனுக்கிரகம்பெறவேண்டுமென்று, பூமியிலிறங்கிவந்து, சஞ்சலத் தன்மையை விட்டு இவளைச் சூழ்ந்ததுபோல் இருந்தது. அன்றியும் அனவற்ற ஸ்திரீ ஜனங்களால் மலிந்த அந்தக் கலியாண மண்டபமானது அப்சரசுகள் விளங்கிய இந்திரன் சபைக்கு நிகராயிருந்தது.

இவ்வாறு கலியாணப்பெண்ணை விவாகச்சபைக்கு அழைத்துக்கொண்டுவந்து நிறுத்தினவுடனே தவுமியர் முதலாகிய அனேக மகாமுனிவர்களும் ஸ்ரீ கிருஷ்ணன் முதலிய அளவற்ற பந்து மித்திரர்களும், புடைசூழ வீற்றிருக்கிற பாண்டவர்களை, துருபதமஹாராஜன் தன் சுற்றத்தாருடனேயும் பிராமணர்களுடனேயும் சகலவித நாதகீத பரதநாட்டிய ஸ்திரீகளுடனே அவர்கள் இருக்கும் இடத்திற்குப் போய்த் தகுந்த மரியாதைகள் செய்து, பின்புறத்திற் சுவஸ்தி வாகனங்களும் முன் புறத்திற் பல வாத்தியங்களும் கோஷிக்க வெகு சிறப்பாய் அழைத்துக்கொண்டு வந்து சபையில் அமர்த்தினான். இப்படி இஷ்டஜனங்களாலும் பந்துஜனங்களாலும் நிறைந்து, தாமரைகளும் கரு நெய்தல்களும் இறைக்கப்பட்டு, நட்சத்திரங்களும் மற்றக் கிரகங்களும் பொருந்திய நிர்மலமாகிய ஆகாசம்போலே விளங்கும் அச் சபையில் இவர்களெல்லாஞ் சேர்ந்த மாத்திரத்திலே, பேரி-காகளம்-சங்கு-மிருதங்கம் முதலிய வாத்தியங்கள் ஏககாலத்தில் எங்குங் கணகணவென்று முழங்கின. இந்த வாத்திய கோஷமானது திரிபுவனமுங் கேட்கா நின்ற மேகத்தொனி போலிருந்தது. இவ்விதமான வாத்தியங்களும்-சங்கீதங்களும்-ஜயசப்தங்களும்-முழங்கிக்கொண்டிருக்கிற அச் சபாமண்டபத்திலே வேதிகையைச்சுற்றிச் சகல கலைவல்லவரான பிராமணர்களும், அவர்களைச்சுற்றி இரண்டு வகையான சூரியகுல சந்திரகுல வரசர்களும், அவர்களைச்சுற்றி அவ்வவ் வரசர்களின் பந்து வர்க்கங்களான பல பார்த்திபர்களும், அவர்களைச்சுற்றி மந்திரிகள் - சேனாதிபதியர் முதலான பிரமுகர்களும், அவ்வவர்கட்குத் தக்கபடி யமைந்திருக்கின்ற ஆசனங்களில் உட்கார்ந்த பின்பு பாண்டவர்களுடைய புரோகிதராகிய தவுமியமுனிவர், ஓ துருபத மகாராஜனே! இலக்கினம் வந்துவிட்டது. விவாகத்துக்குச் செலவு கொடுக்கவேண்டும் என்றுகேட்க, அவ்வரசன் இனி யடியேனாற் செய்யவேண்டிய காரியங்கட் கெதிர்பார்த்திருக்கின்றேனாதலால் தேவரீர் சங்கற்பார்தி சற்கிரியா நியதிகளோடு விரிவாக காரியத்தை விபவமாய் நிறைவேற்றுங்களென் றுத்தரவுசெய்தான்.

அதுகேட்ட முனிவர் தருமபுத்திரனை யழைத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு, சபைக்கு பூசையும் சங்கல்பமும் செய்வித்து, அங்குராப்பணமும் பிரதிசரங்களும் நடத்தி, த்ரௌபதையின் பாணிக்கிரகணஞ் செய்வித்து, பெரியோர்களால் ஆசீர்வாதஞ் சொல்லி வைத்து, பின்பு அவ்வேதிகையில் அக்கினியின் உபசமாதானஞ்செய்து, விதிப்படியோ

ஹோமம் வளர்த்தி, தருமபுத்திரர் கையினல் அந்த ராஜகுமாரிக்கு மங்கல சூத்திரந்தரிப்பித்து, வேதியருடைய ஆசீர்வாதமும் வேத வாத்தியமு முழக்குவித்தார். பின்பு புரோகிதருடைய ஆக்கினையினுலே தருமபுத்திரர் அந்தக் கன்னிகையினுடைய கையைப் பிடித்துக்கொண்டு, அக்கினி வேதிகையைப் பிரதக்ஷணமாகவந்து, மந்திரத்துடனே அம்மி மிதித்து, அருந்ததி தரிசித்து, சாயாதேவியுடனே சூரியன் மேருபருவதத்தைப் பிரதட்சிணம் வருவதுபோல அஷ்ட மங்களத்துடன் பிரதக்ஷணஞ்செய்து உட்கார்ந்து கொண்டு, அப்பெண்ணுக்குச் சுமங்கலியத்தன்மை வளரும்பொருட்டுப் புரோகிதருடைய அனுமதியின்படி மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, பொரிகளைக் கைகளால் வாரியிறைத்து அக்கினியில் ஹோமஞ்செய்தார். அப்பெண்ணரசியினது கைகளினின்றும் அக்கினியிற் பொரிகள் சொரியும்போது, செழித்த தாமரைகளிலிருந்து முத்துக்கள் வீழ்வதுபோலிருந்தது. இப்படிக்கு ராஜஹோமமும் - சப்தபதியும் ஆனவுடனே புரோகிதர் இந்தப் பிள்ளையையும் பெண்ணையும் கோலமணையில் உட்கார வைத்து, மகாசபைக்குச் சந்தனபுஷ்ப முதலியவைகளாற் பூசைசெய்து, மங்கல அக்ஷதைகளைப் பெரியோர்கள் கையிற்கொடுத்து, வேதவாக்கியங்களாலே ஆசீர்வாதஞ் செய்வித்தார். சுமங்கலிகளும் மங்கலகீதங்கள் பாடிக்கொண்டு ஆலாத்தி முதலானவைகளைச் சுழற்றினர்கள்.

இப்படி விவாக மகோற்சவம் நடந்தவு
டனே துருபதமகாராஜன் பிரசமணர்களுக்கு
வஸ்திரங்களும்-ஆபரணங்களும்-பசுக்களும்-
பூமிகளும்-வீடுகளும் இன்னுமனேக திரவி
யங்களும் தக்ஷிணையாகக் கொடுத்து, பந்துக்
களையும்-ஆப்தர்களையும்-தகுந்தபடி மரியாதை
யுடனே விசுவாசித்தான். அவன் மனைவியா
னவள் ராஜஸ்திரீகளுக்கும் பிராமணஸ்திரீ
களுக்கும் ஆபரணங்களும் வஸ்திராதிகளுங்
கொடுத்துப் பூசித்து, சம்பந்திகளையும் உபச
ரித்தாள் இஃதானவுடனே அரசனனவன்
சட்சுவை பதார்த்தங்களோடு சித்திரான்னங்
கள்-திருக்கண்ணமுதுபாயசம் இவை முதலா
னவைகளும், பேணி-இலட்டு-அதிரசம்-தேன்
குழல் முதலிய பலகார வர்க்கங்களும், வாழைக்
கனி-மாங்கனி-பலாக்கனி முதலிய பழவர்க்
கங்களு மமைத்த போசனத்தினுற் பிராம

ணர்கட்குத் திருப்தியாகும்படி சமாராதனை செய்து, பின்பு சகல சம்பந்திகள் பந்துக்கள் சிநேகிதர்கள் முதலான பரிவாரங்களுடனே தான் விசித்திரமாகிய கதைகளைச் சொல்லிச் சிரித்துக்கொண்டு இராஜபோசனஞ் செய்து எல்லோருக்கும் சகல சுகந்தமிட்டிருக்கிற சந்தன தாம்பூலங்கள் கொடுப்பித்து, சபையில் நிறைந்த அனேகம் பெரியோர்களுடனே சம்பாஷித்துக்கொண் டிருந்தான். சூரியனஸ்தமித்தவுடனே புரோகிதர் வந்து பிரவேச ஹோமமும் செய்வித்தார். இப்படியே யடுத்த மறு நாட்களிலே முறையே வீமசேன னருச்சுனன்-நகுலன்-சகாதேவன் என்கிற நால்வருக்கும் திரௌபதியை விவாகஞ் செய்வித்து தினந்தோறும் அனுஷ்டிக்கவேண்டிய அவுபாசனுதிகளையும் மற்றுமுள்ள சேஷஹோமங்களையும் நடத்திவைத்தார்கள். இப்படி சிறப்பாக நடந்த விவாக மஹோற்சவத்துக்கு வந்த ஆண் பெண்ணென்னும் இருவகைப் பாலராகிய சகல ஜனங்களும் அங்கமைக்கப் பட்டிருந்த அன்னத்தினுல் அமிர்தத்தையும், தானத்தினுற் கற்பத்தருக்களையும், நிர்த்தகீத வாத்தியாதிகளாற் போகங்களையும், அழகிய ரூபலாவண்யத்தாற் கந்தருவர் - அப்சரசுகள் முதலானவர்களையும், வித்துவத்தினுல் தேவகுரு முதலானவர்களையும், ஆசிரம சிரேஷ்டத்தினுல் நாரதர் முதலிய ரிஷிகளையும், வித்தியாசமின்றி ஒத்திருப்பதைக்கண்டு, சுவர்க்கலோகத்தில் இவைகளின் மிக்க மகிமையாண்டுளதென்று கூறி வியந்து ஆரவாரித்தார்கள்.

### இயாகசேன மகாராஜன் சீதன வரிசை கொடுத்தல்

அந்த யாகசேன் மகாராஜன் தன் மருகமாருக்கு வரிசை கொடுக்க யத்தனித்தவனுய், மிகவும் உயர்ந்த நான்கு குதிரைகள் கட்டிச் சிம்ம லலாட மமைத்துப் பொன்மாலைகள் தொங்கவிட்டுச் சித்திரங்கள் ஏற்படுத்தி, அழகாய்ச் செய்து மேருபருவதத்துக் கொப்பாயிராநின்ற நூறு தேர்களும், பத்திரம்-மந்திரம்-மிருகம் என்று சொல்லப்பட்ட சாதியிற் பிறந்தவைகளாய் எழிடங்களில் மதப்பெருக்கோடு கூடியனவாய் தந்தங்களில் நவரத்தினங்களிழைத்த கிம்புரிகளோடு சுவர்ண கவசயம் வீக்கிய கும்பமதங்களை வகித்து அநேக சுவர்ண ஆபரணங்களாலும், முத்துமாலைகளாலும், பட்டுகளாலும், அம்பாரிகளாலும்,

அலங்கரிக்கப்பட்டு இருபுறத்திலும் மணிகள்
சத்திக்க அசைந்து நடந்துவரும் பருவதங்
கள்போன்ற நூறு யானைகளும், காமபோசம்,
ஆரட்டம், பாக்கிலிகம், வனுயுசம், சிந்துமுத
லாகிய தேசங்களிற் பிறந்தவைகளாய்த் தேவ
மணி, கண்டாபரணம் முதலாகிய நற்கழிக
ளோடு காற்றுங் கற்க முயலும்படியான அதிக
வேகத்தை வாய்ந்து பொன்னும் முத்துக்க
ளாலும் நவரத்தினங்களாலும் பவழங்களி
னலும் செய்த சீனிகளைப் போர்த்து விளங்
கும் ஆயிரங் குதிரைகளும், நல்ல ரூபமும்
பருவமுடையவர்கள் தரிக்கச் சிறந்த அள
வற்ற வஸ்திரங்களும், சிரோ ரத்தினங்களாற்
செய்த அனேக பூஷணங்களும், பல தொழில்
களைக் கற்றுச் சாதுரியமும் ஜாக்கிரதையு
முடைய யோக்கியர்களாகிய அனேக வேலைக்
காரர்களும், அவ்வாறே பழகிய அளவற்ற
அடிமைப் பெண்களும், முத்துத் தோரணங்
கட்டிப் பொற்சரிகைச் சின்னங்களுள்ள பட்டு
மேற்கட்டியோடு பவளங்களாலுந் தந்தங்க
ளாலும், பொன் வெள்ளிகளாலுஞ் செய்த
அனேக கட்டில்களும், உயர்ந்த மணிகளிழை
த்து மிகவும் மிருதுவாகிய பரிசுத்தமுள்ள
தோற்களாற் பண்ணப்பட்ட பெரிய ஆசனங்
களும், பொன் வெள்ளியினுல் வார்ப்பித்த
படிகங்களும், தந்தம் இரத்தின மிவைகளா
லியற்றிய பலவித பாத்திரங்களும், ஆச்சரி
யப்படத்தக்க நிர்ம்மாணமுடைய பெட்டி
பேழைகளும், பொன்மாலைகளும், பொற்சங்
கிலிகளும் கொம்புக்குப் பூண்களிட்டு அலங்
கரிக்கப்பட் டிருக்கின்ற அளவற்ற பெரும்பசுக்
களும், பொற் கட்டுகளோடு பொன்னுறை
களுமுடைய போர்முகக் கத்திகளும், பொற்
கேடையங்களும், கதை-வில்-தூணீரம் முத
லாகிய கருவிகளும், இந்திர தனுவைப்போற்
பிரகாசிக்கும் நானுவித ஆபரணங்களும்,
பொற்சரிகைகளாற் கரைகட்டிய மேன்மையும்
பளபளப்புமுள்ள சகலவித வஸ்திரங்களும்
ஆகிய அனேக வஸ்துக்களைப் பாண்டவர்க
ளில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி அளி
த்து, ரொக்க பொக்கிஷப் பணங்களும் வெவ்
வேறு கொடுத்தான்.

அன்றியும், கலியாணத்துக்கு வந்த சகல
மான பேர்களுக்கும், அவரவர்களுக்கு தகுந்த
படி வஸ்திராபரணுதிகளை வெகுமதி செய்து
அனுப்பிவித்தான். அவ்வரசன் மகளாகிய
திரௌபதி விவாகமானபின்பு தன் மாமியா
ருக்குந் தீர்க்கதெண்டனிட்டாள். அந்தக் குந்
தியானவள் மிகுந்த சந்தோஷத்துடனே மரு
மகளைப் பார்த்து, கண்களிலிருந்து ஆனந்த
பாஷ்பம் பெருக, ஓ என்னருமை மருமகளே!
ஓ நிகரில்லாப் பேரழகையுடைய பெண்
பாவாய்! ஓ குரு வமிசத்தைப் பரிபாலிக்கவந்த
கொடிவிளக்கே! தேவேந்திரனிடத்தில் இந்
திராணிபோலவும், அக்கினி பகவானிடத்தில்
சுவாஹாதேவி போலவும், சந்திரனிடத்தில்
உரோகிணி போலவும், நளமஹா ராஜாவி
னிடத்தில் தமயந்தி போலவும், குபேரனிடத்
தில் பத்திராதேவி போலவும், வசிஷ்ட மகா
முனியினிடத்தில் அருந்ததி போலவும்,
ஸ்ரீமந் நாராயணனிடத்தில் இலட்சுமியைப்
போலவும் நீ உன் கணவர்களிடத்திற் சிறந்த
கற்புடனே அன்புமுடையவர்களாகி நற்
குணங்களையும் வீரத்தன்மையு முடைய புத்
திரரைப் பெறக்கடவாய். மகா பாக்கியங்களை
யும் போகங்களையும் அடையக்கடவாய். பத்
தினியென்னுஞ் சொற்குத் தகுந்தபடி அனேக
யாகசம்பத் தனுபவிக்கக் கடவாய். அதிதி
களையும் பெரியோர்களையும் யோகிகளையும்
ஆசாரியர்களையும் சிறுவர்களையும்பார்த்தாக்களை
யும் அந்தந்தச் சமயங்களில் தகுந்தபடி உப
சாரஞ் செய்து புண்ணிய காரியங்களிலேயே
காலங் கழிக்கக்கடவாய். குருஜாங்கலம் முத
லாகிய தேசங்களிலேயும், அந்தந்தப் பட்ட
ணங்களிலேயும், தருமநிலை தவருத அரசர்
களுக்குப் பட்டாபிஷேகம் பண்ணி வைக்கக்
கடவாய். உன் புருஷர்களாலே ஜயிக்கப்பட்ட
சகல சம்பத்து நிறைந்த பூமிகளை அசுவமேத
மென்னும் பெரிய யாகத்திலே யோக்கிய
ராகிய பிராமணர்களுக்குத் தானங் கொடுத்து
களிக்கக்கடவாய் தீர்க்க சுமங்கலியாயும், தீர்க்
காயுசும் உன் கணவர்களுடனேயும் கூடிச் சுக
மாக வாழக்கடவாயென்று ஆசீர்வாதஞ் செய்
தாள்.

இவ்வாறே தன்னைப் பணிந்த மக்களுக்
கும், மங்களாசனஞ் சொன்னுள். அப்பொ
ழுது கண்ணன் பாண்டவர்களுக்கு வேண்டிய
வரிசைகள் அனுப்பிவித்தார். அந்த வரிசை
களை எல்லாம் தருமபுத்திரர் கண்ணேட்ட
மிட்டு, வந்தவர்களுக் கெல்லாம் மகிட்சி நட
த்தி மரியாதையுடனே அங்கீகரித்தார். இஃ
தன்றி, அளவற்ற இராஜ வர்க்கத்தாரால்
மொய்யெழுதி வைத்த தனங்களையெல்லாம்
மொத்தமாக்கி, அந்த நகரத்திற்றனே சுவாக்

கலோக போகத்திலும் மேற்பட்ட போகங்
களை அனுபவித்துக்கொண்டு தாயாகிய குந்தி
தேவியின் திருவுளப் பாங்கின்படி நடந்து,
பாஞ்சாலியோடு மற்ற சகோதரர் நால்வரை
யும் பாராட்டிக்கொண்டு, ஒருவருஷகாலம்
வரைக்கும் மாமன் வீட்டிற்றானே சகல சம்பிர
மத்துடன் யாவருங் கொண்டாடச் சந்தோ
ஷித்திருந்தார். இவ்வாறவரங்கிருந்த கால
த்தி லந்தச் சோமகபுத்திரனாகிய துருபதராஜ
னும் அவனுடைய பத்தினியும் தமக்கு இந்
தப் பாண்டவர்கள் மாப்பிள்ளைகளாய் வாய்த்
தமையாலே தேவர்களாலும் அசுரர்களா
லும் கிஞ்சித்தேனும் பயமில்லாதவர்களாகி
இவர்களைத் தினந்தோறும் புதியவர்
போலவே சகல வைபவ சாம்பிராச்சியங்களி
னாலே பூசித்துக்கொண்டு வந்தார்கள். அவ
ருடைய புத்திரர் முதலானபேரும் ஒரு நிமிஷ
காலமும் பாண்டவர்களை விட்டுப் பிரியாமற்
பெருமையோடு அனுவிர்த்தி செய்துவந்தார்
கள். சகல நீதிகட்குந் தாயகமான நாயகரை
அடைந்த திரௌபதியை அந்தப்புரத்து
ஸ்திரீகளெல்லாம் மிக்வுங்கொண்டாடிப் பெ
ருமை பாராட்டி வந்தார்கள். அப்பாஞ்சால
ராஜ புத்திரியும் தனக்குக் கிடைத்த புருஷ
பாக்கியத்தினாலே அதிக காந்தியுடையவ
ளாகி யிருந்தாள். அக்குந்தி குமாரர்களும்
பாரியையுடனே கூடி ஒரு வல்லிக்கொடி
யுடன் சேர்ந்த ஐந்து கற்பகத் தருக்கள்
போல் விளங்கினார்கள்.

பின்பு சகல வரசர்களுக்கும் காரணர்க
ளாலே திரௌபதியைப் பாண்டவர்கள் விவா
கஞ் செய்தார்களென்றும், வில்லை வளைத்து
லட்சயத்தை அடித்தவன் அருச்சுனனென்
றும், சல்லியனோடு யுத்தஞ் செய்தவன் வீம
சேனனென்றும், சும்மா யிருந்த ராசாக்களைக்
கூட்டிக்கொண்டு யுத்தத்திற்கு வந்த துரியோ
தனன், கர்னன், சல்லியன் முதலானவர்களை
எதிர்த்து முறியவடித்து ஓட்டியது இவ்
வைவரே என்றும் நன்றாகத் தெரிந்து
கொண்டு சிலர் சந்தோஷத்தையும், சிலர் துக்
கத்தையும், சிலர் ஆச்சரியத்தையும், சிலர்
நிந்தையையும், சிலர் விந்தையையு மடைந்
தார்கள். இன்னுஞ் சிலர் இதென்ன கருமம்?
தருமமே பெரிது? இந்தப் பாண்டவர்கள்
நல்லொழுக்கமும் நற்குணமும் உடையவர்க
ளாதலாலேயன்றோ அரக்குமாளிகையி னின்
றும் தப்பினார்கள். துரியோதனனுடைய எண்
ணம் வீணாயிற்று. குந்தி மிகவும் பாக்கிய
முடையவள். ஆனதினா லல்லவா? அப்பால்
அந்தப் பிள்ளைகளுடனே அக்கினிக்கு இரை
யாகாமல் தப்பி, எங்கேயோ எப்படியோ இவ்
வளவுகாலம் பிழைத்துச் கறந்த மருமகளையும்
வகித்து விளங்குகின்றாள். வீஷ்மாச்சாரி அந்
தக் குலத்துக்குப் பெரியவரா யிருந்தும், சகல
தருமங்களு மறிந்திருந்தும், இப்படிப்பட்ட
கொடிய செய்கைகளைச் செய்த பேரன்மார்களை
விசுவாசித் திருக்கின்றாரே, இவருடைய அறி
வையும் வயதையும் என்ன சொல்லவேணும்.
இவரை யல்லாமல் ஓர் குருடன் எல்லாக் காரி
யங்கட்கு நாயகமாய்க் கண்களைச் சிமிட்டிக்
கொண்டு கோட்டான்போ லிருக்கின்றானே,
அவனாவது தன் சகோதரனுடைய மைந்த
ரிடத்தில் இக்கொடிய செய்கை செய்யக்
குறித்த துரியோதனனாதியரைக் கண்டிக்க
லாகாதா? அவனும் அனுகூல சத்திராதி
யாய்ச் சம்மதித்திருக்கிறானே, இவர்களெல்
லாம் ஏங்கி யழும்படியாக வெளிப்பட்டு,
யாவரானு மறத்தற்கரிய மச்சேந்திரத்தை
யறுத்து, எதிர்த்து வந்த இராஜர்களை
யெல்லாம் இமைப்பொழுதில் வாட்டி,
அந்தரலோக ஸ்திரீகளும் அடிபணியத்தக்க
ரூபலாவண்ணியத்தையும் கற்புடைமையை
யும் பொருந்திய பெண்ணரசியை விவாகமுஞ்
செய்து கொண்டார்களே இனி சரத்துள்ள
வர்களாயிருந்தால் அவரெல்லா மிப்பொழுது
நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகவேண்டா
மோ? மறுபடி பாண்டவர்கள் முகத்திலும் நம்
முடைய முகத்திலும் எப்படி விழிப்பார்கள்
அப்பாதகரென்று பேசிக்கொண்டார்கள்.

## துரியோதனன் முதலாயினோர் ஆலோசனை

திரிதராஷ்டிரன் பிள்ளைகளும் இந்தச்
செய்தியைக் களங்கமறத் தெரிந்துகொண்ட
மாத்திரத்திலே துக்காக்கினியில் வீழ்ந்து
தவித்து பதைபதைத்துத் துடிதுடித்துப்
பெருமூச்சுவிட்டுப் பதறி ஒன்றுந்தோன்றா
மல் நின்று, பின்பு கர்னன் சகுனி முதலான
வர்களுடனே ஆலோசிக்க வாரம்பித்தார்கள்.
அந்தக் கூட்டத்தில் துரியோதனன், ஓ என்னு
மித்திரர்களே! கேளுங்கள். பாலியமுதற்
பாண்டவர்கள் நம்மை அலட்சியஞ்செய்து
வந்தபடியினாலேயும் இராச்சியபட்டத்தை
ஆள முயன்றபடியினாலேயும், நாமவர்களை
வேரோடுங் கொல்லவேண்டுமென்று வெகு
சமயங்களில் யத்தனப்பட்டும் உபயோக மில்

லாமற் போயிற்று. பின்பு அவர்களை வாரணாவ தத்திற் கனுப்பி அரக்குமாளிகையில் அக்கி னிக் கிரையாகும்படி செய்தோம். அதினின் றும் அவர்களெப்படியோ தப்பி வந்துவிட் டார்கள். நாமோ பாண்டவர்கள் பரிஷ்கார மாய் மடிந்தார்களென்று சித்தமாக நினைத்து, அந்த அரக்குமாளிகைத் தீயில் அகப்பட்ட ஆறு தேகங்களுடைய எலும்புகளை அவர்க ளுடைய எலும்பென்றும் அந்தச் சாம்பலை அவர்களுடைய சாம்பலென்றும், எடுத்து வந்து கங்கையிற் போட்டுவிட்டுப் பாண்ட வர்கள் இறந்துபோனார்கள் என்று சகல மான பேருக்கும் தெரிவித்ததுமன்றி, சிராத்தங்களையுஞ் செய்து சத்துரு பயமில் லாமல் இராச்சியத்தை ஆண்டுவந்தோம். இப்போது இதென்ன ஆச்சரியம்? எப்படி தப்புவித்துக் கொண்டார்கள்? புரோசன னெவ்விதம் புத்திகெட்டான். எவ்வித மிவர் களை விட்டான். எப்படி எரிந்துபட்டான். ஐயோ! அந்தப் பாண்டவர்கள் லோகாந்த ரத்தி லிருந்து மறுபடியும் பிழைத்துவந்தார் களோ! அப்படி நடக்குமா? இவர்கள் பாண் டவர்கள்தானோ? அல்லவோ? இவர்கள் அவர் களே என்பதற்கு எவ்வளவேனுஞ் சந்தேக மில்லையே; பாண்டவர்கள் பிழைத்ததுமன்றி, இவ்வளவு ராஜாக்களையு யவமானம்பண்ணி பெண்களுக் கெல்லாம் சிரோமணிபோன்ற பாஞ்சாலன் மகளைக் கலியாணஞ் செய்துக் கொண்டது நமது கண்ணி லுண்டாகிய புண் ணிற் கோலிட்டதுபோ லாச்சுதே; நாம் பிழைத்த பிழைப்பும் போச்சுதே; நம்மு டைய வீரத்தன்மை என்னத்திற்கு, இனி அவர்கள் மாமனுடைய பலத்தினாலே மிகுந்த சேனைகளோடுவந்து நம்மைச் செயித்து, நம் மூடைய கண்களுக்கெதிரே சிறப்பாக அர சாட்சி செய்வார்களே; சும்மா யிருந்தாலு மப கீர்த்தி, ஒருவரோடு சொன்னாலும் அபகீர்த்தி, ஐயையோ! இனி அவர்களுக்கு நம்மிடத்தில் மிகுந்த பகையுண்டாயிற்றே என்ன செய்ய லாம்? வினைப்பயனை வெல்லப்படாது. தெய்வ பலமே பலமன்றி, மனுஷியபலம் ஒன்றுக்கு முதவாது. ஆதலால், நாம் எவ்விதத்தில் க்ஷேமம் பெறலாமோ? அதை நீங்கள் யோசித் துச் சொல்லவேண்டு மென்றான்.

அதுகேட்ட சகுனியானவன் சொல்லுகி றான்: ஓ மகாராசனே! உலோகத்திலே ஒருவ னுக்குப் பல சத்துருக்களிருப்பார்கள். அவர்க ளிற் சிலரை இளைக்கச் செய்யவேண்டும். சிலரை உபத்திரவப் படுத்தவேண்டும். சில ரைக் கொல்லவேண்டும். சிலரை வெல்ல வேண்டும். அப்படிக்கு நீதிசாஸ்திர மிருக்கி றது. அந்தப் பாண்டவரோ நமக்குக் கொல்ல வேண்டிய சத்துருக்கள். அன்றியும், அப் பாண்டவர்கள் எல்லா ராஜாக்களுக்கும் அவ மான மூண்டாக்கி யிருக்கிறார்கள். ஆதலால், இப்போது மற்றை ராஜர்களையுங் கூட்டிக் கொண்டு, நாமும் அவர்களும் ஒருவிதமான ஏற்பாடு செய்து, இப்போது அவர்க ளடைந் திருக்கிற ஜெய நிமித்தமாகப் போர்புரிய வேண்டியது அத்தியமென்று எனக்குத் தோற்றுகிறது. இப்படி எல்லாரும் ஒருமித்து ஒரு ஏற்பாடு செய்துக்கொள்ளாமற் போனால் அப்பாற் பச்சாத்தாபப்பட வேண்டியதாக வரும். இந்தக் காலமும் இந்தத் தேசமுந் தான் பாண்டவர்களை நாம் வேருடன் களைவ தற்கு யோக்கியமாகியவைகள். ஏனென்றால், அவர்கள் துர்ப்பல மடைந்து தனித்திருக்கி றார்கள். நீங்கள் இப்போது வெல்லாமற் போனால் உலகத்தில் எல்லோராலேயும் பரி ஹாசம் பண்ணப்படுவீர்கள். பாண்டவர்கள் எந்தப் பிடிப்பினாலே போகத்தை அடைந்து, இனி ராச்சியத்தைச் சாதிக்க நினைத்திருக்கி றார்களோ தெரியவில்லை. அந்தப் பாஞ்சால ராஜன் அற்பமாகிய சேனையும் பலமு முடை யவ னாதலாலே, அவனை நான் லக்ஷிய மாக நினைக்கவில்லை. விருஷ்ணி வமிசத்தா ரிரண்டுபே ரிருக்கிறார்கள். இராமனென்றும் கிருஷ்ணனென்றும் சொல்லுகின்ற அவர்க ளுடைய உதவி இவர்களுக்கு விசேஷந்தான். அவர்கள் இச் செய்தியை கேட்டு இவர் களுக்கு உபபலம் பண்ணுகிறதற்கு முன்னு தாய்ச் சகல சேனைகளோடும் நாம் போய்ச் சூழ்ந்துகொள்ள வேண்டும். இப்படிக் கல்லா மல் யதுகுலத்தோரும் மற்றுஞ் சில ராஜர் களும் துருபதனோடு ஒன்றாகிப் பாண்டவர் களுக்குச் சகாயம் பண்ணினால், அப்போது கொஞ்சமேனுஞ் ஜயிக்கக்கூடாதவ ராவார் கள். முன்னமே பாம்பின் வாயிற் புகுந்து தப்பியதுபோல அரக்கு மாளிகையினின்றும் தப்பியதே நமக்குக் குறைவு. இப்போதும் நாம் யுத்தத்திற்குப் போனவிடத்திலே தப்பிப் போவார்களேயாகில் அப்பா லிப்பூமியில் நாமிருக்கவேண்டிய காரணமில்லை. அன்றி யும், அந்த யாதவர்களும் இவர்களுடன்கூடிப் பட்டணம் வந்து சேர்ந்தால், சண்டை செய்

யும் இரண்டு கடாக்கள் நடுவில் நரி நின்று நசிங்கியதுபோல் நேரிடுவதுமன்றி, மேலாகிய கொடிய துன்பத்தையும் தரும். ஆதலாற் பல தேவனுடைய மகா வீரியமுள்ள சேனைகள் நம்முடைய சேனைகளாகிய குருவிகள் மீதில் டேகைபோல் விழாமலிருப்பதற்கு முன்னமே நாம் எதிர்த்து, அந்தப் பாஞ்சால நகரத்தை அழிக்க ஆரம்பிப்போம். இதுவே இக்காலத்திற்கேற்ற உசிதமென்ன எனக்குத் தோற்றுகிறதென்று சொல்லி முடித்தான்.

இவ்வாறு யுத்தியில்லாமற் பேசிய சகுனியினுடைய பேச்சைக் கேட்ட சோமதத்தனுடைய குமாரனுகிய பூரிச்சிரவணனவன் சமயோசிதமாகச் சொல்லத் தொடங்கினன். கேட்டீர்களோ சபையார்களே! புத்தியுள்ள புருஷனானவன் தனது ராஜன்-மந்திரி-மித்திரன்-பொக்கிஷம்-தேசம்-துர்க்கம்-சேனை என்கிற ஏழு பிரகிருதிகளையும், பிறனுடைய ஏழு பிரகிருதிகளையும் நன்ருக அறியவேண்டும். காலதேசங்களைக் கண்டறிய வேண்டும். அன்றியும், சந்தி-யுத்தம்-சேனையுடன் செல்கை-சும்மாயிருத்தல்-விரோதஞ் செய்தல்-பற்றுதல் என்னும் ஆறு குணங்களையும் நன்ருக அறிந்து எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டும். அல்லாமலும், விருத்தி சமானமாயிருத்தல் குறைவுபட்டிருத்தல் என்னும் மூன்று சித்திகள் இருக்குமிடத்தையும், மித்திரபலத்தையும், பராக்கிரமத்தையும், நன்ருகச் சோதித்தறிந்தபின்பு தன்னிற்ருனே சற்று நிதானித்து, சித்தசன்னதி-அருத்த லோபம்-காமம்-வைடம்மியம்-அசனப்பிரியம்-கோபம்-அனுட்டணம் என்று சொல்லப் படுகின்ற அகங்காரம் உலோபம்-விரகம்-பகை-பேர்சனப்பிரியம்-தாய்தல்-சோம்பல் என்னும் இந்த ஏழுவகை விசனங்களுள், எவ்வித விசனத்திற் பகைவர் அழுந்தி இருக்கின்ருர்களோ அதையுங்கண்டு எதிர்க்கவேண்டும். அப்படிக்கில்லாமற் சாகசமாய் எதிர்த்தால், தொந்தரவு கிடைக்குமென்பதிற் சந்தேகமில்லை. இப்பொழுது நான் நினைக்கிறேன் பாண்டவர்கள் மித்திர குலத்தோடும், பராக்கிரம பலத்தோடும், சேனுபலத்தோடுங் கூடியவர்கள் அவர்களுடைய நற்செய்கைகளாலே மந்திரி முதலான பேர்களும், இராச்சியத்துக்கு உரியோர்களும், அவர்களிடத்தில் அன்புசெய்து வருகிருர்கள். அவர்களுக்குள் அர்ச்சுனன் மிகவும் சிறந்தவன் அவன் சொல் அயோக்கியமாயும், சம்பந்தமற்றதாயும், பொய்யாயும், எப்போதும் இருக்க மாட்டாது. மேலும், கேட்போர் செவிக்கு இனிப்பாகவே யிருக்கும். அவன் தனது அழகினுலும், சாதுரியத்தினுலும், செய்கையினுலும், எல்லோருடைய கண்களுக்கும் மனதுக்கும் இனிப்பாக விருக்கிருன். ஜனங்களெல்லாம் அவர்களைத் தங்கள் பிள்ளைகளைப்போல் நினைத்திருக்கிறது மன்றித் தெய்வமும் அவர்களைக் காப்பதிற் கண்விழித்துக் கொண்டிருக்கிறது. அந்த அர்ச்சுனனும் வீமன் முதலாயினேரும் ரூபத்தினுல் உயர்ந்திருப்பதற்குச் சரியாகப் பராக்கிரமத்திலும் சிறந்திருக்கின்ருர்கள். இப்படி சகல லக்ஷணங்களு முடையவர்களாகிய அவர்களைச் செயிக்க நாம் யத்தினப்படுவது தகாததா யிருக்கிறது. ஏனென்ருல், இப்படிப்பட்ட சவுரிய முடையவர்கள் நமக்குள்ளே யாரிருக்கிருர்கள்? அவர்களிடத்திற் பிரமசக்தியும் மந்திரசக்தியும் தந்திரசக்தியும் உச்சாக சத்தியும் நிறைந்திருக்கின்றன. இவை யெல்லாம் அர்ச்சுனனிடத்தில் விசேஷமாக்களும் தருமபுத்திரரோ மூலமந்திர பலங்களைக் காலமறிந்து விடத்தகுந்த சாதுரியமுள்ளவர்.

அல்லாமலும் சாம தான பேதமென்னு மிம்மூன்று உபாயங்களினுலேயே பகைவரை வெல்லுஞ் சாமர்த்திய முள்ளவர். அவரிடத்திலிருக்கிற சாமர்த்தியம் மிகவும் அதிசயப்பட்டது. எப்படியென்ருல், அயலாருடைய பொருள்களைக்கொண்டே தம்முடைய மித்திரரையும் சேனைகளையும் மூலஸ்தானத்தையும் உறுதிப் படுத்திக்கொண்டு, சத்துருக்களைச் செயிக்கவல்லவர். இதுவுமல்லாமல் அப்பாண்டவர்களை நாம் ஜெயிக்கக்கூடா தென்பதற்கு வேறு காரணமொன் றிருக்கின்றது. அதாவது, யதுகுலத்து அண்ணன் தம்பிக ளிருவரும் இவர்களுடைய காரியத்திற்கு வீரியராயிருக்கிருர்கள் இப்படி எல்லா வழியிலும் உயர்ந்திருப்பதைப்பற்றி, நாம் அவர்களுடனே ஒரு சந்தி பண்ணிக்கொண்டு வந்த வழியைப் பார்த்துப்போவதுதான் எனக்கு நல்லதென்று தோன்றுகிறது. நான் சொல்லுகிற வார்த்தை உங்களுக்கு இஷ்டமா யிருந்தால் இன்னுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள்.

அந்தத் துருபதன் பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டு இடிப்போம் அடிப்போம் கொல்லுவோம் வெல்லுவோம் என்று நினைக்கிறீர்களே, அதுவும் கூடாததா யிருக்

கின்றது. ஏனென்றால், அந்த ராஜாவானவன்
முன்னமே நாம் ஜயிக்கக் கூடாதவனாயிருந்
தான். இப்போதோ பாண்டவர்களுடனே
கூடிப் பெருமை யடைந்திருக்கிறான். அவ
னுடைய பிள்ளைகளால் திருஷ்டத்யும்மன்
சிகண்டி முதலானவர்கள் மிகவும் சூரர்கள்.
அஸ்திர வித்தையிற் சக்தியானுசாரம் பயிற்சி
யுள்ளவர்கள். நல்ல புத்தியும் யுக்தியும் உடை
யவர்கள். இந்த ராஜ்யத்துக்குள்ள ராஜநீதி
களை நன்றாக அறிந்து, தங்கள் பிரபுத்து
வத்தில் மாறாத அபிமானமுள்ள மந்திரி முத
லாகிய அங்கங்களிருக்கின்றவர்கள் அந்தக்
காலங்களில் அரசன் செய்வதான சன்மா
னங்களாலும், அவனது அரசாட்சியின்
சீர்மையினாலும், அவன் தேசத்திலும் பட்ட
ணத்திலுமுள்ள ஜனங்களெல்லாம் மிகுந்த
களிப்புடனே ராஜகாரியங்களில் ஐக்கியப்பட்
டிருக்கிறார்கள். பலத்த மதில்களாலும், அகழி
களாலும், கோட்டை வாசல்களாலும், புறச்
சுவர்களினாலும், அதைச் சுற்றிலும் போட்டி
ருக்கிற மேட்டுகளினாலும், பிளக்கக்கூடாத
கதவுகளினாலும், ஏமாறாத காவலாளிகளா
லும், அந்த நகரமானது சதாகாலமும் காக்
கப்பட்டு வருகின்றது. அதில் அயலவர்
திகைத்துப் போகும்படியான அனேக இயந்
திரங்களும், ஆயுதச்சாலைகளும், விஸ்தார
மாகிய வைத்தியசாலைகளும் நிறைந்திருக்கின்
றன. நெடுங்காலத்திற்கு உதவத்தக்க தானிய
முதலிய உணவுகளும், மற்றும் வேண்டிய
உமி கெந்தகம் நீர் நெருப்பு வெடியுப்பு முத
லிய வஸ்துக்களும், கோட்டைச் சுவர்க்கூட்
டிற் பலமாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.
பெரிய பீரங்கிகளும் அனேக மிருக்கின்றன.
நைஷ்டிகன் தாரவன் விப்பிரன் மானுஷன்
என்கிற பிராகார சிப்பிகளாலே மிகவுங்
கொண்டாடப்பட்ட நிர்மாணமுள்ளது. வெகு
சேனைகள் நிறைந்துள்ள வயிற்றினையுடை
யது. இப்படிக்கெல்லா மிருக்கிறபடியினாலே,
அந்த நகரம் எவ்வளவேனும் பேதிக்கக்
கூடாத நிலையுள்ளதா யிருக்கிறது. ஆதலால்,
யுத்தத்தின் பிரயத்தினத்தை விட்டுச் சந்திக்
காரச் சிந்திக்கவேண்டும். மேலும், நாம் யுத்
தத்திற்காகச் சித்தமாகி வந்தவுடனே இச்
செய்தி அவர்களைக் கேட்டப்படும். உடனே
யமதூதருக்கொப்பாகிய சேனாசனியங்களைக்
கூட்டிக்கொண்டு கண்ணனோடி வருவார். ஆத
லால், இது எவ்வளவேனு மெதிர்க்குங்கால
மாகத் தோற்றவில்லை. நேசமாகிப்போவதே
நமக்கும் மற்றை யரசர்கட்கும் நன்மைக்குக்
காரணமா யிருக்கின்றது இதுதான் எந்தனுக்
குத் தோற்றிய கருத்து. அவசியமிப்படியே
நீங்கள் செய்யக்கோருகிறேன், அப்பாலுங்
கள் மனதென்று சொல்லி முடித்தான் பூரிச்
சிரவன்.

இப்படி சொல்லிய சோமதத்த புத்திரன்
புத்தியைக்கேட்ட கர்னன் சொல்லத் தொடங்
கினான்: ஐயா பூரிசிரவனே! நீர் சொல்லிய
வார்த்தை நீதியுடனே பூரணமதும், பிரயோ
சனமுள்ளதாகவும், கேட்போருக் கிதமாகவு
மிருக்கின்றது. அதற்கு நான் குற்றம் பேச
வில்லை. எனக்குத் தோற்றுகிறபடியே நானும்
ஒருவார்த்தை சொல்லுகிறேன் கேட்கவேண்
டும் எக்காரியத்திலும் எல்லோரும் மனதொரு
மித்து செய்தாலே அது கூடிவரு மில்லா
விடில் கேடுவரும். ஆனபடியினாலே நாமெல்
லாம் வெவ்வேறு கருத்துக்கொண்டிருப்பது
நியாயமல்ல. இந்தக்காலம் எதிர்ப்பதற்கு
நல்ல தருணமாயிருக்கிறது. சும்மா யிருப்பதி
னாற் பயனொன்றுமில்லை. நீங்களெல்லோ
ரும் பாகுபல மிகுந்தவர்கள், ஆயுதபலமுள்ள
வர்கள், புத்தி பலமுள்ளவர்கள், உச்சாக
முடையவர்கள், ஆதலாற் சந்திசெய்வது
நன்றாயிராது. நாம் திடமென்று போய்ச் சூழ்
ந்துகொள்ள வேண்டும். யாதவர்களுக்கு இச்
செய்தி தெரிந்து அவர்களிவ்விடம் வந்து
சேருகிறதற்கு முன்னமே, அல்லோலகல்
லோலமாக்கிப் போடவேண்டும். இப்போது
நாம் பண்ணுகிற முயற்சி இன்னதென்று ஒரு
வர்க்குந் தெரியாமல், ரகசியமா யிருக்கவேண்
டும். காமசுகத்தி லழுந்தியவனும், சிறுவனா
யிருப்பவனும், மூப்பினா யிருப்பவனும்,
யுத்தஞ்செய்ய மனமில்லாத பயங்காளியும்,
நம்முடைய படையிற் சேரவேண்டாம். நமது
யழித்தவனுக்குப் பதினாயிரம்பொன்-குதிரை
களைக் கொன்றவனுக்கு ஐயாயிரம் பொன்-
காலாள்களைக் களைந்தவனுக்கு ஆயிரம்பொன்
கொடுக்கிறோமென்று பறைசாற்றித் தெரிவிக்க
வேண்டியது. ஒருவனும் கட்டளை யில்லாமற்
போகக்கூடாது. இப்படிக் கெல்லாம் நம்மு
டைய சேனைகளைச் சித்தப் படுத்திக்கொண்டு
இக்காலத்திலே நாற்புறமும் மதிலை யிடிக்கும்
படி செய்யவேண்டும். மேடுகளைப் பள்ளங்க
ளாக்கவும் பள்ளங்களை மேடாகவு மாக்கவேண்
டும் மரங்கள் முதலியவைகளை வெட்டி அகழி

யிற் போட்டு அதை தூர்க்கவேண்டும். அந்
தப் பட்டணத்தி லிருப்போரெல்லாம் கலங்
கித் திகைத்து நிற்கச்செய்து உட்புகுந்து,
கொஞ்சமும் யோசிக்காமல் வெட்டிச் சுட்டுக்
கோட்டை புகுந்து கொள்ளையிட வேண்டும்.
இப்படி செய்தால் நம்முடைய பேருக்குத்
தகுந்த கீர்த்தி கிடைக்கும், அதற்கு இதுவே
சமயம் அவர்க ளெல்லாம் இப்போது சுகத்தி
னாலே மதத்து அசாக்கிரதையா யிருக்கிறார்
கள். ஆகையால், என் வார்த்தையை மனதில்
யோசித்துக்கொண்டு சீக்கிரம் புறப்படுங்கள்
போவோம், நமக்குச் செயமுண்டாகும், அனு
கூலமாகக் காற்றும் வீசுகின்றது, மனம் தெளி
வாயிருக்கிறது, வாகனங்களும் ஆயுதங்களு
மகா களையோடு சிரித்துக்கொண் டிருக்கின்றன
என்று சொன்னான் கர்னமகாராசன்.

கௌரவற்கும் பாஞ்சாலர்க்கும் யுத்தம்.

இந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்
திலே திரிதராஷ்டிரன்புத்திரருக்கு வேண்டிய
பேரெல்லாம் பூமி அதிரும்படி உச்சாகத்
தோடே புறப்பட்டார்கள். அவர்கள் ஐம்
புலன்களிலும் சற்றேனும் ஆசையில்லாமல்
தைரியத்தையே முன்னிட்டுக்கொண்டு யுத்தத்
திற்குச் சித்தமானார்கள். அப்போது பெரிய
கோஷத்தோடு துரியோதனன் சேனையாகிய
சமுத்திரம் புறப்பட்டது. அது கர்ன
னென்னும் கீழ்க்காற்றினாற் போக்கிக் கரை
புறண்டு, சைந்தவனென்னும் பெரிய அலை
யோடுகூடி, துற்சாதனனென்னும் திமிங்கில
மீனுள்ளதாய், துரியோதனனென்னும் பயங்
கரமாகிய முதலையையுடைத்தாய் விளங்கிக்
கொண்டு, அந்த நகரியை மிகவேகத்தோடு
அப் பிரதட்சணமாகக் கவ்விக்கொண்டது.
பின்பு ஆயுதங்களாகிய அக்கினிச் சுவாலைகளி
னாலே விளங்கிக்கொண்டிருக்கிற அந்தப்
படை தமது பட்டணத்தைச் சுற்றிக்கொண்டு
அதம்பண்ணுகிற செய்தி தெரிந்தமாத்திரத்
திலே பாஞ்சாலராஜன் பிள்ளையாகிய திஷ்
டத்துய்மன் - சிகண்டி - சுமித்திரன் - பிரிய தரி
சனன் - சித்திரகேது - சுகேது - துவசேனன்
என்பவர்கள் வெகு கோபாவேசமடைந்து,
மேகம்போற் கர்ச்சனை செய்துகொண்டு, தேர
களின்மீ தாரோகணித்து, மகா வீரியமுள்ள
படைகளோடும் ஆயுங்களோடும் ஆரவாரத்
தினாலேயே சத்துருக்களெல்லாம் நடுங்கும்
படி நகரியினின்றும் புறப்பட்டார்கள். துரு
பதமகாராசனும் வெள்ளைக்குதிரைகள் கட்டி

வெள்ளைக்கொடி போட்டிருக்கிற தேரின்மே
லேறி, வெண்சாமரம் வெள்ளைக்குடை முத
லியவைகளால் விளங்கினவனாய்ச் சிங்கம்
போல் வீரவாதஞ் செய்துகொண்டு பிள்ளை
கள் நடுவில் நின்றான். அது நட்சத்திரங்
களினது நடுவிற் சந்திரனிருந்ததுபோ லிருந்
தது. இவ்விதமாகப் பாஞ்சால சேனை வரக்
கண்ட கவுரவசேனையானது வெள்ளம்போற்
புரண்டு இச் சேனையின்மேல் வந்து விழுந்
தது. அப்போது அவ்விரண்டு சைனியங்
கட்கும் கொடிய யுத்தம் நேரிட்டது. அது
இரண்ட இரண்டாற்று வெள்ளங்களொன்
றோடொன்று மோதிக்கொண்டதுபோற் கா
ணப்பட்டது. அல்லாமலும் மூலைக்குமூலை
சிதறிய யானை-குதிரை-தேர் முதலானதுகளி
னாலே அந்த சைனியம் நாற்புறத்திலும்
நட்சத்திரங்கள் சிதறி யிருக்கிற வானம்போல்
விளங்கிற்று.

இவ்வாறு பேரியாழ்களின் முழக்கத்து
டனே பெரிய சண்டை நேரிட்டதைக் கேட்ட
பாண்டவர்கள் கவசகுண்டலாதிகளை அணி
ந்துக்கொண்டு, முகங்களிற் கோபாக்கினி
சொலிக்க ஆயுதங்களோடு புறப்பட்டு வந்தார்
கள். அப்போது பலவித ஆயுதங்களை கையில்
தரித்துக்கொண்டு ரதங்களேறி வருகின்ற
பாண்டவர்களைப் பார்த்தமாத்திரத்திலே சகல
ராசாக்களுக்கும் மனதிலும் தேகத்திலும் நடு
க்கமுண்டாயிற்று. பாஞ்சால சைனியமோ
வென்றாற் பூரண சந்திரனைக்கண்ட கடல்
போல விளிர்ந்து, வெகு சவுரியமாய்த் துரி
யோதனன் சைனியத்தைச் சின்னபின்னங்க
ளாகத் துரத்தியடித்தது. இப்படி யொரு
முகூர்த்தகாலம் இரண்டு படைகளுக்கும் சங்
குலயுத்தம் நடந்தது. அதின்பின்பு இரட்டை
இரட்டையாகப் படைத்தலைவர்கட்கும் மகா
கொடூரமான சண்டை உண்டாயிற்று. அந்தச்
சண்டையிற் சைந்தவனும்-கர்னனும்-அர்ச்சு
னன் பார்த்துக்கொண்டே யிருக்கச்சே சுமித்
திரனென்பவனையும், பிரிய தரிசனனென்கிற
வனையும், நிமிஷத்திலடித்துத் தள்ளினார்கள்.
இதைப்பார்த்து அர்ச்சுனன் பொறுக்காமல்
அச்சயிந்தவனுடைய குமாரனையும் - கர்ன
னுடைய குமாரனையும் எதிர்த்து வளைத்துக்
கொண்டு, அவர்கள் தகப்பன்மாருடைய முன்
னிலையிலே மரணமடைந்து ரதத்தினின்று
கீழே விழச்செய்தான். மகாசூரராகிய இர
ண்டு ராசகுமாரரையும் அர்ச்சுனன் கொன்ற

தைப்பார்த்த அவர்களின் தந்தையாகிய சைந்தவனும்-கர்னனும் கோபாக்கினியாலே முகமெல்லாம் படபடத்து நிற்கச் சிங்கங்கள்போலெழும்பி ஆரவாரஞ் செய்துகொண்டு கிஞ்சித்தும் பயப்படாமல் இந்திரகுமாரனுடைய தேரைநோக்கி ஓடிவந்தார்கள். இவர்களில் ஒருவர்க்கொருவர் ஒத்தாசையாக இருந்துகொண்டு அர்ச்சுனனேடு சண்டை செய்யத் தொடங்கினர்கள். அந்த யுத்தமானது விருத்திராசுரன் - சம்பராசுரன் இவ்விருவரோடும் தேவேந்திரனுக்கு நேரிட்ட யுத்தத்திற்கு ஒப்பாக நினைக்கப்பட்டது.

இவ்வாறவ்விருவரும் ஏமாறுமல் எதிர்த்து அர்ச்சுனனுடைய தேரிற் கட்டியிருந்த குதிரைகளில் மூன்றைக் கொன்றுவிட்டார்கள். இப்படி அர்ச்சுனனுடைய குதிரைகள் கீழே விழவே, கவுரவருக்கெல்லாம் சந்தோஷத்தினலே கிலகிலவென்று ஒருகோஷமுண்டாயிற்று. சமீபத்திலிருந்த வீமசேனனனவன் அர்ச்சுனனுக்கு நேரிட்ட குறைவையும் கவுரவர்களுடைய கோலாகலத்தையும் பார்த்துச் சகிக்காமல், ஒரு நிமிஷத்தில் வேறு குதிரைகளைக் கொண்டுவந்து அந்த ரதத்திற் கட்டினன். இப்படி அர்ச்சுனனுடைய குதிரைகள் விழுந்தனவென்று தாங்களொருவரோடொருவர் சொல்லிக்கொள்ளுஞ் சொல் முடிவதற்கு முன்னமே, முன்போல் ஓடிவருகிற அந்த ரதத்தைப்பார்த்த துரியோதனன் சகுனி-பூரிச்சிரவன் இந்த மூவருமேற் சொன்ன சயிந்தவனேடும்-கர்னனேடும் கலந்து அந்த ரதத்தை வளைத்துக் கொண்டார்கள். இந்த ஐந்து மகா வீரருடனே அந்தத் தேவேந்திர புத்திரனனவன் ஓர் யோகீஸ்வரன் ஐம்பொறிகளுடனே எதிர்த்துப் போர் செய்கிறதுபோல் தைரியமாய் எதிர்த்துப் போர் செய்தான். அந்த யுத்தத்தில் ஐந்து மகாவீரர் ஏககாலத்தில் தம்பியைச் சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்த வீமசேனனனவன் கொஞ்சமும் பயப்படாமல் ஐந்து மதயானைகளைக்கண்ட சிங்கம்போல் உற்சாகத்தை அடைந்து தானும் தனது தேரை செலுத்திக் கொண்டு அவர்கள் நடுவிற் பிரவேசித்தான். அப்போது அவ்வைந்து சூரரும் தனித்தனியே ஒவ்வொருபாணம்போட்டு, ஐந்துபாணங்களினலேயே வீமசேனனுடைய குதிரைகள் நான்கையும் சாரதியையும் யமலோகம்சேரும்படி செய்தார்கள். அந்த வாயுவின் மகன் உடனே குதிரைகளுஞ் சாரதியுமில்லாத தேரினின்றுங் கீழே குதித்து, கையிற் கத்தியை எடுத்துக்கொண்டு நானுவிதமாகிய யுத்த வழிகளையெல்லாம் நடத்தினன். இவ்வாறு நடத்திக்கொண்டே சர்ப்பங்களைக் கண்ட கருடன்போலக் குதிரைகளின் கழுத்துக்களிலேயும், தேர்களின் உருளைகளிலேயும், நுகத்தடிகளிலேயும், இருசுகளிலேயும், ஏறி ஏறிச் சத்துருக்களை கண்டதுண்டமாக வெட்டினன். இப்படி வெட்டிக்கொண்டு இருக்கிற வீமனுடைய கவசத்தையும் ஆயுதத்தையும் கர்னன் துண்டித்துத் தள்ளினன்.

அதைச் சற்றும் லட்சியம் பண்ணுமல் வீராவேசத்துடனே மான்கூட்டத்திற் புலி புகுந்ததுபோற் கவுரவசேனையிற் புகுந்து நாசஞ்செய்துகொண்டிருக்கிற வீமனை பார்த்த அர்ச்சுனன், ஓ! ஓ! இவர் கவசமும் இல்லாமல் தேருமில்லாமல் சேனைகளி னடுவில் அகப்பட்டுக் கொண்டாரென்று திஷ்டத்துய்மன் - சிகண்டி - இரட்டைப் பிள்ளைகள் இவர்கள் நால்வரையும் கூட அழைத்துக் கொண்டு அதிசீக்கிரத்தில் ஓடி வந்தான். பின்பு பத்து மகாரதர்களுக்கும் கடினமானயுத்தம் நடக்கவாரம்பித்தது. அந்தச் சண்டையில் அவர்கள் விடுத்த பல அம்புகளினலே அவ்விரதங்களின் கொடிகள் குதிரைகள் முதலாகிய யாவுமறைந்து விட்டன. தூளிகளெல்லாங் கிளம்பி அவ்விரண்டு சேனைகளையும் இருள்போற் கம்மிக்கொண்டன. இந்தப்படிக்கு நெடுநேரம் சரியான யுத்தம் நடந்துக் கொண்டிருக்கும்போது, கர்னன் அர்ச்சுனனை மிகவும் பராக்கிரமித் தெதிர்த்து, தன்னுடைய வில்லை வளைத்து நாணேற்றிட்டு பாணத்தைத் தொடுத்துக் காதளவுமிழுத்து மேகம் பொழிவதுபோற் பொழிந்து அர்ச்சுனனுடைய தேர் ஸ்தம்பித்துப் போகும்படி செய்தான். இப்படி செய்ததினலே அர்ச்சுனனவன் தனது தேரைக் குதிரைகள் நின்றவிடத்தி நின்றும் ஓரடிகூட எடுத்துவைக்க மாட்டாமல் தத்தளிக்கக்கண்டு, மிகவுங்கோபத்தினலே கண்களெல்லாம் சிவந்து சுழலிடப் பிரளயகாலத்து யமன்போல அதியுக்கிரரூபங் கொண்டு, இக் கர்னனைக் கொல்லவேண்டுமென்று வச்சிராயுதத்திற்குங் காலதண்டத்திற்கும் ஒப்பாகிய மூன்றம்புகளைச் சந்தானஞ் செய்து அவன்மீதிற் பிரயோகித்தான். அந்த மூன்றம்புகளும் தைத்த மாத்திரத்திலே அச்

சூரியபுத்திரன் நெருப்பில் விழுந்த புழுப்போல் துடித்து மூர்ச்சித்து, தனது தேரிலிருக்கிற கொடிக்கம்பத்தைக் கைகளாலே பிடித்துக்கொண்டு ஒன்றுந் தோன்றாதவனாய் விழுந்தான்.

இப்படி விழவே அவனுடைய சாரதியானவன் தனது எஜமானனைக் காக்கவேண்டுமென்று விரைவில் தேரைப் பின்னுக்குச் செலுத்தினான். அதுகண்ட பாஞ்சால வர்க்கத்தோரெல்லாம் சிரித்து அட்டகாசஞ் செய்தார்கள். அப்போது துரியோதனனை நாணமும் பயமும் பிடித்துக்கொண்டதினாலே அவன் பிரமை பிடித்தவன்போல் வெருளவெருள விழித்துக்கொண்டு பகற்காலத்து விளக்குப்போலிருக்கிற முகத்துடனே நின்றான். அதுகண்ட சேனைகளெல்லாம் அந்த வீமார்ச்சுனர்களுடைய சவுரியத்திற்கு நிற்கமாட்டாமையினாலேயும், தங்கள் ராஜனும் ஓய்ந்துபோன படியினாலேயும், கதியொன்றுமில்லாமல் திக்குகள் தோறும் ஓட வாரம்பித்தான். இப்படி பெருங்காற்றில் அகப்பட்ட சருகுகள்போற் சிதறி நிற்கிற கவுரவ சைனியங்களை யெல்லாம் பார்த்த சகுனியானவன் ஓடி, எல்லாரையும் சமாதானப்படுத்தி மறுபடியும் கும்பலாகக் கூட்டினான். அப்பால் துரியோதனன் தம்பிமார்கள் முதலானவர்களுடனே மறுபடியும் சேனையைக் கூட்டிக்கொண்டு யுத்தத்துக்கு ஆரம்பஞ் செய்தான். இப்படிச் சன்னாக்கப்பட்டு வருகிற துரியோதனனை வீமன்கண்டு, அரக்குமாளிகையை நினைத்துக்கொண்டு காலாக்கினி ருத்திரன்போல் துரத்திவந்தான். வரும்போதந்த யுத்தபூமிக்குச் சமீபத்திலே அனேகங் கிளைகளோடுங் கூடிய பெரிய மரமொன்றைக் கண்டு அதை வேரோடு பிடுங்கிக்கொண்டு, வச்சிராயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு அசுரரைக் குறித்து இந்திரன் வருவதுபோற் பகைவர்பேரிற் பாய்ந்தான். இப்படியாகப் பாய்ந்து ஓர் பெருங்காற்று வானத்திலிருக்கும் மேகங்களைச் சிதற வடிப்பதுபோல் துரியோதனன் சேனையைச் சிதறவடிக்கவே, முன்னமே அர்ச்சுனனுடைய பாணங்களினாலே துளைக்கப்பட்ட தேகங்களையுடைய சகல ராஜாக்களும் நின்றெதிர்க்க மாட்டாமல், தங்கள் தங்கள் கூடாரங்களிற் போய்ச் சேர்ந்தார்கள். பாஞ்சாலரும் சந்தோஷத்தோடே பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள்.

இப்படி தேவர்கட்கும் அசுரர்கட்கும் நேரிட்டதுபோல் நேரிட்ட யுத்தத்திலே பாண்டவர்கள் வெற்றி பெறவே, யாவரும் திரௌபதியையும் பாஞ்சாலனையும் நல்ல பாக்கிய முள்ளவர்களென்று சொல்லினார்கள். எதிர்த்த அரசர்களிலும் அநேகர் பாண்டவர்களிடத்தில் வைரம் விட்டு, மகா யோக்கியர்களென்று கொண்டாடினார்கள். ஆனால், சகுனி, சயிந்தவன், கர்னன், துரியோதனன், துற்சாதனன் முதலாகிய சிலருக்கு மாத்திரம் மிகவும் துக்கமாயிருந்தது. ஆகிலும், அவர்கள் மனதிலேயே வெந்துக்கொண் டிருந்தார்களே யல்லாது வாயினாலே ஒன்றுஞ் சொல்லவில்லை பின்பு சகல ராஜாக்களும் தங்கள் தங்கள் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். திரிதராஷ்டிரன் புத்திரரும் அத்தின நகரத்தை யடைந்தார்கள். பாண்டவர்களும் ஜயலட்சுமியை விவாகஞ் செய்தவர்கள்போல் ஜயபேரிகள் சிறப்போடு முழங்க, வந்திகளெல்லாங் கட்டியங்கூற, துஷ்டத்துய்மன் முதலான பந்துக்களெல்லாம் புடைசூழ்ந்து வர, சேனாதிபதிகளும் மந்திரிகளும் ஜயஜயவென்று சொல்லி மரியாதை கொண்டாட, படைவீரரெல்லாம் குதிரைகளையும் யானைகளும் விளையாட்டினால் தாராகதி முதலிய நடைகளுடனே திருப்பிக்கொண்டு ஆயுதங்களைப் பளபளவென்று சுழற்றிக்கொண்டு சூழ்ந்து நடக்க இவ்விதமான வைபவத்துடனே திவ்விய ரதங்களின்மீதி லேறிக்கொண்டு, சந்திர சாமராதிகளுடனே நீர் தெளித்து தோரணங் கட்டிக் கொடிகளேற்றி மலர்கள் தூவிப் பொறிகளிறைத்து அலங்கரிக்கப்பட்ட வீதிகளையுடைய பாஞ்சால நகரத்திலே பிரவேசித்து, பட்டணத்திலிருக்கும் பெண் பிள்ளைகளெல்லாம் தங்கள் கடைக்கண் பார்வையாகிய கருநெய்தல் மாலைகளை யெறியச் சிறுவர் முதற் கிழவர் வரையிற் கும்பல் கும்பலாகக்கூடி வேடிக்கைப் பார்க்க, அரண்மனையிற் சென்று, இராஜோப சாரங்களுடனே திரௌபதியின் கண்களாகிய குவளை மலர்களுக்குப் பூரணசந்திரன்போல் விளங்கிக்கொண்டு நவரத்தினமயமாய்ச் சொலிக்கின்ற சபையிற் சென்று மணியாசனங்களில் வீற்றிருந்தார்கள்.

இந்தக் காரியங்களெல்லாம் நடப்பதற்கு முன்னமே தானே த்வாரகாபுரிக்குத் தூதரைப் பாண்டவ ரனுப்பி யிருந்தார்கள் அத்தூதர் கிருஷ்ணன் பலராமன் இவர்களிடத்

திற்குப் போய்ப் பாண்டவர்கள். க்ஷேமமாக யிருக்கிறதாகவும் எதிரிகள் எதிர்க்கப் போகிறதாகவும் சொல்லவே, அவர்களந்த நிமிஷத்திற் சதுரங்கமாகிய சைனியத்தைக் கூட்டிக்கொண்டு பாஞ்சால நகரத்துக்கு வந்து விட்டார்கள். இங்கு வரும்போது யுத்தம் ஓய்ந்திருந்ததைக் கண்டு, சந்தோஷத்துடனே பாண்டவர்களைக் கட்டிக்கொண்டு குந்தியையும் உபசரித்து, திரௌபதிக்கு உயர்ந்த ஆபரணங்களையும் வஸ்திரங்களையுங் கொடுத்துக் கொண்டாடினார்கள். துருபத மகாராஜனும் துவாரகா நகரின் மன்னவர்களாகிய இவர்களைத் தேவதோபசாரங்களாலே பூசித்தான். இப்படிப் பூசிக்கப்பட்டுப் பாண்டவர்களுடன் கூட யாதவர்களும் சந்தோஷமாய் வாசம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். துரியோதனன் அசுவத்தாமாவுடனேயும் கர்னனுடனேயும், பாண்டவர்க்குப் பெருமை வந்ததினால் தனக்குண்டாகிய துக்கத்தைப் பேசிக்கொண்டு, துற்சாதனனை நோக்கி, சீ! சீ! என்ன நம்முடைய பராக்கிரமம்? நம்முடைய ஆண்மையைச் சுடவேண்டும் நாம் செய்த பிரயத்தினத்திற் பாண்டவர் மறுபடி தப்பினார்களே? புரோசனன் மிகவு மூடனாகையால் வீணாகத் தன்னுயிரைமாத்திரம் விட்டான். இந்த அர்ச்சுனன் பார்ப்பார வேடத்தோடு இராம லிருப்பானேயாகில் அந்தப் பாஞ்சாலன் மகளை யடைய வொட்டாமற் செய்யலாம். நம்முடையவர்களித்தனைபேரில் ஒருவனும் இது தெரிந்து கொள்ள மாட்டாமற் போனோமே, இந்தப் பாண்டவர்கள் பிச்சைக்காரப் பார்ப்பாராக யிருந்த காலத்திலே, எளிதில் இவர்களை நாசஞ்செய்து போடலாம் தெரியாமற் போயிற்று. மனிதனுடைய முயற்சி யொன்றுக்கு முதவாது தெய்வபலமேயன்றி வேறில்லையென்று சொல்லித் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு, பாண்டவர்களுக்கு வந்த சிறப்பினை நினைத்து நினைத்துப் பெருமூச் செறிந்துகொண்டு, திஷ்டத் துய்மன், சிகண்டி முதலானவர்களுடைய சவுரியமாதி தயிரியங்களை நினைத்துத் திகிலடைந்து ஒன்றுந் தோன்றாமல், நூதனமாக மாங்கிலிய மிழந்தவள் போல் ஒருவருக்குந் தெரியாமல் வீட்டுக்குள்ளே வந்து சேர்ந்தான். விதுரனானவன் பாண்டவர்கள் திரௌபதியை விவாகஞ் செய்து வெகு சம்பத்தையும் ஜயத்தையுமடைந்து பெருமை பெற்றதையும், துரியோதனாதிகள் அபஜயத்தை யடைந்து உறங்கியிருப்பதையு மறிந்து, மனதிலே மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, திரிதராஷ்டிரனிடத்து வந்து, ஐயா! குருவமிசத்துப் பிள்ளைகள் தெய்வச் செயலால் திரௌபதியை யடைந்து வெற்றி பெற்றார்களென்று சொன்னான்.

இதுகேட்ட அந்தகனும் நல்ல பாக்கியம் நல்ல பாக்கியமென்று கொண்டாடி, மிகுந்த களிப்புடனே அந்தத் திரௌபதி நமது துரியோதனனுக்குப் பாரியை யாயினாளென்று நினைத்து, விதுரா! நம்முடைய பொக்கிஷத்திலிருக்கிற உயர்ந்த ஆபரணங்களை திரௌபதிக்குக் கொடுத்து அலங்காரஞ் செய்வித்து, அவளுடனே துரியோதனனை என்னிடத்திற்குச் சீக்கிர மழைத்துக்கொண்டு வாவென்றான். அதுகேட்ட விதுரன் கொஞ்சம் சிரித்துக்கொண்டு, துரியோதனனுக்கு அல்ல, பாண்டவர்களுக்குப் பாஞ்சால கன்னிகை பெண்டாட்டியாயினாளென்று சொன்னான். அதுகேட்ட மனதிலே பொறாமையிருந்தாலும் வெளிக்கு விதுரனை கண்டு, விதுரா! மிக சந்தோஷமாயிற்று எனக்கு என்பிள்ளைகளெப்படியோ அப்படியே பாண்டு புத்திரரும். ஆதலால், நல்ல காரியம் நம்முடைய குலத்தார் இவ்வளவு கீர்த்தியைப் பெற்றது நமக்குப் பெருமை அன்றோ? தெய்வானுகூலத்தாற் பாண்டவர்கள் நெருப்பில் நின்றுந் தப்பிப் பிழைத்து, சகல ராஜாக்களுக்கு முன்னே யந்திரத்தை அடித்து, இராஜ கன்னிகையை அடைந்து பாஞ்சாலனுடைய பலம்பெற்று விளங்குகிறார்கள். மிகுந்த பராக்கிரமத்தையுடைய துருபத மகாராஜனை அடைந்ததால் க்ஷேமத்தை அடைதற்குத் தடையில்லை என்று பேசிக்கொண் டிருக்கிற திரிதராஷ்டிரனை விதுரன் பார்த்து மகாராஜனே! உமக்கு இப்படிப் பட்ட புத்தி பல்லாண்டு பல்லாண்டாய் ஸ்திரமா யிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன் என்று சொல்லிவிட்டுத் தனது மாளிகைக்குச் சென்று மகா களிப்புட னிருந்தான்.

திருக்கல்யாணச்சருக்கம் முற்றிற்று.

---

பதினோராவது,

## திருமுடிபுனைந்தசருக்கம்

கண்ணன் துதி

அராவணை துறந்துபோந்தன் றசோதை
கண் களிப்ப நீடு, தராதலம் விளங்க வெண்

ணெய்த் தாழிசூழ் தாநின்றாடிக், குராமணங்
கமழுங் கூந்தர் கோவியர் குரவைகொண்ட,
பிரானவன் றனையே யேத்தும் புனிதர்தாள்
போற்றி செய்வாம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இந்த வார்த்தைகளை அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த துரியோதனனும், கர்ணனும், அக்குருட்டு ராஜாவினிடத்திற் வந்து நமஸ்காரஞ் செய்து தங்களை அறிவித்து நின்றார்கள். பின்பு அவனுத்தரவினால் ஆசனத்திலுட்கார்ந்துகொண்டு, தகப்பனாரைப் பார்த்து துரியோதனன் சொல்லுகிறான். ஐயா! விதுரனிருக்கும்போது இந்த வார்த்தை சொல்ல அஞ்சினேன். இப்போது ஏகாந்தமாக இருக்கிறபடியாற் சொல்லுகிறேன்: என்ன காரியம் செய்கிறீர் சத்துருக்களுடைய மேன்மையைத் தனது மேன்மையாக எண்ணிப் பேசுகிறீரே. விதுரனுக்கெதிரே பாண்டவர்களைத் துதிக்கிறீரே, இது என்ன அநியாயம்? நீர் செய்யவேண்டிய காரியத்துக்கு விரோதமான காரியஞ் செய்வது நியாயமோ? அவர்களுக்குச் சகல விதத்திலும் பலங் குறையச்செய்தாலன்றோ நாம் பிழைக்கலாம். ஆகையால், நாம் தற்காலத்தில் ஒரு உபாயஞ் சிந்திக்கவேண்டும். அப்படி ஏதாகிலும் ஒரு காரியம் செய்யாமற்போனால், அவர்கள் நம்மை நம்முடைய வர்க்கத்துடனே விழுங்கிப் போடுவார்கள் என்று சொன்னான். இந்தச் சொல்லைக் கேட்ட திரிதராஷ்டிரன், ஓ குழந்தைகளே! உங்களுக்கிருக்கிற அபிப்பிராயம் போலேதான் எனக்கும் அபிப்பிராயமிருக்கிறது. இரவும் பகலும் இந்தச் சிந்தையின் என் மனதிற் குடிகொண் டிருக்கிறது. ஆகிலும் விதுரனுக்கு முன்பாக என் கருத்தை வெளிப்படுத்துவது நியாயமாக இருக்கவில்லை. ஆதலால், அவனுடைய கருத்துக்குத் தக்கபடி அவனுக்கு எதிரே பேசிக்கொண்டிருந்தேன். அப்படி பேசிக்கொண்டு அவர்களுடைய குணங்களையெல்லாமெடுத்து சொல்லிக்கொண்டு இருக்கின்ற படியினாலேதான், என்னை உங்களிடத்திற் பட்சபாத மில்லாமற் சமமாக விருக்கிறவனாக நினைக்கிறான். வேறு விதமாக அவன் என்னைத் தெரிந்துகொண்டால், வீணாகத் தூஷணை செய்வான். ஆகையால், இப்படி நானிருக்கிறேன். இப்போது நடக்கவேண்டியதற்கு நீ உபாய மென்ன சிந்தித்திருக்கிறாய்? இக்கர்ணனென்ன சிந்தித்திருக்கிறான்? நீங்கள் அதுகளைச் சொல்லுங்கள் என்று சொல்லவே துரியோதனன் சொல்லத் தொடங்கினான்.

### திரிதராஷ்டிரனோடு துரியோதனனுங் கர்ணனும் துராலோசனை செய்தல்

ஐயா! கேளும்: இரகசியமாகத் தந்திரங்களிலே சமர்த்தராகியும் நமக்கு இதமான காரியஞ் செய்யத் தகுந்தவர்களுமாகிய பிராம்மணர்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்துச் சந்தோஷம் வரச்செய்து, அவர்களைக் கொண்டு குந்தியின் மக்களையும் மாத்திரியின் மக்களையும் வேறுபடுத்துவோம். அல்லது துருபதராஜனையும் அவனுடைய பிள்ளைகளையும் பொருளைக்கொண்டு பேதிக்கச்செய்து ஒருவரோடு ஒருவர் சேரவொட்டாமலும், பாண்டவர்களுக்கும் அவர்களுக்கும் ஒருவருக்கொருவர் வேற்றுமை வரும்படியாகவும் செய்வோம். அல்லது அந்த ராஜாவினுடைய மந்திரிகள் வேறுபடுத்தி நம்முடைய பக்ஷத்திற் சேர்த்துக்கொள்ளுவோம். அல்லது அம் மந்திரிகள் உதிஷ்டிரனிடத்திற் பக்ஷமில்லாமலிருக்கும்படி செய்விப்போம். இல்லாவிட்டால் மெள்ள அந்த மந்திரிகளைக் கொண்டாவது இன்னும் யாரைக்கொண்டாவது பாண்டவர்களுக்கு இந்த அஸ்தினாநகரில் வாசஞ் செய்வதில் தொந்தரவும் அங்கேயே வாசஞ் செய்வதில் சவுக்கியமும் இருப்பதாகத் தெரிவித்து, அவர்களை இங்கேவர மனதில்லாமல் இருக்கிறவர்களாச் செய்வோம். அல்லது அதிக சாதுரியமுடைய புத்திமான்களைக் கொண்டு, பாண்டவர்களை ஒருத்தருக் கொருத்தர் ஆகவொட்டாமற் செய்வோம். அல்லது திரௌபதிக்குப் புருஷர்கள் ஐந்துபேராகையால், அவளைச் சிலரிடத்தில் இஷ்டமுடையவளாகவும், சிலரிடத்தில் வெறுப்புள்ளவளாகவும் செய்வோம். அந்த ஐவரையாவது அவளிடத்திற் பேதப்பட்டு நிற்கும்படி செய்வோம். இவைகளி லொன்று மாகாமற்போனாலும் வீமசேனனையாவது ரகசியமாகக் கொலை செய்யவேண்டியது. அவனல்லவோ அவர்களுக்குள் மகா பலசாலி. அவனுடைய பலத்தாலேயல்லவோ பாண்டவர்கள் நம்மை மதிக்காம லிருக்கிறார்கள். ஆபத்துகளில் அவனாலே அவர்கள் சகல விதத்திலும் தப்பித்துக் கொள்ளுகிறார்கள்.

அல்லது அர்ச்சுனன் சம்பாதித்த பெண்ணை மற்றவரும் விவாகஞ் செய்து

கொண்டதினாலே, அவனுக்கும் அவர்களுக்கு மாவது விரோதம் வரச்செய்வோம். முன்னம் யாவற்றினும் துணிவுள்ள வீமனையே கொன்றுவிட்டால், மற்றவர்கள் இறகொடிந்த பக்ஷிபோற் பலமற்று இராச்சியச் சிந்தையே இல்லாமற் போவார்கள். வீமசேனன் பக்க பலமா யிருந்தால்தான் அர்ச்சுனனைச் செயிக்கக்கூடாது. இல்லாவிட்டால் அர்ச்சுனனை எளிதிற் செயித்துப்போடலாம். இப்படி ஒருவரோடொருவரைப் பேதித்தால் அயிக்கியமில்லாமற் கலங்கி, ஒருவரை யொருவர் நாசஞ்செய்ய நினைப்பார்கள். அப்போது நாம் அந்த பக்ஷத்திற் சேர்ந்து சண்டப்பிரசண்டமாய் அடித்து யாவரையும் வசப்படுத்திக் கொள்ளலாம். ஸ்திரீ நிமித்தமாகக் கலகமுண்டாக்கினாற் பாண்டவர்கள் நமக்கு அதிசீக்கிரத்தில் ஸ்வாதீனப்படுவார்கள். வீமசேனனைக் கொன்றுவிட்டால் அவர்கள் பலமற்றுத் தேசமிழந்து போய் தம்மைப் பலசாலிகளாக நினைத்துப் பாதங்களில் விழுவார்கள். அப்படி விழுந்ததால் அவர்களுக்குச் சில ஏவற்றொழில் நியமித்து, யாம் சுகமாக இராச்சியத்தை ஆளலாம். அல்லது சில தைரியசாலிகளைக்கொண்டு பாண்டவர்கள் கர்வித்திருக்கிறதைத் துருபதனுடைய புத்திரருக்குத் தெரிவித்து அகங்காரமுண்டாக்கி விரோதம் வரச் செய்வோம். அல்லது நல்ல அழகுள்ள ஸ்திரீகளைக்கொண்டு பாண்டவர்களைத் தனித்தனியே மோகிக்கச்செய்து திரௌபதிக்கு விரோதம்வர நடத்தினால், அதினாலே பாஞ்சாலர்கட்கும் அவர்கட்கும் பிரிவினையுண்டாகும். அல்லாமற்போனால் பாண்டவர்களை இந்தப் பட்டணத்துக்கு வரும்படிச் சொல்லியனுப்பிவித்து, நடுவழியில் அவர்கள் பராக்காயிருக்குங்காலத்திற் சுறுசுறுப்புள்ள தலையாரிகளாலே கொலை செய்விப்போம். இப்படி அனேகவித உபாயங்களிலே எது உமக்கு யுக்தமாகத் தோற்றுகிறதோ? அதைச் சீக்கிரத்திற் செய்யவேண்டும். துருபதராஜனிடத்திலே அவர்கள் ஊர்ச்சிதப்படுகிறதற்கு முன்னமே ஏதாகிலும் தந்திரம் செய்தால் நம்முடைய இஷ்டம் கூடிவருமே யல்லது, அப்பால் கூடிவரமாட்டாது. இதுதான் எனக்குப் பாண்டவர்களுடைய நாசகாரியத்தைக் குறித்துத் தோற்றுகிற ஆலோசனை. இது நல்லதோ கெட்டதோ நீங்கள் யோசியுங்கள். அண்ணா கர்ணா! நீ இதைக்குறித்து என்ன நினைக்கிறாய்? சொல்லென்று பேசி முடித்தான் துரியோதனன்.

பின்பு துரியோதனனை நோக்கிக் கர்னன் சொல்லுகிறான்: ஓ என்னருமைத் தம்பி! உன்னுடைய கருத்து எனக்கு நன்றாகத் தோற்றவில்லை. ஏனென்றால், பாண்டவர்கள் உபாயத்தினாலே வெல்லப்பட மாட்டார்கள். முன்னமே நீ அனேகவித தந்திரங்களாலே அவர்களைச் செயிக்க முயற்சி செய்திருக்கிறாய். அதிலேதாவது கூடிவந்ததா? குழந்தைகளாய் இறகு முளைக்காமல் இங்கே யிருக்கையிலே தந்திரங்களினாலே வெல்லக்கூடாதவர்களை இப்பொழுதிற்கு முளைத்து வேறுதேசத்திலிருந்துகொண்டு நன்றாய்ப் பெரிய ஒத்தாசைகளினாலும் சாமர்த்தியங்களினாலும் உயர்ந்திருக்கும்போது, தந்திரங்களுக்கு உட்படுவார்களா? இது வீணாகிய எண்ணமல்லவா? ஸ்திரீ முதலாகிய ஏழு விசனங்களினுடைய குற்றமறிந்த அவர் அவைகளுக்கு உட்படமாட்டார்களே, அவர்கள் தங்கள் தகப்பன் பாட்டன் முறையில் வந்த அரசாட்சியைப் பெற்றுக்கொள்ளத்தக்க முயற்சியோடு யிருப்பார்களே யல்லது வேறில்லை. அவர்கள் மிகவும் குணசாலிகளும் புத்திசாலிகளு மாகையாலே ஒருவரோடொருவர் பேதிப்பதும் அசாத்தியந்தான். அவரெல்லோரும் ஒரு ஸ்திரீயினிடத்திலே அயிக்கப்பட்டுச் சிநேகித்திருக்கிறார்கள். ஆதலால், அவளுக்கும் அவர்களுக்கும் விரோதம் வரச்செய்வதும் அசாத்தியமான காரியம். பிக்ஷைக்காரராகக் காணப்பட்டபோதே அவர்களைக் காதலித்த அந்தத் திரௌபதி, சம்பத்தை அடைந்து விளங்குந்தசையில்எப்படிபேதிக்கப்படுவாள். அன்றியும், லோகத்தில் ஸ்திரீகளுக்கு வெகு புருஷரைப் போகிக்கவேண்டுமென்கிற கருத்து இயல்பாயிருக்கின்றது. அப்படியிருக்க, நியாய வழியால் அச்செயல் அவளுக்குக் கிடைத்திருக்குங்கால் அவளை எப்படி பேதிக்கலாம்? அந்தப் பாஞ்சாலனும் நியாயஸ்தன். சத்தியசந்தன் குணசாலி வெகுநாளாக பாண்டவர்களுடைய உறவை விரும்பி யிருந்தவன். அவனுடைய குமாரர்களும் அப்படிப்பட்டவர்கள். சூரர்கள் தங்களையொத்த சூரரைச் சேர்த்துக்கொள்ள மிகவிருப்பமுடையவர்கள். ஆதலால், நாம் என்ன கொடுத்தாலும், என்ன கெடுத்தாலும், என்ன உபாயஞ் செய்தாலும், பாண்டவர்களை ஒருக்காலும் விடமாட்டார்கள்.

அவர்களுடைய மந்திரி முதலானவர்கள் தங்கள் யஜமானிடத்தில் அதிக பக்ஷமுடையவர்களாதலால், அவர்களையும் பேதிக்கக் கூடாது. இன்னும் அந்த ராச்சியத்திலும் மற்ற விடங்களிலும் இருக்கிற சகலமான பேர்களும், பாண்டவர்களிடத்தில் அன்பு வைத்திருக்கிறார்கள். ஆதலாற்சகலவிதங்களில்யோசித்தாலும் அவர்களுக்குக் கெடுதியாகிய வேறுபாட்டை உண்டாக்குவது அசாத்தியந்தான். அன்றியும், அவர்கள் எப்போதும் பராக்கா பிராமற் சாக்கிரதையாகவே இருப்பார்கள். ஆதலால், மோசஞ்செய்து கொல்லவாவது, பேதித்துக் கீழ்ப்படுத்தவாவது, பிரமாவுக்கும் சாத்தியமன்று. நீ சொன்ன உபாயங்களில் ஒன்றும் எனக்கு யுக்தமென்று தோற்றவில்லை. ஆனால், அவர்களைச் செயிப்பதற்கு யுத்தந் தவிர வேறோருபாயம் இல்லை. என் கருத்து இது தான். முடிவில் இதுதான் கூடிவரும். ஆனால், அதை இப்போதேதான் செய்யவேண்டும். ஏனென்றால், அந்தப் பாண்டவர்கள் இன்னும் பலத்த வேருடையவர்களாக ஆகவில்லை. திரண்ட சேனைகளும் பணங்களு மில்லாதவர்களா யிருக்கிறார்கள்.

அன்றியும், நம்முடையபக்ஷம் இப்போது அதிகப்பட் டிருக்கின்றது. பாஞ்சாலருடைய பக்ஷம் மிகவும் குறைந்திருக்கின்றது. இந்த நிலை மாறுபடுகிறதற்கு முன்னமே சண்டைக்கு யத்தினப்படுவது நல்லது. இப்பொழுது நமக்கு மித்திரர்கள் அதிகமாக இருக்கின்றார்கள். வாகனங்களும் உற்சாக முடையவைகளா யிருக்கின்றன அவர்களுக்கோ அப்படி இருக்கவில்லை. நாம் சாவகாசப்பட்டால் அவர்களும் ஜாக்கிரதைப்பட்டு மித்திரசம்பத்தைத் தேடிக் கொள்ளுவார்கள். அன்றியும், துருபத மகாராஜனிடத்தில் நாம் பகைக்கு ஏதுவாகிய காரியஞ் செய்திருக்கிறோம். ஆதலாலே அவன் நம்மைச் செயிக்கவேண்டுமென்று வேண்டிய உபபலங்களைச் சம்பாதித்துக் கொள்ளுவான். அப்படி அவன் சகல சம்பத்துக்களுடனே கூடி விருத்தி யடைவதற்கு முன்னமே, நாம் பராக்கிரமத்தைச் செலுத்தக் கடவோம். மேலும், தேவகியின் மகனாகிய அவர்களுக்குப் பலமாகச் சதுரங்கமாகிய விஸ்தார சேனைகளுடனே எதுவரையில் வராம லிருக்கிறானோ? அதற்குள்ளாகவே பராக்கிரமத்தை நிறைவேற்றவேண்டும் சாவகாசமானாற் கிஞ்சித்தும் கூடி வரமாட்டாது. அந்தக் கண்ணனுக்குப் பாண்டவர் நிமித்தமாகப் பணங்கள் அல்லது போகம்; அல்லது ராச்சியம், அல்லது பிராணன், இவை முதலாய் எதைவிட வேண்டுமானாலும் விடச் சம்மதியுண்டா யிருக்கிறது. உலோகத்தில் பராக்கிரமத்துக்கு ஈடானது ஒன்றுமில்லை. முன் பரதசக்கிரவர்த்தியானவர் இந்தப் பராக்கிரமத்தினாலேதான் பூமியைச் செயித்தார். தேவேந்திரனும் பராக்கிரமத்தினாலேதான் மூன்று லோகங்களையும் செயித்தான். ஆதலால், க்ஷத்திரியனுக்குப் பராக்கிரமமே புகழத்தக்கது பராக்கிரமத்தினாலே கீர்த்தியும் பிரதிஷ்டையுமுண்டா யிருக்கிறது. ஆகையினால் உன் மனதிற் பராக்கிரமமே இனிப்பாகவேண்டியது. அல்லாமலும் பாண்டவர்கள் சாம தான பேதங்களென்னும் மூன்று உபாயங்களினாலும் சாத்தியப்படமாட்டார்கள். தண்டமென்னும் ஓர் உபாயத்திற்குத்தான் சாத்தியப்படலாம். ஆதலால் நீ பராக்கிரமத்தினாலே அவர்களைச் செயித்து இந்தப் பூமி முழுவதையும் ஆண்டு வரலாம். இதுதான் எனக்கு இக்காலத்திற்கேற்ற உசிதமாகத் தோற்றுகிறதேயல்லது, வேறு தோற்றவில்லை என்று சொன்னான் கர்னன்.

## வீஷ்மராதியோர் திரிதராஷ்டிர னாதியோர்க் கறிவுறுத்தல்

இவை யனைத்தும் கேட்டிருந்த திருதராஷ்டிரமகாராசன் சிறிதுநேர மாலோசித்தவனாய் அங்கதேசாதிபனைத் தழுவி, ஓ அப்பா கர்னா! மகா பராக்கிரமங்களுடன் அஸ்திரவித்தியா சாமார்த்தியமும், தைரியமும், புத்தியுமுடையவனாகையால் இப்படி சொன்னாய் இது தகும் தகும் நன்றாயிருக்கின்றது. ஆனால் இந்தக் கருத்தை வீஷ்மர், துரோணர், விதுரன் இவர்களுக்குத் தெரிவித்து நிறைவேற்றினால் நல்லதென்று சொல்லி அந்த மூன்று பேரையும் சபைக்கு அழைப்பித்து, தான் கேட்டவைகளை யெல்லா மவர்களுக்குத் தெரிவித்தான். அதுகேட்டு முதலில் வீஷ்மாச்சாரியர் சொல்லத் தொடங்கினார். ஓ சற்புத்திரர்களே! பாண்டவர்களுடனே யுத்தஞ்செய்வது யுக்தமாகத்தோற்றவில்லை எனக்குத் திரிதராஷ்டிரனேப்படியே? அப்படியே பாண்டுமகாராஜனும், காந்தாரியினுடைய மக்கள்போலவே குந்தியினுடைய மக்களும் இதிற் சந்தேகமில்லை. அந்தப் பாண்டு புத்திரர்கள் என்னை எப்படி இரட்சிக்க வேண்டியவர்களோ? அப்படியே திருதராஷ்டிரனையு மிரட்சிக்க வேண்

டியவர்கள். பாண்டவர்கள் விஷயத்திலெனக்குத் திரிதராஷ்டிர ராசாவுக்கும் எப்படியோ அப்படியே துரியோதனனுக்கும் மற்றுமுண்டான குருவமிச குருத்துகளுக்கும், அன்னியர்களுக்கு மிருக்கவேண்டியது. ஆனதா லவர்களோடு போர் செய்யவேண்டிய தென்கிற நினைப்பு எப்படி கூடும்? ஓ குழந்தாய் துரியோதனா! நீ அவர்களுடன் சந்தியை விரும்பிப் பாதி ராச்சியங்கொடுக்கவேண்டும். இந்த ராச்சியம் அவர்களுக்கு மூன்றும் பாட்டன் முதல் தகப்பனர் வரைக்கும் முறையே வந்தது. நீ இந்த ராச்சியத்தை நம்முடைய பிதுராச்சிதமாக வந்ததென்று அபிமானத்து விரும்புகிறதுபோ லவர்கட்கு மப்படிப்பட்ட அபிமானத்தில் விருப்பமிருக்கின்றது. அவர்களுக்கு இந்த ராச்சியம் கிடையாமற் போகும்போது உனக்குத்தான் ஏது? அவர்கள் இந்த ராச்சியத்தை முன்னமே நியாயமாக அடைந்தார்கள். நீ அதருமத்தினல் மேற்போர்வையாகப் போர்த்திருக்கிருய். இப்படி யிருக்கிற படியினலே அவர்களுக்கு நல்ல வார்த்தைசொல்லி யழைத்து வந்து பாதிராச்சியங் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்வதுதான் நம்மெல்லோருக்கும் இதமாயிருக்கும், மாறுபடச் செய்தால் சந்தேகமில்லாமற் கேடு நேரிடும் உன்னையும் அபகீர்த்தியானது கெட்டியாய்க் கட்டிக்கொள்ளும், இனியேனும் கீர்த்தியை நிறுத்திக்கொள்ளப்பார். கீர்த்தி யென்பதே மனிதனுக்குச் சம்பத்து, கீர்த்தி அழிந்தமனிதன் உயிரோடு பிழைத்திருப்பது ஓர் பிழைப்பன்று, கீர்த்தியுள்ளவனுக்குப் பூதவுடம்பிறக்கினும் புகழுடம்பு என்றும் நிலைத்திருக்கும். ஆதலால் தருமமாகியும் கீர்த்தியாகியு மிருக்கிற காரியத்தில் நீ பிரவேசிக்க வேண்டும். இது உனக்கும் எங்களுக்கும் இந்தக் குலத்துக்கும் நன்மையாயிருக்கும். ஏதோ தெய்வச் செயலாலே அந்த வீரர்களும் அந்தக் குந்தியும் பிழைத்திருக்கிறர்கள். கொடிய பாவியாகிய புரோசனன் உன்னிஷ்டத்தை நிறைவேற்றச்சென்றுகஷ்டப்பட்டு அழிந்துபோய் விட்டான். அந்த நற்குலப்பிறப்பு நன்னடக்கையுமுள்ள குந்தி தன் மக்களுடன் வெந்துபோனதாக என்று கேள்வியுற்றேனே அதுமுத லிவ்வுலகத்தில் ஒருபிராணியையும் பார்க்கச் சகிக்காமலிருந்தேன். ஓ துரியோதனா! உலோகவாதந்தியை நீயோசித்துப்பார். அந்த விஷயத்தில் உன்னை எப்படி தூஷிக்கிறர்களோ அப்படி புரோசனனைத் தூஷிக்கவில்லை. உன்னலேயே இக்கொடிய செய்கை நடத்தப்பட்டதாக யாவருஞ் சொல்லிக்கொள்ளுகிறர்கள். இப்படிப்பட்ட மகா பாதகத்திற்கு நீ ஆளானது எனக்கு மிகவும் வியசனமாயிருக்கிறது தெய்வாதீனம் இப்போதவர்கள் தப்பிப்பிழைத்ததினலே உனக்கு அந்தப் பாவமும் அபவாதமும் நீங்குகிறதற்குக் காரணமாயிற்று. இனி அவர்களோடு நீ சந்தி செய்து கொள்வது கீர்த்திக்கும் நன்மைக்கும் காரணமாகும் அந்தமகாவீரர்கள் பிழைத்திருக்கையில் அவர்களுடைய பிதுரார்ச்சிதமாய் வந்த பாகத்தை இந்திரன்கூட யெடுத்துக்கொள்ளச் சமர்த்தனுகை மாட்டான். அவர்கள் ஐவரும் தருமமுடையவர்கள். மேலும் அவர்கள் இந்த இராச்சியத்தில் பாத்தியமுள்ளவர்கள். இப்படிப்பட்டவர்களை நீ அனியாயமாய்த் துரத்திவிட்டாய். ஆதலால் தருமமாகிய காரியஞ் செய்ய மனமும் என்னிஷ்டப்படி நடக்க அன்பும், பகையில்லாதிருக்கக் கருத்தும் உனக்கிருந்தா லவர்களுக்குப் பாதி ராச்சியம் கொடுத்துவிட்டு நீ பாதிராச்சியத்தைவைத்துக்கொண்டு க்ஷேமமாயிருவென்று சொன்னர் வீஷ்மாச்சாரியார்.

உடனே துரோணசாரியார் திரிதராஷ்டிரனைப் பார்த்து, ஓ மகாராஜனே! ஒருவனல் ஒருவன் ஆலோசனைக்கு அழைக்கப்பட்டால் அவனிதமாகிய புருஷ தருமத்திற்கு விரோதப்படாமலும், நன்மைக்கும் கீர்த்திக்கு மனுகூலமாகியும் பேசவேண்டு மென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். ஆதலால், உம்முடைய மனதிற் கெப்படி யிருந்தாலும் நமக்குத் தோற்றியதைச் சொல்லுகிறோம். வீஷ்மாசாரிய ருடைய கருத்து எதுவோ? அதுவே யெனக்குச் சம்மதி பாண்டவர்களுக்குப் பங்கு கொடுத்துச் சமாதானஞ் செய்வது ராஜதர்மத்தை யனுசரித்தவர்களுடையமுறையில் வந்த நெறியாகும். ஆதலாற் சீக்கிரத்தில் யோக்கியனுகவும் நன்றாய்ப் பேசத்தக்கவனுகவும் உள்ள ஒரு மனுஷனைப் பாண்டவர்கட்காக வெகுமானங்களுடன் துருபத மகாராஜனிடத்திற்கு அனுப்பிவிக்க வேண்டியது. அந்த மனுஷன் போய் ஒருவர்க்கொருவர் நடந்த சரித்திரங்களை யெல்லாம் விவரித்துச் சொல்லி துருபதனுடைய சம்பந்தத்தினலே பாண்டவர்கட்கு மிகுந்த க்ஷேமம் கிடைத்ததையும் புகழ்ந்து பாண்டவர்களிடத்திலேயும் துருபதனிடத்திலேயும் துரியோதனுதியர்

பிரீதி யுடையவர்களாக விருக்கிறதாய்ச் சொல்லவேண்டும். துருபதனும் அவன் மகனும் நமக்குச் சம்பந்தியானது தகுந்த தென்றும் இஷ்டமான தென்றும் விசேஷமாக யெடுத்துப் பேசவேண்டும். குந்தி மைந்தர்களையும் மாத்திரிமக்களையும் நல்வார்த்தைகளினாலே நயமுண்டாக்க வேண்டு மன்றியும், நீர் உத்தரவு செய்ததாகத் திரௌபதிக்கு அநேகவாபரணங்களைக் கொடுப்பிக்கவேண்டும். பாண்டவர்கட்கு அநேகவஸ்திராபரணங்கள் முதலிய வெகுமதிகளனுப்ப வேண்டும். சம்மந்திகட்குத் தகுந்தபடி தனித்தனியே உயர்ந்த வெகுமதிகள் செய்யவேண்டும். குந்தியும் பாண்டவர்களும் முன் அனுபவித்துக்கொண்டிருந்த வஸ்துக்களை யெல்லாம் கொடுத்துவிடவேண்டும். இப்படி நாம் குற்றமற்ற செய்கைகளினாலே அவர்களை யெல்லாம் மிகவும் சம்மதப்படுத்தி அவர்களிஷ்டப்படி இப் பட்டணத்திற்கு இட்டுக்கொண்டு வரவேண்டும். அப்படியே அவர்கள் வர சம்மதிப்பட்டபின், நம்முடைய துற்சாதனன், விகர்னன் முதலான பேர்கள் சேனைகளோடு எதிர் சென்றழைத்து வரவேண்டும். அவ்விடம்விட் டிவ்விடம் அவர்கள் வந்தால் நீர் சினேகத்துடனே இந்தை களித்துப் பேசி வஞ்சமில்லாமலிங்கேயிருக்கச் செய்வீராகில் அவர்களும் உம்மிடத்தில் தகப்பன்மரியாதையிலும் சதமணங்குதிகமாய் வாழ்ந்து மகிழ்ந் திருப்பார்கள். நீரும் உம்முடைய பிள்ளைகளைப்போ லவர்களைப் பாவித்துப் பேதமற்றுச் சந்தோஷித்திருக்கக் கடவீர். ஓ மகாராஜனே! இவ்விதமாகச் செய்வது இம்மையினும் மறுமையினும் நன்மைக்குக் காரணமாகும். ஆதலால், வீஷ்மர் சொற்படி செய்வதுதான் கற்பும் சத்தியமுமுடைய மனைவாழ்க்கைக்குரிய கருமமென்றார் துரோணாசாரியார்.

இவ்வாறு வீஷ்மாசாரியார் துரோணாசாரியார் சொல்லிய வணத்தையுங் கேட்டிருந்த கர்னன்விரைந்தெழுந்து, ஓராஜாதிராஜனே! பொருளுக்கும் மானத்திற்கும் நம்முடன் ஒற்றவர்களா யிருக்கிற இருவருமே யுமக்கு நன்மை வரும்படி யோசனை சொல்லாமற் போவதைக்காட்டிலும் வேறு ஆச்சரிய மூலகத்திலுண்டோ? தன் துருவை மறைத்துக்கொண்டு கெட்ட நினைப்புடனே க்ஷேமத்தைப் பேசுகிறதென்பது பெரியோர்களுடைய நடையாயிருக்க மாட்டாது. காரியங்களில் வருத்தம் நேரிடுங்காலத்து நன்மைக்காவது துன்மைக்காவது மித்திரராலே ஒன்றுங்கூடி வருகிறதில்லை. மற்றென்னவெனில், எல்லோருக்கும் முந்திய வினையினாலே சுகமாவது துக்கமாவது நேரிடுகிறது இது சத்தியமென்று நினைத்து நீர் நம்பும். விவேக முடையவனானாலும் மூடனானாலும் சிறு பிள்ளையானாலும் கிழவனானாலும் சகாய முள்ளவனானாலும் சகாயமில்லாதவனானாலும் எவனு மெந்த விஷயத்திலேயும் தான் பெறவேண்டியதை அவசியம் பெறுகிறான். இதற்குத் திருஷ்டாந்தமாக வேதத்தில் ஒரு கதை யிருக்கின்றது கேளும். முற்காலத்தில் மகததேசத் தரசர்களில் விநிந்தன் என்கிறவன் இருந்தான். அவனுக்கு ஞானேந்திரியங்களும் கருமேந்திரியங்களும் குறைவுபட்டு இரைப்புடன் பெருமூச்சு வாங்குகிற நோயு மிருந்தது. அப்போது அவன் ராஜ காரியங்களைக் குறித்து மந்திரிகளையே நம்பி நடத்திக்கொண்டு வந்தான் அவனுடைய மந்திரிகளும் கட்டுப்பாடாக விருந்தார்கள். அவர்களில் பஹுகர்னனென்கிற மந்திரி யாளுகைசெய்கிறவனாக விருந்தான் அவன் நால்வகைச்சேனை முதலியவைகளைத் தன் வசமாக்கி மற்ற மந்திரிகளை யடக்கி அந்த ராஜாவையும்லட்சியஞ் செய்யாமல் தன்னிஷ்டப்படி நடந்து ராஜாவினுடைய சகல சம்பத்துக்களையும் ஸ்திரீகளையும் கவர்ந்து கொண்டான். இப்படி அவன் சிறப்பையும் எடுத்துக்கொண்டு மறுபடி லாபம் வரவர விசேஷலோபத்தை யடைந்து அவ்வரசன் ராச்சியத்தையும் தன் சுதாவில் ஆளுகைசெய்யத் தலைப்பட்டான் ஆனாலதுமாத்திரம் அவனுக்கு கைகூடாமற் போயிற்று. இங்கே மந்திரிகளுடைய நற்குணந் துற்குணங்களையு மவரவர்களுடையவிதிகளையும் யோசித்துப்பாரும் அவனவ்வளவு சம்பத்தைக் கவர்ந்து விபவங்களையனுபவித்துக் கொண்டிருக்கையிலும் இந்த ராச்சியம் நமக்குச் சொந்தமில்லாமற் போயதேயென்னும் ஒருவிசனம் அவனுக்கு மேலிட்டிருந்தது அதனால் மிகவும் வல்லமைகுறைந்தது அப்பால் பூர்வ ராஜனுக்கே பிரதிஷ்டையாக ஆளுகை சென்று வந்தது ஆதலா லியாவும் வினைப்படி நடக்குமேயல்லது வேறில்லை. ஓ மகாராசனே! உமக்கு இராச்சியம் நிலைபெற்றிருக்க விதியிருந்தால் அப்படி நடக்கிறது அப்படிக் கில்லாவிடில் நீரென்ன சாக்கிரதையோடு இருந்தாலும் நிற்கப் போகிறதில்லை ஆம்போதாகும் போம்போது போகுமிதனை

நீர் நிச்சயமாக மனதில் நம்பிக்கொண்டு மந்திரிகள் சொல்லுகிற வார்த்தை யன்புடனே சொல்லுகிற வார்த்தையோ? அல்லது கபடத்துடனே சொல்லுகிற வார்த்தையோ? அதைத் தெரிந்துகொண்டு யுக்தப்படிக்கு நடக்கவேண்டு மென்றான் கர்னன்.

இவ்விதமாகச் சொல்லிய கர்னனுடைய சொல்லைக்கேட்ட துரோணாசாரியர், ஆ! ஆ! கர்ணா! உன்னை யறிவோமப்பா! எதற்காகக் கொடிய கருத்தினால் இப்படி பேசுகிறையோ? அது நன்றாகத்தெரிந்தது. நீயோ பாண்டவர்கள் விஷயத்தில் முகவும் துஷ்டனா யிருக்கிறாய் ஆகையால் உன் குற்றத்தை அயலார்மேலேற்றிக்காட்டுகிறாய் நானிந்தக் குருவமிசம் தழைக்கப்பிறந்த இந்த ராஜனுக்கு இதமே சொல்லுகிறேன். நீ இதைத் தீமையாக நினைத்தாலுனக்கிதம் எதுவோ அதனைச் சொல்லு நான்வேண்டாமென்று தடுக்கவில்லை. ஆனாலொன்றுமாத்திரம் சொல்லுகிறேன் கேள் நான்சொன்னபடி செய்யாமல் வேறுவிதமாகச்செய்தால், இக்குரு வமிசத்தார் அதிக விரைவி லழிந்துபோவார்கள். இதற்குச் சந்தேகமில்லை. அப்பால் என் தேகமும், உன் தேகமும் மற்ற எவர்கள் தேகமு மில்லையென்று சொல்லினார். அப்போ திவையனைத்துங் கேட்டிருந்த விதுரன் சில சொல்லத்தொடங்கினான். ஓ ராஜனே! இப்போது யதார்த்தத்தைக் கேட்க நினைத்திருக்கிறீர். ஆகையால், இஷ்டபந்துக்கள் உமது நன்மைக்கேதுவாகிய வார்த்தைகளையே சொல்ல வேண்டும். ஆகையாலேதான் நம்முடைய குலத்துக்குள் சிரேஷ்டரா யிருக்கிற வீஷ்மாச்சாரியார் உமக்கிதமாகச் சொன்னார் அப்பேச்சை நீர் அங்கீகரிக்காமற் போகிறீர். அவ்வாறே ஆசாரியராகிய துரோணரும் விசேஷமாகிய நன்மையைச் சொன்னார். இவைகளை எல்லாம் ராதையின் மகனாகிய கர்னன் இதமல்லவென்று நினைக்கின்றான். அவ்விருவர் சொல்லிய வார்த்தைகளையும், கர்னன் கூறிய கட்டுரையும், நன்றா யோசித்துப்பாரும் எவ்வளவு யோசித்துப் பார்த்தாலும், இவ்விருவரைக் காட்டிலும் உமக்கிதஞ் சொல்லத் தக்கவர்களைக் காணேன். இவர்களோ வயதினாலும், அறிவினாலும், கல்வியினாலும், முதிர்ந்தவர்கள். அன்றியும் உம்மிடத்திலுமந்தப் பாண்டுகுமாரர்களிடத்திலும் பட்சபாதமின்றி இருக்கின்றவர்கள். அல்லாமலும் தருமமாய் நடப்பதிலும், சத்தியந் தவறும விருப்பதிலும், பரசுராமன் - இரகுராமன் - கயன் இவர்களைப் பார்க்கிலும் குறைந்தவர்க ளல்ல. நீர் விரும்பிக் கேட்காம லிருக்கும்போது ஒரு வார்த்தையுஞ் சொல்லவில்லை. இதுவரையி லும்க்கேதாகிலும் ல்பகாரஞ் செய்ததாகவுந் தோற்றவில்லை. இப்படிப்பட்டவர்களுடைய ஆலோசனை உமக்கு நன்மை செய்யாமற் போகுமா? அவர்கள் யுக்தியே பழுதுபடும்போது இக்கர்னனுடைய புத்தியும் சவுரியமுமா யுதவப்போகின்றன. ஓ பரதவமிசதிலகனே! மனிதர்க்குள் அறிவினாற் சிறந்தோராகிய இவர்கள் உம்மிடவிஷயத்திற் கொஞ்சமும் நெஞ்சில் வஞ்சனையாகப் பேசமாட்டார்கள் என்றென்றைக்குஞ் சரியிருப்பவர்க ளென்றெனக்கு நிச்சயமிருக்கின்றது நீரும் நெடுநாளாய் இவர்களுடைய சகவாசத்தினாலே வெகு தருமங்களை யறிந்திருக்கிறீர் இவ்விருவரும் பொருளுக்காகவும் பிரக்யாதைக்காகவும் பேசுகிறவர்களல்ல இருதிறவருக்கும் அபிவிருக்தி யுண்டாகும்படியாய்ச் சமபட்சமாய்ப் பேசுகிறவர்களென்று உறுதியாய் நம்பும். இதுதான் உமது மிருந்த நன்மைக்குக் காரணமாகும் துரியோதனன் முதலாகியவர்கள் இந்த ராச்சியத்தைக் குறித்துத் தமக்குச் சொந்தமென்று எப்படி நம்பியிருக்கிறார்களோ அப்படியே பாண்டுகுமாரர்களும் உரியவர்களாக யிருக்கிறார்கள். ஆதலாலே அந்தப் பாண்டவர்கள் விஷயத்தில் யார் நன்மையைச் சிந்திக்கவில்லையோ அவர்கள் புத்தியீனர். அப்படிப்பட்ட மந்திரிகள் உமக்கு இதஞ் செய்கிறவர்களல்ல அல்லது உம்முடைய மனதிற் சொந்தப்பிள்ளைகளைக் குறித்து விசேஷ அபிமானமிருப்பதை யறிந்து அதற்குத் தக்கபடி முடிக்கும்படியான காரியத்தை வெளியிடுவார்களே யாகில் அப்போதும் அவர்கள் உமக்கு யிதஞ்செய்யும் மந்திரிகளல்ல. ஆகையாலேதான் நல்ல சுபாவமுடையவர்களும் மிருந்த பராக்கிரமமுடையவர்களுமாகிய இவ்விருவரும் உம்முடைய உட்கருத்தை வெளிக்குக் கொண்டு வராமலே பேசி வந்தார்கள். இதை நீர் நன்றாய்ச் சிந்திக்க வேண்டும் ஆகிலும் பாண்டவர்களை வெல்லக் கூடாதென்பதை மாத்திரம் வெளியிட்டுச் சொல்லினார்கள். அது சரியே நீர்தான் நன்றா யோசித்துப் பாரும் இரண்டு கைகளாலும் அம்புகளை விடுகிற திறமையுள்ள அர்ச்சுனனை யுத்தத்தி லிந்திரன்தான் ஜயிக்கமாட்டுவானா? பதினாயிரம் யானை பலமுள்ள வீமசேனனைத்

தேவர்களெல்லாம் ஒன்ருகக் கூடினுலும் ஜயி
க்கக்கூடுமா? சகலவித யுத்தத்திலும் மிகுந்த
வல்லமையுடைய ரட்டைப் பிள்ளைகளை எவன்
ஜயிக்க மனது கொண்டு எதிர்க்கமாட்டுவான்?
ஒருக்காலும் மாருத தைரியத்தையும் பொறு
மையையும் தயையையும் சத்தியத்தையும்
பராக்கிரமத்தையு முடையவனுகி உதிட்டிர
னைச் சயிக்கத்தகுந்த புருஷன் யாராவது உம்
முடைய மனதில் தோற்றுகிருனு? அன்றியும்
எவர்களுடைய பட்சத்தில் யதுகுல திலகரா
கிய பலராமனும் கிருஷ்ணனும் கங்கணங் கட்
டிக்கொண் டிருக்கிருர்களே அவர்களுக்கு எது
தான் கைகூடிவர மாட்டாது? அல்லாமலும்
சாத்தகியும் துருபதனும் இவன் புத்திரராகிய
திஷ்டத்துய்மன் முதலான பேர்களும்
அவர்களுக்கு உபபலமாக இருக்கும்போது
அவர்களுடனே போர் செய்யவேண்டு மென்
கிற நினைப்பு எந்தப் புத்திமானுக்கு உண்டா
கும். இப்படிக்கெல்லா மிருக்கிறபடியினுலே
நீர் எந்த உபாயத்தினுலும் பாண்டவர்களை
வெல்லக்கூடாது. ஆதலால், இதனை நன்ரு
யோசிப்பதோடு இந்த ராச்சியத்தில் அவர்க
ளுக் குண்டாயிருக்கிற சுதந்திரத்தையும் தீர்க்
காலோசனை செய்து தருமத்திற் கழிவில்லா
மல் அவர்களுக்குத் தகுந்த நன்மை செய்யக்
கடவீராக. ஓ மகாராஜனே! உமக்குப் புரோச
னன் முதலிய பேர்களால் நடத்திவிட்ட காரி
யத்தினுல் வந்திருக்கிற அபகீர்த்தியாகிய
அழுக்கிருக்கின்றதே அதைப் பாண்டவர்க
ளுக்கு நன்மை செய்வதாகிய நீராலே கழுவிப்
போடும் இப்படிசெய்வதே நற்பிழைப்பு நல்ல
சுபம் க்ஷத்திரியத் தன்மைக்கு மேம்பாடு அன்
றியும் இதிலிருக்கிற குணங்களையும் உமது
பிள்ளையோடு சேர்ந்த மற்றையர் சொல்லுங்
கட்டுரைகளிலிருக்கின்ற குற்றங்களையும் மன
தில் நிதானித்துப் பாரும் துருபத மகாராஜ
னுக்கும் நமக்கும் நெடுநாளாய்ப் பகையுண்டா
யிருக்கின்றதல்லவா? இப்போது பாண்டவர்
களுக்கு நன்மை செய்வதினுலே அந்தத் துரு
பதனை நாம் மித்திரனுகக் கொள்ளுகிருேம்.
இப்படி செய்வதினுலே நம்முடைய ராச்சிய
மானது பலத்தை அடைகிறது. அன்றியும்,
கிருஷ்ணன் எந்தப் பட்சத்தி லிருக்கிருனே
அந்தப் பட்சத்திற்கே ஜயமென்று நம்பவே
ண்டும் இப்படிப்பட்ட பலமடைந்த நம்மை
வெல்லுகிற பேர்கள் யார்? சதுர்வித உபாயங்
கள் நான்கினுள் ஒன்றுக்கொன்று தாழ்ந்தது.
ஆகையினுற் சமாதானத்தினுலேயே சாதிக்க
வேண்டிய காரியத்தை யுத்தத்தினுலே சாதிக்
கப் புறப்படுகிறவன் யோக்கியனல்லன். இப்
பொழுது நம்முடைய ராச்சியம் இருக்கிற
ஸ்திதியைப்பாரும் பட்டணத்துக் குடிகளும்
தேசத்துக் குடிகளும் பாண்டவர்கள் பிழைத்
திருக்கிற செய்தி கேட்டு அவர்களைப் பார்க்க
வேண்டு மென்று மிகவும் விருப்ப முடைய
வர்களாகச் சிலரிருக்கிருர்கள். பலர் பிரயா
ணப்பட்டுப் பாஞ்சால தேசம் போய்
விட்டார்கள். நமது சபையி லிருப்பவர்கட்கும்
ஆசையுண்டு. ஆனுல், அந்த விருப்பத்தை
வெளியிடாம லிருக்கிருர்கள். இப்படி சகல
ராலும் விரும்பிக் கொண்டாடத்தக்க
அப்பேர்ப்பட்டவர்களுடைய விருப்பத்தை
நிறைவேற்ருமற் போவது இராச்சியத்திற்
குப் பலக்குறைவாகும். மேலும், நமது ராச்
சியக் குடிகளுக்கேயன்றி இதர ராச்சியக் குடி
களுக்கும் பாண்டவர்கட்கு மிதஞ்செய்து
வைக்கவேண்டுமென்பதே இஷ்டம். துரியோ
தனனும் கர்னனும் சகுனியும் தருமநிலை தெரி
யாதவர்களாதலால் அவர்கட்கு அகிதஞ்
செய்து வைக்கவேண்டுமென்பதே இஷ்டம்.
அவர்களுடைய வார்த்தையின்படி நீர் நடக்க
வேண்டாம். நீர் தற்காலத்தில் யுக்தமானவற்
றைக் கேட்டீரென்று இந்தக் காரியத்தைச்
உமக்குச் சொல்லினேன். துரியோதனன் சொற்
படி நீர் நடப்பீராகில் நமக்கும் அனேக
ஜனங்களுக்கும் கேடும் விரோதமும் கேட்கா
மல் வருமென்பதில் எவ்வளவு சந்தேகமில்லை
இதை உமக்குத் தெரியச் சொன்னேன். அப்
பால் உம்முடைய இஷ்டமென்று சொல்லி
நின்ருன் விதுரமகாராஜன்.

## பாண்டவர்களை அஸ்தினுபுரத்திற்கு வரவழைத்தல்

இவையனைத்துங் கேட்ட திரிதராஷ்டிர
மகாராஜன் விதுரனை நோக்கி, தம்பி! வீஷ்மா
சாரியரும் துரோணுசாரியரும் சகலமுமறிந்த
வர்கள் நமக்கும் வேண்டியவர்கள் அவர்கள்
சொல்லிய சொல்லோ மிகவும் நல்லது நீயும்
அப்படியே தருமமானதாயும் சத்தியமானதா
யும் பேசினை சந்தோஷமாயிற்று. அந்தக்
குந்தி குமாரர்களாகிய வீராள் பாண்டு மகா
ராஜாவுக்கு எப்படி பிள்ளைகளோ அப்படியே
எனக்கும் பிள்ளைகள் இதிற் சந்தேகமில்லை
இந்த ராச்சியம் என் பிள்ளைகளுக்கு எப்படி
சொந்தமோ அப்படியே பாண்டவர்களுக்
குஞ் சொந்தமாகவே இருக்கின்றது. ஆகை

யினால், ஓ விதுரனே! நீ போய் அவர்கட்கு மரியாதைசெய்து அவர்களைக் குந்தியுடனே யும் தேவலோகத்துப் பெண்போன்ற என் மருமகள் திரௌபதியுடனேயும் இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டுவா ஏதோ தெய்வாதீனத்தினால் அந்தப் பாண்டவர்களும் குந்தியும் பிழைத்திருக்கிறார்கள் துருபதக் கன்னியையும் விவாகம் செய்து கொண்டார்கள். இதனால் நமக்கெல்லாம் பெருமை கிடைக்கச் செய்தார்கள். பாவியான புரோசனன் மாண்டான். நமக்கு உண்டாகிய பெருந் துக்கமும் நீங்கிற்று என்று சந்தோஷமாகச் சொன்ன மாத்திரத்திலே விதுரன் பாண்டவர்களிடத்திற்குப்போக உடம்பட்டு அநேக வஸ்திராபரணங்களையும் திரவியங்களையும் எடுத்துக்கொண்டு தான் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தருமங்களை யறிந்தவனுகையாலே முதலிற்றான் போகவேண்டிய மரியாதையின் படிக்கும் பாஞ்சாலனிடத்திற்குச் சென்றான். அந்தத் துருபதராசனும் தான் செய்யவேண்டிய மரியாதையின்படி உபசாரத்துடன் விதுரனைத் தன்னிடத்திற்கு வரவழைத்துக் கொண்டான்.பின்பு ஒருவரையொருவர் தழுவி க்ஷேமம் விசாரித்துக்கொண்டு வரும்போது விதுரன் அவ்விடத்திற் பாண்டவர்களையும் கிருஷ்ணனையும் கண்டு மிகுந்த ஆனந்தத்தோடு ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு குலாவினார்கள். அவர்களும் இவனை மிகுந்த சந்தோஷத்தோடு பூசித்து சகலமான பேர்களுடைய சுபக்ஷேமங்களை அடிக்கடி கேட்டார்கள். அவனும் பொதுவாக யோக க்ஷேமங்களைச் சொல்லி பாண்டவர்களுக்கு நேரிட்ட ஆபத்தையும் அதில் நின்று நீங்கி உயிருடன் பிழைத்திருப்பதையும் பேசி நினைத்து நினைத்து ஆச்சரியமும் சந்தோஷமும் அன்புமாகிய கடல்மூன்றும் பொங்கி திரிதராஷ்டிரனுடைய சொற்படி இவர்களுக்கும் குந்திக்கும் திரௌபதிக்கும் துருபதனுக்கும் அவன் புத்திரர் முதலானவர்களுக்கும் அனேக வஸ்திராபரணங்களுடன் திரவியங்களையுங் கொடுத்து மிகுந்த வின்பத்துடனே தான்வந்த காரியத்தைச் சொல்லத் தொடங்கினான்:

ஓ துருபதமகாராஜனே! நானிப்போது சொல்லுகிற வார்த்தையை நீர் உம்முடைய மந்திரிகளோடும் புத்திரர்களோடும் தயை செய்து கேட்கவேண்டுகிறேன், எங்களண்ணனுகிய திரிதராஷ்டிர மகாராஜனும், அவர் புத்திரர்களும், மந்திரிகளும், பந்துக்களும் உம்முடைய க்ஷேமாதிசயங்களைக் கேட்க மிக விருப்பமுள்ளவர்களாக இருக்கிறார்கள். உம்முடைய சம்பந்தங் கிடைத்ததினாலே மகாராஜாவானவர் ஆனந்த சாகரத்தில் அழுந்தியிருக்கிறார். உங்களுடைய நன்மையைக் குறித்தும், சம்பந்தம் நடந்த பெருமையைக் குறித்தும், அடிக்கடிக்கு விசாரிக்கிறார். அப்படியே மகானுபாவராகிய சந்தனு குமாரரும் உம்முடைய க்ஷேமங்களைக் கேட்கிறார். பிரியமுள்ள துரோணாசாரியரும் உம்மை அனந்தமுறை ஆலிங்கனஞ் செய்ததாகச் சொல்லச்சொன்னார். உங்களோடு சம்பந்தஞ் செய்து கொண்டதினால் எமது சுற்றத்தாராகிய சகலரும் தங்களைப் புண்ணியசாலிகளாக நினைத்து,பெருதபேறு பெற்றவர்களைப்போல் மகிழ்ச்சி யடைகிறார்கள். இதுகளை யெல்லாம் நீங்கள் நன்றாக ஆலோசித்து, பாண்டவர்களையும் அவர்கட்குரிய பத்தினியையும் அனுப்பிவிக்கவேண்டும். அஸ்தினாபுரியிலிருக்கும் சகல ஜனங்களும், பாண்டவர்களையும் குந்தியையும் காணப் பட்சமுள்ளவர்களா யிருக்கிறார்கள். அன்றியும், கன்னிகாரத்னமாகிய திரௌபதியை இராஜகுல மங்கையரெல்லாம் எப்போ கண்டு களிப்போமென்று எதிர்பார்த்திருக்கிறார்கள். அந்தத் தேசமுழுவதும் இந்தப் பாண்டவர்கள் சுகமாக விருக்கும் செய்தி கேட்டு சந்தோஷத்துடனே இவர்களது வரவுக்கு வழிபார்க்கிறார்களாகையால் சாவகாசஞ் செய்யாமல் துரிதமாக அனுப்பிவைக்கவேண்டுகிறேன் இதை முக்கியமாய் தெரிந்து கொண்டு, என்னண்ணனுகிய திரிதராஷ்டிர மகாராஜனிடத்திற்கு இச்செய்தி தெரிவிக்கும்படி முன்னதாகத் தூதரை அனுப்பிவிட்டு, பிற்பாடு இவர்களை அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று சொன்னான். அது கேட்ட பாஞ்சாலராஜன் மகா சந்தோஷத்தோடு சொல்லுகிறான்:

ஐயா விதுரரே! தாங்கள் சொல்லியவனைத்துங்கேட்க மிகுந்த சந்தோஷமாயிற்று. முற்சென்னத்திற் செய்த நல்வினையால் எனக்குக் குருவம்சத்துச் சம்பந்தங் கிடைத்தது. இதைக் குறித்துப் புகழ்வதற்கு என்னால் வல்லமை இல்லை என்னுடைய குறைகளெல்லாம் நீங்கிப்போயின. பாண்டவர்கள் தங்கள் மாளிகைசேர்ந்து வாழ்வது எனக்கதிக ஆனந்தந்தான். ஆனால் அவர்களை உங்கள் ஐயா அவர்க

ளோடு ஊருக்குப் போங்களென்று ஆக்ஞை
செய்ய, நான் யோக்கிய னல்லாதவனு
யிருக்கிறேன். இப்படிக்கு நான் சொல்வ
தினுல் நேரிடுங் குற்றங்களைச் சாது சங்
கப் பழக்கமறிந்த நீரறியீரோ? பாண்டவ
குலதிலகராகிய தருமபுத்திரர் எப்படி நினைக்
கிருரோ அப்படியே என் கருத்தும் அதற்கு
மாறு வேறில்லை. அவருக்கும் அவர் தம்பி
மாருக்கும் உயிர்த் தோழராகிய இராம
கிருஷ்ணனுக்கும் யெந்த வேளையிற் போக
வேண்டுமென்று நினைப்புண்டாகுமோ அந்த
வேளையில் என் மகனைக் கூட்டியனுப்பச் சித்த
மாயிருக்கிறேன். ஒருபட்சம் யோசிக்கு மிடத்
துத் திரௌபதியை என்னிடத்தில் வைத்தி
ருப்பதற்கும் அவர்களோ டனுப்பிவைப்பதற்
கும் எனக்கு மதிகாரமில்லை. எப்போ தராதத்
தம் பண்ணிப்போட்டேனே அப்போதே
சொத்து அவர்களுடையது அவர்களிஷ்டப்
படி நடத்திக்கொள்ளலாம் இவ்விஷயத்தைக்
குறித்து நீரென்னைக் கேட்கவேண்டிய தொ
ன்றுமில்லை என்று சொல்ல இச்சொல்லைக்
கேட்ட உதிஷ்டிரர் மாமனுரைப் பார்த்து,
ஐயா மகாராஜாவே! நீரெவ்வாறு கட்டளை
யிடுகிறீரோ அவ்வாறு நடக்கக் காத்திருக்கின்
ரேமென்று சொல்லினுர் கண்ணனும்பாண்ட
வர்கள் அஸ்தினபுரத்திற்குப் போவது எனக்
கிஷ்டமா யிருக்கிறதானுல் மகாராஜாவின்
கருத்தெப்படியோ தெரியவில்லை என்றுசொல்
லத் துருபதன் சொல்லுகிறுன். நந்த நந்தன
னுகிய வாசுதேவன் காலத்திற்கேற்ற கோலமா
யோசித்து நிச்சயஞ் செய்தருளியது என்ன
ஏதுவே அதுவோ என் கருத்தாகும் எனக்குப்
பாண்டவர்களிடத்தில் எப்படி பக்ஷமிருக்கி
றதோ அப்படியே கிருஷ்ணனுக்கும் அவர்க
ளிடம் பட்சமிருக்கிறதென்பது உள்ளங்கை
நெல்லிக்கனிபோற் றெரியவருகின்றது. அன்
றியும், ஸ்ரீகிருஷ்ண னிந்தப் பாண்டவர்களு
டைய நன்மையைக்குறித்து எப்படி எப்போ
தும் எச்சரிக்கையா யாலோசித்துக்கொண்டி
ருக்கிருரோ அப்படிக்கு மிகவும் புத்திசாலியா
கிய தருமபுத்திரரும் சிந்திக்காம லிருக்கமாட்
டார். ஆகையால், அவருடைய கருத்தின்படி
யே எல்லோரும் நடக்கவேண்டுவதென்று
துருபதன் சொன்னவார்த்தையைக் கேட்ட
யாவரு மொத்துக்கொண்டு அஸ்தினபுரத்திற்
குப்போக மனமுள்ளவர்களா யிருந்தார்கள்
அப்போது விதுரனுனவன் பாண்டவராதியர்
வருதலைத் திரிதராஷ்டிர னுக்கறிவிக்கும்படித்
தூதனுப்பிவிட்டு உடனே குந்திதேவியினிடத்
திற்குச் சென்று அவளுடைய பாதங்களிலே
சாஷ்டாங்கமாகத் தெண்டனிட் டெழுந்து
இரு கண்களிலுஞ் சிறிது நீரரும்பக் கைகளை
கூப்பிக்கொண்டு எதிரில் நின்றுன்.

அந்தக் குந்தியும் மைத்துனனைக் கண்ட
மாத்திரத்திலே தான்பட்ட துயரத்தை நினை
த்து கொஞ்சநேரம் விசனப்பட்டு பின்பவனை
நோக்கிச் சொல்லுகிறுள்: ஓ மைத்துனரே!
அரக்கு மாளிகையில் அகப்பட்டுக்கொண்டு
பாண்டுராஜனுடைய குழந்தைகள் உமது
ஆசீர்வதத்தால் மறுபடியும் பிழைத்து வந்
தார்கள். ஆமையானது தானெங்கே யிருந்தா
லும் தன் சினைகளை நினைத்துக்கொண்டிருந்
தால் அதனுலே அவைகளெல்லாம் உருவாய்
வளர்கின்றனவென்று சொல்லுகிறுர்கள். அப்
படிக்கு நீரெங்கே யிருந்தாலும் உம்முடைய
நினைப்பினுலே இவர்கள் வளருகிறுர்கள். காக்
கையானது குயில் முட்டைகளைத் தன்
முட்டையென்று பெற்று வளர்த்து காப்
பாற்றுவதுபோலும் உம்முடைய பிள்ளைகளை
காகம்போன்ற நான் காப்பாற்றினேனே அல்
லது வேறில்லை முன்பு நாங்களனைவரும் கரை
யில்லாத விசனத்தில் முழுகினேம் பின்பு
பெரியவர்களுடைய ஆசீர்வாதத்தினுர் கரை
யேறினேம் இனி நடத்தவேண்டியது ஏது
வோ அதனை நீர் நடத்தவேண்டுமென்று
சொன்னுளிவை யனைத்துங்கேட்ட விதுரன்
பின்னும் வியாகூல சித்தனுயிருந்து அப்பாற்
சிறிது தேறியவரும் அஸ்தினபுரம் போக
வேண்டியதற்காக ஆலோசித்த வாலோசனை
யைத் தெரிவித்தான். குந்தியும் அப்படியே
அங்கீகரித்தாள். பின்பு பாஞ்சால ராஜனு
டைய அனுமதியினுலே யாவரும் பிரயாணத்
திற்குச் சித்தமானுர்கள். அப்போது பாஞ்சா
லன் பொன்னுலாகிய கழுத்துச் சங்கிலிகள்
காற்சங்கிலிகள் தந்தக்கட்டுகள் முதலியவைக
ளோடு முத்துத் தோரணங்கட்டி அலங்கரித்த
அம்பாரிகளைக்கொண்டு மிகவும் வல்லவராகிய
பாகராலே நடத்தப்படுகிற யானைகளாயிரமும்
இலேசாய் ஓடத்தக்கவைகளாகியும் உறுதி
யாகியுமிராநின்ற விசித்திரமாகிய தேர்களா
யிரமும் பொற்சேணிகள் போட்டு அழகாகச் சிங்
காரித்த உயர்ந்த ஜாதி குதிரைகள் ஐம்பதினு
யிரமும் பணிவிடை செய்யும் பெண்களையாயிர
மும் ஆண்மையிற் சிறந்த ஆண்பிள்ளைகள்
ஆறுயிரமும் விற்பிடித்துப் போர்செய்ய

வல்லவர்களாகிய சேவகர்களாயிரமும் மற்றும் பொன் வெள்ளி இரத்தினங்கள் படிகங்கள் யானைத் தந்தங்கள் இவைகளினாற் செய்யப்பட்ட பலவிதமாகிய மஞ்சங்கள் ஆசனங்கள் பாத்திரங்கள் முதலாகிய வஸ்துகளநேகமும் அனேகமாயிரம் பசுமாடுகளும் அனேகமாயிரம் வஸ்திராபரணங்களும் இன்னு மிப்படி ஆயிர மாயிரமாக அநேகவிதமான இராஜ சம்பத்துக்குரிய வஸ்துக்களை எல்லாம் பாண்டவர்களுக்குத் தனித்தனியே பரிசு கொடுத்தான். அப்பாண்டவர்கள் முன்னம் பெற்றிருக்கிற ஸ்ரீதன வஸ்துக்களோடு இவைகளையும் பெற்றுக்கொண்டு சகலவித வாத்தியத்துடனே பாஞ்சால நகரம்விட்டுப் புறப்பட்டு வழிகளில் நல்லவிடங்கள் எங்கெங்கே யிருக்கின்றனவோ அங்கங்கே யிறங்கி வேடிக்கையாக எல்லோரும் ஸ்நானபூசை போஜனாதிகளைச் செய்து வேண்டியபடி விளையாடிக்கொண்டு சகல பரிசனங்களும் புடை சூழ்ந்துவர அதிக சந்தோஷமாகச் சென்றார்கள்.

இப்படியிருக்க,முன்னமே விதுரர் யனுப்பிவித்த தூதர்களாற் கண்ணில்லா மன்னவன் பாண்டவர்கள் அஸ்தினாபுரத்திற்குப் புறப்பட்டு வருகிற செய்தி கேட்டு, பாண்டவர்களை எதிர்கொண்டு அழைத்து வரும்படியாகத் தன் குமாரர்களாகிய விகர்ணன், சித்திரசேனன் என்பவர்களையும், துரோணாச்சாரி, கிருபாசாரியர்களையும், மற்றுமனேகம் பிராமணாள் முதலானவர்களையும், தாசிகளையும், சதுரங்க சேனைகளையும், வாத்தியங்களையு மனுப்பி தன் பட்டணத்தை அலங்கரிக்க இராஜபறை சாற்றித் தெரிவிக்கும்படித் தூதர்களுக்குக் கட்டளையிட்டான். உடனே அத்தூதர்கள் வள்ளுவரைக் கொண்டு முரசறைவித்த மாத்திரத்தில் பட்டணத்துச் சனங்களெல்லாம் பாண்டு குமாரர்கள் வருகிற செய்தி கேட்டு, சுவர்க்க போகங் கிடைக்கப் பெறுவோர் அடையும் பேரானந்தக் களிப்பை அன்றே யடைந்தவர்களாய் வீடுகள்தோறும் பந்தற் போட்டு, வர்ணச்சேலைகளும் கொடிகளுங் கட்டி, பொன் மாலைகளாலும் பூமாலைகளாலும் பல விசித்திரங்கள் செய்து, பலவிதப்பிரதி மெய்களிறுத்தி,எங்குமதிற் தூமங்கள் கமழச்செய்து, முத்துத்தோரணங்கட்டி, வீணை வேணு மிருதங்க முதலான வாத்தியங்களையும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். அப்படியே வீதிகளில் சந்தனம் குங்குமம் பன்னீர் முதலிய வாசனைகள் சேர்ந்த நீர்களைத் தூளியடங்கத் தெளித்து, தளிர்களையும் புட்பங்களையு மிறைத்து, சுபசூசகமாகிய மங்கள வஸ்துக்களையும் பரப்பி அங்கங்கே பரிமள மிகுந்த சாம்பிராணிப்புகை சந்தனப்புகை முதலிய பலவகைப் புகைகளைக் கமழச்செய்து, மகரதோரணங்கள் கட்டி அடிக்கொரு சாலைகள் மேடைகள் ஏற்படுத்தி, அதிற் பலவித உணவுகளும் பானங்களும் பழங்களும் பூசிக் கொள்ளும்படியாகிய சுகந்த வஸ்துக்களும் தகுந்த பூமாலைகளும் ஏலக்காய் முதலிய விடையங்களோடு கூடிய தாம்பூலங்களும் நிறைத்து, சங்கீதத்திலும் நாட்டியத்திலுந் திறமைபெற்று அழகினாலுஞ் சாதுரியத்தினாலும் மேன்மையுற்று அபிநய குணவிலாசமுள்ள ஸ்திரீகளை பலவித அலங்காரங்களோடும் வாத்தியங்களோடும் பரதநாட்டியத்திற்கு நிறுத்தி, அகசியஞ் செய்வதிலும் புகழ்வதிலும் அதிக கீர்த்திபெற்ற பேர்களை ஆங்காங்கு இருத்தித் திருத்தினார்கள். அன்றியும், ஸ்திரீகளும் புருஷர்களும் நல்ல பணிகள் பூண்டு, பட்டாடைகளை யுடுத்தி, சந்தன புஷ்பங்களைத் தரித்து, சகல கோலாகலத்துடனேயும் எதிர்பார்த்திருந்தார்கள். இராஜக்கிரகங்களிலும் சபைகளை யெல்லாந் திறந்து அலங்கரித்து, தீப மாளிகைகளை வைத்து மிகவும் பரிஷ்காரஞ் செய்தார்கள். யானை குதிரை முதலிய வாகனங்களையுந் தகுந்தபடி சிங்காரித்து ஆசாரவாசலில் நிறுத்தி, மாவுத்தர் முதலிய போர்ச் சேவகரெல்லாம் ஆயுதபாணிகளாக நின்றிருந்தார்கள். இப்படிக்கு அலங்கரிக்கப்பட்ட அந்தப் பட்டணத்தைப் பார்த்தால் சனங்களுடைய விருப்பமே இவ்வடிவுகொண்டு வந்ததென்று சொல்லும்படியாகவும், இராச்சிய லட்சுமியானவள் பாண்டவர்களைச் சேரவேண்டுமென்று அலங்கரித்துக் கொண்டிருப்பதுபோலவு மிருந்தது. அப் பட்டணத்து மாளிகைமீது கட்டியிருக்கிற கொடிச்சீலையானது ஆகாயத்தி லசைந்துகொண் டிருப்பதைப்பார்த்தால் இராஜதானியென்னும்பெண்ணானவள் தன்னிடத்திற்குப் பாண்டவாள் வருகிற செய்தியைச் சந்தோஷத்தினால் தேவர்களுக்குத் தெரிவித்து அரசர்களைக் கை நீட்டிக் காட்டி அழைக்கிறது போலவு மிருந்தது. பரிமள வாசனைப்புகைகள் மேலெழும்பிச் சூழ்ந்ததை நோக்கில் பூமிதேவியார் பாபம்போக்கிப் புண்ணிய முண்டாக்கித் தன்னைப் பாண்டவர்கள் ஆளப்போகிறதை நினைத்

துச் சந்தோஷத்திலைலே பூரித்து எழுந்
ததுபோ லிருந்தது.

இவ்வாறு அஸ்திஞபுரமானது சகல
அலங்காரங்களோடு நிறைந்திருக்கப்
பாண்டவர்கள் வழி யனைத்தையுங் கடந்து
பட்டணத்திற்கு அருகிலிருக்கின்ற ஓர் உத்
தியாவனத்தி லிறங்கி யிருக்கும்போது
துரோணச்சாரியார் முதலான பேர்களெல்
லாம் முன்னதாக வந்து கண்டார்கள். அவர்
களைக் கண்ட மாத்திரத்தில் பாண்டவர்க
ளெழுந்திருந்து வந்தனஞ் செய்யவேண்
டிய பேர்களுக்கு வந்தனஞ் செய்து ஆலிங்
கனஞ் செய்யவேண்டியவர்களை ஆலிங்கனஞ்
செய்து ஒருவரோடொருவர் க்ஷேமாதிசயங்
களை விசாரித்து அவரவர்களுக்குத் தகுந்த
ஆசனங்களி லுட்கார்ந்தார்கள். பட்டணத்தி
லிருந்து வந்த ராஜசேவகர்கள் பாண்டவர்
களை வந்தனஞ் செய்து அவர்களாற் குச
லத்தை வினவப்பட்டவர்களாய்க் கைகட்டி
வாய்பொத்தி நின்றார்கள். பின்பு சித்திர
சேனனும் விகர்னனும் ஆசாரியர்களுடைய
அனுமதியினாலே பாண்டவர்களைப் பார்த்து,
ஓ தமயன்மார்களே! ஏன் சாவகாசம் பண்ணு
கிறீர்கள் நம்முடைய தகப்பனார் முதலான
யாவரும் உங்களைப் பார்க்கவேண்டுமென்று
துரிதப்படுகிறார்கள். ஆகையால், அவர்களு
டைய கண்களையும் மனதையும் ஆனந்த
வெள்ளத்தில் விளையாடச் செய்வீர்களாக
என்று வணங்கிச் சொல்ல, பாண்டவர்கள்
அத் தம்பிமார்களைத் தழுவி, அப்பா! பாலிற்
பழம் நழுவி விழுந்தாற்போ லாச்சுதென்று
சொல்லி துரோணச்சாரி முதலிய ஆசாரியர்
களுடைய முகத்தை நோக்கினார்கள். அப்
போது ஆசாரியர்கள் குந்தி குமாரரைப் பார்
த்து, ஓ குழந்தைகளே! சுவாமியினுடைய
கிருபையினாலே நீங்கள் பல தத்துக்களி னின்
றுந் தப்பிப்பிழைத்து மேன்மை தழைத்து
வந்த செய்தி கேட்டதுமுதல் நமது தேச
முழுவதும் உங்களைக் காணவேண்டுமென்கிற
பரவசத்தினாலே அலைதிரண்டு கரைபுரண்டு
வந்த கடல்போல் நிற்கிறது. மகாராஜாவோ
எப்போது வருவீர்களென் றெதிர்பார்த்திருக்
கிறார். ஆதலால், இவ்விராசகுமார ரிருவரும்
சொல்லுகிறபடி சீக்கிரம் புறப்படுங்கள் என்று
சொல்லவே, சுவாமிகளே! பாக்கியமாயிற்று
இதோ புறப்படுகிறோம் என்று தங்களுடைய
ஊழியக்காரர்களைப் பார்த்தார்கள். அந்தச்
சைகையறிந்த அவர்கள் உடனே வாகனங்க
ளைக் கொண்டுவந்தார்கள். சித்திரசேனன்
முதலானவர்களுமம தங்களோடு வந்த பரிவா
ரங்களை யெல்லாம் பிரயாண சன்னதப்படுத்தி
னார்கள்.

உடனே பாண்டவர்கள் திவ்யரதங்களின்
மீதிலேறிக்கொண்டு ஆசாரியர்களும் சித்திர
சேனன் முதலானவர்களும் சகல பரிவாரங்க
ளோடு தம்மைப் புடைசூழ்ந்துவரப் பேரிகை
கள்-காகளங்கள்-டக்கைகள் - மிர்தங்கங்கள் -
நாகசுரங்கள்-குழல்கள் முதலாகிய சகல வாத்
தியங்களோடு பிரயாணமாகிப் பட்டணத்திற்
பிரவேசித்து வீதிகளிற் செல்லும்போது பட்
டணத்து சனங்களெல்லாம் மெத்தைகள் மீதி
லும் பிரகாரங்கள்மீதிலும் கும்பற் கும்பலாகக்
கூடிக்கொண்டு பாண்டவர்களைப் பார்த்த சந்
தோஷத்தினாற் பேரானந்த மடைந்தவர்க
ளாகி அந்தப் பாண்டவர்கள் கேட்கப் பலவித
மாய்ப் புகழ்ந்துப் பேசிக் கொண்டார்கள்.
அவருட் சிலர் இதோ வருகிறார் நம்மை யெல்
லாம் தன் பிள்ளைகள்போற் காப்பாற்றிய தரும
புத்திரராகிய மகா புருஷனென்பார்கள் சிலர்,
அவரருகிற் றனித்தனி தேரூர்ந்து வருகிற
வர்கள் அண்ணன் சொற்றவராமல் குடிக
ளுக்கு மேன்மைக்கிடமாகிய காரியங்களையே
செய்ய முயல்பவராகிய தம்பிமார்க ளென்றார்
கள் சிலர், நமக்கினி குறையொன்றுமில்லை
சகல சம்பத்துக்களையும் அடைந்தோ மென்
றார்கள் சிலர். ஓ சனங்களே! என்ன பேச்சு
பேசுகிறீர்கள் பாண்டுமகாராசனே நம்மைக்
காக்கவேண்டு மென்று காட்டைவிட்டு மறு
படியும் நாட்டுக்கு வருகிறார் சந்தேகமில்லை
யென்று சொன்னார்கள் சிலர், நம்முடைய
பிள்ளைகள் வருகிறார்கள் இம்மை மறுமைப்
பயன் யாவும் நமக்குக் கிடைத்ததென வென்
றார்கள் சிலர், நீங்களெல்லாம் என்ன பிதற்று
கிறீர்கள் இந்திரலோகத்தி லிருந்து ஐந்து
கற்பகத்தருக்கள் வருகின்றன இனி யாம் ஒரு
காரியம் செய்யமாட்டோம் அப்போதைக்கப்
போது வேண்டியவைகளை அந்தத் தருக்க
ளிலே பெருக்கமாகப் பறித்துக் கொள்வோம்
என்றார்கள் சிலர், தருமதேவதை ஐந்துவடிவு
கொண்டு வந்திருக்கின்றது. ஆகையால், இவர்
களை நோக்குவதும் சிந்திப்பதும் துதிப்ப
துந் தவிர வேறு கருமத்தை நாம் செய்ய
மாட்டோமென்றார்கள் சிலர், ஐயோ மூடர்
களே! உங்களுக்கு என்ன அஞ்ஞானம்? கண்

ணனுடைய ஐந்தாயுதங்களும் நமக்கு க்ஷேமத்
தைச் செய்யும் பொருட்டு இந்த நகரியில்
இவ்வுருவங் கொண்டு வருகின்றனவென்றார்
கள் சிலர், பாண்டவர்கள் இறந்தது மெய்
தான். ஏனென்றால், இறந்து சுவர்க்கலோகத்
திற்குப்போய் நம்மிடத்தில் வைத்த தயையி
னாலே மறுபடியும் இவர்களிறங்கி வருகிறார்க
ளென்று சொன்னார்கள் சிலர், அப்படி யில்லா
விட்டால் இப்படிப்பட்ட கம்பீரத் தன்மையும்
காத்தியுமிருக்கமாட்டா, முன்னே நாம் இவர்
களைப் பார்த்தபோது இந்தத் தேஜசு இல்லை
என்றார்கள் சிலர், ஆ! நாமெல்லாம் உச்சீவிக்
கும்படியாக இவர்கள் மீண்டும் இப்பட்டணத்
திற்கு வந்தது என்ன சிலாக்கியம் என்றார்கள்
சிலர், என்ன பாக்கியம் ஓ! ஓ! இந்தப் பெண்
ணைப் பார்த்தீர்களோ? இவள் இலட்சுமியோ?
இரதி தேவியோ? பார்வதியோ? சரஸ்வதி
யோ? அல்லது காமன் சிருஷ்டித்த மாயை
யோ இவள் மனிதலோகத்துப் பெண்ணல்ல
தேவலோகத்துப் பெண்ணுமல்ல மனிதலோ
கத்துப் பெண்ணாகில் இவ்வளவு அழகுங்
காந்தியும் இருக்கமாட்டாது தேவலோகத்துப்
பெண்ணாகில் இமைகொட்டுதல் இருக்கமாட்
டாது நாகலோக கன்னிகையோவென்றால்
பாதங்களில் இந்த அழகிருக்கமாட்டாது என்
றார்கள் சிலர், ஆ! ஆ! குந்தி யென்னபாக்கியம்
பெற்றாள் இப்படிப்பட்ட மருமகள் தன்னை
வணங்கவுற்றாளே ஒன்றுக்கொன்று தகுதியில்
லாமற் கூட்டுகிறதென்று தெய்வத்தைப் பழிப்
பது அனியாயம் இந்தப் பாண்டவர்களுக்குத்
தக்கபடி இந்தப் பெண்ணை இதோ அமைத்
திருக்கிறதே என்றார்கள் சிலர், அந்தத் துரு
பதன் மகா பாக்கியஞ் செய்தான் ஆனதில்லல்
லவா இப்படிப்பட்ட மகளும்கிடைத்து இவட்
குத் தகுந்த மருமகர்களையும் படைத்தான்.
இவன் செய்ததல்லவோ தவம்? நாமிவர்களைக்
காண்பதற்கு என்ன பாக்கியஞ் செய்தோமோ
என்றார்கள் சிலர், யார் செய்த புண்ணியமோ
இந்தப் பாண்டவர்கள் கொடிய ஆபத்து
களில் நின்றும் தப்பி மறுபடியும் நம்மை
யும் பார்க்க வந்தார்கள் இவர்களுக்குக் கொடு
மை செய்ய நினைத்த பாவிகள் இப்போது
என்ன பண்ணுவார்கள் என்றார்கள் சிலர்,
நாமெல்லாம் புண்ணியஞ் செய்திருந்தால்
இவர்கள் நிலைபெற்று இங்கேயே இருக்கக்
கடவர்கள் என்றார்கள். இவ்வாறு பற்பல
விதமாக பேசிக்கொண்டு கண்களை மலர்த்திப்
பார்த்து வருகிற ஜனங்களைப் பாண்டவர்கள்
குளிர்ந்த தாமரை யிதழ் தேன்களை வீசுந் தன்
மைபோற் கடாக்ஷ வீக்ஷணியங்களினாலே
நோக்கிப் புரஜனங்களைப் பூரிக்கச்செய்து
அங்கங்கே இருக்கிற விநோதங்களையெல்லாம்
பார்த்து இராஜகிரகத்திற்குச் சமீபத்திற்போ
யிறங்கி விகர்னனுஞ் சித்திரசேனனும் முன்
னடக்கக் கண்ணனைக் கைபிடித்துக்கொண்டு
அரண்மனைக்குட் சென்று முறையே திரி
தராஷ்டிர மகாராஜன் வீஷ்மாச்சாரியார் முத
லாகிய பெரியோர்கள் பாதங்களில் வணங்கிக்
கும்பிட்டார்கள்.

பின்பு சிறியோர்கள் தங்களை வணங்க
அவர்களுக்குப் பல ஆசிகளுரைத்து மாளிகை
யுட் சென்றார்கள். அங்கே பானுமதியான துரி
யோதனனுடைய மனைவியானவள் தன் ஒரு
கத்தியுடனே கூடிக்கொண்டு திரௌபதை
யைப் பார்த்து தன் மாளிகைக்கு வந்த மகா
லட்சுமிபோற் பாவனை செய்து அவளுக்குச்
சகல உபசாரங்களையும்பண்ணி அந்தப்புரத்
திற் கழைத்துக்கொண்டுபோனாள். அவ்விடத்
திலே குந்திதேவியும் திரௌபதியும் காந்தாரி
யைக்கண்டு வணங்க, அவளிருவருக்கும் ஆசீர்
வாதங்களைச் சொல்லித் திரௌபதையை
ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு மனதி லிவள்
நம்முடைய மக்களைக் கொல்லவந்த மிருத்து
தேவதையே யென்று நினைத்து பொறாமை
யுற்ற மனத்தோடு பொறுதற்கரிய வஞ்சக
மும் தன்னைப் புடைசூழக் கூடியிருந்தாள்.
பின்பு அந்தக் காந்தாரியானவள் கொஞ்சமா
லோசித்து குந்தியும் அவள் மருமகளும் தன்
னிடத்திலிருப்பதைவிட புறத்திலிருப்பதில்
தன் மனதிற் கிஞ்சித்து திருப்தி என்று நினை
த்ததற்காக விதுரனை நோக்கி இவர்களிடத்திற்
பக்ஷமுள்ளவள்போலவும் இவர்கள் பொருட்
டுப் பரிவுடன் பேசுகின்றவள்போலவும் காட்டி
ஐயா விதுரரே! இன்றைக்குத் திதியும் நட்
சத்திரமும் நன்றாயிருக்கிறபடியால் குந்தியை
யும் அவள் மருமகளையும் பாண்டு இராஜனு
டைய மனைக்கு இட்டுக்கொண்டுபோய் கிரகப்
பிரவேசம் செய்துவையும் சாதாரணமானவர்
கள்போ லவர்கள் தங்கள் வீடுவிட்டுப் புறத்தி
லிருப்பது நன்றாக விருக்கவில்லை. ஆனால்,
உமக்கு இப்படி சம்மதியாயிருந்தாற் செய்ய
லாம் எனக்கோ அப்படிச் செய்வது உத்தம
மென்று தோற்றுகிறது அன்றியு மவர்களுக்கு
வேண்டிய இராஜ பூசிதமான சகல வஸ்துக்
களையும் முன்னதாக அவ்விடத்திற் கொண்டு

போய்ச் சேர்ப்பிக்க வேண்டுமென்று சொல்ல, விதுரனும் அப்படியே செய்கிறேனென்று பாண்டுமகாராஜனுடைய மாளிகையைச் சுத்தி செய்து அலங்கரித்துப் புரோகிதர்களையும் பிராமணர்களையும் அழைப்பித்துச் சுவஸ்தி வாசனஞ் செய்வித்து வாத்தியகோஷ முதலான சகல விபவங்களையும் நடத்திப் பாண்டவர்களுடனே பாஞ்சாலியை கிரகப்பிரவேசஞ் செய்வித்தார். அப்போது பட்டணத்திலிருக்கும் சகலமான பந்துக்களும் பெரிய மனிதர்களும் பெரிய வர்த்தகர்களும் இராஜசேவகர்களும் நாட்டிலிருக்கும் உழவர்கள் முதலிய ஜனங்களும் கூட்டங் கூட்டமாகப் பாண்டவர்களிடத்திற்குச் சென்று அவ்வவர்களுக்குத் தகுந்த மரியாதையுடனே தனித்தணி அளவற்ற கையுறைகளோடும் வந்து கண்டு காணாது கண்ட காட்சிக் கொப்பாக மிக்க களிப்படைந்து சரீரமெல்லாம் புளகமுற்று இரு விழிகளிலும் ஆனந்தபாஷ்பம் பெருகயோக க்ஷேமங்களைக் குறித்து அடிக்கடி பேசிக் கொண்டிருந்தார்கள்.

இப்பால்,வீஷ்மாச்சாரியர் துரோணாசாரியர் கிருபாசாரியர் முதலானபேர்கள் முறையே தினந்தினம் ஒவ்வொருவராய்ப் பாண்டவர்களுக்கு விருந்து செய்து வந்தார்கள். இப்படிக்குச் சகலமான பேர்களும் கொண்டாடக் கிருஷ்ணனோடுகூட விருந்து புசித்துக்கொண்டு வேடிக்கையா யிருக்குமளவில், விதுரன் திரிதராஷ்டிர மகாராஜாவினுடைய ஆக்கினையினாலே பாண்டவர்களுக்கு வேண்டிய சகல காரியங்களையும் நடத்திவந்தான். இவ்வாறு சிலகாலங் கழித்தவுடனே கண்ணில்லா மன்னவன் வீஷ்மாசாரியுடனே யோசித்து, பாண்டவர்களைத் தன்னிடத்திற்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவர் அதனை அவர்களுக்குத் தெரிவிக்க, உடனே அவர்களும் அக் கட்டளையின்படி பெரிய தகப்பனாரிடஞ் சென்று தொழுது, அவன் உத்தரவினாலே அவனருகிலிருக்கும் ஆசனத்தில் உட்கார்ந்தார்கள். மஹாராஜன் அவர்களை நோக்கி வீஷ்மர் முன்னிலையாக ஒரு வார்த்தை சொல்லத் துவக்கினான்: ஓ குழந்தாய் தருமபுத்திரா! நீயும் உன் தம்பிமார்களும் இப்போது நான் சொல்லுகிற வார்த்தையைக் கேட்கவேண்டும். அதாவது முன்பு உங்கள் பிதாவாகிய பாண்டுமகாராஜன் எனது கட்டளையை மீறாமல், இந்த ராஜ்ஜியத்தைப் பரிபாலனஞ்செய்து விருத்தியாக்கினான். என் தம்பி மகா பலசாலியும் பராக்கிரமமு முடையவனாகையாலே, கண்ட பேர்கள் வியக்கும்படி தன் தேசத்தைக் காப்பதிலும் பிறர் தேசத்தைக் கவர்தலிலும் சாதுரியமாகிய காரியங்களை யெல்லாஞ் செய்துவந்தான். ஆதலால், நீயும் எனது கட்டளையை மீறாமல் நடக்க வேண்டும். என்னுடைய பிள்ளைகளெல்லாம் கொடிய சிந்தையுடையவர்கள். பொறாமையும் அகங்காரமு முடையவர்கள். அவர்கள் என் சொற்படி கொஞ்சமும் நடப்பதில்லை. தாங்கள் மாத்திரம் மேன்மைப்பட வேண்டுமென்று அரியாமையாலும் செருக்கினாலும் வஞ்சனையான பிரயத்தின முள்ளவர்களாய் இருக்கிறார்கள். ஆகையால், நீங்கள் இவ்விடத்திலேயே இருப்பதினாலே, மறுபடியும் அவர்களுக்கும் உங்களுக்கும் கலகம் நேரிடும் அப்படிக்கு நேரிடுவதினாலே அனேகங் குற்றங்கள் விளைகின்றன. ஆதலாற் சரசமாகவே இப்போது நீ உன் தம்பிமார்களுடனேயும்,தாயார் திரௌபதி முதலானவர்களுடனேயும், காண்டவப் பிரஸ்தத்திற்குச் சென்று இராச்சிய பரிபாலனஞ்செய்து வருவாயாகில் நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது. இதுவே நமக்கும் பெரியோர்களாயும், உத்தமர்களாகியும், இராநின்ற வீஷ்மாசாரியார் துரோணாச்சாரியார் முதலானவர்களுடைய கருத்து. நம்முடைய இராச்சியத்திற் பாதி துரியோதனனுக்கும் பாதி உனக்குமாகப் பங்கிட்டுக்கொடுக்கிறேன் அதை நீ காண்டவப் பிரஸ்தத்திலிருந்து பரிபாலனஞ் செய்துகொண்டு வரவேண்டியது. அருச்சுன னிருக்கும்போது நீங்கள் எவ்விடத்திலிருந்தாலும் யார்தான் உங்களை அசைக்க மாட்டுவார்கள். இது உனக்கு யுக்தமென்று தோன்றுகிறதோ? அல்லது அயுக்தமென்று தோன்றுகிறதோ? எனக்கொன்றுந் தெரியவில்லை. நீ கண்ணனுடனே யோசித்து, அவருக்குஞ் சம்மதியாயிருந்தால் அந்தப்படி நீ அவசியம் நடக்கலாம் என்றான். தருமபுத்திரன் கண்ணனுடன் கலந்து பேசினார். அவரும் அப்படியே செய்வது நன்றென்று சொல்ல், தருமன் தகப்பனாரிடத்திற்கு வந்து, உம்முடைய உத்தரவின் பிரகாரமே நடந்துகொள்ளச் சித்தமா யிருக்கிறேனென்று வணங்கினார்.

## தருமராஜனுக்கு பாதிராஜ்ஜிய பட்டாபிஷேகம்

திரிதராஷ்டிரன் விதுரனை யழைத்து,நம்முடைய தருமபுத்திரனுக்குப் பாதி ராச்சிய

பட்டாபிஷேகஞ்செய்து பார்க்கவேண்டுமென்கிற ஆசை யெனக்குண்டா யிருப்பதால், அதற்காக வேண்டிய வஸ்துக்களைச் சீக்கிரத்திற் சேகரிப்பாயாக இந்த வேளையே சுப முகூர்த்தமாக இருக்கிறபடியால், இப்போதே பட்டாபிஷேகத்தைப் பண்ணுகிறேன். ஆதலாற் பிராமணர்களை அழைப்பித்து, ஸ்வஸ்தி வசன முதலிய காரியங்களை விரைவில் நடத்த வேண்டும். நமது குலத்திற்குரிய பெரியோர்களுக்கும் நமது நகரத்திற்குரிய நாகரீகர்களும் வணிகருட் சிறந்தோரும், சமீபத்திலிருக்கும் நாடு முதலிய தேசத்தார்களும் சீக்கிரம் இங்குவரவேண்டும். நம்முடைய குழந்தை தருமபுத்திரனுக்குப் புண்ணியாவாசன முதலியவைகளைச் செய்து கங்கணங் கட்டவேண்டும். வந்த வேதியர்கட்கெல்லாம் கோதானமும் பூதானமும் வஸ்திர தானமும் சுவர்னதானமும் செய்ய வேண்டும் முன்னதாக ஆயிரத்தெட்டு மறையோர்கள் சென்று, யானைகளின்மீது கங்கா சலத்தைக் கொண்டுவரவேண்டும் வந்த பேருக்கெல்லா மறுசுவைகளுடனே வேண்டிய மட்டும் அன்னம் பரிமாறவேண்டும். நம்முடைய பட்டணமெல்லாம் அலங்கரிக்க வேண்டும். சபாமண்டபத்தையும் விசித்திரமாகச் சிங்காரிக்க வேண்டும். நமது பொக்கிஷத்திலிருக்கிற உயர்ந்த வயிரங்களும் பச்சைகளு மிழைத்துத் தகத்த காயமானங்களா இருக்கிற தோள்வளைகளையும், முத்துக்களும் மாணிக்களு மிழைத்துக் கோடிசூரியப் பிரகாசமாக விளங்காநின்ற கிரீடத்தையும், நவரத்தினங்க ளிழைத்து மின்னலை உமிழ்கின்ற கடகங்களையும், நிலவை வீசுகின்ற ஆணி முத்துக்களா லாக்கப்பட்ட உயர்ந்த ஆரங்களையும், பச்சைமணிகளாலும் முத்துக்களாலும் கொக்கிட்ட மிடைப்பட்டு இந்திரவில்லின் எழிலைக் காட்டுகிற பலவித பதக்கங்களையும் இரத்தினங்க ளிழைத்த முகப்பிணையுடைய பத்தரைமாற்றுத் தங்க அரைஞாணையும், நவமணிகளிழைத்துத் தேசோமயமாய் விளங்காநின்ற உதாபந்தனத்தையு மெடுத்து தரும புத்திரனுக்குக் கொடுத்து அலங்காரஞ் செய்யச் சொல்லுக. இப்படிப்பட்ட உயர்ந்த ஆபரணங்களை யணிந்துக்கொண் டபிஷேக தீர்த்தத்துளிகள் தேகங்களில் விளங்க, பட்டத்து யானையின்மீதேறி, இருபுறத்திலும் மாணிக்கங்களைப் பதிக்க பொற் பூண்களையுடைய வெண்சாமரங்கள் வீச, முத்துக் கோர்வையின் கொத்துக்களினுஞ் சுற்றிலு மலங்கரிக்கப்பட்ட வெண்பட்டு குடைபிடிக்க, ஜயாவிஜயீபவா! என்று வேதியர்கள் ஆசீர்வதிக்க, மற்றைப் பெயர்கள் துதிக்க, பல வாத்தியங்கள் முழங்க, கட்டியங்கள்போட, தாதிகளாட, பாடகர் பாட, குதிரைகளும் யானைகளு மலங்காரத்துடனே முன்னும் பின்னுஞ் சூழ்ந்து வர, இவ்வாறு பற்பலவித விபவங்களோடு தருமபுத்திரன் ஊர்க்கோலம் வரக்கண்டு ஜனங்களெல்லாம் தங்கள் இஷ்டம் நிறைவேறியதென்று மனமகிழ்ந்து கொண்டாடித் துதிக்கட்டும். என்னையு மதிக்கட்டும் என்று திரிதராஷ்டிரமகாராஜன் விதுரனை நோக்கிச் சொன்ன மாத்திரத்திலே விதுரன் மகிழ்ந்து, அந்த முயற்சிகளில் அந்தத் திரிதராஷ்டிரன் சொல்லியதினும் பதின்மணங் கதிகமாக விருந்தான். வீஷ்மர் துரோணர் முதலாகியவர்களெல்லாம் ராஜாவை மிகவும் புகழ்ந்தார்கள். அப்போது யதுகுல சிகாமணியாகிய பகவானும், ஓய் மகாராஜனே! உம்முடைய மனதின் உதாரத்துவத்தை நானென்னவென்று சொல்வேன்? நீர் பட்சபாத மின்றித் தம்பி மக்களுக்கு ராச்சியமளித்தது, உம்முடைய குலப்பெருமைக்கும், கற்றவர் நடைக்கும், மற்றவர் நியாயத்திற்கும் ஒத்திருக்கின்றது. இந்த முடிசூட்டுந் திருவிழாவைச் சிறப்பாக நடத்த முயல்வது, உமது பெருந் தன்மையை மிகவும் மேலாக விளக்குகின்றது. இது எல்லாருடைய மனதிற்கும் கண்களுக்கும் காதுகளுக்கும் திருப்திகரமான காரியம். நீரிப்படிப்பட்ட மனதுடனே எக்காலமும் வாழ்ந்துகொண் டிருக்கவேண்டு மென்று வாழ்த்தி, அந்தந்த வேலைகளை விரைவில் நடத்தித் தருமபுத்திரருக்குத் தாமே அலங்காரமுதலிய காரியங்களைச் செய்வித்து, பட்டாபிஷேக மண்டபத்திற்கு அழைத்துக்கொண்டு வந்தார்.

அந்தச் சமயத்திலே வியாசமகாமுனிவரவ்விடத்திற் கெழுந்தருள, அவரை யெல்லோரும் பூசித்துத் தாழ்ந்து நிற்க, அம்முனிவர் அவர்களால் தருமபுத்திரருக்குப் பட்டாபிஷேகமாகிற செய்தி கேட்டுச் சந்தோஷித்துத் தாமே சிங்காதனத்தில் தருமபுத்திரரை நிறுத்தி மங்களாசனஞ்சொல்லி, பிராமணர்களுடனே தாமும் முதலிற் கிரீடத்தையெடுத்து வேதமந்திர ஆசீர்வாதத்தினாலே யவர் சிரசிற் சூட்டி, பின்முறையே க்ஷத்திரியர்களாலேயும் வைசியர்களாலேயும், மந்திரிகள் முதலான

பிரமுகாளாலேயும், கன்னிகைகளினாலேயும், திருமுடிப் பட்டஞ் சூட்டிவித்து, ஔஷதிர சங்களும் சுகந்த வஸ்துக்களும் சேர்த்துத் தவப் பெருமையுள்ள பெரியோர்களாலே வேதமந்திரங்கள் செபித்துச் சாந்தி செய்யப் பட்டிருக்கிற புனிதமாகிய பல தீர்த்தங்களி னாலே அபிஷேகஞ் செய்வித்தார். அந்தக் காலத்திற் பஞ்சக் கருவிகளாலாகிய வாத்திய ஒலிகளும், பிராமணர்களுடைய ஆசீர்வாத ஒலிகளும், மந்திரிமார்கள் முதலாயினோ ருடைய ஜயஜய ஒலிகளும், திக்குகளைச் செவிடுபடச் செய்தன. இவ்வாறு சிறப்பாகப் பட்டாபிஷேகம் நடக்குங் காலத்திலே, தாண் டவப் பிரஸ்தத்தின் மகாராசாவாகிய தரும புத்திரர் அனேகம் பொன்மாரி பொழிந்து, தரித்திரர்களுடைய கண் தாரியான கலக்கத் தைப் போக்கினார். அப்போது இரண்டு கன்னிகைகள் தங்கள் இரண்டிரண்டு கைகளி லுள்ள வளையல்கள் கலகலவென்று ஒலிக்கும் படி ஆகாச கங்கையின் பிரவாகங்கள் இரண்டு புறத்திலுந் திரண்டு வீழ்வதுபோல் வெண் சாமரங்கள் வீசவும், மற்றொருத்தி மிகவழ கைக் கவர்தற்கு வந்திருக்கும் பூரணசந்திரன் போன்ற வெள்ளைக்குடை பிடிக்கவும், நவமணி இழைத்துக் கிண்கிணிகள் கட்டி விளங்கா நின்ற திவ்விய சிங்காசனத்தின்மேல் வீற்றி ருக்கும் தரும புத்திரரை வியாசர் முதலிய மறையோ ரெல்லாம் ஆனந்த பரவசத்தோ டும் நோக்கி, ஓ காண்டவப்பிரஸ்த மகாராஜ னே! இனி நீர் பூமண்டல முழுதையும் ஜயித் துச் சகல ராசாக்களையும் பணியும்படி செய்து, மிகுந்த தட்சணைகளுடன் கூடிய இராசசூய முதலிய அனேக யாகங்களையு நடத்தி இஷ் டர்களுடனே பலகாலம் வாழ்ந்துகொண் டிருக்கக்கடவீர் என்று ஆசீர்வதித்து, முனை முறியாது கறுப்புறாது நொறுங்குத லில் லாது நொய்யாகாது உமிநெல்லுடன் உறவா காது நல்ல நிறம்பெற்று விளங்குகின்ற மஞ் சள் திமிர்ந்த அரிசி அட்சதைகளையும் பொன் னினாலும் பூவினாலும் மணியினாலும் ஆகிய பலவித வினோத அட்சதைகளையும், தரும ராசன் முடிமேல் இறைத்தார்கள். அப்பால் அனேக ராசாக்கள் வந்து துதித்து நின்றார் கள். இப்படி பட்டாபிஷேகம் நிறைவேறிய பின்பு, தருமபுத்திரர் வேதியர்களுக்கு வேண் டிய அன்னங்கள் அறுசுவை பதார்த்தங்க ளோடும் அளவற்ற பலகார வுகைகளோடும் பரிமாறி, அவர்கள் புசித்தபிறகு மற்றவர்க ளுக்கும் அவ்வாறே அன்னமளித்து தானும் இவர்களுடனே புசித்து, திவ்வியகந்த புஷ்ப தாம்பூலங்களினாலே எல்லோரையும் பூசித்து, பட்டத்து யானையின்மீதேறி, சகலவித வைப வத்தோடு அந்த அஸ்தின நகரத்தை வலம் வந்து தன் மாளிகையில் இறங்கி கிருஷ்ணன் முதலாகிய இஷ்டர்களுடனே சரசசல்லாபஞ் செய்துகொண் டிருந்தார். இந்த மகோற்சவத் தினால் இராசராசர்கள் வேதப் பிராமணர்கள் முதலிய எல்லோரும் சந்தோஷித்து மன முவந்திருந்தார்கள். குருடன் மக்களும் அவ ரிஷ்டர்களு மாத்திரம் சிறிதுங் கண்ணெடுத் துப் பார்க்கச் சகியாமல் மனம் வெந்திருந் தார்கள்.

திருமுடிபுனைந்தசருக்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது,

## இந்திரப்பிரஸ்தச்சருக்கம்

கண்ணன் துதி

அரியகங்குலி னன்னைதன் வடிவுகொண் டலகையாகிய நங்கை, பரிவுபொங்கவந் தெடு ந்தணைத்துவந்துளம் பரிந்துடன் பாராட்ட, உருகுமாமலைப் பாலுட னவளுயி ருண்டமு முருகார்மெய், கரியகோவலன் செய்யதாண் மலர்களென் கருத்தைவிட் டகலாவே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வா றாகப் பெருமை யடைந்திருக்கும் பாண்டவர் களைப் பார்த்துச் சகிக்கமாட்டாமலிருக்கிறதன் புத்திரருடைய கருத்தறிந்த திரிதராஷ்டிர னைவன்கிருஷ்ணனுக்கு முன்னிலையில் தரும புத்திரரைப் பார்த்து, அப்பா தருமநந்தனா! நீ வணக்கம் ஒடுக்க முதலிய நற்குணங்களு டையவனாதலால் உனக்கு இராச்சிய பட்டாபி ஷேகங் கிடைத்தது. அப்படி இல்லாதவர்க் ளுக்குக் கிடைப்பதரிது. ஆதலால், நீ சகல பாக்கியங்களினாலேயுஞ் சிறப்பை யடைந் தாய், இனிச் சாவகாசமாகாமல் இப்பொழுதே காண்டவப் பிரஸ்தத்திற்குப் போவது நன்று. ஆனால், தகாத விடத்திற்கு நானுன்னைப் போகச் சொன்னதாக நீ நினைக்கவேண்டாம். அந்தக் காண்டப் பிரஸ்தமானது முன்னே கவுரவனென்னும் நமது பெரியோருடைய ராசதானியாக யிருந்தது. நம்முடைய குலத் திற்குக் கூடஸ்தராகிய இளிபிள் ளென் னும் மகாராசனுக்கு முனிவரெல்லாம் கூடி

இந்திரபிரஸ்தம்.



அருச்சுனன் சித்திராங்கதையை மணத்தல். அருச்சுனன் நாககன்னிகையை மணத்தல்.

அவ்விடத்திலே ராசதானியாக ஏற்படுத்தினார்கள். அப்பால் ஆயுஸ் புரூரவஸ் யயாதி என்கிற மகாராசாக்களெல்லாம் அதிலிருந்து அதிகாரஞ் செலுத்தி வந்தார்கள். பிற்பாடு அத்திகனென்பவனால் இந்த அஸ்தினா பட்டணமேற்படுத்தப்பட்டது அங்கே நீபோனால் உன்னிடத்தில் அநேகம் பெரியோர்களாகிய பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணத்தாரும் வந்து சேருவார்கள். மிருகங்கள்கூட விசுவாசத்துடன் ஒன்றுக்கொன்று வாசஞ் செய்யும் அந்த ராச்சியமானது இதைக் காட்டிலும் தனதானிய முதலியவைகளாலே நிறைந்திருக்கின்றது. நீர்வளமும் நிலவளமுமுள்ளது. தேகத்திற்கும் மனதிற்கும் மிகவும் நன்மையுண்டாகவேண்டும் அவ்விடத்திலே ஒருகுறைவுமில்லை. நீ அங்கே போய் ஏற்படுத்துகிற பட்டணமானது மிக விசேஷமாக விருக்கும். உன் தம்பிமார்களுடனே செங்கோற்செலுத்தி எங்கோனாகவிரு என்னப்பா வென்று சொல்லக்கேட்ட தருமபுத்திரர் உடனே யங்கே போவதை நிச்சயித்து தானுந் தன் தம்பிமார்களும் தகப்பனாரை வணங்கி, ஐயா! அப்படியே தங்களாக்ஞையைச் சிரசில் வகிக்கின்றோம். உம்முடைய பாதத்தின் கீழிருந்து பணிவிடை செய்யப் புண்ணியம் பெற்றோமென்று சொல்லி அவரிடத்திலே விடை பெற்றுக்கொண்டு அனேகமாகிய ரதங்கள், கஜங்கள், அசுவங்கள், பதாதிகளென்கிற சதுரங்க சேனைகளுடன் மகா சந்தோஷத்தோடும் புறப்பட்டார்கள்.

### கண்ணன் இந்திரனாற் காண்டவவனத்தைப் புதுப்பித்தது

அப்பொழுது அப் பாண்டவர்களுடன் கூடச் செல்லவேண்டுமென்று அஸ்தினாபுரத்திலிருக்கும் அனேகர் விருப்பங்கொண் டிருந்தும் துரியோதனன் ஆக்கினைக்கு அஞ்சி அங்ஙனே நின்றுவிட்டார்கள். பாண்டு குமாரர்கள் பெருங் காடு மூடிய காண்டவப் பிரஸ்தத்திற்குச் சென்று மிக விரைவிற் காடுகளை வெட்டிச் சீர்திருத்தி பட்டண மேற்பாடு செய்ய ஆரம்பிக்கும்போது ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் இந்திரனைச் சிந்தித்தார். இந்திரன் சுவாமியை வணங்கி நின்று அவரிட்ட கட்டளையின்படி நிறைவேற்ற விசுவகர்மாவை யனுப்பி வைத்தான். அந்த விஸ்வகர்மாவும் ஸ்ரீவாசுதேவர் பாதங்களைத் தொழுது அடியேனுக்கென்ன கட்டளையென்று கேட்க, ஸ்ரீ கிருஷ்ணதேவர் ஓ சிற்பங்களி னுட்பங்களையெல்லாம் நன்குணர்ந்த விஸ்வகர்மாவே! இந்திரனானவன் பாண்டவர்கட்காக உம்மை யழைப்பித்து காண்டவபிரஸ்தத்தைச் சீர் செய்யும்படி கட்டளையிட்டபடியா லின்றுமுதல் இக் காண்டவப்பிரஸ்தம் இந்திரப்பிரஸ்த மென்று நாமதேய மடைந்து உலகத்தில் வழங்கும். ஆதலால், இங்கு நீர்பாண்டவர்களுக்கு இராஜதானியை உண்டாக்கவேண்டுமென்று ஆக்கியாபிக்க, அப்படியே விசுவகர்மாவும் நந்தினி என்கிற நதியினருகிற் சுவர்க்கத்திற்கு நிகராகிய இந்திரப்பிரஸ்தமென்கிற மகா நகரத்தை நிருமித்தான். அந்நகரமானது அண்டச்சுவர்க்குச் சமானமாக ஆகாசத்தை யளாவி நிற்கிற மதில்களையும், அதைச்சுற்றிலும் கடல்களுக்கு நிகராகிய அகழிகளையும், கைலாச பருவதம்போன்ற சிறந்த மாளிகைகளையும், சூரிய சந்திராதி மண்டலங்களைத் தவழும்படியான கோபுரங்களையும், கருடன் தனது இரண்டு சிறகுகளை விரித்தாற்போலிராநின்ற கதவுகளையும், அதிக சாக்கிரதையுள்ள காவற்காரரையும், பலவித ஆயுத யந்திரங்களமைந்த அரண்களையும் உண்டாக்கி அகன்றும் நீண்டும் சமமாயும் கோணலின்றியுமிராநின்ற வீதிகளும், மண்டபங்களும், சாலைகளும், சந்திகளும், தேவாலயங்களும், நந்த வனங்களும், உத்தியானங்களும், ஆங்காங்கு அமிர்தத்திற்கொப்பாகிய தண்ணீர் மலிந்த தடாகங்களும், சகல வஸ்துக்களும் நிறைந்த பலவித கடைத்தெருக்களும், பலமும் சுறுசுறுப்பும் இலட்சணங்களுமுடைய யானை குதிரை முதலிய வாகனங்களும், சித்திரச் சாலைகளும், வித்தியாசாலைகளும், ஆயுதச்சாலைகளும் ஆங்காங்கு கிரமப்படி சமைத்துத்தர அப்பட்டணமானது மன்மதனுக்கொப்பாகிய ஆடவரையும் இரதிதேவிக் கொப்பாகிய மங்கையரையும் அடைந்து மூன்று லோகங்களிலிருக்கிற எல்லாப்பட்டணங்களையும் பரிகாசஞ் செய்து நகைக்கிறதென்று சொல்லும்படியான பிரகாசத்தோடும் விளங்கிக்கொண் டிருந்தது.

அதில் அரண்மனை யொன்று கட்டப்பட்டது. அந்த அரண்மனையானது அப்பட்டணத்தி னருகிற் கேசரமலைகளுக்கு மேரு பர்வதம்போற் சூரியனது தேரோடும்படியான வழியடைந்து ஆணிப்பொற் றகட்டினால் மூடப்பட்டு நவமணிகளு மிலங்குகின்ற

ஸ்தம்பங்களும் படிக்கட்டுகளு மியற்றி ஏழு விதக் கட்டுகளோடு மூன்றுவித மேல்மெத்தைகள் முதலாயதும் பூமியின்கீழ் வீடுகளுமுள்ளதாய் அங்கங்கும் விசாலமாகிய சபாமண்டபங்களும், திசைமயக்கம் வரும்படியான சில வீடுகளும், விளையாடுகிறதற்கு யோக்கியமாகிய சில சாலைகளும், செய்யப்பட்டு கண்ணாடிபோ லிரா நின்ற சுவர்களாலுந் தளவரிசைகளாலும் விளங்கா நின்ற அறைகளில் முத்துக் கொத்துகளும் பவழக்கொத்துகளுந் தொங்கா நின்ற இரத்தின கொடுங்கைகளுள்ளதாகிய பலவித ஆசனங்கள்போட்டு இது ஒரு தேவபூமியென்று சொல்லும்படியாகிய கொலு மண்டபத்தினோடும் விளங்கிக்கொண் டிருந்தது. அதனருகில் அவ் விஸ்வகன்மனானவன் எக்காலமும் பூப்பதும் காய்ப்பதும் தளிர்ப்பதுமாகிய விசேஷமாகிய வாசனையும் ருசியும் சீதளமும் பொருந்திரா நின்ற பலாமரம்-மாமரம்-மாதுளைமரம்-எலுமிச்சைமரம்-நாரத்தைமரம்-பேரீச்சமரம்-தென்னை மரம்-பனைமரம்-சண்பகமரம்-பாதிரிமரம்-புன்னைமரம்-குருக்கத்தி மரம்-களம்புமரம்-மகிழமரம்-அத்திமரம் - அசோகுமரம் - அரசமரம் - ஆச்சாமரம்-பச்சிலைமரம்-பாலைமரம் - முன்னைமரம்-கொன்றைமரம் - சந்தனமரம் - விளாமரம் - வில்வமரம்-முதலாகிய பற்பல விருக்ஷவகைகளும், மல்லிகை-முல்லை- இருவாக்ஷி முதலிய பல பூஞ்செடிகளும், தாமரை - செங்கழுநீர்-நெய்தல் முதலியவைகளால் நிறைந்து அன்னம்-சக்கிரவாக முதலிய பறவைகளொலியா நின்ற திவ்வியத் தண்ணீருள்ள வாவிகளும், அதின் கரைகளில் விசாலமாயும் அழகாயுமிரா நின்ற பளிங்கினலாகிய மேடைகளும், மயில்கள் குயில்கள் கிளிகள் முதலாகிய பல விதப் பட்சிகள் சப்தித்துக்கொண்டு வண்டுகளிசைபாட விளங்கும் இடங்களு முண்டாக்கினான்.

### பாண்டவர் குடிபுகுதல்

இப்பால் ஆதிசேஷனாலுஞ் சொல்லக் கூடாத மகிமை பொருந்திய அந்த நகரத்தை சுற்றிப்பார்த்த பாண்டவர்கள் மிகவு மானந்தமடைந்து கண்ணனைக் கட்டிக்கொண்டு துதித்து வியாசமகாமுனி தவுமிய மகாமுனி இவ்விருவ ரனுமதியின்படி நன் முகூர்த்தத்தில் வாஸ்து சாந்திசெய்து கோபூசை பிராமண பூஜை முதலானவைகளை நடாத்தி அவ்வியாச தவுமியர்களை முன்னிட்டுக்கொண்டு வாசு தேவனோடு யானையின்மீதேறி பரிஜனங்கள் எல்லாம் சகல வாத்தியங்களு முழங்கி ஜய கோஷமிட மிகச்சிறப்பாய் நகரத்தை வலம் வந்து முப்பத்திரண்டு நிலைகளுடனே விளங்கா நின்ற பிரதான கோபுரவாசலாலே உள்ளே நுழைந்து முறைமுறையே வீதிகளைச் சுற்றிக் கொண்டு அரண்மனைக்குட் பிரவேசித்து பிராமணர்களுக்குத் திரவிய தானங்களும் மற்றையர்க்கு அன்னதானங்களும் வழங்கி அந்த ராச்சியத்தை அளகாபுரியினு மேலானதாக வெண்ணி ஆண்டுகொண்டிருந்தார்கள். இப்படியிருக்கிற நாளிலே அந்தப் பட்டணத்திற்கு வேதமுதலாகிய பதினான்கு வித்தைகளையும் நன்றாயுணர்ந்து நல்லொழுக்கமும் ஞானமு முடையவர்களாகிய அனேக வேதியரும் நானாதேசங்களி லிருந்துவந்த பல பண்டங்களையுங்கொண்டு வாணிபஞ் செய்யுந் திறமையும் புத்தியும் தருமநடையுமுள்ள அனேக வணிகரும் சகல சாஸ்திரங்களையுங் கற்று விசித்திர நிருமாணங்கள் பலவுஞ் செய்யத் தருந்தவர்களாகிய அனேக சிற்பிகளு மின்னும் நானாவிதமாகிய அளவற்ற ஜனங்களும் வந்து குடியேறினார்கள்.

இவ்வாறாக தினந்தோறும் நானாதேசங்களில் நின்றும் வருகிற ஜனங்களாலேயும் பண்டங்களினாலேயும் யானை குதிரை ஒட்டகம் எருது பசுமாடுமுதலிய மிருகங்களினாலேயும் அந்நகரமானது நிறைந்து இடைவெளியில்லாமல் கடல்போலச் சகல ரத்தினங்களுமுள்ளதாய் அல்லும் பகலும் வேதவோசையினாலும் வியாபார விர்த்தியினாலும் விவகாரச் சிறப்பினாலும் இடைவிடாமற் கோஷித்துக் கொண்டிருந்தது. பாண்டவகுல திலகனான தருமராஜன் ஜனங்களுக்கெல்லாம் விசேஷ சவுக்கியத்திற்கு ஏதுவாய்ச் சகல கிராமங்களுக்கும் நீர்வள முண்டாகும்படி யேரிகளும் வாய்க்கால்களும் தடாகங்களும் ஏற்படுத்தி அங்கங்கு தண்ட சபைகளும் விவகார சபைகளும் அமைத்து அவ்வவற்றில் தகுந்த அதிகாரிகளையும் நியமித்து தேவாலயங்களுக்கெல்லாம் வேண்டிய சிறப்புக்கள் யேற்படுத்தி தரும நூலின்படி செங்கோற் செலுத்தி வந்தமையாலே இராச்சியமானது நாளுக்கு நாள் பயிர்களாலும் பசுக்களினாலும் விருத்தியடைந்து திங்கள் மும்மாரிபெய்து விளங்கிற்று. மறையோர்களும் தவசிகளும் அக்கினி கோத்திர முதலாகிய வைதிக கருமங்களையும்

தவங்களையும் வழுவாது அனுஷ்டித்துக் கொண்டு வந்தனர். குடிகள் எல்லாம் ஆரோக்கியமும் மக்கட்பேறும் தனதானியங்களுமடைந்து களித்திருந்தார்கள். நித்திய சுபமங்களகரமாய்ச் செழித்திருக்குந் தனது ராச்சியத்தைப் பார்த்துத் தருமபுத்திரர் மிகுந்த சந்தோஷ மடைந்திருந்தார். வீமசேனன் முதலாகிய நால்வரும் மூத்தவராகிய தருமராசன் கட்டளையின்படி சகல அதிகாரங்களையும் கிரமப்படி நடத்தி வந்தார்கள்.

இவ்வாறு பஞ்சபாண்டவர்கள் அந்த இந்திரப் பிரஸ்தத்தில் இருப்பதினாலே துரியோதனன் துற்சாதனன் சகுனி கர்ணன் என்கிற துட்ட சதுஷ்டாளுடைய தொந்தரையில்லாம லிருப்பது அந்த ராச்சியமானது தருமத்தினாலும் கல்வியினாலும் திறமையினாலும் குடிகளாலும் தசாங்கங்களாலும் செழிப்பினாலும் ஒருவருக்கும் வெல்லக்கூடாத மேன்மையோ டிருந்தது. நீதிவழுவாது சில தினங்கள் கழிந்தவுடனே தருமபுத்திரர் விசுவகர்மாவையும் வியாசமுனிவரையும் பூசித்து அனுப்பிவிட்டு தமது நகரத்திற்குச் செல்ல வேண்டுமென்கிற நினைப்புள்ளவராகிய கண்ணனை மிகுந்த வினயத்துடனே பார்த்து, ஓ யதுகுல சிகாமணியாகிய எங்களுயிர்த் தோழரே! உமதனுக்கிரகத்தினா லன்றோ இவ்விராச்சியம் எங்கட்குக் கிடைத்தது. அன்றியும், அண்டக்கூடாத காடாய்க் கிடந்த இவ்விடம் குபேரனுடைய நகரைப் பார்க்கிலும் விசேஷமான கோலத்தோடும் விளங்குகிறது. இன்னும் உம்முடைய பலத்தினாலேயே நாங்கள் இந்த ராச்சியத்தி லுறுதிபெற் றிருக்கிறோம் எங்களுக்கு நீரல்லது கதிவேறில்லை எப்போதெப்போது என்னென்ன செய்ய வேண்டியதோ அவைகளை நீரே உமது பேரறிவினாலே அறிந்து செய்யவேண்டுமென்று கோருகிறேன் உமது மகிமையையும் வல்லமையையும் என்னால் சொல்லக் கூடுமோ நீர் எனக்கு எவ்வாறு கட்டளை யிடுகின்றீரோ அக்கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கிறேன் என்று சொன்னார். அது கேட்ட பகவான் சொல்லுகிறார்: ஓ மகாராஜனே! உமது தருமகுணத்தினாலே இராச்சியம் கிடைத்ததே யன்றி வேறில்லை. உமக்குக் குலக்கிரமமாய் வரும் இராச்சியத்தைத் தடைசெய்ய யார் வல்லவர்கள் துராத்மாக்களாகிய குருடன் மைந்தராகுந் திருடர்கள் இனி உங்களை என்னசெய்ய மாட்டுவார்கள். நீர் விசாரப்படாமற் சுகமாய்க் குடிகளைக் காத்து ரட்சியும் உங்களுக்கு ஒரு குறைவும் வராது சுருக்கமாக உமக்குத் தருமத்தை உபதேசிக்கிறேன்கேளும். வேதியரை அன்போடு பூசிப்பதைவிட வேறு தருமமில்லை. மகாபெருமைபொருந்திய நாரதரென்கிற தேவமுனி உம்மிடத்திற்கு எழுந்தருளுவார். அவரைப் பய பக்தியுடனே பூசித்துப் போற்றும். இதை பார்க்கிலும் உமக்கு நான் சொல்லவேண்டிய தொன்று மில்லையென்று சொல்லிவிட்டு குந்தியி னிடத்திற்குப் போய்த் தண்டனிட்டு, மிருதுவாகிய சொல்லாலே, ஓ அத்தாய்! நான் ஊருக்குப் போகிறேன் விடைகொடுக்க வேண்டுமென்று கேட்டார். அதற்கு குந்தியானவள் அப்போ யென் கண்போன்ற கமலக்கண்ணா! அரக்குமாளிகையில் நாங்கள் பட்டபாடு நீ அறியாய், எங்களையன் குந்திபோஜனு மறியார். அப்படியிருந்து மவ்விபத்தைக் கேட்ட மாத்திரத்தில் எங்களைக் குறித்து நீங்களும் விசனத்தையனுபவித்தீர்கள் இப்படி மிகுந்த வல்லமையு மாசாட்சியுடையவர்கட்கே அடிக்கடி துன்பங்கள் நேரிடும்போது, அநாதர்களா யிருக்கிற தரித்திரர்கட்கு கேட்கவேண்டியதென்ன விருக்கின்றது? இப்பொழு துன்னைக் கண்டபடியினாலே என்னுடைய துக்கமெல்லாம் நீங்கிற்று. நீ எம்மைச் சிந்தித்துக் கொண்டிருந்தாற் போதும் உன்னுடைய கிருபா சிந்தனையாற் பாண்டவர்கள் யாதொரு குறைவுமின்றி அபிவிர்த்தி யாவார்கள். ஆதலால், தயை செய்து நீ சமயங்களிற் பாண்டவர்களை நினைக்கவேண்டும். இதுதான் என்க்குன்னாற் கிடைக்கவேண்டிய வரமென்று சொன்னாள். கண்ணன் உமதாணையைச் சிரத்திற் றாங்கினே னென்று சொல்லித் தொழுது விடைபெற்று தம் பரிவாரங்களோடு புறப்பட்டுத் துவாரகாபுரி சென்றார். பாண்டவர்களும் கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு இந்திரப் பிரஸ்தத்தில் அரசாட்சி செலுத்தி வந்தார்களென்று சொல்லிவருகிற வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் வினவுகிறான்: சுவாமி! என் மூன்றாம் பாட்டர்களாகிய பாண்டவர்கள் இந்திரப்பிரஸ்தத்தில் ராச்சியத்தை யடைந்தபின் என்செய்தார்கள்? தருமநிலை தவறாத பதிவிரதையாகிய திரௌபதி தன் கணவர்கள் ஐவரையும் எப்படி அனுசரித்து வந்தாள்? அந்த ஐவர்களும் ஒருவர்க்கொருவர் விரோதமில்லாமல் ஒரு ஸ்திரீயி னிடத்திலே எப்படி

யிருந்தார்கள்? இந்தச் சரித்திரத்தைப் பிரகா
சிக்கச் சொல்லவேண்டும் இதைக் கேட்க மிக
விருப்பமுற் றிருக்கிறேன் தயை செய்தருளு
மென்று கேட்க, வைசம்பாயன மகாமுனியா
னவர் மகா சந்தோஷத்தோடு அவ்வரசனைப்
பார்த்துச் சொல்லுகிறார்.

## நாரதமுனிவர் பாண்டவர்கட்குச் சில கட்டுப்பாடுரைத்தல்.

ஓ ஜெனமேஜெய மகாராசனே! இந்தப்
படி திரிதராஷ்டிர மகாராசாவினுடைய அனு
மதியினாலே பாதி ராச்சியத்தை அடைந்த
உமது பெரியோர்களாகிய பாண்டவர்கள் சத்
தியசந்தர்களாகியும், கபடமற்றவர்களாகியும்,
தயை முதலிய நற்குணங்களோடு கூடியவர்க
ளாகியும் நீதியோடு சகல ஜனங்களையும் காப்
பாற்றிக்கொண்டு இந்திரப் பிரஸ்தத்திலே
சுகமா யிருந்தார்கள். இப்படியிருக்க, இவர்
கள் ஒருநாள் சபையி லிருந்து பட்டணத்துக்
குடிகளுடைய காரியங்களை விசாரணை செய்து
வருங் காலத்தில் நான்கு வேதங்களையும்,
முப்பத்திரண்டு உபநிடதங்களையும், பதி
னெண் புராணங்களையும், மற்ற இதிகாசங்க
ளையும் நன்றாய்க் கற்றுணர்ந்தவரும், உயிரெ
ழுத்து-மெய்யெழுத்து-தனி - மாத்திரை பிர
யத்தினம் இவை முதலிய இலக்கணவிதி தப்
பாமற் சரியாய் இசைக்க வல்லவரும், வேத
சுரங்களை இடமறிந்து மெலிந்து வலித்து
உச்சரிக்க வல்லவரும், பகுதி-விகுதி அறிந்து
பிரகரணத்திற்குத் தகுந்தபடி சொற்களைப்
பிரயோகிக்கத் தக்கவரும், மந்திரங்களை யந்
திர தேவதா கல்பங்களுடன் அறிந்தவரும்,
வைதிக லௌகிக வாக்கியங்களை ஓசை குன்
றாம லிணைக்கத் தகுந்தவரும், காவிய நாடகங்
கள் செய்யுந் திறமை யுடையவரும், மொழி
களுக்கு இடமறிந்து பொருள் கூறத்தக்கவ
ரும், சொற்களுக்கெல்லாம் செம்பொருள் ஆக்
கப் பொருளாதிகளை நிச்சயிக்க வல்லவரும்,
நிஷாத முதலாகிய சப்த சுரங்களையும் சப்த
தானங்களையும் அறிந்து மந்திரம்-மத்திமம்-
தாரம் என்கிற மூவகையாலும் இராகங்கள்
பொருந்தத் தாளவரிசை முதலிய சங்கீதங்க
ளைப் பாட வல்லவரும், வேதாகம புராணங்
களுடைய பொருளை நிச்சயித்துச் சொல்லத்
தகுந்தவரும், தருமசாஸ்திரமெல்லா மறிந்து
தரும சூக்ஷுமத்தை அதிற் சந்தேகம் வராத
படி சொல்ல வல்லவரும், சுக்கிராசாரியார்
முதலாகியவர்கள் செய்த நீதிநூலை யறிந்து
பிரயோகிக்கத் தக்கவரும், சிற்பசாஸ்திரம்-
வியாகரணசாஸ்திரம்-வைத்தியசாஸ்திர முத
லாகிய பல சாஸ்திரங்களின் பொருளைச் சம்
பூரணமாக அறிந்தவரும், சந்தோவிசிதி
யென்னும் நூலின்படி சந்தங்களிற் பாடல்க
ளிசைக்க வல்லவரும், மூன்று ஸ்கந்தங்களாக
வகுக்கப்பட் டிருக்கிற சோதிட நூலை நன்று
யது பூகோளம்-ஆகாயகோளம் - நட்சத்திரங்
கள்-கிரகங்கள் இவைகளின் ஓட்ட முதலிய
வைகள்-கிரகணங்கள்-திதிவாராதி காலங்கள்
இவைகளை யறிந்தவரும், இவைகளாற் சாதக
பலன்களையும், உற்பாதாதி போகங்களையும்,
பலகால வர்த்தமானங்களையு மறிந்து நன்
றாய்ச் சொல்லுந் திறமையை யுடையவரும்,
கல்ப சூத்திரங்களை யெல்லா முற்றுமறிந்து
பிரயோகஞ் செய்யத் தகுந்தவரும், மீமாம்சை
யென்னுஞ் சாஸ்திரத்தின் அதிகரணங்களில்
வல்லவரும், நியாய நூலின்படிப் பிரசங்கிக்
கத் தகுந்தவரும், சமயோசிதமாய்ப் பேசுந்
திறமை யுடையவரும், கணிதங்களில் அதிக
சாமார்த்திய முள்ளவரும், இங்கிதங்களா
லேயே மனதை அறியவல்லவரும், வேதாந்த
மெல்லாமறிந்து சகல தத்துவ நிச்சயமுள்ள
வரும், பரமாத்துமாவை வேறாகவு மொன்
றாகவும் பாவனை செய்பவரும், யோகநூல் சாங்
கிய நூல் இவைகளின்படி சமாதிகளெல்லாம்
செய்யத்தகுந்தவரும், நிஷ்காமமாகிய தவத்
திலே மகா தேஜசு பொருந்தி யிருப்பவரும்,
விதிவழுவாமல் அனுட்டானஞ் செய்பவ
ரும், தயை - பொறுமை-சத்தியம் முதலான
எண்குணங்களுக்கிடமாகியவரும், எப்பொழு
தும் கடவுளைத் தியானிப்பதும் துதிப்பதும்
தொழுவதுமே கருமமாகக் கொண்டிருப்பவ
ரும்,இயல்பாகக் காமாதிவிகாரங்களற்றவரும்,
தேவதா நிச்சயமுள்ளவரும், சகல முனிவ
ராலும், வித்வான்களாலும் பூசிக்கப்பட்ட
வரும், தருமங்களுக்கு எல்லை யேற்படும்படி
பல நூல்களைச் செய்தவரும், பிரமனுடைய
குமாரராகியவரும், அனேக யாகங்கள் செய்து
சோமபானஞ் செய்தவரும், சம்சாரிகள்போல
உலகநடை யறிந்தவரும், திரிகால முணர்ந்த
வரும், மூன்றுலோகங் கண்டவரும், இன்னும்
பலவிதமாகிய சொல்லுந் திறமில்லாத பெரு
மையுடையவருமாகிய நாரதபகவான் பூரண
சந்திர மண்டலம்போல் வெளுத்த நெடிய
திருமேனி யுடையவராய், தேவேந்திரன்
கொடுத்த மேன்மையாகியும், நாணயமுடைய
தாகியும், பளபளப்புள்ளதாகியும், இருக்கிற

இரண்டு வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, பதினறு மாற்றுத் தங்கத்தினுற் செய்து ஒரு வகைப்பட்ட காராவின் முகம்போன்ற உருவுடையவையாயும், அக்கினிச் சுடர்போன்ற ஒளியுடையவையாயும், இருக்கிற இரண்டு குண்டலங்களை யணிந்துகொண்டு, சிவந்த சடாடவி யுடையவரா யிருப்பதினுல் வெண்மையாகிய மேகங்களாற் சூழப்பட்டுப் பொன்னிறமுடைய கொடிப் புதரினுல் மூடப்பட்டது போன்ற முடியுடையவராய் பவுத்தமத சித்தாந்தப்படி இரண்டு சூரிய பிம்பங்கள் இருபுறங்களிலுந் தோற்ற விளங்காநின்ற ஒரு வெள்ளிமலைக்குச் சமானமாகி, கணுக்கையில் விளங்காநின்ற படிக செபமாலையுடனே காற்றின் விசையினுல் தானே விசித்திரமாக இசைபாடாநின்ற மகதீ என்கிற வீணையை ஒரு கையிலேந்தி மற்ருெரு கையால் வெள்ளிக் குடை பிடித்துக்கொண்டு, மேற்புரத்தில் சந்திர மண்டல முலாவுங்காற் கீழிராநின்ற கைலைமலைக்கு நிகராய்ப் பிரமதேஜசு இவ்வுருவம் கொண்டதோவென்று சங்கிக்கும்படி சாச்சுவலியமான ரூபமுடையவராய், ஆகாயத்தின் வழியே அனேக ரிஷிகளும் தேவர்களும் போற்றி, பூமியி லிருப்போ ரெல்லாம் இதென்ன வானத்தினின்றும் ஓரொளிக் கூட்ட மிறங்கி வருகின்றது என்றேற்றி, இது சூரியனே? சந்திரனே? அக்கினியோ? என்று யாவரும் பயமும் ஆச்சரியமுமாக நோக்கி நிற்க, சாமவேத கீதவொலியினுலே கேட்போர் செவிக்கு அமுதத்தையும் மனதிற்குப் பரிசுத்தத்தை யளித்துக்கொண்டு, பாண்டவர்களுடைய அரண்மனைச் சபாமண்டபத்தி னருகில் இறங்கினர்.

இம் மகாமுனி எழுந்தருளக் கண்ட பாண்டு குமாரர்கள் மிகப் பரபரப்புடனே ஆசனங்களினின்று மெழுந்தெதிர்கொண்டு சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, இரு கரங்களையுஞ் சிரமேற் கூப்பிநின்று, ஓ சுவாமி! ஓ மகானுபாவா! தேவர்கள் முதலிய யாவர்களுங் கண்டமாத்திரத்தில் யாங்கள் செய்த தவப் பயனே யென்று சொல்லும்படியாகிய முனி ஸ்ரீ நாயகனே! தேவரீர் இவ்வாசனத்தி லுட்காரவேண்டு மென்று பிரார்த்தித்துக் கிருஷ்ணுசனமேற் போர்த்த சிம்மாசன மொன்றமைக்க அதில் அம்முனிவர் உட்கார்ந்தருளி சகல புண்ணிய தீர்த்தங்களாலே நிறைக்கப்பட்ட தமது கமண்டல தீர்த்தத்தை யெடுத்து வணங்கி யிராநின்ற பாண்டவர் சிரங்களிற் புரோட்சித்து ஆசீர்வதித்தார். பாண்டவரும் பரிசுத்தமாகிய சுவர்ண பாத்திரத்திலே தருப்பை நுனிகளும் மலர்களும் சுகந்த வஸ்துக்களும்போட்ட தண்ணீரினுல் அர்க்கியங் கொடுத்து, அழகிய பொற்றட்டிலே அம்முனியின் பாததாமரைகளை வைத்து, விதிப்படி யபிஷேகித்த பரிசுத்த ஜலமான பாதோதகஞ் சேர்த்து, அதைத் தருமர் தமது சிரத்திலும் தம்பிகள் சிரத்திலும் புரோக்ஷித்துத் தம்பிகளுடனே அத் தீர்த்தத்தை உட்கொண்டு திவ்வியமாக கோமதுபர்க்கத்தை அம்முனிவருக்கு நிவேதனம்பண்ணி, சுவாமி! இந்த ராச்சியமும் நாங்களும் தேவரீரடைக்கலம். அடியேங்களை அன்புகூர்ந்து ஆட்கொள்ள வேண்டும் இன்றைக்குத்தான் எங்கள் பிறவிப்பயன் பட்டது. அருமையாகிய தேவரீர் தரிசனங் கிடைக்கும்படி நாங்களென்ன தவஞ் செய்தோமோ. தெரியவில்லை. எளியவராகிய அடியேங்களுக்கு காட்சி கொடுத்த தேவரீருடைய பொருளைத் துதிக்க யாம் வல்லமோ ஆ! ஆ! என்ன பாக்கியம் நாங்களின்றடைந்த இச்சிலாக்கிய போக்கிய மென்று மிக வானந்தத்தினுலே கண்களில் நீர்பெருகத் தேகமெல்லாம் புளகமுற்று நின்றூர். அக்கால் அந்த நாரத மகாமுனிவர் தருமபுத்திரரை நோக்கி, நீர் செய்த பூசையால் நமக்குச் சந்தோஷ மாயிற்று. இனி நீர் உம்முடைய தம்பிமார்களுடனே ஆசனங்களி லுட்காரவேண்டுமென்று கட்டளையிட, தருமபுத்திரரும் அப்படியே உட்கார்ந்து திரௌபதியைவரவழைத்தார். அந்த பாஞ்சாலியும் பரிசுத்தையாகி, மிகுந்த பயபக்தியுடனே சபையில் வந்து, அந்தத் தேவமுனியினது திருவடித் தாமரைகளைத் தொழுது வணக்கத்துடன் கைகூப்பி நின்ருள். அம்முனியரசு அவளுக்கும் பலவாக ஆசிகள்கூறி, பெண்ணே! நீ அந்தப்புரத்திற்குப் போவென்று நியமித்தருளினூர். அவளு மப்படியே போனவுடனே சபையிலிருக்கும் மற்றவர்களையும் போகச்செய்து ஏகாந்தத்திலே பாண்டவர்களைப் பார்த்து நாரதமுனியானவர் சொல்லுகின்றூர்:

ஓ பாண்டு குமாரர்களே! நீங்கள் தருமந் தவருதவர்க ளாகையாலே, உங்களுக்கு நேரிட்ட இடர்களெல்லாம் நீங்கிப்போயின. ரூபத்திலும் குணத்திலும் ஒப்பில்லாதவளாகிய துருபதராசன் மகளைவிவாகஞ் செய்துகொண்

டீர்கள் கண்ணனுடைய அநுக்கிரகத்தினாலே இந்த திவ்விய நகரத்தை யடைந்து செங்கோற் செலுத்தி வருகிறீர்கள். ஆனால், உங்களுக்கு ஒன்று சொல்லுகிறேன் உற்றுக்கேளுங்கள்: உலோகத்திலே எவர்களுக்குங் கட்டுப்பாட்டினாலேயே சகல மேன்மைகளு முண்டாகின்றன. அந்தக் கட்டுப்பாட்டைக் கெடுப்பதற்குக்காரணம் ஒரு பொருளைப் பலர் விரும்பி இருப்பதேயாம். அப்பொருள்களி லெல்லாம் பெண்ணென்பது பொன்னைப்பார்க்கினும் விசேஷமாகியது. பெரும்பாலும் அப்பெண்ணே உலகத்தாருக்கு நன்மைக்குந் தீமைக்கும் காரணமாம். ஆதலால், நீங்கள் ஐவரும் இந்தப் பாஞ்சாலி யொருத்தியை அநுபவித்து வருகிறீர். ஆனால், அந்தப் பெண்ணும் நல்ல சுபாவமுடையவள்தான். நீங்களும் அப்படிப்பட்டவர்கள்தான். ஆகிலும், இந்த மூலமாய் உங்களுக்குள் ஒரு விரோதமும் வராதிருக்கும்படி ஓரேற்பாட்டைச்செய்ய வேண்டும். இப்படிதான் முற்காலத்திற் சுந்தனென்றும்-உபசுந்தனென்றும் இருவர் அண்ணன் தம்பிகளிருந்தார்கள். அவ்விருவருக்கும் திலோத்தமை என்பவள் நிமித்தியமாகப் பகையுண்டாகி, ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு மாண்டார்கள். ஆதலால், நீங்கள் இந்த ஸ்நேகத்தைக் காப்பாற்றுவதற்கு ஒரு நிபந்தனஞ் செய்துகொள்ள வேண்டியது அகத்தியமா யிருக்கிறது என்று சொல்ல, அதைக்கேட்ட தருமபுத்திரர், ஓ முனிநாதர்! சுந்தோபசுந்தர்க ளென்பவர்கள் யார்? அவர்கள் ஆருடைய பிள்ளைகள்? அந்தத் திலோத்தமை என்பவள் அவ்விருவருக்கும் வேற்றுமை எவ்வாறு நேரிடச் செய்தாள். இந்தச் சரித்திரத்தை விவரமாய்க் கேட்க அடியேங்கட்கு அபேட்சை யிருக்கிறபடியால், அதனைச் சுவாமிகள் தயைசெய்து திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்ன, நாரதர் சொல்லலுற்றார்:

## சுந்தோபசுந்தர் சரித்திரம்

கேளுங்கள் பாண்டவர்களே! முற்காலத்தில் இரணிய கசிபு என்று பெயருடைய மகா அசுரனிருந்தான். அவனுடைய குலத்தில் நிகும்பனென்று ஓரசுரன் பிறந்தான். அவனுடைய புத்திரர் இப்போது நான் சொல்லப்போகிற சுந்தோபசுந்தரர் அவர்களுடைய வீரியமும், தைரியமும் ஒப்புவமையற்றது. சவுரிய மென்பது அவர்களிடத்திலேயே குடியிருக்கிறது. அவர்களுடைய இறுமாப்பைப் பார்க்கும்போதே யாவரும் பயமடையும்படி இருக்கும். அவர்களுடைய மனவாக்குக் காயம் என்கிற மூன்று கரணங்களும் கொடுமை என்னுங் குணத்தினாலே வளரப்பட்டனவாம். அவ்விருவரும் ஒரே மனதாயிருந்து வேற்றுமையின்றி ஒரு காரியத்திற் புகுவார்கள். இன்ப துன்பங்களிலும் பங்காளிகளாக விருப்பார்கள். ஒருவனுக்கு இஷ்டமானபடியே மற்றொருவனுஞ் செய்கிறதும், பேசுகிறதுமன்றி மாறுபடுகிறதில்லை. அவர்கள் உண்பதும், உறங்குவதும், இருப்பதும், போவதும் கூடவே யன்றி ஒருபோதும் தனித்ததில்லை. அப்படி அவர்களிருப்பதினாலே யாவரும் ஓரான்மாவே இரண்டு தேகமெடுத்தது என்று சொல்லும்படிக் கிருந்தது. அவ்விருவரும் இவ்வாறு ஒருமையாக வளர்ந்து, தேவர்களை யெல்லாம் ஜயித்து, மூவுலகங்களையுங் கைவசப் படுத்திக்கொள்ளவேணுமென்கிற கருத்தடைந்து, விந்திய மென்கிற மலையில் தீக்ஷையோடு உக்கிரமாகி தவஞ் செய்ய வாரம்பித்தார்கள். அத்தவ வித்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். அரையில் மரவுரியும் முடியிற் சடைமுடியும் தரித்துக்கொண்டு, பசி தாகங்களையும் வெம்மைத் தண்மைகளையும் சகித்து, காமக்குரோத முதலியவைகளை அடக்கி, தேகங்களில் மட்புழுதிகளும், பட்சிகளுடைய மலமூத்திரங்களும் படிந்து விகாரமுண்டாயிருக்க, இரண்டு கைகளையும் தலைக்குமேல் தூக்கிக் கூப்பிக்கொண்டு, காற்பெருவிரலி னுனியினாலே பூமியில் நின்று, சிலகாலம் வாயுபட்சணஞ்செய்துகொண்டும், சிலகாலம் வருணபக்ஷணம் செய்துகொண்டும், தங்கள் சதைகளை அக்கினியில் ஓமம்பண்ணி, இவ்வாறு நெடுங்காலம் வழுவில்லாத தவத்தைச்செய்து வந்தார்கள்.

அவர்களுடைய தவமென்னும் அனலினாலே அந்த விந்தியமானது புகை சூழ்ந்து மேகங்களாற் கவிக்கப்பட்டதுபோல் ஒரு ஆச்சரியமாக விருந்தது. இவர்கள் செய்யுந் தவத்தைக் கண்ட தேவர்கள் மிகவும் பயமடைந்து இத் தவத்தை அழிப்பதற்காகக் கோடி சூரியப் பிரகாசங்களாகிய திவ்விய ரத்தினாபரணங்களையும் நிகரில்லாப் பேரழகையுமுடைய மங்கையர்களாலே அவர்கள் மனதைக் கலைக்

கப் பார்த்தார்கள். இவைகளாலேயும் மற்றெவைகளாலேயும் அவர்கள் மனவுறுதி நீங்காமல் தவத்திற்கு வசப்பட்டிருந்தமை கண்ட தேவர்கள் அவ்வசுர வீரர்களுடைய தாய் - தந்தை - பெண்டீர் - மக்கள் - உடன்பிறந்தார் முதலாகிய சுற்றத்தார்போல்வந்து பல மாயைகளை யுண்டாக்கினார்கள். அந்த மாயையாலுண்டாகிய சுற்றத்தாரெல்லாம் ஓரிராட்சதனாலே துரத்தி யடிக்கப்பட்டவர்போலாகி, தேகமெல்லாம் நடுக்கமுற வேர்த்து, தலைமயிர் அவிழ்ந்து விரிந்தாட வஸ்திரங்கள் வீழ்ந்து புரளக் கோவென்று கதறிக்கொண்டு அவ்வசுரப்பிள்ளைகளி னருகில்வந்து கண்ணீர் பெருகப் புலம்புவதானார்கள் அதுகண்டு மவர்கள் தவத்தினின்று மீளாமலிருந்தார்கள். அதனால் அந்த மாயாபந்துக்கள் உடனே பயந்து மறைந்து போயினர்.

இந்நிலையிற் கடினமாகிய தவஞ்செய்துகொண்டிருக்கும் அவ்வசுரப் பிள்ளைகளிடத்திற்குப் பிரமதேவன் வந்து, ஓ அசுரகுமாரர்களே! உங்களுக்கு வரங்கொடுக்க வந்தேன் கேளுங்களென்ன, அவர்களும் எழுந்து பிரமதேவனை தெண்டனிட்டுக் கைகூப்பி நின்று, சுவாமி! எங்கள் தவத்தினாலே தேவரீர் சந்தோஷ மடைந்து எழுந்தருளியபடியால், தேவரீருடைய கிருபையினாலே நாங்கள் சகல மாய்கைகளை யறிந்தவர்களாவும், சகல அஸ்திரங்களைத் தெரிந்தவர்களாகவும் மகா பலசாலிகளாகவும், வேண்டியபடி காமரூபங் கொள்ளவு மெக்காலத்தும் மரணமில்லா திருக்கவும், வரவேண்டிய தென்றார்கள். திசைமுகனானவன், ஓ அசுரர்களே! உங்களுக்கு மரணமில்லாமை தவிர மற்றவைகளெல்லாம் உண்டாகும். ஏனென்றால், நீங்கள் தேவர்களோடு சண்டைசெய்து மூன்று லோகங்களையும் கைவசப்படுத்தவேண்டு மென்கிற கருத்தினாலே இந்த தவத்திற் பிரவேசித்தீர்க ளாகையால் அப்படிப்பட்ட கெட்ட காரியத்திற் கனுகூலமாகிய வரத்தை நாம் கொடுப்பதில்லை என்று சொல்ல, அவ்வசுரர் சுவாமி! அப்படி தேவரீருக்குத் திருவுள மில்லாவிட்டால் மற்றொரு விதமாகவரங்கேட்கிறோம் அதனை தரல்வேண்டும். அதாவது, இந்தத் திரிலோகங்களிலுமுள்ள எந்தச் சராசரங்களினாலும் மற்றெந்த வஸ்துக்களாலும் எங்களுக்கு ஒருவித பயமும் உண்டாகாமலிருக்கவேண்டும் ஆனால் எங்களுக்கேதாகிலும் ஒரு கேடுவருகிறதா யிருந்தால் எங்களில் ஒருத்தருக் கொருத்தராலேயே உண்டாகவேண்டியது. இந்த வரத்தையாகிலும் அளித்து எங்களைக்காப்பாற்றவேண்டும் என்று பிரார்த்திக்க, பிரமதேவரானவர் அப்படியே உங்களுக்கு வரங்கொடுத்தே னென்று சொல்லித் தன்னுடைய லோகத்திற்குப்போனான். அந்தச் சுந்தோபசுந்தரும் இவ்விதமாகச் சிறந்த வரம் பெற்றுக்கொண்டு, மிகுந்த சந்தோஷத்துடனே அசுரரெல்லோரும் கொண்டாடத் தங்களிடம் போய்ச்சேர்ந்தார்கள்.

அப்பாலிவர்கட்கு மிகுந்த பெருமையுண்டாகி, தங்களுடைய பலத்தினாலே கொஞ்சமேனும் அச்சமில்லாமல் இஷ்டமானபடி உண்கிறதும், குடிக்கிறதும், துர்நடத்தை நடக்கிறதும், படுக்கிறதும், விளையாடுகிறதும், பாடுகிறதும், ஆடுகிறதும், தேடுகிறதும், கொடுக்கிறதும், வாங்குகிறதுமாக வீடுகள் தோறும் திருவிழாப்போலிருந்தது. இவ்வசுர வீரரும் சடைகளைப்பிரித்து ரத்தின கிரீடஞ் சூடிக் கேயூர முதலான சகல வாபரணங்களைத்தரித்து, திவ்யமாகிய வஸ்திரங்களையும் முடுத்தி, பச்சைக்கற்பூரம்-குங்குமப்பூ-கஸ்தூரி முதலாகியவை சேர்த்த சந்தனம் பூசி, மாருத நிறமும் வாசனையும் பொருந்திய பூமாலைகளுந்தரித்து அசுரரையெல்லாம் கூப்பிட்டுத் தேவலோகத்தின்மேல் தண்டெடுக்க வேண்டுமென்று நிச்சயம்பண்ணி, குடை-கொடி-சாமரம் முதலான சின்னங்களோடும் பேரிகை முதலாகிய வாத்தியகோஷத்துடனேயும் சமுத்திரம்போன்ற சேனைகளைக் கூட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். இவர்கள் சண்டைக்கு வருவதைப் பார்த்துத் தேவத்தலைவரெல்லாம் பிரமலோகஞ் சேர்ந்தார்கள். அவ்வசுரர்களும் தேவர்-இயக்கர்-கருடர்-காந்தருவர் முதலாகிய பேர்களைச் சயித்துத் தேவலோகத்தைச் சுவாதீனம் பண்ணிக்கொண்டு, பாதாள லோகம்போய் அங்கிருக்கும் நாகங்களையுஞ் சயித்து அந்த லோகத்தையும் சுவாதீனம் செய்துகொண்டு, சமுத்திரத்திலே வாசம்பண்ணுகிற மிலேச்சர்களையும் ஜயித்துப் பின்பு பூமியைக் கைவசப்படுத்தவேண்டுமென்று யத்தினப்பட்டார்கள்.

பிற்பாடு தங்களுடைய சேனைத்தலைவர்களைப்பார்த்து, கேளுங்கள் அசுரர்களே! ரிஷிகளெல்லாம் செய்து வருகிற யக்கியங்களினாலும், மற்றப் பிராமணர்கள் கொடுத்து வருகிற அவிய கவியங்களினாலும், தேவர்களுக்குப்

பலமும், தேஜசும், சம்பத்தும் விருத்தியாகின்றன. ஆதலால், இவர்களெல்லாம் நமக்குச் சத்துருக்களானார்கள். ஆனதுபற்றி நாமெல்லாம் ஒன்றாயிருந்து அஞ்சாமல் அந்த முனிகளையும் மறையோர்களையும் கண்டவிடத்திற் பிடித்தடித்துக் கொல்லவேண்டுமவர்கள்செய்கிற யாகங்களையுமற்றும் வைதீக காரியங்களை நிறைவேற்ற வொட்டாமல் தடுத்துப்போடவேண்டு மாதலால் இக்காரியத்தில் நீங்கள் ஏமாறாமலிருங்கள் என்று கட்டளையிட்டுக் கீழ் சமுத்திர கரைக்குவந்து சேர்ந்து அங்கே தண்டுகளை இறக்கி, கொடிய சிந்தையினாலே எங்கே வேதியர்கள் வேள்வி செய்கின்றார்களோ, அவ்விடங்களிலே சென்று அவர்களையெல்லாம் பிடித்துக்கட்டி யடித்து, வேள்விக்குரிய கருவிகளையெல்லாம் வாரி நீரிலெறிந்து, ஆசிரமங்களிற் பிரவேசித்துச் சில ரிஷிகளைப்பற்றித் தாடிகளையும் சடைகளையும் பிடித்து இழுத்துப் பற்களை உதிர்த்தும் சிலரைக் கைகால்களையொடித்துக் கழுத்தைமுறித்துத் தொந்தரை செய்துக்கொண்டு வந்தார்கள். இப்படி இவர்களால் தொந்தரவு செய்யப்பட்டு மிகுந்த ரிஷிகள் முதலானபேர்கள் எல்லாவற்றையும் விட்டு ஓடிப்போய் மலைகளிலும் குகைகளிலும் ஒளித்துப் பிராணனைக் காப்பாற்ற முயன்றிருந்தார்கள். ஆச்சிரமங்களெல்லா முடைந்து பாழாய்ப்போயின. கரகங்களினாலேயும், ஒடிந்த சருவமுதலான பாத்திரங்களினாலேயும், முறிக்கப்பட்ட மரங்களினாலேயும், பெருஞ்செல்வத்தி லிருந்தவர் மிகுந்த வறுமையினால் அடியுண்டு இடியுண்டு மிகுந்த சோர்வினையடைந்து உறங்கியிருப்பதுபோலிருந்தன. இவ்வுலகமெல்லாம் வேத கோஷ்டமும் வைதிகக் கிரியைகளுமில்லாமல் பிரமரிஷிகள் இராஜரிஷிகள் முதலாகிய சத்துருக்கள் எங்கணுங் காணாமலிருந்தபடியால் எல்லாவளவும் குன்றிப் பாழ்பட்டது போலிருந்தது.

இப்படி லோகத்தையெல்லாம் ரசாபாசம் பண்ணிக்கொண்டு வருவதல்லாமல் ஓடிப்போன ரிஷிகளையும் கண்டுபிடித்துக் கொல்லுமென்று அவ்வசுர ரிருவரும் சில விடங்களில் மதயானைகளாகவும், சில விடங்களில் சிங்கங்களாகவும், சில விடங்களில் புலிகளாகியும் இப்படி அநேக ரூபங்களைத் தாங்கி ஒளித்திருக்கு முனிவர்முதலாகிய பேர்களைப் பிடித்து யமலோகத்துக்கு அனுப்பிவிட்டார்கள். இவ்வாறே ராசாக்களையும் துரத்தி யடித்துக் கொன்று, அவர்கள் பூமியைச் சுவாதீனஞ் செய்துகொண்டார்கள். இப்படியாகவே கருடனைக்கண்ட பாம்புபோற் சகல ஜனங்களும் வீடு மாடு முதலியவைகளைவிட்டுச் சிதறிப்போய் அனேக வருத்தங்களை யனுபவித்து வந்தார்கள். பூமியெங்கும் பயிரிடுதல் முதலான ஒரு தொழில்களும் இல்லாமற் பஞ்சமடைந்திருந்தது. ரிஷிகளிடுஞ் சாபமெல்லாம் கல்லின்மேலிட்ட அம்புகள்போல் இவர்கள்மேல் ஏறாமற்போயின. சமுத்திரம் வளைந்த பூலோகத்தை மயானம்போல எலும்புகளும், மண்டை ஓடுகளும், கழுக்களும், கூளிகளும், பேய்களும், நாய்களும், நரிகளும் நிறைந்ததாகவும் சுபமாகிய ஓர் காரியமு மில்லாததாகவுஞ் செய்து, தாங்கள் இருவரும் மிகுந்த சந்தோஷத்துடனே குருக்ஷேத்திரத்திற் சைனியங்களோடு இறங்கி வாசஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

இப்படியாகவே சகலமாகிய தேவரிஷிகளும் பிரமரிஷிகளும் மிகுந்த வியசனமடைந்து, உலோக கர்த்தாவாகிய பிரமதேவருடைய திருமாளிகைக்குச் சென்று, அவ்விடத்திலே எல்லாத்-தேவர்களும் புடைசூழ்ந்திருக்க சநகர்-சநந்தனர்-சநற்குமாரர் முதலாகிய சித்தயோகிகள் ஓர்பாரிசுவத்திலிருக்க நான்கு முகங்களில் நான்கு வேதங்களும் ஒலிக்கக் கோடிசூரியப் பிரகாசமாக எழுந்தருளி யிருக்கிற பிரமதேவரைக் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, சுந்தோபசுந்தர்களால் நேரிட்ட தொந்தரவை சம்பூரணமாகச் சொன்னார்கள். அது கேட்டு அந்தச் சபையிலிருக்கும் விஷ்ணு-சிவன்-அக்கினி-வாயு-சந்திரசூரியர்-இயமன்-இந்திரன் முதலாகிய பல தேவர்களும், வைகானசர், வாலகில்லியர், சோம்பர், மாசிபர், அஜர், விமூடர், தேசோகருப்பர் என்கிற பல ரிஷிகளும் இந்த சங்கதியைக் குறித்துப் பிரமதேவருக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். பின்பு அப்பிரமரானவர் இந்தச் சரித்திரத்தைக் கேட்டு, ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து, அவர்களுடைய விநாசத்துக்காகச் செய்யவேண்டிய உபாயமொன்று மனதில் நிச்சயித்துக்கொண்டு, விசுவகர்மாவை யழைத்து, நீ நிகரற்ற ரூபலாவண்ணிய சவுந்தரியங்களுடனே கூடிய ஒரு பெண்ணைச் சீக்கிரத்தில் உண்டாக்க வேண்டுமென்று கட்டளை யிட்டார். அந்த விசுவகர்மாவும் பிரமா

வைக் கும்பிட்டு, அப்படியே ஒரு பெண்ணை மிகுந்த முயற்சியினாலே சிருஷ்டித்தான். அந்தப் பெண்ணின் சிறப்பை சிறிது சொல்லுகிறேன் கேளும்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அவ் விசுவ கர்மாவானவன் உலகிலுண்டான உத்தம வஸ்துக்களினுடைய சாராம்சங்களை யெல்லா மெடுத்துத் தனது முழுவல்லமையும் அமையும்படிக்கு நெடுநாள் வருந்திச் சிறந்த முயற்சிகளால் அவளுடைய அங்கங்களைப் படைத்தான். விலையுயர்ந்த ரத்தினங்களையே தேகத்தி லழுத்தினானென்னும்படி மிகுந்த பளபளப்பினால் விளங்காநின்ற இம் மாது சிரோன்மணிக்குச் சிறந்த வஸ்துக்கள் எல்லாவற்றிலு மெள்ளள வெள்ளளவாக அழைக்க ஆராய்ந்தெடுத்துப் படைத்ததுபற்றிப் பிரமதேவர் திலோத்தமை யென்கிற காரணப் பெய ரிட்டருளினார். அவளுடைய வழகை யெடுத்துச் சொல்ல ஆதிசேடனுக்கும் திறமைக்குறைவாயிருக்குமாகில் நம்மாலாகுமோ? ஆனாலுங் கொஞ்சம் சொல்லுகிறோம். கறுத்தும் நீண்டும் மெல்லியதாகியும் செறிவாகியு மிராநின்ற அவ்வனங்கினது கூந்தல் இந்திர நீலரத்தினங்களுடைய நுட்பமாகிய நிறத்தினாலாக்கப்பட்டவையோ வென்றும், முகமாகிய சந்திரனுக்குப் பயந்து பின்னடைந்து நிற்கும் இருள்களோ வென்றும், கண்ணுக்குத் தோற்றுப்போன கவரிமான்கள் தங்களது சிறந்த பொருள்களாகிய கவரிகளை அக்கண்களுக்கு உலுப்பையாகக் கொடுக்க அவைகள் அவைகளை யலக்ஷியஞ் செய்து பின்புறத்தில் தள்ளி விட்டனவோ வென்றும், அக் கூந்தல்களோடு மயிற்ரேகைகள் போர் செய்து அர்த்த சந்திர பாணங்களா லடிக்கப்பட்டு அந்த வடுக்களுடனே ஓடிப்போ யிவ்வளுக்குப் பின்புறத்தில் மறைந்துகொண் டிருக்கின்றனவோவென்றும், யமுனாநதியோ காளிந்தி நதியோ வென்றும், காமனுடைய வில்லினது சிறந்த நாரியோ வென்றும், குருவிந்த மணிகளிழைத்த சுட்டியினது காந்தி பிளந்து கொண்டு ஓடினதினாலே வகிரென்னு மிரேகை யேற்பட்டுப் பிரிந்து நிற்கின்றனவோ வென்றும், மற்றும் பலவித ரத்தின ஆபரணங்களினாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட் டிருக்குங்கால் தனக்கோரா பரணமாகிய சந்திரனிங்கு வந்திருக்கின்றானென்று தேடிக்கொண்டு வந்த கிரகங்களினாலும் நட்சத்திரங்களினாலும் விளங்கும் ஆகாசமோ வென்றும், அல்லது அச்சந்திரனைக் கவரக் கவிந்த இராகுவோவென்றும், கற்றுணர்ந்த கவீச்சுரர்களனைவரும் புகழ்ந்து குறிக்கும்படி இருந்தது.

முகத்திற்குத் திரிஷ்டி தோஷம் வாராமலிருப்பதற்காகக் கஸ்தூரி திலகந்தீட்டி விளங்காநின்ற நெற்றியானது தானவளகத்தின் கீழிருத்தலாலே அமரபட்சத் தஷ்டமியில் இருள்மேலெழும்ப உதயமாகும் அர்த்தசந்திரன்போல் விளங்கிற்று அவளது முகமண்டல காந்தியைப் பெறுவதற்கு சந்திரனானவன் மாதந்தோறும் சூரியனாகிய அக்கினி குண்டத்தை வலம்வந்து அதிற் குதித்துத் தேகத்தை விட்டு மறுபடி ஓர் தேகத்தை யடைந்து இவ்வாறாகவே நெடுநாளாகக் கடினமாகிய தவஞ் செய்து வருகிறானென்றும், அல்லது சந்திரன் இராகுவுக்குப் பயந்து ஆகாசத்தைவிட்டு இவள் முகரூபமாகி ஒளித்துக்கொண் டிருக்கிறானென்றும், களங்கமுந் தேய்தலுமுடைய அச்சந்திரபிம்பத்தை மறுவற்று நித்தியமும் பூரணமாக விளங்கிக்கொண்டிருக்கும் இவள் வதனத்திற்குச் சமமாகச்சொல்லுவது நியாயமல்லவென்றும், அச்சந்திரனாற் குவியப்படுந் தாமரைமலரை இவள் முகத்திற்குவமையாக்குவது அறிவின்மை யன்றோ வென்றும், அவள் முகத்தினேர்மை தனக்கில்லையென்கிற துக்காக்கினியினால் இருதயங் கன்றிப்போனபடியினாலன்றோ அத்திங்களின் மத்தியிற் களங்கமுண்டா யிருக்கிறதென்றுஞ் சந்திரன் இவள் முகவுருக்கொண்டமையால், அதற்கேற்ப நக்ஷத்திரங்களும் முகவாட்ட முதலாகிய அணிகளில் தொங்குகின்ற ஆணி முத்துகளி னுருவை யடைந்து அவளைச் சூழ்ந்து நிற்கின்றனவென்றுஞ் சந்திரனென்னு மொழிக்குக் களிக்கச்செய்பவனென்று பொருளாதலால், அத்தன்மை இம்முகத்திற்கே உரித்தாயிருக்கின்றபடியால் இதுவே சந்திரனென்னு வானத்திலிருக்குந் திங்கள் சந்திரனல்ல வென்றும், இவ்வாறு புலவர் பலவாறாகப் பேசும்படியா யிருந்தது.

அவ் வனிதையினுடைய புருவங்களே மதனுமிரதியுந் தங்களுக்கு மித்திரனாகிய சந்திரனிடத்தில் வைத்திருக்கும் வில்லுகளாக நினைக்கப்பட்டன. அவளுடைய கண்கள் வாலனைகளோ? அல்லது அச்சந்திரன் மடி

யிற் படுத்துக்கொண்டிருக்கிற மானினது விழிகளோ? அவளது முகமாகிய தாமரைப்பூவில் மொய்த்துக்கொண் டிருக்கும் வண்டுகளோ? அம்முகத்தின் காந்தியாகிய பிரவாகத்திலிருக்கும் மீன்களோ? அங்கு விளையாடிக்கொண்டிருக்கிற மதனனு மிரதியுமுடைய கூர்மை பொருந்திய வாட்களோ? என்று சந்தேகிக்கும்படியாய், இவைகளுக்கு அஞ்சியே கலைமான்களெல்லாம் காடு புகுந்தனவென்றும், இவைகளுக்குத் தோற்றே தாமரைகளும் கருநெய்தல்களும் வாவி புகுந்தனவென்றும், இவைகளின் பயத்தினாலேயே மீன்கள் நீரினின்று மெடுக்கப்படும்போதே துடிக்கின்றனவென்று எண்ணும்படியாய் விளங்கி மதத்தினால் மிளிர்ந்து நோக்குங்காலத்துக் காமனுடைய பூசைக்காக வெண்டாமரை மாலைகளையும் செந்தாமரை மாலைகளையும் கருநெய்தல் மாலைகளையுந் தந்துகொண்டு, தன்னை யுடையவளுக்குத் தீங்கு வருமென்று நினைத்துத் காதுகளிற் பாய்ந்துபோகாமல், மையிடப்பட்டபோது கூற்றையும் விஷத்தையுங் கெடுமையில்லாதவைகளாக்கி, மிகுந்த உறுதியுடைய முனிவர் மனங்களையுஞ் சின்ன பின்னமாக்குந் திறமுள்ள கடைப்பார்வையுடையவர்களாகி பிரகாசித்திருந்தன.

கபோலங்கள் மதனவேளினது ரத்தின கண்ணாடியையொத்து, சிரிக்கிற வேளையில் ஆடவருடைய மனங்க ளழுந்தும்படியாகிய சிறுகுழிகளுடையவையாக விருந்தன. அவளது நாசிகையோ மதனனுடைய தூணீரமானபடியினாலே அதின்காற்றிற் பரிமளமுண்டாயிருக்கிறதென் றெண்ணப்பட்டு, குமிழ்மலரைக் காட்டிற் றுரத்தி, சண்பகமலரை மரத்திற்றூக்கி, முகமாகிய தாமரை மலரில் ஒரன்னப்பேடிட்ட முட்டையென்று குறிக்கும்படியாகிய ஆணிமுத்தையணிந்து யாவராலும் இது முத்தமிடத் தக்கதுதானென்று புகழப்பட்டிருந்தது. மொழியாகிய தேன் சுரக்கும் பவள செப்பெனச் சொல்லத்தக்கதாக விருந்த அவளுடைய வாயிலிராநின்ற பல்வரிசைகள், சரசுவதிதேவி வாசஞ்செய்கிற இவளுடைய வாயாகிய சிம்மாசனத்திற் கலங்காரமாகக்கட்டிய முத்துச்சரங்களா யிருக்கலாமென்று நினைக்கப்பட்டுத் தாம்பூலத்தாற் செந்நிறமுடைத்தா யிருக்குமளவில் மாதுளங் கனியினது சிவந்த விரைகளின் அகங்காரத்தை யடக்கிச் சிறந்தன.

சிலர் இவளிதழை இவளது மிடற்றோசை கேட்டுக் குயில் கூவுகிறதென்று மனதில் நினைத்ததற் காதாரமாகச் சமீபத்திற் கொடுவந்து வைத்த செந்தளிரோ? கிளியென்று நினைத்துச் சிலர்வைத்த கொவ்வைக் கனியோ? அல்லது பதுமராக மணியைத்துளைத்து அமுதத்தை நிறைத்து அதற்கு மேன்மையு முண்டாக்கி விசித்திரமாகச் செய்யப்பட்டதோ? மற்றியாதோ வறிகிலோமென்றும், சிலர் கடினமாயும் இரதமற்றுமிருக்கிற பவளத்தையும், மிக விரைவில் நிறமாறுபடுகிற தளிரையும், இதற்குவமையாக்குதல் சான்றோர் செய்கையன் றென்றும், சிலர் கொவ்வைக்கனி இதன் காந்தியை நினைக்கும்போது தான் மிக தளர்ந்து சிந்துகின்றதென்றும், சிலர் கவிகளால் உலகத்தில் மங்கையரைச் சிறப்பிக்கும்போது துவரிதழினா ளென்கிறார்களே, தித்தித்த விதழினாரை இப்படிச்சொல்வது தகாதென்று நினைத்திருந்தோம் அது இப்பொழுதுதான் சரியென்று தோன்றிற்று. எப்படியெனில், இவ்விதரருசியை சிந்திக்குங்கால் மற்றை மாதர்களின் அதரருசி துவர்ப்புடையதென்றும் சிலர் ஓ!ஓ! இதென்னவாச்சரியம்? இவ்வமுதக்கினியை நோக்குவோர்க்கு மனதிற் சமரசஞ் சுரக்கின்றதேயென்றும், சிலர் முகச் சந்திரனது நிலாவே அப்படியிருக்கலாம். ஆதலாலேதான் காமரச சமுத்திரம் பொங்குகின்றதென்றும், சிலர் இது இவளது நாவில் வீற்றிருக்கும் கலைமகளுடைய மெய்யொளியோ? இல்லாவிட்டால் இவள் சொற்களுக்கு முதற் காரணமாகிய அமுதப்பெருக்கேதென்றும் இவ்வாறு யாவராலும் சங்கிக்கக் கூடுமான புன்னகையோடுங் கூடி, நிலவுபரவிய செவ்வல்லிமலரையும் அம்மலரோடுங் கூடிய தளிரையும் திக்காரஞ் செய்து விளங்கிற்று.

வள்ளையிலையை நினைப்பிக்குங் காதுகளானவை, ஆடவருடைய மனங்களோடு கூட நவமணிகளிழைத்த வணிகளும், ஊசலாடுகிறதற்கான டோலிகைகள்போ லிருந்தன. அவள் கழுத்தோ இரத்தினப் பணிகளாற் பக்கத்து வீற்றிருக்கிற சீதேவியாருடைய கண்களின் காந்திபொருந்தி விசித்திரமாக விளங்குந் திருமாலுடைய பாஞ்சசன்னியத்தை நேசித்திருந்தது. அன்றியும், சங்குகளெல்லாம் இவள் மிடற்றோடு யுத்தஞ் செய்ததினால் துரத்தி யடிக்கப்பட்டு, பிராணனைக்

காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்று கடலிற் புகுந்திருக்கின்றன வென்று சொல்லும்படியாகவும் விளங்கியது. மகாமேரு பருவதத்தில் முளைத்த தங்கக்கொடி மேன்மையும் சுகந்தமும் பொருந்தியிருந்தால் இவைகளுக்கு நிகராகுமென்று சொல்லும்படி சிறந்து-நீண்டு-திரண்டு-விளங்குமவளுடைய கைகள், கணுக்கையி லணிந்திருக்கிற மணிக்கங்கணக் கதிர்களினாலே வடுகர் வழக்கத்தின்படி கஸ்தூரி-குங்குமம்-கர்ப்பூரங்களால் ரேகைகள் எழுதப்பட்டவைபோற் பிரகாசங் கொண்டிருந்தன. தோள்களோ கழைகளின் ரூபத்தைக் கவர்ந்துக்கொண்டு இருந்தன. இயாழினழகு மிடற்றில் மாத்திரமல்ல முன் கைகளிலும் விளையாடிக்கொண் டிருந்தது. அவளுடைய அகங்கைகளுக்கு அடிமைத் தொழில் செய்வதற்குங் காந்தள் தகுந்ததன்றென்று மூடனுக்குஞ் சொல்ல வெளிதாயிருந்தது. அப்பெண்ணரசியினது நகங்களைக் கண்டாற் கிளிகளின் வாய்களை பொருவதும் சிறப்பிக்க மாட்டாளென்று சொல்வதற்கு ஒருவாற்றானுந் தடையின்றி யிருந்தது.

அவளது மார்பெல்லாம் படர்ந்து-உயர்ந்து - பருத்து - நிமிர்ந்து-இடைவெளி யில்லாதவைகளாய் வட்டம்போல் வடிவுளவாய் கல்லினுங் கடினமாகி மலரினும் மிருதுவாகி அழுந்தி கறுத்து சிறுத்த கண்களையுடைய முலைகள் இம்மங்கையாகிய பொற்கொடியினது பூங்கொத்துகளோ? காமன் இரதியோடு கூடி விளையாடுகிறதற்கு மணிக்கோட்டுடன் தங்கத்தினா லமைத்த பொற்குன்றங்களோ? பருவமென்னுந் தோழனை நோக்கவருங் காமனுக்கு மிரதிக்கும் பூசைக்காக வைத்திருக்கும் பூரணப் பொற்குடங்களோ? தேகத்தினொளியாகிய நதியின் வெள்ளத்தில் தவழுஞ் சக்கிரவாகப் புட்களோ? இவளது தேகத்திலே யுலாவுங் காமவேளினது வாகனமாகிய யானையின் பொற்சிலை போர்த்த கும்பத் தலங்களோ? காமுகருடைய இதயங்களைச் சுழற்றுகிறதற்காகக் காமனேற்படுத்திய சக்கரங்களோ? மதனவேளைக் காண்பதற்குப் பருவமாகிய மங்கை சம்பாதித்து வைத்துக்கொண் டிருக்கிற பெரிய வெலுமிச்சம் பழங்களோ என்று காண்போரெல்லா மயங்கும்படியாய் முத்து மாலைகள் மேற்புறத்திற் புறளுங்காற் பிரமலோகத்தி லிருந்து விழுந்த கங்கையின் வெள்ளத்தோடு கூடிய மேருவையொத்து, அம்மேரு இதன்பெருமை கேட்கையில் உண்டாகிய வியசத்தினா லசைவற்று நின்றுவிட்டதென்றும், இரவிற் பிரிந்து நிற்குஞ் சக்கரவாகப் புட்களும் கறுகட்டி யிருக்கிற மலைகளும், விரைவில் வீரியுந் தன்மையையுடைய தாமரை முகிழ்களும் இவைகட்குச் சரியல்லவென்றும், தாளம்-செப்பு-சிமிழ் - யானைக்கோடு - முதலாகியவையெல்லாம் ஒவ்வொரு சிறப்பே யுடையனவாகையாற் பல சிறப்போடுங் கூடிய இவைகட்கு எவ்வளவேனும் பொருந்தாவென்றும், இம்முலைகளைத் தனக்குச் சரியாய் நினைத்துச் செருக்கடைந்து படியாற் பந்து யாவராலுமடிக்கப் படுகிறதென்றும், இவ்வாறு செருக்கடைந்தது பற்றியே யானையின் கும்பத்தலங்களும் மாவட்டியாற் குத்தப்படுகின்றன வென்றும் சொல்லும்படி மேன்மை பொருந்தியிருந்தன.

மிகவும் பாரத்தைச் சுமப்பதினாலே நுண்ணிதாகிய இடை ஒடிந்து போகாதிருக்கும்பொருட்டுக் கீழங்கத்துக்கு மேலங்கத்துக்கும்போட்ட இந்திர நீலமணிச் சலாகையின் சாயையோ? அல்குலாகிய மாளிகையிலிருந்து மன்மத மகாராசன் தனது வேடிக்கை மலையாகிய முலைமீது போவதற்கமைந்த நீலக்கயல்விழியோ? மார்பிலணிந்திருக்கிற ரத்தினப் பதக்கத்தைச் சூரியனென்று மயங்கி விழுங்குகிறதற்காக இடையாகிய ஆகாயத்தினின்றும் வருகிற ராகுவோ? அல்லது அப்பதக்கத்தைத் தனது தந்தையாகிய சூரியனென்று நினைத்துவந்த யமுனாநதியோ? அல்லது இவளது ஸ்தனங்களைத் தாமரை முகிழ்களாக வெண்ணியோடும் வண்டுகளின் வரிசையோ என்று கருதப்பட்ட உரோமரேகையை அடைந்த வயிறானது, ஆதிகாலத்தில் நாராயணன் பள்ளிகொண்டிருந்த ஆலிலைபோல் விளங்கிற்று. மேலுங் கீழும் அவயவங்களிருத்தலாலே இரண்டும் பொருந்தும்படி நடுவில் ஓர் அவயவமிருக்கவேண்டுமென்று ஊகிக்கப்பட்டிருக்கிற அம் மங்கையின் கொங்கையைச் சுமந்த இடை தன்னோடொத்த பூமியானது ரத்தினாகரமாகிய மேகலையை அணிந்திருக்கிறதே. நாமுமப்படியாக வேண்டுமென் றிவ்வுருவங்கொண்டு சகல ரத்தினங்களுக்கு மிருப்பிடமாகிய மேகலாபரணத்தைத் தரித்திருக்கிறதென்று சிந்திக்கப்பட்டு, பரமசிவனுடைய நெற்றிக்கண்ணு

லெரிக்கப்பட்டு நசித்த காமனுடைய தேகத்தை மறுபடி யுண்டாக்குவதற்கு மூதற்காரணமாகிய பரமாணுவைப்போ லிருந்தது. அவளது வயிற்றிற் பொருந்தி விளங்கு மடிப்புகளின் வரையோ இவ் வணங்கின் தேகத்தினொளியாகிய ஆற்றின் அலைகளையும், மதனன் விளையாடும் உந்தியென்னும் வாவிக்குக்கட்டப்பட்ட பொற்படிகளையும்போன் றிருந்தன. அன்றியும், அவளுந்தியானது காமுகர் மனங்களை அவளிடத்தி லாழ்ந்துபோகும்படி செய்வதற்காக, அக்காமனால் ஒருவாறு கனிவுகொண் டேற்படுத்திருக்கிற ஓர் சுழியந்திரம் போலுந் தோன்றிற்று.

அவ் வணங்கினது அல்குலின் அழகை நினைக்கும்போ தெல்லாம் பாம்புகள் படங்களைக் குவித்துக்கொண்டு புற்றில் ஒளித்துக்கொள்ளுகின்றன. அன்றியும், அப்பாம்புகள் அதற்கு நிகரென்று உலகத்தார் சொல்வதை நம்பியன்றோ விஷ்ணுவானவர் சேஷன் படத்திற்குக் கீழ்படிந்திருக்கின்றார். காமவேள் விளையாடுகிற மணற்குன்றுபோல இராநின்ற அவ்வல்குலுக்கு நிகர் அவ்வரவின் படமே யானாலும் அரசிலை என்பதும் ஒக்கும். கரும்பு வில்லினது தேரி னுருளைபோன்ற அம்மாதின் நிதம்பமானது காமுகருடைய மனங்களைச் சூரணஞ் செய்ய ஏற்படுத்திய குண்டுக் கல்லெனத் தோன்றிற்று. அவளரையி லிருந்து பாதமளவும் வியாபித்திருக்கும் வெண் பட்டானது, இத்தேவ கன்னிகையைக் கங்கையானவள் தனது தாயாகிய இலக்குமியென்று மயங்கித் தனக்கிஷ்டத்தைக் கொடுக்கவேண்டுமென்று குழைந்தைபோற் கட்டிக்கொண்டதாகச் சங்கிக்கப்பட்டிருந்தது. அவளுடைய தொடைகளுக்கே நிகராகாத அரம்பையை அவளுக்கு நிகராக யார்தான் பேசுவார்கள்? சொரசொரப்புடையதாகிய யானைத் துதிக்கையும் அதற்கிணையாக நினைக்கலாமோ வென்றால், விக்கினேஸ்வரர் அத்தொடையினாலுண்டாகிய இச்சையைத் தீர்த்துக்கொள்ளவன்றோ அத்தொடைக்கு நிகராகத் துதிக்கையைப் பெற்றிருக்கிறார். நல்ல தங்கத்தினால் உருட்சியாய் ஒரு ஸ்தம்பஞ்செய்து, மெழுகினால் அதற்குப் பளபளப்பு உண்டாக்கி, அதில் மேன்மையையுங் குளிர்ச்சியையும் பொருத்தினால் அதை அத்தொடைக்கு சமானமென்று ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாமே யன்றி வேறொன்றை ஒப்பிடுதல் சிறப்பன்று. அவளது முழங்கால்களின் தோற்றத்தைப் பொன்னுலகி லிருக்கும் கனகஞெண்டுகள் பொருந்தியிருந்தன. அவளது கணைக்கால்களுக்குப் பொன்மயமாகிய இளவரால்களையும், புறவடிகளுக்குப் பொன்னாமைகளையும் பாடுகளுக்கு பொற்றராசையு மன்றி, வேறு உபமானங் கிடைக்கவில்லை. கால்விரல்கள் பவளத்தாலும் நகங்கள் தளரத்தாலும், செய்யப்படாமற் போனால் அப்படிப்பட்ட தோற்றத்தையுடையவையாகவிரா; அவள் பாதங்களுக்குச் சரியாக வேண்டுமென்று தான் தாமரைமலர்கள் நீரிலிருந்துக்கொண்டு சூரியனுக்கு எதிராக அங்காத்து தவஞ் செய்கின்றனவோ வென்றும் ஆசையாற் சிவந்த ஆடவருடைய மனதிலுறைத்தமையாற்றான் அவை செவந்தனவோ வென்றும் சொல்லத்தக்கதாக விருந்தன. அவளடிகள் சுபாவமா யிருக்கும்போதே அவ்வடிகளுக்குச் சரியாகாமலிருக்கிற அனிச்சமலர்கள் செம்பஞ் சூட்டியிருக்கும் கால்களை நோக்கி உயிரை விடவேண்டுமென்று நினைக்கும்.

அக்கால்களின் மணிச்சிலம்பில் அன்னத்தின் மிடற்றோசை றோற்கையாலே, இதுகளைத் தாமரைகளாகத்தான் சொல்லலாமென்றெண்ணும்படியாக யிருந்தது. இவருடைய மேனிக்கு மின்னலானது இடைவிட்டொளிதலில்லாத தன்மையோடுங் கூடியிருந்தால் உவமையாகச் சொல்லலா மென்றும், இவளது தேகத்தைச் சாம்பூனத நதியினது சேற்றிற் போட்டிழுத்தாரோ வென்றும், இல்லாவிட்டால் அந்தந்த உறுப்புக்களுடைய ஒட்டிடங்களிலே கொஞ்சமாகிலும் விகற்பங்காணப்படுமே யென்றும் இவளுடைய தேகத்திலே காந்தி யென்னும் ரசத்தை நிரப்பி யிருக்கின்றாரோ வென்றும், இவளுடைய அங்கத்தின் காந்தியைப் பார்த்தால் முத்தினிடத்திற் காந்தி யில்லையென்றும், மென்மையை நோக்கினாற் காட்டுவாழை மலர்களில் மென்மையில்லை யென்றும், நிறத்தைக் கண்டால் தங்கத்தில் நிறமில்லை யென்றும், குளிர்ச்சியைச் சிந்தித்தால் நிலவிற் குளிர்ச்சியில்லை யென்றும், வாசனையை நினைத்தால் மலரில் வாசனையில்லை யென்றும் கவிராசர்கள் புகழ்ந்துக்கொண்டிருப்பார்கள்.

இவ்வாறாக உலகத்துக்கு ஒரு மோகனாத்திரம்போற் சிருட்டிக்கப்பட்ட அந்த திலோத்தமை யென்னும் அப்சரசானவள் அச்சபை யெல்லாம் ஓரொளியை அடையும்படி

வந்து, நான்முகக் கடவுளைத்தொழுது நின்று சுவாமி அடியாளுக்கு அனுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று கேட்டாள். அந்தத் தேவ சிரேஷ்டரும் இவளைக்கண்ட மாத்திரத்திலே மிகுந்த களிப்படைந்து பெண்ணே! உனது தேகமானது யாவரு மோகிக்கும்படியான காந்தி பொருந்தி வாழக்கடவதென்று வர மளித்தனர். இந்த வரமகிமையாலும் விசுவ கர்மாவினது சிருட்டித்தொழிலின் திறமையாலும் க்ஷணத்துக்கு க்ஷணம் அழகினாற் சிறந்து, யாவருடைய கண்களையும் மனங்களையும் கவர்ந்துகொண்டவளாகிப் பிரமதேவரை நோக்கிக் கை கூப்பிக்கொண்டு எனது கடவுளே! இனி அடியாள்செய்யவேண்டிய பணி விடை யாதென்று வினாவினள். அக் கடவுளானவர் அடி பொற்கொடியே பூமியிற் சுந்தனென்றும் - உபசுந்தனென்றும் இருவரிருக்கிறார்கள். அவர்கள் நம்மிடத்தில் வரம் பெற்றுக் கர்வமடைந்து லோகங்களை யெல்லாம் அழித்துத் தேவர்களையுந் துரத்தி யுபத்திரவம் பண்ணிக்கொண் டிருக்கிறார்கள். அவர்களுக்கு அவர்களாலேயே சாவாகையால் நீ அவ்விடம் சென்று, சிறந்த உனது வடிவத்தினால் அவர்களை மயக்கி, ஒருவருக் கொருவர் விரோதம் வரும்படி செய்யவேண்டும் என்று கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையைச் சிரசில் வகித்த அப் பெண்மணியானவள் நான்முகத் தேவரைத் துதித்துப் பிரதட்சணம்பண்ணி நமஸ்காரஞ்செய்து விடை பெற்றுக்கொண்டு பூமியைநோக்கிப் புறப்படும்போது இவளுடைய உல்லாசத்தையும் நடையழகையும் வடிவழகையும் பார்த்துச் சகலமாகிய தேவர்களும், ரிஷிகளும் ஆச்சரியப்பட்டுப் பிரமித்து ஓ! ஓ! இவளுடைய ரூபத்தைக்கண்டு நாமே மோகிக்கும்படியா யிருக்கிறதே. அந்த மதம்பிடித்த அசுரர் இவளை மோகித்து வசப்படக் கேட்க வேண்டுமோ? ஆகையால், அவ்வசுரருடைய தொந்தரவு நமக்கு நீங்கி சவுக்கியப் படும்படி யாகிய காலம் நேரிட்டது. இதற்குச் சந்தேகமில்லை யென்று ஒருவரோடொருவர் சந்தோஷமாகப் பேசிக்கொண்டு, அவள் பூமிக்கு இறங்கிப் போவதையே பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

இப்படியிருக்க, அந்தச் சுந்தோபசுந்தரி ருவரும் மூன்று லோகங்களையுஞ் செயித்து, பல ஆபரணங்கள் வஸ்திரங்கள் வாகனங்கள் ஆசனங்கள் முதலாகிய பொருள்களைத் திரளாய்க் கொள்ளை யடித்து, எந்த வேளையில் எந்த வஸ்துவின்பேரில் இஷ்டமோ அந்த வஸ்துக்களையும் அந்த ஸ்திரீகளையும் கொண்டுவந்து மனதிற்கு இசைந்தபடி அனுபவித்துக்கொண்டு, மகா கர்வம்பொருந்தி அங்கங்கே சஞ்சரித்துக்கொண் டிருக்கிறார்கள். அந்நாளில் ஒருநாள் விந்தியமென்று பெயர் பெற்ற பெரிய பருவதத்தைக் கண்டு, தங்கள் சேனைகளோடு அந்தமலையின்பேரில் சென்று, நான்கு பக்கங்களிலுஞ் சுற்றிப்பார்த்து, அதிலோரிடத்திலே, பூத்தும்-காய்த்தும் - பழுத்தும்-தளிர்த்தும்-தழைத்தும் - விரிந்து மிராநின்ற, மாமரம்-பலாமரம்-கோங்குமரம் - மருதாணிமரம்-வாழைமரம்-தென்னைமரம் - புன்னைமரம்-கொன்றைமரம்-மருதமரம் - சண்பகமரம்-பாதிரிமரம் முதலிய பல மரங்களையும், மல்லிகைக்கொடி-முல்லைக்கொடி - ஏலக்கொடி முதலாகிய பல கொடிகளையும் உடைத்தாய், மயில் உலாவவும், குயில் கூவவும், கிளி கொஞ்சவும், தேன் மிஞ்சவும் விளங்காநின்ற ஓர் சோலையையும், அதின் நடுவில் மேடுபள்ள மின்றி சமமாய் நிகநிகத்தும் வழவழத்து மிராநின்ற பாறை யொன்றையுங் கண்டு மனமகிழ்ந்து, தமது மந்திரிமுதலான பேர்களைக் கூப்பிட்டு, நாங்களிங்கே வேடிக்கையாகச் சில காலம் வாசஞ்செய்ய விரும்புகிறோமாகையாற் சேனையை யெல்லாந் தூரத்திலே நிறுத்தி வையுங்களென்று சொல்லி, அந்தப் பாறையினிடத்தில் வந்து, சோலையி லுண்டாகிய சிங்காரத்தையெல்லாம் கண்டு, வசந்தகாலத்தினாலுண்டாகிற சுகந்தத்தையும் குளிர்ச்சியையும் பொருந்தி மெதுவாய் வீசும் தென்றல் விலாசத்தையும் பார்த்து அதன்மே லுட்கார்ந்து, மகா ருசியுள்ள கனிகளைப் புசித்து கள்ளைக் குடித்து அதனால் விசேஷ வெறியையும் வெகுவான மதத்தையு மடைந்து மின்னற் கொடிக் கொப்பாகிய அனேக மங்கையர்கள் வந்து சிலர் வீணை வாசிக்கவும், சிலர் புள்ளாங்குழ லூதவும், சிலர் மத்தளம் முழக்கவும், சிலர் தாளம் கொட்டவும் சிலர் யாழ் வாசிக்கவும், சிலர் பாடவும், சிலர் ஆடவும், சிலர் புகழவும், சிலர் நிகழவும், சிலர் புனுகு-கஸ்தூரி-குங்குமம் முதலாகிய வஸ்துக்களைத் தேகத்திற் பூசவும், சிலர் பூச்செண்டு-பன்னீர்-பரிமளப்பொடி முதலிய வஸ்துக்களை ஆகாயத்தில் வீசவும், சிலர் பேசவும், சிலர் ஏசவும், சிலர் பூமாலைகளைச் சூட்டவும், சிலர் கண்ணாடிகளைக்

காட்டவும், சிலர் தாம்பூல மடித்துக் கொடுக்கவும், சிலர் ஜாதிக்கா யெடுத்து அளிக்கவும், பலர் ஆலிங்கனஞ்செய்யவும், பலர் ஆனந்தம் பெய்யவுமாக மகா வேடிக்கையோடு சரச சல்லாபமாய் விளையாடிக்கொண் டிருந்தார்கள்.

அக்காலத்திலே அந்தத் திலோத்தமையானவள் ஆகாசத்தினின்றும் அவ்விந்த மலையின் சமீபத்திலோடுகிற ஓராற்றின் கரையிலிறங்கி, தன் அவயவங்கள் குறிப்பாய்த் தோற்றும்படி மெல்லிதாகிய குசும்பா வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு தளுக்கும் மினுக்கும் குலுக்கும் பலுக்குமாகப் புன்சிரிப்புடனே கடைக்கண்ணா லிவர்களிருக்கு மிடத்தையே பார்த்துக்கொண்டு, புட்பங்களைக் கொய்து அன்னம்போல் ஒய்யாரமாக நடந்து வருகிறாள். அதனைக் கண்ட அவ்வசுர ரிருவரும் மனந்தளர்ந்து காமவெறி கொண்டு, அவ்விடத்தில் நின்றுந் திடீலென் றெழும்பிக் குதித்து ஓடிவந்து, மூத்தவன் அவளுடைய வலது கையையும், இளையவன் அவளுடைய இடது கையையுமாகப் பிடித்துக்கொண் டந்தப் பெண்ணினுடைய ரூபத்தையும் காந்தியையும்கண்டகளிப்பினாலேயும், அவளுடைய தேகத்தைப் பரிசித்ததினாலேயும், மிகுந்த காமவிகாரமடைந்து, கண்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்ப, தேக மெல்லாம் மயிர்க்குச்சடைய ஒன்றுந் தெரியாமற் பரவசமடைந்து, சுந்தனானவன் தம்பியை நோக்கி, இவள் உன்னண்ணனுடைய பெண்சாதி யாகையால் உனக்குத் தாய்க்குச் சமானமாகியவள் என்றான். உபசுந்தன் அண்ணனை நோக்கி, இவள் உன் தம்பியினுடைய பெண்சாதி யாகையால் உனக்கு மருமகளுக்குச் சமானமாகியவள் என்றான். இப்படியே நெடுநேரம் ஒருவரோடொருவர் வாதித்துக்கொண்டு இருகண்களுஞ் சிவந்து சுழலமிட, புருவங்கள் நெறித்துத் தாண்டவமாட உதடு துடிக்க உள்ளங் கலங்க கடினமாகப் பேசி மிக்கவும் பகைகொண்டு, ஒருவரோடொருவர் சண்டைக்கு ஆரம்பித்தார்கள்.

இப்படியாக அந்தச் சுந்தோபசுந்தர் பலத்தினாலும், செல்வத்தினாலும், குடியினாலும் மதமடைந்து காமத்தினால் மயங்கி, நன்மை தீமைகளை சிந்திக்காமல் இயல்பா யிருந்த நேசத்தை நொடியில் மறந்து, பயங்கரமான கதாயுதங்களைக் கையிலெடுத்து, புஜங்களைத்தட்டி அட்டகாசஞ்செய்து, இருவரும் நீ நானென்று வீரவாதம் பேசி சிங்கங்கள்போல் ஒருவர்மேலொருவர் பாய்ந்து, தங்கள் கதாயுதங்களைக் கரகரவென்று சுழற்றி அடிக்க வருகிறதும் அதைத் தப்பித்துக்கொண்டு ஆகாசத்திலெழும்பி மறுபடி பூமியிற் குதித்துப் பிடிக்க வருகிறதும் பின்பு சமயம் பார்த்து ஒருவனை யொருவன் தூக்கி அம்மானை யாடுவதைப்போல் ஆகாசத்திலெறிகிறதுமாகி, பூமியெல்லாம் கிடுகிடுவென்று நடுங்க அண்டமெல்லாம் படபடென்று வெடிக்க மலைகளெல்லாம் எதிரிரைச்சல்போடப் பயங்கரமாகக் கர்ச்சித்து, ஒரு முகூர்த்த காலம் யுத்தஞ்செய்து கடைசியில் அந்தக் கதாயுதங்களாலே ஒருவரை யொருவர் அடித்துத் தங்கள் தேகமெல்லாம் பிளந்து, இரத்தம் தாரைதாரையாகப் பெருகியோட, ஆயுதங்கள் பிடித்திருக்குங் கைகால்களு முறிந்து நடுங்கியாட, அவ்விரண்டுபேரும் இரண்டு சூரியர் விழுந்தாற்போல் பூமியில் விழுந்து மடிந்தார்கள்.

இப்படிக்கு அவ்வசுரர் நாசமாகப் போவதை முன்னமே ஆகாசத்தில் வந்து பார்த்துக்கொண்டிருந்த பிரமதேவரானவர், தேவர்-கருடர்-கந்திருவர்-கின்னரர் - கிம்புருடர் - சித்தர்-சாத்தியர்-இயக்கர் - விச்சாதரர் - முனிவர்-முதலாகிய சகல பரிவாரங்களுடனே அந்தத் திலோத்தமையி னிடத்திற்கு வந்து, பெண்ணே! நீ மகா பாக்கியசாலி உன்னாலல்லவோ இப்போர்க்கொத்த பாவிகளாகிய அசுரர் மாண்டார்கள். மூன்றுலோகமும் சவுக்கியப்பட்டது. இயாவருக்கும் உபகாரஞ் செய்யும் பாக்கியம் முன் பிறப்பில் மிக அருமையாகிய தவஞ்செய்த உனக்கல்லாது மற்ற யாருக்குக் கிடைக்கும்? உன் கீர்த்தி உலகங்களிலெல்லாங் காலமுள்ள வரைக்கும் விளங்கிக்கொண்டிருக்கும். நீ செய்த சகாயத்திற்குக் கைமாறு யார் செய்ய மாட்டுவார்கள்? அடி கண்மணியே! நான் உன்னிடத்தில் மிகவுஞ் சந்தோஷ மடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக்கேள் என்றுசொல்ல அந்தப்பெண்ணும் சுவாமி! அடியாளுக்கு என்ன மகிமையுண்டு. தேவரீருடைய கிருபையைப் பெற்றதினால் இவ்வித பாக்கியங் கிடைத்ததேயல்லது வேறில்லை. இப்படிப்பட்ட தேவரீருடைய கிருபை யொன்றே போதுமான வரமென்று சொல்லிப் பணிந்தாள். அப்படி சொன்ன போதிலும் அவளுக்குப் பிரமதேவர் மிகுந்த சந்தோஷத்தினாலே தாமே பல

வந்தமாய் வரங்கொடுக்கக் கருதி, ஓ பெண்ணரசீ! நீ நினைத்தவிடமெல்லாந் தடையின்றி சஞ்சரிக்கக் கடவாய் உன்னைப் பலவந்தமாய்ப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று எவன் வந்தாலும், அவனெல்லாம் உன் தேஜோமய மகிமையைக் கண்டு அஞ்சி ஓடிப்போகக் கடவனென்று வரங் கொடுத்து, சகல பரிவாரங்களோடுந் தமது சத்தியலோகத்தினுக்குப் போய்ச் சேர்ந்தார்.

அந்தத் திலோத்தமையும் தேவர்கள் ரிஷிகள் முதலான பேர்களை யெல்லாம் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து, அவர்களிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு தனக்கிஷ்டமாகிய விடம் போய்ச் சேர்ந்தாள். இந்திரன் முதலாகிய தேவர்களும் பொன்னுலகம் புகுந்து, சந்தோஷத்துடனே தங்கள் தங்கள் அதிகாரங்களைச் செலுத்தி வந்தார்கள். சகல ரிஷிகளும் பிராமணரும் வைதிக காரியங்களைக் குறைவின்றிச் செய்து, தருமத்தை விருத்தி செய்து வந்தார்கள். இராஜாக்களும் ராச்சியங்களைப் பரிபாலனஞ் செய்து தருமநீதிகளை நடாத்தி வந்தார்கள். இப்படியாக லோகங்களெல்லாம் புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்டாற்போல் விளங்கின. கேளும் தருமபுத்திரரே! ஒரு பெண் நிமித்தம் அப்படிப்பட்ட மகாவீரர் நீரும் பாலும்போலிருந்த இயல்பான நேசத்தைத் தள்ளி வீணாய் மடிந்தார்கள். ஆகையால், நீங்களிப்போது திரௌபதிக்காக ஒரு ஏற்பாட்டைச் செய்துகொள்ள வேண்டும். அதை என் முன்னிலையிலேயே நிறைவேற்றி வந்தால் உங்களுக்கு யாதொரு தீங்குங் கிடையாமலிருக்கும் இதை உங்களிடத்தில் விசுவாசத்தினால் சொல்லுகிறேன். என்னுடைய இஷ்டத்திற்காகவாவது நீங்கள் ஒரு நிபந்தனஞ் செய்துகொள்ள வேண்டும் என்று நாரதமஹாமுனி சொல்ல, பாண்டவர்கள் ஒருவரோடொருவர் சமாதானப்பட்டு, அந்த நாரத மஹாமுனியைக் கும்பிட்டு, சுவாமி! தேவரீருடைய உத்திரவின்படி எங்களுக்கு இதமாகிய ஒரு நிபந்தனை தேவரீரே ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். நாரதர் அதற்கு மனமகிழ்ந்து, ஓ புண்ணிய சீலர்களே! திரௌபதியை இதுமுதல் நீங்கள் ஐவரும் ஒவ்வொருத்தர் ஒவ்வொரு வருஷமாக முறையே சேர்ந்திருக்கவேண்டியது. அப்படி ஒருவரோடு அவளிருக்குங் காலத்தில் மற்றொருவன் எவ்விதத்தினாலாகிலும் அவ்விடம் வந்து பார்ப்பானாகில், அவன் ஒருவருஷம் விரதத்தோடு தீர்த்த யாத்திரையாய் நாட்டிற் போகவேண்டியது. இந்த நிபந்தனையின்படி நீங்களைவரும் நடந்துகொண்டு வருவீர்களானால், உங்கட்கு எக்காலத்தும் எக்குறைவு மில்லாதிருக்குமென்று ஓருறுதி ஏற்படுத்தினார். அவ்வுறுதிக்கு அந்தப் பாண்டவர்கள் ஒத்துக்கொண்டு நாரத பகவானைப் பணிந்தார்கள். அவர் மிகவுஞ் சந்தோஷமடைந்து ஆசீர்வதித்துத் தம்முடைய லோகத்திற்குப் போயினார்.

### உபபஞ்சபாண்டவருற்பவம்

இப்பால் நாரத மஹாரிஷியினுடைய ஆக்கினையின்படி பாண்டவர்கள் ஐவரும் தங்களுக்குள்ளே தாங்கள் மாறுபடாமலிருக்க திரௌபதியானவள் முறையே கருப்பந்தரித்து தருமபுத்திரருக்கு பிரதிவிந்திர னென்பவனையும் வீமசேனனுக்குச் சுருதசோமனென்பவனையும் அர்ச்சுனனுக்குச் சுருதகீர்த்தியென்பவனையும் நகுலனுக்குச் சதானீக னென்பவனையும் சகாதேவனுக்குச் சுருதசேனனென்பவனையும் பெற்றாள். இப்பெயர்களிவர்களுக்கு வந்த காரணம் யாதென்றால், தருமராஜன்போல் மிகவுஞ் சாந்தியடைந்து சத்துருக்களை வெல்லவுஞ் சக்தியுடையவனாகையால் அவர் பிள்ளைக்குப் பிரதிவிந்திர னென்கிற பெயரிட்டார்கள். அனேகங் கோடி சந்திரன்போற் பிரகாசமாயிருந்தபடியினாலே, வீமசேனன் மகனுக்கு சுருதசோமனென்று பெயரிட்டார்கள். அர்ச்சுனன் பகைவரை வென்றானென்னுங் கீர்த்தி கேட்குமளவிற் பிறந்தபடியினாலே, அவன் புத்திரனுக்குச் சுருதகீர்த்தியென்கிற பெயரிடப்பட்டது. அந்தப் பரதவமிசத்திலே முன்னிருந்த சதாநீகன் என்கிற ராஜன்போல் மஹா சக்தி யுடையவனென்று, நகுலன் குமாரனுக்குச் சதாநீகனென்கிற நாமதேயந் தரித்தார்கள். கிருத்திகா நட்சத்திரத்திற்பிறந்தவனாகையாற் சகாதேவன் மைந்தனுக்குச் சுருதசேன னென்கிற நாமமிடப்பட்டது. இப்படிக்குப் பெயரடைந்த அவ்வைந்து குமாரரும் அப்பெயர்களுக்குத் தக்கபடியே மிகவும் மகிமைகளையடைந்து, பஞ்சாக்கினிக ளென்னும்படி வளர்ந்து, சகல கலைகளுமோதி அர்ச்சுனனிடத்திலேயே வில்வேதங் கற்றுச் சகலவித யுத்தங்களிலும் மிகவும் வல்லவரானார்கள். அன்றியும், ஐயப்படாமை, விருப்பின்மை,

வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழியை நீக்கல், அழிந்தோரை நிறுத்தல், அறம்விளக்கல், பேரன்புடைமை ஆகிய அறத்துறுப்புகளையு மனுசரித்தார்கள். திரௌபதியின் குமாரராகிய இந்த உபபாண்டவர்கள் பிறந்த செய்தியைப் பாஞ்சாலர் கேட்டு வந்து, குழந்தைகட்கும் தங்கள் பெண்ணுக்கும் செய்ய வேண்டிய வரிசைகளை யெல்லாஞ் செய்து, பாண்டவர்களால் வெகுமானங்களைப் பெற்றுத் தங்கள் நகரம்போய்ச் சேர்ந்தார்கள்.

இந்திரப்பிரஸ்தச்சருக்கம் முற்றிற்று.

---

பதின்மூன்றுவது,

## அர்ச்சுனன்

## தீர்த்தயாத்திரைச்சருக்கம்

---

கண்ணன் துதி

குன்றெடுத் தாயர்மாதர் குரவைகொண்டொருவிளாவிற், கன்றெடுத் தெறிந்துவெய்ய காளியற் கிருந்தாணல்கி, யன்றெடுத் திருத்த வில்லே யணியவில் விழவுகாண்பான், சென்றெடுத் திறுத்து நின்ற செங்கண்மா லெங்கள் கோவே.

ஓ சந்திரகுலசிகாமணியாகிய ஜெனமேஜெய மகாராஜனே! பாண்டவர்கள் இவ்வாரிந்திரப்பிரஸ்தத்தில் யாதொரு குறைவுமின்றி அரசாட்சி செய்துவருங்காலத்தில் ஒரு நாள் அவ்வூரிலிருக்கும் ஓர் பிராமணனுடைய மாடு மந்தையிற் கள்ளர்புகுந்து மாடுகளை எல்லாம் பிடித்து ஓட்டிக்கொண்டு போகவே, அந்தப் பிராமணன் மிகுந்த பரிதாபத்தை யடைந்து, உடனே ஓடிவந்து அரண்மனை வாசலில் நின்று, கோவென்னும் பெருங்கூச்சலுடனே, ஐயா ராஜாக்களே! அநேகந் துஷ்டர்களாகிய திருடர் வந்து என் மாடுகளை கொள்ளை யடித்துக்கொண்டு போகிறார்களே இதென்ன வனியாயம்? நான் ஏழைபிராமணனுக்குத்தே, கேள்வி யில்லையோ? உங்கட்கு ஆறிலொரு கடமையுங் கொடுத்துச் சொத்துக்களைத் திருடருக்குங் கொடுக்கிறதா? நீங்கள் தருமமறிந்தவர்களல்லவா? எந்த ராஜா கள் தருமமறிந்தவர்க ளல்லவா? எந்த ராஜன் குடிகளிடத்திற் கடமை தண்டிக்கொண்டு செவ்வையாய்க் காப்பாற்றாமற்போகிறானோ அவன் யாவருடைய பாதகங்களையும் ஏற்றுக்கொள்ளுகிறவனாகிறான். அதிலும் பிராமணனுடைய சொத்தைத் திருடர் கொண்டுபோக ராஜா பராமரிக்கையா யிருந்தால், அதைக்காட்டிலும் அனியாயம் வேறென்ன? ஓ தரும பிரபுக்களாகிய பாண்டவர்களே! என் சொத்தைக் கைக்கொண்ட திருடர் அதோ ஓடுகிறார்கள், சீக்கிரத்தில் ஆயுதத்தைக் கையி லெடுத்துக்கொண்டுபோய்ப் பிடித்து, என் சொத்தை யெனக்கு அளித்து, அந்தப் பாவிகளையுந் தண்டனை செய்யும் ஆலசியப் படுத்தவேண்டா மென்று மிகவும் துயரமாய் விக்கினன்.

அவ் வரண்மனை வாசலிற் கஸ்து சுற்றி வந்த அர்ச்சுனன் அதுகேட்டு தன்னுடைய ஆயுதமிருக்கிற விடத்திலே போக யத்தனப்பட, அப்போது திரௌபதியோடு தருமபுத்திரருக்கு முறையாதலால் அவரவ்விடத்தில் அத் திரௌபதியோடு வசனித்திருப்பதை யறிந்து, அங்கே போகக் கொஞ்சமஞ்சி சற்றே யாலோசித்து, ஓ! ஓ! இதென்ன தருமச்சங்கடம் நேரிட்டது. இந்தப் பிராமணரோ சொத்தைப் பறிகொடுத்துவிட்டு வந்து இங்கு முறையிடுகிறார் நாம் சீக்கிரமாக ஓடி அந்தக் கள்ளரைச் சம்ஹாரஞ்செய்து பிராமணன் சொத்தைத் திருப்பிக் கொடாமற்போனால் தருமத்துக்குக் கேடுவருகின்றது. அதற்காக ஆயுத மெடுக்கப்போனால் நிபந்தனத்திற்கு விரோதமாகையாலே ஸ்தலவாசம் பண்ண வேண்டி வருகிறது. ஆனாலும், தருமத்தைக் காப்பாற்ற வேண்டியதே முக்கியம் வனவாசம் நேரிட்டாலும் நேரிடட்டும். ஆனால், நாம் சிங்கார வனத்தின் வழியாகச் செல்லுவோமென்று வந்தான். அந்தயிடத்தில் தருமராஜனும் திரௌபதியும் சந்திரகாந்தக் கன்மேடையிற் சரசசல்லாபமா யிருக்கக்கண்டு அரிகரி யென்று காதைமூடி, அண்ணனைப் பணிந்து சென்று, அவசரமாய் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு வந்து, ஓய் பிராமணா! சீக்கிரம் வாரும் அந்தத் திருடர் போனவழி பாரும் தூரமாக ஓடிப்போகிறதற்கு முன்னமே அவர்களைப்போய் பிடிப்போம் என்று தேரின்மேலேறி, அந்தப் பிராமணனையுங் கூடவைத்துக்கொண்டு அவன் காட்டுகிற வழியே போய்த் திருடர்களைக் கண்டுபிடித்து, வில்லையெடுத்து நாணேற்றிக் கூர்மையாகிய அம்புகள் அநேகந்தொடுத்து அவர்கள்மேற் பிரயோகித்து, அவர்களை யெல்லாம் கைவேறு கால்வேறு தலைவேறாகத் துண்டந்துண்டமாய்

ஒரு நிமிஷத்துக்குள்ளே அறுத்துத்தள்ளி நாசம்பண்ணிப் பசுமாடுகளையெல்லாந் திருப்பிக்கொடுத்து, அவ்ரை வீட்டிற் கொண்டு வந்து விடுத்துக் கும்பிட்டு அவரிடத்தில் ஆசீர்வாதம் பெற்று இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்தான்.

பொழுது விடிந்தவுடன் அர்ச்சுனனானவன் தன் மூத்த தமயனாரிடத்துக்கு வந்து தெண்டனிட்டு, நடந்த செய்தியைச்சொல்லி அண்ணா! தேவரீர் திரௌபதியோடு வார்த்தையாடிக்கொண் டிருக்கும்போது நான் பார்த்தபடியால் நாரதர் ஏற்படுத்திய நிபந்தனையின்படி நான் தீர்த்தயாத்திரை போகவேண்டியதல்லவா? ஆகையால், அதற்கு விடைகொடுக்கவேண்டும் என்று கேட்க, தருமராஜன் தம்பியை விட்டுப்பிரிய மனமில்லாமல் தழைத்த மனத்தோடு அவ் வருச்சுனனைத் தழுவி யணைத்து, ஓ என் அருமைத் தம்பி! என் வார்த்தையிலே நம்பிக்கை வைத்துக்கேள் நீ நானிருக்கும் இடத்திற்கு வந்ததினாலே என் மனதிற் கொஞ்சமும் விகற்பமில்லை. அது எனக்கிஷ்டந்தான். நீ குழந்தைக்குச் சமானமாகையால் இப்படி செய்ததினாலே தோஷம் இல்லை. நான் நீயிருக்குமிடத்திற்கு வந்தால் அது மாத்திரம் குற்றம். மேலும், நீ வேணுமென்று வந்தவனல்ல. பிராமண காரியமாய் வந்தாய் ஆபத்துக்குப் பாபமில்லை. ஆகையால் நான் சொல்லுவதை நம்பி நீ யாத்திரை போகாமலிரு இதனாலே உனக்குத் தருமத்தாட்சிவராதென்றுசொல்ல,அர்ச்சுனன் அண்ணா! சகலமுந் தெரிந்தவராயிருந்தும் நீர் என்னிடத்தில் அன்பினாலே இப்படி சொல்லுகிறீரே தவிர வேறில்லை. நானோ கபடமாக எந்தத் தருமத்தையும் அனுஷ்டிக்கக் கூடாதென்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனதால் யாத்திரை போவதற்கஞ்சி ஏதாவதொரு சமாதானஞ்சொல்லி தருமத்துக்கு விரோதந் தேடமாட்டேன் மெய்யாகவே இவ் வாயுதத்தின்பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேனென்றான். அப்பால் தருமராஜன் மன வருத்தத்தோடு விடைகொடுக்கப் பெற்ற அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை விரதத்திற்குரிய வேஷத்தை யடைந்து புறப்பட்டான். இப்படி புறப்பட்டபோது அவனுடன் கூடச் சகல வேதங்கள் தெரிந்த பிராமணர்களும் சாஸ்திரிகளும் வித்துவான்களும் வேதாந்த யோகிகளும்புராணீகர்களும்வந்து பொருந்த, அர்ச்சுனனானவன் அவர்களோடு கூடிக்கொண்டு வெகு சந்தோஷமாய் அனேகம் புண்ணிய தீர்த்தங்களுக்குப் போய் காசியென்னுந் தலத்தில் மகா பரிசுத்தமாகிய கங்கா நதியினிடத்திற்கு வந்தான்.

### அர்ச்சுனன் நாகக்கன்னியை மணத்தல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அர்ச்சுனனோடு வந்த சகலமான பிராமணர்களும் அந்தக் கங்கா நதியில்வந்து ஸ்நானஞ் செய்து பரிசுத்தவான்களாய் அக்கினி வளர்த்தி ஓமஞ்செய்துக்கொண் டிருக்க, அர்ச்சுனனும் சங்கற்பமுதலிய தர்ப்பணங்கள் பண்ணி ஓமஞ் செய்வதற்காக கரையேறவேண்டுமென்றிருக்குமளவில், அந்தச் சலத்துக்குள்ளே விளையாடிக்கொண் டிருந்த உலூபி யென்கிற நாகக்கன்னியானவள் அந்த அர்ச்சுனனுடைய ரூபத்துக்கு மோகித்து அவனைப் பாதாளலோகத்திற்குக் கொண்டுபோய்விட்டாள். இவ்விதமாக அர்ச்சுனனானவன் நாகராஜன் மகளாலே கொண்டுபோய்ப் பாதாளலோகத்திற் கவுரவியன் என்கிற நாகராஜனுடைய மாளிகையில் விடப்பட்டு அவ்விடத்தில் ஓமத்துக் குதவும்படியான அக்கினி வளர்த்தி வைத்திருப்பதைக்கண்டு மனதிற் கொஞ்சமேனும் சங்கைப்படாமல் ஓமகாரியத்தை முடித்து, அக்கினிபகவானுக்குச் சந்தோஷம்வரச் செய்து, அந்த நாககன்னியைக் கண்டு சிரித்து, அடி பெண்ணே! நீ யார்? ஆ! என்ன சாகசமான காரியஞ் செய்தாய்? இவ்விடம் யாருடையதோ தெரியவில்லையே யென்று சொன்னான். அந்த உலூபியும் ஓ என்னிஷ்டமாகிய புருஷனே! கேளும் மகாராஜர்களுக்குள்ளாக ஐராவதன் என்கிற ஒரு பெரியவருண்டு. அவருடைய வமிசத்திற் கவுரவியரென்கிற ஒரு நாகராஜனிருக்கிறார். நான் அவருடைய மகள். உலூபி யென்கிற பெயருடையவள். நீர் கங்கையில் இறங்கியபோது உம்மைக்கண்ட ஆசையாலே காமவேதனை யடைந்தேன். நீரு மோகமுற்று இவண்ணடைந்தீர். உம்மை நம்பி விசுவாசித்திருக்கிற என்னிடத்தில் தயை வைத்து, என் மனதைச் சந்தோஷப்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். அர்ச்சுனன், பாக்கியமுடைய பெண்ணே! நீ சொன்ன பேச்சு சரிதான். ஆனால், என்னுடைய தமயனாராகிய தருமராஜன் பனிரண்டுமாதம் விரதமிருக்கும்படி எனக்கு கட்டளையிட்டிருக்கிறார் அது தவறக்கூடாது நீயோ என்னை விசுவாசித்தவ

ளானபடியினாலே உனக்கு மிஷ்டத்தைத் தர வேண்டியதாயிருக்கிறது நானோ பொய்யாய் நடக்கிறவனல்ல. என்னுடைய விரதத்துக்குங் குறைவுவாராம லிருக்கவேண்டும் உனதிஷ்டமும் நிறைவேறவேண்டும் இப்படி இரண்டுக்கும் விரோதமில்லாமல் எப்படி நடக்கலாம் சொல்லென்று கேட்க, அந்த நாககன்னிகையானவள் இதனைச் சொல்லுவதானாள்:

## இராவானுற்பவம்

ஓ பாண்டுகுமாரனே! நீர் இப்போது பூமி சஞ்சாரம்பண்ணுகிற செய்தி இன்னகாரணத்திற்காக வென்று எனக்கு நன்றாய்த் தெரியும் உமக்கு உம்முடைய தமயனார்விரதம் கட்டளையிட்டதும் தெரியும். இதெல்லாம் திரௌபதி நிமித்தம் நாரதமுனிவரின் முன்னிலையில் ஏற்பட்டதன்றோ? அந்தத் தருமத்துக்கு ஒரு குறைவும் வரமாட்டாது. ஏனென்றால், இதரந்தரவடைந்து சரணம்புகுகிற பேர்களைக் காப்பாற்றுகிறது எல்லாத் தருமங்களிலும் முதன்மையாகியதல்லவா? ஆகையால் மன்மதனாலே மிகவும் வேதனைப்படுகிற என்னைக் காப்பாற்றினால் உம்முடைய விரதமானது பூரணமேயாகின்றது. அன்றியும், ஒருவேளை உம்முடைய விரதத்துக்கு ஏதாகிலும் கொஞ்சம் குறைவுபாடு நேரிட்டிருந்தால், அதுவுங்கூட இந்தப் புண்ணியத்தினால் நீங்கும். சந்தேகமில்லை. ஆதலால், நீயே கதியென்று நம்பிய என்னைக் காப்பாற்றவேண்டும். இது சகல சாத்திரங்களை யறிந்தவர்களும் ஏற்றுக்கொள்ளத்தகுந்த தருமமாகும். அப்படியல்லாமல் நீர் உமது விரதத்தையே பெரிதாக எண்ணி என்னிஷ்டத்தை நிறைவேற்றாமற் போனால், உடனே மரணமடைவேன். உமக்குப் பெண் பாவம் வந்து நேரிடுமென்று நிச்சயமாய் நினையும். ஆகையால், ஒருவருக்கு உயிரைக் கொடுப்பதைக் காட்டிலும் உயர்ந்த தருமமுண்டோ? உமக்குத் தெரியாததோ? உம்மை சரணமென்று அடைந்தவர்களை அனேகம் ஏழைகளை யெல்லாம் காக்கின்றீர். என்னிடத்தில் இவ்வளவு கிருபை செய்யலாகாதோ? ஐயனே! உம்மிட நிமித்தம் காமனாலே மிகுந்த துன்பத்தை யனுபவிக்கிறேன். எவ்விதத்திலும் என்னைக் கைவிடாமற்காக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன் என்று மிகவும் பரிதாபமாக உலூபி என்பவள் சொல்லக் கேட்டு, அர்ச்சுனனும் இரங்கி, அவளுடைய இஷ்டத்தை நிறைவேற்றுகிறது பெரிதான புண்ணியமென்று நினைத்து அந்த நாககன்னிகையைப் பார்த்து அடி யென் கண்மணியே! உன்னிஷ்டப்படி நடக்கிறேன் மனதிற் சஞ்சலங் கொள்ளாதே என்று சொல்லவே அந்தப் பெண்ணும் வெகு சந்தோஷத்தையடைந்து, உடனே தனது தாய் தந்தையர்க்குச் சொல்லி, அவர்கள் அனுமதியின் பேரில் இவனுக்கு நல்ல போசனமிட்டு, சந்தனம்-புஷ்பம்-தாம்பூலம் முதலான போகத்துக்குரிய வஸ்துக்களை யெல்லாங் கொடுத்து உபசாரஞ் செய்து, நவரத்தின மயமாகிய தன் பள்ளியறையி லழைத்துக்கொண்டு போய் அன்றிராத்திரி யெல்லாம் மிகவும் அன்புடனே காமபோகங்களை யனுபவித்தாள். அர்ச்சுனனும் இராத்திரி எல்லாம் அந்த நாககன்னிகையோடு கூடி யிருந்து அவள் வயிற்றில் ஒரு பிள்ளையை யுண்டாக்கி விடியற்காலத்திலெழுந்து, தன்னைப் பிரிய மனமில்லாத அவளைக் கட்டி முத்தமிட்டுக்கொண்டு, பெண்ணே! நான் போய் வருகிறேன், அதயிரியப்படாதே என்று சொல்லி மெள்ளச் செலவு பெற்றுக்கொண்டு, அவளுடைய உதவியினாலே அவ்விடத்தினின்றுங் கங்கைக்கரை வந்து சேர்ந்தான். அவளும் அர்ச்சுனனுக்குச் சமானமாகிய திடவீரகாத்ர பராக்ரமமுள்ள இராவான் என்கிற ஒரு பிள்ளையைப் பெற்றாள்.

## அருச்சுனன் சித்திராங்கதையை மணத்தல்

அப்பால் அருச்சுனனானவன் தன்னோடு வந்த சகல பிராமணர்களுடன் கூடி, நாகலோகத்தில் நடந்த செய்தி யெல்லாம் அவர்களுக்குத் தெரிவித்து, அங்கிருந்து அவர்களையு மழைத்துக்கொண்டு இமயமலையினிடத்திற்கு வந்து, அவ்விடத்தில் அகஸ்திய வனமென்கிற ஒரு புண்ணிய ஸ்தலத்தைக் கண்டு தரிசித்து, கவிட்ட பருவதத்திற்குப் போய், பிருகுதுங்க மென்கிற புண்ணிய க்ஷேத்திரத்திற் பிராயச்சித்தஞ் செய்துகொண்டு அநேக கோதானங்கள் பண்ணி, யாகங்களுக்காக தட்சிணைகளுங் கொடுத்து, வெகு நிலங்களையும் பிராமணருக்குத் தானஞ்செய்து, இரணிய பிந்து என்கிற தீர்த்தத்திற்கு வந்து அதிலும் ஸ்நானம் பண்ணி, திருச்சாளக்கிராமம் முதலாகிய பரிசுத்த பர்வதங்களுக்குப் போய் அங்கங்குள்ள புண்ணியத் தலங்களை யெல்லாங் கண்டு தரிசனஞ் செய்து, கிழக்குத்திக்கிற் போய் உத்பலினியென்கிற நதியையும், நைமிசாரண்ணிய க்ஷேத்திரத்தையும், நந்

தை-அவரநந்தை - கவுசிகி என்கிற நதிகளை யும், கயையென்கிற புண்ணியத் தலத்தையும் அங்கிருக்கும் புண்ணிய மந்திரங்களையுங் கண்டு, அங்கங்கே ஸ்நானம்-தர்ப்பணம்-தானம் முதலாகிய சத்காரியங்களைச் செய்து, இன்னும் அந்தத் திக்கிலுள்ள அங்கம்-வங்கம்-கலிங்கம் முதலாகிய தேசங்களிற் போய் அவ்விடங்களிலிருக்கிற தீர்த்த க்ஷேத்திரங்களையுங் கண்டு தரிசனஞ் செய்து கலிங்கராச்சியத்தின் முகனையில் வருங்காலத்திலே அனேகம் பிராமணர்கள் தன்னிடத்தில் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார்கள்.

பின்பு அர்ச்சுனன் சில சகாயத்தோடுங் கூடிக் கலிங்கராச்சியத்தை விட்டுத் தெற்கே திரும்பி, பரிசுத்தமாயும் அழகாயுமிராநின்ற அனேக யிடங்களைப் பார்த்துக்கொண்டே கிருச்சிராகரமென்கிற தீர்த்தத்திற்கு வந்து ஸ்நானம்பண்ணி, சமுத்திரசமீபத்திலிருக்கிற மகேந்திர பர்வதத்தைப்பார்த்து, கோதாவரி கிருஷ்ணை முதலான நதிகளிலேயும் ஸ்நானஞ்செய்து, அங்கிருந்து சேஷாசலமென்று பேர்பெற்று விளங்காநின்ற திருப்பதி மலைக்குவந்து அதிலிருக்கும் சக்கிர தீர்த்தம்-வராக தீர்த்தம் முதலான தீர்த்தங்களில் மூழ்கி ஸ்ரீனிவாச மூர்த்தியாகிய திருவேங்கட முடையானைச் சேவித்து, அந்தப் பருவதத்தினின்று மிறங்கித் திருக்காளத்தி யென்கிற மகா ஸ்தலத்துக்கு வந்து, சுவர்னமுகி நதியில் நீராடித் திருக்காளத்தீசுவரனையுந் தரிசனம் பண்ணி, அத்தெலுங்கு நாட்டை விட்டுத் தொண்டை நாட்டுக்குத் திரும்பித் தணிகை சென்று, வள்ளி தெய்வானையுடன் விளங்காநின்ற சுப்பிரமணியக்கடவுளை தரிசித்துக்கொண்டு திருக்கடிகாசலத்துக்குப் போய் அங்கு எழுந்தருளியிருக்கும் நரசிங்க சுவாமியையும், நான்கு புயங்களோடு விளங்கும் அனுமாரையும் சேவித்து, பின்பு முத்தி க்ஷேத்திரமாகிய ஸ்ரீ காஞ்சீபுரமடைந்து, பஞ்சாட்சரப்பொருளாகிய ஏகாம்பர நாதரையும் அஷ்டாட்சரப் பொருளாய் விளங்கானின்ற வரதராசப்பெருமாளையுங் கண்டு தெண்டனிட்டு, விரிஞ்சிபுரம் போய்த் தரிசித்துக்கொண்டு வரும்போது நடுநாடு சென்று, திருவண்ணாமலையில் அடிமுடி காணவொண்ணுப் பெருஞ்சுடராகி விளங்கும் அருணாசலேசுவரர் பொற்பாதங்களில் தெண்டனிட்டுப் பூசித்து, திருக்கோவலூருக்குப்போய் அந்தகாசுரனைச் சங்காரஞ் செய்தருளிய வீரட்டேஸ்வரரையும் மூவடிகளால் உலகமளந்த முதல்வனாகிய திருவிக்கிரம கோபால மூர்த்தியையும் நமஸ்கரித்து, திருவெண்ணை நல்லூருக்குப்போய்ப் பெண்ணை என்கிற மகா நதியில் தீர்த்தமாடி அங்கிருக்கும் பரமேஸ்வரரையும் பணிந்து துதித்து, இந் நடுநாட்டிலும் இத்தொண்டை நாட்டிலும் இருக்கின்ற சகல புண்ணிய தீர்த்தங்களுமாடி, மற்றுமுள்ள ஸ்தலங்களையும் தரிசனஞ் செய்து, அங்கிருந்து சோழநாட்டிற் பிரவேசித்து, மிகவுஞ் சிறப்புள்ள தில்லையில் விளங்காநின்ற சிற்றம்பலவரையும் கோவிந்தராசரையும் பணிந்து, காவேரியில் தீர்த்தமாடி புனிதனானேனென்று மனமகிழ்ந்து, கும்பகோண முதலாகிய புண்ணியத் தலங்களைத் தரிசித்துக்கொண்டே வந்து, திருவானைக்காவலி லெழுந்தருளியிருக்கின்ற ஜம்புகேஸ்வரரைத் தரிசித்து, சிரகிரியையடைந்து தாயுமான தயாபர மூர்த்தியைத் திரிகரணங்களாலும் வந்தித்து அடுத்திருக்கின்ற ஸ்ரீரங்கம் சேர்ந்து சந்திரபுஷ்கரணியில் மூழ்கி, ஸ்ரீ ரங்கநாதனையுஞ் சேவித்து நெஞ்சுருகித் தோத்திரஞ் செய்து, பின்பு காவேரி சங்கமத்திற்குப்போய் தீர்த்தமாடி தானங்கள் புரிந்து அங்கிருந்து பாண்டி நாட்டுக்குப் போய் மதுரையென்று சொல்லுகிற விச்சாபுரமடைந்து அழகென்னும் பொருளே இவ்வடிவெடுத்து வந்த தென்னும்படியாகிய மீனாட்சியம்மனையும் அவ்வம்மனுக்கு ஏற்ற சொக்கலிங்க நாதரையுங் கும்பிட்டு, அங்கிருந்து மணலூர்ப் பட்டணத்துக்குப் போனான்.

அனேக சித்திர வாகனனென்கிற பாண்டியன் மகளாகிய சித்திராங்கதை யென்பவள் வேடிக்கையாய் வனத்தில் உலாவும்போது, அர்ச்சுனன் அவளைப் பார்த்து மையலாகி, அவள் இராஜகுமாரி யென்று கேட்டறிந்து அதற்காக அந்த இராஜனைக் காணவேண்டுமென்று கருத்துகொண்டு, தான் வந்திருக்கிற செய்தியை அந்தச் சித்திரவாகன மகாராசாவுக்குத் தெரிவிக்க, அவனும் தகுந்த மரியாதையுடனே எதிர்கொண்டுவர, அர்ச்சுனன் அவ்வரசனுடனே யரண்மனைக்குப்போனான். அவ்விடத்தில் அந்த ராசாவானவன் அர்ச்சுனனுக்குச் சகல உபசாரங்களும் பண்ணி யோக க்ஷேமங் கேட்க, இவனும் தன் யோக க்ஷேமங்களைச் சொல்லி அவனுடைய யோக க்ஷேமங்களையும் கேட்டானவுடனே தனக்கிருக்

குங் கருத்தை அவனுக்கு அறிவித்தான். அதுகேட்ட அந்தப் பாண்டியராசனானவன் அர்ச்சுனனைப் பார்த்து, ஓய் இராசகுமாரனே! கேளும்: எங்கள் குலத்தில் ஆதியிற் பிரபாகரனென்கிற ஒரு ராசாயிருந்தார். அவருக்குப் பிள்ளையில்லாமற் போகவே அவர் பரமசிவனைக் குறித்து மிகுந்த தவஞ்செய்ய, அச்சிவன் பிரசன்னராகி, ஓய் ராசனே! நீ சந்தானத்திற்காகத் தவஞ் செய்கிறா யன்றோ? ஆகையால், உனக்கு ஒரு குமாரன் உண்டாவான். அப்படியே உன் குலத்திலே முறையே ஒவ்வொரு பிள்ளைகளே உண்டாக்கிக்கொண்டு வருவார்கள் என்று அனுக்கிரகஞ் செய்தார். அப்படியே எங்கள் குலத்தில் ஒவ்வொரு சந்ததியே உண்டாக்கிக்கொண்டு வந்தது. அந்தப்படி எனக்கு மிப்போது இந்தப் பெண் ஒன்றுதான் பிறந்திருக்கிறது. ஆகையால், இந்தப் பெண்ணையே நான் பிள்ளையாக நினைத்து இவளைப் புத்திரிகாபுத்திர விதியின்படி யோக்கியனாக ஒருவனுக்குக் கொடுத்து, அவள் வயிற்றில் முதற்பிறக்கும் பிள்ளையை என் சந்ததிக்கு உரியவனாக்க வேண்டுமென்று நினைத்திருக்கிறேன். ஆனபடியினாலே இந்தப்படி உமக்குச் சம்மதியானால் என் மகளை விவாகஞ் செய்துகொள்ளுமென்று சொல்லக் கேட்டு அர்ச்சுனன் அப்படியே சம்மதப்பட்டான். அந்தச் சித்திரவாகனன் நல்ல தினத்தில் முகூர்த்தங்கொண்டு மிகவுஞ் சிறப்பாய்த் தன் மகளை அவனுக்கு விவாகஞ் செய்வித்தான். இவ்விதமாய் மகா சவுந்தரிய முடையவளாயும் பதின்மூன்றும் வயதுடையவளாயிராநின்ற அந்த சித்திராங்கதையை விவாகஞ்செய்து, அவ்விடத்திலேயே மூன்றுமாதம் வரைக்கும் அவளுடனே சகலவித போகங்களையு மனுபவித்துக்கொண் டிருந்த பின்பு அவ்விருட்சத்திற்குச் சமீபமாகிய தீர்த்தங்களுக்குப் போய் வருவோமென்று நினைத்து, உடனே அச்சித்திராங்கதையின் அந்தப்புரம் விட்டுப் புறப்பட்டான் விஜயகாண்டீப னென்னும் அருச்சுனன்.

## நாரீதீர்த்த வரலாறு

அங்கிருந்து புறப்பட்ட அர்ச்சுனனானவன் தென் சமுத்திரத்தைச் சேர்ந்த தீர்த்தங்களையெல்லாம் பார்க்க நினைத்து அனேக தீர்த்தங்களுக்குப்போய் நீராடி, மற்றோரிடத்தில் வெவ்வேறு ஐந்து தீர்த்தங்களிருக்கப் பார்த்து அவைகள் நெடுநாளாய் ஜனங்களாற் பரிட்சிக்கப்படாமையால் மிகவும் அழகாய் விளங்கிக்கொண் டிருப்பதையுங்கண்டு, அவைகளில் ஸ்நானம் பண்ணவேண்டுமென்று உத்தேசித்திருக்க அங்கிருக்குந் தபசிகளெல்லாம் அர்ச்சுனனைப் பார்த்து, ஓய் மஹாராஜனே! இந்த தீர்த்தங்களி லிறங்கவேண்டாமென்று சொன்னார்கள். அதுகேட்ட அருச்சுனனானவன் கைகூப்பிக்கொண்டு, அந்த தபசிகளைப் பார்த்து, சுவாமிகளே! ஏன் இதுகளி லிறங்கக் கூடாது? இதுகளினுடைய விபரம் யெனக்குத் தயை செய்து சொல்லவேண்டுமென்று கேட்க, அந்தத் தபசிகளெல்லோரும் ஓய் பாண்டு குமாரனே! இந்தத் தீர்த்தங்கள் பரிசுத்தங்க ளல்லவென்று நினைக்கவேண்டாம். சுருக்கமாகச் சொல்லுகிறோம் கேளும், இதோ யிருக்கிற தீர்த்தத்திற்கு அகஸ்திய தீர்த்தமென்று பெயர் இதிலே முழுகினால் மஹாபாதகங்களெல்லாந் தீரும். இது சவுபத்திர தீர்த்தமென்று பேர்பெற்றுச் சகல க்ஷேமங்களையுங் கொடுக்கத் திறமையுடையது இது பவுலோமமென்று சொல்லப்பட்டது இதனாலே தீராத பாவமொன்றுமில்லை. இது காரந்தம் தீர்த்தமென்று பெயருடையது: இதில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்கு மனதிலிருக்குங் கவலை யெல்லாந் தீரும். இதைப் பாரத்துவாச தீர்த்தமென்று சொல்லுகிறார்கள் இதில் நீராடுவதினால் அசுவமேதயாகஞ் செய்த பலன் கிடைக்கும். இவையெல்லாம் மகா பரிசுத்தங்கள்தான் இவைகளில் மிகவும் பொல்லாத முதலைகளிருக்கின்றன. அவைகள் நீரிலிறங்கிய அனேக முனிவர்களைப் பிடித்துக்கொண்டு போய்விட்டதுகள். ஆனதுபற்றி யாவரும் இவைகளில் ஸ்நானஞ் செய்கிறதை விட்டுவிட்டார்கள். அதனாற்றான் உம்மையும் அதிலிறங்க வேண்டாமென்று சொன்னோமென்ன, அர்ச்சுனன் அதுகேட்டு, ஆனாலும் இதில் ஸ்நானம் பண்ணுகிறேனென்று சொல்லினான். பெரியோர்கள் யாவரும் வேண்டாம் வேண்டாமென்று தடைசெய்தும்மிகுந்த வீரமும் தீரமுமுடையவனாகையாலே அந்தத் தடையை லக்ஷியஞ் செய்யாமற் போய் சவுபத்திரமென்கிற தீர்த்தத்திலிறங்கி ஸ்நானஞ் செய்யுமளவில் அதிலிருக்கும் முதலையானது இவன் கால்களைக் கவ்விக்கொண்டது. பின்பு அர்ச்சுனன் தன் கால்களைக் கவ்விக்கொண்டு ஜலத்திலேயே இழுக்கும் முயற்சியையுடைய அந்த முதலையைத் தன் வலிமையினாலே தூக்கித்

கொண்டு எழும்பிக் கரையிற் குதிக்கும்போது, அந்த நீர் மிருகமானது தன் ரூபம் நீங்கிப் பல ஆபரண அலங்காரத்தோடும் அழகிய வடிவமுடைய ஓர் பெண்ணாய் நின்றது. அது கண்ட அவ்வரசன் ஆச்சரியப்பட்டு, அன்புடனே அந்த பெண்ணைப் பார்த்து, அடி பெண்ணே! நீயார்? இப்படிப்பட்ட துஷ்ட ஜெந்துவாகப் பிறக்கும்படி என்ன பாதகஞ் செய்தாய்? உன் வரலாற்றைச் சொல்லென்று கேட்க, அந்தப் பெண்ணுஞ் சொல்லத் தொடங்கினாள்.

கேளுமையா மஹானுபாவா! நான் ஒரு தெய்வப்பெண்., தேவாரணியத்தி லிருக்கிற வள் வந்தை யென்று பெயருடையவள். எனக்கு நாலு தோழியர்களுண்டு. அவர்களோடு கூட ஒருநாள் நான் தேவேந்திரனுடைய உற்பாவனத்துக்குப் போனேன். அவ்விடத்தில் ஒரு பிராமண மகானுபாவர் சூரியன் போல் தேசோராசியாய் விளங்கி, அந்த உத்தியான வனமெல்லாம் வெயிற்பட்டதுபோற் பிரகாசிக்கும்படி நின்றுகொண்டு, தாமொருவராய் மகா நியமத்தோடு கீதவேத மோதிக் கொண் டிருந்தார். அப்படிப்பட்டவரையும் அவருடைய ரூபத்தையும், பருவத்தையும் நான் கண்டு, காதல் கொண்டு, நானும் தோழிகளாகிய சவுரபேயி - சமீசி - வந்தை - இல்லிதை என்கிறவர்களும் அவரை மயக்கிக் கைவசப்படுத்த வேண்டுமென்று அவரருகிற் போய் பாடுகிறதும் ஆடுகிறதும் சிரிக்கிறதும் பரியாசஞ் செய்கிறதும், கண்ணைக் காட்டுகிறதும், தனத்தைக் காட்டுகிறதுமாகப் பல வித விலாசங்களோடு சூழ்ந்து உலாவிக் கொண்டிருந்தோம். அவர் கிஞ்சித்தாகிலும் மனங் கலங்காமல் தனது நெறியிலேயே இருந்து, தான் புரியுந் தவத்திற்கு இடையூறு செய்யு மெங்களைப் பார்த்து கோபங்கொண்டு ஓ பாவிப்பெண்காள்! நீங்கள் என் விஷயத்தில் செய்யுங் கெட்ட தொழில்களாலே நூறு வருஷகாலம் முதலைகளாய்ச் சலத்தினுள்ளே வாசஞ்செய்யக் கடவீர்களென்று சபித்தார். அச்சாபங் கேட்ட மாத்திரத்திலே நாங்களெல்லாம் இடிமுழக்கங் கேட்ட பேடுகன் போல் நடுநடுங்கித் துயரமுற்று, அந்த மகானுபாவருடையபாதங்களில்விழுந்து, சுவாமி! நாங்க ளறியாத பிள்ளைகள். தேவரீருடைய மகிமை தெரியாமல் ரூபத்தையும் பருவத்தையுங் கண்டு, காமனால் துளைக்கப்பட்ட தேகமுடையவர்களாய் அயோக்கியமான காரியங்களைச் செய்தோம் ஆனாலும் சிறியோர் செய்த பிழை பொறுப்பது பெரியோர் கடமை யல்லவோ? அன்றியும், பெண்வதை ஆகாதென்பது தருமநூல்கற்ற தேவரீருக்குந் தெரியுமே: இப்படியிருக்க, எங்களுக்கு இவ்விதச் சாபங் கொடுக்கத் தருமா? எங்களையனே! இதைக் காட்டிலும் எங்களைக் கொலை செய்யும் விதம் வேறில்லை. ஆகையால், எங்களைக் காத்தருள வேண்டும்? அல்லாமலும் பிராமணனானவன் யாவரிடத்திலும் தயையாயிருக்க வேண்டியவனல்லவோ? ஓ மஹானுபாவா! அந்த நிலையை எங்களுக்காக விடாமலிருக்க வேண்டும். தேவரீர் திருவடித் தாமரைகளல்லாமல் எளியேங்களுக்கு வேறு தஞ்சமில்லாமையாற் பெரியோர்களுடைய ஒழுக்கத்தின்படி சரணமடைந்த வெங்களைக் காப்பாற்றி யருளவேண்டுமென்று கண்களினின்றும் தாரைதாரையாய் நீர்பெருகக் கோவென்று கதறி வேண்டிக் கொள்ளுமளவில் அவர் மனமிறங்கி பெண்களே! பயப்படாதீர்கள். நான் நூறு வருஷகாலமென்று சொன்னதில் நூறு என்கிற சொல் அளவற்ற தொகையால் இச்சாபம் சீக்கிரத்திலேயே உங்களுக்குத் தீர்ந்துபோய் விடும். அது தீருவது எப்போதென்றால், நீங்கள் முதலைகளாய் நீரிலிருந்து அதிலிறங்குகிற பேர்களையெல்லாம் பிடித்துத் துன்பப்படுத்துமளவில் ஒருவன் உங்களை நீரிலிருந்து கரையில் விடுவான். அப்போது இந்தச் சாபம் தீரும். நான் ஒருபோதும் பொய் பேசாதவனாகையால் முன் சொன்னதும் தவராது பின் சொன்னதும் பிசகாது நீங்கள் வாசமாயிருக்குந் தீர்த்தங்களுக்கு நாரி தீர்த்தங்களென்று இதுமுதற் பேருண்டாகும் போங்களென்று சொன்னார்.

அதுகேட்ட நாங்கள் அவரைப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து, அப்பால் மிகுந்த துக்கத்தோடு வந்து எவ்விடம்போயிருந்தால் நமது சாபந்தீர்க்கும் புருஷனைச் சீக்கிரத்திற் காணலாமென்று சிந்தித்துக் கொண்டிருந்தோம். அந்த வேளையில் நாரத மஹாமுனிவர் அங்கே எழுந்தருளினார். அவரைக் கண்டமாத்திரத்திலே நாங்கள் கொஞ்சம் சந்தோஷமடைந்து, அவர் பாதங்களில் தெண்டனிட்டு வெட்கத்தினால் தலை வணங்கி நின்றோம். அம் மஹாமுனிவர் பகற்காலத்து விளக்கொளிபோல் மழுங்கியிருக்கும்

எங்கள் முகங்களைப் பார்த்து, உங்களுக்குத் துக்கம் வந்த காரண மென்னவென்று கேட்டார். நாங்களும் நடந்த செய்தியை விண்ணப்பஞ் செய்தோம். அதைக் கேட்ட அவர் தென் சமுத்திரக் கரையில் ஐந்து தீர்த்தங்களிருக்கின்றன. அவைகளில் நீங்களிருந்தாற் சீக்கிரத்திற் பாண்டு மஹாராஜனுடைய குமாரனாகிய அர்ச்சுனன் என்கிற ஒரு மஹா புருஷன் தீர்த்தயாத்திரையாய் அவ்விடம் வந்து, உங்களை இந்தச் சாபத்தினின்றும் நீக்கிவிடுவான் என்று சொல்லி மறைந்து போய்விட்டார். அதுகேட்டு இவ்விடம் வந்த நாங்களும் ஒரு முகூர்த்தத்துக்குள்ளாகவே அந்தக் கோரரூபமடைந்து இவைகளிற் பிரவேசித்தோம். ஓய் மஹா புருஷனே! அப் பெரியோர்களுடைய வாக்கின்படி நான் உம்மாலே இந்த நரகத்தினின்றும் விடுபட்டேன். என் தோழிகளாகிய மற்றை நாலுபேர்களும் மற்ற மடுக்களில் விழுந்து கிடக்கிறார்கள். தயை செய்து நீர் அவர்களையும் புனிதராக்க வேண்டும் என்று சொல்ல, அச் சொல்லைக் கேட்ட அந்தத் தேவேந்திரகுமாரன் முன்போலவே மற்றைத் தீர்த்தங்களிலும் முழுகிக் கால்களைக் கவ்விக்கொள்ளும் முதலைகளைத் தூக்கிக்கொண்டு எழும்பிக் கரையிற் குதித்த மாத்திரத்திலே அவர்களும் முதலைரூபம்விட்டு முன்போலவே தெய்வப்பெண்களாகி மிகவும் உபசாரத்தோடு துதிக்க, அர்ச்சுனன் அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டான். பின்பு அங்கிருந்த தவசிகளெல்லாம் அர்ச்சுனனை மிகவுங் கொண்டாடி, அவைகளை நாரீ தீர்த்தமென்று வழங்கவைத்து, அன்றுமுதல் அத்தீர்த்தங்களை ஸ்நான தர்ப்பணங்களுக்கு உரிய பெருமையாகச் செய்துவந்தார்.

## பப்புருவாகனன் உற்பவம்

இவ்விதமாக அந்த அர்ச்சுனனுவன் தக்ஷணசமுத்திரக்கரையி லிருக்குந் தீர்த்தங்களை யெல்லாம் கண்டுகொண்டு கன்னியாகுமரியாடி, தன் காதலியாகிய சித்திராங்கதையைப் பார்க்கவேண்டு மென்று மறுபடி மணலூர்ப் புரத்திற்கு வந்தான். அப்போது சித்திராங்கதை பப்புருவாகனனென்று பேர்பெற்ற குமாரனைப் பெற்றிருந்தாள். அர்ச்சுனனுனவன் அப்பிள்ளையைப் பார்த்துச் சந்தோஷித்து, தன் மாமனாராகிய சித்திரவாகன மஹாராஜாவைப் பார்த்து, ஐயா மஹாராஜனே! என் வாக்குத்தத்தத்தின்படி இதோ இப்பிள்ளையை வாங்கிக்கொள்ளுமென்று தன் மகனை அந்த ராஜாவுக்குக் கொடுத்து, தன் மனைவியாகிய சித்திராங்கதையைப் பார்த்து, என் பொற்கொடியே! நான் ஊருக்குப்போகச் செலவு கொடுக்கவேண்டும். நீ இங்கேயே குழந்தையை வளர்த்துக்கொண்டிரு. நான் போய்ச் சேர்ந்தவுடனே சகல சுப சந்தோஷங்களும் நடக்கும் அதற்கு உன் தகப்பனார் சகல பரிவாரங்களோடு எங்கள் பட்டணத்துக்கு வருவார். அப்போது நீயும் கூடவந்து எங்கள் தாயாகிய குந்தியையும், எனது அண்ணன்மாராகிய தருமபுத்திரர் வீமசேனன் என்பவர்களையும், என் தம்பிமாராகிய நகுல சகாதேவர்களையும், மற்றும் என்னுடைய சகலவித பந்துக்களையும் கண்டு, அவரவர்களுக்குத் தகுந்தபடி நடந்துகொண்டு, அவர்களெல்லாம் மிகவுங் கொண்டாடச் சகல பாக்கியங்களையும் பெற்று வாழ்ந்துகொண் டிருக்கலாம். குழந்தையைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்ளுக வென்று சொல்லி விடை கேட்டான்.

அது கேட்ட சித்திராங்கதையானவள் தேகமெலாந் துவண்டு, கண்ணீர் மல்கப் பெருமூச்செறிந்து, தலையை வணங்கித் தரையைக் கால்விரலாலே கீறிக்கொண்டு நிற்க, அவளைப் பார்த்த அர்ச்சுனனுனவன் போவதற்குக் கால் எழாமல் மனதில் வருத்தமடைந்து, போக வேண்டியது ஆவசியக மானதாலே மீண்டும் சித்திராங்கதையைப் பார்த்து, என் பிராண நாயகியே! நீ வியசனப்படாதே ஐயோ! வீணுயுன் கண்கள் கலங்கிப்போகின்றன உன் முகத் தாமரை வாடுகின்றது பெருமூச்சுப்பட்டுக் கொங்கைகள் கன்றிப்போகின்றன வேண்டாம் குழந்தையின் முகத்தைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிரு. சிந்தைப் படாதே மிகவும் விரைவில் உன்னைப் பார்ப்பேனென்று சொல்லித் தனது உத்தரீயத்தினால் அவள் கண்ணீர்களைத் துடைத்து, முகத்தைக்கட்டி முத்தமிட்டு குழந்தையையும் பார்த்தெடுத்து முத்தமிட்டு உச்சி மோர்ந்து, வருத்தத்தின்மேல் அவளிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, தன் மாமனார் முதலாகிய பேர்களையும் கும்பிட்டு விடை பெற்று, அப்பாண்டியன் மகளைவிட்டு நீங்க மாட்டாத தனது ஐம்பொறிகளுக்குஞ் சமாதானஞ்சொல்லி, அந்த நகரியைவிட்டுப் புறப்பட்டு இராமேச்சுர மென்கிற ஸ்தலத்துக்குப் போய், சகல பாவங்களையும் பஞ்சுப்பொதிகளை நெருப்புப்பொறி எரிப்பதுபோல் எரிக்

கத் தகுந்த மகத்துவமுள்ள சேதுவைக்கண்டு ஸ்நானஞ் செய்து, அங்கே கோதான பூதான கன்னிகாதான முதலாகிய சோடச மகாதானங் களுஞ் செய்து, தென் கடற்க்ரை வழியாகவே போய் மலைநாடுசென்று, அங்கு அனந்தபத்ம நாப சுவாமியை தரிசித்து, பொதியை மாமலை யின்மேலேறித் தவங்களாலாகு மகிமைகளுக் கெல்லா மிருப்பிடமாகிய அகத்தியமகாமுனிவ ரைத் தரிசித்து, அவ்விடம்விட்டுச் சகியமென் கிற மலைமேலேறி, அவ்விடத்துப் புண்ணிய தீர்த்தங்களாடி மேற்கடலோரமாய் உடுப்பை சுப்பிரமணிய மென்கிற ஸ்தலத்திநுக்குப் போய்த் தொழுது, மற்றும் புண்ணிய தீர்த்த க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு, கோகர் ணம் என்கிற மகா சிவக்ஷேத்திரஞ் சென்று, அவ்விடத்து தீர்த்தத்தில் ஸ்நானபான ஜப தப தர்ப்பணாதி புண்ணிய காரியங்களை முடித் துப், பார்வதி பரமசிவ னிருவரையும் தரிச னம் பண்ணி, பிரபாசமென்கிற தீர்த்தத்துக்கு மகா சந்தோஷத்துடனே பிரயாணமாகிப் போனான்.

## அர்ச்சுனனுக்குச் சுபத்திரைக் காட்சி

இவ்வாறாய் மேற்கட லருகிலிருக்கின்ற பல தீர்த்தக்ஷேத்திரங்களை யெல்லாம் கண்டு பணிந்து, முறையே பிரகாசதீர்த்தம் வந்து சேர்ந்து, இதில் ஸ்நானபானாதிகளைச் செய்து பிராமணரை யெல்லாம் பூசித்தனுப்பிவிட்டு அன்று இராத்திரி படுத்திருக்குங்கால் தனக்கு யாதவகுலத்தானாகிய கதனென்கிறவன் முன் னொருக்கால் சுபத்திரை யென்பவளுடைய ரூபலாவண்ய முதலானவைகளைக் குறித்துச் சொன்ன கதைகளை எல்லாம் நினைத்து நினை த்து, அவளைப் பார்க்கவேண்டு மென்று கருத் துட்கொண்டு, அப்படி செய்வதற்கு ஏது உபாயமென்று யோசித்து, காலத்திற்கு தகுந்த கோலமாய்ச் சந்நியாசி வேஷம் போட்டுக் கொண்டு யாதவர்கட்கும் அவர்களைச் சேர்ந் தவர்கட்குந் தெரியாமற் பிக்ஷை செய்து போவோமாகில் எவ்விதத்திலாகிலும் சுபத் திரையைக் காணலாம். கண்டபின்பு கிருஷ்ண னுடைய கருத்தை யறிந்து அவர் சகாயத்தி னாற் செய்ய வேண்டியதைச் செய்யலாமென்று மனதில் நிச்சயித்து, திரிதண்டமும் காஷாய மும் கமண்டலமும் ஜெபமாலையுமாகச் சந்நி யாசி வேஷம் தரித்து யோகிபோ லானான். இப்படி யிருக்குங்காலத்திலே மேகங்கள் ஆகாயமெல்லாம் படர்ந்து, ஸ்ரீகிருஷ்ணன் திருமேனிபோற் கறுத்து, அவர் கையில் விள ங்கும் சக்கரத்தின் ஒளிபோல மின்னி, அவ ருடைய சங்கத்தொனிபோற் கிடுகிடுவென் றிடிந்து, அவருடைய சாரங்கமென்கிற வில்லி லிருந்து, புறப்படுகிற பாணங்களின் கூட்டம் போல் மழை தூறவும், அம்மழையால் அவ ருடைய கிருபையென்னும் பேரருட்பிரவாகம் போலப் பூமியெங்கும் ஜலப்பிரவாக முண் டாகி நிறைந்தோடவும், அர்ச்சுனனுடைய மனது காமத்திலமிழ்ந்ததுபோலத் தாமரைக ளெல்லாம் நீரிலமிழ்ந்து போகவும், முன்னம் அழகினாலே தன்னை வெற்றிகொண்ட யர்ச் சுனனைக் காமனிப்போது சுபத்திரை யென்கிற ஒரு அஸ்திரத்தினாலே வெற்றிகொள்ளப் போகிறானென்கிற மகிட்சியினால் அவன்கொடி யாகிய மீன்கள் துள்ளவும், தங்கட்கினை யாகிய சுபத்திராதேவிக்கு அர்ச்சுனன் வாய்க் கப்போகிறா னென்கிற சந்தோஷத்தினாலே மயில்களெல்லாம் நர்த்தனஞ் செய்யும் செந் தாழைகளும் குடமல்லிகைகளும் மலர்ந்து வண்டுகளுக்குவிருந்திடவும், ஆறுகளெல்லாம் பூரண வெள்ளங்களுடனே கூடிச் சமுத்திர நீர்களைத் தங்கள் வடிவமாக்கவும், நாயகரும் நாயகிகளும் அகிற்புகைகமழும் பள்ளியுறை களிற் கட்டியணைந்து படுத்திருக்கவும், பயிர்க ளெல்லாஞ் சந்தோஷத்துடனே கதிர்களின் பாரத்தினால் முடிவளைந்து தங்கள் சீவனைக் காப்பாற்றும் மேகங்களை வணங்கி கும்பிடுவது போலிருக்கவும், இவ்விதமாக மாரிகாலமானது விளங்குமளவில், சந்நியாசி வேடம் பூண்ட அர்ச்சுனனவன் சுபத்திரையை நினைத்து மனதிற் பாவித்துக்கொண் டிருக்கையாலே பொறிகள் வேறுவழி செல்ல மாட்டாமை யானாலும், தேகம் செய்கையற் றிருப்பதி னும், தானெடுத்த வேடத்துக்குத் தக்கபடி யமைத்து, ஓர் ஆலமரத்தின் பொந்தில் உட் கார்ந்து கண்ணனை நினைத்தான். இவன் நினை த்தமாத்திரத்திலே அந்தக் கண்ணனும் சத் திய பாமையோடு மஞ்சத்தின்மீதிற் பள்ளி கொண்டிருந்தவர் திடீலென்றெழுந்து, அந் தச் சத்தியபாமை காணும்படியாக விழுந்து விழுந்து சிரித்தார். சத்தியபாமையானவள் இதென்ன காரணமாகச் சிரிக்கிறீர்? இதற்குக் காரணம் சொல்லும்படி விருப்பமுற்றிருக் கிறே னென்றாள். கண்ணன் மறுபடியுஞ் சந் தோஷத்தினாலே அடிக்கடி சிரித்து சத்திய பாமையைப் பார்த்து, ஓ பெண்ணரசே! உனக் குச் சொல்லத்தகாதது மிருக்கிறதோ? என்

மனது அறியாதெதுவோ அதுதான் நீ யறியக்கூடாதது. ஆகையால் நான் சிரித்ததற்கு காரணஞ் சொல்கிறேன் கேள்: என்னுடைய நல்லத்தையின் மகனும் வீமசேனன் தம்பியுமாகிய அர்ச்சுனன் திரௌபதியின் நிமித்தமாகத் தீர்த்த யாத்திரை புறப்பட்டு வந்தான். அப்படி வந்தவன் அளவற்ற தீர்த்தங்களாடி திவ்விய க்ஷேத்திரங்களையும் தரிசித்து பிரபாச தீர்த்தம் வந்து சேர்ந்தபோது நமது சுபத்திரையினழகை நினைத்து அவளை காண்பதற்காகச் சன்னியாசி வேடம்பூண்டு இந்தத் துவாரகை சமீபத்தில் ஓர் ஆலமரத்தின்கீழ் மழையில் நனைந்து மனவருத்த முற்று என்னை நினைக்கிறான். அதற்காகத்தான் சிரித்தேன். பெண்ணே! நீ உன்னண்ணனாகிய அர்ச்சுனனைப் பார்க்கவேண்டாமா? என்னுடன் கூடவா காண்பிக்கிறேனென்று சொல்லிச் சத்தியபாமாவை அழைத்துக்கொண்டு அவனிருக்கும் மரத்தினிடத்தில் வந்து, இதோ பார் சன்னியாசி வேடத்துடன் வருந்துகிறான் நம்முடைய அர்ச்சுனன் என்று அவளுக்கு காண்பித்தார்.

அந்த அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையாகப் பிரபாசமென்கிற விடத்திற்கு வந்திருக்கின்றானென்று முன்னமே சாரணர்கள் சொல்லக் கேட்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் ஒன்றுந் தெரியாதவர்போல் ஏதுக்கு நீ தீர்த்தயாத்திரை வந்ததென்று வினவ, அவனும் ஆதிமுதல் நடந்த சரித்திரங்களை எல்லாஞ்சொல்ல, இருவரும் சில நாழிகை வேடிக்கையாய் விளையாடிக்கொண்டிருந் தங்கிருந்து புறப்பட்டு மனோரம்மியமாகிய காடுகளும் பாறைகளும் அருவிகளும்மடுக்களும் பொருந்திப் பலவித மிருகங்கட்கும் பட்சிகட்கும் வாசஞ் செய்யுமிடமாய் விளங்காநின்ற ஐராவதமென்று பேர்பெற்ற பருவதத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலே முன்னமே ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினுடைய கட்டளைப்படிக்கு ஊழியக்காரர் ஓரிடத்தைச் செவ்வையாய் அலங்காரஞ்செய்து, வேண்டியபோஜன வஸ்துவை கொண்டுவந்து வைத்தார்கள். அவ் வுணவுகளையெல்லாம் அவ்விந்திர குமாரன் கண்ணனோடு கூடப் புசித்து, சிலநேரம் தங்களைக் காண வந்தவர்களாகிய அங்குள்ள கணிகையர்களாற் செய்யப்படும் ஆடல் பாடல்களைப் பார்த்திருந்து, பின்பவர்களை யனுப்பிவிட்டுத் திவ்வியமாகிய படுக்கையிற் சயனித்துக்கொண்டு தீர்த்த யாத்திரையிற் கண்ட மூர்த்தண்ய க்ஷேத்திரங்களுடைய சரித்திரங்களை யெல்லாஞ் சொல்லிக்கொண்டே யிருந்து நித்திரை போய்விட்டான்.

பிறகு விடியற்காலத்தில் யதுகுல மன்னருக்கு முழக்கும் வீணை வேணு முதலிய வாத்தியங்கள் கேட்டு எழுந்திருந்து நித்திய கர்மானுஷ்டானஞ் செய்துநிற்க, கண்ணன் அவனுக்கு காலங்களில் தகுந்த போசனங்கள் கொடுத்து வரும்படியாகச் சிலரை நியமித்து தாம் அர்ச்சுனனிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு, பொற் றகட்டினு லலங்கரிக்கப்பட்ட ரதத்தின்பேரிலேறி சத்தியபாமை சமேதராய் துவாரகை வந்துவிட்டார். அர்ச்சுனனும் கண்ண னுத்தரவின்படி அம் மலையிலேயே யிருந்தான். இப்படியிருக்க, அந்த ரைவதபருவதத்திலே வருஷந்தோறுஞ் செய்கிறபடியே யாதவர்களுக்கு ஒரு திருவிழா நேரிட்டது. அந்தத் திருவிழாவில் அந்த மலையைச் சுற்றிலும் அங்கங்கே செய்யப்பட்டிருக்கிற அழகான வீடுகளினாலேயும், கிளைகளுடன் கூடிய பெரிய மரங்கள்போல் வைத்திருக்கிற விளக்கு வரிசைகளினாலேயும் இன்னும் பல அலங்காரங்களினாலேயும் கோடி சூரியப் பிரகாசமாய் விளங்கும் அம்மலையிலே விருஷ்ணி-அந்தர்-போஜர் என்கிற பல பிரிவாயிராநின்ற அந்த யதுவமிசத்துக் குமாரர்க ளெல்லாம் மங்கள ஸ்நானஞ் செய்து, நல்ல ஆடை ஆபரணங்களைத் தரித்து, பிராமணர்களுக்குப் பல தானங்களும் வழங்கி, திவ்விய போஜனங்களைப் புசித்து சந்தன புஷ்ப தாம்பூல முதலானவைகளுடனே வேடிக்கையாய் வாகனங்களி லேறிக் கொண்டு அனேகம் பட்டணத்துச் சனங்களுடனே பல வாத்திய கோஷங்களோடும்-சங்கீதங்களோடும் - நாட்டியங்களோடும் - நான்கு புறங்களிலும் சுற்றிவரப் பலராமர் ரேவதி தேவியென்கிற தன் மனைவியுடனே மதுபானஞ் செய்து மதத்தினாற் கண்கள் சிவந்து சுழலமிடும்படி பலபேர்களோடு கூடியாடிவர, யதுவமிசத்து மகாராஜாவாகிய உக்கிரசேனன் என்கிறவரும் அனேக ஸ்திரீகளோடும் பாடுகிற பேர்களோடும் சூழ்ந்துவர, இன்னுமிப்படியே பிரத்தூய்மன் - சாம்னன் முதலாகிய பேரும் வேடிக்கையா யிருக்க, இவ்வாறாகக் கோலாஹலமா யிருக்குஞ் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் தாமும் செய்ய வேண்டிய தானம் முதலாகிய காரியங்களைச்

செய்து, அதில் ஓரிடத்திலிருக்கும் அர்ச்சுன சந்நியாசியைக் கண்டு, யாவரும் பார்க்கும்படியாய் அதி விசுவாச பயபக்தியுடன் நமஸ்காரம் பண்ணிக்கொண்டிருந்தார். அதைக்கண்ட எல்லாரும் விழுந்து கும்பிட்டார்கள்.

அக்காலத்தில் திருவிழாவுக்காக மிகவுஞ் சிங்காரித்துக்கொண்டு வந்த சுபத்திரையானவள் தோழிமார்களுடனே கூடி அந்த மலையிற் சஞ்சரிக்க, அதுகண்ட அர்ச்சுனனானவன் காமவிகார மடையவே, கிருஷ்ணன் அக்குறிப்பை யறிந்து, புன்சிரிப்போடும் அந்தத் திரிதண்ட சந்நியாசியைத் தனியே அழைத்துக்கொண்டு சென்று, காட்டிற் சஞ்சாரஞ் செய்யுந் தவசியாகிய உனது மனம் நாட்டிற் சமுசார முதலிய காமத்தில் மயங்குகிறது போல் தோற்றுகிறது. இந்தப் பெண்ணைப் பார்த்ததினாலே உனக்கு மோகப் பேய் பிடித்ததோ? ஓ ஜெகஜாலத் தவசியே! இவளாரென்றால், என்னுடைய தங்கை சுபத்திரையென்று பெயருடையவள். எங்கள் தகப்பனாருக்கு இந்தப் பெண்ணின் பேரில் மிகவும் விசுவாசம். ஆகையால், உனக்கு இந்தப் பெண்ணினிடத்திலே கருத்திருந்தால் அஞ்சாமற் சொல்லு. நானே எங்கள் தகப்பனாருக்குத் தெரிவிக்கிறேன் என்று சொல்ல, அர்ச்சுனனானவன், ஓ கிருஷ்ணா! நீரென்ன பரிசாசஞ் செய்கிறீர்? நான் வந்த காரியமே இதுவாயிற்றே. வசுதேவருக்கு மகளாகியும் தேவரீருக்குத் தங்கையாகியு மிருப்பதோடு, மகா ரூபலாவண்ணிய சவுந்தரியங்களு முடையவளா யிராநின்ற இந்தப் பெண்மணியைப் பார்த்து மகா தீரமுடைய தபசிகளும் மயங்குவார்கள், நான் மயங்குவ தரியோம்? நீர் சும்மா வேடிக்கைப் பேச்சி பேசவேண்டாம். அவள் எனக்கு மனைவியானாளேயானாற் சகல மங்களங்களும் வந்தாற்போலே யாம். ஆகையால், என்னிடத்திற் பரிபூரண கடாட்சம் வைத்து, அவளை நான் கலியாணம் பண்ணும்படியாகிய வகையைச் சொல்லவேண்டுமென்று கேட்டான். அதுகேட்டுக் கிருஷ்ணன் மகா விருப்பத்தோடும் இதனைச் சொல்லுகிறார்:

அர்ச்சுனா! நீ சொல்லுகிறது சரிதான்; அதற்கு உபாய மென்னவென்றால், க்ஷத்திரியர்களுக்குச் சுயம்வரமென்பது ஒன்றுண்டன்றே அந்தப்படி செய்விக்கலாம். ஆனால், அது நல்ல உபாயமாகமாட்டாது. மேலும், பெண் இஷ்டப்படியே யன்றி புருஷனிஷ்டப்படி நடக்கமாட்டாது. ஆதலால், இன்னொரு உபாயமிருக்கின்றது. அது யாதென்றால், இராஜாக்கள் பெண்களை வலிமையினாலே கொண்டுபோகிறதுண்டு, இதுதான் நல்ல உபாயம். இது பெரியோர்களாலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. ஆனபடியினாலே, அர்ச்சுனா! நீ என் தங்கையை அப்படியே வலிமையினாலே எடுத்துக்கொண்டு போய்விடு. அதற்குச் சமயமிருக்கிறது சொல்லுகிறேன். இப்படி நாம் செய்திருக்கிற நிச்சயத்தை யார் அறியப்போகிறார்கள்? பிற்பாடு பார்த்துக் கொள்ளுவோம் என்று கிருஷ்ணமூர்த்தி சொல்ல, அர்ச்சுனனும் சரிதான் என்று சம்திக்க, இருவரும் இவ்விதமாக நிச்சஞ்செய்து, இந்தச் சேதியைத் தருமராஜனுக்குத் தெரிவிக்கிற நிமித்தம் அந்தரங்கமாய்ச் சில மனிதரை அனுப்புவிக்கத் தருமராஜன் முதலானவர்கள் இச்செய்தி கேட்டு, நல்ல காரியம் அப்படியே நடக்கட்டுமென்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். இந்தப்படி செய்தபின்பு ஸ்ரீ கிருஷ்ணதேவர் அர்ச்சுனனை அவ்விடத்திலேயே இருக்கச்சொல்லி நியமித்துப்போட்டுத் தாம் முன்போல் எல்லாருடனேயும் கூடிக் கொண்டு, திருவிழா கழிந்தவுடனே துவாரகா பட்டணம்போய்ச் சேர்ந்தார். பற்குணன் கிருஷ்ணன் தங்கையைக் கண்டது முதற் காம வேதனைகொண்டு, அழகாகிய சோலை சூழ்ந்திருக்கிற ஒரு கற்பாறைமீது உட்கார்ந்து சுபத்திரையைச் சதாகாலமுந் தியானஞ் செய்துகொண்டிருந்தான்.

### கண்ணன் அருச்சுனனைத் துவாரகைக்கு அழைத்துக்கொண்டு போகுதல்

இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் கிருஷ்ணன் வேட்டைக்குப் போயிருக்கப் பலராமர்-கிருதவர்மா-சாம்பன்-சாரணர் - பிரத்தும்னன்-கதன்-சாருதேஷ்ணன் - விடூரன்-பானு-நிசிதன்-விபுருது-பிருதுமுதலாகிய சில யாதவவீரர்கள் வேடிக்கையாய் அந்தப் பருவதத்திற்குப் போயிருக்குமளவில் அவ்விடத்திலிருக்கும் அர்ச்சுன சந்நியாசியைக் கண்டு சந்தோஷப்பட்டு அவன் பக்கத்திற் போய் மிகவும் வினயத்துடனே பணிந்து நிற்க, அந்தச் சந்நியாசியும் ஆசீர்வதித்து உட்காருங்களென்று சொல்ல, அவர்கள் அங்கிருக்கும் பாறைகளின் மீதில் உட்கார்ந்துகொண்டு இவர் யாரோ மகானுபாவர், மிகவும் சாந்த

மூர்த்தி என்று மனதில் எண்ணிக்கொண்டு இருக்க, அர்ச்சுன சந்நியாசி அவர்களைப் பார்த்து, ஓ யாதவவீரர்களே! யாவரும் க்ஷேமமா வென்று கேட்டான். பலராமர் சுவாமியினுடைய அனுக்கிரகத்தினாலே க்ஷேமந்தான், தேவரீர் யாரோ? எவ்விடத்தினின்று ஏதுக்காக இங்கே எழுந்தருளிற்றோ தெரியவில்லை. ஆகையால், அதை அருளிச் செய்யவேண்டுமென்றார். சந்நியாசியானவன் தமக்கோரிடமென்றுண்டோ? பூமியெல்லாம் நம்முடைய விடந்தான். நான் சிலகாலமாய் தீர்த்த க்ஷேத்திரங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு, மழையாகையால் இவ்விடம் வந்திருக்கிறேனென்றான். அதுகேட்ட பலராமர், சுவாமி! தேவரீர் இவ்விடம் எழுந்தருளியது அடியேங்கள் செய்த தவந்தான். தேவரீர் அனேக புண்ணிய தீர்த்தங்களையும் ஸ்தலங்களையும் கண்டவராகையால் அவைகளின் சரித்திரம் சொல்லி யருளவேண்டுமென்றனர். சந்நியாசி அந்தச் சரித்திரங்களையும் மற்றும் தருமத்திற்கடுத்த கதைகளையும்-தெய்வ பக்திக்கடுத்த காரியங்களையும் எடுத்துப் பிரசங்கிக்கக்கேட்டு, இவர் மகா பெரியவரென்று நினைத்து எழுந்து வந்தனம்பண்ணிப் பின்பு இவர்களெல்லாம் ஒன்றாகக்கூடி மகா பக்தி விசுவாசத்துடன் இதனை யோசிப்பதானார்கள்.

ஓ அன்பர்களே! இவர் மகா சந்நியாசி. வெகு யோக்கியர். நாம்செய்த புண்ணியவசத்தினாலேதான் நமது தேசத்துக்கு வந்தார். ஆகையால், இவர் இந்த மழைக்காலமெல்லாம் சவுக்கியமா யிருக்கும்படியாய் நாம் எந்தவிடத்திலே இருக்கச் செய்யலாம் என்று யோசித்துக்கொண் டிருக்குமளவிலே வேட்டைக்குப் போயிருந்த கிருஷ்ணன் அவ்விடத்திற்கு வந்தார். பலராமர் அவரைக் கண்டு குழந்தாய் கிருஷ்ணா! இங்ஙனம் ஒரு சந்நியாசி வந்திருக்கிறார். அவர் மழையினாலே இவ்விடத்தில் மிகவும் வருந்துகின்றார். ஆகையால், இவரை நமது பட்டணத்துள் எவ்விடத்தி லிருக்கச் செய்யலாம் சொல் என்று கேட்கக் கண்ணன், அண்ணா! எல்லா யோசனைக்கும் நீரிருக்க நான் சொல்வதெப்படி? உமக்கு எவ்விடத்தில் வைக்க இஷ்டமோ அவ்விடத்தில் வைக்கலாம் என்று சொல்லக் கேட்டுத் தம்பி சொன்ன விநய வாக்கியத்துக்குச் சந்தோஷப்பட, பலதேவர் சற்றே யோசித்து, கிருஷ்ணா! எனக்குத் தோற்றுகிறதைச் சொல்லுகிறேன் கேள். இவர் நமது சுபத்திரையினுடைய கன்னியா மாடத்திற் போஜனம் பண்ணிக்கொண்டு, நம்முடைய தோட்டத்திலே கொடிகளினாற் கட்டியிருக்கும் அறைகளிலே இந்த மழைக்காலம் கழிகிற வரைக்கும் வாசஞ் செய்துக்கொண் டிருக்கட்டும். உனக்கென்ன தோற்றுகிறது? இவணிருக்கும் யாதவர்களெல்லாம் என் சம்மதியை எதிர்பார்க்கிறார்கள் என்று சொல்லக் கண்ணனவர், அண்ணா! உம்முடைய சம்மதிக்கும் உத்தரவுக்கும் எதிரில்லை. நீரோ எல்லாமறிந்தவர். மகா புத்தியுள்ளவர் எங்களுக்குப் பெரியவர். ஆகையால், நானொன்றும் மறுத்துச் சொல்லக் கூடவில்லை. ஆகிலும் இப்படி செய்வதிற் ஒரு குறைவும் வராமலிருப்பதைக் குறித்துக் கொஞ்சம் யோசிக்கவேண்டியதாய்த் தோற்றுகிறது என்று சொன்னார்.

அதனைக் கேட்ட பலதேவர் சரிதான் நீ சொல்லுகிறது. ஆனால், இந்தச் சந்நியாசி வெகுவாய்ப் படித்தவராயும் வெகு யோக்கியராயும் சாந்தமூர்த்தியாயும் காணப்படுகிறார். உள்ளமெப்படி யிருக்கிறதோ யாருக்குத் தெரியும், ஆகையால், கண்ணா! நீ இவரை யழைத்துக்கொண்டு போய்க் கன்னியாமாடத்தில் விட்டு, நான் உத்தரவு பண்ணினதாய்ச் சுபத்திரைக்குச் சொல்லி, அன்னபானங்கள் முதலான உபசாரங்கள் செய்துவரும்படி திட்டம் பண்ணுக என்று சொல்லவும் ஆனால், அப்படியே செய்கிறேனென்று கிருஷ்ணன் எழுந்து, அந்தக் கபட சந்நியாசியைக் கும்பிட்டு அழைத்துக்கொண்டு வழியில் ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப் பேசிச் சிரித்துக்கொண்டே காரியமெல்லாம் சித்தமாய்ப் பயன்படுமென்று சந்தோஷப்பட்டவர்களாய் பட்டணத்துக்குட் சென்று முன்னதாய் அர்ச்சுனனைத் தமது வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் தன் மனைவிகளாகிய உருக்குமணி சத்தியபாமைகளைக் கூப்பிட்டு, நாணமுற்றுத் தலைவணங்கி நகைத்துக்கொண்டு நிற்கிற அர்ச்சுனனைக் காட்டித் தானும் நகைத்துக்கொண்டு, ஓ பெண்களே! இவரைப் பார்த்தீர்களா? இவர் மகா பெரிய சந்நியாசி மேலே தரித்துக்கொண் டிருக்கிற காஷாயத்திற்குச் சரியான ரூபம் உள்ளத்திலேயுமுண்டு. மகானுபாவர் சமயத்துக்குத் தகுந்தபடி யிருப்பர். இவரிடத்திற் கபடம் லேசமேனுங் கிடையாது. இவரின்னாரென்று இதுவரைக்கும்

ஒருவருக்குந் தெரியாது. இவர் மெய்யான தனஞ்செயன் சந்தேகமில்லை. இவருக்கு நீங்கள் மருமகனுக்குச் செய்யத்தக்க உபசாரங்களைச் செய்யவேண்டும். அண்ணாவின் உத்தரவின்படி சுபத்திரையினது கன்னியாமாடத்தில் இவரை இருக்கச்செய்து சுபத்திரையைப் பணிவிடை செய்யும்படி நியமிக்கப் போகிறேன் என்று சொன்னார். அவையனைத்துங் கேட்ட அந்த உருக்குமணி முதலான பேர்களெல்லாம் கொங்கை குலுங்கச் சிரித்துக்கொண்டு, ஆம் ஆம். பார்க்கும்போதே தெரிகிறது, வெகு பெரியவர்தான். இப்படிப் பட்டவர் இனி கிடைக்கமாட்டார், சுபத்திரை நல்லபாக்கியம் செய்திருக்கிறாள். சந்தேகமில்லை, இவரெப்படி யிருந்தாலு மிருக்கலாம்போ லிருக்கிறது தற்காலத்திற் கொண்ட இச்சந்நியாசத்திற்குப் பலன் கிடைக்காமல் மறுபடி இல்லறத்தானாய் விடலாம். ஐயா துறவியே! வாரும் உட்காரும் தாம்பூலம் போட்டுக்கொண்டு வெகுநாளா யிருக்குமே இப்போது தாம்பூலம் போட்டுக்கொள்ளுகிறீரா! இனிப் பரவாயில்லை வந்த காரியம் பலிக்கும். காஷாயத்தைக் களைந்து நல்ல வஸ்திரம் உடுத்திக்கொள்ளும். நாங்கள் வெளிப்படுத்துகிறதில்லை மறுபடி போகும்போது காஷாயங் கட்டிக்கொள்ளலாம் எங்கள் வீட்டிலேதான் முதல் மருவுண்ண வேண்டும். ஆகையாற் சாப்பிடும் பிட்சை இன்றைக்கு வேண்டாம். எப்போதும் நீர் உயர்ந்த வேஷம்போட்டாற் பெண்கிடைக்கிறது. எப்படியென்றால், பிராமண வேஷம் போட்டபோது திரௌபதி கிடைத்தாள். தவசிவேஷம் போட்டபோது நாகக்கன்னியும் பாண்டியகன்னியும் கிடைத்தார்கள். அப்படியே இந்தச் சன்னாசிவேஷத்துக்குப் பயன்கிடைக்கும் என்று பரிகாசமாய் பேச, அர்ச்சுனனும் மெய்தான் உங்கள் நாயகருடைய சிநேக பலத்தினாலேதான் எனக்கு இப்படிப்பட்ட சாமார்த்தியமே தவிர வேறில்லை என்றிவனும் பலவிதமாகப் பரிகாசப் பேச்சுகளைப்பேச, அந்தக் கண்ணனுடைய மனைவிகள் அர்ச்சுனா! நெடுநாளாய் உன்னை எங்கள் வீட்டில்வரக் காணவேண்டு மென்று ஆசைகொண்டிருந்தோம் இன்றைக்குத்தான் அது பலித்தது என்று மிகவும் அன்புடனே கூடியபல வார்த்தைகளைக்கூறிப் போசன முதலான உபசாரங்களைச் செய்தார்கள்.

## அருச்சுன சந்நியாசி சுபத்திரை கன்னிகா மாடஞ் சேர்ந்திருத்தல்

பின்பு கண்ணன் அர்ச்சுனனைக் கன்னியா மாடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் தன் தங்கையை யழைத்து, என்னம்மணி! இவர் மகா பெரியவர். நமது தேசத்திற்கு அதிதியாய் வந்தனர். இவரை நீ உன் மாளிகையில் வைத்துப் பூசித்தால் மிக்வும் நல்லது. உனக்கு நல்ல பலன் கிடைக்கும். இப்படி தான் முற்காலங்களில் நமது கன்னியாமாடங்களிலே வெகு பெரியோர்கள் வந்து தவஞ் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை யெல்லாம் நமது சந்ததியிற் பிறந்த அனேகம் பெண்கள் பூசித்து வெகு நன்மைகளைப் பெற்றார்கள். ஆகையால், குழந்தாய்! இந்தச் சந்நியாசியை நீ வெகு பயபக்திகளுடனே பூசித்து வரவேண்டியதாய் நம்முடைய அண்ணா நியமித்திருக்கிறார். இந்தப் பெரியவர் எந்த வேளையில் என்ன சொல்லுகிறாரோ அதை நீ தவறாமல் நடந்துகொண்டு தகுந்தபடி போஜன முதலானவைகளால் உபசாரஞ்செய்து வரவேண்டும். இருவருக்குத் தவஞ்செய்ய நமது தோட்டத்திலிருக்குங் கொடிகளாற் கட்டிய வீடு தகுந்ததா யிருக்கிறபடியினாலே, அங்கேயே வாசம் பண்ணிக்கொண்டிருக்கட்டும் என்று சொல்லியதைக் கேட்ட சுபத்திரையும், அண்ணா! அப்படியே செய்து இவர் சந்தோஷப்படும்படி நடந்துகொள்ளுகிறேனென்று சொன்னாள். அப்போது யாதவகுல திலகராகிய ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் அந்தக் கபட சன்னாசியைத் தோட்டத்திற்கழைத்துப்போய் இருக்கவேண்டிய விடங்களையுங் காண்பித்து, சுபத்திரையையும் பணிவிடைக்கு அவரிடத்தில் ஒப்புவித்து, சந்யாசியினிடத்திலே உத்திரவு பெற்றுத் திரும்பி இச்செய்தியை தமயனருக்கு அறிவித்தார்.

அந்த அர்ச்சுனனானவன் தினந்தோறும் விடியற்காலமுதல் இராத்திரிக்குச் சயனித்துக் கொள்ளுகிற வரையிற் சுபத்திரையினாலே வேண்டிய உபசாரங்கள் செய்யப்பட்டு வருங் காலத்தில், இடைவிடாமற் சுபத்திரையைப் பார்த்துக்கொண் டிருப்பதினாலும் அவளோடு பேசுகிறதினாலும், அவளுடைய நடை, புன் சிரிப்பு முதலாகிய செய்கைகளைக் காண்பதினாலும், முன்னிருந்ததை விட அதிகமாகக் காமத் தீயானது எழும்பி உள்ளும் புறமும் எரிக்கவே, நாழிகைக்கு நாழிகை தேகமானது

இளைத்து வெளுத்துத் துவண்டு பரவசமாய்ப் போயிற்று. இவ்வாறாகக் காம நோயினால் மிகவும் அவன் வருத்த மடைந்து, மிகுந்த தாபத்தைச் சகிக்கமாட்டாமற் பெருமூச்சுவிட்டு நீரிலமிழ்த்திய சுரைக்காயைப் போல் எவ்வளவு அடக்கினாலும் அடங்காமல் தனது கிபடமேவிட்டு வழிந்து வெளிக்குவர அதை யெல்லாம் வெவ்வேறு பாவனையால் மறைத்துக் கொண்டு தன் வேஷத்திற்குத் தகுந்தபடி ஸ்ரீஹரி! மாதவா! கோவிந்தா என்று கிருஷ்ணனையே கூவிக் கொண்டிருந்தான். அந்தச் சுபத்திரையும் மனதிலே அர்ச்சுனன் பேரிலேயே நெடுநாளாய்க் காதல்கொண்டிருந்தாள். அது ஏனென்றால் வசுதேவருடைய குமாரர்களில் ஒருவனாகிய சுதன் என்பவன் முன்னொருக்கால் பாண்டவர்கள் பிறந்த கதையையும் அர்ச்சுனனுடைய ரூபம் சாமர்த்தியம் பெருமை முதலானவைகளையும், சுபத்திரைக்கு நன்றாய்ச் சொல்லியிருக்கின்றான். அன்றியும் அந்த யாதவர்களுக்குள்ளே ஒருவரோடொருவர் வீரவாதம் பேசுங்காலத்திலே அந்த அர்ச்சுனனே எனக்கு நிகரல்லவே நீ எவ்வளவென்றும், வில்வித்தை கற்குங்காலத்தில் நான் அர்ச்சுனனுக்கு அதிகமாகிறேன் பாரென்றும் எவனாகிலும் சவுரியத்தினால் கர்வமடைந்தால் அப்போது அவனைப்பார்த்து நீ என்னடா அர்ச்சுனனாக நினைத்துக் கொண்டாயோ யென்றும், வில்வித்தை கற்கிற பிள்ளைகளை ஆசீர்வதிக்குங்கால் அர்ச்சுனனுக்குச் சமானமாகக் கடவா யென்றும், அவ்விடத்திற் பேசுவார்கள். அதுகளை யெல்லாம் சுபத்திரை பலதரம் கேட்டிருக்கிறவளாகையால், புருஷர்களுக்குள் அர்ச்சுனனே உயர்ந்தவனென்று எண்ணி, அவனையே விவாகம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தாள். அதனாலே குருதேசத்தினின்று யாராகிலும் வந்தால் அவர்களை யுபசரித்து, அர்ச்சுனனுடைய சரித்திரங்களைச் சொல்லச்சொல்லிக் கேட்டு, அவர்கள் சொல்லுமளவில் மனதில் மிகவுங் களிப்படைவாள். அன்றியும், வெண்மையான வஸ்துவைக் குறித்து யாராகிலும் அர்ச்சுனனென்கிற சொல்லைச் சொல்லும்போது, அதை யுற்றுக் கேட்பாள். இன்னும் யாராகிலும் தவசிகள், சோதிடர், குறி சொல்லுவோர் முதலானபேர்கள் வந்தால் அவர்களுக்கு உபசாரஞ்செய்து, நான் நினைத்திருக்கிற காரியம் கூடிவருமா வராதாவென்று கேட்டு, அவர்கள் கூடி வருமென்று சொல்லுமளவில் அர்ச்சுனனை விவாகஞ் செய்துகொண்டதுபோலவே களித்திருப்பாள்.

இப்படிக்கெல்லாம் சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் அர்ச்சுனனைப் பாவனையினாலே கண்டு, அவனிடத்திலேயே மனமழுந்திச் சதாகாலமும் விரகதாபப் பட்டுக்கொண்டிருப்பவள் ஆனபடியினாலும், தினந்தோறும் கபடசன்னியாசியை யுற்றுப் பார்க்குமளவில் தான் கேட்டிருக்கிற படிக்கும், சொற்பனத்தில் காண்கிறபடிக்கும் இவனுடைய ரூபமிருப்பதினாலும், கைகளில் நாணுரைச்சலாலுண்டாகிய காய்ப்புக் காணப்படுகிற படியினாலும் அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையாய்ப் பிரபாசம் வரைக்கும் வந்திருக்கிறான் என்று முன்னமே கேட்டிருப்பதினாலும் அந்த யாதவப் பெண்ணின் மனதிற் சந்தேக முண்டாயிற்று. அப்படியிருக்க, ஒருநாள் இந்த சன்னியாசியானவன் காலையில் ஸ்நானஞ் செய்து ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு ஜெபஞ் செய்திருக்குந் தருணத்தில் வசுதேவருடைய மகளாகிய சுபத்திரைபோய் நமஸ்காரம் செய்து சுவாமி! தேவரீர் வெகு தேசங்களையும், நதிகளையும் மற்றுமனேக திவ்வியக்ஷேத்திரங்களையுங் கண்டவரானபடியினாலே அவைகளின் சரித்திரங்களை சொல்லவேண்டுமென்று கேட்டாள். அர்ச்சுனனும் மிகவும் சந்தோஷித்து, காமப்பார்வை முதலாகிய விலாசங்களுடனே அனேகங் கதைகளை யெல்லாஞ் சொல்லிவந்தான். நடுவிற் குருதேசத்துச் சங்கதி வருமளவிற் சுபத்திரையானவள், சுவாமி! அவ்விடத்தில் முன் காண்டவப் பிரஸ்தமென்றும் இப்போது இந்திரப்பிரஸ்தமென்றும் பெயருடைய பட்டணத்தில், யெங்கள் நல்லத்தை குந்திதேவி யென்பவளைக் கண்டீரா? அவளும் அவளுடைய குமாரர்களும் க்ஷேமமாயிருக்கிறார்களா? அவர்களில் திரௌபதிக்காக ஏற்பட்ட நிபந்தனையின்படி அர்ச்சுன ராஜனுக்குத் தீர்த்தயாத்திரை நேரிட்டதாமே; மஹா சவுக்கியமாயிருந்த அந்த மகாபுருஷர் நெடுநாளாய் வனாந்தரங்களில் திரிந்து கஷ்டப்பட்டுக்கொண்டு இந்த மழைக்காலத்திலே எங்கேயிருக்கிறாரோ? தேவரீரும் தீர்த்தயாத்திரை வந்தவராகையால் அவரை எங்கேயாகிலுங் கண்டதுண்டோ? அல்லது கேட்டதுண்டோ? இதுகளை யெல்லாம் தயை செய்து சொல்லவேண்டும் என்று கேட்கும்போது

அர்ச்சுனன் அவளது கேள்வி குறிப்பினலே தன்னிடத்தில் அவளுக்கு ஆசை யிருப்பதை யறிந்து மிகுந்த காமவெழுச்சியினல் உடம்பெல்லாம் பொங்கிக் கிறுகிறுத்து, நடுக்கமுறத்தொனித்து சிறுநகைப்புடனே இதனைச் சொல்லுகிருன்:

அர்ச்சுனன் சுபத்திரைக்குத் தன்னை வெளிப்படுத்துதல்

ஓ யதுகுலத்தோர் தவத்தினுலுதித்த மின்னரசே! உங்களத்தையாகிய குந்தியைக் கண்டேன் க்ஷேமமாயிருக்கிருள் அவள் புத்திரர் முதலான்பேர்களும் க்ஷேமமா யிருக்கிருர்கள். அந்த அர்ச்சுனனே தீர்த்தயாத்திரை முடிந்தும் இன்னும் தன் தேசம்போய்ச் சேரவில்லை. ஆனல் எங்கேயிருக்கிருனென்ருல், இப்போது துவாரகா பட்டணத்திலேயே சன்னியாசி வேஷம்பூண்டு ஒருவருக்குந் தெரியாமல் வாசஞ்செய்துக்கொண் டிருக்கிருன். ஓ பொற்கொடியே! நீ தினந்தினம் பார்த்துக்கொண்டிருக்கச்செய்யும் அவனை நீ யறியாமலிருக்கிருய், என்று சொல்லக்கேட்ட சுபத்திரை திடுக்கிட்டாற்போலப் பெருமூச்செறிந்து முகத்தை வணங்கித் தரையைக் காலாற் கீறி நின்ருள். அப்படி நிற்கும் அவளைக் கண்ட அர்ச்சுனன் மிக அன்புடனே அடி பூங்குழலே! நான்தான் அர்ச்சுனன். உனக்கெப்படி என்னிடத்திற் கருத்திருக்கிறதோ அப்படியே எனக்கும் உன்னிடத்திற் பதின்மடங்கதிகமாகக் கருத்தமைந்திருக்கிறது. உனது பணிவிடைக்குங் காத்திருக்கிறேன். ஓ பூரணசந்திரனை யொத்த முகமுடையவளே! நல்லநாளிலே தருமவிதிப்படி சாவித்திரி யென்பவளைச் சத்தியவான் எப்படி விவாகஞ் செய்துகொண்டானே அப்படி உன்னை நான் விவாகஞ் செய்துகொண்டு உன்னுடன்கூடி வாழ்வேனென்று சொல்லிக் கொடிகளாற் கட்டிய அறைக்குள்ளே பிரவேசித்தான். பின்பு சுபத்திரையானவள் மிகவும் மதிகலங்கி, மெய்துவண்டு, தனது பள்ளியறைக்குள்ளே போய்க் கட்டிலின்மீது சயனித்துக்கொண்டு, மூர்ச்சை யடைந்தவள்போல் ஒன்றுந் தெரியாம லிருந்தாள். இப்படியிருக்க, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் இச்செய்தியை யெல்லாம் தமது பேரறிவினு லறிந்து, சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் போசனமிடும்படி உருக்குமணிதேவியை அனுப்ப அவளும் இவ்விருவருக்கும் போசனத்தைக் கொணர்ந்து பரிமாறி இவ் விருவருடைய மனோவியாதியை முற்று மறிந்து போனள். அர்ச்சுனனும் அந்தக் கொடி யறையிலேயே யிருந்துகொண்டு, உன்மத்தம் பிடித்தவன் போல் ஒன்றுந் தோன்ருமற் காமவிகாரத்தி லிருந்தான்.

இப்படி யிருக்குமளவிற் சூரியன் அஸ்தமனத்தை யடையவே, அர்ச்சுனனையும் சுபத்திரையையும்மோகமென்பது கௌவிக்கொண்டதுபோல் இருளானது பூமியைக் கௌவிக்கொண்டது. அதைப் பார்த்தால் ஒருவன் மிகுந்த புண்ணியஞ் செய்து சுவர்க்கலோகமடைந்து மகா போகங்களை யெல்லாம் அனுபவித்து அந்தப் புண்ணியம் நீங்குமளவில் மறுபடியும் அவனைப் பிறவிப்பாவம் சூழ்வது போலிருந்தது. உடனே ஆகாயத்தில் நட்சத்திரங்கள் புறப்பட்டது. அதைப் பார்க்குமளவில் சுபத்திரையின் தேகத்து வெப்பம் வீசி ஆகாயத்திற் கொப்புளங்கள் புறப்பட்டன போலத் தோன்றிற்று. அப்போது குளிர்ச்சியும் வெண்மையுமுடைய கிரணங்களை வீசி இருளைத்துரத்தி யடித்துக்கொண்டு சந்திரன் உதயமாகியதைப் பார்த்தால், முகத்தினழகினுலே தன்னைச் செயித்தவளாகிய சுபத்திரையைத் தன் தோழனுகிய மன்மதன் மிகவும் வருத்துகிருனே இத்தருணத்திலே நாமும் போய் வருத்தி அவள் முகத்தை வாடச்செய்ய வேண்டுமென்று வந்ததுபோல் தோற்றிற்று. இவ்வாருகச் சந்திரன் உதித்து நிலவு விளங்குமளவிலந்த யதுகுலப் பெண்ணானவள் மன்மதன் பிரயோகிக்கிற புஷ்ப பாணங்களினுலே தேகமெல்லாம் துளைக்கப்பட்டுச் சகிக்க மாட்டாமல் தான் சயனித்திருக்கிற புஷ்ப சயனமெல்லாம் கருகிப்போம்படியாகிய தாபத்தை யடைந்து, மூக்கி நுனியில் அணிந்திருக்கிற ஆணி முத்தும் நீலமணி போலாகும்படியாகப் பெருமூச்சு விட்டுத் தன்னைத் தொந்திரவுசெய்கிற மன்மதனையும் அவனுடைய தோழனுகிய சந்திரனையும் குயில்களையும் மலயமாருதத்தையும் சோலைகளையும் வண்டுகளையும் தூஷித்து மெய்ச்சோர்ந்து மூர்ச்சித்துக்கிடக்கவே, அக்குறிப்பை யறிந்த இவளுடைய தோழிமாரெல்லாம் வியசனமடைந்து தேவகிதேவிக்கு அறிவிக்க, அந்த அம்மனும் ஓடிவந்து மகளைப் பார்த்து, பெண்ணே! நீயேன் மிகுந்த துயரத்துடனிப்படி வருந்துகிருய்? உனக்குண்டாகிய வியாதிக்குத் தகுந்தசிகிச்சை செய்விக்கிறேன் தெரி

யத்தை யடைந்திரு. நீ இப்போ திருக்கிறபடி இன்னுஞ் சிலநேரம் இருப்பாயேயாகில் நாங்களெல்லாம் பெண்ணை யிழப்பது மன்றியு யிரையுமிழப்போம். ஆதலால் மகளே! கொஞ்சம் தைரியமடைந்து உயிரைக் காப்பாற்று, உன் கருத்தை உனதண்ணன்மார்களுக்கும் தகப்பனார் முதலான பேர்களுக்கும் தெரிவித்து அப்படியே நடத்துகிறேன் வீணாய்த் துயரப்படாதே என்று சொல்லி வசுதேவரிடத்திற்கு வந்து, ஏகாந்தத்தில் அவரைப் பார்த்து, கேட்டீரோ! நமது தோட்டத்தில் வந்திருக்கிற சந்யாசி அருச்சுனனென்று தெரிய வருகிறது. அதினாலே நம்முடைய சுபத்திரை அவனிடத்திற் காதலாலே மிகுந்த வருத்தமடைந் திருக்கிறா ளாகையாலே இதற்குத் தகுந்த யோசனை செய்யவேண்டு மென்று மகா வேட்கையோடுஞ் சொல்லினாள்.

வசுதேவர் அதை அக்குரூரன்-ஆருகன்-கிருஷ்ணன் முதலாகிய பேர்களுக்குத் தெரிவித்தார். அதுகேட்ட அவ்வக்குரூரன் - உக்கிரசேனன்-சத்தியகன்-கதன் - சினி - கிருஷ்ணன்-பிருது-சிரவன்-தேவகி-ரோகணி-உருக்குமணி-சத்தியபாமை இவர்களெல்லாங் கூடி நன்றா யோசித்து, இரகசியமாகப் புரோகிதரை அழைப்பித்து இதை அவருக்கும் அறிவித்து, அவர் யோசனையையுங் கேட்டுக்கொண்டு, பன்னிரண்டாவது நாளில் முகூர்த்தம் வைத்துக்கொண்டார்கள். பின்பு கிருஷ்ணன் இந்தப் பெண்ணை அர்ச்சுனனுக்குக் கொடுக்கப் பலராமர்-உத்தரை முதலானபேர்களுக்கு சம்மதியில்லாமையால் அவர்கள் இச்செய்தியை அறியாதிருக்க வேண்டியதற்காக யோசித்து, ஒரு விளம்பரஞ் செய்து பறைசாற்றுவித்தார். அவ் விளம்பரம் என்னவென்றால் நம்முடைய சுபத்திரைக்குத் தேகத்தில் என்னமோ தெய்வீகமாய் உபத்திரவம் உண்டாயிருக்கிறபடியினாலே, சமுத்திரத்தின் நடுவிலிருக்கிற தீவிற் சிவனுக்கு முப்பத்துநாலு நாள் மகா உச்சவம் நடக்கப்போகிறது. அதற்காக இன்றைக்கு நாளா நாளே யாதவர் முதலான யாவரும் தங்கள் குடும்பங்களுடனேயும் இரதகஜ துரகபதாதிகளுடனேயும் அந்தத் தீவுபோய்ச் சேரவேண்டியது என்பதுதான் அதில் யாதவர்களும் தங்கள் தங்கள் சேனைகளுடனே போய்ச் சேரவேண்டிய தென்பதைக்கேட்ட பலராமர் முதலாகிய சகல யாதவர்களும் பட்டணத்திலிருக்கும் சகல ஜனங்களும் வஸ்திராபரணங்களைப் பூண்டு, அழகாகிய சீலைகளைக்கட்டிய கொடிமரங்களுடனே நல்ல யந்திரங்களுடைத்தாய் உட்காரவும் படுக்கவும் விளையாடவும் உபயோகமாயிரானின்ற விடங்களையுடைய கப்பல்களின்மேலேறி, மகா சந்தோஷ வைபவ விநோத விளையாட்டுடன் அந்தத் தீவுபோய்ச் சேர்ந்தார்கள். இப்படி யிருக்க, சுபத்திரையானவள் கண்ணனிடத்திற்கு வந்து, அண்ணா! நம்முடைய தோட்டத்திலிருக்கிற சன்னியாசி இன்னும் பன்னிரண்டுதினங்கள் இவ்விடத்திலேயே இருக்கப் போகின்றாராமே; அவருக்குச் சிசுருஷை யார் செய்வார்கள் என்றனள். கண்ணன் அம்மணி! உன்னை யல்லாது யார் செய்வார்கள்? நீயே செய்யவேண்டும் என்று சொல்லிப் பேரிகை முதலாகிய வாத்தியங்கள் உடனே புறப்பட்டுக் கப்பலேறி, ஏழுயோசனை அகலமும் பத்து யோசனை நிகளமும் உள்ள அந்த தீவை யடைந்து, எல்லாருடனே கூடி அவ்விடத்துத் திருவிழாவை நடத்தினார். அப்போது சகலமான பேர்களும் தானதர்மங்களைச் செய்து, வேடிக்கையாய்த் தோட்டங்கள்-அணைகள்-குளங்கள்-குட்டைகள்-மண்டபங்கள் - மணிக்குன்றுகள் முதலான விடங்களிலே வாசஞ்செய்து, அங்கு நடந்தேறிவரும் திருவிழாவைப் பார்த்துச் சகலமான பேரும் ஆனந்தப் பரவசத்தராய்ச் சந்தோஷமடைந்துகொண் டிருந்தார்கள்.

### சுபத்திரை மணம்

இவ்வாறாக முப்பத்து நாலு நா ளங்கே உச்சவம் நடந்துகொண் டிருந்தது. இப்படியிருக்க, அர்ச்சுனனானவன் காரியம் சித்தமாயிற்றென்று மனதிற் சந்தோஷமடைந்து, சுபத்திரையைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான். அடி தேன்மொழியே! இப்பொழுது உன் தகப்பனார் முதலிய யாவரும் திருநாள் பார்க்கப் போயிருக்கிறார்கள். இச்சமயத்திலேதான் நாம் விவாகஞ் செய்துகொள்வது யுக்தம். ஆனால், விவாகங்களைப் பெரியோர்கள் எட்டுவிதமாகப் பேசியிருக்கிறார்கள். என்னுடைய பந்துக்களோ தேசாந்தரத்தில் இருக்கிறார்கள். உன்னுடைய பந்துக்களும் இப்போது தேசாந்தரத்தில் இருக்கிறார்கள். ஆகையால் இந்த எட்டுவித விவாகங்களுள்ளும் சிறந்ததாகிய காந்தருவ மென்பது தான் நமக்கு இப்போது இசைந்ததாகக் காண்கிறது. அன்றியும், கன்னிகையை ஒருவ

னுக்கு கொடுப்பதற்கு முறையே தகப்பன் உடன் பிறந்தான் தாயார் அம்மான் தகப்ப னுடன் கூடப்பிறந்தவன் ஆசாரியன் இவர்க ளெல்லாம் அதிகாரிகளாய் இருக்கிறார்கள். அல்லாமலும் பெரியோர்கள் விவாக முறை மையைக் குறித்துச் சொல்லியதை சிலது சொல்லுகிறேன் கேள். பெண்ணைப் பெற்ற வன் யோக்கியனானவனை அழைத்து விதிப் படி கன்னிகையைத் தந்தால், அந்த கன் னிகை பத்தினி யென்கிற பெயருடையவ ளாகி றாள். ஒரு பெண்சாதி மரித்தபின் தன்னையும் தன்னை யடுத்த பேர்களையும் காப்பாற்றுகிற நிமித்தம் தானே ஒரு பெண்ணைத்தேடி விவா கஞ் செய்துகொண்டா லந்தப் பெண்பாரியை யென்று பெயருடையவளாகிறாள். பிள்ளைக் குத் தகப்பனானவன் குலமுதலான யோக்கிய தையுள்ள கன்னிகையைத் தேடி விவாகஞ் செய்வித்தால் அக்கன்னிகை தாரமென்று பேருடையவளாகிறாள். சந்ததி நிமித்தமாக ஒருவன் ஒரு பெண்ணை விவாகம் செய்து கொண்டால், அவள் வசியை என்று பெயரு டையவளாகிறாள். அன்றியும், அவளுக்கு ஜாயை யென்கிற பேருமுண்டு. இப்படி யிருக் கிறபடியினாலே ஆசையுள்ள பெண்ணை ஆசை யுள்ள புருஷன் ரகசியமாய்ச் சேருகிறது முன் சொன்ன எல்லாவற்றிலு மேலான தருமமா யிருக்கிறது. அடி மான்விழியே! இப்போது நான் சொல்லுகிற காந்தருவ விவாகமானது அக்கினிமுன்பாக சடங்குகள் நடத்திச் செய்து கொள்ளத் தக்கதாகாமற் போனாலும், நீ தயை செய்து அதை யங்கீகரிக்க வேண்டும். ஏனெ னில், உச்சவத்திற்குப் போயிருக்கிற பேர்க ளெல்லாம் வராமலிருப்பதற்கு முன்னமே நல்லநா ளின்றுதான் ஏற்பட்டது. எப்படி யெனில், உத்தராயணம் வைகாசிமாசம் சுக் கிலபக்ஷ மஸ்தநட்சத்திரம் திரியைதிதி மகர லக்கினம் பவகரணம் சித்தயோகம் இவைக ளெல்லாம் கலியாணத்திற்கு எடுத்தவைகள். இவையெல்லாம் இன்றிரவு ஏற்பட்டுள்ளது. சூரியபகவானும் அஸ்தமனத்திற்கு சமீபித் திருக்கிறார். ஆகையால், நீ மனதைப் பெரிது பண்ணவேண்டும். ஸ்ரீ கிருஷ்ணனே சர்வமு மறிந்தவர்தான். ஆனாலிந்த விஷயத்தை யறி ந்திருக்கிறாரோ இல்லையோ தெரியவில்லை. ஆனதாற் காமனால் வருத்தப்பட்டுப் புலம்பா னின்ற என்னை காப்பாற்ற என்ன யோசனை செய்கிறாய் சொல்லடி என் கண்ணே! என்று அர்ச்சுனன் சொன்ன சொற்கேட்ட சுபத் திரை கண்ணனை மனதில் நினைத்து, ஒன்றுஞ் சொல்லாமற் கண்ணீர்மல்க நின்றுகொண்டிரு ந்தாள். அர்ச்சுனனும் பரிதாபத்துடனே கொடி வீடு சென்று, தன் பிதாவாகிய தேவேந் திரனை நினைத்தான்.

இப்படி அர்ச்சுனன் நினைத்த மாத்திரத் திலே தேவேந்திரனானவன் இயமன் - வரு ணன் -குபேரன் - அக்கினி - வாயு - சூரியன் - சந்தி ரன் - அஷ்டவசுக்கள் - ஏகாதசருத்திரர் - சித்தர் - சாத்தியர் - கின்னரர் - கிம்புருடர் முதலாகிய சகல தேவர்களோடும், நாரதர் - வசிட்டர் முத லாகிய தேவரிஷிகளோடும், சசிதேவி முதலா கிய தேவ ஸ்திரீகளோடும் ஐராவதத்தின்மீ தேறித் தன் மகனிருக்குமிடம் வந்து சேர்ந் தான். கிருஷ்ணனும் சுபத்திரை நினைவை அறிந்து அக்குரூரன் - ஆருகன் - கதன் - வசுதே வன் - தேவகி - உரோகணி - உருக்குமணி - சத்திய பாமை முதலாகியவர்களை எல்லாம் அழைத் துக்கொண்டு பலராமர் முதலானபேர்கள் தூங் கியிருக்குந் தருணத்திலே புறப்பட்டிவ்விடம் வந்து சேர்ந்து தேவேந்திரன் முதலானவர் களைப் பார்த்து நமஸ்காரஞ்செய்து நல்வரவு கேட்க, இந்திரன் முதலானவர்களும் க்ஷேம விடையளித்து கிருஷ்ணனைப்பார்த்து நல் லது, ஏன் சாவகாசம் பண்ணுகிறீர்? ஜல்தி யில் காரியத்திற்கு யத்தனப்பட வேண்டு மென்று சொல்லவே கிருஷ்ணனும் தம்மு டையவர்களைக் கொண்டு கலியாணத்திற்கு வேண்டிய சகல சாமகிரியைகளைச் சித்தப்படுத் தித் தேவர்கட்கு விண்ணப்பஞ் செய்ய, தேவ ராஜன் தன் மகனுக்கு மங்கள ஸ்நானஞ் செய் வித்து நவமணிகளிழைத்துப் பளபளென விளங்கும் கிரீடம் - தோள்வளை - ஆரங்கள் - கவ சங்கள் முதலான பல வாபரணங்களினாலும் திவ்விய பீதாம்பரங்களாலும் அலங்காரஞ் செய்து நாரதர் - வசிட்டர் முதலான மகாமுனி வர்களைக்கொண்டு சுபசடங்குகளைச் செய்வித் திருக்க, கிருஷ்ணனுந் தன் தங்கைக்கு நல்ல அலங்காரஞ் செய்வித்துச் சித்தம்பண்ண, சகல வாத்திய முழக்கத்துடனே பெண்ணை யும் பிள்ளையையும் கலியாண மண்டபத்து நடுவே இரத்தினங்களழுத்திய பொற்பீடத்தி லுட்காரவைத்து காசிபமுனிவர் விதிப்படி தீவளர்த்தி ஓமஞ்செய்ய, வசிஷ்டர் முதலாகிய ரிஷிகளெல்லாம் மந்திரங்களை கோஷிக்க, நாரதர் முதலிய பெரியோரெல்லாஞ் சபை யாய் வேதிகையைச் சூழ்ந்து உட்கார்ந்திருக்க

அருந்ததி முதலிய ரிஷிபத்தினிகளும் இந்தி
ராணி முதலிய தேவபத்தினிகளும் தேவகி-
உருக்குமணி-சத்தியபாமை - சாம்பவதி முத
லாகிய யாதவ பத்தினிகளும் பாலிகைகளில்
விரைகளை விதைத்துப் பால் கலந்த நீரிடவும்,
சிலர் பூரண கும்பங்களும் தீபங்களு மேந்தி
மங்களப் பாடல்களுடன் சூழவிருந்தார்கள்.

தேவதுந்துபி முதலிய பதினெட்டு வாத்
தியங்களு முழங்க, அரம்பை முதலாகிய
தேவஸ்திரீக ளெல்லாம் நர்த்தனஞ்செய்ய,
கந்திருவர் முதலிய பேர்களெல்லாம் கானம்
பாட, மகாவிபவமாகக் கலியாணத்தை இந்தி
ரன்-கிருஷ்ணன் முதலாகிய பேர்களிருந்து
நடத்தினார்கள். புரோகிதர் சொற்படி கிருஷ்
ணனும்-உருக்குமணியுமாகத் தாரைவார்த்து
கன்னிகாதானஞ்செய்த சுபத்திரையை அர்ச்
சுனன் கைகோர்த்து அக்கினியையும் - வேதி
கையையும் - ரிஷிகளையும் வலம்வந்து உட்
கார்ந்து, மங்கிலியங்கட்டி, அம்மி மிதித்து,
பொரியிட்டு மற்றுமுண்டான எல்லா சடங்கு
களையுங் குறைவின்றி நிறைவேற்றிச் சந்
தோஷத்துடனே விவாகஞ் செய்துகொண்
டான். உடனே ஸ்ரீ கிருஷ்ணரானவர் நாரதர்-
காசிபர்-வசிஷ்டர் முதலாகிய மகா ரிஷிகளை
யும், அருந்ததி முதலிய ரிஷிபத்தினிகளையும்
பூசித்துப் பலதானங்களும் வழங்கி, இந்தி
ரன் முதலிய தேவர்களும் இந்திராணி முதலா
கிய தேவஸ்திரீகளுமாகிய சம்பந்திகட்கு சகல
வுபசாரமுஞ் செய்து பூசித்துச் சகலருக்கும்
விருந்துசெய்து நிற்க, அர்ச்சுனன் தன்பெண்
சாதியுடனே ரிஷிகளையு மவர்களுடைய மனை
விகளையும் நமஸ்கரித்து, அவர்களால் ஆசிர்
வாதம் பெற்று, பின்பு இந்திரன் முதலிய
தேவர்களையும் அவர்கள்மனைவிகளையும் நமஸ்
கார்ம் செய்ய, அவர்களெல்லாம் பெண்ணுக்
குத் தகுந்த பிள்ளையும் பிள்ளைக்குத் தகுந்த
பெண்ணுமாய் இப்படி யமைந்தது அதிசய
மாகையால், ஒரு குறைவுமின்றி இவ்விரு
வரும் தன் மக்களைப்பெற்று நற்செல்வங்க
ளடைந்து நல்லோர்கட் குதவி செய்து
கொண்டு நெடுநாள் வாழ்கவென்று ஆசீர்
வாதம்செய்து, மணக்கோலத்துடன் விளங்கா
நின்ற மகனையும் மருமகளையு மெடுத்து முத்த
மிட்டுச்சிமோந்து, மருமகட்குப் பற்பல பணி
கள் வழங்கினார்கள். பின்பு அர்ச்சுனனும் சுபத்
திரையும் வசுதேவர் தேவகி, முதலானவர்களை
நமஸ்கரித்து, அவர்களாலும் பலவாசிகள்
கூறப்பட்டு மணவிருந்து மிடப்பட்டார்கள்.
இப்படிக்கு கலியாணம் நிறைவேறிய பின்பு
இந்திரன் முதலாகிய பேர்களும் யாதவர்களி
டத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, தங்கள்
தங்கள் பதிபோய்ச் சேர்ந்தார்கள். கிருஷ்ண
தேவர் அர்ச்சுனனைக்கூப்பிட்டு, நீ கலியாணத்
தைச்சேர்ந்த மற்றத் தீக்ஷையை நிறைவேற்
றிப்போட்டு இன்னும் இருபத்திரண்டு தினத்
திற்குள்ளாகவே நீ சுபத்திரையை யழைத்துக்
கொண்டு நமது தேரின்பேரிலேறி இந்திரப்
பிரஸ்தம்போய்ச் சேர்ந்துவிடு, இவ்விடத்தி
லிருக்கிறவரைக்கும் சன்னியாசி வேஷத்தோ
டே யிருக்கவேணும் நாங்கள் பலபத்திரர் நித்
திரைவிட்டு எழுந்திருக்கு முன்னமே அவ்வி
டம் போகவேண்டுமாகையாற் செலவுகொ
டென்று சொல்லிச் சுபத்திரைக்கு திட்டஞ்
செய்து, சகல யாதவர்களோடும் புறப்பட்டு
அந்தத் தீவுபோய்ச் சேர்ந்துவிட்டார்.

### அருச்சுனன் சுபத்திரையை அஸ்திநபுரங் கொண்டுபோதல்

பின்பு அர்ச்சுனன் சுவர்க்க ராச்சிய
மடைந்தவன்போல் மகாசந்தோஷத்துடனே
சுபத்திரையோடு கூடிப் பல போகங்களையு
மனுபவித்துக்கொண்டு மகா காந்தியடைந்து
இருபத்தொருநாள் கழிந்தவுடனே தன்
மனைவியாகிய சுபத்திரையை யழைத்து என்
பிராணநாயகி! இனி நாம் கிருஷ்ணனுடைய
உத்தரவின்படி இந்திரப் பிரஸ்தம்போய்ச்
சேரவேண்டுமாகையால், நீ இன்றைக்கு வேதி
யர் முதலானபேர்களுக்கு விரதமுடிவு நாள்
என்று சொல்லி, அன்னதான முதலான பல
தானங்களையுஞ் செய்து, நீயு முன் தோழிமார்க
ளுடனே நல்ல பூஷண முதலானவைகளால்
அலங்கரித்துக்கொண்டு, வேடிக்கையாய்ப் புசி
த்து, நகரியைப் பிரதக்ஷணம் வரவேண்டு
மென்று சொல்லி சகல ஆயுதவர்க்கங்களோடு
கூடிய திவ்விய ரதத்தைச் சித்தப்படுத்திக்
கொண்டு வாவென்று சொல்ல, அந்தப் பூங்
கொடியும் அப்படியே யோக்கியாளாகிய பிரா
மணரை யழைப்பித்து, அவர்களுக்கு அன்ன
வஸ்திர தட்சணை தாம்பூல முதலானதுகளை
யெல்லாங் கொடுத்துப் பூசித்து, அவர்களாற்
பல ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு,
பின்பு தன் பந்துக்கள் தோழிமார்கள் முத
லான பேர்களோடு சரச சல்லாபங்களுடனே
போஜனஞ்செய்து, அவர்களுக்கும் சில பரிசு
கொடுத்து ராஜாவின் ஊழியக்காரரை யழை

த்து, நமது ரதத்தை சகல ஆயுத வர்க்கங்களோடு நன்றாய் அலங்கரித்துக்கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டாள். அவர்களும் அப்படியே அலங்கரித்துக்கொண்டுவர, அதில் தன் வஸ்திரம் முதலானவைகளை தாதிகளைக்கொண்டு ஏற்றுவித்து, அர்ச்சுனனிடத்திற்கு வந்து, என் பிராண நாயகனே! உமது உத்தரவின்படி ரதத்தை சித்தப்படுத்தினேன் என்று சொல்ல, அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷத்துடனே அவளைக் கட்டி முத்தமிட்டுக்கொண்டு போவோம் வாவென்று அழைக்க, அப்போது அவள் தன் நாயகனை நோக்கி,என்னுயிராகிய புருஷசிங்கமே! அடியாள் செய்துகொள்ளும் விண்ணப்பத்தைக்கேட்டு அங்கீகரிக்கவேண்டும். அதாவது குதிரையின் கடிவாளம் பிடித்துத் தேர் நடத்துவதில் எனக்குச் சமானம் ஒருவரும் இப்பூமண்டலத்தில் இல்லையென்பார்கள். ஆதலால் நான் சாரத்தியஞ் செய்கிறேன். அதை அங்கீகரிக்கவேண்டுமென்ன, அப்பாண்டவ வீரன் பெண்ணரசே! மிகச் சந்தோஷமாயிற்று. ஆனால், முன்னமே போயேறுக வென்று சொல்லித் தான் காஷாயங்களைக் களைந்து திவ்விய வஸ்திரந் தரித்து கவசகுண்டலி கேயூரங்களையுமணிந்து, கத்தி கேடயம் முதலாகிய ஆயுதங்களும் கட்டித் தூணிகளைத் தோட்களில் தாங்கிக் கையில் விற்பிடித்துக் கண்டோர் யாவருந் திப்பிரமை கொள்ளும்படியாகக் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கித் தனது கட்டளைப்படி முன்னமேறிக் கடிவாளங்களைக் கைப்பிடித்துநிற்குஞ் சுபத்திரையினால் விளங்காநின்ற தேரிலேறினான்.

இவனேறிய மாத்திரத்திலே சுபத்திரை குதிரைகளைச் சவுக்கினாலடிக்க, அந்த உத்தம அசுவங்கள் கருடனுங் காற்றுந் தோற்றுப் போகும்படி தேரையிழுத்துக்கொண்டு போகுமளவில், மாரிக்காலத்தில் வானத்திலே மேகங்கள் முழங்கினாலெப்படியிருக்குமோ அப்படி போலே கிடுகிடென்று இரதம் கோஷித்துக் கொண்டு செல்லச் சுபத்திரையின் பாங்கிகள் அவளைப் பார்த்து, எமதன்புடைய தோழீ! உனக்குத் தகுந்த புருஷன் கிடைத்ததற்காகவும், நீ அவனோடுகூட வாழ்வதற்காகவும், சுவாமியைத் தோத்திரம் செய்கிறோம் நீ ஜெயவீரப்பிரதாப திவ்ய தேசோமயனான நல்ல மகனைப்பெற்று உனக்கொருவர் நிகரின்றி மஹாராஜியாய் வாழுங்கால் நாங்களுன்னைப் பார்க்கும்படி நீ தயைசெய்ய வேண்டுமென்று சொல்லி வழிவிட்டுத் திரும்பினார்கள். பட்டணத்திலும் அரண்மனையிலுமுள்ள அநேகர் இரத விரைச்சலைக்கேட்டு ஓடிவந்து பார்த்து, நமது சுபத்திரையை யாரோ எடுத்துக்கொண்டு போகிறானென்று ஓவென்று கூச்சல்போட, யாவரும் கும்புகூடி, யாரடா இவன் நாமெல்லாமிருக்க அரண்மனையிற் புகுந்து பெண்ணையெடுத்துக்கொண்டு போகிறான் என்ன, சிலர் இவன் அரண்மனைத் தோட்டத்திலிருந்த சந்நியாசியாமென்ன, சிலர் ஆம், ஆம், முன்னமே அந்தச் சன்னியாசியைப் பார்க்கும்போதே சந்தேகமுண்டாயிருந்தது அது சரியாய் முடிந்ததென்ன, சிலர் இவன் பாண்டவரில் ஒருவனாகிய அர்ச்சுனனாமென்ன, பின்னர் யாவரும் சரிதான் அவனாய்த்தான் காண்கிறது என்று பேசிக்கொண்டே ஆயுதங்கள் வீசிப் பின்றொடர்ந்தோட, அர்ச்சுனனும் அவர்கள் ஆயுதங்களை தடுத்துக் கொண்டே போக, ரதம் ரைவதகிரிக்குச் சமீபத்திற் போகும்போது அர்ச்சுனன் தானிருந்தகுகையைத் தன் காதலிக்குக் காண்பிக்க, அவளும் இது மகா நல்ல குகையாதலால் அதை நான் நமஸ்கரிக்க வேண்டுமென்று சொல்லிக் கொங்கை குலுங்கச் சிரித்துக்கொண்டே, நமஸ்கரித்து விரைவாய்த் தேரை ஓட்டினாள்.

### அருச்சுனனை விபுருது வழிமறித்துப் போர் செய்தல்

இப்படியிருக்கப் பட்டணத்தைக் காக்கிற நிமித்தம் ரைவத பருவதத்தினருகில் வைக்கப்பட்டிருக்கிற விபுருது என்பவன் இந்தத் தேரிரைச்சலையும் பட்டணத்தாரிரைச்சலையுங்கேட்டு ஓடிவந்து பார்க்கச் சனங்களெல்லாம் ஐயையோ! அர்ச்சுனன் சன்னியாசி வேஷம்போட்டு மோசஞ்செய்து நமது குலத்துக்கு இலக்குமிபோலிருந்த சுபத்திரையைத் தூக்கித் தேர்மேல் வைத்துக்கொண்டோடிப் போகிறானேயென்று கூவுதலைக் கேட்டுச் சுபத்திரை தேரோட்டுகிறதையும் பார்த்து, முன்னம் கண்ணன் சொன்ன சங்கதியையறிந்திருந்தவனானாலும் வெளிக்குக் காட்டக்கூடாதென்று மிக விரைவாய்த் தன் சேனைகளைச் சன்னாகப்படுத்தித் தனது வில்லிற் சரமாரி பொழிந்துகொண்டே அத்தேர்க்குப் பின்றொடர்ந்தான். இவ்வாறாகப் பின்றொடர்ந்துவருவதைக்கண்ட சுபத்திரையாள

வள் தன் கணவனை நோக்கி, அதோ நால்
வகைச் சேனைகளுடனே விபிருது துரத்திக்
கொண்டு வருகிறான். அவர்களுடனே உமக்கு
யுத்தம் நேரிடுங்கால், நெடுநாளாய் என்மனதி
லிருந்த கோரிக்கை யீடேறுமென்று சந்தோ
ஷப்படுகிறேன். அஃதென்ன கோரிக்கை
யென்றால், மஹா பல பராக்கிரமங்களுடைய
அர்ச்சுனனுக்கு நாம் யுத்தத்திலே சாரதியாகி
தமது சாமர்த்தியங்களை யெல்லாம் உபயோ
கப்படுத்தவேண்டு மென்கிறதுதான் என்று
சொன்னாள். அர்ச்சுனனும் பெண்ணே! மிக
வும் சந்தோஷமாயிற்று. இப்படிப்பட்ட
சாரதியை யடைந்த வீரனாகிய என் புஜபராக்
கிரமத்தைப் பார்த்து நீ சந்தோஷப்படக்
கடவை, சேனைகள் வரட்டும் தேரை யோட்
டென்று சொல்லவே, அவளும் தேரை
துரிதமாக ஓட்டினாள். இப்படிக்குத் தேர் பட்ட
ணத்தைவிட்டு வெகுவேகமாகப் போவதைக்
கண்ட விபுருதுவானவன் வில்லை வளை
த்து நாணேற்றிட்டு, வரிசை வரிசையாய்
அளவற்ற அம்புகளை நாற்புறத்தும் பாயும்
படியாகத் தொடுத்துவிட, அர்ச்சுனன் தன்
வில்லில் நாண் பூட்டிப் பாணங்களைச் சந்தா
னஞ் செய்து தன்பேரில் விட்ட பாணங்களை
யெல்லாம் அறுத்துத் தள்ளினான்.

உடனே விபுருது கோபங்கொண்டு, மறு
படியும் மஹா கூர்மை பொருந்திய சில பாண
ங்களைத் தொடுத்துவிட அவைகளைத் துண்
டந் துண்டமாய் அறுத்து, எதிரியைக் கண்
விழித்துப் பார்க்க வொட்டாமல் அருச்சுனன்
அளவற்ற சரங்களை அமோகமாகப் பொழி
யவே, சேனைகளெல்லாம் ஒரே முகமாய்த்
திரும்பிச் சூழ்ந்துகொண்டு, கோடைகாலத்
திடிபோற் கர்ச்சித்து கத்திகள்-ஈட்டிகள்-சூல
ங்கள்-குண்டாந்தடிகள் முதலான பல வாயு
தங்களைச் சுழற்றி யெறிய, யானைகள் உலக்
கைகளைத் துதிக்கைகளாற் பற்றிச் சுழற்றித்
தேரின்பேரில் மோதக் குதிரைகள் தங்கள்
பேரிலிருக்கிற வீரர்களைத் தூக்கிக்கொண்டு
பாய்ந்து தேர்க் குதிரைகள்மேல் விழ, ரதங்
களிலிருக்கும் வீரரெல்லாம் வில்லுகளை வளை
த்து அம்புகளைத் தொடுத்துச் சரமாரி
பொழிய, அந்தச் சேனைகளுக்குத் தலைவனாகிய
அவ்வீரன் சங்கை யெடுத்துப் பூரித்துச் சிங்க
நாதஞ் செய்து, மிகலாகவத்துடனே வில்
வில் அம்புகளைப் பூட்டி, மலையின்பேரில் மே
கங்கள் சூழ்ந்து மழையைப் பொழிவது
போல் அத்தேரின்பேரில் பாண வருஷங்களை
வருஷித்து, எவ்வளவுஞ் சந்து தெரியாமல்
மறைத்துவிட்டான். அதுகண்ட அர்ச்சுனன்
மிகவு மாக்குரோஷத்துடனே தனது ஜெய
சங்கமெடுத்தூதி, வீரகொர்ச்சிதஞ் செய்து பர்
வதங்களை மூடிக்கொண்டிருக்கும் பனிகளைச்
சூரியன் தனது கிரணங்களினாலே ஒரு நிமி
ஷத்தில் நீக்குவதுபோல் அந்தப் பாணங்க
ளின் கூட்டத்தைத் தனது அம்புகளினாலே
துணித்து நீக்கித், தன்னைச் சூழ்ந்திருக்கிற
சேனையிலிருக்கும் யானைகள் குதிரைகள் முத
லாகியவைகளை வீறிட்டோடும்படி யடித்து,
அவற்றின் வீரர்களெல்லாங் கவச கிரீடகுண்
டல ஆயுத மில்லாதவர்களாய் பதைபதைக்கச்
செய்து, தேர்களின் சக்கரம்-நுகத்தடி-இரிசு
முதலியதை துளைத்து பொடியாக்கி தும்சப்
படுத்தித், தலைவனாகிய யாதவவீரனை நோக்கி,
ஓய்வீரனே! ஓடாதே, அர்ச்சுனனுடைய வலி
மையைக் கண்டு போகலாம் என்று சொல்லி
யட்டகாசஞ்செய்து, சில சரங்களைப் பிரயோ
கித்து அவன் தேர்க் குதிரைகளுடைய கழுத்
தையும் சாரதியின் கழுத்தையும் அறுத்துத்
துவசத்தை துணித்துக் கவசத்தைப் பிளந்து
வில்லை யொடித்துச் சின்னபின்னமாக்கித் தன்
மனைவிக்கு உன் சேனைபடும் பாட்டைப் பாரெ
ன்று காண்பிக்க, அவளுஞ் சந்தோஷப்பட்
டுத் தேரை வோட்ட வாரம்பிக்க, விபுருது
வானவன் திக்குதோறுந் தலைவிரி கோலமாய்
ஓடுகிற தன் சேனைகளை யெல்லாம் நிற்கும்படி
கையமர்த்தித் தான் ரதத்தினின்றுந் திடீலெ
ன்று குதித்து, ஓ அர்ச்சுனா! நிற்கவேண்டும்.
ஓ குழந்தை சுபத்திரா! நில்லு நில்லு என்று
கூவிக்கொண்டு போய் அர்ச்சுனனை வழி கட்
டிக்கொண்டு இதனைச் சொல்லுகிறான்:

ஓ அர்ச்சுனா! எனக்கிப்போது மிகவுஞ்
சந்தோஷமாயிற்று. ஏனென்றால், நீ நமது
மருமகனாக வந்தாயே என்பதினாற்றான். நீ
இவ்விடத்திற் சன்னியாசி வேஷத்துடன்
மறைந்திருந்த சங்கதி கிருஷ்ணனாலறிந்தி
ருக்கிறேன். மேலும் எப்படியாவது உனக்குச்
சுபத்திரையைப் பாரியாக்கக் கிருஷ்ணனுக்கு
மனதிருந்தது அவரன்றோ குணாகுணங்களை
நிச்சயிக்க வல்லவர். ஆகையாலே, உன் விஷ
யத்திலே நடந்த சரித்திர மெல்லாம் எனக்
குத்தெரியும் இப்போது நீ சுபத்திரையுடனே
இந்திரப் பிரஸ்தத்திற்குப் போகவேண்டிய
துந் தெரியும். ஆனாலும் ஜனங்களுடைய

கோஷத்துக்காக உன்னோடு யுத்தஞ் செய்ய வந்தேன், அர்ச்சுனா! நான் சொல்லவேண்டிய வார்த்தை யொன்றிருக்கிறது அதென்னவெனில், இந்திரன் சசிதேவியைக் கலியாணஞ் செய்து கொண்டதுபோல், நீ எங்கள் பெண்ணைக் கலியாணஞ் செய்துகொண்டு விளங்குகிறாய். ஆகையால், இனி எங்கள் பெண்முகங் கோணாமல் நடக்க வேண்டுமென்று கோருகிறேன். நீ சுகமாய்ப் பட்டணம் போய்ச் சேர்ந்து, உன்னண்ணன் தம்பிமார் முதலாகிய யாவரும் சந்தோஷப்படும்படி பார்த்து, ஓ குழந்தாய்! நீ நல்ல புருஷனை யடைந்தாய். மிகவும் பாக்கியசாலி. நீ மாமியார் முதலாகிய பந்துக்களும் புருஷனும் உவக்கும்படியாக நற்செய்கை செய்து வாழக்கடவாய். ஸ்ரீ கிருஷ்ணன் இவ்விடம் வந்தவுடனே சகல வரிசைகளும் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்து சேரும். ஆகையால் சுகமாகப் போங்களென்று சொல்லவே யர்ச்சுனன் விபுருதுவை நமஸ்கரித்து விடைபெற்று, அத்திவ்ய ரதத்தில் ஏறிக்கொண்டு முன்போலவே புறப்பட்டுப் போனான்.

### அர்ச்சுனனோடு பகைத்தெழுந்த யாதவ வீரர்களை ஸ்ரீ கிருஷ்ணதேவர் சமாதானப்படுத்துதல்

இப்படி போகும்போது சகல சைன்னியங்களும் இது மிகவும் அன்னியாயம். ஊரிலொருவரு மில்லா திருக்கும்போது பெண்ணைத் திருடிக்கொண்டு போகலாமா? இதுதானா ராஜகுமாரனுக்கு லட்சணம்? இந்தச் சேனாபதி கையிலாகாதவர், தன்னந்தனியாயிருக்கு மொருவனைத் தனது சேனையோடெதிர்த்துப் பிடிக்கமாட்டாமற் போனாரே யென்று கூவிக்கொண்டு திரும்பித் துவாரகாபுரிக்குவந்து, சுதர்மையென்னுஞ் சபைக் கதிகாரியா யுள்ளோனிடத்தில் அதனைத் தெரிவிக்க, அந்தச் சபையதிகாரியும் உடனே மிகுந்து ஒலிக்கத்தகுந்த பெரிய பேரிகையை யடிக்க உத்தரவு பண்ணினான். அப்படியே ஆபத்துக் காலத்துக்கு அடையாளமாகிய அந்தப் பேரிகையை அடிக்கவே, அந்தச் சத்தங் கேட்டமாத்திரத்தில் தீவினடுவி லிருந்த யாதவர்கள் யாவரும் மிகவுங் கலக்கமுற்று, ஒரு காரியமுந் தோற்றாமல், எவனெவன் எந்த வேலை செய்துகொண் டிருந்தானோ அந்த வேலையை அப்படியே விட்டுவிட்டு, ஆசனங்கள்-பாத்திரங்கள்-வஸ்திரங்கள் - ஆபரணங்கள் முதலான சகல சாமக்கிரியைகளையும் போட்டுவிட்டு ஒருவரோடொருவர் பேசாமல் அங்கிருந்து ஒரு நிமிஷத்துக்குள்ளாக மேற்படி சபையைவந் தடைந்தார்கள். அந்தச் சபையதிகாரி இவர்களுக்கு அர்ச்சுனன் பெண்ணைக் கொண்டுபோனதும், விபுருது துரத்தி பங்கப்பட்டதுந் தெரிவித்தான். அதுகேட்ட யாதவர் யாவரும் மிகுந்த கோப மடைந்து, கண்கள் சிவக்க உதடுகளைக் கடித்துக்கொண்டு, ஆசனத்திற் பொருந்தாமல் எழும்பி எழும்பி, ஓய் சேனாதிபதிகளே! ஏன் சும்மா யிருக்கிறீர்கள்? சீக்கிரம் ரதங்கள்-யானைகள்-குதிரைகள்-காலாட்கள் என்கிற நால்வகைச் சேனைகளையும் சித்தப்படுத்துங்கள். கவசங்களைத் தரியுங்கள். கத்தி-கேடயம்-ஈட்டி-வேல்-வல்லயம்-கட்டாரி-வில்-தூணி முதலியவைகளையுமெடுத்து கட்டிக்கொள்ளுங்கள் என்று ஆக்கிரமித்து கூவவே சேனைகளைச் சேனைத் தலைவர்கள் சித்தப்படுத்தினார்கள். சில வீரர்கள் தாங்களே எழுந்திருந்து தங்கள் தங்கள் வாகனங்களைச் சித்தப்படுத்திக் கவசகுண்டலங்களாதி ஆபரணங்களோடு ஆயுதமுதலானவைகளுடனே மகாவுக்ர கோபாவேசமாய்ச் சன்னாகப்பட்டு வந்தார்கள்.

இப்படிக்குச் சேனைகளும் வீரர்களும் சூழ்ந்து நிற்க, சங்குகள்-காளங்கள்-பேரிகள்-கரிகளின் பீஷ்காரங்கள்-பரிகளின் கனைத்தல்கள்-வீரருடைய சிங்கநாதங்கள் - இரதங்களுடைய கோஷங்கள் இவையாவு மெழும்பித் திக்குகளைச் செவிடுபடச் செய்ய மதுபானஞ் செய்து மதத்திரா நின்ற பலராமர் யாதவவீரர்களை நோக்கி, ஓய் வீரர்களே! என்ன நீங்கள் அறியாதவர்கள் போற் குதிக்கிறீர்கள்? கிருஷ்ணன் சும்மாயிருக்க உங்களுக்கேன் இந்த யோசனை? முன்னமிவன் கருத்தறிந்து பின் பந்த முயற்சிகளைச் செய்யவேண்டும். சகல காரியங்களிலு மகாபுத்திமானாகிய கிருஷ்ணன் தன் கருத்தை வெளியிட்டும் பின்பவன் கருத்துக்கிசைந்தபடி நடப்போமென்று பலதேவர் சொல்ல, அதுகேட்ட யாவரும் நல்லதப்படியே செய்வோமென்று அங்கீகரித்து, முன்போல யுத்தத்திற்காகக் களகளவென்றிரையாமல் ஆசனங்களி லுட்கார்ந்தார்கள். பின்பு பலதேவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, ஓ மூன்று லோகங்கட்கும் கர்த்தராகியும், மூன்றுகாலமும் அறிந்தவனாகியுமிராநின்ற கிருஷ்ணா! இந்த ஜனங்கள் இரையு

மிரைச்சலேயும் நடந்த காரியத்தையு மறிந்திருந்தும், என்ன சும்மாவிருக்கிருய்? அர்ச்சுனனுக்கு உன்னேப்பற்றி மரியாதை செய்தோமே யல்லது வேறில்லே. அம்மடையன் நமக்கு மரியாதை பண்ணத்தக்கவஞ? அவனே கெட்ட நினேப்பும் நடக்கையு முடையவன். குலத்தைக் கெடுக்கப் பிறந்தவன். இல்லாவிட்டால் எவனுகிலும் உண்ட வீட்டுக்கு இரண்டு நினேக்கிறவனுண்டா? நான் நற்குலத்திற் பிறந்தவஞ யிருக்க, ஆபத்துக்களிலுபகாரிகளாகிய நமக்கிப்படிப்பட்ட அபகாரஞ் செய்யலாமா? மேலுமிவர்களுக்கும் நமக்கும் பெரியவர்கள் நாள்முதற் சம்பந்தம் நடந்துவருகிறது. இதுவரையில் இவன்போல் யாராகிலும் இப்படிப்பட்ட சாகச காரியஞ் செய்திருப்பார்களா? இவனிப்படிக்குச் செய்யலாமா? நல்லது அந்த துஷ்டன் என்னேயும் உன்னேயுங்கூட எள்ளவேனும் மதியாமல் வீட்டுக்குள்ளே புகுந்து, திருடன்போலே பெண்ணே யெடுத்துக்கொண்டு போனதை நாமெப்படிச் சகித்திருக்கலாம். அந்தப் பஞ்சை மனிதன் என் மானத்தைப் போக்கிஞல் நான் பொறுப்பேனே? ஆகையா லிப்பொழுதேபோய் இந்தப் பூமியிற் கவுரவ வமிசமே யில்லாமற் செய்துவிடுகிறேன். நீ சும்மாயிரு, கிருஷ்ணு! அவன் செய்த அக்கிரமத்தைக் கொஞ்சம் பொறுக்க மாட்டேனென்று மிகவும் ஆக்குரோஷத்துடனே பிரளயகால மேகம்போற் கர்ச்சியா நின்ற பலராமரை யாதவர்களெல்லா மனுசரித்துத் தாங்களு மப்படியே செய்வதுதான் நன்றென்று கூடவே இரைந்து பேச, ஸ்ரீ கிருஷ்ண சுவாமியானவர் யாவரையும் பார்த்துச் சொல்லுகிருர்.

ஓ வீரர்களே! சற்றே நில்லுங்கள் எனக்குத் தோன்றினதைச் சொல்லுகிறேன் அதை நீங்கள் ஞாபகமாய் கேளுங்கள். ஏனெனில், முன்னம் நானுய் ஒன்றுஞ் சொல்லக்கூடாதென்றிருந்தேன். இப்போதண்ணுவே என்னிஷ்டத்தைச் சொல்லச் சொல்லி நியமித்தாராகையாற் சொல்லுகிறேன். அதாவது ஆதியில் அந்தக் கபட சன்னியாசியைக் குறித்து நீங்களெல்லாங் கேட்டபோதே எனக்குச் சந்தேகமா யிருந்தது. அந்தப்புரத்திலே கொண்டுவந்து வைக்க வேண்டாமென்று சொன்னேன். அதை நீங்கள் கேளாமல் உங்களிஷ்டப்படி செய்துபோட்டீர்கள் அதனுலே இப்போது இவ்வளவு வருத்தம் நேரிட்டது. போனது போயிற்று? இனியென்ன அந்த யோசனே? வேறு யோசனே செய்யவேண்டும். எப்படியும் சுபத்திரை அர்ச்சுனனுக்கு அம்மான் மகள். கலியாணத்துக்கு முறைதான். அவனும், குலம், வித்தை, சாமார்த்தியம் முதலான குணங்களிலே தகுந்தவன்தான். ஆனுலவன் மோசமான காரியஞ் செய்வதற்காக நாம் கோபிக்க வேண்டியதா யிருக்கிறது. ஆகிலும் பதருமல் எதையும் செய்யவேண்டும். இப்படி அர்ச்சுனன் செய்த காரியத்தினுலே நமது குலத்துக்குப் பெருமையே யல்லது சிறுமை யெவ்வளவுமில்லே. எப்படி யென்ருல், அர்ச்சுனனே மிருந்த பலசாலி அவன் நம்மோடெதிர்த்தே இப்பெண்ணேக் கொண்டு போகலா மப்படியிருக்க, ரகசியமாய் கொண்டு போனதினுலே நாம் மகாவீரரென்று பெருமையே யாகிறதன்றியும் அவன் நாமெல்லாம் பணத்திலே மதிப்பு வைத்துக் கன்னியை விற்கப் புகுபவர்களென்றே நினேத்து, அவ்வளவு பொருள் கொடுக்கமாட்டாமல் க்ஷத்திரிய தருமத்திற் கேற்படிக்கு கன்னிகையைப் பலவந்தமாய் எடுத்துக்கொண்டு போனதாய்க் காணப்படுகிறது. இனி நாமெல்லாஞ் சேனேகளேக் கூட்டிக்கொண்டு யுத்தத்திற்குத்தான் போனேம். அவனேச் செயிக்கப்போகிறதே யில்லே. இப்போதிருக்கிறபடி யிருந்தால் அவனுக்கு நாணம் நமக்கு கௌரவம் சண்டைக்குப் போய்த் தோற்று வந்தால் அதைவிடத் தாழ்வு நமக்கு வேறில்லே போனதுபோயிற்று, நமது பெண் தகுந்த க்ஷேத்திரத்திற் சேர்ந்ததே யன்றி வேறில்லே. ஆகையால், அமைவுடனே நாமுமந்த காரியத்திற்குச் சம்மதித்தவர்போல் நடத்தவேண்டியதை நடத்தினுல் நல்லது. இதுதான் எனக்குத் தோற்ற யோசனே, இது உமக்கு யுக்தமா யிருந்தால் அங்கீகாரஞ் செய்யுங்கள்; இல்லாவிட்டால் உங்களிஷ்டப்படி நடவுங்களென்று பகவான் பரிவுடன் சொல்ல, பலராமர் முதலாகிய யாதவ வீரர்களுக்குக் கிருஷ்ணன் சொல்லுவது யுக்தியோடுகூடியதா யிருக்கிறதென்று தெரியும் பேரிகை யடித்துக்கொண்டு மீளவும் யுத்தத்திற்காகவே சித்தப்பட்டார்கள்.

இப்படி இந்த ரணபேரிகை சப்தத்தைக் கேட்ட மாத்திரத்தில் அர்ச்சுனன் சுபத்திரையைப் பார்த்து, அடி பெண்ணே! உனது பந்துக்களெல்லாம் யுத்தத்திற்கு வருகிறதுபோற் காண்கின்றது. யுத்த பேரிகையின் சத்தம்

கேட்கிறது. ஆகையால் திருப்பு ரதத்தை, குடியரும் மடையருமாகிய அவர்களை யெல்லாம் தொமிசம் பண்ணிப் போடுகிறேன் மூடர்களாகையால் தங்களுடைய யோக்கியதையையும் அறியாமல், விளக்கைக் கண்ட விட்டிற் பூச்சிகள்போல் ஓடி வருகிறார்கள் என்று கோபத்துடனே பேசியதைக் கேட்ட சுபத்திரை மனங் கலங்கி முகம் வாடித் தன் கணவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு ஓ என்னுயிராகிய நாயகனே! இப்போது என் பேரில் தயைவைத்து என் வார்த்தையின்படி நடக்கவேண்டும். அஃதென்னவென்றால், யாதவர்களை நீர் சங்கரிக்கப் புறப்படுவீராகில் யாதவர் குலத்திற்கு மிர்த்தியு சுபத்திரை யென்று எனக்கு மிகுந்த நிந்தை வந்துவிடும். சந்தேகமில்லை. அப்படி நான் குலத்துக்கெல்லாம் நாசகாரியாகி நிந்தைபெற்று உலகத்தி லிருக்கலாமோ? ஆகையால் மனதைப் பெரிது பண்ணி, இந்திரப்பிரஸ்தப் பட்டணத்திற்கே திரும்பவும் யென்று வேண்டிக்கொள்ளவே அர்ச்சுனன் மிகவும் இதங்கி அவளை கட்டிக்கொண்டு முத்தமிட்டு, அடி மின்னிடையே! பயப்படாதே உன் வார்த்தைக்குக் குறுக்கில்லை இனி உன்னிஷ்டப்படி நமது பட்டணத்திற்கு இரதத்தை நடத்துகவென்று கட்டளையிட்டான். யாதவர்கள் புறப்பட்டுப் பட்டணத்தைத்தாண்டி வரும்போது, மெத்தைகளிலும், மேடைகளிலும், பிரகாரங்களிலும், தோப்புகளிலும், சர்ப்பங்கள்போல் விழுந்திருக்கிற அர்ச்சுனனுடைய அம்புகளைக் கண்டாச்சரியமடைந்து கிருஷ்ணன் சொன்னவார்த்தை மெய்தானென்று எண்ணிக்கொண்டு, ரைவதபருவதத்தின் பக்கத்தில் வந்து, அங்கிருக்கிற சேனாதிபதியாகிய விபுருது என்கிறவனால் முன்னம் நான் யுத்தம் செய்து தோற்றுப்போனதையும், அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தின் விசேஷத்தையுஞ் சொல்லிக் கேள்விப்பட்டு, ஆகிலும் அர்ச்சுனனைச் சன்மானித்தற் பொருட்டேனும் அவனை நாமனைவரும் பின்தொடர வேண்டுமென்று நினைத்து அப்பால் அவன் மிகவுந் தூரமாகச் சென்றானென்று நிராசைசெய்து திரும்புகிறவர்கள் சிறிது நிதானித்து, நமது பெண்ணுக்கேனு மனதிர்ப்தியாகும்படி நமது பந்துவர்க்கச் சேனைகளிற் சிலரை யனுப்பவேண்டுமென்று கருதினவர்களாய் தகுதியான யாதவகுல வீரர்களையும் சில சேனைகளையுங் கூட்டிச் சில சேனை குதிரை முதலிய பரிவாரங்களையுங் கொடுத்து, நீங்கள் விரைவிற் போய் வழியில் நமது சுபத்திரையை கலந்துக்கொண்டு அவ்விந்திரபுரம் போயிருங்கள். நாங்களும் பின்னால் வந்து சேருகிறோமென் றனுப்பிவிட்டு மற்ற யாவரும் ஒருவாறான சதானத்தோடு துவாரகாபுரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

### அர்ச்சுனன் சுபத்திரா தேவியோடு இந்திரப்பிரஸ்தம் சேர்தல்

இப்பால் அர்ச்சுனன் துவாரகையைச் சேர்ந்த உத்தியான வனங்களையும் கிரிவிருசம் என்கிற பட்டணத்தையும் அனேகமலைச்செறிவுகளையும் உச்சயனி என்கிற நகரத்தையும் பற்பலவிதமான காடுகளையும் தேனுமதி என்கிற தீர்த்தத்தையும் அஸ்வரோகிதமென்கிற தடாகத்தையும் விதவிருத்தமென்கிற மலையையும் அற்புதமென்கிற பர்வதத்தையுங் கடந்து போய், புரோச்சிருங்க மென்கிற விடத்திலிருந்து, கவுரவதீயென்கிறஆற்றைத்தாண்டி, சாளவதேசம் போய் அங்கிருந்து மிஷத தேசத்துக்குச் சென்று அங்கிருக்கிற தேவாமிருதமென்கிற பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே தேவாரணியம் போய்ச் சேர்ந்தான். அந்த தேவாரணியத்தி லிருக்கும் முனிவர்கள் அர்ச்சுனனைக் கண்ட மாத்திரத்தில் மிகவும் உபசாரஞ்செய்ய அவ் வுபசாரங்களைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டுக் குருதேசம் போய்ச் சேர்ந்து, தன் அண்ணன் தம்பிமாராகிய சிங்கங்கள் வாசஞ் செய்யுங் குகைபோன்ற தன் பட்டணத்தைத் தூரத்திற் கண்டு களிப்படைந்தான். பின்பு அந்த இந்திரப் பிரஸ்தபுரிக்கு சமீபத்திலிருக்கும் ஓர் இடைச்சேரியில் இறங்கி, போஜனம் முதலானவைகளைச் செயித்து சுபத்திரையை நோக்கி, அடி யதுகுலத்து மன்னரசே! இனி நாம் சேரவேண்டியது இந்திரப் பிரஸ்த புரிதாம். ஆகையால், நான் சொல்லும் ஒரு வார்த்தையை நீ அங்கீகரிக்கவேண்டும். அதாவது, நீ இடைச்சிபோல வேடம் போட்டுக்கொண்டு நமது நகரத்திற்குச் செல்லவேண்டும். ஏனென்றால், என்னுடன்கூட நீ மெய்யான ரூபத்துடன் வருவாயாகில், ஒருவேளை திரௌபதி மனம் நொந்து ஏதாகிலும் கடூரமாகிய வார்த்தை சொல்லுவாள். நீ தனியே வேறு ரூபத்துடன் போய் அவளைப் பணிவாயேயாகில், நல்ல வார்த்தை சொல்லுவாள். அவள் முதற்சொன்ன வார்த்தைக்கு வேறாக நடக்கமாட்டாள் ஆனதால் நீ மாறுவேஷத்

டனே வரவேண்டுமென்று சொல்லக்கேட்ட சுபத்திரை அர்ச்சுனனை நோக்கி, என் கணவனே! உமது உத்தரவுக்குத் தடங்கல் செய்வதுண்டோ? எப்படி நியமித்தால் அப்படி நடக்கிறேனென்ன, அர்ச்சுனன் மிகவும் சந்தோஷப்பட்டு, அவ் விடைச்சேரியிலிருக்கும் இடையரைக் கூப்பிட்டு இச் சுபத்திரையோடு இடைச்சிகள் யாவரும் நமது நகரத்திற்குச் செல்லவேண்டுமென்று ஆக்கியாபிக்க, இடையரெல்லாம் ஒரு நிமிஷத்துக்குள்ளே தங்கள் தங்கள் ஸ்திரீகளைச் சகல அலங்காரங்களோடும் சித்தப்படுத்தினார்கள்.

அப்பால் அர்ச்சுனன் தன் மனைவிக்குத் தானே ஆய்ச்சிவேஷம்போட்டு, முன்னிருந்த அவ்வுருவத்திலும் இவ்வுருவம் மிகவழகுடன் விலாசம் பொருந்தி விளங்குவதைக் கண்டு, அவளைப் பலமுறை கட்டி யணைத்து முத்தமிட்டு, ஆய்ச்சியர் எல்லாருடனேயுங் கூட்டி அனுப்பிவிட்டான். அவளும் அப்படியே இந்திரபிரஸ்தம் போய் அரண்மனைக்குள் சென்று, தனது அத்தையாகிய குந்திதேவியை நமஸ்காரஞ்செய்து, அவளாலே ஆசீர்வதிக்கப்பட்டு, பின்பு திரௌபதியின் பாதங்களில் தெண்டனிட்டு, நான் உனது பணிவிடை செய்பவளென்றாள். அந்த பாஞ்சாலி யாதவ கன்னியினுடைய ரூபத்தைக் கண்டு வியப்படைந்து, மிகவுஞ் சந்தோஷ நினைப்புடனே அவளைப் பார்த்து, அடி பெண்ணே! நீ உனக்குத் தகுந்த உத்தம புருஷனோடு கூடி நன்மக்களைப்பெற்று சக்களத்தியின் விரோதமின்றி வாழக்கடவை யென்று ஆசீர்வாதஞ் செய்ய, அதைக் கேட்ட சுபத்திரையானவள் நீ சொன்னவாக்கு சரியாயிருக்க வேண்டுமென்றுசொல்ல, அப்படியே யாகட்டுமென்று இவளை வாரியெடுத்து தன் மடியின்மீதில் உட்கார வைத்து, உற்றுப்பார்த்து இவள் சுபத்திரையென்றறிந்து, மனதிற் கோபமில்லாமல் ஆலிங்கனஞ் செய்து, மேகவண்ணனைக் கண்ணனை நினைத்து, நல்ல காரியஞ்செய்தார் ஸ்ரீ கிருஷ்ணன் என்று மிகவுங் கொண்டாடிக் கொண்டிருந்தாள். இப்படியிருக்க, அர்ச்சுனனவன் அந்த இடைச்சேரிவிட்டுப் புறப்பட்டுப் பட்டணம் பிரவேசிக்கும்போது சுபத்திராதேவிக்குத் துணையாக யாதவத் தலைவர்களால் அனுப்பப்பட்ட வீரர்களுஞ் சேனைகளுங் கடல்போல் இரைந்துகொண்டு பின்னேடே வந்துவிட்டன. அர்ச்சுனன் அந்தச் சேனைகளோடு கூடிப் பட்டணத்திற் பிரவேசிக்கப், பட்டணத்தி லிருப்போரெல்லாம் அர்ச்சுனனைக் கண்டு நெடுநாளானபடியினாலே சந்தோஷப்பட, அர்ச்சுனனும் தனது பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே அரண்மனை வாசல் தேர்விட்டிரங்கி, புரோகிதராகிய தவுமியரையும் அண்ணனாகிய தருமபுத்திரர் வீமசேனனையும், தாயாகிய குந்திதேவியையும் நமஸ்காரஞ் செய்து, தம்பிமார்களாகிய நகுல சகாதேவர்களாலே நமஸ்கரிக்கப்பட்டு, அவர்களுக்கு ஆசீர்வாதஞ்செய்து, பின்பு தன் மனையாளாகிய சுபத்திரையையும் அவளுக்காகவந்த யானை குதிரை ஒட்டைமுதலானவைகளையும் மகாராசாவாகிய தன் அண்ணனிடத்தில் ஒப்பிவித்தான். அந்த யாதவ சேனாவீரர்களும் மகாராஜாவுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்ய, அவர் இவர்கட்குத் தக்கபடி சன்மானங்கள் செய்து சபையில் உட்காரவைத்து, தன் தம்பிமார்களுடனே தானுமிருந்து, சுபத்திரையைத் தாங்கள் மனைக்குவந்த லட்சுமி தேவியேயென்று சந்தோஷித்து, அந்தப்புரத்திற் கனுப்பிவிட்டார். இவ்வாருகத் தருமபுத்திரர் முதலானவர்கட்கும் குந்தி திரௌபதி முதலானவர்க்கும் சுபத்திரையொருகண்போல் மிகவும் இஷ்டமா யிருந்தாள்.

## சுபத்திரைக்குக் கிருஷ்ணன் வரிசைகொண்டு வருதல்

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே! இவ்வாருக அர்ச்சுனன் சுபத்திரையை எடுத்துக்கொண்டு யாதவ சேனைகளை ஜயித்துப் போட்டுத் தன்னகரம் வந்துசேர, பலராமர் கிருஷ்ணன் முதலானவர்கள் தீவிலிருந்து துவாரகை வந்து, இச்செய்தியைக்கேட்டு மிகக் கோபமடைந்து, உடனே அர்ச்சுனன் பேரிற் தண்டெடுக்க எத்தனப்பட்டு கிருஷ்ணனுடைய யோசனையினாலேயும் அவரால் அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தின் பெருமையைக் கேட்டதினாலேயும் அந்தப் பிரயத்தனத்தை விட்டுச் சும்மாயிருந்தார்களன்றோ? இப்படியிருக்கத் துவாரகாபுரியிற் சகலமான பேரும் அர்ச்சுனன் சுபத்திரையைக் கொண்டு போனதற்குக் கிருஷ்ணன் உளவில்லாவிட்டால் இப்படி நடக்காதென்றும், அக்கிருஷ்ணன் தன் தங்கையை அர்ச்சுனனுக்குக் கொடுக்கவேண்டுமென்று இப்படிப்பட்ட காரியஞ் செய்வித்தாரென்றுஞ் சொல்லிக்கொள்

ளக் கேட்டு, ஸ்ரீகிருஷ்ணன் யாவரும் இப்படி சொல்லும்போது நான் இல்லையென்றால் ஒக்குமாவென்று சமாதானஞ்சொல்லித் தமது தமயனாரிடத்திற்கு வந்து அண்ணா! அர்ச்சுனன் செய்துபோன காரியத்திற்கு யாவரும் என்பேரில் அபவாதஞ் சொல்லுகிறார்கள் சொல்லட்டும் இனி யார்தான் செய்யவேண்டுவதென்ன காரியம் மிஞ்சிப் போயிற்று. ஆதலால், நான் பாண்டவர்களுடைய பட்டணத்திற்குப்போய்ச் சுபத்திரையைக் குறித்து நடப்பிக்க வேண்டியதுகளை நடப்பித்து வருகிறேன் என்று விடை கேட்க, அதற்கு அவர் தம்பி கிருஷ்ணா! எனக்கும் அது கடமையாகையால் நானும் வருகிறேன் வா போவோமென்ன இருவரும் உக்கிரசேனன் முதலான பேர்களுடனே இச்சேதி சொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு, நால்வகைச் சேனைகளையும் ஆயத்தப்படுத்திப், பல ஆபரணம் முதலானவைகளை எடுத்துக்கொண்டு, சர்வ வாத்தியங்களும் முழங்கப் புறப்பட்டார்கள். அப்போது சில அடையாளங்களினாலேயும் சுபத்திரையின் தோழிகள் சொன்ன ஜாடைகளினாலேயும் இந்திரன் முதலானவர்கள் வந்து அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் விவாகத்தை நடப்பித்து வந்தார்களென்று தெரிந்த யாதவர்களெல்லாம், மிகவுஞ் சந்தோஷ மடைந்தார்கள்.

இப்படியாக மகா சந்தோஷத்துடனே, அக்குரூரன்-கிருதவர்ம்மா-உத்தவன் - சத்தியனென சாத்தியகி-பிரத்யும்னன்-சாம்பன்-நிசிதன்-சங்கு - சாருதேஷ்ணன் - சுதேஷ்ணன்-சல்லி-விபுருது - காரணன் - கதன் முதலாகிய யாதவர்களெல்லாம் பலராம கிருஷ்ணர்களுடனே மகா சேனைகளைக் கூட்டிக்கொண்டு வெகு சீக்கிரத்தில் இந்திரப் பிரஸ்தத்திற்கு வந்தார்கள். இவ்வண்ணமாக இவர்கள் வருகிற சேதிகேட்ட தருமபுத்திர மகாராஜன் மிகவும் பரப்பரப்பாய் புரோகிதர் பிராமணர் முதலாகிய பேர்களுடனே கிருஷ்ணனை எதிர்கொள்ள நகுல சகாதேவர்களை யனுப்பி, தான் வீமனுடனே பல தேவரை எதிர்கொண்டார். இவ்வாறகப் பாண்டவர்கள் எதிர்க்கொள்ள ஒருவரையொருவர் கண்டு மகிழ்ந்து க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு, மூத்தவர்களைத் தண்டனிட்டு, இளையவர்களை ஆசீர்வதித்து, உடனே பட்டிணத்திற்குப்போய் அரண்மனையைச் சேர்ந்தார்கள். பின்பு தருமபுத்திரர் சகல யாதவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி உபசாரஞ்செய்து விருந்து நடத்தினர். பலராம கிருஷ்ணர்கள் வந்ததினாலே குந்திக்கும் திரௌபதிக்கும் உண்டாகிய சந்தோஷத்திற்கு அளவில்லை. பாண்டவர்களும் இவ்விருவரையுங் கண்டு பேரானந்த மடைந்திருந்தார்கள் மற்ற யாதவர்கள் பாண்டவர்களால் மரியாதைசெய்யப்பட்டு, மகளாகிய சுபத்திரையைக்கண்டு சந்தோஷப்பட்டு வாழ்த்தினார்கள். ஸ்ரீகிருஷ்ணன் தன் தங்கைக்கு நவரத்தினங்கள் இழைத்த சகல ஆபரணங்களும், விசித்திரமாகிய வஸ்திரங்களும், அநேக ரத்ன பாத்திரங்களும், குதிரைகள்-யானைகள்-ஒட்டைகள்-தேர்கள்-பசு மாடுகள்-பல்லக்குகள்-கட்டில்கள்-பெட்டிகள்முதலானவைகளும் சீதனங் கொடுத்தார். மருமகனாகிய அர்ச்சுனனுக்கும் பல பூஷணங்கள்-ஆசனங்கள்-வேலைக்காரர் முதலான உலுப்பைகளைக் கொடுத்தார். பலராமர் விசேஷமாக அர்ச்சுனனுக்கு ஒரு பாதபீடங் கொடுத்தார். இப்படியெல்லாம் வரிசைகொடுத்துத் தங்கையைக் கட்டியணைத்து முத்தமிட்டுத், திரௌபதியினிடத்திற்கு அவளை யழைத்துக்கொண்டு போய், அம்மா பாஞ்சா! இவள் உன்னுடைய அடைக்கலம். நீதான் இவளைக் காப்பாற்றவேண்டுமென்று சொல்லிக், குந்தியையுங் கண்டு பேசி, இப்படி சிலகாலம் அவ்விடத்திலே பாண்டவரோடு மகிழ்ந்துகொண்டு மிக விநோதமா யிருக்க, சகல யாதவர்களும் பாண்டவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்கள் ஊருக்குப் புறப்படுமளவில், அர்ச்சுனனும் சுபத்திரை முதலான பேர்களும் கிருஷ்ணனை இருக்கச் சொல்லிப் பலவந்தம் பண்ணினார்கள். கிருஷ்ணனும் அப்படியே யிருக்க மனதாயிருந்தபடியினாலே யாதவர்கள் அவரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு துவாரகாபுரிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். கிருஷ்ணன் அர்ச்சுனன்கூட ஆற்றின்கரையில் தினந்தோறும் போய் விளையாடிக்கொண்டு வேடிக்கையா யிருந்து வருவார்.

### அபிமன்னியு உற்பவம்

இவ்வாறிருக்கிற நாளிலே அந்த அர்ச்சுனனவன் சுபத்திரையோடு உடலுயிர் போலவும், மலருடன் வாசனைபோலவும், மணியுடனொளிபோலவும், கண்ணுடன் பார்வை போலவும், இரவு பகல் அறுபது நாழிகையும் பிரியாமற் சரசசல்லாப விநோத காமபோக

மென்கிற அமுதக்கடலி லாழ்ந்து, பேரின்ப மும் இதற்கு நிகராகாதென்னும்படிப் பலவித் சிங்காரவிநோத சுகங்களை யனுபவித்துக் கொண்டு, அவள் ஒன்றைச் சொல்வதற்குத் தடையே யன்றிச் சொல்வதன் முன்னே அவ ளுக்கு இஷ்டமானபடிக்கெல்லாம் நடந்துக் கொண் டிருந்தான். இப்படி யிருக்கும் நாளிற் சுபத்திரை கருத்தரித்தாள். அப் போது அவள் முன்னையழகிலும் அதிக ஒளி வடைந்து நிற்க,அர்ச்சுனனும்-கிருஷ்ணனும் மிகவுஞ் சந்தோஷ மடைந்திருந்தார்கள். இங்ஙனம் பத்து மாதங்களும் நிறைந்த பின்பு இந்திராணி ஜயந்தனென்கிறவனைப் பெற்றதுபோல் மகா பல பராக்கிரமசாலியும் மிகப் பிரகாசமும் பொருந்திய ஓர் குழந்தை யைப் பெற்றாள். அர்ச்சுனனுனவன் தன்னிலு மேலான ரூப லக்ஷணமும், பல லக்ஷணமும், குண லக்ஷணமும் வாய்ந்த புத்திரன் பிறந்த தைக் கண்டு, மிகவும் சந்தோஷத்தினாலே சாதகருமஞ் செய்வித்துப், பதினாயிரம் கோ தானம் - பூதானம் - வஸ்திரதானம் - சுவர்ன தானம் முதலாகிய பற்பல தானங்களும் வழங் கினான். அப்பாற் பனிரண்டாவது நாளிற் புரோகிதர் முதலாகிய அனேகம் பெரியோர் கள் வந்து இக் குழந்தையைப் பார்த்து, இவ னுக்கு அபிமன்னியு வென்று பெயரிடவேண் டும். ஏனெனில், அபி என்றால் இவன் ஒன் றுக்கும் பயப்படமாட்டான். மன்னியு என் றால் சத்துருக்கள் விஷயத்தில் மகா கோபம் பொருந்தியவன். ஆகையால், இவனுக்கு இப் பெயரே சரியென்று நட்சத்திரத்திற் கிணங்க அப் பெயரிட்டார்கள். அப்பாற் பாண்டவர் கள் அக் குழந்தைக்கு காப்பிட்டுத் தொட்டிலி லிட்டு மிகவும் அன்புடனே வளர்க்க, அவன் சுக்கில பட்சத்துச் சந்திரன்போல் தினந் தோறும் விசேஷமாக வளர்ந்து வந்தான். ஐந்தாம் வயது வந்தவுடனே வித்தியாப்பி யாசஞ் செய்யப்பட்டு, பனிரண்டு வயதான வுடனே உபநயனமும் செய்யப்பட்டு, ஆசிரி யர்களால் வேத சாஸ்திரங்களையும் அர்ச்சுன னால் வில்வித்தையையும் சாங்கமாகக் கற்று, எல்லாரினும் விசேஷமாகிப் பாண்டவர்களும் யாதவர்களுமேயன்றி மற்றச் சகலகலா பண்டி தர்களும் பரிசனங்களும் புகழும்படியாகக் கல்வியிலும் - ரூபத்திலும் - குணங்களிலும்- சாமர்த்தியத்திலும் உயர்ந்திருந்தான். இந்த அபிமன்னியு பிறந்த செய்தியைந் துவாரகா புரியிலிருக்கிற யாதவவீரர்களனைவருங்கேட்டு ஆனந்தமுற்று வந்து அக் குழந்தைக்குஞ் சுபத்திரைக்குஞ் செய்யவேண்டிய வரிசைகளை யெல்லாஞ் செய்து, பாண்டவர்களாற் பல வெகுமானங்களைப் பெற்றுத் தங்கள் நகரம் போய்ச் சேர்ந்தார்கள். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் அபிமன்னியு சிறுவனா யிருக்குங் காலத்திலேயே நடந்த சரித்திரங் களை இனிச் சொல்லுகிறோம். அந்த விநோ தங்களையுங் கேளுமென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

*அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் முற்றிற்று.*

---

## பதினொன்காவது,
## காண்டவதகனச்சருக்கம்

கண்ணன் துதி

ஞானமாகிய பரம்பர வமிழ்தமாய் நவி ரறும்மயமாகி, வானமாயுடன் வாயுவாய்த் தேயு வாய் வனமுமாய் மண்ணுகித், தானமாமறை முறைமையிற் பற்பல சராசரங்களுமாகி, யேனமாயிவை யனைத்தையு மருப்பினு லேந் தினு னெனையாண்டோன்.

இப்படியாகப் பாண்டவர்கள் பலவாறு கச் சந்தானசம்பத்தை யடைந்து, திரிதராஷ்டிர மகாராஜனுடைய கட்டளைப்படிக்கும் வீஷ்மருடைய கட்டளைப்படிக்கும் தருமநீதி களைத் தழுவி நடக்கும் அரசர்களையும், வழுவி நடக்கும் அரசர்களைத் தண்டித்தும், இப்படி யாவரும் நல்வழி நடக்கும் செய்தி பெரும்பு கழ்பெற்று வாழ்ந்துகொண் டிருக்குநாளில், இளவேனிலென்று சொல்லப்பட்ட வசந்த காலமானதுண்டாகி சோலைகளிலிருக்கும் மர ங்களெல்லாந் தளிர்ப்பதும்-பூப்பதும்-காய்ப் பதும் பழுப்பதுமாக தழைத்து நிற்க, குயில்க ளெல்லாம் சந்தோஷமடைந்துகூவ, வண்டுக ளெல்லாம் மதுவுண்டு களித்துப்பாட, தென் றற்காற்றானது முகிழ்களை மலர்த்திச் சோலை யையசைத்து மெள்ள வீச, தடாகங்களெல் லாஞ் செந்தாமரை-வெண்டாமரை-செங்கழு நீர்-கருநெய்தல் முதலாகிய மலர்களால் அலங் காரமடைய, அவற்றிற் சக்கிரவாகம்-சாரசம்- அன்னம் முதலான நீர்ப்பலவைகள் சூழ்ந்து விளங்கிக்கொண்டிருக்க, அதுகண்ட அர்ச் சுனனுனவன் மிகவுஞ் சந்தோஷமடைந்து ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, ஓ கிருஷ்ணா!

இந்த வசந்தகாலத்தில் நாமும் தம்முடைய பிராணநாயகிகளும் காடுகளிற் போய் விளையாடிச் சலக்கிரீடைசெய்து வேடிக்கையாய்ச் சாயுங்காலம் மறுபடிவந்து சேருவோம். இது உமது மனதிற்கு இஷ்டமாயிருந்தாற் போவோம் வாருமென்ன; ஸ்ரீ கிருஷ்ணனும், அர்ச்சுனா! எனக்கும் அப்படிதான் ஆசையாயிருக்கிறது அதை நான் உன்னோடு சொல்லுகிறதற்கு இருந்தேன். முன்னுதாய் நீயே சொல்லிப்போட்டாய். மிக்வுஞ் சந்தோஷமாயிற்று நீ வா போவோமென்று சொன்னார்.

## கிருஷ்ணார்ச்சுனரை அக்கினிதேவன் கண்டு ஆகாரங் கேட்குதல்

இவ்வாறு கிருஷ்ணமூர்த்தியானவர் சம்மதச் சொற்கூறிய மாத்திரத்தில் அருச்சுனன் பிரயாணமாகிவர, இவ்விருவரும் தருமபுத்திரரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, தங்கள் நாயகிகளுடனே வாகனங்களிலேறி, வேண்டிய பரிவாரத்துடனே யமுனாநதிக் கரைக்கு வந்து, அங்கங்கே மணற்குன்றுகளும், அவைகளிற் பட்சிகள் ஒன்றோடொன்று மருவி நின்று விளையாடுவதும், சலங்களிற் றாமரைகளில் வண்டுகள் மொய்த்திருப்பதும், இவை முதலான வேடிக்கைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டே காண்டவவன மென்கிற ஒரு பெரிய வனத்தினுள்ளே புகுந்து, அதிற் சிவிங்கிகள்-புலிகள்-கரடிகள்-சிங்கங்கள்-யானைகள்-பன்றிகள் முதலாகிய துஷ்ட மிருகங்களும், அசுரர்-இராக்கதர் முதலாகிய துஷ்ட ஜனங்களும், பாம்பு முதலாகிய துஷ்ட ஜெந்துக்களும் நிறைந்து, மிகவுங் கொடுமை பொருந்திய பயங்கரமாகிய ஓரிடத்தைக்கண்டு கண்ணன் இவ்வனத்தை நாசஞ்செய்யவேண்டும் என்று மனதில் நினைத்தார். இப்படி நினைத்த கிருஷ்ணன் அவ்விடத்தை அர்ச்சுனனுக்குங் காண்பித்து, பின்பு இருவரும் ஸ்திரீகளோடுகூட அவ்வனத்தில் மற்றொருவிடஞ் சென்று, அவ்விடத்துச் சிங்காரங்களைப் பார்த்து விளையாட ஆரம்பித்தார்கள். அந்த ஸ்திரீகளும் மகா உல்லாசத்துடனே புஷ்பங்கள் பறிப்பதும், ஒருத்திமேலொருத்தி எறிகிறதும், நாயகர்மேல் வீசுகிறதும், அவர்கள் அப் புஷ்பச்செண்டுகளால் அடிக்கிறதுமாக நெடுநேரம் விளையாடிப் பின்பு பல்விதக் கனிகள் கிழங்குகள் முதலானவைகளைத் தின்று, மதுபானஞ் செய்து மதமடைந்து, ஒருவரையொருவர் அடிக்கிறதும், ஒருவர்மேலொருவர் வீழ்கிறதும், பாடுகிறதும், ஆடுகிறதும், சிரிக்கிறதும், பரிகாசஞ் செய்கிறதும், அழுகிறதும், குதிக்கிறதுமாகத் தடாகங்களி லிறங்கி ஜலக்கிரீடை செய்து கரையேறி, அவரவர்களிஷ்டப்படி யமுநா நதியின் கரைகளி லிருக்கும் வனங்களிற் போய்ப் படுத்துக்கொண்டார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தனியே தூரத்தில் யமுனையின் கரையின் ஓரிடத்திலே போய்ப் படுத்துக்கொண்டார்கள்.

இப்படி யிருக்குந் தருணத்திலே உருக்கின தங்கம்போன்ற நெடிய தேகமும், பொன்னிறத்த கண்களும், செம்பொன்னிறமுள்ள தாடி மீசைகளோடு சடையுமுடையவனுகி, கறுத்த வஸ்திரமுடுத்தி, கோடி சூரியப் பிரகாசமாய் விளங்காநின்ற ஒரு பிராமணன் இந்த கிருஷ்ணார்ச்சுனர்களிருக்கு மிடத்தில் வந்தான். அவன் வரவைக்கண்ட அவ்விருவரும் பயபக்தியுடனே எழுந்து பணிந்து, சுவாமி! நீயார்? எங்கேவந்தீர்? அதைச்சொல்ல வேண்டுமென்ன, அந்தப் பிராமணனும் ஓய் மகாராஜ சிங்கங்களே! நானொரு பிராமணன். எனக் கதிகபசி அதை ஆற்றும்படியாகிய சாப்பாடு போட யாவருக்குஞ் சக்தியில்லை. நீங்களிருவரும் மகாநுபாவர்கள். ஆகையால், எனக்கு வேண்டிய போஜனம் நீங்கள் கொடுக்க மாட்டுவீர்களென்று, உங்களிடத்திற்கு யாசிக்க வந்தேனென்று சொல்ல, அதுகேட்ட அர்ச்சுனன் அப்படியா? சுவாமி! மகா சந்தோஷமாயிற்று. என்ன போஜனம் உமக்கு வேண்டுமோ, அதனைத் தடையின்றித் தருகிறேன் தயைசெய்து சொல்லுமென்று கேட்க, அந்தப் பிராமணனவன் ஓய் ராசராசர்களே! இனி நான் மெய்யாகச் சொல்லுகிறேன் கேளுங்கள் நான் அக்கினிபகவான். அனேக துஷ்ட செந்துக்கள் வாசஞ் செய்கிற இந்தக் காண்டவவனத்தை நான் புசிக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் இந்திரனுடைய ஆதீனத்திலிருக்கிறது. அதில் தட்சகன் காவல் காத்துக்கொண் டிருக்கிறான். அதினாலே நான் அதின் அருகிற்போகக் கூடுகிறதில்லை. ஒரு வேளை எப்படியாகிலும் அதில் நான் பிரவேசித்தா லிந்திரன் மேகங்களை மழை பொழியும்படி செய்து என்னைத் தூரத்திவிடுகிறான். ஆதலால் அதில் நெடுநாளாய் நான் செய்யு முயற்சி வீணாய்ப் போகிறது. நீங்கள் மகாபல பராக்கிரமசாலிகள். அந்த இந்திரன் முதலானவர்க

னுடைய சாமர்த்தியத்தைத் தடுத்து அவ்வனத்தை எனக்கு ஆகாரமாக்குவீர்கள். நீங்கள் சொன்னவாக்கு தவருமல் அவ் வனத்தைக் கொடுத்து என் பசியாற்ற வேண்டுமென்று அக்கினி பகவான் சொல்லினுன்.

### அக்கினிபகவான் கிருஷ்ணுர்ச்சுனர்களுக்குத் தேர்-குதிரை-வில்-அம்புருத்தூணி முதலியவை கொடுத்தல்.

அதுகேட்ட அர்ச்சுனனுனவன் ஆச்சரியமும் சந்தோஷமு மடைந்து, ஸ்ரீ கிருஷ்ணன் முகத்தைப் பார்க்க, ஸ்ரீ கிருஷ்ணனுங் கண்காட்ட, அதுகண்ட அர்ச்சுன னந்த அக்கினி தேவனை பார்த்து கைகூப்பிக்கொண்டு, சுவாமி அக்கினிதேவனே! உமதிஷ்டப்படியே இவ்வனத்தை நீர் பட்சிக்கும்படி செய்வேன் இந்த கிருஷ்ணனும் நானும் சேர்ந்தால் எந்தக் காரியந்தான் முடியாது? ஆனலிப்போது நாங்கள் ஆயுதமும் ரதமும் இல்லாதவர்களாயிருக்கிறேம். இந்திரன் ஆயுதம் முதலானதுகளோடு வந்தெதிர்த்தால், நாங்கள் ஆயுதங்களில்லாம லெப்படி யுத்தம்பண்ணலாம். ஆகையாலே நீர் கிருபை செய்து ஆயுதமும் ரதமுங் கொடுக்க வேண்டுமென்று சொன்னுன். அதுகேட்ட அக்கினிதேவன் வருணனை நினைத்தான். நினைத்தமாத்திரத்திலே வருணனு மக்கினி யிருக்குமிடத்திற்கு வந்தான். அப்போது அக்கினி வருணனைப் பார்த்து, ஓ வருண! முன்னே சோமதேவனுலே உனக்குக் கொடுக்கப்பட்ட, வில்-தூணி-தேர்-குதிரை-சக்கரம்-கதை முதலானவைகளைக் கொண்டுவந்து இந்த மகானுபாவ ரிருவருக்குங் கொடு, இவர்களாலே நமக்கு வெகு காரியங்க ளாகவேண்டியிருக்கின்றன வென்று சொல்ல, அதுகேட்ட வருண னப்படியே தருகிறேன் என்றுசொல்லி, மகா சந்தோஷத்தோடு முன்னம் வில்லை எடுத்து கொடுத்தான்.

அந்த வில்லானது தேவர்களும் அசுரர்களும் ஒன்ருய் நெருங்கினுலும் வெல்லக்கூடாததாகியும், மிகவும் ஆச்சரியப் படத்தக்க பிரமாணமுடைத்தாகியும், கையில் ஏந்துவோருக்குத் தேஜஸையும் புகழையுங் கொடுக்கத்தக்கதாகியும், இது ஒன்றுனுலும் பதினுயிரம் போன்றதாகியும் விளங்கிற்று. பின்பு இரண்டு அம்புப்புட்டில்களைக் கொடுத்தான். அவைஎத்தனை நாள் எத்தனை வகை அம்புக்களை யெடுத்தாலும் மறுபடி நிறைந்தேயிருக்கும். ஒரு திவ்விய ரதங் கொடுத்தான். அதாவது உருக்கிவிட்ட வெள்ளிபோன்ற நிறத்தை யுடையதாகி, தேவமணி-கண்டாபரணம் முதலான சகல லட்சணங்களுடையவைகளாகியும்,வாயு-கருடன்-மனது இவைகளைக் காட்டிலு மதிக வேகங்க ளுடையவைக ளாகியு மிராநின்ற நான்கு குதிரைகள் கட்டி சிங்கத்தின் வால் போன்றவாலையுடைய வானரசிங்கமானது சத்துருக்க ளெல்லாம் பயந்தோடும்படி நுனியில் விளங்காநின்ற பொன்னுலாகிய தடியிற் கட்டிய விசித்திரக் கொடியோடுங் கூடி, பிரளய கால மேகத்தின் முழக்கம்போற் கிடுகிடென்று பூமி யதிரும்படி பொலிக்கத்தக்கதுமாய், அனேக சாமக்கிரியைகளை வாய்ந்து, யாவராலும் வெல்லக்கூடாத சிறப்படைந்து விளங்கிற்று. அந்த ரதத்தை முற்காலத்திற் பவுனனென்கிற பிரசாபதியானவர் உண்டாக்கிச் சோமனென்கிற தேவனுக்கு கொடுக்க, அதின் பேரில் அச்சோமன் ஏறிக்கொண்டு அசுரரையெல்லாஞ் ஜெயித்தான். அப்படிப்பட்ட திவ்விய ரதத்தை அர்ச்சுனன் பார்த்துப் பிரதட்சணஞ் செய்து, அக்கினி தேவனையும் வருண தேவனையும் நமஸ்காரஞ் செய்து, அதிலேறி கவசகுண்டலாதிகளை யெல்லாந் தரித்துக் கையிற் காண்டீபமென்கிற அவ்வில்லைப் பிடித்து கோடிய சூரியப் பிரகாசமாய் விளங்கினுன். பின்பு அக்கினிபகவான் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்கு ஒரு சக்கராயுதங் கொடுத்தான். அந்த சக்கரமானது சுற்றிலும் ஆயிரம் அரங்களோடுங் கூடி, ஆயிரங் கிரணங்களோடு கூடிய சூரியன்போற் பார்ப்பதற்குங் கூடாத மகா பிரகாசம் பொருந்தி, அனேக கோடி அண்டங்கள் ஒன்ருய்த் திரண்டு வந்தாலும் பொடிப் பொடியாக குவிக்கும்படியான சக்தியுள்ளதாய் ஸ்ரீ கிருஷ்ணனுக்கே இது உரித்தென்று சொல்லும்படியிருந்தது. அன்றியும், அவருக்கொரு கதாயுதமுங்கொடுத்தான். அது சுவர்னமயமாய், மேருபருவதத்திற்கு நிகரானதாய், அசுரருடைய பிராணவாயுக்களைப் புசிக்கும்மகாசர்ப்பமென்றுசொல்லத்தக்கதாய் விளங்கிற்று. இப்படிக்கு வந்த இவ்வாயுதங்களெல்லாம் முன்னம் பிரம்மாவினுல் நிருமிக்கப்பட்டன. அன்றியும், அக்கினியானவன் இவ்விருவருக்கும் திவ்வியமாகிய ஆக்கினேயாஸ்திரங் கொடுத்தான். உடனே கிருஷ்ணனும் அந்தரதத்தின் மேலேறி, மகா தேஜசுடைய கவசகுண்டலாதிகள் தரித்து,அர்ச்சுனனுடன் கூட விளங்கினுர்.

இப்படிக்குச் சகல உபகரணங்களையும் பெற்று விளங்காநின்ற கிருஷ்ணார்ச்சுனர்களை அக்கினிதேவன் பார்த்து, ஓய் மகானுபாவர்களே! இனி இவ்வுலகத்தில் உங்களுக்கு யார் சமானமாவார்கள்? கிருஷ்ணனுடைய ஆயுதத்தைப் பிரயோகிக்கத் தக்க இலக்கே கிடையாது. அர்ச்சுனனுடைய அம்புக்கு நிற்கும்படியான வீரனுங் கிடையான். ஆகையால், நீங்களிருவரும் இனி எனக்குப்புசிக்கச்செலவு கொடுக்க வேண்டுமென்று சொல்லவே, அர்ச்சுனன் மிகவுஞ் சந்தோஷத்துடனே கையிற் காண்டீபமென்னும் அந்த வில்லையெடுத்து, நாண்பூட்டி நாணோசைகொண்டு நிற்க, அந்த நாணோசை கேட்டமாத்திரத்திலே அந்தக் காண்டவனத்திலிருக்கு மசுரர்கள் ராட்சதர் முதலாகிய பேர்கள் இதென்ன பிரளயகாலம்போலிருக்கிறதென்று நடுநடுங்கிப் போனார்கள். இவ்வாறாக அருச்சுனன் ஆயுதசன்னாகம் பண்ணிக்கொண்டு அக்கினியைப் பார்த்து, ஓ செஞ்சுடர்தேவனே! இனியெங்களுக்குக் கூடாதகாரியமொன்றுமில்லை இந்திரன் அல்லது இன்னும் யார்தானாகட்டுந் தெரியாமையாலே எங்களோடு யுத்தத்திற்கு வருவார்களேயாகில், அதுதான் அவர்களுக்கு முடிவுகாலமென்று நினையும். அன்றியும், தேவர்களுடைய தேகங்களைக்கவசகுண்டலங்களற்று முண்டங்களாய் அறுந்து வீழ்ந்திருக்கப் பார்க்குங்காலமாகும் என்று சொல்லி ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகத்தை நோக்கி குறிப்பறிந்து மீண்டும் அக்கினி பகவானைப் பார்த்து, ஓ வன்னித்தேவே! இனி நீர் வனத்திற் பிரவேசித்து உமது அலுவல்களை எல்லாந் தீரப்பாருமென்று சொல்லினான்.

அந்தத் தேவனும் வெகு ஆனந்தமடைந்து, இவ்விருவரிடத்திலும் விடைபெற்று, அவ்வுருவைவிட்டுத், தேஜோமயமாய் அண்டக்கூடாத உட்டணமுள்ள ரூபமடைந்து பாய்ந்து அவ்வனத்திற் பிரவேசித்து, க்ஷணகாலத்திலே அவ்வன முழுவதுஞ் சூழ்ந்துக்கொண்டு, படபடாவென்று மூங்கில்கள் முதலாகிய மரங்கள் வெடிக்கவும், அனேக மரங்கள் பொரிந்து கரிகரியாய் வீழவும், ராட்சதர் ஆகாசத்தில் நாக்கை நீட்டியதுபோற் சுவாலைகள் நாலுபக்கங்களிலும் விளங்கவும், அநேக செந்துக்கள் மகா பரிதாபப்பட்டு ஓடமாட்டாமலுமிருக்கமாட்டாமலும் பொரிந்து கரிந்து சாம்பராய்க் குவியவும், சிங்கம்-புலி-யானை முதலாகிய மிருகங்கள் எல்லாம் வீறிட்டு மூலை மூலைக்கும் ஓடி எங்குந் தீச் சூழ்ந்துகொண்டிருக்கிறபடியினாலே சுருண்டு விழவும் அனேக செந்துக்கள் வேகும்போது அவைகளுடைய தேகங்கள் வெடித்து அதிலிருக்கும் நீர் தெறிக்கவும், அதைச் சில ஜெந்துக்கள் தாகம் பொறுக்கமாட்டாமல் நாக்கையேந்திக் குடிக்கவும் அப்போது அந்தத் தேகங்களும் முடிவில் தீய்க்கு இரையாய் விழவும், இவ்வாறாகப் பிரளயகாலம்போல் அவ்வனம் எரிந்து நாசமாய்ப்போக அவ்வன முழுவதுஞ் சுற்றிக்கொண்ட தீயானது கனக நிறமாய் விளங்கும் மேருபருவதம்போல் விளங்கிப் பிரகாசித்துக்கொண்டிருந்தது.

---

## சுவேதகிராஜன் சரித்திரம்

இப்படி சொல்லிக்கொண்டு வரும் வைசம்பாயன மகாமுனியை நோக்கி ஜெனமேஜெய மகாராஜன் சொல்லுகிறான்: ஓ சுவாமி! அக்கினி பகவான் இந்தக் காண்டாவ வனத்தை தகிக்கக் கருதியதற்குக் காரணமென்ன அதை யோசித்தால் எவ்வளவேனுந் தோணப்படவில்லை. ஆகையால், அதற்கு என்ன காரணமோ அதைத் தேவரீர் கிருபைசெய்து அருளிச்செய்யவேண்டுமென்றுவணங்கினான் அதுகேட்ட வைசம்பாயன முனிவர், ஓ இராஜனே! அப்படியா? சந்தோஷமாயிற்று. அதற்கு காரணஞ் சொல்லுகிறேன் கேளும். முற்காலத்திற் சுவேதகியென்று ஒரு மகாராஜன் இருந்தான். அவன் மகா தருமநிலையுள்ளவன் எப்போதும் யாகஞ் செய்கிறதும், தானஞ் செய்கிறதுமே தொழிலாயிருந்தான். இப்படியிருக்க, அவனுக்கு ஒருகால் நூறு வருஷகாலம் ஓய்வில்லாமல் யாகம் பண்ணவேண்டுமென்கிற மனமுண்டாயிற்று. அதற்காக வந்த ராஜா நெடுநாளாய் யாகஞ் செய்விக்கும் பிராமணனைத்தேடி, எவர்களைப் பிரார்த்தித்தாலும் ஒருவரு மங்கீகரிக்காமற்போக, அப்போதந்த ராஜா மிகவும் விசனமடைந்து, ஆசிரமங்களிற் போய் அங்கிருக்கும் முனிவர்களைக் கண்டு, சுவாமிகளே! அடியேன் என்ன பாவியா? பெரியோர்கட்குப் பணிவிடை செய்யத் தகாதவனா? அல்லது லோபியா? எந்தக் காரணத்தினால் என்னிஷ்டப்படி நீங்கள் யாகஞ் செய்கிறதில்லை யென்

கிறீர்கள்? நான் அயோக்கியனென்று தோற்று மாகில் என்னைச் சாதிக்குப் புறம்பாக்கி விடுங்கள். யோக்கியனென்று தோற்று மாகில் யாகஞ் செய்வியுங்களென்று சொல்லி யதைக் கேட்ட அந்த முனிவரெல்லாம் ஓய் ராஜனே! ஒருக்காலும் நீ பாவியல்ல, பெரி யோர்களை யாதரிக்காதவனு மல்ல, லோபியு மல்ல, யோக்கியன்தான். ஆனால் உன்னிஷ்டப் படி யாகஞ் செய்விக்காமற் போவதற்குக் காரணம் யாதெனில், நூறு வருஷகாலம் நித்திரை முதலானவைகளைத் துறந்து வருத் தப்பட மாட்டாமைதான் நாங்களெல்லாம் தவங்களினாலே வதங்கி யிருக்கிறோம். ஆகை யால், இந்த வருத்தத்தையும் சகிக்கமாட்டோ மென்று சொல்ல, அரசனதுகேட்டு, ஆனால் நான் நினைத்த யாகத்தை விட்டு விடுகிறதா? உங்களை யான் பலவாறு கேட்டுக் கொண்டுள்ள மிரங்காவிட்டால் நானிப்படி அனியாயமாய் போகலாமா? என்றுகூவினான். அந்தரிஷிகள் ஏது இவன் பிடிவாதக்காரனா யிருக்கிறானென் று அவனைப்பார்த்து, ஓய் ராஜனே! நீ என்ன சொன்னாலுஞ் சரி, எங்களாலாகாது, அப்படி யுனக்கு அகத்தியமாய் அந்த யாகஞ் செய்ய வேண்டுமென் றிருந்தால், சிவனைப் பணிந்து கேள். அவர் உன்னிஷ்டத்தை நிறைவேற்று வாரென்று நிகழ்த்த, அவ் வேந்தனுஞ் சீக் கிரமாய்க் கைலாச பர்வதத்திற்குப்போய் மகா நியமத்தோடு சிலகாலம் பன்னிரண்டு நாட் கொருதரம் போஜனஞ் செய்கிறதும், சிலகா லம் பதினாறு தினங்கட்கு ஒருதரம் போஜ னஞ் செய்கிறதுமாகி, ஆகாரத்திலுங் காய் கிழங்குகளே யல்லது வேறில்லாமல், முக்கா லங்களிலும் ஸ்நானஞ் செய்து, இரவு பகல் அறுபது நாழிகையும் கைலாசபதியாகிய சிவ பெருமானை குறித்து தவம்பண்ணி வந்தான்.

இப்படிக்கு ஆறுமாதந் தவஞ்செய்யவே ருத்திரமூர்த்தி பிரசன்னராகி வந்து, இந்த ராஜாவைக் கண்டு, ஓ யரசனே! உன் தவத்தி னாலே சந்தோஷப்பட்டேன் உனக்கென்ன வேண்டுங் கேளென்ன, யான் நினைத்த யாகம் நிறைவேற்ற வேண்டியதற்கான காரியமாக வேண்டு மென்று சொல்ல, அதற்குப் பரம சிவன் கொஞ்சம் புன்னகை கொண்டு, ஓ அர சனே! யாகஞ் செய்விக்கிறதைக் குறித்து நமக் கதிகாரமில்லை. ஆகிலும், நீ மிகவும் நம்மைக் குறித்து தவஞ்செய்தா யாகையால், எப்படி யாகிலும் யாகத்தை நிறைவேற்றுகிறேன் அதற்கு ஒரு காரியம் நீ செய்யவேண்டும். அதாவது பன்னிரண்டு வருஷங்கள் நீ சகல நியமங்களோடுங் கூடி மகா பரிசுத்தனாகி, யானையின் துதிக்கை யளவாகிய நெய்யின் தாரையாலே ஓய்வில்லாமல் அக்கினியைத் திருப்தி பண்ணவேண்டும். இப்படி செய்த பின் உன்னிஷ்டஞ் சரியாய் நிறைவேற்றப் படுமென்ன, அந்த அரசனும் அப்படியே பன்னிரண்டு வருஷங்கள் மகா விரதத்தோடு நெய்யினால் அக்கினியில் ஆகுதி செய்து வந் தான். பரமசிவமூர்த்தியானவர் மீண்டும் அவனிடத்து வந்து சந்தோஷப்பட்டு, ஓ ராஜனே! நீ மகா யோக்கியன் நான் நேரில் யாகஞ் செய்விக்கக்கூடாது. ஆனால், நம் முடைய அமிசத்தினாற் பிறந்த தூர்வாசர் என்கிற ஒரு மகாரிஷி இருக்கிறார். அவர் உனக்கு யாகஞ் செய்விப்பாரென்று சொல் லித் தூர்வாசரை யழைத்து, ஓய் முனி வரே! நீரிந்த ராஜாவின் இஷ்டப்படி யாகஞ் செய்வியுமென்று கட்டளையிட, அந்தரிஷியும் அப்படியே செய்கிறேனென்று ராஜாவினிடத் தில் வந்து, வேண்டியவைகளைச் சீக்கிரத்திற் சம்பாதியுமென்று சொல்லிப் போய்த் தகுந்த பிராமணர்களை யழைத்து வந்தார். ராஜாவும் சகல சாமக்கிரியைகளையுஞ் சித்தம் பண்ணிக் கொண்டு தீக்ஷை யடைந்து, அந்த ரிஷியைக் கொண்டு யாகத்தை நிறைவேற்றி, அவர்கட் கெல்லாம் தகுந்த தட்சணை கொடுத்துப் பூசித் தனுப்பிவிட்டான். அதினாலே அக்கினிபக வான் அக்கினி மந்தப்பட்டு, அற்பமாகிய தேஜசுடையவனாகி, வலிமையில்லாமல் நோய் பிடித்துப், பிர்மாவின் சபைக்குப் போய் அவ ரைத் தெண்டனிட்டு, சுவாமி! அடியேனுக்கு ஏனிப்படி தேஜசும்பலமுங்குறைந்துபோயின, இதற்கு நாமென்ன செய்ய வேண்டியது? எப்படியாகிலும் நான் முன்போல ஆகும்படி யனுக்கிரகஞ் செய்யவேண்டு மென்று பிரார்த் திக்க, அதற்குப் பிரமன் சிறுநகை நகைத்து, ஓ அக்கினி! நீ பன்னிரண்டு வருஷகாலம் ஓய்வில்லாமல் நெய்யுண்டானதினால், உனக்கு அக்கினி மந்தப்பட்டு இப்படிப்பட்ட நோய் சம்பவித்தது. இதற்குப் பரிகார மென்ன வெனில், முன்னாலே நீ சாம்பலாக்கிப்போட்ட காண்டவ வனமானது மிகவுஞ் செழிப்பாய் வளர்ந்து, அநேக துஷ்ட ஜெந்துக்களுக்கு இருப்பிடமா யிருக்கிறது. அதை மறுபடியும் நீ புசிப்பதுதான் இந்நோய்க்குப் பரிகாரம். ஆகையால், விரைவி லவ்வனத்தைப் புசித்து

விடென்று கட்டளையிட, அதுகேட்டந்த அக்கினி மிகவுஞ் சீக்கிரமாய் பூமிக்கு வந்து, அவ்வனத்தை நாற்புறத்துங் கவிந்து சூழ்ந்துக் கொண்டான்.

இப்படி சூழ்ந்துகொள்ளவே அவ்வனத்திலிருந்த யானைகளெல்லாந் துதிக்கைகளாலே நீரைக்கொண்டு சொரிந்தும், அநேகந் தலைகளுள்ள நாகங்கள் வாய்களால் ஜலங்களை மொண்டு பொழிந்தும், மற்றும் அதிலிருந்த அநேக ஜந்துக்களும் இவ்வாறு நானாவித உபாயங்களைக் கொண்டு அக்கினியை யணைக்கும்படியான பிரயத்தினஞ் செய்ததினாலே, அக்கினிதேவன் அவ்வனத்தை யெரிக்கமாட்டாமல் வெகு பிரயாசைப்பட்டு, மீண்டும் அவன் மிகுந்த சுவாலைகளோடுங் கூடியெரிக்க வாரம்பிக்க, அந்த ஜெந்துக்களும் அணைக்க வாரம்பிக்க, இவ்விதமாய் ஏழுதரம் அக்கினியானவன் எத்தினப்பட்டும் உடனுக்குடனே அணைக்கப்பட்டபடியாலே, அக்கினி வியசனத்தையும் வாட்டத்தையு மடைந்து, பிர்மாவினிடம் போய் நடந்ததை யெல்லாம் விண்ணப்பஞ் செய்ய, அதுகேட்ட பிர்மாவானவர் ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து அக்கினிதேவனைப்பார்த்து, நீ காண்டவவனத்திற் பிரவேசிப்பதற்குத் தகுந்த உபாயமொன்று இப்போதுதான் எனக்குத்தோற்றிற்று, அதென்னவெனில், நரநாராயணர்கள் இருவருந் தேவகாரியத்திற்காகப் பூலோகத்தில் அர்ச்சுனனாகவும்-கிருஷ்ணனாகவும் அவதரித்திருக்கிறார்களல்லவா?, அவர்கள் இப்போது காண்டவவனத்தின் சமீபத்தில் வந்திருக்கிறார்கள். அவர்களை உனக்குச் சகாயஞ் செய்யும்படி பிரார்த்தித்து ஏற்படுத்திக் கொண்டாயேயானால், எளிதில் அவ்வனத்தை எரிக்கலாம். அவ்விருவருந் தேவரெல்லாந் திரளாய் வந்தெதிர்த்தாலும் வெல்லத்தக்க வல்லமையுள்ளவர்கள் சீக்கிரமாக நீ போய் அவர்களை யாசியென்று சொன்னான். அதைக் கேட்டுத்தான் அக்கினிதேவன் வந்து அவர்களை யாசித்ததும், அதற்கவர்கள் ஒத்துக்கொண்டு அவனை ஆயுத முதலியவைகள்கேட்டதும் அவன் அவ்வாறே கொடுத்ததும், பின்பு அவனை ஏவியதும், அவன்போ யெரித்ததுமென்று வைசம்பாயனர் சொல்லி முடித்து, அதற்குமேல் நடந்த சரித்திரத்தை சொல்லத் துடங்கினார்.

இவ்வாறாக அக்கினியானவன் வனத்தைச் சூழ்ந்துகொண்டெரிக்கக் கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தேரின்மேலேறி நாலு திக்குகளிலுஞ் சுற்றிக்கொண்டு, அவ்வனத்திலிருக்கும் ஜெந்துக்கள் அப்பாலு மிப்பாலும் ஓடிப்போகவொட்டாமல் துரத்தி அடித்து அவ்வனத்திலேயே சேரச்செய்து, அக்கினிக்கு மிகவும் சகாயஞ்செய்து வந்தார்கள் அதனாலே அக்கினியானவன் பயமற்றவனாய் உற்சாகத்துடனே வனமுழுவதையுந் தகித்தான். அவ்வனத்தி லிருக்கும் ஜெந்துக்களிலும் மரமுதலானவைகளும் சாம்பலாகியவை சில, தேம்பலாயினவை சில, கரிந்துபோயினவை சில, பொரிந்துபோயினவை சில, எரிந்துபோயினவை சில, விரிந்துபோயினவை சில, பாதியெரிந்து முறிந்தவை சில, மோதி விழுந்து எரிந்தவை சில, சிதறினவை சில, பதறினவை சில, இப்படியாகவே சில ஜெந்துக்கள் குட்டிகளைக் கட்டிக்கொண்டும், சில ஜெந்துக்கள் தாய்களிடம் ஒட்டிக்கொண்டும், சில ஜெந்துக்கள் தந்தையைப் பற்றிக்கொண்டும், சில ஜெந்துக்கள் வெந்ததைச் சுற்றிக்கொண்டும், சில ஜெந்துக்கள் ஓட விடமில்லாமற் கதறி யழுதுக்கொண்டும், சில ஜெந்துக்கள் நாட விடமில்லாமற் பெதறி உதறிக்கொண்டும், சில ஜெந்துக்கள் மொத்தை மொத்தையாய் வெந்துக்கொண்டும், சில ஜெந்துக்கள் பத்தல் பத்தலாய் நொந்துகொண்டும், சில ஜெந்துக்கள் பரிதாபமாகப் பற்களைத் திறந்துகொண்டும், சில ஜெந்துக்கள் பயப்பீதியினால் நாக்குகளை நீட்டிக்கொண்டும், சில ஜெந்துக்கள் உயர எழும்ப அவ்வனத்தின்மேற் கொழுந்துவிட்டிராநின்ற அக்கினிச்சுவாலைகளாலே கொளுத்தப்பட்டு அதில் விழுந்து இறந்ததுகள். சில ஜெந்துக்கள் சிறகெரிந்து பறந்துபோகவொட்டாமல் அவ்விடத்திலேயே புறண்டு அழிந்ததுகள். அவ்வனத்தி லிருக்கும் தடாகத்து நீர்களெல்லாங் கொதித்துப் போகவே மீன்-ஆமை முதலான நீர் வாழும் உயிரெல்லாஞ் சமைந்துப்போனதுகள். அவ்வனத்திலிருக்கும் பூதர்களெல்லாம் பஸ்மீகரித்துப் போகவே அவற்றிலுள்ள நாகம்-தேள் முதலான மண்வாழு முயிரெல்லாங் குமைந்துபோனதுகள். இவ்வாறு ஊழிக்காலத் துண்டாகும் வடவையைப்போல நாற்றிக்குகளையும் வளைந்து எரிக்கின்ற அக்கினியானது எந்தெந்த ஜெந்துக்கள் தன்னிடத்தில் மடிகின்றனவோ அந்தந்தச் செந்துக்களின் ரூபங்கொண்டு விளங்கியது. மக்ஷபலமுள்ள சில சீவன்கள் வெகு வேகத்தில் ஆகாயத்தில்

எழும்ப, அர்ச்சுனன் அவைகளை எல்லாம் அம்புகளாற் றுழ்த்திக் கனலிலே வீழ்த்தினன்.

### தேவர்கட்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த யுத்தம்

இந்தப்படிக்கு ஆகாசத்திலும் பூமியிலு மிருக்கும் வஸ்துக்களெல்லாம் பொரிந்து போகும்படியாக அனலானது அவ்வனத்தைச் சூழ்ந்து நாசஞ்செய்ய, தேவர்களெல்லாஞ் சகிக்கமாட்டாமல் இந்திரனிடத்திற்குப் போய், ஓய் தேவேந்திரனே! உமது காவலிலிருக்கின்ற காண்டவ வனத்தை அக்கினியானவன் அருகிலிருக்குஞ் சகல சராசரங்களோடு கூடச் சாம்பராக்குகிறான். ஐயோ! இதென்ன பிரளயகாலம்? மூன்று லோகமும் வெந்துபோகத் தக்கதா யிருக்கிறதே யென்று முறையிட, அதுகேட்ட தேவராசன் ஓடிவந்துப் பார்த்து, மிகுந்த வியசனத்தையுங் கோபத்தையு மடைந்து, அவ்வனத்திற்கு ஆபத்தை நீக்கவேண்டுமென்று மேகங்களையெல்லாங் கூப்பிட்டு, ஆகாசத்தைக் கவிந்து நாற்றிசையிலும் பெரிதாகிய தாரைகளாக வருஷிக்கும்படி கட்டளையிட்டான். அவைகள் பெய்யும் மழைகளெல்லாம் அவ்வனலின் உக்கிரத்தினாலே நெய்யாகுகொடுக்குந் தன்மைப் போல உறியப்படவும், அதுகண்ட இந்திரன் மீண்டும் பிரளயகால மேகங்களைக்கொண்டு பெருமழை பொழியச் செய்ய, அந்த மழை நீர்களாலே அவ்வக்கினி ஒரு பக்கத்திலணைய, அதனாலே பெரும்புகை யெழும்பிச் சூழ, அப்புகையினாற் சிற்சில ஜெந்துக்க ளிறந்தன. இவ்விதமாக இந்திரன் மழை பொழிந்து அனலையவிப்பதைக்கண்ட அர்ச்சுனனானவன் கோபாக்கினியோடு சரமாரி பொழிந்து அவ்வனத்தில் ஈ-கொசுகு-முதல் உள்ளே நுழையாதிருக்கும்படிக்கும், உள்ளே யிருக்கிற உயிர்ப்பிராணிகள் வெளிப்படா திருக்கும்படிக்கும், அவ்வனத்திற்குச் சரக்கூடங் கட்டிவிட்டான். தேவர்களும் ரிஷிகளும் ஆச்சரிய மடைந்தார்கள். அப்போது அவ்வனத்தி லிருக்கும் தட்சகனென்னும் நாகராஜன் குருட்சேத்திரத்திற்குப் போயிருக்க, அவனுடைய குமாரனாகிய அசுவசேன னென்பவன் சிறுவனாகையால் தவித்துத் தாயைப் போய்க் கட்டிக்கொள்ள, அந்த நாககன்னியுங் குட்டியை வாயினால் தலைமுன்னாதாக விழுங்கிக்கொண்டு வெளியிற் போகப் புறப்படுமளவில், அர்ச்சுனன் தீட்சண்ணியமாகிய ஓர் அம்பினாலே அப்பெண்பாம்பினுடைய தலையை யறுத்துப் போடவே அந்த அசுவசேன னென்கிற பாம்புக்குட்டியானது அந்தரத்தில் தவிக்க, அதுகண்ட இந்திரன் பெருங் காற்றோடுங்கூடிய மழையொன்று உண்டாக்கி, அர்ச்சுனனுக்குத் திப்பிரமை யுண்டாக்கச் செய்து, தன் தோழன் பிள்ளையாகிய அசுவசேனனைத் தப்புவித்துக் கொள்ளும்படி காப்பாற்றினன்.

பின்பு அர்ச்சுனனானவன் இந்திரன் செய்த மாயத்தைக் கண்டு மிகவுங் கோபமடைந்து, ஆகாசத்தி லெழும்பும் பட்சி முதலானவைகளை அர்த்தசந்திர பாணங்களாலே இரண்டு மூன்று துண்டுகளாகத் துண்டித்து, தனது இலக்குக்குத் தப்பிப்போன பாம்புக்குட்டியை மிகவுங் கோணலாகச் சஞ்சரிக்கும்படி சபித்தான். கிருஷ்ணனும் அக்கினியைப் பார்த்து, நீ அக்கொடிய பாம்பை விட்டுவிட்டபடியால் ஓரிடத்திலும் நிலையில்லாதவனைக்கடவாய் என்று சபித்தார். அப்போது அர்ச்சுனனானவன் ஆகாசத்திலிராநின்ற இந்திரனைப் பார்த்து, அவன் பாம்புக்காகச் செய்த வஞ்சனையால் மிகுந்த கோபத்துடனே அவன் பேரில் அம்புகளைத் தொடுத்துவிட, இந்திரனும் மகா கோபமடைந்து திவ்வியமாகிய ஒரு அத்திரத்தை பிரயோகிக்க, அந்த அத்திர மகிமையினாலே ஊழிய காலத்தின் காற்றுக்குச் சமமாகிய பெருங்காற்றும் வானமிடிந்து விழுகின்றதென்று சொல்லும்படியாகப் பயங்கரமாகிய குமுறலும், ஜனங்களுடைய கண்கள் சிதறிப் போகும்படியாகப் பிரகாச வேகமுடைய மின்னல்களும் கறுத்த மலைகள் போன்ற மேகங்களும் உண்டாகி, ஆகாசமெல்லாங் கம்மிக்கொண்டு, ஒரு நிமிஷத்திற் பூலோகம் நீரில் அழிந்துபோகத் தக்கதாகிய பெருமழை பொழிய, அதனாலே அக்கினியானவன் சுவாலைகளடங்கிப் புகை சூழ்ந்து பரிதாபப்பட்டு நிற்க, அதுகண்ட அர்ச்சுனன் மிகவும் ஆக்குரோஷத்துடன் வாயு வாத்திரத்தைப் பிரயோகஞ்செய்ய அந்த வாயுவாத்திரத்தின் வேகத்தினாலே மேகங்களெல்லாம் மூலைக்கு மூலை சிதற அடிக்கப்பட்டு, மழை நீரெல்லாம் வற்றிப்போய்ச் சுபாவமாய் அந்தந்த வஸ்துக்களிலிருக்கும் ஈரங்களு முலர்ந்து, ஆகாசம் நிர்மலமாகி மகா உக்கிரமாகச் சூரியன் பிரகாசிக்கவே அக்கினி பகவான் மிகவும் சந்தோஷத்துடனே வளர்ந்து, மிருகங்கள்-பட்சிகள்-அசுரர்கள் முதலாகிய செந்துக்

களுடைய தேகங்களினின்று ஒழுகாநின்ற கிலைத்தண்ணீர் முதலான ரசங்களாகிய நெய்களாய் ஆகுதியடைந்து, ஒரு நிமிஷத்தில் முன்போல் வன முழுவதுஞ் சூழ்ந்தெரித்தான்.

இப்படி கிருஷ்ணன் அர்ச்சுனருடைய பலத்தினால் அக்கினிதேவன் இவ் வனத்தை நாசஞ் செய்துகொண்டிருக்க, அதிலிருந்த நாகர் கருடர் முதலாகியவர்களெல்லாம் இவ்விரண்டு வீரரையுங் கொல்லவேண்டுமென்று பயங்கரமாகிய ரூபங்களோடு எழும்பி ஆகாசத்தில் வர, அதுகண்ட அர்ச்சுனன் கூர்மையாகிய அம்புகளினாலே துண்டு துண்டாயறுத்து அந்த அனலிலேயே ஆகுதி செய்ய அது கண்ட தேவர்களுங் கந்திருவர் கின்னரர் இயக்கர் முதலாகியபேர்களும் மிக வெகுண்டு, கத்தி-கேடயம்- தண்டு-வில் - சக்கரம் - சூலம் முதலாகிய சகல ஆயுதங்களுமேந்தி, முடிவு காலத்துக்கடலொலிபோற் சிங்கநாதஞ்செய்துகொண்டுவந்து வானமெல்லாம் நிறைய நின்றார்கள். பின்பு அவர்களெல்லாம் ஒருங்கே தங்கள் தங்கள் வல்லமைக்குத் தக்கபடியொரு கணப்பொழுதில் அவ்விரண்டு வீரருமிருக்குமிடங்கூடத் தெரியவொட்டாமல் ஆயுதங்களை வீசி நிரப்ப, அந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தங்களுடைய சாமர்த்தியத்தினாலே அவர்களையெல்லாம் நீக்கிக்கொண்டு, அர்ச்சுனன் அத்தேவர்கள் முதலானவர்களையும், கிருஷ்ணன் அசுரர் முதலானவர்களையும், அம்புகளினாலும்-சக்கரத்தினாலும் கைவேறு-கால்வேறு-தலைவேறு-உடல் வேறாகச் சின்னபின்னமாயறுத்துச், சில துண்டங்கள் ஆகாசத்திலெழும்பி விழவும், சில முண்டங்கள் பூமியில் விழுந்து சிதறவுமாகத், தேவாசுர சைனியங்களெல்லாம் எழும்பிவருஞ் சமுத்திரங்கள் பெருமலைபோன்ற கரைகளால் தடுக்கப்பட்டு வேகமோய்ந்து பின்னிடுவதுபோல் ஒன்றுஞ் செய்யமாட்டாமற் பதைபதைத்துப் புறமுதுகிட்டு ஸ்தம்பமாய் நிற்கவே; இந்திரன் அதுகண்டு, வெள்ளிமலைக்கு நிகராகிய அயிராவதமென்னும் யானைமேலேறி, வச்சிராயுதத்தைக் கையிலேந்தித், தன் சேனையைப் பார்த்து, நீங்கள் ஏன் பின்னிடுகிறீர்கள்? பயப்படாதேயுங்கள். மனிதருக்கு நாம் பயப்படுகிறதா? வாருங்கள் அவர்களைப் பிடித்துச் சிதைத்துப் போடுவோம் என்று சொல்லி ஆகாசத்திலுலாவுஞ் சிங்கம்போற் பாய்ந்து வந்தான்.

இவ்வாறு இந்திரன் வச்சிராயுதமெடுத்துப் பாய்வதைக்கண்டு உச்சாகமடைந்த இயமன் காலதண்டத்தையும், குபேரன் சிவிகையென்னும் ஓர்விதக் கத்தியையும், வருணன் பாசத்தையும், சிவன் பினாகமென்னும் வில்லையும், அச்சுவனி தேவர்கள் எரிந்துகொண்டிருக்கும் ஓஷதிகளையும், தாதாஎன்பவன் தநுசையும், ஜயனென்பவன் உலக்கையும், துவஷ்டா என்கிறவன் பருவத்தையும், சுப்பிரமணியர் சக்தியையும், மிருத்தியு கண்டகோடாலியையும், சூரியன் பயங்கரமாகிய பெருந்தடியையும், மித்திரன் என்பவன் வில்லையும் பகன் என்பவனும் சவிதா என்பவனும் கத்திகளையும் எடுத்துக்கொண்டு பின்னும் ஏகாதசருத்திரரும் அஷ்டவசுக்களும் சப்தமருத்துகளும் விசுவதேவரும் சாத்தியரும் தத்தம் தேஜோமயமாகிய ஆயுதங்களை எடுத்து கிருஷ்ணார்ச்சுனர்களைகொல்லவேண்டுமென்று துரத்திக்கொண்டு வந்தார்கள். இவ்விதமாகத் தேவரெல்லாம் ஒன்றாய் வரக்கண்டும் அவ்விரண்டு வீரரும் அஞ்சாமல் தைரியத்துடனே வில்லுகளை யெடுத்து வளைத்து நாண்பூட்டி நாணோசைகொண்டு விசித்திரமாகிய அம்புகளைத்தொடுத்து, ஆயிரம்பதினாயிரமாக வருஷித்துத் திரண்டுவரும் வெள்ளத்தை அணைபோட்டுத் தடுப்பதுபோல் அந்த தேவர் சேனையைக் கைகாலசைக்கவொட்டாமலும், அவர்கள்விடும் ஆயுதங்களை அவர்கண்மேலேயே விழும்படியாகவும் அடித்துவர, அதை ஆகாசத்தில் வந்திருக்கும் முனிவர்கள் பார்த்து இதென்ன ஆச்சரியம் தேவர்களை அலட்சியமாய் எதிர்த்து வெற்றிபெறும் வீரரைப் பூமியில் நாம் எப்பொழுதுங் கண்டதில்லை. ஆனால், இவர்கள் சாக்ஷாத் நரநாராயணர்களாகையால் இப்படிப்பட்ட சக்தி இவர்களுக் குண்டாயிருக்கிறது இனி இவர்களோடு தேவர்கள் யுத்தம் பண்ணுவது வீணென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

இப்படியிருக்க, இந்திரனானவன் தேவர்கள் கிருஷ்ணார்ச்சுனர்களுடைய பாணங்களுக்கு எதிர்நிற்கமாட்டாமற் பயந்து தன்னிடத்திலேயேவந்து சேரக்கண்டு, இவ்விருவர்களுடைய சாமர்த்தியத்திற்கு மிகவும் ஆச்சரியப்பட்டு மறுபடியு மிவர்களுடைய நிர்வாகத்தை முற்று மறிவோமென்று எல்லாத் தேவர்களையுங் கூட்டிக்கொண்டு வந்து மிகவும் அதிகமாகிய கல்மாரி பொழிய, அதுகண்ட அர்ச்சு

னன் உக்கிரமாகிய அநேக பாணங்களைத் தொடுத்துவிட்டு, அந்த கல்மாரியைத்தடுத்துக் கற்களைப் பொடியாக்கித் திக்குகள்தோறும் வீழ்ந்துப் பரவும்படியாகப் பறக்கவடித்தான். அப்போது தேவராஜன் தன் முயற்சி வீணாய்ப் போனதைக்கண்டு மறுபடியும் மலைமலையாய் கல்மழைபொழிவித்தான். பின்னு மர்ச்சுனன் அநேகமாயிரம் பாணங்களைவிட்டு அந்த மலைகளைத் துண்டித்துத் தள்ளினான். அந்த மலைத் துண்டங்களானவை ஆகாசம் இடிந்தால் அதின் துண்டங்கள் சூரியசந்திர நக்ஷத்திரங்களுடனே கூடிக்கொண்டு விழுந்தால் எப்படியிருக்குமோ அப்படி பலவான்மும் பளபளப்புமுள்ள கல் முதலானவைகளோடுகூட அந்த காண்டவ வனத்திலேயே விழ அதுகளினாலே அவ்வனத்தில் இருக்கும் அசுரர்கள்-இராக்கதர்கள்-இயக்கர்கள்-பிசாசர்கள் - பூதர்கள்-நாகர்கள்-சிவிங்கிகள் - கரடிகள்-புலிகள்-யானைகள்-சிங்கங்கள்-எருமைக்கடாக்கள் ரிஷபங்கள் முதலாகிய ஜெந்துக்களெல்லாம் நசுங்கி, நாக்கை கடித்தவை சில, கண்பிதுங்கினவை சில, மண்டை யுடைந்தவை சில, தொண்டை யுடைந்தவை சில, காலொடிந்தவை சில, கையறுந்தவை சில, கழுத்தறுந்தவைசில, குடல்பிதுங்கினவைசில, உடலற்றவை சில, இப்படியாக விநாச மடைந்து கதறிக் கூவித தீப்பட்டெரிந்துபோயின. சில செந்துக்கள் எழும்பி அவ் வனத்தை எரிக்கு மக்கினியி னுடைய படபடாத்கார வோசையைக் காட்டிலும் அதிகமாய் ஆகாசம் இடியும்படியாக கூச்சலிட்டு கையில் ஆயுதங்களுடனே வனம் எரிந்துகொண்டிருப்பதைச் சந்தோஷமாய்ப் பார்த்துக்கொண்டிராநின்ற கிருஷ்ணார்ச்சுனர்கள்மேற் பாய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் தேஜோமயமாய் விளங்காநின்ற தமது சக்ராயுதத்தைப் பிரயோகஞ்செய்ய, அந்தச் சக்ராயுதமானது அசுரர்-ராக்ஷதர்-பிசாசங்கள் முதலாகியவைகளின் தேகங்களைச் சிதைத்து நெருப்பில் தள்ளி மறுபடியுங் கிருஷ்ணனுடைய கையில்வந்தேறிக்கொள்ள, இப்படியே அவ் வனத்தில் நின்று துஷ்டப் பிராணிகள் எழும்புந்தோறும் அந்தச் சக்ராயுதமானதை கிருஷ்ணனால்விடப்பட்டு அவைகளை நாசஞ்செய்து, அவ்வுதிரங்களினாற்பூசப் பட்ட நிறத்துடன் தன்னை யேந்துவோன் கையிற் பொருந்திக்கொண்டிருந்தது.

இவ்வாருகப் பிரளயகால உருத்திரன் போல் விளங்கும் கிருஷ்ணனையும் அர்ச்சுனனையும் பார்த்த தேவர்களும் அசுரர்களும் பயந்து நடுநடுங்கி, நாவுலர்ந்து, மெய் சோர்ந்து, மிரளமிரள விழித்துக்கொண்டு, அசேதனப் பிராணிகள்போல் அசைவற்று நின்றார்களே யன்றி ஒருவனாகிலும் இவ்விருவருடைய எதிரில் வந்து நிற்கமாட்டாமற் போனார்கள். இவ்விதமாக அக்கினியை யவித்து அவ்வனத்தைக்காக்கும்முயற்சிஎவ்வளவுசெய்தும், பயன்படாமல் அடிபட்டு வேதனை யடைந்த அத்தேவர்கள் முதலானோர் திரும்பி யோடினார்கள். தேவேந்திரன் கிருஷ்ணார்ச்சுன ரிருவரையும் பார்த்து ஒரு பக்கத்தில் ஆச்சரியமும் ஒரு பக்கத்திலே கோபமும் ஒரு பக்கத்திலே துக்கமும் ஒரு பக்கத்திலே அவமானமுமாக மயங்கி நிற்குமளவில் ஆகாசத்தில் அசரீரி தோன்றி, அந்தத் தேவராசனைப்பார்த்து, ஒருவார்த்தை சொல்லிற்று: ஓ தேவராசனே! நீ உனது சிநேகிதனாகிய தட்சகனைக் குறித்து மிகவும் விசாரப்படுகிறாய். அப்படி விசாரப்பட வேண்டாம். இவ்வனம் தீப்படுங்காலத்தில் அவன் குருக்ஷேத்திரம் போயிருந்தானாகையால் இத்தீயினால் அவன் சாகவில்லை. அன்றியும் மனிதராலே நமக்கு அவமானம் வந்ததென்று விசாரப்படுகிறாய், அதையும் விட்டுவிடு இதோ நீலமேகம்போற் கறுத்த திருமேனியும், மின்னற் கொடிபோல் விளங்கும் பீதாம்பரமும், பரந்துயர்ந்த மார்பிற் சூரியன் போன்ற இரத்தினாபரணமும், நீலத் தூண்கள் போல் முழங்காலளவு நீண்டு திரண்ட திருக்கைகளும், அன்று பூத்த செந்தாமரை மலர்களுக்கொப்பாகிய திருக்கண்களுமாய், கையிற் சுவாலைகளாகிய மாலைகளால் விளங்காநின்ற சக்கரமேந்தி நிற்கிறவர் ஆரென்றால் இவ்வுலகங்களை எல்லாம் படைத்து அளித்து அழிக்குங் காரணப் பரம்பொருளாகிய ஸ்ரீ நாராயணமூர்த்தி அவர் பக்கத்தில் ரூபத்திலும் பலத்திலும் அவரோடொத்து, கையிற் காண்டீபமென்னும் பெரிய வில்லை யேந்தித் தட்சகனுடைய யாகத்தை யழிக்குங்காற் பினாகமென்னுந் தனுசை யேந்தி உக்கிரரூபமா யிருந்த வீரபத்திரர்போற் கோபாவேசங் கொண்டிருக்கிறவர், அவருடைய அமிசம் பெற்ற சேஷனாகிய நரனென்பவர்தான். இவ்விருவரோடும் சண்டை செய்து வெற்றிபெற யார் வல்லவராவார்கள் வீணாக ஏன் எதிர்க்கிறாய்? ஒருபோதுமிவர்களுடையஎண்ணத்தைத் தடுக்கக்கூடாது. இவர்களுடைய ஸ்வரூபமும்-பலமும்-பராக்கிரமும் உனக்கு நன்றாகத் தெரிந்திருக்க ஏது நீ

தெரியாதவன்போல் யுத்தஞ் செய்ய வந்தாய் துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்ட பரிபாலனமுஞ் செய்வதற்காக அவதரித்த இந்த மகானுபாவர்களைப் பூசிப்பதே நன்மையானது. எதிர்ப்பது நன்மையன்று உன்னதமாகிய இவ்வனமழிந்து போகிறதென்று வியசனப் படவேண்டாம். இவ்வனமும் இதிலுள்ள ஜெந்துக்களும் அழிய வேண்டிய விதியை யோசித்துப்பார்த்துச் சுகமாய்ச் சுவர்க்கம் போய்ச் சேரென்று அசரீரி சொல்ல அதுகேட்ட இந்திரன் யோசித்துப் பார்த்துச் சரிதானென்று நினைந்து கோபத்தையும் மானத்தையும் விட்டுத் தனது ஐராவதமென்னும்யானையின்மேல் ஏறிச் சுவர்க்கலோகத்திற்குத் திரும்பினன். இப்படி இந்திரனே திரும்பினதைக் கண்ட மற்ற தேவர்கள் முதலிய யாவரும், மிகவுஞ் சந்தோஷத்துடனே அவன்கூடவே சூழ்ந்து கொண்டு தங்களிடம் போய்ச் சேர்ந்தார்கள். இப்படியாக இந்திரனும் தேவர்களும் சண்டையைவிட்டு ஓடியதைக்கண்ட கிருஷ்ணர்ச்சுனர்கள் மிகுந்த சந்தோஷத்துடனே சங்கநாதஞ்செய்தார்கள். பின்பு இவர்கள் யாதொரு சங்கையு மற்றவர்களாய், அக்கினியைக் கூவி யவ்வனமடங்கலும் புசிக்கச்செய்ய, அக்கானகத்திலிருக்குஞ் சீவஜெந்துக்கள் அப்பாலிப் பாலசையாமல் அக்கினிக்கிரையாயின. அர்ச்சுனனும் ஓரம்பினால் நூறு ஜெந்துக்களையும், நூறு அம்புகளால் ஒரு ஜெந்துவையும், அவ்வவற்றிற்குத் தக்கபடி பாணப் பிரயோகஞ் செய்து அக்கினியில் வீழ்த்திக்கொண் டிருந்தான்.

இப்படியாக அக்கினிபகவான் சஞ்சீவி முதலிய ஓஷதிகளைத்தின்று சகல ஜெந்துக்களுடைய மாமிசங்களைச் சாப்பிட்டு அவைகளின் உதிரம்-சிலைத்தண்ணீர் முதலாகிய ரசங்களைக்குடித்து மதமடைந்து, அண்டச்சுவர் வெடிக்கும்படி சப்தித்துக்கொண்டு சுவாலைகளைப் பரப்பி வளர்ந்து, ஆகாசத்துக்கும் பூமிக்குமொன்ருகச் சல்லகி என்கிற மரம் தளிர்ந்திருப்பதுபோலும், பவளக்குன்றம் பருத்தோங்கியதுபோலும் நிற்பதினாலே தேவலோகம் பிதுருலோக முதலான விடங்களிலுஞ் சகிக்கக்கூடாத தாபமுண்டாகி யாவரும் தவித்து நின்றார்கள். இவ்வாருக கிருஷ்ணனும் அர்ச்சுனனும் செய்த துஷ்டருடைய தேகங்களாகிய ஆகுதிகளாலும், விருட்சங்கள் கொடிகள் முதலாகிய சமித்துக்களாலும், அக்கினி பகவான் திருப்தி யடைந்து அவ்வனத்தை மூக்காலே மூன்றுவீசமும் பட்சித்து வருமளவில் அதிலிருந்த மயனென்கிற அசுரனனவன் தட்சகனுடைய வீட்டிலிருந்து சந்துபார்த்து ஓடிப்போகச் சித்தப்பட்டிருக்க, அக்கினியுந் தனது சுவாலையாகிய நாவைநீட்டி அவனைப் பட்சிக்க யத்தினப்பட்டுக் கண்ணனைப் பிரார்த்திக்க அவருந் கையிற் சக்கரத்தை எடுத்துகொண்டு மயனைக் கொல்லவர அதைக்கண்டு அந்த அசுரனனவன் ஓ அர்ச்சுனு! அடியேன் உன்னடைக்கலமென்று சரணம் புகுந்தான். அர்ச்சுனனும் அப்படி சொல்லாநின்ற அவ்வசுரனை நோக்கி பயப்படாதே என்றுசொல்லி அவனை வரவழைக்க, கிருஷ்ணனும் அவனிடத்தி லிரங்கிக் கொல்லவேண்டு மென்கிற கருத்தை விட்டுவிட்டார். அக்கினியும் அவனை புசிக்கவேண்டுமென்கிற விருப்பங் கொள்ளாதிருந்தான். கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இவ்விதமாய் அந்தக் காண்டவவனத்தை அக்கினியெரித்து சாம்பராக்கியதில் ஆறுபேர் தப்பினார்கள். அவர்கள் யாரென்றால் முன் சொன்ன தட்சகனுடைய குமாரனாகிய அசுவசேனனென்கிறவன் ஒருவன் இப்போது சொன்ன மயனென்கிற அசுரனொருவன், சார்ங்கதர் என்னு நால்வர் ஆக இவ்விருவருந் தான் தப்பிப்போயின பேரென்றுசொல்லினர்.

### சார்ங்கதர் என்னும் பட்சிகள் கதை

இவ்வாறு சொல்லிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராசன் நோக்கி, ஓ தேவமுனியே! அசுவசேன னென்பவனும் மயனென்பவனும் தீயிலகப்படாமல் தப்பிப் போனதற்குக் காரணஞ் சொன்னீர்கள். சார்ங்கதர் தப்பியதற்கு ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆகையால் எந்தவிதியால் சார்ங்கதர் மரிக்காதபடி அக்கினி சகிக்காமற் போனதோ அதை எமக்கு அருளிச்செய்ய வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்: ஓ ராசனே! கேளும்: வேதங்களும் புராணங்களும் அறிந்தவர்கட்கு சிரேஷ்டராகியும், சகல தருமங்களும் அறிந்தவராகியும், பதினோரிந்திரியங்களையும் செயித்து நிலைதவறாமல் தவஞ் செய்பவராகியும் இராநின்ற மந்தபாலனென்கிற மகாமுனி யொருவர் அந்தக் காண்டவ வனத்தில் வாசஞ் செய்துகொண்டிருந்தார். அவர் உலகவாழ்க்கையை வெறுத்தும் பெண் முகம்பாராமற் பிரமசரிய விரத மநுஷ்டித்து, நெடுங்காலமாகியபின் அச்சரீரத்தை விட்டுத்

தமது தவமகிமையாற் சுயேச்சையாய்ப் பிதுர் லோகம் போய்ப்பார்த்தார். அவ்விடத்தில் தான் செய்த தவத்தினாலே அடையவேண்டிய பலன் ஒன்றையுங்காணுமல், அங்கிருந்து இந்திரலோகம் வருணலோகம் ஆதித்த லோகம் முதலாகிய சகல லோகங்களுக்கும் போய் ஓரிடத்திலுந் தமது தவத்தின்பயனைக் காணுமையால் மறுபடி யமதருமராச னிடத்திற்கு வந்து அவனருகிலிருக்குந் தேவர்களைப் பார்த்து, ஓ தேவர்களே! நான் வெகு தவங்களும் புண்ணியங்களுஞ்செய்தேன். அப்படியிருக்க, எனக்கு ஏன் ஒரு பயனுங் கிடைக்கவில்லை? எங்கே பார்த்தாலும் என் மட்டில் ஒன்றுந் திறக்கப்படவில்லை நானெந்தக் கருமஞ் செய்யாமையாலே இந்த லோகங்கள் மூடப்பட்டன. அதைத் தயை செய்து சொல்லுவீர்களாகில் அக்கருமத்தையுஞ் செய்து வருகிறேனென்று கேட்க, தேவர்கள் சொல்லுகிறார்கள்: ஓய் மந்தபாலமுனியே! கேளும், உலகத்தில் யாவரும் பிறக்கும்போது மூன்றுபேருக்குக் கடனாளியாகப் பிறக்கிறார்கள். யார் யாருக்கென்றால் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதுர்தேவர்களுக்குந்தான். இக்கடன்கள் தீருகிறவித மெப்படியென்றால், யாகங்கள் செய்து தேவர் கடன் தீர்க்கவேண்டும். பிள்ளைகளைப் பெற்றுப் பிதுரர் கடன் தீர்க்கவேண்டும். நீரோ யாகங்கள் செய்தபடியினாலும், வேதங்கள் ஓதியபடியினாலும் இரண்டு கடன்களைத் தீர்த்துவிட்டீர் சந்ததி யில்லாமையாலே ஒரு கடனைத் தீர்க்கவில்லை. அந்தக் கடன் தீராமற் போவது பாவமாகையால் இந்த லோகங்களில் உமக்குப் பயன் கிடைக்கவில்லை. ஆகையால் நீர் சந்ததிக்காக யத்தினப்படுமென்று சொல்ல, அதுகேட்ட அந்த முனியானவர் இக்கானகம் வந்து, விரைவாகவும், வெகுவாகவும் எந்த யோனியிற் பிள்ளைகள் பிறக்குமென்று யோசித்திருக்கையிற், சார்ங்கமென்னும் ஆண்பட்சி யிறந்து ஜரிதை யென்னும் பெண்பட்சி பறந்துப் பறந்து விழுந்தழுவதைக் கண்டு, அந்தப் பட்சி யிறந்துபோனகூண்டிற் பிரவேசித்து, அப்பேடுடன் கூடி நான்கு முட்டைகளை யுண்டாக்கி, அப்பால் லபிதை யென்கிற மற்றொரு சார்ங்கப் பேட்டைச் சேர்ந்து, முன் தான்கூடிய ஜரிதை யென்னும் பட்சியையும் அதுபெற்ற முட்டையையும் அந்த வனத்திலேயே விட்டு விட்டு இவர் போய்விட்டார். பின்பு அந்தப் பெண் பறவையானது அந்த முட்டைகளைக் காத்துக் கொண்டு அவ்வனத்திலிருந்து குஞ்சுகள் வெளியிற் புறப்பட்டவுடனே அவைகட்குப் பிரமதேஜசு ஜொலிக்கக்கண்டு, மகிழ்ச்சியுடனே ஆகாரங்களைக் கொண்டு வந்து கொடுத்து வளர்த்து வந்தது.

இஃதிப்படி யிருக்க, அந்த மந்தபால ரிஷியானவர் லபிதையோடு கூடப் போகுமளவில் வழியிலே காண்டவ வனத்தைத் தகிக்கக் கருத்துகொண்டு வராநின்ற அக்கினிதேவனைக் கண்டு, அவன் எண்ணத்தை யறிந்து, அவனைப் பிரதட்சண நமஸ்காரஞ் செய்து, கைகூப்பி, ஓ அக்கினிபகவானே! நீர் தேவர்களுக்கு முகமாயிருந்து சகல ஆகுதிகளையும் பெற்று அந்தந்தத் தேவருக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறவராகையால், நீர் மகா சிரேஷ்டர் எல்லாத் தேசங்களினுள்ளும் அந்தராத்துமாவைப்போல் வாசஞ் செய்கிறவர். பெரியோர்கள் உம்மை யொருவராயும் மூவராயுஞ் சொல்லுகிறார்கள். அன்றியும், உம்மை எட்டு விதமாக்கி யாகங்களை ஏற்படுத்தினார்கள். இவ் வுலகங்களுக் கெல்லாம் நீர் சிருஷ்டி காரணரென்று யாவருஞ் சொல்லுகிறார்கள். சங்காரமும் உம்மாற் பண்ணப்படுகிறதென்று வழுத்துகிறார்கள். நீர் எல்லாவற்றையும் வயிற்றிலிருத்து காப்பாற்றுகிறவர். நீர் இல்லாமற்போனால் ஒரு நிமிஷமும் உலகம் பிழையாது. வேதியரெல்லாம் உமக்குத் தினந்தோறும் தோத்திரம் - நமஸ்காரம் முதலானவை செய்து, தங்களுடைய கருமத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறார்கள். நீர்தான் உலகம் பிழைப்பதற்காக மின்னல்களோடு கூடிய மேகங்களாகி மழை பொழிகிறீர். உம்மாலேதான் ஆண்டுகளும், மாதங்களும், நாட்களுமுண்டாகி, உலகத்தினுடைய ஆயுளைக் கவர்கின்றன. ஆதலால், உலகங்களைச் சிருஷ்டித்துக் காத்து அழிப்பதற்குக் காரணம் நீரே யென்று வேதங்கள் புகழ்கின்றன. இம்மை மறுமைப் பயன்களில் எதைப் பெறவேண்டுவதானாலும் வேதவிதிப்படி உமது முன்னிலையிற் பெறவேண்டும். அன்றியும், யாவையும் விளக்குகின்ற ஒளி நீரே. நீரில்லாவிடில் இருளன்றி யொன்றும் வெளிப்படமாட்டாது. ஆகாயத்தில் தோற்றுங் கிரணங்களும் நட்சத்திரங்களும் உமது சுரூபங்களேயல்லாது வேறில்லை. எவ்வுலகிலும் நீரே நிறைந்திருக்கிறீர். தேவர்களுக்கு அமுதம் உம்மாலேயே உண்டாக்கப்படுகிறது. எவ்விதத்திலும்

நீரே தேவர்களில் உயர்ந்தவர். ஆகையால், அக்கினிபகவானே உலகங்களில் வேதியருக்கு நீரே முக்கிய தேவனுனதுபற்றி என்னிடத்தில் தயைவைத்து அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அக்கினியானவன் அந்த மந்தபால் முனியை நோக்கி, ஓய் முனிவரே! நீர் செய்த தோத்திரத்திஞலே மிகவுஞ் சந்தோஷப்பட்டேன் உமக்கு என்ஞல் ஆகவேண்டுவதைக் கேளுமென்று சொல்ல, அம்முனிவருங் கைகூப்பி, ஓ செஞ்சுடர்த்தேவே! நீர் காண்டவவனத்தை யெரித்தழிக்குங் காலத்தில் அவ்வனத்திலிருக்கும் என் பாம்பினங்களை யெரிக்காமற் காத்தருள வேண்டுமென்ன அத்தேவனும் அப்படியே யாகட்டுமென்று வரங்கொடுத்து வந்துவிட்டான். ஆகையாலேதான் அச்சார்ங்கதர்களை யெரிக்கவில்லை.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இவ்விதமாக வந்த அக்கினியானவன் அவ்வனத்தைச் சூழ்ந்து தகித்துக்கொண்டு வருமளவில், அதிலிருந்த ஜரிதையென்கிற பெண் பட்சியானது கதியொன்றுங் காணுமல், மிகவுஞ் சிறிய தன் குஞ்சுகளைப் பார்த்து மெத்த வியாகூலமடைந்து பரிதாபமாய் அழத்தொடங்கி, ஐயோ? மகா துர்ப்பாக்கியையான எனது வயிற்றில் இவைகளேன் பிறந்தன? தெய்வமே! அற்பமாகியும் ஆதரவற்றுமிருக்கிற என்னிடத்தில் தாஞே உன் சவுரியத்தைக் காட்டவேண்டும். இரங்கலாகாதோ? நான் மகாநுபாவருக்கு மனைவியாஞேமென்று மகிழ்ந்திருந்தேனே, அப்படி மகிழலாகாதென்று தெய்வம் இவ்வண்ணமாக்கிப் போட்டதே என்னசெய்வேன்? ஓ என்குஞ்சுகாள்! இப்போதான் முளைக்கும் உங்கள் அவயவங்கள் நெருப்பில் விழுந்து கரியப்பார்க்குங்காலம் நேரிட்டதே இதோ நெருப்பு வந்துவிட்டதே என்னுடைய வல்லுயிர் முன்னேபோமோ? அப்படிப் போகுமாகில் உங்களுடைய பரிதாபத்தையாகிலுங் கண்ணுலே பாராமற் போவேஞே? ஐயோ! அக்கினி பகவானே! உன்னைக் கும்பிடுகிறேன் நீ என்னிடத்தில் அன்பு பாராட்டி என் குழந்தைகளை யெரிப்பதற்கு முன்னமே என்னை யெரித்துவிடு. இவ்வளவு சகாயமாகிலும் செய்யக்கூடாதா? ஓ பிள்ளைகளே! இறகு முளையாத உங்களையும் பேதையாகிய என்னையும் இவ்வனத்தில் விட்டுப்போட்டு, உங்கள் தகப்பஞர் லபிதையுடனே கூடிக்கொண்டு சுகித்து வாழ்ந்திருக்கப் போனுரே உங்களை நான் எவ்வாறுகாப்பேன் எப்படிவிட்டுப் போவேன் என்ன செய்வேன் உங்களுடன்கூடவே உயிரைவிடுவேன் என்று வியசனப்படக் கண்ட அக் குஞ்சுகள் தாயை நோக்கி, அம்மா! நீ எங்களை விட்டுப்போட்டு ஆகாசத்திலெழும்பி எப்படியாகிலும் உன் புருஷனிடத்திற் போய்ச் சேரவேண்டியதேயன்றி, எங்களுக்காகக் காத்திருந்து நீயுங் கூட இறந்து போகவேண்டாம். ஏனென்றால், நாங்கள் போய்விட்டாலும் நீ யிருப்பையேயாகில் எங்களைப்போ லின்னும் மக்களைப் பெறலாம் நீ போய்விட்டால் எங்கள் குலமே போய்விடு மல்லவோ? சந்ததிக்காகத்தானே எங்கள்பிதா உன்னைச்சேர்ந்தார். எங்களைக்காப்பாற்றச் சக்தியில்லாமல் நீயும் இத் தீய்க்கு இரையாய் விடுதலிஞலே ஒரு பயனுமில்லை. என்று சார்ங்கங்கள் சொன்ன பேச்சைக் கேட்ட ஜரிதை மிகவும் மனநொந்து மக்களைப் பார்த்து, ஓ எனது பாலர்களே! எனக்கொரு யுக்தி தோன்றுகிறது. அதை நீங்கள் கேளுங்கள்: இதோ ஒரு எலிப்பாழி யிருக்கிறது. இதில் நீங்கள் புகுங்கள் அதின் வாயை நான் மண்ணிஞலே மூடிப்போடுகிறேன். அனல் அவிந்தபின் வந்து அதைத் திறந்து விடுகிறேனென்றது. அதைக் கேட்டு அந்த முனிகுமாரர், அம்மா! நீ இப்பிலத்திற் பிரவேசிக்கச் சொல்லுகிருயே, அதிலிருக்கும் எலியானது இறகில்லாமல் மாமிச பிண்டமாயிராநின்ற எங்களை இலேசாய் விழுங்கிடுமே. ஆகையால், அதில் நாங்கள் எப்படிப் பிரவேசிப்போமென்று சொல்ல, மறுபடியும் தாய் குழந்தைகளே! இதிலிருந்த எலியானதுவெளியில் வரக்கண்டு ஒரு பருந்து காலாலுராய்ஞ்சு தூக்கிக்கொண்டு போயிற்று என்று சொல்ல, குஞ்சுகள், அம்மா! எலியைப் பருந்து உராஞ்சிக்கொண்டு போயிற்றென்பதை நாம் என்னமா யறிவோம்? இந்தப் பிலத்தில் வேறு எலியுமிருக்கலாம். அதில் நாங்கள் புகுந்தாற் சித்தமாய் மரணமடைவோம் இங்கிருந்தாலும் ஒருவேளை அக்கினி நாமிருக்குமிடத்தை தகிக்காமல் விட்டுவிடுவன். அதிற் போய் எலியின் வாயில் விழுந்து சாவதைவிட இங்கிருந்து நெருப்பில் விழுந்தால் நல்லதென்று சொன்னதைக்கேட்ட தாய் குஞ்சுகளே! பாழியின் சமீபத்திற் பருந்து வந்திருக்கவும், அதிலிருந்த எலிவெளியில் வரவும், அவ்வெலியை அப் பருந்து கொத்தி காலிஞல் தூக்கிக்

கொண்டு போகவுங் கண்டேன். இவ்வாருக எலியை யெடுத்துப்போன பருந்தை நானும் வேகமாய்ப் பின் தொடர்ந்துபோய் அப்பருந்துக்கு ஆசிகள் வழங்கி, எங்களுடைய சத்துருவாகிய எலியைக் கொண்டுபோகிறபடியினாலே நீ ஆகாயத்தில் விரோதமின்றி சஞ்சரித்துக்கொண்டு வாழக்கடவாயென்று சொல்லிக்கொண் டிருக்கையில், அவ்வெலியைப் பருந்து பட்சித்துப்போட்டது. நானும் அப்பருந்தினிடத்திலே விடை பெற்றுக்கொண்டு வந்துவிட்டேன். ஆகையாலே உங்களுக்குப் பயமில்லை யென்று சொல்லிற்று.

அதற்குச் சார்ங்கங்கள், அம்மா! நீ எங்களைச் சந்தேகமுள்ளவிடத்து அனுப்புவதை விட, இவ்விடத்திலே இருத்துவது நன்று. ஏனெனில், இந்தக் குகைக்குட் புகுவதனால் எங்கட்குச் சாவு நிச்சயம். அப்படி சாவதினு மெய் வாயி லகப்பட்டுப் போவதிற் பாவமுண்டு. நெருப்பில் விழுந்து வெந்துபோனுலும் புண்ணியமுண்டு. அன்றியும், நீ எங்களைக் காத்து எங்களுடன்கூட உயிரை விடுவதில் எங்கள் பிதாவின் அபிப்பிராயம் வீணய்ப் போகின்றது. மேலும், எங்களைக் காக்கவேண்டியது உன்கடமையென்று எங்களால் உனக்கு என்ன உபகாரங் கிடைக்கப்போகிறது? ஒன்று மில்லை. நாங்கள் யாரோ? எப்படிப்பட்டவர்களோ? அதெல்லா முனக்குத் தெரியாது. எங்களை அக்கினி தகியாமல் விட்டுவிட்டாலும் விடலாம். தகித்து விட்டாலும் நல்லகதி யடையலாம். நீயோ நல்ல மங்கைப் பருவ முடையவளாயிருக்கிருய். உன்னுடைய விதிப் படி கணவனைச் சேர்ந்து வேறு பிள்ளைகளைப் பெறலாம். ஆகையால், நீ எவ்விதமாகிலும் தப்புவித்துக் கொண்டுபோய் நெருப்பவிந்த பின் வந்தால், அப்போது நாங்களும் பிழைத் திருந்தாற் பார்த்துக் கொள்ளலாம் என்று சொன்ன சொல்லைக் கேட்டு யோசித்து, இவர் கள் மகானுபாவராவரென்று முன்பு தனக்கு ரிஷி சொல்லியிருந்த வார்த்தையை நினைத் துக் குஞ்சுகளை வனத்திலே விட்டு எழும்பி ஆகாசத்திற் பறந்து போய்விட்டது. இப்படி தாய் போனவுடனே தீக்ஷண்யமாகி சுவாலைக ளுடனே அவ்வனத்திற் பிரவேசித்த அக்கினி யானவன் சமீபத்தில்வர, அதுகண்டந்தச் சார்ங்கக் குஞ்சுகள் நடுங்கி மிகவுந்துக்கமடைந்து, ஆபத்திஞலாகிய பயத்திஞலே மிகவு மிரக்கமுறத் தக்கதாய் கூவிச், சில பேச்சுகள் பேசிக்கொண்டதுகள். அம்முனி குமாரர்களாகிய பட்சிகளுள் முதற் குமாரனுகிய ஜரிதாரி யென்பவன் தன் தம்பிகளை நோக்கி, உலகத்திலே புத்திமானுகிய புருஷன் தனக்கு ஆபத்துகாலம் நேரிடுதற்கு முன்னமே ஜாக்கிரதைப் படவேண்டியது. அப்படி செய்பவதான் ஆபத்து நேரிட்டபோதும் அமதனுலே துன்பப்பட மாட்டான். அப்படியின்றி ஒருவன் தனக்கு நல்லகாலம் நேரிட்டிருக்கும் போது இப்படியே நமக்கு நல்லகாலமிருக்குமேயன்றி கெட்டகாலமெப்போதும் வராதென்று நம்பியிருப்பானேயானுல், அவன் பின்னுக்கு மிகுந்த துன்பத்தை யனுபவிப்பான். ஆகையால் நமக்கு முன்னமே ஆபத்துவரப் போகிறதென்று நிச்சயப்பட்டிருக்கிறது. அதனுல் நாம் விசனப்பட வேண்டுவதில்லை யென்று சொல்ல, அதுகேட்ட இரண்டாஞ் சகோதரன் சாரிசிருஷ்டன் அண்ணனை நோக்கி, ஓ அண்ணலே! நீர் மிகவும் புத்திமானுகவும் தயிரியசாலியாகவும் இருக்கிறபடியால் இப்போது நமக்கு நேரிட்டிருக்கிற பிராணவாபத்தை எப்படியாகிலும் தீர்க்க யோசிக்க வேண்டும். உம்மைக் கும்பிடுகிறேன். ஏனெனில், ஒரு குலத்தில் ஒருவனே வியாபகனுயிருப்பானென்று சொன்னேன். பின்பு மூன்ருஞ் சகோதரனுகிய ஸ்தம்பமித்திர னென்கிறவன் அவ்வண்ணனை நோக்கி, தகப்பனுரில்லாதவர்களுக்கு மூத்தவ னன்றோ தகப்பனுதலால் ஆபத்தினின்று மற்றவரைக் காக்க வேண்டிய கடமை அவனுக்கே யிருக்கின்றது. அப்படியிருக்க மூத்தவனுக்கே உபாய மொன்றுந் தோன்ருமல் போனுல் இளையவனென்ன செய்ய மாட்டுவானென்று சொன்னுன். பின்பு கடைப்பிள்ளையாகிய துரோண னென்கிறவனும், ஓ! ஓ! இதோ நாமிருக்குமிடத்திற் சுவாலைகளாகிய நாவுகளை நீட்டி யாவையும் புசிக்குந் திறளைக் காட்டி வருகிருர் மிக வொளிவு பெற்று யாகங்களிற் சொரியும் அவிகளைப் புசிக்கும் மகாநுபாவராகிய அக்கினிதேவரென்று சொல்ல, இதுகளை யெல்லாங் கேட்ட மூத்தவனுகிய ஜாரியானவன் அவ்வக்கினியைப் பார்த்துக் கைகூப்பி வணங்கி தோத்திரஞ் செய்ய வாரம்பித்தான்.

ஓ அக்கினி தேவனே! நீதான் வாயுவுக்கு ஆத்துமாவா யிருக்கிருய். சஞ்சீவி முதலிய புற்பூடுகளுக்குத் தேகமா யிருக்கிருய். தண்ணீர்களுக்குப் பிறப்பிடமா யிருக்கிருய், சலத்

துடன் பிறந்தவனுயு மிருக்கிருய், மற்றும் பூமியாகவு மிருக்கிருய் அன்றியும் உன் விசுவ ரூபத்தையும் ஏழு சுவாலைகளாகிய நாவை யுங்கொண்டு எங்களைக் காத்தருள வேண் டும். ஓ அக்கினிபகவானே! நீயன்றி எங்கட்கு வேறு கதியில்லை உன்னையே சரணமடைந் தோம். நீதான் சூரியனுகவிருந்து உலகங்களை விழிக்கச்செய்கிருய் உன்னையன்றிப் பிரகாசம் பொருந்திய வஸ்து வேறில்லை. நீயே தயை செய்து எங்களை ரட்சிக்கவேண்டுமென்று ஆக்கினேய மந்திரத்தைத் தோத்திரஞ் செய் தான். பின்பு சாரிசிருட்டன், ஓ தேஜோமயமா கிய கடவுளே! நீயே உலகத்திற் காதாரமா யிருக்கிறபடியினுலே இவ்வுலகங்கள் யாவும் உன் வசத்தால் விளங்குகின்றன. ஆதலால், நீயே காத்தருளவேண்டுமென்று வேதத்தாற் போற்றினன். பின்பு ஸ்தம்ப மித்திரன், ஓ அனற்கடவுளே! நீயே அவிகளாகியும் அவ்வை களைப் புசிப்பவனுகியு மிருக்கிருய். பெரியோர் கள் உன்னை ஒருவனுகவும் பலராகவும் பாவி த்து யாகம் செய்கிருர்கள். நீயே சிருஷ்டித்து பிரளயகாலத்தில் அழித்துப் போடுகிருய், நீயே ஆதேயமும் ஆதாரமுமாக விருக்கிருய், ஆதலால், எங்களை ரட்சிக்கவேண்டுமென்று ஏத்தினன். அதன் பின்பு துரோணன் ஓ உலகத்திற்கு காரணமாகியதேவனே! நீ எல்லா ருடைய வயிற்றினுமிருந்தவர் புசிக்கும் ஆகா ரங்களை யெல்லாம் சீரணமாக்கி வளர்க்கிருய், சூரியனுகவிருந்து பூமியிலுள்ள ரசங்களை யெல்லாங் கவர்ந்து மறுபடியும் மேகமாகி அவ்விரசங்களை வருஷித்து உலகத்தை காக் கிருய், ஓஷதிகளும்-குளங்களும்-ஆறுகளும்-சமுத்திரங்களும் உன்னுல் உற்பவிக்கின்றன. அதனுலன்றோ வருணதேவனு மாட்சிபெற்று மாக்ஷிமையுடன் இக்கடலில்வாசம்செய்கிருன். பொன்னிறமாகிய கண்களும் சிவந்தகழுத்தும் கறுத்த சிகையுமுடையவனுய் விளங்காநின்ற தேவனே! நீ எங்கள் விஷயத்தில் மிகவும் பட்சமுடையவனுகி எங்கட்குப் பிராணபயமில் லாமல் இருக்கிற வரத்தைத் தந்தருளவேண் டும் உனக்கு அநேகம் தெண்டனிடுகிறேன் என்று வாழ்த்தினன். இவ்விதமாகச் செய் யுந் தோத்திரங்களை அக்கினிபகவான் கேட் டுச் சந்தோஷப்பட்டு, ஞானத்திஞற் சிறந்த வனுகிய துரோணனை நோக்கி, ஓய் துரோண ரே! நீர் மகாரிஷியாதலால் உமது வாக்கில் வேதமணம் வருகின்றன. உங்கட்கு பயமில்லை. முன்னமே உங்களை விட்டு விடும்படியாக உங் கள் தந்தைக்கு வாக்குதத்தம் பண்ணியிருக்கி றேன். உங்களை நானெரிப்பதில்லை. நீங்கள் என்னைத் துதித்ததற்காக நான் என்ன செய்ய வேண்டுஞ் சொல்லுங்களென்று கேட்டான். துரோணன் சுவாமி! இங்கே மிகவுங்கொடுமை யுள்ள சில பூனைகளிருக்கின்றன. அவை தினந்தோறும் எங்களை பார்த்து உறுமி உபத் திரவப் படுத்துகின்றதுகள். அவைகளை நீ சீக்கிரத்தில் புசித்துவிட வேண்டுமென்ன, அதுகேட்ட அக்கினிதேவன் அப்படியே அப்பூனைகளில் ஒரு சிறுகுட்டியைக்கூட விடா மல் எரித்து, முன்போலச் சென்று காண்டவ வனத்தை நோக்கி அழற்றுவதானன். இது இப்படியிருக்க, அந்த மந்தபாலமுனிவர் பிள்ளைகளை நினைந்து, தான் அக்கினியினிடத் தில் வரம்பெற்றிருந்தபோதிலும் புத்திர வாஞ்சையினுல் என்ன ஆகுமோவென்று விசனமுற்று, லபிதையைப் பார்த்து, அடி பெண்ணே! என் பிள்ளைகள் மிகவுஞ் சிறுவ ராதலால் அவ்வனத்தில் அக்கினிப் பிரவே சிக்குமளவில் எழும்பிப் போகவொட்டாமல் இருக்கவும் இடமில்லாமல் தவித்துக்கொண்டு என்ன செய்கின்றனரோ? அல்லது அந்த ஜரிதையானவள் யாது செய்ய மாட்டுவாள்? குஞ்சுகளை வைத்துக்கொண்டு அவள் எப்படி தவிக்கின்ருளோ? ஐயோ! நான் தவஞ்செய்து பெற்ற பிள்ளைகள் சாம்பராகிப் போயினரோ? எரிந்துகொண் டிருக்கின்றனரோ? அவ்விய சனத்தை சகிக்கமாட்டாமல் என் பத்தினியுந் தீயில் விழுந்து போயினளோ, என்ன துயரப் படுகிருர்களோ? ஏன் நானவர்களை விட்டுவந் தேன்? மறுபடி காண்பேனே? காணமாட் டேனே? ஒன்றுந் தெரியவில்லையே என்று சொல்லி, ஓ ஜரிதாரி! ஓ ஜாரிசிருஷ்டா! ஓ ஸ்தம்பமித்திரா! ஓ மகாநுபாவனுகியதுரோ ணு! நீங்கள் எனக்குப் புத்திரராகி இந்தக் கதி யடைந்தீர்களே உங்கள் மனம் எப் படி துடிக்கிறதோ? உங்கள் உடல் எவ்விதம் பதைக்கிறதோ என்று புலம்ப, அதை லபிதை கேட்டு, மனதிற் பொருமையோடு தன் கணவ னைப்பார்த்து ஓய் முனியே! நீர் பிள்ளைகளுக் காக மனஸ்தாபப்படவில்லை முன்னமே அவர் கள் ரிஷிகளென்றும் மகாநுபாவர்களென் றுஞ் சொல்லியிருக்கின்றீர். அன்றியும் அக்கி னியைத் துதித்துப் பிள்ளைகளுக்கு யாதொரு தீங்கும் நேரிடாமலிருக்கும்படி வரமும் பெற் றிருக்கிறீர். அந்தத் தேவனும் சொன்னவாக் குத் தவரமாட்டான். உமது பிள்ளைகளுக்கு

அக்கினிபயங் கொஞ்சமேனுமில்லை. அதெல்லாம் உமக்கு நன்ருய்த் தெரிந்திருக்கிறபடியிஞலே நீர் பிள்ளைகளைக் குறித்து விசனப்படக் காரணமில்லை. ஆனல், என்னைவிட்டு ஜரிதையிடத்திற்குப் போகவேண்டுமென்பது கருதிப் பிள்ளைகளுக்காகப் புலம்கிறதுபோல் மாயம் பண்ணுகிறீர். உமது விந்திலுதித்த ஞானவான்களாகிய பிள்ளைகள் தங்கள் தாயை காக்காம லிருப்பார்களோ? இதுவெல்லாமல்ல உன் சக்களத்தியாகிய ஜரிதையை நினைத்துக் கொண்டு இப்படிப் புலம்புகிறீரே யல்லது வேறில்லை. எனக்கு நன்ருய்த் தெரிகிறது. அவளிடத்தில் எவ்வளவு ஸ்நேக மிருக்கிறதோ? அதிற் பத்திலொருபங்கு என்னிடத்தில்லை. ஐயோ! உம்முடைய ஆசையை நான் கெடுப்பானேன்? இப்படி மேலுக்கு உறவாடுகிற புருஷனுடன் சேர்ந்து அனுபவிப்பதை விடச் சும்மாயிருப்பதே பெண்களுக்கு நல்லது. ஆதலால், நீர் உமது பிரிய நாயகியாகிய ஜரிதையினிடத்திற்கே போய்ச் சேரும் இனியென்னைத் தீண்டவேண்டாம். நான் திக்கற்றவள்போல எங்கேயாகிலு மிருக்கிறேனென்று சொல்ல, அதைக் கேட்ட மந்தபாலமுனியானவர் அடி லபுதாய்! நீ யென்னைக் காமமிகுதியிஞற் பெண்களை மருவுகிறவஞக நினைக்கிருய். அப்படி நினையாதே. சந்ததிக்காக யிருக்கிறேனே யல்லது வேறில்லை. அடி மூடத்தனமுள்ளவளே! பிள்ளைகளுக்குத்தொந்தரவு நேரிடுங் காலத்தில் நான் உன்னுடனே சரசமாடிக்கொண் டிருக்கலாமோ? கையிலிருக்குங் கனியை யெறிந்து மரத்திலிருக்குங் கனியைத் தாவுவதுபோற், பெற்ற பிள்ளைகளை நெருப்பில்விட்டு வேறு பிள்ளையைப்பெற யத்தனிப்பேஞே? அப்படி செய்வேஞகில் என்னைப் பார்க்கிலும் ஞானசூனியன் இவ்வுலகத்தில் யாரு மிருக்கமாட்டார்கள். உலக நிந்தனையும் பெறுவேன். பரலோகவாசமுமிழப்பேன். இம்மைச் சுகமுந் துறப்பேன். இவ்வாறு நான் கெட்டுப் போகவல்லவோ நீ சொல்லுகிறது. ஓ குரூரமனமுடைய கோதாய்! அக்கினி தேவன் வாக்குத் தத்தம் பண்ணி யிருந்தாலும் அப்பெரிய வனம் பற்றி யெரியுமளவிற் சிறகு முளையாத அக்குஞ்சுகளை அதில் விட்டுச் சும்மா யிருக்க மனந் துணியுமோ? சுவாலை வீசினுலும் போதுமே, ஆதலால் நீ யென்ன சொன்ஞலுஞ்சரி; நான் அவ்விடம் போவேன். உன்னிஷ்டம் என்னுடன் கூட வந்தால்வா அல்லது எங்கேயாவது போஞற் போ என்று சொல்லி அம்முனி காண்டவ வனத்திற்கு வந்தார்.

இதற்குள்ளாக அக்கினியானவன் வன முழுதுந் தகித்துச் சாம்பராக்கியபின், ஜரிதையும் அவ்விடத்துக்கு வந்து தன் குஞ்சுகள் பிழைத்திருப்பதைக் கண்டு, மிகவும் பரிவுடனே ஓடிக் குஞ்சுகளை யணைத்துக் கண்ணீருகுத்து ஸ்தம்பித்து நிற்குமளவில்; அந்தமந்தபாலமுனியும் அவ்விடம் வந்து, தனது மனைவியு மக்களும பிழைத்திருப்பதை நோக்கிப், பரிவிஞற்றளர்ந்து ஆச்சரியத்தாற் கிளர்ந்து நிற்கும்போது அந்நான்கு குமாரரும் பிதாவைக் கண்டு, ஐயா! தேவரீர் திருவடிகட்கு நமஸ்காரஞ் செய்கிருேமென்று தங்களுக்கு முளைத்திருக்கிற சிற்றிறகுகளுக்குஞ் சிறுகால்களுக்குத் தக்கபடி ஓடிவந்து நமஸ்காரஞ் செய்தார்கள். இவ்வாறு வணங்கிய புத்திரரைக்கண்ட மந்தபால முனியானவர் மிகவுஞ் சந்தோஷப்பட்டு, புத்திரப்பேற்றை வேண்டி உலக வின்பத்தை யடைந்தவராதலால் அவர்களை ஆலிங்கனஞ் செய்து தடவிச் சீராட்டி உச்சி மோர்ந்து, தன் மனைவியாகிய ஜரிதையை நோக்கிச் சில வார்த்தைபேச, அவள் ஒன்றும் பதில் பேசாமலிருக்க, மறுபடி அவளைப்பார்த்து சொல்லுகிருர்: அடி என் காதலி! இந்த மக்களுள் மூத்தவன் எவன்? இரண்டாவது எவன்? மூன்ருவது எவன்? நான்காவது எவன்? நான் மிகவும் அன்புடனேயும் துக்கத்துடனேயுங் கேட்கிறேன். மறுமொழி யொன்றுஞ் சொல்லாதிருக்கிருய் அப்படி நீயிருப்பதிஞலே என் மனம் மிகவும் பரிதாப முறுகின்றது. என்னிடத்தில் விசுவாசம் பாராட்டிப் பேசவேண்டுமென்று அவளைப் பரிசித்தார். அந்த ஜரிதையானவள் ஓய் முனிவரே! உமக்கு மூத்தபிள்ளை யாராஞலென்ன? இரண்டாவது பிள்ளை யாராஞலென்ன? மூன்ருவது பிள்ளை யாராஞலென்ன? நான்காவது பிள்ளை யாராஞலென்ன? இவர்களைப்பற்றி உமக்காக வேண்டிய தொன்றுமில்லை. அப்படி ஏதாகிலும் பிரயோஜன மிருந்தாற் பேதையாயுஞ் சிறகு முளையாக் குஞ்சுகளை யுடையவளாயுமிராநின்ற என்னை ஒழியாய் இக் கானகத்தில் தனியே விட்டுப்போய்ப் பயங்கரமாகிய காலத்திலும் இப்படிப் பார்க்காமல் இருப்பீரோ? முன்னம் எவளிடத்தில் மோகத்திஞலே இவ்வாறென்னை விட்டுப்போனீரோ அவளிடத்திற்கே இப்போதும் போகலாம். நான்

அவளைப்போல் அழகும் சொருசுமுடையவளோ அவளே உம்முடைய மனத்திற் கினியவளென்று ஒறுத்தாள். அதுகேட்ட அம்முனிவர் அடி பெண்ணே! நான் சந்ததிக்காகப் பெண்களை பெற்றிருந்த படியினாலும், அவளுடனிருந்தேன். அன்றியும், பெண்களுக்குக் குழந்தைகளைப் பார்ப்பதை விடச் சந்தோஷம் வேறில்லை. ஆதலால், உன்னை விட்டுப்போனேன் நீயோ மகா பதிவிரதையாயிற்றே, நீ யெல்லா மறிந்திருந்தும் புருஷன் விஷயத்தி லிப்படி சந்தேகப் படலாமோ இப்படித்தான் பூர்வத்தில் அருந்ததியானவள் சப்தரிஷிகள் நடுவில் விளங்கிக்கொண்டு மிகவும் பரிசுத்தமானகருத்துள்ளவராகிய வசிஷ்டரிடத்திலுஞ் சங்கைப்பட்டு அதன் குறிப்பை யாவருக்குங் காண்பித்தாள். அதனாலே அவ்வசிஷ்டமுனிவர்கோபங் கொண்டு சபித்தார். அச் சாபத்தினாலேதான் இப்போது கருநிறங்கலந்த செந்நிறமுள்ளவளாய் சனங்களுடைய கண்களுக்குத் தெரிந்துந் தெரியாமல் ஆகாசத்தில் நட்சத்திரமாயிருக்கிறாள். ஆதலால் நீ மகா பதிவிரதையாயிருந்து புருஷனுடைய கருத்தறியாமல் என் பேரிற் சங்கிப்பது நியாயமல்ல. மேலும் நான் பெண்போகம் விரும்பியவ னல்லன். சந்ததியை மாத்திரம் விரும்பியவன். அன்றியும், பெண்டாட்டியி லிடத்தில் விசுவாசம் வைப்பது தப்பு. ஏனெனில் பிள்ளை பிறந்தாற் புருஷனை லட்சியஞ் செய்கிறதில்லை. அடி ஜரிதாய்! நீ நற்கதி யடையும் பொருட்டு என் சொற்படி கேட்டுக்கொண்டு என்னுடன் கூட இருவென்று சொல்லவே, அப் பெண்மயில் போல்பவள் திடுக்கிட்டு, நமது நாயகர் கருத்தையறியாமற் சொன்னோமே யென்று நடுநடுங்கி நிற்க, பிள்ளைகள் நால்வருந் தகப்பனரைச் சரணஞ் செய்து, தாங்கள் தாயினிடத்திற் கோபிக்கவேண்டா மென்றார்கள். அம்முனிவரானவர் தமது பிள்ளைகளுடைய சத்குணங்கட்குச் சந்தோஷித்து, என்னுடைய தவப்பயனாகிய பிள்ளைகளே! உங்களை யிவ்வாபத்துக் காலத்திற் காக்காமல் விட்டுப்போனேனென்று நீங்கள் நினைக்க வேண்டாம். ஏனெனில், இவ்வனத்தைக் கொளுத்த வரும்போதே அக்கினி பகவானை நான் கண்டு துதித்து உங்களைக் காக்கும்படி வேண்டிக் கொண்டேன்; அதற்கு அப்படியே யாகட்டு மென்று ஒப்புக்கொண்டார். அந்தத் தேவன் வாக்குத் தவிரமாட்டா ரென்றும், உங்கள் தாயார் மகா பதிவிரதை யாகையால் அவளாலே அக்கினி ஜெயிக்கப் படுமென்றும், நீங்கள் என் தவப்பய னென்படியினாலே வேதவாக்கியங்களைக் கொண்டு துதிசெய்து தப்பித்துக் கொள்ளுவீர்க ளென்றும் நிச்சயம் பண்ணி, நானிவ்விடம் வாராம லிருந்தேன். ஆனது பற்றி என்னிடத்தில் நீங்கள் இந்த விஷயத்திற்காக விகற்ப மொன்றும் நினைக்கவேண்டாம். இனியிவ்விடத்தில் நாமிருக்கக்கூடாது. அப்பாற் போவோம் வாருங்களென்று சொல்லிப் பெண்சாதி பிள்ளைகளை யழைத்துக் கொண்டு, மந்தபாலமுனிவர் வேறிடம் போய்ச் சேர்ந்தார்.

### கிருஷ்ணார்ச்சுனர் தேவேந்திரனிடத்தில் வரம் பெற்று மீளுதல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இவ்விதமாகச் சார்ங்கர்-மயன்-அசுவசேவன் என்னு மிவர்களைத் தவிர மற்றெல்லாச் செந்துக்களையும், செடி-கொடி-மரம்-புல்லு-கல்லு முதலான தாவரங்களையும் அக்கினிதேவன் நன்றாய்ப் பட்சித்து, உதிரம்-ஊனீர்-முதலானவைகளைக் குடித்துத் திருப்தியடைந்து, மகா சந்தோஷத்துடனே கிருஷ்ணார்ச்சுனர்கட்கு முன்வந்து, ஓய் மகானுபாவர்களே! உங்களுடைய சகாயத்தினாலே எனதிஷ்டம் நிறைவேறிற்றென்று புகழ்ந்து கொண்டிருக்குந் தருணத்தில் தேவேந்திரனானவன் சகல தேவ கணங்களோடுங்கூட வானத்தினின்றும் இறங்கி வந்து, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியையும் அர்ச்சுனனையும் பார்த்து, ஓ புருஷ சிங்கங்களே! நீங்கள் லோகோபகாரார்த்தமாக அவதரித்தவர்க ளாகையாற் சகலமான தேவாசுரர்களையும் வென்று லோகத்துக்கு மிகவும் விரோதமாயிருந்த இவ்வனத்தை அக்கினியைக்கொண் டழித்தீர்கள். ஆகையால், உங்களுடைய பல பராக்கிரமங்கட்கும் தைரிய சாமர்த்தியங்கட்கும் தருமநிலைக்கும் மிகவுஞ் சந்தோஷப்பட்டேன். உங்களுடைய இப்படிப்பட்ட நற் குணங்களைக் காண்பதற்காகவே நான் யுத்தஞ் செய்தேன். இப்போது உங்கட்கு நல்ல வரங்கள் கொடுக்க வேண்டுமென்று கருத்து கொண்டிருக்கிறே னாகையால், இஷ்டமான வரங்களைக் கேளுங்க ளென்று சொல்ல, அர்ச்சுனனானவன் வெகு பயபக்தியுடனே வணங்கிக் கை கூப்பிக்கொண்டு, ஓ ஐயனே! என் பிதாவாகிய தேவராஜனே! என்னிடத்தில் இவ்வளவு பரிவுடனே நீர் வரமளிக்க வந்தமையால் மிக

வுந் தன்னியனுனேன். தேவரீர் திருவாய் மலர்ந்தருளியபடி எனக்குப் பாசுபதாஸ்தி ரத்தையும், மற்றும் சிரேஷ்டமாகிய அஸ்தி ரங்களையுங் கொடுத்தருள வேண்டுமென்று கேட்டான். இந்திரனவன் ஓ என் மகனே அர்ச்சுனு! நானுனக்கு ஐந்திராஸ்திர முத லானவை கொடுப்பேன். பாசுபதாஸ்திரத்தை யோ உனக்குச் சிவன் கொடுப்பார் எப்போது பகவானுகிய உருத்திர மூர்த்தியானவர் உன் னிடத்திற் கிருபை செய்து தமது அஸ்திரத் தைக் கொடுப்பாரோ அப்போதுதான் நான் உனக்கு ஆக்கினேய அஸ்திரங்கள் வாய் வாஸ்திரங்கள்-ஐந்திர அஸ்திரங்கள் முத லிய எல்லா வஸ்திரங்களையும் கொடுப்பேன். ஏனெனில், அப்போதுதான் நீ இவ்வஸ்தி ரங்களை ஏற்றுக்கொள்ளத்தக்க தவப்பெருமை யுடையவனுகிருய். அந்தக் காலம் எனக்குத் தெரியும். ஆகையால் நானே உன்னை அழைப் பித்துக் கொடுப்பேனென்று சொன்னன். பின்பு கிருஷ்ணமூர்த்தியானவர் இந்திரனைப் பார்த்து, ஓ இந்திர தேவனே! எனக்கு மற் ருெரு வரமும் வேண்டுவதில்லை. இந்த அர்ச் சுனனுடைய நேசம் நிலை பெற்றிருக்கும்படி யான வரமொன்று கொடுத்தாற் போது மென்று சொல்ல, இந்திரனும் அப்படியே ஆக்கடவதென்று சொல்லி அக்கினியினிடத் திற்கு வந்து, ஓ அக்கினிதேவனே! நீ நல்ல ஆஸ்ரயம்பெற்றபடியால் உன்னிஷ்டம் நிறை வேறிற்று. நீ செய்த காரியம் நல்லதாகை யால் எனக்கு உன்னிடத்தில் மனஸ்தாப மில்லை யென்று சொல்லி மறுபடியுந் தனது இடமாகிய பொன்னுலகம்போய்ச் சேர்ந்தான்.

இவ்வாறு இருபத்தொரு நாட்களிலே அக்காண்டவ வனத்தைத் தகித்த அக்கினி தேவனவன் அர்ச்சுனனைப் பார்த்து, ஓ சற்குணத்திற் கிசைந்த பற்குனு! இந்தக்காண் டபமென்னுந் தனுசினுலேயும் அட்சயமாகிய தூணினுலேயும் வானரத் துவசமுடைய இந்த ரதத்தினுலேயும் சகல சத்துருக்களை யும் நாசஞ்செய்து வாழப்போகிருய். இனி எனக்கு விடைகொடுக்க வேண்டுமென்று சொல்லி விடைபெற்று, அப்படியே ஸ்ரீகிருஷ் ணனையுந் துதித்து விடைபெற்றுச் சுவர்க்க லோகம்போய்ச் சேர்ந்தான். பின்பு அக் கினியினிடத்தில் விடைபெற்ற கிருஷ்ணர்ச் சுனரிருவரும் மயனையுங் கூட்டிக்கொண்டு வேடிக்கையாய் சஞ்சரித்துக்கொண்டு வந்த வர்கள், "மனிதர் வெங்கோடை தீர்க்கும் வசந்தமென் காலும்வேறு, துனிதவி ரிளங் கால்வேண்டுஞ் சோலையுஞ் சோலைவேண்டும், புனிதநீர்த் தடமும்வேருேர் புதுமலரோடை வேண்டும், பனிதருமதியும் வேனுேர் பான் மதி வேண்டுங்காலம்'' என்று சொல்லும்படி யானதும், இன்றுணையாகிய கணவரைப் பிரிந்த மாதர்கள் துன்பத்தை யடைய, விவா கத்தின்கண் இடைவிடாது கணவரைத் தழு விச் சரசசல்லாபத்தோடிருக்கும் மாதர்க ளின் பத்தை யடையும்படியானதும், ஆகாயமளவு முயர்ந்த சோலைகடோறும் ஆண் வண்டுகளும் பெண் வண்டுகளும் ஊடல் நீங்கித் தேன் விருந்துண்டு ஆரவாரித்தலைக் கண்ட அழகிய கூந்தலையுடைய மங்கையர் யாருந் தங்கள் புருஷர்களிடத்தி லுண்டான ஊடல்களையும் நீக்கிக்கொண்டு இன்புறத் தழுவும்படி எண் ணினவர்களாய், மன்மதனுக்கு எங்குந் திரு விழாக்களைச் செய்யும்படியானதும், தென் திசைப் பெண்ணனவள் இருளைக் கெடுக்குந் தனது நாயகனுகிய சூரியனனவன் இதுவரை யிற் றன்பாற் றழுவியிருந்து, இப்போது வட திசைப் பெண்ணைத் தழுவினு னென்று மயங் கிப் பெருமூச்சுவிடுந் தன்மைபோல் மலய மாருதம் வீசும்படியானதும், மேகங்கள் கவிந்து நித்திரை செய்யும்படியாக உயர்ந்து தழைத்துத் தளிர்த்திருக்கின்ற மாமரங்களி லுள்ள குயில்களா லழைப்ப வருகின்ற அனங்கராசனது சேனைகளினின் றெழும்பும் புழுதியைப்போலச் சோலைகள் தோறுமுள்ள வாசனை கமழ்கின்ற புஷ்பங்களில் வண்டுகள் பண் பாடிக்கொண்டிறங்கி மூக்கினுல் உழுந் தோறும் அவ்வவற்றி லுள்ள மகரந்தங்க ளனைத்தும் எழும்பும்படியானதும், நெரு ப்பையொத்த இரத்தினுபரணங்களின் ஒளி பாயும்படியான குசகும்பங்களையுடைய மங்கை யரது கரிய கூந்தலினின்றும் வண்டினங்கள் படிந்து கிண்டுந்தோறும் வீழ்கின்ற பசிய மலர்களைப்போலச் சோலைகடோறு முள்ள பூஞ்செடிகளின் கிளைகள்தோறும் இறங்கிக் கோகிலங்கள் கூத்தாடுதலினுல் வீழ்கின்ற புஷ்பங்களால் மூடப்பட்ட பூமியானது பொற் சீலைகள் விரித்த சயனங்களை ஒத் திருக்கும்படியானதுகளும், கிளைகளிற் புஷ் பித்திருக்கும் மலர்களினது குளிர்ச்சியும் வாசனையும் பொருந்திய மகரந்தப் பொடியி லாடி வருகின்ற ஆண் குயில்களைப் பார்த்த பெண் குயில்கள், புதுமணஞ் செய்து வந்தன

வென்றாடி இளவாழையினது குருத்திற்
சென்றொளிக்கும்படி யானதும், ஆகியே இள
வேனிற் காலமென்னும் வசந்தகாலத்தி னுல்
லாசத்தை யநுபவிக்கவேண்டி வந்தவராகை
யால், தங்களுடைய தேககாந்தி யுறைந்த
மையால் நீலவண்ண முடைவதுபோ லிரா
நின்றதாய், வெண்டாமரை - செந்தாமரை-
வெண்குவளை-கருங்குவளை - வெள்ளாம்பல்-
செவ்வாம்பல் முதலிய நீர்ப்பூவகைகள் எங்
கணு நிறைந்துள்ளதாய் நாரை-அன்றில்-
புரு-உள்ளான் - அன்னம் - நீர்க்கோழி- நீர்க்
காக்கை-சக்கரவாகம்-சின்னரம்-கொக்கு- குணு
லயம் இவை முதலாகிய பலவகைப் பறவை
கள் எங்கணு நிறைந்திருக்கின்றனவாய்,
யானைகள் பொழிகின்ற கன்னமத முதலாகிய
மூன்று வகைப்பட்ட மதங்களும் குதிரைக
ளின் வாயிலிருந்து ஒழுகுகின்ற விலாழிகளுங்
கலந்ததாய், தேவரம்பையர்வந்து ஸ்நானஞ்
செய்யுந்தோறு மிறைந்து கிடக்கின்ற குங்கு
மாதிகள் கலந்த வாசனைப் பொடிகளும்-அவ
ர்கள் எடுத்துத் தரிக்குந் தோறுங் கீழே விழு
ந்து கிடக்கின்ற சந்தனம்-கஸ்தூரி-செம்பஞ்
சின் குழம்பு-கற்பகமலர் முதலாகிய வஸ்துக்
களும் எங்கு நிறைந்ததாய், நீல முதலாகிய
ரத்னங்களும் முத்துக்களுங் கரையின்மே
லுஞ் சலத்திற்குள்ளும் நானாவிதமாகப் பிரகா
சிப்பது. பாற்சமுத்திர முதலாகிய பல சமுத்
திரங்களும் ஒன்றாய்க் கலந்து பெருகி வந்த
துபோ லிருப்பதாய்,பாலை-நெய்தல்-குறிஞ்சி-
மருதம்-முல்லை-என்னு மைந்திணைப் பொருள்
களும் ஆங்காங்கு தலைமயக்குற்றிருப்பதாய்,
சிருஷ்டி திதி சங்காரங்களுக்குக் காரணமாகிய
முக்குணங்களுந் தோற்றுநின்ற மகா விஷ்
ணுவினுடைய மேனிபோன்றதாய், பலவித
மலர்களா லலங்கரிக்கப்பட்ட பூமிதேவியின்
மயிர் பின்னல் போன்றதாய், அன்னங்களு
டைய சிறகுகளாற் பாதி மறைக்கப்படும் பிர
லாகமுடைத்தா யிருக்கிறபடியினாலே பரம
சிவனுடைய மேனியோடு கலந்த பார்வதியின்
தேகம் போன்றதாய் விளங்கா நின்ற இய
முனை யாற்றினது கரையில் வந்து, அதன்
சலத்தினுள்ளே தோன்றிய தாமரை வளையங்
களானவை தேவலோகத்திலுள்ள ஐராவத
மென்னும் யானைகளின் கொம்புகளைப்போ
லிருப்பதையும் அதன் சலத்தினுள்ளேதோன்
றிய குதிரைகளின் சாயல்களானவை தேவேந்
திரனுடைய உச்சைச் சிரவமென்னுங் குதிரை
களைப்போன் றிருப்பதையும், அதன் சலத்தி
னுள்ளே தோன்றிய வெண்டாமரைகளா
னவை ஆகாசத்திற் பிரகாசிக்குங் களங்கமற்ற
பூரண சந்திரர்களை யொத்திருப்பதையும்,
அதன் சலத்தினுள்ளே தோன்றிய செங்கு
வளை யரும்புகளானவை பவளக் குருத்துக்
களை யொத்திருப்பதையும், அதன் சலத்தி
னுள்ளேதோன்றிய நீலோற்பலமலர்களோடுங்
கலந்து மலர்ந்த வெண்டாமரை மலர்கள்
களங்கத்தோடு முதித்த சந்திரனைப் போன்
றிருப்பதையும், அதன் சலத்தினுள்ளே விள
ங்குங் கொடிப்பாசிகளானவை வடவாமுகாக்
கினியின் புகையைப்போன் றிருப்பதையும்,
அதன் சலத்தினுள்ளேதோன்றிய தருக்களின்
நிழல்களானவை மைநாக முதலிய பல மலை
களை யொத்திருப்பதையுங் கண்டவர்களாய்,
அவ்வாற்றில் முன்னந் தம்மோடு ஜலக்கி
ரீடை செய்து சென்ற அம்மங்கையர்களு
டைய முலைத்தடங்களின் கற்பூரங்களெல்லாம்
அவ்வாற்றி னலைகளினாற் கரைத்து ஒதுக்கப்
பட்டனவா வென்று சொல்லத்தக்கவையாய்
நுண்மையாயும் வெண்மையாயும் இராநின்ற
மணற் பிரப்புகளை நோக்கி வியந்து அதில்
விளையாடிய அந்த ஸ்திரீகளுடைய மெய்யுற
வினாற் பரிமளம் பொருந்தி விளங்காநின்ற
சிறுமேடுகளிலே உட்கார்ந்துகொண்டு, அருகி
லிருக்குஞ் சோலைகளி லுலவாநின்ற மந்த
மாருதத்தினால் அதன் தோழனாகிய அக்கி
னிக்கு இவர்கள் பசி தீர்த்ததைபற்றிச் சந்
தோஷித்து இவர்கள் கொண்டிருக்கும்
விடாய் தீர்ப்பதற்காகத் தேன்றுளிகளையும்
மலர்களையுந் தளிர்களையும் வீசப்பெற்றும்
அச்சோலைகளாகும் மங்கையர்கள் கோங்கரும்
புகளாகிய இளமுலைகளைச் சுமந்து பூங்கொடி
யாகிய இடையானது அசைய, மாமரங்க
ளிலுள்ள குயில்களின் தொனியாகிய இசை
யினால் வம்மின்களே அறு இன்சொற் கூறி
புன்னை மலர்களாகிய பொறிகளைச் சிதறி
மெல்லிய தளிர்களாகிய கைகளினாற் கனிகளைத்
தந்து உபசரிக்கப்பெற்றும் இருந்து, இவர்
கள் பராக்கிரம மனைத்தையும் விளங்க உரைப்
பதுபோலக் குயில்கள் கூவவும், அவற்றைக்
கேட்குந்தோறுஞ் சிரக்கம்பிதஞ் செய்வது
போலச் சோலைகளசையவும், அதிசயித் தார்ப்
பதுபோல அன்றில்கள் சப்திக்கவுங் கண்டு
வியந்து, கிரவுஞ்சம் - சக்கிரவாகம் - சாரசம்-
இராஜஹம்சம் முதலாகிய நீர்ப் பறவைக
ளெல்லாம் இவர்கள் தேகநிறத்தை யவ்வாற்
றின் வெள்ளமென்று கருதிக் களித்தொலித்

துக்கொண் டனுசரித்து நிற்க, அதுகண்ட அவர்கள் நகைக்கும் நகையொளிகளைத் தாமரைகளி னடிக்கொடிகளெனப் பிரமித்து அன்னங்கள் மூக்கினாற் கோத்தமுயல், அருகி லிருக்கும் மஞ்ஞைகளெல்லாம் மேனிகளைக் காளமேகங்களென்று நினைத்துச் சிறகு விரித் தாட, அதுகண்டு அவ்வன்னங்க ளெழும்பிப் பறந்தோட, அதனுலாகாசமெல்லாம் வெண் டாமரை பூத்ததென்ன விளங்கவுங் கண்டு வெகு சந்தோஷத்துடனே விளையாடிக்கொண் டிருந்தார்கள். அப்படி சிலநேரம் விளையாடிய பின் மயனுடன்கூடப் புறப்பட்டு, அக்கினி தேவனுர் கொடுக்கப்பெற்ற தேரின்மீதேறி, பந்துக்கள் - சகோதரர்கள் - நகரத்தினர் முத லாகிய சகல ஜனங்களும் எதிர்கொண்டு வர, டமரகம்-முரசு - சங்கம் - மிருதங்கம் முதலிய பலவித வாத்தியகோஷத்தோடு இந்திரப் பிரஸ்தம் போய்ச் சேர்ந்து, தருபுத்திரர் முத லானோரைத் தெண்டனிட்டுத் தாங்கள் விலாச மாக யமுனையாற்றின் கரையிற் சென்றதும், அங்கே அக்கினி வந்து யாசித்ததும், அவ னிஷ்டப்படி அக்காண்டவ வனத்தை அவ னுக்கு ஆகாரமாக்கியதும், தேவர்களை வெற்றி பெற்றதும், அவ்வக்கினி தேவனிடத்தினின்று தாங்கள் பரிசுபெற்றதும், மயனைக் காப்பாற்றி யதும், இவைமுதலாகிய சரித்திரங்களை யெல் லாஞ் சொல்லிக் களித்திருந்தார்கள்.

## காண்டவதகனச் சருக்கத்தோடு

ஆதிபர்வம் முற்றிற்று.



ஸ்ரீ க்ருஷ்ணாய நம:







ஸ்ரீ ருக்மிணீ ஸத்தியபாமா ஸமேத ஸ்ரீ வேணுகோபால பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## இரண்டாவது,

## சபாபர்வம்

### கண்ணன் துதி

பாண்டவர்கள் புரிந்த்தவப் பயனாகி யவதரித்துப் பகைத்துமேன்மேன்
மூண்டவினை முழுவதுவு முனைதோறு முரண்முருக்கி முகில்புகாமற்
காண்டவமுங் கனல்வயிற்றுக் கனறணிய நுகருவித்துக் காக்குமாறே
பூண்டருளெம் பெருமானைப் போற்றுவா ரெழுபிறப்பு மாற்றுவாரே.

### சூதபுராணிகர் வாக்கியம்

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு ஆதிபஞ்சகத்தின் முதற்பாகமாகிய ஆதிபர்வத்தைச் சாங்கோபமாகக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மஹாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! பிரபஞ்சோற்பத்தி முதல் பூமிதேவி பிரஜாபாரந் தீரப்பெற்ற வரம் நிறைவேறத் திரிமூர்த்திகளாகிய தேவாசுராள் பாரதவீரர்களா யுற்பவிக்கும் வரையிற் சூரியசந்திரவம்சத்து அரசர்களுக்கு நேர்ந்த விருத்தி யழியவும், பின்னும் சந்திரவம்சம் வேதவியாச ரநுக்கிரகத்தினுற் குருகுலவரசர்களாகப் பிறந்து அஸ்தினபுரத்தில் அரசியற்றிய திரிதராஷ்டிரன் பாண்டு இவர்களால் விருத்தியடைந்ததும், அக்கால் இளவரசுபட்டம் பெற்றிருந்த பாண்டு சாபத்தா லிறந்ததும், அப்போது இவர்கட்கிருந்த பிள்ளைகள் நூற்றைவரிற் பாண்டுவின் பிள்ளைகளாகிய ஐவரைத் திரிதராஷ்டிரன் பிள்ளைகளாகிய நூற்றுவர் அந்தரமாய்ச் சில தீங்கிழைக்கத் தெய்வச்செயலால் அவர்கள் அத்தீங்குகளினின்றும் விடுபட்டு யாவரும் தனுர்வேதாதிகள் பயின்றதும், பின்பு கங்காபுத்திரனாகிய வீஷ்மருடைய பிரேபணையினுல் அப் புத்திரர் நூற்றைவரிற் சிரேஷ்டனாகிய தருமராஜனுக்கு இளவரசுபட்டங் கொடுத்த திரிதராஷ்டிரன் தனது புத்திரர் போதனையினுல் அப் பாண்டவர்களை வாரணவதத்தில் நிறுத்தியதும், அப்பால் துரியோதனன் அரக்கு மாளிகை சமைத்து அவ்வைவரை அதிலிருத்தித் தீயிட அவர்களதினின்றுந் தப்பி வேத்திரகீயத்தில் வேதியர்வடிவாகச்சென்று பராக்கிரமத்தோடு பாஞ்சாலன் புத்திரியாகிய திரௌபதையைத் திருமணஞ்செய்ததும், பின்புராஜபட்டாபிஷேகத்தோடு இந்திரப் பிரஸ்தத்

திற் குடிபுகுந்த அவ்வைவரும் நாரத முனிவரிட்ட ஏற்பாட்டின்படி திரௌபதியைக்கூடி உப்பாண்டவர் ஐவரைப் பெற்றதும், அம்முனிவர் ஏற்பாட்டை அனிச்சா சங்கற்பத்தினால் கடந்த விஜயன் தீர்த்த யாத்திரை சென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அநுகூலத்தால் சுபத்திரா தேவியை மணந்து அபிமன்யு வென்னும் இராஜ கண்டீரவத்தைப் பயந்ததும், இது போலவே வீமார்ச்சுனனிருவரும் இன்னும் சில உபபத்தினிமார்களைக் கூடி வெவ்வேறு புத்திரர்களை யீன்றதும், கிருஷ்ணார்ச்சுன னிருவரும் அக்கினி தேவனுக்குக் காண்டவ வனத்தை இரையாக்கியதும், அக்கினி தேவனாலும் தேவேந்திரனாலும் அர்ச்சுனன் பலவரங்களும் படைகளும் பெற்றதும் ஆகிய இச் சரித்திரங்களை யெல்லாம் அவ்வவற்றிற்குரிய உபசரித்திரங்களோடுங் கேட்டு ஆனந்த பரவசத்தனாயினேன். இப்பால் இரண்டாம் பர்வமாகிய சபாபர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று ஜெனமேஜெய மஹாராஜன் அன்போடுங் கேட்க, வைசம்பாயன முனிவர் சொல்லத் தொடங்கினர்.

---

முதலாவது,

## இராஜசூயச் சருக்கம்

### கலிவிருத்தம்

தேடிய வகலிகை சாபந் தீர்ந்தநாள்
நீடிய வுலகெலா மளந்து நீண்டதாள்
ஓடிய சகடுற வுதைத்துப் பாம்பின்மே
லாடிய சிவந்ததா ளென்னை யாண்டதாள்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படிக்கு உலோகோபகாரமாகியும் அதிசயங்களாகி யிராநின்ற செய்கைகளையுடைய பாண்டவர்களும் கண்ணனும் கண்முதலாகிய இந்திரியங்களும் மனதைப்போற் கலந்து களித்திருக்கு மளவில், காண்டவவன தகனத்தினின்றுந் தப்பிய அந்த மயனானவன், ஸ்ரீ கிருஷ்ணன் முன்னிலையில் அர்ச்சுனனைப் பார்த்துக் கைகூப்பி, வாய்புதைத்து ஒரு வார்த்தை சொல்லத் துவக்கினன். ஓ மகானுபாவனாகிய பாண்டு குமாரனே! நான் செய்த தீவினையினாலே அனற்சூழ்ந்த காண்டாவனத்தி லகப்பட்டு நடுநடுங்கி எவ்விதத்தினாலாகிலும் தப்பிப் போகவேண்டுமென்று முயற்சி செய்யும் போது, என்னை விட்டுவிட மனதில்லாமல் அக்கினியானவன் கிருஷ்ணனைக் கண்காட்ட அவர் சக்கிராயுதத்தை யேந்தி என்பேரிற் பாய்ந்துவரும்போது நீரன்றே எனக்கு உயிர் தந்தீர் இப்படிக்கு உயிரைக் கொடுத்த உமக்கு நானென்ன பிரதியுபகாரஞ் செய்யமாட்டுவேன்! ஆகிலும் ஏதேனும் ஒரு மரியாதையை என்னிடத்திற் பெற்று என்னைப் புனிதனாக்க வேண்டுமென்று சொல்லக்கேட்ட அர்ச்சுனனானவன், ஐயா மயனே! உமது சிநேகத்தினாலேயே நான் சகல மரியாதையையும் பெற்றது போலாயினேன். இனி எனக்கு வேறு கைம்மாறு வேண்டாம். இப்போ திருப்பதுபோல் எப்பொழுதும் எங்களிடத்தில் அன்பு வைத்திருக்க வேண்டியதே முக்கியம். ஆதலால் நீர் சுகமாய் உமது இடத்தைப் போய்ச் சேருமென்று சொல்ல, மயன் மறுபடியுஞ் சொல்லுகிறான். ஓ மகா புருஷனே! இவ்வாறு சொல்வது உமது பெருமைக்குத் தக்கதே யானாலும் தேவர்களுக்கு விசுவகர்மா வென்பவன் போல் அசுரர்களுக்கு நான் சிற்பியாகி சகல சிற்பங்களிலும் வல்லவனா யிருப்பவனாதலால், உங்களிடத்தி லுண்டாகிய அன்பினால் ஒரு வர்சஸ்தானஞ் செய்யவேண்டு மென்று கருத்துக்கொண் டிருக்கிறேன். அதற்கு உங்கள் இஷ்டம் யாதோ அதனைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, அர்ச்சுனனானவன் ஐயனே! நீரெப்படி என்னாலே பிராணசங்கடத்தி னின்றும் விடுபட்டதாய் நினைக்கிறீரோ, அப்படியே நானும்மை யொருவேலையுஞ் செய்விக்கலாகாதென்று நினைக்கிறேன். ஆகிலும் உமது சங்கல்பத்தை வீணாக்க மனமில்லாதவனாயு மிருக்கிறேன். ஆதலால், ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இடமாகி அதில் எதையாகிலுஞ் செய்தால் அதுவே எனக்கு மிகுந்த சந்தோஷத்திற்கு காரணமாமென்ன மயனானவன் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, சுவாமி கிருஷ்ணா! நான் தேவர்-அசுரர்-இயக்கர்-கின்னரர்-கந்திருவர்-நாகர் முதலாகிய யாவருக்கும் அசாத்தியமாகிய சிற்பங்களில் வல்லவன் ஆனதுபற்றி சிற்பிகளெல்லாம் அம்மா! இதென்ன சிற்பம்? எந்த உலகத்திலும் இச் சிற்பம் போல் யாம் கண்டதில்லையென்று ஆச்சரியப்படும்படியான சபாமண்டப மொன்று செய்து கொடுக்க வேண்டுமென்று கருத்துக் கொண்டிருக்கிறேன். ஆதலால் என் கருத்து நிறைவேறத் தங்கள் திருவுளத்திற் கிஷ்டமான

-தைக் கேட்க வேண்டுமென, ஸ்ரீ கிருஷ்ண ஞனவர் மயனைப் பார்த்து சொல்லுகிருர்.

## பாண்டவர்கட்கு மயன் சபாமண்டபஞ் சமைத்துத் தரல்

ஓ சிற்பிகட் கெல்லாம் தலைவனுகிய மயனே! என்னிஷ்டப்படி செய்யவேண்டும் என்றுமக்கு மனதிருக்கிறபடியினுலேசொல்லுகிறேன் கேளும். நமது தருமராஜனுக்கு நீர் சொல்லிய வண்ணம் ஒரு சபாமண்டபத்தை நிருமிக்கவேண்டும். அது எல்லா வுலகங்களின்சபைகளைக்காட்டிலும்அதிசயமாயிருக்க வேண்டும். தேவராவது அசுரராவது அதைப் போற் செய்ய நினைத்தால் அது கூடாததாயிருக்கவேண்டும். அதில் தேவ மாயா விசித்திரங்களும் அசுரமாயா விசித்திரங்களும் காணப்படவேண்டும். இவ்வாறு சொல்லத் தரமில்லாத விசித்திரங்களோடு கூடிய சபையை நிருமியுமெனவே, அந்த மயனுனவன் மிகுந்த சந்தோஷத்துடனே அப்படியேசெய்கிறேனென்றந்த மயனையுங் காட்ட, அவரும் மயனை மிகவுங் கொண்டாடிச் சபையை நிருமிக்கும்படி கட்டளையிட்டார். அவர்மொழியைக்கேட்ட அந்த அசுரத் தச்சன் சொல்லுகிருன். முற்காலத்தில் விருஷபருவனென்ெருரு அசுரராஜனிருந்தான் அவன் தன் தோள்வலியினுலே சகலமான பேர்களையும் ஜயித்துக் கப்பமாகக் கொணர்ந்த நட்சத்திரம் போல் ஒளிவீசாநின்ற பல மணிக்கூட்டங்கள், விந்துவென்னுந் தடாகத்திற் கிடக்கின்றன. அவையாவு மிச்சபைக்கு உபயோகமாக வேண்டுமென்று சொல்லி, மலைகளைக் காட்டிலுமுறுதியுள்ள தோள்களுடைய மல்லர்கள் அநேகரைக்கொண்டு அந்த நவரத்தினங்களைக் கொண்டுவரச் செய்து, பெரியோர்களியற்றிய ஜோதிடப்பிரகாரம் நல்ல முகூர்த்தத்திலே சபாமண்டபம் நிருமிக்கவாரம்பித்தான். அச்சபை நிருமித்த விதமும் அதின் சிறப்பும் ஆதிசேஷனுக்குஞ் சொல்வதற் கரிதாகயிருக்கும் ஆனுலும் கொஞ்சம் சொல்லுகிறேன் கேளும்.

பசும்பொன்னினுற் சுவர்கள் செய்து, அவைகளின்பேரில் ஏழடுக்கு மெத்தைகள் கட்டி, மரகத இரத்தினங்களால் தூண்கள் செய்து வரிசையாய் நிறுத்திச்சிறந்த பவழத்தினுல் உத்திரங்கள் பரப்பி மாணிக்கங்களினுற் கொடுங்கைகள் புரிந்து, வைரங்களினுற் சிகரங்களமைத்து, நீலகோமேதக புஷ்பராகங்களினுற் கதவுகளும் வாசற்படிகளும் நிருமித்து, நவமணிகளாற் சுவர்களை விசித்திரமாக யிழைத்து, வைடூரியங்களினுலே சாளரங்கள்செய்து, தேவவிமானம்போலே ஆகாயத்தையளாவி நிற்கும்படியாகவும், தேவேந்திரனுடைய சபையாகிய சுதர்மையிலுமிதுவே முதன்மையென்று சொல்லும்படியாகவும் பலசிறப்புக ளமைத்துப் படிகங்களால் தளவரிசைகள் திருத்தி, அதில் நீரில்லாவிடமெல்லாம் நீரோடுவது போலவும், நீர் தங்குமிடமெல்லாம் நீரில்லாதன போலவும் பல விசித்திரங்கள் ஏற்படுத்தி பல வாசல்களும், பல மண்டபங்களும், பல சாலைகளும், பல சோலைகளும், பல தடாகங்களும், பல வர்சஸ்தானங்களும், பலவறைகளுஞ்செய்து அவைகளிலெதிற் பிரவேசித்தாலும் பிரமை வரும்படியாகவும், போனவழி வந்தவழி தெரியாமற் போகும்படியாகவும், சிலவிடங்களில் மேடுகள் பள்ளமாகவும், சிலவிடங்களிற் பள்ளங்கள் மேடாகவுந் தோற்றுமாறு இயற்றிச் சிலவிடங்களிற் பகலிரவாகவும், சிலவிடங்களில் இரவு பகலாகவும் சிலவிடங்களிற் கார்காலம் கோடைகாலமாகவும், சிலவிடங்களிற்கோடைகாலம் கார்காலமாகவும் காலப்பிரமை வரும்படி யமைத்துச் சிலவிடங்களில் உயரத்திலிருப்பவர்க்குத் தாழவிருப்பது போலவும், சிலவிடங்களில் தாழ விருப்பவர்க்கு உயரத்திலிருப்பதுபோலவும் தோற்றச்செய்து, சோலைகளில்லாவிடம் சோலைபோலவும், சோலையிருக்கும் இடமஃதில்லாதது போலவும் பலருங் கண்டு அதிசயிக்கத்தக்க இவ்வித விசித்திர நிருமாணங்களுடனே செய்த அச்சபா மண்டபமானது கோடி சூரியப் பிரகாசமாய் ஆயிரங் கண்களுடைய தேவேந்திரனுக்குங் கண்கள் போதாதென்னுங் குறைவுண்டாக்கும்படியான சீர்மைபொருந்திச் சகல சவுக்கியங்கட்கும் காரணமாய் மகா லட்சுமிவிலாச மண்டபம்போல் விளங்கிற்று.

இப்படியாக மனே நிருமாணத்திறுலும், வேதமந்திர மகிமையினுலும், பிரமதேவனுடைய சிருஷ்டி சாதுரியத்தினுலும் பலகோடி தினங்கள் நிருமித்தாலும் முடியாத பேரழகும் உயர்வுஞ் சிறப்பும் தகுதியும் உடையதாய்ப் பதினுயிரமுழம் அளவுள்ளதாய் கொடிகள் முதலாகிய சகல வலங்காரமும் பொருந்தியதுமாகிய அப்பெரிய சபாமண்டபத்தை பதி

ஞன்கு மாதங்கட்குள்ளாகவே நிருமித்து ஸ்ரீ கிருஷ்ணதேவருக்கும் பாண்டவருக்குங் காண்பிக்க, அவர்கள் அளவில்லாவானந்தக் கடலிலாழ்ந்துநிற்க, மயனனவன் வீமசேனனுக்கு மகா சிறப்புப்பொருந்திய ஒருதண்டாயுதமும், அர்ச்சுனனுக்கு வெண்மையாகிய சங்குங் கொடுத்தான். பின்பு உதிஷ்டிரர் முதலாகிய பாண்டவர்கள் திரௌபதியுடன்கூட ஸ்ரீ கிருஷ்ணன் சொற்படி நல்ல முகூர்த்தத்திற் பிரயாணமாகி சகல கலைகளுங்கற்று வல்லவராகிய அநேகம் பிராமணர்கள் சொஸ்திவசனஞ் சொல்லிக்கொண்டு சூழ்ந்துவரவும், பல வாத்தியங்கள் கணகணவென்று முழங்கவும், கணிகைமாதர் தாம்தாமென்று நாட்டியமாடவும், சேவகரனைவரும் ஜயஜயவென்னவும், சதுரங்கச் சேனைகளுடனே நகர்வலம் வந்து அச்சபா மண்டபத்திற் பிரவேசித்துப் பிராமணருக்குப் பல தானங்கள் வழங்கி, அவர்களால் ஆசீர்வாதங்களைப்பெற்று, இஷ்ட தேவதைகளைப் பூசித்து, யாவருக்கும் விருந்திட்டு, மயனுக்கும் வெகுமானங்கள் பல செய்து வாழ்ந்துகொண் டிருந்தார்கள்.

இப்படி சிலநாள் போயினபின் கிருஷ்ணன் காண்டவப் பிரஸ்தத்திற்கு வந்து நெடுநாளானபடியினலே தமது தகப்பனரைப் பார்க்க ஆசை கொண்டவராய்த் துவாரகாபுரிக்குப்போக நினைத்து, உதிஷ்டிரரோடு இச்செய்திசொல்லிப் பின்பு நமது நல்லத்தையாகிய குந்திதேவியி னிடத்துக்கு வந்து, நமஸ்காரஞ்செய்து செலவுபெற்றுக்கொண்டு தன் தங்கையாகிய சுபத்திரையி னிடத்துக்கு வந்து அவளால் நமஸ்காரஞ் செய்யப்பட்டு, அவளுக்கு நன்மைதரத்தக்க சில வார்த்தைகளைச்சொல்லி சமாதானப்படுத்தி அந்த சுபத்திரை பரிவுடன் சொன்ன வார்த்தைகளையுங் கேட்டு சந்தோஷித்து, பின்பு திரௌபதையினிடத்துக்கு வந்து அவளாலும் நமஸ்காரஞ் செய்யப்பட்டு, அவளிடத்திலும் நல்ல வார்த்தைசொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு பாண்டவர்களின் புரோகிதராகிய தவுமிய மகாமுனியைக்கண்டு நமஸ்காரஞ் செய்து விடைபெற்று பாண்டவரையுங் கண்டு வெகு சமாதானங்கள் சொல்லி விடைபெற்று, மகாயோக்கியர்களாகிய அநேகம் வேதியர்களுக்குப் பலதானம் வழங்கிப் பூசித்து, கந்த புஷ்பாக்ஷதைகள் முதலாகிய சுபவஸ்துக்களோடுங்கூட அரண்மனையினின்றும் வெளியில் வந்துசைனியம்-சுக்ரீவம்-மேகபுஷ்பம்-வலாகம் என்னும் நான்கு குதிரைகட்டிக் கருடக் கொடியுடனே மகாப் பிரகாசமாய் விளங்கா நின்ற திவ்வியரதத்தின்பேரில் ஏறினர் அப்பொழுது கிருஷ்ணனுடைய பிரிவாற்றாமையினலே பாண்டவர்கள் சோர்ந்து தயங்கிநிற்க, கிருஷ்ணன் அவர்களுக்கு வெகு சமாதானஞ் சொல்லியுங் கேளாமல் ராஜராஜேஸ்வரரான உதிஷ்டிரர் கிருஷ்ணனுடைய தேரின்பேரிலேறி, தாருகனென்னுஞ் சாரதியைக் கீழே இறங்கச்செய்து, தாம் அங்கு உட்கார்ந்து குதிரைகளின் கடிவாளத்தைக் கையிற் பற்றிச் சவுக்கையெடுத்து சாரத்தியஞ்செய்தார். அர்ச்சுனனும் தேரிலேறிப் பின்புறத்தில் நின்றுகொண்டு, பொற்காம்பு பூண்டிருக்கிற விரண்டு வெண்சாமரங்களை வீசினன். வீமசேனனும் நகுல சகாதேவர்களும் இரதத்தின் பின்புறத்திற் சென்றர்கள்.

இவ்வாருகப் பாண்டவர்களும் மற்றுஞ் சிலருஞ் சூழ்ந்துவர, ஸ்ரீகிருஷ்ணன் அரைக் காதவழி தூரஞ்சென்று தேரினின்று மிறங்கி உதிஷ்டிரரையும் வீமசேனனையும் தெண்டனிட்டு, அர்ச்சுனனை ஆலிங்கனஞ்செய்து, நகுல சகாதேவர்களால் நமஸ்காரஞ் செய்யப்பட்டுப் போய்வருகின்றேனென்ன உதிட்டிரர் கண்களில் நீர் ததும்பக் கண்ணனை ஆலிங்கனஞ் செய்து, மறக்கவேண்டாம் கிருஷ்ணவென்று சொல்லி வருத்தப்பட்டு விடைகொடுத்தார். வீமசேனனும் அப்படியே விடைகொடுத்தான். அர்ச்சுனன் பின்னுஞ் சிலவடி தூரஞ் சென்று, கிருஷ்ண! உமது ஆதரவினலேதான் நான் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேன். இதைவிட வேறே நான் என்ன சொல்ல மாட்டுவேனென்று கண்ணீர் சொரியும்படி நிற்க, ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ச்சுன! பயப்படாதே நான் எங்கேயிருந்தாலும் சமையத்தில் வந்து சேருவேன், நீ எனக்குச் செலவு கொடுவென்று சொல்லி அவனிடத்திலும் இரட்டைப்பிள்ளைகளிடத்திலும் செலவு பெற்றுக்கொண்டு வெகு வேகமுள்ள இரதத்தோடுந் துவாரகா பட்டணமுஞ் சேர்ந்து, தாய்-தகப்பன்-அண்ணன்-முதலான பேர்களையும் நமஸ்காரஞ் செய்து, தம்பிகள்-பிள்ளைகள்-முதலான பேர்களை ஆசீர்வதித்து, யாவராலும் புகழப்பட்டுச் சுகமாயிருந்தார். பாண்டவர்களும் கிருஷ்ணர் தேர் தெரிகிறவரையிற் பார்த்திருந்து, மறைந்த மாத்திரத்திலே

திரும்பித் தங்கள் நகரஞ்சென்று க்ஷேமமாய் இருந்தார்கள். மயனும் மகா விசேஷமாகிய சபையை நிர்மாணம் பண்ணிப் பாண்டவர்களாலே மிகவும் பூசிக்கப்பட்டு அவர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு தனது யதாஸ்தானம்போய்ச் சேர்ந்தான்.

### நாரதமுனிவர் தருமராஜன் சபைக்கு வருதல்

இப்படி யிருக்கிற ஒருநாள் அந்தச் சபா மண்டபத்திலே தருமராஜன் தம்பிமார்களுடனே கூடிச் சிங்காதனத்திலிருந்து ராஜ காரியம் பார்த்து வரும்போது, அச் சபையில் அசிதன்-தேவலன் - சத்தியன் - சர்ப்பமாலி-ஆர்ச்சிகன்-சுமித்திரன்-மைத்திரேயன் -வியாசன்-சுகன் முதலிய பல முனிவர்களும், அங்கம்-வங்கம்-கலிங்கம்-காம்போசம்-களுசம்முதலிய ஐம்பத்தாறு தேசத்தரசர்களும், மற்றும் அநேகம் பிராமணர்களும், மந்திரி முதலான பேர்களும், சங்கீதம்-பரதம்- இவைகளில் வல்லவராகிய பலரும், நாலுவித ஜனங்களும் சூழவிருந்தார்கள். இவ்வாறு கோலாகலத்துடனேயும் மகா விபவத்துடனேயும் சபாமண்டபத்திற் கொலு வீற்றிரானின்ற மகாராஜராஜேஸ்வரராகியும் சகல தருமங்களையுமறிந்தவராகியும் சத்தியந் தவருதவராகியும் நீதி பொருந்திய நடக்கை யுடையவராகியு மிரானின்ற தருமராஜனைக் காணவேண்டுமென்று, முற்று மறிந்த முழுஞானியாகிய நாரதமகா முனிவர் ஆகாயத்தினின்றும் இறங்கி அந்தச் சபாமண்டபத்துக்கு நேரில்வர, அதனை கண்ட யுதிஷ்டிரர் சகல பரிவாரங்களோடும் எழுந் தெதிர்கொண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து சபைக் கழைத்துவந்து இவ்யாசனத்தில் உட்காரவைத்து அர்க்கியபாத்தியங்கள் முதலாகிய சகல வுபசாரங்களும் நடாத்திப் பாததீர்த்தஞ் சேர்த்துப் புனிதரானேனென்று சொல்லிக் கைகூப்பிப் புசித்துப் புரோட்சணமுஞ் செய்துகொண்டு அம்முனிவர்க்கெதிரே வணக்கத்துட னிருந்தார்.

இவ்வாறுகப் பூசிக்கப்பட்ட நாரதமுனியானவர் வெகு சந்தோஷத்தோடும் பாண்டவரைப் பார்த்து, ஓ பாண்டு புத்திரரே! உமக்கு இராச்சியம் முதலாகிய காரியங்களிலே க்ஷேமமா? ஒரு குறைவுமின்றி தருமம் நிறைவேறி வருகிறதாவென்று கேட்க, உதிஷ்டிரானவர் சுவாமி! அடியேனிடத்தில் தேவரீருக்குப் பரிபூரணமாய் அனுக்கிரக மிருக்கிறபோது, எந்த விஷயத்தில்தான் குறைவு நேரிடும்? ஆதலால் எனக்கு சகல விஷயத்திலும் க்ஷேமமேயன்றி வேறில்லை. மேலும் எனக்கு மகத்தாகிய நன்மைக்குக் காரணமன்றோ தேவரீரிவ்விடம் எழுந்தருளியது! வீணையினது இசையினுலே மிகச் சிறப்புப் பொருந்திய இனிமை யென்னு மமுதத்தை யுண்டாக்கக் கடலிற் பிறந்த அமுதத்தி னிடத்திலே தேவர்கட்கு வெறுப்பு வரச்செய்து மானேந்தி விளங்காநின்ற திருக்கரமும் சந்திரனுலவா நின்ற சடாடவியும் பெற்றுத் திருக்கூத்து புரியா நின்ற பரமசிவனுடைய நாட்டியத்துக்குச் சரியாக இசைபாடா நின்ற தவத்துக்கியானியாகிய நாரத முனிவரே! தேவரீர் வந்தமையாற் பிரமதேவன் அநுக்கிரகம் செய்யும்படியான தவத்தை என்போல் இவ்வுலகில் யார்தான் பெற்றிருக்கிறார்கள். ஓ தேவமுனித் தலைவனே! இன்றுதான் அடியேன் பிறவி பயன் பட்டதென்று கண்களில் ஆனந்தபாஷ்பமும் தேகத்தில் மயிர்க்கூச்சுமாக கைகூப்பி சொல்லக் கேட்டு நாரதர் உதிஷ்டிரர் முதலானோரைப் பார்த்திதனை சொல்லுவதானார்.

ஓ மகாராஜ குமாரர்களே! நீங்கள் வெகு தருமவான்களும், நீதிமான்களும், சாட்சாத் நாராயணமூர்த்தியாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய அநுக்கிரகம் பெற்றவர்களுமானதால் உங்களுக்கு யாதொரு குறைவும் நேரிடமாட்டாது. மிகுந்த மேன்மையுங் கீர்த்தியுமுடைவீர்களென்று சொல்லக்கேட்டு உதிட்டிரர், சுவாமி! சந்தோஷமாச்சுது. தேவரீர் பூலோகம் முதலாகிய மேலேழுலோகங்களையும், அதலலோக முதலாகிய கீழேழு லோகங்களையும் நன்றாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருக்கிற மகானுபாவராகையால், இந்த சபைக்குச் சரியாகியசபையை அல்லது உயர்ந்தசபையை எங்கேயாகிலுங் கண்டதுண்டா? அப்படிக் கிருக்கும் பட்சத்தில் தேவரீர் அதை அடியேனிடத்திற் கிருபைசெய்து சொல்ல வேண்டுமென்ன, அம்முனிவரும் ஓ தருமராஜனே! ஆம்; நான் சகல லோகங்களையுஞ் சஞ்சரித்து எல்லாசபைகளையுங் கண்டிருக்கிறேன். ஆனல், மனிதருடைய சபைகளில் இப்படிப்பட்ட சபையை நானெங்குங் கண்டதில்லை. தேவலோகங்களில் இந்திரன் - யமன் - வருணன்-குபேரன் முதலான பேர்களுடைய சபைகளிருக்கின்றன. அன்றியும் பிரமதேவனுடைய

சபையு மிருக்கின்றது. இவைகளை யெல்லாங் கேட்க அபிப்ராயமிருந்தாற் சொல்லுகிறேனென்ன, தருமபுத்திரர் சுவாமி! அவசியம் அருளிச் செய்ய வேண்டும். அடியேனுக்கும் இச்சபைதனி லிராநின்ற யாவருக்கும் அதைக்கேட்க மிக விருப்பமிருக்கிற தென்று சொல்லவே, நாரதர் அச்சபைகளின் சிறப்பைச் சொல்ல வாரம்பித்தார்.

## இந்திரன் சபைச்சிறப்பு

ஓ தருமபுத்திரனே! கேளும் தேவலோகத்தில் தேவேந்திரனுடைய சபையொன்றுண்டு அதற்குச் சுதர்மை என்று பெயர். அது நூறுயோசனையகலமும், நூற்றைம்பது யோசனை நிகளமும், ஐந்து யோசனை உயரமும் உள்ளதாய், ஆயிரக்கிரணங்கள் பரப்பிக் கொண்டிரா நின்ற சூரியன்போற் பேரொளி பெற்று விளங்கிக்கொண் டிருக்கிறது. அது இந்திரனுக்கு வேண்டுமிடத்துக்குப் போகும்படி ஆகாசத்திற் சஞ்சரிக்குந் திறமுடையது. மிகுந்த புண்ணியஞ் செய்தவர்களுக்கேயன்றி பாவிகளுக்கு எவ்வளவும் கிடைக்கத் தகுந்ததன்று. அதை இந்திரன் தன் சுதாவிலே நிருமித்தான். அதிற் பலவிநோதங்களுமுண்டு அவைகளை இப்படிப்பட்டனவென்று சொல்லக்கூடா. அதில் அநேகம் ஆசனங்கள் போட்டு நடுவில் ஓர் சிங்காசன மமைந்திருக்கின்றது. அதில் தேவேந்திரன் சசிதேவியுடனே கொலுவிருப்பான். அப்படி அவன் கொலுவிருக்குங் காலத்திற் சப்தமருத்துக்கள் ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர் - விசுவதேவர்-அசுவனிதேவர்கள்-சப்தரிஷிகள்-பிரகஸ்பதி-தேவர்-சுக்கிராச்சாரியார் முதலாகிய சகல பரிசனங்களும், கருடர் - கந்திருவர் - சித்தர்-சாத்தியர்-கின்னரர் - கிம்புருடர் - விச்சாதரர் முதலாகிய சகல தேவகணங்களும், பராசர்-பருவதாசாவர்ணி-காலவர்-சங்கர்-லிகிதர்-கவுரமுகர்-தூர்வாசர்-தீர்க்கதபர் யாக்ஞயவற்கியர்-உத்தாலகர்-சுவேதகேது-தாண்டியர்-பாண்டாயனி-அவிஷ்மான்-கவிஷ்டன் - சாண்டலியர்-கக்ஷிவான்-கவுதமர்-வைசுவானரர்-சம்வர்த்தர் தேவஹோத்திரர்-வான்மீகர்-இவர்கள் முதலாகிய அநேக ரிஷிகளும், இன்னுமனேக சுகர்மஞ்செய்த பேர்களோடு அரிச்சந்திரமகாராஜனும் சூழ்ந்திருக்க, ஒரு புறத்தில் அரம்பை-ஊர்வசி-மேனகை-திலோர்த்தமை முதலாகிய அப்சரஸ்திரீகள் நடனஞ்செய்ய, மற்றொரு புறத்தில் விசுவாவசு-சித்திரசேனன் முதலாகிய கந்திருவர் யாழிசைத்துப்பாட, ஒரு பாரிசத்தில் முனிவர் செய்யும் ஆசீர்வாத கோஷங்கள் முழங்க, மற்றொரு பாரிசத்தில் அநேகர் அகசியஞ்செய்ய, ஒரு பக்கத்தில் யோகிகளிருந்து வேத வேதாந்தங்களின் தாற்பரியங்களைப் பிரசங்கிக்க மற்றொரு பக்கத்திற் சப்த மேகங்களும் ஒன்றாய்க் கூடியிருந்து முழக்கமிட, ஒருபால் சிரத்தை மேதை என்னுந் தேவதைகள்போற்ற, மற்றொருபால் அநேகம் கன்ம தேவர்கள் சூழ்ந்து ஏற்ற, அச்சபையானது மிகவும் மனோரம்மியமாய்விளங்கும் அன்றியும் அச்சபையிலிருப்பவர்களுக்கு மூப்பு-சோபம்-மோகம்-முதலாகிய துன்பங்களிலொன்றேனுமிராது. யாவரும் மிகவும் சிறந்த மணிகளிழைத்த திவ்வியாபரண வஸ்திரங்களினால் அலங்காரம் பெற்று திவ்விய கந்தம் திவ்விய மாலைகளையணிந்து, மகா விநோதமாக இருப்பார்கள். இவ்வாறாக இந்திரன் சபையானது பூலோகத்திலிருக்கிற யாவரும் பல தவங்கள்செய்து, மறுமைப்பயனிதுவே யென்று கோரிவரும்படியாகிய சிறப்புடனே விளங்கிக்கொண் டிருக்கின்றது.

## இயமன் சபைச் சிறப்பு

ஓ தருமராஜனே! இந்திர சபையின் சிறப்பு கேட்டீரன்றோ? இனி யமன் சபையின் சிறப்புச் சொல்லுகிறேன் கேளும். அந்த யமதர்ம ராஜனுடைய சபையானது நூறு யோசனை நிகளமும், அதற்குத்தக்க அகலமும் உயரமு முடையதாய், தேசோமயமாய் நாற்புறங்களிலும் பரவாநின்ற ஒளியுடையதாய், மிகுந்த குளுமையுமின்றி உயர்ந்த உட்டிணமுமின்றி சமகுணமுள்ளதாய் விசுவகர்மாவினாலே நியமிக்கப்பட் டிருக்கின்றது. அச்சபையில் இருப்பவர்களுக்கு பசி - தாகம் - மூப்பு-வியாதி முதலான ஓர் துன்பமு முண்டாகிறதில்லை. எப்பொழுதும் சந்தோஷ முண்டாயிருக்கும். சகல பாக்கியங்களு மதிற் கிடைக்கும். அச்சபையில் யமதர்மராஜன் கொலுவிருக்கு மளவில் யயாதி-நகுஷன்-பூருமாந்தாதா-சோமகன்-திரதச்யு-உரகன் - கிருதவீரியன்-சுருதசிரவன்-அரிட்டநேமி-சிம்மன்-கிருதவேதன்-கிருமி-நிமி-பிரதர்தனன் - சிபிமச்சியன் புருதுலாட்சன்-பிரகத்திரதன்-பார்த்தன்-மருத்தன்-சாங்காசியன்-சங்கருதி-துபருவன்-சதுராசுவன்-சதசுவன்-ஊர்மி-கார்த்தவீரியன் புரதன்-சுரதன் - தபோதரன்-சுதன்-நிஷதன்-நளன்-திவோதாசன்-அம்பரீஷன்-பகீரதன்-

வியசுவன்-வக்கிரன்-பிருதுவேகன்-லோமபாதன்-அனரணியன்-லோகிதன்-உத்தவன்-பிரிஷக்கு-விருஷசேனன்-க்ஷுபன் - வசுமனன்-புருகுச்சன்-ஆட்டுசேனன்-திலீபன் - புண்டரீகன்-சர்யாதி-சரபன்-அரிட்டன்-வேணு-துச்சந்தன்-சிருஞ்சயன்-சயன்-வாகவ்ஸ்வரி - வடுரதன்-கரந்தமன் - பாகிலிகன் - பிரத்தும்னன் - பிருது-சுபோதரோமன் - சகதேவன் - அர்ச்சுனன்-ஸ்ரீராமன்-லட்சுமணன்-அளர்க்கன்-கட்கசேனன்-பரசுராமன்-நாபாகன்-சகரன் -பூரித்துமனன்-பிருதாக்கியன்-சனகன்-பிருசித்து-ஜெனமேஜெயன்-பிரமதத்தன்-திரிகர்த்தன் - உபரிசரன்-வீமன்-சாநுகாரபிருட்டன்- நயன் -பத்துமன்-முசுகுந்தன்-இந்திரத்தியும்னன்-பிரசேனசித்து-அஷ்டகன் முதலாகிய அநேகம் ராஜரிஷிகளும்; மச்சராசர்களில் நூற்றுவரும், நீபரில் நூற்றுவரும், திரிதராஷ்டிரரில் நூற்றெருபேரும், எண்பது ஜெனமேஜெயரும், நூறு பிருமதத்தரும், நூறு வரியரும், நூறு வீஷ்மரும், நூறு வீமர்களும், நூறு பிரதிவிந்தியர்களும், நூறு நாகரும், நூறு அயரும், நூறு பராசரும், நூறு இரசகுசரும், சூழ்ந்துக்கொண் டிருக்கிறார்கள். அன்றியும் சந்தனு உங்கள் தகப்பனாகிய பாண்டு உஷதத்தன் சயத்திரதன் இவர்களும் ஓர் புறத்திவிருந்தார்கள். இதுவுமல்லாமல் பிருஷதசுவனென்கிற ராசன் தனது மந்திரிகளுடன்கூட உட்கார்ந்து உபாசித்துக்கொண் டிருந்தான். அன்றியும், அநேக அசுவமே தங்கள் செய்த சதபிந்துவின் குமாரர்களாகிய அநேகரும் அந்த யமதர்மராசனை உபாசித்துக் கொண்டிருக்கிறார்கள். இவருமன்றி, அகஸ்தியர் மதங்கர் காலன் மிருத்தியு முதலாகிய பேர்கள் ஓர் புறத்திலும், யாகஞ் செய்தவர் ஓர் புறத்திலும், தானசீலர் ஓர் புறத்திலும், நீதிமான்கள் ஓர் புறத்திலும், தருமவிருப்பமுள்ளவர் ஓர் புறத்திலும், சத்யசந்தர் ஓர் புறத்திலும், ஆபத்திற் காத்தவர் ஓர் புறத்திலும், கோயில், குளம், சத்திரம், சாலைமுதலிய தருமஞ்செய்தவர் ஓர்புறத்திலும் வீற்றிருந்து புகழ்ந்துக்கொண்டிருக்கிறார்கள். மேலும்சித்தபுருஷரும், யோகபுருஷரும், பிதுர்க்கணங்களும், சோமகரும், அக்கினிகளும் காலசக்கிரரும் ஓர் புறத்தில் துதித்துக்கொண் டிருப்பார்கள். தக்ஷணாயனம் உத்தராயணம் மிருத்தியு முதலிய காலசோதனை பண்ணும் கிங்கரர்கள் அளவற்றபேர் ஒரு பக்கத்திலிருந்து துதிசெய்துக்கொண் டிருப்பார்கள். அச்சபையி லிருப்போர்களைக் கணக்கிளுல் எண்ண முடியாது. இவ்வளவு பேர்களுக்கும் வெகு விசாலமாகிய இடத்தைக் கொடுத்துக் கொண்டு விளங்காநின்ற அச்சபையினருகில் நாகரத்தினங்களிழைத்து, மரகதத் தூண்கள் நாட்டி வயிரங்களினாலுத்திரமும் கொடுங்கைகளுமமைத்து பூரணச்சந்திரனுடைய சீதள கிரணங்களுக் கொப்பாகிய காந்திகளை வீசாநின்ற முத்துப் பந்தலின் கீழே சிங்காசனத்தின் பேரில் யமதருமராசன் வீற்றிருந்து ஆடல் பாடல் முதலிய விநோதங்களினாலே வெகுசந்தோஷமடைந்து, ஓர் கரத்திற் பாசமும், ஓர் கரத்திற் கதாயுதமுமேந்தி, பயங்கரமாகிய ரூபத்தைக் காட்டிப், பாதகரை நரகத்திற் றள்ளவும், புண்ணியவான்களைத் தனது சபையி லிருக்கவும், எதிரிற் கைகூப்பி நிற்கும் கிங்கரருக்குக் கட்டளையிட்டுக்கொண்டு, தருமதேவதை சித்திரகுப்தன் முதலானோர் புடைசூழ்ந்திருக்கத் தனதாஞ்ஞையைக் கிரமமாய்த் திரிலோகங்களிலுஞ் செலுத்தி வருகின்றான்.

## வருணன் சபைச் சிறப்பு.

கேளும் தருமபுத்திரா! வருணனுடைய சபையும் யமனுடைய சபைக்குச் சமானமாகிய அளவுடையதாய் வெகு அழகாயும் உயரமாயுமிராநின்ற மதில்களினாலுங் கோபுரங்களினாலுஞ் சூழப்பட்டு நவரத்தினங்களிழைத்து எப்பொழுதும் வெயில் பரப்பி விளங்கிக் கொண்டிருக்கும் அது நீர்களுக்குள்ளே வெகு விநோதமாய் விசுவகர்மாவினால் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. அதைச் சுற்றிலும் ஜீவரத்தினமயங்களாய் எக்காலமும் பூப்பதும் காய்ப்பதும் பழுப்பதுமா யிராநின்ற பலவகைப் பட்டமரங்களையுடைய சோலைகளிருக்கின்றன. அன்றியும், அச்சோலைகளில் மிகவினிப்பாயொலிக்காநின்ற பொற்சிறகுடைய பலவகைப் பட்சிகளும் களிப்புடனே சஞ்சரித்துக்கொண் டிருக்கின்றன. அச்சபையில் மற்றொரு விசித்திர மிருக்கின்றது. அஃதென்னவெனில், அதனிடம் இரத்தினமயமா யிருந்தாலும் தொடும்பொழுது மலர்போல் மெதுவாகியும் குளுமையாகியு மிருக்கின்றது. இவ்வாறாகிய அச்சபையின் நடுவில் திவ்விய சிங்காசனத்தில் வருணதேவன் வீற்றிருந்து கையிற் பாசமேந்தி, விலை மதிக்கக்கூடாத தரளங்களாற் செய்யப்பட்ட கிரீடகுண்டல கவச முதலாகிய திவ்விய ஆபரணங்களைத் தரித்து, வெண்பட்டு உடுத்தி, வெண்மையாகிய பூமாலைசூடி, வெள்ளைச் சாந்துபூசி, வெள்ளைக் குடைகளும் வெள்

ளைச் சாமரங்களும் கையிலேந்தி அரம்பை
யர் சூழ்ந்திருக்கக் கொலுவிருப்பான். அப்
போது அநேகந் தேவர்கள் நல்ல வஸ்திர
ஆபரணங்களையும் திவ்விய சந்தனமாலை முத
லானவைகளையும் தரித்து, மிகுந்த பிரகாசத்
துடனே அச்சபையிலிருந்து வருணனை யுபா
சித்துக்கொண்டிருப்பார். அன்றியும் தட்சகன்
வாசுகி அயிராவதன் கிருஷ்ணன் லோகிதன்
பதுமன் சித்திரன் கம்பலன் அசுவதரன் திரித
ராட்டிரன் வலாக்கன் மணிமான் குண்டதா
ரன் கார்க்கோடகன் தனஞ்சயன் ஏணரதன்
குண்டகன் பிரகலாதன் மூஷிகாதன் ஜென
மேஜெயன் இவர்கள் முதலாகிய அநேக
ராசராசர்கள் நாற்புறங்களிலும் சுடர்களைக்
காக்காநின்ற மகாரத்தினச் சூட்டுப் பொருந்
திய விசாலமாகிய வெகுபடங்களை யுடையவ
ராய்ப் பலவர்னங்கள் பொருந்திய பளபளப்
பாகிய தேகங்களுடனேகூடி அச் சபையிற்
சூழவிருப்பார்கள். இதுவுமன்றி பலிச்சக்கிர
வர்த்தி, நரகாசுரன், பிரகலாதன், விப்பிர
சித்தி, காலகேயர், சுமனன், துர்முகன், சங்
கன், சுரூபன், சுமதி, சுவனன், கடோதரன்,
மகாபரிசுவன், விரூபன், மகாசிரன், தசக்கிரீ
வன், வாலி, திரிதராம்பரன், உடுட்டுபன், விக
டாபன், சந்திரதாபனன் இவர் முதலாகிய
தைத்திரியர் தானவர் என்னும் பிரிவினையு
டைய அசுரர்களும், பல அலங்காரங்களோடு
சிறப்பாய் அச்சபையிலிருந்து வருணனையுபா
சித்துக்கொண் டிருப்பார்கள். நான்கு சமுத்
திரங்கள் கங்கை முதலாகிய சகல நதிகள்
மற்றும் தடாகங்கள் குட்டைகள் கிணறுகள்
முதலாகிய புண்ணிய தீர்த்தங்களெல்லாம்
திவ்விய தேகங்களுடனே விளங்கி வருண
பகவானைத் துதித்துக்கொண் டிருக்கின்றன.
மேலும் எட்டுத்திசைகளும் பூமியும் மலைக
ளும் ஒவ்வொரு உருவமாய்த் தேகங்களெடுத்
துக்கொண்டு சூழ்ந்திருக்கின்றன. இப்படிப்
பட்ட சபையினருடனே கூடிக் கந்திருவர்
வீணைகானஞ்செய்ய அப்சரஸ்திரீகள் நாட்
டியமாட மிக விநோதத்துடனே வருணதே
வன் சிபாபனென்கிற மந்திரியுடனேயும் தன்
குமாரர்களுடனேயும் கதைகளைப் பேசிக்
கொண்டு வாருணீதேவியுடன்கூட அச்சபை
யில் விளங்கிக்கொண்டிருப்பான்.

### குபேரன் சபைச்சிறப்பு

குபேரன் சபையானது நூறுயோசனை
நீளமும் எழுபது யோசனை யகலமுமுள்ள
தாய் மிகவுன்னதம்பொருந்தி, ஆகாசத்தில்
தனியே விளங்கும் ஓர் சுடர்போன்று நாற்
புறங்களிலும் நிலவு வீசிக்கொண்டு மகா ரத்
தினமயமாய் அநேகங் குகியகர் என்பவரால்
சுமக்கப்பட்டு விளங்காநின்றது. அது குபேர
னுற் மகா தவப்பெருமைகொண்டு சிருட்டிக்
கப்பட்டது. அதைச் சூழ்வரவிருக்கும் பத்
தரைமாற்றுத் தங்கமயமாகிய மரங்கள் மணி
மயமாகிய கிளைகளோடும் பவளமயமாகிய
அரும்புகளோடும் மரகதமயமாகிய தளிர்க
ளோடுங்கூடி நித்திய வாசனையுடைய புட்பங்
களையும் மதுரமாகிய பழங்களையு முண்டாக்கிக்
கொண்டு விநோதமாகிய பல பட்சிகளுக்கு
மிருப்பிடமாய் விளங்காநின்றன. அச் சபை
யிற் சுகத்தை யடையத்தக்க பல விடங்களும்
அவரவர்கட்குத் தகுந்த பல ஆசனங்களும்
மற்றும் வேண்டிய வஸ்துக்களும் சித்தமா
யிருக்கின்றன. இவ்விதமான ஆச்சரியப்படத்
தக்க சிறப்பினை யுடையதாய், ஆகாயத்தில்
தவழ்கிறதுபோற் பிரகாசிக்கின்றது. அந்த
மகா சபையிற் குபேரன் விசித்திரமாகிய வஸ்
திராபரணங்கள் தரித்து அநேக மாதர்களு
டன் கூடி, சூரியன்போல் வெயிலெறிப்பனவா
யும் மிருதுவாயு மிராநின்ற இரண்டு ஆதனங்
களில் கால்களை வைத்துக்கொண்டு சிங்காத
னத்தில் வீற்றிருப்பான். அச்சபையி னருகில்
மந்தாரச் சோலையினது பரிமளங்களையும்,
செங்கழுநீர் மலர்களுடைய பரிமளங்களையும்,
தாமரை மலர்களினது பரிமளங்களையும், சந்த
னக் காட்டினது பரிமளங்களையும் வீசிக்கொ
ண்டு, வாயுவானவன் குபேரனைச் சந்தோஷப்
படுத்துவான். அநேகந் தேவர் முதலான
பேர்கள் மிக விநோதமாய்க் குபேரனுடனே
சம்பாஷித்துக் கொண்டிருப்பார்கள். அன்றி
யும், மிசிரகேசி அரம்பை சித்திரசேனை கிரு
தாசி மேனகை புஞ்சி கர்த்தலை விசுவாசி சக
சன்னி பிரமலோசை ஊர்வசி இளை இவர்
முதலனேக அப்சரஸ்திரீகள் திவ்ய தாளங்
கொட்டிக்கொண்டு, வேணு வீணை மிருதங்க
மிது முதலிய வாத்தியங்களை வாசித்துக்கொ
ண்டு நர்த்தனஞ் செய்து குபேரனை யுபாசிக்கி
றார்கள். கின்னரரென்றும் நரனென்றுஞ்
சொல்லப்பட்ட கந்திருவரும், மாணிபத்திரன்
சுவேதபத்திரன் காசாரகன் கண்டகன் பிரத்தி
யோதன் முதலாகிய இயக்கரும், விசுவாசு
தும்புரு விசாலகன் வராககர்னன் தாமி
ரொஷ்டன் பலபக்ஷன் பலோதரன் அங்கா
ருடன் சிகாவர்த்தன் ஹேமதேத்திரன் விபூ

ஷணன் பூருவானவன் பிங்களன் சோணிதா
தன் பிரவாயகன் விருட்சவாசணி தேதன் பிர
வாசன் இவர் முதலாகிய காயகரும், அச்சபை
யிலிருந்து சங்கீதம் பாடுவார்கள் லோக
மாதாவாகிய ஸ்ரீ மகாலட்சுமியும் அங்கு பிர
சன்னையா யிருப்பாள். அக் குபேரனுடைய
குமாரனாகிய நளகூபர னென்கிறவன் சில
யட்சகந்திருவர்களோடு கூடி ஓர்புறத்தில் வீற்
றிருப்பான். நானும் என்போன்ற வனேக
தேவரிஷிகளும் பிரமரிஷிகளும் அச் சபையி
லிருந்து ஆசீர்வதித்துக்கொண் டிருப்போம்.
மேலும், அநேக இராட்சதர்களும் பிசாசர்க
ளும் பயபக்தியுடன் உபாசித்திருப்பார்கள்.
அச்சபையின் ஓர்புறத்தில் உமாபதியாகியும்,
பசுபதியாகியும் முக்கண்ணனுமா யிராநின்ற
உருத்திரமூர்த்தியானவர் கையிற்சூலமேந்தி,
அநேக பூதகணங்களும் வாமனர்கள் விகடர்
கள் கூனர்கள் ஆகிய சிவகணங்களும் சூழ்ந்து
போற்றுநிற்க, நந்தி முதலாகிய அந்தரங்க
பத்தர் உபசாரஞ்செய்ய வீற்றிருந்து விளங்கு
வர். அநேக கிங்கரர்கள் பல ஆயுதங்களைத்
தரித்து, அச் சபையைச்சுற்றிக் காத்திருப்பார்
கள். ஆகா! ஊகூ! என்னும் கந்திருவர் முத
லாகிய வைணிகர் குபேரனருகி லிருந்து பாடு
வார்கள். இமயம் பாரியாத்திரம் விந்தியம்
கைலாசம் மந்தரம் இவை முதலாகிய பருவ
தங்களும் தேகங்களுடன் சேவித்துக்கொண்
டிருக்கின்றன. விபீடணனென்னும் இராக்ஷச
ராஜன் தன் பரிவாரத்துடனே அண்ணனாகிய
குபேரனை உபாசித்துக்கொண் டிருப்பான்.
நவநிதிகள் இருபுறங்களிலும் விளங்கிக்
கொண்டிருக்கும். இவ்வாறாகிய பரிவார விப
வங்கள் பொருந்திய யட்சராஜனாகிய குபே
ரன் நித்தமும் அச்சபைக்குவந்து, மகாதேவ
னாகிய சிவனை சாஷ்டாங்க நமஸ்காரஞ்
செய்து, விடைபெற்றுப் பின்பு கொலுவிருப்
பான். அந்தச் சிவனும் குபேரனிடத்தில்
வாத்சல்யத்தினால் அங்கேயே யிருந்து அநுக்
கிரகஞ் செய்துகொண்டிருப்பார். இவ்வுல
கில் ஆதுலர்க்குப் பல தானங்கள் வழங்கின
போர்கள், அச்சபையில் திவ்விய தேகபோகங்க
ளுடனே வாழ்ந்துக்கொண் டிருப்பார்கள்.
இப்படிப்பட்ட அந்தச் சபையானது, ஆனந்
தமே வடிவுகொண்டதுபோல் விளங்கிக்
கொண் டிருக்கிறது.

பிரமன் சபைச்சிறப்பு

பிரமதேவனுடைய சபையானது ஒருவ
ராலும் இப்படிப்பட்டதென்று சொல்லக்
கூடாது. அந்தச் சபையானது மனதினாலே
சிருஷ்டிக்கப்பட்டது. முற்காலத்தில் சூரிய
பகவான் இப்பூலோகத்து வந்தபோது, இச்
சபையின் மகிமையை விஸ்தாரமாகச் சொன்
னார். ஆகிலும், அவ்வளவுஞ் சொல்ல எனக்
குத் திறமில்லை. ஆனால், அந்தச் சூரியபக
வானை நோக்கி, சுவாமி! அப்படிப்பட்ட பிரம
சபையை நான் பார்க்கவேண்டுமென்று நினைக்
கிறேன். அதனை காண்பதற்காகிய உபாய
மென்ன? அதனை அருளிச்செய்ய வேண்டு
மென்று நான் கேட்க, அந்தச் சூரியபகவா
னனவர் எனக்கு ஒருவிரதம் உபதேசித்தார்.
அதாவது, ஆயிரம் வருஷகாலம் வரையில்
இந்திரிய நிக்கிரகத்துடனே பிரமதேவனைக்
குறித்துத் தவஞ்செய்வதுதான். அப்படியே
நான் இமயமலையின் சாரலில் உட்கார்ந்துக்
கொண்டு தவஞ்செய்தேன். அப்போது அந்
தத் தபோமகிமையால் பிரமதேவன் தனது
சபைக்கு என்னை வருவித்தார். அக்காலத்தில்
அந்தச் சபையை நான் பார்த்து ஒன்றுந்
தெரியாமல் ஸ்தம்பித்து பிரமித்து நின்றேன்.
ஆதலால், அதனுடைய ரூபம் இப்படிப்பட்ட
தென்றும், அதினளவு இவ்வளவென்றும்,
நான் சொல்லமாட்டேன். ஓர் உபமானத்
தைக் காட்டிச் சொல்லுவோ மென்றாலும்,
அதற்கு நிகரான வஸ்து ஒன்றுமில்லை. ஆனா
லும் அதிற்கண்ட சில விஷயங்களை மாத்தி
ரஞ் சொல்லுகிறேன் கேளும்.

அந்தச்சபையிற் சீதளமென்பது மில்லை.
உட்டிண மென்பதுமில்லை. சீதோட்டிணங்கள்
வேண்டுங் காலங்களிலும் சவுக்கிய ஹேது
வாகவே யிருக்கின்றது. பசியென்பதுமில்லை.
தாகமென்பது மில்லை. நல்ல உணவுகளையும்
பானவஸ்துக்களையும் சாப்பிட்டாலு மேற்றுக்
கொள்ளுகின்றது. எவ்வளவு வருத்தப்பட்டா
லும் வருத்தமுண்டாகிறதில்லை. சூரியன் முத
லாகிய பேர்களுடைய கிரணங்க ளங்கே பரவு
கிறதில்லை. நித்தியம் பிரகாசமாகவே யிருக்
கின்றது. அதிலிருக்கிற ஸ்தம்பங்கள் சுவர்கள்
கதவுகள் மெத்தைகள் மேடைகள் முதலிய
எல்லா வஸ்துக்களும் மகா காந்திபொருந்
திய நவரத்தின மயங்களாகத் தோன்றினா
லும், தேஜோமயமாய்க் காணப்படுகின்றன.
இன்னும் அதன் விசித்திரத்தை என்ன சொல்
வேன்? கம்பளங்கள் முதலானதுகளினாற்
தாங்கப்பட்டதுபோ லிருந்தும், அந்தச் சபை
ஒன்றினாலும் தாங்கப்படாதது போலவே

காணப்படுகிறது. அது பார்க்கும்பொழுது ஒருவிதமாய்க் காணப்படாமல், ஒரு வேளையில் இருருவு மன்றி வெறுஞ் சுடர்போலவும், ஒரு வேளையில் ஸ்தம்பம் கவாட முதலிய வுருக்களோடு கூடியதுபோலவும், ஒருவேளை வெறும் வெளி போலவும், ஒருவேளை முழுதும் ஆதரிக்கப்பட்டது போலவும், ஒருவேளை ஆதாரமில்லாதது போலவும், ஒரு வேளையாதார முடையதுபோலவும், இன்ன வண்ணமாகியதென்று சொல்லொணுத் தன்மையுடன் விளங்குகின்றது.

அப்படிப்பட்ட மகாசபையில் ஸ்ரீ நாராயண மூர்த்தியினுடைய நாபிக்கமலத்தி லுதித்த நான்முகக் கடவுளானவர் தேவர் மனிதர் திரியக்கு தாவரம் என்கிற நான்குவித உலகங்களைச் சிருஷ்டித்துக் கொண்டிருப்பார். அப்போது தட்சகர் பிரசேதர் புலஹர் மரீசி கசியபர் பிருகு அத்திரி வசிட்டர் கவுதமர் அங்கிரசு புலஸ்தியர் கிருது பிரகலாதர் தர்த்தமரென்கிற உபப் பிரமாக்களும், அதர்வாங்கிரசுக்கள் வாலகிலியர் மரீசிபர் என்கிற மகாரிஷிகளும் மனம் அந்தரீட்சம் வித்தை வாயு தேயசு பலம் பூமி முதலானவைகளும், சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தமென்கிற விஷயங்களும், பிரகிருதி விகிருதி முதலாகிய காரணப் பொருள்களும், அகஸ்தியர் மார்க்கண்டேயர் ஜமதக்கினி சம்வர்த்தர் சியவனர் இரிசியசிருங்கர் சனகர் சனந்தர் சனத்குமாரர் சனத்சுசாதர் முதலாகிய யோகிகளும், வியாசரும் அசிதர் தேவவர் ஜைகீஷவியர் இருக்குவரியர்சிதசத்துருமணி என்னும் தவசிகளும், எட்டங்கங்களுடைய ஆயுர்வேத மென்கிற வைத்திய நூலும், காந்தர்வ வேதமென்கிற சங்கீத நூலும், தனுர்வேத மென்கிற ஆயுத நூலும், அர்த்த தந்திரமென்கிற நீதிநூலும், நான்கு வேதங்கள் வேதாந்தங்கள் பதினெண் புராணங்கள் தரும நூல்கள் இவை முதலாகிய தேவரூபங் கொண்டிராநின்ற பல நூல்களும், சூரியன் சந்திரன் முதலாகிய கிரகங்களும், நட்சத்திரங்களும் சகல தேவ கணங்களும், பிதுர்க் கணங்களும், மகத்துவ மிகுத்த யாகங்களும், க்ஷணம் முகூர்த்தம் இரவு பகல் பக்ஷம் மாதம் இருது வருஷம் யுகம் முதலாகிய காலங்களும், காலசக்கிரம் தரும சக்கிரங்களும் தேவ மாதர்களும், அசுர மாதர்களும், நாக மாதர்களும், சகலலோக பாலகரும் மனு முதலாகிய மகாராஜர்களும், அந்தப் பிரமதேவனைச் சுற்றிலுமிருந்து பய பக்திகளுடனே துதித்துக் கொண்டிருப்பார்கள். அன்றியும் கந்திருவர் விச்சாதரர் கின்னரர் கிம்புருடர் அப்சரசுக்கள் முதலான பேர்களிலிருந்து சங்கீத நாட்டியத்துடன் சகல விநோதங்களுஞ் செய்வார்கள். மேலும் பூலோகத்தில் மகாவுக்ரமாகிய விரதத்துடனே வேத மோதியவர்களும், தவஞ் செய்தவர்களும், விசேஷமாகிய புண்ணியஞ் செய்தவர்களும்; மகா தேயசு பொருந்தி அச்சபையில் வாழ்வார்கள். இவ்விதமாகிய சபையார் சூழ்ந்திருக்கச், சந்தியை சாவித்திரி காயத்திரி சரஸ்வதி என்கிற தேவிமார்களுடனே பிரமதேவர் திவ்ய சிங்காதனத்திற் கொலுவிருக்கு மளவில், அந்தச் சபையானது வேதகோஷ மயமாகவும் பிரமதேஜோமயமாகவும் விளங்கும்.

அரிச்சந்திரன் இந்திரசபைக்குரியனுன காரணமுரைத்தல்

கேட்டீரோ தருமபுத்திரரே! இவ்வாறு கத் தேவர்களுடைய பல சபைகளையும் பார்த்திருக்கிறேன். ஆனுல், மனிதலோகத்தில் இச்சபைக்கு சரியாகிய சபை எந்த விடத்திலும் எக்காலத்திலுமில்லை இது மிகவும் மேலாகியது இதனுல் உங்கட்கு மகா விசேஷங்களுண்டாகுமென்று சொல்லிய நாரதமுனிவரை நோக்கித் தெண்டனிட்டுத் தருமராஜன் சொல்லுகிறுர். ஓ சுவாமி! தேவரீர் தேவலோகங்களிலுள்ள இந்திராதிகளுடைய சபைகளையெல்லாம் அருளிச்செய்தீர். அவைகளில் தேவேந்திரனுடைய சபையின் சீர்மையைச் சொன்னபோது அதில் முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத் தெண்ணுயிர முனிவர்களும், இன்னுமளவற்ற பரிசனங்களோடும் சகல வைபவங்களு மமைந்திருப்பதாக வருளிச்செய்தீர். ஆனுல், இராஜர்களுக்குள்ளே அரிச்சந்திரன் என்கிற ஒரு மகாராஜனு மங்கிருக்கிறுனென்று சொன்னீர். அந்த அரிச்சந்திர மகாராஜன் எந்தப் புண்ணிய விபாகத்தினுலே இந்திரசபையில் வாசமாயிருக்கிறுன். அவன் செய்த புண்ணியங்களின் சிறப்பு எப்படிப்பட்டது? எந்தெந்த நியமங்களை அவன் அனுஷ்டித்தான்? எந்தப் புண்ணியப் பிரபாவத்தினுலே இந்திரனுடன் கூட எக்காலமும் வாசஞ் செய்யும்படியான பதவி கிடைத்தது? அவைகளையுந் தயைசெய்து திருவாய் மலர்ந்தருள வேண்டும். அன்றியும் இயமசபைக்குத்தேவரீர் எழுந்தருளியபோது

அங்கிருக்கின்ற என் பிதாவாகிய பாண்டுமகாராஜனைக் கண்டீரே? அவருடன் பேசினீரா? அப்போது அவர் சொன்னதென்ன? அதையும் தாங்கள் அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும். தேவரீர் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களில் நடக்குஞ் சரித்திரமெல்லாமறிந்த மகாஞானியாகையினாலே தேவரீரிடத்திற் சகல இரகசியங்களையுங் கேட்க வேண்டுமென்று கோருகிறேன் என்று சொல்லிய தருமபுத்திரரை நோக்கி நாரத மகாமுனிவர் சொல்லத் துவக்கினார்.

கேளுமையா தருமபுத்திரரே! நீர் அரிச்சந்திரனுடைய எந்தப் புண்ணிய விபாகத்தைக் குறித்துச் சந்தோஷத்துடனே கேட்கிறீரோ? அந்தப் புண்ணியங்களையும் அவனுடைய பெருமையும் சொல்லுகிறேன் கேளும். இட்சுவாகு குலத்தில் திரிசங்குவென்று மகா தரும நிலையுள்ள ஒரு இராஜன் இருந்தான். அவன் கேகயராஜனுடைய மகளாகிய சத்யவதியென்கிற பெண்ணை மணந்து, அரிச்சந்திரனென்கிற ஒரு புத்திரனை யுண்டாக்கினன். அந்த அரிச்சந்திரன் மகா வீரனாகியும், மகா சூரனாகியும், மகாதீரனாகியும், வெகு புத்திசாலியாகியும், வெகு உதாரனாகியு மிருந்தான். அவனது ஆணையைச் சகல ராஜர்களும் சிரத்தின் மீதிற் கொண்டு, அவன் பாததாமரைகளில் வணங்கி வந்தார்கள். அவன் தானொருவனாகியே தன் புஜவலிமையினாலே நெடிய கடல்சூழ்ந்த புவிமுழுதுஞ் ஜயித்துச் சத்துரு வென்கிற பெயரை யழித்து, மிகவு மேன்மை பொருந்திய யாகங்களின் முதன்மையென்று சொல்லத்தக்க இராஜசூயயாகஞ் செய்தான். அந்த யாகத்திற்கு சகலதேச ராஜாக்களும் வந்து வெகுகாணிக்கைகள் கொடுத்து வணங்கிப் போஜனஞ் செய்யும் வேதியருக்குப் பரிமாறுந் தொழிலிலிருந்தார்கள். சில ராஜர்கள் பலவித பரிசாகரத் தொழில் செய்து வந்தார்கள். இவ்வாறாக அவ்வரிச்சந்திரன் ராஜசூயமென்கிற மகாயாகத்தை நிறைவேற்றி எல்லாவரசர்களும் எல்லா வேதியருங்கூடி முடிசூட்டச் சாம்பிராச்ய பட்டாபிஷேகத்தையடைந்து விளங்கினன். அப்போது யாகஞ்செய்வித்த இருத்விக்குகளுக்கும், மற்ற மகானுபாவராகிய பிராமணர்களுக்கும் அநேகம் இரத்தினாபரணங்கள் திவ்விய வஸ்திரங்கள் நானாவித வாகனங்கள் முதலியவைகளோடு, நவமணிகள் பதித்து நல்ல இலக்கணங்களுள்ள நான்கு குதிரைகள் கட்டிய பல கோடி தேர்களையும், சுவர்ணமயமாகிய சீனிகள் கட்டி, நவரத்தினங்களிழைத்த முகப்பட்டயங்களும் கடிவாளங்களும் அணிந்து, நாலு கால்களிலும் தங்கக் கடகங்களும் சலங்கைகளும் போட்டுக் கழுத்துமயிரில் இரத்தின மிழைத்த குச்சுகளும்கட்டி, நெற்றியிற் பொன்மயமாகிய சந்திரப்பிறையணிந்து, காதுகளுக்கு நடுவில் முத்துக்களாற் செய்யப்பட்ட தூரய்கள்கட்டி, கழுத்திற் பல முத்தாரங்களும்போட்டு அலங்காரஞ் செய்திருக்கின்ற அநேக கோடி குதிரைகளையும், உத்தம சாதியிற் பிறந்தவைகளும், மிகுந்த வேகமுடையவைகளும், பெரிய பருவதங்களுக்குச் சரியான தேகங்களுள்ளவைகளும், சகல அலங்காரங்களணிந்தவைகளுமாகிய அநேக லக்ஷம் யானைகளையும் கொடுத்தான். மேலும், அந்த யாகம் ஆரம்பமாகியது முதல் ஒருவருஷம் வரைக்கும் வந்த பேருக்கெல்லாம் தேவாமிர்தத்திலும் அதிசயித்த பாயசமுதலாகிய அன்னங்களை வழங்கினன். இவ்விதமாகப் பல தானங்கள் வழங்கிப் பூசித்த அந்த அரிச்சந்திர மகாராஜனுக்கு வேதியரெல்லாம் மனமகிழ்ந்து சகல சம்பத்துகளு முண்டாகக் கடவனென்றும், கீர்த்தி உலகமெங்கும் பரவக் கடவதென்றும், ஒருவராலும் ஜயிக்கக்கூடாத தேஜசு உண்டாக்க் கடவதென்றும், எல்லோரிலும் மேன்மை யுண்டாகக் கடவதென்றும் ஆசீர்வாதஞ் செய்தார்கள். இப்படியாக வெகு சிறப்பாய ராஜசூயயாகஞ் செய்தபடியினாலே, அரிச்சந்திர மகாராஜன் தேவேந்திரனுடைய சபையை அடைந்து, இந்திரனாலே பூசிக்கப்பட்டு மகிழ்ந்திருக்கிறான். கேளுமையா தருமபுத்திரரே! இவ்விதமாக யார் யார் ராஜசூயஞ் செய்வார்களோ அவர்களெல்லாம் இந்திரசபையையடைந்து இந்திர களத்திற் சென்று முன் வைத்த காலைப் பின் வைக்காமல் யுத்தஞ்செய்து மனதிற் கிஞ்சித்தேனும்பயமின்றி உயிரை விடுகிறவர்களும், உக்கிரமாகிய தவங்கள் செய்து அத்தவங்களிலே தேகத்தை விடுகிறவர்களும், அந்த இந்திர சபைக்குச் சென்று அளவற்ற சிறப்போடும் வாழ்வார்கள்.

### இயம சபையிற் கண்ட பாண்டுவின் கருத்துரைத்தல்

ஓ தருமபுத்திர மகாராஜனே! அரிச்சந்திரனுக்கு இந்திர சபை கிடைத்த காரணம்

இது யமலோகத்திற் சென்றவிடத்தில் உமது பிதாவாகிய பாண்டு மகாராஜன் உம்முடன் சொல்லச் சொல்லி ஒரு வார்த்தை சொன்னார். அதைச் சொல்லுகிறேன் கேளும்: அந்த அரிச்சந்திர மகாராஜனைப் போலே தானும் இந்திரன் சபையில் விளங்கவேண்டுமென்கிற ஆசையினாலே நீர் அந்த இராஜசூய யாகஞ் செய்யவேண்டுமென்றும், அப்படிக்குப் புத்திரனாகிய நீர் அந்த மகா யாகத்தைச் செய்தால் அந்தப் பதவி தனக்குக் கிடைக்குமென்றும் சொன்னார். ஆகையால், ஓ தருமபுத்திரரே! அரிச்சந்திரனுடைய சம்பத்தையும் மேன்மையையும் பார்த்துத் தானுமப்படியாக வேண்டுமென்றும் மனதிற் கவலைகொண்டிருக்கிற உமது பிதாவினுடைய கோரிக்கையை நீர் நிறைவேற்ற வேண்டும். மேலும் அவர் பூமியெல்லாம் ஜயித்துச் சகல ராஜாக்களையுங் கீழ்ப்படுத்தியன்றோ அந்த யாகத்தைச் செய்யவேண்டும்? அப்படிப்பட்ட சக்தி எனக்கில்லையே என்ன செய்வேனென்று விசாரப்படலாமோ? அப்படி விசாரப்படவேண்டாம். ஏனென்னில், தனக்கு நான்கு திக்குப் பாலகர் போன்ற நான்கு தம்பிமாரிருக்கிறார்கள் அவர்கள் தன தாக்கினையைச் சிரத்தில் வகிக்கிறவர்கள் அவர்களைக் கொண்டு சகல பூமண்டலத்தையும் கைவசப்படுத்திக் கொள்ளலாமென்றுஞ் சொல்லச் சொன்னார். ஆதலால், நீர் அதைக் குறித்து யத்தனப்பட வேண்டும். ஆனால், அந்த யாகத்தை நிறைவேற்றுவது வெகு பிரயாசத்தாலாகாவேண்டியதாயிருக்கின்றது. ஏனென்னில், மிகவும் பெரிய யாகமாகையினாலே பல இடையூறுகள் சம்பவிக்கும். அன்றியும், பிரம்மராக்ஷதர் அதில் யாதேனும் குற்றம் நேரிடுவதையே எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆதலால் மிகவுஞ் சாவதானமாயிருந்து நிறைவேற்ற வேண்டும். ஓ தருமபுத்திரனே! நீர் கேட்டவைகளை யெல்லாஞ் சொன்னேன். இவைகளை நன்றாயோசித்து எப்படி யுக்தமோ அப்படி நடந்து கொள்ளும் இன்னமொன்று சொல்லுகிறேன் கேளும். நீர் எப்போதும் ஏமாறாமல் அந்தணர் முதலிய நான்கு வருணத்தோரையும் பிரமசரிய முதலிய நான்கு ஆசிரமத்தோரையும் தத்தம் விதிகளில் வழுவாமல் நடக்கும்படியாகவும், யாவருக்கும் திருடர் கள்ளர்வெறியர் காமிகள் முதலியபேர்கள் ஒரு தீங்கும் நேரிடாமலிருக்கும்படியாகவும், தருமநீதி வழுவாமல் அரசாட்சி செய்துக்கொண்டு பொய்மை பொறாமை வஞ்சகம் முதலாகிய துர்க்குணங்களுக்குக் கனவிலு மிடங்கொடாமல் அடித்துக் கொண்டு ஜனங்களிடத்திலும் இனங்களிடத்திலும் அன்பும் ஆதரவும் வைத்து தெய்வத்தினிடத்திலும் பெரியோர்களிடத்திலும் பயமும் பக்தியுமாய் நடந்துகொண்டு சத்துருக்களை யெல்லாம் ஜயித்து, யாசகருக்கு வேண்டியமட்டும் கொடுத்து, மகானுபாவனாய் யாவரும் புகழச் சந்தோஷத்துடனே வாழ்ந்துக் கொண்டிரும். இனி நான் துவாரகா புரிக்குப் போகவேண்டும். ஆதலால், செலவு பெற்றுக் கொள்ளுகிறேனென்று நாரத மகாமுனிவர் சொல்லி, அநேக ரிஷிகளுடனே கூடத் துவாரகாபுரிக்குப் போனார்.

பின்பு தருமராசாவானவர் நாரதர் சொல்லிய இராஜசூயமென்னும் யாகத்தைக் குறித்து மனதில் நெடுநேரம் யோசித்து, ஓ! ஓ! இந்த யாகத்தை நாம் எப்படி சாதிக்கப் போகிறோம்? முற்காலத்திலும் இக்காலத்திலும் மேன்மையோடு விளங்கிய மகா தீரராகிய அரசர்களெல்லாம் இந்த யாகத்தைச் சாதிக்க மாட்டாமற் போனார்களே? (யானைகளெல்லாம் சுழன்றோடும்படியாகிய காற்றிலே மசகங்களைக் குறித்துக் கேட்கவேண்டுமோ?) என்கிற பழமொழிக்குச் சரியாய், அப்படிப்பட்டவர்களாலேயும் செய்ய அசாத்தியமாகிய யாகத்தை நாமோ சாதிக்கமாட்டுவோம்? என்ன செய்யலாம் பிதாவின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றமாட்டாத புத்திரனிருந்து பயனென்ன? அந்த யாகமோ பூமண்டலத்திலிருக்கும் சகல ராசர்களும் வந்து வணங்கும்படியாகிய பெருமை பெற்றவனுக்குச் செய்ய வெளிதாகும். நாமெப்படி அரசர்களை யெல்லாம் ஜயிக்கப்போகிறோமென்று மிகுந்த சிந்தையால் வருத்தமுற்றுப் பெருமூச் செறிந்துக்கொண்டு உன் மத்தம் பிடித்தவன்போல் ஒருவரோடும் மனமகிழ்ந்து பேசாமல் இராச்சியத்திற்கு இதமாகிய காரியங்களையே செய்ய மன்முடையவராய் பல தருமங்களையும் குறைவின்றி நடாத்திக்கொண்டு யாசகராகிய பிராமணர்களுக்கு எந்தவேளையிலும் குறைவின்றி வேண்டிய அன்ன பானங்களையும், வஸ்திராபரணாதிகளையும் கொடுக்கும்படி கட்டளையிட்டு நடாத்தி வந்தார். இவ்விதமாக நடத்தி வருகிற தருமபுத்திரரை நோக்கிப் பிராமணர் முதலிய யாவரும் அருகில் வந்து, ஓ மகாராஜனே! நீரே இந்தப்பூமண்டலத்தை

நெடுங்காலம் அரசாட்சி செய்யவேண்டும். உமக்குச் சகல சம்பத்துகளும் உண்டாக வேண்டும். உம்முடைய மனதிலிருக்கும் எண்ணத்தைப் பகவான் நிறைவேற்றவேண்டும். உம்முடைய பகைவரெல்லாம் வணங்கி உமதாக்கினையை முடியில் தரிக்கவேண்டுமென்று சொன்னார்கள்.

இப்படி யாவராலும் தருமராஜன் ஆசீர்வதிக்கப்பட்டு அரசாட்சி செலுத்துமளவில் ஒருவருக்கும் அக்காலத்தில் மிருத்தியு பயமுண்டாகவில்லை. யாவருக்கும் தங்கள் பிதாவினிடத்திலுமில்லாத அன்பு இவரிடத்திலிருந்தது. மாதமும்மாரி பெய்துக்கொண்டிருந்தது. அவருக்கு பெரும்பாலும் பகைவரில்லாமற் போனபடியினாலே அஜாத சத்துருவென்று பேருண்டாயிற்று. வீமசேனனும் அர்ச்சுனனும் பகைவரோடு யுத்தஞ் செய்து வெற்றி கொள்வதினாலும், நகுலன் சகல சேனைகளுக்கும் மற்றவர்களுக்கும் காலங்களில் தப்பாமல் சம்பளம் முதலானதுகளைக் கொடுத்து விசாரித்து வருவதினாலும், சகாதேவன் ஜனங்களுக்கு நடக்கவேண்டிய நியாயங்களையும் மேன்மைகளையும் வழுவின்றி நடத்துவதினாலும்தருமராஜன் அன்பு-பொறை-சத்தியம்-தயை முதலாகிய நற்குணங்களோடு கூடி உலகத்தில் நன்மையைச் செய்து வருவதினாலும், யாவரும் மித்திரராகவே யிருந்தபடியால் அப்பெயர் அவருக்குப் பொருந்தி யிருந்தது. அன்றி. அப்பூமியில் அதிவிருஷ்டி என்கிற மழையில்லாமையும் அக்கினிப் பயமும் துட்ட செந்துக்கள் பயமும் கள்ளர் முதலானோருடைய தொந்தரவும் உண்டாகாமலே போயிற்று. இவரிடத்துக்குச் ஜெனங்கள் சுபசந்தோஷம் சொல்லவும், ஆசீர்வதிக்கவும், பார்க்கவும், பேசவும், ஆறிலொரு கடமை செலுத்தவும் வந்தார்களே அல்லது ஒரு தீங்கு நேரிட்டதென்று சொல்லவந்ததே யில்லை. ஏனெனில், ஒரு சங்கடமு முண்டாகாமற் போனபடியினாலேதான் இந்த மகாராஜன் குடிகளிடத்தில் ஆறிலொரு கடமை வாங்கி வந்தாலும், விஸ்தீரமாய்த் திரவியங்களைத் தருமங்களாற் சிலவு செய்து வந்தாலும், பொக்கிஷமானது இவருடைய தரும மகிமையினாலே ஒருபோதும் குறைவின்றி நிறைந்தே யிருந்தது.

இவ்வண்ணமாக நாளுக்குநாள் மேன்மைபொருந்தி விளங்காநின்ற தருமபுத்திரரானவர் ஒருநாள் சபையில் தனியேயிருந்து தனது தம்பிமார்களுக்கும் மந்திரிமார்களுக்கும் நாரதர் இராசசூய யாகத்தைக் குறித்துச் சொல்லிய செய்தி தெரிவித்து ஆலோசித்தார். அப்போது மந்திரிகள் மகாராஜனைப் பார்த்துச் சொன்னதாவது: ஸ்வாமீ ராஜாதி ராஜனே! எவனுக்கு நான்கு கடல்களுஞ் சூழ்ந்த பூமி கைவசப்பட்டு யிருக்கிறதோ எவன் சாந்தி முதலாகிய ஆறு குணங்களு முடையவனோ எவன் இன்ப துன்பங்களை இலட்சியஞ் செய்யாமற் சகிக்கத் தகுந்தவனோ எவன் சகல வேத சாஸ்திரங்களையும் கற்று விதிப்படி வழுவில்லாமல் நடப்பவனோ எவன் மகா யோக்கியதை பொருந்திய நற்குலத்திற் பிறந்தவனோ எவன் பெரியோர்கள் சம்மதிக்கத் தகுந்தவனோ அப்படிப்பட்ட மகாராஜனுக்கு ராஜசூயயாகஞ் செய்யத் தகுதியுண்டு. அந்த புருஷன்தான் சோமபானனென்று பேர்பெறுவன். இப்படிப்பட்ட புருஷர்களில் நீர் மிகவும் உத்தமரானபடியினாலே அந்த யாகத்தை நீரல்லாது மற்ற யார் நிறைவேற்றத் தகுந்தவர்? ஆதலால், நீர் அவசியம் அந்த யாகத்தைச் செய்ய வாரம்பிக்கவேண்டும். அதற்கு இதுதான் நல்ல சமயம். ஏனெனில், சகலலோகங்களையும் சுவாதீனம் பண்ணும்படியாகிய சகோதரரும் நாங்களும் மற்றும் சேனைத்தலைவர் முதலாகிய பேர்களும் உமது ஆக்கினைக்கு உள்ளடங்கி, உம்முடைய கருத்தைச் சீராய் நிறைவேற்ற எதிர்பார்த்திருக்கிறோம். நீரோ சகல நற்குணங்களுடனே விளங்கி யாவரும் புகழ நடாத்திக்கொண்டிருக்கிறீர். எவ்வளவு பொருள் வேண்டியிருந்தாலும் விசாரப்படவேண்டியதில்லை. எந்த ராஜாவினிடத்தில் எந்த வஸ்து இருக்கிறதோ அதெல்லாம் உமது கையிலிருப்பது போலவே நினைக்கவேண்டும். ஆதலால், சுவாமீ தருமபுத்திர மகாராஜனே! நீர் எவ்வளவும் யோசிக்காமல் இராஜசூயத்திற்கு யத்தனஞ் செய்யவேண்டுமென்று மந்திரிகள் சொல்ல, அதுகேட்டுத் தருமபுத்திரர் மனமகிழ்ந்து யாகத்தை நிறைவேற்றுவதேமுக்கியமென்றுகருதிமறுபடியும் ஒருநாள் ஆஸ்தானத்தில் தம்பிகள் நால்வரும், உபபாண்டவர் ஐவரும், விராடராஜன் துருபதேய மகாராஜன் யாதவச் சிரேஷ்டராகிய சத்தியக மகாராசன் முதலாகிய சில ராசாக்களும், வியாசர் தவுமியர் முதலாகிய ரிஷிகளும், ரித்துவிக்குகளும், வேதசாத்திரங்களில் வல்லவராகிய பிராமணரும், மற்றும்

மந்திரிகளும், சேனாதிபதிகளும் இருக்குமளவில் யாகத்தைக் குறித்து ஆலோசிக்க வேண்டுமென்று அவர்களை யெல்லாம் நோக்கி, ஓ மகானுபாவராகிய ரிஷிகளே! ஓ பிராமணர்களே! ஓ க்ஷத்திரியர்களே! ஓ என் தம்பிமார்களே! ஓ மந்திரிகளே! நீங்கள் யாவரும் என் வார்த்தையைக்கேட்டு எனக்குப் பதிற் சொல்லவேண்டும். அஃதென்னவென்றால்; சகல யாகங்களுக்கும் சிரோன்மணிபோன்ற இராசசூயமென்னும் யாகத்தைச் செய்யவேண்டுமென்று எனக்கு ஆசையிருக்கின்றது. அதைக் குறித்து எனக்கு யோக்கியதை யுண்டா? நிறைவேறுமா? இதை நீங்கள் நன்றாய் யோசித்துத் தெளிவுபெறச் சொல்லவேண்டுமென்று சொன்னார்.

### தருமன் கண்ணனை யழைப்பித்து இராசசூய யாகத்தைக் குறித்து ஆலோசித்தல்

அதைக்கேட்ட யாவரும், ஓ மகாராசனே! இராசசூயத்தைக் குறித்து உமக்கே யோக்கியதை இல்லாமற்போனால், இனி யாருக்குத்தான் யோக்கியதையுண்டு? நீ நினைத்த காரியங்கள் யாவும் எளிதில் நிறைவேறும். உமது புத்தியும், யுக்தியும், தருமமும், ஒழுக்கமும் யாருக்குண்டு. ஆதலால், நீரே இராசசூயத்திற்குத் தக்கவரென்று சொல்லக்கேட்டு களிப்புற்று இந்த மகா யாகத்தை நிறைவேற்ற ஸ்ரீகிருஷ்ணன் வரவேண்டும். அவரில்லாமல் ஒன்றும் நிறைவேற மாட்டாதென்று சகல புவன கர்த்தாவாகியும், வாக்கிற்கும், மனதிற்கு மெட்டாத பெருமை யுடையவனும், கருணைக்கடலாகியும் அடுத்தவரைக் காக்குந் தன்மை யுடையவனாகியும் விளங்காநின்ற அந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை மனதில் தியானித்துப் பின்பு இந்திரசேனனென்கிறவனைத் துவாரகைக்கு அனுப்பிவித்தார். அவனும் தேர்மேலேறி விரைவிலே துவாரகாபுரியை யடைந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய மாளிகைக்குட் சென்று, அவரை தெண்டனிட்டு நின்று, சுவாமி யாதவகுல திலகரே! தருமபுத்திர மகாராசன் இராசசூயஞ் செய்ய ஆரம்பித்து, உம்மைக் கொண்டு அதை நிறைவேற்றிக் கொள்ளவேண்டுமென்று இந்திரப் பிரஸ்தத்திற்கு அழைத்து வரும்படி என்னை யனுப்பிவித்தார். தேவரீர் வரவை வெகுவாய்ப் பிரார்த்தித்திருக்கிறேனென்று அவசியம் வந்து இந்தக் காரியத்தை நிறைவேற்றித் தம்மைப் புனிதனாக்கி இரட்சிக்க வேண்டுமென்றும் தனக்கு நடக்கவேண்டிய சகல காரியங்கட்கும் நீரே கதியல்லாமல் வேறு கதியில்லையென்றுஞ் சொல்லச்சொன்னார் என்றான். இப்படி தூதன் சொல்லிய வார்த்தையைக்கேட்ட கண்ணன் அந்தக்ஷணம் பாண்டவரிடத்திற்குச் செல்ல மனமுடையவராய், தமது பிதாவாகிய வசுதேவரிடத்திலும் அண்ணனாகிய பலதேவரிடத்திலும் விடை பெற்றுத் தேரிலேறி, இந்திரப்பிரஸ்த மடைந்து பாண்டவர்களைக்கண்டு நமஸ்காரஞ் செய்ய வேண்டியவர்கட்கு நமஸ்காரஞ்செய்து, ஆசீர்வதிக்க வேண்டியவர்களுக்கு ஆசீர்வதித்துப் பாண்டவரால் மிகவும் பரிவுடனே கொண்டாடிப் பூசிக்கப்பட்டு விருந்துண்டு இளைப்பாறியிருக்குமளவில், தருமராசன் அருகில் வந்துட்கார்ந்து, தமது கருத்தைத் தெருவிக்க ஆரம்பித்தார்.

ஓ ஸ்ரீ கிருஷ்ணா! இராஜசூயமென்கிற மகா யாகத்தைச்செய்து சமராட் என்கிறபெயரைப் பெறவேண்டுமென்று நினைத்து ஆப்தராகிய யாவரையுங் கேட்டதற்கு அவரெல்லாமவசியம் செய்யலாமென்று சொன்னார்கள். ஆனாலும் எனக்கு அதிமித்திரனும் மகா புத்திசாலியும் எல்லாவற்றிலும் வல்லவனுமாகிய உம்முடன் யோசித்துத் தெளியவேண்டுமென்று நினைத்து, உம்மை இவ்விடத்திற்கு வரச்செய்தேன். ஆதலால், இந்த யாகம் எவ்விதமாய் நிறைவேறுமோ? அதற்குரிய உபாயமென்னமோ? அவைகளை நீரே யோசித்து நடத்தி, எனக்கு சம்ராட் என்கிற பேரை வரச்செய்யவேண்டும். நீர் தவிர மற்றை யாவரும் எனக்கு இதத்தையே முக்கியமாக நினைத்து இந்த யாகத்திலிருக்குங் குணதோஷங்களைச் சொல்லாமல் தங்கள் பிரயோசனத்துக்காகவும் முகமர்ராட்டத்திற்காகவும் செய்யலாம் செய்யலாமென்று இச்சகமாய் பேசுகிறார்கள். அந்த வார்த்தையில் எனக்கு மனத்திருப்தி யுண்டாகவில்லை. ஆதலால், உமக்கு இதை தெரிவித்தேன் நீர் நம்பினவர்கட்கு தாக்ஷிணிய முதலாகிய குற்றங்கள் இல்லாமல் இதத்தையே சிந்திக்கிறவரல்லவோ? ஆனதுபற்றி என் மனந்திருப்தி யடையும்படி அந்த யாகத்தின் விஷயத்தில் நேரிடும் குணதோஷங்களைக் காட்டி செய்யலாம் செய்யக்கூடாதென்பதையும் அது செய்யத் தகுந்த உபாய மின்னதென்றும் தெரிவித்து நடத்தவேண்டிய காரியங்களை நீரே முன்னின்று நடத்தவேண்டுமென்றும் பிரார்த்

திக்கின்றேன் என்று தருமபுத்திரர் சொல்லிய வார்த்தையைக் கேட்ட கிருஷ்ணபகவான் சொல்லவாரம்பித்தார்.

ஓ தருமபுத்திர மகாராஜனே! நீர் சகல காரியங்களும் அறிந்தவர் சகல சாஸ்திரங்களுங் கற்றவர் பெரியோர்களிடத்திலே வெகு கேள்விகேட்டவர். ஆகையால் உமக்குத் தெரியாததொன்றுமில்லை. அன்றியும், வெகு மகாத்துமாக்களையும் புத்திசாலிகளையும் இவ்விஷயமாக நீர் வினவியபோது, அவர்களெல்லாம் யுக்தங்களை யோசித்துத் தான் உத்தரம் சொல்லி யிருப்பார்கள். ஆனாலும் என்னிடத்திலிருக்கும் அன்பினாலே என்னையுங் கேட்கிறீர். நான்தெரிந்தமட்டும் சொல்லுகிறேன் கேளும் இந்த ராஜசூய யாகத்தைச் செய்வதற்குத் தகுந்த குலம், குணம், ஒழுக்கம் முதலாகியவை உமக்கிருக்கின்றனவென்பதற்குச் சந்தேகமில்லை. ஆதலால் அவசியஞ்செய்யலாம். ஆகிலும் அதைக்குறித்து முக்கியமாய் நடத்த வேண்டியதைச் சொல்லுகிறேன். இந்த யாகம் வெகு கஷ்டமானது. ஏனெனில், சகலமாகிய வரசர்களையும் வெற்றிகொண்டு வெகு பொருளைக் கொணர்ந்து இது செய்யவேண்டும். அப்போது எல்லாமன்னவரும் நீர்சொல்லும் பணிவிடைத் தடையின்றிச் செய்ய வேண்டும். அவ்வளவு சுவாதீனத்தில் அரசர்களைக்கொண்டு வருவது எளிதல்ல. முற்காலத்தில் பூமியெங்கும் ராஜ குடும்பமாகவேயிருந்தது. அப்போது பரசுராமன் மிகுந்த கோபங்கொண்டு அந்த ராஜகுடும்பமெல்லாம் வேரற்றுப்போகும்படி நாசஞ்செய்தார் அதில் தப்பிப்பிழைத்த ஒருவராலே இக்காலத்தில் அரசர் குலங்கள் உண்டாயின. ஆனபடியினாலே, முற்காலம்போல் இக்காலத்தில் அரசர்கள் அதிகமாயில்லை. ஆனாலும் இவர்களைத் தான் வெல்வது எளிதாகுமோ? அரசர்களையெல்லாம் என்று சுவாதீனமாக்குவது பிரயாச மானபடியினாலேதான் முற்காலத்திலும் இந்த யாகத்தைச் செய்தவர் அதிகமில்லை. அரிச்சந்திரமகாராஜன் முதலில் இதைச் செய்ய வாரம்பித்து நிறைவேற்றினான். உங்கள் குடும்பத்திற் புரூரவசு என்கிற மகாராஜன் இதையாரம்பித்து நிறைவேற்ற மாட்டாமற்போயினான். இவ்வாறே அனேகரும் இந்த யாகத்தை நிறைவேற்ற மாட்டாமற் போனார்கள். ஆனாலும் உமது தம்பிமார்களுடைய சாமர்த்தியத்திலே உமக்கு நிறைவேற்றக் கூடுமானதாய்த் தோற்றுகிறது இன்னம் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். நீர் இப்போது இராஜசூயத்திற்காகச் செய்த சங்கல்பத்தை ராஜநாசத்திற்காகச்செய்த சங்கல்பமாக நினைக்கவேண்டும். ஏனெனில், மகாபல பராக்கிரமசாலிகளாகிய ராசாக்கள் வெகுபேரிருக்கிறார்கள். அவர்கள் கொஞ்சத்திற் சுவாதீனப்படமாட்டார்கள் அதற்காக அனேக அக்ஷௌகினி சேனைகளுடனே யுத்தஞ் செய்யவேண்டும். அதனாலே வெகு ஜனங்கள் நாசமடைமார்களல்லவோ? ஆனாலாகட்டும் இக்காலத்தில் உம்மைப்போல் யாவரையும் வெல்லும்படியாகிய சாமர்த்தியமுள்ள ராஜாக்கள் அதிகமா யில்லாவிட்டாலும் ஜராசந்தனென்று ஒரு ராசனிருக்கிறான் அவனுடைய பெருமையைச் சொல்லுகிறேன் கேளும்.

## ஜராசந்தன் சரித்திரம்

ஐம்பத்தாறு தேசங்களிலே மகததேசமென்றொரு தேசமிருக்கிறது. அது நீர்வளம் நிலவளம் குடிவளம் இவைகளால் மிக மேன்மைபெற்றிருக்கின்றது. அதில் கிருவிருஜமென்றொரு பட்டணமுண்டு. அது சுற்றிலும் உயர்ந்த மலைகளாற் சூழப்பட்டு ஒருகோட்டைபோ லிருக்கிறது. அந்தப் பட்டணத்தில் ஜராசந்தனென்கிற ராஜன் வாசம் பண்ணிக்கொண்டு, அந்த மகததேச முழுவதையும் ஒருவனுக்கே தரும நீதிகள் வழுவாமற் பரிபாலனம் பண்ணி வருகிறான். அவன் வெகு தருமநிட்டை யுடையவன். மிகுந்த உதாரத்துவகுண முள்ளவன். மகாபல பராக்கிரமங்களுடையவன். தகுந்த சேனாபலமும் ஆயுதபலமுமுண்டானவன். அவனுடன் சேர்ந்தவர்கள் யாராரென்றால், சேதிதேசத்து ராஜனும், எனக்கு உம்மைப்போல் அத்தையின் குமாரனுமாகிய சிசுபாலனென்பவன். அவன் மகாபராக்கிரமசாலி அவன் அந்த ஜராசந்தனுக்குச் சேனாதிபதியாகி, அவனுத்தரவைச் சிரசில் வகித்து நடந்து வருகிறான். அந்த ஜராசந்தனுடைய சிநேகம் தனக்கிருக்கிறபடியினாலே, தனக்குச் சமானம் யாருமில்லையென்று மகா கர்வங்கொண்டு மற்றவர்களை அலக்ஷியஞ் செய்கிறான். இவனுமன்றி, கருசதேசத்து ராஜனாகிய தந்தவக்கிரனென்பவனும், அந்த ஜராசந்தனைக்கூடி அவனுக்கு ஊழியனாகியிருக்கிறான். இவனும் சிசுபாலனோடு சமான

மாகிய வீரத்தன்மை யுடையவன் வெகுமாயை களைக் கற்றவன். அம்சன், டிபிகன் என்கிற இருவர் வெகு பலசாலிகள், மிகுந்த மாயா வாதிகள், அப்படிப்பட்ட இருவரும் அந்த மகதராஜனுடைய நேசம் தங்களுக்கிருந்தாற் போதுமென்று அவனுடைய சேவகரா யிருக்கின்றார்கள். மேகவாகனனென்று ஒரு ராஜனுண்டு. அவனுக்குத் தலைமேலொரு இரத்தினமுண்டு. அதனாலவனுக்கு அற்புத மணியென்றும் பேருண்டாயிற்று. அவன் ஒப்பற்ற புஜபல முடையவன். காலயவன னென்றொருவன் யவன தேசமென்கிற துருக்கர் தேசத்திற்கு ராசனாயிருந்தான். அவன் மகாசூரன். மூரனென்று ஒரு அசுரனிருக்கிறான். அவனுடைய மாயைகளையும் தந்திரங்களையும் ஒருவரும் கண்டுபிடிக்கமாட்டார்கள். இந்த முரனைச் சேனாதிபதியாக வைத்துக்கொண் டிருக்கும் நரகாசுரனென் றொருவன் மேற்குச் சமுத்திர நடுவில் மாகிஷ்மதீ யென்கிற பட்டணத்திலிருக்கிறான். அவன் வெகு சூரனும் தீரனுமாய் அஸ்திரபலம், ஆயுதபலம், வரபலம், வாகனபலம் இவைகளுடையவன். வெகு கம்பீரன். அவனுடைய குமாரன் பகதத்தனென்பவன் தகப்பனுக்கு விசேஷப்பட்டவன். அவனும் மற்றனேகரும் மேற்சொல்லிய யாவரும் அந்த ஜராசந்தனை யடுத்துப் பிதாவினிடத்திற் புத்திரனெவ்வா றிருப்பானோ, குருவினிடத்திற் சிஷ்யனெவ்வா றிருப்பானோ, அரசனிடத்திற் சேவகனெவ்வா றிருப்பானோ அவ்வாறு மிகுந்த பயத்தோடும் அன்போடும் காத்திருக்கின்றார்கள்.

அன்றியும், பவுண்டரகனென்று மகா துஷ்டனொருவ னிருக்கிறான். அவன் என்னிடத்தில் மிகுந்த பொறாமை கொண்டு, என்னைப்போலே வாசுதேவனென்று பெயரை வகித்துத், தன் மாயாபலத்தினாலே நான்கு கைகளையு முடையவனாய் ஆகாசத்திற் பறக்கும்படியாகிய கருடனொன்று செய்வித்து, எஃகினாலே சக்கரம் முதலாகிய பஞ்சாயுதமு முண்டாக்கி, அவைகட்கு சுதரிசனம், பாஞ்சசன்னியம், கவுமோதகீ, நந்தகம், சார்ங்கம் என்கிற நாமங்களை யிட்டு அவைகளுடனே அந்தக் கருடன்மீதேறிச் சஞ்சரித்துக்கொண்டு இந்திர போகங்களை அனுபவித்து வருகிறான் அவனும் வெகு பலவான். அவனுடைய தம்பி இரிதியென்பவன் இருக்கிறான் வெகு பல பராக்கிரமசாலி என்னுடைய மாமனாராகிய வீஷ்மகனென்பவனும் அவன் மகன் உருக்குமி யென்பவனு மிருக்கிறார்கள். அவர்களுடைய சாமர்த்தியம் உமக்கே நன்றாய்த் தெரிந்ததல்லவா? அவ்விருவரும் அந்தப் பவுண்டக ரிருவரும் ஜராசந்தனுடனே மிகவும் நேசமாய்ச் சேர்ந்திருக்கிறார்கள். இவர்களெல்லாம் ஒரே குடும்பம்போற் சேர்ந்துக் கொண்டு ஒருவருக்கு நேரிடுகிற சுகதுக்கங்களை யாவரும் பங்கிட்டு அனுபவிக்கிறார்கள். என் மாமன் மைத்துன னென்னும் அவ்விருவரையும் நான் எவ்வளவு அனுசரித்து வந்தாலும் அவர்கள் அந்தப் பக்ஷத்திலேயே நேசமுடையவர்களன்றி என்னிடத்தில் எவ்வளவும் சேருகிறதில்லை. இப்படி மகா பலவான்களெல்லாம் அந்த ஜராசந்தனுடனே சேர்ந்திருக்கிறார்கள். இவ்வளவு பெருமை பெற்ற ஜராசந்தனுடைய உபத்திரவத்தைச் சகிக்க மாட்டாமல் வடதேசத் தரசர்களாகிய பதினெட்டு பூதரும், சூரசேன தேசத்தாரும், பத்திரமுகர் என்கிறவர்களும், சாளவதேசத்தாரும், படச்சரரென்பவரும், குளிர்ந்தரென்பவரும், குந்திதேசத்தரும், மச்சதேசத்தரும், தக்ஷிண பாஞ்சாலதேசத்தரும், மாளவதேசத்தரும் தேசங்களை விட்டு ஓடிப்போய்க் காடுகளில் ஒளித்துத்திரிகிறார்கள். இவர்களில் அனேகர் நம்முடைய த்வாரகா நகரத்திற்குச் சமீபத்தில், மேற் சமுத்திரக் கரைக் காடுகளில் வாசமா யிருக்கிறார்கள்.

அன்றியும் பாஞ்சாலரனேகர் அந்த மகத தேசாதிபதியாகிய ஜராசந்தனையே சேர்ந்திருக்கிறார்கள். எத்திரபாஞ்சாலர் அவனிடத்திற் பயத்தினாலே ஒடுங்கி யிருக்கிறார்கள். ஆகையாலே, இப்போதிருக்கிற ராஜாக்களிற் பலவான்களெல்லா மவனுக்கு மித்திரராகி, அவன் ஆக்கினையை அனுசரித்துக் கொண்டிருக்கிறார்கள். மற்றவரெல்லாம் ஓடி ஒளித்திருக்கிறார்கள். ஆனால், போஜவமிசத்தனாகியும் உமக்கு அம்மானாகியு மிராநின்ற புருஜித்து என்பவன் தென்னாட்டையும் மேனாட்டையும் பரிபாலனஞ் செய்து வருகிறான். அவனொருவன்மாத்திரம் உம்முடைய பக்ஷத்திற் சேர்ந்திருக்கிறான். இதையெல்லாம் யோசிக்கும்போது சகலமாகிய ராஜாக்களுக்கும் சிரோன்மணிபோல் மிக்கவும் சிரேஷ்டனாகிய மகாராஜன் ஜராசந்தனாகவே தோன்றுகிறது. அப்படிப்பட்டவனிருக்க உமக்கு இராஜசூய மெப்படி நடக்கும். அதுபற்றி

மற்ற ராஜாக்களுங்கூட சுவாதீனமாகமாட்
டார்கள். ஏனெனில், அவன் சகல ராஜாக்
களுக்கும்வேருயிருக்கிருன். இந்தச்சமயத்தில்
அற்பபல முடையவரும் அவன் பக்ஷத்தி
லேயே சேருவார்கள். ஆனல், உமக்கு வெகு
சம்பத்தும் சேனைகளும் சூரராகிய தம்பிமார்
களு மிருக்கின்ருர்கள். ஆகிலும் யாகத்தை
ஆரம்பித்தபின் கலகங்கள் எவ்வளவும் நடக்க
வொட்டாமல் ஜாக்கிரதை செய்யவேண்டியது
முக்கிய மாதலால் இப்போதே தகுந்த பத்தி
ரஞ் செய்துக்கொள்ள வேண்டும். அந்த ஜரா
சந்தனுடைய சவுரிய பராக்கிரமங்கள் ஒப்பற்
றிருக்கின்றன. அவைகளை நினைக்குந்தோறும்
என் மனம் நடுநடுங்கிப் போகிறது. அவ
னலே நான் பட்ட பாட்டைச் சொல்லுகிறேன்
கேளும்.

உக்கிரசேனனுடைய குமாரனுகிய கம்ச
னிருந்தானே அவனிந்த ஜராசந்தனுடைய
பெண்களிருவரைக் கலியாணஞ் செய்து, தன
க்கு மகாமேன்மைபொருந்திய மாமனிருக்கிரு
னென்று அதிக செறுக்கடைந்து தன் பிதா
வைக் காவலில் வைத்து, இராச்சியத்தைத்
தானே சுதந்திரமாய் ஆளவாரம்பித்துத்
தனக்கு விரோதிகளாகிய விருஷ்ணி, அந்த
கர், போசா, குளூரர், தாசார்கர், சாத்துவதர்,
மாதவக் முதலாகிய பந்துக்களையெல்லாம் மிக
வும் நிற்பந்தமாகிய ஸ்திதியில் வைத்துத்
தொந்தரவுசெய்து வந்தபடியினலே அவர்க
ளெல்லாம் இவன் கீழிருந்து தாவரிக்கமாட்டா
மலும், இவனைவெல்லமாட்டாமலும், இன்ன
விடமொன்றில்லாமல் தேசந் தேசமாய் ஓடி
யொளித்துக் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தார்
கள். தருமபுத்திரரே! அவனலே எங்கள்
மாதா பிதாக்கள் வருத்த மடைந்ததெல்லாம்
நீர் கேள்விப்பட் டிருப்பீரல்லவா? இப்படி
யாதவரெல்லாம் பட்ட பாடுகளையும், மற்றும்
வேதியர் முதலாகிய பேரெல்லாம் பட்டபாடு
களையும், நான் கண்டுங் கேட்டும் என்னைக் குறி
த்து அவன் செய்த வஞ்சனைகளை நினைத்தும்
ஆயச்சேரியைவிட்டு மதுரைக்கு வந்தபோது
அந்த கம்சனைக் கொன்றேன். என் தமையனு
ராகிய பலராமர் அவன் சகோதரனுகிய சுதர்
மாவைக் கொன்ருர். இவ்வாறு கம்சன் நாச
மடையும்போது அவனுடைய பெண்டிரிருவ
ரும் மாங்கலிய மிழந்த துக்கத்தினலே பிதாவி
னிடத்தில் வந்து மாரடித்துக்கொள்ள, அந்த
ஜராசந்தன் அதை நோக்கிச் சகிக்கமாட்டா
மற், கோபமும் விசனமும் கலந்த மனத்
தோடே கடல்பொங்கிவந்ததுபோ லிராநின்ற
சேனைகளைக் கூட்டிக்கொண்டு என்னேடே யுத்
தம் பண்ணவேண்டு மென்று மதுராபுரியை
வந்து சூழ்ந்துகொண்டான். அப்போது
நான் மந்திரி முதலானேருடனே ஆலோசித்
துப், பட்டணத்திற்குச் செய்யவேண்டிய பத்
திரத்தைச் செய்து பலராமருடனேயும் இன்
னுஞ் சில யாதவருடனேயும் வெளியிற் புறப்
பட்டு அந்த வீரனேடு யுத்தஞ் செய்ய வாரம்
பித்து, அவனுடைய சேனைகளை யெல்லாம்
சின்னபின்னமாக்கி நாசஞ் செய்தேன். அவன்
மறுபடியும் மிகுந்த சேனைகளைக் கூட்டிக்
கொண்டு யுத்தத்துக்கு வந்தான். அந்தச்
சேனையையும் நானும் பலராமருமாகத் துமி
சஞ் செய்துவிட்டோம். இவ்வாறு நாங்கள்
சேனைகளை அழிக்க அழிக்க, அவன் மீண்டு
மீண்டும் சேனைகளைக் கூட்டிக்கொண்டு வந்து
சண்டைசெய்ய வாரம்பித்தான்.

இப்படி பதினெட்டுத்தரம் அவனுக்கும்
எங்களுக்கும் மகத்தான யுத்தம் நடந்து,
அதில் அவனுடைய சேனைகளெல்லாம் பாழா
கிப் போய், அவனும் பல தடவையில் பங்க
மடைந்தான். அவனுடைய சினேகிதரில்
அநேகர் தனித்தனியே சேனைகளைக் கூட்டிக்
கொண்டு என்னேடே யுத்தத்திற்கு வந்தார்
கள். அவர்களிற் காலயவன னென்பவனைத்
தந்திரமாய்ச் சங்கரித்தேன். சிநேகிதரையும்
அப்படியே நாசஞ்செய்தேன். இந்த யுத்தங்க
ளெல்லாம் அஹங்கார மில்லாமலும் நித்தி
ரை யில்லாமலும் இராப்பகல் ஓய்வில்லாமல்
மூன்றுவருஷகாலம் நடந்தன. இந்த மூன்று
வருஷங்களும் நாங்கள் பெரும்பாலும் நக
ரத்திற்குப் புறத்திலேயேயிருந்து கஷ்டப்பட்
டோம். பின்பு இனி யுத்தமில்லை யென்று
கொஞ்சம் தைரியத்துடனே நகரியிற் சென்று
சுகமா யிளைப்பாற்றிக்கொண்டிருக்கையில் எங்
களை ஜயிக்கவேண்டிய காரியத்திலே நிராசை
யடைந்து பட்டணம்போய்ச் சேர்ந்து இளைப்
பாற்றிக்கொண்டிருந்த ஜராசந்தனை அவனு
டைய மகளிருவரும் மறுபடியும் என்னேடே
யுத்தஞ் செய்யும்படி தூண்டவே, அவர்கள்
பேச்சைக் கேட்டு ஜராசந்தன் யுத்தத்திற்கா
கச் சேனைகளைக் கூட்டுகிருனென்கிற செய்தி
சாரணராலே நானறிந்து, எத்தனை நாள் இவ
னேடே போராடுகிறது பொழுது விடிந்தால்
சண்டையே தொழிலாயிற்றே, என்ன செய்

வோமென்று விசனமடைந்துசிந்தித்து இனி இந்தப் பட்டணத்தி லிருந்தால் அவன் நம்மைப் பிழைக்கவொட்டா னென்று விசுவகர்மாவைக்கொண்டு மேற்குச் சமுத்திர நடுவில் ஒரு பட்டண முண்டாக்கிக்கொண்டு, ஒருவருக்குந் தெரியாமல் என் பந்துக்கள் யாவரையும் அதிற் பிரவேசிப்பித்து, மதுரையில் மனம் வெறுத்து நானும் அவ்விடத்திற் போய் வாசஞ் செய்கிறேன் இப்படி நடுச்சமுத்திரத்திற் சென்றும் அவனுடைய பயத்தினுலே மூன்று யோசனை யளவால் ஒரு அரண்மனை கட்டி, அதற்கு ஒரே வாசல் வைத்து, அம்மனைக்குப் பதினெட்டு இடங்களில் தகுந்த காவல்களை யேற்படுத்தி, மகா சூரர்களாகிய யாதவர்களைச் சுற்றிலும் வாசஞ் செய்யும்படி செய்வித்து, மகா பல பராக்கிரம சாலிகளாகிய உக்கிரசேனன் புத்திரர்கள் நூற்றுவரையும் நடுவில் ஸ்தாபித்து சத்தியபாமா குமாரனுகிய சாருதேஷ்ணியன் முதலானோரையும் ஓரிடத்தில் ஏமாறுமலிருக்கச் செய்து, சாத்துவிகி-கிருதவர்மா - அனுதிருஷ்டி - சோமன்-சமீதி-சயந்தன் - பிரத்தியும்னன் - அநிருத்தன் - பானு-அக்குரூரன் - சாரணன் - நிசடன் - சாம்பன்-இவாக ளுடனேயும், விகத்துரு - உத்தவன்-சல்லி - விரேதன்-வசுதேவன்-உக்கிரசேனன்-பிரசேனன் என்கிற மகா மந்திரிகளுடனேயும், நானும் பலபத்திரருமாய் எப்பொழுதும் காவற்காரர்போற் காத்திருக்கிறேம் அன்றியும் சங்கடங்கள் நேரிட்டால் மகா பலசாலிகளாகிய நீங்க ளிருக்கிறீர்களே, சமயத்திற் கை கொடுத்துக் காப்பாற்றுவீர்க ளென்கிற தைரியமு மடைந்திருக்கிறேம். ஓ தருமராசனே! அந்தமகததேச ராசனுடைய சுருபத்தை நன்றாயறிந்து குட்டுப்பட்டிருக்கிறவ னுகையாலே சொன்னேன். இதைச் சொல்லி உம்மைப் பயமுறுத்துகிறே னென்று நினைக்க வேண்டாம் அவ னிருக்கும்போது யாகம் ஆரம்பித்தால் இடையூறின்றி எவ்வளவும் நிறைவேறமாட்டாதென்று சொல்லுகிறேனே தவிர வேறில்லை உமக்கு மகா சூரராகிய தம்பிமாரிருக்கிறுர்கள் இந்தசமயத்தில் உங்களாலே யாவது அந்தச் சத்துருவினுடைய பயத்தினின்றும் விடுபட்டுச் சுகப்படலா மென்று நினைக்கிறேன் எது எப்படியாவது ஆகட்டும் அவனை உயிரோடுவைத்து இராஜசூயம்ஆரம்பஞ் செய்வது நன்மையன்று. நீர் எனக்கு ஆப்த ராகையினுலேயும் என்னை முக்கியமாய் நாடிக் கேட்டபடியினுலேயும், எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொன்னேன் என்று சொல்லி, க்ஷணகாலம்யோசித்துத்தருமராஜனை நோக்கி மறுபடியும் சொல்ல ஆரம்பித்தார்.

ஓ தருமராசனே! இவ்வாறு மிகப் பெருமைபெற்று விளங்காநின்ற ஜராசந்த னிருக்கையில், யாகம் எவ்வளவும் நிறைவேற மாட்டாதென்று தோற்றுகிறது. ஏனென்றுல், நம்முடையவர்களிலேயே வீஷ்மர் - துரோணர்-கிருபர் - அசுவத்தாமா - துரியோதனன் - கர்னன் முதலிய வீர ரிருக்கிறுர்கள். மேலும், ஏகலைவன் - சகுனி - சிசுபாலன் - வீஷ்மகன்-உருக்குமி முதலாகிய பேர்களு மிருக்கிறுர்கள். இவர்களையெல்லாம் ஜயிக்காமல், யாகம் ஆரம்பிக்கதகுமோ? ஒருவேளை வீஷ்மர்-துரோணர்-கிருபர் - அசுவத்தாமா இவர்கள் உம்மிடத்தில் தயையினுலேயும், பக்ஷபாதத்தினுலேயும் சும்மா விருந்தாலும், கர்னனும் துரியோதனனும் சும்மா விருப்பார்களா? அவசியமாய் யுத்தத்திற்கு வருவார்கள். அப்போது யாகத்திற்கு இடையூறு நேரிடாமற்போகுமோ அந்தக் கர்னனென்ன எளிதில் வெல்லக்கூடுமானவனு? மகா பராக்கிரமசாலியும் அஸ்திர பலசாலியுமல்லவோ? இவ்வாறு பூமியில் மகா வீரர்களுடைய பலமிருக்க, எவ்வளவும் ஆலோசிக்காமல் யாகத்தைத் துவக்கலாகாது. எல்லா வரசர்களையும் வெல்வதற்குமுன், ஜராசந்தனை வெல்லவேண்டும். இன்னும் அவன் செய்கையைச் சொல்லுகிறேன்கேளும் அவன் பூமியில் வெகு தூரம் ஜய யாத்திரையாகப் போய் வெகு ராசாக்களைத் தனது புஜபலத்தினுலே ஜயித்துப் பிடித்துக் கொண்டுவந்து, தனது நகருக்கு மதில்போல்நின்றமலையிலோர் புறத்துக்குக் கையில் சிறை வைத்திருக்கிறுன். இனி அவர்களையெல்லாம் சிரச்சேதஞ்செய்து பலியாக்கி, ஒரு யாகஞ்செய்ய எத்தினட்பட்டிருக்கிறுன். அதுசெய்தால் அவனைவெல்வது தேவர்களுக்கும் அசாத்தியமாகும். ஆதலால், அவன் அப்படி செய்வதற்குமுன் அவனேடு சண்டை செய்து அவனைக்கொன்று சிறையில் வைக்கப்பட்ட அரசர்களை விடுவித்தால் அவர்களெல்லாம் நமக்கு இயல்பாகவே வணங்கி வேண்டிய ஒத்தாசை செய்வார்கள். மகா புண்ணியமும் சித்திக்கும். அப்பால் மற்ற மன்னர்களைக் கொஞ்சம் எளிதில் ஜெயிக்கலாம். இப்படிக்கு யாவரையும் கீழ்ப்படுத்தினுல்தான் உமது கருத்திற் குடிகொண் டிருக்கிற யாகத்தைச் செய்யலாம். இல்லாவிட்டாற் செய்யக்

கூடாது. இதுதான் எனக்குத் தோற்றுகிற அபிப்பிராயம் உமக்கு எப்படிதோற்றுகிறதோ தெரியாது. இனி உமது மனதின்படி எனக்கு இடுங் கட்டளையைச் செலுத்தக் கார்த்திருக்கிறேன் என்று பேசி முடித்தார்.

இவை யனைத்தையுங்கேட்ட தருமராசன் கண்ணனை நோக்கி ஒரு வார்த்தை சொல்ல ஆரம்பித்தார்; ஓ கிருஷ்ண! இப்போது நீர் சொன்ன வார்த்தை மிகவும் நியாயமானதாயும் இதமானதாயு மிருக்கிறது. அதனாலே அதிகமாகச் சந்தோஷப்படுகிறேன் மகா புத்திமானாகிய உம்மைத்தவிர, யார்தான் இப்படி பேசத் தகுந்தவ ரிருக்கிறார்கள். ஆனபடியினாலேதான் இந்தச் சங்கதியை உம்முடனே யோசிக்கவேண்டு மென்று நான் நினைத்தது. லோகத்திலே வெகு ராசாக்க ளிருக்கின்றார்கள் அவர்களில் ஒவ்வொருவரும் சம்ராட் என்கிற பேரை யடையவேண்டுமென்றுதான் நினைத்திருப்பார்கள். ஆனால் அது அசாத்யமென்று விட்டிருப்பார்களே யல்லது ஆசையில்லாமையாலேவிட்டிருக்கமாட்டார்கள். இப்படியிருக்க, நாம் மாத்திரம் எப்படி துணிவாய் அப் பெயரைச் சம்பாதிக்க யத்தனப்படலாம். நீர் சொல்லுகிறபடி பலத்தினாலேயும் குணத்தினாலேயும் விவேகத்தினாலேயும் ஒழுக்கத்தினாலேயும் யாவன் ராசாக்களையும் உலகத்தாரையும் சுவாதீனப்படுத்துகிறவனோ அவன்தான் அப்படி யாவதற்கு யோக்கியன். முற்காலத்திலும் இப்படிப்பட்ட சீர்மையுள்ள ஐந்தாறு பேர்கள்தான் இராஜசூய யாகஞ்செய்து, சம்ராட் என்கிற பெயரை வகித்தவர்கள். அவர்கள் யாரென்றால், மாந்தாதா என்கிற மகா ராஜனொருவ னிருந்தானன்றோ? அவன் மகா பலசாலி குணசாலி உலகமெங்கும் பரவிய புகழுடையவன் அவன் தன்சாமர்த்தியத்தினாலே யாவரையும் கீழ்ப்படுத்தி அவர்களிடத்தில் வருடந்தோறும் கப்பம் வாங்கி வந்தான். அந்தப்படியே யாவரும் கப்பங்கட்டி வருகையிற், சில நாட்கள் கழித்தபின்னர் அந்த மாந்தாதா அரசர்களைப் பார்த்து, இனி நீங்கள் எனக்குக் கப்பங்கட்ட வேண்டுவதில்லை. அந்தப் பொருள்களை யெல்லாம் நீங்களே வைத்துக்கொள்ளுங்கள் நான் மிகுந்த சந்தோஷமாகச் சம்மதிக்கிறேனென்று சொல்ல, அதைக் கேட்ட அந்த அரசர்களெல்லாம் இந்த மாந்தாதாவின் உதார கம்பீர குணங்களுக்குச் சந்தோஷித்து வலுவில் ஒருநாள் அவனை நோக்கி, ஓ மகாராஜனே! நீர் மகா குணசாலியாதலால், அரசர்க ளெல்லாரிலும் மேன்மையாகச் சம்ராட்டென்னும் பட்டத்தை யாளத் தகுந்தவரா யிருக்கிறீர். ஆதலால், நீர் இராஜசூயயாகஞ் செய்ய ஆரம்பம் பண்ணும். நாங்களெல்லாம் ஓரிடையூறுமின்றி நடத்துகிறோமென்று சொன்னார்கள். அப்படியே குடிகளும் அவனுடைய ஆளுகையின் சீர்மைக்குச் சந்தோஷித்து இராஜசூயஞ் செய்யச்சொல்லி வேண்டிக்கொண்டார்கள்.

இவ்விதமாக யாவரும் அன்புவைத்து நடத்த, அந்த வேந்தன் யாகத்தை நிறைவேற்றிச் சம்ராட் என்கிற பெயரை வகித்து விளங்கினான். கார்த்தவீரியார்ச்சுனனென்று ஒரு மகாராஜ னிருந்தானே, அவன் ஒப்பற்ற சாமர்த்திய முடையவுன் தத்தாத்திரேயரென்கிற மகா யோகியை நெடுநாள் பூசித்து, அவருடைய அனுக்கிரகத்தினாலே மகா பல பராக்கிரமங்களை யடைந்து, பூமண்டல மெல்லாம் ஜெயங்கொண்டு தனக்கெதிரில் ஒருவனும் வில்லெடுக்காம லிருக்கும்படி செய்து, அந்த மகா யாகத்தை. நிறைவேற்றிச் சாம்பிராச்சிய பட்டாபிஷேகம் பெற்று மேன்மை யடைந்தான். அப்படியே துச்சந்தனுடைய குமாரனாகிய ப்ரதமகாராஜனும் தன் தோள் வலிமையினாலும், புத்தியின் கூர்மையினாலும் யாவரையுங் கீழ்ப்படுத்திச் சாம்பிராச்சியம் பெற்றான். மருத்தனென்று ஒருராஜனிருந்தான். அவன் வெகு சிறந்தவன். அவன் செய்த யாகங்களுக்கும் அதுக்களில் கொடுத்த தட்சணைகளுக்கும் கணக்கில்லை. அவன் வெகு தருமகுணமுடையவன். ஆனபடியினாலே அவன் விவேகத்திற்காக அரசரெல்லாம் கீழ்ப்படிந்து வந்தார்கள். அதுபற்றி அவனும் அப்பெரிய வேள்வியை நிறைவேற்றிச் சம்ராட்டாக ஆனான் அரிச்சந்திரன் மகா சத்தியசந்தன் அவன் பெருமை யாவருக்குந் தெரிந்ததன்றோ? அவனொருவன் அச்சாம்பிராச்சிய மடைந்தவன். இப்படிக்கெல்லா மிருக்க, நமக்கு எந்த யோக்கியதை யிருக்கிறதென்று நாம் அந்தப் பெயருக்காசை படலாம்? ஆகிலும் இராஜாவாயிருப்பவன் மேன்மையாகிய காரியத்தைக்குறித்து முயலாமலிருக்கக் கூடாது. அப்படியிருந்தாற் சொல்லுகளினாலே தினந்தோறும் வள்ர்க்கப்படாத ஓர் புற்றைப்போ லழிந்து போவான் என்று சாஸ்திர மிருக்கிறபடியினாலே நான் அந்த விஷயமாக ஆப்தராயிருக்

கிற பேர்களுடன் யோசிக்கிறேனே யல்லது வேறில்லை யென்று தருமபுத்திரர் சொல்லிக் கொண்டிருக்கையில், வீமசேனன் ஒரு வார்த்தை சொல்லத் துவக்கினன்.

அண்ணா! ராஜசூயத்தைக் குறித்து நீர் மனதில் நினைத்து இப்போது அந்த நினைப்பை யொழிப்பது உம்மைப்போ லொத்த மகாராஜனுக்குத் தகுந்ததன்று உமக்கென்ன குறையிருக்கிறது மகாநுபாவனாகிய ஸ்ரீகிருஷ்ணன் நமக்குச் சகலவித சகாயமுஞ் செய்ய விருக்க, நானும் அருச்சுனனும் காலாலிட்ட கட்டளையைத் தலையாற் செய்யக் காத்திருக்க உமக்கெந்தக் காரியந்தான் முடியாது? ஜராசந்தனாகட்டும், இன்னும் அவனுக்கு மேற்பட்டவன்தானாகட்டும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய புத்தியின்படி நடந்தால் அவனைக் கொல்வது வருத்தமன்று. இப்போது நீர் அந்த ஜராசந்தனைக் கொன்று வரும்படி நியமித்தால், நானும், அருச்சுனனும், கிருஷ்ணனும்போய் ஒரு நொடியிற் கொன்று வருகிறோம். இதற்காக யோசிக்க வேண்டியதில்லை என்று சொல்லிக் கண்ணனை நோக்கி, ஓ கிருஷ்ணமூர்த்தி! எங்களண்ணனாகிய தருமபுத்திரர் இந்த யாகத்தைக் குறித்து ஏன் விசாரப்படுகிறார்? எங்களுடைய சகல பாரங்களையுந் தாங்கி ரட்சிக்கத் தக்க மகாநுபாவனாகிய நீரிருக்கையில் அவர் இவ்வாறு அதைரியங் கொள்ளலாகுமோ? உமது சகாயமிருக்கையில் ஜராசந்தனைக் கொல்ல வெங்களுக்குப் பிரயாசமோ? ஆதலால் வேண்டிய முயற்சிகள் செய்து யாகத்தை நிறைவேற்ற வேண்டியதே முக்கியமென்று சொன்னான். இப்படி வீமசேனன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் தருமராசனை நோக்கிச் சொல்லுகிறார்: ஓ உதிஷ்டிர மகாராசனே! லோகத்திலே ஒருவனுக்கு ஒரு பொருளில் அபேக்ஷை யிருந்தால் அந்த அபேக்ஷையின் வலிமையினாலே அந்தப் பொருளிலிருக்கும் குற்றத்தையும் குணத்தையும் கண்டறியமாட்டான். அப்படிக்கு நாமும் சாம்பிராச்சியத்தில் ஆசைகொண்டிருக்கிறோ மாதலால் எதிரிகளுடைய பலாபலம் தெரியாமல் துணிகிறதாய் யோசிக்கவேண்டாம். ஜராசந்தனுடையபலம் நமக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது. இன்னும் அவனுடைய கருத்தைச் சொல்லுகிறேன் கேளும்: தான் ஜயயாத்திரை போனபோது தன்னுடன் மகாவீரராகிய சிலர் எதிர்க்க, அவர்களை யெல்லாம் வில்லைப் பூமியிற்போட்டு ஓடிப்போகும்படி செய்து மடக்கிப் பிடித்து, அவர்களில் முன்னர் எண்பத்தாறு பேர்களையும் பின்னர் பதினாலு பேர்களையுங் கொணர்ந்து சிறைச்சாலையிற் போட்டிருக்கிறான். அப்படியே இன்னுஞ் சிலரைக்கொணர்ந்து அவர்களை யெல்லாந் தன் குலதேவதையாகிய ஜரையென்கிற பிசாசுக்குப் பலியிட்டு, வேண்டிய வரம் பெற்றுப் பின்பு ராஜசூயஞ் செய்து சம்ராட் ஆகவேண்டுமென்று நினைத்திருக்கிறான். அது அவனுக்கு எளிதிலேயே முடியும். ஆனபடியினாலேதான் இப்போது தனக்கு வேண்டிய பொருள் நிறைந்திருக்கச் சேயும், மகா பலவான்களாகிய இராஜாக்கள் சுவாதீனமா யிருக்கச்சேயும், அந்த காரியத்திற்கு யத்தினப்படவில்லை. ஆதலாலே, சாம்பிராச்சியம் பெறக் காத்திருக்கிற அந்த ஜராசந்தனை வீமசேனன் சொல்லுகிறபடி நாங்கள் மூன்றுபேரும் போய்க் கொன்று வருகிறோம். நீர் தயை செய்து கட்டளை யிடவேண்டும். நாமே அவனோ டெதிர்க்கப் பயந்தோமாகில் மற்றை யார்தான் எதிர்க்கப் போகிறார்கள்? எப்படியும் க்ஷத்திரியனா யிருப்பவனுக்குத் தைரியபலம் வேண்டுமன்றோ அதைக் கண்டு பகைவரோடு யுத்தத்திற்குப் போகுமளவில் ஜயம் நேரிட்டாலும் நன்மைதான் மரணம் நேரிட்டாலும் நன்மைதான் அதனால் இவ்வுலகிலும் புகழுண்டு மேலுலகிலும் கதியுண்டு அப்படிக்குச் செய்யாமல் அஞ்சிக்கொண்டிருந்தால் இங்கும் அபகீர்த்தி மறுமையிலும் நற்கதி கிடைக்காது. ஆதலால், எங்களை ஜராசந்தனோடு யுத்தத்திற்குப் போய்வரும்படி செலவு கொடுக்க வேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லியதைக் கேட்ட தருமராஜன் அவரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

ஓ ஸ்ரீகிருஷ்ணா! நான் மூடத்தனத்தாலே காரியத்திலிருக்கும் குணதோஷங்களை யோசிக்காமல் சம்ராட் என்னும் விருதை அடைய ஆசைப்பட்டாலும் நீர் அதைக் குறித்துச் சம்மதிப்படாம லிருக்க, உங்களை எப்படி நான் யுத்தத்திற்கு அனுப்பத் துணிவேன் எனக்கு வீமனும் அர்ச்சுனனும் கண்களானபடியினாலும், நீர் மனம் ஆனபடியினாலும், கண்களையும் மனத்தையும்விட்டு நானெப்படி இருப்பேன். ஓ கண்ணனே! நீர் ஜராசந்தனுடைய சரித்திரத்தையும் சொல்லக் கேட்கும்போதே மனது நடுநடுங்குகின்றது. அப்

படியிருக்க, அந்த மிருத்துவினிடத்திற்கு உங்களைப் போங்களென்று சொல்ல என் மனஞ் சம்மதப்படுமோ? அல்லது துணிந்து போகச் சொன்னாலும் அந்தச் சூரனோடு சண்டை செய்வதில் உங்களுக்கு மிகுந்த ஆயாசங் கிடைக்குமென்று தோற்றுகிறது. ஆயாசந் தான் கிடைத்தாலும் அவனைக் கொன்று வருவீர்களென்று எவ்வளவும் நான் நம்பவில்லை. ஆகையால், இப்படிப்பட்ட சாகச காரியத்திலே உங்களை நான் ஏவமாட்டேன். இப்போது ஒரு பேச்சைச் சொல்லுகிறேன் கேளுங்கள்: இதுமுதல் இராஜசூயமென்கிற நினைப்பை இழந்து இத்தனை நாள்போலச் சும்மா யிருந்தோமேயானால், மனதிற்கும் வருத்தமில்லை. தேகத்திற்கும் உபாதியில்லை. வாழ்வுக்கும் குறைவில்லை. அப்படி செய்யாமல் வீணாய் அதை நினைத்துக்கொண் டிருப்பதில் நம்மாலது முடியமாட்டாதாகையால் விருதாவாய் மனதிற்கொரு துக்கம் வளர்ந்து கொண்டே வரும். ஆனபடியினாலே சும்மா விருப்பதே நல்ல காரியமென்று எனக்குத் தோற்றுகிறது என்று சொல்லக்கேட்ட அர்ச்சுனன் இதனைச் சொல்லுகிறான்:

ஓ மகாராஜனே! இப்போது நீர் பேசிய பேச்செல்லாம் உயர்ந்த குலத்திற் பிறந்து, சகலமுமறிந்து மகா பலசாலியாகவு மிருப்பவனுக்குத் தக்கதன்று. அப்படி யிருக்க, உமக்கேது இவ்வளவு தைரியமாகிய பேச்சுண்டாயிற்று. உமக்கென்ன குறைவு. காண்டீபமென்னும் வில்லேந்தி அக்ஷயமாகிய தூணீரங்களை தோளிற்றாங்கி ஒருவராலும் வெல்லப்படாத குதிரைகள் சத்துருக்கள் மனமுடைந்து போகும்படி நடனஞ்செய்ய வானரத் துவசமும் கட்டி விளங்காநின்ற தேர்மேலேறிச் சகல புவன கர்த்தாவாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய சகாயத்தைப் பெற்று யாவரையும் வெல்லும்படியாக வல்லபத்தோடு விளங்காநின்ற நான் உமது காலாலிடும் பணிவிடையை முடியாற் செய்யக் காத்திருக்கிறேன். இப்படி யிருக்கிறபடியினாலே இந்திர ராச்சியத்தை இப்போதே விரும்பினாலும் உமக்குக் கிடைக்கும்படியாய்க் கொடுக்க நானிருக்க, இராஜசூயத்தினால் ஆகவேண்டிய சாம்பிராச்சியந்தானோ கிடையாது. இதை யோசிக்காமல் என்ன பேச்சைச்சொன்னீர். அண்ணேன்! உலகத்திலே பலசாலியாக ஒருவனும் தருமசாலியாக ஒருவனுமிருந்தால் அவ்விருவருக்குள் பலசாலியே சிறந்தவன். ஏனென்னில், பலசாலியாயிருப்பவன் சகல சத்துருக்களையும் செயித்துப் பெருஞ் செல்வம் பெறுவன். செல்வம் பெற்றவன் சகல தருமங்களும் தனக்குத் தானே கிடைக்கும் அப்படியல்லாமல் தருமங்களைமாத்திரம் அனுட்டித்து வருபவனுக்கு ஒரு காரியமுங் கூடிவரமாட்டாது. ஏனென்றால், பலமில்லாமையினாலே எதிலே பிரவேசிப்பதற்கும் அச்சமுண்டா யிருக்கும் பிரவேசித்தாலும் பல இடையூறுகள் சம்பவிக்கும். ஆதலாற் குண தோஷங்களையும் தருமா தருமங்களையும் விசாரிப்பதைப் பார்க்கிலும் துணிவுடனே சவுரியத்தைச் செலுத்துவதே நன்மை அப்படி செய்தால் எல்லாக் காரியங்களும் கூடிவரும் இல்லையென்றஞ்சினால் தொட்டவிட மெல்லாந் தொந்தரவுதான் வரும். ஆனதுபற்றி இப்போது ஒரு யோசனையுஞ் செய்யாமல் ஜராசந்தனை எதிர்த்து யுத்தஞ்செய்து கொல்வதே உத்தமமான காரியம். ஜயத்திற்குக்காரணம் சவுரியமேயல்லது மற்றொன்றுமன்று. க்ஷத்திரியனுக்கு அச்சமென்பது பெருங்குற்றமல்லவோ? பலசாலியினிடத்து வணங்கி நடக்க வொண்ணாது. ஆனபடியினாலே, நாமிப்போது ஜராசந்தனையெதிர்த்து சம்மாரஞ் செய்து, அவனாற் சிறை வைக்கப்பட்ட ராஜாக்களை யெல்லாம் விடுவித்து ராஜசூயயாகம் ஆரம்பித்துச் செல்வத்தையும் பெருமையையும் கீர்த்தியையும் பெறவேண்டுமே யல்லது சும்மாவிருப்பது நல்லதன்று. (காற்றுள்ளபோது தூற்றிக் கொள்) என்கிறபடியே நமக்குச் சகல பலங்களும்அமைந்திருக்கிறபோது பெருமையைக் குறித்து முயலாமல் அஞ்சியிருக்கலாமோ இருக்கக்கூடாதே. ஆகையினாலே நானும், வீமசேனனும், கிருஷ்ணருமாகிய நாங்கள் மூன்றுபேரும் ஜராசந்தனுடைய சம்மாரத்துக்காகப் போகும்படி அனுக்கிரகத்துடனே கட்டளையிட்டு அனுப்பவேண்டும் என்று அர்ச்சுனன் சொல்லி நிறுத்தியபின்பு கிருஷ்ணபகவான் சொல்லுகிறார்:

ஓ மகாராஜனே! இப்போது அர்ச்சுனன் சொல்லிய வார்த்தை மிகவும் நன்றாயிருக்கிறது. எப்படியெனில், பரதவமிச திலகராகிய உமக்கு தம்பியாய் காண்டீபமென்னும் தனுசையும் என்றுங் குறையாத அம்புப் புட்டிலையும் வானரத்துவசத்தோடு கூடிய திவ்ய ரதத்தையு மடைந்து பரிவாரத்துடனே எதிர்த்து வந்த தேவேந்திரனை வெற்றிகொண்டு அக்

இனி பகவானுக்குக் காண்டவ வனத்தைக் கொடுத்துப் பசியாற்றிய திறமைக்கு தகுந்த தாகப்பேசினுன். அனுற் பராக்கிரமத்தையே விசேஷமாய் பேசிய தென்னவெனில், மனி தனுக்குப் பிறக்கும்போதே சாவும் வாழ்வும் நிச்சயமாயிருக்கிறது. அது இன்னகாலத்தில் வருமென்றும் யாவரும் அறியார்கள். எப் போதாகிலும் அவசியம் வரவேண்டியதாகிய அந்த மரணத்திற்கு அஞ்சி, மேன்மைக்குக் காரணமாகிய காரியங்களில் இறங்காம லிருக் கக் கூடாதென்கிற கருத்தைக்கொண்டு பேசி யிருக்கிறுன். ஆனுல், எங்கேயும் குணதோஷங் களை ஆராய்ந்தறியாமலே சத்துருக்களோடு சண்டைக்குப் போகலாமா வென்ருல் போகக் கூடாது நன்ருய் யோசித்துத் தகுந்தபடி உபா யத்தோடு போகவேண்டியதே முக்கியம் சாகச மாய்ச் செய்வதற் குற்றமுண்டு. அற்ப பல முடையவனும் உபாயத்தோடு எதிர்ப்பானே யானுற் பலசாலியாய் இருப்பவனைக் கூட வெல்லமாட்டுவான். அப்படியிருக்க, நாங்கள் உபாயத்தோடெதிர்த்து ஜராசந்தனைக் கொல் வதிற் சந்தேகப்படவேண்டாம் நீங்கள் பல சாலிகளாச்சுதே உங்கட்டும் உபாயந் தேட வேண்டுமோவெனில், எவனுக்கும் உபாயம் வெகு சகாயஞ் செய்யும் நகத்தாலே கிள்ளத் தகுந்ததைக் கோடாலியாலே வெட்டும்படி யாக்குவது மூடனுடைய செய்கையன்ருே? அதுபோல் உபாயமாய்ப்போனுல் ஜராசந்த னைக்கொல்வ தெளிதாயிருக்கும். உபாயமின் றிப் போவதில் என்னபயன். மேலும், சமான பலசாலிகளிருவர் ஒருத்தரோ டொருத்தர் சண்டை செய்தால் அவரில் ஒருவன் வெற்றி பெறுவனே யல்லது இருவரும் வெற்றிபெ றக் கூடாதல்லவா? ஆதலால் எவ்விதமாய் வெற்றி பெறலாமோ அவ்விதமாய்த் தன் குறைவுபாடுகளைச் சத்துருவுக்குத் தெரிவிக் காமலும், அவன் குறைவுபாடுகளைத் தான் நன்ருய் அறிந்தும், தந்திரமாகவே யுத்தஞ் செய்வது நன்று. அன்றியும், ஒரு காரியஞ் செய்யவேண்டியதாய் நிச்சயித்தால் அதை விரைவில் நடத்தவேண்டும் இல்லாவிட்டாற் பல விரோதங்கள் நேரிடும். (ஆலஸ்யம் அமிர்தம் விஷம்) என்பதுபோலாம். ஆகை யால் நாங்கள் மூவரும் சென்று அந்த வீரனை செயித்து வருகிறேம் நீர் மனதிற் கவலை வைக்காமல் விரைவில் விடைதர வேண்டு மென்று கிருஷ்ணன் சொல்லிய வார்த்தை யைக் கேட்டுத் தருமராஜன் வினவுகிருர்:

ஓ யதுகுல சிகாமணியே! இதுவரையில் அவனுடைய சவுரிய தைரிய முதலான குணங் களைப்பற்றி நாம் பேசிவருகிறேமே, அந்த ஜராசந்தன் யாருடைய குமாரன் எப்படிபிறந் தான், இப்படிப்பட்ட மேன்மை அவனுக்கு எப்படி கிடைத்தது அவனுடைய பராக்கிர மத்திற்கு யாவரும் அஞ்சும்படி இருப்பதற் குக் காரணமென்ன உம்முடைய பாக்கிரமாகிய தீயில் விளக்கில் விழும் விட்டிற் பூச்சிபோற் சாகாமல் அவன் உம்மிடத்திலும் தப்பித்துக் கொண்டு விளங்குகிறது வெகு ஆச்சரிய மன்ருே? ஆதலால், அனேக ராஜாக்களை வென்று சிறையில் வைத்து எல்லாவரசர்களி லும் மேலாய் விளங்கும்படியாகிய பல பராக் கிரமங்களுள்ள அந்த சராசந்தனுடைய சரித் திரத்தை நன்ருய்ச் சொல்லவேண்டு மென்று வினவிய தருமபூபதிக்கு கிருஷ்ணன் பதில் உத்தரஞ்சொல்ல ஆரம்பித்தவராய், கேளும் உதிஷ்டிர ராஜனே! மகததேசத்திற் பிரகத் திரதனென்று அழகு, செல்வம், கல்வி, வல்லமை முதலான நற்குணங்களுக்கு கட லாகிய ஓரரசனிருந்தான். அவன்காசிராஜாவி னுடைய இரட்டையாய்ப் பிறந்த இரண்டு பெண்களைக் கலியாணஞ் செய்து, அவர்கட் குத் தான் எந்த வஸ்துவைக் கொடுத்தாலும் என்ன லாடனை செய்தாலும் இருவருக்குஞ் சமமாகவே செய்வேனென்று பிரதிக்கினை செய்துகொடுத்து அவர்களுடனேகூடி வெகு போக பாக்கியங்களை யனுபவித்துக்கொண்டு, தயை தாக்ஷிணிய முதலாகிய நற்குணங்கள் பொருந்தி, நீதிவழுவாமற் செங்கோல் செலு த்தி வந்தான். அவனுக்கு நெடுங்காலம் வரையினுஞ் சந்ததி யுண்டாகாமற் போனபடி யினுலே சந்ததிக்காக வெகு தானங்கள், தரு மங்கள், யாகங்கள், தவங்கள் இவைகளைச் செய்தும் பிரயோசன மில்லாமற்போய்மிகுந்த விசனத்தை யடைந்து யாவையும் வெறுத்து இராச்சியத்தை மந்திரிகள் வசத்திலொப்பு வித்துத் தன் பெண்டீர்களுடனே வனவாசம் போனுன். அவனிடத்தில் வைத்திருந்த அன்பினுலே அநேகர் கூடப் போனுர்கள்.

இப்படி ராசன் வனத்திலிருக்கு மளவிற் கூடப்போன சனங்கள் ராசாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னுர்கள். ஓ பிருகத்திரத மகாராசனே! இவ்வனத்திற் கவுதமகுலத்திற் பிறந்தவராகிய் கக்ஷீவா னென்கிறவருடைய குமாரர், சண்ட கவுசிகரென்கிற மகாரிஷி

யொருவரிருக்கிறார் அவர் மகானுபாவர். அவருடைய ஆச்சிரமம் அருகிலிருக்கிறது நீர் இவ்வனத்தி லிருக்கிறவரைக்கும் தினந்தோறும் ஒருதரம் அவரிடத்திற் சென்று நமஸ்காரஞ் செய்து அநுவர்த்தி செய்துகொண்டிருந்தால் உமக்கு அவசியம் நன்மை கிடைக்கும் என்று சொல்லிய வசனத்தைக் கேட்ட அந்த ராஜன் இது நல்லதுதான் என்று நினைத்துத் தினந்தோறும் அந்த மகாமுனியை யடைந்து பூசித்துக்கொண்டு ஒருமாமரத்தின்கீழிருப்பான். இப்படியிருக்க, ஒருநாள் அந்த ரிஷியானவர் வந்து ராசாவைக் கண்டு ஓ ராஜனே! நீர் இவ்வனத்திற்கு வந்தகாரணமென்னவென்றுகேட்க, அந்த ராசன் சுவாமி! அதைச் சொல்லுவதிற் பயனில்லாமற் போனாலும் தேவரீர் கேட்கிறபடியினாலே சொல்லுகிறேன் எனக்கு ராச்சியத்தில் மந்திரி முதலிய பேர்களாலாவது, சத்துருக்களாலாவது ஒரு குறைவும் நேரிடவில்லை. மற்றின்னும் ஏதாவதாகிய துன்பமும் நேரிடவில்லையானாலும் நானே இராச்சிய முதலானதுகளை வெறுத்து வனவாசமும் வந்துவிட்டேன். ஏனெனில்,யௌவனமெல்லாங்கழிந்து மூப்பு வந்து மூடிக்கொண்டது. இதுவரையிலும் சந்ததி யுண்டாகாமையாலும், இனி யுண்டாக மாட்டாதாகையாலும், நமக்கு மறுமையிலும் நற்கதியில்லை இம்மையில் இராச்சியமுதலானவைகளினாலேதான் பயனென்ன வென்று வெறுப்புண்டாகி இனி வனத்துக்குப்போய்த் தவமுதலாகிய நற்காரியங்களைச் செய்தும், தேவரீரைப்போலொத்த பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தும் நற்கதியைப் பெறுவோமென்று இவ்விடம் வந்தேன்.

அப்படியே அடியேனுடைய பாக்கியத்தினாலே தேவரீருடைய பணிவிடையுங் கிடைத்தது. அதனாற் புனிதனானேன் என்று அரசன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட ரிஷியானவர் அவ்வரசனிடத்தில் மிகவுமிரங்கி, ஐயோ! இவன் பிள்ளையில்லாமல் மிகவும் விசனத்தை அனுபவிக்கிறான். இவன் கவலையைத் தீர்க்க வேண்டுமென்று நினைத்து, இவனிருக்கிற மாமரத்தின்கீழே உட்கார்ந்து சுவாமியைத் தியானித்துக்கொண்டிருக்கையில், அம்மரத்தினின்று ஒரு பழமானது அவர் மடியில் வீழ்ந்தது. பின்பு அந்தச் சண்ட கவுசிகமுனியானவர் அந்தப் பழத்தை யெடுத்து மகதராசன் கையிற் கொடுத்து, ஓ ராஜனே! உமது குறை நீங்கும்பொருட்டு சுவாமியே இந்தப்பழத்தை அனுக்கிரகஞ்செய்தார் இதை நீர் உமது பத்தினிக்குக் கொடும். நல்ல புத்திரன் பிறப்பான் சந்தேகப்படவேண்டாம் பழையபடி ராச்சியத்திற்குச் சென்று நீதிவழுவாமல் அரசாட்சி செய்யும் மனச்சந்துஷ்டியாய் உமது அரண்மனைக்குப் போமென்று ரிஷி சொல்லக்கேட்டு மகதராசன் வெகு சந்தோஷ மடைந்து, அம்முனிவரைப்போற்றி பணிந்து விடை பெற்றுத் தன் பெண்டீர்களுடனேயும், ராச்சியத்துச் சேனங்களுடனேயும் கிரிவீரசமென்கிற தன் பட்டணத்தையடைந்து, அந்த மாம்பழத்தைத் தான்முன் பிரதிக்கினை செய்தபடிக்குத் தன்னிரண்டு பாரியைகளுக்குஞ் சரியாய்ப் பகிர்ந்து கொடுத்தான். அவ்விருவருக்கும் தெய்வ சங்கற்பத்தினாலும், அம்முனிவருடைய தபோபலத்தினாலும், உடனே கருத்தரித்தார்கள். அப்போது தன் மனைவியைக் கண்ட அந்த மன்னவன், நமக்கு ரிஷி ஒரு புத்திரனுண்டாகும்படி அனுக்கிரகஞ் செய்து கொடுத்த ஒரு மாங்கனியை நமது புத்தியால் இருவருக்குங் கொடுக்க, இருவரும் கருத்தரித்தனரன்றோ? ஆதலால், நமக்கு இரண்டு புத்திரர் பிறப்பார்களோ யென்று வெகு சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கையில், அம்மாதரிருவரும் பிரசவித்தார்கள். அவ்விரண்டு பிரசவங்களையும் பார்க்கும்போது ஒரு தேகத்தை நீட்டத்திற் பாதியாகப் பிறந்ததுபோல் ஒவ்வொரு கால், ஒவ்வொரு கை, ஒவ்வொரு காது இப்படிக்கு ஒரு பாரிசமாத்திரமே யுடையவைகளாய்ப் பிரேத சரீரங்களாகக் காணப்பட்டன.



அதுகண்டு அந்தப்புரத்தி லிருப்பவர்கள் மிகுந்த விசனமடைந்து, ஒருவரோடொருவர் பேசவுங்கூட அசக்கிய முடையவர்களாகிச் சும்மாவிருக்க, அந்த ராஜஸ்திரீகளிருவரும் ஐயோ! என்ன பாவஞ் செய்தோம் நமக்கு சுபாவத்திற் பிள்ளையில்லாமற் போனதினாலே எல்லாவற்றையும் வெறுத்துக் காட்டுக்குப் போகியும் அங்கே வலுவில் ஒரு முனியநுக்கிரகஞ் செய்தும், கைக்கெட்டின சோறு வாய்க் கெட்டாமற் போச்சுது என்கிறதுபோற் கடைசியில் நமது துர்ப்பாக்கியத்தினால் இப்படியாச்சுதே (சங்கட்டம்பிடித்தவள் சந்தைக்குப்போனாலும், அங்கட்டு மவளுக்கு அகமுடையான் கிடையான்) என்பதுபோல் நமக்குப் பெரியவர் அனுக்கிரகஞ் செய்தும் வீணாய்ப் போய்விட்டது. இனி நாம் பூமியி லெப்படி

பிருக்கலாமென்று மிகுந்த துக்கத்தோடும்
வெட்கத்தோடும் புலம்பிக்கொண் டிருக்க,
தாதிமார்கள் அவ்விரண்டு உடற்பாதிகளையுங்
கொண்டுபோய் ஓர் வீதியின் பக்கத்துச் சந்தில்
எறிந்துவிட்டுப் பிள்ளை யெப்போது பிறக்கப்
போகிறதென்று மேகத்தைக் குறித்துச் சாதக
பட்சி காத்திருப்பதுபோல் வாயைத் திறந்து
கொண்டு காத்திருக்கும் அரசனுக்கு இச்
செய்தி தெரிவிக்க, அவ்வரசன் அது கேட்ட
வுடனே இடியோசைக்கேட்ட அன்னம்போல்
உறங்கித் தலையை தொங்கவிட்டுக்கொண்டு,
ஒன்றுந் தோற்றாமற் கைகால்க ளெல்லாந்
தளர்ந்து சோர இருந்தவிடத்தே யழுந்தி,
ஐயையோ! இதென்ன பிள்ளையார் பிடிக்கக்
குரங்காய் முடிந்தது? இரண்டு பிள்ளைகட்
காசைப்பட்ட நமக்கு ஒரு பிள்ளை பிறப்பதும்
போயிற்றே, கோடையில் வறண்டு போகா
னின்ற பயிருக்குத் தற்செயலாய் ஒரு மேகம்
வந்து மழை பொழிந்து தரிக்கச் செய்தது
போல் புத்திரனில்லாமல் துக்கித்துக்கொண்
டிருந்த நமக்கு ஒரு மகாமுனிவர் தெய்வச்
செயலால் வந்து அனுக்கிரகஞ் செய்தாரே,
இனி நமக்குக் குறைவில்லை நல்ல சந்தான
மூண்டாகி வாழ்வோமென் றெண்ணியிருந்
தேனே சாயுங்காலத்திற் குவியா நின்ற தாம
ரைப்பூவி லகப்பட்ட வண்டானது இன்னுஞ்
சில நேரத்தில் இராத்திரியைப் போக்கிப்
பொழுது விடிந்து சூரியன் புறப்பட்டு இத்
தாமரை முன்போல் மலரப்போகிறது. அப்
போது நாம் இதினின்றும் வெளிப்புறப்பட்டு
மலர்த் தேன்களை யுண்டு களிக்கப் போகிறோ
மென்று எண்ணிக்கொண் டிருக்க, அத்தாம
ரையை ஒரு காட்டானை வந்து பிடுங்கிக் காலால்
துவைத்தெறிந்த கதைபோல் முடிந்ததே,
என்று விசனப்பட்டுக்கொண் டிருந்தான்.

இப்படி நடந்த செய்திகள் இவர்களைத்
தவிர பட்டணத்தி லிருக்கும் மற்றொருவருக்
குந் தெரியாது. இஃதிப்படி யிருக்க, அந்தப்
பட்டணத்தை நெடுநாளாய்க் காத்துவரும்
ஜரை என்னும் பிசாசதேவதையானது இராக்
காலமாதலால் தன் பட்டணத்தைச்சுற்றி வீதி
களிற் சஞ்சரிக்கும்போது ஓர் புறத்திற் கிடக்
கும் அந்தச் சிசுவின் உடற்பாதிகளைக் கண்டு,
இதென்னமோ மாமிசம்போற் காணுகிறதால்
இதைப் புசிப்போமென்று அதன் அருகிற்
சென்று அவ்வுருக்களை யெடுத்துப் பார்த்து,
ஓ! ஓ! இதென்ன ஆச்சரியம்? ஒரு சிசுவின்
தேகமிரண்டு பிளப்பாய்க் கிடக்கிறது. ஆகி
லும் உயிரோடிருக்கிறது இந்தத் தேஜசையும்
வடிவையும் பார்த்தால் மகா புருஷனென்று
தோற்றுகிறது. ஆனால், இனி நமது நகரத்
தின் ராசனுக்குண்டான பிண்டங்களென்றறிந்
துக்கொண்டு, தெய்வச் செயலாய் அதைப்
புசிக்க நினையாமல் இரண்டு பாதிகளையும்
ஒன்றாய்க்கூட்ட, அவ்விரண்டு பாதிகளும்
ஒன்றாயிசைந்து நன்றாயசைந்து மகா சுந்தர
மாய் விளங்காநின்ற அந்தக் குழந்தை தனது
காற் பெருவிரலை வாயில் வைத்துக்கொண்டு,
மேகத் தொனிபோற் கனத்தகுரல் விட்டழ,
அதுகண்டு ஜனங்கள் இதென்ன பாதிராத்
திரியிற் குழந்தைக் குரல்போல் ஒரு உரத்த
அழுகைக்குரல் கேட்கிறது? இதெங்கேயோ
தெரியவில்லை யென்று பரபரப்புடனே குரல்
கேட்டதிசை நோக்கி வரக்கண்டு அந்த ஜரை
யானவள் அந்தக் குழந்தையைக் கையிலெடுத்
துக்கொண்டு மனுஷிய ஸ்திரீ ரூபமாகி, ராச
னிடத்திற்கு வந்து புத்திரசோகத்தினாலே
நித்திரையில்லாமல் விசனப்பட்டுத் தனித்
திரானின்ற ராசாவைப்பார்த்து, ஓய் மகாராச
னே! நீர் இப்போது சோகப்படுகிற காரணந்
தெரியும். அதை தீர்க்கும்பொருட்டு இந்தக்
குழந்தையைக் கொணர்ந்தேன் நீர் இருடி
சொல்லிய வாக்குக்கு விரோதமாய் அந்த மாங்
கனியை இரண்டாகப் பகிர்ந்து கொடுத்தபடி
யினாலே, இரண்டு கர்ப்பங்களி லிரண்டு பால
கர்கள் பிறந்தார்கள். அவைகளை வீதியில்
எறிந்திருக்க நான் கண்டெடுத்து உம்மிடத்
தில் வைத்த தயையினால் ஒன்றாகக் கூட்டி
னேன். கூட்டவே அது தெய்வசங்கற்பத்தி
னாலும், ரிஷியின் அனுக்கிரக பலத்தினாலும்,
பிழைத்து விளங்கிற்று. இது உமது குழந்தை
தான். சந்தேகப்படவேண்டாம் உமது கருத்
துக்கு மகிழ்வெய்த வாங்கிக்கொள்ளுமென்று
சொல்லக்கேட்டு அவ்வரசன் பாலை நிலத்தில்
அகப்பட்டுத் தவிக்கு மனிதன் மேகம் மழை
பொழியக்கண்டு களிப்பதுபோற் களிப்புற்று
மிகவுஞ் சுந்தரமாகிய வடிவுடன் விளங்கா
னின்ற அந்த ஜராதேவியைநோக்கி, அம்மே!
நீ தேவதாஸ்திரீயோ? நாககன்னிகையோ?
அசுரகன்னிகையோ? இயக்கர் குலமகளோ?
அல்லது என் பாக்கியமோ? நீயாரோ அறிகி
லேன். என் குழந்தையை பிழைப்பித்து வலு
வில் எனக்குத்தந்த மகா உதாரகுணம்பொருந்
திய உனக்கு நானென்ன கைம்மாறு செய்யப்
போகிறேன். நெடுநாள் மிகுந்த தரித்திரத்

தால் வருத்தப்பட்டுக்கொண்டு, வலுவில் ஒருவன் கொடுத்த பொருளையுங் கைசோரவிட்டுப் பலவிதத்தாலுந் துக்கங்கொண்டு வேதனைப்படும் ஓர் துர்ப்பாக்கியனுக்குத் தற்செயலாய்ப் பெருநிதியைக் கொணர்ந்துவந் தளித்தது போல் அளித்தாயே! இவ்வுபகாரத்திற்கு உன் பாதங்களைக் கும்பிடுவதைவிட, மற்றொன்றுஞ் செய்ய அடியேன் திறமுள்ளவனல்லேன். அடியேனிடத்திற் கிருபாகடாக்ஷம் வைத்து உன் வரலாற்றைச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க, ஜரையானவள், கேளாய் பருகத்திருதமகாராசனே! நான் உன் பட்டணத்துத் தேவதை ஜராதேவி என்னும் பெயரை யுடையவள். நீ என்னை வெகு சிறப்பாய் உற்சவாதி உபசாரங்களாலே நெடு நாளாய்ப் பூசித்துவந்தா யல்லவோ அதற்குப் பதிலுபகாரஞ் செய்யவேண்டுமென்று சமயம் யெதிர்பார்த்திருந்தேன் இன்றைக்கு அது வாய்த்தபடியினாலே இரண்டுபிளப்பாயிருந்த உன் புத்திரனை ஒன்றாக்கி உனக்குத் தந்தேன். ஆகையால், நீ சந்தோஷமாய்ப் புத்திரனை வைத்துக்கொண்டு வாழென்று சொல்லிப் பார்த்துக்கொண்டே யிருக்கையில் மறைந்து போய்விட்டாள்.

கேட்டீரோ உதிஷ்டிரமகாராஜனே! அந்தப் பிசாசுதேவதை மறைந்துபோன மாத்திரத்திலே அந்த மகததேசத்துராஜன் குழந்தையைச் சந்தோஷமாய் அந்தப்புரத்துக்கு எடுத்துக்கொண்டுபோய் இச்செய்தியை மனைவிகளுக்குத் தெரிவித்துத் தமது புரோகிதரையும் மற்று மனேகம் பிராமணர்களையு மழைப்பித்துப் பிள்ளைக்குஜாதகாதி கருமமும் ஜரையினால் கூட்டப்பட்டபடியால் சராசந்தனென்று நாமகரணமுஞ்செய்து அநேகமான கோதானம், பூதானம், அன்னதானம், வஸ்திரதானம் முதலாகிய பல தானங்கள் வழங்கி மந்திரி முதலான பேர்களுக்கு வெகுமதிகள் செய்து பின்பு அந்த சராதேவிக்குரிய ஆலய முதலாகிய திருப்பணிகளைச் சிறக்கச்செய்து அந்த அம்மைக்குப் பஞ்சாமிர்த அபிஷேகஞ் செய்வித்துத் திவ்ய வஸ்திராபரணங்களினாலேயும், கெந்தபுஷ்பங்களினாலேயும் அலங்காரஞ் செய்வித்துப் பலவகைப் பணியாரங்களையும் பழங்களையும் பாயச முதலாகியவைகளையும் நைவேத்தியஞ்செய்து நிருத்தகீத வாத்தியங்களினாலும் உபசரித்து, மிகவும் விசேஷமாய்த் திருவிழா நடத்தி இவ்வாறாகவே எக்காலமும் நித்தியோற்சவம் - பக்ஷோற்சவம் - மாதோற்சவம் - வருஷோற்சவ முதலியவைகள் நடக்கும்படி திட்டஞ் செய்தான். அந்த ஜராசந்தனும் நாளுக்கு நாள் ஒளியினாலும் பலத்தினாலும் புத்தியினாலும் சுக்லபக்ஷத்துச் சந்திரன்போல் வளர்ந்துவர, அதனாலே அவன் பிதாவாகிய மகதபதியானவன் அளவில்லாத ஆனந்தமடைந்து வாழுங்காலத்தில் ஒருநாள் அந்தச் சண்டகவுசிகரென்கிற மகா முனியானவர் தற்செயலாய் அந்த ராஜதானிக்கு வரக்கண்டு, அந்த ராஜன் வெகு பயபக்திகளுடனே பரிவாரங்களைக் கூட்டிக் கொண்டு எதிர்கொண்டுபோய்ச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, அவரால் ஆசீர்வதிக்கப்பட்டு அவரை யழைத்துவந்து ஆசனத்தில் உட்கார வைத்து, அர்க்கியபாத்திய முதலாகிய உபசாரங்கள் செய்து, ஓ ஸ்வாமி! ரிஷிகுல திலகரே! அடியேனுக்குக் குலதெய்வமாகிய தேவரீரை இப்போது தற்செயலாய்த் தரிசனஞ் செய்யும்படியாகிய புண்ணியத்தொழில் யாது செய்தேனோ அறிகிலேன் இன்றல்லவோ என் பிறவி பயன்பட்டது. தேவரீருக்குத் தவமுதலாகிய சகல தருமங்களும் இடையூறின்றி நிறைவேறி வருகின்றனவா? அச்சிரமங்களைத் துஷ்டர்கள் வந்து ஏதாகிலும் தொந்தரவு செய்யாமல் இருக்கிறார்களா? அடியேன் செய்த பாக்கியத்தினால் அடியேனைச் சக்குடும்பமாக அநுக்கிரகஞ்செய்யத் தேவரீர் எழுந்தருளியதன்றி இன்னும் ஏதாகிலும் அடியேனுக்குக் கட்டளையிட வேண்டியதற்காக எழுந்தருளியதானால் அதை அருளிச்செய்ய பிரார்த்திக்கின்றேன் என்று சொல்லிக் கைக்கூப்பி எதிரில் நின்றுகொண்டு தன் மனைவிகளையும் புத்திரனையும் அழைப்பித்து, அவர் பாதங்களைப் பணியச்செய்தான். அந்த மகா முனியானவர் தன் பாதங்களைத் தொழா நின்ற இராஜ ஸ்திரீகளுக்கும் இராஜ குமாரனுக்கும் ஆசிகள் கூறி, அந்த வேந்தனை நோக்கி, ஓய் மகாராஜனே! நீர் புத்திரனில்லாமல் விசனப்பட்டுக் கொண்டிருக்கக்கண்டு, இரக்கத்தினால் ஒரு பழத்தை அனுக்கிரகித்துத் தந்தேன். அதை நீர் அவிவேகத்தினாலே பகிர்ந்தளித்தீர். அதனாற் பிள்ளை இரண்டு பாதியாய்ப் பிறந்தது தெய்வாதீனமாய் அதுகள் ஜராதேவியாற் கூட்டப்பட்டுக் குமாரனாயினான். இதெல்லாம் நான் யோக திரிஷ்டியினாலே அறிந்தேன். எப்படியாகிலும் தெய்வ சங்கற்பத்தினால் உமக்குப் பிள்ளை

யுண்டானது பெரிய காரியம் இந்தக் குமாரன் மகாபல பராக்கிரமசாலியாகிய எல்லா மன்னவர்களின் முடியின்மீது விளங்குவன். சகல ராஜாக்களும் இவனை அநுசரித்து மேன்மை அடைவார்கள். இவன் அண்டினபேர்களுக்கு அடிமையாகியும், பகைத்தவர்களுக்கு மிருத்யுவாகியும் இருந்து, மிகுந்த செல்வத்தைப் பெற்று, வெகு தானதருமங்கள் செய்து மகா கீர்த்தி யடைவன். மேலும், அநேக ராஜாக்களை வென்று அநேக தேசங்களை கைவசப்படுத்தி, தருமநீதிகள் வழுவாமற் காத்துவருவன் இவனாலே உமது சந்ததியானது நீடித்து வாழும். மேகங்கள் எவ்வளவு மழைகளைப் பொழிந்தாலும் அதனால் மலைக்கு ஒருகுறைவுமில்லாததுபோல், மனிதர், தேவர், அசுரர் முதலியயாராகிலும் இவன்பேரில்ஆயுதமழை பொழிந்தாலும், இவனுக்கு ஒரு குறைவு வரவரமாட்டாது இவன் பாக்கியவான் தவஞ்செய்து சிவனருள்பெற்று வேண்டிய வரங்களுமடைவன். இன்னும் பேசப்பேச இவன் பெருமை விஸ்தாரமாயிருக்குமென்று சொல்லித், தாம் போகவேண்டிய விடத்துக்குப் போயினர். பின்பு ஜராசந்தன் அந்த ரிஷி சொல்லிய வாக்கின்படி சகல வித்தைகளுங் கற்று மகா விவேகியாகி, ஆயுதப் பயிற்சியிலு மொப்பற்றவனாகி, வெகு சவுரிய முடையவனாகி யாவருக்கும் மதிக்கத்தக்கவனாகிய காலத்தில், அவன் தந்தையானவன் கண்டு, அவனுக்கு யுவராச்சிய பட்டாபிஷேகஞ்செய்து, சகல ராஜ்ஜிய பாரங்களையும் அவன் தலைமேல் வைத்துத் தான் தவம் தேவபூஜை முதலாகிய சத்காரியங்களை செய்துகொண்டு சுகமாயிருந்து பின்னும் கொஞ்சகாலமான பின் தபோ வனத்துக்குப் போய்விட்டான். அந்த ஜராசந்தன் பட்டாபிஷேகமாகியபின் நெய்யினால் ஓமஞ் செய்ய அக்கினி எப்படி விளங்குமோ அப்படி மகாப் பிரகாசத்தோடு விளங்கித் தன் புஜபலத்தினாலும் சேனாபலத்தினாலும் எல்லா அரசர்களையுங் கைவசப்படுத்தி, மேன்மையுடனே ராஜ்யபரிபாலனஞ் செய்துவந்தான். பிருகத்திருதராஜன் தன் மனைவிகளுடனே இவ்வுலக வாழ்க்கையை விட்டுச் சுவர்க்கலோக வாழ்க்கைக்குப் போய் விட்டான்.

கேட்டீரோ தருமராஜனே! இவ்வாறு வெகு மகிமைகள் பெற்ற ஜராசந்தனைக்கண்ட பலவான்களாகிய ராஜாக்களெல்லாம் அவனோடு நேசித்து, அவன் சொற்படி நடந்துக் கொண்டு வருகிறார்கள். அவனுடைய நேசர்களாகிய ராஜாக்களுள், அம்சன்-டிபிகன் என்கிற இருவரையும் நான் வெகு தந்திரமாய் நாசஞ் செய்தேன். அப்படியே காலயவனனையும் மாளவைத்தேன். அவன் மருமகனாகிய கம்சனை நான் கொன்றதுமுதல் என்பேரிலவனுக்கு மிகுந்த பகையுண்டாகிப், பதினெட்டு தரம் யுத்தஞ்செய்து அவனுபத்திரவம் பொறுக்கமாட்டாமல் நடுக்கடலிலே குடிப்போனேன். ஒருக்கால் கம்சன் மனைவிகளாகிய அவன் மகள் இருவரும் பர்த்துருசோகத்தினாலே பக்கத்தில் நின்றுகொண்டு அழக்கண்டு அவன் சகிக்கமாட்டாமல் வெகு கோபத்தினாற் பொங்கி, அங்கிருந்து ஓர் கதாயுதத்தைச் சுழற்றி மதுரையின்பேரிற் பிரயோகித்தான். ஐயா! அதன் விக்கிரமத்தைக் கேளும் அந்த கதாயுதமானது அவ்வளவுதூரமுந் தாண்டி வந்துவிழுந்து, மதுராபுரியைச்சேர்ந்த பாதி விடத்தை நாசஞ்செய்துவிட்டது. அப்பால் தான் அப்பட்டணத்தி லிருப்பது மிகவும் அபாயமென்று யாவரையும் துவாரகாபுரிக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தேன். அந்த ஜராசந்தனுடைய சாமார்த்தியங்கள் உமக்கு நன்றாய்த் தெரிந்தன வல்லவோ? காலயவனன் - அம்சன்-டிபிகன்-கம்சன்-சுதர்மா என்கிற வீரரைச் சம்ஹாரஞ் செய்துப்போட்டேன். ஆனாலும், இன்னும் அநேக வீரர்கள் அவனுடனே சேர்ந்திருக்கிறார்கள் அவர்கள் விஸ்தாரமெல்லாம் நாசமாய்ப் போனாலும் இன்னும் அநேகம் இருப்புச்சேனைகளுமிருக்கின்றன. ஆனால், முன்னுக்கிப்போது அவனைக் கொல்வது எளிதுதான். ஆனபோதிலும் உபாயமாய்க் கொல்லவேண்டுமே யல்லது வேறுவிதத்தாற் கொல்வது கஷ்டம். அதாவது சேனைகளுடனே யுத்தத்துக்கு வாவென்று அவனை அழைத்தால் அவனைச் ஜெயிக்கத் தேவர்களுக்கும் அசாத்தியமாகும். ஆதலால், அவனோடு பாகுயுத்தஞ் செய்து வெல்லல் வேண்டும். அந்தப் பாகு யுத்தத்தில் வீமசேனன் மிகவும் சாமர்த்திய முடையவனாதலால், அவனே அவனோடு யுத்தஞ் செய்ய வேண்டும். நானும் அர்ச்சுனனும் அவனுக்குப் பக்கபலமாய் இருந்து கார்க்கிறோம் இப்படி நானும் அர்ச்சுனனும் உபபலமாயிருக்க, வீமசேனனுடனே சண்டை செய்து அவன் ஜெயிக்கமாட்டான். ஆனபடியினாலே நாங்கள் மூன்றுபேரும் போகவேண்டியதாயிருக்கிறது.

நீர் ஐயப்படவேண்டாம். நான் ஆபத்துகள் வரவொட்டாமற் காப்பதினுலும், உமது ஆசீர்வாதத்தினுலும் வீமன் அவசியம் அவனை ஜெயிப்பான் ஒரு கெடுதியும் வராது. உமக்கு என் பேச்சில் நம்பிக்கை இருக்குமேயாகில், ஆலோசிக்காமல் இப்போதே வீமார்ச்சுனர்களை என்னுடன் அனுப்பவேண்டும் என்று சொல்லிய ஸ்ரீ கிருஷ்ணன் பேச்சைக் கேட்டுத் தருமபுத்திரர் சற்று ஆலோசித்து இதனைச் சொல்லுகிறார்:

ஓ யதுவமிச சிரோமணியே! நீர் 'என் பேச்சில் நம்பிக்கை யிருந்தால், என்று சொல்லவொண்ணுது. ஏனெனில், பாண்டவர் ஐவர்க்கும் கிருஷ்ணர்தான் நாதனென்றும், சேர்விடமென்றும், ரக்ஷகனென்றும், லோகப்பிரசித்தமா யிருக்கிறதுமன்றி, ஆபத்து சம்பத்துகளில் உமது வார்த்தையைக்கொண்டே சகலத்தையும் நாங்கள் நடத்திவர, இப்போது அப்படி சொல்வது நியாயமோ? லோகநாதனு யிருக்கிற நீர் இருக்குமளவில் ஏதாகிலும் குறைவு நேரிடுமோ? அல்லது எந்தக் காரியந்தான் அசாத்தியமாகும்? எல்லாம் நிறைவேறும் இப்படிப்பட்ட நம்பிக்கை என் மனதில் பூரணமாயிருக்கிறது. ஆனபடியினுலே இப்போதே ஜராசந்தன் கொல்லப்பட்டானென்றும், சிறையிலகப்பட்ட ராஜாக்களெல்லாரும் விடுபட்டார்களென்றும் பூமண்டலமெல்லாம் சுவாதீன மாயிற்றென்றும், ராஜசூய்ம் நிறைவேறிற்றென்றும், நான் சாம்பிராச்சிய பட்டாபிஷேகத்தை அடைந்தேனென்றும் எண்ணுகிறேன். உம்மிடத்தில் ஐயப்பட வேண்டிய காரணமில்லை. ஏனெனில், புத்தியீனனேடும், நல்லொழுக்க மில்லாதவனேடும், அயோக்கியனேடும், ஒரு காரியத்தைக் குறித்து யோசித்தால், அப்படிப்பட்ட காரியத்தை நடத்துவதிற் சந்தேகப்பட வேண்டும். மகா விவேகியும் மகா சமர்த்தனும், வெகு சீலவானும், யோக்கியனுமாகிய உம்முடனே யோசித்து, அந்தக் காரியத்தில் மறுபடி சங்கைப்படுவது யாருக்குத்தான் தகும்? நீர் பார்த்து வலுவில், இந்தக் காரியத்தை நடத்தவேண்டு மென்று சொல்லுகையில், அதை நடத்தாமல் அலட்சியஞ்செய்பவன் யாரென்ருல், எவனுக்கு நன்மைகளும் பாக்கியங்களும் கிடைக்கப் பிராப்தியில்லையோ அவன்தானே தவிர வேருெருவனும் அப்படிச் செய்யமாட்டான். ஆதலால் என்னை இந்தக் காரியங்களைக் குறித்துக் கேட்க வேண்டிய தெவ்வளவுமில்லை உமது சித்தத்தின்படி எதை யெப்படி செய்ய வேண்டுமோ அப்படி செய்து, எனக்கு மேன்மைவரச் செய்யவேண்டியது. இதோ வீமார்ச்சுனரிருவரு மிருக்கிருர்கள் இவர்களைச் சுகமாயழைத்துக்கொண்டு போம் இவர்களைக் காப்பதைக் குறித்து யான் சொல்லவேண்டுவதில்லை யென்று சொல்லித் தன் தம்பிமாராகிய வீமசேனனையும் அர்ச்சுனனையும், ஸ்ரீ கிருஷ்ணன் கையிற் பிடித்து ஒப்புவித்து, மறுபடியும் கிருஷ்ணனைப் பார்த்து, ஓ கிருஷ்ணு! ஒருவன் தன் சீவகால வரையிலும் யாதொரு நிற்காரியமுஞ் செய்யாமல், மரணகாலமே நரிட்டவளவில் நரகத்தை நினைத்து எவ்வாறு பரதவிப்பானே அவ்வாறு உங்களைப்பிரிந்திருக்கமாட்டாமல் நான் பரதவிக்கிறேனே யல்லது வேறில்லை. ஆதலாற் போகிறகாரியத்தைச் சாதித்துக்கொண்டு சீக்கிரம் வந்து சேரவேண்டும். இனி ஒரு க்ஷணமும் எனக்கு ஒரு யுகமாயிருக்கும் தெய்வானுகூலத்தினுல் நீங்கள் சகல ஐயமும் பெற்று வரவேண்டு மென்று சொல்லி ஆசீர்வதித்தனுப்ப, தம்பிகள் அந்தத்தருமபுத்திரர் பாதங்களைப் பணிந்து தேவரீர் அஞ்சவேண்டாம் நாங்கள் போய் காரியத்தைச் சாதித்துச் சீக்கிரமே வருகிறேமென்று சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணனேடு பிரயாணமாகிப் புறப்பட்டார்கள்.

## கிருஷ்ணமூர்த்தி, வீமசேனன், அருச்சுனன் இம்மூவரும் ஜராசந்தனிடம் போதல்

ஸ்ரீ கிருஷ்ண சுவாமி தருமபுத்திரரைப் பார்த்து, ஓ மகாராஜனே! உமது உத்தரவின்படி உமது தம்பிகளைக் காக்கிறேன் ஐயப்படாமல் அன்போடு விடைகொடுக்க வேண்டு மென்று கேட்க, அந்தத் தருமபுத்திரர் நல்லது போய்வாரும். ஆனுல், நீங்கள் பிரமசரிய விரதத்தை முடித்துக் கன்னிகர்தான்த்திற்குக் காத்திருக்கும் ஸ்நாதகர் போல் வேடங்கொண்டு போனுல், அவனுடைய அரண்மனைக்குள் எளிதிற் பிரவேசிக்கலாம். ஆதலால், அப்படியே போங்களென்று சொல்ல, அந்த மூவரும் அவ்வேஷங் கொண்டு முச்சுடர்கள் போல் விளங்கி, இந்திரப் பிரஸ்தத்தினின்றும் புறப்பட்டு, கிரிவிரச பட்டணத்தை நோக்கிக் காலால் நடந்து போனுர்கள். இவ்வாறு மிக் வுல்லாசமாகி மூவரும் குருஜாங்கலம் என்கிற தேசத்தின் எல்லைத் தாண்டிப்

பதுமசரசு என்கிற ஓரோடையையும் கடந்து, காளி கூடமென்னும் இடஞ் சேர்ந்து, அங்கிருந்த சரயுநதியைத் தாண்டிப் பூருவ கோசல தேசத்தைச் சேர்ந்து, அயோத்தியா நகரத்தை நோக்கிக்கொண்டே போய்க் கண்டகீநதியைத் தாண்டி மிதிலா நகரஞ்சென்று, அங்கங்கே யிருந்து போசனம் சயன முதலாகிய காரியங்களை நிறைவேற்றிக்கொண்டு, கங்கா நதியையும் சோணமென்னும் நகரத்தையுங் கடந்து, கிழக்கு முகமாய்ப் போய்க் கிரிவிரசமென்கிற நகரத்தைக் கண்டார்கள். அப்போது இவர்கள் அந்தப் பட்டணத்து மாடுகள் மேய்கிறவிடத்தில் நின்றுகொண்டு கிருஷ்ணனுனவர், வீமார்ச்சுன ரிருவருக்கும் அந்தப் பட்டணத்தைக் காட்டி, ஓ பாண்டவச் சிரேஷ்டரே! இதுதான் கிரிவிரச மென்கிற பட்டணம். இது குபேரன் பட்டணம்போல் வெகு செல்வத்திற்கு இருப்பிடமாகியது நீர் வளம் நிலவள முள்ளபடியால் மகா சவுக்கியத்திற்கு ஏதுவாயிருக்கும். இதைச் சுற்றிலுமிருக்கிற விடங்களைப்பாருங்கள் வெகு அழகாயிருக்கின்றன இந்த விடத்தில் வாசஞ் செய்பவருக்குப் பெரும்பாலும் ஒரு வியாதியு முண்டாகிறதில்லை இதைச்சுற்றிலும் சோலைகளிருக்கின்றன பாருங்கள் இவை எப்பொழுதும் தளிர்த்தும் பூத்தும் விளங்கும். இங்கே காற்று குளுமையுடன் வீசுவதினால் வெகு சுகமாயிருக்கும் இதோ இந்த நகரத்தைச் சுற்றி ஐந்து மலைகள் சூழ்ந்திருக்கின்றனவே இவைகளுக்கு முறையே வைராகம் - விபுலம் - வராகம் - விருஷபம் - சைத்தியகம் என்று பெயர் இவைகளின் நடுவிலிருக்கிற படியினாலேதான் இந்தப் பட்டணத்துக்குக் கிரிவிரசமென்று பெயர். இந்தப் பர்வதங்களில் அடர்ந்த மரக்காடுகள் நிறைந்திருக்கின்றன. அந்த நிழலினாலே இப்பட்டணமெங்கும் குளிர்ந்து சௌக்கியமாயிருக்கும் இவைகளின் அடிவாரத்தில் முன்னம் ஓர் கதை நடந்திருக்கிறது அந்த வேடிக்கையான கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் சொல்ல துவக்கினர்.

---

## தீர்க்கதமன் சரித்திரம்

---

முற்காலத்தில் பிரகஸ்பதிக்குத் தமயனாகிய உசத்தியரென்கிறவர் இம்மலையடிவாரத்தில் ஓர் ஆச்சிரமத்திலிருந்தார். அவருடைய மனைவி நிறைந்த கருவுற்றிருந்தாள். ஏககாலத்திலும் எப்படிப்பட்டவர்க்காகிலும் தீயசெய்கை விடுவதில்லை யென்பது மாயாமயமாகிய உலகத்தின் இயற்கை யாகையினாலேயும் காமமென்பது கொடிய தீயகுணமாகையினாலேயும், பிரகஸ்பதியானவர் தீவினையின் வலிமையினாற் கொடிய காமமடைந்து, அதனாற் செய்வினை தவிர்வினை யொன்றுந் தோற்றாமல், கருவுற்றிருந்த மூத்தவன் மனைவியோடு சம்போகிக்க முயலுகையில் கருப்பத்திலிருந்த சிசுவானது அவரைப் பார்த்து, ஐயனே! தேவரீர் மகா புருஷன் மகானுபாவன். நீர் இப்பேர்ப்பட்ட அக்கிரமவேலைக்குடன்படப்போமா? மேலும் உமது வீரியம் வீணாய்ப் போவதல்ல எவ்விதத்திலும் ஒரு பிள்ளை யுண்டுபண்ணும். நானொருவனாகவே இந்தக் கருப்பத்திலிருந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கையில் மற்றொரு பிள்ளையும் இதில்உண்டானால் எனக்குமிகுந்த அவஸ்தை யுண்டாகுமல்லவோ? நான் வெளியிலே வந்து விடுவோமென்றால் இன்னும் காலமாகவில்லை. ஆதலாலே தயை செய்து இப்போது என் தாயுடன் புணராமற் போகவேண்டுமென்று சொல்ல, அதுகேட்ட பிரகஸ்பதியானவர் காமாவேசம்போல் மிகுந்த கோபாவேசங்கொண்டு, அடா பிள்ளாய்! காமவேதனை தீர்த்துக்கொள்ள வந்த என்னை நீ வயிற்றி லிருந்துகொண்டு தடுக்கிறபடியினாலே, நீ பிறவிக்குருடனாய்ப் பிறக்கக்கடவாய் என்று சபிக்கவே, அந்த ரிஷிகுமாரர் அப்படியே பிறவிக்குருடனாய் பிறந்து, தீர்க்கதமன் என்கிற பெயர் பெற்றுச் சகல வேதசாஸ்திரங்களில் வல்லவராய் மகா ஞானியாகி இங்கே யாவருங் கொண்டாடும்படியாக ஓராச்சிரமத்திலிருந்தார்.

இப்படி இருக்குமிவருக்கு ஒரு ரிஷி கன்னிகாதானம் பண்ணினர். அந்தத் தீர்க்கதமர் அப்பெண்ணை மணஞ்செய்து, அவ்வாச்சிரமத்திலே இவள் பணிசெய்யத் தவஞ்செய்து வந்தார். அவருக்குச் சில புத்திரர் பிறந்தனர். இவ்வாறு நெடுங்காலமானபின் அந்தத் தீர்க்கதம ரிஷியினுடைய மனைவியானவள் அவரிடத்திற்போக விச்சைகொள்ளா திருந்தாள். அந்த ரிஷிக்குக் காமமும் மோகமுமிகுந்து, ஒருநாள் தன் பத்தினியிடத்திற்குப் போனார். அந்த அம்மாள் அப்போது சரசமாய்க்கலந்து பேசாமலிருக்கக்கண்டு, ஓ எனது

மனோரம்ய மாதுர்ய வசனாமிர்த மின்னே! என்ன உன்னுடைய கருத்து? ஏன் சந்தோஷமா யிருக்கவில்லை என்று ரிஷி கேட்கவும் அந்த புண்ணியசாலி விசனப்பட்டு உம்மைக் கலியாணம் பண்ணிக்கொண்ட அன்னாள் முதலின்னாள் வரையிலும் உம்முடைய ஊழியத்தில் நின்று அயர்ந்து ஓடானேனன்றி, வேறு போக பாக்கியங்களை அனுபவித்தவளல்ல. ஆகையால், நீர் இன்றுமுதல் என் தொந்த பந்த சம்பந்தங்களை விலக்கி, என்றலைவாயிலை விட்டு நீங்கிப்போவது உத்தமமென்று துணிந்து சொன்னாள். அவள் சொற்ற மொழியைக் காதிற் கேட்ட முனிவரானவர் வெகு கோபமுடையவராய், ஸ்திரீகளுடைய படுக்கையுறவு இவ்வளவுதானோவென்று நினைத்து, ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினார். ஓ பெண்பாவாய்! மாற்றுயர்ந்த தங்கமும், நவரத்தினங்களும், குலமும், குணமும், நல்ல இளமைப் பருவமும் பொருந்தி யிருந்தாலும் அதற்குரிய நாயகன் நீங்கிப்போன பிற்பாடு அவைகள் என்ன பயன்பெறும். ஆதலால், நானே போகிறபோது நான் கட்டியதாலி உன் கழுத்தி லிருக்கலாமோ? என் முத்திரையை அறுத் தெறிந்துபோடு நான் எடுத்துக் கொண்டுபோகிறேனென்றார். விதரணையுடைய தீர்க்கதமரானவர் சொன்ன வார்த்தை வடவாமுகாக்கினிபோலும், ஆலால விடத்தைப்போலும் காதில் நுழையவே, அந்தப் புண்ணியவதி கோபித்துத் தன் பிள்ளைகளைப் பார்த்து, இந்தக் கிழவனைக் கொண்டுபோய் எங்கேயாகிலும் வருந்தும்படி வைத்து வாருங்களென்றாள். உடனே அந்தப் பிள்ளைகள் காட்டு மரங்களினால் தெப்பங்கட்டி அந்தத் தெப்பத்தின்மேல் அவரை ஏற்றிக்கொண்டுபோய் ஆற்றில் விட்டுவிட்டார்கள்.

இவ்விதமாக அப்பாதக ரெல்லாருங் கொடிய செய்கை செய்து தண்ணீரில் விட்டு விடவே, அந்தத் தீர்க்கதம ரென்கிற மகா முனியானவர் மிக்கவுங் கோபங்கொண்டு மனதிலாலோசித்து, ஓ! ஓ! உலகத்தில் இதுவரையிலும் ஸ்திரீகள் யாவருக்கும் பொதுவென்றும், விவாகஞ் செய்தவன் அதிபதி மாத்திரமேயென்றும், ஸ்திரீகள் யாருடன் சேர்ந்தாலும் தோஷமில்லையென்று இருக்கிறபடியினாலே யல்லவோ இப்படிப்பட்ட கொடுஞ் செய்கைக்கு இடமுண்டா யிருக்கிறது. ஆதலால், இதுமுதல் ஒருத்தி கலியாணஞ் செய்த புருஷன் ரூபவானா யிருந்தாலும், குரூபியா யிருந்தாலும், தனவானா யிருந்தாலும், தரித்திரனா யிருந்தாலும் அந்த ஸ்திரீ அவனை விட்டுப் பிரியக்கூடாது இகழவுங் கூடாது. அப்படி செய்தவளுக்கு நரகம் வரக்கடவதென்று சபித்தார். கேட்டீர்களோ வீமார்ச்சுனர்களே! அதுமுதல் தான் உலகத்தில் இந்த நல்ல ஏற்பாடு உண்டாயிற்று. இவ்வாறு சபித்த அந்தத் தீர்க்கதமமுனிவர் கங்கையினது ஓட்டத்திற்கு வசமாகிப் போகாநின்ற தெப்பத்திற் போய்க்கொண் டிருக்குமளவில், அவ்வாற்றின்கரையில் வந்திருந்த உசீநரனென்கிற இராஜா பார்த்துத் தன்சேவகரைக்கொண்டு அந்தத் தெப்பத்தைக் கரையின்கண் இழுத்துவிட்டு, அதிலிருந்தரிஷியை நமஸ்காரஞ் செய்து, சுவாமீ! தேவரீர் யார்? இப்படி வரவேண்டிய தென்னவென்று கேட்க, அந்த ரிஷி தன்குலம் பேர் முதலியவைகளையும் தன் மனைவியால் தனக்கு இவ்வாறு நடந்ததையும் சொல்ல, அதைக்கேட்ட ராஜாவானவன் மகா ஆச்சரியமடைந்து, அவரைத் தேரின்மீ தேற்றிக்கொண்டு தன் பட்டணஞ் சென்று அரண்மனையிலே வைத்துச் சகலஉபசாரங்களுடன் பூசித்துவந்தான்.

இப்படி பூசித்துக்கொண்டு வருகையில் ராஜாவானவன் ஒருநாள் அவரைத் தெண்டனிட்டு, ஓ மகாமுனிவரே! நீர் மகானுபாவர், மகா தபோ மகிமையுள்ளவர் அடியேனிடத்தில் கிருபை செய்து ஒரு குறை நீக்கவேண்டும் அதாவது நெடுநாளாகியும் எனக்குப் புத்திரனுண்டாகவில்லை. ஆதலால், என் மனைவிக்கு கர்ப்பதானங் கொடுத்து ஒரு புத்திரனை யுண்டாக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அம்முனிவர் மனதிரங்கி ஆகட்டுமென்று ஒப்புக்கொள்ள, அரசன் தன் மனைவியைக் கூப்பிட்டு மங்கள ஸ்நானஞ்செய்து, சகல அலங்காரங்களு மணிந்துகொண்டு அம் முனிவரோடுசேரச்சொல்லி கட்டளையிட்டான். அதை கேட்ட அந்த ராஜஸ்திரீயானவள் வெகு சுந்தரமும் சொருசுமுடையவ ளானபடியினாலேயும், தனக்குத் தக்க புருஷனோடு புணர்ந்தின்பரசங் கண்டவளாகையாலும், கணவன்சொல்லிய வார்த்தையை லட்சியஞ் செய்யாமல், ஓ ஓ இந்தப் புருஷன் பிராமணன், மேலும் கிழவன், அதிலுங் குருடன், இவனோடு நாம் எப்படி புணருகிறது? பிள்ளையில்லாமற்போனாலும் போகட்டுமென்று மனதில் நினைத்து

ராஜாவின் நிர்ப்பந்தத்திற்காகத் தன் தாதிகளில் ஒருத்திக்கு தன் பணிகளைப்பூட்டி அம்முனிவரிடத்திற் கனுப்புவித்தாள். அவர் அந்தத் தாதியுடன் சேர, அவளிடத்தினின்றும் நூறுபிள்ளைகள் பிறந்தார்கள். அந்தப் பிள்ளைகளை ராஜா தன் பிள்ளைகள் என்று நினைத்துச் சாதகாதி கருமங்களைச் செய்ய ஆரம்பிக்கும்போது அந்தரிக்ஷியானவர் ராஜாவைப் பார்த்து, ஓய் அரசனே! இந்த பிள்ளைகள் உமது பிள்ளைகளல்ல எனக்குச் சூத்திரஸ்திரீயினிடத்திற் பிறந்தவர்கள் அப்படியானாலும் என் பிரபாவத்தினாலே இவர்கள் பிராமண தேஜஸை யடைந்து மேன்மைபெறுவார்கள். நீர் விசனப்பட வேண்டாம் உமக்கும் பிள்ளையுண்டாக்குகிறேன். ஆனால், நான் அசங்கியமான ரூபத்தை யுடையவனென்று உம்முடைய மனைவி என்னுடன் சேரச் சம்மதிக்கவில்லை. ஆனாலும், ஒருதரம் என் கிட்ட வரும்படி சொன்னீரேயாகில், நான் தொட்டு மந்திரிக்கிறேன். அதனாலே பிள்ளை பிறக்குமென்று சொல்ல, அதுகேட்டு ராஜா சந்தோஷத்துடனே தன் மனைவியை முனிவரிடத்துக்கு அழைத்துவர, அம்முனிவர் அவள் தேகத்தைப் பரிசித்து மந்திரத்தைச் செபிக்கவே, அவ்வரசமாது கருவுற்று ஒரு பிள்ளையைப் பெற்றாள். அங்கத்தைப் பரிசித்து பிறந்ததுபற்றி, அந்தப் பிள்ளைக்கு அங்கன் என்று பெயரிட்டார்கள் அவனாண்ட தேசத்துக்கு அங்கதேசமென்று பேருண்டாயிற்று. அந்த வமிசத்தாரெல்லாம் அங்கர் என்று சொல்லப்படுகிறார்கள். அதிலே சிலர் பிரிந்து வங்கர் என்று பேருடையவர்களானார்கள். அவ் விருதிறத்தாரும் அம்முனிவரைக் குலமுறையே பூசித்து, தங்களிஷ்ட காமியார்த்தங்களைப் பெற்று வந்தார்கள்.

### வீமார்ச்சுனரும் கிருஷ்ணனும் ஜராசந்தனைக்கண்டு அறைகூவல்

இவ்விதமாக மகா மகிமையோடு கூடிய அந்தத் தீர்க்கதமரென்கிற மகாரிஷி இங்கேதான் ஆச்சிரமங் கட்டிக்கொண் டிருந்தாரென்று வீமசேனனுக்கும் அர்ச்சுனனுக்கும் சொல்லி, அவ்விடத்தைக் காட்டிக்கொண்டே ஸ்ரீ கிருஷ்ணன் கிரிவிரசமென்னும் பெரிய நகரத்திற்குச் சென்றார். இவ்வாறாகக் கிருஷ்ணனும் வீமார்ச்சுனர்களும் பாதிராத்திரியில் அழகுஞ் செல்வமும் பொருந்தி விளங்கும் அந்நகரத்திற் பகிரங்கமாகிய வாசலினாலே பிரவேசிக்காமல், வேறு வழியாற் பிரவேசித்து அதினண்டையிலிருக்கும் ஓர் பருவதத்தின் மேலேறி, அங்கு கட்டியிருக்கிற அழகாகிய ஒரு உப்பரிகையைக் கண்டு, அதனபேரிலுமேறி, முன்னே விருஷபவேசமாகி அவ்விடத்தில் வந்து தொந்தரவு செய்துகொண்டிருந்த ஓர் மாம்சாதனென்கிற அசுரனைப் பிருகத்திருத மகாராஜன் கொன்று அவன் தோலினாலே செய்துவைத்த மூன்று பேரிகைகளையும் ஏக காலத்திலே அடித்துக் கிழித்து, அந்த உப்பரிகையையும் இடித்துப்போட்டு ராஜமார்க்கத்தில் வந்தார்கள். இப்படியிருக்க, ஆபத்துக் காலத்திலே அடிக்கும்படி நியமித்திருந்த பேரிகை அகாரணமாக ஒலிக்கக் கேட்ட ஜராசந்த மகாராஜனும் அவன் மந்திரி முதலான பேர்களும் திடுக்கிட்டு எழுந்திருந்து, நூறுயோசனையளவுங் கேட்கும்படி ஒலிக்கும் பேரிகைகள் வைத்திருந்த விடத்தில் வந்து பார்க்குமளவில் ஒருவரும் தென்படாமல், பேரிகைகள் கிழிந்திருப்பதையும், உப்பரிகை இடிந்திருப்பதையுங் கண்டு இதென்ன வுற்பாதம்போ லிருக்கிறதென்று நினைத்தப்பொழுதே புரோகிதரையும் மற்றும் பிராமணர்களையு மழைப்பித்துச் சுவஸ்திவாசன முதலிய சாந்திச் சடங்குகளைச் செய்வித்துக்கொண் டிருக்க, கிருஷ்ணர் முதலாகிய மூவரும் கிரீட கவசாதிகளும் ஆயுதங்களும் இல்லாமல் பிராமணர்போல் அரையிலோர் ஆடைகட்டி, மேலுத்தரீயம் போட்டுக்கொண்டு மதயானைக் கன்றுகள்போல் ஒருவருடனொருவர் விளையாடிக் கடைத்தெரு வழியாற்சென்று அங்கோர் கடையிலிருந்த நல்ல பூமாலைகளையும், கஸ்தூரி புனுகு முதலிய நற்சாந்துகளையுங் கொள்ளையிட்டு, அவைகளால் அலங்காரஞ் செய்துகொண்டு அங்கிருந்து மிகுந்த வீச்சுடனேயும் இறுமாப்புடனேயு மரண்மனையருகிற் சென்று, மான் கூட்டத்தைக் கண்டு சிங்கங்க ளெப்படி பயப்படாதோ அப்படி அவ்வரண்மனை வாசலிலிருக்குஞ் சேனங்கட்குக் கொஞ்சமு மஞ்சாமல் உட்புகுந்து வாசல் வழியாகச் செல்லாமல் மதிலேறிக் குதித்து, மூன்று கட்டுகளைக் கடந்து, நாலாவது கட்டில் மங்கலச் செய்கைகளுடன் விளங்கா நின்ற ஜராசந்தனை நோக்கி களித்து, அங்கோர் திரையின் மறைவில் நின்றுகொண்டு, ஓ மகாராஜனே! நாங்கள் மூன்றுபேர் அதிதிகள் உம்மைத் தேடிவந்தோம் என்று மகா கம்பீரமாகச் சொன்னார்கள்.

அதைக்கேட்ட ஜராசந்தனனவன் எந்த வேளையிலாகிலும் எந்த ஆச்சிரம முடைய பிராமணராகிலும் வந்தால், அவர்களைப் பார்த்து அவர்களுடைய மனதைத் திருப்திசெய்கிற விரதமுடையவ னுகையால் வெகு பரபரப்புடனே ஆசனத்தினின்று மெழுந்து அர்க்ய பாத்தியாதிகளினுலும் மதுவர்க்கத்தினுலும் பூசித்து, ஆசனங்களைக் காட்டி, ஓ சுவாமிகளே! தயவு செய்து உட்காருங்க ளென்று சொல்ல, அம்மூவரும் அரசன் செய்த பூசையை லட்சியஞ் செய்து உட்கார, அதைக்கண்ட அரசன் கிருஷ்ணன் முதலானேரை உற்று நோக்கி, ஆலோசித்து, ஒருவார்த்தை சொல்லுகின்ருன். ஓ அதிதிகளே! நீங்கள் யார்? உங்களைப் பார்த்தால் பிராமண ரென்று தோற்றவில்லை. உங்களுடைய ரூபமும் செய்கையையும், உங்களுடைய மனதிலிருக்கும் மோசத்தை நன்ருய் விளக்குகின்றன. எப்படியென்ருல் ஸ்நாதகப் பிராமணர்போ லிருக்கிறீர்கள். புஷ்பங்களுஞ் சந்தனங்களும் நிறையத் தரித்திருக்கிறீர்கள். அன்றியும், உங்கள் மார்பைப் பார்த்தாற் பரந்து உயர்ந்து கடினமாகி, கவச மணிந்த வடுக்களோடு காணப்படுகின்றது. அப்படியே கைகள் மதயானைத் துதிக்கைகள் போலும், உழல் தடிகள்போலும், திரண்டு உருண்டு நீண்டு மிகவும் வலியவைகளாகி, நாணியினுற் காய்ப்பை யடைந்து விளங்குகின்றன. இதுவுமன்றி, நீங்கள் வருகையிற் கடைத்தெருவிற் கொள்ளை யடித்து, நமது மனைக்கு வாசலினுற் புகாமல் மதிலேறிக் குதித்து வந்தீர்கள். யோசிக்குமளவில் பேரிகைகளை அகாலத்தி லடித்துக் கிழித்தவரும், உப்பரிகையை இடித்தவரும் நீங்களாகவே தோற்றுகிறது இவைகளையெல்லாம் பார்த்தால் பிராமணரல்ல. க்ஷத்திரியர்தா னென்று நினைக்கிறேன். பிராமணர் இப்படி உங்களைப்போல் தகாதவைகளைத் தரிக்கிறதும், வலிய செய்கைகளைச் செய்கிறதும் ஆகிய கெட்ட நடக்கையை ஒருபோதும் பொருந்த மாட்டார்கள். அவர்கள் வெகு யோக்கியர் அவர்களுக்கு இப்படிப்பட்ட துற் செய்கைகளா லாகவேண்டியதென்ன? ஆகையால் நீங்களாரோ துஷ்ட ராசாக்கள் மோசமாய் வந்திருக்கிறீர்கள்? வெகு அயோக்கியர்களாகக் காண்கிறது. நல்ல பிராமணராகில் நான் செய்த பூசையை யேற்றுக் கொள்ளாமலிருப்பார்களா? ஓவஞ்சகரே! நீங்களார்? உண்மையைச் சொல்லுங்கள். நீங்கள் க்ஷத்திரிய வமிசத்திற் பிறந்தவர்களாகிற் பொய் சொல்லாமல் மெய் சொல்லவேண்டும். ஆணையிடுகிறேன் இவ்விதமாறுருவாய் என்ன காரியத்திற்காக இவ்விடத்திற்கு வந்தீர்கள் என்று கேட்க, ஸ்ரீ கிருஷ்ணபகவான் புன்சிரிப்போடுஞ் சொல்லுகிருர்:

ஓய் மகாராசனே! நீர் எல்லாந் தெரிந்தவர்போலே பேசுகிறீர். சாஸ்திரத்தினதுண்மை யுமக்குத் தெரியவில்லை. நாலு வருணங்களிலும் ஸ்நாதகன் ஒரேவிதமாகிய வேஷத்தோடு கூடியிருக்கலாம். வேறுபட்டிருந்தாலும் இருக்கலாம் புஷ்பம், சந்தனம், இவைகளைத் தரிப்பதற் குற்றமில்லை. அன்றி யும், அவைகளைத் தரிப்பதினுல் மங்களத்தையும் மேன்மையையும் அடைவார்கள். அப்படி யாவருமிருந்தால் அரசனுக்கு மங்களங்களுண்டாகும். ஆனதுபற்றி, நாங்களும் சந்தன புஷ்பங்களைத் தரித்துவந்தோம். இதை யறியாமல் எங்களை மிகவும் இகழ்ந்துபேசினீர். இப்படி வாயாலே பேசுவதினுல் என்ன பயன்? நாங்கள் க்ஷத்திரியரென்று உமக்குத் தோற்றிற்றேயாகில், உமது புஜபலத்தைக் காட்டி எங்கள் பலத்தையும் அறியவேண்டும். மித்திருருடைய கிரகத்துக்கு வந்தால் வாசலினுல் வரவேண்டும் சத்துருவின் கிரகத்துக்கு வந்தால் வேறு விதமாகவே வரவேண்டும். ஆகையால், உன் வீட்டுக்கு நாங்கள் மதிலேறிக் குதித்து வந்தோம். வந்த காரியத்தைப் பார்க்கவேண்டுமே யன்றி, உன் பூசையினுல் எங்களுக்குப் பிரயோசன மென்னவென்று உன் பூசையை நாங்கள் அங்கீகரிக்கவில்லை என்று சொல்லிய பகவானுடைய வார்த்தையைக்கேட்ட ஜராசந்தன் சொல்லுகிருன்: ஓ வேதியரே! உங்களுக்கும் எனக்கும் ஒருகாலத்திலும் வைரமிருக்கிறதாகத் தோற்றவில்லையே. அப்படியிருக்க, ஏன் இப்படி வைரமாய்ப் பேசுகிறீர்கள். உங்களை நான் அறியாமலிருக்க எனக்கும் அவ்வைர மெப்படியுண்டாகும்? நீங்கள் ரூபத்தில் பிராமணராகத் தோற்றிப் பேச்சில் க்ஷத்திரியராகத் தோன்றுகிறீர்கள். அனியாயமாய் எவனையாகிலும் தன்பலச் செருக்கினுல் விரோதியாக நினைத்துத் தொந்தரவுசெய்தால் இம்மையிலும் மறுமையிலும் இழிவே யுண்டாவதுமன்றி, மனதிற்கு மகா வருத்த முண்டாகுமாதலால் காரணமில்லாமலென்னைச் சத்துருவாக நினைத்துப் பேசுகிறீர்கள் என்று சொல்லியதைக்கேட்ட பகவான் சொல்லுகிருன்:

ஓ ராசனே! திரிலோக சக்ரேஸ்வரனாகிய இந்திரனுங் கொண்டாடத்தக்க பெருங்கீர்த்தியினையும் பராக்கிரமத்தினையுமுடைய மகா புண்ணியமூர்த்தியாகிய தருமபுத்திரர்பூமண்டலத்துக்கெல்லாம் அதிபதியாகி தருமநீதிகள் வழுவாமல் அரசாட்சிசெய்து வருவதும் அவருடைய பெருமையும் யாவருக்கும் தெரிந்திருக்கின்றதன்றோ? ஆதலால் இக்காலத்தில் ஒருவனும் அதிக்கிரமஞ் செய்யக்கூடாது. அப்படிக்கிருக்க, நீ மிகுந்த அதிக்ரமஞ் செய்கிறபடிபடியால் உன்னைத் தண்டிக்கும்படி அந்த மகாராசன் எங்களை அனுப்பிவித்தார். நானென்ன அதிக்கிரமஞ் செய்தேனென்கிறாயா? கேள். பூமியிலிருக்கிற ராஜாக்களை யெல்லாம் பிடித்துக் கொணர்ந்து கடுங்காவலிற் போட்டிருக்கிறாய். இது தருமமாகுமா? மகா யோக்கியராய் இருக்கிற பேர்களை இவ்விதமாக நோகச்செய்வது யோக்கியன் செய்கையென்று கண்டதுமில்லை கேட்டதுமில்லை. நல்லது இனி நீ செய்யப்போகிற செய்கையை சிந்தித்தால் மனம் பதைக்கிறதே. அதாவது, இத்தனைபேரையும் ஒருதேவதைக்குப் பலிகொடுக்கிறதாயல்லவோ சித்தம்பண்ணி யிருக்கிறாய்? ஓ! ஓ! என்ன உன் மனதின்கொடுமை? இப்படி செய்வதைக் காட்டிலும் பாதகம் வேறுண்டோ? ஐயோ! நீ இம்மையிற் சில பிரயோசனங்களை யடைவதற்காக உனக்குச் சமானமாகிய அநேகம் ராசாக்களைக் கொலை செய்யலாமா? இதற்காக உனக்கு மக்த்தாகிய நரகம் கிடைக்கும் நீ வீரனாய் இருக்கிறவன் யுத்தஞ் செய்து வென்றாலல்லவோ உனக்கு பெருமை. அதைவிட்டு தெய்வ வழிபாடு செய்து அதனாலே வெல்வதிற் பாவமும் பழியுமேயல்லது வேறில்லை. இந்தப் பாவத்தினின்றும் உன்னை விடுவித்த உன்னுடன் யுத்தஞ் செய்து சம்மாரம்பண்ண வந்தோம் வேறுவிதமாகிய பிராயச்சித்தம் உனக்கொன்று மில்லாமையினாலே நீ யுத்தத்தில் தேகத்தைவிட்டே புனிதனாகி நற்கதியடையவேண்டும். சேனையும் பலமுமிருக்கிறதென்று கருவமடைந்து துஷ்டர்களைச் சேர்த்துத் துராலோசனைசெய்து உலகத்தை உபத்திரவிக்க வாரம்பித்திருக்கிறாய். அற்ப பலசாலிகளுடனே சண்டை செய்து உபத்திரவிப்பது நல்லதல்ல. சமான பலசாலிகளோடு யுத்தஞ் செய்து ஜயிக்கவேண்டும். ஆகையாலே இப்போது எங்களுடன் நீ யுத்தஞ் செய்யவேண்டும் உனக்கு பராக்கிரமமும் ரோஷமு மிருந்தால் எங்களோடு யுத்தஞ் செய்ய எழுந்திரு இல்லாவிட்டால் தோற்றேனென்று வணங்கு நானே சிறந்தவனென்று எவன் கருவப்படுகிறானோ அவன் எப்படியும் கெடுதியையும் கருவ பங்கத்தையும் அடைவன். இப்படிதான் முற்காலத்திலே தம்போற்பவ னென்கிறவன் மகாக் கருவமடைந்திருந்து கடைசியில் ஸ்ரீ நரநாராயணர்களாலே கர்வபங்கமானான். கார்த்தவீரியார்ச்சுனனும் பரசுராமனாலே செருக்கழிந்தான் நீ பட்டாபிஷேக மாகியது முதல் இது வரையிற் செய்து வந்த அக்கிரமங்களினாலே சீக்கிரத்தில் யமலோகஞ்சேர்ந்து சகல பந்துக்களோடு கூடும்படியாகிய காலம் நேரிட்டது. இப்போதாகிலும் நல்ல நினைப்பை யடைந்தாயேயாகில், இம்மை மறுமைகளில் நன்மை கிடைக்கும் சொன்னேன் சம்மதி யிருந்தாற் கேள் இல்லாவிட்டாற் கெட்டுப்போ நன்மை வேண்டும் அகிற்காவலிற்போட்டிருக்கிறராசாக்களை விட்டுப்போட்டு எங்களை வந்து வணங்கு இல்லையாகில் சண்டைக்கு வந்து யமலோகத்திற்குப் போய்ச் சேரு. நாங்கள் உன்னிடத்தில் யாசிக்கவந்த பிராமணரல்ல க்ஷத்திரியர்தான் நான் கிருஷ்ணன் இவர் வீமசேனன் இவர் அருச்சுனன் யதார்த்தத்தைச் சொன்னோம். ஆதலால், இனி உன்னிஷ்டப்படி நடக்கலாமென்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லிய சொற்களைக் கேட்டு, ஜராசந்தன் கோபாக்கினியாற் பொங்காநின்ற சித்தத்தோடும் சிவந்து சுழலாநின்ற கண்களோடும் துடியாநின்ற உதட்டோடும் கிருஷ்ணதேவனைப் பார்த்துச் சொல்லுகிறான்.

அடா கிருஷ்ணா! நீயா? தெரிந்தது நீ மோசக்காரனென்கிறது சரியாயிற்று நீ என்ன வாய்க்கு வந்தபடி யெல்லாம் பிதற்றுகிறாய்? என்னை யாரென்று நினைக்கிறாய்? என்னை எவ்வாறு மதிக்கிறாய்? உன் மோசத்துக் குட்பட்ட க்ஷத்திரியப் பூச்சிகளி லொன்றாய் நினைக்கிறாயோ அப்படிக்கு நினையாதே சகல ராசாக்களுடைய முடியின்மீதேறி விளங்காநின்ற ஜராசந்தனென்று நினை. நான் கம்சன் - பிரலம்பன் - பாணன் - முஷ்டிகன் - சாணூரன் - இந்திரதப்ன் - கேசி - பூதனை - காலயவனஸ் இவர்களில் ஒருவனென்று பிரமியாதே கொக்கையும் கோழியையும் பாம்பையும் பல்லியையும் கழுதையையும் நாயையும் நரியையும் கொன்றோமென்று கருவப்படுகிறாய். அந்தக் கருவமிங்கே உதவமாட்டாது நீயா யென்னை

ஜெயிக்கிறவன் பதினெட்டுத் தரம் என்னால் முறிய அடிக்கப்பட்டுப் பட்டணத்தைவிட்டு நடுக்கடலிற் குடிபோனதை மறந்தாயோ? நல்லது என்னோடு சண்டையென்கிற பேச்சை யெடுப்பதற்காவது ராசகுலத்திற் பிறந்தவனன்றோ தக்கவன்? நீ கம்சனுடைய மாடுகளை மேய்க்கும் நந்தகோபனுடைய மகனுச்சுதே, அடா இடப்பயலே! அதை மறந்து என்ன அட்டகாசஞ் செய்கிறாய். இடையனுக்கு தக்க முறையோ டிராமல், வீணாய் என் மதம்பட்டுத் திரிகிறாய்? உயரவுயரப் பறந்தாலும் ஊர்க் குருவி பறந்தாகுமோ? நீ ஓடிப்போனாயென்று அலக்ஷியமா யிருந்தேன் தெய்வாதீனமாய்க் கண்ணி லகப்பட்டாய். இப்போது உன்னைக் கொன்று, என் மருமகனாகிய கம்சனுடைய கடனைத் தீர்த்துக்கொள்ளுகிறேன். இந்தச் சிறுவர் இருவரும் அற்பர் திரணத்துக்குச் சமானமாகியவர். ஆதலால், அவர்களிடத்தில் எனக்கு லட்சியமில்லை. ஆகிலும் உன்னைச் சேர்ந்து உன்னைப்போல் மதம் பிடித்தவர். ஆகையால்,உன்னைக்கொன்றபின் சிங்கமானது மான்களை முறிப்பதுபோல் இவர்களையும் முறித்துவிடுவேன் என்று கெர்ச்சித்ததைக் கேட்டு யாவரும் நடுநடுங்கிப் போனார்கள். இம்மூவரும் அதிசயப்பட்டு வீமார்ச்சுனாளிருவரும் இவனைக் குறித்து இக் கிருஷ்ணமூர்த்தி சொன்னது அனைத்தும் உண்மையே யென்று சந்தோஷித்தார்கள்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் இப்படி சொல்லிய ஜராசந்தனைப்பார்த்து, அடா ஜராசந்தா! என் வீணாய்க் கூவுகிறாய்? இதனாலென்ன பயன்? உனக்கு வல்லமை யிருந்தாற் கையாற் காட்டவேண்டும் உன்னைச் சம்மாரம் பண்ண வேண்டுமென்றே சித்தமாய் வந்திருக்கிறேன் உன்னைக் கொல்ல நான் வேண்டுவதில்லை. இந்தச் சிறுவரில் ஒருவனைக்கொண்டே உன்னை யமன் சமீபத்திற் கனுப்புகிறேன். பதறாதே விரைவில் வா என்று சொல்ல, ஜராசந்தன் நல்லது, இடையா நீ! அழைத்தபடி யுத்தத்திற்கு வருகிறேன். உங்களுக்குச் சேனைகள் வாகனங்கள் ஆயுதங்கள் வேண்டுமானால் தருகிறேன் அல்லது சும்மா யுத்தஞ் செய்ய வேண்டுமானாலும் செய்கிறேன் அதிலும் உங்களில் ஒருவனோடு, அல்லது இருவரோடு, அல்லது மூவரோடும் நானொருவனுக்கவே யுத்தஞ்செய்ய வேண்டுமானாலும் செய்கிறேன். உங்களுக்குச் சம்மதியானபடிக்கே ஆகட்டுமென்று சொல்லி, மனதில் இந்த மூன்று மிர்த்திக்களோடு சண்டைசெய்து நாம் தேறுவது அசாத்தியமென்று நினைத்துத் தன்னுடைய முக்கியமந்திரிகளாகிய கவுசிகன்-சித்திரசேனன் என்கிற இருவரையும் அழைத்துத் தன் குமாரனாகிய சகதேவனுக்குச் சீக்கிரம் பட்டாபிஷேகஞ் செய்யுங்களென்று கட்டளையிட்டு யுத்தத்திற்குச் சித்தமா யிருந்தான்.

## ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சரித்திரம்

இப்படி சொல்லிக்கொண்டு வருகிற வைசம்பாயன முனிவரைப் பார்த்து, ஜெனமேஜெய மகாராஜன் சொல்லுகிறான்: சுவாமி! கம்சன் என்கிறவன் யார்? அவனுக்கும் கிருஷ்ணனுக்கும் ஏன் விரோதம் வந்தது? அந்தக் கம்சனைக் கொன்றதினா லல்லவோ கிருஷ்ணனுக்கும் ஜராசந்தனுக்கும் விரோதம்வந்தது? இந்தச் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்றுக் கேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்: கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! அந்தச் சரித்திரம் விஸ்தாரமாகியது ஆகிலுஞ் சுருக்கமாகக் கொஞ்சம் சொல்லுகிறேன். யாதவ வமிசத்திலே உக்கிரசேனனென்று ஒருவருளர். அவர் விருஷ்ணி-அந்தகர்-போஜர் முதலாகிய கூட்டங்களுக் கெல்லாம் ராஜாவாயிருந்தார். அந்த உக்கிரசேனனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவன் கம்சனென்கிறவன். அவன் சவுரிய பராக்கிரமங்களில் அதிகப்பட்டவனாகி ஜராசந்தனுடைய பெண்களிருவரைக் கலியாணஞ்செய்து வாழ்ந்துகொண் டிருந்தான். இப்படியிருக்க, அந்த உக்கிரசேனனுக்கு வசுதேவனென்று ஒரு யாதவன் மந்திரியா யிருந்தான். அவன் மிகவும் யோக்கியனானபடியினாலே உக்கிரசேனன் தேவகி என்கிற தன் பெண்ணைக் கலியாணஞ்செய்வித்து, யானைகள்-குதிரைகள் முதலாகிய சகல பரிவாரங்களுடனே புருஷன் வீட்டுக்கு அனுப்ப, கம்சன் தங்கையினிடத்தில் உற்றபரிவினாலே வசுதேவனையும் தேவகியையும் ஒரு திவ்விய ரதத்தி லேற்றிக்கொண்டு தானே குதிரைகளின் கடிவாளம் பிடித்துச் சாரத்தியஞ் செய்து, வெகு சந்தோஷத்துடனே பிரயாணமாகி வீதிவலம் வரும்போது, ஆகாசத்தில் அசரீரியானது கம்சனைப் பார்த்து, அடா கம்சா! இப்போது நீயவளை வெகு

உல்லாசத்துடனே தேரிலேற்றிக் கொண்டு போகிறையோ? அவள் வயிற்றிற் பிறக்கும் எட்டாவது பிள்ளை உன்னைக் கொல்லப் போகிறான் என்று சொல்லி அடங்கியது.

அதைக் கேட்ட கம்சன் உடனே திடுக்கிட்டு, மனதிலுண்டாகிய சந்தோஷமெல்லா மழிந்து, முகங் கறுத்து, சற்றே ஆலோசித்து, இவளைக் கொன்றுபோட்டால் நமக்கு அப்பாற் பயமில்லை யென்று நினைத்து, தமோகுணம் மிகுந்தவனாகையாற் கத்தியைக் கைமி லுருவிக்கொண்டு தேவகியைக் கொல்ல வர, அதை வசுதேவன் கண்டு, ஓ! ஓ! மோசம் வந்ததே; என்ன செய்வோம்? தற்காலம் வந்த ஆபத்தை நீக்கினுற் பிற்காலம் பார்த்துக் கொள்ளுவோ மென்று யோசித்து, மிகவும் கடினமாகிய வெகுளியோ டிருக்குங் கம்சனைப் பார்த்து, முகமலர்ச்சியுடன் புன்னகை புரிந்து அப்பா கம்சா! நீ மகா புத்திமானுச்சுதே, ஏதிப்போ கொஞ்சம் ஆலோசிக்காம லிக்காரியத்திற் பிரவர்த்திக்கிறுய்? அசரீரியின் சொற்படி இவளால் உனக்கு ஏதாகிலும் அபகார முண்டா? இவளுடைய பிள்ளைகளாலன்றோ உனக்கு அபாயம் நேரிடுமென்று சொல்லிற்று. அப்படியிருக்க, பேதையாகிய உன் தங்கையைக் கொலைசெய்வது நியாயமோ? நீ பந்துக்களை யெல்லாங் காப்பாற்றுகிற நற்குண முடையவனுகி, இந்தப் போஜகுலத்துக்குச் சந்திரன்போல் விளங்குகிறவனுச்சுதே? ஆதலால் இவளைக் கொல்வது நன்மையாக இருக்கின்றதா? அப்பா போஜகுலதிலகனே! (தன்னைப் போக்கித் தருமமா?) என்றும், (தன்னைக் கொல்ல வந்த பசுவையுங் கொல்லலாம்) என்றும், சொல்லுகிற பழமொழிப்படி, தன் பிராணனைக் காக்கவேண்டியதும், அதற்கு விரோதமா யிருப்பதை நாசஞ்செய்ய வேண்டியதும் முக்கியந்தான். ஆனுல், அதற்கு நானொரு உபாயஞ் சொல்லுகிறேன் கேள்: இவளுக் குண்டாகும் பிள்ளைகளை யெல்லாம் பிறக்கும்போதே கொன்றுவிடு கருபத்திலிருந்து சிசு கீழே விழுந்தவுடனே நான் கொணர்ந்து உன் கையிற் கொடுக்கிறேன். இப்படி செய்வது உன் பெருந்தன்மைக்குத் தக்கதா யிருக்குமென்று சொல்லக் கேட்ட கம்சன் இது சரிதானென்று ஒப்புக்கொண்டு அக் கொடிய செய்கையி னின்றுந் திரும்பினுன்.

பின்பு வசுதேவன் தன் மனையாளுடன் மனைக்குச் சென்று வாழ்ந்துகொண் டிருக்க, அப்போது தேவகி கருப்பந் தரித்துப் பிரசவிக்க, அந்த குழந்தையை வசுதேவன் தான் முன் சொன்னபடி கம்சனுக்குக் கொணர்ந்து கொடுக்க, அவன் இதனுல் எனக்கொரு தீங்குமில்லை. எட்டாவது பிள்ளை எனக்கு விரோதியாகையால் இதைக் கொண்டுபோம் என்று திருப்பிவிட்டான். இப்படியிருக்க, ஒரு நாள் நாரதமுனி வந்து இவர்கள் எல்லாருடைய உற்பத்திக் கிரமங்களை யறிவித்ததனுற் கம்சன் தன் சுபாவத்தை நினைத்துக்கொண்டு யாதவரெல்லாரிடத்திலும் விரோதத்தை எண்ணி வசுதேவனிடத்தில் திருப்பிவிட்ட குழந்தையை மறுபடியும் அழைப்பித்து கொன்றுபோட்டு, தனது நடக்கைக்கு உட்படாத யாதவரெல்லாரையுஞ் சிதறவடித்துத், தன் பிதாவைத் தள்ளித் தானே சிங்காதனமேறி அரசாட்சி கைக்கொண்டு, வசுதேவனையும் தேவகியையும் விலங்கிட்டுக் காவலில் வைத்து, நல்லோருக் கெல்லாந் தீங்கு செய்து வந்தான். பின்பு தேவகி முறையே ஆறுபிள்ளைகளைப் பெற, அவைகளையும் பிறக்கும்போதே எடுத்து உயர எறிந்து கத்தியின்மீ தேந்திக் கொன்றுன். இவனிப்படி யிருக்க, பாபிகளாகிய துஷ்டர் அதிகப்பட்டபடியாற் பூமிதேவி பாரஞ் சகிக்கமாட்டாமற் பிரமதேவ ரிடத்திற்குப் போய் முறையிட, அவர் எல்லாத் தேவரையுங் கூட்டிக்கொண்டு பாற்கடலிற் சென்று ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத் தரிசித்து துதித்து இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, அவர் தேவர்கட்குச் சமாதானஞ் சொல்லி யனுப்பிவிட்டு, தமது மாயையை யழைத்து தன் பாயலாகிய ஆதிசேடனுடைய அம்சமும், தமது சம்கிருஷ்ண ரூபத்தி னம்சமும் கலந்து, தேவகியிடத்தில் ஏழாம் கர்ப்பமாகிய ரூபமெடுத்து நந்தகோகுலத்தி லிருக்கும் வசுதேவன் மூத்த மனைவியாகிய ரோகிணி என்பவள் வயிற்றிற் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு, நீ நந்தன் மனையாட்டியாகிய அசோதை வயிற்றில் உற்பவிக்கில் உனக்கு மேன்மை கிடைக்குமென்று கட்டளையிட, அந்த மாயை அப்படியே செய்துவிட்டது. அப்போது தேவகியின் ஏழாவது கருப்பம் காற்றுய்ப் போயிற்றென்றும் வதந்தியுண்டாயிற்று. அந்தருணத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தேவகியின் வயிற்றிற் பிரவேசிக்க, தேவகி எட்டாவது கருப்பந் தரித்தாளென்கிற செய்தி கேட்ட கம்சன் உடனே வெகு காவல்களை ஏற்படுத்தி, பயத்தினுல் எங்கே

பார்த்தாலும் விஷ்ணு ரூபந்தோற்றப் பித்தம் பிடித்தவன்போலாகி, எப்போ தேவகிக்கு குழந்தை பிறக்கப்போகிறதென்று காத்திருந்தான்.

இப்படியிருக்க, சுவாமி ஓரிருட்டுகாலத்துப் பாதிராத்திரியில் அவதரித்துத் தம்மை நந்தகோமாலன் மனையாளிடத்தில் விட்டு வரும்படி கட்டளையிட, அப்படியே வசுதேவன் குழந்தையையெடுத்துக்கொண்டு, காவற்காரரும்மற்றவரும் மாயையின் வலிமையினால் மயங்கி நின்றபடியால் எல்லாக்காவல்களையுந் தாண்டி, ஒரு தடையுமில்லாமற் கோகுலஞ் சென்று, அங்கு யாவருந் தியங்கி நின்றபடியினால் அவ்வாண் குழந்தையை அசோதையினிடத்தில்விட்டு, அவள் அப்போது பெற்ற பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு வந்து தேவகியினிடத்தில் விட்டு, முன்போல் விலங்குகளை மாட்டிக்கொண்டிருந்தார். உடனே அப்பெண் குழந்தை குவாகுவா வென்றழவே யாவரும் விழித்துக்கொண்டு கம்சனுக்குச் சேதிதெரிவிக்க, படுத்துக்கொண்டிருந்த அவனும் திடுக்கிட்டெழுந்திருந்து, தலைவிரிகோலமாய் ஓடிவந்து அந்தப் பெண் குழந்தையை யெடுத்து வெட்டப்போகையில், அது ஆகாசத்திலெழும்பி உன்னைக் கொல்ல வந்தவன் வேறே யிருக்கிறனென்று சொல்லிப் போட்டு மாயமாய்ப் போய்விட்டது. அது கேட்ட கம்சன் வெகு சந்தேகமும் துக்கமுமடைந்து, ஆகாசத்திலெழும்பிய குழந்தையைக் கண்டுபிடிக்கும்படி வெகு பேர்களை யேவினான். இஃதிப்படி யிருக்க, கோகுலத்தில் உரோகணியின் வயிற்றிற் பிறந்த பலராமனும் அசோதையின் மகனென்று எண்ணப்பட்ட கிருஷ்ணனும் வெகு சிறப்பாய் வளர்ந்துக்கொண்டு வருமளவில் கம்சனால் ஏவப்பட்ட பூதனை-சகடாசுரன்-திருணவர்த்தன்-தேனுகாசுரன் - வச்சாசுரன் - அகாசுரன்-பகாசுரன்-பிரலம்பன்-கேசி முதலாகியபேர்கள் தந்திரமாய் வந்து கிருஷ்ணனைக் கொல்லப் பார்க்க, எல்லாவற்றி னுள்ளுமிருந்து இயாவற்றையு மறிந்திருக்கிற பகவானுகையாற் அந்தத் தந்திரங்களுக்குத் தக்கபடி அவர்களை மாளவைத்து, மருதமரங்களாயிருந்த நளகூபரமணிக் கிரீவரென்றவர்களுக்கு இயக்கருடைய சாபந் தீர்த்துக் காளியனென்னும் சர்ப்பராஜனுடைய செருக்கழித்துக் கோவலரை எரிக்க வந்த காட்டுத்தீயை விழுங்கிப், பிரமன் பசுவின் கன்றுகளையும் கன்று மேய்க்குஞ் சிறுவரையும் ஒளிக்க, அவைகளுக்குப் பதிலாகத்தாமே அவ்வளவு ரூபங்கொண்டு பிரமதேவனை ஆச்சரியப்படுத்திக், கோவர்த்தன மலையாயிருந்து பொங்கலிட்ட சோற்றை வாங்கிப்புசித்து, அந்த மலையைக் குடையாக வெடுத்து இந்திரன் பொழிந்த கன்மாரி தடுத்துக், கருமமே முக்கியமென்று அகங்கொண்டிருந்த வைதிகருக்கு ஞானம் வருவித்து அழகினும் விளையாட்டினாலும் யாவரையும் தன் வசப்படுத்திக், கோபிகைகளோடு யமுனாநதியின் மணற்குன்றுகளிலும் சோலைகளிலும் கிரீடித்துக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்க கம்சன், இராப்பகல் தூக்கமில்லாமல், கிருஷ்ணனே தனக்குச் சத்துருவென்று சில குறிப்புகளினால் அறிந்து இவனை எந்த விதத்தினாலாகிலுங் கொல்ல வேண்டுமென்று முயன்று, வில் வேள்வியென்று ஒரு யாகஞ் செய்ய ஆரம்பித்து, அந்த யாகத்தைக்கொண்டு இவரைத் தன்னுடைய மனைக்கு அக்குரூர னென்பவனால் அழைப்பிக்க, அப்படியே ஸ்ரீகிருஷ்ணன் பலராமனுடன் மதுராபுரிக்கு வந்து அந்த வில்லை முறித்து, அவன் காவற்காரரை யடித்து குவலயாபீடமென்கிற மதயானையின் கொம்பைப் பிடுங்கிக் குத்தித்தள்ளி நாசஞ் செய்து, அதன் பாகனையுங் கொன்று, முட்டிகன் - சாணூரன் என்கிற மல்லரைப் போர் செய்து முடித்து, இச்செய்கைகளினாலே கோபங்கொண்டு பாய்ந்த கம்சனைத் தும்சஞ் செய்து, அவன் தம்பிமார்களையும் நாசஞ் செய்து, அவனால் தொந்தரவுபட்ட யாதவர்களையும் தன் மாதாபிதாக்களையுஞ் சமாதானப்படுத்தித் தன் மாதா மகனாகிய உக்கிரசேனனை முன்போற் சிங்காதனத்திலேற்றி உலகத்திற்கு நன்மை செய்தார். பின்பு கம்சன் மனைவிகள் பிதாவினிடத்திற் சென்று மாரடித்துக்கொண்டதைப் பற்றி ஜராசந்தனுக்கும் கிருஷ்ணனுக்கும் பதினெட்டுத்தரம் சண்டையாயிற்று. இதுதான் கம்சனுக்கும் கிருஷ்ணனுக்கும் விரோதம் வந்த காரணம். ஓ ஜெனமேஜெய மகாராஜனே! நீர் கேட்ட சரித்திரத்தைச் சொன்னேன் மேல் நடந்த கதையை சொல்லுகிறேன் கேளுமென்று வைசம்பாயனர் சொல்லத் துவக்கினார்.

## ஜராசந்தன் வதை

முன் சொன்னபடி ஜராசந்தனானவன் தன் மகனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் கச்சுக்கட்டி யுத்தத்திற்குச் சித்தமாயிருக்க, அதைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணன் அடா ஜராசந்தா! எப்படி யுத்தஞ் செய்ய மனதென்று கேட்டாயன்றோ? எங்களுக்குச் சேனையும் வேண்டாம் ஆயுதமும் வேண்டாம்; நீயொருவனாக இவ்விருவரி லொருவரோடு கை சண்டை செய்யவேண்டும் ஆரோடு செய்கிறாய் சொல்லென்று கேட்க, அவன் அர்ச்சுனனை சிறு பிள்ளை யென்று அலட்சியஞ்செய்து வீமசேனனோடு யுத்தஞ் செய்கிறேனென்றான். அதுகேட்டு, ஸ்ரீகிருஷ்ணன் வீமசேனனை யுத்தஞ் செய்யும்படி கட்டளையிட, வீமசேனனும் கச்சுகட்டியுத்தத்திற்குச் சித்தமாயினான். இவ்வாறிருவரும் யுத்தசன்னராகிக் கைகளாகிய ஆயுதங்களோடு விளங்கி வெளிப் புறப்பட்டு யுத்த பூமிக்கு வந்தார்கள். அப்போது வீமசேனனை ஜராசந்தன் நோக்கி, அடா வீமசேனா! நான் தருமத்தை முன்னிட்டு உன்னோடு யுத்தத்திற்கு வந்தேனாகையால் ஜாக்கிரதையா யுத்தஞ் செய்யென்று சொல்ல, வீமசேனன் நானுமப்படியே தருமராஜனைக் கும்பிட்டு வந்தேனாகையால், நீதான் ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று சொன்னான். இவ்வாறிருவரும் ஒருவரை யொருவர் திக்கரித்து மங்கலச் சடங்குகள் செய்துகொண்டு, ஒருவர் மேலொருவர் பாய்ந்து; மதயானைகள் போல இடமாகவும் வலமாகவுஞ்சுற்றி, ஒருவனை யொருவன் பிடித்துத் தள்ளுகிறதும், எழும்பியடிக்கிறதும், கீழே விழுகிறதும், உயர வெறிகிறதும், கையைப்பற்றியிழுத்துச் சுற்றிச் சுழற்றுகிறதும், கைகளாற் குத்துகிறதும், கால்களாலுதைக்கிறதுமாக நெடுநேரம் யுத்தஞ் செய்யவே இவர்களுடைய கால்களாற் புடையுண்ட பூமியினின்றும் எழும்பிய தூளியானது அந்தகாரம்போலே சூழ்ந்துகொள்ள, இவர்களுடைய அட்டகாசத் தொனிகளினால் எதிரிரைச்சற்போடா நின்ற மலைகளிலிருக்குப் சிங்கம் முதலிய மிருகங்கள் பயந்து வீறிட, ஆகாசங்களதிர்ந்து பிரளயகால ஸ்திதிபோலிருக்க முன் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தத்தைக் காட்டிலும் இது விசேஷமாகிய தென்று ஆகாசத்தில் தேவர்-சித்தர்-சாரணர் முதலாகியவர் வியந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

இவ்விதமாக யாவரும் ஆச்சரியப்படும்படியாய் வீமசேனனும் ஜராசந்தனும் கார்த்திகை மாதத்திற் கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமையினன்று யுத்தத்திற்கு ஆரம்பித்துப் பதினைந்து நாள்வரையில் ஓயாமல் யுத்தஞ் செய்துக்கொண்டு வருகையில், ஒருநாள் யுத்தத்திலே ஜராசந்தன் வீமசேனனைச் சமயம் பார்த்துச் சுழற்றித் தள்ளிக் கோடைகாலத்து இடிக்குச் சமானமாக அவன் மார்பிலொரு குத்து குத்தவே, அந்த வீமன் பதைபதைத்து க்ஷணகாலம் சோர்ந்து, மீண்டு மனதில் தைரியத்தை முன்னிட்டுக்கொண்டு, மிகுந்த ஆக்குரோஷத்துடனெழும்பி ஜராசந்தன்மேல் விழுந்து, லாகவத்தினால் அவனைக் கீழே தள்ளி மார்பிலொரு குத்துக்குத்த, அக்குத்தினால் வச்சிராயுதத்தினா லடிக்கப்பட்ட பருவதம்போல் ஜராசந்தன் சிதைப்புண்டு, க்ஷணகாலம் மூர்ச்சையடைந்து, மீண்டும்பெருமூச்சுவிட்டெழுந்து கர்ச்சித்து, ஆகட்டுமடா வீமசேனா! இந்த நிமிஷத்திலுன்னை நாசஞ்செய்கிறேன் சற்றே நில்லென்று சொல்லிச் சந்து பார்த்து வீமசேனனைக் காலைப்பற்றித் தூக்கிச் சுழற்றியெறிய, அந்த வீமனும் ஆகாசமார்க்கத்திற் சுழன்று, லாகவமாய் அவன் தலைக்குச் சரியாய் வந்து மயிரைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளிக்கொண்டே தானும் பூமியிற் குதித்து, அச்சத்துருவை யப்படியே பறபறவென்றிழுத்துக் கரகரவென்று சுழற்றி எறிய அவன் சமீபத்திலிருந்த மலைகளிலும் தடங்களிலுமொத்துண்டு காயமடைந்து, தேகமெல்லாம் உதிரம் பெருக ஓடி வந்து புலிபோற் பாய்ந்து வீமனுடைய மிறடைப்பற்றி நெட்டித்தள்ள, அவனுலைந்து குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு விழுந்து கைகால்களிலறைபட்டும் லட்சியஞ் செய்யாமல் எழுந்து, நல்லது நல்லது ஜராசந்தா! நீ வெகு சாமார்த்தியவான்போற் சண்டை செய்கிறாய் உன்னைப் பிதுருலோகத்திற்கு அனுப்புகிறேன் பயப்படாதே யென்று வீரவாதஞ் செய்தான். இவ்வாறே தினந்தோறும் தங்கள் சாமர்த்தியங்களையும் பல சவுரியங்களையும் காட்டி, ஒருவனை யொருவன் கொல்வதற்குத் தருணந் தேடிக்கொண்டு, இராப்பகல்களில் ஒரு கணப்பொழுதும் ஓய்வில்லாமல் யுத்தஞ் செய்து வந்தார்கள்.

இப்படி பதினைந்து தினங்கள் யுத்தஞ் செய்தும் தோற்பு கெலிப்புகள் காணாமலிருப்

பதைக் கண்ட வீமசேனன் அலுத்துக் கண்
ணனைப் பார்க்க, யாவுமறிந்த அந்த பகவான்
வீமசேனு! இதுதான் நல்ல சமயம். அவன்
மிகவும் பல மொடுங்கி ஓய்ந்து நிற்கிருன். நீ
இப்போது பால்மாருமல் தைரியத்தை முன்
னிட்டு யுத்தஞ் செய்யவேண்டும். உன்னுலே
யன்றி மற்றொருவனு லிவன் சாகமாட்டான்.
ஏனெனில், முன் இவனுக்கும் எங்கட்கும் யுத்
தம் நடந்தபோது, நானும் என் தமையனு
கிய பலராமனும் கோமந்த பருவதத்தின்மே
லேறக்கண்டு, இவன் அம்மலையை கொளுத்தி
விட்டான். அப்போது நாங்களிருவரும் இவ
னுடைய சேனையினடுவே குதித்து சேனைகளை
யெல்லாம் நாசஞ் செய்யவே, அதனுல் வெகு
கோபத்துடன் எங்கள்மேற் பாய்ந்தான்.
அதுகண்டு பலராமன் மகா கோபாவேசங்
கொண்டு கலப்பையை இவன் கழுத்தில்
மாட்டி இழுத்துத் தள்ளி உலக்கையா லடிக்க
யத்தனப்படுகையில் ஆகாசத்தில் அசரீரி
வந்து, ஓ பலராமா! நீர் இவனைச் சம்மரிக்க
வேண்டாம் இவனுக்கு வீமசேனனுற்
சாவென்று சொல்லிற்று. அதனுலவர் கொல்
லாமல் விட்டுவிட்டார். அதுபற்றி சித்தமாய்
உன்னுலேயே இவன் சாகப்போகிருன் நீ
அஞ்சாமல் யுத்தஞ்செய். உன் பிதாவாகிய
வாயுபகவானை மனதில் நினைத்துக்கொள்.
அதனுல் உனக்கு இளைப்பெல்லாம் போய்ப்
பலம் வளர்ந்து தைரியம் வரும். ஆனபடியி
னுலே வாயுபகவானை மனதில் நினைத்துத்
துதித்துக்கொண்டு யுத்தஞ்செய்யென்றுகுறிப்
பாய்ச் சொல்லக்கேட்டு, வீமசேனன் தைரியங்
கொண்டு வாயுவை மனதில்நினைத்து தியானம்
பண்ணி, ஸ்ரீ கிருஷ்ணனையுந் தியானித்துத்
தன் தமயனையும் நினைந்து பலமும் உற்சாகமு
மதிகப்பட்டவனுகித் தோள்தட்டிச் சிங்க
நாதஞ்செய்து பாய்ந்து வருகையில் காலங்
குறுகியபடியால் ஜராசந்தன் பயந்து, சவுரிய
மழிந்து நின்ருன். அப்படி யிராநின்ற ஜரா
சந்தனை வீமசேனன் லாகவத்தினுற் கால்
களைப்பிடித்துக் கரகரவென்று பத்து சுற்று
சுற்றித் தன் முழங்காலில் வைத்து முறித்து
காலால் உதைத்துத் துவைத்து கிழித்தான்.

இவ்விதமாக இரண்டு மூன்று தடவை
வீமசேனனுற் கிழித்தெறிந்தும், அவனுடல்
மீண்டும் ஒன்ருய்ச் சேர்ந்து வந்து பலமாகிய
யுத்தஞ் செய்யவே, வீமசேனன் களைத்திளைத்
துக் கண்ணனைப் பார்த்தான். அர்ச்சுனனும்
அண்ணனுக்கு அபாயம் வருவதா யிருக்கிற
தென்று ஸ்ரீ கிருஷ்ணபகவானுடன் சொல்லி
முறையிட்டுக்கொண்டான். அந்த வேளையிற்
பகவான் பார்த்தனுடன் கலந்து பேசி ஒரு
துரும்பை யெடுத்து இரண்டாகக் கிழித்துத்
தலைமாற்றிப் போட்டுக் காட்டினுர். அந்தச்
சவுக்ஞையைக் கதாயுதனறிந்து, ஜராசந்தனை
மாட்டி பம்பரம்போலாட்டி கிழித்துத் தலை
மாற்றி யெறிந்து சிங்கநாதஞ் செய்தான்.
அப்படி செய்யவே ஜராசந்தன் மூச்சுத்
திணறி, வாயாலும் மூக்காலும் உதிரத்தைக்
கக்கிக்கொண்டு கோவென்று கதறித் துடித்து
உயிரை விட்டான். வீமசேனனுற் கிழிக்கப்பட்
டுப் பிராணனை விடும்போது ஜராசந்தன் கத
றிய வோசையினுலும் அக்காலத்தில் வீமசே
னன் செய்த சிங்கநாத வோசையினுலும்,
பிரளயகாலத்து மேகத்தின் முழக்கத்தாலெப்
படி அண்டங்கள் எதிர்ந்து செவிடுபடுமோ,
அப்படியே பிண்டங்களெல்லாம் நிலை கலங்
கினவாய் அதிர்ந்து செவிடுபட்டன.

பின்பு வீமன் பிரேதமாய்ப்போன ஜரா
சந்தனை இழுத்துக் கொண்டுவந்து அரண்
மனை வாசலிற் போட்டு, வெகு கம்பீரமாகிய
நடையுடனே வரண்மனைக்குட்சென்று, தேர்ச்
சாலையி னிடத்திற்குப் போய் ஜராசந்தனு
டைய தேரைக் கொண்டுவரச்சொல்லி, அதன்
மீதில் கிருஷ்ணுர்ச்சுனருடன்கூடத் தானு
மேறிக்கொண்டு, வெளிப் புறப்பட்டு சிறைச்
சாலையினிடத்திற்கு வந்திழிந்து அதில் வைத்
திருந்த ராஜாக்களை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ண
னுடைய அநுமதியினுல்விடுவித்து அவர்களுக்
குச் சமாதானஞ் சொல்ல, அவர்களெல்லாம்
ஸ்ரீ கிருஷ்ணன் முதலானேரை மிகவும் பூசித்
தார்கள். அப்படி அவர்களால் பூசிக்கப்பட்டுத்
தங்களைப் புடைசூழ்ந்துவர, நவமணிகள்
இழைத்த பொற்பட்டங்கள் அணிந்தும், முத்
துச்சரங்களால் அலங்கரிக்கப்பட்ட வாயு
வேக மனே வேகங்களாகிய நான்கு குதிரை
கள் கட்டியும், ஆகாயத்தை யளாவி நிற்கும்
துவச நாட்டியும், வெகு விசித்திரப் பதுமை
கள் விதவிதமா யமைத்தும், மேரு பர்வதம்
போ லிராநின்ற அந்த ரதத்தின்மீதில் ஸ்ரீ
கிருஷ்ண மூர்த்தியானவர் வீமார்ச்சுனர்களு
டன் ஏறி, ராஜவீதியில் வருமளவில், அந்
நகரத்திலிருக்கும் ஜனங்களெல்லாம் மும்மூர்
த்திகளைப்போன்ற இம் மூவரையுங்கண்டு
இவர்களைப்போல் சுதந்தரத்தன்மையும் வீரத்

தன்மையும் கம்பீரத்தன்மையும் எங்கேயும் கண்டதில்லை. இவர்கள் மகா புருஷாள் இவர்களுடன் நேசித்திருந்தால் நமது ஜராசந்த மகாராஜன் வெகு மேன்மைகளை யடைவர். காலங் குறுகியபடியினால் அவருக்கு இவர்களுடன் பகை வந்தது இவர்கள் வெகு தருமசீலரென்று பேசிக்கொண்டு வியப்புடனேயும் சந்தோஷத்துடனேயும் பார்க்கச் சென்றார்கள். அந்தத் தேரின் துவச நுனியிற் கருடனை வசிக்கும்படி கிருஷ்ணன் கட்டளையிட்டபடியினாலே கருடன் அதில் வந்து மகா சிறப்பாய் விளங்கினான். அப்போது அந்த ரதமானது தேவலோகத்தில் உபேந்திரருடைய ரதம் போற் பிரகாசித்தது. அந்த ரதம் வந்த வரலாறு எப்படி யென்றால், சொல்லுகிறேன் கேளும்:

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! முற்காலத்தில் ஜராசந்தனுடைய குலத்தில் வசு என்று ஒரு மகாராஜ னிருந்தான். அவன் ஒரு கால விசேஷத்திலே இந்திரனுக்குச் சகாயஞ் செய்தபடியினாலே இந்திரன் மிகுந்த விசுவாசத்துடன் தனது ரதம்போல ஒரு ரதம் நிருமித்துக்கொடுத்தான். அதில் உபரிசரவசு வென்கிற மகா புருஷன் ஏறிக்கொண்டிருந்தார். அவருக்குப் பிற்காலத்தில் அந்தக் குல முறையாகவே எல்லோரும் அதிலேறி வந்தார்கள். முடிவில் ஜராசந்தன் இதன்பேரில் ஏறிக்கொண்டு சகல ராஜாக்களையுஞ் ஜெயித்தான் அந்த ரதம் வெகு பிரபாவ முடையது அதை வெல்வது வருத்தம் வெகு பலமும் காந்தியு முடையது இப்படிப்பட்ட திவ்விய ரதத்தின்மீ தேறிக்கொண்டு மூவரும் ராஜ வீதியால் வந்து ஒரு விசாலமாகிய விடத்தில் நின்றார்கள். அப்போது நகரத்திலிருக்கிறபேர்கள் காணிக்கைகளுடன் வந்து கண்டார்கள். சிறையிலிருந்து விடுபட்ட பேர்கள் இவர்களைப் பார்த்து, ஓ மகானுபாவர்களே! நீங்கள் லோகத்திலே துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் செய்வதற்காக அவதரித்த மகா புருஷர் ஆனபடியினாலேதான், மீளாச் சிறையில் அகப்பட்டு முஷ்டிக்குச் சமீபமாயிருந்த எங்களை விடுவித்து ரட்சித்தீர்கள். இது சாதாரணமான பேர்களினாலே ஆகத் தகுந்ததோ ஜராசந்தனைச் செயிப்பது. இந்திரன் இயமன் முதலானோருக்குங்கூட அசாத்திய மாச்சுதே. உங்கள் பெருமையை நாங்கள் சொல்லி முடியுமோ? சாக்ஷாத் பகவானாகிய கிருஷ்ணனும் தேவாம்சரான வீமார்ச்சுனருமாகிய நீங்கள் மூன்று பேரும் இவ்வுலகத்திற்குப் பிராணனும் நேத்திரம்போல விருக்கிறீர்கள். நீங்கள் செய்த உபகாரத்திற்குப் பிதியுபகாரஞ் செய்ய யார் தரம்? ஆகிலும் எங்களுக்கியன்ற மாத்திரம் ஏதாகிலும் ஒரு நன்மை செய்யாவிட்டால், எங்கள் மனதுக்குத் திருப்தி வரமாட்டாது. ஆனதுபற்றி எங்களாற் சொற்ப பிரயோசனம் பெற்றுக்கொள்ள பிரார்த்திக்கிறோமென்று சொல்லக்கேட்ட கிருஷ்ணபகவான் சொல்லுகிறார்:

ஓ ராஜர்களே! எங்கட்கு நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டுவதில்லை. இப்போது அன்பினாற்சொன்ன வார்த்தையினாலே சகல நன்மைகளுஞ் செய்ததுபோலாயிற்று. ஆகிலும், உங்களுடைய மனதிருப்திக்காக ஒருவார்த்தை சொல்லுகிறேன் கேளுங்கள். மகா தருமசீலரும் குணமேருவும் விவேகியுமாகிய உதிஷ்டிர மகாராஜன் இராஜசூய யாகஞ்செய்ய யத்தனப்பட்டிருக்கிறார். ஆனால், அவருடைய தம்பிமார்கள் மகா சூரர். எல்லாவற்றையுஞ் செயிக்க மாட்டுவார்கள். ஆகிலும், நீங்களும் கூடவிருந்து அந்த யாகத்தை எவ்விதமாக நிறைவேற்ற வேண்டுமோ? அவ்விதமாக வேண்டிய சகாயஞ்செய்து நிறைவேற்றத் தக்கதென்று கோருகிறோம். இந்த நன்மையைத்தான் உங்களாலே பெறக் காத்திருந்தோமென்று சொல்லக் கேட்டு, ராஜாக்களெல்லாம் மகா பாக்கியம் அப்படியே செய்வோமென்று வணக்கத்தோடு சொன்னார்கள். இப்படியிருக்க, ஜராசந்தனுடைய குமாரனாகிய சகதேவ மகாராஜன் அநேக நவரத்தினாபரணங்கள் முதலாகிய உடுப்புகளை எடுத்துக்கொண்டு, மந்திரிகள் சேனாபதிகள் புரோகிதர் முதலாகிய பரிவாரங்களோடு ஸ்ரீ கிருஷ்ணன் முதலானோரிருக்கிற விடத்துக்கு வந்து பணிந்து, ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்து, சுவாமி! தேவரீர் லோகரட்சணைக்காக அவதரித்த பகவானென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட தேவரீர் நினைத்தால் எந்தக் காரியம் நிறைவேறாது? தேவரீருடைய செய்கைக்குச் சகாயமாகப் பிறந்திருக்கிற மகா புருஷரானபடியினாலே பாண்டவர்க ளிடத்தில் தேவரீருக்கு மிகுந்த விசுவாசமுண்டாயிருக்கிறது. உதிட்டிரர் மகா தருமவான் அவருடைய காரியங்களை யெல்லாம் நிறைவேற்றி, அவருக்கு மேன்மையை வருவிக்கவேண்டி

யது அகத்தியந்தான். இந்த வீமார்ச்சுனரும் மகா பராக்கிரமசாலிகள் வெகு தருமிஷ்டிகள். ஆனதுபற்றி, நீங்கள் என் பிதாவின் விஷயத்தில் செய்ததைக் குறித்து எனக்கு மனஸ்தாப மெவ்வளவுமில்லை அப்படியே நீங்களும் என் பிதாவினிடத்திலிருந்த குரோதத்தைவிட்டு, அடைக்கலம் புகுந்த என்னைத் தயையினாலே காத்துவரவேண்டும் இதுதான் என்னுடைய முக்கியமாகிய பிரார்த்தனை இனிமேல் என் பிதாவுக்குக் கருமம் பண்ணும்படி கட்டளை யிடவேண்டுமென்று சொல்லினான்.

அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணபகவான் அந்தச் சகதேவனை நோக்கி, ஓ சகதேவா! உன்னிஷ்டத்தில் எங்களுக்குச் சந்தோஷமே யல்லது எவ்வளவும் கோபமில்லை. உன்னிஷ்டப்படி உன்னோடு சிநேகஞ் செய்தோம் உன் பிதாவுக்கு நடக்கவேண்டிய கருமங்களை நன்றாய் நடத்தென்று சொல்ல, அந்தச் சகதேவன் மனத்திருப்தியுடனே போய்த் தன் பிதாவாகிய ஜராசந்தனைத் தூக்கிப் புழுதி முதலானவைகள் போக்கி, ஸ்நானஞ்செய்வித்து கவச கிரீட குண்டல முதலாகிய சகல ஆபரணங்களையும் பூட்டி, திவ்விய வஸ்திரம் போர்த்துச் சந்தன புட்பாதிகளால் அலங்கரித்து, முத்துமாலைகளாற் கோத்துக் குச்சுவிடப்பட்ட பொற்சிவிகையில் மெதுவாகிய சயனத்தின் மேல் வளர்த்தி, மந்திரிகள் சேனாபதிகள் சேனைகள் முதலாகிய பந்துசன பரிவாரங்களெல்லாஞ் சூழ்ந்து, பொன்மலர்களையும், பொரிகளையும், கெந்த பொடிகளையும் இறைத்துக்கொண்டு, கண்ணீருடன் செல்ல, சகல வாத்தியங்களும் முழங்க, வெண்குடை வெண்சாமரம் முதலாகிய உபசாரங்கள் விளங்க, புரோகிதர் அக்கினியையும் யாகபாத்திரங்களையும் எடுத்துக்கொண்டு பின்செல்ல, ஸ்திரீகள் தலைவிரிகோலமாய் அழுதுகொண்டு வர, ஓர் திவ்விய உத்தியானத்துக்கு எடுத்துக்கொண்டுபோய் சந்தனக்கட்டைகள், அகிற்கட்டைகள், தேவதாருக்கட்டைகள், இவைகளினாற் சிதையடுக்கி, அதன்மேல் நெய்யில் நனைத்த மெத்தைபோட்டு கற்பூரக்கட்டிகளைப் பரப்பி, கிருஷ்ணாசனம் விரித்து ராஜாவை வைத்து, அவன் தேகங்களில் யாகபாத்திரங்களை நிறைத்து, யசுர்வேதவிதிப்படிச் சடங்குகள் செய்து, அநேகம் பிராமணர் வேதமோத யாகாக்கினியாற் சமஸ்காரஞ்செய்து மறுநாள் பரிசுத்தமாகிய பசுவின்பாலினாற் சஞ்சயனநடத்தி, அஸ்திகளைக் கங்கையிலிட்டு, சகல சிராத்தங்களையும் விதிப்படி நடத்தி, வேதியர்கட்கு கோதானம்-பூதானம்-சுவர்னதானம்-வஸ்திரதானம்-அன்னதான முதலாகிய சகல தானங்களும் வழங்கி, கிரியைகளையெல்லாம் கிரமப்படி முடித்து, அநேகம் யானைகள்-குதிரைகள்-தேர்கள்-ரத்தினங்கள்-ஆபரணங்கள் இவைகளை யெடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் முதலானோர் இருக்குமிடத்திற்கு வந்து அவர்களைப் பார்த்து, ஓ மகா புருஷர்களே! எனக்கியைந்த மாத்திரம் இந்தத் திரவியங்களைக்கொண்டுவந்தேன். மனம் பெரிதுபண்ணி இவைகளை வாங்கிக்கொண்டு உதிட்டிர மகாராசனுடைய யாகத்துக்கு உபயோகப்படுத்த வேண்டுமென்று பிரார்த்திக்க, அதுகேட்டு மகிழ்ச்சியுடனே ஸ்ரீ கிருஷ்ணன் முதலாகிய மூவரும் அவைகளைக் கைக்கொண்டு ஜராசந்தன் குமாரனை அரண்மனைக்குச் செல்லும்படி நியமித்துக் காவலினின்று விடுபட்ட ராஜாக்களைப்பார்த்து, ஓ ராஜாக்களே! நீங்கள் உங்கள் தேசங்களுக்குப்போய் பின்பு ராசசூய யாகத்துக்கு வாருங்களென்று சொல்ல, அந்த ராசாக்கள் நாங்களிப்போதே உங்களுடன் கூடவந்து உதிட்டிர மகாராசாவைக் கண்டு பணிந்து தேசங்களுக்குப் போவோமென்றார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் முதலானோர் ஆனால் அப்படியே ஆகட்டுமென்று அவர்களுடன் கூடவே கோலாகலமாக இந்திரப்பிரஸ்தத்தை நோக்கிப் புறப்பட்டு நகரம் வந்து சேர்ந்து உதிட்டிரரைக்கண்டு நமஸ்காரஞ்செய்து நின்றார்கள்.

இப்படி நமஸ்காரஞ்செய்துநிற்கிற அம்மூவருக்கும், உதிட்டிரர் பல ஆசிகள்கூறித் தழுவி யணைந்து சந்தோஷப்பட்டார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் உதிட்டிரரைப்பார்த்து, ஓ மகாராசனே! உமது அனுக்கிரகபலத்தினாலே வீமசேனன் ஜராசந்தனைச் சங்காரஞ்செய்து, சிறையிலிருந்த ராசாக்களை விடுவித்து வெகு திரவியங்களைக் கொண்டுவந்தான். உமது ஆக்கினையின்படி நானும் அர்ச்சுனனும்கூடப் போயிருந்து ஒரு தீங்கும் வரவொட்டாமற் காத்துவந்தோமென்று சொல்ல, அதுகேட்ட உதிட்டிரர் ஸ்ரீ கிருஷ்ணா! உம்முடைய பரிபூரணகிருபை நீங்கள் பெற்றிருக்கு மளவில் ஒருகுறைவும் நேரிடாது. சகல காரியங்களும் நிறைவேறும். ஆனபடியினாலே ஜராசந்தன் முடிந்தது அதிசயமோ? வீமசேனனாலேயும்

அர்ச்சுனனுலேயும் என்னுகும் எல்லாம் உமது தேஜோமயபலமேயன்றி வேறில்லே. இயல்பாக அடுத்தவரைக் காப்பவராகிய உமது பெருமை என்னுற் புகழத்தக்கதோ? சகல மேன்மைகளும் எனக்குக் கிடைத்தன. இதைக் குறித்து என்னுல் உமக்குச் செய்யத்தக்கது யாதுண்டு? இப்படியே எல்லாவற்றையும் நிறைவேற்றிக் காத்தருள் வேண்டுமென்று சொல்லி எழுந்து கட்டிக்கொண்டு, கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக நின்ருர். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் கூடவந்த ராசாக்களே யெல்லாம் அழைத்து உருட்டிரருக்குக் காட்ட, அந்த ராசாக்கள் உதிட்டிரரைப் பணிந்து துதிக்க, தருமபுத்திரர் அவர்களுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து, நாடுகளுக்குச் செல்ல விடைகொடுக்க, அவர்களும் அவரைபூசித்து, கிருஷ்ணன் முதலானேரிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் பட்டணங்களுக்குச் சென்ருர்கள். பின்பு ஜராசந்தன் குமாரனுகிய சகதேவன் கொடுத்த பரிசுகளேக் கொணர்ந்து காட்டக் கண்ட தருமராசனுனவன் சந்தோஷப்பட்டு, அந்த ஜராசந்தனுடைய மேன்மைபெற்ற ரதத்தை ஸ்ரீகிருஷ்ணனுக்கு வெகுமதிசெய்தார். அந்ததேரைக் கண்ணன் வாங்கிக்கொண்டு பாண்டவர் ஐவரையும் குந்தி துரோபதை சுபத்திரை முதலானவரையும் தகுந்தபடியுபசரித்துச் செலவு பெற்றுக்கொண்டு யாவரும் புகழ அத்தேர்மீதிலேறித் துவாரகைக்குச் சென்ருர். வீமசேனன் முதலாகிய நால்வரும் சிலதூரம் கிருஷ்ணனுடனே போய் வழிவிடுத்து, அவரிடத்தில் விடை பெற்றுத் தங்கள் நகரத்துக்கு வந்து வெகு மேன்மையுடனே வாழ்ந்துக் கொண்டிருந்தார்கள்.

### அருச்சுனன் உத்தரதிக்கு விஜயம்

ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகைக்குப் போன பின்பு ஒருநாள் சபையில் மந்திரிகளும் தம்பிமார்களும் வியாசர் முதலாகிய அனேக ரிஷிகளும் கூடியிருக்கையில் தருமபுத்திரர் நாரதர் சொல்லிப்போன இராஜ சூயத்தைக் குறித்து யோசித்து, ஓ! ஓ! அந்த மகா யாகம் நம்மால் எப்படி கிரமமாய் நிறைவேறப் போகிறதென்று மனதிலே மிகவும் வியாகூலத்துடனிருப்பதைக்கண்ட அருச்சுனன் தமயனுரைப் பார்த்து, அண்ணு! நீரேன் வியாகூலப்படுகிறீர்? ஜராசந்தன் மாண்டதினுலே சத்துருக்களுடைய வேரறுக்கப்பட்டது இனி ராசாக்களைச் செயிப்பது மிகவெளிதாயிருக்கும். நான் அக்கினியின் அநுக்கிரகத்தினுலே ஒருவராலும் வெல்லக்கூடாத தேரையும், அப்படிப்பட்ட காண்டீபமென்னும் வில்லேயும் அட்சய தூணியையும், வானரத் துவசத்தையும் பெற்றிருக்கிறேன். ஆனபடியினுலே நானே போய் அரசர்களைச் செயித்து, வெகு பொருள்களைக் கொணர்ந்து பொக்கிஷத்தை நிரம்பச்செய்கிறேன். அப்பால் அப்பெரும் வேள்வியைச்செய்து மேன்மையையும் கீர்த்தியையும் பெறலாம். அதன்பின் நானும் வீமசேனனேடு நகுலசகாதேவராகிய அவர்கள் மூவரும் உமது பாதாரவிந்தத்தருகிற் காத்திருக்க குறைவென்ன இருக்கிறது. ஆதலால், இனி நாங்கள் ஜய யாத்திரைக்குப்போக ஆக்கியாபிக்கவேண்டுமென்று கேட்க அதுகேட்ட உதிட்டிரர் மனதிற் சந்தோஷங்கொண்டிருந்தார். இப்படி கம்பீரமாகச்சொல்லிய அருச்சுனனே வியாசமுனிவர் பார்த்து, குழந்தாய் அர்ச்சுனு! உன் குலத்துப் பெருமைக்கும், நீ கற்றிருக்கிற வில் வித்தையின் அருமைக்கும் தருமபுத்திரருடைய யோக்கியதைக்கும் தகுந்த பேச்சைச் சொன்னுய். உன்னுலே யாவும் ஜெயிக்கப்படுமென்பதற்குச் சந்தேகமில்லே. உன் பயத்தினுலும் கிருஷ்ணனுடைய நயத்தினுலும் தனது தருமத்தினுலும், உதிஷ்டிரர் வெகு மேன்மையாகிய செல்வத்தை யடைந்து விளங்குவர். இப்போது நீ வடதிசைக்குச் சென்று அரசரை யெல்லாம் வென்று வரக்கடவை. வடதிசையில் தேசங்கள் வெகுவாயிருக்கின்றன. பலமுஞ் செல்வமும் பொருந்திய ராஜாக்களும் வெகுபேரிருக்கிருர்கள். ஆதலால், நீயே அத்திசைக்குப் போகல் வேண்டும். கீழ்த்திசைக்கு வீமசேனன் போகட்டும். மேற்றிசைக்கு நகுலன் செல்லட்டும். தென் திசைக்குச் சகாதேவன் நடக்கட்டும். இவ்வாறு நீங்கள் போய் ஜெயித்து வந்தவுடனே யாகத்தை நிறைவேற்றலாமென்று சொல்லக்கேட்டு அப்படியே ஜெயிக்கிறேமென்று அந்த நான்குபேரும் அவர் வார்த்தையைச் சிரசின்மேற் கொண்டு, அவரையும் தவுமியரையும் தமயனுரையும் பணிந்து திக்கு விஜயஞ் செய்வதற்குச் சித்தமானுர்கள். அப்போது உதிஷ்டிர மகாராஜன் நல்ல பிராமணரை யழைப்பித்து மங்கலச் சடங்குகள் செய்வித்து, வெகு தானங்கள் வழங்கி, அவர்களால் ஆசீர்வாதம் பெறுவித்துத் தம்பிமாரை நோக்கித், தானும் மங்களாசாசனஞ்சொல்லி,

நல்ல முகூர்த்தத்திலே பிரயாணம்பண்ணி
யனுப்புவித்தார். அந்தப் பாண்டவர்கள் நால்
வரும் சதுரங்கச் சேனைகளோடு புறப்பட்டு,
தத்தமக்குக் குறித்த திசைகளை நோக்கிச் சென்
றார்கள்.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அவர்க
ளுடைய திக்குவிஜயத்தைச் சிறக்கச் சொல்லு
கிறேன் கேளும். கடலானது கரைபுரண்டு
வருவதுபோ லிராநின்ற சதுரங்க சேனைக
ளுடனே அர்ச்சுனன் வடதிசையிற் பிரவே
சிக்க, அங்கே யிருந்த வெகு ராஜாக்கள் அது
கண்டு கும்பலாய்க் கூடிக்கொண்டுவந்தெதிர்த்
தார்கள். அர்ச்சுனன் அவர்கள்மீதில் மிகுந்த
கோபங்கொண்டு வில்லை வளைத்துப் பாணங்
களைச் சந்தானம்பண்ணி வருஷிக்க, அந்தப்
பாண வருஷத்தைச் சிலநேரம் வரையில்
தடுத்துஞ், சிலநேரம் வரையிற் சகித்தும்,
அப்பால் சகிக்கக்கூடாமற் போனபடியினாலே
சிலர் ஓடிப்போனார்கள். சிலர் தங்களுக்குள்ள
பொருள்களைக் காணிக்கையாக வைத்து அர்ச்
சுனன் பாதத்திற் பணிந்தார்கள். இவ்வாறு
பனி மண்டலத்தைச் சூரியன் சிதறவடிப்பது
போல் அர்ச்சுனன் அந்த ராஜமண்ட
லத்தைக் கதற அடித்து, வெகு திரவியங்களை
வாங்கிக்கொண்டு குந்ததேசத்திற் சென்று
அத்தேசத்து அரசரை நிமிஷத்திற்குள்ளா
கச் செயித்து, அவர்கள் கொண்டுவந்த
பொருளை வாங்கிக்கொண்டு, அவர்களையுங்
கூட வரச்செய்து, சாளவதேசத்து ராஜதா
னிக்குப் போய் அச் சாளவராஜனோடு யுத்தம்
பண்ண, அந்த ராஜனும் நெடுநேரம் அர்ச்
சுனனோடு யுத்தம்பண்ணி அவன் பல பராக்
கிரமங்களைப் பார்த்து, அப்பா! இவனோடு
போராட நம்மால் முடியாதென்று மனதில்
நினைத்து, அர்ச்சுனனோடு சிநேகம் பண்ணும்
படியான அபிப்பிராயத்தைக் காண்பிக்க,
அர்ச்சுனனும் அப்படியே அவனுடன் சிநே
கஞ் செய்து வெகு பரிசுகள் பெற்றுக் காசி
தேசத்திற்குப் போய், அத்தேசத்து ராஜனாகி
யும் மகாபாபாத்துமாவாகியுமிராநின்ற சுனய
னென்கிறவனை எதிர்த்து யுத்தஞ்செய்து,
அவனைத் தனக்குச் சேவகனாக்கி, அவனரண்
மனையைக் கொள்ளை யடித்து, அவனுக்குட்
பட்ட சில தீவுகளி லிருந்தவர்களையுஞ் ஜெயி
த்து, அவர்களில் முக்கியனாகிய பிரதிவிந்திய
னென்கிற இராஜாவையும் அவனுக்குஅமைச்
சராயுள்ள பேர்களையும் மற்றவர்களையுங் கீழ்ப்
படுத்தி, அங்கிருந்து சகரரால் வெட்டப்பட்ட
சமுத்திரங்களின் நடுவே வடபக்கத்திலே
உண்டாகிய ஏழு தீவுகளுக்கும் போய் அவ்வி
டத்து ராசாக்களைச் சுவாதீனஞ் செய்து வெகு
திரவியங்களைச் சம்பாதித்து ஈசானியபக்கத்
திற் சென்று அங்கே ஒரு கூட்டமா யிருந்து
கொண்டு நாடுகளைக் கொள்ளை யடித்துவருந்
திருடர்களோடு யுத்தஞ் செய்து, சின்னபின்ன
மாய் வெட்டி மடித்து அனேகங்கோடி பொரு
ளைக் கைக்கொண்டு காம்போசமென்னும்
தேசத்து ராஜாவையும் இருஷிகமென்னுந்
தேசத்து ராஜாவையும் வெற்றிகொண்டு நடுச்
சமுத்திரத்தி லிராநின்ற பிராக்சோதிஷம்
என்கிற பெருநகருக்குப் போனான்.

அந்தப் பிராக்சோதிஷ நகரத்தி லிருக்
கிற நரகாசுரனுடைய குமாரனாகிய பகதத்த
னென்கிறவன் ஓர் வெள்ளை யானையின்மீதில்
ஏறிக்கொண்டு, வெகு சேனைகள் புடைசூழ
அர்ச்சுனனோடு யுத்தத்திற்கு வந்தான். அப்
போது இருவருக்குங் கொடிய யுத்தமுண்டா
யிற்று. அந்த யுத்தம் எட்டுநாள் ஓயாமல்
நடந்தது. இரண்டு சேனைகளிலும் அநேக
யானைகள் மலைபோற் குவிந்து வீழ்ந்திறக்க
வும், அங்கிருந்து அருவிகள்போல உதிர
வாறுகள் பெருகவும், அவைகளில் துண்டித்த
கை கால்கள் முதலான அவயவங்களும் கத்தி
முதலான ஆயுதங்களும்மீன்கள்போல ஓடவும்,
மண்டையோடுகள் ஆமைகள்போ லசையவும்,
குதிரைகளுடைய தேகங்கள் உடைந்த கப்
பல்கள்போலக் காணவும், மனிதர் தேகங்கள்
தோணிகள்போல மிதக்கவும், இயமனுடைய
மகிமைகளைத் துதிப்பதுபோற் கூளிகள் கழுக்
கள் முதலிய கொடும் பறவைகள் கூவ
வும், ரத்த ஆறுகளிற் பேய்கள் கும்புகூடி
விளையாடவும், அந்தத் துர்க்கந்தத்தை எடுத்
துக்கொண்டு கொடிய காற்று வீசவும், அந்த
யுத்த பூமி வெகு பயங்கரமாகவும் யாவரும்
அருவருக்கத் தக்கதாகவு மிருந்தது. அந்தப்
பகதத்தனுக்குச் சகாயமாகக் கிராதேசத்தா
ரும் சீனதேசத்தாரும் இன்னும் அநேக தீவு
களி லிருக்கின்றபேர்களும் யுத்தஞ் செய்தார்
கள். அவர்களை யெல்லாம் அர்ச்சுனன் சரமாரி
பொழிந்து, கைவேறு கால்வேறு தலைவேறு
உடல்வேறாகக் கண்டங் கண்டமாய்த் துண்
டிக்கவே பெருங்காற்றில் அகப்பட்ட மேகம்
போல அவர்களெல்லோரும் அவனுடைய
பராக்கிரமத்தைச் சகிக்கமாட்டாமல், தலைவிரி

கோலமாய் ஒருவரை யொருவர் வெறுத்துக் கொண்டு திசைதோறும் ஓடினார்கள்.

இவ்வாறு சேனைகளெல்லாம் ஓடக்கண்ட பகதத்தன் வெகு கோபமடைந்து, தன் யானையை அர்ச்சுனன் தேருக்குச் சமீபத்தில் விரைவிற் செலுத்தி, வில்லை வளைத்து நாணி யேற்றி நாணொசைகொண்டு அம்புகளைத் தொடுத்துப் பிரளயகால மேகமானது மலை யுந் துளைபடும்படி மழைபொழிவதுபோல அர்ச்சுனனுடைய தேர் குதிரை முதலானவை கள் எல்லாந் துளைபட்டுச் சிதறிப் பறந்தோ டும்படியாய் அடித்தான். அச் செய்கையால் அர்ச்சுனன் காலாக்கினி ருத்திரன்போல வெகுண்டு, ஓர் அம்பினால் அந்தப் பகதத்த னுடைய வில்லை முறித்து, ஓர் அம்பினால் கவ சத்தைக் கிழித்து ஈரம்புகளால் அவனுடைய சுப்பிரதீபமென்னும் யானையின் துதிக்கையி லடிக்க, அந்த யானை பதைபதைத்து வீறிட் டுக்கொண்டு பின்னே திரும்பியோட, அது கண்ட அர்ச்சுனன் சங்கம் பூரித்துச் சிங்கநா தஞ் செய்ய, அதனாலே பகதத்தன் மிகவும் நாணி அர்ச்சுனனுடைய பல பராக்கிரமங் களைச் சகிக்க நம்மா லாகாதென்று மனதில் நினைத்து அவனுக்குச் சமீபத்தில்வந்து புன் னகையுடனே அவனைப் பார்த்து, ஓ அர்ச் சுனா! இக்காலவரையில் என்னோடு நின்று போர் செய்தவன் யாருமில்லை. உன்னை யொரு வனைத்தான் கண்டேன். உன்னுடைய பல மும், பராக்கிரமமும், லாகவமும், சாமார்த்திய மும், தைரியமும் மிகவுங்கொண்டாடத்தக்கதா யிருக்கின்றன. இப்படிப்பட்ட உன்னோடு எனக்குப் போர் செய்யும்படி நேரிட்டதற்கு வெகு சந்தோஷப்படுகிறேன். பாண்டு மகா ராஜன் மகா பாக்கியவான்; உன் குலம் இன்று தான் கீர்த்தி பெற்றது. எட்டுநாள் ஓயாமல் யுத்தஞ் செய்தும், இளைப்பில்லாம லிருக்கிற மகா வீரனாகிய உன்னுடனே இனிப் போர் செய்ய எனக்குச் சம்மதியில்லை. இதற்கு முக் கிய காரணம் என்னவென்றால், உனக்குப் பிதாவாகிய தேவேந்திரனுக்கு நான் சினே கிதன். எனக்கும் அவனுக்கும் பிராதாவென் கிற முறையுண்டு. ஆனபடியினாலே இந்திர புத்திரனாகிய நீ எனக்கும் புத்திரனாக வேண் டும். புத்திரனிடத்திலே வாத்சல்லியம் பிதாக் களுக்கு இயல்பாதலாலும், அப்புத்திரனும் பிதாவும் போர் செய்வது தரும விரோதமாத லாலும், உன்னோடு இனி யுத்தஞ் செய்ய என் மனம் ஒப்பவில்லை.

ஆனால், இதுவரையில் யுத்தம் பண்ண வேண்டிய தென்னவென்றால், நீ வெகு தைரி யத்துடனே எதிர்த்து வரக்கண்டு, உன் சாமர் த்தியந் தெரிந்துகொள்ள வேண்டுமென்று யுத்தஞ் செய்தேன். உன் சாமர்த்தியம் அறிந் தேன். இந்திரனுடைய பராக்கிரமத்தை அதி சயித்திருக்கின்ற நானும், உன் எதிரேநிற்க வெருவும்படி யிருக்கிறது. சந்தோஷப்பட் டேன். நீ வந்த காரியமென்ன சொல்லு அதனை யான் நடத்துகிறேனென்று சொல்ல, அதுகேட்ட அர்ச்சுனன் ஆயுதத்தைக் கீழே வைத்துக் கைகூப்பிக்கொண்டு, ஐயா மகாரா ஜனே! என் பிதாவின் சினேகிதராகிய நீர் சந் தோஷப்படும்படி நேரிட்டது என் பாக்கிய வசந்தான். நான் வந்தகாரியம் யாதென்றால், என் தமையனாராகிய தருமபுத்திர மகாராஜன் ராஜசூய யாகஞ்செய்து சம்ராட் டென்னும் பேரையடைய யத்தனித்திருக்கிறார். அதற்காக வடதிசையி லிருக்கும் ராஜாக்களைச் செயித் துக் கட்டம் வாங்குவதற்காக நான் யுத்தயாத் திரை வந்தேன். நீர் இந்திர சகாயனென்று சொல்லுகிறபடியினாலே உம்மைக் கப்பங் கொ டுக்கவேண்டு மென்ன ஆக்கியாபிக்க வல்லவ னல்லேன். இக்காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்று சாதிக்கிறேனென்று சொல்ல, பகதத்தன் ஓ குழந்தாய்! தருமபுத்திரருடைய காரியத்தை நிறைவேற்ற வேண்டி பொருப் புனக்கு மாத்திரமன்று அது எனக்கும் அவசியந்தானென்று சொல்ல, அர்ச்சுனனைத் தன் மனைக்கு அழைத்துக் கொண்டுபோய் விருந்து செய்து கொண்டாட, அர்ச்சுனன் ஒரு மாதவரையில் அவ்விடத்திலேயே இரு ந்து அந்த ஈசானிய திசையிலிருக்கும் அனே கந் தீவுகளை யெல்லாஞ் செயித்து வெகு திர வியங்கள் சம்பாதித்துப் பகதத்தன் வசத்தில் வைத்து, அந்தப் பிராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுக் காபுரமென் கிற விடஞ்சென்று, அந்த ராசாவையும் வசப் படுத்தி, இமயமலையை யடைந்து, அதன் சார்பு மலையாகிய புவனகிரி யென்னும் பர் வதத்தையு மடைந்து அங்கிருக்கும் அநாவில னென்கிற ராஜனோடு யுத்தஞ்செய்து வெற்றி கொண்டு அவனாற் கொடுக்கப்பட்ட பொருள் களை யங்கேயே வைத்துப் பின்னும் வட திசையை நோக்கிப் புறப்பட்டான்.

அங்கே அசந்தாமென்னுந் தேசத்திற் போய், அத்தேசத்தார் வலுவிற் கொணர்ந்து

கொடுத்த பொன் வெள்ளி ரத்தினங்களிவை யாவையும் வாங்கிக்கொண்டு, அங்கிருந்தே பகிர்க்கிரி-உபரிகிரி என்கிற பர்வதங்களிலிருக்கிற வேடராஜர்களைச் செயித்துக் கப்பம் வாங்கிக்கொண் டவர்களையுங் கூடவே வரச்செய்து குலூதமென்னுந் தேசத்திற்குப் போனான். அந்தத் தேசாதிபதியாகிய பிருகந்தனென்கிறவன் மகா சவுரியமுள்ளவன் அவன் கடல்போன்ற சேனைகளுடனே தன் ராச்சியத்தை அர்ச்சுனன் சூழக்கண்டு மிகுந்த ஆக்ரோஷமடைந்து, தனது சகல சேனைகளையுஞ் சன்னாகப்படுத்தி, பூமியதிரும்படி பட்டணத்திற்கு வெளியில் வந்து யுத்தபேரிகை யடித்தான். அவ்வோசை கேட்ட மாத்திரத்திலே அர்ச்சுனனும் தன் சேனைகளைச் சித்தப்படுத்தி, யுத்தத்திற்குச் சித்தமாகி வந்தான். உடனே இவ்விருவருக்கும் மகா யுத்த முண்டாயிற்று. அப்போது இரண்டுசேனைகளுக்கும்சிலநேரம் கலப்பாய்ச் சண்டை நடந்த பின்பு யானையோடு யானைகள், குதிரையோடு குதிரைகள், தேர்களோடு தேர்கள், காலாள்களோடு காலால்களாக யுத்தமாகி, அதன் பின்பு வில்லாளிகளோடு வில்லாளிகள், கத்திக்காரரோடு கத்திக்காரர்கள், கதாயுதரோடு கதாயுதராகத் துவந்துவ யுத்தமுண்டாகி, பூர்வத்தில் தேவருக்கும் அசுரருக்கும் நடந்த யுத்தம்போலிருந்தது. அந்த யுத்தத்திலே பிருகந்தனுடைய சேனைகள் அர்ச்சுனன் சேனையினாலே யடிபட்டுத் தாவரிக்க மாட்டாமற், பெருங்காற்றிலகப்பட்ட செத்தைகள்போல் திக்கு திக்காய்ப் பறந்தோட, பிருகந்தனென்பவன் வில்லை வளைத்துப் பாணங்களை வருஷித்து பாண்டவச்சேனையை வெலவெலக்கச் செய்து தன் சேனைகட்குச் சமாதானஞ் சொல்லிச் சங்கநாதஞ் செய்ய, அர்ச்சுனன் கோபித்து பாணவருஷத்தினால் அக் குலூத இராசனுடைய தேர்க்குதிரைகளையுஞ் சாரதியையுங்கொன்று, வில்நாணியையு மறுத்து, வேகத்தோடுவந்த இரதத்தை ஸ்தம்பிக்கச் செய்ய அதனாலே அந்தராசன் மிகவும்பயந்து, இனி இவனோடு யுத்தத்தை விட்டு வணங்குவதே நன்மையென்று நினைத்து, வேறு குதிரைமீ தேறிக்கொண்டு பட்டணத்திற் சென்று வெகு தனபரணாதிகளை யெடுத்துக்கொண்டு வந்து அர்ச்சுனனுக்குப் பாதகாணிக்கையாக வைத்துப் பணிந்தான்.

அதுகண்ட பாண்டவவீரன் அவனிடத்தில் தயவாகி எங்கள் தமயனார் செய்யப்போகிற இராஜசூய யாகத்திற்கு வந்து நடப்பிக்க வேண்டுமென்று சொல்ல, அவ்வரசன் அப்படியே யாகட்டுமென்று தன் தேசத்து மலைகளிற் பிறந்த உயரமும் பலமுமுள்ள யானைகளில் அனேகமும், மகா வேகம் பொருந்திய தன் தேசத்துக் குதிரைகளில் அனேகமும் கொடுத்தான். அவைகளை யர்ச்சுனன் அங்கீகரித்து, நான் போகும்போது கொண்டுபோகிறேன் அதுவரைக்கு மிவையெல்லாமிங்கேயே யிருக்கட்டுமென்று வைத்துப்போட்டு, அந்த குலூத தேசத்து ராசனாகிய பிருகந்தனையுங் கூட்டிக்கொண்டு, சேனாபிந்துவென்னு மிராசனுடைய தேசஞ் சென்று, அந்த ராசன் வணங்காம லெதிர்த்தபடியால் அவனைப் பரிவாரத்தோடு தேசம்விட்டுத் துரத்தி, அந்நகரிற் புகுந்து அரண்மனையிலிருந்த சம்பத்தையெல்லாஞ் சுவாதீனஞ் செய்துகொண்டு அத்தேசத்திற்குத் தகுந்த அதிகாரியை நியமித்து, அங்கிருந்து வாமதேவமென்னுந் தேசத்தையும் சுநாமா வென்னும் பர்வதத்தையும் தாண்டிப்போய், உத்தரகுலூத தேசங்களை யடைந்து, அவ்விடத்து இராஜாக்களை வென்று கப்பங்கள் வாங்கி, அந்த ராஜாக்களையுங் கூடவே அழைத்துக்கொண்டு அதற்குச் சமீபத்திலிருக்கும் அப் பிரசித்தங்களாகிய ஐந்து தேசங்களுக்குத் தூதரை யனுப்பிக் கப்பங்க ளழைப்பித்துக்கொண்டு, துவீபப்பிரஸ்தமென்னுந் தேசத்திற்குப் போய் அங்கொரு சேனாபிந்து வென்கிற ராஜாவினுடைய பட்டணத்திலே தன் சேனைகளை இளைப்பாறவிட்டுத், தானு மிளைப்பாறி அந்த வேந்தனால் மிகவும் பூசிக்கப்பட்டு அங்கிருந்து விஸ்வகஸ்வ னென்கிற ராஜாவினிடத்திற்குப் போய், அவனோடு யுத்தஞ் செய்து வெற்றிகொண்டு, அவனைத் துரத்தி அவன் நகரத்தைக் கொள்ளையடித்துப் பர்வத தேசத்தானாகிய ஒருவனை அவ்விடத்திற்கு ராஜாவாக்கி உச்சவசங்கேதர் என்று ஏழுகூட்டமா யிருக்கிற க்ஷத்திரியரைச் செயித்துக், காஸ்மீரதேசஞ் சென்று அத் தேசத்து ராஜாக்களாகிய காஸ்மீரர்களென்கிற பத்துக் கூட்டத்தாரையும் வெற்றிகொண்டு உலகமெங்கும் புகழப்பட்ட அத்தேசத்து வஸ்துக்களை விஸ்தாரம் பெற்றுத் திரிகர்த்த தேசம்-கொங்கணதேசம் இவைகளைச் செயித்து அனேகம் உயர்ந்த முத்துக்களைக் கப்பம் வாங்கி அபிசாரதேசத்தைச் செயித்து, கருசதேசத்திற்குப் போய் அவ்விடத்து ராஜனாகிய உரோர்சமானனைச்

செயித்துச் சிங்கபுரத்திற்குப்போய் சித்திரா
யுதனென்கிற ராஜாவோடு யுத்தம்பண்ணி
அவனைச் சிரச்சேதப்படுத்தி, அவன் புத்திர
னுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து வெகு
பரிசுகள் பெற்று, வங்கிதேசத்தை யடைந்து
தன்னைக் கண்ட மாத்திரத்திலே அந்த வங்க
தேசத்து ராஜன் வெகு மரியாதையோடு கொ
ணர்ந்து கொடுத்த கப்பத்தை யங்கீகரித்துப்
பாக்லீக தேசம்போய் அவ்விடத்து ராஜனு
டனே யுத்தத்திற்கு ஆரம்பிக்க, அவனு மகா
பல்வானுகையினலே சைனியங்களைக் கூட்டிக்
கொண்டுவந்து மகா சவுரியத்தோடும் எதிர்
த்து யுத்தஞ் செய்தான்.

அந்த ராஜனுக்கும் அர்ச்சுனனுக்கும்
இரட்டைத் தேர்ச்சண்டை நேரிட, இவன்
பாணங்களை யவன் தடுக்கிறதும், அவன்பாண
ங்களை இவன் தடுக்கிறதும் சமயம் பார்த்து
இவன் தேரை அவன் பின்னேடைச் செய்கிற
தும், அவன் தேரை இவன் பின்னேடைச் செய்
கிறதும், வில்லை வளைக்கிறதும், நாணி யேற்
றிடுகிறதும் அம்பெடுக்கிறதும் தொடுக்கிற
தும் எய்கிறதும் இவை யெல்லாம் எப்போ
தும் அப்படி யப்படியே இருப்பதுபோலக்
காணப்படும்படி விசித்திரமாகச் சிலநேரம்
விற்சண்டை செய்து, முறையே கத்திச்
சண்டை ஈட்டிச் சண்டைகளுஞ் செய்து இவ்
விதமாக நெடுநேரம் யுத்தம் புரிந்தும் வெற்
றிக் காணமலிருக்க, பற்குனன் பிரளயகாலத்
தக்கினிபோல் வெகு கோபாவேச மடைந்து,
தன் சவுரிய முழுமையும் வருவித்துச் சரமாரி
பொழிந்து பாக்லீக தேசத்து ராஜனை வெல
வெல்லக்கச் செய்தான். இவ்விதமாக வெகு பிர
யாசத்தினலே அந்த ராஜனை வெற்றி கொள்
ளவே அவன் இவனுடைய வீரத்தன்மைக்குச்
சந்தோஷித்து யுத்தத்தை நிறுத்தித் தன்
மாளிகைக்கு அர்ச்சுனனை யழைத்துக்கொண்டு
போய் மரியாதை செய்து வெகு திரவியங்க
ளைக் கொடுக்க அவைகளை வாங்கிக்கொண்டு
அர்ச்சுனன் வெகு சந்தோஷத்துடனே அந்த
ராஜாவைச் சேனைகளோடு அழைத்துக்
கொண்டுதரதேசத்தார்-சிங்கதேசத்தார்-காம
தேசத்தார் இவர்களை யெல்லாஞ் செயித்து
வெகு திரவியங்களைச் சம்பாதித்துக்கொண்டு
அனேகம் வகுப்பாய்ப் பிரிந்திருக்கிற துருக்
கர் தேசங்களுக்குப் போனன்.

அந்தத் துருக்கர் தேசத்தில் வெண்மை
யாகிய வண்ணமும் தேர்ந்த சட்டையும் தாடிகளு
முடைய ராஜாக்கள் யாவரும் அர்ச்சுனனு
டைய பராக்கிரமத்தைக் கேள்விப்பட்ட மாத்
திரத்திலேயே பயந்து, தங்கட் குண்டாகிய
திரவியங்களை யெடுத்துக்கொண்டு வந்து
பணிய, அர்ச்சுனன் அவைகளை வாங்கிக்
கொண்டு, தங்கள் தங்கள் ராச்சியத்திலே யிரு
ந்து செவ்வையாய் அரசாட்சி செய்து வரும்
படி திட்டஞ் செய்து அதற்குச் சமீபமான
கிராத தேசத்திற் சென்று, அவ்விடத்திய
ராஜாக்கள் கர்வத்தினலும் அகங்காரத்தின
லும் எதிர்த்து யுத்தஞ் செய்தபடியால் அவர்
களையும் அவர்களுடைய சேனு பரிவாரங்களை
யும் தலையறுத்து, அவர்கள் பொக்கிஷத்தை
எல்லாங் கொள்ளையிட்டு, அங்கிருந்து சமுத்
திர ஓரத்தி லிருக்கும் ஓர் மிலேச்ச தேசத்திற்
குச் சென்றான். அவ்விடத்திய ராஜாவாகிய
ரிஷீகன் என்கிறவன் வெகு சேனைகளோடு
கூடி யுத்தத்திற்கு வர, அர்ச்சுனனும் தன்
சேனைகளைச் சித்தம் பண்ணிக்கொண்டு பயங்
கரமான யுத்தஞ் செய்தான். இவ்வாறு இருவ
ருக்கும் நெடுநேரம் யுத்தம் நடக்கவே ரிஷீக
னுடைய சேனைகள் வெகுவாய் மடிந்து
போயின. அதுகண்ட அந்த மிலேச்சராஜன்
மனந்தளர்ந்து சினேகம் பண்ண மனதைக்
காட்ட, அர்ச்சுனன் அப்படியே யங்கீகரித்து
அவனுற் கொடுக்கப்பட்ட கிளியின் வயிறு
போற் பச்சை நிறமுள்ள சில குதிரைகளை
மயில் வன்னமுள்ள சில குதிரைகளையும்
கைக்கொண்டு, இமயமலையின் சமீபத்திற்கு
வந்து தன் சேனைகளை அவ்விடத்தில் நிறுத்தி
அதுவரைக்கும் சம்பாதித்த திரவியங்களை
அவர்களுடைய காவலில்வைத்துச் சில சேனை
களைக் கூட்டிக்கொண்டு சுவேத பர்வதத்திற்
குப் போய், அவ்விடத்திலிருந்த துஷ்ட
ராஜாக்களை வெற்றிகொண்டு இமயமலை தாண்
டிக் கிம்புருஷ பர்வதஞ்சென்று, அப்பர்வதத்
திலிருந்த இட்சுவாகு வம்சத்து ராஜனேடு
கொடிய போர் செய்து அவனைச் செயித்து,
அவன் கொடுத்த பொருள்களை அவனிடத்தி
லேயே வைத்து, அங்கிருந்து ஹாடகமென்
னுந் தேசத்திற்குப் போய் அவ்விடத்திற் குகி
யகர் யென்கிற தேவசாதியாரோடு நெடுநேரம்
போர் செய்து பின்பு நல்ல வார்த்தைக
ளாலே யவர்களைச் சுவாதீனம் பண்ணி, வெகு
பொருள்களைக்கப்பம் வாங்கிக்கொண்டு,மானச
மென்கிற தேவமடுவி னருகிற் சென்று ரிஷி
குலியரென்றும் ஹாடரென்றும் பேர்பெற்ற
சாதியாரிடத்திலும் கப்பம் வாங்கிக்கொண்டு

கெந்தர்வரிருக்குந் தேசத்திற்குப்போய் அவர்
களோடு வெகு சண்டை செய்து செயித்து
அநேகந் திரவியங்களையும் தித்திரி என்கிற
பட்சியின் வன்னத்தையுடைய சில குதிரைக
ளையும் தவளையின் கண்போன்ற கண்ணை
யுடைய சில குதிரைகளையும் மற்று மனேக
வஸ்துக்களையும் பெற்று, ஹேமகூட பருவ
தத்திற்குப் போய்ச் சேனைகளை யிறக்கி இளைப்
பாறி ஹரிவருஷமடைந்து, அதில் வெகு
சவுக்கியத்திற்கு ஏதுவாகியும் ஆச்சரியப் படத்
தக்கதாகியும் அழகாகியு மிராநின்ற மடுக்கள்-
ஆறுகள்-மலைகள்-தோப்புகள் முதலானவை
களைக் கண்டு களித்து சவுந்தரியமுள்ள
ஸ்திரீகளையும் புருஷர்களையும் பார்த்து
ஆச்சரியப்பட்டு நயபயங்களாலே யவர்களைச்
சுவாதீனம்பண்ணி அநேகந் திரவியங்களை
யும் கிரகித்து மகா சந்தோஷத்தோடு இளா
விருத வருஷத்திற்குப்போனான்.

அவ்விடத்தில் தேவர்களுடைய வீடு முத
லானவைகளைக்கண்டு ஆச்சரியத்தையும் பயத்
தையு மடைந்து அவர்களை மிகவும் வணக்கத்
துடனே கண்டு, ஓ மகானுபாவர்களாகிய புரு
ஷர்களே! என் தமயனாராகிய உதிஷ்டிர மகா
ராஜன் ராஜசூயயாகஞ் செய்ய யத்தனப்பட்டி
ருக்கிறார். அதனாலே நான் வடதிசையிலுள்ள
ராஜாக்களை ஜெயித்துக் கப்பம் வாங்கிக்
கொண்டு வந்தேன் நீங்களும் தயை செய்து
ஏதாகிலுங் கப்பம்போற் கொடுத்து அக்காரி
யத்தை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்க,
அவர்கள் இவனிடத்திற் பிரதிசெய்து பூலோ
கத்திற் கிடையாத உத்தம ரத்தினாபரணங்கள்
வஸ்திரங்கள் முதலானவைகளைக் கொடுக்க
வாங்கிக்கொண்டு மேருவுக்குப் பிரதக்ஷிண
மாய் வடக்கே போக வேண்டுமென்று புறப்
பட்டு, அவ்விளாவிருத கண்டத்தின் அழகை
பார்த்து ஆனந்தப் பட்டுக்கொண்டே சுத்தப்
பொன் மயமாகிய பல ரத்தினங்கள் நிறைந்த
தாழ்வரைகளோடு கூடி வெகு அழகாகிய
சோலைகள் சூழ்ந்து அக்கினிபோல் வெகு பிர
காசம் பொருந்திப் புண்ணியவான்களுக்கே
யன்றி மற்றவர்களாற் பார்ப்பதற்கு மரிதாகிய
பெருமையுள்ளதாய் இவ்விதமாகியதென்று
நிதானிக்கக் கூடாமற் பலமும் மகிமையும்
அழகும் காந்தியும் பொருந்திய பலவகைப்
பட்சிகளுக்கும் இருப்பிடமாய் மிருக சஞ்சீ
வினி - விசல்லியகரணி முதலாகிய ஔஷதிக
ளால் விளங்கி, தேவர் கருடர் காந்திருவர்
முதலானோருக்குப் போகஸ்தானமாகி அவர்
கள் செய்யாநின்ற நாட்டியம் கீதம் போஜ
னம் போகம் இவைகளாற் பஞ்சேந்திரியங்
களையுங் கவர்ந்துகொள்ளத் தக்கதாகிய
சுவர்னமயமாய் விளங்கும் மகா மேருவென்
கிற பருவதத்தைக் கண்டான்.

அம்மாத்திரத்தில் அர்ச்சுனன் ஆனந்த
சாகரத்தில் மூழ்கிப் பிரமித்து ஸ்தம்பித்து,
அந்த மகா பருவதத்தினின்றும் பெருகா
நின்ற ஜம்பூ நதியையும் அதின் கரையிலிருக்
கும் உத்தியான வனங்களையும் அதில் வாசம்
பண்ணாநின்ற சித்த புருஷரையும் கண்டு
அவர்களுக்குத் தான் வந்த சேதியை வணக்
கத்தோடு தெரிவித்து, அவர்கள் தயை செய்து
கொடுத்த ரத்தினம் முதலானவைகளை வாங்
கிக்கொண்டு கந்தமாதன பர்வதத்தைக் கட
ந்து மறுபடி இளாவிருத கண்டத்திற்குவந்து,
மேருபர்வதத்தி னுணியிலிருக்கிற நாவல்
மரத்தின் பழங்கள் கீழே வீழ்ந்து நசுங்கி
அவைகளின் இரசம் ஜம்பூநதி என்கிற பே
ரோடு பெருகி வருவதையும், அந்த ரசம்பட்ட
பூமி யெல்லாம் ஒப்பற்ற தங்கமாகிறதையும்,
அத் தங்கத்தினாலாகிய பணிகளைச் சித்த புரு
ஷரும் சித்த ஸ்திரீகளும் தரித்துக் கோடி
சூரியப் பிரகாசமாய் விளங்கி அவ்வாற்றின்
நீரைக் குடிப்பதினால் தேகத்தில் இளைப்பு-
மூப்பு-தளர்ச்சி-வேர்வை முதலிய துன்பங்க
ளில்லாமற் காந்தியும் சுகந்தமும் பொருந்தி
யிருப்பதையும், அந்த நாவல்மரத்தின் நிழ
லிலே அனேகமாயிரம் முனிவர் சஞ்சலமின்
றித் தவஞ் செய்துகொண் டிருப்பதையும், நிர்
மலமாகிய அவ்வாற்றின் ஜலத்திற் பொற்றா
மரைகள் மலர்ந்திருக்க அவைகளின் தேனைக்
குடித்துக் களித்து ஒலித்துக்கொண்டு சுழன்று
வராநின்ற வண்டுகளைக் கண்டு நயந்து மிக
வும் அசையாநின்ற கண்களோடு கணவ
ருடன் பிணக்கமுற்ற மாதர்கள் வலுவிற் கண
வரைத் தழுவ அதனாலவர் பேரானந்தமுற்று
அவ்வண்டினத்தைத் துதிப்பதையும், சுவர்ண
மயமாகி வெகு விசித்திரமாகத் தளிர்த்துப்
பூத்துப் பழுத்துப் பரந்து விளங்காநின்ற
சோலையின் ஓர் புறத்தில் மரத்தின் நிழலில்
மாதர் மடிமேல் ஆடவர் படுத்துக்கொண்டு
கிளைகளிலிருந்து கொஞ்சாநின்ற கிள்ளை
களின் மொழிகளைக்கேட்டுச் சந்தோஷப்பட்டு
நகைத்துக்கொண் டிருப்பதையும், மற்றோர்
புறத்தில் ஊடலுற்ற நாயகிகளைப் பலவிதங்

களினால் நாயகர் சமாதானப்படுத்திக் கெஞ்சுவதையும், இன்னுமோர் புறத்தில் தேவர்கள் சபை சேர்ந்து கந்திருவர்பாட அப்சரமாதரா் நாட வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருப்பதையும், பின்னுமோரிடத்தில் தேவகணங்கள் கள்ளுண்டு களித்து ஒருவரோடொருவர் போர் செய்து வைது அழுது பிதற்றிக் குதித்து நிற்பதையும், ஒருபக்கத்தில் மகாதபசிகள் சொல்லும் உபதேசங்களைப் பக்தியுடன் சிலர் கேட்டுக்கொண்டிருப்பதையும் மற்றொரு பக்கத்திற் கொடிகளுஞ் செடிகளும் படர்ந்த மண்டபங்களிற் புகுந்து காமநூலிற் சொல்லியபடி பலவித கரணங்கள் செய்து ஸ்திரீகளும் புருஷரும் போகித்துக் கொண்டிருப்பதையும், விசித்திரமாக பக்ஷிகள் கூவுகிறதையும் இப்படிப்பட்ட பல வேடிக்கைகளை யெல்லாம் பார்த்துக்கொண்டே மந்தர பருவதத்தினிடத்துக்கு வந்து, அதனருகிற் பெருகாநின்ற சைலோதை என்கிற நதியின் கரையிலிருக்கும் மூங்கிற் காட்டைக் கண்டு அவ்விடத்திலிருந்த காஷர் - சாஷர் - நத்யோதர் - பிரவதசர் - தீர்க்கவேணுகர் - பசுபர் - குளிந்தர் - டங்கர் - பரட்டுகணர் என்கிற மகா வீரராகிய ஜாதியாரை வெற்றிகொண்டு வெகு பொருள்களைச் சம்பாதித்து மாலியவப் பருவதம் - நீல பருவதம் - சுவேத பருவதம் முதலாகிய விடங்களுக்குப்போய் அவ்விடத்தினரையுஞ் செயித்துக் கப்பங்களை வாங்கிக்கொண்டு சிருங்கி என்கிற பருவதத்தைத் தாண்டிக் குருவருஷத்திற் பிரவேசித்து அங்கிருந்த கந்திருவர் - கின்னரர் முதலிய பேர்களிடத்திற் சுவர்ணமயமாகிய மான்தோல் முதலான வெகு பொருள்களைப் பெற்றுக்கொண்டு அப்பாலும் போகவேண்டுமென்னும் மனமுடையவனாக விருந்தான்.

இக்கருத்தை யவ்விடத்திற் சுவர்க்கத்துக்குப் போகும் வழியி லிராநின்ற காவர்காரரறிந்து, அவனை நோக்கிக் கொஞ்சங் கோபத்துடனே சொல்லியதாவது, ஓய் அர்ச்சுன மகாராஜனே! இதோ நாங்கள் காவல் கொண்டிருக்கின்ற இந்தத்தேசம் உத்தரகுருவென்று சொல்லப்படும். இதில் மனுஷியாள் பிரவேசிக்கக்கூடாது இதுவரையில் நீ வந்ததே அதிசயம் இனிமேற் போக யத்தினப்படுவது தகாது. அசாத்தியமாகிய காரியத்தை யத்தனித்து அவமானப்படாதே, எதுவரையில் முனிதரிருக்கிறார்களோ அதுவரைக்குந்தான் மனுஷிய லோகம். அதற்கப்பால் மனுஷிய கந்திருவர் முதலானோ ரிருக்குமிடமும் அத்துடன் சேர்ந்ததுதான். அப்பால் தேவபூமி ஆகிலும் நீ மகாநுபாவனானகையால் இதுவரையில் வந்தாய், இனி உத்தர குருவில் எங்கள் வார்த்தையைக் கேட்காமற் பிரவேசிப்பாயேயாகில், அவ்விடத்தில் ஒருவரையுங் காணமாட்டாய், உன் கண்களுக்குப் பாழாகத் தோற்றும். அன்றியும், நீ மறுபடி திரும்பிப் போவது வருத்தமாகும். ஆகையால் நீயேன் பிரயாசைப்படுகிறாய்? இவ்வளவு நீ ஜயித்து வந்ததற்காக மிகவுஞ் சந்தோஷப்படுகிறோம். உன்னிடத்தில் எங்களுக்கு ஒருவித ஆசையுண்டா யிருக்கிறபடியினாலே, நீ வந்த காரியத்தைச் சொன்னால் அதை நிறைவேற்றுகிறோமென்றுசொல்லக்கேட்டு, அர்ச்சுனன்கைகூப்பி அந்தத் துவாரபாலகரைப் பார்த்து, ஓ துவாரபாலகரே! நான் தேவர்களினுடைய கட்டளையை மீறி நடப்பவனல்லேன். நீங்கள் இவ்வளவு சொல்லியதினால் மிகவும் சந்தோஷமாயிற்று. நான் வந்தகாரிய மென்னவென்றால், என் தமயனாராகிய உதிட்டிரர் இராஜசூய யாகத்திற்கு ஆரம்பஞ் செய்திருக்கிறார். அதற்காகத்தான் இவ்வளவு தூரம் ஜெய யாத்திரை வந்தேன். நீங்களும் தயை செய்து ஏதாகிலுங் கொஞ்சந் திரவியங் கொடுக்க வேண்டுமென்று சொல்ல, அவர்கள் பலவிதப் பொருள்களைக் கொடுத்தார்கள். அர்ச்சுனன் அருமையாகிய அப் பொருள்களைக் கைக்கொண்டு சந்தோஷத்துடனே தெற்கே திரும்பி அந்தத் தேவபூமியெல்லாந் தாண்டி முன்னே ஜயிக்காமலிருந்த புளிந்தர் - புலக்கசர் - ஹூணர் - ஆபீரர் - கஷர் - மகாயவனர் - மிலேச்சர் முதலாகிய பலரையும் கொடிய யுத்தஞ் செய்து ஜயித்து, வெகு திரவியங்களைக் கப்பமாகப் பெற்று, இப்படியே வருடந்தோறுங் கப்பங் கட்டி வரும்படி யவர்களுக்குத் திட்டஞ் செய்து முன்ஜயித்த அனேக பூபாலருக்கும் அவ்வாருகவே கப்பங் கட்டி வரும்படி துள்ளுச்சீட்டனுப்பி இமய மலையின் சமீபத்தில் வைத்திருந்த சகல சேனைகளையுங் கூட்டிக்கொண்டு கப்பமாகவும் பரிசாகவும் பெற்ற யானை குதிரை முதலானவைகளையும் சாய வைத்துக்கொண்டு தனது இஷ்டருஞ் சேனைகளுஞ் சூழ, ஜய பேரிகைகளும் கட்டியங்களும் பலவித வாத்தியங்களு முழங்க, ஜயக்கொடிகள் ஆகாசத்திற் பறக்க, பட்டணத்துச் சனங்களெல்லா மெதிர்கொண்டு வந்து

கொண்டாட இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்தான் ஜெயவிஜய காண்டீபனாகிய அருச்சுன மகாராசன்.

### வீமன் இந்திரதிக்கு விஜயம்.

கேளும் ஜெனமேஜெய மகாராசனே! அர்ச்சுனன் வடதிசைக்கு எப்போது புறப்பட்டானோ அப்போதே வீமசேனனும் ஓரக்ஷோகினி சேனையுடனே கிழக்குத் திக்கைக் குறித்துப் புறப்பட்டு, வழியில் அனேகங் காடுகள்-மலைகள்-நதிகள் இவைகளைத் தாண்டி அவ்விடத்து ராசாவாகிய உரோசமானனென்கிறவனை ஜெயித்துக் கப்பம் வாங்கிக்கொண்டு பாஞ்சால தேசஞ் சென்று மாமனாராகிய பாஞ்சால ராசனைக் கண்டு பணிந்து வந்த காரியத்தைச் சொல்ல, அவன் அப்படியே கப்பங் கொடுக்கச் சம்மதித்தாலும் அக்குடும்பத்தைச் சேர்ந்த பலரும் அதற்குச் சம்மதிக்காமையினாலே அவர்களுக்கு வெகு சமாதானங்கள் சாற்ற, அதனாலுஞ் சிலர் ஒத்துக்கொள்ளாமலிருக்கக்கண்ட வீமன் தனது பராக்கிரம வலிமையினால் நய பயமுறுத்த, அந் நயபயங்களாலே பாஞ்சாலர் யாவரும் சம்மதிப்பட, உடனே கப்பம் வாங்கி அந்தப் பொருள்களை யவ்விடத்திலே வைத்து, சில பாஞ்சாலரையும் கூட்டிக்கொண்டு விதேக தேசஞ் சென்று மிதிலை யென்கிற மகா நகரத்திற் பிரவேசித்து யுத்தபேரிகை யடிக்க, அதுகண்ட அந்த விதேகராசன் வந்து வீமனோடு சினேகஞ் செய்து வெகு பரிசுகள் கொடுத்து அவைகளையும் அங்கேதானேவைத்துப்போட்டு தசார்ண தேசத்திற்குப் போனான். அந்தத் தேசத்தில் என்றும் வற்றாத நதிகளோடு ஏரிகள் முதலாகிய பத்துவித சலாதாரங்க ளிருப்பதினாலே அத்தேசத்திற்குத் தசார்ணமென்று பேருண்டாயிற்று. அத்தேசம் இப்படிப்பட்ட நீர் வளப்பத்தினாற் கொஞ்சம் நிலங்கூடப் பாழில்லாமற் பலவிதப் பயிர்களேறிச் செழித்திருக்கும். அன்றியும், இருண்ட சோலைகள் பலவுஞ் சூழ்ந்து, இசையாய்க் கூவுகின்ற பட்சிகள் பொருந்தி, தேசமெங்கும் பிர்மோச்சவம் போற் பிரகாசித்திருக்கும். அத் தேசத்துச் சனங்கள் சகல போகபாக்கியங்கள் பெற்று, ஒரு குறைவுமின்றிச் சந்தோஷத்துடன் சதா காலமும் விளங்கிக்கொண் டிருப்பார்கள்.

இப்படிக்குச் சகலவிதச் சிறப்புகளாலும் மேன்மை பெற்று விளங்காநின்ற தசார்ண தேசஞ் சென்று, அதின் வளத்தைப் பார்த்துக்கொண்டே தசார்ண நதியின் கரையில் வெள்ளி மலைகள்போன்ற மெத்தைவீடுகளின் வரிசைகளாலும் இரு புறங்களு மலங்காரம் பொருந்த ஒழுங்காக வைத்திருக்கும் பூஞ்சோலைகளாலும் அழகிய சாலைகளாலும் பிரகாசித்து, மேடு பள்ளங்க ளில்லாமல் மெத்துவாகியும் அழுத்தமாகியும் மணல்களோடுங் கூடி நீண்டும் பரந்துமிராநின்ற பல வீதிகள் உள்ளதாய் அழகிலும் செல்வத்திலும் சாதுரியத்திலும் கல்வியிலும் அதிகப்பட்ட ஸ்திரீகளும் புருஷர்களும் நித்திய மகிழ்ச்சியுடன் ஒருவரோடொருவர் இடைவிடாத அன்பு கூர்ந்து விநோதமாய் விளையாடிக்கொண்டிருக்கப்பெற்று, கடல்போற் சகல பதார்த்தங்களும் சம்பூரணமாய் விற்கின்ற கடைத்தெருக்களோடுங்கூடி மேலாகிய சவுக்கியங்களுக் கெல்லாம் இடமாயிருக்கின்ற மதுமதி யென்கிற பட்டணத்தைக்கண்டு களித்து தன்சேனைகளை அவ்விடத்திலே இறக்கி வியூகங்கட்டி யுத்தசன்னகப்படுத்தி ரணபேரிகை யடிக்கவே முன்னே கங்கை பின்தொடர்ந்துவரப் பகீரதன் வருவதுபோற் சைனியவெள்ளம் புரண்டுவர வீமசேனன் வருகிறானென்பதைக்கேட்ட அப்பட்டணத்து ராசனாகிய சுவர்மா வென்கிறவன் அந்த ரணபேரிகையின் சத்தமுங்கேட்டமாத்திரத்தில் தன் சேனைகளை சித்தப்படுத்தி பட்டணம்விட்டு வெளியில் வந்து வீமனையும் அவன் சைனியத்தையுங்கண்டு உச்சாகத்துடனே யுத்தஞ் செய்யும் அபிப்பிராயத்தைக் காட்ட, அம்மாத்திரத்தில் இருவருக்கும் பலமான யுத்தமுண்டாயிற்று.

அந்த யுத்தத்திற் பாண்டவச் சேனாபதியாகிய வொருவன் தசார்ண சேனையிற் பிரவேசித்துக் கலக்கி யடிக்க, அந்தச் சைனியம் அல்லோலகல்லோலமாய் அலைவதைக்கண்டு தசார்ண சேனாபதி வெகு கோபங்கொண்டு பொங்கி வருஞ் சமுத்திரத்தை அணைபோட்டு தடுத்தாற்போல் தன் புஜபல சாமர்த்தியத்தினாற்றடுத்துச் சிங்கநாதஞ்செய்தான். அதைப் பொறாமற் பாண்டவச் சேனாதிபதி எதிர்க்க அவ்விருவருக்கும் இரண்டுமதயானைகளுக்கும் நேரிட்ட யுத்தம்போற் கொடியயுத்தம் நேரிட்டது. அப்போது இருதிறச் சேனைகளுந் தங்கள் தங்கள் சேனாதிபதிகளைச் சூழ்ந்து நின்று தைரியமாய் யுத்தஞ்செய்தார்கள். அந்த யுத்தத்தினாலே தசார்ண சேனையில் வெகுவாய்ச்சேதம் நேரிட்டது. அதனாலே தசார்ண சேனாதி

பதி மிகுந்த பொறாமையுற்று, நெருங்கி யிரு
ந்த மரங்களைப் பெருங்காற்றுப் பிரவேசித்து
முறித்துத்தள்ளி வெட்டவெளி யாக்குவது
போற் பாண்டவ சேனைகளை முறித்துத் தள்ளி
முடுக்கப்பார்த்தான். அப்போது பாண்டவச்
சேனாதிபன் தன்னிரதத்தை விரைவில் நடத்
திச் சங்கம் பூரித்துச் சிங்கநாதஞ் செய்து
வில்லை வளைத்து நாணேற்றி நாணோசை
கொண்டு, பத்தம்புகளைத் தொடுத்து ஓரம்பி
னால் நாணியறுத்து ஈரம்புகளினாற் சாரதியை
யடித்து மூன்றம்புகளினால் குதிரைகளை துளை
த்து, நான்கம்புகளினால் ரதிகனையும் மார்பிற்
பொத்தினான். இப்படி செய்யவே தன் சாரதி
விடவிடத்து மூர்ச்சையடையக் கண்ட அந்த
ரதிகன் தன் ரதத்தைப் பின்னே போக்கி, சார
திக்கு மூர்ச்சை தெளிவித்து வேறு நாணியை
வில்லிற்கட்டி மறுபடியும்வந்து வில்லை வளைத்
துப் பாணங்களைத் தொடுத்து, பாண்டவச்
சேனாதிபதியின் குதிரைகளைக் கழுத்தறுத்துச்
சாரதியையும் மார்பைப் பிளந்து வில்லை
யொடித்து அட்டகாசஞ் செய்யும்போது
பாண்டவச்சேனையில் ஒருஹாரபாரமும் தசார்
ணச் சேனையில் ஒரு கோலாஹலமு முண்டா
யிற்று.

அதனாலே அந்தப் பாண்டவச் சேனாதி
பதி மனம் பொறாமல் தேரைவிட்டுக் குதித்து
கத்தியைக் கையிலேந்திக்கொண்டு தசார்ண
சேனாதிபதியின் தேரின்மீதிற்பாய்ந்து சாரதி
யையுங் குதிரைகளையும் வெட்டித் தேரின் சிக
ரங்களையும் துணிகளையும் துணித்து வில்லை
யொடித்து ரதிகன்பேரிற் பாய வரும்போது
அச்சேனாதிபதியின் உதவித்தலைவர் ஒரு நொ
டியில் வேறு ரதங் கொணர்ந்து அவனை அத்
தேரின்மேலேற்றி தாங்கள் சூழநின்று பாண்
டவசேனாதிபதியைவளைத்துக்கொண்டு அவன்
கத்தியைப் பிடுங்கிப் பத்திரமாய் அவனையுங்
கைப்பிடியாகப் பிடித்துக்கொள்ள யத்தனப்
படுகையில், அச்சேனாதிபதி மனந்தளராமல்
அங்கே விழுந்திருந்த ஓர் தேரினிரிசியை
யெடுத்துச் சுற்றிச் சூழவிருந்த பேர்களைத்
துரத்த, இதை தூரத்திலிருந்து பார்த்த
வீமசேனன் ஓ! ஓ! நமது சேனாதிபதி அபா
யத்தி லகப்பட்டுக் கொண்டானென்று நினை
த்து நான்கு வீரரை விரைவி லனுப்ப அவர்
கள் ஓடோடிவந்து சரமாரி பொழிந்து சூரி
யன் மேகங்களைக் காய்வதுபோற் காய்ந்து
சேனைத்தலைவனை மற்றொரு தேரிலேற்ற, மறு
படியும் இருபக்கத்து வீரர்களுக்குங் கொடிய
யுத்தமுண்டாகி அங்கங்களும் ஆயுதங்களும்
மிதக்கச் சில உதிரவாறுகளுண்டாயின. அந்
தக் கொடியசண்டையில் தசார்ண சேனாதிபன்
சண்டமாருதம்போற் பராக்கிரமித்துக் கணை
களைப் பொழிந்து சேனைகள் விலகியோடும்படி
அடித்து, உதவியாகவந்த நான்கு வீரர்கள்
தலையை அறுத்து அப்பாண்டவ சேனா நாய
கனது தேரின் குதிரைகளையும் பாகனையுங்
கொன்று இருபது பாணங்களை அவன் மார்
பிற் பிரயோகித்து மூர்ச்சிக்கச் செய்ய, அச்
சேனா நாயகன் ஒரு முகூர்த்தகாலம் மூர்ச்சை
யோடிருந்து தெளிந்து, கத்தியைக் கையி
லேந்தித் தசார்ண சேனா நாயகன் தேரையும்
குதிரைகளையும், சாரதிகளையுஞ் சூரணஞ்
செய்து, அவனையும் ஆயுத சூனியனாக்கிக் கவ
சத்தைப் பிளந்து சிங்கநாதஞ் செய்தான்.

அதுகண்ட அந்தச் சேனாதிபதியும் கீழே
குதித்துக் கத்தியைப் பிடித்துக்கொண்டு வர,
இருவரும் சிலநேரம் கத்திகளாற் சண்டை
செய்யுமளவில் சமயம் பார்த்துப் பாண்டவச்
சேனாதிபதி எதிரியின் சேனாதிபதியைப் பிடித்
துக் கீழே தள்ளித், தன் கத்தியினால் ஆட்
டைக் கழுத்தறுப்பதுபோல் அறுத்தான்.
அதனாலே தசார்ண சேனைகள் துக்கப்படுவ
தையும், பாண்டவச் சேனை களித்திருப்பதை
யும் அந்த தசார்ண தேசாதிபதியாகிய ஈசர்ம்ம
மகாராஜன் பார்த்து, தன் சேனாதிபதி இறந்
ததைக் குறித்து மனதில் துக்கமும் கோபமும்
மிகுந்து வளர, வீமசேனனோடு செய்து
கொண்டிருந்த யுத்தத்தை விட்டுத், தந்திர
மாய் அவனது சேனாதிபதிமேற்பாய்ந்து தன்
சேனையை நாசஞ்செய்த விடத்திற்கு வந்து
நின்று, பத்து பாணங்களைப் பிரயோகித்து
அவனை வெறுங்கையனாகத் தரையில் நிறுத்த
அந்தச் சேனாபதி ஓர் கதாயுதத்தை ஏந்திவர,
தசார்ணராஜன் அந்தக் கதாயுதத்தோடு
அவன் கையைத் துணிக்க, அவன் மற்றொரு
கையால் அந்தக் கதாயுதத்தை எடுத்து வெகு
தீரத்தனமாக எதிர்க்க, அந்தக் கையையும்
அவ்வரசன் துணிக்கவே அச்சேனாதிபதி
கீழே விழுந்துவிட்டான்.

வீமசேனன் அதுகண்டு, அவன் செய்த
தந்திரத்தினாலே வெகு கோபமும் பொறாமை
யுங் கொண்டு, வேறு சேனாதிபதியை நியமித்
துத், தன் சேனைகளை நடத்திக்கொண்டு சத்
துருவிருக்கிற விடம்வந்து, கைகளறுந்து

வீழ்ந்த தன் சேனாதிபதியைத் தூக்கி மூர்ச்சை தெளிவித்து அவனுக்குக் காயங் கட்டும்படி கூடாரத்துக் கனுப்பிவிட்டு, வில்லை வளைத்துப் பாணங்களை வருஷித்துச் சத்துருவின் சேனையாகிய பெருங்கடலைக் கலக்கித் தசார்ண ராஜனை எதிர்த்தான். அப்போது இரண்டு ராஜாக்களுக்கும் துவந்துவயுத்த முண்டாயிற்று. அப்படி நெடுநேரம்யுத்தமாகும்போது இருவரு மிளைக்காமலும் பயப்படாமலுமே யுத்தஞ் செய்தார்கள். இப்படியிருக்க, அவ்விரு ராஜாக்களும் ஒருவர்க்கொருவர் தேர்குதிரை சாரதி முதலானவைகளை நாசஞ் செய்துகொண்டு, கதாயுத்தஞ் செய்யக் கருதித் தரையிற் குதித்து யுத்தஞ்செய்ய யத்தினப்பட்டார்கள். அப்போது வெகுகாலம் யுத்தம் நடந்தும் ஜயாபஜயங்கள் காணப்படாமலிருக்கவே வீமசேனன் சத்துருவின் பராக்கிரமத்தையும் சாமர்த்தியத்தையுங் கண்டு, மனதில் மிகவும் மதிப்பு கொண்டு பின்னிடாமலே யுத்தஞ் செய்து வந்தான். இப்படி யிருக்கையில் அந்தச் சுவர்மன் தண்டாயுதத்தைச் சுழற்றிக் கொண்டடிக்க வர, வீமன் லாவகத்தினால் தன் தண்டாயுதத்தினாலே அவனைக் கீழே விழச்செய்ய, அவன் பின்னிடைந்து மற்றொரு தேரின்பேரிலேற, அவ்வளவுக்குள்ளே வீமன் தன் கதாயுதத்தினால் எதிரி சேனையையெல்லாம் இருந்தவிடந் தெரியாமல் நாசஞ் செய்ய, அதுகண்டு கோபமடைந்து வந்து ரதாரூடனாக எதிர்க்கவே வீமனும் வேறு ரதத்திலேறிவந்தான்.

இப்படி சிலநேரம் சண்டை நடந்த பின்பு, அந்தச் சுவர்மனானவன் வீமசேனனுடைய பராக்கிரமத்தை இனிச் சகிப்பது வருத்தமென்று நினைத்து அவ் வீமசேனனைப் பார்த்து, ஓய் ராஜனே! நீர் மகா சூரனானபடியால் உம்மோடு சினேகிக்க மனமுள்ளவனாயிருக்கிறேனென்று சொல்ல, வீமனும் அப்படியே அங்கீகரித்து யுத்தத்தை நிறுத்திச் சினேகஞ் செய்துகொண்டு, மதுமதீ பட்டணத்திற்குப் போய் அந்த ராஜாவினாலே கொண்டாடப்பட்டு, அவன் கொடுத்த கப்பங்களையும் வாங்கிக்கொண்டு, அவனைத் தன் சேனைகளுக்குத் தலைவனாக விருக்கும்படிசெய்து, அவனுடனே புறப்பட்டுப் பின்னுங் கிழக்கே சென்றான். அவ்விடத்தில் அபரரோசமான என்கிற ராசாவை யெளிதில் வென்று, புளிந்த நகரத்திலிரானின்ற சுகுமாரன் - சுமித்திரன் என்கிற இருவரையும் போர் செய்து வெற்றி பெற்று, சேதிதேசஞ் சென்று அவ்விடத்து ராசனாகியும் தனக்குச் சிறிய தாயார் மகனாகியுமிரானின்ற சிசுபாலன் பட்டணத்திற்குப் போனான். அந்தச் சிசுபாலன் வீமசேனன் வருகிற சேதி தெரிந்து, மந்திரி முதலான பேர்களுடன் எதிர்கொண்டு வந்து, வீமசேனனைக் கண்டு சந்தோஷித்து, ஏது இப்படி வந்தகாரியஞ் சொல்லவேண்டுமென்றுகேட்க, வீமசேனன், தருமபுத்திரனானவர் ராஜசூயஞ் செய்ய ஆரம்பித்து ராஜாக்களை ஜெயித்துக் கப்பங்களை வாங்கி வரும்படி தம்பிமார் நால்வரையும் நாலு திக்குகளிலும் அனுப்பியிருக்கிற சங்கதியை அவனுக்குத் தெரிவிக்க, அதுகேட்டுச் சிசுபாலன் மிகவுஞ் சந்தோஷமாயிற்றென்று சொல்லி, வீமசேனனைத் தன் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போய் வெகு விநோதமாய் விருந்து செய்து பலவித ரத்தினாபரணங்கள் முதலாகிய வஸ்துக்களை கொடுக்க, வீமன் அவைகளை வாங்கிக்கொண்டு அவ்விடத்திலேயே ஒருமாத மிருந்து பின்பு அவனிடத்தில் விடைபெற்று குளிர்ந்த நகரத்திற்குப் போனான்.

அந்தக் குளிர்ந்த நகர்க்குரிய சிரேணிமானென்கிற அரசனிடத்திலுங் கப்பம் வாங்கிக் கொண்டு, கோசலதேச மடைந்து, தக்ஷண கோசலாதிபதியாகிய கௌசலிய னென்கிறவனோடும், உத்தரகோசலதேசத்தில் அயோத்தியா நகரத்தி லிருந்த தீர்க்கப்பிரக்கிய னென்கிறவனோடும் வெகு யுத்தங்கள் செய்து அவர்களைச் சுவாதீனப்படுத்தி, கோபாலனென்கிற அரசனையும் மல்ல ராஜனையுஞ் ஜெயித்து இமயமலையின் கீழ்ப்புறத்தில் மலைச்சாரல்களிலிருந்த மகாசூரர்களைவென்று கப்பங்கள்வாங்கிக், குந்தளதேசத்திற்குப் போய் குட்சிமானென்கிற பருவதத்தில் வாசஞ் செய்துக் கொண்டிருந்த சில வீரரை ஜெயித்துக் குந்தள ராசனையுங் கீழ்ப்படுத்தி கப்பங்களை வாங்கிக்கொண்டு, சமீபத்திலிருந்த மகா சூரனாகிய சுபந்து வென்கிறவன் வணங்காமையாலே அவனோடு யுத்தத்திற்கு ஆரம்பித்து, அவன் சேனைகளைத் தும்சஞ் செய்து அவ் வரசனைக் கைப்பிடியிற் பிடித்து அநேகம் பொருள்களை அவனிடத்திற் கப்பமாகப் பெற்றுக்கொண்டு சுபார்சுவமென்கிற பருவதத்திற்குச் சென்று அதிலிருந்த குதனென்கிறவனை ஜெயித்து அவனுக் குட்பட்டிருந்த அனேக அரசரை

யும் வென்று வெகு திரவியங்களைக் கவர்ந்து, மச்சிய தேசம் போய் அவர்களையும் வெற்றி கொண்டு பின்பு மாளவ ராஜாவையும் கயா ராஜாவையும் பெரிய ஆரண்ணியத்தி லிருந்த கிராத ராஜாவையும், பிருங்கனென்கிற வேட ராஜாவையும், மணிமால னென்கிற அரணிய தேசத்து ராஜாவையுங் கீழ்ப்படுத்தித் திரண்ட பொருள்களைப் பற்றிக்கொண்டு, அத் தக்ஷண மல்லர் - சருமகர் - வருமகர் என்கிற க்ஷத்திரியரைப் போரில் தோற்கச்செய்து, சமீபத்தில் ஏழு வகுப்பா யிருந்த கிராததேசங்களுக்கு தூதரையனுப்பி கப்பங்களை வருவித்துக்கொண்டு சிம்மம் - பிரசிம்மம் - சமக்ஷம் என்கிற மூன்று தேசங்களிற் புகுந்து, அவ் விடத்து அரசர்களினின்றும் வெகு தனங்களைச் சம்பாதித்து, மகத தேசத்திற்குப்போய் அத்தேசத்தின் எல்லையிலிருந்த தண்டன்-விதண்டன் என்கிற இருவரையுந் தனது பராக்கிரம விருதினாலேயே கீழ்ப்படுத்தி, கிரிவிரச நகருக்குப் போய் ஜராசந்தன் புத்திரனாகிய சகதேவன் எதிர்கொண்டு வந்து அழைத்துப்போய்ச் செய்த உபசாரங்களையும் வெகுமதிகளையும் சந்தோஷத்துடன் அங்கீகரித்து, அவனிடத்திற் செலவு வாங்கிக் கொண்டு அங்கதேசத்திற்குப் போய் அதற்கதிபதியாகிய கர்னனுக்குத் தான் வந்தசேதி தெரிவித்தான்.

அதுகேட்ட அக்கர்னன் கப்பங் கட்ட மனமில்லாமற் சேனைகளைக் கூட்டிக்கொண்டு யுத்தத்திற்குவர வீமனும் யுத்தத்திற்கு முனைந்தான். அவ்விருவருக்கும் அப்போது பயங்கரமாகிய யுத்தம் நடந்து. பூர்வகாலத்திற் பலனென்பவனுக்கும் இந்திரனுக்கும் நடந்த யுத்தமும் இதற்கு நிகரல்லவென்று தேவர்-தானவர்-கருடர்-கந்திருவர்-கின்னரர் முதலாகிய யாவருந் தங்கள் மனைவிகளுடனே விமானங்களில் ஏறிக்கொண்டு வேடிக்கை பார்க்க அரம்பைய ரெல்லாம் இந்த யுத்தத்தில் நமக்கு நல்ல வீரராகிய கணவர் கிடைப்பார்களென்று சந்தோஷமாய்க் கையில் மந்தார மாலைகளை வைத்துக்கொண்டு காத்திருக்க நாரதமகாமுனிவர் நமது கண்களுக்கு இன்றுதான் பூரணமாகிய உச்சவம் நேரிட்டதென்று மிக ஆனந்தமுற்று வீணையை மீட்டிக் கொண்டு காத்திருக்க, சூரியனும் வாயுவும் தத்தம் மக்களைக் குறித்து ஆசீர்வாதஞ்செய்து கொண்டிருக்க, கர்னனும் வீமனும் ஒருவரையொருவர் திக்கரித்துப் பேசுதலும் அட்டகாசஞ் செய்தலுமாகித் தாங்கள் கற்ற கல்வித்திற முழுமையும் மறந்து போயிற்றோ இல்லையோவென்று பரிக்ஷை செய்கிறவர்போல் வில் கத்தி தண்டு முதலாகிய ஆயுதங்களினாலே சகலவித யுத்தங்களையுஞ் செய்தார்கள். அவ் விருவருடைய சேனைகள் கடல் கலந்தது போல் ஒன்றோடொன்று கைகலந்து யுத்தஞ் செய்து, முடிவில் தத்தமரசர்பக்கத்தில் நின்று கொண்டு இடம்மாறாமல் யுத்தஞ் செய்ய அவ் வீரரிருவரும் நெடுநேரம்போராடியும் அலுப் பிளைப்புகளில்லாமல் விளையாடுகிறவர்கள்போ லிருந்தார்கள். அந்தச் சண்டையில் வாயு குமாரன் வாயுபோலவே பராக்கிரமித்து எதிர்ச் சேனைகளிற் பதினாயிரம் யானைகளையும் இருபதினாயிரங் குதிரைகளையும் நாலாயிரம் ரதங்களையும் லக்ஷம் ஜனங்களையும் மூன்று திங்களில் மடித்தான். சூரியகுமாரன் சூரியன் போலவே விளங்கி வெவ்விதமாகிய அம்புகளினாலே எதிர் சேனையில் அனேகங்களைத் தவித்துச் சோரும்படி செய்தான். ஆகிலும் வீமசேனனுடைய மொறட்டுத்தனமான புஜ பலத்தினாலும் கதா பலத்தினாலும் கர்னனுடைய சேனைக்கே மிகுந்த சேதமுண்டாயிற்று.

இவ்வாறாகத் தன் சேனைக்கு நேரிட்ட சேதத்தைப் பார்த்துக் கர்னன் கோபங்கொண்டு தனது காளபிருடமென்கிற தனுசிற் பல வகைப்பட்ட பாணங்களை அனேகம் ஆயிரமாகத் தொடுத்து வீமன் தேர், குதிரை, சாரதி, அதிபதி ஒன்றுந் தெரியவொட்டாமற் சரக் கூடமாக நிறைத்தான். பாண்டவ வீரனும் அந்தப் பாணங்களை யெல்லாந் தன் பாணங்களினால் துணித்துத் தள்ளிச், சூரியன் தன் கிரணங்களினாற் கடலைப் பிளந்துகொண்டு சப்தமாய்ப் பூட்டிய ரதத்தோடு வெளிப் புறப் படுவது போற் பளிச்சென்று புறப்படவே தாமரை மலர்கள்போல் அப்பாண்டவ வீரனுடையசேனாசைனியங்களின்முகங்களெல்லாஞ் சந்தோஷத்தினால் மலர்ந்தன. இவ்வாறாக வீமன் சரக்கூட்டினின்றும் நீங்கியதைக்கண்ட கர்னன், மறுபடி அனேகமாயிரம் அம்புகளைத் தொடுத்துப் பிரளயகால மேகம்போல் வருஷித்தான். அந்தப் பாண வருஷத்தினாலே சேனைகளெல்லாம் பொத்தப்பட்டுக் கண் தெரியாமலும் மூச்சு விடமாட்டாலும் பதைபதைப்புடனே பிரமித்து நிற்க, தேர்ச்

குதிரைகளும் பின்னுக்குப் போக அதுகண்ட வாயு புத்திரன் கதையைக் கையிலெடுத்துக் கொண்டு ரதத்தினின்றுங்குதித்து அங்கராச னுடையதேரின்கீழ்ச்சென்று தனது கதையை அந்தத்தேரின் இரிசியிற் கொடுத்துச் செண்டு போல் தூக்கி யெறியவே, அந்தத் தேரானது மலைகட்குச் சிறகிருக்குங் காலத்தில் உயரப் பறந்தெழுந்த தன்மைபோல் ஆகாசத்திற் கிளம்பி, இதென்ன விசித்திரமென்று பூமியி லுள்ளோரும் வானத்திலுள்ளோரும் ஆச்சரி யங் கொள்ளவும் சிலர் பயப்படவும், அந்தத் தேர் விறுவிறென்று சுழன்று போவதினால் அதில் இழைத்திருக்கிற பொற்பட்டங்கள் ரத்தினங்கள் இவைகளுடைய காந்திகள் சுற் றும் வீசுவதைக்கண்டு பாதாளத்திலிருக்கிற அக்கினிதான் பூமியைப் பிளந்துகொண்டு வருகிறதோவென்று சாரணர்கள் சங்கிக்க, அத்தேரிலிருந்து கீழே விழுகிற சிவப்புக் கொடிகளை ஆகாயத்தினின்றுங் குறைக் கொள்ளிகள் விழுவதாக எண்ணி யானைகள் வீறிட்டோட, மனிதர் இது அவசகுணமாத லால் யாருக்குப் பொல்லாத காலமோவென்று சங்கையுற்று நிற்க, தேவர்கள் பயத்தினால் ஓடும்போது விமானங்களோடு விமானங்கள் முட்டி உடைந்து ஆகாசமெங்கும் அல்லோல கல்லோலமாகி ஏககாலத்தில் அனேகமாயிரம் பட்சிகள் கூவிக்கொண்டு மூலைக்கு மூலையோடு வதுபோல் அவ் விமானங்கள் பறப்பதினால் வானமெங்கு மிடைவெளி யில்லாமலிருக்க, சேனைகளெல்லாம் மழைக்காலத்திற் பெருங் காற்றெடுத்தால் அதனாலே பல ஆறுகளிற் பெரு வெள்ளங்கள் உடைப் பெடுத்துக் கொண்டு மூலைக்கு மூலை சிதறி யோடுவது போற் பிச்சிக்கொண்டோட, இப்படிக்கெல் லாம் பிரமாதமாய் விபரீத காலம்போல் இருந் தது.

இவ்வாறு ஆகாயத்தில் ரதமெழும்பும் போதே கர்னன் சாமார்த்தியத்தினாற் கிரீட மொரு பக்கத்திலும் உத்தரீய மொருபக்கத்தி லும் ஆரிதமொரு பக்கத்திலும் விழும்படியா கவே ஒருவருக்குந் தெரியாமல் மெள்ளக் குதி த்து, அக்கிரீட முதலானவைகளை முன்போ லவே தரித்துக்கொண்டு தைரியசாலிபோல வீமனுக்கு முன்னின்றான். இந்த மருமமறிந்த வீமசேனன், ஓ கர்ணா! நீ வெகு சாமர்த்திய வான் தானென்று சொல்லி நகைத்தான். அதனாலேகர்னன் கொஞ்சம் லச்சையடைந்து சிந்தித்துக்கொண் டிருக்கையில் ஆகாசத்தில் எழுந்த அந்த ரதமானது சாரதியென்றும், குதிரை யென்றும், உருளை யென்றும், இரி சென்றும், நுகத்தடி யென்றும், கொடியென் றும் உருத்தெரியாமற் பொடிப்பொடியாக விழுந்தது. அப்போது வீமசேனன் தோள் தட்டிச் சங்கம் பூரித்துச் சிங்கநாதஞ் செய் தான். இவ்வளவு ஆனபின்பு இரண்டு சைனி யத்தாரும் இது வீமசேனனுடைய செய்கை யென்றறிந்து, சிலர் ஆச்சரியப்படவும், சிலர் சந்தோஷப்படவும், சிலர் பொறாமைப்பட வும், சிலர் விசனப்படவுமாக இருந்தார்கள். அத்தருணத்திற் குருசேனையிற் கோலாகல சத்தமும், அங்கசேனையில் அலங்கோல சத்த மும் உண்டாயிற்று. இதையெல்லாம் பார்த்த கர்னன் தனக்குள் ஒன்றும் தோன்றாதவனாய், அப்பா! இப்படிப்பட்ட பலவானோடு போ ராடுகிறது வருத்தம். இந்த முறட்டுத்தனத் திற்கு அஸ்திரலாகவம் ஓர் துட்டுக்கு முதவா தென்று நினைத்து, மற்றொரு ரதத்தின்பேரி லேறிக்கொண்டு திருப்பவே தேவர்கள் புஷ்ப வருஷம் வருஷித்தார்கள். அப்போது கர்னன் ஒன்றுஞ் சொல்லாமல் அனேகமாயி ரம் பொன்களைக் கப்பமாகக் கொடுக்க, அவை களை வாங்கிக்கொண்டு வீமசேனன் வெகு சந் தோஷத்துடனே வந்தியர்களெல்லாம் புகழ, ஐயபேரி யடித்துக்கொண்டு, சகல சேனைக ளோடுகூட அங்கதேசம் விட்டுப் புறப்பட்டுச் சமீபத்திலிருக்கும் ஓர் மகா பர்வதத்திற்குப் போனான்.

அந்தப் பர்வதத்திலிருக்கும் சில வீரரை யும் அவர்களுடைய ராஜாவாகிய மகோஜசு என்கிறவனையும் போரிற் சிரச்சேதஞ் செய்து அவன் சம்பத்துக்களைக் கொள்ளையடித்து, பவுண்டரக தேசத்திற்குப்போக அவ்விடத் திலே அந்த தேசத்து ராஜனாகிய பவுண் டரக வாசுதேவனென்பவன் இயல்பாய் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலும் அவனை ஆசிரித்தவரி டத்திலும் பகைகொண்டவனானபடியினாலே, வீமசேனன் ஜயயாத்திரையைச் சகிக்கமாட் டாமல் மனங் கொதித்து, ஒரு அக்ஷோகினி சேனையைக் கூட்டிக்கொண்டு சண்டைக்கு வந்தான். வீமசேனனும் அவனோடெதிர்த்து அவன் சேனைகளை நாசஞ் செய்து அவன் தேரையு முடைத்துக், குதிரைகளையுஞ் சாரதிகளையுங் கழுத்தறுத்துப் பதாதியாக நிறுத்தினான். அதனாலே மிகவும் ஆக்

ரோஷப்பட்ட அப் பவுண்டரகன் வேறு தேரில் ஏறிக்கொண்டு, தன்து வில்லினின்று பொழியுஞ் சரமாரியால் வீமன் சேனையைப் பிளக்க, அச்சேனை தாங்கிக்கமாட்டாமல் தடு மாறுவதைக் கண்ட வீமன் தன் சேனைகளுக்கு முன்னின்று கொண்டு, பவுண்டரகன் எடுத்த வில்லை முறித்தான். அவன் வேறு வில்லை எடுத்தான் அதையும் முறித்தான். இவ்வாறாக அவன் எத்தனை வில்லெடுத்தாலும் அத்தனையையும் ஒடிக்கவே அந்தப் பவுண்டரகன் வெகு கோபங்கொண்டு, சத்தியென்னும் ஓராயுதத்தையுங் கதாயுதத்தையு மெடுத்து வெகு லாகவமாய்ச் சுழற்றி யெறிந்தான். அந்த சத்தி வீமசேனன் சாரதியின் மார்பிலுருவியபடியினாலே அவன் இறந்தான். அந்த கதாயுதங் குதிரைகளின் தேகங்களின்மேல் விழுந்தபடியினாலே குதிரைகள் எலும்பு முறிந்து செத்ததுகள். இப்படியாகவே வீமன் வெகு குரோதத்தோடு மலையின்குகையினின்று சிங்க மெழும்புவதுபோல் அந்தத் தேரினின்று மெழும்பிக், கர்ச்சித்துக்கொண்டே பவுண்டரகன் தேரிற் பாய்ந்து, அந்தத் தேரிலிருந்த வெகு கூர்மையும் வலிமையு முள்ள சத்தி யென்கிற வேலாயுதத்தை யெடுத்துச் சத்துருவின் மார்பிற் குத்தவே, அந்தப்பவுண்டரகன் வேலினாற் குத்துண்டு வெலுவெலுத்தும் பதைபதைத்தும் அந்தத் தேரின் தட்டிலேயே விழுந்து மூர்ச்சித்தான். அதுகண்ட அவனுடைய சாரதியானவன் தேரைப் பின்னுக்குக் கொண்டுபோய் ராஜனுக்குச் சீதோபசாரஞ் செய்தான். அதுகண்டு வீமன் சங்கம் பூரித்தான்.

அந்தப் பவுண்டரகன் ஒரு முகூர்த்த காலத்திற்குப்பின் மூர்ச்சை தெளிந்தெழுந்து இன்றைக்கு நமக்கு புனர்ச்சென்ன மென்று நினைத்து, அனேக வஸ்திரங்கள் கம்பளங்கள் ஆபரணங்கள் முதலாகிய வஸ்துக்களை வீமனுக்குக் கப்பமாகக் கொணர்ந்து கட்டி, மகா சந்தோஷத்தோடும் அவனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு போனான். வீமசேனனும் பவுண்டரகன் கொடுத்த பொருள்களை வாங்கிக்கொண்டு, அத்தேசம் விட்டுக் கீழ்ச் சமுத்திரக் கரையிலிருக்கும் பவுண்டரகனுடைய மித்திரனாகிய கவுசிகனென்னும் ராஜனைச் செயித்து, முறையாக வந்த தேசத்து ராஜனையுங் கலிங்கதேசத்து ராஜனையுங் கீழ்ப் படுத்தி, சிங்கள தீபத்திற்குப் போய், அவ்விடத்து ராஜனையும் இன்னுங் கீழ்ச் சமுத்திரத்திலிருந்த பதினெட்டு மிலேச்ச சாதியாரையுங் கொன்று, காலில் விழுந்த சிலரைமாத்திரம் விட்டுப்போட்டு வெகு பாணங்களைக் கொள்ளையடித்துப் பின்பு புருஷாதர் என்கிற ராக்கதரிருக்குந் தேசத்திற்குச் சென்று அனேக கங்கோடிபேர்களைவெட்டி அவர்களில் உட்பிரிவாகிய கர்ணப்பிராவரணர் - காமுகர் - திரணமூலர்-ஓஷ்டகர்ணகர் என்கிற பல சாதியாரையுஞ் சிதைத்து, அவர்களுக்குள்ளிருந்த அதிசய வஸ்துக்களைப் பெற்றுக்கொண்டு லோகத்தியமென்னுந் தேசத்திற்குப் போய், அதின் ராசாவாகிய ஒரு மிலேச்ச சாதியானுக்குத் தான் வந்தசேதி தெரிவித்து, அவன் மரியாதையோடு எதிர்கொண்டு வந்து கொடுத்த அனந்தம் பொன் வெள்ளிகளையும், பச்சைக் கற்பூரம் குங்குமப்பூ முதலிய அவ்விடத்து வஸ்துக்களையும் வாங்கிக்கொண்டு, மற்றும் அந்தப் பக்கத்திலிருந்த யாவரையுங் கீழ்ப்படுத்தி அளவற்ற பொருள்களை யெடுத்துக் கொண்டு வருடந்தோறும் கப்பங் கட்டிவரும்படி யாவருக்குந் திட்டஞ்செய்து திரும்பி, வெகு விலாச உல்லாசங்களோடு இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்து உதிட்டிரரைப் பணிந்து நடந்த சேதியெல்லாம் விண்ணப்பஞ் செய்தான்.

## சகாதேவன் தக்ஷண திக்குவிஜயம்.

கேளுமையா ஜெனமேஜெய மகாராசனே! அளவற்ற சேனைகளைக் கூட்டிக்கொண்டு தென் திசையிற் சென்ற சகாதேவன் சூரசேன தேசத்திற்குப் போய், அவ்விடத்து ராசாக்களைச் செயித்து, மகத தேசத்தையுஞ் செயித்து, கருச தேசத்திற் பிரவேசித்து அதற்கு அதிபதியாகிய தந்தவக்கிர னென்கிற சுத்த வீரனோடு நெடுநேரம் யுத்தஞ் செய்து ஜயித்து, வெகுதனங்களை வாங்கிக்கொண்டு, அபரமச்சிய மென்கிற தேசஞ் சென்று அவ்விடத்திலிருக்கும் படச்சரர் என்கிற சாதியாரையும் அவர்களின் தலைவனாகிய துர்ப்பர னென்கிறவனையுஞ் செயித்துக் கப்பம் வாங்கி அப்பால் ஒரு வேடதேசஞ்சென்று அவ்விடத்தில் யாவரையுஞ் சுவாதீனமாக்கி, கோசிருங்க மென்னும் பருவதத்தின் ராசாவையும் நவசாஷ்டிர தேசத்து ராசாவையும் வணங்கச் செய்து, குந்திபோஜனுடைய தேசத்திற்குப்போனான். அந்தக்குந்திபோசன் சகாதேவன்வந்த சேதி கேட்டு, மிகவும் பரிவுடனே தன் தவுகித்திர

னாகிய அந்தச் சகாதேவனை மனைக்கு அழைத்துப் போனான்.

சகாதேவனும் பாட்டன் மாமன் முதலானோரை நமஸ்கரித்து ஆசீர்வதிக்கப்பட்டு, அனேகநாள் சவுக்கியமாக அங்கேயே யிருந்து, அவர்கள் கொடுத்த கப்பங்களை வாங்கிக்கொண்டு புறப்பட்டுச், சர்மண்வதி யென்கிற நதியின் கரையிலிருந்த ஜம்பகனென்கிற ராசாவின் மகனைக் கண்டு, யுத்தத்தினா லவனை வசமாக்கித் தெற்கே சென்று, மோகம் பரமமோகம் என்கிற தேசங்களுக்குப் போய் அத்தேசத்தாரையுங் கப்பங் கட்டச்செய்து அவர்களைக்கூட அழைத்துக்கொண்டு நருமதை யென்கிற நதியினருகில் அவந்தி தேசத்து மன்னவராகிய விந்தன் - அனுவிந்தன் என்கிற இருவரையும் யுத்தத்திற்கழைக்க, மகா பலசாலிகளாகிய அவ்விருவரும் சதுரங்க பலங்களைக் கூட்டிக்கொண்டு சண்டைக்கு வந்தார்கள்.

அப்போது அவ்விரண்டு சுத்தவீரரோடு சகாதேவனொருவனாய்ச் செய்த சண்டையின் விசித்திரஞ் சொல்ல முடியுமோ? எதிரிகளிருவரும் பலத்தினாலும் சவுரியத்தினாலும் சாமர்த்தியத்தினாலும் மிகவும் புகழப்பெற்றவர்கள். அப்படிப்பட்டவர்களே பிரமித்துப் போகும்படியாகப் பாணங்களை யெடுக்கிறதும் வில்லில் தொடுக்கிறதும் பிரயோகிக்கிறதும் இன்னபடியென்று காணொணாமற் பாண்டவச் சிறுவன் யுத்தஞ் செய்யும்போது ஆகாசத்தில் வேடிக்கை பார்க்கவந்திருந்த தேவர்கள் ஆச்சரியப்பட்டுப் புட்பவருஷம் வருஷித்தார்கள். சகாதேவன் தொடுக்கிற அம்புகளினால் ஆகாசமெல்லாம் மறைந்து சூரியன் தெரியாமற்போகவே, பூமியிலுள்ளோர்கள் இதென்ன ஆச்சரியம்? இவ்வளவு சீக்கிரத்தில் மாலைப்பொழுது வந்ததென்னென்று சொல்லிக்கொண்டார்கள். இவ்வாறு சகாதேவன் பொழிந்த பாணங்களை விந்தானுவிந்தர் தங்களுடைய கதாயுதங்களினால் சூரணஞ் செய்து வெகு வேகமாய்த் தண்டாயுதத்தைச் சுழற்றி யெறிய அதின் வலுமையினாலே சகாதேவனுடைய ரதமானது நெட்டித் தள்ளப்பட்டதுபோற் பின்னே வெகுதூரமிடைந்து தடுமாறிக் கவிழ்ந்தது. அதனாலே குதிரைகளுக்குஞ் சாரதிக்குங் கைகால்கள் முறிந்து ரதமும் உடைந்து போக, சகாதேவன் முன்னமே அதிலிருந்து குதித்துக் கோபாக்கினியின் வெந்தழல்களோ வென்று சங்கையுறும்படி இரண்டு கண்களுஞ் சிவந்து சுழலமிட, உதடு படபடவென்று துடிக்க விந்தானுவிந்தரைப் பார்த்து, ஓ அவந்திராசாக்களே! உங்களுக்கு முடிவு காலம் நேரிட்டது. பிதுரு லோகத்திலிருக்கும் உங்கள் பந்துக்களைச் சீக்கிரங் காண்பீர்கள். பயப்படவேண்டாம் பயம் வீரருக்குத் தகுதியன்று தைரியமாய் நில்லுங்கள். இதோ உங்களைப் பிதுருலோகத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கும்படியாகிய தூதரை யனுப்புகிறேனென்று வீரவாதஞ்செய்து இயமனுடைய பற்களுக்குச் சமானமாகிய மகா தீட்சண்ணியமுங் கொடுமையுமுள்ள முப்பத்திரண்டு பாணங்களைத் தனுசிற் சந்தானஞ் செய்து பிரயோகித்தான்.

அந்தப் பாணங்கள் வெகு வேகமாய் இரைந்துகொண்டு கிருஷ்ண சர்ப்பங்கள் போல் வந்துவிழுந்து, அவந்தி ராசாக்களுடைய தேர்-குதிரை-சாரதி - துவசம்-ஆயுதம் எல்லாவற்றையுஞ் சின்னபின்னமாக்கி அவர்களையும் மூர்ச்சிக்கச் செய்தன. அத்தருணத்திற் பாண்டவசேனை வெகு பராக்கிரமத்தையும் தைரியத்தையும் அடைந்து, அவந்தி சேனையிற் போய் விழுந்து, யானைக்கூட்டத்திற் சிங்கக்கூட்டம் புகுந்ததுபோல் நாசஞ் செய்துவிட்டது. இப்படியிருக்க, அவ்வரசாக்களிருவரும் மூர்ச்சை தெளிந்து கைகால்களை வெலுவெலுத்து மெள்ளக் கண்களைத் திறந்து சேனைகள் நாசமடைந்ததையும் பாண்டவன் பராக்கிரமத்தையும் பார்த்துச் சிந்தித்து இப்போ நாம் மறுபடியும் யுத்தஞ் செய்வோமா? கப்பங்கட்டிப் போடுவோமா? இன்னுஞ் சிலநேரம் யுத்தஞ் செய்தாலும் இத்தருணத்தில் நாம் ஜயிப்பது அரிது. ஏனென்றால், தருமபுத்திரருடைய தரும பலத்தினாலும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய சகாயத்தினாலும் இந்தச் சகாதேவனுக்குப் பலமும் பராக்கிரமும் விருத்தியடைந்திருக்கின்றன. ஆனபடியினாலே இப்போது சும்மாயிருப்பதே நன்மையென்று ஒருவரோடொருவர் ஆலோசித்துக் கொண்டு வேறு ரதத்தின்மேலேறிச் சில பாணங்களை யெய்து, சேனைகள் சிதறும்படி கொய்து, சங்கத்தொனி செய்து, ரதத்தைக் கிட்டிக் கொணர்ந்து புன்சிரிப்புடனே சகாதேவனைப் பார்த்து, ஓ சகாதேவ மகாராசனே! நீர் மகாவீரன் சந்தேகமில்லை அதனாலெங்களுக்கு மகா சந்தோஷமாயிற்று. மேலும், தரு

மீமே ஒருருக்கொண் டவதரித்ததென்று சொல்லத்தக்கவராகிய தருமபுத்திர மகாராசன் விஷயத்திற் பாடு படவேண்டிய கடமை யுங்களுக்கு மாத்திரமேயன்று எங்களுக்கும் அக்கடமை யிருக்கிறபடியினாலே நீரேன் வீணு யுத்தம் பண்ணுகிறீர்? நிறுத்தும் சில திரவியங்கள் கொடுக்கிறோம் வாங்கிக்கொண்டு போம் என்று சொல்லிச் சமாதானப்படுத்தி அனேக தனங்களைக் கொடுக்க, அவைகளைச் சகாதேவன் வாங்கிக்கொண்டு விடை பெற்று வெகு உல்லாசத்துடனே சகல சேனைகளோடு அந்தத் தேசம்விட்டு விகற்பதேசத்திற் பிரவேசித்துப் போசகடமென்னும் நகரத்துக்குப் போனான்.

அந்தப் பட்டணத்திலிருந்த உருக்குமியென்கிறவன் சகாதேவன் வந்த சேதிகேட்டு, வெகு பொறாமை கொண்டு பெரு வெள்ளம் போன்ற சேனைகளோடு வெளிப்புறப்பட்டு சகாதேவனோடு யுத்தஞ்செய்ய வாரம்பித்தான். சகாதேவனும் தன் சேனைகளைச் சின்னாக்கப் படுத்தி, தைரியமாயும் பலமாயும் யுத்தஞ் செய்ய வாரம்பிக்கும்போது ஒன்றோடொன்று கலந்த அவ்விரு சேனைகளினால் உண்டாகப்பட்ட தூளானது ஆகாசத்தி லெழும்பி கம்மிக்கொள்ள இந்த யுத்தத்தைப் பார்க்க வருவதுபோல் வந்த சூரியன் இதென்ன ஆச்சரியம்? நாம் பிரகாசித்துக்கொண்டிருக்க எங்கிருந்து இருள்வந்து கம்மிக்கொண்டது என்று மயங்கி, ரணக்களத்திலிருக்கும் வீரர்களுடைய டவல்-கத்தி முதலாகிய ஆயுதங்களின் காந்திகள் மின்னல்போல விளங்கக் கண்டு நம்மை மறைத்தது மேகமன்றி அந்தகாரமன்றென்று நினைத்துத் தன் பக்கத்திலிருக்கும் வாயுவுக்குத் தெரிவிக்க, அவன் தன் வீசுதலினாலே யதைத் துரத்த, அத் தூள்களின் கூட்டம் நீங்கி ரணக்களம் விளங்கவே அங்குள்ள வீரர்கள் முன்னம் ஒருவர்க்கொருவர் முகந் தெரியாமையாலே தன்னுடையவன் பிறருடையவனென்று அறியாமல், அடித்ததினாலுண்டாகிய காயங்களைப் பார்த்து ஒருவருக்கொருவர் சமாதானஞ் சொல்லிக் கொண்டார்கள். இப்படிக்குச் சிலநேரம் யுத்தம் நடந்தபின் சேனாதிபதிகள் வகுப்புவகுப்பாய்ப்பிரிந்து யுத்தஞ்செய்யும்போது பாண்டவர்சேனாதிபதியும் அவனுக்கு உதவியாயிருந்த பனிரண்டு ரதிகருங் கொலை செய்யப்பட்டார்கள். சேனாநாயகரில்லாமற் போனபடியினாலே பாண்டவச் சேனைகள் முறையின்றி யுத்தஞ் செய்து, எதிரிகளுடைய சேனைகளாலே முறிய வடிக்கப்பட்டு, கைபோனதும் கால்போனதும் கவசம் பிளந்ததும் வில்லொடிந்ததுமாகி நிற்கமாட்டாமல் திசைதோறு மோட, ஒரு ரதிகனுக்கே நின்ற சகாதேவனை உருக்குமி பார்த்து, அடா பாண்டவப் பயலே! நீ யேன் வீணாய் உயிரை விடுகிறாய்? விரைவில் ஓடிப் போவென்று சொல்லி நகைத்து ஆரவாரஞ் செய்து வில்லில் மிக வுக்கிரமாய் கணைகளைத் தொடுத்து மூர்ச்சை விடவொட்டாமற் பிரளய கால மேகம்போல் வருஷித்துச், சகாதேவனை வாகனங்களும் ஆயுதங்களு மில்லாமல் வறியனாக்கிப் பூமியில் நிறுத்தினான்.

அப்போ சகாதேவன் ஊக்கத்தை விடாமற், சமீபத்திற் கிடந்த ஒரு கத்தியை யெடுத்துக்கொண்டு வஸ்திரத்தை வீசித் தன் சேனைகளைக் கூப்பிட, அவைகள் ராஜா ஒருத்தனாய் நிற்பதைக் கண்டு, ஓ! ஓ! இன்றைக்குப் பஞ்ச பாண்டவர் சதுஷ் பாண்டவராக வேண்டிய காலம் வந்ததென்று துக்கித்துக்கொண்டே திரும்பி வர முயன்றாலும், எதிரிகளுடைய ஆயுத வேகத்தினால் வரக்கூடாமல் தடுமாறி நிற்பதைக் கண்ட சகாதேவன் மனதினால் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பணிந்து, தன் தமயனாருடைய பாதங்களையும் நினைத்து, கோடை காலத்துக் கொண்டல்போற்காப்ப நிர்ப்பேதமாகும்படி கர்ச்சித்து, உருக்குமியைப்பார்த்து, அடா மூடா! முன்னம் நீ எவனாலே தேர்க்காலிற் கட்டப்பட்டும் ஐந்து குடுமி வைத்து முண்டனஞ் செய்யப்பட்டும் ஓடிவந்து குண்டின பட்டணம் போக வெட்கத்தினாலே இப் பட்டணத்தை யுண்டாக்கி வசம் பண்ணுகிறாயோ? அந்த மகாநுபாவனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் இங்கே இல்லையென்று நினையாதே. இதோ என் மனதிலிருக்கிறார். வீணாய்த் துள்ளாதே யென்று சொல்லி, ஒரு எழும்பெழும்பி அவனருகிற் குதித்து, குதிரை சாரதிகளை வெட்டி, சண்டப்பிரசண்டமாகப் பந்து போற் குதித்துக்கொண்டு வந்து, உருக்குமியின் வில்லைத் துணித்து, அவன் ரதத்திலிருந்து ஒரு குண்டாந்தடி எடுத்துக்கொண்டு இரண்டு கையிலும் இரண்டு ஆயுதங்களோடு சேனைகளி னடுவிற் புகுந்து கர்ச்சித்து, பிணப்போர்களைக் குவித்து, யாவரையுந் திகைத்து நிற்கச்செய்து சிங்கநாதம் பண்ணவே பூமியுமாகாசமுங் கிடுகிடென்று நடுங்

கிற்று. இப்படி யிருக்கும்போது சேனைகளும் உடனே வந்து கூடி முன்போல் வாகனயுதங் களைச் சித்தம் பண்ணினமையால், சகாதேவன் திவ்வியமாகிய மற்றொரு ரதத்தின்மே லேறிக் கொண்டு உருக்குமியைப் பார்த்து, இப்போ தென்ன நினைக்கிறாய்? இஃதிருக்கட்டும். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி எப்படி உன்னைக் கொல்ல மனமில்லாதவராய் மன்னித்து விட்டாரோ? அப்படியே நானும் ஸ்ரீ ருக்குமணி தேவியின் தாக்ஷண்யத்தினால் உன்னைக் கொல்ல மன மில்லாதவனாக விருக்கிறேன் பயப்படாதே! இப்போதாகிலும் வணங்கிக் கப்பங் கட்டிப் பிழைக்கும் வகை தேடிக்கொள்ளென்று சொன்னான்.

அது கேட்ட போசகடாதிபதியானவன் ஆகுதி பண்ணப்பட்ட அக்கினிபோற் சொலி த்து வேறு ரதத்தி லேறிக்கொண்டு மறுபடி யுத்தஞ் செய்ய, சகாதேவன் ஒரு நிமிஷத்தில் அவனை வாகனமு மாயுதமு மில்லாதவனுக்கிச் சங்கம் பூரிக்க, அந்த உருக்குமி தேரினின் றுங் குதித்து வேறு ரதம் ஏறுவதற்குள்ளாகப் புலிபோல் ஒரு பாய்ச்சல் பாய்ந்து பிடித்துக் கொண்டான். அப்போது உருக்குமி இவ னுக்கு வெகு கப்பங்களைக் கட்டித் தன்னை விடு வித்துக் கொண்டான். சகாதேவனும் அவன் கொடுத்த கப்பங்களை வாங்கிக்கொண்டு தன் சேனையிற் குறைந்துபோன ஜனங்களுக்குப் பதிலாய் அவன் சேனைகளிற் சில ஜனங்களை யும் கூட்டிக்கொண்டு குண்டின பட்டணம் போய் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மாமனாகிய பீஷ்மக மகாராஜனிடத்திலுங் கப்பம் வாங் கிப் பிராக்கேடகமென்கிற தேசத்தையுஞ் செயி த்து அங்கிருந்து பாலகயர்-ஐரம்பா-தைத் திரர் - அர்த்தவாலர் - சம்பரர் என்கிற ஜாதி யாரை வென்று வெகு பொன் சம்பாதித்து, கரந்தமமென்னுந் தேசத்து ராஜனோடு யுத் தஞ்செய்து ஜெயித்து, அங்கிருந்து புறப்பட் டுக் காடுகளையும் பர்வதங்களையும் பார்த்துச் சந்தோஷித்துக்கொண்டே ரிசியமூக மென் கிற பருவதத்தி னிடத்திற்கு வந்து, அவ்வி டத்திற் பெருகாநின்ற பம்பாநதியைக் கண்டு முன்னம் அவ்விடத்திலே நடந்த ஸ்ரீராமசரித் திரங்களை நினைத்து மனதில் மிகவும் ஆனந் தப்பட்டுத் தோத்திரஞ் செய்து, சமீபத்தி லிருக்கிற கிஷ்கிந்தை யென்கிற நகரத்துக்கு வந்து பட்டணத்தைச் சுற்றிச் சேனையை இறக்கினான்.

இந்தச் சேதி தெரிந்தவுடனே அந்தப் பட்டணத்தில் அதிகாரஞ் செய்துகொண் டிருந்த மைந்தன்-துவிந்தன் என்கிற வானர ராஜர் இருவரும் மலைகளிலுங் காடுகளிலும் இருந்த தங்கள் சேனைகளை யெல்லாம் ஒரு நிமிஷத்தில் அழைப்பித்து, மரங்களும் கல்லுமாகிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தார்கள். அப்போது சகா தேவன் அந்த வானரச் சேனைகளையும், அவர் களுடைய தேகத்தின் பலம் லாகவம் முத லானதுகளையும் பார்த்து ஆச்சரியமடைந்து, முற்காலத்தில் இராவணன் முதலானோர் இவர் களாலே அழிந்தார்களன்றோ, அப்போது அவர்களுக்குச் சகாயமாயிருந்த ஸ்வாமி நமக் குஞ் சகாயமாய் இருக்கிறார். ஆனபடியினாலே நாம் இப்போது தரும காரியத்தைக் குறித்து தைரியத்துடனே முயலலாகுமென்று நினை த்து தன் சேனைகளை ஜாக்கிரதையா யுத்தஞ் செய்யும்படி கட்டளையிட்டுத் தானும் ரதத் தின்மீதேறி, மனதினால் ஸ்ரீ கிருஷ்ணன் பாதாரவிந்தங்களையும், தருமபுத்திரரையும், தனுர்வேத ஆசாரியரையும் நினைத்து பணி ந்து, பின்பு சிங்கம்போற் கர்ச்சித்து வில்லில் நாணைப்பூட்டி, அம்புகளைத்தொடுத்து,சித்திர விசித்திரமாகிய விதங்களை யெல்லாங் காட்டி எதிரிகள் சேனைகளைக் கண் விழிக்க வொட்டா மற்செய்தான். அப்போது அந்த வானரங்கள் மலைகளையுங் கல்லுகளையும் மரங்களையும் வரு ஷித்து, முன்பு இராவணனோடு எதிர்த்ததைக் காட்டிலும் அதிகமாக எதிர்த்தாலும் ஒரு பயனு மில்லாமற் போனதையும், சகாதேவன் பாணப்பிரயோகஞ் செய்கிற சாமர்த்தியத்தை யும் பார்த்து, வானரராஜர் இருவரும் ஆச்சரி யப்பட்டு இதெல்லாங் காலபலத்தினாலும் தரு மபுத்திரருடைய தரும பலத்தினாலும், நடக் கிறபடியினாலே நம்முடைய பராக்கிரமத்தி னால் ஒரு பிரயோஜனமுமில்லை. ஆதலால், சும்மாயிருப்பதே கவுரவமென்று நினைத்துச் சகாதேவனுக்கு எதிரே வந்து, ஓ ராஜனே! நீர் யாது காரியத்திற்காக யுத்தஞ் செய்கிறீ ரென்று கேட்க, சகாதேவனும் அதற்கு விடை கொடுக்கக் கேட்டு, வானராதிபர், ஓ! ஓ! இந்தக் காரியத்திற்காக நீர் யுத்தஞ்செய்ய வேண்டுவ தென்ன எப்படியும் மனிதரைக் காட்டிலும் மிருகங்கள் தாழ்ந்தவைகள்தானே அம்மிரு கங்களுக்கு என்ன பல பராக்கிரமங்க ளிருந் தாலும் உபயோகமில்லை. ஆகையால், எங் களுக் கியன்றவைகளைத் தருகிறோம் வாங்கிக்

கொண்டு போங்களென்று சொல்லி, அனேகம் பொருள்கள், மதுரமுள்ள கனிகள், பலபல தேன்கள், நேர்த்தியான மான் தோல்கள், வர்னமான புலித்தோல்கள், புலி நகங்கள், யானைத் தந்தங்கள் முதலிய வஸ்துக்களைக் கப்பமாகக் கொடுக்க, அவைகளை வாங்கிக் கொண்ட சகாதேவன் வெகு சந்தோஷமாய்க் கிஷ்கிந்தையை விட்டுப் புறப்பட்டுக் காடு மலைகளைத் தாண்டி எல்லாச் செல்வங்களுக்கும் விளையாடுமிடமா யிராநின்ற மாகிஷ்மதி யென்னும் பட்டணத்திற்குப் போனான்.

அந்த மாகிஷ்மதி ராஜனாகிய நீலனென்பவன் மாரிகாலத்து வெள்ளம்போல மிகவும் ஆரவாரத்துடன் வராநின்ற பாண்டவ சேனைகளையும், அதின் தலைவனாகச் சிங்கம்போற் கம்பீரமாக நோக்கிக்கொண்டு வரும் சகாதேவனையும் பார்த்து தன் கருத்திலிதுதானாவென்று லேசாக நினைத்து எண்ணிறந்த சதுரங்க பலன்களைக் கூட்டிக்கொண்டு யுத்தத்திற்கு வர, இருவருக்கும் மட்டில்லாத சண்டையுண்டாயிற்று. அதில் அவ்வீரர் இருவரும் ஒருவர் சேனையை யொருவர் முன்னின்று நாசஞ் செய்யவேண்டு மென்கிற கருத்தினாற்றை ஓயாமற் சரமாரி பொழிந்தார்கள். ஆகிலும், தலைவருடைய காத்தலினாலே சேனைகளிரண்டும் ஒரு குறைவு மடையவில்லை. இப்படியிருக்க, சகாதேவன் கோபாவேசங் கொண்டு நீலனைப் பாணப்பிரயோகஞ் செய்ய வொட்டாம லடித்து அத்தருணத்தில் அவன் சேனையைப் பஞ்சுபோற் பறக்கடித்தான். நீலனதனால் நிலை நிற்கமாட்டாமற் கதறி தன் சேனைகட்கு சமாதானஞ் சொல்லி நிறுத்தி வெகு தைரியங்கொண்டு வில்லில் அம்புகளைத் தொடுத்துப் பிரயோகித்தது மன்றியில், அக்கினி பகவானையும் நினைத்தான். நினைத்தமாத்திரத்தில் அக்கினி தனது ஏழு சுவாலைகளோடுங்கூடிப் பாண்டவச் சேனையிற் பிரவேசிக்கச் சேனையெல்லாங் காடுபோற் பற்றிக்கொள்ளத் தலைப்பட்டது. அப்போது அப் பாண்டவ சைனியமானது மிகவும் ஆஹா! காரமடைந்து கரிந்துப் பொரிந்து ஐயோ! ஐயோ! என்று கூவிக்கொண்டு தடுமாறிற்று. தீப்பட்ட தருணத்தில் இரதங்க ளெல்லாந் தளிர்த்த சல்லகீ யென்கிற மரங்கள்போல விருந்தன. யானைகளுக்குத் துதிக்கைகள் அறுந்தபோதிலும், அத்துதிக்கைகளின் அடியினின்று மொழுகாநின்ற உதிர நீர்களினாற் கால்களிற் பற்றிக்கொண்ட அக்கினிச் சுவாலை யணைந்து ரேகையாய்ப் புகைகள் கப்பியது பற்றி, அவ்வானைகள் துதிக்கையோடு கூடியதுகள் போலவே காணப்பட்டன. குதிரைகள் வால்களிலுங் கொய்யுளைகளிலுந் தீபம் பற்றிக் கொண்டு சொலிப்பதினால் ஒருவித அலங்காரஞ் செய்யப்பட்டனபோல விருந்தன. பதாதிகளுடைய மூக்கு முதலாகிய அவயவங்கள் அற்றுப்போய் விகாரப்பட்டு நிற்க, அவைகளைப் பார்த்துச் சிலர் பிணந்தின்ன வந்த பிசாசங்களாக நினைத்துத் திக்கால் ஒருவராய்ச் சிதைந்துப் பயந்தோடினார்கள்.

இப்படிக்குச் சொல்லத் திறமில்லாத விபத்தை யடைந்து, ஒரு முகூர்த்த காலத்திற்குள்ளே தங்கள் தங்கள் பந்துக்களை நினைத்து அழுது, ராஜாவை நிந்தித்து மூர்ச்சித்து, எரிந்து கரிந்து, சேனையிலுள்ளோர் எல்லாம் நாசமாய்ப் போனார்கள். இதைப் பார்த்த பாண்டவ குமாரன் தைரியமிழந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு கடலெல்லாந் தாண்டி குளப்படியில் வீழலாயிற்றே யென்று மிகவும் விசனப்பட்டு கிருஷ்ணனுடைய திருவடிகளைச் சிந்தித்து, வருணாஸ்திரம் பிரயோகித்து அக்கனலை யவிக்க யத்தினப்பட, அவ்வஸ்திரத்தினால் அவ்வக்கினி கொஞ்சமவிந்தும், புகை சூழ்வதினால் முன்னைக் காட்டிலும் அதிகமாய்ச் சேனைகளை வதைத்து மறுபடியும் பற்றிக்கொண்டே யிருந்தது. இப்படி சகாதேவனுடைய முயற்சி யெல்லாம் வீணாகிப்போய் படையெல்லாந் தவிக்க, சகாதேவன் ஒன்றுந் தோற்றாமற் சித்தமழிந்து மரம்போல நின்றுவிட்டான் என்று சொல்லிய வைசம்பாயனரை ஜெனமேஜெயன் பணிந்தெழுந்து, சுவாமி! அக்கினிபகவான் பாண்டவராலே உபகாரம் பெற்றவராச்சுதே அப்படிப்பட்டவர் தரும காரியத்திற்காகப் புறப்பட்ட சகாதேவனுக்கு விரோதஞ் செய்யலாகுமோ? அஃதிருக்கட்டும், இவனுக்கு விரோதஞ் செய்து நீலனுக்குச் சகாயஞ் செய்யவேண்டிய கடமை அக்கினிக்கு யேனுண்டாயிற்று. இந்தப் பெரிதாகிய சந்தேகத்தை நிவர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

கேளுமையா மகாராசனே! அந்த மாகிஷ்மதீ ராசனாகிய நீலனென்கிறவன் வெகு தரும சிந்தை யுள்ளவன். வேதங்கள் விதித்த யாகங்களை இடைவிடாமற் செய்துகொண்

டிருந்தான். அவனுக்குச் சுதரிசனை யென்கிற பெண்ணொருத்தி யிருந்தாள். அவளுடைய அழகு நம்மால் வருணித்து முடியாது. தேவதாஸ்திரீகள்-கந்தருவஸ்திரீகள்-இயக்கஸ்திரீகள்-நாககன்னிகைகள் இவர்கள்யாரும் அவளழகுக்கு நிகராகமாட்டார்கள். இப்படிப்பட்ட சவுந்தரிய ரூபலாவண்ணியங்களுள்ள பெண்ணை அக்கினிதேவன் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டான். அதனாலே அந்த ராஜன் காலைமாலைகளில் அக்கினி தோத்திரஞ்செய்வதற்காக எவ்வளவு சொலிக்கச் செய்தாலுஞ் சொலிக்கிறதில்லை. அந்தப் பெண் வந்து சொலிக்கச் செய்தால் சொலிக்கிறது தன் சுவாலைகளாகிய கைகளாற் குளிர்ந்திருக்கும்படி அவளைப் பரிசிக்கிறது. இப்படிப்பட்ட சேட்டைகளை அந்த ராஜன் கண்டு கோபங்கொண்டு அக்கினியைச் சபிக்க யத்தினப்படுகையில், அந்தக் குறிப்புத் தெரிந்த அந்தத் தேவன் பிராமண வேடங்கொண்டு, அந்த ராஜாவின் முன்னிலையில் வந்து கையெடுத்து ஆசீர்வாதஞ் செய்து, ஓ மகாராசனே! உமது பெண்ணாகிய சுதரிசனை யிடத்திலே அக்கினிதேவன் மிகவும் மையல்கொண் டிருக்கிறான். அதைப்பற்றி அவளிடத்திற் சில சேட்டைகள் செய்கிறான் நீர் அது நிமித்தம் அத்தேவனை ஏன் வீணாய்ச் சபிக்க யத்தனிக்கிறீர் அதனாலே உமக்குப் பயனென்ன பெண்ணை யாருக்காகிலுங் கொடுக்க வேண்டியது அகத்தியந்தானே அந்தத் தேவனே மகானுபாவன் அவனைக் காட்டிலும் உமக்கு வரன் வேறே கிடைக்கமாட்டான். ஆகையால், உமது கன்னிகையை அவனுக்குக் கொடுத்துக் கலியாணஞ் செய்வியுமென்று சொல்லி மறைந்து போனான்.

இராசன் இவர்தான் அக்கினி பகவானென்று மறுபடி அவனை நினைக்க, அவனும் முன்போல உருக்கொண்டு வர, தன் மகளை அந்த மகாதேவனுக்குக் கலியாணஞ் செய்து கொடுத்தான். பின்பு அக்கினி மிகவுஞ் சந்தோஷமாகி ராஜாவைப் பார்த்து உமக்கு வேண்டிய வரங்களைத் தருகிறேன் கேளுமென்று சொல்ல, அதுகேட்ட நீலன் ஓ தேவனே! நீர் என்பட்டணத்திலிருந்துகொண்டுசத்துருக்களை இதில் வரவொட்டாமல் எனக்குச் சகாயஞ் செய்யவேண்டுமென்று கேட்க, அப்படியே யாகட்டுமென்று வரங் கொடுத்தான். அதுமுதல் அந்தப் பட்டணத்திலே வர்சஞ் செய்கிறான் இந்தச் சேதி தெரிந்து அனேக ராசாக்கள் அவன் பட்டணத்திற்குப் போகிறதில்லை. இந்தச் சகாதேவன் அந்த ரகசியந் தெரியாமல் எதிர்க்கவே அக்கினியானவன் அந்த நீலனுக்கு முன்பு வரங்கொடுத்தபடி சேனையை யெரித்து நாசஞ்செய்தான். இப்பால் சகாதேவன் தன் சேனைகள் தீயில் மடிவதைக் கண்டு இது அக்கினியின் செய்கை யென்றறிந்து திடீலென்று போய்க் கால் கை முகங்களைச் சுத்தி செய்துகொண்டு, அக்கினி பகவானை மனதில் நினைத்து, சுவாமி! அக்கினிபகவானே! நீர் மகானுபாவன் உம்மை வேதங்கள் வெகுவிதமாய்த் துதிக்கின்றன. சகலமான யாகங்களும் உம்முடைய தேஜசிலன்றோ நிறைவேற வேண்டியவைகளா யிருக்கின்றன. ஆனபடியினாலே யாகங்களெல்லாம் உமது சாரங்களாயின. அதனாலே நீர் யக்கிய மூர்த்தி யென்னும் பெயரை வகிக்கிறீர் எல்லாத் தேவர்களுக்கும் உம்மிடத்திலே அவிகளை யாகுதிசெய்ய வேண்டியதா யிருக்கிறபடியினாலே தேவர்களுக்கு முகமென்றும் அந்த அவிசுகளை அவரவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுக்கிறபடியினாலே அவிய வாஹனனென்றும் நாமங்களை வகிக்கிறீர். எல்லா வஸ்துக்களையும் பரிசுத்தஞ் செய்கிற தன்மை யுடையவராகையாற், பாவகனென்கிற நாமதேயம் பெற்றிருக்கிறீர். உமக்குப் பூசையாகச் சகல யாகங்களையும் விதிக்க வேதங்களுண்டானபடியினாலே, ஜாதவேதனென்கிற பெயரைத் தடுக்கிறீர். இப்படிக்குப் பரிசுத்தமாகிய பல நாமங்களுடைய உம்மை நமஸ்காரஞ்செய்கிறேன். உம்மைவிட உலகங்களுக்கு முக்கிய ஆதாரம் வேறில்லை. சுவாமீ! உமது பூசையாகிய யாகத்திற்காகத் திக்குவிஜயஞ் செயயவந்த எனக்கு நீரே விரோதஞ் செய்வது நியாயமன்று அதருமத்திற்காக நான் யத்தினப்படவில்லை. அப்படியிருக்க, என்க்கு வேண்டியசகாயஞ் செய்யாமல் என் சேனைகளை நாசஞ் செய்தீர் இனியாகிலும் அடியேனிடத்தில் தயைசெய்து ரக்ஷிக்கவேண்டும். உமக்கு அனேகமாயிரம் நமஸ்காரங்கள் செய்கின்றேன் என்று நமஸ்கரித்துத் துதித்து, தர்ப்பைகளைப்பரப்பி,ஈரவஸ்திரத்துடனே பிராயோபவேஷமாகப் படுத்துக்கொண்டான்.

இவ்விதமாகக் கடின விரதஞ் செய்யவே அக்கினி பகவான் சேனைகளை விட்டு நீங்கி, நல்ல ரூபத்தோடு சகாதேவனுக்கு முன்பு

வந்து, ஓ ராஜனே! நீயேன் இப்படிப் பிராயோப வேஷமாகப் படுத்துக்கொண்டாய், நான் அந்த நீலனென்கிற ராசனுக்கு வரங் கொடுத்தபடி நிறைவேற்ற வேண்டியது அகத்தியமாகையால் அப்படி செய்தேன். ஆனால், தருமபுத்திரருக்குச் சகல விதத்திலுஞ் சகாயம் செய்ய வேண்டியதுதான். மேலும், அவர் யத்தினப்பட்டிருக்கிற காரியம் தேவகாரியம், நான் அதற்குவிரோதஞ்செய்யத்தகாது. ஆனாலும் அந்த ராஜாவுக்கு வாக்குத் தப்பாமல் இருக்க வேண்டியதற்காகவும் உன் மனவுறுதியைச் சோதிக்க வேண்டியதற்காகவும் சேனைகளைத் தகித்தேன். அப்போது நீ என்னைக் குறித்துச் செய்த தவத்தினாலும் தோத்திரத்தினாலும் மிகவுஞ் சந்தோஷப்பட்டேன் இனி உன் சேனையைத் தகிப்பதில்லை பயப்படாதே உலகங்களுக்கெல்லாம் காரணக் கடவுளாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தருமபுத்திரருக்கு இராஜசூயத்தை நிறைவேற்றிச் சாம்பிராச்சியம் வருவிக்கப் பூர்ணமாகிய அபிப்பிராயங் கொண்டிருக்கிறபடியினால் எல்லாக் காரியங்களுங் குறைவின்றி நிறைவேறும் என்று சொல்லி அக்கினிதேவன் மறைந்து போகவே சகாதேவன் வெகு சந்தோஷமடைந்து சேனைகளுக்குச் சமாதானஞ் செய்து முன்போலவே சித்தப்படுத்தினான். இந்தச் செய்தி அக்கினி தேவனால் தெரிந்துகொண்ட நீலன் சகாதேவனுக்குச் சகல உபகாரங்களும் பண்ணி சமாதானஞ் செய்துகொண்டு கப்பங்களைக் கொடுத்தான்.

அவைகளை வாங்கிக்கொண்ட சகாதேவன் அந்தப் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டுத் தெற்கே சென்று, திரைபுர மென்கிற பட்டணத்துக்கு வந்து, அமிதோசனென்கிற ராசனைச் செயித்துப் போதனராஜனையும், கைசிகா சாரிஜனையும், சுராஷ்டிர ராஜனையும், ராஜத பருவதத்தின் ராஜாவாகிய திமிங்கில னென்பவனையும், சமுத்திர நடுத்தீவிலிருந்த ஒற்றைக் காலரையும், ஒட்டை முகரையும், சஞ்சயந்தி ராசனையும், விபுண்டாகர வாடமென்னுந் தேசத்தாரையும், பாரசவர்-குலதர்-அசுமகர்-தர்த்தரர்-மூலதர் முதலாகிய பேர்களையுஞ்செயித்து வெகு திரவியங்களைப் பெற்றுக்கொண்டு ஒட்டிரதேசம் தெலுங்குதேசம் தக்ஷணமகாராஷ்டிரதேசம் கர்னாடதேசம் முதலாகிய தேசங்களுக்குப் போய் அவ்விடத்து ராசாக்களை யுத்தத்தினாற் செயித்து வெகு கப்பங்களை வாங்கிக்கொண்டு, அங்கிருந்து தெற்கே திரும்பித் தொண்டை நாட்டிற்குப்போய் அந்த ராஜாவைச் செயித்து, தக்ஷண கொங்கணமென்கிற கொங்குநாட்டைச் செயித்து, சோழதேசம் புகுந்து, அங்கு பலவிதச் சோலை சூழ்ந்து இருகரைகளும் மிகவுந் தெளிவாகிய நீரும், பலவகைப் பக்ஷிகளும், தாமரை-அல்லி முதலாகிய புஷ்பங்களும் பொருந்தி, கண்களுக்கு மிக விநோதமாகவும் சந்தோஷகரமாகவுமிராநின்ற காவேரியென்கிற மகா நதியைக் கண்டு நாடோறும் அதில் ஸ்நானஞ்செய்து கரையில் ஜபதபாதிகள் முடித்து வேதசாஸ்திர மோதிக்கொண்டிருக்கிற பிராமணரையுங் கண்டு சந்தோஷத்தை யடைந்து, சேனையை அக்காவிரிக்கரையில் இறக்கி அந்த வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்தான். அக்கால் அத் தேசத்தாரெல்லாருஞ் சகாதேவன் வந்திருக்கிறானென்று கேட்ட மாத்திரத்திலே இவனைப் பார்க்கவேண்டுமென்று மிகவும் ஆசையினாலே வந்து பார்த்துக் களித்துச் சரசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அந்தச் சோழதேசத்து ராசன் சகாதேவனனுப்பிய தூதனாலே சகலமுந் தெரிந்துகொண்டு வெகு திரவியங்கள்-ஆபரணங்கள்-முதலாகியவைகளை யெடுத்துக்கொண்டு வந்து சகாதேவனைக் கண்டு மரியாதையுடனே கப்பமாகக் கொடுத்தான். அவைகளைச் சகாதேவன் ஆதரவுட னங்கீகரித்து, அந்தத் தேசத்தின் வளத்தையும், அழகையும், காவிரியின் விநோதத்தையும் பார்த்து ஆச்சரியப்பட்டு மந்திரிகளை நோக்கி, ஓ மந்திரிகளே! இந்த நதியின் அழகும் பரிசுத்தமுங் கங்கைக்கு நிகராயிருக்கின்றன. ஆனபடியினாலே இவ்விடத்திற் பத்துநாள் வாசமாயிருந்து போவோமென்று சொல்ல, அவர்களும் அப்படியே யாகட்டுமென்று சம்மதித்தபடியினாலே அங்கே பத்துத் தினங்கள் வேடிக்கையாய் வாசஞ்செய்து அவ்விடம்விட்டுப் புறப்பட்டு பாண்டி நாட்டிற்குப் போய் சேதுவைக் கண்டு சந்தோஷித்து, மணலூர்ப் பட்டணத்திற்குப் போனான். இவன் வந்த சேதி கேட்ட சித்திரவாகனனென்கிற மலயத்துவச பாண்டியன் பரிவாரங்களோடு எதிர்க்கொண்டு வந்து அழைத்துப்போய் வெகு ப்ரீதியுடனே சகல வுபசாரங்களுடன் விருந்து செய்தான். சகாதேவன் அந்தப் பாண்டியனோடு வெகு பரிவுடனே பேசி, பின்பு தன் தமயன் மனை

யாட்டியாகிய சித்திராங்கதையைக் கண்டு நமஸ்கரித்து, க்ஷேமங்களை வினவி அவளா லும் வெகு உபசாரங்கள் செய்யப்பட்டுப் பேசிக்கொண் டிருக்கையில், அவன் குமார னாகிய பப்புருவாகன னென்கிறவன் வந்து நமஸ்காரஞ் செய்ய, அவனை யெடுத்துத் தழுவி உச்சிமோந்து, கண்களி லானந்தபாஷ் பத்துடனே அவனுக்குப் பல பூஷணங்கள் கொடுத்து, அலங்கரித்து, அச்சித்திராங் கதைக்கும் பல பூஷணாதிகள் கொடுத்து, சில நாள் அவ்விடத்திலேயே சுகமாயிருந்து, அந்தப் பாண்டியனால் வெகுமதியாகவுங் கப்ப மாகவுங் கொடுக்கப்பட்ட மிகவும் சிறந்த முத் துச் சரங்களையும் மற்றும் அனேகந் திரவியங் களையும்பெற்று, அந்தராசனிடத்திலும் சித்தி ராங்கதை பப்புருவாகனன் முதலானோ ரிடத் திலுஞ் செலவு பெற்றுக்கொண்டு தென் மது ரைக்குப் போனான். அங்கிருந்த கேரள மென் கிற மலையாள தேசஞ் சென்று அவ்விடத்து ராசாவைச் செயித்துக் கப்பம் வாங்கிக் கொண்டு தென் சமுத்திரக் கரையில் வந்தி றங்கி அந்தப் பூமியிருக்கும் அழகையுங் கடலி ருக்கு மழகையும் பார்த்துப் புகழ்ந்து மந்திரி களோடு யோசனை செய்து கடோற்கஜனை நினைத்தான். நினைத்த மாத்திரத்திலே அந் தக் கடோற்கஜன் அதிக வொளியைப் பரப்பா நின்ற கிரீட கவசகுண்டலாதிகளைத் தரித்து, முடியிற் சூரியனும் இருபுறங்களில் வியாழ மும் வெள்ளியும் உதயமாயிருக்கச் சுவர்ண தாதுக்கள் பரவி விளங்காநின்ற நீலமலை போல் விளங்குந் தேகத்தை யுடையவனாய், பயங்கரமான வடிவுடனே தனது சிறிய தகப் பன் எதிரில் வந்து நமஸ்காரஞ் செய்து என்னை வருவித்த காரியங்கட்டளையிடவேண்டு மென்று வினயத்தோடு கேட்க, சகாதேவனவ னுக்கு ஆசீர்வாதஞ் செய்து சொல்லுகிறான்:

அடா குழந்தாய்! நம்முடைய அண்ண லாகிய தருமபுத்திர மகாராஜன் இராஜசூய யாகஞ் செய்து சம்ராட்டென்னும் பேரைப் பெற யத்தனப்பட்டிருக்கிறார். அதனாலே திக்கு விஜயஞ் செய்வதற்கு நாங்கள் நால்வ ரும் நாற்றிசைகளுக்கும் புறப்பட்டோம். அதில் நான் இத்தென்றிசையிலுள்ள யாவ ரையுஞ் செயித்துக் கப்பங்களை வாங்கி வந் தேன். ஆனால், இலங்கையிலிருக்கும் விபீஷ ணரிடத்திற் போக யெங்களுக்கு அசாத்திய மானபடியினாலே நீ போய் இச்சேதியைச் சொல்லி, இதுவெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணபக வானுடைய பலம் பெற்று நடந்து வருகிற தென்றுந் தெரிவித்து, அவர் கொடுக்கிற கப் பங்களை வாங்கிக்கொண்டு வாவென்று கட்ட ளையிட, அதை யந்த இடும்பி மகன் சிரமேற் கொண்டு நமஸ்காரஞ் செய்து புறப்பட்டு, முன்பு அனுமான் எழும்பிப் பாய்ந்தது போல வெழும்பிப் பாய்ந்து கடலைத் தாண்டி இலங்கையிற் பிரவேசித்து, அங்கிருந்த மகா பலசாலிகளாகிய ராக்ஷதர் ஆயுதபாணிகளாய்க் கூட்டங் கூட்டமா யிருக்கையிலுங் கிஞ்சித் தும் அஞ்சிக்கை யில்லாமல் உட் புகுந்து, அரண்மனை வாசலிலிருந்த காவற்காரரோடு குருவமிசத்திலுதித்த தருமபுத்திர மகாராச னுடைய தூதன் உம்மைக் காண வேண்டி வந்திருக்கிறானென்று உங்கள் ராசனுக்குத் தெரிவியுங்க ளென்று சொல்ல, அவர்களும் இச்சேதியை விபீஷணருக்குத் தெரிவிக்க, அவர் உள்ளே வரும்படி கட்டளை யிட்டதி னாலே அவ்விராக்ஷதர் வழிகாட்ட, நடுவிலி ருக்கும் வேதிக்கைகளையும் அளவற்ற செல் வங்களையும் பார்த்து அதிசயப்பட்டுக் கொண் டே போய், மகா சபையில் நவரத்தினமயமா கிய திவ்விய மண்டபத்திற் பரிசனங்கள் சத் திரசாமராதி வுபசாரங்களைச் செய்ய, மந்திரி கள் புடை சூழ்ந்திருக்க, சேனா நாயகர் மகா சேனைகளோடு வாய் புதைத்துக் கட்டளை களைக் கேட்டுக் கொண்டிருக்க, தேவர்கள் சபையிற் பிரமதேவன் விளங்குவதுபோல் திவ்விய சிங்காதனத்தில் உட்கார்ந்து விள ங்காநின்ற தருமவடிவமாகிய விபீஷணரைக் கண்டு நமஸ்காரஞ் செய்து, சுவாமி! அடி யேன் உதிஷ்டிர மகாராசனுடைய தூதன் கடோற்கஜனென்கிற நாமமுடையவன் அவரா லனுப்பப் பட்டுத் தேவரீரிடத்திற்கு ஒரு சங்கதி சொல்ல வந்தேன். கட்டளையிட்டால் சொல்லுகிறே னென்று சொல்லக் கேட்ட விபீஷணர் இவனுடைய தேஜஸையும் வடி வையும் புத்தியையும் தைரியத்தையும் வணக் கத்தையும் பார்த்துச் சந்தோஷித்து, அப்பா! நீ யார்? அந்த உதிஷ்டிரர் யார்? அவருக்கு நீ தூதனாகிய தெப்படி? நீ வந்தகாரியம் என்ன? அதனைச் சவிஸ்தாரமாகச் சொல்லுக வென்று சொல்லவே, கடோற்கஜன் சொல்லத் துவக்கினான்.

சுவாமி இராக்ஷத ராஜனே! பூமியில் மகா பொருமை பொருந்திய சந்திரவமிசத்து

ராசாக்களிற் சிரோமணியாகிய பாண்டு என்னும் மகாராசனுடைய மூத்தகுமாரர் உதிஷ்டிர ரென்கிறவர் ஒருவர், அவர் தருமமே உருவா யவதரித்ததென்று சொல்லத்தக்கவர், பொறுமையிற் பூமியையும், தைரியத்தில் மேருவையும், நீதியில் யமனையும், யுத்தியிற் பிரகஸ்பதியையும், சத்தியத்தில் அரிச்சந்திரனையும், தேஜசில் சூரியனையும் நிகர்த்தவர் மகானுபாவர். குருநாட்டுக்கு ராசனாயிருந்து எல்லாவரசர்களுஞ் சிரசின்மேற் கொள்ளும்படியாகிய செங்கோற் சீர்மையுள்ளவர். அவருடைய தம்பி வீமசேனனென்று பேருடையவர் அவருக்குச் சமானமாகிய பலசாலி மூவுலகத்திலு மில்லை. அவர் பதினாயிரம் யானை பலமுடையவர். கதாயுதத்தை யெடுத்துக் கொண்டு யுத்தத்திற்குப் புகுந்தாற் காலதண்டந்தரித்த யமனுக்கு நிகராகத் தோற்றுவர். அவருக்கு இடும்பனென்கிற ராக்ஷதன் தங்கையாகிய இடிம்பி யென்கிறவளிடத்திற் பிறந்தவன் யான். அவருக்கு நேரிளையவர் அர்ச்சுன னென்கிற நாமதேயமுடையவர். வில்லாளிகளுக்குச் சிரோமணியாகியவர் அவருடைய சவுரிய தைரிய பராக்கிரமங்களுக்கு உவமானமே கிடையாது.

ஸ்ரீ நாராயணாவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி மூர்த்திக்கு மிகுந்த நேசர் அவருடைய உடன் பிறந்தவளாகிய சுபத்திரையைக்கலியாணஞ் செய்துகொண்டவர், ரூபத்தில் மன்மதனுக்குச் சமானமானவர். அவருடைய தம்பிமார்கள் நகுலனென்றும் சகாதேவனென்றும் பெயரையுடையவர்கள் இருவருளர் அவர்கள் இரட்டைப் பிள்ளைகள். அண்ணன்மார்களுடைய பலத்திற்குத் தாழ்ந்தவரல்லர். இவ்வைவரும் பஞ்சபாண்டவர்களென்று சகல லோகங்களிலும் பிரசித்தமாகியவர்கள். இந்த மகானுபாவர்களுடைய புகழ்பெற்றசரித்திரங்கள் பலவுண்டு. எல்லோரும் மகா தருமிஷ்டர், மகாசூரர், மகா நீதிமான்கள், மகா சாமர்த்தியவான்கள், இவர்கள் தங்களுடைய பல பரம்பரையாய் வந்த ராஜதானியாகிய அஸ்தினா நகரத்தையும் அதைச் சேர்ந்த சகல ராஜ்ய சம்பத்துக்களையும் தங்கள் பெரிய தகப்பனாராகிய திருதராஷ்டிர மகாராஜனுக்குக் கொடுத்துவிட்டுத், தாங்கள் காடாய்க் கிடந்த ஒரு விடத்திலே இந்திரப்பிரஸ்தமென்றொரு நகரத்தை யுண்டாக்கிக்கொண்டு செங்கோற் செலுத்தி வருகிறார்கள். இவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சகல சகாயஞ் செய்யச் சித்தமாயிருக்கிறார். அதனாலேதான் முன்னம் அர்ச்சுன னென்கிறவர் இந்திரன் முதலாகிய தேவர்களை ஜெயித்து, காண்டவவனத்தை அக்கினிக்கு ஆகாரமாகக் கொடுத்து சத்துருக்களால் வெல்லக்கூடாத நான்கு குதிரைகள்கட்டி வானரத்துவசமுடைய ரதத்தையும், காண்டீவ மென்னும் வில்லையும், அக்ஷய தூணிரங்களையும் பெற்றார்.

அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணனுடைய பலத்தைக்கொண்டு ஜராசந்தனை எங்கள் தகப்பனார் ஜெயித்தார். இப்போது மூத்தவராகிய உதிஷ்டிரர் இராஜசூயஞ் செய்யவேண்டுமென்று யத்தினப்பட்டு, எல்லா அரசரிடத்திலுங் கப்பம் வாங்கி வரும்படி தமது தம்பிமார் நால்வருக்குங் கட்டளை இட்டதினாலே நால்வரும் நான்கு திக்குகளுக்குப் புறப்பட்டார்கள். அவர்களிற் சகாதேவனென்கிறவர் தென்றிசைக்கு வந்து யாவரையுஞ் ஜெயித்துக் கப்பங்களை வாங்கிக்கொண்டு சமுத்திரக் கரையில் இதொரு சமுத்திர மென்னும்படியாகிய சேனைகளுடனே வந்திறங்கி, தேவரீரிடத்திற்குப் போய் இச்சேதி தெரிவித்து வரும்படி அடியேனுக்குக் கட்டளையிட்டபடியினாலே அடியேன் இவ்விடம் வந்து, தேவரீரைப் பணிந்து, இச்சேதிகள் எல்லாவற்றையும் விண்ணப்பஞ் செய்தேனென்று சொல்ல, கடோற்கஜன் வார்த்தையைக் கேட்ட விபீஷணர் சந்தோஷித்து, அப்பா கடோற்கஜா! நீ நம்முடையவ னானபடியினாலும், அவர்கள் மகா தருமவான்கள் என்கிறபடியினாலும், ஆரம்பித்த காரியம் வெகு மேன்மையாகிய தரும காரியமானபடியினாலும், ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவர்களுக்குத் துணையாயிருப்பதினாலும் நான் கப்பங் கொடுக்கச் சம்மதித்தேனென்று சொல்லி, அருமையாகிய அனேகம் பொன் வெள்ளி ரத்தினங்களாற் செய்த பூஷணங்கள் - பாத்திரங்கள்-ஆசனங்கள்-சயனங்கள் இன்னும் யானைத் தந்தங்களாகிய வஸ்துக்கள்-வஸ்திரங்கள்-கம்பளங்கள்-தோல்கள் முதலானவைகளையும் பதினான்கு பொற்பனை மரங்களையுங் கொடுத்து இவைகளைக் கொண்டுபோய் சேர்ப்பதற்காக எண்பத்துநான்கு ராக்ஷதரை யனுப்பிவித்தார். கடோற்கஜன் அவைகளை யெல்லாம் அந்த ராக்ஷதர் தலைமே லேற்றிக்கொண்டு, விபீஷணரைத் தெண்டனிட்டு விடைபெற்றுப் புறப்பட்டு

ஒரு முகூர்த்தத்தில் அப்பெருங் கடலை கடந்து சகாதேவனுடைய சமீபத்திலிறங்கி நமஸ்கரித்து, தான் போய்வந்த சேதிகளைச் சவிஸ்தாரமாகச் சொன்னான். இந்தக் கடோற்கஜன் ராக்ஷதரோடுகூட ஆகாசத்தினின்றும் இறங்கும்போது, இவர்களுடைய ரூபத்தைப் பார்த்துப் பயந்து சேனையிலிருப்போ ரெல்லாம் ஓட, அதுகண்ட சகாதேவன் யாவரையுங் கூப்பிட்டுப் பயப்படாதேயுங்க ளென்று சமாதானஞ் சொல்லி, நமது குமாரன் கடோற்கஜன் இலங்கையிலிருந்து ராக்ஷதர்களோடு திரவியங்கள் கொண்டுவருகிறானென்று கூறி அவர்களை நிலைநிறுத்தினான்.

இப்படிக்குக் கடோற்கஜன் கொணர்ந்த பொருள்களை எல்லாம் பார்த்து சந்தோஷித்த சகாதேவன் அங்கிருந்து மலையமென்கிற பொதியமா மலைக்குப்போய், அதிலிருக்கும் மகானுபாவரும் மகா தபோநிதியும் சகல வேத சாஸ்திரங்களு மறிந்தவராகிய அகத்தியமாமுனியைக் கண்டு பணிந்து, அவரால் ஆசீர்வதிக்கப்பட்டு விடைபெற்று, சசிய பர்வதம் போய் அவ்விடங்களின் விசித்திரங்களை யெல்லாங் கண்டு, அங்கே யிருந்த வேட ராஜரை ஜெயித்து, யாவரையும் வருடந்தோறும் கப்பங் கட்டும்படி நியமித்துத் திரும்பி, அநேக யானைகளின்மீதிலும் ஒட்டகங்களின் மீதிலும் தான் சம்பாதித்த பொருள்களை யெல்லாம் நிறைத்துக்கொண்டு தன்னுடன் கூட இருந்த தமிழரை யெல்லாம் வெகுமானஞ் செய்து அனுப்பிவிட்டுத் தன் சேனைகளுடனே பேரிகைகள்-டங்காக்கள்-காகளங்கள் முதலாகிய பல வீரவாத்தியங்கள் முழங்கப் புறப்பட்டு, வந்தியரெல்லாரும் விருது சொல்லிக் கட்டியங்கூற வெகுவேடிக்கையாய் நெடுந்தூரமாகிய வழியைத்தாண்டி இந்திரப்பிரஸ்தஞ் சேர்ந்து யாவராலுங் கொண்டாடப்பட்டு, மகாராஜாவைக் கண்டு பணிந்து சேதியெல்லாஞ் சொல்லி, தான் கொணர்ந்த பொருள்களையும் விசேஷமாய் விபீஷணர் கொடுத்த பொற் பனைமரங்கள் முதலானவைகளையுங் காட்ட, அவைகளை யெல்லாம் உதிஷ்டிரர் பார்த்து வெகு சந்தோஷமடைந்து சகாதேவனை இரு கையினாலுங் கட்டிக்கொண்டு கண்களில் ஆநந்தபாஷ்பம் விட்டார்.

### நகுலன் வாருண திக்குவிஜயம்

இவ்விதமாகவே அளவற்ற படைகளோடு நகுலன் மேற்றிசைக்குச் சென்று, அங்கே சுப்பிரமணியருக்கு மிகவு மிஷ்டதானமாயிருக்கிற ரோகிதக்கிரபமென்கிறதேசம்போய் அத்தேசத்தாராகிய மயூரகர் என்கிற ஒருவித க்ஷத்திரியரோடு சொல்லத் தரமில்லாத போர் செய்து ஜெயித்துக் கப்பங்களைப்பெற்று, அங்கிருந்து மரு என்றும் தானியகமென்றும் பேர்பெற்ற தேசங்களுக்குப் போய், சைரிஷிகர் என்கிற பேர்களையும் வைரமகர் என்கிற பேர்களையும் யுத்தத்தில் வெகு வருத்தப்படுத்தி ஜெயித்து அங்கிருந்துபோய் வீலந்தரர்-வடதானர் என்கிற வனவாசிகளோடு தேவாசுர யுத்தத்திற்குச் சமானமாகிய யுத்தஞ் செய்து, அவர்களில் அனேகரை வெட்டி மடித்து, அவர்கள் புதைத்து வைத்திருந்த பொருள்களைக் கொள்ளையடித்துப் புறப்பட்டு, ஐந்து கூட்டத்தாராகிய சிபிதேசத்தார் - திரிகர்த்த தேசத்தார் - அம்பஷ்ட தேசத்தார்- மாளவ தேசத்தார்-கர்ப்பட தேசத்தார் இவர்களோடு, மத்திய-நிகாய ரென்கிறவர்கள் அவுபவிருத ரென்கிறவர்கள் இப்படிப்பட்ட பல விதராஜாக்களோடும் புஷ்பகாஆரணியமென்னும் இடத்திலிருந்த சில வேட ராஜாக்களோடும் ஓய்வில்லாமற் சண்டை செய்து, சிலரைக் கழுத்தறுத்து, சிலரைக் கைகால்களற்றவர்களாக்கி, சிலரைப் புறங்காட்டி ஓடும்படி செய்து, யானைப் பிணங்களும் குதிரைப் பிணங்களும், மனிதப் பிணங்களும் மலை மலையாய்க் குவித்து, உதிரவாறுகள் பல வோடச்செய்து, அந்தப் பூமிகளைச் சுடுகாடுகள் போலாக்கி, பூதங்களுக்கும் பேய்களுக்கும் கழுகுகளுக்கும் நரிகளுக்கும் நாய்களுக்கும் மகா விருந்து செய்வித்து, அங்கங்குள்ள வெகு பொருள்களைக் கவர்ந்துகொண்டு காலில் விழுந்த சில உயிர்களோடும் பொருள்களோடும் விட்டு ரட்சித்து ஜயஸ்தம்பம் நாட்டினான்.

பின்பு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சிந்துவென்னும் நதியின் கரைக்கு வந்து, சிந்து தேசத்து ராஜனிடத்திற் கப்பம் வாங்கிக்கொண்டு குற்சர தேசத்துக்குப்போய் அவ்விடத்தியாரோடும் போர் செய்து வெற்றி பெற்று, மற்றும் அந்தப் பக்கங்களிலிருக்கிற தேசங்களை ஜெயித்து சரஸ்வதீ நதியின் கரைக்கு வந்து அங்கே கூட்டங் கூட்டமாயிருந்த சூத்திரர் அநீரர் பார்வதேயர் என்கிற பேர்களைக் கப்பங் கட்டச்செய்து, பஞ்சநதம்-மித்திரபோசம்-சிம்மந்தம் - அபரபத்தனம் -

என்கிற விடங்களைச் சுவாதீனஞ் செய்து கொண்டான். பின்பு அவ்விடம் விட்டுப் புறப் பட்டு உத்தரச் சுயோதிஷ மென்கிற விடஞ் சென்று அதின் ராஜனைக் கீழ்ப்படுத்தி மிகுந்த திரவியங்களை வாங்கிக்கொண்டு ரம ணர் என்கிற க்ஷத்திரிய ஜாதியாரை வென்று, சமுத்திர நடுவிலிருந்த சிலமிலேச்ச தேசங் களுக்குப்போய், அவர்கள் தான் வருஞ்செய்தி கேட்ட மாத்திரத்திலேயே எதிர்கொண்டு வந்து கொடுத்த பலவிதப் பொருள்களையும் வாங்கிக்கொண்டு, அப்பாலிரானின்ற ஊண தேசக்குப் போனான். அங்கிருந்த ஊணர் மிகுந்த ஆக்ரோஷத்துடனே வெகு சேனை களைக் கூட்டிக்கொண்டு சண்டைக்கு வந்தார் கள். அப்போது நகுலனுடைய சேனைகளுக் கும் ஊண சேனைகளுக்கும் ஒரு முகூர்த்த காலம் யுத்தம் உண்டாயிற்று. அந்த யுத்தத் தில் ஊணசேனை அதிகமாய் மடிந்ததைக் கண்ட அதின் பிரபுக்கள் எதிரே வராமல் தந்திரமாய்ப் பாண்டவச் சேனையை மடிக்கத் தலைப்பட அதுகண்ட நகுலன் கோபங் கொண்டு பாண வருஷம் வருஷித்துத் தோ லாடைகளுங் கம்பள வாடைகளுந் தரித்தி ருக்கும் அவர்களுடைய தேகங்களைத் துண் டந் துண்டமாகச் சிதைத்துக் கோட்டை களையு மடித்து நாசஞ் செய்தான்.

இப்படி வெகுவாய் மடிந்தபின் மிகுந்த சில ஊணப் பிரபுக்கள் ஓடிவந்து, நகுலன் பாதங்களில் விழுந்து வெகுவான காணிக்கை களைக் கொடுத்தார்கள். அதனாலே நகுலமகா ராஜன் அவர்களைத் தயை செய்து விட்டுப் போட்டு, அந்தப் பக்கங்களிலுள்ள சில தீவு களி லிருக்கிறவர்களிடத்தில் தூதரை யனுப் பிக் கப்பங்களை வருவித்துக்கொண்டு, மறுபடி சமுத்திரக்கரைக்கு வந்து, ஆனர்த்த தேசத் திலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அதிகாரிக ளோடு பேசித் துவாரகைக்குத் தூதரையனுப் பிவித்தான். அந்தத் தூதர் துவாரகைக்குச் சென்று நகுல மகாராசன் வந்திருக்குஞ் செய் தியை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு விண்ணப்பஞ் செய்ய, அது கேட்ட மாத்திரத்திலே கண் ணன் தன் தமயனாகிய பலராமருக்கும் உக் கிரசேனன் முதலாகிய மற்றை யாதவருக்கும் இச்சேதி சொல்லிப் பாண்டவர்களுடைய பராக்கிரமத்தையுஞ் சாமர்த்தியத்தையும் புக ழ்ந்துபேசி, கப்பங் கட்டவேண்டியதாகச் சம்ம திப்படுத்தி, திரள்திரளான பொன்-வெள்ளி-ரத்தினங்கள் - வஸ்திரங்கள் - வாகனங்கள் இவைகளை யெல்லாம் எடுப்பித்துக்கொண்டு, தாமே பரிவாரத்தோடு வந்து நகுலனைக் கண்டு சந்தோஷத்துடன் கொடுத்தார். நகு லன் கிருஷ்ணனைக் கண்ட மாத்திரத்திலே யெழுந்து நமஸ்காரஞ் செய்து ஆசனங் கொ டுத்து, அவர் உட்கார்ந்தபின் தான் உட்கார் ந்து, தான் திக்குவிஜயத்திற்குப் புறப்பட்டு வெற்றிபெற்ற விதங்களை யெல்லாஞ் சொன் னான்.

அப்போது கண்ணன் நகுலனைப்பார்த்து ஓ பாண்டவ வீரனே! நீங்கள் வெகு பல பராக் கிரமங்களும் அஸ்திர வித்தியா சாமர்த்தி யங்களுமுடைய போர்கள் ஆனதினாலே உங்க ளுக்கு எங்கும் ஜயம் வருமே யல்லது வேறி ல்லை. அந்த மகானுபாவராகிய தருமபுத் திரரைத் தவிர மற்றை யார் இராஜசூயஞ் செய்ய வல்லவ ரிருக்கிறார்கள்? இப்படிப்பட்ட தம்பிமார்களையுடைய அவருக்கே இந்த யாகந் தருமன்றி மற்றவருக்குத் தகாது. நான் ஏதோ கொஞ்சம் பொருள் கொடுத்தேன் இதைப் பெரிதா யெண்ணும்படி தரும புத்திரருக்குச் சொல்லவேண்டு மென்று சொல்லக் கேட்ட நகுலன் கைகூப்பி, ஓ கிருஷ்ணமூர்த்தி! நீர் யெங்களைப் பரிகாசஞ் செய்கிறீர். ஏனென்றால், அளவற்ற மகிமை பொருந்திய உமது கிருபா கடாக்ஷ மில்லாமற்போனால் எங்களுக்குப் பல மேது? சவுரியமேது? சாமர்த்தியமேது? ஜய மேது? புகழேது? ஒன்றுங் கிடைக்கமாட் டாது. உமது சகாய பலத்தைக்கொண்டு தரும புத்திர மகாராஜா இந்த காரியத்தை யாரம் பித்தாரே யல்லது வேறில்லை. நாங்களடைகிற மேன்மைகள் யாவும் உம்முடைய கிருபாதி சயமே. இல்லாவிட்டால் உம்முடைய புஜ பலத்தைப் பெற்ற இந்தத் திசையை நான் வெல்ல மாட்டுவேனோ? ஆதலால், எல்லாப் பொருள்களும் நீர் கொடுத்தவையே இனி யாகம் நிறைவேற வேண்டியதும் உம்மா லேயே. ஆயினும், தேவரீர் இந்திரப்பிரஸ் தத்திற்குச் சீக்கிரம் வரவேண்டும் என்று சொல்ல, ஸ்ரீகிருஷ்ணன் நல்லதென்று வெகு சந்தோஷமாய் நகுலனைக் கட்டிக்கொண்டு இன்னுஞ் செயிக்கவேண்டிய சில ராசாக்களை யுஞ் சீக்கிரத்திற் ஜெயித்து நகர் போய்ச் சே ரென்று சொன்னார்.

அதுகேட்ட நகுலன் வெகு பிரீதியோடு அவர் கொடுத்த வஸ்துக்களை வாங்கிக்கொ

ண்டு விடைபெற்றுப் புறப்பட்டு, மத்திதேசஞ் சென்று, தன் நல்லம்மானாகிய சல்லிய மகா ராஜனைக் கண்டு பணிந்து தான் வந்த சேதி சொல்ல, அந்த மத்திரராஜன் கேட்டு வெகு சந்தோஷப்பட்டு வெகு பொருள்களைக் கொடுக்க, நகுலன் அவைகளை வாங்கிக்கொண்டு சில நாள் அங்கேயே இளைப்பாறிப் பின் சல்லியனிடத்திற் செலவு பெற்றுப் புறப்பட்டுக் காந்தார தேசஞ் சென்று, திருதராட்டிர மஹாராஜன் மாமனாராகிய சுலப மஹாராஜனைக் கண்டு பணிந்து வந்த செய்தி சொல்ல, அந்தச் சுலபமகாராஜன் கேட்டு நகுலனுக்கு வெகு மரியாதையோடு விருந்திட்டும் பலவிதப் பொருள்களைக் கொடுக்க, அவைகளை வாங்கிக் கொண்டு அவ்விடம் விட்டு உல்லாசத்தோடு திரும்பி, சமுத்திரப் பிராந்தத்தி லிருந்த சாக்குவர்-பப்பரர் யென்கிற ஜாதியா ரிடத்திற்குத் தூதரை யனுப்பி, அபரிமிதமாகிய கப்பங்களை வருவித்துக்கொண்டு, லாடதேசம்-கடவு தேசம் இவைகளுக்குப் போய், மகா வீரராகிய அந்த ராஜாக்களுடனே வெகுகாலம் யுத்தஞ் செய்து, பின்பு அத்தேசத்தார் இவனுடைய பராக்கிரமத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டு சினேகிக்கும்படி அபிப்பிராயத்தைக் காட்ட, அவ்வாறே அவர்களோடு நேசஞ் செய்து வெகு திரவியங்களைப் பெற்றுக்கொண்டு, மிகுந்த களிப்பு மிறுமாப்புமுள்ள சகல சேனைகளுஞ் சூழ பல வாத்தியங்களு முழங்க வெகு பெருமையோடு இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்து தரும புத்திரரைத் தண்டனிட்டுத் தான் போய்வந்த செய்திகளைச் சொல்லி, அனேகங் கோவேறு கழுதைகளின் மீதிலும் ஒட்டகங்களின் மீதிலும் வந்த சகல சம்பத்துக்களையுங் காட்ட தரும புத்திரர் வெகு சந்தோஷப்பட்டு, நகுலனை மகா ஆனந்தத்தோடுங் கட்டிக்கொண்டு முத்தமிட்டு வெகு ஆசீர்வாதங்கள் கூறினர்.

### ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இந்திரப்பிரஸ்தத்திற் கெழுந்தருளல்.

கேளுமையா ஜெனமேஜெய மகாராஜனே! இவ்விதமாகத் தருமபுத்திர மகாராஜன் தம்பிமார் நால்வரும் நான்கு திக்குகளை ஜெயித்துக் கொணர்ந்த திரவியங்களும் குதிரை முதலான வாகனங்களும் அபரி மிதமாகி, அவ்வளவுங் கணக்கி லடங்காமல் இருப்பதையும் அனேக பொக்கிஷ வீடுகள் பிடியாம லிருப்பதையும் உலகமெங்கும் புகழ்ப் பிரகாசிப்பதையும் பார்த்து மட்டில்லா வானந்தமடைந்து திக்குவிஜயத்திற்காகப் போயிருந்த சேனை சனங்களுக்குஞ் சேனை நாயர்களுக்கும் அளவற்ற வெகுமதிகளும் மற்றும் அனேக தான தருமங்களுஞ் செய்து மன்னுயி ரெல்லாந் தன்னுயிராய் நினைத்து, நீதிவழுவாமல் அரசாட்சி செய்து வருகையில், தேசமெங்கும் மாதமும்மாரி பெய்து, அதிவிருஷ்டி முதலாகிய ஈதிபாதைகள் ஒன்றுமில்லாமல், அக்கினி பயம்-வாயு-பயம்-சோர பயம்-வியாதி பயம்-இவைகளொன்று நாடாமல் பூமியில் சகல பயிர்களும் விருத்தி யடைந்து சுபக்ஷேமமாய் இருந்தன. ஜனங்களெல்லாந் தங்கள் தங்கள் வருணாச்சிரமமுறை பிறழாமலும் மரியாதைகளைக் கடவாமலுந் தருமங்களை யனுஷ்டித்துக்கொண்டு இராஜாவைப் பிதாவைப்போலவும் புத்திரனைப்போலவும் பாவித்து வெகு விசுவாசமாய் இருந்தார்கள். அப்போது மூடனும், தரித்திரனும், துஷ்டனும் கிடையாமற் போனார்கள். தேவாலயங்களுக்கும் பிரமாலயங்களுக்கும் ஒரு குறைவுமின்றிச் சகல சிறப்புக்களும் நடந்துவந்தன.

இவ்விதமாக கிருதயுகத்திலும் நடவாத் தருமராச்சியஞ் செய்து யாவரும் புகழ விளங்காநின்ற தருமபுத்திர மகாராஜனை ஒருநாள் மந்திரிகளும் பந்துக்களுஞ் சேர்ந்து, ஓ மகாராஜனே! நீர் நெடுநாளாய் நினைத்துக்கொண்டிருக்கிற மகா யாகத்தை நிறைவேற்றும்படியான காலம் இதுதான். சகல ராசாக்களும் வசப்பட்டிருக்கிறார்கள். ராச்சியம் வெகு சுபக்ஷேமமா யிருக்கிறது. குபேரனுடைய பொக்கிஷத்திலும் அதிசயிக்கத்தக்க பொக்கிஷங்கள் சேர்ந்திருக்கின்றன. இப்படி இடம் பொருள் ஏவல் மூன்றும் அமைந்திருக்கின்றபடியினாலே யாகத்தை ஆரம்பஞ் செய்யலாம் என்று சொல்லக்கேட்ட, தருமபுத்திரர் சரிதானென்று ஒப்புக்கொண்டு, யாகத்திற்கு யத்தினப்பட்டார். அந்தத் தருணத்தில் உலகங்களையெல்லாம் படைத்தளித் தழிப்பதற்கு காரணனவனும், தத்துவ ஞானிகளில் உள்ளத்தில் இடைவிடாம லிருப்பவனும், முக்காலத்துப் பொருள்களுக்கு மதிபதி யாகியவனும், ஆதியும் அந்தமும் இல்லாப் பெருஞ்சோதியாய் விளங்குபவனும், நான் மறைகளாலுஞ் சொல்லொணாப் பெருமை யுடையவனும், சகல தேவர்களுக்குந் தலைவனுமாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தன்னை யாசிரித்தவரிடத்தில்

இருக்கும் பேரன்பினாலே தாமே சகல பரிவா
ரங்களோடு கூடி, வெகு ரத்தினங்கள்-பொன்
கள்-வஸ்திரங்கள் முதலாகிய எல்லாவற்றை
யும் வரிசையாகக் கொண்டு இந்திரப்பிரஸ்தத்
திற்கு வர, இச்சேதி கேட்ட பாண்டவர்கள்
நகரத்தையும் அந்த நகரத்திலுள்ள மாடமா
ளிகையும் அலங்கரிக்கக் கட்டளையிட்டு வெகு
விபவங்களுடனே தாங்கள் ஐவரை எதிர்
கொண்டு தக்கபடி யுபசாரஞ் செய்து அழை
த்து வருவதானார்கள்.

அப்போது அந்த நகரத்துச் சனங்க
ளால் வாசனை கட்டிய தண்ணீர் தெளித்து,
மலர்களுந் தளிர்களுந் தூவி, தோரணங்
கட்டி, வீடுகள் தோறும் பதாகைகள் உயர்த்தி,
தீபவரிசைகள் ஏற்றி இன்னும் இவ்வித
அலங்காரஞ் செய்யப்பட்டு விளங்காநின்ற
இந்திரப்பிரஸ்த நகரியின் வீதிகளில் ஸ்ரீ
கிருஷ்ணன் பாண்டவர்கள் சமேதராய் வரு
மளவில், ஸ்திரீகளும் புருஷரும் மஞ்சன
மாடிக்கொண் டிருந்தவர் மஞ்சன மாடிய
படியே, அலங்காரஞ் செய்துகொண் டிருந்த
வர் அலங்காரஞ் செய்தபடியே, போசனம்
பண்ணிக்கொண்டிருந்தவர் போசனம் பண்
ணியபடியே, ஆவலோடு ஓடிவந்து, வாசல்
திண்ணைப்புறத்திற் சிலரும் உப்பரிகைகளின்
மீதிற் சிலரும், பதாகைகளி னருகிற் சிலரும்,
கொடுங்கைகளின்மேற் சிலரும், சுவர்கண்
மீதிற் சிலரும், மரங்களின்மீதிற் சிலரும்,
வீதிகளிற் பலருமாகி, ஸ்திரீக ளென்றும்,
புருஷரென்றும் பாராமல் ஒருவர்மேல் ஒரு
வர் விழுந்து நெருங்கிக்கொண்டு, வஸ்திரங்
கள் ஆபரணவிதங்கள் முதலானவை விழுந்து
போனதுந் தெரியாமல் பூரண சந்திரன்
போன்ற வதனமும், நிலவின் தோற்றம்
போன்ற புன்னகையும், அன்றுபூத்த செந்தா
மரை மலர்போன்ற கண்களும், பவழக்கடிகை
போன்ற அதரமும், நீலப்பகைபோன்ற மார்
பும், யானைத் துதிக்கைபோன்ற கைகளும்
பொருந்தி, திவ்விய ரத்னாபரணங்களா லலங்
கரிக்கப்பட்ட மரகதக் குன்றுபோ லிராநின்ற
திருமேனியுடனே பீதாம்பரமும், வனமாலை
யும், கவுஸ்துவமும், சங்கு சக்கர முதலிய பஞ்
சாயுதங்களுந் தரித்து, கோடி மன்மத சுந்தர
னாய் விளங்காநின்ற ஸ்ரீ கிருஷ்ணனைப்
பார்த்து, கண்களில் ஆனந்தபாஷ்பந் ததும்
பவுந் தேக மயிர்க்கூச் சடையவும் மோகித்து,
சிலர் கட்டிக்கொள்வது போலவும், சிலர் முத்த
மிட்டுக்கொள்வது போலவும், சிலர் சரச சல்
லாபஞ் செய்வது போலவும், சிலர் திருவடி
வருவது போலவும், சிலர் உபசரிப்பது போல
வும், சிலர் உடனிருந்து விளையாடுவது போல
வும், யாருக்கு எப்படி மனோரதமோ அப்படிக்
கெல்லாம் பாவித்து ஆனந்தக் கடலி லாழ்ந்
தார்கள். மாதர்களெல்லாம் மன்மத பாணங்
களுக் கிலக்காகும் மனந் தளர்ந்து மெய்
சோர்ந்து, கஞ்சுகங் கிழிந்து முலைகள் விம்ம
வும், அரையில் ஆடையவிழ்ந்து வீழவும்,
பெருமூச்சுக ளுண்டாகவும், கொண்டையின்
சொரு க்விழ்ந்து மலர் சொரியவும், உடம்
பெல்லாம் வியர்வை விட்டு நடுக்கமுறவும், பர
வசப்பட்டு, ஸ்ரீ கிருஷ்ணனோடு சரசமாடும்
பாவனைகளாலே பக்கத்திலிருப்போரைத் தழு
வது முதலாகிய செய்கைகளைச் செய்து, பைத்
தியம் பிடித்தவர்போலுங் கள்ளுண்டவர்
போலும் ஆனார்கள்.

இவ்விதமாகக் கண்ணன் சகல ஜனங்
கள் நெருங்கிய வீதிகளிற் பிரவேசித்துப்
பாண்டவர் புடைசூழ வருவதைப் பெரியோர்
கள் கண்டு ஆசீர்வதிக்க, முதுமை பொருந்
திய மாதர்கள் பொரிகளிறைத்து வாழ்த்த,
மெள்ள மெள்ள அரண்மனைக்குட் சென்று,
குந்திதேவி - திரௌபதி - சுபத்திரை முதலா
னோரையுங் கண்டு, தகுந்தபடி உபசாரத்து
டனே யோகக்ஷேமங்களை வினவி, அவர்களால்
மிகவுங் கொண்டாடப்பட்டு சந்தோஷமாய்
இருந்தார். அந்தக் கிருஷ்ணன் வந்தபோது
அப்பட்டணத்தார் நெடுநாள் வெய்யலினால்
வறண்ட பயிர்கள் மேகம் வருட்சிக்கக்கண்டா
லெப்படியோ அளவற்ற நாள் இருண்ட
குகையி லிருந்தவர்கள் சூரியனைக்கண்டா லெப்
படியோ அப்படிச் சந்தோஷப்பட்டார்கள்.
பின்பு தருமபுத்திர மகாராஜன் ஸ்ரீ கிருஷ்ண
னைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்:
ஓ கிருஷ்ணா! நீர் எங்களிடத்திற் பரிபூரண
கிருபை வைத்துச் செய்த சகாயத்தினாலே
சகல ராஜாக்களுங் கீழ்ப்பட்டார்கள். பூமி
யெல்லாம் நமது சுவாதீனத்தி லிருக்கிறது.
தனங்கள் அளவற்றதுகளா யிருக்கின்றன.
யாவரும் வியக்கத்தகுந்த மேன்மையும் புகழு
முண்டா யிருக்கின்றன. ஒரு குறைவுமில்லை.
ஆனபடியினாலே, இந்த ரத்ன முதலிய தனங்
களையெல்லாம் பிராமணர் விஷயத்திலும் அக்
கினிவிஷயத்திலும் உபயோகித்து கிருதார்த்த
னாகவேண்டு மென்று நினைக்கிறேன். இதற்கு

நீர் கட்டளையிட்டு கூடவேயிருந்து சகல காரியங்களையும் நிறைவேற்ற வேண்டும். எக்காலத்திலும் எக்காரியங்களுக்கும் எங்களுக்கு உம்மைவிட கதிவேறில்லை. ஆகையால், எனக்கு இராஜசூயயாகத்திற்காகக் கட்டளையிட்டு, என் தம்பிமார்களைக் கூட வைத்துக்கொண்டு, ஆகவேண்டிய காரியங்களை அமைதிபெறச் செய்து ரக்ஷிக்கவேண்டுமென்று விநயத்தோடு தருமபுத்திரர் கேட்டுக்கொண்டார்.

இவ்வாறு தருமபுத்திரர் சொல்லிய வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார்: ஓ மகாராஜனே! உமது நன்னெறியினுற் சகலமும் கூடிவரும். அந்தச் சாம்பிராச்சியத்திற்கு நீரே தருந்தவரன்றி மற்றை யார்தான் தருவார்? ஆதலாலே அவசியம் நீர் இப்போது யாகத்திற் பிரவேசிக்கவேண்டும் ஒரு குறைவும் நேரிடாது. நீர் எந்தக்கட்டளை யிட்டாலுஞ் சிரத்தால் வகித்து நடத்தக் காத்திருக்கிறேன். உமக்கு வரும் மேன்மைதான் எங்களுடைய மேன்மை. உமக்கு இந்தக் காரியம் நிறைவேறின பின்புதான் நாங்கள் எல்லாங் கிருதார்த்த ராவோம். ஆனபடியினுலே விசாரப்படாமல் யாகத்தை ஆரம்பித்து நடத்த வேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியதைக் கேட்ட உதிஷ்டிரர் வெகு சந்தோஷப்பட்டு, ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, ஓ கிருஷ்ணு! எங்களிடத்தில் மிகுந்த கிருபையினுலே நீர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்க மிகவும் ஆனந்தமாயிற்று. அந்தப்பிரகாரமே சகல பாரங்களையும் வகித்து யாகத்தை நிறைவேற்று மென்று சொல்லித் தம்பிமாரை அழைத்து யாகத்துக்கு வேண்டியவைகளைச் சித்தப்படுத்தும்படி கட்டளையிட்டார். அப்போது தமயனிட்டகட்டளையின்படி சகாதேவனைவன் யாகத்துக்குவரும் பிராமணர் முதலிய நான்கு ஜாதியாருக்கும் வேண்டிய சகல பதார்த்தங்களைச் சித்தம்பண்ணும்படிக்கும் யாகஞ் செய்கிற பேர்களைத் தக்கபடி விசாரிக்கும்படிக்கும் தங்கள் சாரதிகளுக்குத் திட்டஞ் செய்து, தான் தவுமிய மகா முனியின் சொற்படி நல்ல பூமியில் வெகு விசாலமாகவும் அழகாகவும் பலமாகவும் சாஸ்திரவிதிக்கு ஒத்ததாகவும் யாகசாலையை நிறுமித்தான். அன்றியும், வருஞ் சனங்களுக்கு வாசஸ்தலமாக ஸ்நானமண்டபம்-பூஜாமண்டபம்-அலங்கார மண்டபம்-ஆரோக்கியமண்டபம் - போஜனச்சாலை-ஆபரணச்சாலை-அமளிச்சாலை - அருந்தவச்சாலை முதலிய வெகு மண்டபங்களும், சாலைகளும், அளவற்ற சித்திர விசித்திரங்களோடு கண்டவர்கள் யாவரும் களிக்கும்படியாக நிருமாணஞ் செய்வித்தான்.

### வேதவியாசர் முன்னிலையில் தருமராஜன் யாகதீக்ஷை பெறுதல்

இப்படி யாகத்துக்குவேண்டிய காரியங்கள் நடத்திக்கொண் டிருக்கையிலே ஸ்ரீ வேதவியாசமகாமுனி அவ்விடம் எழுந்தருளினுர். அவரை உதிஷ்டிரர் நமஸ்காரஞ் செய்து, ஓ எங்கள் குலகுருவாகிய சுவாமி! தேவரீர் முன்னம் அக்கிபாபித் திருந்தபடிக்கு ஸ்ரீகிருஷ்ணனுடைய சகாயத்தினுலே சகல ராஜாக்களையுஞ் ஜெயித்து, வெகு திரவியங்கள் கொணர்ந்து இராஜசூய யாகத்துக்கு ஆரம்பஞ் செய்திருக்கிறேன். தேவரீர் அதை எப்படி நடத்த வேண்டுமோ அப்படி நடத்தும்படி தயை செய்யக் கோறுகிறேனென்று சொல்லக்கேட்டு அப்படியே யாகட்டுமென்று அங்கீகரித்து, யாகத்துக்கு வேண்டிய ரித்துவிக்குகளை ஏற்படுத்தினுர். யார் யாரை எவ்வெவ்வெப்படி ஏற்படுத்தினு ரென்ருல், ஈசர்மா வென்கிற மகா முனிவரை உத்காதாவாகவும், பைலவ முனிவ ரென்கிறவரையும் தௌமிய முனிவ ரென்கிறவரையும் ஹோதாக்களாவும், யாக்கியவல்கியமுனிவரை அத்துவரியுவாகவும், சைப்பிய முனிவ ரென்கிறவரைப் பிரமாவாகவும் நியமித்துத் தாமும் பிரமாவாக இருக்க ஒப்புக்கொண்டார். இந்த ரிஷிகளுடைய புத்திரர் பவுத்திரர் இவரெல்லாம் அந்த நாலு ரித்துவிக்குகளுக்குக் கணமாகநியமிக்கப்பட்டார்கள். இவ்விதமாக வேதவியாசர் சிஷ்ய பரம்பரையோடுங்கூட வைதீகச் சடங்குகளை நடத்தச் சித்தமா யிருந்தார். பின்பு மகாராஜாவினுடைய ஆக்கினையினுலே சகாதேவன் சகல தேசத்து ராசாக்களையும் அழைத்து வரும்படி யோக்கியராகிய தூதரை அனுப்புவித்தான். அன்றியும், தங்கள் தேசத்திலும் மற்றுமுள்ள ஆச்சிரமங்களிலும் இருக்கிற பிராமணர் க்ஷத்திரியர் முதலிய யாவரையும் அழைத்துவரத் தகுந்தபேரை ஏவினுன்.

இப்படி செய்யவேண்டிய சகல காரியங்களையுஞ் சாக்கிரதை செய்து, தமையனுரிடத்திற் சென்று தங்கள் கட்டளையின்படி எல்லாஞ் சித்தமாயிற்றென்று சொல்ல, உதிஷ்டிரர் திருப்தியடைந்து தவுமிய மகாமுனிவரையும் வியாசர் முதலாகிய பேர்களையும் பார்த்துக்

கைகூப்பிக்கொண்டு, சுவாமிகளே! யாகத்
துக்கு வேண்டிய காரியங்க ளெல்லாஞ் சித்த
மாயின. இனி அடியேனுக்குச் செய்யவேண்
டிய வேதவிதியைக் கட்டளையிட வேண்டு
மென்று சொல்ல, வேதங்களே மூர்த்தீகரித்து
வந்தனவென்று சொல்லத்தக்க முனிவர்கள்
அதுகேட்டு, புண்ணியாஹவாசனஞ் செய்து,
யாகசாலையைச் சுத்திபண்ணி வேதிகைகள்
போட்டு, இராஜாவைப் பார்த்து, இனி நீர்
தீக்ஷையிற் பிரவேசிக்கலாமென்று சொல்ல,
உதிஷ்டிரர் நகுலனை அழைத்து, நீ அத்
தின புரத்திற்குப்போய் வீஷ்மர் முதலா
கிய பேர்களை யழைத்துக்கொண்டு வாவென்
றுக் கட்டளையிட்டு, ரிஷிகளைப் பார்த்துச் சித்
தமா யிருக்கிறேனென்று சொல்ல, அந்த மகா
ரிஷிகள் கேட்டை நட்சத்திரத்தின் நாலாம்
பாகத்தோடு கூடிய நன்முகூர்த்தத்திலே உதி
ஷ்டிர மகாராஜனுக்குப் பூரணமாகிய கிருஷ்
ணசனம் போர்த்து, மான் கொம்பைக் கையிற்
கட்டி, விதிப்படி தீக்ஷை செய்வித்தார்கள்.
அந்த மகாராஜனும் அவர்களால் தீக்ஷை
வகித்து, மகாநுபாவராகிய வெகு பிராமணர்
சொஸ்தி வாசனஞ் சொல்லிச் சூழ்ந்துவர
யாகசாலையிற் பிரவேசித்தார். அப்போது
வீமார்ச்சுனர்கள் தந்திரிகளோடுங்கூடி யாக
சாலைக்கு வந்து வெகுவாகப் பூரிகொடுத்தார்
கள்.

இப்படியிருக்க, நானாதேசங்களிலிருந்து
பிராமணர் முதலாகிய பேர்கள் வரத்தலைப்
பட்டார்கள். அஸ்தினபுரியிலிருந்து தூரி
யோதனனவன் துச்சாதனன் முதலிய தம்பி
மார்களுடனே வெகு காணிக்கைகள் கொண்டு
வந்தான். வீஷ்மர்-விதுரர்-துரோணர்-கிரு
பர்-அஸ்வத்தாமா-பாக்லிகன்-சேரமதத்தன்-
பூரி-பூரிசிரவன் முதலானோர்களும் உசிதமாக
அனேகந் தனங்களைக் கொண்டுவந்தார்கள்.
இவர்களை யெல்லாம் வீமார்ச்சுனாதியர்கள்
கிருஷ்ணன் முதலானோருடனே சேர்ந்து எதிர்
கொண்டுவந்து தகுந்தபடி மரியாதை செய்ய,
அவர்களும் ராசாவைக் கண்டு சர்வசுதந்தர
மாய் யாகத்திற்கு வேண்டிய சன்னாகங்களி
லிருந்தார்கள். இவர்களுமன்றி, கர்னன்-சல
லியன்-சகுனி-பலராமன் - துருபதன் முதலா
கிய சகல ராசாக்களும் புத்திர மித்திர களத்தி
ராதிகளுடனே வந்தார்கள். பாண்டிய மகா
ராஜன் தன் மகளையும் பேரனையும் அழைத்
துக்கொண்டு வந்தான். இவ்வாறு வந்த
ராஜாக்களுக் கெல்லாஞ் சகாதேவன் தனித்
தனியேவிடுதிகளைச் சித்தப்படுத்தி வேண்டிய
உபசாரங்கள் செய்தான். அப்போது அந்த
இந்திரப்பிரஸ்த நகரமானது ரதகஜதுரக
பதாதிகளாகிய நால்வகைச் சேனைகளால்
நிறைந்து, கடல்போல் இரைச்சலடைந்து
இது வேறொரு உலக மென்னும்படி விளங்
கிற்று. வந்த ராஜாக்களெல்லோரும் அனேக
ரத்தினங்கள் முதலாகிய காணிக்கைகளைக்
கொண்டுவந்து கொடுத்து மகா ராஜாவைப்
பார்த்துச் சந்தோஷ மடைந்தார்கள். அந்த
உதிஷ்டிரர் யாவராலுஞ் சூழப்பட்டு, ஆகா
சத்திற் சகல கிரகங்களு மொய்த்துக்கொண்
டிருக்க ஒரு சந்திரன் நடுவிலிருந்தா லெப்ப
டியோ அப்படி விளங்கினார். அந்த யாக
சாலையில் ஒரு பக்கத்தில் வேத கோஷ்டமும்,
ஒரு பக்கத்தில் வித்துவான்களுடைய பிரசங்க
கோஷ்டமும், ஒரு பாரிசத்தில் வந்திகள்
விருதோதுங் கோஷ்டமும், ஒரு பாரிசத்தில்
வாத்திய கோஷ்டமுமாகி, நாதகோஷ்ட
மனைத்து மொன்றாய் வியாபித்ததுபோலு
மிருந்தது.

இப்படிப்பட்ட யாகசாலையிலே யாகம்
நடக்க ஆரம்பமாயிற்று. அப்போது தரும
புத்திரர் விதுரனைப் பார்த்து, ஐயா! தேவரீர்
சகல மங்கலவஸ்துக்களும் ரசவர்க்கங்களும்
எடுத்து யாவருக்குங் கொடுத்து வாருமென்று
சொல்லியும், அஸ்வத்தாமாவையுஞ் சஞ்ச
யனையும் வந்த பிராமணரை விசாரிக்கச்சொல்
லியும், உயுச்சு என்கிறவனையும் வீமசேனனை
யும் சாத்தகியையும் மடைப்பள்ளியிற் சமை
யல் விசாரிக்கச் சொல்லியும் திட்டஞ் செய்து,
வீஷ்மத் துரோணாதிகளை எல்லாவற்றையும்
மேல் விசாரணை செய்யும்படிக்கும், துச்சாத
னனைப் பந்தி விசாரிக்கும்படிக்கும், துரியோ
தனனை அவரவர்களுக்குச் செய்யவேண்டுவ
தான வெகுமான வஸ்துக்களைச் சித்தப்படுத்
தும்படிக்கும், கிருபாசாரியரை வரிசை வரு
கிற தினுசுகளுடனே வஸ்திராதி திரவியங்
களை வாங்கிவைக்கும்படிக்கும், சகுனியை
யாக திரவியங்களையும் நெய் முதலியவற்றை
யும் வேண்டும்போது கொடுக்கும்படிக்கும்
இப்படியே அந்தந்தக் காரியங்களிலே அவ
ரவர்களை நியமித்தார். அப்படியே யாவருந்
தங்கள் தங்களுக்கிட்ட பணிவிடையை ஜாக்
கிரதையாய் நடத்தி வந்தார்கள். குந்தி சுபத்
திரை முதலாகிய ஸ்திரீகள் யாகத்திற்கு
வந்த பிராமண க்ஷத்திரிய ஸ்திரீகளுக்குச்

சகல வுபசாரமுஞ் செய்து பூசிப்பதிற் சித்தமா யிருந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணன் வேதியர்க்குப் பாதப்பிரக்ஷாளனஞ் செய்கிற காரியம் என்னதென்றதா யேற்றுக்கொண்டு, மிகவும் அன்போடு அந்த நற்செய்கையைச் செய்து வந்தார். நகுலன் சந்தன புஷ்ப தாம்பூலங் கொடுத்து வந்தான். இவைகளினாலே வந்தவர்களெல்லாம் மிகுந்த திருப்தி யடைந்து, இப்படி யொருக்காலத்திலும் ஓரிடத்திலும் போஜன முதலாகியவைகளின் விசாரணை நடந்ததில்லை. இவ்வித சட்ருசியு மிருந்ததில்லை. இத் தன்மைத்தான மேலான செல்வமுங் கண்டதில்லையென்று புகழ்ந்தார்கள். அன்றியும், அந்தப் போசனச் சாலையிற் கொடுங்கள் கொடுங்களென்றும், புசியுங்கள் புசியுங்களென்றும் பாண்டவர்களுடைய ஜனங்கள் சொல்ல, வந்தபேர்கள் போதும் போதுமென்றும், திருப்தி திருப்தி யென்றும் மறுமொழி சொல்ல, பெருங் கடலோசைபோற் கூச்சலுண்டாயிற்று.

இப்படிக்கு ஒரு குறைவுமின்றி அந்த இராஜசூயம் நடந்து வருகையில், ரித்துவிக்குகள் விதிப்படியே காருகபத்தியம் - ஆகவநீயம் - தக்ஷிணாக்கினி - ஸப்பியாக்கினி - ஆவசதாக்கினி - தாரியாக்கினி என்கிற ஆறு அக்கினிகளையும் வளர்த்திப் பூசைகள்செய்து, அநேக சமித்துக்களாலும் நெய் முதலாகியவைகளாலும் ஆகுதி செய்தார்கள். வேதியர்கள் நான்கு வேதங்களையும் பாராயணஞ் செய்து வந்தார்கள். இந்த யாகத்தில் வானத்திலிருக்குந் தேவர்களும், பூமியிலிருக்குந் தேவர்களும், பூரண திருப்தியடைந்து மதித்து வாழ்த்தினார்கள். இப்படியிருக்க, சுத்தியை யென்கிற ஒருவிதமாகச் சடங்கு செய்ய வேண்டிய நாள் வந்தது. அன்றைக்கு மகா சபைக்குப் பூசை செய்யத்தக்கதானபடியினாலே, நாரதர் முதலாகிய தேவரிஷிகள், வியாசர் முதலாகிய பிரமரிஷிகள் கௌசிகர் முதலாகிய ராஜரிஷிகள் இன்னுமிகவும் யோக்கியராகிய எல்லா வருணத்துப் பெரியோர்களுஞ் சபையில் நிறைந்திருந்தார்கள். அப்படிப்பட்ட சபையையும், அதில் வந்திருக்கிற மகா புருஷர்களையும் பூமியின் பாரத்தை தீர்ப்பதற்காக அவதரித்திருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனையும் நாரதமகாமுனி பார்த்து, இப்படிப்பட்ட சபையை நாம் பிரமலோகத்திலும் கண்டதில்லை யென்று மனதில் வெகு ஆச்சரிய சந்தோஷங்களை யடைந்து இக் கிருஷ்ணமூர்த்தி ஏனின்னம் துஷ்ட சங்காரஞ் செய்யவில்லை யென்று நினைத்தார். இந்த நினைப்பைச் சுவாமி யறிந்து சிரித்துக்கொண்டிருக்க, யாகம் பார்க்கவந்த பேர்களெல்லாம் அந்தச் சபைக்கொரு நாயகமணிபோல் விளங்கி நடுவில் ஒரு பொற்பீடத்தில் நீலமலை போன்ற திருமேனியும், கிருபாரசம் பொழியாநின்ற தாமரை மலரோடொத்த கண்களும், கவுத்துவம் வனமாலை சங்கு சக்கர முதலியவைகளுமாய்க் கோடி சூரியப் பிரகாசம் பொருந்தி உட்கார்ந்திருக்கிற அவரைப் பார்த்து, சிலர் இவருடைய வடிவழகுக்கும், சிலர் இவருடைய மகிமைக்கும், சிலர் சாமர்த்தியத்திற்கும், சிலர் அடுத்தவரைக் காப்பாற்றுந் தன்மைக்கும், சிலர் இவருடைய திவ்விய குணங்களுக்கும், சிலர் இவருடைய கடவுள் தன்மைக்கும் வசப்பட்டுப் பலவாறாகத் துதித்து மனமகிழ்ந் திருந்தார்கள். தருமபுத்திரரும் இந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சபையிலிருக்கும் உல்லாசத்தைக் கண்டு, நம்முடைய சகல பிரயோசனங்களும் நிறைவேறின வென்று நினைத்து ஆனந்தப் பெருங்கடலில் ஆழ்ந்திருந்தார். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் அவரவர் நினைப்புக்குத் தக்கபடி அவரவர்களைக் கடைக்கண்ணாற் பார்த்துக்கொண் டிருந்தார்.

அக்கிரபூசைகொண்ட கிருஷ்ணமூர்த்தியைச் சிசுபாலன் தூஷித்தல்

இப்படிக்குத் தேசோமயமாய் விளங்கிக் கொண்டிருக்குஞ் சபையிலே, அந்தச் சுத்திஹமென்னும் நாளிலே, பிராதச்சவனம்-மாத்தியதினசவனம் என்கிற இரண்டுகாலச் சடங்குகளுமானபின் சாயம்சவன மென்கிற சடங்குகளுக்கு ஆரம்பமாகும்போது வீஷ்மர் தீக்ஷதராயிரா நின்ற தருமபுத்திரரைப் பார்த்து, அப்பா தருமபுத்திரா! இப்போது முன்னே சபைக்குப் பூசிக்க வேண்டிய தானபடியினாலே அந்தந்த வருணத்தாரையுந் தனித்தனியே பூசை செய்யவேண்டும். அதற்காக அர்க்கிய பாத்தியாதிகள் கொண்டுவந்து நடத்தென்று சொல்லக் கேட்டு, அப்படியே பூஜா வஸ்துக்களை யழைப்பித்து, கோஷ்டியில் நின்றுக் கொண்டு வீஷ்மரைப் பார்த்து, சுவாமி! குருகுல பிதாமகரே! யாருக்கு முதற்பூசை செய்ய வேண்டியதோ அதைக் கட்டளையிட வேண்டுமென்று கேட்க, வீஷ்மர் சொல்லுகிறார்: இந்தச் சபையி லிருக்கும் யாவருக்கு நடுவில்

அனேக கோடி நட்சத்திரங்களுக்கு மத்தியிற் சந்திரன் போலவும், நவக்கிரகங்களின் நடுவிற் சூரியன் போலவும் யார் சிரேஷ்டராய் விளங்குகிறாரோ? பலம் சவுரியம் சாமர்த்தியம் புத்தி தைரியம் தேஜசு கம்பீரத்தன்மை தயை பொறுமை அறிவு விநயம் இப்படிப்பட்ட சகல நற்குணங்களும் யாரிடத்திற் குடியிருக்கின்றனவோ? எவருடைய மகிமை சொல்லத் தரமில்லாததோ? எவருடைய தேஜோபலத்தைப்பற்றி இந்த யாகம் நிறைவேறிற்றோ? அந்தப் பகவானே அதற்குத் தக்கவர். அவரையன்றி அந்த அக்கிர பூசைக்கு யார் தகுவார்? ஆதலால், அவரையே பூசிக்கவேண்டியதென்று சொல்ல, சரிதானென்று ஸ்ரீ வேதவியாசரும் ஒப்புக்கொள்ள, அப்போது சகாதேவனை அர்க்கிய முதலியவைகளை யெடுத்துக்கொண்டு வரச்சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணன் சமீபத்திற் சென்று நமஸ்காரஞ் செய்து, அவருடைய திருவடித்தாமரைகளை ரத்தினமயமாகிய பீடத்தில் வைத்து, திவ்விய பரிமளங்கள் சேர்த்த தண்ணீரினாற் சுத்தி செய்து கந்த புட்ப தூபதீபாதி சோடசோப சாரங்களாலும் பூசித்து, அந்த ஸ்ரீ பாததீர்த்தத்தைச் சிரத்தின்மேற் புரோட்சித்துக்கொண்டு, புனிதனானேன் என்று கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகத் தேகம் புளகமுற்றுக் களித்து நின்றார்.

இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ணனுக்கு முதற் பூசனை நடத்துவதைக் கண்ட தேவரிஷிகள் பிரம்மரிஷிகள் ராஜரிஷிகள் யாவரும் தகும் தகுமென்று சொல்லி வீட்டுமரையுந் தருமபுத்திரரையுங் கொண்டாடினார்கள். க்ஷத்திரியரிற் சிலர் பொறாமை கொண்டு உள்ளம் வெந்து சகிக்கமாட்டாமற் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒன்றுஞ் சொல்லத் தைரியமில்லாமல் நாலு பக்கங்களையுஞ் சும்மா பார்த்துக்கொண் டிருந்தார்கள். இந்த குறிப்பை யறிந்த சகாதேவன் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் பூசை நடத்துவதற்காக யாவரும் பொறாமை படாதீர்களென்றான். அதுகாலையிற் சேதி தேசத்து ராஜனாகிய சிசுபாலன் பிறந்ததுமுதற் கிருஷ்ணனிடத்திற் கொடிய பகை கொண்டவனானபடியினாலே, மனங்கன்றி முகங் கறுத்துக் கண்சிவந்து, உதடு துடிக்கச் சபையைப் பார்த்துச் சில வார்த்தைகள் சொன்னான். ஓ ராஜாக்களே! இந்தச் சபையிற் சகல ராஜாக்களுக்கும் அவமானமும் இடையனுக்குப் பூசனையுங் கிடைத்தது சரிதான். இச்சபையில் அநேகம் பெரியோர்கள் வந்திருக்கிறார்களே குறைவுண்டாமென்கிறீர்களோ? உண்டு எப்படி யென்றால், இந்த யாகத்தை நல்ல சற்குலத்திற் பிறந்த க்ஷத்திரியன் செய்யத் தகும். இந்த உதிஷ்டிரனோ பாண்டுமகா ராஜாவின் பெண்சாதியாகிய குந்தி தேவிக்கு விபசாரத்தாற் பிறந்தவன். முதலிற்றானே யாககர்த்தாவின் செய்தி இப்படியாயிற்று. இவனுக்குத் தருமமுபதேசித்தானே அவன் எப்படிப்பட்டவனென்றால், குலதருமமாயிருக்கிற ராஜ்ஜியாதி பத்தியத்தைத் துறந்து, பிரமசாரியாகித் துரியோதனன் கீழ் சோற்றுக்கு காத்திருக்கிறவன். அன்றியுங் காசிராஜன் மகளை வாழவொட்டாமற் கெடுத்த மகா பாவி. குருவாகிய பரசுராமன் சொல்லைக் கேளாமல் அவரோடு எதிர்த்து யுத்தஞ் செய்தவன் குருத்துரோகி. இவனுடைய தாயோ க்ஷத்திரிய கன்னிகையல்லள். சாபத்தினாற் பிறந்தவள். பிள்ளைகளைக் கொன்றவள். இவள் தகப்பனோ அவள் சிசுஹத்தி செய்தாலுஞ் செய்யட்டும் நமக்கு போகத்துக்கு உரியவளாக இருந்தாற் போதுமென்று ஒப்புக்கொண்டிருந்த மகா காமி. இவனோ வேஷம் போட்டுக்கொண்ட ஆசாமி. இது சரிதானென்று ஒத்துகொண்டவன் மீன் வாணிச்சி வயிற்றிற் பிறந்த யோக்கியன். அக்ர பூசனையை யடைந்தவன் யாரென்னில், ஜார சோர சிகாமணியாகிய இடையன். இப்படிப்பட்ட யோக்கியர் கூடிய சபையில் க்ஷத்திரியர்களுக்குப் பூசனை எப்படி கிடைக்கும்? கிடைக்காதுயென்று வீஷ்மரைப் பார்த்துச் சொல்லுகிறான்:

ஓ வீஷ்மா! நீக்ஷத்திரியனென்றும் வெகு புத்திமானென்றும் பேர்பெற்றுப் பூசனைக்கு யோக்கியனைக் கண்டு பிடித்து நன்றாய்த் தெரிவித்தாய். இவ்வளவு நாளும் நீ விவேகியென்று நினைத்திருந்தேன். உன்னைப்போல் அறியாதவனை நான் கண்டதில்லை. ஆனாற் கிழத்தனம் வந்தபடியினாலே புத்தி மாறிப் போயிருக்கும். இப்படிக்கு வாய்த்தது கோபாலனுடைய அதிர்ஷ்ட வசந்தான். நல்லதிருக்கட்டும்; நீதான் மதிமயங்கிச் சொன்னாலும், இச் சபையிலிருந்த புத்திசாலிகளுங் கூட ஊமைகள்போல் இருந்தார்களே, அவர்களுக்கும் புத்தி மயங்கிற்றோ? அல்லது அந்த மாயாவியாகிய கோபாலன் அறிவை மயக்கிவிட்டானோ யென்று சொல்லித் தரும புத்திர

ரைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ தரும புத்திரா! நீ இந்தச் சபையை யுற்று நோக்கவில்லை யென்று தோற்றுகிறது. நோக்கி இருப்பாயே யாகில் முக்குலத்தரசர் முதலியோரைப்பார்த்திருப்பாயே? பார்த்திருந்தால் இந்த இடையனைப் பூசிப்பாயோ? மகா புத்திமான்களெல்லாமிருக்க ஒரு மூடக்கிழவன் பேச்சைக் கேட்டு இவ்வளவு ராஜாக்களையும் அவமானம் பண்ணினையே! இது உனக்குத் தகுமா? நீ விவேகி யென்று பேர்பெற்றது யுக்தமன்று. நல்லது, நீ பூசிக்கத் தொடங்கினவன் குலத்தில் உயர்ந்தவனா? செல்வத்தில் உயர்ந்தவனா? புத்தியில் உயர்ந்தவனா? நடக்கையில் உயர்ந்தவனா? ஒரு விதத்திலும் உயர்வில்லாத ஒரு அற்பனிடத்தில் உனக்கு மதிப்புண்டாகியது காலபலந்தான். ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? மகா மண்டலாதிபதிகள் எல்லாம் இருக்க, இராஜ்ய பட்டாபிஷேக மின்றித் திரிகிறவனுக்கு வெகுமானம் வந்ததே, ஓ! ஓ! வயதினாற் பெருமையை நோக்கினால், அவனுடைய பிதா வசுதேவன் இருக்கிறான். ஆப்த பந்துத் தன்மையை நோக்கினால், துருபத மகாராஜன் இருக்கிறான். ஆசாரியன் என்றால், தனுர்வேதமே மூர்த்தீகரித்தது போலத் துரோணச்சாரிய ரிருக்கிறார். மகாத்துமா வென்றால், சாட்சாத் நாரதமுனிவர் எழுந்தருளி யிருக்கிறார். குலவிருத்தன் என்றால், வீஷ்மனிருக்கிறான். சவுரியத்தைப்பற்றி என்றால், ஆசாரிய புத்திரராகிய அசுவத்தாமா விருக்கிறார். அன்றியும், கிம்புருடருக்கெல்லா மாசாரியனாகிய மகா பராக்கிரமசாலி யென்னுந் துருமனிருக்கிறார்.

இன்னுஞ் சவுரியத்திலும் பராக்கிரமத்திலும் மிகுந்தவரை நோக்கினால், அர்ச்சுனனோடு சமானனாகிய ஏகலவியனென்னும் வேடன் இருக்கிறான். பகதத்தன் இருக்கிறான். ஜயசேனன் இருக்கிறான். பிருகத்பலனிருக்கிறான். இவர்களையெல்லாம் விட்டு, இந்தக் கருப்பனை என்ன காரணத்தினாற் பூசித்தாய்? இன்னும் பந்துக்களிற் பாண்டியராஜன் வந்திருக்கிறார். சல்லியனிருக்கிறார். பாக்லிகனிருக்கிறார். இவைகளையெல்லாம் அவமானம் பண்ணத்தகாது. அன்றியும், பரசுராமர் சிஷ்யனாய்த் தனுர்வேத பாராங்கதனாகிய கர்ணனையும் லட்சியஞ் செய்யாமற் போனதற்குக் காரணமென்ன? எனக்கு அவனிடத்திலேதான் இஷ்டமானதா லவனையே பூசிப்பேனென்றாயாகில், அதற்கு இப்படியாகயிருக்கிற மகாராசர்க்களை யாகத்திற்கு வரவழைக்க வேண்டியதென்ன? அல்லது உன் வீட்டிலே அவனுக்கு வேண்டியபடி பூசை செய்யாமல், மண்டலாதிபதிகள் முன்னே சேவகனுக்குச் சமானமாகிய அவனைப் பூசிப்பது உனக்குத் தகுமா? நீ உனக்கு யாவரும் பயந்து கப்பங் கட்டியதாகக் கர்வித்திருக்கிறாய் அப்படிக்கு நினையாதே, நீ தருமசீலனா யிருப்பதைப்பற்றிக் கொடுத்தார்கள். இல்லாவிட்டால் இங்கே வந்திருக்கிற வீரருக்கு நீ எவ்வளவு? ஒரு மூடக் காகத்தைப்பற்றி அன்னங்களோடு பகைப்பதுபோல் ஸ்ரீ கிருஷ்ணனைப்பற்றி மகா ராசாக்களோடு பகைக்கிறாய். இப்படி செய்வதுனக்கு வெகு சீக்கிரத்தில் தீமையைக் கொண்டுவந்து கொடுக்கும், உன் குலத்திற் கேற்ற புத்தி உனக்குண்டாயிற்று. ஒரு குணமுமில்லாத அற்பனைப் பூசிப்பதற்குப் பயன் சீக்கிரத்திலேயே கிடைக்குமென்று சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கிச் சொல்லுகிறான்:

அடா கிருஷ்ணா! அவர்கள்தான் தெரியாமற் பூசித்தாலும், நீ இவ்வளவு மகா புருஷருடைய சபையில் அச்சமில்லாமலும் உன் குலம் உன்னடத்தை முதலியவற்றை யோசிக்காமலும் அப் பூசனையை யேற்றுக் கொள்ளலாகுமா? பெரியோர்களுக்காகச் சமைத்து வைத்த சோற்றை நாய் தின்னக் கூடுமா? அந்தப் பூசையை யேற்றுக்கொள்ள வெட்கமா யிருக்கவில்லையா? லோகத்திலே ஒருவன் தனக்குத் தகாதனவற்றை யடைவதினால் அவமானமே யல்லது, வெகுமானஞ் சம்பவிக்கமாட்டாது. அடா பயித்தியக்காரா! அடா மூடா! நீ பூசனை பெறுவது நகைப்புக் கிடமென் றறியாமற் போனாயே; துரியோதனாதிகள் சிரிக்கிறார்களே. ஆனால், இந்தச் சபையிற் பாண்டவர்களும் வீஷ்மனும் நீயுந்தான் இருக்க யோக்கியமே யல்லது மற்றொருவரும் யோக்கியரல்லர் என்று சொல்லி மற்றை ராசாக்களைப் பார்த்து, நீங்களிந்தச் சபையிலிருப்பது நன்றா யிருக்கவில்லை. ஆதலால் விரைவில் எழுந்திருங்க ளென்று அழைத்துத் தான் சரேலென்று ஆசனத்தை விட்டு எழுந்து சபைக்குப் புறம்பாகப் போனான். அப்போது தருமபுத்திரர் பின்னாலேயோடி, அவனை அணைத்துப் பிடித்துக் கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்: அப்பா சிசுபாலா! நீகோபித்தால் யுத்தமன்று.

பொறுமையாலும், அறியாமையாலும், கருவத்தினாலும் வாயில்வந்தபடி பேசுவது புத்திமானுக்கு லக்ஷணமா? நீ நிந்திப்பதுபோல் இவ்வளவு காலத்தில் வீஷ்மரை வேதவியாசரை ஒருவனும் நிந்தித்ததில்லே. அவர்களே அறிவிலாதவர்களென்று எவனுஞ் சொல்லத் துணியமாட்டான். நீ இந்தச் சபையில் யார் யாரைப் பெரியோர்களென்றும், விவேகிகளென்றும் நினைத்துச் சொன்னுயோ? அவரெல்லாம் வீஷ்மர் சொல்லியது சரியென்றும் கிருஷ்ணனே பூசிக்கத்தக்கவரென்றும் ஒப்புக்கொண்டு சந்தோஷத்துடனிருக்க, உனக்கு மாத்திரம் ஏன் வீணுய்க் கோபமுண்டாயிற்று? முற்றும் அறிந்த பெரியோர்கள் சொல்வதை நாம் பெருமையோடு அங்கீகரிக்க வேண்டும். நமது புத்திக்கு அது சரியாகத் தோற்றவில்லேயென்று அவர்களே நாம் நிந்திப்பது நியாயமன்று. வீஷ்மரோ மகானுபாவர் எல்லாம் அறிந்தவர். அவர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையைச் சரியாயறிந்திருப்பவர். நீ அறியமாட்டாய். அன்றியும், இச்சபையிலிருக்குந் தேவரிஷிகள்-பிரமரிஷிகள் - ராஜரிஷிகள் யாவரும் வீஷ்மர் சொல்லிய வார்த்தையைக் கேட்டு இவர் மகா விவேகியாதலாற் சரியாய்ச் சொன்னுரென்று சந்தோஷித்துக் கொண்டாடினார்கள். அப்படியிருக்க, உனக்கு மாத்திரம் ஏன் வீணன் ஆக்கிரஷம் வருகிறது? வேண்டாம் அந்தக் கோபத்தை விட்டுவிடு. பெரியோரை நிந்தித்துப் பெரும்பாவியாகாமல் நற்குண நற்செய்கைகளோடு கூடி, யாகம் முற்றுமாகிறவரையிலிருந்து சந்தோஷமாய்ப் போவென்று சொல்லிக்கொண்டிருக்கையில், வீஷ்மர் தருமபுத்திரரைப் பார்த்துச் சொல்லத் துவக்கினர்:

அப்பா தருமபுத்திரா! இந்தத் துராத்துமாவுக்கு நல்ல வார்த்தை சொல்லலாமோ? சொல்லியும் பிரயோசனப்படமாட்டாது. இவனுடைய துர்ப்புத்தியைப் பார். லோகநாதனுகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் செய்த பூசையைச் சகிக்காமல் அகங்காரப்படுகிருன். இப்படிப்பட்ட துஷ்டன் வேருருவனுமில்லே. லோகத்தில் க்ஷத்திரியருக்குள் ஒரு தருமமுண்டு. அதென்னவென்றுல், யுத்தத்தில் எவனேயெவன் ஜெயித்துப் பிராணனேடு விடுகிருனே? அவனுக்கு அவன் குருவென்பதுதான் தருமம். நெடிய கடல் சூழ்ந்த இப்பூமண்டலத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுலே ஜயிக்கப் படாதவர் யார்? இந்தச் சிசுபாலனும் உருக்குமணிவிவாகத்தின்போது ஜெயிக்கப்பட்டவன் தானல்லவா? அப்படியிருக்க, அதைக்கூட நினேயாமற் குதிக்கிற இந்த மூடனுக்கு நல்ல வார்த்தை உதவாது. இவன் குருத்துரோகியாகிருன். எப்படிக்காயினும் இந்த ராஜமண்டலத்தைச் சோதிக்குமளவில், ஸ்ரீ கிருஷ்ணனுக்கே யாவரும் தாழ்ந்தவராகக் காணப்படுகிருர்கள். இதுவே தகுந்ததென்றுதான் இச்சபையில் இருக்கும் பெரியோர்கள் சம்மதித்திருக்கிருர்கள். இந்த மூடனுக்குச் சம்மதியில்லாமற்போனல் கெடுதியென்ன? இப்போது ஸ்ரீ கிருஷ்ணன் இச்சபையிலிருக்கும் அவர்களுக்குச் சிறந்தவரென்று சாதாரணமாய்ச் சொன்னேன். யதார்த்தமாய் அவர் மகிமையைச் சொல்லத் துவக்கினுல் ஆதிசேடனுக்கும் அசாத்தியமாய்விடும். அவர் இந்தப் பூலோகத்தில் மாத்திரமே யாவருக்கும் பூசிக்கத்தக்கவர் அல்லர். மற்றென்னவென்றுற் சகல லோகங்களிலும் பூசிக்கத் தகுந்தவர். இவருடைய சரீரத்திலே சகல சராசரங்கள் நிறைந்திருக்கின்றன. இவரிடத்தில் இருந்துதான் யாவுமுண்டாயின. இனி யொடுங்குவதுமிவரிடத்திலேயே எல்லா வஸ்துக்களுடைய சக்தியும் அதிசயமும் இவருடையவைகளே. இவரது கிருபையினுலே உலகங்களுக்குச் சகல மேன்மைகளும் உண்டாயின.

இப்படி எல்லாவற்றிற்குங் காரணமும் ஈஸ்வரனுமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பூசை செய்யாமல் மற்ற யாருக்குப் பூசை செய்வது? இந்தச் சிசுபாலனேக் காட்டிலும், வயதிலும் பராக்கிரமத்திலும் புத்தியிலும் மேன்மையிலும் சிறந்தவர் அநேகர் இச்சபையிலிருக்கிருர்கள். அவரெல்லாம் சந்தோஷித்திருக்க, இந்தப் பாவிக்கேன் இவ்வளவு கொவமும் அகங்காரமும் உண்டாயின? இவன் பெரியோர் நடந்தவழி நடப்போமென்று நினேக்காமல், நிலத்தில் வீழ்ந்த நெல்லிக்காய் போல் ஏன் குதிக்கிருன்? இப்படியிருக்க, இந்தப் பாவிக்குச் சமாதானஞ் சொல்லலாமோ? தகுந்த சிட்சை செய்தாலல்லவோ புத்தி வரும் நான் வெகு ஞானிகளுக்குப் பணிவிடை செய்திருக்கிறேன். அவர்கள் என்னிடத்தில் அனுக்கிரகம்வைத்து தத்துவஞானம் போதிக்கும் அளவில் அப்பொருள் இவர்தானென்றும், இவர் அவதாரமானதுமுதற் ருன் செய்த மகா சரித்திரங்கள் இவை யென்றுஞ்

சொல்லி யிருக்கிருர்கள். அவைகளைக் கேட்டிருந்தவன் ஆனபடியினுலே அக்கிரபூசை இவருக்குச் செய்யச்சொன்னேன். அல்லது, தாக்ஷணியம்-பயம்-சினேகம் - பிரயோசனம் இப்படிப்பட்ட காரணங்களாலே செய்யச் சொல்லவில்லை, இதுகளிருக்கட்டும். லோக ரீதியாய்ப் பார்த்தாலும் ஸ்ரீ கிருஷ்ணனே உத்தமன். எப்படியென்ருல், வேதியர்க்குள் ஞானம் எவனுக்கு அதிகமோ அவன் பெரியவன். க்ஷத்திரியருக்குள் பலம் எவனுக்கு அதிகமோ அவன் பெரியவன். இந்தக் கிருஷ்ணனிடத்தில் மேலாகிய ஞானமும் பலமும் இருப்பதுபோல, மற்றை யாரிடத்தில் இருக்கின்றன? யாவரிலுஞ் சிறந்தவனென்னும் புகழ் யாரிடத் திருக்கின்றது? இவையெல்லாம் உலகத்தை நன்ருய்ப் பரிசோதித்தால்தெரியும். அப்படியின்றி, கிணற்றில் இருக்கும் ஆமைபோல் இருப்பவனுக்குத் தெரியுமோ? நல்லதாகட்டும். வேதவேதாந்த ஞானங்களிலும், தனுர் வேத ரகசியங்களிலும், இச்சபையில் இருப்போரைப் பரீட்சித்தால் அப்போது தெரியும். சவுரியம் - புத்தி - பொறை முதலாகிய சத்குணங்களும் அப்படியே பரீக்ஷை செய்தறியலாம்.

இப்படிக்குச் சகல விதத்திலும் பெருமையுடையவராய், பிரமன் முதலாகிய தேவர்களாலும் பூசிக்கத்தக்கவரா யிராநின்ற ஸ்ரீ கிருஷ்ணனை நியாயமாகவும், தருமமாகவும் நாம் பூசித்திருக்க, இந்தத் துஷ்டன், இவன் என்ன ஆசாரியனு - ஞானியா - குலகுருவா- இஷ்ட பந்துவாவென்று கேட்டானன்ருே? ஆம் எல்லாம் அவர்தான், இதற்குச் சந்தேகமில்லை. இப்போது என்ன சொல்லுகிருன். (கலசத்திற்குத் தெரியுமோ கர்ப்பூரவாசனை) என்பதுபோல் மகா புருஷர் மகிமை பிறவிக் குருடனுக்குத் தெரியுமோ? இனியாவது அந்த மூடன் தெரிந்து கொள்ளட்டும். பிருதிவி முதலாகியர் பூதங்கள் தன் மாத்திரைகள் பிரகிருதி-மகத்து-அகங்காரம்-இந்திரியங்கள் அந்தக்கரணங்கள் இவை யாவும் ஸ்ரீ கிருஷ்ணனுலேதான் சிருட்டிக்கப்பட்டு அளிக்கப்பட்டு, அழிக்கப்படுகின்றன. சிருட்டி கர்த்தாவாகிய பிரமனும் சங்கார கர்த்தாவாகிய சிவனும் இந்திரன்-அக்கினி-இயமன்-வருணன்-வாயு-சூரியன்-சந்திரன் இவரெல்லாம் இந்த ஸ்ரீ கிருஷ்ணதேவனே. சகல ஆத்துமகோடிகளும், பல அண்டங்களும், பலபல அதிசயங்களுமாய் இருக்கின்ற யாவும் இவரே இவரல்லாது தெய்வமில்லை. லோகத்தாரை அநுக்கிரகிக்க வேண்டுமென்று, மனிதருக்குள் மனிதனுய் அவதரித்திருக்கிருர். வேத வேதாந்தங்களெல்லாம் இவர் பெருமையைப் பேசுகின்றன. யோகிகளும் தேவர்களும் இவரையே தொழுகின்றனர். வேதியரெல்லாம் இவரைத் தியானித்தே வேள்வி செய்கின்றனர். சுருக்கமாக யாவுஞ் சொன்னேன். இந்தப் பேதையாகிய சிசுபாலன் இவை யெல்லாம் அறியாதவனுனபடியினுலே அவரிடத்தில் மிகவும் அபசாரப்பட்டான். இப்போதாகிலும் மெய்யையறிந்து அவரைத் தொழுது வேண்டிக்கொண்டாற் கடைத்தேறுவான். இல்லாவிடிற் சீக்கிரத்திற் கெட்டுப்போவான். நாம் சகல லோகநாதனுகிய கிருஷ்ணனுக்குச் செய்த பூசை அநியாயமென்று இந்த மடையனுக்கு தோற்றினுல், நாம் என்ன செய்யலாம்? இப்போது அவன் எல்லாரைப்போலும் நியாயத்தை நினைத்து இந்தச் சபையிலிருக்க மனமுண்டானுல் இருக்கட்டும். சம்மதியில்லாவிட்டாற் போகட்டும். அல்லது இன்னும் என்ன செய்ய வல்லமை யிருக்கிறதோ அதைச் செய்யட்டும். அவனை நீர் சமாதானம் செய்யவேண்டாம். வாரும் தருமனந்தனுவென்று வீஷ்மர் சொல்லக்கேட்ட சிசுபாலன், காற்றினு லெழும்பப்பட்ட கனல்போற் கோபத்தினுற் சொலித்தான். அப்போது அவனைப் பார்த்துச் சகாதேவன் ஒரு வார்த்தை சொல்லுகிருன்:

ஓ சிசுபாலா! நீ குணங்களையுந் தோஷங்களையும் எவ்வளவும் விசாரிக்காமல் வீணுய்க் கோபித்துக் கொள்வதிற் பயனென்ன? எல்லாவரசரும் ரிஷிகளும் பெரியோரும் ஒத்துக்கொள்ளும்படிக்கும், உனக்கும் எனக்கும் மற்றவருக்கும் நன்மை யுண்டாகும்படிக்கும், ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பூசை செய்யலாயிற்று. இவ் விஷயத்தில் நீ அறியாமையாலும் பொருமையினுலும் பெரியோரை நிந்திப்பது மிகவும் இழிவாகிய செய்கை. நீகிருஷ்ணனுடைய மகிமையை யாழ்ந்து நோக்காமற் போனுலும், உலகத்திலிருக்கும் அரசர்க்கெல்லாம் அதிகமாகிய பல பராக்கிரமங்களுடையவரென்பதை என் நினைக்கவில்லை? நான் இப்போதொன்று சொல்லுகிறேன் கேள்: இந்தக் கண்ணனுக்கு முதற்பூசனை நடந்ததைக் குறித்து யார் பொருமைப்படுகிருர்களோ அவர்கள் வில்லேந்தி யென்னுடன்

போர்செய்ய வரட்டும். அவர்களின் தலைமேல் இதோ இந்த இடதுகாலை வைக்கிறேனென்று சொல்லித் தூக்கினான். இவ்வாறு சகாதேவன் யாவருங் கேட்கும்படி சொல்லிக் காலைத் தூக்கிக் காட்டவே, ஒருவரும் ஒன்றுஞ் சொல்லாமற் சிலர் சந்தோஷத்தையும், சிலர் மன வருத்தத்தையும் அடைந்தார்கள். தேவர்கள் புஷ்ப வருஷம் வருஷித்தார்கள். இவைகளை யெல்லாம் பார்த்த சிசுபாலனுக்குக் கோபமானது ஆகுதி செய்யப்பட்ட அக்கினிபோற் ஜொலித்து, கண்கள் ரத்தக் குமிழிகள் போலச் சிவந்து சுழலமிட, உதடு படபட வென்று துடிக்க, தேகமெல்லாம் வியர்வை யரும்பி நடுக்கமுற, பிரளய காலத்து உருத்திரன்போல விருந்தான். அப்போது வீஷ்மர் சிசுபாலனையும் மற்றப் பேர்களையும் பார்த்து, யாவரும் இந்த வார்த்தையைக் கேளுங்கள்: என்னவென்றால், சகாதேவன் இப்போது சொல்லிய வார்த்தை மெய்யாயும் நியாயமாயு மிருக்கிறது. இதன் மேல் யாருக்காவது ஏதாகிலுங் குற்றஞ் சொல்லத் துணிவிருந்தாற் சொல்லலாம். அல்லது வலிமையைக் காட்டத் திறமிருந்தாற் காட்டலாம் என்றார். அதற்குப் பெரியோர்களெல்லாம் சரிதான் ஒரு குற்றமுமில்லை யென்று கொண்டாடினார்கள். இதுகளை எல்லாங்கேட்ட தருமபுத்திரர், மனக்களிப்புடனே வீஷ்மரை பார்த்துக் கைகூப்பிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்: ஐயா குருகுல பிதாமகரே! நீர் யாவுமறிந்த மகானுபாவரன்றோ? அன்றியும், ஸ்ரீகிருஷ்ணனுடைய சரித்திரமும் மகிமையும் பலவுண்டென்று சொன்னீர். அவ்வைகளைச் சவிஸ்தாரமாகக் கேட்க ஆசைகொண்டிருக்கிறேன். ஆதலால், இங்கிருப்பவர்கள் யாவருமறியத் தயைசெய்து நன்றாய்ச்சொல்ல வேண்டும் என்று தருமபுத்திரர் அன்போடு கேட்க, கங்காபுத்திரர் அவ்வாறே அங்கு யிருப்போர் யாவரும் மனது ஒருமித்துச் சிரவணானந்தமாகக் கேட்கும்படி சொல்லத் தொடங்கினார்:

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய சத்கிருத்திய மகிமை

ஓ தருமபுத்திர மகாராஜனே! இந்தப் பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினுடைய அவதார மகிமைகள் நீ கேட்கிறபடியால், நானுஞ் சொல்ல விருப்புற்றிருக்கிறேன். அச்சரித்திர மகிமைகளை இச்சபையிலிருக்கும் பெரியோர் பலருமறிவர். அறியாச் சில மாந்தருக்கும் (நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்-புல்லுக்குமாங்கே புசியுமாம்) என்கிறபடி இது கேள்வியாகிச் சென்மசாபல்ய முண்டாகட்டும். இதோ அருள் சுரக்கு நோக்கத்தோடு காளமேகம்போல் சபைக்கு ஒரு நாயகமாய் விளங்காநின்ற மகா புருஷன்தான் சகல வேத வேதாந்தங்களினாலே அவியக்தமென்றும், அக்ஷரமென்றும், பராபரமென்றும், பிரமமென்றும், காரணமென்றும், காரியமென்றும், காரணாதீதமென்றும், சத்தென்றும், அசத்தென்றுஞ் சொல்லப்பட்ட பொருள். அவருடைய சொரூபமும் செய்கையும் மகிமையும் வாக்குக்கு மனதிற்கு மெட்டாதது இன்னபடி யென்று யாரும் நிச்சயிக்க வல்லவரல்லர். ஆகிலும் ஆதிகாலத்திற் சிரங்களாயிரம் கரங்களாயிரம் கால்களாயிரம் கண்களாயிரம் இப்படிப்பட்ட சொரூபத்தையடைந்து, சகலப் பிரமாண்டங்களும் மயிர்க்கால்களி லுழலும்படி அனேககோடி சூரியப் பிரகாசமாய் அளவற்ற சொரூபத்தோடு விளங்கினார். அக்கடவுளுடைய ரூபமும் ஒருபோதிருந்தபடி மறுபோதிராது. பல விசித்திரமா யிருக்கும். அவருக்கு ஆதியுமந்தமும் இல்லை. எல்லாவற்றிற்கு மவரே யாதியாயிருப்பர். பிரகிருதி யென்றும் மாயை யென்றுஞ் சொல்லப்பட்ட வஸ்துவுக்கு மேற்பட்டவர். அந்த வஸ்துவும் அவரிடத்திலேயே யிருக்கும். ஆனாலும், அதிற் பற்றற்றவர். அவர் உலகங்களைச் சிருஷ்டிக்க நினைத்து முன்னே நீரை யுண்டாக்கி, அதன்மேல் தான் கண்வளர்ந்துகொண்டிருந்தார். அதனாலேயவருக்கு நாராயணனென்று நாமமுண்டாயிற்று. இவ்வாறு யோக நித்திரையிலிருந்து பிரமனை யுண்டாக்கி, அவனைக்கொண்டு மற்ற வுலகங்களையெல்லாம் படைப்பித்துக் காத்து, பிரளய காலத்திற் படைக்கப்பட்ட யாவையும் உட்கொண்டு, தாமொருவராகவே ஒரே ரூபமாகி யிருந்தார். அப்போதவர் விசுவரூபியென்று சொல்லப்பட்டார். ஏனெனில், உலகங்களெல்லாம் அவருடைய ரூபமாய்க் காணப்படுமளவில் மேலாகிய சுவர்க்கம் அவருக்குச் சிரமாகவும், ஆகாசம் நாபியாகவும், பூமி பாதமாகவும், அசுவனி தேவர் செவிகளாகவும், சூரிய சந்திரர் கண்களாகவும், இந்திராக்கினிகள்முகமாகவும், ஒவ்வொரு தேவர்கள் ஒவ்வோருறுப்பாகவும், மற்றைச் சராசரங்களெல்லாம் அங்கமாகவும் இருந்தார்.

இவ்வாறு தாமே யாவுமாகி யெல்லா
வற்றினுள்ளும் வுறைபவருமாகி, நாராயண
னென்று திருநாமம் பெற்றும், முற்றும் அந்
தகாரமாகவே யிருப்பதைக்கண்டு தாமே பிரம
ரூபியாகி அண்டத்தை யுண்டுபண்ணி, தமது
சங்கல்பத்தினாலேயே யெல்லா வுலகங்களை
யும் அவைகளின் வரன் முறைகளையும்
படைத்து அகண்டாதிபதியா யிருந்தார். சன
கர் முதலிய யோகிகளும், உருத்திரமூர்த்தி
யும், சப்தரிஷிகளும் அவராலே சிருஷ்டிக்
கப்பட்டார்கள். அன்றியும், தக்ஷர் முதலிய
பிரசாபதிகளையும் படைத்தார். அவர்கள்
அனேகரைச் சிருஷ்டி செய்து உலகங்களைப்
பெருக்கிப் பகவானுடைய லீலையை நிறை
வேற்றினார்கள். இவ்வாறாக எத்தனை தரமோ
பிரபஞ்ச சிருஷ்டி வெவ்வேறு விதமாய் அவ
ராற் செய்யப்பட்டது. எத்தனையோ பிரளயங்
களுமாயின. சக்கரஞ் சுழல்வதுபோற் சிருஷ்
டிப் பிரளயங்கள் ஓய்வில்லாமல் மாறி
மாறி வந்துகொண்டே யிருக்கும். ஆனாற்
காரணனாகிய இந்நாரணன் மாத்திரம் என்
றும் ஒரேவிதமா யிருப்பர். முன்னுரைத்த
படியே தனது அமிசத்தினாலே பிரமதேவ
னைப் படைத்து அண்டாதிபதியாக்கித் தாம
வைகளைக் காக்கும்பொருட்டுத் திருப்பாற் கட
லிற் பள்ளிகொண்டு, அங்கு யோகநித்திரையி
லிருந்து அனுக்கிரகஞ் செய்துவந்தார். பிரள
யத்தில் உருத்திரமூர்த்தியைக்கொண்டுயாவை
யும் அழிக்கச் செய்தார். இப்படியே மறுபடி
யும் பிரமனையிருந்து சிருஷ்டித்து, வெகுகா
லம் யாவுஞ் சுகாதிகளை அனுபவிக்கும்படி
ரட்சித்து, காலாக்கினி உருத்திர ரூபியுமாகி
யழித்தார். அப்படி யழித்ததுபற்றி ஹரியென்
கிற திருநாமமடைந்தார். அந்தத் தேவன்
எந்தவேளையில் எப்படி என்னசெய்யவேண்டு
மென்று நினைப்பாரோ அதற்குத் தடை
யொன்று மிராது. தனது இச்சையின்படி
அனேக ரூபங்களைக்கொண்டு ஜெகத்தை யழிப்
பார். அப்படிப்பட்ட அவதாரங்க ளிதுவரை
யில் எத்தனையோ ஆயின. இனி எத்தனையோ
ஆகும். இவைகள் முற்றுமறிய யாரால்தரம்.
யான் பெரியோர் சொல்லினால் அறிந்தமட்
டுஞ்சிலவற்றைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்
கேள்:

முன்னம் நீரை யுண்டாக்கி அகிலண்டத்
தைச் சிருஷ்டித்தாரே, அது கோழிமுட்டை
போல் நீரில் மிதந்து நீரினால் நிறைந்திருந்
தது. அதில் தான் பிரவேசித்து ஆலிலையிற்
பள்ளிகொண்டு தமது நாபியில் ஒரு தாம
ரைப் பூவையும், அதிற் பிரமனையும் படை
த்து, அவனில் தாம் அநுப்பிரவேசித்துப்
பதினாறு பிரசாபதிகளையும், சப்தரிஷிகளையும்,
கபிலமகா முனியையும், ஏகாதசருத்திரரையும்,
துவாதசாதித்தரையும், பதினாலு மனுக்களை
சனகர் முதலிய யோகிகளையும், சப்த மருத்துக்
களையும், அஷ்டவசுக்களையும், இந்திராதிகளை
யும், மற்றுந் தேவரையுஞ் சிருஷ்டித்தார்.
அன்றியும், பிரகிருதியின் கல்மிஷாமிசத்தி
னாலே காதுகளினின்றும் மதுகைடபரென்
கிற இரண்டசுரரைச் சிருஷ்டித்தார். அவர்
கள் பல பராக்கிரமங்களின் மிகுதியினாற்
செருக்கடைந்து, வேதங்களைக் கவர்ந்து
போனார்கள். அப்போது அந்தப் பகவான்
நெடுநாள் அவ்வசுரரோடு போர் செய்து சங்
கரித்து, அவர்கள் கேட்ட வரத்தின்படி
அவர்களுடைய தேசங்களிலிருந்து பெருகித்
தோய்ந்த மேதஸ் என்கிற கொழுப்பினாலே
மேதினி என்கிற பேரோடுங் கூடிய இப்
பூமியை உண்டாக்கி, மறுபடியும் பிரமனுக்கு
வேதங்களை உபதேசித்தார். இவ்வாறாக அந்
தந்தத் தேவர் முதலிய பேர்களிடத்திலுந்
தான் அந்தந்த அமிசத்தினாற் பிரவேசித்துச்
சிருஷ்டி திதி சங்காரங்களென்று முத்தொழில்
களை நடாத்தினார். இவ்வவதாரத்திற்குப்
பவுஷ்கரப் பிராதுர்ப்பாவ மென்று பேர்.

## ஸ்ரீ வராக அவதார மகிமை

பின்பொருகாலத்தில் இந்தப் பூமியா
னது ஜலத்திலே முழுகிப்போகக்கண்டு, தேஜ
சும் பலமும் மகிமையும் பொருந்திய ஓர்
பெரிய பன்றியாகித், தன் கோட்டினாற் பூமி
யைத் தூக்கி வந்து நிறுத்தினார். அதற்கு யக்
கிய வராகவதார மென்று பெயர். ஏனெனில்,
யக்கியங்களே அவருக்கு வடிவாயிருந்தன.
எப்படியெனில், நான்கு வேதங்களும் நான்கு
பாதங்களாகவும், யூபஸ்தம்பங்களே தந்தங்
களாகவும், அக்கினிப்பிரதிஷ்டை செய்கிற
குண்டமே முகமாகவும், அவ்வக்கினியே
நாவாகவும், குசைகளே உரோமங்களாகவும்,
உபநிடதமே சிரசாகவும், இராப்பகல்களே
கண்களாகவும், நெய்யின் தாரையே மூக்காக
வும், சுவை யென்பதே வாயாகவும், சாம
வேதகானமே சத்தமாகவும், சத்தியமும் தரு
மமும் சொரூபங்களாகவும், யாகமந்திரங்களே
யெலும்புகளாகவும், பசுக்களே முழந்தாள்க

ளாகவும், யாகசாலையே தேசமாகவும், தக்ஷிணை இருதயமாகவும், இப்படியே யாகத்தினுறுப்புக்களெல்லாம் அவருக்கு உறுப்பாயிருந்தன. இப்படிக்கு மார்க்கண்டேயர் பார்த்து ஆச்சரியப்படும்படிக்கு மகா வராகரூபமெடுத்து, பூமியைக் கோட்டினாலேந்திப், பிறைதாங்கிய நீல மலைபோல் விளங்காநின்ற அந்த நாராயண மூர்த்தியைத் தேவர்களும் முனிவருந் துதித்தார்கள். பெரியோர்கள் முறை பிறழாமல் யாகங்களைச் செய்து பூசித்தார்கள். சுவாமி வராகவதாரஞ் செய்து பூமியை நிலைநாட்டி, பிரமனை யோரிடறுமின்றிச் சிருஷ்டிக்கச் செய்தபடியால் இக்காலத்திற்கு வராககல்பமென்று பெயராயிற்று. இந்த வராககல்பத்திற்கு முன்னாகியது பாத்துமகல்பம். இவைகள்போல் ஆதியில் எத்தனையோ கல்பங்களாயின.

## ஸ்ரீ நரசிம்மாவதார மகிமை

நரசிம்மாவதாரத்தைச் சொல்லுகிறேன் கேள்: இரணியகசிபு என்று ஒரு அசுரனிருந்தான். அவன் பலத்திலும் வீரியத்திலும் சவுரியத்திலும் சிறந்தவன். அவன் ஒருகாலத்தில் மகா ஆரணியத்திற்சென்று ஆகாரம் நித்திரைகளில்லாமலும், வெயில் காற்று மழை பனி இவைகளைச் சகித்துக்கொண்டும், பதினோராயிரத் தைந்நூறு வருஷம் பிரமதேவனைக் குறித்துத் தவஞ் செய்தான். அந்தத் தவத்தினாலே மிகுந்த சந்தோஷ மடைந்த பிரமதேவன் சகல தேவர்களுஞ் சகல முனிவர்களுஞ் சூழ்ந்துவர அவ்வனத்திற்சென்று, மலைபோ லசைவற்றும் உபவாச முதலிய விரதங்களினாலே மெலிந்து வந்தும் பக்ஷிகள் முதலாகிய செந்துக்களின் மலங்களினாலு மண்டுள்களினாலும் நிறைந்து விகாரப்பட்ட தேகத்தோடுங் கூடித் தபோநிட்டையிலுறுதியா யிராநின்ற அவ்வசுரனைப் பார்த்து, ஓ அசுரகுல சிகாமணியே! உன் தவத்தினாற் சந்தோஷித்தேன், என்ன வரம் வேண்டுமோ அதைக் கேள் தருகிறேனென்று சொல்ல, அதைக் கேட்ட இரணிய கசிபு தவத்தை நிறுத்தி, பிரமதேவனை வலம்வந்து பணிந்து, கைகூப்பி முடியின்மீது வைத்துக்கொண்டு, ஓ சுவாமி! ஓ சகலலோக பிதாமகரே! என்னிடத்திற் கிருபை வைத்து வரந்தர வந்தபடியினாலே கேட்கின்றேன். தப்பாமல் தரவேண்டும். அவ்வர மென்னவென்றால், தேவர்களாலும் கருட கந்தருவ சித்த சாத்திய வித்தியாதர யக்ஷகின்னர கிம்புருஷ குகியர் முதலிய சகல தேவர் மக்களாலும், அசுரர்-தானவர்-தைத்தியர்-ராக்ஷதர்-நாகர்முதலான பேர்களாலும், மனிதராலும் முனிவருடைய சாபங்களினாலும், சிங்கம்-புலி-கரடி-யானை முதலான மிருகங்களினாலும், பக்ஷிகளினாலும், இன்னும் பலவிதமாகிய மரங்கள் கொடிகள் செடிகள் கல்லுகள் முதலாகிய தாவரங்களினாலும், பூதப்பிரேத பிசாசங்களாலும், அபிசாரங்களினாலும் இராப் பகல்களாலும், எல்லா வாயுதங்களாலும், சகலவிதப் பூச்சிகளாலும் எனக்குச் சாவில்லாம லிருக்கும்படி வரந்தரவேண்டுமென்று கேட்டான். பிரமதேவன் அப்பா அசுரராஜனே! நீ கேட்டவரம் மிகவுங் கடினமானது. ஆகிலுந் தந்தேனென்று சொல்ல, இரணியகசிபு வெகு சந்தோஷத்தோடு அந்தத் தேவனை நமஸ்காரஞ் செய்து விடைபெற்றுத் தன் பதி புகுந்தான். நான்முகக் கடவுள் சகல தேவரோடும் முனிவரோடுந் தமது லோகம் போய்ச் சேர்ந்தார்.

அப்போது தேவரெல்லாம் பிரமதேவனைப் பார்த்து, சுவாமி! சுபாவத்திலேதானே தேவர்களைத் தொந்தரை செய்பவனாகிய வெகுபல பராக்கிரமங்களுடையவனாகிய அசுரனுக்கொருவிதத்திலுஞ் சாவில்லா வரங் கொடுத்துவிட்டீரே! இனி யவன் செய்யு முபத்திரவங்களை யெப்படி யனுபவிப்போம்? எங்களுக்குக் கதியென்ன வென்று சொல்ல, அவர் அது கேட்டு, ஓ தேவர்களே! நாமென்ன செய்யலாம்? தவத்திற்குத் தக்கபயன் கொடுக்கவேண்டிய தியல்பாதலால் வரங் கொடுத்தேன். ஆகிலும் பகவான் அதற்கும் ஒருபாயம் ஏற்படுத்துவாரென்று சொல்ல, தேவர்கள் சமாதானப்பட்டார்கள். அந்த இரணிய கசிபனானவன் தனக்குச் சாவில்லா வரங் கிடைத்ததனாலே வெகு கெர்வமடைந்து, பூலோகத்திலிருக்கும் ராஜாக்களையுந் தவஞ் செய்யு முனிவரையும் உபத்திரவப்படுத்திப் பின்பு தேவர்-தானவர்-இயக்கர்-நாகர் முதலாகியவர்களும் வருத்தப்படும்படியாக்கி, யாவுந் தனக்குச்சுவாதீனமாகவே இனித் தானே தேவனா யிருக்கவேண்டுமென்று நினைத்து, அஷ்டதிக்குப் பாலர்களையும் மற்றுமுள்ள தேவர்களையும் அந்தந்த அதிகாரங்களினின்று நீக்கித் தானே அனேக வுருவங்களெடுத்து அவ்வவ்விடங்களிலுந் தானே யிருந்து அதிகாரஞ் செலுத்த முயன்று, யாவருந் தன்னையே சும்

பிடவேண்டு மென்றும், தன்னைக் குறித்தே வேள்வி முதலியவற்றைச் செய்யவேண்டு மென்றும் அவிர்ப்பாகங்களை அசுரரே வாங்க வேண்டு மென்றும், தேவர்களுக்கு யாதொரு சிறப்புங் கூடாதென்றும், அவர்களைக் கண்ட விடத்திற் கொல்லவேண்டிய தென்றும், இவ் வாக்கினையைக் கடந்து யார் நடக்கிறார்களோ அவர்களைச் சித்திரவதை செய்வேனென்றுங் கட்டளையிட்டு, வைதிகச் சடங்குகள் யாவையு மறுத்து, தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பலவிதமான தீமைகளைச் செய்தான். இந்த நிர்ப்பந்தத்தைச் சகிக்கமாட்டாமல் தேவர்முதலானோர் திக்குத் திக்கா யோடவும் எந்தத்திக்கி லோடினாலும் அசுரர் பின்றொடர்ந்து பிடித்துக் கொலை செய்யவுமாகி, சகல லோகங்களும் இவனுடைய பயபீதியினால் மிகவும் பரிதாபத்தை யடைந்தன.

இவ்வாறு மூன்று லோகங்களிலுந் தேவர்கள் தாவரிக்கமாட்டாமற் பிரமலோகஞ் சேர்ந்து முறையிட்டுக் கொள்ள, அவரும் பொறுங்கள் காலம் வருகிறதென்று சமாதானஞ் செய்தார். இப்படிக்குத் தேவரெல்லாம் ஓடிப்போய் மற்ற யாவருந் தன் கட்டளையை மீறாமல் தனக்கே தேவோபசார பூசைமுதலியவைகளைச் செய்துவர, அவன் மூவுலகவாட்சியுமேற்று எதிரிடில்லாமல் மகா மகிமையோடு ஐந்து கோடி அறுபத்தொரு லக்ஷத் தறுபதினாயிரம் வருஷம் வாழ்ந்துகொண் டிருந்தான். இவ்வாறு தேவர் முனிவர் முதலானவர்களைப் போலவே தருமம் சத்திய முதலானவைகளும் மிகச் சிறுமை யடைந்து, அசுரர்-தைத்தியர் முதலானோரைப் போல, அதருமம்-அசத்தியம் முதலானவை பெருமை யடைந்து இருந்த காலத்தில், சகல தேவர்களும் பிரமாவை முன்னிட்டுக்கொண்டு திருப்பாற் கடலினிடத்திற்குப் போய், அவ்விடத்தில் அநேகங் கோடி சந்திரமண்டல காந்தி பொருந்தி நாற்றிசைகளிலும் வெயில் பரப்பாநின்ற மணிச் சூட்டுகளோடு கூடிய ஆயிரஞ் சிகரங்களை யுடைத்தாய், சூரியரைத் தாங்கும் ஆயிரங் கொடிமுடிகளை யுடைய வெள்ளி மலையோடொத்து விளங்காநின்ற ஆதிசேடனாகிய சிறந்த பாயலின்மீது, லோகரட்சணைக்காக யோக நித்திரை பொருந்தி, அப்பாற்கடலி னகடெல்லாங் கருநெய்தற் காடுபூத்த தென்னும்படி பரவாநின்ற திருமேனி காந்தி யடைந்து, கருணாரச நிறைந்து, குளிர்ச்சி பொருந்திய கடைக்கண் பார்வைகளென்னு நீர்த்தாரைகளைப் பொழிந்து, சனகாதி மகா யோகிகளாகிய சாதகப் புட்பங்களின் மனங்களைத் திருப்தி யடைவித்துக்கொண்டு, இலக்குமியாகிய அழிவில்லா மின்னற்கொடியோடு கூடி, சார்ங்க மென்கிற விசித்திரமாகிய வில்லைத் தரித்து விளங்காநின்ற லோகநாயகனாகிய காளமேகத்தைக் கண்டு களித்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரங்கள் செய்து, கைகூப்பித் தலைமேல் வைத்து நின்றுகொண்டு, ஓ சகலபுவன கர்த்தாவே! ஓ முதலு முடிவுமில்லாப் பொருளே! ஓ வேதங்களாலும் காணக்கூடாத பெருமையுடைய குணக் குன்றே! ஓ நச்சினார்க்குக் கற்பகமே! ஓ நண்ணார்க்குக் காஞ்சிரமே! ஓ கருணாகரக் கடவுளே! ஓ மகானுபாவா! ஓ தாமரைக் கண்ணா! ஓ காயாம்பூ வண்ணா! ஓ சக்ராயுத பாணி! ஓ நாராயணமூர்த்தி! உமது திருவடித்தாமரையிணையைச் சரணம்புகுந்த வெளியேங்களைக் கடாட்சம் வைத்துக் காத்தருள வேண்டும் என்று துதித்துப் பிரார்த்திக்க, பகவான் ஓ தேவர்களே! நீங்கள் இரணியாசுரனுடைய வாதை சகிக்கமாட்டாமல் வந்தீர்கள், தெரியும் பயப்படவேண்டாம், அந்த அசுரனைச் சங்கரிக்கிறேன், உங்களுக்கினி யொரு குறைவுமில்லை என்றருளிச் செய்யக் கேட்ட யாவரும் பேரானந்தமடைந்து கீழே விழுந்துவிழுந்து நமஸ்காரஞ்செய்யப் பிரமனும் நமஸ்கரித்து, சுவாமி! நெடுநாளாய்ப் பதியிழந்து சுகமிழந்து வாதைப்படுகிற இத்தேவர்க ளிடத்திலும் அடியேனிடத்திலுங் கிருபை வைத்துத் துரிதமாக அவ்வசுரனைச் சங்கரிக்கவேண்டுமென்று வேண்ட, சுவாமியானவர் அப்படியே செய்கிறேன் போங்களெனக் கேட்டு, தேவர்கள் பகவானைப் பற்பல விதங்களாகத் துதித்துத் திரும்பி வந்து விட்டார்கள்.

இப்படியிருக்க, அந்த இரணியனுக்குப் பிரகலாதனென்னு மகானுபாவனாகிய ஒரு புத்திரன் பிறந்தான். அவன் பிறந்ததுமுதற் பகவானுடைய திருவடிகளையே துதிப்பதும் பூசிப்பது மியல்பாகிய செய்கையாகக்கொண் டிருந்தான். அவனுக்குச் சகல கலைகளையுங் கற்பிக்கும்படி உபாத்தியாயரிடத்தி லொப்பிவிக்க, அந்த உபாத்தியாரும் அவ்வசுரராஜனுடைய கட்டளையின்படி அவ்விரணியனையே தெய்வமென்றும் மனோவாக்குக் காயமென்

கிற திரிகரணங்களாலுஞ் செய்யவேண்டிய பூசனைகளெல்லாம் அவனுக்குத்தான் செய்ய வேண்டுமென்றும் உபதேசிக்கக்கேட்டு, மகா ஞானியாகிய பிரகலாதன் அவ் வசனங்களை யெல்லாங் கண்டித்து, வேதாந்தங்கள் சொல்லுகிற ஸ்ரீ நாராயணமூர்த்தியே கடவுளென்றும் திரிகரணங்களாலு மவனையே பூசிக்க வேண்டியதென்றுஞ் சொல்லி, பள்ளியிலோதும் பிள்ளைகளுக்கெல்லாமும் போதிக்க இச்செய்தியை அவ்வுபாத்தியாயர் அசுரராஜனுக்குத் தெரிவிக்க, அம்மாத்திரத்திலே மிகவுங் கோபித்துத் தன்மகனைக் கொலை செய்யும்படி கட்டளையிட, அப்படியே அவ்வசுரனுடைய சேவகர்கள் பலவாயுதங்களினால் வதைத்தும் - தீயிற் கொளுத்தியும் - மலைமேலிருந் துருட்டியும் - கடலி லமிழ்த்தியும் இன்னும் பலவிதச் செய்கைகள் செய்து அக்குமாரன் சாகாமை கண்டு, ஆச்சரியத்துடன் இச்செய்தியை இரணியனுக்கு தெரிவிக்க, அவன் நேரில் மகனை வருவித்து, அடா பிதுர்த்துரோகி! பிஞ்சிற் பழுத்து யாரோ ஒருவனிருக்கிற தாய்ப் பிதற்றுகிறாயே அவனெங்கே யிருக்கிறானென்று கேட்க, அதற்கு அந்த மகானுபாவன் அவனிருக்குமிட மின்னதென்றில்லை. தூணிலுமிருப்பன் துரும்பிலு மிருப்பனென்றுசொல்லக் கேட்டு, ஆகில் இத்தூணிற் காட்டு பார்ப்போமென்று கோபாக்கினி ஜொலிக்க, வெகு வேகத்துடனே எழுந்து, அருகிலிருந்த தூணைக் காலினா லுதைத்தான். உதைக்கவே அத் தூணினின்றும் அடியாரைக் காக்குங் கடமையுடைய பகவான் முகத்திற் சிங்கரூபமுந் தேகத்தில் மனிதரூபமுமாகி நரசிங்காவதாரஞ் செய்து, பிறைபோன்ற தந்தங்களும்- பேழைபோன்ற வாயும்-பரந்தமுகமும் - அனலைக் கக்கும் விழிகளுமாக மிகவும் பயங்கரமாகிய வுருவத்தோடு, திகைத்து நிற்கும் அசுரனைக் கோபத்தோடும் பார்த்து, துதித்துக்கொண்டு நிற்கும் அவன் புத்திரனைக் கருணையோடும் பார்க்க, இவ்வாறு இருவகைப் பார்வையாற் பார்த்துக்கொண்டு வரக்கண்ட அசுரன் கத்தி கேடயங்களோடு யுத்தத்திற்கு யத்தினப்பட, அப்படியே கொஞ்சநேரம் யுத்தஞ் செய்து, காலமாயிற்றென்று மனதில் நினைத்துச் சரேலென்று அந்த இரணியனைப் பிடித்து, பறபறவென விழுத்துக்கொண்டு போய்ப் பகலுக்கும் இரவுக்கும் நடுவாகிய சாயங்காலத்தில், வீட்டிற்கும் வெளிக்கும் நடுவாகிய வாசற்படியில் நின்றுகொண்டு, அவனைத் தொடையின்மேல் வைத்து தமது நகங்களினாலே வயிற்றைப் பீறிக் கொன்று பிரஹலாதனுக்கு அவ்வசுர ராச்சியத்தை யளித்து நன்மையோ டிருப்பாயென்று அனுக்கிரகஞ் செய்து, தேவர்களுக்கும் அவரவர் பதிகளைக் கொடுத்து, சகல லோக பயத்தையுந் தீர்த்துத் தருமத்தை நிலை நாட்டினார். இவ்விதமாய் இந்தக் கண்ணன் முன்பு நரசிங்காவதாரம் எடுத்துத் துஷ்டசங்காரஞ் செய்தார்.

### ஸ்ரீ வாமன அவதார மகிமை

கேளப்பா தருமபுத்திரா! முன்பு திரேதாயுகத்திற் பலி யென்று ஒரு அசுரராஜ னிருந்தான். அவன் யாரென்றால் இப்போதுரைத்த பிரஹலாதனுடைய மகனாகிய விரோசகனனென்கிறவனுக்குப் புத்திரன் வெகு பல பராக்கிரமங்களுடையவன், மகாசூரன், கற்பகமும் நிகராத கொடையாளி. அப்படிப்பட்ட அந்த அசுரன் சகல அரசரோடுங் கூடிக்கொண்டு சுவர்க்கலோகம் போய், இந்திரனையும் மற்ற தேவர்களையும் யுத்தத்திற்ஜெயித்து அவர்களை யெல்லாம் இராச்சியத்தினின்றுந் துரத்திவிட்டான். இவ்வாறு தேவர்களெல்லாம் அந்தப் பலி யென்பவனாலே மிகவும் உபத்திரவத்தை யடைந்து, பிரமனை முன்னிட்டுக்கொண்டு பாற்கடற் சென்று சுவாமியைத் துதிக்க, அவர் தாம் காசிபருக்குப் புத்திரராயவதரித்து காக்கிறேனென்று சொல்ல, அதைக் கேட்ட தேவர்கள் யாவருஞ் சந்தோஷத்துடன் வந்துவிட்டார்கள். சுவாமியானவர் உடனே காசிபப் பிரசாபதிக்கு அதிதி என்கிறவள் வயிற்றிற் பிள்ளையாய்ப் பிறந்து, இந்திரனுக்குத் தம்பியாகி, விஷ்ணு வென்றும் உபேந்திரனென்றுந் திருநாமங்களைத் தரித்து விளங்கிக்கொண் டிருக்கையில், அந்தப் பலி யென்னும் அசுரராஜன் மூன்று லோகங்களையுஞ் ஜெயித்து, மகா சக்ரவர்த்தி யென்று பேர்பெற்று அசுவமேதஞ் செய்ய வேண்டுமென்று நினைத்து அந்த யாகத்தைச் செய்துகொண்டிருக்குந் தருணத்திலே உபேந்திரன் குள்ளனாகிய பிராமணப் பிரமசாரி ரூபமெடுத்து, வெள்ளிக் கம்பிபோன்ற முப்புரிநூல் மார்பிலிலங்க, முண்டனஞ் செய்யப்பட்ட சிரத்திற் கறுத்த குடுமிவிளங்க, அரையில் கௌபீனமும் முஞ்சியும் பிரகாசிக்க, கையிற் பலாசதண்டம் பிடித்து வேதத்தை வாயினா லுருச்சொல்லிக்கொண்டு, பிரமதேஜசே இவ்வடி வெடுத்ததோவென்று ஐயமு

றும்படி அந்தப் பலிச்சக்கிரவர்த்தியின் யாகசாலைக்குட் பிரவேசித்து ஆசீர்வதிக்க, அதுகண்ட பலிச்சக்கிரவர்த்தி எழுந்து வந்து, அர்க்கிய பாத்திய முதலியவை கொடுத்துப் பூசித்து, சுவாமி! எழுந்தருளிய காரியத்தைத் திருவாய் மலரவேண்டுமென்று கேட்க, வாமனப் பிரமசாரியானவர் ஓ அசுரமகாராஜனே! நீர் மகா தாதாவென்று கேள்வியுற்று ஒரு பொருள் யாசிக்க வந்தேன் தரவேண்டுமென்ன, அவன் அப்படியே தருகிறேனென்ன, வாமனர் எனக்கு மற்றொன்றும் வேண்டாம். உட்கார்ந்து ஜபஞ் செய்வதற்கு என்னடியால் மூன்றடி நிலம் வேண்டுமென்ன. அதுகேட்ட அப் பலிச்சக்கிரவர்த்தி, ஐயோ! வெகுவாய்க் கேட்கக் கூடாதா? இவரென்ன பயித்தியக்காரர் அற்பத்தைக் கேட்டாரென்று அசமாதானத்துடனே வெகு நிலங் கொடுக்கிறேனென்ன, அவர் எனக்கு அதிகம் வேண்டாம். சுவாதீனமாக உட்கார மூவடி நிலந்தான் வேண்டும் அதுவே எனக்கு மூன்று லோகமாகுங் கொடுமென்ன, அசுர ராஜன் புன்னகையுடனே உமதடியாலே மூவடி நிலந் தந்தேனென்று தாரா தத்தஞ் செய்தான். இப்படி தானஞ் செய்தபின் வாமனர் ஒரு நொடியிற் பிரமாண்டம்போல் வளர்ந்து, மேலுலகங் கீழுலகங்களை மூன்றடிகளாற் கவர்ந்துகொள்ள, பலிச்சக்கிரவர்த்தி மிகவும் நாணி வியப்படைந்து நிற்க, அவனுடைய மந்திரிகளாகிய விப்பிரசித்தி முதலான அசுரர் சூரிய சந்திரர் தமது மார்பிற்குச் சரியாய் வரும்படிக்கும் மலைகள் மூலந்தாட்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கும் படிக்கும் வளர்ந்த ரூபத்தைக் கண்டு, இவன் வெகு மாயாவி இவனைக் கொலைசெய்யவேண்டுமென்று பருவதசமானமாகிய தேகங்களோடுங்கூடிய அவர்கள் கைகளி லாயுதங்களையெடுத்துக்கொண்டு ஆகாசத்தி லெழும்பிச் சுவாமியினுடைய தேகத்திற் பிரயோகிக்க, இவர் அவ்வசுரர்களைத் தமது மூச்சுக்காற்றினாலேயே சின்னபின்னமாகச் சிதறவடிக்க, அதுகண்ட பலிச்சக்கிரவர்த்தி இவர் தேவனென்றெண்ணித் துதிக்க, சுவாமி அவனைப் பாதாளத்தி லோரிடத்தி லிருக்கச்செய்து, சுவர்க்க முதலாகிய லோகங்களை இந்திரன் முதலானோருக்குக் கொடுத்தார். அந்தச் சுவாமியின்மே லெதிர்த்த அசுரர் எப்படிப்பட்டவர்களென்றால், கடலைக்குடிக்கவும், பூமியைச் சுருட்டவும், மலைகளைச் செண்டாடவும் கனலை விழுங்கவும், கிரக நட்சத்திரங்களை பெயர்க்கவும், நினைத்த ரூபங்களெடுக்கவும் வல்லமையுள்ளவர்கள். அப்படிப்பட்ட பேர்களே மூச்சுக்காற்றிற்பட்டு அங்கங்கள் சிந்தப்பறக்கும்போது, அவர் வல்லமையை யார் சொல்லமாட்டுவார். இவ்விதமாக வளர்ந்து மேலொரு திருவடியைத் தூக்குமளவில், அதனால் அண்டச் சுவர் பிளந்து அதைச் சூழ்ந்திருந்த நீர் அப்பிளப்பின் வழியாய்க் கீழே சத்தியலோகத்தில் விழப் பிரமதேவன் முதலானோர் அதைப் பாத தீர்த்தமாகக்கொள்ளப் பின்னுங் கீழாகப் பெருகிச் சந்திரமண்டல முதலாகிய விடங்களில் வியாபித்து, தேவர்-கின்னரர் முதலானோருந் துதிக்கப் பூசிக்க, மந்தாகினியென்கிற பெயர்வகித்துச் சுவர்க்கலோகத்திற் றங்கியது. அதனால் அதற்கு ஆகாசகங்கையென்றும், சுவர்க்கலோகாதியென்றும் பேர்களுண்டாயின. பின்பு லோகத்தாருடைய பாக்கியவசத்தினாலேபூமியில்வந்து, கங்காநதி என்று பேர் பெற்றுச் சகல பாபங்களையும் போக்கிக்கொண்டு விளங்குகின்றது. இவ்விதமாக இந்தப் பகவான் முன்னம் வாமனவதாரஞ் செய்து வளர்ந்து மூவடிகளா லுலகத்தைக் கவர்ந்தபடியினாலே சகல தேவர்களாலுந் திருவிக்கிரம னென்னுந் திருநாமத்தைச் சொல்லப்பெற்றார்.

### ஸ்ரீ பரசுராம அவதார மகிமை

பின்பொரு காலத்தில் வேதங்கள்-வைதிகக் கிரியைகள்-யாகங்கள்-சத்தியங்கள்-தயைகள்-பொறுமைகள்-தானங்கள்-தவங்கள் முதலாகிய சகல தர்மங்களும் முழுகிப்போக, அதர்மந் தலையெடுக்க, அதனாலே லோகம் நாசமடைந்திருக்கக்கண்ட இந்தச் சுவாமி அத்திரியென்கிற மகாமுனிக்குப் புத்திரராகி, தத்தாத்திரேயரென்று பேர்பெற்று, முழுகிப்போயிருந்த வேத வைதிக தருமங்களை முன்போல் விளங்கச்செய்து, உலகத்திற்கு க்ஷேமத்தையுண்டுபண்ணினார். இந்த தத்தாத்திரேயரை ஹேஹய தேசத்து இராஜனாகிய கார்த்தவீரியார்ச்சுனன் குருவாகப்பற்றி நெடுநாள் பணிவிடை செய்ததினாலே அந்த முனிவர் வெகு சந்தோஷமடைந்து உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க, அவன் எனக்கு ஆயிரங் கைகள் உண்டாகவேண்டுமென்றும், மனிதர்-விலங்குகள்-மரங்கள் முதலாகிய யாவும் என் ஆக்கினைக்குக் கீழ்ப்பட்டு இருக்கவேண்டுமென்றும், தேவர்கள்-ரிஷிகள்-பிதுர்த் தெய்

வங்கள் - பிராமணர் இவர்களுக்குத் திருப்தி வரும்படி நான் யாகங்கள் செய்யவேண்டுமென்றும், மூவுலகங்களிலும் எனக்குச் சமானமாக ஒருவனும் கிடைக்கமாட்டானே அப்படிப்பட்ட புருஷனாலே எனக்கு மரணம் வர வேண்டியதென்றும் இந்நான்கு வரங்களைக் கேட்டான். அம்முனிவர் அப்படியே கொடுத்தார்.

அந்தக் கார்த்தவீரியன் வரங்கள் பெற்று வெகுப் பிரபாவமடைந்து ஏழு தீவுகளோடு கூடிய பூமியை ஜெயித்து, ஒருவருந் தருமத்தைக் கடக்கவொட்டாமல் ஜாக்கிரதைசெய்து நான்கு தேகங்கள் எடுத்துக்கொண்டு ஒரு தேகத்தினால் அரசாட்சி செய்து, மற்றொரு தேகத்தினாற் சேனைகளைக் காத்துச் சத்துருக்களைத் துப்சஞ் செய்து, மூன்றாவது தேகத்தினால் யாக முதலாகிய வைதிகக் கிரியைகளைச் செய்து, நான்காவது தேகத்தினாலே அந்தப் புரத்திலிருந்து போகங்களை அனுபவித்து வந்தான். அவன் அரசாட்சி செய்யுங் காலத்தில் திருடர் பயம்-வியாதி பயம் முதலாகிய சகல பயங்களும், அதர்ம சிந்தையுங் கிஞ்சித்து மில்லாமற் போயின. அவனுடைய பிரபாவம் விஸ்தாரமுண்டு. அதிலொன்று சொல்லுகிறேன் கேள்: அவன் சமுத்திரத்திறங்கி நடப்பன். அப்போது சமுத்திரம் அவனுக்குப் பயப்பட்டு எவ்வளவுதூரம் அவன் போனாலும், அவன் வஸ்திரமானது நனையாமல் அதற்குக் கீழாகவே போய்விடும். இவ்விதமாகப் பல மகிமைகளையுந் தத்தாத்திரேய மகா முனியினுடைய அநுக்கிரகத்தினாற் பெற்று, பத்து லக்ஷம் மாகிஷ்மதி யென்கிற பட்டணத்தி லிருந்தான்.

இவன் இப்படியிருக்க, ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் பிருகு வமிசத்திற் பிறந்த ஜமதக்கினி யென்கிற மகா முனிக்குப் புத்திரராய் ராம ரென்கிற பேரோடு அவதரித்தார். அவர் வெகு பல பராக்கிரமமும் அஸ்திர வித்தியா சாமர்த்தியமு முடையவரானார். பரசு என்கிற கோடரியைக் கையிலேந்தியபடியால், பரசு ராமரென்று பேர் பெற்றார். அன்றியும், வேத சாஸ்திரங்களையும் நன்றாய்க் கற்றுப் பிதாவுக்குப் பணிவிடையும் வைதிக தருமங்களையுஞ் செய்துகொண்டு வந்தார். அந்த ஜமதக்கினிக்கு ஒரு காமதேனுவுண்டு. அது வசிஷ்டருடைய காமதேனுவைப்போல்வேண்டியவைகளைக் கொடுக்கும். அந்தப் பசுவினால் தம்மிடம் வருகிற பேர்களுக்கு நன்றாய் விருந்து செய்வித்துக்கொண்டிருப்பார். இப்படியிருக்க, அந்தக் கார்த்தவீரியன் வேட்டைக்கு வந்த விடத்தில் சேனைகளை வெகு தூரத்தில் நிறுத்திப்போட்டு, ஜமதக்கினியின் ஆச்சிரமத்திற்கு வந்து அம் மகாமுனியைத் தொழ, அவர் இன்றைக்கு நீ சேனைகளுடனே நமது ஆச்சிரமத்தில் விருந்துண்டு போகவேண்டுமென்று கேட்க, அவன் அப்படியே அங்கீகரிக்க, அம்முனிவர் காமதேனுவைக்கொண்டு அரசனுக்கும், சேனைகளுக்கும், தேவருக்கும் அரிதாகிய விருந்து செய்வித்தார். அதைக் கண்டு அவ்வரசன் ஆச்சரியமடைந்து அம் முனியை நமஸ்காரஞ் செய்து, இக் காமதேனுவை எனக்குத் தரல்வேண்டுமென்று வெகுவாய்க் கேட்டான். அதற்கு அவர் சம்மதிப்படாமையாலே மனதில் விசனமாய்ப் போனான். இதை எல்லாம் அந்த ராசாவின் புத்திரர் அறிந்து, ஒருநாள் பரசுராமர் இல்லாத வேளையில் அவ்வாச்சிரமத்திற் புகுந்து ஜமதக்கினியை நிராகரித்து அக் காமதேனுவை ஓட்டிக்கொண்டு போய்விட்டார்கள். அதற்கு ஜமதக்கினி வருந்திச் சும்மாயிருக்க, அதுகண்டு அவருடைய மாணாக்கன் மனஞ் சகிக்காமல் சமித்துக்காக காட்டிற்குப் போய்வந்த பரசுராமனுக்கு இச்செய்திகளைத் தெரிவிக்க, அவர் கோபாக்கினியே மூர்த்திகரித்ததுபோலாகிக் கைலாயுதத்தை எடுத்துக்கொண்டு மாகிஷ்மதி பட்டணத்திற்குப் போக அந்தக் கார்த்தவீரியன் இவர் வருகிற வேகத்தைப் பார்த்து இவர் சமாதானத்துக்கு உட்படமாட்டார் என்றறிந்து, தானுந் தன் புத்திரரும் மந்திரிகள் முதலாகிய பேர்களோடு எண்பதக்ஷோகிணி சேனைகளுடனே சமுத்திரங் கரைபுரண்டு வருகிறதோவென்று சொல்லும்படி யுத்தத்திற்குச் சன்னத்தனாகி வந்தான். அப்போது இருவருக்கும் பலமான சண்டை நடந்தது. அந்தச்சண்டையிற் பரசுராமர் மிகுந்த கோபாவேச மடைந்து, தமது குடாரத்தினாலே அவ்வளவு சேனைகளையும் வெட்டி மடித்துக் கார்த்தவீரியனுடைய ஆயிரங் கைகளையும் துணித்து, தேர் - குதிரை-பதாகை-வில்-கவசம் - கிரீடம் முதலானவைகளையும் சூரணஞ் செய்து முடிவிற் சிரத்தையும் அறுத்துத் தள்ளினார். இப்படிக்கு அரசன் மடியக்கண்ட அவன் புத்திரரிற் சிலர், ரணக்களத்திற்கு இரையாகாமற் போனவிடந் தெரியாமல் ஓடிப்போய்விட்டார்கள். அந்தப்

பரசுராமர் சத்துரு சங்காரஞ் செய்து வெற்றி பெற்றுத் தம்து தகப்பனுருக்குத் தண்டனிட்டுச் சுகமாக விருந்தார்.

இப்படியிருக்க, அந்தக் கார்த்தவீரியனுடைய புத்திரர் ஒருநாள் அவ்விராமர் ஆச்சிரமத்தி லில்லாதவேளையில் ஓடிவந்து தவஞ் செய்துகொண்டிருந்த ஜமதக்கினியின் தலையை வெட்டிப்போட்டு ஓடிப்போனார்கள். அவரிறந்ததினாலே அவருடைய பிரியமாகிய மனைவி வெகு துக்கத்தை யடைந்து, கோவென்று கதறிக்கொண்டு தலைவிரிகோலமாய் ஓடிவந்து காட்டிற் சமித்தொடித்துக்கொண்டிருக்கும் பரசுராமரைப் பார்த்துக் கூவி இச்செய்தியைச் சொல்லி, இரண்டு கைகளாலுந் தன் வயிற்றில் இருபத்தொருதரம் அடித்துக் கொண்டாள். அதைக் கண்ட பரசுராமர் அளவற்ற துக்கமுங் கோபமு மடைந்து இருபத்தொரு தலைமுறை இப்பூமியில் க்ஷத்திரியரைக் கொல்லுவேனென்று அங்கேயே சபதஞ் செய்து, அதுமுதல் வீராவேசத்தோடு க்ஷத்திரியப்பூண்டு பூமியில் தரிக்கவொட்டாமல் நாசஞ்செய்ய வாரம்பித்து, அனேகமாயிரம் வீரரை மடித்தார். அப்பால் க்ஷத்திரியர் யாவருந் தாவரிக்கமாட்டாமல் திக்குத் திக்காய் ஓடியொளித்தாலும், உடனே பின் தொடர்ந்து பிடித்து வெட்டுமளவில் க்ஷத்திரிய வமிசங்கள் பெரும்பாலு மற்றுப்போயின. இவ்வாறு நாற்கடல் சூழ்ந்த பூமி முழுவதையுஞ் சுவாதீனமாக்கி அநேக அசுவமேதங்களையும் நரமேதங்களையுஞ் செய்துவந்து, தம்மை யாசித்த காசிபருக்குப் பூமி முழுவதையுந் தத்தஞ் செய்தார். அப்போது அக்காசிபர் என் பூமியில் நீரிருக்கவேண்டா மென்று சொல்ல, அதைக் கேட்டு அப்படியே நல்லதென்று மேற்கடலின் கரைக்குப்போய்ச் சமுத்திரத்தில் தம்முடைய ஆயுதமாகிய குடாரத்தை எறிந்து, அக்குடாரம் வீழ்ந்தமட்டுஞ் சமுத்திரத்தை யொதுங்கிப் போகும்படி கட்டளையிட்டு அப்பூமியில் நாளதுவரையிற் சிரஞ்சீவியாய்த் தவஞ் செய்துகொண் டிருக்கிறார்.

### ஸ்ரீ ராமாவதார மகிமை

பின்பு இந்தப் பகவான் ஸ்ரீ ராமாவதாரஞ் செய்ததைச் சொல்லுகிறேன் கேள்: இந்த வைவச்சுத மனுவந்திரத்திலே இருபத்துநாலாவது சதுர் யுகத்தில், இட்சிவாகு வமிசத்தனாகிய தசரதனென்றொரு மகாராஜனிருந்தான். அவனுக்கு வெகுநாள்வரையிற் புத்திர ருண்டாகாம லிருக்க, அந்த ராஜன் புத்திரர் நிமித்தம் அசுவமேதயாகஞ் செய்தான். அப்போது நான்முகன் முதலாகிய தேவர்கள் நாராயணனைப் பணிந்து, சுவாமி பகவானே! பூமியில் இராவண னென்றொரு ராக்ஷதனிருக்கிறான். அவன் வெகு சாமர்த்திய பலங்களும் வரபலங்களு முடையவன். அதனாலே அவன் செருக்கடைந்து தேவர்களையும் ரிஷிகளையும் வாதைப்படுத்துகிறான். அதைச் சொல்ல எங்களுக்கு வல்லமையில்லை. அவனைத் தேவரீர் சங்கரித்து எங்களைக் காத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, சுவாமியானவர், ஓ தேவர்களே! நீங்கள் அஞ்ச வேண்டாம், நான் மனுஷியாவதாரஞ்செய்து அவனைச் சங்கரிக்கிறேன் என்று சொல்ல, தேவர்கள் அதைக்கேட்டு மனக் களிப்படைந்தார்கள். சுவாமி தாம் சொல்லிய வாக்கின்படி நான்கு ரூபமாகி, தசரதனுக்குப் புத்திரராய் அவதரித்தார். எப்படி யென்றால், அந்தத் தசரதனுடைய மூத்த மனைவியாகிய கவுசலைக்கு இராமனென்று திருநாமமுடைய ஒரு குமாரனாகவும், மூன்றாவது மனைவியாகிய கைகேயி என்கிறவளுக்குப் பரதனென்னுந் திருநாமமுடைய ஒரு குமாரனாகவும், இரண்டாவது மனைவியாகிய சுமித்திரை யென்பவளுக்கு இலட்சுமணன் சத்துருக்கன் என்கிற இரண்டு குமாரர்களாகவும் அவதரித்தார்.

இவ்வாறு நான்கு புத்திரர் பிறந்தமையால் தசரதராஜன் வெகு சந்தோஷத்தை அடைந்திருந்தான். அந்தக் குமாரர் நாலவருஞ் சகல கலைகளிலும் வல்லவராகி வளர்ந்துகொண்டிருக்குங் காலத்திலே, விசுவாமித்திர மகா முனிவர் வந்து தசரத மகாராஜனைக்கண்டு தமது யாகத்திற்கு இராக்கதர் வந்து தொந்தரவு செய்யாமல் இருக்கும்படிக் காப்பதற்காக இராம லட்சுமணரை அனுப்பவேண்டுமென்று கேட்க, அவரும் அனுப்பிவிக்க, அவ்விரண்டு ராஜகுமாரரையும் அழைத்துக்கொண்டு போய் யாகத்தை ஆரம்பஞ் செய்யுமளவில், சுபாகு-மாரீசன்-தாடகை முதலிய அநேக ராட்சதப் பிரஜைகள் வந்து தொந்தரை செய்தார்கள். அப்போது இராமலட்சுமணர்கள் சுபாகு-தாடகை முதலானவர்களைக் கொன்று, மாரீசனைக் கடலில் விழச்செய்து யாகத்தைக் காத்தார்கள். அதனாலே விசுவாமித்திரமுனி சந்தோஷம் அடைந்து, ஸ்ரீராம மூர்த்திக்கு அநேக அஸ்

திரங்களைக் கொடுத்து மிதிலாபுரிக்கு அழைத்துக்கொண்டு போனார். அந்த ஸ்ரீராமர் அவ்விடத்தில் ஜனகமகாராஜன் சுல்கமாக வைத்திருக்கும் வில்லை வளைத்தொடிக்கவே, அவ்வரசன் தன் மகளாகிய சீதாதேவியை அவருக்கு கன்னிகாதானஞ் செய்யும்படி நிச்சயம் செய்தான். பின் விசுவாமித்திரருடைய வார்த்தையினாலே இலட்சுமணருக்கு ஊர்மிளை யென்பவளையும், பரத சத்துருக்கனருக்குத் தன் தம்பியின் பெண்களாகிய மாண்டவீ - சுருதிகீர்த்தி யென்கிறவர்களையும், கன்னிகாதானஞ் செய்யும்படிக்கு ஜனகமகாராஜன் நிச்சயம் செய்து தசரதனுக்குச் சொல்லி யனுப்புவிக்க, அந்த ராஜன் பிள்ளைகளை அழைத்துக்கொண்டு வந்து சேர, நல்ல முகூர்த்தத்தில் நால்வருக்கும் விவாகம் நடந்தது.

இவ்வாறு ஸ்ரீராமசுவாமி தானுந் தம்பிமார்களுமாய் விவாகஞ் செய்துகொண்டு, அயோத்திக்குப் போய்ச் சிலகாலம் சுகமாய் இருந்து, பின்பு கைகேயினுடைய வாக்காகிய கயிற்றாற் கட்டுண்ட பிதாவின் சொற்படி சகல போகத்தையும் இழந்து, மரையுரியுடுத்திப் பாதசாரியாய்ச் சீதையுடனேயும் லட்சுமணருடனேயுங் காட்டுக்குச் சென்று, சிருங்கிபேர புரத்திற் குகனென்பவனோடு நேசித்து சித்திரகூட பருவதத்தைச் சேர்ந்து சிலநாள் இருந்து இராச்சியத்திற்குத் திரும்பி வரும்படி பிரார்த்தித்த பரதனுக்குத் தனது பாதுகைகளை யளித்து, தண்டகாரணியஞ் சென்று விராதன் என்பவனைச் சங்காரஞ் செய்து, அங்கிருந்த ரிஷிகள் பிரார்த்தித்தபடி ராக்ஷதரைச் சங்காரஞ் செய்கிறேன் என்று பிரதிக்கினை செய்து பஞ்சவடியென்னு மிடத்திலிருந்தார். அப்போது இராவணனுடைய தங்கையாகிய சூர்ப்பனகி யென்னு மிராட்சதி வந்து, கோடிமன்மத சுந்தரரா யிராநின்ற ஸ்ரீராமரைப் பார்த்து மயலடைந்து, சீதை யிருந்தால் தன்னைச் சேரமாட்டாரென்று நினைத்து அவளை விழுங்கப்போக, அதை இலக்குமணரானவர் கண்டு ஓடிவந்து கத்தியினால் அவள் மூக்கையும் காதையும் அறிந்து விட்டார். அதனாலே அவள் மிகுந்த துயரமுடையவளாகி, ஜனஸ்தானமென்னும் இடத்திலிருக்குந் தன்னுடன் பிறந்தவனாகிய கரனென்பவனோடு முறையிட, அவன் 14-ஆயிரம் இராட்சச சேனையுடனே சண்டைக்குவர, ஸ்ரீராமர் தாமொருவராகவே அவ்வளவு சேனைகளையும் அதின் றலைவராகிய கரன்-தூஷணன்-திரிசிரன் என்கிற பேர்களையும் ஒரு முகூர்த்த காலத்திற் சங்கரித்து வெற்றிமாலைசூட, அது கண்ட சூர்ப்பனகி கோபம்-விசனம் - பொறாமை இவைகளாற் கலங்கிய வுள்ளத்தோடு இலங்கைக்கோடி இராவணனுக்கு இச்சேதியெல்லாஞ் சொல்லிப் புலம்ப, அவன் மாரீசனென்பவனை மானாய் விளையாடும்படி கட்டளையிட, அந்த மாரீசன் விசித்திரமாகிய மானாகி சீதை யிருக்குமிடத்தில் வந்து விளையாட, அதுகண்ட சீதை அதைத் தனக்குப் பிடித்துக் கொடுக்கவேண்டு மென்று கேட்க, ஸ்ரீராமர் வில்லெடுத்துக்கொண்டு அந்த மானின் பின்றொடர, அந்தமான் கையிலகப்படாமல் நெடுந்தூரம் இவரை இழுத்துக்கொண்டு போயிற்று.

அந்தத் தருணத்தில் இராவணன் சன்யாசியாக வந்து சீதையைத் தூக்கித் தேர்மேல் வைத்துக்கொண்டு போய் இலங்கையிற் றனது உத்தியான வனத்திற் சிறைவைத்தான். பின்பு இராமர் சீதையைக் காணாமல் தம்பியுடன் புலம்பிக்கொண்டே தேடிப்போகும்போது வழியிலிருந்த கபந்தனென்பவனைக் கொன்று, அவன் சொற்படி பம்பை யென்னும் ஆற்றின் கரையிற் போய் அனுமான் முகாந்தரமாய் ரிசிய முகத்திலிருந்த சுக்கிரீவனோடு சினேகித்து, அவன் தமயனாகிய வாலியையோரம்பினால்மடித்து, வானரராச்சியத்தைச் சுக்கிரீவனுக்குக் கொடுத்தார். அந்தச் சுக்கிரீவனுடைய கட்டளையினாலே அநேக வானரர் சீதையைத் தேடும்பொருட்டுத் திக்கு திக்காய்ச் சென்று ஓரிடத்திலுங் காணாமல்வர், அனுமான் என்னும் வானரன் கடலைத் தாண்டி இலங்கையிற் சீதையைக் கண்டு அச்செய்தி இராமருக்குத் தெரிவிக்க, அநேகமாயிரம் வானரப்படைகளோடு புறப்பட்டுச் சமுத்திரத்தில் அணைகட்டி இலங்கையிற் புகுந்து, இராவணனுடைய சகல சேனைகளையும்-சேனாதிபதிகளையும் - மந்திரிகளையும்-புத்திரரையும் - தம்பியாகிய கும்பகர்னனையும், அந்த இராவணனையுஞ் சங்கரித்து, தேவரும் முனிவரும் புகழ விபீஷணனுக்கு இலங்கா ராஜ்யத்திற் பட்டாபிஷேகஞ் செய்வித்து, சீதையோடு புஷ்பக விமானத்தின்மேற் சகல பரிவாரங்களுஞ் சூழ ஏறி, அயோத்தியா நகரத்தில் வந்து பட்டாபிஷேகம் பெற்று, தேசங்களிலுள்ள ஜனங்களுக்கு ஒரு தீங்கு

மில்லாமல் தருமம் நான்கு பாதங்களினாலும் வளரும்படிக்கு இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். இவ்விதமாய் அந்த ஸ்ரீ ராமமூர்த்தி தேவர்களுக்கும்-ரிஷிகளுக்கும் சகல உலகங்களுக்கும் சவுக்கியத்திற்காகப் பதினாலு வருஷம் தண்டகாரணியத்திலிருந்து ராட்சசர் முதலானவரைச் சங்காரஞ் செய்து, அப்படியே பட்டாபிஷேகம் ஆனபின்பு இலவணாசுரன் முதலான பேர்களைத் தம்பிமாரைக் கொண்டு கொல்வித்து, அனேக அசுவமேதங்களைச் செய்து தருமத்தை நிலைநாட்டினார். இப்படி அவர் செய்த சரித்திரங்கள் எத்தனையோ விருக்கின்றன. அவதாரங்களும் அனந்தமா யிருக்கின்றன.

### ஸ்ரீ கிருஷ்ணவதார மகிமை

அப்பா உதிஷ்டிரா! இந்தப் பகவானுடைய மற்றொரு மனுஷ்யாவதார மகிமை சொல்லுகிறேன் கேள். இதோ எழுந்தருளி யிருக்கும் அவதாரந்தான் ஸ்ரீகிருஷ்ணவதாரமென்று சொல்லப்படும். இவ்வவதாரத்திற்குக் காரண மென்னவெனில், முன்பு கிருதயுகத்திலே விரோசனன்-யமன் - தாரன்-வராகன்-சுவேதன் - லம்பன் - கிசோரன் - சுவர்ப்பானு-அரிஷ்டன்-க்ஷரன் - விப்பிரசித்தி-பிரலம்பன்-விருத்திரன்-சம்பன்-வலன் - நமுசி-காலநேமிமுதலாகிய அசுரருக்கும் இந்திரன்-அக்கினி-யமன்-வருணன்-வாயு-ஏகாதசருத்திரர் - துவாதசாதித்தர் - சப்த மருத்துக்கள்-விசுவதேவர் - அசுவனிதேவர்கள் - சாத்தியர் முதலாகிய தேவர்களுக்கும் யுத்தமுண்டாயிற்று. அது தாரகாம்ய மென்று சொல்லப்பட்டுச் சகல லோகங்களிலுஞ் சகல சாஸ்திரங்களிலும் பிரசித்தமானது. அதற்குச் சமானமாகிய யுத்தம் மூன்றுலகங்களிலுங் கிடையாது. பார்த்தபேர்களுக்கு மாத்திரமே யல்ல, கேட்ட பேர்களுக்கும் மன நடுக்க முண்டாகும். அந்த மகா யுத்தத்தில் இரண்டு கட்சியிலும் அனேகமாயிரம் பேர் கத்தியினால் வெட்டுண்டவரும், ஈட்டியினாற் குத்துண்டவரும், அம்பினால் துளைப்புண்டவரும், காலற்றவர்-கையற்றவர்-மார்பு பிளந்தவர்-தோள்கள் சரிந்தவர்-தலையறுந்தவர்-ஆயுதமொடிந்தவர்-வாகனமற்றவர் இப்படியாக ரணக்களமெல்லாம் மலைமலையாய்ப் பிணங்கள் குவிந்திருக்கவும், உதிர வாறுகளோடவும், மகா பயங்கரமா யிருந்தது.

இவ்வாறு யுத்தம் நடக்கையில் அசுரராலே தேவரெல்லாம் முறிய அடிக்கப்பட்டு ஓடிப்போய், ஸ்ரீ நாராயணனைத் தியானித்தார்கள். இவர்கள் தியானித்த மாத்திரத்திலே கருணைக்கடலாகிய அக்கடவுள் சங்கு-சக்கரம்-தண்டு-வாள்-வில் என்னு மைந்தாயுதங்களுடனே கருடன்மேலேறித் தேவர்களுக்கு முன் தோற்றக் கண்டு, தேவரெல்லாம் பணிந்து வெகு சந்தோஷமடைந்து, அசுரரை லட்சியஞ் செய்யாமல், மீண்டும் அவ்வசுரரோடு போரிடத் தொடங்கினார்கள். அதுகண்ட அசுரர் இவர்களெல்லா மிவனுடைய பலத்தாலன்றோ மறுபடி யுத்தத்திற்கு வந்தார்கள். ஆனபடியினாலே இவனைத்தான் முன்னே கொல்லவேண்டும் என்று வெகு ஆக்குரோஷத்துடனே எதிர்த்து விஷ்ணுவின் பேரில் வெகு ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள். அப்போது இந்திரன் முதலாகிய திக்குப்பாலகர் வெகு உச்சாகமடைந்து எதிர்த்து வந்த அசுரரைப் பறந்தோடும்படி யடித்தார்கள். அதனாலே அவர்கள் தேவருக்கு முன் நிற்கமாட்டாமல் ஓடுவதைக் காலநேமி யென்னும் அசுரத் தலைவன் கண்டு, ஓ அசுரரே! இதென்ன இப்படி யோடுகிறீர்கள்? இந்தத் தேவப் பூச்சிகளுக்குப் பயந்தால் இவ்வளவு நாளாய் நீங்கள் சம்பாதித்திருந்த கீர்த்தியும் பெருமையும் வீணாய்ப் போகுமே, திரும்ப வாருங்கள் நானொருவனே இவர்களையும் இவர்களுக்குப் பலஞ்செய்ய வந்தவனையும், ஒரு நொடியில் இருந்தவிடந் தெரியாமல் அடித்துப் போடுகிறேன். என் சாமர்த்தியத்தைச் சற்றிருந்து பாருங்களென்று கூவியழைத்து, மறுபடியுஞ் சேனைகளைக் கூட்டிக்கொண்டு சண்டைக்குச் சித்தனாகி மகாவிஷ்ணுவுக்கு எதிரில்வந்து நின்றான்.

அவன் எப்படிப்பட்டவ னென்றால், இரும்புமலையு மொருதாக்கிற் பொடியாய்ப் போகத் தகுந்தவலிமையும் அஞ்சனபருவதம் போன்ற தேகமும், சூரியமண்டலம் போன்ற கிரீடங்களைத் தரித்த நூறு சிரங்களும், அனற்பொழியுங் கண்களும், பிறைகள்போன்ற தந்தங்களும், அக்கினிச் சுவாலைபோன்ற நாவும், வெவ்வேறு ஆயுதங்களையேந்திச் சவுரிய லட்சுமிக்குச் சிங்காதனங்களாகி ஆச்சாமரங்கள் போல் விளங்காநின்ற இருநூறு கைகளும் செந்நிறமாய் முள்ளுகள்போ லிரா நின்ற மீசை தாடிகளோடுங் கூடிப் பயங்கரமான வடிவுடையவன், காலினுதையினாற் பூமியையும், தலையின் தாங்குதலினாலே சுவர்க்கத்தை

யும் உடைக்கத்தக்கவன். சூரியசந்திராதிகளைக் கையினுற் பற்றி யெறியத்தக்கவன். பராக்கிரமமே மூர்த்திகரித்ததென்று சொல்லத்தக்கவன். அப்படிப்பட்ட அவன் வெகு கோபத்தினுற் கண்கள் ரத்தக்குமிழிகள்போலாகிப் பிரளயகால மிருத்துவைப்போல வோடிவந்து, பெருங்காற்றுனது செத்தைகளைத் தூக்கி யெறிவதுபோல் இந்திரர்தி சகல தேவர்களையும் விளையாட்டாய்த் தூக்கியெறிந்து திக்கு திக்காய்ப் பறக்கச்செய்து, தோள்தட்டிச் சிங்கம்போலார்த்து, விஷ்ணு வெங்கேயிருக்கிறுனென்று ஆரவாரித்துக்கொண்டேயோடிவந்து, அந் நாராயண மூர்த்தியோடு யுத்தஞ்செய்ய வாரம்பித்துத் தனது இருநூறு கைகளிலிருக்கு மாயுதங்களினுலே தன் பலமுள்ளமட்டும் அடித்தான். அப்போதே விப்பிரசித்தி முதலாகிய சகல அசுரத் தலைவருந் தங்கள் தங்கள் சக்தியுள்ளமட்டும் ஆயுதங்களினு லடித்தார்கள். இவ்வளவு அடிபட்டும் விஷ்ணுவானவர் ஒரு மகா பருவதமானது மேகங்க ளெவ்வளவு மழை பொழிந்தாலும் அதனுல் ஒரு தீங்கு மடையாததுபோல் ஓர் வுபத்திரவமுமன்றிச் சிரித்துக் கொண்டே நிற்க, அதுகண்ட காலநேமி வெகு அகங்காரமடைந்து பொற்பட்டங்கள் கட்டி மேரு பருவதத்திற்குச் சமானமாகிய பலமும் ரூபமுமுள்ள ஓர் கதாயுதத்தை இருநூறு கைகளினுலும் பற்றிச் சுழற்றிக் கருடன் மார்பிலும் விஷ்ணுவின் மார்பிலும் அடித்தான்.

அந்த அடியானது மலையின்மேல் மற்றொரு மலை விழுந்ததுபோலும், கோடை காலத்தில் இடி விழுவதுபோலும், யாவரு டைய மனங்களும் நடுநடுங்கும்படி கிடுகிடென்றிரைச்சலோடும் வீழ்ந்தது. இதனுலும் அந்தத் தேவன் எவ்வளவேனும் வுபத்திரவமடையாமல் அசைவற்று நின்றுர். ஆனுல், அந்த அடியினுலே கருடனுக்குக் கொஞ்சம் வருத்தமுண்டாக, அதை அவர் நோக்கி வெகு கோபமடைந்து, பிரளயகால சூரியன் போற் பிரகாசித்துக்கொண்டு ஆயிரம் அரங்களோடு கூடியிராநின்ற சுதரிசனமென்னுந் தமது சக்கரத்தைப் பிரயோகஞ் செய்து, அந் தக் காலநேமியினுடைய இருநூறு கைகளையும், நூறு தலைகளையும், அவனேடு கூடவந்த அசுரருடைய தலைகளையும் அறுத்துத்தள்ளிப் போட்டார். ஆனுல், அப்போது தலையறுப் புண்ணுதவர்கள் மூவரே. அவர் யாரென்றுல்; விரோசனன்-மயன் - சுவர்ப்பானு இம்மூவர் தாீன். இப்படி இவர் சத்துருக்களைத் தம்சஞ் செய்து, தேவர்களை முன்போல் அவரவர் பதிகளிலேயே நிலைநிறுத்திச் சகல லோகங்களுக்கும் க்ஷேமத்தை யுண்டுபண்ணி, யாவரும் பூசிக்கப் பிரமலோக மெழுந்தருளி, தமது கோயிற் புகுந்து பாம்பணைமேற் கண்வளர்ந்துகொண் டிருந்தார். இப்படி கிருதயுக ஆதியிற் படுத்துக்கொண்டவர் துவாபரயுகத்தின் கடைசியில் தேவர்களும் யோகிகளும் திருப்பள்ளியெழுப்ப வெழுந்திருந்தார். அதுவரையிலும் ஆகிய வருஷங்கள் முப்பத்தாறு லட்சங்களாயின.

இவ்வாறு நித்திரையில் நின்று மெழுந்திருந்து, மகாமேரு பருவதத்தி லிராநின்ற ஒரு தேவலோகத்திற்கு எழுந்தருளி லோக க்ஷேமத்தை விசாரிக்கிற நிமித்தம் அங்குள்ள தேவசபைக்கு வந்தார். மற்றும் பிரமன் முதலாகிய தேவர்களும் அச்சபைக்கு வந்து சேர்ந்தார்கள். இப்படி யிருக்குமளவில் பூமிதேவியானவள் கண்களில் தாரை தாரையாய் நீர் வடிய அந்தச் சபைக்குவந்து தேவர்களையும் அத்தேவர் நடுவில் மகாவிஷ்ணுவையுங் கண்டு பணிந்து, சுவாமி லோகநாதா! பூமியில் அசுரரெல்லாம் ராசாக்களாய்ப் பிறந்து அனேகஞ் சேனைகளைக் கூட்டிக்கொண்டு, தரும விரோதிகளாய் நிறைந்திருக்கிறுர்கள். அதனுலே எனக்குப் பாரமதிகமாகி, மிகவும் வருத்தமுண்டா யிருக்கின்றது. ஆதலால், அவர்களைச் சங்காரஞ் செய்து என் வருத்தத்தைத் தீர்க்க வேண்டுமென்று சொல்ல, அது கேட்ட பகவானுனவர் தாம் பூமியில் மனிதனுய் அவதரிக்க வேண்டுமென்று நினைத்து, அப்படியே யவதரித்தார். முன்னிவராற் கொல்லப்பட்ட காலநேமி முதலான பேர்கள் தான் கம்சன் முதலான பேர்களாய்ப் பிறந்தார்கள். இவர்களைச் சங்கரிக்கிறதற்காக இந்தக் கிருஷ்ணுவதார மெடுத்தார். அதன்படி துஷ்டரைச் சங்கரித்துப் பூமிபாரம் நீக்கி வருகிறுர். இதற்கப்பால் கல்கி யென்று ஒரு அவதாரஞ் செய்யப்போகிறுர் என்று சொல்லிய வார்த்தைகளைக் கேட்ட தருமபுத்திரர் வீஷ்மரைப் பார்த்து, சுவாமீ! இந்த அவதாரத்திற் புண்ணிய சரித்திரங்களை ஆதிமுதற் சவிஸ்தாரமாகச் சொல்லவேண்டு மென்று சொல்ல, வீஷ்மர் மறுபடியுஞ் சொல்லுகிறுர்:

கேளப்பா தருமபுத்திரா! அந்த லோக நாதராகிய நாராயணமூர்த்தி தாம் நினைத்த படியே நல்ல காலத்தில் சகல தேவர்களும் ஆகாசத்தில் கீத வாத்தியங்கள் முழங்கிப் புஷ்பவருஷம் வருஷித்துத் துதிக்க, யயாதி வமிசதிலகனாகிய வசுதேவனுக்குத் தேவகீ தேவியின் வயிற்றிற் அவதரித்தார். முன்னமே இவருடைய கட்டளையினாலே சகல தேவர்களும் அப்சரசுகளும் யாதவாளாகவும் கோபாலாளாகவும் பிறந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்த மாத்திரத்தில் நந்தகோபனுடைய மனையை யடைந்து வெகு சிறப்பாய் வளருங்காலத்திலே ஒருநாள் அசோதை ஸ்ரீ கிருஷ்ணனைத் தொட்டிலில் விட்டு வேறு காரியத்தி லிருந்தாள். அப்போது அந்தத் தொட்டிலின் சமீபத்தில் ஒரு சகட மிருந்தது. அதில் ஓர் அசுரன் பிரவேசித்து ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்லச் சமயம் பார்த்துக்கொண் டிருந்தான். அது தெரிந்த பகவான் கால்களை யுதைத்துக்கொண் டழும் போது அந்தத் திருவடி தாக்கி அச்சகடமுடைய அதிற் பிரவேசித்திருந்த அசுரன் சொரூபத்தோடு மரித்துப் பூமியில் விழுந்திருக்கக் கண்டு யாவரும் ஆச்சரியப்பட்டார்கள். மற்றொரு நாள் பூதனை யென்பவள் ஒரு ராட்சசி தாய் வடிவமாய் வந்து ஸ்ரீ கிருஷ்ணனைப் பரிவோடு முலைகொடுக்க வெடுக்கின்றவள்போ லெடுக்க, அக்கருத்தறிந்த கண்ணன் முலைப்பாலோடு அவள் உயிர்களையு முண்ண, அவள் மரித்துத் தனது நிசரூபத்தோடு பிசாசுபோல் பூமியில் விழக்கண்டு, அசோதை முதலான பேர்கள் ஆச்சரிய மடைந்து கிருஷ்ணனை எடுத்துக் காப்பிட்டார்கள். இன்னுஞ் சில காலத்திற்குப்பின் ஸ்ரீ கிருஷ்ணனும் பலராமனுங் கூடித் தவழ்ந்துகொண்டே ஆச்சியர் தயிர் கடையு மிடங்களுக்குப் போய்த் தயிர் பால் முதலானதுகளை வாங்கிப் புசிக்கிறதும், கன்றுகள் பசுக்கள் இவைகளின் பின்னாலோடுகிறதுமாகப் பலவிதக் குழந்தை செய்கைகளைச் செய்து, யாவருக்கும் பரமானந்தத்தை யுண்டாக்கி வந்தார்கள். ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு ஆய்ச்சி மனைக்குச் சென்று, அவளில்லாம லிருக்க அங்கிருந்த தயிர் வெண்ணெய்களைத் திருடித் தின்று, மிகுந்தவைப் பூனைக்குங் குரங்குக்குங் கொடுத்துக்கொண் டிருக்கையில், அந்தக் கோபிகை கண்டு அச்சேதி அசோதைக்குச் சொல்ல, தினம் இவ்வாறாகவே கோபியரிடும் முறைகளைக் கேட்கச் சகியாமற் கண்ணனைப் பிடித்து ஒருரலிற் கயிற்றினாற் கட்டித் தான் வேறு காரியத்தி லிருக்க, கண்ணன் அந்த உரலை யிழுத்துக்கொண்டே வாசலி லிரானின்ற இரட்டை மருதமரங்களின் நடுவே நுழைய, அம்மரங்க ளிரண்டும் முறிந்து நளகூபர மணிக்கிரீவ னென்கிற இயக்கராகிக் கண்ணனைத் துதித்துப் பணிந்து செல்ல, அதைப் பார்த்துக் கோபாலர் முதலாகிய பேர்களெல்லாம் வெகு வியப்படைந்தார்கள்.

இப்படிக்குப் பால லீலைகள் எத்தனையோ உண்டு. ஒவ்வொன்றும் மிக வற்புதமா யிருக்கும். பின்பு கன்று மேய்க்கும் வயது வந்தவுடனே அனேகம் ஆயர் மக்களோடுங் கன்றுகளை யோட்டிக்கொண்டு போய் மேய்த்துத் தண்ணீர் குடிப்பித்துச் சாயங்காலத்திலே வீடு கொணர்ந்து சேர்த்துக்கொண் டிருப்பர். ஒருநாள் அப்படியே காகபக்ஷங்கள் தலையி னிருபுறங்களிலும் விளங்க, நெற்றியிற் கஸ்தூரி திலகம் பிரகாசிக்க, மயிற்றோகையினாற் கட்டப்பட்ட செண்டுகள் சிரத்திலுங் காதிலு மிலங்க, அரையிற் பீதாம்பரமும் கையிற் புள்ளாங்குழலும் பிரம்பும் தோளில் தயிர்ச்சோற்றின் சிக்கமும் விளங்க, தோழரோடுகூட விநோதமாய் விளையாடிக்கொண்டு, யமுனையாற்றின் கரைக்குப்போய்க் கன்றுகளை மடக்கி மேயவிட்டு, பிள்ளைகளோடுகூட சிலநேரம் படுத்துக்கொள்ளுகிறதும் சிலநேரம் உலாத்துகிறதுமாகப் பல லீலைகளையுஞ் செய்து, அவ்வாற்றின் கரையி லிரானின்ற பாண்டீரமென்னும் ஓர் ஆலமரத்தினிழலில் விளையாட நினைத்து, அங்கே போய் சில பிள்ளைகள் பாட, சிலராட, சிலர் தாளங்கொட்ட, சிலர் உபசாரஞ் செய்ய, தான் ராஜாவைப்போலிருந்து விளையாடினார். இப்படியே தினந்தோறும் விளையாடிக்கொண் டிருக்கையில், ஒருநாள் நிபவனமென்னுமிடத்தில் விளையாடிக்கொண்டிருந்து அந்த யமுனையினுடைய ஓர் மடுவிலே காளியனென்கின்ற கொடிய சர்ப்ப மிருப்பதினாலே அந்தவிடத்து நீர் யாவருக்கும் உபயோகமில்லாமற் போனதுந் தவிர உபத்திரவகரமா யிருப்பதைக் கண்டு, அந்தப் பாம்பை துரத்த வேண்டுமென்று மனதில் நினைத்து, அதிற் குதித்து அப்பாம்பைப் பிடித்து அதின் தலைமேற் கூத்தாடி அந்த நாகராசனுடைய பத்தினிகள் துதித்ததினாலே அவனை உயிரோடு விட்டு, அவனை அவ்வாற்றைவிட்டு அப்பாற்

போகும்படி கட்டளையிட்டு நீரைப் பரிசுத்த மாக்கினார்.

ஒருநாள் கன்றுபோல்வந்த ஓர்சுரனைப் பிடித்து விளாமரத்திற் சாடி, உதிர்ந்த விளவின் கனிகளைத் தோழரோடுகூடப் புசித்தார். ஒரு பனங்காட்டிற் கழுதை வடிவங்கொண்டிருந்த தேனுகனென்னு மசுரனையும் அவன் பரிவாரங்களையும் எளிதிற் கொன்று மிகவும் ருசியுள்ள பனம் பழங்களைத் தனது தோழருக்குக் கொடுத்து மனத்திருப்தி செய்வித்துத் தானும் புசித்தார். இதுவுமன்றி, விளையாட்டில் நடத்திய வேடிக்கைக ளெத்தனையோ விசித்திரமா யிருக்கின்றன. என்னாற் சொல்லத்தரமில்லை. கொஞ்சங் கொஞ்சஞ் சுருக்கமாகச் சொன்னேன். இன்னுஞ் சொல்லுகிறேன் கேள்: ஒருநாள் கோபாலரெல்லாம் வழக்கப்படி இந்திரனைக் குறித்துச் செய்யும் பூசனைக்கு யத்தினப்பட, அதைத் தடுத்துக் கோவர்த்தன மலைக்குச் செய்யும்படி போதித்து அந்தப்படி யவர்கள் செய்யும்போது தாம் தமது சுற்றத்தாரோடுங்கூட இருந்துகொண்டே பருவதத்திலும் ஒரு தேவரூபியாகி, கோவலர் படைக்கும் அன்னங்களை வாங்கிப் புசித்து, அவர்களுக்குத் தான் சொன்ன பேச்சில் நம்பிக்கை வரச்செய்தார். இப்படியிருக்க, இந்திரன் தனக்குப் பூசை கிடையாமையால் மிகுந்த கோபமடைந்து, சப்த மேகங்களையுங் கொண்டு பெருங்காற்றோடுஞ் சிலைகளோடுங் கூடிய மழை பொழிவித்து ஆயர்சேரியை யல்லோல கல்லோலமாக்க, பசுக்களும் ஆயர்களும் பயந்து மனங்கலங்கி, உடல் சிதைந்து, நிற்கவிடமில்லாமல் தத்தளித்துக் கோவென்று கதறிக்கொண்டு, ஓ கிருஷ்ணா! நீயே காக்கவேண்டுமென்று சரணமடைய, அதுகண்ட அடியார்க்கெளியவனாகிய சுவாமி அந்த கோவர்த்தன பருவதத்தை ஒரு கையாலெடுத்துக் குடைபோற்றாங்கி, அதின் கீழ் கோக்களையுங் கோபாலரையும் இருக்கச்செய்து ஓர் குறைவின்றி காத்தருளினார். இவ்வாறு ஏழுநாள் வருஷித்துங் கிருஷ்ணன் மலைக்குடையின் கீழ் வைத்தளித்தபடியினாலே அவ்விடையருக்கு ஒரு குறைவுமில்லாமை கண்ட இந்திரன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமைக்குப் பயப்பட்டு, பூமியி லிறங்கிவந்து அவர் பாதங்களைத் தொழுது, தன் பிழை பொறுக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, சகல கோக்களுக்கும் நாயகனென்படியினாலே கோவிந்தனென்னுந் திருநாமத்தைச் சாத்தி விடைபெற்று, தன் பதியாகிய அமராவதி லோகம் போய்ச் சேர்ந்தான்.

பின்பு விருஷபரூபமாய் வந்த ஓர் அசுரனையும் குதிரைரூபமாய் வந்த கேசியென்னு மசுரனையும் கணப்பொழுதிலே சங்கரித்துப் போட்டார். இவைகளை யெல்லாங் கேள்வியுற்ற கம்சன் பலராமனையுங் கிருஷ்ணனையு மழைத்துக்கொண்டு வரும்படி அக்குரூரனென்பவனையனுப்ப, அவனோடு கிருஷ்ணன் தமயனுடன் கூடித் தேர்மேலேறி மதுரைக்கு வந்து, நல்ல வஸ்திரம் - மாலை - சந்தனம் - இவைகளைத் தரித்து வில்லை முறித்து, கம்சனால் வாசலில் தந்திரமாய் வைக்கப்பட்டிருந்த குவலயாபீடமென்கிற யானையைத் தந்தத்தைப் பிடுங்கி அதனால் அதனைச் சாகச்செய்து, அதின் பாகனையுங்கொன்று,சபையிற் சென்று, முட்டிகன்-சாணூரன் என்னு மல்லரைக் கைப்போரினால் முடித்து, அந்தக் கஞ்சனையும் அவன் தம்பிமார்களையும் எளிதிலே தானே சங்கரித்து, உக்கிரசேனனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து, தமது தாய் தந்தையரை பணிந்து உபநயன முதலாகியவைகளைப் பெற்று யாதவரெல்லாம் போற்ற விளங்கினார். பின்பு அவந்தி தேசத்திற் சென்று சாந்தீபினி யென்னு மாசாரியரிடத்தில் அறுபத்து நான்கு வித்தைகளையும் நன்றாய்க் கற்று, முடிவிற் குருவைப் பணிந்து தக்ஷிணை யாதுவேண்டு மென்ன, அவ்வாசாரியன் வெகு காலத்திற்குமுன் கடலில் விழுந்திறந்துபோன தனது புத்திரனைக் கொணர்ந்து தரவேண்டுமென்று சொல்லக் கேட்டு, அப்படியே அந்தப் புத்திரனைக் கொணர்ந்து கொடுக்க, அவர் இவரைத் தெய்வமென்றெண்ணி அளவில்லா வானந்த மடைந்தார். கேட்டாயோ தருமபுத்திரா! காலநெமியனுடைய அம்சத்தினாற் பிறந்து அரசரெல்லாம் நடுங்கும்படியாகிய பராக்கிரமத்தோடு கூடி வெகு சேனைபல முடையவனாகிய கம்சனையும் மற்று மனேகரையுஞ் சங்காரஞ்செய்து உலகங்களுக்கு நன்மை புரிந்து வருமளவில், ஜராசந்தனோடு யுத்தம் நேரிட்டது. அந்த யுத்தத்தில் அவன் சேனைகளை வெகுவாய் மடித்து அவனையும் அவமானஞ்செய்து, ஒரு காரணத்தால் மதுராபுரியை விட்டுத் துவாரகாபுரியில் வாசஞ்செய்து, அவ்விடத்திலும் வெகு அற்புதச் செய்கைகளும் துஷ்ட சங்

காரமும் நடத்திக்கொண் டிருக்கிறார். அதில் முக்கியமானவைகளைச் சொல்லுகிறேன் கேள்:

### நரகாசுரன் வதை

சமுத்திர மத்தியிற் பிராக்சோதிட மென்றொரு பட்டணத்தில், நரகாசுரனென்று ஒரு அசுர னிருந்தான். அவன் யாரென்றால், பூர்வத்தில் இந்த மகாவிஷ்ணு வராகாவதாரஞ் செய்தபோது பூமிதேவியினிடத்திற் பிறந்தவன். ஒப்பற்ற சௌரிய தயிரியங்களுடையவன். அளவற்ற சேனைகளுடையவன். அவனுடைய சாமர்த்தியம் நாமெல்லாஞ் சொல்லி முடியாது. அவனுக்கு அயக்கிரீவன் - பஞ்சசனன்-நிசும்பன் - முரன் என்று நான்கு மந்திரிக ளிருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருத்தனாகவே லோகங்களை விழுங்கத்தக்கவர்கள். இப்படிப்பட்ட பலங்களுடையவனாகி உலகத்தில் முனிவர்களைப் பிடித்து அடிக்கிறதும், அக்கினிக் குண்டங்களை இடிக்கிறதும், யாகங்களைக் கெடுக்கிறதும், ஜொலித்துக்கொண் டிருக்கிற ஓமாக்கினியை அவிக்கிறதும், இவ்வாறு வெகு உபத்திரவங்களைச் செய்துகொண்டிருந்தான். அன்றியும், சுவர்க்கலோகத்தில் துவஷ்டா வென்பவனுக்குக் கசேரு வென்றொரு பெண் மிக அழகுடையவளாய் இருந்தாள். அவளை இவன் மதயானை ரூபத்தோடு போய்த் தூக்கிக்கொண்டு வந்து, அவளுக்கு மூவுலகங்களிலுமிருக்கும் உத்தம வஸ்துக்களைக் கொணர்ந்து தருகிறேனென்று பிரதிக்கினை செய்து கலியாணஞ் செய்துகொண்டான். அதற்காக சகல லோகங்களையுங் கொள்ளையடித்துத் தும்சஞ்செய்தான். அல்லாமலும், அநேகஇராஜகன்னிகைகள் - தேவகன்னிகைகள் - யக்ஷகன்னிகைகள் - வித்தியாதரகன்னிகைகள் - நாககன்னிகைகள் இப்படி பதினாயிரத்தொருநூறு கன்னிகைகளைப் பிடித்துக்கொண்டு வந்து, இந்திரனுடைய கிரீடாபருவதமாகிய மணிகூடமென்கிற ரத்தினபருவதத்தை வலுவிற்கவர்ந்து, அதிற் சிறைவைத்து, தன் மந்திரியாகிய முரனென்பவனுடைய குமாரர் பதின்மரையுங் காவலாக வைத்தான்.

இதுவுமல்லாமல், ஒரு காலத்திற் சுவர்க்கத்திற்குப் போய், இந்திரனுடைய தாயாராகிய அதிதி யென்பவளுடைய காதில் அணிந்திருந்த திவ்ய குண்டலங்களைப் பிடுங்கிக் கொண்டுவந்தான். இப்படிப்பட்ட அக்கிரமங்களைச் சகிக்கமாட்டாமல் தேவேந்திரன் நாரதரோடு சொல்லி யனுப்ப, அது கேட்ட இக்கண்ணன் ஆம் இவனைச் சங்கரிக்கவேண்டுமென்று நினைத்துப் பலராமன் முதலாகிய யாதவர்களைப் பின்னாலே வரச்சொல்லிப் போட்டு, தாம் முன்னே கருடன்மேற் சத்தியபாமையுடனே அந்த நகரத்திற்குச் சமீபத்திற் செல்ல, அங்கே பட்டணத்தைச் சுற்றி முரனென்பவன் சூரிக்கத்தி போன்ற முனைகளையுடைய சக்கரங்களாலே நிறைந்திருக்கிற ஆயிரம் பாசங்களை வலைபோற் சுற்றிவைத்திருப்பதைக்கண்டு, தமது சக்கரத்தினா லவைகளை யறுத்து உள்ளே பிரவேசித்து, வெகு சேனைகளெதிர்த்த முரனையுஞ் சக்கரத்தினாலே மூலத் தும்சஞ் செய்து, அப்பாலிருந்த மலைக்கோட்டையி னிடத்திற் சென்று, தனது கவுமோதகி யென்னுங் கதையினாலே அதை இடித்துப் பொடிசெய்து, அதிலிருந்த நிசும்பனென்கிறவனையும் அவன் சேனைகளையுஞ் சாம்பராக்கிப் பின்பு பஞ்சசனன் - அயக்ரீவன் - விருபாக்ஷன் என்னும் வீரரோடு வெகுவாக யுத்தஞ் செய்து சங்கரித்து, அப்பாற் பாதாளத்திற் சென்று சூரியன்போல ஒளி பொருந்திய நரகாசுரனைக் கண்டு யுத்தத்திற்கு ஆரம்பித்து, அவனுடன் கூடிவந்த மகா பல பராக்கிரமசாலிகளான எட்டு லட்சம் அசுரரையும் ஒருவனுடைய தாக்குதலால் மற்றொருவன் அங்கஞ் சிதைந்து மடியும்படியாய்ச் சார்ங்கமென்னும் வில்லில் அம்புகளைத் தொடுத்து எய்து நாசம்பண்ணி, மூர்த்திகரித்த கோபாக்கினிபோற் சொலிக்கானின்ற நகரனோடு நெடுநேரஞ் சண்டை செய்து, முடிவிற் சக்கரத்தைப் பிரயோகித்து அவன் தலையைச் சகலருந் துதிக்கும்படியாகத் துணித்துத் தள்ளினார்.

இவ்வாறு ஜெகத்திற்குக் கண்டகனாகிய நரகாசுரனைச் சங்கரிக்கவே தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்துத் துந்துபி வாத்தியங்களடித்தார்கள். பூமிதேவியானவள் உடனே அதிதியினுடைய அந்தக் குண்டலங்களைக் கைக்கொண்டுவந்து கிருஷ்ணனைப் பணிந்து, சுவாமி! தேவரீர் அனுக்கிரகத்தினாலே பிறந்தவனைத் தேவரீரே சங்கரித்தது எனக்கு துக்கத்திற் கேதுவா யிருக்கிறதென்று சொல்லக் கேட்டு, ஓ பூமிதேவீ! நீ துஷ்டராலே எனக்கு மிகுந்த பாரமுண்டா யிருக்கிறதென்று சொல்லி, இப்போது இப்படி சொல்லுகிறது மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறது. இந்த தரகனோ உலகங்களுக் கெல்லாம் உயிர்க்கழுவா

யிருக்கிறான். அதனாலே அவனைச் சங்கரித்தே னென்று சமாதானஞ்சொல்லி நிற்குமளவில் ஆகாசத்திலிருந்து இந்திரன் சகல தேவ பரி சனங்களுடனே இறங்கி வந்து, ஸ்ரீகிருஷ்ண னைக் கண்டு வெகுவாய்த் துதித்துக்கொண் டாட, ஸ்ரீகிருஷ்ணன் அந்தக் குண்டலங்களை இந்திரன் கையிற் கொடுத்து அதிதிக்குக் கொடுக்கும்படி சொல்ல, இந்திரன் வெகு சந் தோஷத்தை யடைந்து, அந்த நரகனுடைய மாளிகையைப் பார்க்க ஸ்ரீ கிருஷ்ணனுடனே கூடப் போனான். கண்ணன் அந்த வீட்டில் நுழைந்து பார்க்குமளவில், நவரத்தின ராசி கள் முதலான அளவற்ற சம்பத்துக்களைக் கண்டு வெகு வியப்படைந்தார். ஏனென்றால், அப்படிப்பட்ட சம்பத்து குபேரனிடத்திலும் இல்லை. மூவுலகங்களுக்கும் அதிபதியாகிய தேவராஜனிடத்திலும் இல்லை. அவைகள் அங்கங்கே இருந்த உத்தம வஸ்துக்களாகக் கொண்டுவந்து சேர்த்ததன்றோ. அவைகளைப் பார்த்த இந்திரனும் கிருஷ்ணனோடு சொல்லு கிறான்:

ஓ ஸ்ரீ கிருஷ்ணா! நீர் பகவானாகையால், இந்த நரகாசுரனைச் சங்கரித்தீரே யல்லது, மற்றொருவருக்குச் சாத்தியமன்று. இதோ பாரும் இவ்விடத்தில் எங்குமிராத விலையில்லா மாணிக்கங்களால் செய்யப்பட்ட திவ்வியா பரணங்கள் எத்தனைவிதம் இருக்கின்றன. திவ்வியமாகிய கட்டில்கள் மெத்தைகளோடு வச்சிர வைரேய கோமேதக புஷ்பராகங்களி னால் இயற்றிய திவ்விய ஹாரங்களும் பாத் திரங்களும் இருக்கின்றன. இன்னும் ஆசனங் கள் இருக்கின்றன. மேலும், திவ்விய வஸ் திரங்கள் வெகு மழமழப்பும் பளபளப்பும் உள்ள கம்பளங்கள் - ஆயுதங்கள் இஷ்டமான படிக்குப் பாடத்தக்கவைகளும், பேசத்தக்கவை களுமாய் விசித்திரமாகிய அன்னங்களோடு கூடிய பலவித பக்ஷிகள் வினோதமாயிரானின்ற மான் முதலிய சில மிருகங்கள் இன்னுமநேக வஸ்துக்களும் இருக்கின்றனவே. இவை எல் லாம் உமக்கே தகும். ஆதலால், இவைகளைத் துவாரகைக்கு அனுப்புவிக்கிறேன். அங்கீ கரிக்க வேண்டுமென்று சொல்லிப் பிரார்த் தித்து, அவைகளையெல்லாம் அனுப்பிக் கரு டன்மீதில் அந்த மணிகூடமென்னும் பருவ தத்தையும் ஏற்றினான்.

கேளப்பா தருமநந்தனா! அந்தக் கருடன் மேல் அம்மணிகூடம் அடங்கியதுமன்றி, ஸ்ரீ கிருஷ்ணன் சத்தியபாமையுடனே உட் காருவதற்கான விசாலமாகிய இடமும் உண்டா யிருந்தது. அப்படிப்பட்ட மகா சத்தி சாமர்த் தியங்களுடைய கருடன் இவருக்கு வாகன மாய் இருந்தால், இவர் நாராயணமூர்த்தி என்பதற்குச் சந்தேகமென்ன?

இவ்விதமாய்ச் சகல சம்பத்துக்களையுங் கருடனமீதி லேற்றிக்கொண்டு, தாமும் உட் கார்ந்து சத்தியபாமாவை மடியில் வைத்துக் கொண்டு, கந்திருவர்பாட - அரம்பையராட - தேவசித்த சாரணாதியர்கள் ஜயஜயவென்று துதிக்க வெகு விபவத்தோடுந் துவாரகைக்கு வந்து, அந்தச் செல்வங்களை யெல்லாம் உக் கிரசேனனுக்கு ஒப்புவித்து, விந்தையான மணிகூட பருவதத்தை உருக்குமணியின் மனை யிற் கொண்டுபோய் வைக்கும்படி கருடனுக் குக் கட்டளையிட்டு, பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் அந்தப்புரத்திற்கு வந்து பருவதத்தைப் பார் த்து, அதில் உருக்குமணியோடுகூட ஏறினார். அந்தப் பருவத மெப்படி யிருந்ததென்றால், தங்கத்தினாலும் வெள்ளியினாலுஞ் செய்த சில தாழ்வரைகளோடு கூடியதாய், மகா அற் புதமாய் கற்பகங்களுக்கு நிகராய், வெகு காந் திகள் பொருந்திய சோலைகளுடைத்தாய், நவரத்தினமயமான அனேகம் வீடுகளும் பவ ழங்களா லியற்றிய படிக்கட்டு வரிசைகளு முள்ளதாய்ச் சொல்லத்தர மில்லாத வேடிக் கைகளோடுங் கூடி அநேக கோடி சூரியப்பிர காசம் பொருந்தி யிருந்தது. அதைக் கண்டு வெகு சந்தோஷத்தோடு அதன்மேலேறிச் சுற்றிப் பார்த்தார். அப்போது அதிற் சிறை யாய் வைக்கப்பட்டிருந்த கன்னிகைகளெல் லாங் கோடி மன்மத சுந்தரனாய் விளங்கா னின்ற ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்க்க அந்த மாளிகைகளி லிருந்து வெளியிலே வந்து, இவ்வளவுநாள் வருத்தப்பட்டபடியினாலே மெலிந்திருந்த மேனியெல்லாம் பருத்து விளங்கவும் தனங்கள் பூரிக்கவும் புளகமரும்ப வும் காவித்துகில்களைக் களைந்து வெண்பட் டுடைகளை யுடுத்திக்கொண்டு, காளமேகம் போற் கறுத்த திருமேனியையுடைய கண்ண னைக் கைகூப்பிக் கும்பிட்டு இதனைப் பேசுவ தாயினர்.

சுவாமி! எங்களுடைய மகா பாக்கியத்தி னால் தேவரீர் அவதரித்து மீளச் சிறைமீட் டருளினீர். நாங்கள் செய்த பெருந் தவத்தி னாலே கண்களிக்கத் தேவரீர் திருமேனி தரிச

னங் கிடைத்தது. முன்னமே நாரதமகாமுனி
எங்களுக்குச் சொல்லி யிருந்தார். அதென்ன
வென்றால், அந்த மகாமுனியை நாங்கள்
தெண்டனிட்டு, ஓ முனிவரே! எங்களுக்கு இச்
சிறை எப்போது நீங்குமோ அதை யருளிச்
செய்ய வேண்டுமென்று கேட்க, அதற்கவர்,
ஓ பெண்களே! ஸ்ரீ நாராயணன் அம்சமாகிய
கிருஷ்ணமூர்த்தி முரன்-அயக்கிரீவன் முதலா
னோரைச் சம்ஹாரஞ் செய்து, உங்கள் சிறை
யை மீட்டு உங்களைக் கலியாணஞ் செய்யப்
போகிறார் என்று அவர் சொன்னபடி எதிர்
பார்த்துக் கொண்டிருந்த எங்களுடைய
கோரிக்கை இன்றுதான் நிறைவேறிற்று. ஆத
லால், அடியேங்களிடத்திற் கிருபைசெய்து
எங்களை மணஞ்செய்து ரக்ஷிக்கவேண்டு
மென்ன, அது கேட்ட சுவாமியானவர் வெகு
சந்தோஷ மடைந்து, அப்படியே யென்று
அங்கீகரித்து மணஞ் செய்துகொண்டார்.
இப்படி சொல்லாநின்ற வீஷ்மரைத் தரும
புத்திரர் பார்த்து, சுவாமீ பிதாமகரே! இந்த
ஸ்ரீ கிருஷ்ணபகவான் அந்த ஸ்திரீகளை
யேன் கொணர்ந்தார்? அந்தக் கருடன்மீதில்
யானை குதிரை முதலானதுகளையும் இந்த
ஸ்திரீகளையும் ஏற்றலாமோ? இதுகளுக்கெல்
லாம் சமாதானஞ் சொல்லவேண்டு மென்று
கேட்க, வீஷ்மர் சொல்லுகிறார்: கேளப்பா
தருமபுத்திரா! அனேகமான திவ்ய வஸ்துக்
களையெல்லாம் யானை குதிரை ஒட்டகங்களின்
மீதிலேற்றி, அவைகளைக் காலாட் சேனை
களின் வசமாகத் துவாரகைக்கு அனுப்பிவித்
து, பின்பு மணிகூட பருவதத்தைப் பார்க்க
எறுமளவில் அதில் நரகாசுரன் தான் கலியா
ணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று
கொண்டுவந்து சிறையில் வைக்கப்பட்டிருந்த
பெண்களெல்லாஞ் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்தா
வாகும்படி கோரியபடியினாலே, பக்த பரா
தீனராகிய அவர் அவர் அப்படியே வாக்குத்
தத்தஞ் செய்தார். ஆனபடியினாலே, அந்தப்
பெண்களைப் பகவானுடைய பத்தினிகளெ
ன்று கருடன் சுமந்தார். நல்லது நரகாசுரன்
அவர்களை இதுவரையில் கலியாணஞ் செய்
யாதிருந்த காரணமென்னவென்று கேட்டால்,
அவன் இவர்கள் மனம் சம்மதிக்கக் காத்தி
ருந்தான். அவர்களோ நாரதர் சொல்லிய
உறுதியினால் ஸ்ரீகிருஷ்ணன் வரும் காலத்தை
எதிர் பார்த்துக்கொண்டு சம்மதிக்கா திருந்
தார்கள். அதனாலேதான் அந்த ஸ்திரீகளைக்
கிருஷ்ணன் விவாகஞ் செய்துகொண்டார்.
இப்படிக்கு அந்த ஸ்திரீகளோடு மணிகூடத்
தைக் கருடன்மேல் ஏற்றிக்கொண்டு சுவர்க்க
லோகம்போய் அதிதியைப் பணிய, அவள்
வெகு ஆசிகள் கூறி, தனியே சத்தியபாமைக்
கும் நீ யென்றும் மூப்படையாமல் இருக்கக்
கடவையென்று ஆசி கூறினாள். இந்திராணி
யும் சத்தியபாமையை அழைப்பித்து, வெகு
பூஷண வஸ்திர முதலானவைகளைக் கொடுத்
தாள்.

## துவாரகாபுரிச் சிறப்பு

இந்தப்படி தேவலோகத்தில் ஸ்ரீ கிருஷ்
ணனானவர் தானும் சத்தியபாமையுமாய்
வெகு சிறப்பு பெற்றுத் துவாரகா புரியைச்
சுற்றிப் பார்த்து, அதின் சீர்மையைக் கண்டு
தானே வெகு ஆச்சரியமும் சந்தோஷமும்
அடைந்தார். அந்தப் பட்டணம் அப்படிப்
பட்ட அழகாகிய தன்மையோடிருந்தது. அஃ
தெப்படியெனில், கைலாச பருவதம்போலிரா
நின்ற உன்னதமாகிய மாளிகைகளால் வரிசை
வரிசையாய் அலங்கரிக்கப்பட்டு வெகு அழ
காகியும் விசாலமாகியுமிராநின்ற வீதிகளோடு
உயர்ந்த மதில்களாற் சூழப்பட்டு, மிகுந்த
ஆழமுள்ள அகழிகளாலும் வளைக்கப்பட்டு,
கடல்சூழ்ந்த பூலோகம்போல விளங்குகிறது.
அன்றியும், அது தூரத்திலிருந்து பார்க்கும்
போது, ஆகாசத்தில் ஒரு தேவ விமானஞ்
சஞ்சரிப்பதுபோல் இருக்கும். ஒரு புறத்திற்
பொன்னிறமுள்ள மாளிகைகளும், ஒரு புறத்
திற் கருநிறமுள்ள மாளிகைகளும், ஒரு புறத்
திற் செந்நிறமுள்ள மாளிகைகளும், ஒரு
புறத்தில் வெண்ணிறமுள்ள மாளிகைகளும்
விளங்கி யிருப்பதால், பல வண்ணமுடைய
மேக வரிசைகள் சூழ்ந்த ஆகாசம்போல்
இருந்தது. வீடுகள்தோறும் வரிசையாய்த்
தோரணங்களும் பதாகைகளுங் கட்டி, விசித்
திரமான பதுமைகளாலும் அலங்காரஞ்செய்
யப்பட்டிருந்தது. எல்லா வீடுகளும் ஐந்தாறு
கட்டுகளும், ஆறேழு கட்டுகளும், பாதாள
அறைகளும் உடையவைகளா யிருக்கின்றன.
இவையுமன்றி, சோலைகளும் வாவிகளுமுள்ள
வைகளாய் இன்பமாகக் கூவாநின்ற பறவைக
ளோடு கூடிய புழைக்கடைக ளுடையனவா
யிருக்கின்றன. சாதி வகுப்பின்படி வீதிகளும்
மரியாதைகளுஞ் செல்வங்களு மிருக்கின்றன.
அரசருடைய மாளிகைகளோ அனேகங்
கள் பொன்னினாலும் வெள்ளியினாலுஞ் செய்
யப்பட்டு மிகவும் பளபளவென்று விளங்கா

னின்ற சிகரங்க ளுள்ளவைகளாய், முத்துச் சரங்கள் சுற்றிலுங்கட்டிப் பொற்படங்களால் மேல் விரிகட்டி நல்ல தூபங் கமழ்கின்ற பல மண்டபங்களோடு கூடியவைகளாய், மரகத மாணிக்கங்களாற் செய்யப்பட்ட அனேகம் இடங்க ளுள்ளவைகளாய், பவழங்களாற் சேர்க்கப்பட்ட படிக்கட்டுகள் பொருந்தி சொல்லத்தரமில்லாத பேரழகுடன் விளங்கி யிருக்கின்றன. விசுவகருமாவினுடைய நிர் மாணமாகிய அதின் விசித்திரத் தன்மையும் அழகும் செல்வமும் மகாவிகளுடைய எல் லாக் கற்பனைகளுக்கும் அமைந்திருக்கும். ஆதலால், நான் எவ்வளவு சொல்லப்போகி றேன்? அந்த நகரியைச் சுற்றிலும் பல உத்தி யான வனங்களிருக்கின்றன. அவைகளிற் பிரதாபமாய் நான்கு திசைகளிலுஞ் சுவர்க் கத்தைச் சுற்றி நந்தனம்-மிச்ரகம்-சைத்திர ரதம்-வைப்பிராசம் என்கிற தேவோத்தியா னங்க ளிருப்பதுபோல் நான்கு உத்தியானங் கள் இருக்கின்றன. அவைகளிற் பல மரங் களும் பல கொடிகளும் பல செடிகளும் நிறை ந்து என்றும் பூப்பதும் காய்ப்பதும் பழுப் பதும் தளிர்ப்பதும் தழைப்பதுமாயிருக்கும். செந்தாமரை - வெண்டாமரை-செங்குவளை - கருங்குவளை முதலிய புஷ்பங்களாலலங்காரம் பொருந்தி, சக்கிரவாகம் - அன்னங்கள் முத லிய நீர்ப்பறவைகள் மனோரஞ்சிதமாய்ச் சப்திக்கப்பெற்றுப் படிகங்களாலுஞ் சந்திர காந்தங்களாலும் படித்துறைகள் கட்டிய வாவிகள் பொருந்தியிருக்கின்றன. அந்தத் தோட்டங்களில்லாத வஸ்துக்கள் எவ்வுலகத் திலுமில்லை.

இப்படியே நாற்புறங்களிலும் நான்கு மடுக்களிருக்கின்றன. குதிரைச் சாலைகள்- யானைச்சாலைகள்-தேர்ச்சாலைகள்-ஆயுதச்சாலை கள்-நர்த்தனச்சாலைகள்-போஜனச் சாலைகள்- சமா மண்டபங்கள்-பசுச் சாலைகள் முதலான வை எத்தனையோ இருக்கின்றன. இவையு மன்றி, அந்தப் பட்டணத்திலிருபுரங்களிலும் விசாலங்களாகவும் மேடு பள்ளங்கள் இல்லாத தாகவும் எங்கும் ஒரே சமமாகவும் நான்கு வரி சையாகச் சேனைகள் போகும்படியாகவும் இரா னின்ற எட்டு ராஜவீதிகளும், சகல வஸ்துக் களும் நிறைந்த எட்டுக் கடைத்தெருக்களு மிருக்கின்றன. உன்னதமாகிய கோபுரங்க ளோடு விசாலமாய் விளங்காநின்ற நான்கு கோட்டை வாசல்களும், வெகு சூரராகிய

சேனைகளாற் காக்கப்பட்டிருக்கும் மதில்களும், மதிலி னிருபுறங்களி லிருக்கும் அலங்கங்களில் வெகு தீக்ஷண்யமாகிய ஆயுத யந்திரங்களும், பீரங்கிகளும் வைக்கப்பட்டிருக்கும். அன்றியும் வாசல்களி லெல்லாம் விசித்திரமாகிய இருப் புச் சக்கரங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவை களைத் திருப்பிவிட்டால் எப்படிப்பட்டவருங் கிட்ட நாடக்கூடாமலிருக்கும் அதின் தந்திர மோ மற்றொருவராலு மறியப்படமாட்டாது. இவ்வளவு மல்லாமல் மதில்மேலே சுற்றிச் சகலவாயுத பரிபூர்ணமாகிய ரதங்கள் மகாசூர ருடன் கூட வைக்கப்பட்டிருக்கும். வெளிப் புறங்களிலும் பலவிடங்களில் வீரங்களோடு பலவிதச் சேனைகள் கூட்டங் கூட்டமாய் ஆயுத வர்க்கங்களோடு ஸ்தாபிக்கப்பட் டிருக்கும்.

அந்தப் பட்டணத்தின் நீளம் பன்னி ரண்டு காதமாகவும், அகலம் எட்டுக் காதமாக வும் இருக்கின்றது. ஆதலால், சுற்றளவு நாற் பது காதமாயிற்று. இதுவுமன்றி, பட்டணத் துக்கு நாற்புறங்களிலும் இருபத்து நாலு காதம் வரைக்கும் இடைவிடாமல் ஜனங்கள் வீடுகளுந் தோட்டங்களு முண்டாக்கி வாசஞ் செய்து வருகிறார்கள். ஆதலால், சமுத்திரத் தின் மத்தியில் இந்த ஒரு பட்டணமே பெரிய ஒரு பூலோகம்போற் காணப்பட்டது. அல் லாமலும் அந்த நகரிக்கு ஏழுவியூகங்க ளிருக் கின்றன. அவை என்னென்ன வியூகங்களென் றால், பத்மவியூகம் - சகடவியூகம் - சியேனவி யூகம்-சூசிவியூகம்-காருடவியூகம்-சக்ரவியூகம்- வச்சிரவியூகம் என்பவைகளாம் இந்த வியூ கங்களுக் கெல்லாம் எட்டிடங்களிலே வழிக ளும், பதினாறிடங்களிலே பிலங்களும், சேனை நடக்க எட்டு வீதிகளும், மற்றவர் நடக்க ஏழு வீதிகளுமாக ஏற்படுத்தப்பட் டிருக்கின் றன. இதில் கிருஷ்ணனுடைய திருமாளிகை மாத்திரம் ஒரு காதவழி சுற்றளவாய் மேரு பர்வதம்போ லிருக்கும் அதைச் சூழ்ந்து சிற் றகழியொன் றிருக்கின்றது. அதன் கரையில் ஒரு தோட்டமுண்டு. அதிலொரு சிறுமலை யும், அதினின்று ஒரு சிற்றருவிமுண்டாகி யிருக் கின்றது. ஸ்ரீ கிருஷ்ணனுடைய சபாமண்டப மொன்று நடுவிலிருக்கிறது. அது நாலு நாழி கைவழி சுற்றளவுள்ளதாய் ஆறு பனை யுயரத் தோடு கூடி, பார்ப்பவர் கண்களைப் பறிக்குந் திறமையுடன் விளங்குகின்றது.

இப்படிப்பட்ட அநேக வண்மையுற்று விளங்காநின்ற அந்தத் துவாரகாபுரிக்குச்

சுவர்க்க லோகமும் நிகரென்று சொல்லத் தகாது. அதின் சமீபத்தில் வைவதகமென்று ஒரு பர்வதமிருக்கிறது. அது மிகுந்த அழகுடையது. இவ்விதமாகிய பட்டணத்தை ஸ்ரீ கிருஷ்ணன் பார்த்து, இதை யுண்டுபண்ணின விசுவகருமாவை மிகவும் புகழ்ந்து, கூடவந்த தேவேந்திரன் முதலானோரை வெகுவாய் பூசித்து விடை கொடுக்க, அவர்கள் யாதவ சபைக்கு வந்து யாவரையும் நோக்கி, ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்பதையும் அவர் அவதரித்த காரணங்களையுஞ் சொல்லித் துதித்துப் போய்த் தங்கள் தங்கள் பதவிகளிற் சேர்ந்தார்கள். அப்பால் ஸ்ரீ கிருஷ்ணன் அந்தப் பதினாயிரத் தொருநூறு கன்னிகைகளை விவாகஞ் செய்து, அவர்களுக் கெல்லாந் தனித்தனியே வீடு முதலானவைகளை யேற்படுத்தி, வெகு சிறப்பாய்ப் பாராட்டி வந்தார். இப்படியிருக்கு மளவில் நரகாசுரனுடைய பட்டணத்திலிருந்து கொண்டுவந்த விசித்திர வஸ்துக்களைப் பார்க்கவேண்டு மென்று பட்டணத்தி லுள்ள அந்தணர் க்ஷத்திரியர் முதலானபேரும், பிருந்தாவனத்தி லிருந்த நந்தகோபர் அசோதை முதலான பேரும், ஒருநாள் சபைக்கு வந்தார்கள். அப்போது பலராமனுங் கிருஷ்ணனும் நந்தன் அசோதை இவ்விருவரையும் பாதவந்தனஞ் செய்ய, அவர்களும் வெகு சந்தோஷத்துடன் கட்டி யணைத்து மடியில் வைத்து முத்தமிட்டுக்கொண்டு, கண்களால் ஆனந்தபாஷ்பம் விட்டார்கள். அசோதையின் மகளாகிய ஏகாநங்கை யென்பவளைக் கண்ட இராமனும் கிருஷ்ணனும் மிகவும் பரிவுடன் கைப்பிடித்து எடுத்து மடியின் மீது வைத்துக் குலாவி, தங்கள் சிங்காதனத்தில் நடுவிலிருத்தி, இருபுறங்களிலும் தாம் உட்கார்ந்தார்கள். அதனால் அப்பெண்ணரசி இரண்டு மதயானைகள் நடுவில் மகாலட்சுமி யிருந்தால் எப்படியோ அப்படி விளங்கினாள். இவ்வாறு விளங்காநின்ற அப்பெண்ணினழகை பார்த்து, யாவரும் ஆச்சரியப்பட்டார்கள். ஸ்ரீகிருஷ்ணன் தங்கைக்கு வெகு வஸ்திராபரணங்கள் கொடுத்து, தாய்மாரையும் மற்றும் அநேகரையும் பணிந்து விடைபெற்றார். அப்பால் ஒருநாள் சுவர்க்கலோகத்திற்குப் போய் இந்திரனுடைய நந்தவனத்திலிருந்து பாரிஜாத மரத்தைப் பிடுங்கிக்கொண்டு, தேவரை யெல்லாஞ் ஜெயித்து வந்து, சத்திய பாமையின் உத்தியானத்தில் ஸ்தாபித்தார். இந்த மகா புருஷன் செய்கை ஒவ்வொன்றும் மிக வாச்சரியமாக விருக்கும்.

### பாணாசுரன் வதை

அப்பா தருமநந்தனா! நரகாசுரன் விஜயங் கேட்டாயோ, பாணாசுரன் விஜயமுஞ் சொல்லுகிறேன்கேள்: பலிச்சக்கிரவர்த்தியினுடைய மகன் பாணாசுரனென்று ஒருவனிருந்தான். அவன் உருத்திரதேவனை மிகவும் பூசித்து, அவருடைய அனுக்கிரகத்தினால் வெகு பராக்கிரமங்களையும் ஆயிரந் தோட்களையும் பெற்று, தேவரையெல்லாம் ஜெயித்து அந்த சிவனைப் பரிவாரத்தோடு தன் பட்டணத்திற்குக் காவலாக யிருக்கும்படி பிரார்த்தித்து அக்கினியைத் தன் கோட்டையைச் சூழ்ந்திருக்கும்படி வைத்து, இவர்களுடைய சகாயத்தினாலே ஒரு பயமுமின்றி இறுமாப்புடன் அசுர ராச்சியத்தை ஆண்டு வந்தான். அவனுக்கு உஷையென்றொரு பெண்ணிருந்தாள். அவள் ஒரு காலத்தில் இந்தக் கிருஷ்ணனுடைய மகனாகிய பிரத்துய்மனனுடைய புத்திரனாகிய அனிருத்தனென்பவனைக் கனவிற் கண்டு தனக்கு நாயகனாக எண்ணி விழித்துக் கொண்டு அவனைக் காணாமையாலே மிகுந்த துக்கத்தை யுடையவளாய், அன்னபானங்களும் நித்திரையும் இல்லாமற் பிரமைகொண்டு மெய் மெலிந்திருக்க, அவளுடைய உயிர்ப்பாங்கியாகிய சித்திரலேகை யென்பவளொருத்தி அவளை வினவ, அவளுந் தன் மனோ வியாதியின் காரணத்தைச் சொல்ல, அதன்பின் பூலோகமுதலான சகலலோகங்களிலிருக்கும் யவ்வன புருஷரைப் படத்தி லெழுதிக் கொணர்ந்து அந்தச் சித்திரலேகை உஷைக்கு காட்ட, அவள் அதில் துவாரகாபுரியிலிருக்கும் அனிருத்தனைக்காட்டி கனவிற் கண்ட சீமான் இவர்தானென்று தெரிவிக்க, அந்தச் சித்திரலேகை மகா மாயாவதியாகையால் ஒருநாள் அந்தப்புரத்திற் கட்டிலின்மீதில் தூங்கிக்கொண்டிருந்த அவ்வனிருத்தனை ஒருவருக்குந் தெரியாமற் கட்டிலோடு தூக்கிக் கொண்டுபோய் உஷையினிடத்தில் விட, அவளந்தச் சுந்தர புருஷனைக் கண்டு பேரானந்தம் அடைந்து, இரகசியமாய் தனது மாளிகைக் குள்ளேயே வைத்து அவனுடன் சரச காம போகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

இப்படி யிருக்க, அந்த உஷைக்குக் கருவுண்டாயிற்று. அது மேன்மேலும் வளர்ந்து

வரும்போது, பாணாசுரன் அச்சேதி யறிந்து அந்தப் புரத்தைச் சோதிக்க, அங்கு கேளி விலாசமாயிருக்கும் யாதவ திலகனைக் கண்டு வெகு கோபமடைந்து அவனைப் பிடித்து வருணபாசங்களினாற் கட்டிக் காவலிற்போட்டு விட்டான். இச்செய்தியை யெல்லாம் நாரதர் சொல்லக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் பலராம ரோடும், பிரத்யும்மனன் முதலானவரோடும், வெகு சேனைகளோடும், பாணாசுரனோடு யுத்தத் திற்காகப் புறப்பட்டுக் கருடன் மீதிலேறி, அந்தப் பாணனுடைய இராஜதானியாகிய சோணிதபுரத்திற்குச் சென்று, கோட்டை மதில்போற் சுற்றிக்கொண்டிருந்த அக்கினி யைச் சின்னபின்னமாய் அடித்துத் துரத்தி, பின்பு பாணனுக்கு உபபலமாய் வந்த சிவன்-சுப்பிரமணியர்-விநாயகர் - நந்தி முதலானோ ரைச் சார்ங்க வில்லினின்றுங் கிளம்பாநின்ற அம்புகளினாலே புறங்காட்டி யோடும்படி செய்ய, ருத்திரமூர்த்தி மிகுந்த கோபாவேசங் கொண்டு, தமது பக்தனைக் காக்கவேண்டிய கடமையாற் பிரளயகாலத்தில் எடுப்பதுபோல் உக்கிரமாகிய சங்கார ரூபத்தை யெடுத்துக் கண்கள் மூன்றும் அனலைச் சொரிய உலகத் தின் உயிர்களைக் கொள்ளையடித்த திரிசூலத் தையும் பினாகமென்னும் வில்லையுங் கையில் ஏந்தி எதிர்த்துவர, ஸ்ரீகிருஷ்ணனுக்கும் சிவ னுக்கும் மகா பயங்கரமாகிய யுத்தமுண்டா யிற்று. அந்த யுத்தத்தில் அவ்விருவரும் வில்லை வளைத்து நாணேற்றி நாணோசை கொண்டு அம்பு முதலானவைகளையும், சிறுகத் திகளையும், வேல்களையும், மற்றுமநேக ஆயுதங் களையும், பல அஸ்திரங்களையும், ஒருவர்மேல் ஒருவர் பிரயோகிக்கிறதும், ஒருவரை யொரு வர் ஸ்தம்பிக்கச் செய்கிறதும், ஒருவரை யொ ருவர் இகழ்கிறதும், ஒருவரை யொருவர் தடுக் கிறதுமாகப் பலவிதமாகிய போர்முறைகளை ஈடுக்கீடாக நடாத்தி வந்தார்கள்.

இப்படி யிருக்கையில், அன்பர்க் கெளிய னான அந்தச் சங்கரமூர்த்தியானவர் தமது சக்தி முழுவதையுங் கொண்டு யுத்தஞ் செய் தும் அக்கிருஷ்ணனும் நிரந்தரபக்தனாதலால் அவனுக்கு ஒரு குறைவு மில்லாமற் போனது மன்றி, அவனுடைய ஆயுத வேகத்தினால் வெகு உபத்திரவத்தை யடைந்து சகிக்கமாட் டாதவர்போற் பின்னிட்டுப் போக, அவரு டைய சகல சேனைகளும் ஓட ஆரம்பித்தன. அதுகண்ட யாதவசேனை துரத்த, உருத்திர சேனை திக்கு திக்காய் மிரண்டோட உடனே பாணாசுரன் வெகு மனஸ்தாபமுங் கோபமும் அடைந்து யுத்தத்திற்கு வந்தான். கிருஷ் ணன் பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கத்தைப் பூரித்து அட்டகாசஞ் செய்து அவன் வருகிற வேகத்தைத் தடுக்கவே, அவனுக்குக் கோபம் இரட்டித்துச் சரங்களைச் சரஞ்சரமாய்த் தொடுத்து மூச்சுவிட வொட்டாமல் அடித் தான். அதனாலே கிருஷ்ணன் எவ்வளவும் வேதனை யடையாமல் அவன் விட்ட சரங்க ளைப் பொடியாக்கிச் சக்கராயுதத்தைப் பிர யோகித்து, அவன் கைகளை யெல்லாம் இந்தி ரன் வச்சிராயுதத்தினால் மலைகளின் சிறகுக ளைச் சரித்ததுபோற் சரித்துத் தள்ள, அவ் வசுரராசன் பதைபதைத்துக் கீழே விழுந்து மூர்ச்சித்து மகா வேதனை யடைந்தான். அப் போது ஸ்ரீ கிருஷ்ணன் தமயனார் முதலானோ ருடன் அரண்மனைக்குட் பிரவேசித்துத் தனது பேரனைக் காவலினின்றும் விடுவித்து, அவனுடைய மனைவியாகிய உஷையையும் அழைத்துக்கொண்டு, அவன் சம்பாதித்த சகல சம்பத்துக்களையுங் கொள்ளையாடி, கரு டன்மேலேறி ஜயகோஷத்துடன் பட்டணத் துக்கு வெளியில் வந்து, சேனைகள் சந்தோ ஷத்துடன் சூழ்ந்து வரவும், தேவர்கள் மலர் களைச் சொரிந்து கொண்டாடவுமாகத் துவா ரகாபுரிக்கு வந்து யாதவர்களுக்கெல்லாம் ஒரு சந்திரனாக விளங்கினார்.

இப்படிக்கு தேவராலும் வெல்லக்கூடாத பாணாசுரனை இரண்டு கைகளோடு சாதாரண மாக நிறுத்தி, சிவன் முதலானோரையுஞ் செயித்தவர் நாராயணனல்லாமல் வேறு ஆரைச் சொல்லலாம். இன்னும் எத்தனையோ வீரர்களைச் செயித்திருக்கிறார். அவர்கள் யார் யாரென்றால், சைம்பியன்-சத்துருவா - இந் திரத்துமனன் - கசேருமானென்கிற யவன ராசன் - சவும்பராஜனாகிய சால்வன் - கிருத்த னுவா-வெகு பருவததுர்க்கங்க ளுடையவனா யிருந்த தியுமச்சேனன் - வருணனுடைய சே வகர்களாகிய கோபதி-தாலகேதுக்கள்-ஹேம ந்த பர்வத வாசிகளாகிய மகாசூரர்-சுராஷ்டிர தேசத்து ராஜரிருவர் இவர்களெல்லாம் வெகு பிரசித்தப்பட்டவர்கள். துர்க்கபலம் - ஆயுத பலம்-சேனாபலம் - புஜபலம் - வரத்தின்பலம் இவைகளாற் சிறந்தவர்கள். ஒவ்வொருத் தருந் தேவர்களையே அலட்சியஞ் செய்து வெகு செல்வங்களுடனே நெடுங்காலம் ராச்ய

பரிபாலனஞ் செய்தவர்கள். இப்படிப்பட்ட வர்களை யெல்லாம் போரில் இக் கிருஷ்ணன் எளிதிற் கொன்றார். வச்சிராயுதத்தாலும் பிளக்கக்கூடாத பர்வத துர்க்கங்களைச் சக்கிரத் தினுற் பொடிப் பொடியாகச் சிதைத்தார். இதுவுமன்றி, காசிராஜன் தன் விஷயத்தில் அபராதஞ் செய்ததற்காக அந்தக் காசிப் பட்டணத்தைச் சுட்டெரித்து, அந்த ராஜனை யுஞ் சமூலமாக நாசஞ் செய்தார். இந்திர னுடைய சுதர்மை யென்னுஞ் சபையைப் பூமிக்கொணர்ந்து துவாரகையில் ஸ்தாபித் தார். காந்தாரதேசத்து ராஜன் மகளைக் கலி யாணஞ் செய்வதற்காக நூற்றொரு மகாராஜ வீரரைச் சிரச்சேதஞ் செய்து, அப்பெண் ணைச் சகல வைபவத்தோடுங் கலியாணஞ் செய்துகொண்டார்.

இவையெல்லா மிருக்கட்டும்; உருக்கு மணிதேவியைத் தமது பலத்தினுலே பகிரங்க மாய் வந்து எடுத்துத் தேர்மேலேற்றிக்கொ ண்டு போகும்போது, சகலமான அரசர்களும் பல்லைத் திறந்து சும்மா நின்றார்களே யல்லா மல், யாராகிலுங் கண்ணெடுத்துப் பார்க்கச் சக்திவான்களாக விருந்தார்களா? அவர்க ளிருக்கட்டும். இந்தச் சிசுபாலன் உருக்குமணி யைக் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டிப் பிரமசாரி விரதங் களைவதற்காக க்ஷவரஞ் செய்வித்துக்கொண்டு மணக் கோலத்துட னிருந்தானே இவன்தனக்காக நியமித்திருந்த கன்னிகையை கிருஷ்ணன் தூக்கிக்கொண்டு போகிறபோது மானத்திற்காகவாவது கொஞ் சமும் முயன்றானா? கையில் வில்லையெடுத்தால் இயமன் தன்னை யடுப்பனென்றஞ்சிக் குறும் பாடுபோல் தலையை வணங்கிக்கொண்டு வெறு ம் பொறாமையால் இதயங் கன்றினனே யல் லது வேறில்லை. இப்படிப்பட்ட பஞ்சைக்கு இப்போது கேடுகாலங் கிட்டினபடியால் தாறு மாறாகப் பிதற்றுகிறான். இந்த மசக மெவ் வளவு? இதிருக்கட்டும். மகாவீரனென்று கீர்த்திபெற்ற இந்த அர்ச்சுனனும்-துரோணு சாரியரும்-அசுவத்தாமனும் - கர்னனும் - வீம சேனனும்-துரியோதனனும் ஒரு காலத்தில் பலாபலம் பார்க்கவேண்டுமென்று கிருஷ் ணனை வேடிக்கையாய்ச் சண்டைக்கு அழைத் தார்கள். பகவான் அக்கருத்தறிந்து அப் படியே அவர்களோடு விளையாட்டுச் சண்டை செய்து, குந்திதேவியின் கண்ணெதிரிலேயே அவர்களெல்லாரும் வெனுவெனுத் தோடும் படி யடித்துச் செயித்தார்.

இப்படிப்பட்ட இவருடைய மகிமை களைக் கண்டுங் கேட்டுமுள்ள மன்னவரெல் லாம் இவர் பேரெடுத்துக் கூறினால் சிங்கத் தைக்கண்ட யானைகள்போல் நடுநடுங்கிக் கொண் டிருப்பார்கள். இந்தப் பாவியும் அப் படி நடுங்கினவன்தான். இன்று கேடுகாலங் கிட்டி இப்படி துள்ளுகிறான். இந்தக் கிருஷ் ணன் இனிமேலும் இம்மூடனுகிய சிசுபாலன் முதலான வெகு துஷ்டரைச் சங்காரஞ் செய்து, தாம் அவதரித்த காரியத்தை நிறை வேற்றி முடிவில் துவாரகாபுரியைக் கடலுக் கிரையாக்கித் தமது லோகத்திற்கு எழுந்தரு ளப்போகிறார். துவாரகையைக் கடலடித்துக் கொண்டுபோகும்படி செய்வானேனெனில் பர மாத்மாவாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி எழுந் தருளியிருக்கிற நிமித்தமாய் விசுவகருமா சுவர்க்கலோகத்திற்கும் அருமையாகிய சிறப் புக்களுடன் இந்நகரியை நிருமித்தான். இவர் மகிமையால் அது வெகு செல்வமுஞ் சிறப்பும் பெற்று விளங்குகின்றது. இப்படிப்பட்ட நக ரத்தில் மற்றொருவன் வாசஞ்செய்யத் தகா தாகையால் அதை யழிக்கப்போகிறார். ஓ தரும நந்தனு! இவருடைய மகிமைகளும் செய்கை களும் முற்றுஞ்சொல்லத் தரமில்லாமையாற் கொஞ்சங்கொஞ்சமே சொன்னேன். முடிவான வார்த்தையைக் கேள். இந்த ஸ்ரீ கிருஷ்ணன் உலகங்களை யெல்லாம் படைத்து அளித்து அழிக்குங் காரணப் பொருளாகிய ஸ்ரீ நாரா யணன் துஷ்டரைச் சங்காரஞ் செய்து சிஷ் டரைப் பரிபாலனஞ்செய்ய அவதரித்திருக் கிறார். அவதார காரியங்களிற் சிலவற்றை முடித்தார். சிலவற்றை முடிக்கப்போகிறார் என்று யாவருங் கேழ்க்கும்படியாகப் பலபல வித்திலுஞ்சொல்லிப் பின்பு வீஷ்மர் வாயை மூடிக்கொண்டார்.

### சிசுபாலன் வீஷ்மரைத் தூஷித்தல்

இவ்வாறு வீஷ்மர் சொல்லிய வார்த்தை யைக்கேட்டு அந்தச் சபையிலிருந்த யாவருஞ் சந்தோஷித்தார்கள். சகாதேவனனவன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகிமையைக் கேட்டமாத் திரத்தில் அதிக ஆனந்தமடைந்து யாவரை யும் நோக்கி, ஓ மகாமுனிவர்களே! ஓ மகாரா ஜாக்களே! இப்போது குருகுல பிதாமகராகிய வீஷ்மர் சொல்லியது யாவருக்குந் தெரிந்த தன்றோ? இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பகவானென படியினுலும், சவுரியம்-சீலம்-செய்கை-மேன் மை-நற்குணங்கள் இவைகளாற் சிறந்தவ

ராசையர்களும், இவரே பிதா மாதா குரு பந்து தெய்வம் ராஜன் மற்ற யாவருமென்றெண்ணி முதற்பூசை செய்தோம். அது பெரியோர்களுக் கெல்லாஞ் சம்மதியாயிருக்கிறது. இதிற் சம் மதியில்லாமற் பொறாமைகொண்டவ னெவ னோ அவனுண்மை யுள்ளவனாகிற் கையில் ஆயுதமெடுத்துச் சண்டைக்குப் புறப்படட்டும் எவனெப்படி புறப்படுகிறானோ? அவன் தலை யை நான் மிதிக்கிறேன் பாருங்கள் என்று முன்னமே சொல்லியிருக்கிறேன். அப்படிக் கிருந்தும் இன்னும் அவனோடு பேச்சென்ன வென்று சொல்லி முடித்தான். இவ்வாறு சகாதேவராஜன் சொன்ன வார்த்தையைக் கேட்ட மகாமுனிவரும், இராஜ ரிஷிகளும், தேவர்களும் வெகு சந்தோஷ மடைந்து கொண்டாடினார்கள். நாரதமாமுனிவர் இந்த சிசுபாலனுக்கு முடிவுகாலங் கிட்டிற்றென்று வீணை மீட்டிக் கோலாகலஞ் செய்துகொண் டிருந்தார். அந்தச் சிசுபாலன் வீஷ்மர் பேச் சையுஞ் சகாதேவன் பேச்சையுங் கேட்டு, யுகாந்த காலாக்கினிபோல் மிகுந்த கோபத்தை யடைந்து முகம் படபடத்து நிற்க, அவ னைச் சார்ந்த அரசர்களெல்லா முகங்குன்றி ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட அரசர்களை நோக்கிச் சிசு பாலன் யுத்தஞ் செய்யவேண்டிய சம்மதியைக் காட்ட, யாவருங் கிருஷ்ணனோடு யுத்தஞ் செய்ய அயர்வுபட்டார்கள். அதை யறிந்த பகவான் சும்மா யிருந்தார். அந்தச் சகாதே வன் பின்பு முறையே பிராமணர்-க்ஷத்திரியர் முதலாகிய யாவரையுந் தகுந்தபடி பூசித்து, அந்த யாகச்சடங்கை நிறைவேற்றி வந்தான். அதைக் கண்ட சிசுபாலன் வெகு பொறாமை கொண்டு, தன்னோடிணங்கிய அரசரை நோக் கி, ஓ ராஜாக்களே! நீங்களேன் அஞ்சுகிறீர் கள்? நீங்களோ வெகு சாமர்த்திய முள்ளவர் கள். நான் உங்களுக்கு தகுந்த சேனாதிபதியா யிருக்கிறேன். ஆனபடியினாலே நம்மை யெல் லாம் அவமானஞ் செய்ய பாண்டவர்களையும், அவர்களைச் சார்ந்தவர்களையும், வீஷ்மன் முத லான துஷ்டரையும் இங்கேதானே கொன்று கீழே தள்ளிப்போட்டு யாகத்தையுங் கெடுத்து விடுவோம் என்று சொல்ல, அதைக் கேட்ட துஷ்ட அரசர்களெல்லாஞ் சண்டைக்கு யத் தனப்பட்டு ஆரவாரஞ் செய்ய, தருமபுத்திரர் தமது யாகத்திற்கு இடையூறு நேரிட்ட தென்று மனங் கலங்கி, மிகுந்த பயத்து டனே வீஷ்மாசாரியைப் பார்த்து, ஓ பிதா மகரே! இப்போது ராஜமண்டலம் மிகவும் கோபித்து யுத்தத்திற்கு ஆயத்தமா யிருக்கி றது. இதனாலே வெகு பேர்கள் வீணாய் நசிக் கிறதுமன்றி, நம்முடையயாகத்திற்கும் விரோ தம் வருகிறதுபோற் காண்கிறது. ஆதலால், இப்படிக்கெல்லாம் நேரிடாம லிருக்கும்படி நான் செய்யவேண்டிய உபாயம் யாதோ அதனை நீர் உரைக்க வேண்டுமென்று கேட்க, அந்தக் குருகுல பிதாமகர் சொல்லுகிறார்:

ஓ தருமபுத்திரா! நீயொன்றுக்கும் அஞ்ச வேண்டாம். ஸ்ரீ கிருஷ்ண னென்னுஞ் சிங்கம் அதோ யிருக்கிறது பார். அச் சிங்கம் இவ்வளவு ராஜகோலாகலத்திலும் ஏதாகி லுஞ் சற்றஞ்சிக் கண்ணெடுத்துப் பார்க்கின் றதா? அலக்ஷியமாகவே நினைத்துப் புன்னகை கொண்டு விளங்குகின்றது. இந்த நாய்க் கூட்டங்கட்குக் காலங் கிட்டியபடியால் வீணாய் குலைக்கின்றது. சுகமாய் குலைக்கட்டும். அதனால் யாருக்கென்ன? கிருஷ்ணன் இந்தப் பாவிகளை யெல்லாம் ஒரு நொடியிற் சங்கரிக்கப் போகி றார். ஆனபடியால், நீர் யோசிக்கவேண்டாம் என்று சொல்லக்கேட்ட தருமபுத்திரர் சமா தானமாய் இருக்க, சிசுபாலன் அவ் வீஷ் மரைப் பார்த்து, அடா கிழவா! உனக்கேது புத்தி இப்படி கெட்டது? இத்தனை நாளும் நீ வெகு விவேகமுள்ளவனென்று நினைத் திருந்தேன். இப்போது நீ சொல்லிய பேச் சைக் கேட்டால் சிறுபிள்ளைக்குங் கீழ்ப்பட்டவ னாகத் தோற்றுகிறது. அல்லது உனக்குப் பயித்தியந்தான் பிடித்ததோ? அல்லது காலங் குறுகியபடியால் தாறுமாறாகப் பிதற்றுகின்ற னையோ? அடா பாவி! உனக்குக் கொஞ்சமுங் குலாபிமானமுஞ் சூராபிமானமும் இல்லை. தைரியசாலிகளாகிய ராஜாக்களையுங் கூடப் பொய் சொல்லி ஏன்பயமுறுத்துகிறாய்? இதில் உனக்கு வெட்கம் உண்டாகாமல் போனதற்கு யான் ஆச்சரியப்படுகிறேன். நீ இழிகுலப் பிறப்புடையவன். ஆதலால், அற்பனாகியும் அயோக்கியனாகியும் இருக்கும் ஒரு இடை யனைப் புகழ்ந்தாய். ஐயோ! ஏன் இப்படி உன் பிழைப்பு வீணாய்ப் போச்சுது? இப்படிப் பட்ட மகா மூடனாகிய உன்னிடத்தில் தரு மோபதேசங் கேழ்க்க வந்த பாண்டவர்களுக் கும் அது தகுதிதான். இல்லாவிட்டால், அந் தக் கடைக்குட்டிப்பயல் காலைத் தலைமேல்

வைக்கிறேனென்று பிதற்றுவானு? அவன் அற்பனென்று அலக்ஷியஞ் செய்தேன். இல்லாவிட்டால் நீதான் எனக்கெவ்வளவு? இந்தப் பாண்டவர்கள்தான் எவ்வளவு? மற்ற வர்தான் எவ்வளவு? ஆகிலும் பாம்புக் குட்டிகளைக் கண்டவிடத்தில் தலையை நசுக்கவேண்டுமென்று பெரியோர் சொல்வதுபோல், உங்களை எல்லாம் தலையெடுக்க வொட்டாமல் அடிக்கவேண்டியது அவசியந்தான். அதற்கு இத்தனை நாளுங் காலம் நேரிடாமற் போயிற்று. இப்போதும் இருக்கட்டும்; நீ எவனைப் புகழ்ந்தாயோ? அதைக் கேட்டு இந்தக் குண்டகர் எவனைப் பூசித்தார்களோ? அவன் அற்பனென்றும், மோசக்காரனென்றும், துடுக்கனென்றும் யாவரும் அறிவார்கள். நீயும் அறிவாய். அறிந்திருந்தும் கெடுமதியினுலேயோ கெருவத்தினுலேயோ மயக்கத்தினுலேயோ சிறப்பித்துச் சொன்னுய். நீ சொல்லிய சரித்திரங்களிற் பெரும்பாலும் வெறும் பொய்தான். ஆகிலும் அவைகளாலும் இவனுக்கு மிகுந்த பெருமையைக் காணேன். இவனைத் தெய்வமாகச் சொன்னுய். இவனுடைய துஷ்ட நடக்கைகளைச் சொல்லுகிறேன் கேளென்று சிசுபாலன் சொல்லுகிருன்:

அடா கிழப்பிணமே! இவன் வெண்ணெய்க்கும்-பாலுக்கும்-தயிருக்கும்-ஆய்ச்சியர் மத்தினுல் மொத்துண்டதும், திருடியகப்பட்டுக் கட்டுண்டதும், கோவலருங் கோவியரும் இட்ட பணிசெய்து கோணக்கூத்தாடி இரந்துண்டதும், பிறர் மனைவியராகிய கோபிகைகளோடுகூசாமற் காமசுகங்களைப் புணர்ந்ததும், நேசித்த அவர்கள் வஸ்திரங்களை யெடுத்து மரத்தின்மீது வைத்துக்கொண்டு அவர்களை நிர்வாணமாக வரும்படி செய்ததும், விளையாடல்களில் தோற்று இடைப்பயல்களைச் சுமந்ததும், பலவித மோசஞ்செய்ததும், இப்படிப்பட்ட பல செய்கைகளினுலுந் தெய்வத்தன்மை நன்ருய் விளங்குகின்றது. அடா மடையா! ஒரு பொர்த்தல் வண்டியைக் காலாலுதைத்து ஒடித்ததையும், சொத்தை மருத மரங்களை முறித்ததையும், நத்தை தின்னும் பாம்பை நசுக்கியதையும், பித்தையாகிய கொக்கின் வாயைப் பிளந்ததையும், கழுதையைக் கொன்றதையும், கன்றைக் கொன்றதையும், எருதைக் குதிரையையும் இன்னும் பல மிருக பக்ஷிகளைக் கொன்றதையும் பல அரசர்களும் அறிவார்கள். இவைகளை ஒரு பெருமையாக நினைக்கிருயோ? ஒருக்காலும் பெருமையாகமாட்டாது. ஏனெனில், அந்தச் சகடம் ஏதோ வேறு காரணத்தாற் கீழே விழுந்து உடைந்தது. காகதாளீயமாய் இவன் காலும் அதிற் பட்டிருக்கும். மரங்களும் அப்படியேதான் முறிந்திருக்கும். பக்ஷி மிருகங்களைக் கொன்றது சாதாரணமாகிய வேடனுக்கும் எளிதான செய்கையே யல்லது வேறன்று. அன்றியும், பசுவின் கன்றைக் கொன்றதும், எருதைக் கொன்றதும், கோவதையாயிற்று. இது சண்டாளனுடைய செய்கையே யல்லது மற்ருெருவன் செய்கையன்று. இதை நீ மறக்காமல் எடுத்து சொல்லிப்போட்டாயே. ஐயோ! அது அவன் தலையை வணக்குகின்றதே.

இதுவுமன்றி இவன் செய்துவந்த பாவச் செய்கை ஒன்ரு யிரண்டா? ஒருகோடியுண்டு. தாய் வடிவாக வந்து முலை கொடுத்தவளைக் கொன்ருனே. இதைக்காட்டிலுங் கொடிய செய்கை வேறுண்டோ? தன் குடும்பத்துக்கெல்லாம் அன்னமிட்டுக் காப்பாற்றிய அம்மானுகிய கஞ்சனைக் கொலை செய்ததைச் சண்டாளனுகிலும் அங்கீகாரஞ் செய்வானு? அது நிமித்தம் ஜராசந்தனுலே துரத்தப்பட்டு ஓடியது எத்தனையோ தரமுண்டு. காடுகளிலும், மலையிலும் ஏதேது ரகசியமான விடங்களுண்டோ அவைகளெல்லா மிவனுக்கு நன்ருய்த் தெரியும். ஐயையோ! நற்குலத்திற் பிறந்த மகாராஜனுலே துரத்தப்பட்டோடியது. இவனுக்குப் பெருமையே யல்லது வேறல்ல. ஒரு மிலேச்சனுற் துரத்தப்பட்டு நெடுந்தூரம் ஓடினனே இவனு பராக்கிரமசாலியும், வீரனும், மானியுமாவன். மிலேச்சனுக்குத் தோற்றவன் மறுபடி ராஜமண்டலத்தில் வரத்தான் தகுமோ? வெட்கமில்லாதவனுகையால் வருகிருன். இவனைப் பெரியவனென்று நீ சொல்லியது சரியே. ஏனென்ருல், வெட்கங்கெட்டவன் ஊருக்குப் பெரியவனென்று உலகத்தில் ஒரு வதந்தி யிருக்கின்றதன்ருே? இவன் பிறந்ததெங்கே? வளர்ந்ததெங்கே? என்ன ஜாதி? யாரறிவார்? ஓ! ஓ! ஓ! சகல வேதங்களும் முறையிடுகிறபடி இந்திரனுக்குச் செய்யும் பூசையைத் தடுத்து மலைக்கிடும்படி செய்தானென்ரு யல்லவோ? அதனுலிவன் தெய்வத் துரோகியும், வேதத்துரோகியும், குலத்துரோகியு மானுன். இப்படிப்பட்ட பாவி முகத்தைப் பார்ப்பதும் மகா பாதகமாகும்.

நல்லது; இவன் பூமியில் ஒரு ரூபத்துட னிருந்து மலையிலொரு ரூபத்துடன் சோற் றைத் தின்றானென்றாய். அதனால் மாயாவி என்றுஞ், சோற்றுக்கு வெஃகிய பஞ்சையென் றும் விளங்கிற்று. கோவர்த்தன மென்பது மாடுகள் மேய்ம்படியானஓர் சிறுமேடு. அதை எடுத்ததினால் ஒரு மகிமையுண்டோ?

இதெல்லா மிருக்கட்டும். மகா சூரனாகிய ஜராசந்தனிடத்திற் கடும்பகைவைத்துத் தன் கையிலாகாமல் இப் பாண்டவச் சிறுவரிருவ ரைக்கொண்டு கொல்வித்தா னன்றோ, அதில் நடந்த சூதுகள் அளவற்றதுகள். எப்படி யென்றால், முன்னமே தமது இயல்பாகிய வேடத்தைவிட்டுப், பிச்சைக்காரப் பார்ப்பார வேடங் கொண்டதொன்று, பகிரங்கமாகிய வாசலிற் போகாமல் மதிலேறிக் குதித்த தொன்று, பின்பவன் தரும நினைப்பினாற் செய்த பூசையைத் திரஸ்காரஞ் செய்த தொன்று, யுத்த மிருவருக்கும் நடக்கும்போது அந்த மகா வீரனால் அடிபட்டுச் சோர்ந்து போன பாண்டவனுக்கு, இரகசியமாகக் குறிப் பித்ததொன்று இப்படிப்பட்ட மோசங்கள் நற்குலத்திற் பிறந்து சூரத்தன்மையும் விவே கமும் பொருந்திய மகாராஜ னொருவனுஞ் செய்யமாட்டான். இவனோ இழிகுலத்தானும், பலமில்லாதவனும், மூடனுமாகையால் செய் கை கூடுவதொன்றென்று இவன் யுக்திப்படி நடந்தார்கள். இல்லாவிட்டால் அந்த வீர னுடைய புஜபலத்திற்கும் இப்பாண்டவர் ஒரு விஷயமாவார்களோ? இப்படித்தான் இவன் செய்த காரியங்களெல்லாம் மோசமே யல்லது, ஒன்றும் நியாயமன்று. இவ்விதமாக வஞ்சகனும், சுவாமித் துரோகியும், தெய்வத் துரோகியும், குலத்துரோகியும், வேதப்பிரட்ட னும், கள்வனும், பிறர் மாதரைப் புணர்பவ னும், மானயீனமில்லாதவனும், பொய்யனும், இழிகுலத்தோனுமாகிய இவனைப் புகழ்ந்த நீயும் மகா பாவிதான். உன் முகத்தையும் பார்க்கக்கூடாது. நீ தரும மறிந்தவனென்று பேர் மாத்திரந்தான் பெற்றாய். அதிலொன் றுந் தெரியாது. நரையும் உனக்கு வீணாகவே இருக்கின்றது. அப்படியின்றி, நீ தருமமறிந் தவனாகில் பாவியைத் துதித்து மகானு பாவரை யவமானஞ் செய்வாயோ.

அன்னப்பட்சி முதலானவை கதை

அடா விருத்த விலங்கே! முன்னே ஒரு கிழ அன்னம் சமுத்திரக் கரையில் இருந்தது. அது சில பட்சிகளையும், தங்கள் இனங்களையும் கூவி, ஒருவனையும் வஞ்சிக்கலாகாது பொய் சொல்லலாகாது கொலை செய்ய லாகாதென தருமங்களை யுபதேசித்துக்கொண் டிருந்தது. எல்லாப் பட்சிகளும் அவ்வுபதேசத்தை மெய் யென்று கேட்டு அதனிடத்திற் குருவென்கிற அபிமானத்தையும் துரோகஞ் செய்யமாட்டா தென்கிற நம்பிக்கையையும் வைத்திருந்தது கள். மேலும், அந்த அன்னத்திற்குத் தினந் தோறும் இரை கொண்டுவந்து கொடுத்து, அதை யெங்கேயுஞ் சஞ்சரிக்க வொட்டாமற் செய்ததுகள். இப்படியிருக்க, ஒருநாள் எல் லாப் பட்சிகளுந் தங்கள் முட்டைகளை அவ் வன்னத்தினிடத்திலேயே வைத்துப் போட்டு, இரை சம்பாதிக்கப் போச்சுதுகள். அந்த அன்னம் அந்த முட்டைகளைக் காப்பாற்றி அந்தப் பட்சிக ளெல்லாம் வந்தவுடனே கொடுக்கவே, அப்பறவைகள் இது மிகவுந் தருமநடத்தை யுடையதென்று சந்தோஷித் துத்தினந்தோறும் தமது முட்டைகளை அதன் வசத்திலேயே வைத்துக் காப்பாற்றும்படிக் குச் சொல்லிப் போய்க்கொண் டிருந்ததுகள். அவ்வன்னமோ அந்த முட்டைகளில் தனக்கு வேண்டிய மட்டும் உடைத்துக் குடித்துக் கொண்டே யிருந்ததுகள். அதனாலே தினந் தோறும் முட்டைகள் குறைவுபடக் கண்டு, ஒரு பறவை சந்தேகப்பட்டு, பறவைக ளெல் லாவற்றோடும் இரைக்குப் போகிறதுபோற் காட்டி ஓரிடத்தில் மறைந்திருந்தது. அந்த அன்னம் வழக்கம்போலே சில முட்டைகளை யுடைத்துத் தின்னக்கண்டு எல்லாப் பறவை களுக்கு மிச்சேதி தெரிவிக்க, அவைக ளெல் லாம் மிகவுங் கோபங்கொண்டு, அந்த மோசக் கார பட்சியை அடித்துத் துரத்திக் கொன்று விட்டதுகள்.

அப்படிக்கு நீயுந் தருமத்தை யுபதேசிக் கிறவன். வயது சென்றவன். சத்திய சந்த னென்று சொல்லும்படி அபினயித்து, இப் போது எல்லா வரசரையுங் கெடுக்க நினைத் தாய். ஆகையால், உன்னைக் கொல்லவேண் டும். நல்லது; நீ பிரமசரிய விரதத்தைப் பூண்டதுதான் தரும சிந்தையினாலேயோ அன்று மற்றெதனா லென்றால் நபும்சகத் தன் மையினாலேதான், நீ இவ்விரதத்தை யங்கீ கரிக்காமற் போனால் உலகத்தில் மிகவும் பரி யாசஞ் செய்யப்படுவாய். நீ பாவிகளோடு சம்பந்தப்படுதல் மகா பாவமென்று அன்னி

யருக்கு உபதேசித்து வந்து நீ இப்போது அப்படிப்பட்ட காரியத்தைச் செய்வதைப் பார்த்தால், ஓர் குலிங்கப் பட்சியானது ஓர் மரத்தின் கிளையி லுட்கார்ந்து, சிங்கம் - புலி முதலாகிய மகா மிருகங்களுக் கெதிரில் சாகசஞ் செய்யாதீர், சாகசஞ் செய்யாதீர் என்று சொல்லிக்கொண்டு தான் அந்த மகா மிருகங்கள் கோட்டாவி முதலாகிய நிமித்தங்களினால் வாயைத் திறக்குமளவிற், பற்களிற் பற்றியிரானின்ற மாமிசங்களைக் கொந்தித்தின்னும் படியான கொடுஞ் செய்கைபோ லிருக்கின்றது. ஐயையோ! என்னடா வீஷ்மா! உனக்கிப்படி புத்தி விபரீதப்பட்டது. நான் முன்னுரைத்தபடிக்கும், அன்னப்பட்சி குலிங்கப் பட்சிகளின் கதைகளின்படிக்கும் சகல பாவச் செய்கைகளுக்கு மிருப்பிடமாகிய ஒரு இடையனைத் தெய்வமென்று மூடருக்குச் சொல்லி மோசஞ் செய்வதுபோல் என்னையும் மோசஞ் செய்ய நினைத்தாயே அது சாயுமா? அந்த இடையன் காருடவித்தை கற்றவன் அதனாலே சில அற்புதங்களைக் காட்டியிருப்பான். அவைகளைக் கண்டு நீ நன்றாய் மயங்கினாய். நாம் மயங்கமாட்டோம். தெய்வமாகிற் பேரறிவு, பெருந் திறம், பரிசுத்த நடத்தை, பெருந் தன்மை இப்படிப்பட்ட மகா குணங்களெல்லா மிருக்கவேண்டுமே இவைகளி லொன்றேனு மில்லாமல் மாயப்பொடி போட்டு மயக்குகிற இவனைத் தேவனென்று புகழ உனக்கு வாய் எழுந்ததே இது மெத்த ஆச்சரியம்! இவன் ஜாலத்தால் மயங்கினது நீ மாத்திரமோ சில பெரியோர்களும் மயங்கி யிருக்கிறார்கள். ஏனெனில், அவர்கள் கபடற்றவர்களானபடியினாலே இந்தக் கபடச் சேட்டைகளை மெய்யென்றே நம்பினார்கள். அடா கிழவா! யாவரையும் அவமானம் செய்வதற்கு மூலகாரண மாகியவனும், இப் பாவியைப் புகழ்ந்தவனும் நீ யாதலால் இப்போது முன்னம் உன்னைக் கொன்று பின்பு மற்றவரைக் கொல்வேனென்று சிசுபாலன் வெகு ஆக்கிரகத்துடனே பேசியெழுந்திருந்தான்.

அதைக்கண்ட வீமசேனன் வெகு கோபாவேசமடைந்து, சுபாவமாய்ச் சிவந்திருக்குங் கண்களிரட்டிப்பாய்ச் சிவக்கக் கையிற் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு எமன்போற் சிசுபாலனைச் சங்கரிக்கிறேனென்று ஆசனத்தை விட்டுச் சரேலென்றெழுந்து புறப்பட்டான். அப்போதுவீஷ்மர் தாமே எழுந்தோடி அந்த வீமசேனனை யிரண்டு கைகளாலு மணைத்துப் பிடித்துக்கொண்டு, அப்பா வீமசேனா! நீயேன் வீணாய் அவனைக்குறித்துக் கோபிக்கிறாய் அவனுக்கு முடிவுகால மாகையால் அவன் வாயில் தாறுமாறான சொற்கள் புறப்படுகின்றன. எல்லாத்திற்கும் பகவானிருக்கிறார். நீ சும்மா யிருவென்று இவ்வாறு பல சமாதானஞ் சொல்லவே, வீமசேனன் அவர் பேச்சிற் குருத்துவம் வைத்தவனானபடியினாலே உடனே அந்தக் கோபத்தை விட்டுத் தன்னாசனத்திற்போய் உட்கார்ந்தான். அதைப் பார்த்த சிசுபாலன் ஆஹா! ஆஹா! என்று சிரித்து வீஷ்மரைப் பார்த்து, அடா வீஷ்மா! மகாசூரன் புறப்பட்டானே இனி யுலக மழிந்துபோகுமென்று அவனைத் தடுத்தாயோ நீ தடுக்கவேண்டாம். சும்மா அவன் குதித்துச் செய்ய வேண்டியதைச் செய்யட்டும், அவனா லென்னாகும் மாடு மேய்க்கிறவன்போற் கையிற் பெரிய தடியை வைத்துக்கொண்டு, ஆள் உயரமும் பருமனுமாக இருக்கிறானே யென்று மலைக்கிறாயோ? அதற்காக நாம் அஞ்சோம் நீ தடுத்து அவன் சும்மாவிருந்ததாய் ஒரு பெருமை வேண்டாம்; சாமர்த்திய முண்டானால் வந்து பார்க்கட்டும். உகத்திலே (யதார்த்தவாதி வெகுசனவிரோதி) என்கிற பழமொழிப்படி நான் உன்னுடைய சுபாவத்தையும் கிருஷ்ணனுடைய சுபாவத்தையும் எடுத்துச் சொன்னபடியினா லன்றோ அவன் கோபத்திற்குப் பாத்திரனானேன் ஆனாலென்ன ஒரு குறைவுமில்லை. நீயும் அவனுக்கு உபபலமாகச் சண்டைக்கு வந்தாலும் வா. நான் சாவச் சித்தமா யிருக்கிறேனென்று சொன்னான்.

### வீஷ்மர் சிசுபாலன் வரலாறுரைத்தல்

அப்போது வீஷ்மர் தருமபுத்திரனையும் வீமனையும் பார்த்து, வாரீர் பாண்டவச் சிரேஷ்டர்களே! இந்தச் சிசுபாலன் எந்தத் தைரியத்தினாலே அஞ்சாமல் இப்படி பேசுவதும் யுத்தத்திற் கழைப்பதும் உங்கட்குத் தெரியுமா? அதன் காரணத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்: சேதி தேசத்து ராஜனாகிய தமகோஷ னென்பவனுக்கு மூன்று கண்களும் நான்கு கைகளுமாய் ஒரு புத்திரன் பிறந்தான். அப்படி வேற்று ரூபத்தோடு பிறந்த சிசுவைப் பார்த்த அந்த மகாராஜனும் அவன் மந்திரிகளும் இது இராச்சியத்திற் கனிஷ்டகாரணமானபடியினாலே இதை எங்கேயாகிலு மெறிந்துவிட வேண்டுமென்று யோசித்துக்

கொண் டிருக்கையில், ஆகாசத்தில் அசரீரி
வந்து ஒரு வார்த்தை சொல்லிற்று. அஃ
தென்னவென்ருல், ஓதமகோஷராஜனே! இந்
தச் சிசுவை நீங்கள் எறியவேண்டாம் இது
தான் உன் வமிசத்திற்கு மூளே. வெகு பல
பராக்கிரமங்களோடு கூடி மேன்மையடையப்
போகிறது. இந்தப் பிள்ளைக்கே நீ பட்டங்
கட்டலாம் என்று சொல்லியதைக் கேட்ட அர
சன் வெகு சந்தோஷமடைந்திருந்தான். இப்
படி யிருக்க, அவன் மனைவியாகிய சாத்வதி
என்பவள் எந்த அசரீரி தேவதை இப்போது
இவ்வாறு சொல்லிற்ருே? அந்த தேவதையை
நான் சாஷ்டாங்கமாகக் கும்பிடுகிறேன். என்
மீதில் அந்த தேவதை தயை வைத்து இந்த
புத்திரனைக் குறித்து மறுபடியுஞ் சொல்ல
வேண்டுமெனக் கேட்டு வந்தித்தனள். அந்த
தேவதை, ஓ சாத்வதீ! இந்தப் பிள்ளை எவன்
மடியி லிருக்கும்போது அதிகமாகிய ஒரு கண்
ணும் இரண்டு கைகளும் மறைந்துபோகுமோ
அவன்தான் இவனுக்கு மிருத்து. மற்ருெருவ
னுலு மிவனுக்குப் பயமில்லை யென்று சொல்
லிப்போயிற்று. அதைக் கேட்ட அந்தச் சாத்
வதி மிகுந்த சந்தோஷமடைந் திருந்தாள்.

இப்படியிருக்க, தமகோஷனுக்கு மூன்று
கண்களோடும் நான்கு கைகளோடும் பிள்ளை
பிறந்ததென்று கேள்விப்பட்டு இந்த ஆச்சரி
யத்தைப் பார்க்கச் சகல தேசங்களிலு மிருந்து
ராசாக்கள் முதலாகிய யாவரும் வந்து வரிசை
முதலியதுந் தந்தார்கள். அவர்களைத் தமகோ
ஷன் பூசித்து அவரவர்களின் மடிகளிற் குழந்
தையை உட்காரவைத்தான். அதனுலே அக்
குழந்தையின் விகாரரூபம் மாறவில்லை. பின்பு
யாதவ ராஜர்கள் மடியின்மீதில் உட்காரவைத்
துக்கொண்டே வரும்போது கிருஷ்ணன் மடி
யில் உட்காரவைத்த மாத்திரத்திலே அதிக
மான கண்ணும் அதிகமா யிருந்த கைகளும்
மறைந்து போய்விட்டதுகள் அதைப்பார்த்து
அந்த சாத்வதியானவள் கிருஷ்ணனிடத்
திற்கு வந்து மிகவுந் தோத்திரஞ் செய்து, நீ
யொருவரந் தரவேண்டு மென்று கேட்டாள்.
ஸ்ரீ கிருஷ்ணன் அவளைப் பார்த்து, அத்தாய்!
நீ ஏன் இவ்வளவு தோத்திரஞ் செய்கிருய்!
என்னு லாகவேண்டியதற்குத் தடையில்லை.
என்று சொல்ல, அதைக் கேட்ட அந்தச் சாத்
துவதி, அப்பா கிருஷ்ணு! என் மகனுக்கு நீ
மிருத்துவாகத் தெய்வ சங்கற்பத்தினுலாகி
யிருக்கிருய். ஆனபடியினுலே, நீ என் மகன்

செய்யும் அபராதங்களில் நூறு சபராதங்
களைப் பொறுக்கவேண்டும். இதுதான் நான்
வேண்டும் வரமென்று சொன்னுள். அது
கேட்டு ஸ்ரீ கிருஷ்ணனவர் அத்தாய்! அப்
படியே உன் மகன் செய்யும் பிழைகளில் நூறு
பிழைகளைப் பொறுப்பேன். சந்தேகப்படா
தே! அஞ்சாதே! என்று வரங்கொடுத்தார்.
இப்படிப்பட்ட சங்கதியினுலே இந்தச் சிசு
பாலன் யார் சண்டைக்கு வந்தாலுமென்ன
பயமில்லை என்று தைரியங்கொண் டிருக்கி
ருன். ஆனபடியினுலே நம்மிலொருவரும்
அவனேடு சண்டைக்குப் போகவேண்டாம்.
அவனுக்கு வைரி சுவாமியிருக்கிருர் என்று
வீஷ்மர் சொல்லிய சொல்லைக்கேட்ட பாண்ட
வர் மனக்கலக்கந் தீர்ந்தவர்களா யிருக்கும்
போது அந்தப் பாண்டவர்களைப் பார்த்து
வீஷ்மர் மறுபடியும் ஒரு வார்த்தை சொல்லுகி
ருர்.

ஓ பாண்டவர்களே! இந்தச் சிசுபாலனு
க்கு ஆயுள் நெடுநா ளிருக்கிறதென்று நினை
யாதேயுங்கள். இன்னும் ஒரு முகூர்த்தத்திற்
கதிகமில்லை. அதற்கு அடையாள மென்ன
வென்ருல், கண்ணனுலே தனக்குச் சாவென்று
தெரிந்திருக்கையிலும் அவரையே தூஷித்
துச் சண்டைக்கு அழைக்கிருனன்ருே? கால
பாசங் கழுத்தில் விழாவிட்டால் இப்படித்
தன்னைத்தான் மறப்பானே? ஆதலால், ஒரு
முகூர்த்தத்திற்குள் இவன் யமலோகத்திற்குப்
போகப்போகிருன் என்று சொல்லக் கேட்ட
சிசுபாலன் வீஷ்மரைப் பார்த்து முன்போல
வே அனேக தூஷணங்களைச் சொல்லி, அடா
வீஷ்மா! நீ எவரையேனும் வந்தியர்போல்
துதிக்கவேண்டு மென்று இச்சித்தாயே யா
கில், ஐயோ மிகவும் வறியனுந் துஷ்டனுமா
கிய இடையனையா துதிக்கவேண்டும்? இச்ச
பையில் சூரரும், தீரமும், கெம்பீரரும், பெருஞ்
செல்வம், பெரும்புகழ், பெருந்தன்மை யுடைய
வர்களுமாகிய மகா ராஜாக்கள் எத்தனை பே
ரோ இருக்கிருர்களே? அப்படிப்பட்ட பேர்
களையெல்லாம் விட்டுவிட்டு, ஒரு மூடனைத்
துதித்து வாயை ஏன் கெடுத்துக்கொண்டாய்?
அடா மூடா! நீ இவ்வளவாக எங்களை யெல்
லாம் அவமானஞ்செய்து நிந்தித்த பிழைக்கு
நாங்கள் பொறுத்துக்கொண் டிருக்கிற படியி
னுலே நீ பிழைத்திருக்கின்ருயே யல்லது
ஏதோ உன் சாமர்த்தியத்தினுற் பிழைத்திருக்
கிறதாய் நினையாதே என்று சொல்ல, அச்
சொல்லைக் கேட்ட அக் குருகுல பிதாமகர் புன்

னகைகொண்டு யாவரையும் பார்த்து, ஓராசாக்களே! உண்மையான பேச்சொன்று சொல்லுகிறேன் கேளுங்கள்: இந்தச் சபையி லிருக்கிற பேர்களில் யார் மகாசூரனென்று தங்களைத் தாங்கள் நினைத்துக்கொண் டிருக்கிறார்களோ அவர்களை நான் ஒரு திரணமென்று நினைக்கிறேன். ஆனபடியினாலே இந்த நிமிஷத்திலேயே இவனையும் இவனைச் சார்ந்த யாவரையும் யமலோகத்திற்கு அனுப்புவேன். ஆனால் ஸ்ரீ கிருஷ்ணன் அந்தக் காரியத்தில் முனைந்திருக்கிறபடியால், அவர் கருத்தெவ்வாறோ வென்று சும்மா விருக்கிறேனென்று சொன்னார்.

இவ்வார்த்தையைக் கேட்டுச் சிலர் நன்று நன்றென்று புகழ்ந்தார்கள். சிலர் மனது வெகுண்டு வெப்பங்கொண்டு சும்மாவிருந்தார்கள். சிலர் மனக்களிப்புடனே வாயைத் திறக்காமலிருந்தார்கள். சிலர் ஓ! ஓ! ஓ! இந்தக் கிழவனுக்கு இவ்வளவு வயதாயுஞ் சாந்தகுணம் பிறக்கவில்லை; இச் சிசுபாலனோ சுபாவத்தில் துஷ்டன் வெகு கெருவமுள்ளவன். இவனுக்குப் பொறுமை யெவ்வளவேனுமில்லை. ஆதலால், இவனைக் கொல்லவேவேண்டும் அதனாலே தோஷமில்லை என்று சொன்னார்கள். இவைகளைக் கேட்ட வீஷ்மர், ஓ ராஜாக்களே! நீங்களேன் யென்னை நிந்தனையாகப் பேசுகிறீர்கள். உங்களை நான் லட்சியஞ் செய்யமாட்டேன். ஆனாலென்ன செய்கிறேனென்றால் உங்கள் பலத்தைப் பார்த்து உங்கள் தலைமேல் இரண்டு கால்களையும் வைக்கிறேன். நீங்களுஞ் சிசுபாலனோடுகூட யமலோகம் போகச் சித்தமாய் இருக்கிறீர்கள். ஆதலால், அதற்குக் காரணமாகிய ஸ்ரீ கிருஷ்ணனைச் சண்டைக்கு அழைத்துக் கொள்ளுங்களென்று கூறினார்.

உடனே சேதி தேசத்தரசனாகிய சிசுபாலன் கோபமென்னும் அனலானது திகுதிகென்று சொலிக்கக் கண்ணனைப்பார்த்து, அப்பனோடு பிறந்த அத்தையைப் புணர்ந்த பாவி நீயல்லவா, அடா குடிகேடனை இடையா? இந் நிமிஷத்தி லெழுந்து என்னோடு சண்டைக்குவா, வரும்போது உன்னை மகாசிரேஷ்டனென்று துதி செய்கிற இந்தக் கிழவனையும் அந்தப் பாண்டவர்களையும் கூட்டிக் கொண்டுவா. சீக்கிரத்தில் உன்னையும் பாண்டவரையுஞ் சங்கரித்து, இந்த வீஷ்மனையுங் கொன்று இங்கு வந்திருக்கிற அரசர் மனங்களைத் திருப்தி செய்கிறேனென்று சொல்லிய சொல்லைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணபகவான் கொஞ்சம் புன்னகை கொண்டு, தாருகனென்னுஞ் சாரதியைத் தேர்கொண்டுவரும்படி நியமிக்க, அசைவியம்-சுக்ரீவம்-மேகபுஷ்பம்-வலாகம் யென்கிற நான்கு குதிரைகள் கட்டிக் கருடத்துவசம் நாட்டி, வெகு பிரகாசமாய் விளங்காநின்ற ரதத்தைக் கொண்டுவந்து சித்தப்படுத்த மகா சந்தோஷத்துடனே சுவாமி பார்த்து பெரியோர்க ளெல்லாந் துதிக்கப் பாண்டவர் ஜயஜயவென்று கூற வீஷ்மர் கைலாகு கொடுக்கச் சபையை விட்டுவந்து அத் திவ்விய ரதத்தின்மேல் ஏறினார். சிசுபாலனும் ரதத்தில் ஏறித் தன் பரிவாரத்துடனே சபையை விட்டு யுத்தம் பண்ணும்படியாகிய விடத்திற்கு வந்தான். ஸ்ரீ கிருஷ்ணனும் சகல அரசர்களோடு அவ்விடம் வந்து சேர்ந்தார்.

### கண்ணன் சிசுபாலனோடு யுத்தத்திற்குச் சன்னத்தராகுதல்

இவ்வாறாக அந்த யுத்தபூமியில் உதய பருவதத்தின் சிகரத்திற் சூரியன் உதித்தால் எப்படியோ? அப்படிக்குத் திவ்விய ரதத்தி லேறி விளங்காநின்ற ஸ்ரீ கிருஷ்ணனைப் பார் த்து சகலமானபேரும் அவர் தேயசுக்கு அஞ்சி இவர் சாக்ஷாத் நாராயணமூர்த்திதான்சந்தேக மில்லை யென்றும், இந்தச் சிசுபாலன் இனி பிழைக்கமாட்டா னென்றும் நினைத்துச் சுவா மியைக் கும்பிட்டார்கள். சத்துருக்களு மந்தப் பிரசாதத்தை நோக்கி மனங் கலங்கினார்கள். அப்போது பாண்டவர்களும் மற்று மனேக யோக்கிய ராஜாக்களுஞ் சுவாமியைச் சூழ்ந்து நிற்க, அவர்களைக் கண்ணன் பார்த்து, ஓ மகா ராஜாகளே! நீங்கள் இடைந்திருந்து யுத்த வேடிக்கையைப் பாருங்கள். நெருங்க வேண் டாம். இந்தச் சிசுபாலன் சுபாவத்தில் எனக்கு விரோதியாகி, நமக்கிதமாகிய பேர்களை யெல் லாம் வீணாய் உபத்திரவஞ் செய்ய வந்தான். நான் நரகாசுரனைச் சங்கரிக்கப் போன போது, இவன் சேனைகளோடு சூழ்ந்துகொ ண்டு துவாரகையைச் சுற்றிலும் நெருப்பை வைத்துக் கொளுத்தினான். ரைவதக பருவ தத்தில் யாதவர்கள் வேடிக்கையா யிருக்குங் காலத்தில், அங்கேபோய் அவர்களைப் பிடித்து அடித்துக் கயிறுகளாலே கட்டித் தனது நக ருக்குக் கொண்டுபோய்க் காவலிற் போட்டுவிட் டான். என் பிதாவாகிய வசுதேவர் அசுவ மேதஞ் செய்ய ஆரம்பித்துத் தகுந்த காவல

ளிகளோடு குதிரையை விட்டிருக்க, யாகத்தைக் கெடுக்கவேண்டுமென்று நினைத்து அந்தக் குதிரையைப் பிடித்துக் கட்டினான் சவ்வீரமென்னும் நாட்டிலேயிருந்த பப்புருவென்னும் யாதவனுடைய மகா பதிவிரதையாகிய மனைவியை, வலுவில் தூக்கிக்கொண்டுபோய் விட்டான். அன்றியும், கம்சனையன்றி எனக்கு மற்றொரு அம்மானுண்டு அவன் பாரியாளையுந் தந்தவக்கிர னென்பவனுக்காக மாயையினால் மறைந் தெடுத்துக்கொண்டு போய் விட்டான். இதுவுமன்றி, என் பிதாவாகிய வசுதேவர் தாம் கலியாணஞ் செய்துகொள்ளும் படியாக விசாலனென்னுமரசன் மகளைநேமித்திருந்தார். அவளையும் இந்தத் துஷ்டன் வலிமை செய்துகொண்டு போய்விட்டான். இன்னுமிவன் நாமில்லா வேளைகளிலே நம்முடையவர்களாகிய விருஷ்ணிகள் - குகுரர் - தாசாரகர் - சாத்துவதர் - யாதவர் முதலாகிய பேர்களிருக்குமிடங்களிற் பிரவேசித்து, எத்தனை பேர்களையோ வெட்டிப்போட்டான். எத்தனை ஸ்திரீகளையோ கொண்டுபோய் விட்டான். எவ்வளவு பொருள்களையோ கொள்ளையடித்தான்.

இப்படிக்கிவன் ஜராசந்தனோடு சேர்ந்து கொண்டு வேறாக என் விஷயத்திலேயே செய்த அபராதங்கள் எத்தனையோ உண்டு. இவைகளில் ஒவ்வொன்றும் இவனைக்கொல்வதற்குக் காரணமாகியதுதான். ஆனாலும் என் அத்தைக்கு நான் கொடுத்திருந்த வரத்தைப் பரிபாலனம் பண்ணுவதற்காக இவ்வளவும் பொறுத்திருந்தேன். அப்படிக்கு நான் பொறுத்த குற்றங்கள் நூற்றுக் கதிகமாய் விட்டதுகள். ஆகையால் இனியிவனைக் கொல்லாமல் இருக்கமாட்டேன். ஆனாலிவன் என்னைத் தூஷித்ததுகளையும் - என்னைக்குறித்துச்செய்த அபராதங்களையும், நான் அலட்சியஞ்செய்து கணக்கிடவேயில்லை. மற்ற எவை யென்றால், தரும விரோதமாய் உலகத்திற்கு செய்த அபசாரங்களையும் விசேஷமாக என்னைச் சேர்ந்தவர்களுக்குச் செய்த தீங்குகளையுந் தான் கணக்கிட்டேன். அவைகளும் எத்தனையோ ஆச்சுது கள். இனி நான் க்ஷமிக்கலாமோ, இதுகளெல்லாம் இருக்கட்டும். இப்போது இவன் செய்த அநேக விரோதங்களில், இரண்டு மாத்திரங் கொஞ்சமும் பொறுக்கத் தக்கவையன்று. அவை என்னவெனில், அருமையான இந்த யாகத்திற்கு இடையூறுசெய்ய முயன்றதொன்று. வீஷ்மரையும் பாண்டவர்களையும் தூஷித்ததொன்று. இவ்விரண்டைப் பற்றியே இவனை இந்த நிமிஷத்திற் சங்கரிக்க நினைக்கிறேன் என்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியதைக் கேட்ட சிசுபாலனோடு சூழ்ந்திருந்த அநேக வரசர்கள் நடுநடுங்கி, ஒவ்வொருவராய் நழுவினார்கள். அதைப் பார்த்துஞ் சிசுபாலன் லட்சியஞ் செய்யாமல், சகல ஆயுதங்களினாலும் நிறைந்த மகா ரதத்தின்மீதில் இருந்து, வான மிடிப்பதுபோற் கர்ச்சித்து அட்டகாசம் பண்ணினான். இவ்விதமாக இருவரும் யுத்தத்திற்கு முனைந்திருக்க, உதிஷ்டிரர் நாரதமகாமுனிவரை வணங்கி, ஓ சுவாமி! ராஜாக்களுக்கு வினாசகாலத்திற் பூமியிலும் ஆகாசத்திலும் என்னென்ன சகுனக்குறிகள் காணுமோ அவைகளை அடியேனுக்குச் சொல்லவேண்டும் என்று கேட்க, அவர் சொல்லுகின்றார்:

### நாரதமுனிவர் உதிஷ்டிர ராஜனுக்கு உற்பாதக்குறி லக்ஷணங்க ளுரைத்தல்

ஓ உதிஷ்டிர மகாராஜனே! கேளும் அரசர்கள் யுத்தத்திற்குப் புறப்படும்போது சூரியன் முதலிய கிரகங்களுடைய கிரமத்தையும், வழியையும், சம்பந்தத்தையும், சத்துரு மித்துரு பாவத்தையும், உச்ச நீசங்களையும், ஒளிவோடிருப்பதையும், ஒளியிழந்து இருப்பதையும், உதயத்தையும், அஸ்மனத்தையும், சோர்வையும், இறுமாப்பையும், ஸ்தான பீடையையும், காட்சிக்குப் புலப்படுவதையும், புலப்படாமற் போவதையும், சந்தோஷ விசனங்களையும், ஸ்தான பலத்தையும் இவைகளையெல்லாஞ் சோதிட சாஸ்திர மறிந்தவர்களைக் கொண்டு அறிந்து, நன்மை தீமைகளை நிச்சயித்துக் கொள்ளவேண்டும். அந்தக் கிரகங்களுடைய வக்கிர முதலான கதியினால் உத்பாதங்கள் உண்டாகின்றன. அவைகளிற் பூமியில் உண்டாகும் உத்பாதக்குறிகள் எவையென்றால், வெய்யலில் நடக்குஞ் சனங்களுடைய நிழலும், மரங்களுடைய நிழலும், கீழேகாணாமற் போய்விடும். தேவாலயங்களிலும் நதிக்கரைகளிலும் வைக்கப்பட்டிருக்கிற அரசு முதலிய பரிசுத்த மரங்களெல்லாம், இருந்தாற்போல் இருந்து பட்டுப்போம். எறிந்துபோம். இலையுதிர்ந்துபோம். அன்றியும், நாட்டிலுள்ள மரங்கள் - கொடிகள் - செடிகள் இவைகளுக்குள் எதிலாகிலும் பூமேற்பூ பூத்தாலும், காயோடு காய் ஒட்டிக்

கொண்டு காய்த்தாலும், தத்தம் பருவகாலங்களிற் பூர்க்காமலும் காய்க்காமலும் இருந்து அகாலத்திற்பூத்தாலும்,காய்த்தாலும்இவைகளெல்லாம் அந்த ராஜனுக்குக் கேட்டைச் சூசிப்பிக்கும். அல்லாமலும் அந்த ராச்சியம் அக்கினியினு லாகிலும், வாயுவினு லாகிலும், நாச மடையும்.

இதுவுமன்றி, தேவர்களுக்கு உச்சவம் செய்யும்போது விக்கிரகங்கள் தவறிக் கீழே விழுந்தாலும், கொடிகள் - குடைகள் முதலியவை முறிந்து பூமியில் விழுந்தாலும், மண்டபங்கள்-இரதங்கள் இவைகள் காரணமின்றி நாசமடைந்தாலும், ராஜாவுக்கு அவமானம் நேரிடும். மலைகள் நடுங்கினுலும், பிரதிமெய்கள் சிரித்தாலும், அழுதாலும்,அவைகளுக்கு வியர்வை யுண்டானுலும், தேவாலயத்திலாகிலும், ராஜகிரகத்திலாகிலும், ஆயுதச் சாலையிலாகிலும், வாகனச்சாலையிலாகிலும், பொக்கசவறையிலாகிலும், ஆஸ்தான மண்டபத்திலாகிலும், தேன் கூடுகட்டினுலும், கனிகளைக் கொடுக்கும் மரங்களினின்று உதிரம் பெருகினுலும், யானைத்தந்தங்கள்-மாட்டின் கொம்புகள் இவைகளினின்று உதிரங் கண்டாலும், அரசனுக்கு நாசம் நேரிடும். அரசனுக்குப் பிடிக்குங் கவிகை முதலானவைகள் முறிந்து வீழ்ந்தாலும், தவறிப் போனுலும், அவ்வரசனுக்கு மரணம் வரும். தேவரினங்கள் தேசாந்திரத்தி லிருந்து வந்து ஒரு புறத்தி லொளித்திருந்தால், அந்த ராச்சியம் ஆறுமாதங்களுக்குமேல் நாசம் அடையும். பூமி காரணமின்றி இரண்டாய்ப் பிளந்தாலும், அதில் ஓசையுண்டானுலும், கம்பித்தாலும், தவளைகள் பாம்புகளை விழுங்கினுலும், ஒரு சாமப்பொழுது வெந்துஞ் சோறு பதமாகாமற்போனுலும், கிணற்று நீர் பொங்கினுலும், கால்-கை-கண் இவைகள் விகாரவிதமா யிரானின்ற பிள்ளைகளை ஸ்திரீகள் பெற்றாலும், யானைகள்-ஒட்டகங்களையும், எருமைகள்-கழுதைகளையும், பசுக்கள் - பன்றிகளையும் பெற்றாலும் அப்போதுதானே அவ்வரசனுக்கு மிகுந்த கேடு வரும்.

ஆகாசத்தி லுற்பாதங்கள் எவை யென்றால், இரவில் வானவில்லுண்டாம். பகலில் நக்ஷத்திரந் தெரியும். அகாலத்திற் கிரகணமுண்டாகும்.சூரியன் ஒளியிழந்திருப்பன். இப்படிப்பட்ட கெடு குறிகளைச் சோதிடத்தின் படி கோள்களுடைய நடையா லறியவேண்டும். இவ்வளவு உற்பாதங்களுக்குக் கிருஷ்ணனே மூலகாரணமா யிருக்கிறார். எப்படியென்றால்,யாவருக்கும் மேன்மையையாகிலும் தாழ்மையையாகிலும் அவர் தமது சித்தத்தின் படி யுண்டாக்குகிறார். ஆதலால், இந்தக் கிரகங்களுக்கும் அவரே காரணம். நன்மை தீமைகளுக்குக் குறியாக அந்த உற்பாதங்களை யுண்டாக்கி, அந்தக் கிரகங்களுடைய சாரத்தினால் முன்னதா யவைகளை யறியச் செய்திருக்கிறார். அன்படியினாலே, தமது அன்பருக்கு நன்மையையும், பகைவருக்குத் தீமையையும் உண்டாக்குகிற நிமித்தம் அங்கங்கே நற்குறிகளையும் தீக்குறிகளையு முண்டாக்குவார் என்று சொல்லி நாரதர் சும்மாவிருந்தார். ஓ ஜெனமேஜெயனே! யுத்த பூமியில் நிற்குஞ் சிசுபாலனுக்கு சில அவசகுன முண்டாயின. அவைகளை சொல்கிறேன் கேளும்: கொள்ளிவாய் நரிகள் அவனைச் சுற்றி ஊளையிட்டன. பூமி நடுங்கிற்று. எதிர்முகமாகப் பெருங்காற்று வீசிற்று. வெறு வானத்தினின்றும் இடிகள் விழுந்தன. குறைக் கொள்ளிகள் விழுந்தன. பூமியிற் பயங்கரமாகிய ஓசை யொன்று உண்டாயிற்று. பர்வகாலமில்லாமலிருக்கப் பகலிலேயே இராகு சந்திரனை மறைத்தது. அவன் தேறிற் கட்டி யிருக்கின்ற கொடியினது நுனியிற் கழுகு வந்து உட்கார்ந்தது. இன்னும் மாமிசந் தின்னும் பலவகைக் கொடும்பறவைகளும் அவன் தேரைச் சுற்றிச் சஞ்சரித்தன.

## சிசுபாலன் வதை

இவ்விதமாக அநேக உற்பாதங்கள் உண்டாகப் பார்த்துஞ் சிசுபாலன் லக்ஷியஞ் செய்யாமற் கவச முதலானவைகளைப் பூண்டு கையில் வில்லெடுத்துக்கொண்டு கோச்சனை செய்து நின்றான். வீஷ்மர் பாண்டவர் முதலிய பேர்கள் இவ்வுற்பாதங்களைக் கண்டு வெகு சந்தோஷப்பட்டார்கள். மற்றுஞ் சிலர் பயப்பட்டார்கள். இப்படி யிருக்க, சிசுபாலனானவன் உதடு துடிக்கக் கிருஷ்ணனை நோக்கிச் சொல்லியதாவது: அடா கிருஷ்ணா! எனக்கு நீ ஒருவன்தான் முக்கிய சத்துரு. உன்னைக் கொன்று நாற்கடல் சூழ்ந்த இப்பூமியைச் சத்துருவு னுபத்திரவமில்லாமல் ஆளுகிறேன் என்று வெகுநாளாய் இந்த அபிப்பிராயம் இருந்தது. அதற்கு இன்றைக்குத்தான் தெய்வாதீனமாய் நல்லகால முண்டாயிற்று. இப்போது எங்கேயும் ஓடாமல் நில்லு சீக்கிரத்தில் உன்னைச் சங்காரஞ் செய்து, அப்பால் இந்தக்

கிழப்பாவியையும் மூடப் பாண்டவர்களையுங் கொன்று திருப்தி யடைந்து, அரசர்களின் அபகீர்த்தியைப் போக்கடிக்கிறேன் என்று சொல்லிக் கையிலிருக்கும் வில்லை வளைத்து நாணேற்றி நாணோசை கொண்டு, கூர்மை யுடையவைகளும் கணுக்குறுகியவைகளும் பொற்பட்டங் கட்டியவைகளும் வெகு பளபளப்போடுங் கூடியவைகளுமாய் இராணின்ற அனேக பாணங்களைச் சந்தானஞ்செய்து அம்பெடுக்கிறதும் வில்லில் தொடுக்கிறதும் விடுக்கிறதும் ஒருவருங் காணக்கூடாமல் இருக்கும்படியாகிய வேகமாய்க் கண்ணன்மீதில் கோடை மழை சொரிவதுபோல் சொரிந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அவைகளை அங்கீகரித்து, தமது சார்ங்கவில்லில் அனேக பாணங்களைத் தொடுத்து, சிசுபாலனை நோக்கி அடா சிசுபாலா! நீ இத்தனை நாழிகை சரங்களை வருஷித்தாயே இப்போது நான் உன் பேரிற் சிலசரங்களைப் போடுகிறேன் அவைகளின் திறத்தைப்பார்? என்று சொல்லிப் பத்து இருபது நூறு இப்படிக்குக் கூட்டங் கூட்டமாய்ப் பிரயோகித்தார்.

அந்தப் பாணங்கள் இடிவிழுந்தாற்போல் தன் மார்பின்பேரில் விழவே அந்தச் சேதி ராஜன் ஒரு முகூர்த்தகாலம் நெருப்பில் வீழ்ந்த புழுப்போற் றுடித்து, மறுபடியும் மனவலிமையோடு உதட்டைக் கடித்துக்கொண்டு குரூரமாகிய பாணங்களை வருஷித்தான். கிருஷ்ணன் அவைகளை யெல்லாந் துண்டித்து, அவன்மீதில் மறுபடி நூறு பாணங்களைப் பிரயோகித்தார். அவைகளைச் சிசுபாலன் கிட்ட வரவொட்டாமல் தடுத்துத் தள்ளி, ஆறு பாணங்களைப் பிரயோகித்தான். அவ்வாறு பாணங்கள் மேலே விழுந்தமாத்திரத்திலே கண்ணன் வெகு கோபமடைந்து, ஆக்கினேயம்-பார்ச்சன்னியம்-வாயவியம் முதலாகிய சில அஸ்திரங்களை விடுத்தார். சேதி ராஜன் அந்த அஸ்திரங்களை யெல்லாம் பதி லஸ்திரங்களினாலே தடுத்து, கிருஷ்ணனுடைய தேர்-குதிரை-கொடி-சாரதி-சக்கரம் இவைகளில் ஒன்றுந் தெரியாமலிருக்கும்படி அம்புகளைச் சொரிந்து சிங்கநாதஞ் செய்து, கண்ணனைக் கூவி, அடா கிருஷ்ணா! இதோ பார் ஒரு பாணத்தை எய்கிறேன். இதுதான் உன்னை எமலோகத்திற்கு அனுப்பப் போகிறது. மார்பு பிளந்துக் கீழே விழ, இந்த வீஷ்மனும் பாண்டவர் முதலியயாவருந் துக்கித்து உடனே நீ போகுமிடத்திற்கு வரப்போகிறார்கள். இப்படி நான் செய்து கம்சன், ஜராசந்தன், நரகன் முதலாகிய பேர்களுக்கு மித்திரனா யிருந்த கடனைத் தீர்த்துக்கொள்ளுகிறேன் என்று சொல்லி, தீக்ஷண்யமாகிய ஒரு நாராச பாணத்தைப் பிரயோகித்து, இந்திர சித்துவைப்போல் மாயா பலத்தினாலே தேரோடுகூட ஆகாயத்தில் மறைந்திருந்து, ஓயாமற் சரிமாரி பொழிந்தான். யாதவ சிரோமணி! அந்த நாராச பாணத்தையும் மற்றும் அவன் விட்ட பாணங்களையும் பொடிப்பொடியாகச் சிதைத்துத் தள்ளி, சிசுபாலனைக் கூவி, அடா சேதிபதிகளில் அதமனாகிய பேதாய்! ஓடாமல் நின்று உன் சூரத்தனத்தைக் காட்டு, நீ வெகு குணசாலியானபடியினாலேதான் ஜராசந்தன் முதலாகிய சினேகிதருக்குக் கடன் தீர்க்கிறேனென்று புறப்பட்டாய். நீ அஞ்சாதே இப்படிக் கடன் தீர்ப்பதைக் காட்டிலும் அவர்களோடு கூடச் சேருவது நன்மையாதலால், ஒரு நிமிஷத்தில் அப்படியே உன்னை அனுப்புகிறேன் என்று சொல்லித் தாமும் அவனைப்போலவே மாயையில் மறைந்து நின்று, அனேக அஸ்திரங்களை விடுத்தார். அவைகளை அவன் பிரதி அஸ்திரங்களாலே தடுத்தான்.

இவ்விதமாக இருவரும் மாயையால் ஆகாசத்தில் மறைந்து, இரண்டு சிங்கங்கள் ஒன்றோடு ஒன்று யுத்தஞ் செய்வதுபோல் யுத்தஞ் செய்துகொண்டிருக்க, பூமியி லிருக்கிறபேர்களெல்லாம் வீரரைக் காணமல் அம்புகள் மாத்திரங் கீழேவிழக்கண்டு ஆச்சரியப்பட்டு ஜயாபஜயம் ஒன்றுந் தெரியாமையாலே திகைத்து, மனதில் தங்கள் தங்கள் பக்ஷத்திற்கு நன்மை கூறிக்கொண்டிருந்தார்கள். அப்படியே ஆகாசத்தில் தேவர் முதலிய பேர்களெல்லாம், ஓ! ஓ! இப்படிப்பட்ட அதிசய யுத்தத்தை நாம் இதுவரையிற் கண்டதில்லை. கெலிப்புந் தோர்ப்பும் இருக்கட்டும்; சண்டையைப் பார்க்கவந்த நமக்கு அதுகூடவன்றோ கிடைப்பது அரிதாயிற்று என்று சொல்லித் தாங்களும் மாயையினால் அந்த மாயா யுத்தத்தைக்காண முயன்றார்கள். இப்படியிருக்க, சிசுபாலன் மூன்று நாராச பாணங்களினாலே கிருஷ்ணனை யடித்தான். அவரும் மூன்று நாராசங்களினாலே அவைகளைத் துண்டித்து, வேறிரண்டு நாராசங்களாலே அவன் மார்பில் அடித்தார். அப்படி அடிக்கப்பட்டுஞ் சிசுபாலன் கண்ணனை

ஏழுபாணங்களாலே ஒருதரமடித்து, மற்ருெரு நாராசத்திஞலே மார்பைத் துளைத்து, வேறு நாலு பாணங்களாலே நான்கு குதிரைகளையும் ஐந்து பாணங்களிஞலே சாரதியையும் அடித்து அட்டகாசஞ் செய்தான். இப்படி யிருவரும் நெடுநேரம் போர் செய்கையில், ஸ்ரீ கிருஷ்ணன் அனேக அம்புகளைப் பொழிந்து சிசுபாலனுடைய தேர்-குதிரை-சாரதி முதலானவைகள் மறைந்து போகும்படியாகவும், அவன் மெய்சோரும்படியாகவும், அடித்துக் கெர்ச்சனை செய்யவே, அந்தத் தமகோஷ புத்திரன் மிகுந்த ரோஷமும் பொருமையுங் கொண்டு, இனி பாணங்களிஞல் நாம் சண்டை செய்யத் தரமில்லை யென்று நினைத்து, மகா தீக்ஷண்யமாகிய ஓர் அம்பில் ஆக்கினேய அஸ்திரத்தைத் தொடுத்தான். அதைக் கண்ணன் வருணுஸ்திரத்திஞலே தடுத்தார். அவன் குபேராஸ்திரப் பிரயோகம்பண்ணிஞன். அதையும் அவர் மற்ருெரு குபேராஸ்திரத்தால் தடுத்தார். யமாஸ்திரப் பிரயோகஞ் செய்தான். அதை யமாஸ்திரத்திஞலேயே கெடுத்தார். அவன் காந்திருவாஸ்திரம் பிரயோகித்தான். அதை அவ்வஸ்திரத்திஞலேயே போக்கடித்தார். மறுபடி அவன் மானவாஸ்திரம்விட அவர் அதையும் அதஞலே மறுக்க, வாய்வாஸ்திரத்தை விடுக்க, அதையும் வாய்வாஸ்திரத்திஞல் நிறுத்த, பின்பு அவன் உருத்திராஸ்திரம் விடுத்தான். அதை மற்ருெரு உருத்திராஸ்திரத்தால் மடித்தார். உடனே அவன் இந்திராஸ்திரத்தை விட, அவ்விந்திராஸ்திரத்தை இந்திராஸ்திரத்திஞலேயே யழித்து, பின்பு அவன் வைஷ்ணவாஸ்திரம் பிரயோகிக்க, அதையும் மற்ருெரு வைஷ்ணவாஸ்திரத்தாற் குறைத்தார்.

இவ்வாறு சிசுபாலனுங் கிருஷ்ணனும் பிரயோகாஸ்திரங்கள் ஐந்நூறும் உபசம்ஹாராஸ்திரங்கள் ஐந்நூறும் பிரயோகிக்கவே, அவ்வஸ்திரங்களெல்லாம் ஒன்றையொன்று அழிக்கிற நிமித்தம் வியாபித்தலிஞலே உலகமெல்லாம் தீ மூட்டப்பட்டதுபோல் தவித்து நின்றது. அப்போது சிசுபாலன் தான் பிரயோகஞ் செய்த அஸ்திரங்களெல்லாங் கிருட்டிணனுடைய அஸ்திரங்களாலே நாசமடையக்கண்டு, ஒரு மாயையை விடுத்தான். அந்த மாயையிஞலே கதாயுதங்கள் - குண்டாந்தடிகள் - கத்திகள் - சுருட்கத்திகள் - சிறுகத்திகள் - பட்டாகத்திகள் - ஈட்டிகள் - எறிஈட்டிகள் - வல்லயங்கள் - வேலாயுதங்கள் - சூலங்கள் முதலாகிய சகல ஆயுதங்களும் நாலு பக்கங்களிலிருந்து பலசாலிகளாகிய வீரரால் எறியப்பட்டால் எப்படியோ, அப்படிக்கு ஓய்வில்லாமற் கிருஷ்ணன்மீதில் வந்து வீழ்ந்தன. அப்போது பூமியிலுள்ளோரும் வானத்திலுள்ளோரும் கிருஷ்ணனுக்கு அபாயம் நேரிட்டதென்று அஞ்சிஞர்கள். அந்த பகவாஞே, அவ்வளவு ஆயுதங்களையுந் தன்மீதில் விழவொட்டாம லம்புகளிஞல் தடுத்து, துண்டந் துண்டமாகத் துண்டித்து பூமியிற்றள்ளிஞர். பின்பு சேதிராஜன் மற்ருெரு மாயையைப் பிரயோகித்தான். அதஞலே வெகு உயரத்திலிருந்து அளவற்ற பெரிய பாராங்கல்லுகள் வெகு வேகமாய்க் கண்ணன் தேர்மீதில் வந்துவீழ்ந்தன. அவைகளையுங் கிருஷ்ணன் வச்சிராஸ்திரப் பிரயோகம்பண்ணிச் சூரணமாக்கிப் போட்டார். இப்படிக்கு அதுவும் வீணுய்ப் போகவே அவன் மறுபடியும் ஒரு மாயையை விடுத்து, ஊழிகாலத்தி லெப்படி பெய்யுமோ, அப்படிக்கு அவரது ரதத்தின்மேல் மழை பொழியச் செய்தான். அதை அவர் வாயுவாஸ்திரத்திஞற் சிதற அடித்தார்.

இவ்வண்ணமாகக் கிருஷ்ணமூர்த்தியானவர் சிசுபாலனுடைய சகல மாயைகளையும் வீணுக்கிச் சிங்கம்போல் ஆரவாரஞ் செய்தார். அப்போது கிரகணம் விட்ட சந்திரனைக் கண்டால் எப்படியோ அப்படிக்குத் தேவர்கள் கண்ணனைக் கண்டு களித்து மலர்களைச் சொரிந்தார்கள். கிருஷ்ணன் கெர்ச்சித்ததைக் கேட்டும் தன் முயற்சிகள் யாவும் வீணுய்ப் போனதைப் பார்த்தும் சிசுபாலன் பொருமை மிகுந்து, மறுபடியும் மாயை இல்லாமல் விளக்கமாகவே வில்லெடுத்துக்கொண்டு சண்டைக்கு வந்தான். யாதவசிகாமணியும் அப்படியே வில்லெடுத்து ஒரு முகூர்த்தகாலஞ் சண்டை செய்தார். பின்பு சிசுபாலன் அளவில்லாமல் வெகுண்டு கிருஷ்ணனை நோக்கி, அடா இடையா! அடா மூடா! அடா திருடா! அடா மோசக்காரா! அடா வழியா! அடா அற்பா! நீ இனிமேல் இவ்வுலகத்தைவிட்டு லோகாந்தரமடைந்து புண்ணியபுருஷர் அனுபவிக்கும் மேன்மைகளையும், பாவச்செய்கைகளுக் கீடாக உனக்குக் கிடைக்கும் பயன்களையும் பார்த்து, வயிறெரிந்து நெஞ்சுழன்று மெய்சோரப் பல துன்பங்களையும் அனுபவி என்று உதடு துடிக்க

வும் முகம் படபடக்கவும் பேசி, பலவித அம்புகளையும் வில்லிற் றொடுத்து விடுத்தான். அந்த அம்புகளினாலே கண்ணனுடைய திருமேனி யெல்லாஞ் சல்லடைக் கண்கள்போல் துளைப்பட்டுப் புண்ணாகி உதிரம் பெருக, மறுபடியும் அப்புண்களிலேயே மேன்மேலும் அம்புகளேற, அக்கண்ணனுக்குக் கண் திறக்கக் கூடாமலும் மூச்சுவிடக்கூடாமலும் போனதுமன்றி, தேரென்றுங் குதிரை யென்றும் ஒன்றுந் தெரியாமல் முழுவதும் அம்புகளாகவே காணப்பட்டன. அதனாலே சுவாமி சோர்ந்து, தேர்த்தட்டின்மீதிற் கம்பத்தைக் கைகளாற் பிடித்துக்கொண்டு மெய் பதைக்கவிருந்தார். இதைக்கண்ட சிசுபாலன் அட்டகாசஞ் செய்து, கிருஷ்ணா போய்விட்டாயா வென்று சொன்னான். இதை யெல்லாம் பார்த்த யாவரும், ஐயையோ! என்ன அனியாயம் என்று கண்களினின்றும் நீர் வடியக் கதறினார்கள்.

இப்படியாக அன்பர் கதறுவதையும் பகைவன் களித்துப் பேசுவதையும் சுவாமி சோர்ந்திருப்பதையும் பார்த்த அவருடைய சாரதியாகிய தாருகன் அவரை நோக்கி, சுவாமி! தேவரீர் மகா மகா சூரர்கள் எத்தனை பேர்களோடேயோ யுத்தஞ் செய்யப் பார்த்திருக்கிறேன். ஒரு யுத்தத்திலுந் தேவரீர் இப்படிக்குச் சோர்ந்துபோனதில்லை. இப்படிப்பட்ட யுத்தமும் பார்த்ததில்லை. இந்தப் பாவியோ யாவரிலும் அதிசயித்திருக்கிறான். இதென்ன ஆச்சரியம். இப்போது நானும் குதிரைகளும் தேவரீருடைய மகிமையினாலே உயிர்வைத்துக்கொண் டிருக்கிறோமே யல்லது எங்களுடைய சக்தியினாலில்லை. இனிமேல் உயிர் நிற்பதும் வருத்தமாய் இருக்கிறது. தேவரீருடைய அன்பர் யாவரும் கதறுகிறார்கள். ஏனிப்படி யுபேக்ஷை செய்கிறீர். தேவரீருடைய பிரபாவத்திற்கு இவனொரு பொருளோ? இப்படிக்குச் செய்வதை நோக்கினால், ஒரு லீலையென்று காண்கிறது. உபேக்ஷைக்கு இது சமயமன்று. ஆதலால், இந்தப் பாவியை இப்போதே சங்கரித்து விளங்கவேண்டும் என்று சொன்னான். அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணன் சாரதியைப் பார்த்து, அடா தாருகா! நான் இப்போது உபேக்ஷை செய்யவில்லை. மற்றென்னவென்றால், அவனுக்கு ஆயுளின் முடிவாகிய முகூர்த்தத்தை எதிர்பார்க்கிறேன். இவன் யாரென்றால் முன்னங் கிருதயுகத்திலே எவன் இரணியகசிபுவாகி யிருந்து நரசிங்கரூபியாகிய என்னாலே கொல்லப்பட்டுப் பின்பு திரேதாயுகத்தில் இராவணனாயிருந்து, ஸ்ரீராமரூபியாகிய என்னாலேயே கொல்லப்பட்டானோ அவன்தான் இவன். ஆனபடியினாலேதான் இவனுக்கு இவ்வளவு சவுரியமும், பலமும், செருக்கும் இருக்கின்றன. இவன் வைகுந்தத்தி லிருக்குந் துவாரபாலகரில் ஒருவன். துர்வாச மகாமுனியின் சாபத்தினாற் பூமியிற் பிறக்கவேண்டி, எனக்கு மித்திரனா யிருந்து வெகுகாலம் பூமியி லிருப்பதைக்காட்டிலுஞ் சத்துருவா யிருந்து கொல்லப்பட்டாற் சீக்கிரத்தில் திவ்வியலோகஞ் சேரலாம் என்று சத்துருவாகப் பிறக்கும்படி ஒப்புக்கொண்டு, மூன்று ஜெனனங்களுஞ் சத்துருவாக வந்து பிறந்தான். இந்த முகூர்த்தத்திலே அந்தச் சாபம் விமோசனமாகி, நற்கதி யடையப்போகிறான். யாவரும் பார்க்கப்போகிறீர்கள். ஆகையால், இதோ அவனைச் சங்கரிக்கிறேன் அஞ்சாதே யென்று சொல்லி, உறங்கிக்கொண்டிருந்த சிங்கம் விழித்தவுடன் எவ்வாறு பிடரிமயிர்களைச் சிலிர்த்து நிமிர்ந்து கெர்ச்சிக்குமோ, அவ்வாறு இரதத்தின் தட்டில் இறுமாப்புடன் உட்கார்ந்து அட்டகாசஞ் செய்து, சங்கத்தை யெடுத்து ஆகாசமுந் திசைகளும் பிளந்து போகும்படித் துவனி செய்யவே யாவரு மனக்களிப்படைந்து ஸ்ரீ கிருஷ்ணா ஜயம் ஜய மென்று கூறினார்கள்.

அந்த மங்கள கோஷத்தைக் கண்ணன் கேட்டு, வெகு சந்தோஷத்தோடு சுதரிசனம் என்னுஞ் சக்கரத்தைக் கையிலெடுத்துப் பிரயோகித்தார். பிரயோகிக்கவே அந்தச் சக்கரமானது அனேககோடி சூரியருதித்ததுபோற் சொல்லக்கூடாத பிரகாசம் பொருந்தி தனது ஆயிரம் அரங்களிலிருந்து ஆயிரஞ் சுவாலைகளெழும்பித் திசைகளனைத்தையும் மூடி விழுங்கிக்கொண்டிருக்கும் ஊழித் துவாந்தத்தைத் துரத்தப் புறப்பட்ட பிரளயகால உருத்திரன் அனேகம் வாய்களைத் திறந்து நாக்குகளை நீட்டிக்கொண்டு வருவதுபோற் பயங்கர ரூபத்தோடு சொலித்துக்கொண்டு தேவர்களு முனிவர்களும் போற்றப் புறப்பட அதைக்கண்ட சிசுபாலன் தைரியத்தை விடாமல் தன்வலிமை முழுவதையுங் கொண்டு இன்னதென்றில்லாமற் சகல ஆயுதங்களையுங் கூட்டங் கூட்டமாய் வருஷித்தான். அவைகளை யெல்லாம் அந்தச்

சக்கரம் விழுங்கிக்கொண்டே சமீபத்தில் வரு
கையிலுஞ் சிசுபாலன் மற்று மனேக விதமா
கிய ஆயுத ராசிகளைப் பொழிய, அவைகளுங்
காய்ந்த இரும்பில் தோய்ந்த நீர்த்துளிகள்
போல் அச் சக்கராயுதத்திற் சுவழிப்போக
அதைக்கண்ட யாவரும் இனிச் சிசுபாலன்
பிழைப்பதில்லையென்றுகோலாகலமாகப்பேச,
அப்பேச்சுகளைக் கேட்டுச் சிசுபாலன் அந்த
சக்கரத்தின்மீதில் வெகு பொருமை கொண்ட
வனுகித் தடுக்கும்படியாகிய பிரயத்தனஞ்
செய்துக்கொண் டிருக்கையிலேயே அந்தத்
திவ்விய ஆயுதமானது சிசுபாலனுடைய சிரத்
தை யறுத்துக் கீழே தள்ளிவிட்டது. வச்சிரா
யுதத்தினுற் வெட்டப்பட்ட பெரிய மலையின்
சிகரம்போல அந்தத் தலை கிரீட குண்டலங்க
ளோடு கீழே விழுந்தபோது, மற்ற சத்துருக்க
ளுடைய கண்ணீர்த்துளிகளுங் கீழே வீழ்ந்
தன. உடனே ஸ்ரீ கிருஷ்ணன்மீதில் எல்லா
ருடைய பார்வையாகிய மலர்களோடு தேவர்
கள் சொரிந்த கற்பக மலர்களும் வீழ்ந்தன.
இவ்வாறு உலகங்களுக்கெல்லாம் மார்பிலடி
த்த ஆணிபோலிருந்த சிசுபாலனைச் சங்கரித்
ததுகண்ட தேவர்களும் முனிவர்களும் அர
சர்களும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தோத்திரஞ் செய்
தார்கள். தேவதுந்துமி முதலிய வாத்தியங்கள்
முழங்கின. அப்சரமாதர்கள் ஆடினுர்கள். கந்
திருவர் பாடினுர்கள். பாண்டவர் முதலாகிய
இஷ்டர்கள் வந்து ஆலிங்கனஞ் செய்தார்கள்.
பகைவர் பற்கடித்துக் கையடித்துப் பெரு
மூச்சுவிட்டுத் தீயவிழித்து நோக்கினுர்கள்.

இப்படிக்கு அல்லோலமாயிருக்குங்காலத்
தில் அந்தச் சிசுபாலனுடைய தேகத்தினின்
றும் ஒரு சோதியானது யாவரும் பார்த்துக்
கொண்டிருக்கையிலேயே கிளம்பி ஸ்ரீ கிருஷ்
ணனை வலமாக வந்து அவர் திருவடியிற் கல
ந்து மறைந்தது. அதைக் கண்ட சகலமான
பேரும் ஆச்சரியப்பட்டு திப்பிரமைகொண்டு
இதென்ன அதிசயம். இவ்விதக் காட்சியை
எங்கு மெக்காலத்திலும் எவருங் கண்டதில்லை.
விஷ்மாசாரியார் சொல்லியவனைத்துஞ் சரியே
இக்கண்ணன் சகல சராசரங்களையும் படை
த்து அளித்து அழிக்குங் காரணப் பொருளே
என்று யாவரு நினைத்து, மனோவாக்கு காயங்
களினுலே சுவாமியை வணங்கி, வீஷ்மர் முத
லானோரையுந் துதித்தார்கள். அன்றியும்,
யோகிகளும் முனிவர்களும் வேதங்களினுலே
தோத்திரஞ் செய்தார்கள். கின்னரர்-கிம்புரு
டர்-கந்திருவர் முதலானோர் யாழிசைத்துப்
பாடினுர்கள். சித்தர் - சாரணர் முதலியோர்
விருது கூறினுர்கள். இப்படி யிருக்க, தரும
புத்திரர் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு, ஆனந்த
பாஷ்பத்துடனே துதித்து, அவர் முகக்குறிப்
பினுலே தன் தம்பியாகிய சகாதேவனை நோ
க்கி சிசுபாலனுக்குச் செய்யவேண்டிய பிரே
தக்கிரியைகளைச் செவ்வையாக நடத்தும்படி
ஆக்யாபித்தார். அப்படியே அந்தச் சகாதேவ
னும், வீமார்ச்சுன நகுலரும், அந்தச் சிசு
பாலனுக்கு அவன் புத்திரனுகிய திருஷ்ட
கேது என்பவனைக்கொண்டு சாமக்கிரியைகளை
வெகு சிறப்பாய் நடத்தினுர்கள். பின்பு ஸ்ரீ
கிருஷ்ணனும் பாண்டவர்களும் அந்தத்
திருஷ்டகேதுவுக்குச் சேதி ராச்சியப் பட்டா
பிஷேகஞ் செய்வித்தார்கள்.

### யாக சமாப்தம்

இவ்விதமாகச் சத்துரு சங்கார மான
வுடனே தருமபுத்திரர், சகல முனிவர்கள் -
மறையோர்கள் - அரசர்கள் முதலாகிய பேர்க
ளுடனேகூட யாகத்தை நிறைவேற்ற, ஸ்ரீ
கிருஷ்ணனுக்கு முதற் பூசை செய்தபின்
முறையே நாரதர்-பருவதர்-வியாசர்-தவுமியர்-
பைலவர்-சுமந்து-சைமுனி முதலான பெரி
யோர்களோடு எனக்கும், பாகிலிகன்-சோமதத்
தன் முதலாகிய அரசர்களுக்கும், வைசியர்
களுக்கும், சூத்திரர்க்குந் தகுந்தபடி பூசைசெ
ய்து, பல தானங்களுந் தக்ஷிணைகளுங் கொடு
த்து, யாவருக்கும் அறுசுவைகளோடு கூடிய
சிறந்த அன்ன முதலியவற்றை இடுவித்தார்.
அந்த யாகத்தில் அன்னங்களும்-கறிகளும்-
பலகாராதிகளும் - மலை மலையாகக் காணப்பட்
டன. நெய், தயிர், பால் முதலானவைகள் மடு
மடுவாகத் தேங்கின. வந்த ஜனங்களெல்லாந்
தருமவான்களும், கல்வியுடையவர்களும், நல்
லொழுக்க முடையவர்களுமாகவே யிருந்தார்
கள். வேதியரெல்லாம் நான்கு வேதங்களை
யும், ஆறு அங்கங்களையும், சகல சாஸ்திரங்
களையுங் கற்றவராகவேயிருந்தார்கள். மேலும்,
அவ்வேதிர் முதலானோர் நன்றாய்ப் புசித்து,
மனக்களிப்புடனே ஒருவரோடொருவர் சாஸ்
திரங்களிற் கட்சி சொல்லிப் பிரசங்கித்துக்
கொண் டிருந்தார்கள். அந்த யாகத்தில் லட்
சம் பிராமணர் புசித்தால் அதற்கடையாள
மாகச் சங்கத்தை ஒருதரம் ஊதுகிறதுண்டு.
அப்படிக்குச் சங்க மூதியதற்குக் கணக்கில்லாம
லிருந்தது.

அன்றியும், மகாராஜாக்களெல்லாம் பெரு
மையும் நாணமும் விட்டு, தாங்கள் தானே
மனக்களிப்புடன் புசிப்போர்க்கு அன்ன முத
லாகியவைகளைப் பரிமாறுவதும் உபசரிப்பது
மாக யிருந்தார்கள். யாகத்திற்குவந்த யாவருந்
தத்தமக்கு இஷ்டமானவைகளைப் பெற்று,
வெகு சந்தோஷத்துடன் நல்ல பூஷணங்களி
னாலும் வஸ்திரங்களினாலும் அலங்காரம்
பொருந்தி, ஒவ்வொருவரும் தேவர்கள்போல்
விளங்கினமையால், அந்த யாகசாலை சுவர்க்க
லோகத்தோடு ஒத்திருந்தது. அவ்விடத்திற்
சகல காரியங்களுக்கும் வெள்ளிப் பாத்திரங்
களும் பொற்பாத்திரங்களுமே உபயோகப்
பட்டுக்கொண் டிருந்தன. யூபஸ்தங்களும்
வேதிகைகளும் அதின் சாமான்களும் யாவுஞ்
சுவர்னமயங்களாகவும், இரத்தினமயங்களாக
வும் இருந்தன. அந்த யாகசாலையைச் சுற்றி
லங்கையிலிருந்து கொண்டுவந்த பொற்பனை
களை நாட்டி, அவைகளில் முத்துத்தோரணங்
களும் பவளத் தோரணங்களும் கட்டப்பட்
டிருந்தன. தானத்திற்காகக் கொண்டுவந்து
சேர்க்கப்பட்டிருந்த காமதேனுவுக் கொப்பா
கிய அநேக பசுக்கூட்டங்களும், திரவியங்
களின் குப்பைகளும், மற்றும் வஸ்திர பூஷ
ணங்களின் ராசிகளும், அந்த யாகசாலைக்கு
ஆபரணம்போல் இருந்தன. இப்படிப்பட்ட
பல சிறப்புடனே அந்த மகா யாகத்தை ரித்து
விக்குகள் வேதவிதிப்படி ஒரு குறைவுமின்றி
ஐந்து தினங்களிலே நிறைவேற்றினர்
கள். பின்பு தருமபுத்திரர் முன்போலவே
ஸ்ரீ கிருஷ்ணன் முதலாக யாவருக்கும் பூசை
செய்து பதினெண் வாத்தியங்கள் முழங்க,
கந்திருவர் முதலானோர் வீணை பாட, அப்சர
மாதர்கள் நடனஞ் செய்ய, வந்திகள் புகழ,
வேதியர்கள் சொஸ்திவாசனஞ் சொல்லி
சூழ்ந்து வர, அரசர்களெல்லாஞ் சத்திரம்-
சாமர முதலாகிய பணிவிடைகள் செய்து வர,
ஸ்திரீகளும், புருஷரும், மங்கள வஸ்துகளைக்
கையிலேந்திக் கோலாகலத்துடன் வர, நால்
வகைச் சேனைகளுந் துவச பதாகைகளுடன்
சுற்றிக்கொண்டு வர, தமது பத்தினியுடனே
யாகசாலையினின்றும் புறப்பட்டுப் பரிசுத்த
மாகிய நதியில் அவபிரத ஸ்நானஞ் செய்து,
வெகு தானங்கள் வழங்கி, யாவரும் சம்ராட்
டென்று புகழும்படி விளங்கினர்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே!
இவ்விதமாக அந்த இராஜசூய யாகம் என்
னும் பெருங்கடலைக் கண்ணனெனுங் கப்பலி
னாலே கடந்து, தருமமும் புகழுமாகிய பொரு
ள்களைத் தேடி வெகு சிறப்புப் பொருந்தி
விளங்காநின்ற தருமபுத்திரமகாராஜன் யாவ
ரையும் நோக்கி, உங்களாலே நான் இப்
பெருமை பெற்றேனென்று உபகாரமாகச்
சொல்லி, அவரவருக்குத்தக்கபடி பரிசுகொடுத்
தனுப்பினர். பின்பு வீஷ்மாசாரியர்-துரோண
சாரியர்-கிருபாசாரியர் - அசுவத்தாமர்-பாகிலி
கன்-சோமதத்தன் - பூரிச்சிரவன் - சல்லியன்-
துரியோதனன் - அவன் தம்பிமார்கள் - திரித
ராட்டிரன்-விதுரன்-சகுனி-கர்னன் முதலான
பேர்களுக்கெல்லாம் வெகு சிறப்பாகப் பூசை
கள் செய்து கொண்டாடி உபசரித்து, அனே
கம் யானைகள்-குதிரைகள்-ஆடைகள் - ஆபர
ணங்கள் முதலாகிய பரிசுகள் கொடுத் தனுப்பி
வித்தார். அப்படியே பலராமர்-வசுதேவர்-
அக்குரூரர்-பிரத்தியுமனன்-அனிருத்தன்-சாம்
பன்-கதன்-சாருதேஷ்ணன் முதலான யாதவர்
களுக்கும் பூசை செய்து பரிசு கொடுத் தனுப்பி
வித்தார். மேலும், துருபதன் - பீஷ்மகன் -
பாண்டியன்-பகதத்தன்-விராடன்-சகதேவன்-
திருஷ்டகேது முதலானோருக்கும் பரிசளித்
தனுப்பினர். அன்றியுந் தம்து தம்பிமார்
கள் நால்வரையும், சாத்தகி - துஷ்டத்தாய்
மன் முதலாகிய பேர்களையும், தங்கள் தேசங்
களுக்குப் போகின்ற அரசருக்கு வழிவிட்டு
உபசரித்து வரும்படிகட்டளையிட்டார். அதின்
படியே அவர்களும் அவ்வரசர்களோடுங்
கூடி வெகுதூரம் போய் வழிவிட்டு உபசரித்து
அவர்களிடத்தில் விடைபெற்று வந்தார்கள்.
அன்றியும், நாரதர் - பருவதர் - தவுமியர் முத
லாகிய மகாமுனிவர்களுக்குத் தேவோபசாரஞ்
செய்து, தாமே கூடப்போய் உபசரித்து வழி
விட்டு வந்தார்.

இவ்வண்ணமாகச் சகல தேசங்களையும்
ஜெயித்துக் கொணர்ந்தவைகளும், யாகத்
திற்கு உலுப்பையாக வந்தவைகளும், பொக்
கிஷத்தி லிருந்தவைகளுமாகிய எல்லாப் பொ
ருள்களையும் யாகத்திற்காகச் செலவு செய்து,
அந்த யாகத்தைக் குறித்து வந்திருந்த யாவ
ரையும் அனுப்பிவிட்டு, ஸ்ரீ கிருஷ்ணனோடு
தேரின்மேலேறி நகர்ப்புறத்தை யடைந்து,
வீதியை வலமாக வந்து மாளிகை சேர்ந்து
களித்திருந்தார் தருமபுத்திரர். இப்படி யிருக்
கையில், கிருஷ்ணன் அவரைப் பார்த்து, ஓய்
ராஜாதிராஜனே! நீர் மகானுபாவரானபடியி

ஞலே இந்தப் பெரிய யாகத்தை நிறைவேற்றிச் சத்துருக்களில்லாமல் அகண்ட மண்டலாதிபராய் உமது பிதாவின் குறைவையும் நீக்கி விளங்குகிறீர். நானும் இவ்விடம் வந்து நெடுநாளாயிற்று. உற்சவங்களை எல்லாங் கண்களிக்கப் பார்த்தேன். துவாரகைக்குச் செல்ல விடைதரல் வேண்டுமென்று சொல்ல, தருமபுத்திரர், கிருஷ்ணு! நான் கேவலம் அசேதனத்தோ டொத்தவன். எனக்கு, அல்லது என் தம்பிமார்களுக்கு, அல்லது மற்றெவருக்குந்தான் மகிமை யேது? உமது கிருபாகடாக்ஷம் பெற்ற மகிமை யொன்றிருந்தபடியினுலே மேன்மைக ளெல்லாம் வந்தன. உம்மைப் பூசிப்பதற்கும், துதிப்பதற்கும், உமது பெருமையைப் புகழ்வதற்கும் நான் வல்லவனே? ஓ கிருபா சமுத்திரமே! உம்மை விட்டுப் பிரிந்து நானிருக்க மாட்டேன். ஆனுலும் உம்முடைய அபிப்பிராயத்தை தடுக்கவு மாட்டேன் என்று சொல்லிக் கண்களில் நீர் ததும்ப எழுந்து ஆலிங்கனஞ் செய்து, உடல் புளகமுறும்படி ஸ்தம்பம்போல் நின்ருர். ஸ்ரீ கிருஷ்ணன் அவருடன் கூடக் குந்தியினிடம் போய் தொழுது, அத்தாய்! நீ புத்திரரால் வெகு சிறப்பு பெற்ருய். இனி நான் போய் வருகிறேனென்று சொல்லி அவளிடத்தில் ஆசீர்வாதத்தோடு விடை பெற்று, மற்ற பந்துவிடத்திலும் விடை பெற்று, கிருதவர்மன் - சாத்தியகி முதலிய யாதவர்களுடனே பாண்டவருஞ் சூழ்ந்துவரத் தேர்மேலேறிப் புறப்பட்டு, சிலதூரம் போனபின் தருமபுத்திரரை பார்த்து, ஓய் மகாராஜாவே! இராச்சியத்தைச் செவ்வையா யாண்டு, யாவரும் புகழும்படியா யிருமென்று புத்தி சொல்லி, துவாரகை போய்ச் சேர்ந்தார். தருமபுத்திரர் தம்பிமாருடனேயும் மற்ற பரிசனங்க ளுடனேயும் பட்டணத்திற்குத் திரும்பி வந்துவிட்டார்.

### தருமராஜனுக்கு வேதவியாச முனிவர் பின்வரு முற்பாதங்களை எடுத்தோதல்

அப்பால் ஒருநாள் தருமபுத்திர மகாராஜன் சபையி லிருக்கும்போது ஸ்ரீ வேதவியாச மகாமுனிவர் மாணுக்கரோடு எழுந்தருளக் கண்டு, தம்பிமார்களுந் தானும் எதிர்கொண்டு வழிபாடு செய்து ஆசனத்தி லுட்காரவைத்து அவருடைய அனுமதியினுலே தானும் ஆசனத்தி லுட்கார்ந்தார். பின்பு வியாசமகாமுனியானவர் தருமபுத்திரரைப் பார்த்து, ஓ குருவமிச திலகனே! தெய்வாதீனமாய் இராஜசூய யாகம் நிறைவேறிற்று. பகைவரெல்லாம் மாண்டார்கள். சகலமான பேரும் கொண்டாடும்படியாக சம்ராட்டென்னும் பேர் பெற்றீர். இப்படிப்பட்ட வீபவத்துடனிராநின்ற உம்மைக் கண்ணுலே கண்டேன். சந்தோஷங் கொண்டேன். உம்மாலே வெகுவாகப் பூசிக்கப்பட்டேன். இனி நான் போகிறேன் செலவு கொடுமென்று கேட்க, தருமபுத்திரர் அவரை நமஸ்கரித்துச் சொல்லுகிருர்: ஓ சுவாமி! ஓ எங்கள் பிதாமகராகிய வியாசரே! அடியேன் மனதில் ஒரு சந்தேக மிருக்கிறது. அதாவது நாரதமுனிவர் பூமியிலும் ஆகாசத்திலும் சில உற்பாதங்கள் உண்டாகுமென்றும், அவைகளுக்குப் பலன் இன்னதென்றுஞ் சொன்னுர் அப்படியே இப்போது உண்டாகிய உற்பாதங்களுக்குச் சிசுபாலன் மரித்ததே பலனு? இன்னும் வேறுண்டா? அதனைச் சொல்ல வேண்டும் என்று வினவ, வியாசர் அருளிச் செய்கிருர்.

கேளும் தருமபுத்திரரே! இப்போது கண்ட உற்பாதங்களின் பயன் இவ்வளவோடு போகவில்லை. இன்று முதற் பதினுலு வருஷமளவு மிருக்கிறது. பூமியில் இருக்கிற சகல ராஜாக்களுந் தங்கள் பரிவாரத்தோடு நாசம் அடையப் போகிருர்கள். அதற்குங் காரணம் நீர்தான். உம்முடைய தம்பிமார்களுடைய கைகளினுலேயே பெரும்பாலும் மடியப்போகிருர்கள். இவ்வளவுக்கும் முதற்காரணந் துரியோதனனுடைய கெடு நினைவுதான். அப்படிக்கு க்ஷத்திரியவினுசம் வருகிறதற்குமுன்னே நீர் ஒரு சொர்ப்பனங் காணுவீர். அதென்ன சொப்பன மென்ருல், சிவன் விருஷபத்தின் மீதேறிப் பூதப்பிரேதபிசாசங்களுடனே தென்றிசை நோக்கிப் போவதாகக் காண்பீர் அப்போதே க்ஷத்திரியருக்கு மிகுந்த கேடு வந்ததென்று நினையும். ஆனுல், இதுகளுக்கெல்லாம் நாம் காரணமாயினுேமே என்று விசனப்பட வேண்டாம். அப்படிக்குக் காரணமிகுந்ததே அமைகிறது. இதெல்லாம் நடக்க வேண்டிய வினைதான். ஆனபடியினுலே நீர் சந்தோஷமாய் இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிரும் என்று சொல்லி, சிஷருடனே கூடத் தவத்திற்குப் போய்விட்டார். பின்பு தருமபுத்திரர் வியாசர் சொல்லிய வார்த்தையைக் கேட்டு மனதிற் கலக்கத்துடனே இராச்சியத்தைத் தரும வழுவின்றிப் பரிபாலனஞ் செய்து வந்தார். மேலும் அவர் வெகு பயபக்

திகளோடு வேதசாஸ்திரங்களையும் உலக யியற்கைகளையும் நீதி நெறிகளையும் நன்றாய்க் கற்றறிந்து சரியாய் நடக்கத்தக்க வேதியர்களைத் தமது சபையில் நிரந்தரமாக இருக்கச் செய்து, அவர்களின் அனுமதிப்படியே குடிகளுடைய யோகக்ஷேமங்களை நடத்திவந்தார். இப்படி யிருக்கும்போது அந்தந்தக் காலங்களில் தப்பாமல் மழை பெய்து வந்தபடியாற் பூமி யெல்லாம் பயிர் நிரம்பி, யாவருங் குறைவற்ற செல்வ மடைந்து, தத்தமது நெறிகளில் வழுவாது நடந்து வந்தார்கள். இப்படிக்குக் கிருதயுகமென்னும்படி தருமத்தைப் பூரணமாக நடத்திச் சொல்லத்தரமில்லாத செல்வச் சிறப்போடு தருமபுத்திரர் தமது அரசாட்சியைச் செய்து வந்தார்.

இராஜசூயச்சருக்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது,

## சூதுபோர்ச்சருக்கம்.

### கண்ணன் துதி

அங்கையி னேமி சங்குவா டண்டோ டடற்சரா சனந்தரித் தருள்வோன், சங்கையின் மறைக ளாயிரங் களுக்குஞ் சாற்றுதற கரியதத் துவத்தோன், கங்கையி னறலுங் காளியன் முடியுங் காளிந்திக் கரையுமே கமழுங், பங்கய மலர்க ளிரவுநண்பகலும் பணிந்துபா டுதுமவன் புகழே.

ஓ ஜெனமேஜெய மஹாராஜனே! "முன் குலத்தவர்க்கு முனிகுலத்தவர்க்கு மும்மதக் கைம்மதக்களிற்று, மன்குலத்தவர்க்கும் வான் குலத்தவர்க்கும் வரப்பிலா வகைக்கலைதெரியு, நன் குலத்தவர்க்கும் பொருளெலா நல்கி நாடொறும் புகழ்மிகவளர்வான், றன்குலக் கதிர்போற் றேய்ந்தொளிசிறந்தான் றண்ணளித் தருமனுமரசன்" இப்படி யிருக்கத் துரியோதனனானவன் அத் தருமபுத்திருடைய இராஜசூய யாகங் கழித்தவுடனே ஒருநாள் சகுனியோடு கூட வந்து தான் தனியே சென்று அதினுடைய உயர்வும்-சிறப்பையும் - பிரகாசத்தையும்- நவமணி மயமாகிய வேலைப்பாடுகளையும்-விசித்திரமாகிய விலாசத்தையுங் கண்டு ஆச்சரியப்பட்டு, அதின் ஓர் புறத்தில் படிக்கல்லால் செய்த ஒரு தாமரைத் தடாகமிருக்க, இராஜசூய யாகங் கழித்தவுடனே ஒருநாள் அவருடைய சபையைப் பார்க்கச் சகுனியோடு

அது நீர்போற் காணமல் நிலம்போற் காணப்பட்ட படியினலே அவ்விடத்திற் சாதாரணமாக நடந்து அந்நீரில் அமிழ்ந்துபோனன். அதைக்கண்ட அந்த சபையின் காவற்காரராகிய மயனல் ஏற்படுத்தப்பட்டபேர்கள் சிரித்து மகாராஜாவுக்குத் தெரிவிக்க, அந்தத் தருமபுத்திரர் வந்து அவனை எடுத்து உலர்ந்த வஸ்திரத்தைக் கொடுத்து கட்டிக்கொள்ளச் சொன்னர். அவனும் ஈர ஆடையை அவிழ்த்துப் போட்டு உலர்ந்த வஸ்திரத்தை உடுத்திக் கொண்டு போகுமளவில், அச்சபையிலிருந்த திரௌபதியும் வீமசேனனும் அர்ச்சுனனும் இரட்டைப் பிள்ளைகளும் மற்றும் அனேகரும் நகைத்தார்கள். மறுபடியுந் துரியோதனன் வேறு வழியாய்ப் போகுமளவில், அங்கொரு படிகக்கல் பூமியிலிருந்து அது நீருள்ள தடாகம்போல் தோன்றினபடியினலே வஸ்திரத்தைத் தூக்கிக்கொண்டு செல்ல, அதைக் கண்டு வீமார்ச்சுன திரௌபதி முதலானேர் சிரித்தார்கள். துரியோதனன் மறுபடியும் போகும்போது விசித்திரமாக சிற்சில ஸ்தம்பங்களிருந்தும் இல்லாதவையாகக் காணப்பட்டபடியால், தெரியாமல் அவைகளில் இடித்துக்கொண்டான். அப்போதும்யாவருங் கல்லென்று சிரித்தார்கள். பின்பு சபையின் உட்புறமென்று எண்ணி ஓரிடத்திற்குச் சென்றன் அது சபைக்குப் புறம்பான விடமாய் இருந்தது. அங்கே போய்த் தங்கி நிற்கக் கண்ட யாவரும் நகைத்தார்கள். மறுபடி துரியோதனன் சபைக்குள் வந்து, அதிலேறுகிற படி வரிசையைச் சாதாரண விடமாக நினைத்து நடந்து போமளவில் அதிற்றடுக்கி விழக் கண்டு யாவருஞ் சிரித்தார்கள். இப்படிக்குத் தட்டி கெட்டுத் தடுமாறி அந்தச் சபைக்கு ஏறி வந்து யாவரையுங் கண்டு, போய் வருகிறேன் என்று சொல்லி விடைபெற்று, மனதிற் கோபமும், பொருமையும் பூரணமாகி நிற்கச் சகுனியுடனே கூடி அத்தினபுரத்திற்குச் சென்று, தருமபுத்திருடைய செல்வத்தையும்சிறப்பையும் மேன்மையையும் பிரபுத் தன்மையையும் நினைத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு உன்மத்தம் பிடித்தவன்போல் ஒருவரோடு பேசுவதையும் விட்டு விசனத்தினல் தவித்துக் கொண்டு இருந்தான். இந்தப்படிக்கிருக்கிற துரியோதனனைப் பார்த்துச் சகுனியானவன் சொல்லுகிறன்: ஓ துரியோதன! நீ என்னகாரணத்தினலே ஒருவரோடு பேசாமலும் களித்திராமலும் எதையோ சிந்தித்து விசனப்பட்

டுக்கொண் டிருக்கிருய்? அதை எனக்குச்
சொல்லு நீ விருதாவாய் மனதில் மாத்திரம்
வைத்து அழுந்திப் போகவேண்டாம் என்று
நல்லம்மான் சொல்லியதைக் கேட்ட துரியோ
தனனைவன் சொல்லுகிருன்:

### துரியோதனன் பாண்டவர் செல்வத்தைக் கண்டு பொருது சகுனியோடு முறையிடுதல்

ஓ மாமா! என்னுடைய விசனத்தின் கார
ணத்தை என்னவென்று சொல்லுவேன்? ஒரு
அருச்சுனனுலே பூமி முழுவதுஞ் ஜெயிக்கப்
பட்டுச் சகல ராஜாக்களுஞ் சுவாதீனமாகிக்
கப்பங் கட்டத் தருமபுத்திரன் ஏகசக்கிராதி
பதியாய் அரசாள்வதும், அவனுடைய சபை
யிலே தேவர்கள்-தேவரிஷிகள்-யக்ஷர்-கின்ன
ரர் - கந்திருவர் முதலானேரெல்லாம் வருகிற
தும், யாவருந் தருமபுத்திரனுக்குக் கீழ்ப்பட்
டிருக்கிறதும், கிருஷ்ணன் அவர்களிடத்திற்
சேர்ந்து அவர்களுக்குவேண்டிய காரியங்களை
நிறைவேற்றுகிறதும், பூமியிலிருப்போ ரெல்
லாம் பாண்டவர்களுக்கு மங்களமுண்டாக
வேண்டு மென்று வாழ்த்துகிறதும், யாவரும்
அவர்களுக்கே அன்புடன் அடங்கி யிருக்கிற
தும், சகல சம்பத்துகள் அளவற்றுக் கிடக்கிற
தும் இவைகளை யெல்லாம் கண்களினுலே
பார்த்து நான் எப்படி சகிப்பேன்? இதுக
ளெல்லா மிருக்கட்டும். யானை குதிரைகளை
விற்கவந்த பேர்களுங்கூட அவர்களிடத்
திற்கே போய், நான் அழைத்தாலும் வராம
லிருந்தவயிற்றெரிச்சலைஎன்னசொல்லுவேன்.
இப்படியே இரத்தினம் முதலாகிய வஸ்துக்
களை விற்க வந்தவர்களும் என்னை லட்சியஞ்
செய்யாமற் போனுர்களே நான் வாங்கத் தகா
தவனென் றன்றோ சிந்தித்தார்கள். இந்தக்
குருவமிசத்தில் நானும் பிறந்தேன், அவரும்
பிறந்தார். மேலும் நான் மூத்தவருடைய புத்
திரன். ஆனபடியினுலே நியாயப்படி சிறப்பு
எனக்கு வரவேண்டியது. வராமற்போன
லுஞ் சரியாயாவது வரக்கூடாதா? அல்லது
கொஞ்சங் குறைவாயாகிலு மிருக்கக்கூடாதா?
நான் இன்னும் எதற்கெதற்குத்தான் வயிறெரி
வேன். பேர் பெற்ற சகல மகாராஜாக்களும்
இந்திரப்பிரஸ்த நகரத்தின் வாசலிற் காணிக்
கைகளை வைத்துக்கொண்டு, மகாராஜாவி
னுடைய தரிசனங் கிடைக்குஞ் சமயம் எது
வென்று விசாரித்துக்கொண்டு காத்திருக்கிருர்
களே? அந்த நகரத்தில் எப்போதுந் தேசாந்
தரங்களி லிருந்து வருகிற ராஜாக்களுடைய
குதிரைகளும் யானைகளும் நிறைந்திருக்கின்ற
னவே? எந்த தேசத்திலும் பாண்டவர்களின்
புகழே வியாபித் திருக்கிறதே? மண்டலங்க
ளெல்லாம் அவர்களுடைய ஆக்கினைக்குட்பட்
டிருக்கின்றனவே? அவர் யாகத்திற் செலவு
செய்த பொருள்களை ஆதிசேடனுங் கணக்கிட
மாட்டானே? அப்படி செய்தும் மாளாததனம்
வந்து குவிந்திருக்கின்றதே? அதை நினைக்கும்
போது என் வயிறு பகீரென்று பற்றிக்
கொள்ளுகிறதே.

ஓ மாமா! ஆதரவற்றுச் சென்ற அவர்
களுக்கே இவ்வாண்மை யுண்டாயிருந்தால்,
நமக்கெல்லாம் இனி ஆண்மை எங்கே இருக்
கின்றது. ஏனென்ருல், நானிருக்க நீரிருக்க
அங்கதேசாதிபராகிய அண்ணு கர்னனிருக்க,
மற்றுமனேக வீரரிருக்க, யாவருக்கும் எதிரி
லேயே நம்முடைய நேசனுகிய சிசுபாலனைக்
கண்ணன் அலட்சியஞ்செய்து சங்கரித்தானே
ஆண்மை யிருந்தால் யாராவது எழுந்திரார்
களா? அப்படிப்பட்ட கண்ணன் அவர்களுக்கு
வேலைக்காரன்போற் காத்திருக்கிருனே? இது
களை யெல்லாங் கண்களினுலே பார்த்து நான்
எப்படி சகித்திருப்பேன். ஒரு குலத்திற்
பிறந்த இருதிறவரில் ஒருதிறவர் அவ்வகைப்
பட்ட சிறப்படைய, மற்றொருதிறவ ரதுின்றி
உயிரை வைத்துக்கொண்டு பிழைத்திப்பதி
ஞல் என்ன சவுக்கியம் அதனுலென்ன சந்
தோஷம் நானும் குருவமிசத்தானென்று
வெளியில்வர வெட்கமாய் இருக்கிறதே. நான்
யாரோடே என்னபேசவேண்டுவது. ஆதலால்,
தீயிற் குதித்தாகிலும், பாராங்கல்லைக் கட்டிக்
கொண்டு தண்ணீரில் விழுந்தாகிலும், விஷத்
தைக் குடித்தாகிலும் இறந்தால் அப்போது
தான் சித்தங் குளிர்ந்து சவுக்கியமாய் இருப்
பேனே யல்லது வேறில்லை. நான் இப்போது
பிழைத்திருக்கிறதாய் நினையாதேயும். அந்தச்
செல்வத்தைப் பார்த்து அவருக்குச் சரியாய்
இருக்கிற எவன்தான் உயிர் வைத்துக்கொண்
டிருப்பன். நான் இப்போதிருக்கும் நிலையை
சொல்லுகிறேன் கேளும்: ஒருவிதத்தாலும்,
நான் பிழைத்திருக்கிறவனும் அல்லேன். மரித்
தவனுமல்லேன். மனிதனுமல்லேன். மிருகமு
மல்லேன். சரமுமல்லேன். அசரமுமல்லேன்
இவைகட்கெல்லாம் நான் வேருகவே இருக்
கிறேன். இவ்வளவுதானே எனது வயிற்றெரிச்
சலுக்குக் காரணம். மற்றும் அனேகமுண்டு.

அவைகளையுங் கேளும் என் தம்பிகள் முதலிய எம்மையும் உம்மையும் ஊழியக்காரரைப் போல் யாகத்தில் வேலைசெய்யச் சொன்னானே. அதுவுமன்றி, நீருங் கூடவருகையில், சபையில் நான் நீரை நிலமாகவும், நிலத்தை நீராகவும் கண்டு மயங்கினதன்றி, இன்னும் பல வாற்றால் மயங்கி வீழ்ந்ததற்குக் காவற்காரர் முதல் யாவரும் சிரித்தது தெரியுமே? அது ஒன்றுக்கே நான் உயிரை விடவேண்டாமோ? அப்படிப்பட்ட சபை தேவர்களுக்கும் இல்லையே. இப்படிக்கெல்லாம் இருக்கிறபடியினாலே நான் இனி உயிரை வைத்திருக்க மாட்டேன். மரணத்திற்கே சித்தமா யிருக்கிறேன். நீரும் அனுமதி செய்யும். திருதராட்டிர மகாராஜாவுக்கும் அச்சேதி தெரிவியுமென்று சொல்லி வாயை மூடிக்கொண்டான். இந்த வார்த்தையைச் சகுனி கேட்டு அவனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

அடா குழந்தாய்! நீதருமபுத்திரனுடைய சம்பத்தைப் பார்த்து வீணாய் என் பொருமைப்படுகிறாய். அவர்கள் செய்த புண்ணியத்திற்கீடாக அவ்வளவு செல்வம் அவர்கட்கு வந்தது. உன் புண்ணியத்திற்கீடாக இவ்வுலகமெல்லாம் உனக்கு வந்திருக்கிறது. இப்படியே ஒவ்வொருவருந் தன் தன் நல்வினைப் பயனுக்குத் தக்க பலனை யனுபவிக்கின்றார்கள். இது இயல்பென் றறிந்தும் வீணாயேன் மனஸ்தாபப்படுகிறாய். நீயும் ஆதிமுதல் அவர்களை அடக்கி மேலாக வேண்டுமென்று வேண்டிய முயற்சிகளைச் செய்தாய் அவை பயன்படாமற் போயின. அவர்கள் எந்தெந்த ஏதுக்களினாலே பெருமை யடைந்தார்களோ அந்தந்த ஏதுக்களைக் குறித்து நீயும் யத்தனப்பட்டாய். அவை ஒன்றும் பலிக்கவில்லை. அதற்கென்ன செய்யலாம். நீ திரௌபதியை மணஞ் செய்ய முயன்றாயே அது சித்திக்காமற் போனது தெய்வத்தின் யத்தினந்தானே. அவர்கள் விவாகஞ் செய்ததினாலே துருபதன் முதலாகிய அனேகர் அவர்களுக்குச் சகாயமானார்கள். ஸ்ரீ கிருஷ்ணனோ அம்மான் பிள்ளையான தினால் அவர்கள் அனுசரிப்பினாலும் அடக்கமுடைமையினாலும் சகாயமானான். அவனோ வெகு புத்தியும், யுக்தியும், பராக்கிரமமும், புகழும், சாமர்த்தியமு முள்ளவன். தேவர்-தானவர் முதலானோரையும் ஜெயிக்கவல்லவன். ஒருவனாலும் வெல்லப்படாதவன். அவனுடைய துணையைப்பற்றி அவர்களுக்குச் சகல மேன்மைகளும் வருகின்றன. இதற்கு நாம் என்ன செய்யலாம்? அனியாயமாய் அவர்கள் ஒருவருடைய ராஜ்ஜியத்தை அடித்துப் பறிக்கவில்லை. நியாயமாய்த் தகப்பனுருக்குண்டான பங்கையே அடைந்தார்கள். ஆளுகை செய்கையிலும் ஒரு அநியாயமுஞ் செய்யவில்லை. யாவருக்கும் நன்மையாகவே நடக்கிறார்கள். காண்டவ வனத்தை இந்திரன் முதலான பேர்களை வென்று அக்கினிபகவானுக்குக் கொடுத்தபடியால், அர்ச்சுனன் அற்புதமாகிய தேர்-குதிரை-வில் முதலானவைகளைப் பெற்று, அதனாலே உலகமெல்லாஞ் ஜெயித்தான். அக்காட்டுத் தீயினின்றும் மயனை விமோசனஞ் செய்ததுபற்றி, அவனாற் கற்பனையாகிய உற்பனச்சபையொன்றுகண்டான். இதுவெல்லாம் அதிருஷ்டத்தாலே நேரிட்டதுகள் நமக்கு அப்படிப்பட்ட அதிருஷ்டமில்லை. உனக்கும் வீஷ்மர்-துரோணர்-கிருபர்-அசுவத்தாமன்-கர்னன் முதலான வீரர் சகாயமா யிருக்கிறார்கள். இருந்துந் தெய்வபல மில்லாமையினாலே ஒன்றும் பலிக்கவில்லை. ஆனபடியினாலே வீணாய்ப் பொருமைப்பட்டு மனம் வருந்துவதை, கிடைத்திருக்கிறமட்டிற் சந்தோஷத்தோ டிருப்பது நன்மை. அல்லாமல் அந்தச் செல்வத்தையே பெற வேண்டுவாயாகில், அவர்களை எவ்வித தந்திரத்தினாலேனும் வெல்லல் வேண்டும். அதற்கு வீஷ்மதுரோணாதிகளாகில் வீரர் உனக்குச் சகாயமாயிருக்கிறார்கள். ஆகையால், அவர்களைக் கொண்டு ஜெயிக்க யத்தினப்படலாம். ஆகிலும், இப்போது அவர்களைப் போர்முகத்தில் வெல்வது அசாத்தியமென்று தோற்றுகிறது. அப்படி யிருந்தாலும் நான் ஒரு வகையில் அவர்களுடைய சகல சம்பத்துக்களையுங் கவரமாட்டுவேன். அவ்வித நடத்தையில் உனக்கு மனமிருந்தாற் செய்கிறேன். நீ ஏன் விசனப்படுகிறாய்? என்று பேசிய சகுனியின் பேச்சைக் கேட்டுத் துரியோதனன் சிறிது மனந்தேறிச் சொல்லுகிறான்:

வாரீர் மாமாவே! பாண்டவர்களை எளிதிற் ஜெயித்து அவர்களுடைய செல்வங்களையெல்லாம் அபகரிப்பேனென்று சொன்னீரே அப்படிக்கு நம்முடையவர்களி லொருவனுக்கும் உபத்திரவமில்லாமல் அவர்களை எளிதில் வெல்லும் உபாயம் யாது? அதைச் சொல்ல வேண்டுமெனத் துரியோதனன் கேட்க,

உடனே சகுனியானவன் அவனைப் பார்த்து, கேளப்பா துரியோதனா! தருமபுத்திரனுக்குச் சூதாடுவதில் மிகவும் பிரியமுண்டு. அதை நன்றாயாடுவதற்கோ தெரியாது. எனக்கோ அதில் ஒப்பற்ற சாமர்த்திமுண்டு. அவரோ சூதாடுதற் கழைத்தால் வராமலிருக்கமாட்டார். அந்த ஆட்டத்தில் மெத்தப் பிரமையுடையவர். ஆனபடியினாலே நான் அவருடைய சகல சம்பத்துக்களையுஞ் சூதினால் ஜெயித்து உனக்குக் கொடுக்கிறேன். ஆனால், அதைக் குறித்து உன் பிதாவாகிய திரிதராஷ்டிர மகாராஜாவின் சம்மதி வேண்டும். ஆனதால் நீஇதை அவருடனே சொல்லி அநுமதி செய்வித்தாயே யாகிற் சந்தேக மில்லாமல் அச் செல்வங்களை யுனக்குத் தருகிறேனென்று சொல்ல, அதைக் கேட்ட துரியோதனன், ஓய் மாமாவே! நீரே இச்செய்தி அவருக்குத் தெரிவியுமென்று சொன்னான்.

### துரியோதனனுஞ் சகுனியும் திரிதராஷ்டிரனிடஞ் சென்று ஆலோசித்தல்

தருமத்தில் வழுவாது நடப்பவராகிய தருமபுத்ர மகாராஜருடைய செல்வங்களைக் கண்டு பொறாமைகொண்டு மனம் விண்டு துக்கத்திற் புரண்டு கிடந்த துரியோதனனுக்குச் சமாதானமாகப் பேசிய சகுனியானவன், தன் மனதிற் சூதினாலல்லது வேறு வகையில் அவர்களை வெல்லக்கூடாதாகையாற் சொக்கட்டானாட்டத்திற் பந்தயமாய்ச் சகல செல்வங்களையும் வைக்கச் செய்து கவர்ந்து துரியோதனனுக்குக் கொடுக்க வேண்டுமென்று உறுதியாகிய நிச்சயமடைந்து புறப்பட்டுத் திரிதராஷ்டிர மகாராஜாவின் மனைக்குட் சென்றான். அஃது இனி பூமியிலுள்ள சகல ராஜாக்களுங் கவுரவ வமிசத்தாரும் எல்லாப் பரிவாரங்களோடு நாச மடையும்படியாகிய ஏதுவைச் சொல்லப்போனதாக நினைக்கப்பட்டது. அப்படி அவன் மனைக்குட் சென்று ராஜாவின் சமீபத்திற் போய்த் தன்னை யறிவித்து நமஸ்கரித்து, பக்கத்திலிருந்த ஓர் ஆசனத்திலுட்கார்ந்து மகா ரகசியமாய் மெள்ள இதனை மொழியலாயினான். ஐயா மகாராஜாவே! உமது மூத்த பிள்ளையாகிய துரியோதனன் சிலநாளாய் மனதிற் பெரிய விசனங்கொண்டு, ஆகார நித்திரைகளு மில்லாமல் உடம்பு மெலிந்து நாளுக்குநாள் அபாயத்திற் கிடமாகிய நிலையில் வருகிறான். இப்படியிருக்க, நீர் அதை விசாரித்து அவன் மனோவியாதியைப் போக்காமலிருப்பது உமக்கு நியாயமா? மூத்த மகனாகவும் இளவரசாகவு மிருக்கும் அவனை உபேக்ஷை செய்யலாமா? என்று சொல்லியதைக் கேட்ட குருடனாகிய ராஜன் மகனை யழைப்பித்து மிகவும் பரிவுடனே சொல்லுகிறான்:

குழந்தாய் துரியோதனா! நீ மிகுந்த துயரத்தை யடைந்து மெய் மெலிந்து சோருகிறதாகத் தெரிகிறது. அதற்குக் காரணமோ ஒன்றுந் தெரியவில்லை. உனக்கென்னகுறை? எனக்குண்டாகிய ராச்சிய முழுதும் உன் வசத்திலேயே இருக்கிறது. வெகு ராஜாக்கள் உனக்குக் கீழ்ப்படிந்திருக்கிறார்கள். நீயே அரசாக்ஷி செய்கிறாய். உன் தம்பிமாரெல்லாரும் உன் வசத்தில் இருக்கின்றார்கள். மகா வீரர்களெல்லாரும் உன் சொற்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆடைகளும், ஆபரணங்களும், பொருள்களும், மற்றும் அனேகவித வஸ்துக்களும், நல்ல குதிரைகளும், யானைகளும், வாகனங்களும், சேனைகளும் விஸ்தாரமாயிருக்கின்றன. தேவஸ்திரீகளுக் கொப்பாகிய வெகு மங்கையர்களும் இருக்கிறார்கள். இப்படி உனக்குச் செல்வத்திலும் போகத்திலும் ஒரு குறைவுங் காணப்படவில்லை. நானும் உன் தாயாரும் நீகொடுத்த அன்ன வஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டு சுகமாயிருக்கிறோம். மற்றும் உன் பந்துக்கள் யாவரும் உனக்கடங்கியேயிருக்கிறார்கள். உன தாக்கினையை மறுப்பாரொருவருமில்லை. அன்றியும், நீ எட்டு வியாகரணங்களையும் மற்று மனேகங் கல்விகளையும் நன்றாய் ஓதியுணர்ந்து, எல்லா வித்துவான்களாலும் புகழப்பட்டிருக்கிறாய். குடிகளையுஞ் செவ்வையாய்க் காத்து அவர்கள் துதிக்கும்படி யிருக்கிறாய். துரோணாசாரியார் - கிருபாசாரியார் - பலராமர் இவர்களிடத்தில் அஸ்திர வித்தை நன்றாய் கற்றுமிருக்கிறாய். இவ்வாறாக எல்லாப் போகபாக்கியங்களும் பெருஞ் செல்வமும் புகழும் பெற்றுத் தேவேந்திரன் போல் விளங்காநின்ற உனக்கு இப்படிப்பட்ட விசனம் வருவதற்குக் காரணம் யாதோ தெரியவில்லை. ஆகையால், அதை நீ எனக்கு இப்போது நன்றாய்த் தெரிவிக்கவேண்டும் என்று பிதா சொல்லக் கேட்ட துரியோதனன் மிகுந்த சோர்வும் அலக்ஷியமுமுள்ள சில வார்த்தை சொல்லுவதாயினான்:

ஐயனே! உண்ணுவதும் உடுப்பதும் பூணுவதும் யாருக்குத்தான் கிடைக்காது?

இவை யெல்லாம் ஒரு சந்தோஷத்திற் கேதுவா? ஆனால், இவை யெல்லாம் அற்பருக்குச் சந்தோஷ ஹேதுக்கள்தான். நீர் சொல்லிய படி இராச்சிய சம்பத்து முதலானவை இருந்தும் எனக்கு அந்த அற்பருக்கிருக்கிற அவ்வளவு சந்தோஷமுமில்லை. சந்தோஷமில்லாமை மாத்திரமே யன்று. அதற்குத் துணையாய் அளவற்ற துக்கமுமுண்டாயிருக்கிறது. ஏனென்றால், பாண்டவர்களுடைய சம்பத்தையும் பெருமையையும் புகழையும் பார்க்குமளவில் எனக்கு மிகுந்த பொறாமை யுண்டாக்கி அதனாலே மனந் தகிக்கப்பட்டு மகா வியாதி பீடித்தவன்போலும் பயித்தியம் பிடித்தவன் போலும் வருத்தப்பட்டுத் தடுமாறிக்கொண்டிருக்கிறேன். அந்தச் சம்பத்தைப் பார்த்த பின்பு, நீர் முன் சொல்லிய ராச்சிய முதலியவைகளை யெல்லாஞ் சம்பத்தென்று சொல்லத் தகாதென நினைக்கிறேன். அவர்களின் சேவகர்கள் உண்டு உமிழ்ந்ததற்கு மொப்பாயிருக்கவில்லை. எதிரியைக் காட்டிலும் மிகுந்த மேன்மை பெறவேண்டுகிறவன் எதிரிக்குச் சொல்லக்கூடாத பெருமை நேரிட்டிருப்பதைப் பார்த்து என்னமாய்ச் சகிப்பான். பொறுமையும் தயையும் சாந்தமும் சம்பத்தைக் கோரியிராநின்ற அரசனுக்குத் தகுமோ? இவையெல்லாம் புருஷனுடைய சம்பத்தை நாசஞ்செய்யும். துறவிக்கு இக்குணங்களிருக்க வேண்டுமே யல்லது, மற்றவருக்குக் கூடுமோ? எவனுடைய செல்வத்தைக் கண்டு எவனுக்குப் பொறாமை யுண்டாகுதோ அவன் அவனை உடனே கொன்று அதைப் பறிக்க வேண்டுவதுதான் க்ஷத்திரியனும் புத்திசாலியும் ஆண்மையுள்ளவனுமா யிருப்பவனுக்குத் தகுதி. அப்படிக்கில்லாமல் எதிரியின் பாக்கியத்தைப் பார்த்துச் சகித்துக்கொண்டிருக்கிறவன் மூடர்களில் உயர்ந்தவனாக எண்ணப்படுவன். அதைத் தவரச் சக்தி யில்லாதவன் மரித்தவன்தான். நானுமப்படியே காலக்கிரமைப் பார்த்துச் சகித்துக்கொண்டிருக்கிறேன். ஆனபடியினாலே, நான் செத்துப்போனவனே, வல்லுயிர் போகாமையாலேதான் இப்படிக்குத் தினந்தோறும் விசனமென்னும் அக்கினியில் வீழ்ந்து தவிழ்ந்துக்கொண்டிருக்கிறேன். இனி என்னை மரிக்கத் துணிந்தவனென்றே யெண்ணியும். அவருடைய சம்பத்தென்ன அவ்வளவு சிறந்ததென்கிறீரா? கொஞ்சஞ் சொல்லுகிறேன் கேளும்:

என்னருமைத் தந்தையே! "இந்திரன் முதலாவுள்ள விமையவர் சிறப்புச் செய்யச், சுந்தரப்பொற்றோள் வேந்தர் தொழில்புரிந்தேவல்செய்ய, மந்திர முனிவர் வேள்வி மறைநெறி முறையிற்செய்யத், தந்திர வெள்ளச்சேனைத் தருமனே தலைவனானான்' மேலும், அத் தருமன் இப்போது ஒருவராலும் நிறைவேற்றக்கூடாத இராஜசூய மென்னும் மகா யாகஞ் செய்தானே அதில் வந்த காணிக்கைகள் எண்ணக்கூடுமானவையோ? தினந்தோறும் அவன் எண்பத்தெண்ணாயிரம்மகாப் பிராமண குடும்பங்களுக்கும், பதினாயிரஞ் சன்னியாசிகளுக்கும், புஞ்ச பக்ஷ பரமான்னங்களோடு போசனமிட்டு வருகிறான். அதனாலே அவனுக்குண்டாயிருக்கிற சிறப்பொன்றே போதுமானதா யிருக்கிறது. அந்தக் குடும்பங்களிலே ஒவ்வொன்றிற்கும் முப்பது பேர் பரிசாரகரிருக்கிறார்கள். அன்றியும், காம்போஜ தேசாதிபதியாகிய சுதக்ஷண மகாராஜன் பற்பல வண்ணங்களாய் விசித்திரமாகிய மேன்மையும் பளபளப்பு முடைய ஆச்சரியப்படத்தக்கவையா யிரானின்ற மான் தோல்களில் அனேகமாயிரமும், அப்படிப் பட்ட கம்பளங்களில் அனேகமாயிரமுங் கொணர்ந்து கொடுத்தான். அன்றியும், பொற்பணியணிந்த நான்கு குதிரைகள் கட்டிய ரதங்களிற் பதினாயிரமும், அப்போது கன்று போட்டதுகளுங் குடம் பால் கறக்கத் தகுந்ததுகளுமாகிய பதினாலாயிரம் பசுமாடுகளும், சிந்து சவுராஷ்டிய முதலாகிய தேசங்களிற் பிறந்து மகா வேகத்தோடு கூடிய பதினாயிரங் குதிரைகளும், அழகும் சாதுரியமும் உள்ளவர்களாகிய மங்கைப் பருவமுள்ள பதினாலாயிரங் கன்னிகைகளும், அனேக லக்ஷம் ஒட்டகங்களின் மீதிற் பலவித ரத்தினங்கள் ஆபரணங்கள் முதலாகியவைகளும் கொடுத்தான். இவ்விதமாகவே சகல ராஜாக்களும் வந்து காணிக்கைகளைக் கொடுத்துப் பணிந்து போனார்கள். அந்த யாகத்தில் வந்த பொருள்கள் எவ்வளவோ அவ்வளவு பொருள்கள் குபேரனிடத்திலுங் கிடையாது. இவ்விடயத்திற் சந்தேகமிருந்தால் உமது மந்திரியாகிய சஞ்சயனைக் கேளும்:

அந்த யாகத்திற்கு வந்த பிராமணரெல்லாம் வேண்டிய இரத்தினங்கள் - வஸ்திரங்கள் - பொருள்கள் - பசுக்கள் இன்னும் பலவற்றையும் பெற்றுக் களித்துப் போனார்கள்.

தேவலோகத்திலுங் கூட இவனைப்போல்
யாகஞ் செய்த பேர்களும், பலபல மேன்மை
யடைந்தவர்களும் இல்லை யென்று, நாரதர்
முதலாகிய பெரியோர்களும் மிகப் புகழ்ந்தார்
கள். அன்றியும், திரைகருவாளென்று சில
அரசருண்டு. அவர்கள் வெகு ஒட்டகங்களின்
மேற் பொருட்பொதிகளைப் போட்டுக்கொண்டு
உதிட்டிரனைக்காணச் சமயங் கிடையாமல்
அரண்மனை வாசலில் நெடுநேரங் காத்திரு
ந்து வெகு பேர்களைக்கொண்டு தெரியப்படுத்தி
பின்பு அவனைக் கண்டு பணிந்து பலவிதப்
பொருள்களையும், பொற்கலசங்கள் முதலாகிய
அநேக பாத்திரங்களையும், பாற்கடலிற் பிறந்த
வெண் பொன்னினாற் செய்யப்பட்டு கோடி
சூரியப்பிரகாசம் பொருந்தி இந்திரனுக்கு
அப்சர ஸ்திரீகள் காமதேனுவின் பாலைக்
கொடுக்கும்படியாகிய திவ்ய பாத்திரங்கள்
போன்ற பலவற்றையும் பாதகாணிக்கை வைத்
தார்கள். அவைகளை யெல்லாம் பார்த்த
எனக்கு உண்டாகிய வயிற்றெரிச்சலையுந் துக்
கத்தையுஞ் சொல்லி முடியாது. அன்றியும்,
உதிட்டிரனுக்குச் ,சாம்பிராச்சிய பட்டாபி
ஷேகஞ் செய்கிற நிமித்தஞ் சமுத்திரங்களில்
நின்று தீர்த்தம் வரவேண்டுமென்று புரோ
கிதர் சொன்ன மாத்திரத்திலே, ராக்ஷத ராஜ
ராகிய சிலவீரர் நவரத்தினங்களிழைத்த குடங்
களை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில்
எழும்பி ஒரு கணப்பொழுதில் எல்லாக் கடல்
களின் நீரையுங் கொணர்ந்தார்கள். இப்படி
க்கு மற்றொருவனுக்கு நடக்குமா? மனிதரைத்
தின்னும்படியாகிய ராக்ஷதர் அடிமைபோல்
காத்திருக்கிறார்களே இவ்விதமாய் அவர்களு
க்கு நடக்குஞ் சிறப்பைச் சொல்ல என்னாலா
குமோ? ஐயா! எல்லாவற்றிலும் பெரிதாகிய
இன்னுமோர் வயிற்றெரிச்சலைக் கேளும்:

அவர்களுக்கு மயனென்பவன் ஒரு சபை
நிருமித்திருக்கிறான். அது தங்கத்தினாலும்
மணிகளாலுஞ் செய்திருப்பது மன்றி, சொல்
லத்தரமில்லாத விசித்திரங்களுக் கிருப்பிட
மாயிருக்கின்றது. அதில் நானொருக்காற்
போகும்போது ஓர் புறத்திற் படிகத்தினாற்
செய்து தாமரை பூத்த தடாகம்போற் காணப்
பட்டபடியினாலேயும், தாமரைத் தடாகம்
வெறுந் தரையாகத் தோற்றினபடியினாலே
யும், நீரில்லாவிடத்தில் துணியைத் தூக்கிக்
கொண்டும், நீருள்ளவிடத்தில் துணியை விட்
டுக்கொண்டும் போய்த் தடுமாறினேன். அப்
போதென்னைப் பார்த்துக் காவற்காரரெல்
லாஞ் சிரித்தார்கள். அதுகண்டு எனக்கு உலர்
ந்த வஸ்திரங்களை உதிஷ்டிரன் கொடுத்தான்.
அவைகளை யுடுத்திக்கொண்டேன். அதனாலே
நான் செத்தவனே யல்லது பிழைத்திருக்கிறவ
னல்லேன். பின்பு மற்றொருவிடத்திற் கம்பங்க
ளிருந்தும் இல்லாதவைபோ லிருந்தன
வாசலில்லாமல் இருந்ததுபோல் இருந்தது
இவ்விடங்களிலெல்லாம் போய் முட்டிக்
கொண்டு காயங்களை யடைந்தேன். இப்படிக்
குப் பலவிதமாக மயங்கி வழி துறை தெரியா
மல் தடுமாறிக் கொண்டிருக்கும் அளவில்,
வீமசேனன் பார்த்து நகைத்து, இதோ வழி
இதோ வழி என்றும், இப்படி வரலாம் இப்
படி வரலாமென்றுங் கூப்பிட்டான். அச்
சொல் என் கழுத்தை யறுப்பதுபோல் இருந்
தது. எனக்குச் சக்தியிருக்குமாகில் அக்கணத்தி
லேயே அவனைக் கொல்லுவேன். இல்லாமை
யாலே பிணம்போலே சும்மாயிருந்தேன் அப்
போதெல்லாந் திரௌபதியும் மற்றும் அநேக
ஸ்திரீகளும் என்னைப் பார்த்து, இவர் தந்
தைக்குங் கண்ணில்லை இவருக்குங்கண்ணில்லை
யோவென்று நகைத்தார்கள். இன்னுங் கம்
பங்கள் இல்லாவிடங்களிற் கம்பங்களிருப்ப
தாக வெண்ணி யொதுங்கிச் சபை யேறுவதற்
கான படிவரிசை தெரியாமல் அவர்களுடைய
மனிதர் வந்து வழி காட்டி யழைத்துக்
கொண்டுபோக அதிற்போய், பின்பு தலையிறங்
கிக்கொண்டே சில நேரமிருந்து விடை
பெற்று வந்து விட்டேன்.

இப்படிக்கெல்லா மிருக்க, எனக்கு சுக
மேது? சிறப்பேது? நான் செத்தாலன்றி வயிற்
றெரிச்சலாறுமோ? சவரணையா யிருக்கும் பங்
காளிகளுக்கு முன்னே சாவலியப்பட்டு நிற்
பதை விடச் சாதலே நன்மை. அப்படி அவ
மானப் பட்டபோதே உயிரை விட்டுவிட
வேண்டும். ஆனால், உம்மையுந் தாயையும்
நினைத்து, வலுவில் உயிர் விடுதல் பாவமென்
றெண்ணி அப்படி செய்யாமற் போனேன்.
ஆகிலும், அந்தத் துக்கம் பொறுக்கக் கூடா
மைபற்றி, உயிர் விடுவதற்கே இப்போது நி
துணிந்திருக்கிறேன். இன்னமொரு வதிசயங்
கேட்டீரோ? அவருடைய யாகசாலையில் ஒரு
சங்கிருந்தது. அது நூறுயிரம் பிராமணர்
புசித்தால் ஒருதரம் ஒலிக்கும் அப்படிப்
பட்ட சங்கம் ஒவ்வொரு நாட்களிலும் அநே
கந்தர மொலிக்கக் கேட்டிருக்கிறேன். இவ

வாறு அளவில்லாமற் பிராமணர் புசித்துச்
சந்தோஷப்பட்டும் அளவில் எனக்கும் புளக
முண்டாயிற்று. அந்தப் பிராமணர்கள் புசிக்
கும்போது பெரிநில மன்னராகிய ராஜாதி
ராஜர்களும் பெருமையும் நாணமும் விட்டுப்
பரிசாரகர் போலப் பரிமாறி யுபசரித்தார்கள்.
நாம் கேட்டுமறியாத தேசத்து மன்னரெல்
லாம் வந்து காத்திருந்தார்கள். அவர்கள்
கண்டு சந்தோஷிக்கும்படியாக ஒவ்வொரு
வரும் பற்பல ஏவற்பணி செய்து வந்தார்கள்.
தேவர்கள் - தேவரிஷிகள் - கந்திருவர் முத
லானவரும் வந்திருந்தார்கள். இவர்களெல்
லாம் அவர்களையும் அவர்கள் செய்யும்
யாகாதி காரியங்களையும் வெகுவாய்ப் புகழ்ந்
தார்கள். நான் அவர்களில் ஒருவனாக இருந்
தேனே யல்லது வேறில்லை. ஆதலால், என்
உயிரிருக்கும் அளவில் அவர்களோடு எதிர்த்
துப் போர் செய்கிறேன். ஜெயித்தால் அந்தச்
செல்வத்தை அனுபவிக்கிறேன். இல்லாவிட்
டால் பிராணனை மாய்க்கிறேன். இவ்விரண்டு
மின்றிச் சும்மாயிருந்தால் என் துக்கந் தீர
மாட்டாதென்று சொன்னான்.

இப்படி சொல்லிய துரியோதனனைப்
பார்த்துச் சகுனி சொல்லுகிறான்: கேளப்பா
துரியோதனா! பாண்டவர்கள் வெகு பராக்கி
ரமசாலிகளாகித் தங்கள் புஜபலத்தினால் இப்
படிப்பட்ட ஐசுவரிய மடைந்தார்கள். அதைக்
கண்டு நீ வீணாய்ப் பொறாமைப்படுவதும்,
யுத்தத்தினாலே அதை கைவசப்படுத்த நினைப்
பதும், கொஞ்சமும் நன்றாய் இருக்கவில்லை.
எட்டாத பெரிய மரத்தின் நுனியிலிருக்கும்
பழத்தை எட்ட முயலுங் குள்ளன்போல்,
வீணான முயற்சியை நீ யோசிக்கிறாய். இப்
போது தேவர்களெல்லாம் ஒன்றாய்க்கூடி வந்
தாலும் அந்தப் பாண்டவர்களை வெல்வது
அசாத்தியமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆன
படியினாலே நீ சொல்வது சரியல்ல. ஆனால்,
அதைக் கவருவதற்கு ஒரு உபாயமுமில்லையோ
வென்றால் அதென்னவெனில், சொக்கட்டான்
ஆடுவதில் எனக்கு மிகுந்த பாண்டித்தியமிருக்
கிறது. ஏனெனில், அக்ஷ இருதயமென்னும்
வித்தை கற்றிருக்கிறேன். அதனாலே எந்தச்
சமயத்தில் எந்தப் பந்தயம் வேண்டுமோ
அது விழச்செய்வேன். காய்களை ஆடுவதிலும்
மிகுந்த சாதுரியமுள்ளவனாய் இருக்கிறேன்.
ஆகையால், எனக்குச் சமானமாக அவ்வித்தை
தெரிந்தவன் பூலோகத்தில் ஒருவனுமில்லை.

தரும புத்திரனுக்கோ இவ்விதத் திறமைகள்
ஒன்றுமில்லா திருந்தாலும் இந்த ஆட்டத்
தில் மாத்திரம் மிகுந்த விருப்பமுண்டு. பந்த
யம் போடவுந்தெரியாது. ஆடவுந்தெரியாது.
ஆடவழைத்தால் வரமாட்டேன் என்று ஓட
வுந் தெரியாது. ஆதலால், அவ்வாட்டத்திற்கு
அவரை யழைத்து சகல சம்பத்துக்களையும்
பந்தயமாக வைக்கச்செய்து, அவைகளை யெல்
லாம் எளிதிலேயே கிரகிக்கமாட்டுவேன். அப்
படிக் கிரகித்து உனக்குத் தருகிறேன் சிந்தைப்
படாதே. சம்மதியாகில் அதற்கு யத்தினப்
படு என்று திரிதராஷ்டிர மகாராஜாவின்
முன்னிலையிற் சகுனியானவன் சகல ராஜாக்க
ளின் விநாசமாகிய மரத்திற்கு விரைபோல்
இரானின்ற பேச்சைச் சொன்னான்.

அப்போது துரியோதனன் பிதாவை
நோக்கி, ஐயா! மாமாவாகிய சகுனி சொல்லி
யதைக் கேட்டீரன்றோ? அந்தப்படி இவரைக்
கொண்டு தருமபுத்திரனைச் சூதாடச் செய்து
அவன் செல்வமெல்லாங் கவருகிறேன். அப்
படிக்கு நீர் அனுமதி பண்ணல் வேண்டு
மென்றுசொல்லக்கேட்ட திரிதராஷ்டிரன் தன்
மகனைப் பார்த்துச் சொல்லுகிறான்: கேளடா
குழந்தாய்! நீ சொன்னகாரியம் யோசித்து
செய்யவேண்டும் அதற்காக விதுரனை யழைப்
பித்து அவனோடுசாவி, காரியத்தின் குணகுண
ங்களை நன்றாய் ஆராய்ந்து சொல்லுகிறேன்.
அவன் வெகு புத்திசாலி. சகல தருமங்களையு
மறிந்தவன். வெகு யோக்கியன். பாண்டவர்
களுக்கும் உங்களுக்கும் பட்சபாத மில்லாமல்
நன்மையைச் சிந்திப்பவன். ஆனபடியினாலே
அவனோடு இதைப் பேசவேண்டுமென்று சொ
ல, அதைக் கேட்ட துரியோதனன் மனம் பொ
ங்கி, கேளும் பிதாவே! நீர் விதுரரோடு இந்தச்
சங்கதியைச் சொன்னால் அவர் சம்மதிக்கப்
போகிறதில்லை. மற்றென்ன சொல்லுவ ரென்
றால் சொக்கட்டான் முதலாகிய சூதுகளை யாடு
தல் நல்ல காரியமன்றென்றும், பாண்டவர்க
ளுடைய ராச்சியத்தை அபகரிப்பது நியாய
மன்றென்றுஞ் சொல்லுவர். அதுவே உமக்கு
யுக்தமாகத் தோன்றும். அது கேட்டவுடனே
நான் உயிரை விடுவேன். இவ்வாறாக நான்
இறந்தபின் நீரும் விதுரருமாகச் சுகமா யிருங்
கள். நானொருவன் போவதினா லுங்களுக்
கென்ன குறை? ஆகையாலே, நான் உயிரை
விடுவதே நன்மையென்று பிதாவின் பக்கத்தி
லிருந்து மிகவுந் துக்கப்பட்டான்.

## திரிதராஷ்டிரன் விதுரனோடு ஆலோசித்துத் துரியோதனனுக்கு அறிவுறுத்தல்

கேளும் ஜனமேஜய மகாராஜனே!
இப்படி சகுனியின் போதனையினாலே ஆகாத
தியஞ் செய்யாநின்ற மகனைப்பார்த்துத் திரித
ராஷ்டிர மகாராஜன் மனதிற் கிஞ்சித் திரக்க
முற்று, மந்திரிகளை நோக்கித் துரியோதன
னுக்குப் பிரியமாகும்படி ஒரு வார்த்தை சொல்
லுகிறான்: ஓ மந்திரிகளே! நீங்களிப்போதே
சுவர்ணங்களும் ரத்தினங்களும் பதித்து திவ்
வியமாகிய ஒரு சபா மண்டபத்தைக் கட்டி
வையுங்கள். அது ஆகாசத்தை யளாவி, சந்
திரனுடைய காந்திக்கு நிகராகிய காந்தியை
யுடையதாய், யாவருங் கைலாசமோ, மேரு
வோ என்று மயங்கத்தக்கதா யிருக்கவேண்
டும். அனேக ஸ்தம்பங்களும் சுவாக்ஷங்களு
முடைத்தா யிருக்கவேண்டும். மேலும், அது
வெகு விநோதமாயும் அருமையாயு மிருப்ப
தல்லாமல், அதில் அனேக தாமரைத் தடாகங்
களும் சகலசூத்திரக்கூடங்களும்உடைத்தாகிய
சபா மண்டப மொன்று நிருமித்து, அச் சேதி
எனக்குச் சொல்லுங்களென்று ஆக்யாபித்து
யாவரையு மனுப்பிவிட்டு, விதுரனை அழைத்
துக்கொண்டு வரும்படி தூதரை யனுப்பி
னான். ஏனென்றால், புத்திரனிடத்தில் வாச்
சலிய மொருபக்கத்திற் போராடுகிறதன்றிச்
சூதாடுகிறது தருமத்திற்கு வழுவென்று ஒரு
புத்தியுந் தோற்றி மனங் கலங்கியபடியினாலே
அவ்விவேகத்திற் சிறந்த விதுரனுடனே
யோசிக்கும் பொருட்டு அழைத்துக்கொண்டு
வரும்படி உத்தரவு செய்தான். அந்தத் தூதர்
போய்த் தெரிவித்தவுடனே விதுரன் தன்னை
அழைப்பதற்குக் காரண மறிந்துகொண்டு,
இனி இந்த வமிசத்தாருக்கும் பூமியிலுள்ள
அரசருக்கும் விநாசகாலங் கிட்டிற்றென்று
நினைத்துச் சீக்கிரமாக அரண்மனைக்கு வந்து
ராஜாவைக்கண்டு தெண்டனிட்டு அவனாக்கி
னையினால் உட்கார்ந்து இதனைச் சொல்லு
கிறான்:

வாரீர் மகாராஜாவே! உம்முடைய மனதி
லிருக்கும் அபிப்பிராயத்தைச் சிந்தித்துப்
பார்த்தேன் அது மிகவும் நன்றாயிராமையி
னாலே சந்தோஷப்படாம லிருக்கிறேன். எப்
படிப்பட்டவனுக்குஞ் சூதாடுதல் இழிவாகிய
செய்கை. மேலும், அது கலகமென்னுஞ்
செடிக்குக் கிழங்கா யிருக்கின்றது. அப்படிக்
குச் சூதாடுவதினாற் பாண்டவர்களுக்கும் நமக்
கும் மிகுந்த விரோதமுண்டாகி, யாவருக்குந்
தீங்கு நேரிடும் என்று சொல்லக் கேட்ட
குருட்டு ராசாவானவன் சொல்லுகிறான்: ஓ
விவேகத்திற் சிறந்த விதுரா! நியாயமாய்ச்
சூதாடினாற் கலகம் வரவேண்டுவதென்ன.
மேலும், நானும் வீஷ்மரும் பக்கத்திலிருக்க
கலகம் வருமா ஒருக்காலும் வராது. அப்படி
நேரிடாம லிருக்கும்படி தகுந்த முயற்சி செய
வோம், தேவர்களு மனுக்கிரகஞ் செய்வார்
கள். அப்படியுங் கலகம் வரவேண்டி யிருந்
தால், அது நாம் தடுத்து நிற்குமா? வந்து
தானே தீரவேண்டும். ஆனபடியினாலே இந்த
விஷயத்தில் நீ என் பேச்சை மறுத்துப்
பேசாதே, இந்நிமிடத்திற் போய் உதிஷ்டி
ரனை அழைத்துக்கொண்டு வாவென்று பிடி
வாதமாய்ப் பேசுவதைக் கண்ட விதுரனா
வன், ஓ மகாராஜனே! உம்முடைய சித்தத்
தின்படியே நடக்க என்னைக் கேட்கவேண்டுவ
தில்லையே? நீரென்னசெயவீர் சீக்கிரத்திற் புத்
திரரையும் பந்துக்களையும் செல்வத்தையும்
இழந்து துயரப்பட வேண்டிய காலம் உமக்கு
நேரிட்டிருக்கையில், ஒருவருடைய பேச்சும்
இதயமாய்த் தோற்றாது. ஆதலால், தெய்வச்
செயலின்படி யாவு நடக்குமென்று சொல்லிப்
போட்டுச் சரேலென்றெழுந்து வீஷ்மருடைய
மனைக்குச் சென்றான். அங்கே வீஷ்மர் விது
ரனைப் பார்த்து வந்த காரியம் என்னென்று
கேட்க, விதுரன் திரிதராஷ்டிரன் கருத்தைச்
சவிஸ்தாரமாய் அவருக்குத் தெரிவித்துக்
கொண்டிருந்தான்.

இங்கே திரிதராஷ்டிர மகாராஜனா
வன் சூதாடுதற்கு விதுரன் சம்மதிப்படாமல்
போகவே மனந் திருப்தி யடையாமல் ஏகாந்
தத்தி லுட்கார்ந்து துரியோதனனைப் பார்த்
துச் சொல்லுகிறான்: அடா துரியோதனா! நீ
சிறுவனானபடியினாலே யோசிக்காமற் பிடிவா
தம் பேசுகிறாய், என் பேச்சைக் கேள். எப்
போதும் மனிதன் நன்மைகட்கு ஏதுவாகிய
காரியமே செய்யவேண்டும். சொக்கட்டானாடு
கிற விஷயம் விதுரனுக்கு எவ்வளவும் சம்மதி
யில்லை. அதனாலே வெகு தீங்குகள் வருமென
றும், இம்மை மறுமைகளிற் கேடு வருமென
றுஞ் சொல்லுகிறான். அவனோ மகா தீர்க்க
தரிசி. சகலமுந் தெரிந்தவன். அவனுக்குச்
சமானமாகிய புத்திமான் இடையாது. தேவ
ராஜாவாகிய இந்திரனுக்குப் பிரகஸ்பதி உப
தேசித்த நீதிகள் யாவுந் தெரிந்தவன். யாத

வர்களுக்கு உத்தமன். எப்படி நன்மையைச் சிந்தித்துக்கொண் டிருக்கிருனே அப்படி நமக்கு நன்மையைச் சிந்தித்துக்கொண் டிருக்கிறவன். அவன் பேச்சுக்குப் பல திருஷ்டாந்தங்களைக் கண்டிருக்கிறேனுதலால் அவன் சம்மதியை மீறி நடப்பது நன்மையாகத் தோற்றவில்லை. நீயோ பிடிவாதம் பிடித்துச் சோகப்படுகிருய் அப்படி சோகப்படவேண்டாம் உனக்கென்ன குறையிருக்கிறது. நம்முடைய பூர்வீகர் எந்த இராச்சியத்தை ஆண்டார்களோ அந்த ராச்சியத்தை நீயு மாளுகிருய். அவர்களுக்கெல்லாங் கிடைத்திலாத செல்வமும், கெடிஸ்தலாதிபதிப் பட்டமும் உனக்கிருக்கிறது. சகல போகபாக்கியங்களு நிறைந்திருக்கின்றன. சகல கலைகளு மோதியிருக்கிருய். உனக்கு சமானமானவன் மற்றொருவனுமில்லை. வீணுய் மனத்திற்கு ஒரு அசந்துஷ்டியை வைத்துக்கொண்டு தவிக்கிருய். அதை விட்டு உனக்கிருக்கிற போகபாக்கியங்களை அனுபவித்துச் சுகமா யிரு. இந்த விஷயத்தில் நீயே விதுரனைக் கேள். அவன் உனக்கு இதத்தைச் சொல்லுவன். அதின்படி நடந்தாயேயாகில் மேன்மேலும் க்ஷேமங் கிடைக்குமென்று பிதா சொல்லியதைக்கேட்ட துரியோதனன் பெருமூச்சுவிட்டுச் சொல்லுகிருன்:

### துரியோதனன் திரிதராஷ்டிரனுக்கு இராஜசூயம் நடந்த சிறப்பு கூறல்

கேளும் என் தந்தையே! எப்படியாகிலும் வயிறு வளர்த்தால் போதுமென்று எண்ணுகிறவனுக்கன்றோ சோறுந் துணியும் கிடைத்தாற் பெருமை. அவ்விதமாய் நாயும் வயிறு வளர்க்கிறது. அப்படி இழிவாக வயிறு வளர்ப்பதைக் காட்டிலும் பிராணனை விடுவது உத்தமம். எதிரிக்கு இளைக்காமல் பிழைப்பதன்றோ பிழைப்பு. அதிலுஞ் சூரனுகவும் மானியாகவும் இருப்பவன் சத்துரு பெருமையடையப் பார்த்திருப்பது நியாயமா? நீர் எனக்கு வெகு செல்வங்களைக் கொடுத்திருக்கிறீர். ஆகிலும், அவைகளெல்லாம் பாண்டவர்களுடைய செல்வங்களுக்கு முன் அற்பமாகத் தோற்றுகிறபடியால் சந்தோஷகரமாய் இருக்கவில்லை. அவர்களுடைய சம்பத்துகளின் அதிசயத்தை இன்னமுஞ் சொல்லுகிறேன் கேளும்: இராஜசூயயாகத்தில் வருகிற காணிக்கைகளையும் மற்றுமிருக்கிற பொருள்களையும் விசாரித்து வாங்கி வைக்கும்படி எனக்குப் பொக்கிஷத்தில் அதிகாரங் கொடுத்தார்கள். அதனுலே நான் பூரணமாய் கண்டிருக்கிறேன். என் கண்கள் எவ்வளவு தூரம் பரவியதுகளோ அவ்வளவு தூரமும் பொருட் கூட்டங்களாகவே காணப்பட்டதுகள். வரவுக்குஞ் செலவுக்குங் கணக்கு வைக்கக் கூடாமல் போயிற்று. பொக்கிஷத்துக்காகப் பல வீடுகள் விஸ்தாரங்களாய் நியமிக்கப்பட் டிருந்தும், அவைகளில் அடங்காமல் அதின் புறங்களிலெல்லாம் மழை பெய்தபோது ஆலாங்கட்டிகள் விழுந்திருந்தால் எப்படியோ அப்படிக்கு இரத்தினங்களும், பொன்களும், மற்றுமுண்டான அளவற்ற பொருள்களும் இறைந்திருக்கின்றன.

இப்படி கொள்ளாமலிருக்கச்சேயும், ஓய்வில்லாமல் நாலு திக்குகளிலுமிருந்து அளவற்ற பொருள்கள் ஆற்றின் வெள்ளம்போல் வந்துகொண்டே யிருந்தன. அதுகளைப் பார்க்குமளவில் யார்தான் ஆச்சரியப்படமாட்டார்கள். தேவேந்திரன் குபேரன் முதலான பேர்களும் பொருமைப்படாம லிரார்கள். வேலைக்காரர்களுக்கும் எனக்கும் வந்த வஸ்துக்களை வாங்கி வைத்துக் கைகள் சோர்ந்தன. இன்னவிடத்தில் இன்னதை வையுங்களென்றுச் சொல்லிச்சொல்லி என் வாயுஞ் சலித்தது. அந்தச் சம்பத்துக்களுக்குமுன் நமது ராச்சிய சம்பத்துக்களெல்லாம்ஏகதேசமா? சபாமண்டபத்திற்குப் போய் நான் தடுமாறினேனே அந்தப் படிகக்குளம் விந்துசரனென்னும் தேவ தடாகத்திலிருந்த ரத்தினங்களினுற் செய்யப்பட்ட படிகளினுலே, மெய்யாகிய தாமரைப் பூக்கள் போலவும், மீன்கள்போலவும், மற்றும் நீர்ப்பறவைகள் போலவும் தெளிந்து அசைதுகொண் டிருக்குந் தண்ணீர் போலவுங் காணப்பட்டது. இவ்வாருகச் சொல்லத்தரமில்லாத அநேகமாயிரம் விசித்திரங்களுண்டு. இதுகள் தவிர, யானை-குதிரை-பசுக்கள் முதலானவைகளும், ஆசனங்கள் - சயனங்கள் முதலியவைகளும் அளவற்று வந்தன. வந்த ராஜாக்கள் யாவரும் வெகு காணிக்கைகளைக் கொணர்ந்தார்கள். ஆனுல், அவைகளை விவரமாகச் சொல்ல எனக்குத் தெரியாது. ஆகிலுஞ் சிலவற்றை ஞாபகமுள்ளவரையிற் சொல்லுகிறேன் கேளும்:

காம்போஜ ராஜனும், திரை கருவரும் கொணர்ந்த பொருள்களை முன்னங் கூடிய வரையிற் சொன்னேனல்லவா? மற்றொரு வசாதிகளென்னப்பட்டவர்கள் தித்திரி யென்

னும் பட்சிபோற் பஞ்சவர்னங்க ளுடைத்தா
கிய தேகமுங் கிளிமூக்கு வன்னமாகிய முகமு
முள்ள அனேகங் குதிரைகளையும் சுமைகளை
நன்ருய்ச் சுமக்கத்தக்க பல்லாயிரம் ஒட்டகங்
களையும், பலவகைப்பட்ட வஸ்திராதிகளையுங்
கொணர்ந்து, ராஜதரிசன மில்லாமல் வெகு
காலங் காத்திருந்தார்கள். இமயமலையி லிரு
ந்து ஒரு வேதியன் சங்கமொன்று கொண்டு
வந்து கொடுத்தான். அது பெரிய உருவத்
தோடு கூடி நல்ல லக்ஷணங்க ளுள்ளதாய்ச்
சந்திர மண்டலத்தை யொத்துப் பொன்னல்
அலங்கரிக்கப்பட் டிருந்தது. அதை உதிஷ்டி
ரன் அர்ச்சுனனுக்குக் கொடுத்தான். அவன்
அதை வாங்கி ஊதினன். அந்த ஓசையைக்
கேட்ட ராசாக்கள் யாவரும் மூர்ச்சை யடைந்
தார்கள். பாண்டவர் ஐவரும், துஷ்டத்துய
மனும், ஸ்ரீ கிருஷ்ணனும், சாத்தகியும், இந்த
எட்டுபேர்கள் மாத்திரம் மூர்ச்சை யடைய
வில்லை. நானும் மூர்ச்சை யடையக் கண்டு,
வீமனும் அர்ச்சுனனும் நகைத்தார்கள். நான்
மானமில்லாதவ னைபடியினலே அவர்களைக்
கொல்லமாட்டாமற் போனதுமன்றி,பிழைத்து
மிருக்கிறேன். அந்தப் பிராமணனுக்குத் தர்ம
புத்திரர் சிரேஷ்டமாகிய ஐந்நூறு விருஷபங்
களையும், வெகு பணங்களையும் வெகுமதி செய்
தார்.

சுமுகனென்பவனும், குளிந்தனென்பவ
னும் நாணயமாய்ப் பொற்சரிகை போட்டிருக்
கிற அனேகவகை ஆடைகளையும், பொற்குடங்
களில் நிறைந்த அருமையாகிய தேன்களை
யும், பல பூஷணங்களையும், பணங்களையுங்
கொணர்ந்து, வாசற் காப்பாளரால் தடைப்
பட்டுப் பின்பு கண்டு பணிந்தார்கள். யவன
தேசத்து ராஜாக்கள் பருவததேசத்துக் குதி
ரைகளிற் பலவற்றையும், மழமழப்பும், நிக
நிகப்பும் பொருந்தி மெல்லிதாயிராநின்ற
விலையுயர்ந்த கம்பளங்களையும், பலவகைப்
பட்டு வஸ்திரங்களையும் கொணர்ந்தார்கள்.
கலிங்கதேசாதிபதியாகிய சுருதாயு என்பவன்
விலையுயர்ந்த மணிகளையும், திவ்யாலங்காரம்
பொருந்திச் சுந்தரிகளாகிய பல மங்கையரை
யுங் கொணர்ந்து காத்திருந்து கொடுத்தான்.
வங்கதேசாதிபதி நவரத்தினங்க ளிழைத்த
கட்டில்கள் - ஆசனங்கள் - பல்லக்குகள் முதலா
னது கொணர்ந்தான். பாண்டியராஜன் நல்ல
சந்தனக்கட்டைகளில் தொண்ணூறுபாரமும்
அவ்வளவு நற்சங்குகளும், சந்திரகிரகணம்
போன்ற முத்துமாலைகள் பலவுங் கொணர்ந்து

சமயம் பார்த்திருந்து கொடுத்துப் பணிந்
தான். சோழதேசத்து ராஜனும், கேரளமென்
கிற மலையாளதேசத்துராஜனும் அகிற்கட்டை
களில் அனேக பாரங்களும், ஹரிச்யாமமென்
கிற ஸ்ரீ சந்தக்கட்டைகளி லனேகபாரங்க
ளும், யானைத்தந்தங்களி லனேகபாரங்களும்
கொடுத்தார்கள். அச்மகனென்பவன் கொம்பு
குளப்புகளுக்குப் பொற்பணி பூண்டு, கழுத்தில்
நல்ல ஹாரங்களணிந்து, பார்க்க வெகு அழ
காய் ஒரு குடம் பால் கறக்கத்தக்க தலையீற்றுப்
பசுக்களிற் பதினயிரங் கொடுத்தான். சிந்து
தேசத்தரசன் பிறந்து மூன்று வருஷங்க
ளானவைகளும், சுபலட்சணங்க ளுடையவை
களும், முத்துசாலர்கள் கட்டிப் பொற்சரிகை
களினலும் உயர்ந்த பட்டினலுஞ் செய்த
சீனிகள்போட்ட இருபத்தையாயிரங் குதிரைக்
குட்டிகளைக் கொணர்ந்துவந்து கொடுக்கச் சம
யங் கிடையாமல் வாசலிற்றனே வெகுநேரந்
தடுமாறிக்கொண்டிருந்தான்.

சவ்வீரதேசத்தரசன் நான்கு யானைக்
குட்டிகள் கட்டியதாய், முழுவதும் பொற்பட்
டங்களணிந்து, நவரத்தினங்களு மிழைத்து
முத்துசரங்களும், பவழச்சரங்களும், பொற்
சலங்கைகளுஞ் சுற்றிக்கட்டி, திவ்யமாகிய
குடை முதலாயுள்ள பதாதைகளிட்டு, சூரிய
மண்டலம்போல் விளங்காநின்ற முப்பது
தேர்களைக் கொணர்ந்து நெடுநேரம் காத்
திருந்தான். அவந்திராஜன் விலையுயர்ந்த பற்
பல மணிகளாற் செய்த விநோதமாகிய கிரீட
கவசகுண்டல கேயூர முதலிய பணிகளையும்,
அநேகம் தாசிகளையும் வருந்திக்கொடுத்தான்.
தசார்ண தேசாதிபன், சூரசேன தேசாதிபன்
இம்மூவரும் பணப்பொதிகளைக் கொணர்ந்து
காத்திருந்தார்கள். காசிராஜன் எண்பதினயி
ரம் பசுக்களையும், பதினயிரம் குதிரைகளையும்,
எண்ணூறு யானைகளையும், பல வன்னப்பட்டு
களையும் கொண்டுவந்தான். விதேகராஜனுகிய
கிருதட்சணனும், கோசலராஜனுகிய பிருகத்
பலனும் கூத்தாடும்படியாகிய பதினயிரம்
குதிரைகளும், ஒருபாரந் தங்கமுங் கொடுத்
துக் காத்திருந்தார்கள். சப்பியனென்பவன்
பொற்சரிகையினல் நெய்து, தலைப்புகளில்
முத்துச்சரங்களும், ரத்தினச்சரங்களும், தொ
ங்கவிட்ட வஸ்திரங்களி லனேகங்களைக் கொ
டுத்தான். திரிகர்த்தராஜன் அழகும் பலமும்
பொருந்திய காளைகள் கட்டிய பொற்பட்ட
மணிந்த ரதங்களில் ஆயிரமும், பல பொரு

ளும் கொடுத்தான். பாருகச்சனென்பவன்
உயர்ந்த முத்துமாலைகளும், ரத்தினமாலைக
ளும், சந்திரஹார முதலியவைகளும், பருத்
திக்காட்டிற் பிறந்து நல்ல யௌவனமும்,
நீண்ட தேகமும், நெடிய கூந்தல்களுமுள்ள
அனேகமாயிரந் தாசிகளையும் கொணர்ந்து
வாசலில் அலைந்துகொண் டிருந்தான்.

தென்மேற்கிலுள்ள சில. வேடராஜர்கள்
பார்ப்பாருக்கு உபயோகமாகிய ஆட்டு மயிர்
களினல் நெய்த கம்பளங்களும், ரத்தினக் கம்
பளங்களும், அனேகமாயிரங் குடந் தேன்
களும், நெய்களும், ருசியுள்ள மீன்சுமைகளும்,
அனேக ஒட்டகங்களும் கொணர்ந்து காத்
திருந்தார்கள். காசியாளென்போரும் அப்
படியே காத்திருந்தார்கள். மற்றொரு வேட
ராஜன் மேற்கடலின் நடுவிலுந் தென்கடலின்
நடுவிலுமிருக்கு மலைகளிற் பிறந்த பவழங்
களிற் பல கொணர்ந்தான். விடூரதன் வைடூரி
யக் கட்டிகளும், மரகதக்கட்டிகளும் பல கொ
ணர்ந்தான். பகதத்தன் உயர்ந்த யானைகள்-
குதிரைகள் முதலிய வாகனங்களோடு கத்தி
கள் - ஈட்டிகள் முதலான ஆயுதவகைகளும்,
இன்னும் பல திரவியங்கள் கொடுத்துச் சேவ
கன்போல் காத்துக்கொண் டிருந்தான். ஒற்
றைக்கண்ணர்-ஒற்றைக்கையர்-ஒற்றைக்காலர்-
மூக்கண்ணர்-மூக்கையர் - மூக்காலர் முதலான
இராட்சதர்களில் உட்டீணீசர்-அபயர்-பிரபா
குகர் என்று சொல்லப்படுவோர் யானைத் தந்
தங்கள்-மான்கொம்புகள்-கட்கங்கள்-புலிநகங்
கள்-சாமரங்கள் - காட்டுக்குதிரைகள் - காட்டு
யானைகள் - காட்டெருமைகள் - காட்டெருது
கள் - பலவகை மான்கள் - விசித்திரமாகிய
அநேக மிருகங்கள் - பட்சிகள் இவைகளைக்
கொண்டுவந்தார்கள். சிங்களத்தரசன் கோசீர்
ஷக மென்றும், பத்துமமென்றும், அரிசியாம
மென் றுஞ் சொல்லப்பட்ட பலவகைச் சந்த
னங்களும், மற்றும் வாசனை வஸ்துக்களுங்
கொடுத்தான். மற்றொரு தீவின் அரசன் இல
வங்கம் - ஏலக்காய்-சாதிப்பூ-சாதிக்காய் இன்
னும் பலவித வஸ்துக்களோடு சிலவகை ரத்தி
னக் கட்டிகளுங் கொடுத்தான். புண்டரீகரும்,
தாமலித்தரும் பச்சைக்கற்பூரம்-குங்குமப்பூ-
கோரோசனம்-அகில்-தக்கோலம்-இலவங்கம்-
சாதிக்காய் முதலானதுகளைக் கொண்டு வந்
தார்கள்.

சீனர்-ஹூணர் - தஷர்-காசர் இவர்களெல்
லாங் கடலி லகப்படத்தக்க பல விசித்திர வஸ்
துக்களையும் மலையிலுள்ள விசித்திர வஸ்துக்
களையும் ஆடும்படியாகவும், பாடும்படியாகவும்,
வாத்தியங் கொட்டும்படியாகவுஞ்செய்த அநே
கப் பதுமைகளையும், விசித்திரமாகிய கண்
ணாடிகளையும், அழகாய் வேலை செய்த தோற்
களிற் பலவற்றையுங் கொண்டுவந்து வாச
லில் நிற்கக்கூட இடமில்லாமல் தடுமாறினர்
கள், காஸ்மீரராஜன் உயர்ந்த வஸ்திரங்கள்,
கம்பளங்கள், கஸ்தூரி முதலிய வாசனை வஸ்
துக்கள், பலவகை மான்கள் இவைகளோடு
இன்னும் வெகு பணங்களுங் கொண்டுவந்து
கொடுத்தான். மாளவராசன் பல்லாயிரங் கலங்
கோதுமைகள், கடலைகள், தானியங்கள், இன்
னும் போசனத்திற்கு வேண்டிய பலவஸ்
துக்கள் இவைகளைக் கொடுத்தான். சுராட்டிர
ராஜன் இருபதினாயிரங் குடம் நல்லெண்ணே
யும், ஆயிரம் வண்டி வெள்ளை வெல்லமும்,
சர்க்கரை, கற்கண்டு இதுகளை யெல்லாங்
கொண்டுவந்து கொடுத்தான். இப்படியே
சகல ராஜாக்களுங் கொண்டுவந்த பொருள்
களுக்களவில்லை. இத்தனைபேரும் அரண்மனை
வாசலில் வெகுபோது காத்திருந்துஞ் சமயங்
கிடைக்காமற் போய், மறுபடியும் வந்து நான்
முன்னே நீ முன்னே யென்று மேல் விழுந்து
தருமபுத்திரரைக்கண்டு வந்தனம் பண்ணினர்
கள். அப்போது வந்த குதிரைகளை யொரு
கணக்கிட்டேன். அப்படி கணக்கிட்டதிற்
கோடியிருக்கலா மென்று தோன்றிற்று. மற்ற
வைகளை யெண்ணக்கூடவில்லை. இப்படிக்கு
மகா பெருமை பெற்றுத் தருமபுத்திரன்
விளங்க, நான் அவனுடைய சேவகரில் ஒரு
வன்போல் அங்கே அலைந்து திரிந்துகொண்
டிருந்தேன். இளாவிரத கண்டத்தி லிருப்போ
ரும், உத்தரகுருவி லிருப்போருந் தவிர, மற்
றை யாவருங் காத்துக் கிடந்தார்கள்.

ஐயா! இன்னமுங் கேளும்: சித்திராங்
கதன் முதலாகிய கந்திருவர் வந்திருந்தார்
கள். அவர்கள் ஜாம்பூனதமென்கிற பொற்
கட்டிகளையும், தேவலோகத்து ரத்தினங்களிற்
பலவற்றையும், சங்குகளி லனேகங்களையும்,
பற்பல விசித்திரமான வஸ்திரங்களையும், சில
குள்ளவையான பஞ்சவர்ணக் குதிரைகளில்
நூறும், பச்சைக் குதிரைகளில் நூறுங்
கொண்டுவந்து கொடுத்தார்கள். அப்படியே
சில இயக்கர் முதலானபேர்கள் பல பணிகளை
யும், சுகந்தமுள்ள பொற்றாமரை மாலைகளை
யும், வாடாத செங்கழுநீர் மாலைகளையும்,

மற்றும் அனேகம் பூமாலைகளையுங் கொடுத்தார்
கள். இன்னுமிந்தப் பூமண்டலத்திலுள்ள
நவகண்டங்களிலும், மற்றுமனேக வருஷங்
களிலும்,தீவுகளிலும், மலைகளிலும், காடுகளி
லுமிருக்கிற ராஜாக்கள் மிலேச்சர் - பில்லர்-
வேடர் - கிராதர் - ஊணர் - புற்கசர்- தேவசகதி
யர் இவர் முதற் பலருந் தங்கள் தங்களுக்கு
இருந்த சிறப்புப் பொருள்களைக் கொண்டு
வந்து கொடுத்தார்கள். சில சாதியார் வெள்ளை
யானைக் கன்றுகளில் ஆயிரங் கொடுத்தார்கள்.
சில வேடர் எப்போதும் அழுகாதவைகளா
யும், இரச மற்றுப் போகாதவைகளாயும், சுக
ந்தமும் ருசியும் விசேஷப் பட்டவைகளாயு
மிரானின்ற பழங்களையும், கிழங்குகளையுங்கொ
ண்டுவந்து கொடுத்தார்கள். இன்னுஞ் சில
வேடர் அருமையான மாமிசங்களையும், பா
ணங்களையுங் கொண்டுவந்தார்கள். அநேகர்
உலோகங்களிற் பலவற்றையும், ஓஷதிகளிற்
பலவற்றையுங் கொணர்ந்தார்கள்.

இப்படிப்பட்ட காணிக்கை கொண்டுவந்த
யாவரும் வாசலிற் காத்து, காவற்காரருக்குப்
பற்பல பொருள்களை யீந்து நல்ல வார்த்தை
சொல்லி உட்புகுந்து, மகாராஜாவைக் கண்டு
பணிந்து காணிக்கை வைத்தார்கள். அங்கு
வந்த திரவிய மாத்திரம் நூறு கோடிக்கு
அதிகமிருக்குமென் றெண்ணுகிறேன். அத்
தருமனோ அவ்வளவு பொருளையும் அலட்சி
யஞ் செய்யாமல் நல்ல பிராமணருக்கு அவை
யனைத்தையுந் தானஞ் செய்துவிட்டான்.
அந்த யாகத்திற்கு வந்தவர்களில் ஒவ்வொரு
வனும், இந்திரன் குபேரன் முதலானோரைக்
கூட மதியாமலிருக்கும்படியானார்கள். அவ்
விடத்திலே யான் ஒருவனுக்கும் அலட்சிய
மின்றி யிருந்தேன். இதைக் காட்டிலு மென்ற
னுக்குத் துக்கம் வேறுளதோ? நானோ இராஜ
வமிசத்திற் சிறந்ததாகிய குருகுலத்திற் பிற
ந்து, இந்த ராஜ்யத்திற்கு முதன்மையாகிய
ராஜாவா யிரானின்ற உமக்குப் புத்திரனாகி,
சகல விதங்களிலும் உயர்ந்தவனாய் இருக்கி
றேன். இப்படிப்பட்டவன் அப்பிரயோஜனம்
போலிருக்க, இராச்சியத்திற்கு உரிய ராஜாவா
காமல் உமக்குத் தம்பியானது பற்றிச் சிறப்
படைந்த பாண்டுவின் குமாரராய்க் காட்டிற்
பிறந்து திரிந்தலைந்து பிச்சையெடுத்த அவர்
கள் அகண்ட சாம்பிராச்சிய சம்பத்தை யனு
பவிக்க நேரிற் பார்த்து, மானமுள்ள நான்
உயிர் வைத்திருக்கலாமா? இது தலை கீழா

யன்றோ யிருக்கிறது. இப்படிக்குப் பெருஞ்
செல்வம் இருந்தபடியினாலே உத்தமருக்குப்
பல தானங்கள் செய்தான். அதனாலே அவர்
கள் இவர்கட்குச் சத்துருக்கள் நாசமடைந்து
சம்பத்துகள் மேன்மேலும் வளருகவென்று
ஆசீர்வதிக்கிறார்கள். அவர்கள் ஆசீர்வாதத்
தால் தேயசு-மேன்மை-சுகம்- தருமம்- நற்கதி-
புகழ்- இவை முதலானவும் அவர்களுக்கு உண்
டாகின்றன. ஆனபடியினாலே எல்லாவற்றிற்கு
முதற் காரணஞ் செல்வமே யாகின்றது. அஃ
தில்லாத எனக்கு என்ன தான் கிடைக்கும்.

எந்தையே! அவ்விடத்தில் நடந்த மற்
றொரு சிறப்பைக் கேட்பீரா? யாக முடிந்து
அவப்பிரதவானவுடனே நாரதர் - பருவதர்-
வசிட்டர்-பராசர்-வியாசர்- தவுமியர் முதலான
மகாரிஷிகளும், வேத சாஸ்திரங்களை முற்றுங்
கற்று, அஸ்திர பாண்டியத்தியத்தாற் சிறந்து
விவேக குணங்களினு லுயர்ந்து அனேகம்
யாகங்களைச் செய்து பேர்பெற்று நல்லொ
ழுக்க முடையோராகிய பல பராக்கிரமங்களில்
ஒப்பில்லாத மகாராஜாக்கள் பலருங் கூடி,
தரும புத்திரனுக்குச் சாம்பிராஜ்யப் பட்டாபி
ஷேகஞ் செய்ய முயன்று, கிழக்கு, தெற்கு,
மேற்கு என்னும் இம் முத்திரைக் கடலினின்
றும், ஐந்நூறு மகா நதிகளினின்றுந் தீர்த்
தங்களை வருவித்து, திவ்விய ஓஷதி ரசம்
சேர்த்து அபிமந்திரித்து, திவ்ய சிங்காதனத்
தில் உட்காரவைத்து, பதினெண் வாத்தியங்
கள் முழங்க, நாற்பத் தெண்ணாயிர முனிவர்
சுவஸ்தி வாசனஞ்சொல்ல, அபிஷேகஞ் செய்
தார்கள். அப்போது கட்டுவதற்குங் கறப்ப
தற்குமான வெள்ளியினாலாகிய அணைகயிறோ
டும் பொன் பாத்திரங்களோடும் பத்து லக்ஷம்
பசுக்களும், மற்றும் வெகு பொருள்களுந் தா
னம் பண்ணினான். தருமபுத்திரன் பின்பு வீதி
வலம் வரும்பொருட்டுப் பாக்லிராஜன் வாக
னச் சாலையிலிருந்து தானே நவரத்தின கசித
மான தேரைக் கொண்டுவந்தான். சுதக்ஷண
மகாராஜன் அந்தத் தேரில் நான்கு குதிரை
களைக் கட்டினான். சுனீதராஜன் அத்தேரின்
மேல் ஏற உதிஷ்டிரனுக்குக் கைலாகு கொ
டுத்து வந்தான். சேதிராஜன் துவஜங்கொ
ண்டுவந்தான். தக்ஷிணராஜன் திவ்விய கவசத்
தை அவர்தேகத்திற்பூட்டினான். மகாதராஜன்
மகா கிரீடத்தை அவர் முடியில் அலங்கரித்துப்
பூமாலைகளையுஞ் சூட்டினான். வசுதான ராஜன்
பட்டத்து யானையை அலங்கரித்துக் கையிற்

பிடித்துக்கொண் டிருந்தான். விராடராஜன் குதிரையைச் சீனி வைத்து அலங்கரித்துப் பிடித்துக்கொண்டிருந்தான். ஏகலைவன் மணிகளிலிழைத்த பாதுகைகளைக் கொண்டுவந்து அவர் பாதங்களிற் பூட்டினான். அவந்திராஜன் பூரணகலசை மெடுத்துக்கொண்டு வந்தான். சேகிதானன் அம்புப் புட்டில்களைக் கொணர்ந்து வைத்தான். காசிராஜன் வில் லெடுத்துக்கொண்டு வந்தான். சல்லியராஜன் மணிமயமாகிய பிடிபோட்ட கத்தியை எடுத்துக்கொண்டு வந்து வைத்தான்.

இப்படிக்கு யாவரும் பலவந்தமாய் மேல் விழுந்து ஒவ்வொருழியஞ் செய்தார்கள். இதை யோசித்தால் அடித்துக்கொண்டு வந்தி தேரிற் கட்டவேண்டிய குதிரைகள் தாமே ஓடிவந்து நுகந்தடியைக் கழுத்திற் பூட்டிக்கொண்டதுபோ லிருந்தது. பின்பந்த திவ்விய ரதத்திலேறி விளங்கிய தருமபுத்திரனுக்குச் சாத்தகி வெண்குடை பிடித்தான். அர்ச்சுனன் விசித்திரமாகிய வெண்சாமரை வீசினான். வீமசேனன் வாசனையாயிரானின்ற சிற்றால வட்டம் வீசினான். நகுல சகாதேவர் பின்புறத்தில் நின்று சாமரம் போட்டார்கள். முன்னம் ஒரு பிராமணன் மகா சங்கமொன்று கொண்டுவந்து கொடுத்தானென்று சொன்னேன். அந்தச் சங்கத்தை அர்ச்சுனன் ஊதினான் அந்தச் சங்கத்தின் வரலாற்றைக் கேளும்: பூர்வம் பிரமலோகத்தி லிருந்தது. அதைப் பிரமதேவன் இந்திரனுக்குங் கொடுத்தான். அவன் வருணனிடத்தில் வைத்திருந்தான். தருமபுத்திரனுக்குச் சாம்பிராச்சிய பட்டாபிஷேக மாகிறபோது இந்திரன் வருணனிடத்தி லிருந்து வாங்கி, வெகு ரத்தினங்களோடு உலுப்பையாகக் கொடுத்தனுப்பினான். அக்குறிப்பை உதிஷ்டிரனறிந்து அர்ச்சுனனுக்குக் கொடுத்தான். இவ்வண்ணமாக அவனுக்குச் சாம்பிராச்சிய பட்டாபிஷேகம் நடந்தது. மனு-மாந்தாதா-அரிச்சந்திரன்-பிருதுமுதலாகியபேர்களுக்கும் இப்படிப்பட்ட சிறப்பு நடக்கவில்லை யென்று பெரியோர்களெல்லாம் பேசிக்கொண்டார்கள். அதனாற் பூலோக தேவேந்திரனென்று சொல்லும்படி விளங்கினான். இதை யெல்லாம் பார்த்து என் வயிறுங் குடலும் மண்டி எரிகிறது; மனந் தவிக்கிறது; ஆகார நித்திரைகள் இல்லை; இந்தத் துக்கத்தை உம்முடனே சொல்லவேண்டுமென்று வந்தேன்; சொன்னேன்; இனி உயிர் வைத்திருக்க எனக்கு மனமில்லை என்று மகன் சொல்லிய வசனங்களைக் கேட்ட திரிதராஷ்டிர மகாராஜன் மகா வருத்தத்தோடு அவனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

## திரிதராஷ்டிரன் துரியோதனன் கருத்தைக் கடிய அவனதைக்கேளாது வாதித்தல்

அடா துரியோதனா! உன் யோக்கியதையையும் உன் கருத்தையும் நோக்கினால் ஒன்றுக்கொன்று மாறுபட் டிருக்கின்றது. நீ எல்லா நூல்களையுங் குறைவறக் கற்றவன். அவைகளின் உட்கருத்தையும் நன்றா யுணர்ந்தவன். உலக நீதிகளையும் நன்றா யறிந்தவன். நற்குணங்களு முடையவன். இப்படி எல்லாவைகளினாலும் வெகு சிரேஷ்டனாகை யிருந்தும், உனக்குப் பிராதாக்களாயும், தரும நிஷ்டை யுடையவர்களாயும், வணக்க மொடுக்க முதலிய நற்குணங்களுள்ளவர்களாயும், பல பராக்கிரமங்களுடையவர்களாயும், உன்னிடத்திலே அன்புள்ளவர்களாயுமிருக்கிற பாண்டவர்களுடைய செல்வத்தைப் பார்த்தும் பொறாமைப்படுகிறது தகாதன்றோ? பொறாமையினாலேயே அவர்களை நீ பகைக்கிறா யல்லது, வேறு காரணமொன்று மில்லையே? அவர்களை பகைப்பது வெகு அரியாய மல்லவோ? இதை நீயேன் உணராமலிருக்கிறாய்? நல்லது ஆகட்டும். இப்போது நிரேதுவாய் நீ கொண்டிருக்கும் பகையினாலே பயனேதாகிலு முண்டோ? அதனால் உனக்கு வருவதான சீகம் யாதேனு மிருக்கிறதா? இல்லையே, இப்படி நீ கொண்டிருக்கிற எண்ணத்தால் மரணாந்தமாகிய பொல்லாங்குதான் உண்டாகும். அறியாமையாலே அவர்களின் பகையை நீ சம்பாதிப்பதினால், இப்போதிருக்கிற செல்வத்தையுஞ் சுகத்தையும் இழந்து போவாய். வேண்டாம். எப்போதும் நல்வழியிற் செல்ல நினை. அப்போது செல்வந் தனக்குத்தானே வளரும். உன்னுடைய அபிவிர்த்தியை உள்ள நாள் வரைக்கும் உயரக் கோருபவனாகிய என் புத்தியைக் கேள். அவர்கள் யாகமொன்று செய்தார்களே யென்றால், நீயும் ஒரு யாகஞ் செய் அவர்களுக்கு அரசர் கப்பங் கட்டினார்களே யென்றால் அவர்களிடத்திற் பயத்தினாற் கொடுத்தால் உன்னிடத்திற் பிரீதியினாற் கொடுப்பார்கள். சந்தேகமில்லை. சபை வேண்டுமென்றால் அதையும் வெகு விசித்திரமாய் நிருமிக்கச் சொன்னேன்.

அடா குழந்தாய்! இந்தப் பூமி அரசருக் கெல்லாம் பாரியை. இதை வீரியமில்லாத வன் அநுபவிக்க மாட்டான். கூரிய புத்தி யுடைய வீரியசாலிக்கு நல்ல பெண்டிரைப் போல் இனிப்பாய் இருக்கும். நீயோ வெகு வீரியம் உடையவன். உனக்குப் பூமி வெகு பலன்களைக் கொடுக்கும். மேலும்உனக்கு வெகு வீரர் சகாயமாய் இருக்கிறார்கள். மிகுந்த சேனை கள் இருக்கின்றன. ஆனபடியினாலே இந்தப் பூமி முழுவதும் உனக்குச் சுவாதீனமானது தான். உன் பூமியைத்தான் சகல ராஜாக்க ளும் ஆளுகிறார்கள். ஆகையால் உனக்குக் கப்பங் கொடாமற் போகமாட்டார்கள். உனக் கென்ன குறை இருக்கிறது. ஆனதுபற்றி, நீ எல்லா விஷயத்திலுஞ் சந்தோஷப்பட வேண்டுவதுதான், பாண்டவர்களைப்போல நீயும் உன் புஜபலத்தினாற் பூமியினின்று வெகு தனங்களைச் சம்பாதித்து, இஷ்டப்படி செலவு செய்ய வேண்டாமென்று யார் சொல் லுகிறார்கள்? அப்படிக்கல்லாமல் அயலா ருடைய சம்பத்தைப் பார்த்துப் பொறாமை கொண்டு, அதை யபகரிக்க யெத்தனப் படுவ தினால், இம்மையி லபகீர்த்தியும் - அசவுக்கிய மும் அடைவதன்றி, மறுமையில் இழிவும் நரகமுங் கிடைக்கும். அப்பா துரியோதனா! நானுக்கு நன்மையைச் சொல்லுவேனே யல் லது வேறு சொல்லமாட்டேன். நீ இதை நன்றாய் உணர்ந்து, அயலார் செல்வத்திற் பொறாமையைத் துறந்து, உனக்குள்ளதை வளர்த்துக்கொண்டு, ஜனங்களை நியாயமாய்ப் பரிபாலனம் பண்ணி சகல போகங்களோடு ஸ்திரீகளை யநுபவித்துக் கொண்டிரு. நீ ராஜ காரியங்களிற் செய்ய வேண்டியதை விதுரன் முதலான மந்திரிகளின் யோசனைப்படி நட ந்து, புஜபலத்தினால் வேண்டிய சம்பத்தைப் பெற்று, யாகமுதலாகிய தருமங்களைச்செய்து, அதில் அப்பொருள்களைச் சிலவழி. நல்லவர்க ளைப் பகையாதே. இப்படி செய்வது உனக்கு மிகவும் நன்மை யென்று தன் பிதாவாகிய திரிதராஷ்டிரன் சொன்னதைக் கேட்ட துரி யோதனன் கொஞ்சமும் சமாதானப்படாமல், அவனை நோக்கி நிந்தையோடு கூடிய பேச் சைச் சொல்ல வாரம்பித்தான்.

ஓ ராசனே! நீர் சொல்லிய பேச்சுக்களெல் லாம் படித்தவன் விவேகமிழந்து சொல்லுஞ் சொற்களைப்போல் இருக்கின்றன. இப்படிப் பட்ட பேச்சுகளை நீர் சொல்வதற்குக் காரணம் அவிவேகமோ? எங்களை மோகிப்பிக்க வேண்டு மென்னுங் கருத்தோ? எனக்கொன்றுந் தெரிய வில்லை. இவ்வாறு நீர் உபதேசிக்க ஆரம்பித்த தினால், இனி நாங்களெல்லாம் நாசமடையுங் காலம் நேரிடுமென்று நினைக்கிறேன். நீர் இனி வரப்போகிறதை எவ்வளவுஞ் சிந்திக்காமலே பேசுகிறீர். உனக்குச் சுயமான புத்தியில்லை. அன்னியருடைய புத்தியைக் கேட்கவேண்டு கிறீர். அந்த அன்னியனோ, சத்துரு பக்ஷத்தி லிருக்கும் விதுரன் அவன் பேச்சைக் கேட்டு நீர் எனக்குப் புத்தி சொல்லத் துணிந்தால், நாங்கள் எப்படி மின்னுக்கு வருவோம். ஆனால், நானென்ன சுத்தமூடனா? தருமங்கள் அறியாதவன் என்கிறீரா? இல்லை, நீர் புத்தி மான்தான். ஆனால் உம்முடைய வார்த்தை தரும விருத்தத்தை யநுசரித்ததும், இராஜ விருத்தத்தை விரோதித்ததுமாக விருக்கிறது. பிரகஸ்பதி செய்த நூலைப்பாரும் தரும விருத்த மென்றும், ராஜவிருத்த மென்றும், இரண்டு வகைப்பட்ட சரித்திரஞ் சொல் லப்பட் டிருக்கிறது. அதில் தரும விருத் தம் வேதியர் முதலானோருக்கே யன்றி, அரச ருக்கு முக்கியமல்ல. ராஜ விருத்தமே அரச ருக்கு முக்கியம். ஆனபடியினாற் சத்துருவின் செல்வத்தைக் கவருவது நியாயமானாலும் அநியாயமானாலுந் தருமந்தான். எப்போது எவனைக் கொல்ல வேண்டுமோ அப்போது அவனை எவ்விதத்தினாலாகிலுங் கொல்ல வேண்டும். அப்படி செய்யாமற் போவது பெருங்குற்றம். சத்துரு வளர்ந்து வருவதைப் பார்த்து உபேக்ஷை செய்பவன், தன் தேகத் தில் வியாதி வளர்ந்து வருவதை உபேக்ஷிப் பவன்போல் ஆகிறான். அரசனுக்குச் சத்துரு வென்பவன் யாரென்றால், எவன் தனக்குச் சரியா யிருப்பவனோ, எவன் தனக்கு அதிகப் பட்டிருப்பவனோ அவன்தான் சத்துரு.

இதுவன்றி, அபகாரஞ் செய்தவனென் பது லோகவிருத்தமாகும். ஏனெனில், எல் லாரிலும் மேலா யிருப்பதைக் கோரவேண்டு வது அரசர்களின் தன்மை. அதற்கு அவ்வி ருவரும் விரோதிகளா யிருப்பவராதலால் சத் துரு வென்னப்படுகிறார்கள். ஆகையினாலே அப்படிப் பட்டவர்களை எவ்வகையினாலாகி லுங் கீழ்ப்படுத்தி, அவர் செல்வங்களை யாக் கிரமித்து அநுபவிக்கவேண்டும். அதுவே ராஜதருமமன்றி அதில் நியாயா நியாயங்களை சிந்திப்பது தப்பிதம். எப்போதும் அரசன்

செல்வத்தில் இவ்வளவு போதுமென்று திரு
ப்தி யடையக்கூடாது. மேன்மேலும் விருப்ப
முடையவனுகவே இருக்கவேண்டும். சத்துரு
வை ஜெயிப்பதில் உயுத்தமே உபாயமன்று.
வஞ்சனையும் உபாயந்தான். முன்னம் இந்தி
ரன் பிரகஸ்பதியின் நீதிகளைக் கேட்காமல்
தருமப்படி நடந்துவந்தான். அப்போது
அவன் இராச்சியத்தை நமுசியென்னும் அசு
ரன் அக்கிரமித்தான். அதன்பின் பிரகஸ்பதி
யின் நீதியைக் கேட்டு அவ்வசுரனேடு சிலகா
லம் நேசித்துச் சமாதானமாயிருந்து, பின்பு
அவனைச் சமயம் பார்த்துக் கொன்று போட்
டான். இப்படி தேவேந்திரனே அரசர் நட
க்கவேண்டிய நடையைத் தான் நடந்து
காட்டி யிருக்க, அதற்கு மாறுபாடாய் நடப்
பது தருமமாகாமற் போவதுமன்றி, வறுமை
யையுங் கொடுக்கும். சத்துரு அற்ப பலமுள்
ளவனுய் இருந்தாலும் உபேக்ஷை செய்ய
வொண்ணுது. அந்த உபேக்ஷையானது மரத்
தின்வேரில் வைத்த புற்றைப்போல் நாசத்
திற்குக் காரணமாகும். முன்னிருந்த ராசாக்க
ளுடைய சரித்திரங்களை நன்றுய் சிந்தித்துப்
பாரும். எல்லாவற்றையும் அறிந்த உமக்கு
இப்படிப்பட்ட புத்தியுண்டானது எங்களு
டைய துர்ப்பாக்கியந்தான். எனக்கு எல்லா
விதத்திலுஞ் சத்துருக்களாகிய பாண்டவர்
களின் செல்வம் வளர்கிறதைப்பார்த்து நெரு
ப்பை மிதித்தால் எப்படியோ அப்படி துடித்
துக்கொண்டு, எவ்விதமாய் அதை அபகரிப்
போம் என்று நீர் முயலாமல், எங்களைக் கெடுக்
கத் தகுந்த பேச்சை சொன்னீரே. இது நியாய
மா? இப்போதொன்று சொல்கிறேன் கேளும்:
எதிரிகளுடைய சம்பத்தை யதிகரித்து அனு
பவித்துக்கொண் டிருக்கவேண்டும். இல்லை
யாகில் அவர்களாற் கொல்லப்பட்டுச் சாக
வேண்டும். இந்த இரண்டுமில்லாமல் அவர்
களின் மேன்மையை சும்மா பார்த்துக்கொண்
டிருக்கமாட்டேன். இது நிச்சயமென்று பிடி
வாதமாய்ச் சொன்னன்.

அப்போது சகுனி துரியோதனனைப்
பார்த்து முன் சொன்னதுபோல் மறுபடியும்
சொல்லுகிறுன். கேளப்பா துரியோதனு!
நான் சூதினுல் அவர்களுடைய செல்வத்தை
எல்லாம் கவர்ந்து கொடுக்கிறேனென்றதை நீ
நம்பு. அதில் எவ்வளவுஞ் சந்தேகமில்லை.
இனதவிட்டு வீணுய் யுத்தம்பண்ணித் தேக
மெல்லாங் காயமடைய வேண்டியதில்லை.
பொருள்களும் படைகளும் அழிந்து நைய
வேண்டுவதில்லை. சுலபமாய்ச் சூதாகிய உபா
யத்தினுல் ஜெயிக்கிறவீரன் நானிருக்கிறேன்.
சொக்கட்டாஞட்டத்தில் ஏற்படுத்துகிற பந்
தயமே வில். பாச்சிகைகளை யுருட்டுவதே அம்
புகள். அட்ச இருதயத்தை அறிந்திருப்பதே
நாரி. அந்தக் காய்களை வைப்பதற்காகப் பூமி
யில் பரப்பப்பட்டிருக்கும் ஓர் பலகையே இர
தம். இதுகளை எல்லாமுடைய நான் ஒரு வீரன்
யாவரையும் ஜெயித்துத் தருகிறேனென்று
உரைக்கக் கேட்டும், நீ வீணை ஆலோசனை
யெல்லாம் ஏன் செய்கிறுய் என்று சகுனி
சொல்லியதைக் கேட்ட துரியோதனன் பிதா
வைப் பார்த்து, ஐயா! இந்த மாமா சகுனி
சூதாடுவதில் வெகு வல்லமை யுடையவராத
லால், அதைக்கொண்டு அவர்களை ஜெயிப்ப
வர் அப்படி செய்யும்படிக்கு நீர் அனுமதி
செய்யவேண்டுமே யல்லது மற்றென்றும்
யோசிக்கவேண்டாம். ஐயோ! ஒருவனுக்கு
எவனுலாணுலும் மேன்மை கிடைக்கிற வழி
யொன்றிருந்தால் அதை அங்கீகரிக்கலாமா?
இதை ஏன் சிறிதும் நீர் யோசிக்கவில்லை
என்று சொல்லக் கேட்ட திரிதராஷ்டிரன்
சொல்லுகிறுன்: அடா துரியோதனு! நீ
எனக்கு மூத்த பிள்ளை. மேலும், எனக்கு எல்
லாரிலும் நீ மகா பிரியமாகியவன். ஆனபடியி
ஞலே உனக்கு நன்மையைச் சிந்திப்பேனே
யல்லது விரோதத்தைச் சிந்திக்கமாட்டேன்.
அன்றியும், நான் ஒருவர் பேச்சையுங்
கேளேன். ஆனல், விதுரனுடைய பேச்சை
மாத்திரம் முக்கியமாய்க் கேட்பேன். ஏனென்
றல், அவன் எனக்குத் தம்பி. சகல தருமங்
களுந் தெரிந்தவன். தரும விருத்தம்-லோக
விருத்தம் - ராஜவிருத்தம் என்கிற யாவும்
அவனுக்குத் தெரியும். பக்ஷபாதம் இல்லாமற்
பேசுகிறவன். உள்ளும் புறமும் ஒத்து நடக்
கிறவன். ஆனபடியினுலே என்ன காரியம்
இருந்தாலும் அவனேடு சொல்லுவேன்.
அதற்கவன் எப்படி சொல்லுவானே அப்
படியே நடப்பேன். அவன் வார்த்தைக்கு மாறு
பாடாய் நடக்கமாட்டேன். நீ இப்போது
சொல்லுகிற இந்த காரியத்தைக் குறித்து
அவன் சொல்லுகிறபடியே நடக்கவேண்டுமே
யல்லது உன் சொற்படி நடக்க எனக் கிஷ்ட
மில்லை யென்று சொல்ல, அதைக் கேட்ட முடி
வில்லாத அசூயையையுடைய துரியோதனன்
சொல்லுகிறுன்:

வாரீர் மகாராஜாவே! ஸ்ரீ வேதவியாச
ரைப்போலவும், ஸ்ரீகிருஷ்ணனைப் போலவும்,
விதுரரும் புத்திமான்தான். ஆனாலும் இந்தச்
சங்கதியை அவரோடு நீர் சொல்லுவீரே
யாகில், அவர் ஒருபோதுஞ் சம்மதிப்படப்
போகிறதில்லை. தருமத்திற் கிசைந்த பேச்
சையே சொல்லுவார். அது ராஜதந்திரத்திற்
கிசையாது. ஆனதுபற்றி, நீர் சொந்த ஆலோ
சனையினாலிந்த காரியத்தை நடத்தவேண்டுமே
யல்லது ஒருவருடைய யோசனையை கேட்டு
நடத்தக்கூடாது. நமது மனதின்படி இசை
யத்தக்கவ னொருவனிருந்தால் அவனோடு
சொல்லலாம். விதுரர் நம்மிஷ்டப்படிக்கு
இசையமாட்டார். லோகத்தில் ஒருவன் சித்தம்
போல் மற்றொருவனுக்கிராது. அன்றியும்,
விதுரருக்குப் பாண்டவர்களிடத்திற் பிரீதி
அதிகமா யிருக்கிறது. எங்களிடத்தி லப்படிக்
கில்லை. ஆனபடியினால் இதற்கவர் சம்மதிக்கப்
போகிறதில்லை நிச்சயந்தான். ஒரு புருஷ
னுக்கு நன்மை எந்த உபாயத்தினால் வருமோ
அதைக் குறித்து விரோதஞ் செய்பவ னிடத்
தில் ஆலோசிக்கவுங் கூடாது, அவனுக்குத்
தெரிவிக்கவுங் கூடாது. அப்படியன்றி, ஒரு
வன் சம்மதி வேண்டுமென்று காத்திருந்தால்
அதற்குள்ளாகவியாதியும் இயமனும்மேலிட்டு
வந்து, இவனை இழுத்துக்கொண்டு போகும்
படியான காலம் நேரிட்டுவிடும். ஆகையாற்
சம்பாதித் தனுபவிக்க வேண்டும் பொருள்க
ளைச் சமயம் வாய்த்தபோது பால்மாறுமற்
சம்பாதித் தனுபவிப்பவனே புத்திசாலி. நீர்
விதுரருடைய சம்மதியை யெதிர்பார்த்தால்
அதற்குள்ளே நம்முடைய வாழ்நாள் வீணே
வழுவிவிடும்போ லிருக்குதென்று சொன்னான்.
அவை யனைத்தையுங் கேட்ட பிதாவானவன்
புத்திரனைப் பார்த்துச் சொல்லுகிறான்: அப்பா
மகனே! உனக்கு பலவான்களாகிய பிராதாக்க
ளோடு ஒருநாளும் விரோதம் வேண்டாமடா.
அது மிகுந்த கேட்டுக்குக் காரணமாகுமடா.
அப்படிப்பட்ட தீமையாகிய காரியத்தை நீ
நல்லதாக நினைக்கிறாயே; விஷம் பார்வைக்கு
சலம்போற் குளிர்ந்திருக்கும்; அது ஒன்றைப்
பற்றிக் கொள்ளுமானாற் பிரமாதத்திற் கிடம்
பண்ணுமே. தீர்க்க ஆலோசனை செய்து
பாரடா மகனே! நீ செய்கிற அனர்த்தம் வெகு
பேர்களைக் கெடுக்கும்போ லிருக்கிறதே கடைசி
யில் அது ஆயுதங்களுக்குப் பிராணனை இரை
யாகக் கொடுக்குமே. ஆனபடியினாலே, அந்தக்
கருத்தை அகத்திற் கொள்ளாது விட்டுவிடடா

என்னருமைச் செல்வனே என்று சொன்ன
தந்தையை, மறுத்துப் பின்னுமவன் மனஞ்
சம்மதிக்கும்படி துரியோதனன் சொல்லு
கிறான்:

கேளீர் பிதாவே! உமக்கு ஏன் மிகுந்த
பயம் பிடித்திருக்கிறது? சூதாட வேண்டுமென்
றால் நீர் அதற்கேன் விரோதஞ் சொல்லுகிறீர்?
லோகத்தில் சூதென்பது ஏன் உண்டா யிருக்
கிறது? நம்போலிகள் வேடிக்கையாய்ப் பொழு
தைப் போக்குகிறதற்கன்றோ பெரியோர்கள்
ஏற்படுத்தி யிருக்கிறார்கள்? அதை முன்னோர்
களில் வெகு பேர்கள் ஆடினார்களே அதனாலே
யாருக்கென்ன கேடு வந்தது? இக்காலத்திலும்
அனேக ராடுகின்றார்கள். அவர்களுக்குள்ளே
தான் ஏதாகிலும் விரோத மிருக்கிறதா? அது
வென்ன ஆயுதங்களைக் கையில் எடுத்துக்
கொண்டு சண்டைபோடுகிற வியாபாரமா?
வேடிக்கையான ஆட்டம். ஆனாலதிற் சிலருக்
குப் பொருட்சேதம் வரும். சிலருக்குப்பொருள்
விருத்தியாகும். அப்படி நமக்குப் பொருள்
கொஞ்சம் போனால்தானென்ன லக்ஷியமா?
சாதாரணமாகிய பேர்களுக்கன்றோ அது
லக்ஷியம். அப்படி எனக்கு ஒருக்காலுந்
தோற்பு வராது. ஏனென்றால், என்னுடைய
அம்மானாகிய இச்சகுனியின்உதவியிருக்கிறது.
இவருடைய சாமர்த்திய மெப்படிப்பட்ட
தென்றால், எதை மனதி லுத்தேசித்துப் பாச்
சிகையை யுருட்டுகிறாரோ அந்தப் பந்தயம்
விழும். ஆனபடியினாலே, பாண்டவர்களை
இராச்சியத்தைப் பந்தயமாய் வைக்கச்செய்து
உபாயமாய் அபகரிக்கிறேன். இதுவேயன்றி,
சண்டை போடுகிறதில்லை. அண்ணலே! விரை
வில் என் அபிப்பிராயப்படி செய்ய அனு
மதி பண்ணுமென்று சொல்லிய மகனைப்
பார்த்து வெகு வெறுப்புடனே திரிதராஷ்
டிரன் சொல்லுகிறான்: மகனே! உனக்குச்
சுயபுத்தியுமில்லை, ஒருவர் சொன்னாலுங் கேட்
கிறதில்லை. ஒரே பிடிவாதஞ் செய்கிறாய்.
இதன் பிரயோசனம் உனக்குப் பிற்காலத்தில்
தெரியப்போகிறது. அப்போது தவிக்கப்
போகிறாய். உன்னாலே இப்படிப்பட்ட அனர்த்
தம் விளையுமென்று தீர்க்கதரிசியாகிய விதுரன்
வெகு நாட்களுக்குமுன்னே சொல்லி இருக்
கிறான். அது சரியாய் வந்தது. போ! போ!
உன்னிஷ்டம் என்ன சொல்லியும் உன் துர்க்
குணத்தை சிறிதும் விடாவிட்டால் அதற்கு
நான் யாது செய்வேன்? தெய்வச் செயல்

யாராலே தடுக்கக்கூடுமானது? நடக்கவேண்டியது நடந்தே தீருமென்று நினைத்து விசனமடைந்து, சபையைச் செவ்வையாய் நிருமாணம் பண்ணும்படிக்குத் திட்டஞ் செய்து, விதுரனை அழைத்து வரும்படி தூதரை அனுப்பினான். மந்திரிகள் சிற்பிகள் இவர்கள் எல்லாம் சபையை நன்றாய் நிருமித்து அச்சேதியைத் தெரிவித்தார்கள். அந்த விதுரனும் தூதன் பேச்சைக் கேட்டவுடனே அரண்மனைக்கு வந்து, இராசாவைப் பணிந்து உட்கார்ந்தான். அவனைப் பார்த்துக் குருட்டரசன் சொல்லுகிறான்:

### திரிதராஷ்டிரன் விதுரனைக்கொண்டு பாண்டவரை அழைப்பித்தல்

தம்பி! இப்போதே இந்திரப் பிரஸ்தத்திற்குப் போய் இந்த நகரில் நாம் புதிய சபை ஒன்று நிருமாணம் பண்ணி இருக்கிறோமே? அதை பார்ப்பதற்கும் இதிற் பிராதாக்களாகிய துரியோதனாதிகளோடு விளையாடுகிறதற்கும், சகல பரிவாரங்களுடனே இவ்விடத்திற்கு வரும்படி நான் சொல்லியதாகச் சொல்லிப் பாண்டவர்களை சீக்கிரம் அழைத்துக்கொண்டு வாவென்று திருமுகம் எழுதிக் கொடுத்தான். அதுகேட்ட விதுரன் சொல்லுகிறான்: ஓ மகாராஜனே! இவ்வுலகத்தில் ஒருவனுக்குப் பின்னே கேடுவருவதா யிருந்தால், முன்னே புத்தி கெடுமென்று பெரியோர்கள் சொல்லி இருக்கிற வாக்கியப்படி, இப்போது உமக்குப் புத்தி கெட்டிருக்கின்றது. அதனாலேதான் இப்படிக்குச் சொன்னீர். உமது வார்த்தையைக் கேட்டதினால் எனக்கு மிகுந்த விசனம் உண்டாகிறது. அவர்களை நீர் மனமறிய மோசஞ் செய்வதற்கன்றோ அழைத்துவரச் சொல்லுகிறீர்? இதை உமது மனம் ஒப்புக்கொண்டதற்கு ஆச்சரியப்படுகிறேன். இப்படி நீர் வஞ்சனை செய்வதினால் அவர்களுக்கொரு குறைவு முண்டாகிறதில்லை. உமக்குத்தான் குலநாசம் வரப்போகிறது. இதற்கு எள்ளத்தனையுஞ் சந்தேகமில்லை. ஏனென்றால், அவர்களுடைய செல்வத்தைப் பார்த்துப் பொறாமை கொண்ட உமது புத்திரன், அச்செல்வங்களை எல்லாம் அபகரிக்கிறதாக மோசமாய்ச் சூதாட யத்தனப்பட்டிருக்கிறான். ஆனபடியினாலே அவர்களுக்கும் உமது புத்திரருக்கும் வெகு விரோதம் உண்டாகும். அவர்கள் பலவான்களானபடியினாலே பலஹீனரான உம்முடைய பிள்ளைகளைப் பகிஷ்காரமாய்க் கொல்லுவார்கள். இது இப்போதில்லாவிட்டாலுங் கொஞ்சங்காலங் கழித்தாவது நடக்கும் அப்பால் நீர் புத்திரசோகத்தில் வீழ்ந்து தவிப்பீர். ஆகையாலே இந்த யோசனையைவிட்டுவிடும் க்ஷேமப்படலாம் என்று சொல்லியதை திரிதராஷ்டிரன் கேட்டுச் சொல்லுகிறான்:

ஓ என் தம்பீ விதுரா! நாம் சூதாடும்படி நியமிக்கிறோமேயன்றி யுத்தஞ்செய்ய நியமிக்கவில்லை. அப்படியிருக்க, கலகமெப்படி வரும்? நாமும் வீஷ்மர் முதலானபேர்களும் பக்கத்திலேயே இருப்போமன்றோ? ஆனபடியினாலே வித்தியாசம் ஒன்றும்வராமற் பார்த்துக்கொள்வோமேயல்லது கலகம் வரப் பார்ப்போமா? தெய்வம் நமக்கு அநுகூலமா யிருக்கிறபக்ஷத்தில், ஒருக்கேடும் வரப்போகிறதில்லை. அது பிரதிகூலமா யிருக்கிறபக்ஷத்தில், வரவேண்டிய கேட்டை மறுக்கக்கூடுமோ? பிரமன்முதற் பிபீலிகை வரையிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும் உண்டான சுகதுக்காதிகளனைத்துந் தெய்வத்தின் வசத்திலிருக்கிறதே யல்லது நமது சுதந்தரமல்லவே. ஆனபடியினாலே, என் பேச்சை மறுக்காமற்போய், உதிஷ்டிரனை அழைத்துவாவென்று சொன்னான் கண்ணில்லாதவன். இப்படி சொல்லியதைக்கேட்ட விதுரன் தெய்வத்தின் செயலைத் தடுப்பதுகூடாதென்று நினைத்து, மனதிற் சந்துஷ்டியில்லாமல் ரதமேறிக்கொண்டு இந்திரப் பிரஸ்தத்திற்குப் போய் அவ்விடத்திலிருக்கிற பேர்களாலே தகுந்தபடி பூசிக்கப்பட்டு, குபேரனுடைய மனைக்குச் சமானமாகிய உதிஷ்டிரருடைய அரண்மனைக்குச் சென்றான். இவன் வந்த சேதி தெரிந்த மாத்திரத்திலே உதிட்டிரர் எதிர்கொண்டுவந்து அழைத்துப்போய் தகுந்த மரியாதை செய்து, அர்க்கியபாத்திய ஆசமனீய மதுபாகங்கள் கொடுத்து வினவுகிறார்: ஐயா விதுரரே! உம்மைப் பார்க்குமளவில் விசனமுற்றவரைப்போற் காணப்படுகிறது. அப்படி காணப்படுவதற்கு மூகாந்திரம் என்ன காரணமோ தெரியவில்லை. மூப்பாராகிய தமது பிதாவும் அவருடைய புத்திரரும் க்ஷேமமா யிருக்கிறார்களா? அவர்களெல்லோரும் பிதாவுக்கு அநுகூலமா யிருக்கிறார்களா? நீர் அவர்களால் தீங்கில்லாமல் வந்தீரா? ஆயினும், நீர் சந்தோஷமா யிராத காரணஞ் சொல்லவேண்டும் என்று கேட்க, விதுரன் சொல்லுகிறான்:

கேளும் உதிட்டிர மகாராஜனே! உமது பிதாவாகியும் ஞானக்கண்ணை யுடையவராகியு

மிரானின்ற திரிதராட்டிரமகாராஜாவும், அவருடைய சகல பந்துக்களும் க்ஷேமமா யிருக்கிறார்கள். அவருடைய குமாரர்களும் அவருக்குப் பணிவிடை செய்து வருகிறார்கள். அந்த மூப்பாராகிய ராஜா உம்முடைய க்ஷேமத்தை விசாரிக்கும்படியாகவும், தாம் உமது சபைக்கு நிகராய் நிருமித்திருக்கிற புதிய சபையை நீங்கள் கண்ணினாற் பார்த்துக் களித்து அதில் இஷ்டர்களோடு சூதாடவேண்டுவதற்காகவும் உம்மை அழைத்துவரும்படியாக எனக்கு நியமித்தார். மேலும், அப்படிக்கு நீர் வருகிறபோது தம்பிமார்களோடும் பாரியைகளோடும் மற்றும் சகல பந்துக்களோடும் அச் சபைக்கு வரவேண்டுமென்று தமக்கு வெகு ஆசையிருக்கிறதென்றும் சொல்லச் சொன்னார். இப்போது அந்தச் சபையிலே சகலமான பேரும் வந்திருக்கிறார்கள். சூதாடுகிற அநேகரும் சித்தமா யிருக்கிறார்கள். நீர் வரவேண்டுவதொன்றுதான் குறை. இந்தப்படிக்கு அவர் சொல்லி ஆக்கியாபித்தவண்ணம் சொன்னேன் அப்பால் உமது சித்தப்படியே நடவும் என்று கூறக் கேட்ட உதிட்டிரர் சொல்லுகிறார்: ஓ விதுரரே! சூதாடுவதற்காக என்னை ராஜா வரும்படி கட்டளையிட்டாரே அப்படியே நான் அவ்விடம் வந்து சூதாடுவேனாகில் நமக்கும் அவர்களுக்கும் மிகுந்த கலகம் நேரிடுமன்றோ? ஆனபடியினாலே அப்படிப் பட்ட காரியத்தை நான் எப்படி யங்கீகரிப்பேன். நல்லது, உமக்குச் சம்மதியாகில் அப்படியே செய்கிறேன். எப்போதும் நீர் சொல்வதைக் கேட்டு நடக்க எனக்கு மனத் திருப்தியா யிருக்கின்றது. ஆனபடியினாலே நீர் சொல்லுமென்ன, அதற்கு விதுரன் கூறுகின்றான்:

ஓ உதிட்டிரரே! சூது எல்லாம் பொல்லாங்குகளுக்கும் மூலகாரணமென்று யோசித்துத்தான், இம் முயற்சி வேண்டாமென்று நான் மகாராசாவுக்கு வெகுவாய்ச் சொன்னேன். அவர் கேளாமல் உம்மை யழைத்து வரும்படி கட்டளையிட்டார். நீர் சகலமுந் தெரிந்தவரானபடியினாலே எப்படி நடப்பது நன்மையோ அப்படி நடக்கலாமென்று கூறியதைக் கேட்டு உதிட்டிரர், ஓ விதுரரே! அச் சபையிற் சூதாட்டத்தில் வல்லமையுடையவர்கள் யாரா ரிருக்கிறார்கள்? என்னோடுகூட யாவராடப் போகிறார்கள்? இந்தச் சங்கதி சொல்லவேண்டுமென்ன, விதுரன் சொல்லுகிறான்: அந்தச் சபையிற் காந்தாரதேசத்து ராஜனாகிய சகுனி யிருக்கிறான். அவனே தனக்கு வேண்டிய விருத்தம்போட வல்லவன். அன்றியும், விவிம்சதி-சித்திரசேனன்-சத்தியவிரதன்-புருமித்திரன்-ஜயன் இவ்வைவரு மிருக்கிறார்கள். இவர்களும் சூதில் வல்லவர்கள். இவ் வறுவரை யன்றி மற்றெல்லோரும் வேடிக்கை பார்க்க வந்திருக்கிறவர்கள் என்று கூறக் கேட்ட உதிட்டிரர் விதுரனைப் பார்த்து, ஐயா! அவர்களெல்லாம் வெகு மாயாவிகள். கபடமாய்ச் சூதாடி மோசஞ் செய்கிறவர்கள். அவர்களுடனே சூதாடல் மிகவும் அயோக்கியமான காரியம். ஆனாலும் அதைக்குறித்து எனக்குத் தோற்றுகிறது என்னவென்றால், திரிதராஷ்டிர மகாராஜா பெரிய பிதா வகையால் எனக்குக் கேட்டை நினைக்க மாட்டா ரன்றோ? அவரே இச் சூதாடும்படி இட்ட கட்டளையை மீறி நடப்பது நன்மையல்லவே? ஆனபடியால் வருகிறேன் சூதாடுகிறேன். ஆனாற் சகுனியோடே ஆடச் சம்மதியில்லை. ஆகிலும் ஆடவென் றழைத்தால் மாட்டேனென்று சொல்லவல்லவனல்லேன். அப்படி யெனக்கு விரதம் வரவேண்டியது வழியிற் தடைபடாதாகையால் அதனால் என்ன வந்தாலுஞ் சரிதான் என்று சொல்லித், தமது சேவகர்களை நோக்கி அஸ்தினாபுரத்திற்கு போகவேண்டுவதற்காக வாகனங்களும் சேனைகளும் சன்னதப்படுத்துங்களென்று கட்டளையிட்டார். அவர்களும் அப்படியே சகல சேனாபரிவாரங்களைச் சன்னகப்படுத்தி, இரதங்களையுங் கொண்டுவந்து நிறுத்தித் தருமராசாவுக்குத் தெரிவித்தார்கள்.

## பாண்டவர் அஸ்தினபுரம் வருதல்

பின்பு தருமபுத்திரர் புரோகிதர் முன்னிட்டு வேதியர்களைப் பணிந்து ஆசீர்வதிக்கப்பெற்று திவ்வியமாகிய கவசகிரீட குண்டல கேயூர ஹார முதலாகிய ஆபரணங்களைப் பூண்டு புறப்பட்டு, அரண்மனை வாசலில் வந்து, இராஜசூயத்திற் பாக்லிகதேச ராஜா கொடுத்த ஒப்பற்ற அனேகவித அலங்காரங்களாலே விளங்காநின்ற ரதத்தின்மேலேறி, கங்காப் பிரவாகம் போன்ற வெண்சாமரை இருபுறங்களில் வீசவும், எதிரிற் பதினெண் வாத்தியங்கள் முழங்கவும், ஆலவட்டங்கள்-பதாதைகள் - மகரதோரணங்கள் முதலான விருதுகள் முன்னும் பின்னும் விளங்கவும், வந்தியர் துதிக்கவும், வானவர் விருதுகூறவும், நால்வகைச் சேனைகள் புடைசூழ்ந்து

வரவும், அனேக வீரர் ஆயுதங்களை யேந்திச் சுற்றிலுங் காத்து வரவும், முன்புறத் தேரின் மீதில் வீமசேனனும், பின்புறத் தேரின் மீதில் அர்ச்சுனனும், இரு பார் சுவங்களி லுள்ள இரண்டு தேரின்மீதில் நகுல சகா தேவர்களுமாக விருந்து நாற்புறத்துங் காப் பாய் வரவும், இவ்வகையாய் மகா வைபவத் துடனே புறப்பட்டார். திரௌபதி முதலா கிய மாதர்கள் சிவிகைகளிலேறி, அனேகங் குதிரை வீரர்கள் சூழ்ந்துவரப் புறப்பட்டார் கள். இப்படி தேவேந்திரன் சகல தேவர்க ளாலுஞ் சூழப்பட்டு ஐராவதத்திலேறிப் புறப் படுவதுபோல் பாண்டவராஜன் சகல பரி வாரங்களோடும் புறப்பட்டு, வழிகளிலுள்ள நதிகளையுங் காடுகளையும் மலைகளையுந் தாண்டி, அஸ்தினாபுரிக்குச் சமீபத்தில்வந்து, சமபூமி யாய் ஜலசவுக்கிய முதலிய சகல வளங்களு மமைந்த வோரிடத்திற் சேனைகளை யிறக்கி, அன்று அங்கே வாசஞ்செய்தார். அப்போது விதுரன் இவருடைய நற்குணங்களை நினைத்து வெகு ஆனந்த மடைந்து, ஐயோ! இப்படிக் குக் கபடில்லாமற் பிதாவின் ஆணையென்று வராநின்ற சுகுண நிதியாகிய இவரை வஞ்சிக் கக் குருட்டரசன் அழைக்கின்றானே. இது என்ன அநியாயமென்று மனஸ்தாபப்பட்டு, உதிஷ்டிரரோடு துரியோதனன் பொறாமைப் பட்டதும் திரிதராஷ்டிரன் அவனுக்காகச் சகுனியைக் கொண்டு சூதாடுவித்துச் செல்வங் களைக் கவர பிரயத்தினப்பட் டிருக்கிறதும், ஆகிய எல்லாச் சங்கதிகளையும் நன்றாய்ச் சொன்னான்:

அதுகேட்ட தருமபுத்திரர் விசனங்களை அடக்கிக்கொண்டு விதுரனை நோக்கி, ஐயா விதுரரே! இவ்வளவு கபடத்தை மனதில் வைத்து இராஜா என்னை அழைப்பித்தார் அன்றோ? ஆனால் நான் விசனப்படவில்லை. ஏனென்றால், லோகத்திலே அவனவன் கரு த்து வெவ்வேறாக இருக்கிறது. அதற்குத் தக்கபடி அவனவன் செய்கிறான். நமக்குத் தோற்றினபடி நாமுஞ் செய்யலாமே. நம்மை இராசா வரவேண்டுமென்று அழைக்க மாட்டு வரே யன்றி, வலிமையில் ஒன்றுஞ் செய்ய மாட்டாரே. அவர் அழைத்தபடி நான் வரா மற் போனாலும், வந்து சூதாடாமற் போனா லும், அவர்களுடைய எண்ணம் வீணாகுமன் றோ? இவ்வளவுதானே யிருக்கிறது. ஆகை யால். இது ஒரு யோசனையா? ஆனால் ஒன் றிருக்கிறது. சூதாடவழைத்தால் வரமாட்டே னென்று சொல்லக்கூடாத விரதமொன்று எனக்கிருக்கிறது. அதனாலேதான் வந்தேன். இல்லாவிட்டால் தீமையை விளைவிக்கும்படி யாகிய சூதாடுதற்கு நான் வரமாட்டேன். இனி ஆடித்தான் தீரவேண்டும். அதில் நன் மை வந்தாலும் சரி. தீமை வந்தாலும் சரி. தெய்வச் செயலன்றோ பெரிது? நாம் செய்வ தென்ன? ஆனால் ஜனங்களுக்கும், பிராமண ருக்கும், கோக்களுக்கும் மங்களமுண்டாக வேண்டுமென்பது மாத்திரந்தான் நம்மால் கோரத்தக்கது என்று சொல்லி மறுநாட் காலையிற் சேனாசன்னாகங்களுடனே புறப்பட் டுப்போகையில் விதுரனைப் பார்த்து, ஐயா! சூரியன் தன்னை பார்ப்பவர்களின் கண்ணைப் பழுதுறச் செய்வதுபோல், தெய்வமானது சங்கடம் வரவேண்டிய காலத்தில் மனித னுடைய புத்தியை யழிக்கும். யாவும் எல்லா வகைகளினாலுந் தெய்வத்தின் வசத்திலிருக் கின்றனவே யன்றி, நம்முடைய வசத்திலும் நம்முடைய சுதந்திரத்திலும் ஒன்றுமில்லை.

ஆனபடியினாலே, இப்போ தெனக்குச் சூதாடும்படி நேரிட்டது தெய்வச்செயலென் றெண்ணுகிறேன். ஏனென்றால், சூதாடலினால் வருவது கேடென் றறிந்திருந்தும் அதை விலக்குவோமென்றால், தந்தை சொல்லைத் தடுப்பது அதினும் பெருங்கேடா யிருக்கின் றது. நானென்ன செய்வேன்? வருவதை அனுபவிக்கிறேனென்று சொல்லிக்கொண்டே யாவருஞ் சூழ்ந்துவர நகரத்திற் சென்று, அரண்மனைக்குள் போய் திரிதராஷ்டிரன்-வீஷ்மர் - துரோணர்-கிருபர் - அசுவத்தாமா-சோமதத்தன்-காந்தாரி முதலிய பெரியோர் களைக் கண்டு தண்டனிட்டு, அவர்களால் ஆசீர் வதிக்கப்பட்டு, துரியோதனன் முதலானோரை யுங் கண்டு யோக க்ஷேமங்களை விசாரித்து, மற்ற யாரை யாரை எப்படி மரியாதை செய்ய வேண்டுமோ அப்படி மரியாதை செய்து, அவரவர்களாலுந் தக்கபடி பூசிக்கப்பட்டார். வீமசேனன்முதலாயினோரும் அப்படியேபெரி யோர்களைப் பணிந்து ஆசீர்வதிக்கப்பட்டு, மற்றப் பேர்களையுந் தகுந்தபடி யுபசரித்தார் கள். திரௌபதியும் மாமனார் மாமியார் முத லானோரைப் பணிந்து ஆசீர்வாதம் பெற்றுத் துரியோதனன் முதலானோருடைய மனைவி களைக் கண்டு குசலத்தை வினவினாள். அவர் கள் இவளுடைய செல்வப் பெருக்கைப் பார்த்

துப் பொறுமைப்பட்டார்கள். பின்பு பாண்டவர்கள் தமது பத்தினிகளோடு கூட திவ்வியமாகிய ஒரு மணியிற் சென்று, ராஜாவின் அனுமதிப்படி ஸ்நான முதலானவை நிறைவேற்றி, எல்லாப் பந்துக்களோடுங்கூட விநோதமாகிய அன்னத்தைப் புசித்து, சந்தன முதலிய சுகந்தங்களைப்பூசி வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருந்து, இராத்திரியில் வீணை முதலான வெகு இனிய வாத்தியங்கள் பாடக்கேட்டுக் களித்து சயனித்திருந்தார்கள்.

### தருமராஜனோடு துரியோதனனும் சகுனியும் சூதாட ஆலோசித்தல்

உதிஷ்டிரர் தம்பிமாரோடு பொழுது விடிந்தவுடனே எழுந்திருந்து நித்தியானுஷ்டானங்களை யெல்லாம் நிறைவேற்றி, திரிதராஷ்டிரனை வந்து பணிந்து அவனுடைய உத்திரவின்படி சபைக்குப் போனார். அங்கே மோசஞ் செய்வதற்காகச் சகுனியுடன் சித்தமா யிருக்குந் துரியோதனனவன் உதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ அண்ணா உதிஷ்டிர மகாராஜனே! இச் சபையைப் பாரும். இதில் நம்முடைய இஷ்டர்களெல்லாரும் வந்து சேர்ந்திருக்கிறார்கள். நீரும் வந்து சேர்ந்தீர். இனியொரு குறைவுமில்லை. ஆனால், எனக்கொரு கருத்திருக்கிறது. அதென்னவென்றால், இஷ்டர்களெல்லாஞ் சேர்ந்திருக்கிறபடியினாலே நாம் போஜனத்திற்குப் போகும் அளவும் பொழுதுபோக வேண்டியதாகையால், கள்ளங் கபடு சூதுவாதுகள் ஒன்றும் அறியாத மனத்தினையுடைய எனது மாமனும் நீருமாகச் சொக்கட்டான் ஆடவேண்டுமென்பதுதான். இதை நீர் நிறைவேற்ற வேண்டும். ஆனால் அதிலொன்றிருக்கிறது. அதாவது, ஆடவேண்டிய ஆட்டம் இன்னயின்ன படிக்கென்றும், அவ்வாட்டத்திற் பந்தயம் வைப்பது இன்னயின்னதை என்றும், ஓர் கட்டுப்பாடு ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகையால், இதைக்குறித்து நீர் சொல்லுமென்று சொல்லியதைக் கேட்ட உதிஷ்டிரர் சொல்லுகிறார்: கேளுந் தம்பி துரியோதனா! சூதாடுவதே குற்றம். அதிலும் வஞ்சனையாய் ஆடுவது பெருங்குற்றம். க்ஷத்திரியர் ஒருவரை யொருவர் வெல்லுவது பராக்கிரமத்தாலே யன்றி, சூதினால் வெல்லுவது தருமமன்று. இராஜ நீதியுஞ் சூதை விலக்கி யிருக்கின்றது. இப்படிக்கு எல்லா சாஸ்திரங்களாலும் விலக்கப்பட்டு பாவத்திற்கும் பழிக்குங் காரணமாகிய அச் சூதாடலை விருதாவாய்த் துதிக்கிறாய். பெரியோர்கள் எள்ளளவுஞ் சம்மதிக்க மாட்டார்கள். ஆனபடியினாலே எனக்குஞ் சம்மதியில்லை. நல்லது; சும்மா வேடிக்கையா யாடுவோமென்றால், நீங்கள் வஞ்சனையாக யாடுகிற பேர்கள். அப்படிக்கு என்னை வஞ்சிப்பது உங்களுக்கு நியாயமன்று என்று சொல்லியதைக்கேட்ட சகுனியானவன் தருமராஜனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

ஓ உதிஷ்டிரரே! லோகத்திற் சினேகிதனால் லாபம் நேரிட்டாலும் நஷ்டம் நேரிட்டாலும் சிநேகத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டுமே யல்லது, லாப நஷ்டங்களைப் பார்க்கலாகாது. அப்படிப்பட்ட நேசமுடையவர்கள்தான் ஒருத்தரோடு ஒருத்தர் சூதாடலாம். இப்போது நீருரைப்பதைப் பார்த்தால் எங்களை மோசக்காரரென்றும் நினைத்து, இவர்களோடு ஆடினால் நாம் ஏமாறுவோம் அதனாற் பொருள் சிலவழிந்து போகும் என்று பயப்படுகிறதாய்க் காண்கிறது. அப்படி பயமிருந்தால் நீர் ஆடவேண்டாம். ஆடவந்தால் சரியாய் ஆடித் தீரவேண்டும். அதிற் பந்தயம் வைக்காமற் சும்மா ஆடுவது நன்மையல்ல. ஆடுமளவில் தோற்பும் ஜெயிப்பும் ஒருவன் பங்கல்ல. இருவருக்கு மிரண்டும் நேரிடும். அதில் உமக்கு தயிரியமிருந்தால் ஆடவாரும். இல்லாவிட்டால் வேண்டாமென்று சொன்னான்: அதுகேட்ட தருமபுத்திரர் ஓ சகுனிராஜனே! உனக்கொன்று சொல்கிறேன் கேள்: முன்பு அதிதரும், தேவரும் சொல்லியிருக்கிற தென்னவென்றால், க்ஷத்திரியனுக்குச் சுவர்க்கத்தில் ஒரு வாசலுண்டு. அஃதெதுவெனில், தருமமாய் யுத்தம் பண்ணிச் சம்பாதித்து ராச்சியத்தைச் சத்தியத்துடன் ஆள்வதுதான். அப்படியே நரகத்திலும் ஒரு வாசலுண்டு. அதாவது, வஞ்சனை செய்து எதிரியின் ராச்சியத்தை அபகரித்துத் தருமவிரோதமாய் அதை யாள்வதுதான். அன்றியும், க்ஷத்திரியன் தரும யுத்தஞ் செய்து ஜயித்தாற் சுகமுண்டு. செத்தாலுஞ் சுவர்க்கமுண்டு. கபடத்தினால் யுத்தஞ் செய்து ஜெயித்தாற் பழியுண்டாவதன்றிச் செத்தாலும் நரகம். சூதாடுவது மிகவுங் கெட்ட செய்கை. அதனால் நரகமுண்டு என்றிப்படி அந்தப் பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார்கள். ஆனபடியினாலே நமக் குள்ளமட்டும் ராச்சியத்தைத் தாமமாய்ப் பரிபாலனஞ் செய்து பிரா

மன்னரைக் காக்கவேண்டும். இவ்வளவுதான் என்னிஷ்டம். இதுவேயன்றி, அனியாய மாய் ஒரு லாபத்தையும் நானிச்சிக்கமாட் டேன். இப்படிப்பட்ட என்னோடு நீ வஞ்சனை யாய்ச் சூதாடவேண்டாம் எனக்கு வஞ்சனையா யாடத் தெரியாது. அப்படி வஞ்சனையாய்ச் சூதாடி எதிரியின் இராச்சிய சம்பத்து முத லானதுகளைக் கிரகிக்க எனக்கு மனதில்லை என்றுரைத்ததைக் கேட்ட சகுனியானவன் சொல்லுகிறான்:

ஓய் ராஜாவே! உலகத்தில் யோக்கியன் அயோக்கியனோடு விவாதஞ் செய்யவில்லையா? வித்துவான் மூடனோடு தருக்கிக்கவில்லையா? அப்படியே நன்றாய்ச் சூதாடத் தெரிந்தவன் ஆடத்தெரியாதவனோடும் ஆடுவான். பந்தயங் களையுஞ் ஜெயிப்பான். சந்தோஷமும் பாடு வான். அதை வஞ்சனை யென்று சொல்ல லாமா? இருவர் சேர்ந்து ஒரு காரியஞ் செய்யு மளவில், ஒருவன் சமர்த்தனாயிருப்பான். ஒரு வன் கொஞ்சந் தாழ்ந்தவனா யிருப்பான். அதனாலே ஒருவனை யொருவன் வஞ்சனை செய்தானென்று யார் சொல்லுவார்கள்? அப்படித்தான் நீரும் நானுஞ் சூதாடினால் அதில் வஞ்சனை யுண்டென்று எப்படி சொல்லலாம். ஆனால், நீர் பயப்படுகிறபடியினா லேயும், பொருட் போய்விடுமென்னும் பீதி உமக்கிருக்கிற படியினாலேயும், நானறிந்த மட்டும் நீர் வெகுநாளைய உலோபியானபடியி னாலேயும் என்னோடு நீர் ஆடவேண்டாம் போம் என்று கடுகடுத்துக் கூறினான். அப்படி சொல்லியதைக் கேட்ட தருமபுத்திரர் சொல் லுகிறார்: ஐயா சகுனி ராஜனே! உலகத்தில் யாருக்காயினுஞ் சூதாடுதல் சுகமன்றென்று பொதுவாகச் சொன்னால் உனக்கென்ன அதில் மனஸ்தாபம்? நானா உலோபி? நானா பயமும் பீதியுமுடையவன்? அப்படி ஒருக்காலும் நினைக்க வேண்டாம். யாரா யினும் ஒரு காரியார்த்தமாய் என்னை வேண்டி அழைப்பார்களானால் அக்காரியம் பழுதி னைத் தருமாயினும் உடன்படாம லிருக்கமாட் டேன். அது என் விரதம். ஆனபடியினாலே உன் சொற்படி இப்போது ஆடுகிறேன். அதனாலே என்ன வருமோ அதையும் அனுபவிக்கிறேன் தெய்வ மிருக்கின்றது. அது தீத்தொழிலென்று சொல்லியுங் கேளா விட்டால், நான் என்ன செய்ய மாட்டுவேன்? ஆனால், இவ்விடத்தில் யாரோடே யாராட வேண்டுவது? யார் பந்தயம் வைக்கவேண்டு வது? இதைச் சொல்லென்று சொல்லிய தர்மபுத்திரரை நோக்கித் துரியோதனன் சொல்லுகிறான்: ஓ அண்ணா! தனங்களிலும் இரத்தினங்களிலும் ஏதேது வேண்டுமோ அதை யெல்லாம் பந்தயம் நான் வைக் கிறேன் எனக்காகச் சகுனி உம்மோடு சூதாடு வார். ஆதலால், நீங்களிருவரும் மனஸ்தாப மில்லாமல் ஆடுங்களென்று சொன்னதைக் கேட்ட தருமபுத்திரர் அப்பா துரியோதனா! ஒருவன் பந்தயம் வைக்கிறதும் ஒருவன் ஆடு கிறதும் நன்றா யிருக்கவில்லை. ஒருவனுக்காக மற்றொருவ னாடக்கூடாது. நீயே பந்த யம் வை. நீயே ஆடு என்றுரைக்கக் கேட்ட துரியோதனன், ஓ அண்ணா! எனக்கு வேடிக் கைகளைப் பார்க்க இச்சையே யன்றி ஆட்டத் திற் பிரவேசிக்க எனக்கு இச்சையில்லை யென் றான்.

### தருமராஜனும் சகுனியும் சூதாடுதல்

இவ்வாறு ஒருவர்க்கொருவர் வார்த்தை சொல்லிக்கொண்டு சொக்கட்டானாடச் சித்த மாயிருக்குந் தருணத்தில் திரிதராட்டிரன்-விதுரன்-வீஷ்மர்-துரோணர்-கிருபர் முதலா கிய பேர்கள் மனதிற் சந்தோஷமில்லாமல் அச்சபைக்கு வந்து வெவ்வேறு ஆசனங்களி லுட்கார்ந்தார்கள். அச் சபையானது வேத சாஸ்திரங்களை முற்றுங் கற்ற அநேக மகா புருஷர் சேர்ந்தபடியினாலே தேவசபைப் போல் விளங்கிற்று. இவ்வாறு யாவருஞ் சேர்ந்த பின்பு தருமபுத்திரர் ஒரு வார்த்தை சொல்லுகிறார்: கேளாய் துரியோதனா! என க்கு அனேக நவரத்தின ராசிகளும் பணங்களு டைய ராசிகளும் கணக்கில்லாம லிருக்கின்றன. அவைகளை நான் பந்தயமாக வைக்கிறேன். நீ யெதை வைக்கிறாய் சொல்லென்று சொல் லியதற்குப் பதில் துரியோதனன் சொல்லு கிறான்: கேளும் அண்ணா! எனக்கும் வெகு பொருட் கூட்டங்க ளிருக்கின்றன. ரத்தினக் குப்பைகளு மிருக்கின்றன. பொருட் செல்வ முடையவர்களுக்குள் தானே சிறந்தவன். அவைகளை யெல்லாம் பந்தயமாக வைக்கின் றேன் என்று சொல்லக் கேட்டுத் தருமபுத் திரர் சரிதானென்று ஒப்புக்கொண்டார். இப் படி இருவரும் பந்தயம் வைத்தபின்பு, சகுனி யானவன் கையில் பாச்சிகைகளை எடுத்துக் கொண்டு சபையிலிருப்போரைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ சபையிலிருக்கும் பெரி

யோர்களே! நீங்கள் யாவரும் என் பேச்சைக் கேளுங்கள்: துரியோதனனுக்காக நான் ஆடுகிறேன். என்னோடு தருமபுத்திரர் ஆடுகிறார். இருவராலுஞ் சில பந்தயங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. என் கையிலிருக்கும் பாச்சிகைகளை எந்த விருத்தம் வேண்டுமென்று உருட்டுகிறேனோ அந்த விருத்தமே விழுந்து நான் ஆடுவேனேயாகில், நான் ஜயித்தவன். இல்லாவிட்டால் தோற்றவன். தோற்றவன் வைத்திருக்கும் பந்தயங்களை ஜெயித்தவன் எடுத்துக்கொள்ள வேண்டியது. இந்த ஏர்ப்பாட்டை யாவரும் அறிந்திருங்களென்று சொல்லிக் கையிலிருக்கும் பாச்சிகைகளை யுருட்டினான். இவன் எந்தெந்த விருத்தத்தை போடுகிறேனென்று வாயாற் சொல்லி யுருட்டினானோ? அந்தந்த விருத்தங்களே அந்தப் பாச்சிகைகளில் விழுந்தன.

இப்படி ஆடி ஜெயித்து தருமபுத்திரரை நோக்கி, ஓய் ராஜனே! உமது பந்தயத்தை எடுத்துக்கொண்டேனென்றான். தருமபுத்திரர் அதுகேட்டு, ஓ சகுனி! சரிதான். நான் இப்போதுவைத்த பந்தயத்தை நீஜெயித்து எடுத்துக்கொண்டாய். அது போனாலும், அனேகம் பொற்பாத்திரங்கள், வெள்ளிப் பாத்திரங்கள், இரத்தினப் பாத்திரங்கள் இன்னும் பல ஆபரணங்கள் இவைகளை எல்லாம் சேர்த்து ஒரு பந்தயங் வைக்கிறேனென்று சொல்லி வைத்தார். சகுனியும் முன்போல் பாச்சிகை போட்டு ஜெயித்தான். பின்பு தருமபுத்திரர் சிரித்து, தேசத்திற் பிறந்த மகா வேகமுள்ள எவ்வெட்டு குதிரைகள் கட்டி, பொற்றகடுகளினாலும் பொற்சலங்கைகளாலும் அலங்கரித்து, புலித்தோல்களால் ஆசனம் போட்டு, யுத்தங்களுக்கு யோக்கியமாய் வெகு சிறப்பாக விளங்காநின்ற ஆயிரந் தேர்கள் என்னிடத்தில் இருக்கின்றன. அவைகளைப் பந்தயம் வைக்கிறேன் என்றார். சகுனியும் பாச்சிகையைக் கையால் உருட்டி ஜெயித்தேனென்றான். பின்பு தருமபுத்திரர் மலைகளுக்குச் சமானங்களாய், எப்படிப்பட்ட ஆயுதங்கள் தாக்கினாலும் லக்ஷயஞ் செய்யாதனவாய், நுகத்தடிகள்போன்ற தந்தங்களுள்ளவைகளாய், அருவி சலம்போல் மதப்பெருக்கோடு கூடியவைகளாய், மகா வீர தீரர் ஏறத்தகுந்தவைகளாய், பொற்பணிகளா லலங்கரிக்கப்பட்டனவாய், உயர்ந்த பட்டினாலாகிய மேல் விரி போர்த்தவைகளுமாகிய ஆயிரம் ஆண் யானைகளும் ஆயிரம் பெண் யானைகளு மிருக்கின்றன. அவ்விரண்டாயிரம் யானைகளையும் பந்தயம் வைக்கிறேன் என்றார். வெகு சூதனாகிய அந்த சகுனியும் முன்போலவே பாச்சிகையாற் சொன்ன விருத்தம் போட்டு ஜெயித்தேன் என்றான்.

அதன்பின் தருமபுத்திரர் பொல்லாத விதிவசத்தாற் பேய் பிடித்தவர்போல் அச்சூதில் ஓர் ஆவேசங்கொண்டு, ஐயா சகுனி ராசனே! என்னிடத்தில் லக்ஷந்தாசிகள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் பதினாறு வயதுள்ள மங்கைப் பருவம் உடையவர்கள். ரூபலாவண்ணிய சவுந்தரியங்களில் மிகவுஞ் சிறந்தவர்கள். நற்குணங்களினாலுங் கீர்த்தி பெற்றவர்கள். மெருகிட்ட தங்கம் போன்ற மேனி யுடையவர்கள். உயர்ந்த பணிகளும் வஸ்திரங்களுந் தரித்திருக்கிறவர்கள். சுகந்தமுடைய தேக முள்ளவர்கள். சங்கீதத்திலும் பரதத்திலும் வெகு சாமர்த்திய முடையவர்கள். எனக்கும் என்னோடு கூடப் போஜனம் பண்ணுகிற பேர்களுக்குஞ் சகலவித சட்வர்க்கங்களைப் பரிமாறுகிறவர்கள். அப்படிப்பட்ட அந்த லக்ஷந் தாசிகளையும் பந்தயம் வைத்தேனெனக் கேட்ட, சகுனியும் பாச்சிகையாடி ஒரு நொடியிலே ஜெயித்தேன் என்றான். உதிஷ்டிரர் மறுபடியும் ஓ சகுனி ராஜனே! இந்தத் தாசிகளையெல்லாஞ் ஜெயித்தாயே நல்லது; என்னிடத்தில் முன் சொல்லிய தாசிகளைப்போல் ஆடவருக் கிருக்கவேண்டிய சகல சகுனங்களையும் உடையவராய் ஆண்டையினிடத்தில் விசுவாசத்தோடு பணி செய்யத் தக்கவர்களுமாக இராநின்ற லக்ஷந் தாசர்கள் இருக்கின்றார்கள் அவர்களைப் பந்தய மாக்குகிறேன் என, காந்தாரராசன் மனக் களிப்புடனே பாச்சிகை யுருட்டி ஜெயித்தேன் என்றான்.

பின்பு உதிட்டிரர் யுத்தத்திற்கு உபயோகமானவைகளாய் சகலவித அலங்காரங்களையும் பெற்று விளங்கும் நல்ல குதிரைக் குட்டிகளில் நன்னான்கு கட்டப்பட்டு மலைகள்போல் இராநின்ற தேர்கள் லட்சம் இருக்கின்றன. அந்தத் தேர்களின் சாரதிகள் வெகு சூரர். வெகு யோக்கியர்கள். அவர்களில் ஒவ்வொருவனுக்கு வருஷத்தில் ஆயிரம் பொன் சம்பளங் கொடுத்து வருகிறேன். அப்படிப்பட்ட பாகர்களோடு கூடிய அந்த லட்சந் தேர்களையும் பந்தயம் வைத்தேன் என்றார். அது

கேட்ட சகுனி, வாரீர் உதிஷ்டிரரே! இதோ பாரும் அந்தத் தேர்களெல்லாம் என்னுடைய தாயின என்று சொல்லி ஆடி ஜெயித்தான். மறுபடியுந் தருமராசனுனவர் முன்பு சித்ராங்கதன் என்னுங் கந்திருவர்ராஜன் அர்ச்சுனனுக்கு உலுப்பையாகக் கொடுத்த தித்திரிக்கப் பட்சிபோற் பலவித நிறமுள்ள நூறு குதிரைகளைப் பந்தயமாக்கினர். அவைகளையுஞ் சகுனி அட்டகாசத்துடனே ஜெயித்தான். மறுபடியும் பாண்டவ ராசாவானவர் தமக்கிருக்கிற தேர்கள் முதலாகிய சகல வாகனங்களையும் ஒரு பந்தயமாகவும், நானூறு கடாரங்களில் நிரம்ப வைத்திருக்கிற பொருள்களை ஒரு பந்தயமாகவும் வைக்க, அவைகளையுஞ் சகுனி இரண்டுதரம் பாச்சிகையை யுருட்டி ஜெயித்தான்.

## திரிதராஷ்டிரனேடு விதுரன் வெறுத் துரைத்தல்

இவ்விதமாய் பாண்டவராஜன் வெகு செல்வங்களைப் பந்தயமாக வைத்து தோற்கவும் சகுனி அவைகளைக் கபடமாய் பாச்சிகையாடி மனதில் எவ்வளவு இரக்கமில்லாமல் ஜெயிக்கவும் இருக்கக்கண்ட விதுரன் மனம் பொறுமல் திரிதராஷ்டிரனைப் பார்த்துச் சொல்லுகிறன்: ஓ ராசாவே! நாஞெரு வார்த்தை சொல்லுகிறேன் அதை நீர் ஏற்றுக் கொள்வது வருத்தந்தான். ஏனென்றல், வியாதி முதிர்ந்து சாகப் போகிறவனுக்கு நல்ல மருந்தைக் கொடுத்தால் அவன் ஏற்றுக் கொள்ள மாட்டானன்றே? வலுவிற் வாயில் போட்டாலும் உமிழ்ந்து விடுவான். அது போல் நான் சொல்லும் பேச்சு உம்முடைய மனதில் உறைப்பது வருத்தமாய் இருக்கும். ஆனல், உம்மிடத்தில் இருக்கும் பிரிவினலே அதைச் சொல்லாமல் இருக்கக்கூடவில்லை. நீர் என்னிடத்தில் தயை செய்து அங்கீகரிக்கவேண்டும். அதென்னவெனில், உம்முடைய குமாரனுகிய துரியோதனன் பிறந்தபோது நரி போல் கூவினனே அதனலே அவனை அப்போதே கொண்டுபோய்க் காட்டில் எறிந்து வரவேண்டுமென்றும், அவனிருந்தாற் சகல கலகங்களுஞ் சகல அனர்த்தங்களுங் குலத்திற் குண்டாகி உடனே கேடு வருமென்றுஞ் சொன்னேன். அதைக் கேட்காமற் போனீர். பின்பு அவனை இராச்சியத்திற் சுதந்தரனுக்க வேண்டாமென்று சொன்னேன். அதையும் யோசிக்காமற் போனீர். பின்பு சூதாட்டத்தினம் வேண்டாமென்று சொன்னேன். அதுவும் உமக்கு அரோசிகமாகப் போயிற்று. நீர் துரியோதனனைப் புத்திரனென்று நினைக்கிறீர். அப்படி நினைக்கக்கூடாது. கொள்ளி வாய் நரியென்று நினைக்க வேண்டும். அவன் இருக்கிறவிடஞ் சுடுகாடாய்ப் போவதற்குச் சந்தேகமில்லை. அவனை ராச்சியத்தில் வைத்தினற் சுகமுண்டென்று நினையாதேயும். பெருங்கேடுதான் வரப்போகிறது. நீர் விவேகியா யிருந்தும் அவன் பேச்சைக் கேட்கிறீர். அதனலே அதர்மமும் அபகீர்த்தியும் வராமல் போகமாட்டாது.

ஓ மகாராஜனே! ஒருவரும் போகக் கூடாத மலைச் சிகரத்தில் தேன் கூடுகட்டி இருக்கிறதைப் பார்த்த ஒருவன் அதினுருசியை நினைத்து, முள்ளிலுங் கல்லிலும் விழுந்து காயமுங் கிலேசமும் பட்டுப்போயும், அந்தத் தேனை உண்ணுமல் தவறி விழுந்து புலிக்கு இரையானல் எப்படியோ அப்படியே அந்த துரியோதனனும் பஞ்சபாண்டவர்களின் ராஜ்ஜியத்தை அபகரிக்க பழிக்கேதுவாகிய காரியங்களில் முயன்று, முடிவில் அதைச் செவ்வையாய் அனுபவிக்காமல் நசிக்கப்போகிறன். இராஜநீதியிலுந் தரும சாத்திரத்திலும் சொல்லியபடி, பராக்கிரமத்தைக் கொண்டு ஜெயித்தால் நியாயம். மோசஞ் செய்வதினல் அபகீர்த்தியும் நரகமுங் கிடைக்கும். ஆகையாலே, ஓ அண்ணுவே! இப்படிப் பட்ட முயர்ச்சிகளை விட்டுவிடும். நன்மைக்குக் காரணமாகிய வழியில் நடவும். உமது புத்திரனை நம்பாதேயும். அவன் மகா பழிகாரன். சவுரியமில்லாதவன். அகந்தையும், பொறுமையும் குடிகொண்டவன். இவன் பாண்டவ ராச்சியத்தைக் கவர நினைத்தாற் கொடுப்பார்களா? தலையை வெட்டிப் போடுவார்கள். இப்படிப்பட்ட துட்டன் பேச்சுக்கு நீர் சிறிதும் இடங்கொடாமல், யாதவர்கள் தங்கள் குலத்திற்கு விரோதியாகிய கம்சனை ஸ்ரீ கிருஷ்ணனைக்கொண்டு கொல்வித்துத் தற்காலத்தில் யாவரும் அவ்வவர்கள் புத்திரமித்திராதி வர்க்கங்களோடு அவர்களுடைய சுகமாயிருக்கிறர்களோ அவ்வாறு துரியோதனனை அர்ச்சுனனைக்கொண்டு நாமுநிக்கிரகஞ் செய்து சுகமா யிருப்போம். இப்படியுஞ் செய்வதுண்டா வென்கிறீரா உலகத்தில் அதற்கு நியாயஞ் சொல்லுகிறேன் கேளும், ஒருவனலே ஒரு குலத்திற்குக் கேடு வருமாகில்

அவனைத் துறக்கலாம். கொல்லவேண்டுவ தானாலும் கொல்லலாம். பாவமுமில்லை. பழியு மில்லை. ஒரு குடும்பத்தினாலே ஒரு கிராமத்திற் குக் கேடுவருமாகில், அக்குடும்பத்தையும் துரத் தலாம். ஒரு கிராமத்தினால் ஓர் நாட்டுக்கே கேடு வருமாகில், அக்கிராமத்தையும் அழிக்கலாம். தருமத்துக்காகப் பூமி முழுவதையும் இழக்க லாம் என்றிப்படி சுக்கிராசாரியார் அரச ருக்கு நீதி சொல்லி யிருக்கிறார்.

ஆனபடியினாலே நீர் இந்தத் துரியோத னனைத் துறந்து பாண்டவரைச் சேர்ந்து க்ஷேமத்தை யடையும் வீணான சிந்தை செய்ய வேண்டாம் காக்கையைத் துரத்தி மயிலைக் கொணர்ந்து போஷியும் சுகப்படுவீர். பிணம் பிடுங்கித் தின்னும்படியாகிய நரியைத் துர த்தி மயிலைக் கொணர்ந்து போஷியும் சுகப் படுவீர். பிணம் பிடுங்கித் தின்னும்படியாகிய நரியைத்துரத்திச் சிங்கத்தை வீட்டிற்சேரும் நான் சொல்லுகிற விஷயத்திற் சந்தேகப்பட வேண்டாம். புத்திரனென்கிற வாச்சல்யத் தையே முக்கியமாகவெண்ணி அதருமத்திற் குட்பட்டீராகில், மிகுந்த மனஸ்தாபத்தை யடைவீர். பூமாலைக்காரன் பூஞ்செடிகளைப் போஷிப்பதுபோற், பாண்டவர்களைப் போ ஷித்துக்கொண்டிரும். அப்படியின்றிக் கரி வேண்டியவன் அந்தப் பூஞ்செடிகளைச் சுட் டெரிப்பதுபோற் செய்யாதேயும். (தானாட் விட்டாலுந் தான்சதையாடும்) என்று சொல் லுவதுபோல் நான் கூடப்பிறந்த கடமைக்கு இதத்தைச் சொன்னேன். நான் உமக்குச் சிறியவனாயினும் இக்காரியத்தில் என்னைப் பெரியவனாக மதித்து (அடிமைப்பேச்சு அம் பலத்திற்கேறுமோ?) என்று சொல்லுஞ் சொல்லைப்போல விருதாவாக போகாமல் நான் சொல்வதனைத்தையும் நன்றாகக் கேட்டு ஆலோசியும். ஏமாறவேண்டாம். ஆனாற் பாண் டவர்களுடைய செல்வத்தைப் பெறவேண்டு வதற்காக யுத்தஞ் செய்வோமென்கிறீரா செய் யலாம். அது நியாயமாகிய உபாயந்தான். ஆனாலும் நீர் பயனடைவது வருத்தம். ஏனெ ன்றால், பாண்டவர்களை இந்திரன் முதலிய முப் பத்துமுக்கோடி தேவர்களும் ஒருங்கே வந்து எதிர்த்தாலும் ஜெயிக்கப்பட மாட்டார்கள். ஆனபடியினாலே ராஜநீதியிற் சொல்லியபடி பலவான்களைப் பகைக்காமல் நேசித்து ஒரு குறைவுமின்று க்ஷேமமாயிரும் என்று சொல்லி விதுரன் மறுபடியுஞ் சொல்லத் துவக்கினான்:

ஓ திரிதராஷ்டிரமகாராசனே! இன்னுங் கேளும்: இப்போது துரியோதனன் செய் கிற அனியாயத்தினாலே அவன் மாத்திரங் கெட்டுப்போவானென்பதில்லை. இச்சபையி லிருக்குங் கவுரவ வம்சத்தாரெல்லாரும் நசிப் பார்கள். துரியோதனன் இப்போ செய்யுஞ் செய்கை எப்படி யிருக்கிறதென்றால், ஒரு விரு ஷபம் மதத்தினாலே தன் கொம்பொடிந்து போகுமென்பதைச் சிந்திக்காமல் மலையைத் தன் கொம்பால் முட்டுவதுபோ லிருக்கிறது. விவேகமில்லாமல் துட்டனுடைய புத்தி யைக் கேட்டு நடப்பவன், பேதையாகிய ஓடக் காரனோடு ஓடத்திலேறிப் போகிறவனுக் கொப்பா யிருக்கிறான். அப்படியே நீர் செய் கிறீர். வெகு விசனத்தை யனுபவிக்கப்போகி றீர். இப்போது மகன் வஞ்சனையாய்ச் சூதாடி வெகு செல்வங்களைத் தேடுகிறான் என்று சந்தோஷப்படுகிறீர். அப்படி சந் தோஷப்படவேண்டாம். அவன் தேடுகிற பொருளெல்லாம் பொருளன்று. விசனங் களுக்கு வித்து. இனி இதனாலே மகா கலகம் நேரிட்டு, உமது மக்கள் ஒருவரொருவனைச் மரிக்குஞ் சேதி கேட்டு விசனப்படவேண்டி வரும். என் பேச்சை வீஷ்மர்-துரோணர்- கிருபர் - அசுவத்தாமா-விவிம்சதி-பாக்லிகன்- சோமதத்தன் - பூரி - பூரிச்சிரவன் இவர்கள் யாவருங் கேட்கட்டும். உலகத்திற் சொலியா னின்ற தீயில் உளமறியப்போய் வீழ்பவரு முண்டோ? இந்த அஜாத சத்துருக்களாகிய உதிட்டிரர் - வீமசேனன் - அர்ச்சுனன் - நகு லன் - சகாதேவன் இவ்வைவரும் பஞ்சாக் கினிகளென்று நினைக்கவேண்டும். அவர்க ளுக்குத் துரோகஞ் செய்கிறவர் ஒருபோதும் முன்னுக்கு வரமாட்டார்கள்.

ஆகையால், ஓ மகாராஜனே! வீணாய்க் கல கத்தை வளர்க்கவேண்டாம். உமக்கென்ன பொருளில்லையா? உமது அனுக்கிரகம் பெற் றவனெல்லாம் மகாராஜா வாகிறானே. அப் படிப்பட்ட உமக்குப் பொருளின்மேல் இவ் வளவு ஆசை என்னத்திற்கு? உமக்கு இருக்கிற செல்வத்தைப் பூரணமாய் அனுபவிக்க ஆயு சுண்டா? ஆனபடியினாலே, இருக்கிறமட்டில் நியாயமாய் உண்டாயிருக்கிற செல்வத்தை அனுபவித்துக்கொண்டு க்ஷேமமாக இரு. அதிக ஆசைவேண்டாம். அந்தப் பொருள் உமக்கொரு விஷயமா? அப்பொருளைத் தேடி வைப்பதினாலே உமக்கு நன்மையில்லை. பாண்

டவர்களாகிய பொருள்களைத் தேடி வைத்தீரேயாகில், நன்மையும் மேன்மையும் சவுக்கியமுங் கிடைக்கும். இந்தச் சகுனி சூதில் வல்லவனாயிருந்து ஜெயிக்கிறானென்று நினைக்கிறீரன்றோ? இதெல்லாம் இங்கே உதவாது. காசிராஜனொருவ னிருக்கிறான். பர்வதராஜனொருவ னிருக்கிறான். இவர்கள் சூதாட்டத்தில் வல்லவர். அவரோடுகூட ஆடி ஜெயிப்பானேயாகில் அப்போதுதான் இவன் சாமர்த்தியவான். அவ்வாட்டந் தெரியாதவனோடு ஆடுவதிற் பயனென்ன? சமானனோடு எதிர்த்து ஜெயிப்பவன்தான் சுத்தவீரன். அவனே தான் புத்திமான். அப்படியின்றி வழி யடித்துப் பறிப்பவர்போல் மோசஞ் செய்வதை நீர் ஒரு சாமர்த்தியமென்று நினைக்கவேண்டாம் என்று இப்படி திரிதராஷ்டிரனோடு விதுரன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்ட துரியோதனனென்பவன், அவனைப் பார்த்து மிகுந்த கோபத்தை யடைந்தவனாகிக் கண்கள் சிவக்க, உதடு துடிக்க, இதனைப் பேசுவதாயினான்.

## துரியோதனனுக்கும் விதுரனுக்கும் வாது

ஓய் விதுரரே! அன்னியருடைய கீர்த்தியைப் புகழ்ந்து நம்மைத் தூஷிக்கிறதே உமது தன்மையா யிருக்கின்றது. எப்போதும் எம்மைப் பார்ப்பதற்கு உமக்கு இஷ்டமில்லை நீர் நமக்கு நித்திய சத்துருவாய் இருக்கிறீர். ஆனபடியினாலேதான் எம்மைப் பாலரைப் போல வெண்ணி இகழ்ச்சியாய்ப் பேசுகிறீர். நாம் பலதரமும் பொறுத்துக்கொண்டோம். இப்போது சபையிலே பயமில்லாமல் எம்மை அலட்சியஞ் செய்து பேசனீர், உம்மைச் சொல்லவேண்டுவதில்லை. ஒருவன் தனச்செதிரியின் பக்ஷத்தில் இருக்கிறவனென்றறிந்தும் அவனைச் சேர்த்து அவன் பேச்சைக் கேட்கிறானே அப்படிப்பட்டவனை நிந்திக்கவேண்டும். இப்படிக்கு யாரேனுஞ் சத்துரு பட்சத்தில் இருப்பவனுடைய குணங்களை யறியாமல் அவனைச் சேர்ப்பதினால் மிகுந்த இடறுகள் நேரிடும். இதுகளுக்கு நீரே திருஷ்டாந்தம். எப்போதும் இவ்விதமான அனேகம் பேச்சுகளாலே என்னையும் என் தந்தை முதலானோரையும் மயக்கி, என் பட்சத்துக்கு வருஞ் சீரை எல்லாங் கெடுத்துவருகிறாயன்றோ? உம்மாலே எங்களுக்கு ஒருக்காலுஞ் க்ஷேமமில்லை. அறியாமையினாலே ஒருவன் தன் மடியில் சர்ப்பத்தை யெடுத்து வைத்துக்கொண்டதுபோல், உமது ரூபத்தைப் பார்த்து நல்லவரென் றெண்ணிச் சேர்த்ததற்குப் பயன் எனக்கும் என்னைச் சேர்ந்தோருக்கும் நன்றாய்க் கிடைத்தது.

ஓய் விதுரரே! இன்னமுங் கேளும்: பூனையை வீட்டில் வளர்த்தால் அந்த பூனை அவ் வீட்டிலிருக்கிற பேர்களெல்லாம் எப்போது கண் மூடுவார்கள் பால் தயிர் முதலானதுகளை பயமின்றி என்றைக்குக் குடிப்போமென் றெண்ணுவதுபோல் நீர் அன்னங் கொடுத்துக் காப்பவர்கள் நாசமடையும்படி கோருகிறீர். ஆனபடியினாலே, நீர் சுவாமித் துரோகியானீர். உமது சுபாவம் இவ்விதமாய் இருக்கின்றது. இப்படிப்பட்ட உமது துர்க்குணங்களையறியாமல் உலகம் உம்மை நல்லவரென்று நினைத்திருக்கிறார்கள். அந்தத் தைரியத்தினாலேதான் வாயில் வந்தபடி எல்லாம் பிதற்றுகிறீர். நீர் பேதை யென்று ராஜா உபேக்ஷ செய்து வருகிறபடியினாலே அவரிடத்திற் பேச நிர்ப்பயமாய் இருக்கிறீர். அந்த மட்டும் நீர் செய்த உபகாரம் போதும் இனி யொன்றுஞ் சொல்லவேண்டாம். பாண்டவர்களை நாங்கள் ஜெயித்ததும், அவர்களுடைய சொத்துக்களைச் சம்பாதித்ததும், இவ்விரண்டும் க்ஷத்திரிய நியாயந்தான். நீரேன் அனியாயமென்று சொல்லுகிறீர்? [illegible] அனியாயத்தைக் கண்டீர்? உம்முடைய பேச்சைக் கேட்க எனக்கு ருசியில்லை வாயை மூடிக்கொள்ளும். சத்துரு பக்ஷத்திற்கு இதமாய்ப் பேசவேண்டுமென் றுமக்கு மனமிருக்கிறதே, அதை அன்னியருக்குத் தெரியாமலாகிலும் பேசுகிறீரா? மூடருக்குந் தெரியும்படியாகத் தானே பேசுகிறீர்? இப்படிப்பட்ட உம்மைப் புத்திசாலி யென்று எப்படிச் சொல்லலாம். நம்மை யடுத்தவனாயிற்றே யென்று நான் சும்மா யிருக்க யிருக்க, நீர் கர்வத்தை யடைந்து, எல்லாஞ் சுயசக்தியாலே நடக்கிறதாய் நினைக்கிறீர். நீர் சுத்தமாய் புத்தியில்லாதவர். பெரியோரை யடுத்துப் புத்தி கேட்டுக் கொண்டு வாரும்.

ஓய் விதுரரே! இத்தனை நாள் அரசனிடத்திற் சேவித்துப் பெற்ற கொஞ்சங் கீர்த்தியையும் போக்கிக் கொள்ளாதேயும். புத்திமான் நானொருவன் தானென்று செருக்கடைந் திருக்கிறீர் அதை விட்டுவிடும். அனியாயஞ் செய்ய வேண்டாம். செவ்வையாய் பிழையும். இனி நான் உம்மைக் குணதோஷங்கள் கேட்பதி

மில்லை. நீர் ஒரு பேச்சுஞ் சொல்லவும் வேண்டாம். யாவருக்கும் புத்தியை ஈஸ்வரனே இயல்பா யுண்டாக்கினார். எனக்கு மப்படியே புத்தி கொடுத்திருக்கிறான். ஈஸ்வரன் விதித்தவின்படி யன்றி வேறு நடவாது. நீர் சொல்லக் கேட்டா நான் முன்னுக்கு வரப்போகிறேன் வயிற்றிலிருக்குஞ் சிசுவுக்குப் பால் முதலியவைகளைக் குடிக்கும்படி புத்தி நீரா கொடுத்தீர். ஆனபடியினாலே, தெய்வம் அன்னவனுக்குக் கொடுத்த புத்தியைக்கொண்டு அவனவன் பிழைக்கையில், நீரேன் வீணாய்க் கத்துகிறீர். வெகுதூரம் பொறுத்தேன். இனிமேலும் இப்படி பேசவேண்டாமென்று துரியோதனன் சொன்னதைக் கேட்ட விதுரன் பொறுமையோடு மறுபடி சொல்லுகிறான்:

அப்பா துரியோதனா! நீ சொன்ன பேச்சுகளெல்லாம் பெரும்பாலும் யதார்த்தந்தான் எனக்கொருவனும் புத்தி சொல்ல வேண்டாமென்றாய் அது சரியே. லோகத்திலே ஒருவன் மலையைத் தலையிலே முட்டித்தள்ள முயலுகிறான். மற்றொருவன் கை நகத்தாலே பூமியைப் பறிக்க நினைக்கிறான். இவ்விருவருக்கும் புத்தி மற்றொருத்தராலுஞ் சொல்லத்தகாது. அவர்கள் ஒருத்தருக்கொருத்தரே சொல்லிக் கொள்ளவேண்டும். இவர்களுக்குப் புத்திசொல்ல முயலுகிறவன் மூடனேயாவான் பகைவனுமாவான். நீ பூமியை நகத்தினாற் பறிக்கிறவன். சகுனி மலையைத்தலையால் முட்டுகிறவன். உங்களுக்குப் புத்தி சொல்ல வந்த நான் மூடனும் சத்துருவுமானேன். ஆனாலும், நீ மாத்திரம் என்னை சத்துருவாக நினைத்தாயே யல்லது, நான் உன்னை அப்படி நினைக்கவில்லை. நீ க்ஷேமப்பட வேண்டுமென்றே இதத்தைச் சொன்னேன் என்று சொல்லக் கேட்ட துரியோதனன், மறுபடியும் மிகுந்த கோபத்தோடு அவனைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓய் விதுரரே! நீர் இத்தனை நாள் காரியங்களிலே விரோதஞ் செய்தாலும் மேலுக்கு இதமாக இருந்தீர். இப்போது வெளிப்படையாய்ச் சத்துருப்போல நின்று பேசத் தலைப்பட்டபடியினாலே, இனி இவ்விடத்திலிருக்க யோக்கியரல்லீர். விபசாரஞ் செய்யும் பெண்ணுக்குப் பந்துக்கள் எவ்வளவுநாள் புத்தி சொல்லி யடக்குவார்களென்றால், வெளிப்படையாகிற வரைக்குந்தான். பின்பு துரத்த வேண்டுவதுதான். ஆனபடியினாலே நீர் இப்போதுதானே இவ்விடம் விட்டு உமக்கிஷ்டமான விடத்திற்குப் போய்ச் சேரும் என்றான். அதுகேட்டு விதுரன் சொல்லுகிறான்:

அடா துரியோதனா! நீ என்னைத் திரஸ்காரமாய்ப் பேசி போகச் சொல்லியபடி நான் போகிறேன். அதிருக்கட்டும்; லோகத்திலே ஒருவன் இதத்தைச் சொல்லுவனேயாகில், அவனை யெல்லாவகையாலும் பூசிக்கவேண்டும். அதுதான் கைம்மாறுகும். நீயோ அப்படி செய்யாமற் போனதுமன்றி, கோபித்துத் துரத்த யத்தனப்பட்டாய். வெகு யோக்கியன் இப்படிப்பட்ட உன் சவகாசமில்லாமல் இருப்பது எனக்கு நன்மைதான். அன்றியும், உத்தம ராஜாக்களுங்கூட ஒருவனிடத்திலும் பிரீதியை ஸ்திரமாய் வைக்கமாட்டார்கள். வாயினால் மெதுவாய்ப் பேசிக்கொண்டே இருப்பார்கள். சமயத்தில் தலையையும் வெட்டி விடுவார்கள். அது அவர்களுடைய இயற்கை. இப்படியிருக்க, நீ துர்க்குணங்களெல்லாம் வாசஞ் செய்கிற புல்லரசன் ஆனபடியினாலே உன் சினேகத்தை விடுவதே நன்மை; என்னை இத்தனை நாளும் யோக்கியனென்று கொண்டாடி வைத்திருந்து, இப்போது அயோக்கியனென்றும் புத்தியில்லாதவனென்றுஞ் சொல்வதினாலே, நீயே புத்தியில்லாதவனாகிறாய். எப்படியென்றால், அரசன் தன்னிடத்திற் சேர்க்கத் தக்கவர்களை நன்றாய் ஆராய்ந்து, அவர்களுடைய குணகுணங்களையறிந்து சேர்க்கவேண்டுமன்றோ?

அடா துரியோதனா! நீ அரசு புரிந்து வெகு செல்வங்களை அனுபவிக்கவேண்டும் என்று மிகுந்த அபிலாஷை யுள்ளவனாய் இருக்கிறாயே. ஐயோ! இதை யெல்லாம் அனுபவிக்காமற் சீக்கிரத்தில் நசிக்கப் போகிறாயே என்று பரிதாபத்தினாலே உனக்குப் புத்தி சொன்னேனே யல்லது வேறில்லை. இந்த நற்புத்தி உனக்கினிக்கவில்லை. விபசாரிக்குப் பதிவிரதா தருமங் கேட்க ருசியிராது. உனக்கு மாத்திரமன்று. உன் பிதாவுக்கும் அது ருசிக்கவில்லை. ஏனென்றால், நீங்களெல்லாம் நசிக்கவும், அக்காலத்தில் அவர் பெருந்துயரம் அனுபவிக்கவும், வேண்டிய கருமங்கள் காத்திருக்கின்றன. சாகப்போகிறவனுக்கு நல்ல அவுஷதம் வேண்டி யிராது. நான் சொன்ன பேச்சுகளெல்லாங் குமரியைப் பார்த்துக் கிழவனைப் புணரச்சொன்னால் எப்படியோ அப்படி உங்களுக்கு இன்பப்படாமல் போயினவன்றோ? இதெல்லாம் தெய்வத்தின்

செயல்தான் இதனல்லவென்று நினைத்தாய். மடமையுள்ள மாதரையும், பாலகரையும், பேதைகளையுங் கேட்பாயேயாகில், நான் இத னை அகிதனை அதை அவர்கள் உனக் குச் சொல்லுவார்கள். உலகத்தில் முகஸ் துதியாகச் செவிக்கினிப்பாய்ப் பேசுகிறவர்கள் வெகு பேர்கள் கிடைப்பார்கள். அந்தப் பேச்சு கள் இம்மை மறுமைகளில் நற்பயனைத் தரா மற் போவதுமன்றி கேட்டையுந் தரும். சிலர் உரிமையோடு கலந்து செவிக்கினியாத சொல் லைச் சொல்லுவார்கள். அச்சொல்லோ இரண் டிடங்களிலும் நன்மையைப் பயக்கும். (சிரிக் கச் சொல்வார் சிறியர், அழச்சொல்வார் அறி ஞர்) என்று பெண்டிர்களுஞ் சொல்லுகிறார்க ளல்லவா? ஆனால் இப்படி சொல்லுகிறவர்கள் கிடைப்பது அருமை. இதை கவனிப்போடு கேட்பவன் கிடைப்பது மிகவுமருமை.

அடா துரியோதனா! இன்னுஞ் சொல்லு கிறேன் கேள்: எவன் முகஸ்துதியாய்ப் பேசா மலும், நியாயத்தைப் பேசினால் மனதுக்கு இதமாயிராதே அதனாலே நம்மிடத்திற் பிரீதி குறைந்துபோமே நமது பிரயோஜனமுங் கெட்டுப்போமே என்று நினைத்துச் சும்மா யிராமலும் இதமே சொல்லுகிறானோ அவன் தான் உலகாளும் ராசனுக்கு மித்திரன். அவன் தான் பந்து. அவன்தான் குரு. அவன்தான் தெய்வம். அப்படிப்பட்ட மந்திரியினுடைய பேச்சைத் தடையின்றிக் கேட்பவனே புத்தி சாலி. நன்மைக்கும் பாத்திரன். எல்லா வித்தி லுங் குணசாலி. அப்படி யல்லாதவன் மூட னென்பதற்குச் சந்தேகமில்லை. உலகத்தில் யாவருக்கும் ஆப்தருடைய பேச்சு யெப்படி யிருக்குமென்றால், முதலில் கசப்புந் தூக்கந் தமு முடையதாய், முடிவில் வியாதியினால் வரும் உபத்திரவத்தைப் போக்கித் தேகத்திற் குப் பலத்தையும் தேஜஸையும் பயக்கானின்ற திவ்விய அவுஷதம்போ லிருக்கும். புத்திமான் அந்த அவுஷதத்தைச் சாப்பிட வேண்டும். அது நாவுக்கு ருசியில்லையென்று மறுப்பா னாகில் மரணத்தை யடைவன். அதைப்போற் கேள்விக்கு நன்றாயிராமலும், தருமத்திற்கும், கீர்த்திக்கும், வாழ்வுக்கும் ஏதுவாகியு மிரா நின்ற ஆப்தருடைய பேச்சை கேட்டு கோப தாபங்க ளில்லாமற் பொறுமையோடு நடந் தால், ஓர் ஆபத்தையு மடையாமற் சுகத்தை யடையலாம். ஆப்தரைத் திரஸ்காரஞ் செய் வது நன்மையன்று. உன் வாழ்வைக் குறித்தே இவ்வளவும் நான் சொன்னேன். வேண்டா மென்னச்சேயும் வலுவிற் சொல்லுவானே னென்றால், மகாராஜாவாகிய திரிதராஷ்டிர ருக்கு ஒரு துன்பமும் நேரிடாம லிருக்க வேண்டுமென்கிற அபிப்பிராயத்தினாலேதான். தமயனும் ரக்ஷகருமாகிய அவருக்கு வருங் குறைவு என்னுடைய தானபடியினாலே, நீ திரஸ்காரஞ் செய்து கேட்காமற் போனாலுஞ் சண்டையிட்டுச் சொன்னேன். பின்னும் பின் னும் நூறுதரஞ் சொன்னேன். அப்படி யில் லாமல் எனக்கென்ன வந்தது? ஆர் கெட்டா லென்ன? ஆர் வாழ்ந்தா லென்ன? என்று விதுரராஜன் சொல்லக்கேட்ட துற்புத்தியும் அகந்தையுமுள்ள துரியோதனன் அதை லக்ஷியஞ் செய்யாமல், மறுபடியுஞ் சூதாட வாரம்பித்தான்.

## தருமனுக்கும் சகுனிக்கும் நடந்த இரண்டாவதாட்டம்

அப்போது சகுனியானவன் உதிஷ்டிர ரைப் பார்த்து, ஓய் ராஜாதிராஜனே! இது வரையிலும் பந்தயம் வைத்துத் தோற்றீரே. இவ்வளவுதானோ உம்முடைய செல்வங்கள்? தம்பிமாரைக்கொண்டு பூமி யெல்லாஞ் ஜெயி த்து வெகு திரவியங்களைச் சம்பாதித்தீரென் றும், இராஜசூய யாகத்தில் உலுப்பையாய் வெகு திரவியங்கள் வந்தனவென்றும் புகழு ண்டா யிருக்கிறதே. அதெல்லாம் இவ்வளவு தானா? அல்லது தோற்கப் போகிறோமென் கிற பயத்தினாற் சூதாட மனமில்லையோ? அப்படி பயமிருந்தால் ஆடவேண்டாம். தோற்றது போரும் நீர் பணம் போகிறதை லக்ஷியஞ் செய்யமாட்டீரே. இப்போது எது அப்படிப்பட்ட லோபகுணம் உமக்கு உண்டா யிற்று என்றிப்படி வஞ்சனையாகவும், எளித மாகவும் பேசக் கேட்ட உதிஷ்டிரர் காலகதி யினாலே மறுபடி யாடும்படி நினைத்துச் சகுனியை நோக்கி, அப்பா சகுனி! என் செல் வங்களுக்குக் கணக்கிடப் போகாது. என்னி டத்திலிருக்கும் பொருள்களின் கணக்கு எனக் குத் தெரியாது. ஆனாலும், லக்ஷம்-கோடி- பத்துகோடி-அற்புதம்-நிற்புதம்-பரார்த்தம் என்று கணக்கிடப்பட்ட பொருள்களிருக் கின்றன. அவைகளை யெல்லாம் பந்தயமாய் வைக்கிறேன் ஆடென்றார்.

அதுகேட்ட சகுனி வெகு கர்வத்தோடு இதோ இதோ ஜெயித்தேன்பாருமென்று பாச்

சிகையைப் போட்டான். அதுகண்ட உதிஷ்டிரர், ஓ சகுனி ராசனே! எனக்கு அளவற்ற பசுக்களும்-ஆடுகளும் - யானைகளும் - குதிரைகளும்-காடுகளி லிருக்கின்றன. அவைகளைப் பந்தயமாக்கினேன் என்னவே அவன் அவைகளையுஞ் ஜெயித்தேனென்றான். மறுபடி தரும புத்திரர் எனக்கு வெகு கிராமங்களும் பட்டணங்களும் ஆங்காங்கு பல அரண்மனைகளு மிருக்கின்றன. அவைகளில் தேவதாயம்-பிரமதாயந்தவிர மற்றயாவையும் அவற்றிலுள்ள பொருள்களோடு கூடப் பந்தயம் வைக்கிறேனென்றார். அதைக் கேட்டுக் காந்தார ராஜன் மோசத்தை யாசரித்து, இதோ பாருமையா நான் வாயாற் சொன்ன விருத்தம் போட்டேனென்று சொல்லி ஜெயித்தான். பின்பு தரும புத்திரர், ஆஹா சகுனீ! மகாராச குமாரர்கள் அணியத் தக்கவையாகிய குண்டலங்கள்-தோள் வளைகள்-பதக்கங்கள்-மணிமாலைகள்-முத்து மாலைகள் - கடகங்கள் - மோதிரங்கள் இப்படிப்பட்ட சகல ஆபரணங்களும் பந்தயமாகவைக்கப்பட்டன வென்றார். சகுனியும் பாச்சிகையை யுருட்டி ஜெயித்தேனென்றான். இவ்விதமாய் இவர் பந்தயம் வைக்க வைக்க, அவன் அட்சதத்துவ மென்னும் வித்தை அறிந்தவனாகையாலே தனக் கிஷ்டமான விருத்தந் தனக்கு விழும்படியாகவும், அவர் இஷ்டப்படி அவருக்கு விழாம லிருக்கும்படியாகவும் மோசஞ் செய்து ஜெயிக்கவே, தருமபுத்திரரானவர் மறுபடி பந்தயம் வைக்க ஒரு சொத்து மில்லாமை கண்டு, மாகிரங்கள்-பூமிகள்-பட்டணங்கள் முதலான சகல சம்பத்துகளையுந் தோற்றோமே இதுவரையில் என்ன தரும மிருந்தது. இனி நாமும் தம்பிமாருந் தானே மிஞ்சினோம். போனதுபோச்சு. இன்னமும் பார்ப்போமென்று மனதில் நினைத்துச் சகுனியைப் பார்த்து இதனைச் சொல்லுகிறார்:

ஓ காந்தார தேசாதிபதி! இதோ பார் என்னுடைய கடைப்பட்டு தம்பி சகாதேவனென்கிறவ னிருக்கிறானே இவன் எப்போதுந் தரும பரிபாலனஞ் செய்கிறவன். வெகு ஞானவான். எனக்கு மிகவும் பிரியமானவன். இவனை ஒரு பந்தயமாகவும், இவனுக்கு மூத்தவனாகிய நகுலன் மகா சமர்த்தன். குணங்களில் அதிகப்பட்டவன். இவனை ஒரு பந்தயமாகவும் வைத்து ஆடுகிறேனென்று சொல்லக் கேட்டு, சகுனி அப்படியா? சந்தோஷம் என்று சொல்லிப் பாச்சிகையை எடுத்தாடி உதிஷ்டிரரை நோக்கி, ஓய் பாண்டவ ராஜனே! நீர் பந்தயம் வைத்த தம்பிமாரிருவரையுஞ் ஜெயித்தேன். இனிமேல் உமக்கொன்றுமில்லை. மற்றிருவர் தம்பிமார் இருக்கிறார்களே யென்றால், அவர்கள் மகா பலசாலிகள். சுத்த வீரர்கள். உமக்குச் சுவாதீனரும் அல்லர். இவர்களோ மாற்றாந்தாயின் மக்கள் ஆனதுபற்றியும், உம்மைவிட வேறே கதி இல்லாதவர்களானது பற்றியும், நீர் பந்தயம் வைக்க இசைந்தார்கள். அப்படிக்கு அவர்கள் இசைவார்களா? மேலும், உமக்கு அவர்களிடத்திலிருக்கிற அன்புபோல் இவர்களிடத்தி லிருக்கமாட்டாது. ஆகையால், இனி நீர் எதை வைத்து ஆடப்போகிறீரென்று சொன்னான்: அதுகேட்ட தருமபுத்திரர் அடா சகுனி! நீயேன் மித்திரபேதமான பேச்சைப் பேசுகிறாய்? இதனாலே ஒன்றும் பயனில்லை. நீ கற்ற வஞ்சனை வித்தையைத் தடையின்றி முற்றும் செலுத்தென்று தருமர் சொல்ல, அதற்குச் சகுனி, அய்யா தருமபூபதி! மூடன் நீரில் விழுந்தால் முழுகிப்போவான். சமர்த்தன் கரை யேறுவான். வாயாலே பேசுவதிற் பயனென்ன? நீர் பெரியவர்தான். ஓர் மனிதன் சொப்பனத்திற் காணும் பொருளை நித்திரையின் முடிவிற் காணாமற் போகுமென்று நினைக்கிறானா? இல்லையே. அப்படி நீர் செய்கிற காரியங்களில் நிச்சயப் புத்தியில்லாதவரா யிருக்கிறீர். நல்லது உமக்கு நமஸ்காரம். மேலே நடக்கவேண்டுவ தென்னவென்றான்.

உதிஷ்டிரர் அதுகேட்டு, ஓ எனது சத்துருக்களிற் சிறந்த சகுனி ராஜனே! எந்தத் தம்பி எங்களை வெகு ஆபத்துகளிற் கரையேற்றத் தக்கவனோ எவன் சகல சத்துருக்களையும் ஜெயிக்க வல்லவனோ எவன் உத்தர குருவரையிற்போய் யாவரையும்ஜெயித்து வேண்டிய தனங்களைக் கொண்டுவந்தவனோ எவன் தனஞ்செய னென்கிற பேரைப் பெற்றவனோ எவன் வலது கையினாலும், இடது கையினாலும் பாணப்பிரயோகம் செய்து ஸவ்யஸாசி என்கிற பேரைப் பெற்றவனோ அப்படிப்பட்ட அர்ச்சுனனைப் பந்தயம் வைக்கிறேனென்றார். சகுனி அவனையும் ஜெயித்தே னென்றான். அதற்குப் பின்பு தருமபுத்திரர் இதோ இருக்கிற எனக்கு நேரிளையவன் இவன் ஒப்பற்ற பலமும், தைரியமும், பராக்கிரமும் பெற்று கதாயுதத்திலே யாவருக்கும் சிரேஷ்டன். மதயானைக் கன்றுபோல் கம்பீரமான ரூபம்

உடையவன். யுத்தமென்றால் அலக்ஷியம்
செய்து முன்னே புறப்படுகிறவன். ருபத்தின
லேயே சத்துருக்களுடைய மனத்தை நடுங்கச்
செய்யத் தக்கவன். ஆதலால், இந்த வீமசேன
னையும் பந்தயம் வைத்து ஆடுகிறேனென்னக்
கேட்டு, சகுனியானவன் மிகுந்த இறுமாப்
புடனே பாச்சிகையாடி ஜெயித்து, அங்குள்ள
யாவரையும் நோக்கி, ஓ சபையாரே! பாருங்
கள். இப்போ உதிஷ்டிரருடைய ராச்சியமுத
லான செல்வங்களை யல்லாமல், லோகப் பிர
சித்தராகிய அவர் தம்பிமாரையுஞ் ஜெயித்
தேன் என்று சொல்லி மீண்டும் உதிட்டிர
ரைப் பார்த்துச் செருக்குடையவனாய்ச்
சொல்லுகிறான்:

ஓய் ராஜாவே! ராச்சிய முதலாய்ச் சகல
சொத்துக்களையும் ஒப்பற்ற தம்பிமாரையும்
பந்தயம்வைத் தாடித்தோற்றீர். இனி உமக்
கென்ன இருக்கிறது. இன்னமேதாகிலும்
ஆஸ்தி வைத்திருந்தால் அதையும் வைத்தா
டும். ஒருவேளை ஜெயிப்பீர் என்று செருக்கோடு
கூடிய பேச்சுகளைப் பேசக்கேட்டு, உதிஷ்டி
ரர், நல்லதாகட்டும். இன்னமும் உன் மோச
மெவ்வளவோ, அவ்வளவையுங் காட்டு யாவ
ரும் விரும்பும்படியாகிய என்னையே பந்தய
மாக வைக்கிறேனென்று சொன்னார். அப்
போது சகுனி பாச்சிகையை யெடுத்தாடி
இதோ ஜெயித்தேன் பாரும் உதிட்டிரரேயென்
று சொல்லிச் சபையாரைப் பார்த்து கேளுங்
கள் சபையாரே! பாண்டவர் ஐவரும் என்னால்
ஜெயிக்கப்பட்டார்கள். இனி எங்களுக்குப்
பணிவிடை செய்ய வேண்டிய மூடியாளர்கள்.
இதை நீங்கள் யாவரும் அறிந்திருங்கள்
என்று மனதிற் சந்தோஷம் பொங்க உரக்கச்
சொல்லி, பின்பு தருமராசனைப் பார்த்துச்
சொல்லுகிறான்: ஓய் பயித்தியக்கார அரசனே!
எல்லாப் பொருளையுந் தோற்ற பின்பன்றோ
உம்மை பந்தயம் வைக்கவேண்டும். அப்படி
யில்லாமல் முன்னமே நீரேன் மூறியாயினீர்.
உமக்குப் பந்தயம் வைக்க இன்னுமோர் சொத்
திருக்கிறதே அதை என் பத்திரமாய் வைத்து
விட்டீர், அது யாதென்று கேட்கிறீரோ, பாஞ்
சால ராஜனுடைய மகளாகிய திரௌபதி யிரு
க்கிறாளே, அவளை வைத்து ஆடக்கூடாதா மற
ந்து போனீராக்கும் போகட்டும். இப்போதாகி
லும் அவளை வைத்தாடும். அவளாலே யாகி
லும் ஜயத்தை யடையலா மென்று துரியோத
னதிக ளெல்லாம் புன்னகை கொண்டிருக்கப்
பரிகாசமாய்ப் பேசினான்.

அதுகேட்ட மகா புத்திமானாகிய உதிஷ்
டிரரும் ஊழினாற் பேதையாக்கப்பட்டு, செய்
வினை தவிர்வினை தோற்றாமற் ஜகுனியைப்
பார்த்து, ஓஜகுனிராஜனே! அப்படியேயாகட்
டும். இரதிபோற் கொஞ்சங் கருநிற முள்ள
வளும், மிகவும் உயரமுங் குள்ளமுமில்லாத
வளும், சகல லட்சணங்க ளமைந்து, வெகு
சுந்தரமாகிய தேகமுடையவளாகிய திரௌப
தியை பந்தயம் வைத்தேனென்னவே, அச்
சபையிலிருந்த பேர்களெல்லாம் சீ! சீ! இந்த
உதிஷ்டிரருக்கு என்ன இப்படி புத்திகெட்டுப்
போயிற்று. ஐயோ! மிகவும் மூடரா யிருப்
போருங்கூட இப்படிப் பந்தயம் வைக்கமாட்
டார்களே என்றார்கள். சிலர் இதென்ன விதி
இவருக்கென்றார்கள். சிலர் சகுனி செய்யும்
வஞ்சனை மிகக் கொடியதென்றார்கள். வீஷ்மர்-
துரோணர்-முதலானோர்கள்மிகுந்தமனவேஷ்
டையை யடைந்து, தேகமெல்லாம் வேர்வை
விட நின்றார்கள். விதுரர் மகா துக்கத்தோடு
தலையை வணங்கி நின்றார். கர்னன் அட்ட
காசஞ் செய்துகொண்டிருந்தான். துரியோத
னன் சந்தோஷ மிகுதியினால் ஆசனத்திற்
பொருந்தாமல் துள்ளிக்கொண் டிருந்தான்.
துர்ச்சாதனன் மனக்களிப்போடு கர்ச்சித்துக்
கொண்டிருந்தான். திரிதராஷ்டிரன், குழந்
தாய் துரியோதனா! என்ன என்ன ஜெயித்தாய்
என்று கேட்டுச் சந்தோஷமாய் வினவிக்
கொண்டிருந்தான். இப்படிக்கு அச்சபை துக்
கத்தையுஞ் சந்தோஷத்தையும் பொருந்தி
இருகூறா யிருக்க, சகுனியானவன் பாச்சி
கையை கையிலெடுத்து, ஓய் உதிஷ்டிரரே!
இது வென் முடிவான ஜெயம் பாருமென்று
ஆடித்திரௌபதியையுஞ் ஜெயித்தேனென்று
யாவருங் கேட்கச் சொன்னான். அக்கால் துரி
யோதனன் முதலானோர் திரௌபதி ஜெயிக்
கப்பட்டாளென்று கைதட்டிக் காக்கைபோற்
கதறிச் சொன்னார்கள். மற்றவரெல்லாம் விச
னக்கடலி லாழ்ந்து நின்றார்கள்.

## விதுரன் துரியோதனனைக் கண்டித்தல்

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே!
மகா பாவியாகிய துரியோதனன் பாண்டவர்க
ளுடைய சகல சம்பத்துகளும், அவர்களும்
திரௌபதியும் ஜெயிக்கப்பட்டு போகவே மத
மிகுந்து அட்டகாசஞ் செய்து, சபையி லிருக்
கிற யாவரும் இதென்ன விபரீதமென்று தத்த
ளித்துக்கொண்டிருக்கையில் விதுரனை நோக்கி
ஓ விதுரரே! பாண்டவர்களுக்கு இஷ்ட

நாயகியாகிய திரௌபதி நமக்கு முறியாளுள். ஆகையால், அவளை இப்போதே இவ்விடத் திற்கு இட்டுக்கொண்டு வாரும். அவள் நமது அரண்மனையில் மற்றுமுள்ள வெள்ளாட்டிக ளோடு வீட்டைத் துடைப்பதால் விளக்கு வது முதலாகிய பணி விடைகளைச் செய்வது நமக்கு மிகவும் இஷ்டம் என்று சொல்லக் கேட்ட அந்த விதுரனென்பவன் வெகு விசனத் தையுங் கோபத்தையு மடைந்து, துரியோ தனனைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினன்: அடா துரியோதனு! நீ இதுவரையில் எப்ப டிப்பட்ட கொடுமையுள்ளவருஞ் செய்யாத செய்கையைச் செய்ய முயலுகிருய். அதைக் குறித்து உனக்குஎவ்வளவும் மனங்கூசவில்லை. ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? இயமனுடைய பாசங் கழுத்திற் சுற்றிக் கொண்டபடியிஞலே உனக்குப் புத்தி விபரீதப்பட்டது. இவ்வித மான பாவச் செய்கையினுல் உடனே நரகக் குழியில் விழுகிற உன்னுத்மாவைக் காக்கச் சற்றேனும் உனக்கு அறிவில்லை.

மேலும், ஒரு அற்பமிருகமானது தனக்கு வரும் அபாயந் தெரியாமல் தூங்கிக்கொண் டிருக்குஞ் சிங்கத்தைக் கிட்டி கேட்டை செய் வதுபோல, நீ பாண்டவர்கள் விஷயத்திற் செய்கிருய். பாண்டவர்கள் எப்படிப்பட்டவர் கள் தெரியுமா? கோபமாகிய விஷமும், பாணங்களாகிய தீக்ஷண்யமான பற்களு முடைய கொடிய சர்ப்பங்களென்று நினை. சர்ப் பங்களைக் கோபிக்கச் செய்தால் மரணம் உட னே வரும். வேண்டாம் கொடிய செய்கை செய்யாதே, உயிரை யிழக்காதே, நரகில் விழா தே, திரௌபதி உனக்குத் தாசியாகவில்லை, எப்படி யென்கிருயா? முன்னம் உதிஷ்டிரர் தன்னைத் தோற்றுப் பின்னலே திரௌபதி யைப் பந்தயம் வைத்தார். அப்படிச் செய்ய அவருக்கு அதிகாரமில்லை. இந்த திரிதராஷ் டிர மகாராஜர்வானவர் அனியாயம் நடப் பதை விலக்காமல் அபேக்ஷை செய்கிருர். மூங் கிற்காடு ஒன்ருேடொன்று இழைந்து தீ பற் றிக்கொண்டு நாசமடைவதுபோல், இந்தக் கவுரவ குலமெல்லாம் ஒன்ருேடொன்று கலக் கப்பட்டு அழியும்படியாகக் காலம் நேரிட்டது. இந்தத் திரிதராஷ்டிரராஜன் மகா பாவி. ஏனென்றுல், தன் மகன் அதருமத்தை நடத் தச் சம்மதித் திருக்கிருனன்ருே? ஆதலால், அவனுக்கு மிகுந்த விசன மனுபவிக்கும்படி யாகிய விதி யிருக்கிறது. உலகத்தில் எவனும் எப்படிப்பட்டவனையுங் குரூரமாகிய சொல்லி ஞல் வையக்கூடாது. அம்பிலெய்தலைக் காட்டிலும் சொல்லிஞ லெய்வது வெகு கொ டுமை. அம்பு மார்பிலே தைக்கும். சொல்லம் பிஞலாகிய மனப்புண் ஆருது. ஆகையால், நீ பாண்டவர்களுக்குச் சகிக்கக்கூடாத கொடு மையுள்ள சொல்லைச் சொல்லாதே, உனக்குத் தகாது. அதனுல் இம்மையுமன்றிமறுமையுங் கெடும். பாண்டவரோ மகா புருஷர் அவர் எங்கு எப்படியிருந்தாலும் மேன்மையுள்ள வர்கள். நீறு பூத்த நெருப்பினைப் போன்ற வர்கள், அவர்களிலும் உதிஷ்டிரர் மகானு பாவர். நல்லொழுக்க முடையவர். அப்படிப் பட்டவருடைய மனங் கொதிக்கும்படி செய் யாதே, அவர்களைப் பார்த்து இகழ்ச்சியாகிய பேச்சுக்களைப் பேசுவது மலையைப் பார்த்து நாய் குலைப்பதுபோ லிருக்கிறது.

அடா துரியோதனு! நீ இப்படி செய்வ தெல்லாம் பெருமை யென்று நினைக்கிருய்? அப்படியல்ல, இயமகிங்கரர் வெகு நரகங் களைச் சீர்படுத்தி வாசலைத் தடையின்றித் திற ந்து, நீ புத்திரர் - மித்திரர் - பந்துக்கள் முத லான போகளோடு எப்போது வருவா என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். அது உனக்குத் தெரியவில்லை. உனக்குத் துணைப் பட்டபேர்களும் உன்னேடு கூடவே வருவார் கள். அடா மூடா! வீணு யேன் கெட்டுப்போகி ருய் கர்வப்படாதே, எப்படியும் அவர்கள் சீர்படுவார்கள். நீதான் கெடுவாய். ஆனல், இப்போது சுரக்காய் மிதக்கிறது. கல் அமிழ் ந்து போகிறது. தூண்டிலி னுனியிலிருக்கும் மாமிசத்திற்கு ஆசைப்பட்டு மீன் உயிரை யிழப்பதுபோல், நீ பாண்டவருடைய செல் வத்திற் காசைப்பட்டு நாசமடையப் பேசு கிருய். எத்தனை சொன்னுலும் உனக்கு ருசியா ததுபோல் உன் பிதாவுக்கும் ருசிக்கவில்லை. அவரைப்பற்றி இந்த வமிசம் நாசமடையப் போகிறது. ஐயோ! மகா பெருமையுள்ள இந் தக் குலத்துக்கு இப்படிப்பட்ட கேடு வரலாமா வென்று அல்லும் பகலும் விசனத் தீயில் விழுந்து தவிக்கிறேன். என் பேச்சைக் கேட் பாரொருவரையுங் காணேன். என்ன செய வேன், வரவேண்டுவது வந்தே தீரும். யாரெ ன்ன செய்யலாமென்று சொல்லி வாயை மூடிக் கொண்டான். அதுகேட்ட துரியோதனன் கோபதாபத்திஞல் தேகமெல்லாம் புழுங்கி, சீ! சீ! சீ! இந்த விதுரன் என்றைக்கும் நமக்

குச் சத்துரு. வெகு துஷ்டன். இவன் பிழைப்
பைச் சுடவேண்டும். நமக்குண்டாகுஞ் செல்
வத்தைச் சகிக்கமாட்டான். இவன் கெட்டான்.
இவன் முகத்திலும் விழிக்கலாகாது என்று
சொல்லிப் பின்பு தன் சாரதியாகிய பிரதிகாமி
யென்பவனைப் பார்த்து, அடா பிரதிகாமி! நீ
போய்த் திரௌபதியை இச்சபைக்கு அழைத்
துக்கொண்டு வா. பாண்டவர்க ளிடத்திற்
பயப்படாதே விதுரன் வெகு துஷ்டன். நம
க்கு விரோதி. அவனுக்கு அவர்களிடத்திற்
பட்சபாதமுண்டு. ஆதலால், நீ சீக்கிரம்போ
யழைத்துக்கொண்டு வா வென்றான். அந்தச்
சாரதி அப்பேச்சைக் கேட்டு, மனதில் மகா
துயரத்தோடு திரௌபதி இருக்குமிடத்திற்
குச் சென்றான்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே!
மகா பராக்கிரமசாலிகள் அந்தப் பாண்டவர்
கள். அந்தத் துரியோதனன் முதலானோரு
டைய கொடிய செய்கையையும், தங்களுக்கு
நேரிட்ட வியசனத்தையும், திரௌபதிக்கு
வந்த ஆபத்தையும், அவர்கள் அக்காலத்தி
லெப்படி அனுபவித்தார்களோ தெரியாது.
எனக்குச் சொல்ல வாயெழவில்லை. ஆகிலும்,
முக்கியமாய் நடந்ததைச் சொல்லுகிறேன்
கேளும் என்று வைசம்பாயனர் சொல்லி மேல்
நடந்த சரித்திரஞ் சொல்ல வாரம்பித்தார்.

## திரௌபதி துரியோதனன் சபைக்கு வருதல்

ஓ அரசனே! அந்தப் பிரதிகாமி யென்
னுஞ் சாரதி திரௌபதி இருக்குமிடஞ்
சென்று, திரௌபதியைப் பார்த்து, அம்மா!
உம்முடைய கணவராகிய உதிட்டிர மகாராஜன்
சூதாடத்தொடங்கி, அதிலாசை தலைமண்டை
கொண்டு, இராச்சிய முதலாய்ச் சகல சொத்
துக்களையும் பந்தயம் வைத்துத் தோற்று,
மறுபடியும் மொழியாமல் முறையே தம்பி
மார் நால்வரையுந் தம்மையுந் தோற்றுப்
பின்பு உம்மையும் வைத்துத் தோற்றார். யாவ
ரையுந் துரியோதனன் ஜெயித்தான்; நீரும்
அவனாலே ஜெயிக்கப்பட்டபடியினாலே சபை
க்கு உம்மையழைத்துவரும்படி என்னை யனுப்
பினான். நான் சுதந்தரனாகையாலே கட்ட
ளையை மீறமாட்டாமல் வந்தேனென்று சொல்
லியதைக்கேட்ட திரௌபதியானவள், அப்பா
பிரதிகாமி! நீ சொன்ன வார்த்தைகளைக்
கேட்டேன் லோகத்திலே யாராகிலும் பெண்
டாட்டியைப் பந்தயம் வைத்தாடுவார்களுண்
டா? மகா புத்திமானாகிய உதிட்டிரர் என்னை
வைத்தாடியதுமிகவும்ஆச்சரியமாயிருக்கிறது.
இருக்கட்டும்; அவர் யாதொன்றினாலே அனு
மதித்து உடம்பு தெரியாமல் என்னைப் பந்த
யம் வைத்தாரா? இல்லையென்று துரியோத
னாதிகள் ஏதாகிலும் மோசஞ் செய்தார்களா?
அதை எனக்குத் தெரியச்சொல்லுவாயென்று
கூற, அச்சாரதி கேளம்மா பாஞ்சாலராஜன்
புத்திரியே! அதிகமாய் அவர்கள் வஞ்சனை
செய்யவில்லை. இவரே ஆவேசங்கொண்டு
யாவையுந் தோற்று உம்மையுந் தோற்றா
ரென்று சொன்னான். அதுகேட்ட திரௌ
பதி அவனைப் பார்த்து, அப்பா சாரதி! நீ
போய் உம்மைப் பந்தயம் வைத்துத் தோற்ற
பின் என்னைப் பந்தயம் வைத்தீரா அல்லது
என்னை முன்னாலே பந்தயம்வைத்துத் தோற்
றீரா என்று அந்த உதிட்டிரரைக் கேட்டறி
ந்து வந்து சொல் பின்பு என்னை யழைத்துக்
கொண்டு போகலாமென்று சொல்ல, அந்தச்
சாரதி சபைக்குவந்து தருமபுத்திரரைப்பார்த்
துத் திரௌபதி சொன்னதை சொல்ல அவர்
வெட்கமும் விசனமும் மிகுந்து ஒன்றுஞ்
சொல்லமாட்டாமல் தலையை வணங்கிக்
கொண்டிருந்தார்.

அப்போது துரியோதனன் சாரதியைப்
பார்த்து, அடா பிரதிகாமீ! இன்னமும் அவ
ளுக்கு அந்தப்புரமோ? இங்கேவந்து யாவரு
மறியச் சொல்லவேண்டுவதைச் சொல்லிக்
கேட்கவேண்டுவதைக் கேட்கட்டும். சீக்கிரம்
அழைத்துக்கொண்டு வாவென்ன, சாரதி
கேட்டு மறுபடியுந் திரௌபதியினிடத்திற்கு
வந்து விசனத்தினால் வாயெழாமல் அவளைப்
பார்த்து, அம்மா! நானென்ன சொல்லுவேன்
உன் பர்த்தா செய்த காரியம் அப்படிப்பட்
டதா யிருந்தது. ஏது கேட்க வேண்டுமானா
லுஞ் சபையில் வந்து கேட்கட்டும் அழைத்
துக்கொண்டு வாவென்று துரியோதனன்
சொன்னான். உன் பர்த்தா ஒன்றுஞ் சொல்லா
மல் தலையை வணங்கிக்கொண் டிருக்கிறார்.
அந்தத் துரியோதனன் சகல பந்துக்களோ
டும் நாசமடைவனே யல்லது இனி செல்வத்
தை யனுபவிக்க மாட்டானென்று தோற்று
கிறது. கேடுகாலங் கிட்டினபடியினாலேதான்
இப்படிப்பட்ட துர்ப்புத்தி யவனுக்கு உண்டா
யிற்று என்று சொன்னதைக் கேட்ட பாஞ்
சால புத்திரியானவள், சூதென்பதொன்று
தெய்வத்தினால் திருஷ்டி செய்யப்பட்டது.
அது யிருக்கட்டும்; அதை ஆடினால்தான்

என்ன; அதிலுந் தருமாதருமங்களிரண்டுமில்லையோ? அவ்விரண்டில் எவன் தருமத்தை விடாமற் காத்துவருகிறானோ அவன் என்னைக் காப்பன். இதிற் சந்தேகமில்லை, ஒருவன் பேரிலுங் குற்றமில்லை, என் பொல்லாத விதி அப்படி யிருந்தது. தான் பாவத்தைப் பண்ணி பெண்ணாய்ப் பிறந்தேன், வந்ததை யெல்லாம் அனுபவிக்கவேண்டுமே யல்லது வேண்டாம் என்றால் போகுமோ? அப்பா சாரதி! சகல ராசாக்களும் பெரியோர்களும் இருக்கிற சபையில் நான் எப்படி வருவேன் என்று சொல்லி, மிகுந்த விசனத்தினால் முகங் கன்றிக் கண்களில் நீர் தளும்ப நிற்குமளவில், உதிட்டிரர் திரௌபதியைச் சபைக்கு வரும்படி இஷ்டனாகிய வொரு தூதனோடு சொல்லி யனுப்பினார். அவன் வந்து திரௌபதிக்கு அச்சேதி தெரிவித்த மாத்திரத்திலே, திரௌபதி விசனசாகரத்தி லாழ்ந்து மெய்யெல்லாம் வேர்த்து நடுக்கமுற்று, தலைமேற் கையை வைத்துப் பெருமூச்சுவிட்டு ஐயோ! இதென்ன காலம் தருமம் இப்படியும் இருக்கிறதா? ஆகிலும் பார்த்தா வார்த்தையைப் பரிகரிக்கலாகாதென்று சொல்லி அப்போது புஷ்பிணியாய் இருப்பதுபற்றித் தரித்திருந்த ஒரு வஸ்திரத்தோடேயே நாணத்தினால் அங்கமெல்லாங் கூச அழுதுகொண்டு, மாமனாராகிய திரிதராஷ்டிரன் முதலானோர் இருக்குமிடத்தில் வந்து நின்றாள்.

### துர்ச்சாதனன் திரௌபதியின் கூந்தலைப் பற்றி யிழுத்தல்

இப்படிக்குக் கண்களினின்று முத்துக்கள் போல் நீர்வடிய வெட்கத்தினால் முகத்தை மூடிக்கொண்டு திரௌபதி சபைக்கு வரவே யாவரும் உள்ளம் நொந்து துரியோதனனை மனதினால் இகழ்ந்தார்கள். பாண்டவர்கள் ஒன்றுந் தோன்றாமல் தலை யிறங்கிக்கொண்டிருந்தார்கள். அவளை ஒருவரும் கண் திறந்து பார்க்கவில்லை துரியோதனன்முதலான நான்கு துஷ்டர்களும் பார்த்துச் சிரித்துப் பரிகாசஞ் செய்துகொண்டிருந்தார்கள். இப்படி இருக்கிற துரியோதனன் பிரதிகாமியைப் பார்த்து, அடா சாரதி! அவள் எங்கே ஒதுக்கி நிற்பானேன் என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வா. அவள் வினாவ வேண்டுவதை யாவரும் அறிய வினாவட்டும். உதிட்டிரரும் இங்கு வந்தே அதற்கு விடை தரட்டும், அவ்விருவரும் பேசுவதை யாவரும் பார்க்கட்டும். ஆனபடியினாலே இவ்விடத்திற்கு வரச்சொல்லு என்றான். அதுகேட்ட அந்தப் பிராதிகாமி மனதில் வெகு துக்கத்தை யடைந்து அவள் சபிப்பாள் என்று பயந்து, இந்த வீஷ்மர் முதலான மூப்பரும் பார்த்துக்கொண்டிருக்கிறார்களே; ஐயோ! இதென்ன அனியாயம் என்று மனதிற் சொல்லிக்கொண்டு சும்மா விருந்தான். அதுகண்ட துரியோதனன் தன் தம்பியாகிய துர்ச்சாதனனை நோக்கி, தம்பி துர்ச்சாதனா! இந்தச் சாரதி வீமசேனனுக்காகப் பயந்து அவளை யழைத்துவரமாட்டாமல் இருக்கிறான். நீயோ அவர்களுக்குப் பயப்படாதவனல்லவா? பாராதீனராகிய அவர்கள் நம்மை என்ன செய்வார்கள்? நீயோ வெகு தீரன். ஆனபடியினாலே அவளை யிங்கே இழுத்துக்கொண்டு வா என்று சொல்லவே, மகா பாவியாகிய அந்தத் துர்ச்சாதனன் அப்படியே செய்கிறேன் அண்ணா என்று சொல்லி எழுந்திருந்து, துரோபதையினிடத்திற்குப் போய் சற்றும் அஞ்சாமல் அவளைப் பார்த்துச் சொல்லுகிறான்:

அடி திரௌபதி! என்ன தலை குனிந்து நிற்கிறாய்? உனக்கு மானமோ என்னைக் கண்டு வெட்கப்பட வேண்டாம். நீ எங்களாலே ஜெயிக்கப்பட்டபடியினாலே எங்களுக்குத் தாசியானாய். துரியோதன மகாராஜாவை வந்து கண்டு பணி. அவர் உன்னைத் தமது சம்பறத்தில் வரவழைக்கிறார். இந்தக் கவுரவர்களுக்குள் யாரிடத்திலிஷ்டமோ அவர்களைச் சேரலாம் என்று சொல்லிச் சிரித்துக் கையினாற் பிடித்து இழுக்கத் தொடங்கினான். அந்தத் திரௌபதியானவள் மனம் பொறாமற் கோவென்று கதறி அழுதுகொண்டு கைகளினால் முகத்தை மூடினவளாய், மாமியார் முதலான பேர்களிருக்குமிடத்தை நோக்கி ஓடினாள். அதுகண்ட அந்தப் பாவி பின்றொடர்ந்து, அடி ஐவரைப் புணரும் அவிசாரி! உனக்கு மானமென்ன? ஈனமென்ன? வெட்கமென்ன? என் என்பேச்சைத் தள்ளிப்போட்டு ஓடுகிறாய். ஓடாதே! எங்கள் வெள்ளாட்டியாகிய உன்னை இழுத்துக்கொண்டு போவோம், இஷ்டமானபடி செய்வோம் என்று பல கடுஞ் சொற்களைச் சொல்லி இரைந்துகொண்டே போய் கருமுகில்போற் கறுத்து மயிற்றோகைபோல் நீண்டு கடலினலைபோன்ற காந்தியையுடையதாய் படிப்படியாக வளைந்து விளங்காநின்ற அவளுடைய கூந்தலினைப்பற்றி இழுத்தான்.

இராஜசூயமாகி சாம்பிராச்சியபட்டாபிஷேகம் செய்யும்போது சகல புண்ணிய தீர்த்தங்களினின்றும் கொண்டுவந்து திவ்விய ஒஷதிரசங்களோடு சேர்த்து அபிமந்திரிக்கப்பட்ட மகா தீர்த்தங்களைப் பெரியோர்கள் எந்தக் கூந்தலின்மீதிற் புரோட்சித்தார்களோ அப்படிப்பட்ட கூந்தலை அந்தக் கொடும்பாவி கை கூசாமற் பற்றி இழுக்குமளவில், சகல ஸ்திரீகளும் ஆ! ஆ! வென்று கையைப் பிசைந்துகொண்டு மார்மேலடித்து, இனி அனியாயம்; இது அனியாயம் என்று கூவினார்கள். வீஷ்மாதியோர் மனம் பதைக்க முகங்கறுக்க மூக்கின்மீதில் விரலை வைத்துத் திகைத்து, இதென்ன விபரீதகாலம் இதென்னகொடுமை என்று சொல்லித் தங்களுக்குள்ளாகவே தாங்கள் அடங்கற்கரியதான அளவற்ற வருத்தங் கொண் டிருந்தார்கள்.

### திரௌபதி சபையாரை நோக்கிச் சொல்லுதல்

இவ்விதமாய்ச் செல்வமும் ஆயுசும் நாசமடையும்படியாகிய துர்ச்சாதனன் சகல விதத்தாலும் பூசிக்கத்தக்க மகாராஜ பத்தினியாகிய பாஞ்சாலியை இழுக்க, அவள் வஸ்திரம் ஒருபுறம் அவிழ்ந்து அங்கங்கள் வெளிப்பட, உடனே அவள் நாணத்தினால் மெய்குன்றிக் கைகளினால் அவயவத்தை மறைத்துக்கொண்டுக் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகக் கோவென்று கூவியழுது அவனைப் பார்த்து, அடா பாவி! என்னை இழுக்காதே. நான் இப்போ புஷ்பிணி, ஒற்றை வஸ்திரந் தரித்திருக்கிறேன். அனியாயஞ் செய்யவேண்டாம். காலமுள்ளமட்டும் நரகம் அனுபவிக்க வேண்டும். லோகநாதராகிய என்து நாயகரை இப்படி அலட்சியஞ் செய்து என்னைச் சபை நடுவில் இழுப்பது உனக்கு நன்மையன்று. உனக்குக் குலமானமாகிலு மில்லையா என்று சொல்லக்கேட்ட அந்தப்பாதகன், அடி துஷ்டச் சிறுமீ! ஏது கொஞ்சமும் பயமில்லாமற் பேசுகிறாய்? நீ ஐவரைப் புணரும் வேசி, உனக்கு மானமென்ன, நாணமென்ன, நீவெகு கொழுத்தவளல்லவா? பத்திரம்பிதற்றாதே எங்களுக்குத் தாசியாயினாய். எசமான ருத்திரவின்படி நடக்காமற்போனால் சிக்ஷை கிடைக்கும் பதறாதே. வெள்ளாட்டியைப் புஷ்பிணியென்று பார்ப்பதுமுண்டோ? நீ ஒற்றை வஸ்திரத்தோ டிருந்தாலென்ன? வஸ்திரமில்லாமல்தா னிருந்தாலென்ன? அடி வேசீ! நாங்கள் ராஜாக்கள் எப்படி வேண்டுமோ அப்படிச் செய்வோம் எங்களைத் தடுப்பவர் யாரிருக்கிறார்கள். இப்போது கிருஷ்ணனையும்-வியாசனையும் - வீமார்ச்சுனர் முதலானோர்களையுங் கூவியழைத்துக் காக்கச் சொல்லடி. தாசியாகிய நீ துரியோதன மகாராஜன் அழைக்கையில் வந்து அவர் பேச்சைக் கேட்டு அவரிஷ்டப்படி நடக்கவேண்டும். உன்னை நிருவாணமாய் நிறுத்திப் பார்க்க அவருக்கு மனமிருக்குமாகில் நீ யப்படியே இருக்கவேண்டும். அதோ பாரடி வெள்ளாட்டி உன் புருஷர் குறும்பாடுகள் போல் தலையைக் குனிந்துக்கொண் டிருக்கிறார்கள். அவர்களும்எங்கள் காலாலிட்டவேலையை தலையால் செய்யவேண்டிய முறிகளானார்கள். இன்னும் உனக்கென்ன இறுமாப்பு? என்றிப்படி மனம்போனபடி பிதற்றி இழுக்கவே, அவள் நடுநடுங்கி யொன்றுந் தோற்றாமல் வியசனத்தில் மூழ்கிப்போய், அவிழாநின்ற கூந்தலைக் கையா லணைத்துக்கொண்டு, காந்தாரியாகிய மாமியைக் கூவித் தொண்டையும் வரண்டு, அந்தச் சபையிலிருப்பவர்களை யெல்லாம் நோக்கி மெள்ள ஒரு வார்த்தை சொல்லுவதாயினாள்:

ஐயோ! இந்தச் சபையில் இருக்கிறவர்களெல்லாம் வேத சாஸ்திரங்களை நன்றாய்ப் படித்தவர்கள். யாவருந் தருமவான்கள். மகா சூரர். இப்படிப்பட்டவர்கள் முன்னிலையில் இந்தப் பாதகன் என்னை இப்படி அநியாயஞ் செய்து இழுக்கிறானே. இந்தக் காலத்தில் இவ்விதமாய்ப் பெரியோர்களிடத்தில்தான் வரலாகுமா? இக்கொடிய செய்கையை ஒருவருந் தடுப்பாரில்லையோ? இது வீணாய்ப் போகாது. இவனுக்கு தேவேந்திரன் சகாயமாய் வந்தாலும் பாண்டவரிடத்தினின்றும் இவன் தப்பமாட்டான். அவர்களின் ஆயுதத்திற்கு இரையாகப் போகிறான், சந்தேகமில்லை. இப்போது அவர்கள் தருமமென்னுங் கயிற்றினால் கட்டுண்டு சும்மா விருக்கிறார்கள். தருமத்தின் சூக்குமம் அவர்கள் அறிந்தவரென்பது பெரியோர்களுக்கே தெரியும். இவர்கள் சும்மாய் இருந்தாலும் தெய்வம்சும்மாயிராது. இப்படிப்பட்ட கஷ்டத்தை நானடைவதற்குக் காரணம் என் பொல்லாத விதியே யன்றி வேறன்று. ஒருவர்மீதிலும் பழியில்லை. இல்லாவிட்டால் அசகாய சூரராகிய பாண்டவர்களின் இஷ்ட பத்தினியாகிய என்னை ஒரு அற்பன் சபை நடுவில் இழுக்கும்படி யிருக்குமா? இந்த

துராத்மாவினுடைய பலத்தை யார் புகழ்வார்கள்? சீ! சீ! இவனையும் இவனை ஏவி இப்படி செய்யச் சொன்னவனையும் சுடவேண்டாமோ? பரதகுலத்தில் நிலைபெற்றிருந்த தருமம் இன்றுதான் நாச மடைந்தது. இராஜ தருமமும் பாழாயிற்று. குலதருமமென்னுங் கடலுங் கரையைக் கடந்தது. இப்படிக் கில்லாமற் போனால் மகாநுபாவராகிய வீஷ்மரும், துரோணரும் சத்தியம் பேசாம லிருப்பார்களா? திரிதராஷ்டிரருஞ் சும்மாவிருப்பாரா? ஓ! ஓ! இச்சபையில் தருமமறிந்தவர்கள் ஒருவருமில்லையென்று நினைக்கவேண்டுவதாய் இருக்கிறது. இருந்தால் இவ்வனியாயத்தை உபேக்ஷை செய்வார்களா? அவர்களாய்ச் சொல்ல மனமில்லாதவர்களாய் இருந்தாலும் யான் ஒன்று வினவுகிறேன்: அதற்கு விடையாகிலுஞ் சொல்லவேண்டும் என்று பிரலாபித்துப் பின்னும் 'சபையாரைப் பார்த்துச் சொல்லுகிறாள்:

ஓ சபையிலிருக்கும் பெரியோர்களே! ஓ ஆசாரியர்களே! ஓ தருமவான்களே! ஓ ஞானவான்களே! இவர்களால் நான் ஜெயிக்கப்பட்டேனா? ஜெயிக்கப்படவில்லையா? இதைத் தருமத்திற்கு ஒத்தபடி சொல்லுங்கள் என்று சொல்லி வியசனாக்கினியிலும் இரட்டித்த கோபாக்கினியைப் பொருந்தி யிருக்குந் தன் கணவரை, வெகு தீக்ஷண்யமாகிய கடைக்கண்ணினால் நோக்கினாள். அந்நோக்கம் பட்ட மாத்திரத்திலே பாண்டவர்களுக்கும் இராச்சிய முதலாகிய செல்வங்களைப் போக்கடித்த போதும் உண்டாகாத மகா துக்கமொன்று பொங்கிப் பாயவே, நெய்யாகுதி செய்யப்பட்டதுபோற் கோபாக்கினியானது திகுதிகென்று சொலித்தது. அப்போது துர்ச்சாதனன் இவள் நோக்கிய குறிப்பும் அவர்கள் வெகுண்ட நெறிப்புமறிந்து திரௌபதியைச் சீ! வாடி வெள்ளாட்டி. தருமமும், சத்தியமும் உனக்கேது? என்னமோ மயக்குகிறாய் வாடி இங்கே என்று பிடித்திழுத்துக் கல்லென்று சிரித்தான். அப்போது கர்ணன், அடா துர்ச்சாதனா! சரி, சரி; நன்றாய்ச் செய்தாய் என்றான். சகுனியானவன் இவனுக்குச் சமானமாகிய தைரியசாலி கிடையாது. இவனே புத்திசாலியென்றான். துரியோதனன், துர்ச்சாதனா! இப்போதுதான் நீ எனக்குத் தம்பி யென்று மெச்சினேன் என்றான். குருடன் முகமலர்ச்சியோடு புன்னகை கொண்டிருந்தான். மற்றையரெல்லாரும் விசனக்கடலில் ஆழ்ந்து போனார்கள். இப்படி யிருக்கையில், வீஷ்மர் திரௌபதியைப் பார்த்து, அம்மா சௌபாக்கியவதியாகிய பெண்ணரசே! நாங்கள் ஒன்றுஞ் சொல்லமாட்டாதவர்களா யிருக்கிறோம். இப்போது நீ கேட்ட வினாவுக்குத் தரும சூக்ஷுமத்தை நோக்கி ஒன்றுஞ் சொல்லக் கூடவில்லை. அதென்னவென்றால், ஸ்திரீயாய் இருக்கிறவள் தற்சுதந்தரையாகாமற் பர்த்தாவுக்குச் சொத்தாயிருக்கிறாள். அந்தப் பர்த்தா ஜெயிக்கப்பட்டபோதே அவளுஞ் ஜெயிக்கப்பட்டவள்தான். உதிஷ்டிரனோ எதைத் துறந்தாலுந் தருமத்தைத் துறக்காதவன். அவனே நான் ஜெயிக்கப்பட்டே னென்கிறபோதே நீயும் ஜெயிக்கப்பட்டவள்தான். ஆகிலும் இன்னமும் அதில் ஓர் சூக்ஷும மிருக்கிறது. அஃதெனக்கு இப்போது தோற்றவில்லை. ஆனபடியினாலேதான் ஒன்றுஞ் சொல்லாம லிருக்கிறேன் என்று சொன்னார். அப்படி சொல்லக் கேட்ட திரௌபதி சொல்லுகிறாள்:

கேளுங்கள் சபையிலிருக்கும் பெரியோர்களே! உதிஷ்டிர மகாராஜா வலுவில் வந்து சூதாடவில்லை. அவர் பாட்டுக்கவர் இராச்சியத்தி லிருந்து தரும பரிபாலனம் பண்ணிக் கொண் டிருக்கையில், அவருடைய செல்வங்களை கவரவேண்டுமென்று துஷ்டரும், வஞ்சகரும், அசத்தியவான்களுமாகிய இவர்களெல்லாந் துராலோசனை செய்து, மந்திரியைக் கொண்டு அழைப்பித்து, சூதாடுவதில் இஷ்டமில்லாதவரும் அதிற் சாமர்த்திய மில்லாதவருமாகிய அந்தத் தருமராஜாவை வலுவிலாட வைத்து, மோசத்தினாற் சகலத்தையும் அபகரித்து, மனமறிய அன்னியாயஞ் செய்தார்கள். அவருக்கோ சூதாடல் நன்றாய்த் தெரியாது; இப்பாவிகளோ? அதில் வல்லவர்கள். அவரோ கபடில்லாதவர். இவர்களோ கபட்டின் அவதாரங்கள். அவரோ சத்தியசந்தர். இவர்களோ பொய் பேசுகிறவர்கள். அவரோ அவ்வாட்டத்தில் விருப்பமில்லாதவர். இவர்களோ அவ்விருப்பமுள்ளவர்கள். இப்படி ஒரு தன்மையாலும் பொருத்தம் இல்லாம லிருக்க, அவரோடு இவர்கள் சூதாடியது நியாயமா? இப்படிப்பட்ட நியாயத்தை உலகம் ஒப்புக்கொள்ளுமா? தருமந் தா னேற்குமா? போகட்டும். பொருள்களையும் ராச்சியத்தையும் பறித்தது போதாமல், அப்பொருள் முதலியவற்றை வைத்தாடிய அவரையும் ஆடி வெற்றி கொண்டோமென்று

சொல்லி இப்படிப்பட்ட கொடிய அனியாயஞ் செய்கிறார்களே இதுவுந் தருமந்தானா? இது மனித ரொருவரு மில்லாத காடல்லவே. சகல தருமங்களையும் நியாயங்களையு மறிந்த பெரியோர்களின் சபையல்லவோ. இத்தன்மையான சபையில் தருமாதருமமும் - நியாயாநியாயமும் - தேறாமற்போனால், மற்றெங்கே தான் தேறும். இங்கே இருக்கிறபேர்க ளெல்லாம் மக்களைப் பெற்றுப் பெண்டீரோடு கூடி எல்லாச் சுக துக்கங்களையும் அறிந்தவர்களே யன்றி, ஒன்றுந் தெரியாதவர்களல்லவே. இப்படிக்கு இருக்கிறபடியினாலே என் கேள்விக்கு உத்தரவு கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் இச் சபையாருக்கும் பெரும் பாவம் வரும். இவ்விஷயத்திற் பெரியோர்கள் சொல்லிய சாத்திரத்தைக் கேளுங்கள். எந்தச் சபையில் அறிவினால் முதிர்ந்தவர்க ளில்லையோ அது சபையன்று. எவர்கள் தருமத்தைச் சொல்லாமல் இருப்பார்களோ அவர்கள் அறிவினால் முதிர்ந்தவர்களல்லர். எதில் சத்தியமென்ப தில்லையோ அது தருமமன்று. எது மோசத்தோடு கூடியதோ அது சத்திய மல்ல. இந்த வசனத்தின்படி யான் கேட்ட தரும விசாரணைக்கு மறுமொழி சொல்லாமற் போனால், இது சபையுமல்ல. இவர்கள் பெரியோர்களுமல்ல. நடந்த சரித்திரந் தருமமுஞ் சத்தியமு மூள்ளதல்ல. ஆதலால், காரணத்தை நன்றாய்ச் சோதித்து, தாக்ஷணியப்படாமலும் பயப்படாமலும், தருமத்தையும் சத்தியத்தையும் நோக்கி, உத்தரஞ் சொல்லுங்கள் என்று பாஞ்சாலி சொல்லிக்கொண்டே மீண்டுங் கடைக்கண்ணினால் கணவரை நோக்கினாள்.

### வீமசேனன் தருமராஜனை வெறுக்க அருச்சுனன் தேற்றுதல்

இஃதிப்படியிருக்க, நாசமடையப்போகிற வனாகிய துர்ச்சாதனன் யாவரும் செவிகளை மூடிக்கொள்ளத் தக்கதான கொடுஞ் சொற்களைச் சொன்னான். இழுக்கிறதும் அடிக்கிறதுமாக வெகு தொந்தரவுகளையுஞ் செய்தான். இப்படிக்கு வெகுவிதமாய் அவமானப்படாநின்ற திரௌபதியைப் பார்த்த வீமசேனனவன் மனஞ் சகிக்காமல், அண்டபடாத விசனத்தையுங் கோபத்தையு மடைந்து, சமீபத்தி லிருக்குந் தமயனாரைப் பார்த்துப் பெருமூச்செறிந்து, உதடு துடிக்கச் சொல்லுகிறான்: ஓ அண்ணா! நீர் எல்லாந் தெரிந்தவராயிருந்தும் மூடருடன்கூடி செய்யாத செய்கைகளைச் செய்தீர். லோகத்திலே சூதாடுகிறவர்கள் வெகு பேர்களுண்டு. அவர்களெல்லாம் பொருள்-இரத்தினம்-வாகனம் முதலானவைகளை வைத்தாடுவார்களே யல்லது, தங்களுடைய தாசி தாசர்களைக்கூட வைத்தாடமாட்டார்கள். அவர்களுக்கு அடுத்தவர்களாகிய தாசி தாசரிடத்திலிருக்கிற அவ்வளவு மானமுந், தயையும், பாணிக்கிரகணஞ்செய்த பத்தினியிடத்தில் உமக்கில்லாமற் போச்சுது. கொண்ட பெண்டாட்டியைப் பந்தயம் வைத்தாடியதைக் கண்ணினாற் பார்த்ததுமில்லை. காதினாற் கேட்டதுமில்லை. நாம் திக்குவிஜயஞ்செய்துசேகரித்துவந்த பொருட்கு அவைகளையும், பல அரசர் காணிக்கையாய்க் கொடுத்த திரவியங்கள் - ரத்தினங்கள் - வஸ்திரங்கள் - உபகரணங்கள் - வாகனங்கள் முதலானவைகளையும், கோட்டை - வீடு-வாசல்-தோட்டம்-சபை முதலியவைகளையும் பந்தயம் வைத்துத் தோற்றீர். அதனாலே எனக்கு எவ்வளவும் விசனமில்லை. ஏனென்றால், இப்படி அநேகம் பொருள்களை நினைத்தபோதே சம்பாதிக்கலாம். எங்களைத் தோற்றதனாலுந் துக்கமில்லை. நாங்களோ சூரர். இராஜாதிராஜராகிய உம்மைத் தோற்றதற்குக் கிஞ்சித்து விசனப்படவேண்டுவதா யிருக்கிறது.

இவையெல்லா மிருக்கட்டும். திரௌபதியானவள் ஸ்திரீ சாதி. மகா ராஜகுமாரி. நம்மைக் கைப்பிடித்தவள். நம்மையே நம்பினவள். அப்படிப்பட்டவளை இந்தப்பாதகர்கையிலொப்புவித்தீரே, இதைக் குறித்து உமக்குக் காலபலத்திற் புத்திகெட்டதென்று நினைக்க வேண்டி யிருக்கிறது. அவர்கள் நமது உயிரினுஞ் சிறந்தவளாகிய பாஞ்சாலியை வேண்டியபடி மானபங்கஞ் செய்யவும், நாம் எதிரிற் சும்மா பார்த்திருக்கவும், பெரியோர்களெல்லாம் வருந்தி எதுவும் பேசாமற் சும்மாயிருக்க நேரிட்டதைக் காட்டிலும் நமக்கு வேறு துக்கமுண்டோ? நீர் மகாராஜா. சகலத்திற்குஞ் சுதந்தரர். எந்தச் செர்த்தை எப்படி செய்யவேண்டுமானாலுந் தடுப்பார் யாருமில்லை. ஆகிலும் நெடுநாளாய் வேள்விக்கு உபயோகப்பட வைத்திருந்த நல்ல பசுக் கோவதை செய்யுஞ் சண்டாளர் கையில் ஒப்புவித்ததுபோல், இவளை அவர்களிடத்தில் ஒப்புவித்தது மிகுந்த அதருமம். நீர் இப்போது செய்த காரியமெல்லாம் பாதகத்திற்குக் காரணமாகிய காரியமேயன்றி நற்செய்கை

யன்று. நீர் தருமமறிந்தவருமன்று. திரௌபதியைக் கண்ணெடுத்துப் பார்த்த நிமிஷத்திலேயே அந்தப் பாதகரைக் கையிலேந்திய கதாயுதத்தினாலே இருந்தவிடந் தெரியாமற் போகும்படி செய்வேன். என்னைப் பராதீனனாக்கிவிட்டீர். என் கோபத்தையும், பராக்கிரமத்தையும் இந்தச் சபையில் உபயோகமாகாதபடிபாழாக்கினீர். ஆகிலுஞ் சகிக்கக்கூடவில்லை. இப்போதென்ன செய்யவேண்டு மென்றால், நீர் எந்தக் கையினாலே பாச்சிகை யாடினீரோ அந்தக் கையைத் தீயிற் கொளுத்திச் சாம்பராக்கவேண்டு மென்று சொல்லிக் கோபாவேசங் கொண்டு, சகாதேவனை நோக்கி, ஓ சகாதேவா! நீ இப்போதே போய் நெருப்பு கொண்டு வா; இந்தக் கெட்டக் கையைக் கொளுத்திப்போடுகிறேன் என்று திரஸ்காரமாய்ச் சொன்னான்.

அது கேட்ட அர்ச்சுனன் வீமசேனனைப் பார்த்து, அண்ணா! நீ ஏன் கொஞ்சமும் யோசிக்காமல் மகாராஜாவையும் நமக்கு மூத்தவராயும் மகா தரும சீலராகியுமிருக்கிற உதிஷ்டிரரைக் குறித்துக் கொடுமையாய்ப் பேசுகிறாய்? ஒருபோதும் நீ இப்படி சொன்னதில்லையே, இப்போதும் உன்மீதிற் குற்றமில்லை. நமக்குள்ளே ஒருவருக்கொருவர் பகையாக வேண்டுமென்று சத்துருக்கள் உனக்கிப்படிப்பட்ட கோபம் வரும்படி செய்ததினாலே, நீ அதின்படி நிறைவேற்ற முயன்றாய். ஏதேது வரவேண்டுமோ அதெல்லாம் வந்து தானே தீரும். ஆகிலும், நீ பத்றிச் சத்துருக்களின் எண்ணத்தை நிறைவேற்றாதே. தருமத்தின் மீதில் திருஷ்டி வைத்து இனியாகிலும் வாயை மூடு. இதைக் கேட்டால் நமது பகைவர் நகைப்பார்கள். மகானுபாவராகிய தமையனாரைத் திரஸ்காரஞ் செய்யாதே. இந்தத் துஷ்டர் வெகு தருமசீலருஞ் சத்தியசந்தனருமாகிய நமது தமயனாரை வலுவிற் சூதாட அழைத்து மோசஞ் செய்து எல்லாவற்றையும் பறித்துக் கொண்டார்கள். இதனாலே நமக்கு அவமானமில்லை. கையிலாகாமற் பறிகொடுத்தால் அதுதான் அவமானமாகும். இவர் தருமசிந்தையுஞ் சத்தியத்தையும் பெரிதாய் எண்ணி சகலத்தையும் பொறுத்துக்கொண்டிருக்கிறார். இது இவருக்கு மகா மகிமைக்கு இடமாகியது. நாமும் அப்படியே அவரை அனுவர்த்தித்து இருக்கவேண்டுமே யல்லது, மீறலாகாது என்று சொன்னான். பின்பு வீமன் அர்ச்சுனனைப் பார்த்து, நீ சொல்லியதெல்லாஞ் சரிதான்; எனக்குந் தெரியும். ஆனாலும், திரௌபதியைப் பந்தயம் வைத்து ஆடிய கைகள் சுட்டதக்கவையே யல்லது, பூசிக்கத் தக்கவையல்ல வென்கிற கருத்தைக் கொண்டு இப்படி சொன்னேன் என்று சொன்னான்.

## திரௌபதிக்காக விகர்னன் பேசக் கர்னன் சினைத்தல்

இஃதிப்படி யிருக்குமளவில், சபையை நோக்கித் தருமத்தைவினவுந் திரௌபதியை நீசனாகிய துர்ச்சாதனன் கொடுமையாய்ப்பற்றி இழுத்துக்கொண்டு போகிறதும், சபையார் ஒன்றுஞ் சொல்லாமல் இருக்கிறதும் பார்த்து, திரிதராஷ்டிரன் புத்திரரில் ஒருவனாகிய விகர்னனென்பவன் வெகு கோபங்கொண்டு சபையிலிருக்கும் வீஷ்மர் முதலாகிய பெரியோர்களைப் பார்த்து, மிகவும் பரிதாபத்தோடு இதனைச் சொல்லுகிறான்: ஓ சபையாரே! நீங்கள் திரௌபதி சொல்லிய பேச்சைக் கேட்டு ஏன் பிரதியுத்திரஞ் சொல்லாமலிருக்கிறீர்கள். அவிவேகத்தினால் நீங்களுஞ் சொல்லாமல் உங்களைப் பார்த்து நாங்களும் சொல்லாமல் இருந்தால், யாவருக்கும் இப்போதே நரகம் வருமன்றோ? வீஷ்மரும் திரிதராஷ்டிரரும், புத்திமான்களும், சிறந்தவராகிய விதுரரும், மற்றக் கவுரவரும் ஒன்றும் சொல்லாமலிருக்கிற காரணமென்ன? இவர்களிருக்கட்டும். பிராமணோத்தமரும் ஆசாரியருமாகிய துரோணரும், கிருபரும் எந்தத் தாக்ஷிணியத்தினால் வாயை மூடிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களிருக்கட்டும்; பல தேசத்தரசர்களும் ஏன் வாயை மூடிக்கொண்டு இருக்கிறார்கள். இத்தனை நாழிகை சும்மாயிருந்தது போதும். இனி யாவரும் அச்சம்-அபிமானம்-தாட்சணியம்-குரோதம் முதலியவைகளை விட்டுத், தங்கள் தங்கள் புத்தியுள்ளவரைக்கும் யோசித்துதத் தமது கருத்தை வெளியிடுங்கள் என்றிப்படி பலதரம் விகர்னன் சொல்லியும், ஒருவரும்பேசாமலிருந்தார்கள். அதுகண்டு அதிக கோபங்கொண்ட அந்த விகர்னன் ஒரு கைமேல் மற்றொரு கையை வைத்தறைந்து, சபையைப் பார்த்து மறுபடி சொல்லுகிறான்.

"முறையோ வென்றன் றவனிதல முழுதுமுடையான் முடித்தேவி, நிறையோ டழிந்து வினவுநீர் நினைவுற்றிருந்தீர் நினைவற்றோ,

விறையோன் முனியுமென நினைந்தோ விரு
ந்தாலுறுதி யெடுத்தியம்பல், குறையோ கண்
கண்டது நாளுங் குலத்துப் பிறந்தோர்
கூறாரோ’ “தன்னேரில்லா நெதுத்தருமன்
றனதென்றுரைக்கத் தக்கதெல்லா, முன்னே
தோற்றுத் தங்களையு முறையே தோற்று முடி
விற்றான், சொன்னாருரைக்குத் தான் பிறர்க்
குத் தொண்டாய் விட்டுச் சுரிகுழலைப், பின்னே
தோற்க வுரிமையினாற் பொறுமோ வென்று
யேசீரோ ஓ சபையாரே! நான் இப்போது
தருமத்தைக் கேட்டால் நீங்கள் சும்மா விருக்
கிறீர்கள். நீங்கள் இருந்தால் இருங்கள்; எனக்
குத் தோற்றியதை நான் சொல்லுகிறேன்
அதைக் கேட்பீர்களாக: உலகத்தில் அரசருக்கு
நான்கு பெருங் குற்றங்கள் உண்டு. அவையா
வன: ஓயாமற் கட்குடித்தல், ஓயாமல் வேட்டை
யாடல், ஓயாமற் சூதாடல், ஓயாமல் மங்கைய
ரைப் புணர்தல் இவைகளுக் குட்பட்டவன்
தருமா தருமங்களை யறியான். அனியாயத்
திற்கே உடன் படுவன். உலகத்தாரும் அதைப்
பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். இந்
தச் சகுனியோ எப்போதுஞ் சூதாடுந் தொழி
லுடையவன். அவனுக்கு வேறு காரியம்
ஒன்றுமில்லை. ஆனதுபற்றி, அவன் தருமத்
தைக் கொஞ்சமும் அறியான். இப்போது
அப்படியே பாண்டவர்களை வலுவிற் சூதாட
அழைத்து மோசஞ் செய்து, எல்லா செல்வங்
களையுங் கவர்ந்து கொண்டு, அவர்களையுஞ்
ஜெயித்ததாக வேற்படுத்தி விட்டான். இந்த
மோசச் செய்கையால் உண்டானதே யன்றி,
நியாயப்படி உண்டானதல்ல. ஈதிப்படியிருக்க,
இவ்வளவோடே நிற்காமற் பாஞ்சாலியை
வைத்து ஆடச் சொல்லி அவருக்குப் போதி
த்து, அவளையுஞ் ஜெயித்ததாய்ப் பராக்கிர
மித்தான். அவரோ அச்சூதில் வெறி பிடித்து
அவன் மோசத்திற் குட்பட்டுத் தருமமா யாடி
னார். மற்றவை யெல்லாமிருக்கட்டும்; திரௌ
பதியைப் பந்தயம்வைக்க அவருக்கு அதிகார
மில்லை. அவர் முன்னமே தம்மைத் தோற்றார்.
ஆகையால், அவளை ஜெயித்தேன் என்றது
சத்தியமன்று. இச்சபையில் ஒற்றை யாடை
யோடிருக்கிற அவளை அன்னியாயமாயிழுத்து
வந்தது தருமமன்று என்று சொல்லிச் சும்மா
விருந்தான்.

அதுகேட்டுச் சபையில் இருப்பவர்கள்
விகர்ணன் சொல்லியது சரிதான் என்று அவ
னைத் துதித்துச் சகுனியைத் தூஷித்தார்கள்.
அப்போது சிலநேரஞ் சபையானது ஒலி
வடிவா யிருந்தது. அந்தக் கோஷ மோய்ந்த
பின், கர்னன் விகர்னனை நோக்கிச் சொல்லு
கிறான்: அடா விகர்ணா! உனக்கு எப்போதும்
இப்படிப்பட்ட வெறிகுண முள்ளதுதானே
இன்றைக்குப் புதிதல்லவே தேகத்தி லிருக்கும்
நோயானது அந்தத் தேகத்தின்கணுள்ள
ஆத்துமாவுக்குத் துக்கமுண்டாகும்படி செய்
வதுபோல், நீ கூடப்பிறந்தவனாகிய துரியோ
தனனுக்குக் கேடுவரும்படி யத்தனிக்கிறாய்.
மேலும், அந்த வியாதி தேகத்தினின்றுமே
பிறந்து அதை யழிப்பது போலவும், அரணி
யத்தினின்றும் பிறந்தவனல், அவ்வரணியத்
தை யழிப்பது போலவும் நீ திரிதராஷ்டிர
ருக்குப் புத்திரனாயிருந்து அவரைத் துக்கக்
கடலி லமிழ்த்த முயலுகிறாய். உனது கெட்ட
சுபாவத்தையே காட்டுகிறாய். வீஷ்மர்-துரோ
ணர்-கிருபர்-அஸ்வத்தாமா-பாகிலிகர் - சோம
தத்தர்-பூரிச்சிரவர்-பூரி-விதுரர்-திரிதராஷ்டி
ரர்-காந்தாரி முதலாகிய தருமவான்களனேகர்
இச்சபையி லிருக்கிறார்கள். அவர்களெல்லாம்
அறியாத தருமத்தையா நீ யறிந்திருக்கிறாய்?
அவர்களுக்கெல்லா மில்லாத நற்குணமுனக்
கிருக்கிறதா? அவர்களை யன்றோ திரௌபதி
வினாவினாள். அவர்களே விடைதராமலிருக்க,
நீரேன் சொல்லப்புறப்பட்டாய்? அவர்களெல்
லாந் திரௌபதி தருமமாய் ஜெயிக்கப்பட்டா
ளென்று சொல்லியு மிருக்க, நீ வேறாய்ச்
சொன்னாயே உனக்கென்ன தெரியும்? நீ சிறு
வன் ஆனபடியினாலேதான் பெரியோர்களுக்கு
முன் கூச்சமின்றி தருமத்தை அதருமமென்று
சொல்லுகிறாய்.

அன்றியும், உதிஷ்டிரர் மனமொப்பி
வைத்த பந்தயங்கள் யாவையுஞ் ஜெயித்தது
போலவே இந்தத் திரௌபதியையுஞ் சகுனி
ஜெயித்தான். யாவரும் பார்த்துக்கொண்டு
தானே யிருக்கிறார்கள். பாண்டவர்களும் ஒப்
புக்கொண்டுதானே யிருந்தார்கள். இப்படி
யிருக்க, உனக்குமாத்திரம் அவள் ஜெயிக்கப்
படவில்லை யென்றும், அது அனியாயமென்
றும் எப்படி தோன்றிற்று? ஒற்றையாடையோ
டிருப்பவளைச் சபையில் இழுத்து அவமானஞ்
செய்வது அனியாயமென்றாய், அதைக் குறித்
துச் சொல்லுகிறேன் கேள்: கடவுளானவர்
பெண்களுக்குப் பர்த்தாவே தெய்வமென்று
நிருமித்து, ஒருத்திக்கு ஒரு பர்த்தாவா யிருக்
கும்படி கட்டளையிட்டிருக்கிறார். அதன்படி

உலகத்திற் சகல பெண்களும் ஒரு புருஷனை யே யடைந்திருக்கிறார்கள். மற்றொருவனைக் கண்ணினாற் பார்த்தாலும் விபசார தோஷ முண்டு. அப்படியிருக்க, இந்தத் திரௌபதி ஐவரைப் புணருகிறாள். இப்பேர்ப்பட்டவ ளுக்குத் தருமமெங்கே யிருக்கிறது. வேசிபோ லாகி வருடத்திற்கொரு வைப்பாளனோடு இருக்கப்பட்டவள் ஐவரைச்சேர்ந்தாலென்ன ஐம்பதுபேரைப் புணர்ந்தாலென்ன எப்படியு மிவள் பொதுமாதுதான். இவளைச் சபையில் வரவழைப்பது குற்றமன்று. மேலும், இவ ளுடையபர்த்தாக்களும்நம்மால் ஜெயிக்கப்பட் டார்கள். அதனாலேயே இவளும் ஜெயிக்கப் பட்டாள். தனியாகவும் நமக்கடிமையானாள். இந்த வெள்ளாட்டியைக் குறித்துத் தருமா தருமங்களை விசாரிப்ப துண்டோ? இவள் ஒரு வஸ்திரந் தரித்திருந்தாலுஞ் சரிதான். நிர்வாணமா யிருந்தாலுஞ் சரிதான். இவளை எது வேண்டுமோ அது செய்யலாம். இதிலெவ்வளவேனும் பாவமில்லை என்று சொல்லித் துர்ச்சாதனனை நோக்கி, அப்பா துர்ச்சாதனா! இந்த விகர்னன் என்றைக்கும் இப்படிதான் பிதற்றுவன். இவன் பேச்சைக் கேட்பாரில்லை. இப்போது நீ பாண்டவர் தரித் திருக்கும் வஸ்திரத்தையும், திரௌபதி தரித் திருக்கும் வஸ்திரத்தையும் உரி யென்றான்.

துர்ச்சாதனன் திரௌபதியின் துகிலுரிதல்

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அதைக் கேட்ட மாத்திரத்திலே அத்துர்ச்சாதனனென் னும் மகா பாதகன் செய்யப்புகுந்த கொடுமை களைச் சொல்ல எனக்கு நாவெழவில்லை. ஆகி லும் சொல்லவெடுத்த சரித்திரத்தைச் சோர்வு படாமற் கூறவேண்டிய நியதியைப்பற்றி மகா பதிவிரதையின் மகத்துவத்தையும் ஸ்ரீ வேதவியாச மூர்த்தியினுடைய திருவடியை யும் சிந்தித்துச் சொல்லுகிறேன் கேளும்: பாண்டவர்கள் கர்னன் கூறி யனுப்பிய வார்த் தையையும், அதற்குத் தக்கபடி துரியோதன னியரிற் சில துஷ்டர்கள் கொண்டிருக்கிறகருத் தையும் அறிந்து கொண்டவர்களாய், உடனே தாங்கள் உடுத்திக்கொண்டிருந்த வஸ்திரங் களைக் களைந்து எறிந்துவிட்டார்கள். இப்பால் நிகிட்ட சிரோமணியாகிய துர்ச்சாதனனஞ்சா மல், திரௌபதியின் துகிலையுரிய வாரம்பித் தான். அப்போது அந்தத் திரௌபதி தனது கையாற் கலையைப்பற்றிக்கொண்டு, அளவற்ற விசனத்தை யடைந்து, கண்ணீர் சொரிந்து, தன் மனதைத் தானே தேற்றிக்கொண்டு ஒன்று சொன்னாள்: ஓ மனமே! முன்னே வசி ஷ்டர் சொல்லிய வாக்கியமொன்றைப் பெரி யோரிடத்திற் கேட்டிருக்கின்றேன். அஃதெ ன்னவெனில், மனிதர்களுக்கு எப்படிப்பட்ட ஆபத்துகள் நேரிட்டாலும் பகவானாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவைச் சிந்தித்தால் அப்பாப த்தை நீக்கி காப்பாற்றுவர். மற்றொருவராலும் ஆகா தென்பதுதான். அஃதிப்போது எனது நினைவுக்கு வந்தது. ஆதலாலே, அப்படியே செய்கிறேன். மற்றபடி இப்பந்துக்கள் பர்த் தாக்கள் முதலானோரால் இனி நடக்கப்போ கிற தருமம் ஒன்றுமில்லை என்று சொல்லி அந்தத் திருமகள் கேள்வனாகிய ஸ்ரீ கிருஷ் ணனுடைய திருவடித் தாமரைகளை நினைத் துத் துதிப்பதாயினாள்.

ஓ ஸ்ரீகிருஷ்ணா! ஓ கோவிந்தா! ஓ நாரா யணா! ஓ ஆபத்தென்று வந்து சரணம் புகுந் தோருக்கு அபயங் கொடுப்பவனே! ஓ சகல லோகங்களுக்குஞ் சிருட்டிக் கர்த்தாவாகிய சதுர்முகன் றந்தையே! ஓ சர்வேஷ்வரா! செந்தாமரைக்கண்ணா! இப்போது என் பர்த் தாக்களும், வீஷ்மா-துரோணர் முதலானோர் களும், மற்றுமெவர்களும் என் மனங்காக்க சக்தியில்லாதவர்களா யிருக்கிறார்கள். யாவை யுந் துறந்தேன். உம்மையேசரண்புகுந்தேன். நீரல்லது வேறுகதியில்லை. யாவருக்கும் நீரே ரட்சகர். உமது திருவடிகளைப் பற்றினோர்க்கு விரோதஞ் செய்கிற பேர்களைத் துணிப்பேன் என்று தீட்சை வகித்து, சங்கம் - சக்கரம் கதை முதலாகிய ஆயுதங்களோடு துவாரகா புரியில் எழுந்தருளியிருக்குங் கடவுள் நீரன் றோ? ஓ என்றும் மழிவில்லாத மகாநுபாவா! ஓ பிரமன் முதலானோர்களுக்கும் ஆபத்து வந்தபொழுது அசுரரைக் காய்ந்து வேதமுத லாகியவைகளை நிலைநிறுத்திக் காத்த பக வானே! ஓ மெய்க் கடவுளே! உமது திருவடி களையே நம்பிய அடியாளைக் காத்தருளும். ஐயோ! இந்தக் கொடிய பாவியினால் மானபங் கஞ் செய்யப்படுகிறேன். ஓ சுவாமி! ஓ துவார கையைப் பரிபாலிக்கும் கருணைக்கட லே! ஓ யாதவகுல சிகாமணி! தேவரீர் எங்கே யிருக்கிறீர்? நின்னடியாளாகிய யான் இப் படிப்பட்ட அவஸ்தையில் துயரப்படவிட்டு உபேட்சை செய்வது நியாயமோ? இராஜ சிங்கம்போன்ற நீர் எனக்கு நாதனா யிருக்க, என்னை நாதனற்றவளாகவெண்ணி இந்தப்

பாதகன் கவுரவர் முதலானோருக்கு முன்னிலையில் என் வஸ்திரத்தை யிழுக்கிறானே? இவ்வாபத்தினின்று மென்னைக் காத்தருள வேண்டாமோ? ஓ கிருஷ்ணா! என்று அப்பகவானை சகஸ்த்ர நாமங்களாலும் மனோவாக்குக் காயங்க ளொருமித்துத் துதித்துப் பணிந்து கூவினாள்.

அப்போது நமதடியாளுக்கு நேரிட்ட துயரத்தை நீக்கவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது கருணையென்னுங் கடலினலைகள்போன்ற திவ்விய வஸ்திரங்களை அவளிடையில் நிருமாணஞ் செய்தருளினார். அது தெரிந்தவுடனே திரௌபதியானவள் வஸ்திரத்தைப் பிடித்திருந்த கையையுந் தேகாபிமானத்தையும் விட்டு, ஸ்ரீ கிருஷ்ணனையே துதித்துக்கொண் டிருந்தாள். அதுகண்ட துர்ச்சாதனன் இனிச் சுலபமாய் இவள் துகிலையுரியலாமென்று நினைத்து விவேகிகளாயினோர் தங்கள் வல்வினைகள் நீங்கிச் சுவர்க்காதி போகங்களடைய வேண்டித் தேவாலயத்தை எவ்வாறு பலமுறை சுற்றிச் சுற்றிவலம் வருவார்களோ அவ்வாறு இம் மகாபாதகனுந் தனது நல்வினைகள் நீங்கி நரகாதி போகங்களை யடையவேண்டித் திரௌபதாதேவியை வலம் வருவதுபோற் சுற்றிச் சுற்றி மகா அட்டகாசத்தோடு துயிலை யுரியலானான். அவ்வாறுரிய வுரிய அவ்வஸ்திரத்தினுள்ளே மற்றோர் வஸ்திரங் காண, அதையுங் களைய, மறுபடியு மொன்று தோன்ற, இதுவுமொரு லாபந்தானென்று நினைத்துச் சந்தோஷத்தோடு அதையு மவிழ்க்க, இப்படிக்கு அவிழ்க்குந்தோறும் பற்பல வண்ணமாய் ஒருவரும் ஒருநாளும் கண்டறியாதவையாய் அங்கிருந்த யாவராலும் ஆச்சரியப்படத் தக்கதானதாயிரானின்ற பல வஸ்திரங்கள் அவளிடையிற் றொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தன. இவ்விதமாய் ஓய்வில்லாமல் உண்டாகிய வஸ்திரங்களை எல்லாந் துன்மார்க்க சிரோமணியாகிய துர்ச்சாதனன் உரிந்துரிந்து, மலை மலையாய்க் குவித்துக் கைசோர்ந்து பெருமூச்சுவிட்டு வெட்கப்பட்டு முகங் குன்றிச் சும்மா நின்றுவிட்டான். அப்போது சபையிலிருந்த வீஷ்மர் துரோணர் முதலிய பெரியோர்களும், ஆசாரியர்களும், பின்னு மூண்டான விதுர ராஜன் முதலிய சில மன்னவருஞ் சரீர மெல்லாம் நடுக்குற்று நாவறண்டு, கண்களில் நீர் சோர இரு கரங்களையுஞ் சிரமேற் கூப்பிக் கொண்டு ஓ! ஓ! துரியோதனன் செய்வது மிகுந்த அனியாயம்! அனியாயம்!! ஐயையோ!!! திரிலோகத்திலுங் கற்பென்று சொல்லும்படியான மேலான பொருளுக்கும் இக் குருவமிசத்திற்கும், இந்தப் பதிவிரதா சிரோமணியே தெய்வம். இதற்கு எவ்வளவுஞ் சந்தேகமில்லை. சீ! சீ! இப் பாவிகட்கு ஏதோ பழுது படுங்காலஞ் சம்பவித்திருக்கிறதென்று சொல்லி வருத்தப்பட்டார்கள். இவ் வற்புதத்தை அந்த ரத்தினின்றுங் கண்டுகொண்டிருந்த தேவர்களெல்லாம் ஆகாய துந்துமி வலம்புரிச்சங்கு முதலியவைகளை முழங்கி, கற்பகத்தினளாகிய இத் திரௌபதியின்மீது கற்பகத்தினது மலர்களை வாரிவாரி இறைத்தார்கள். அப்போது அச் சபையில் ஒரு பெருங் கூச்சலுண்டாகத் தலைப்பட்டது.

### விதுரராஜன் விரோசனனுக்கும் சுதனுவாவுக்கும் நடந்த சம்வாதங் கூறல்.

இப்படி யிருக்க, விதுரனனவன் யாவரையுங் கூச்சற் போடாமல் நிறுத்தி ஒன்று சொல்லுகிறான்: ஓ சபையிலிருக்கும் புண்ணிய புருஷர்களே! நமக்கெல்லாங் கட்டளையிடத் தக்கவளாகிய திரௌபதி சில யோக்கியர் இச் சபையில் இருக்கிறார்களென்றும், தருமங்களை யறிவார்களென்றும், பக்ஷபாதமின்றி நடுவு நிலை சொல்லுவார்களென்றும் நினைத்து, ஒரு பிரசனங் கேட்டாயே அந்தக் கேள்வி ஜொலித்துக்கொண் டிருக்கும் அக்கினியென்று நினைக்கத்தக்கது. அது உங்கள்மீதில் விழுந்திருக்கிறது. அதை அவிக்காமற்போனாற் சமூலமாய்த் தும்சம் பண்ணும் அதைச் சத்திய வாக்கென்னுந் தண்ணீராலன்றோ அவிக்க வேண்டும். அப்படி செய்யாமற் சும்மா யிருக்கின்றீர்களே? நீங்கள் எப்படி தருமவான்களாவீர்கள்? மனு சொல்லியபடிக்குத் தருமமறிந்த பெரியோர்களை ஒருவன் தரும சந்தேகங் கேட்டு அதற்கவர் விடை தராமல் இருந்தால் பொய் சொல்லுவோனுக்குண்டாகும் பாவத்திற் பாதி பெறுவார்கள். யதார்த்தஞ் சொல்லாமற் போவார்களேயாகில் முழுப் பாவத்தையும் பெறுவார்கள். இதைப் பற்றியே விகர்னன் தன் புத்திக்குத் தோற்றியபடி சத்தியத்தைச் சொன்னான். அப்படிக்கு நீங்களுந் தருமத்தைச் சொல்லவேண்டும். சத்தியத்தை அனுசரிக்க வேண்டும். ஒரு வகையாலும் பட்சபாதஞ் செய்யக்கூடாது. இவ்விஷயமாய் முற்காலத்தில் பிரகலாத புத்

திரனாகிய விரோசனனுக்கும் சுதன்னுவா வென்பவனுக்கும் நடந்த சம்வாதத்தைப்பற்றிய சரித்திர மொன்று நடந்திருக்கிறதென்று பெரியோர்கள் இடத்திற் கேட்டிருக்கிறேன். அதைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சபையாரை நோக்கிச் சொல்லுகிறான் விதுர மகாராஜன்.

ஓ சபையார்களே! பிரகலாதன் புத்திரனாகிய விரோசனனும் சுதனுவாவென்னும் பிராமணனும் ஒரு ஸ்திரீயினிமித்தம் நீ பெரியவனா? நான் பெரியவனா? என்று விதாப்பட்டு, நமக்குள் யார் பெரியவனோ அவனுக்கு மற்றொருவன் தன்னுயிரைக் கொடுத்துவிட வேண்டுமென்று பந்தயம் போட்டுக்கொண்டு, இதைக் குறித்து யாரை வினவுவோமென்றார்கள். அதற்குச் சுதனுவாவானவன் பிரகலாதரையே வினவுவோம் அவர் சத்தியசந்தர் அவர் சொல்லுவதே நம் இருவருக்கு மொப்பென்றான். அதை விரோசனன் ஒப்புக் கொண்டபடியினாலே இருவரும் பிரகலாதனிடத்திற்குப் போய், வாரீர் பிரகலாதரே! எங்களிருவரில் யார் பெரியவன்? அதை நீர் சொல்லவேண்டு மென்றார்கள். அதைக் கேட்ட பிரகலாதன் பயத்தையடைந்து, சுதனுவாவின் முகத்தைச் சும்மா பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது அந்தப் பிரகலாதனைச் சுதன்னுவாவென்பவன் பார்த்து, ஓய் பிரகலாதரே! நீர் இப்போது பட்சபாதஞ் சொன்னாலும் ஒன்றும் சொல்லாமற் சும்மாவிருந்தாலும், உமது சிரம் ஆயிரஞ் சுக்கலாய் வெடிக்கும் என்றான். அவன் இதையெல்லாருங் கேட்டுப் பெருங்காற்றில் ஆடும் அரசிலைபோல் தேகமெல்லாம் நடுக்கமுற்று இவ்விஷயத்தைக் குறித்துக் கசியப் பிரஜாபதியைக் கேட்கவேண்டுமென்று அவரிடத்திற்குப் போய், அவரைப் பார்த்துச் சொல்லுகிறான்: சுவாமி காசிபரே! தேவரீர் சகலமானபேருக்கும் குருவாயிருக்கிறீர். எல்லாத் தருமங்களையும் அறிந்தவர் ஆகையாலே தேவரீரை அடியேன் ஒரு சந்தேகங் கேட்கிறேன். ஒருவன் கேட்ட வினாவிற்கு மெய்யாய் விடைதராமற் போவதினால் எந்த உலகங் கிடைக்கும்? விடைதராது சும்மாவிருந்தால் எந்த உலகங் கிடைக்கும்? அதை அடியேனுக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்று வினவியதைக் கேட்ட காசிபப் பிரஜாபதியானவர் சொல்லுகிறார்:



வாரீர் பிரகலாதரே! சபையிலானாலும் மற்றொரு விடத்திலானாலுந் தருமந் தெரிந்திருக்க எவன் கேட்டவனுக்குத் தருமஞ்சொல்லாமலிருக்கிறானோ அவன் வருண பாசங்களில் ஆயிரம் வருஷங்களால் தன்னாத்துமாவால் கட்டுண்ணச் செய்கிறான். பயம்-பக்ஷபாதம் முதலிய எந்தக் காரணங்களினாலாகிலுஞ் சரியே அந்தப் பாசங்களினாற் கட்டுண்டே தீரவேண்டும். ஆனால், அவைகளை நிவர்த்தி செய்துகொள்ள நினைப்பவனுக்குச் சாஸ்திரஞானிகள் ஒரு பிராயச்சித்த மேற்படுத்தியிருக்கிறார்கள். அதென்னவென்றால், கோகர்ணசிதிலம் என்றொரு விரதமுண்டு. அதை யொருவரனுட்டித்தால் அந்தப் பாசங்களிலொன்று நீங்கும். ஆகையாலே, அவ்விரதத்தை ஆயிரம் வருடம் அனுட்டிக்கவேண்டும். சத்தியத்தைச் சொல்லாமற்போனால் இதிலிரட்டிப்பாய்ப் பாவங் கிடைக்கும். ஆனதுபற்றித் தருமத்தைக் கேட்டாற் சத்தியமாய்ச் சொல்லவேண்டும். அப்படிக்குச் சொல்லாதபோது அந்தப் பாவத்திற் பாதி அரசனையும், காற்கூறு சபையாரையும், காற்கூறு செய்தவனையுஞ் சேரும். அந்த நியாயா நியாயங்களையுந் தருமா தருமங்களையுங் கண்டுபிடித்து, அநியாயஞ் செய்தவனுக்குத் தகுந்த சிக்ஷை செய்தால் சபையாருக்கும் அரசனுக்கும் பாவமில்லை. அன்றியுஞ், சத்தியமாய்த் தருமஞ் சொல்லாமற் போகிறவனுக்கு அசுவமேத முதலிய யாகங்களையும், தேவாலயம்-அக்கிராரம்-தடாகம் முதலாகிய தரும காரியங்களையுங் கெடுத்தவனுக்கு எந்தப் பாவமுண்டோ அந்தப் பாவம் வருமென்று வேதத்தி லிருக்கின்றது. அப்படிப்பட்டவன் தனக்கு முன்னேழு தலைமுறைகளையும், பின்னேழு தலைமுறைகளையும் முடிவிற் றன்னையும் நரகத்திலமிழ்த்தத் தக்கவனாகிறான்.

அன்றியும், அப்படி அநியாயத்தைச் சொல்லியவன் சகல சொத்துக்களைப் பறிகொடுத்தவனுக்கும், மூத்த மகனைச் சாகக் கொடுத்தவனுக்கும், பகைவர்கையி லகப்பட்டவனுக்கும், அநியாயமாய்க் காவலிற் போடப்பட்டவனுக்கும், நல்ல பருவத்திற் கணவனையிழந்தவளுக்கும், வழக்காடிப் பொய்ச் சாக்ஷி பலத்தினால் நியாய மிழந்தவனுக்கும் உண்டாகுந் துக்கமெதுவோ அத் துக்கத்தை தடையின்றி யடைவன் என்று காசிபர் சொல்லக் கேட்ட பிரகலாதன் விரோசனனுஞ் சுதனுவாயு

மிருக்குமிடத்தில் வந்து, தனது மகனாகிய விரோசனனைப்பார்த்து, அப்பா மகனே! உன்னைக் காட்டிலுஞ் சுதனுவாவே உயர்ந்தவன். என்னைக்காட்டிலும் அவன் பிதா உயர்ந்தவர். உன் தாயைக்காட்டிலுஞ் சுதனுமாவினுடைய தாய் உயர்ந்தவள். இது சத்தியம். ஆகையாலே, உன்னுடைய உயிர் சுதனுமாவினுடையதுதான் என்று சொன்னான். இப்படிக்குப் புத்திரனென்கிற பக்ஷபாதமில்லாமற் சத்தியத்தைச் சொல்லக் கேட்ட சுதனுவானவன் வெகு சந்தோஷமடைந்து, பிரகலாதனைப் பார்த்து, ஐயா! நீர் பக்ஷபாதமின்றி சத்தியத்தைச் சொல்லியபடியால், உமக்கு உமது புத்திரனைக் கொடுத்தேனென்று சொல்லிப் போனான். ஆகையால், கேட்டீர்களோ சபையார்களே! இப்போது நீங்களுந் திரௌபதி கேட்ட வினாவுக்குத் தருமத்தை யோசித்து விடை கொடுங்கள். இல்லாவிட்டால் வருண பாசமென்பவை ஒருவரையும் ஒருக்காலும் விடாது என்று விதுரன் சொல்லியும், அச்சபையிலிருந்த பேர்களெல்லாஞ் சும்மாவிருந்தார்கள்.

## திரௌபதி சபையாரைப் பணிந்து கேட்ட சிலவற்றிற்கு வீஷ்மர் விடைதரல்

இப்படியிருக்க, கர்னன் துர்ச்சாதனனைப் பார்த்து தாசியாகிய இந்தத் திரௌபதியை மனைக்கு அழைத்துக்கொண்டு போவென்றான். அதுகேட்ட அவனுஞ் சபை நடுவிற் பிடித்திழுத்தான். அப்படி யிழுக்கும்போது திரௌபதியானவள், ஓ சபையிலிருக்கும் பெரியோர்களே! இவன் என்னை இழுத்துத் தொந்தரவு செய்தபடியினாலே இங்கே வரும்போது செய்ய வேண்டுவதாகிய பெரியோர்களின் திருவடி வந்தனத்தைச் செய்யாமலிருந்தேன். அதை இப்போது செய்கிறேன் அங்கீகரிக்க வேண்டுமென்று சொல்லி வந்தனஞ் செய்தாள். அதைப் பார்த்த யாவருந் துயரப்பட்டார்கள். அப்பாவியோ? அப்போதும் அவளை யிழுத்து உபத்திரவித்தான். அவள் அப்போது ஒன்று சொல்லுகிறாள். கேளுங்கள் இச்சபையி லிருக்குங் கவுரவகுலாதிபரும் மற்ற இதரதேச ராஜாக்களுமா யிருக்கின்ற பிரமுகாளே! என்னை யாவரும் பகிரங்கமாய்க் கண்டதெப்போதென்றால், சுயம்வர மண்டபத்தில் வந்தபோது கண்டார்கள். அதற்கு முன்னுமில்லை; பின்னுமில்லை. இப்போது யாரும் காணச் சபையில் நிற்கும்படி நேரிட்டது. இது நான் செய்த தீவினையே யல்லது ஒருவர்மீதுங் குற்றமில்லை. அந்தப்புரத்திலிருக்கையிற் சூரியனும் வாயுவுங்கூடக் கண்டறியாதவளாகிய என்னைச் சேவகர்களுஞ் சாதாரணமாய்ப் பார்க்கும்படி நேரிட்டது. அதை என் பர்த்தாக்களும் வீஷ்மர் முதலானோரும் பார்த்துச் சும்மாவிருப்பது வெகு ஆச்சரியமா யிருக்கிறது. இதுவும் ஏதோ ஒரு கால கதிதான். இல்லாவிட்டால் மருமகளாகிய நான் இப்படி கிலேசப்படப் பார்த்து உபேக்ஷை செய்வார்களா? நான் கேட்ட கேள்விக்கு ஒன்றுஞ் சொல்லாம லிருப்பார்களா? அந்தப்புரத்தி லிருக்கத்தக்க ஸ்திரீயைச் சபையி லிழுத்தபின் அரசருக்குத் தருமமென்பது எங்கிருக்கின்றது? சிறிதேனும் இல்லையென்பது நிச்சயமாயிற்று. எப்போது தருமமில்லையோ இனி அதருமத்தால் சகலரும் அழியவே வேண்டும்.

ஓ கண்ணியவான்களே! வீஷ்மர் முதலானோருக்கு மருமகளும், சத்தியசந்தனராகிய பாண்டவர்களுக்கு மனையாளும், துருபதனுக்கு மகளும், ஸ்ரீகிருஷ்ணனுடைய அன்பியும், அக்கினியில் பிறந்தவளுமாகிய யான் இவ்விதமாய்ச் சபையில் வர நேரிட்டபோது உலக மரியாதை யென்றும், குல மரியாதை யென்றும் சொல்லப்படுகிற இவ்விரண்டும் நாசமடைந்தன. நான் பேதை என்ன சொல்லமாட்டுவேன். இராஜசூய யாகஞ் செய்து சாம்பிராச்சிய பட்டாபிஷேகம்பெற்ற மகாராஜாவின் பத்தினியாகிய என்னைத் தேர்ப்பாகர் குலத்தில் வளர்ந்த இந்தக் கர்னன் அடிக்கடி வெள்ளாட்டி வெள்ளாட்டி என்கிறான். இது நியாயந்தானா? இவன் முதுகிலிருக்கும் புண்ணை இவனறியாமல் மற்றவனை இகழ்ச்சியாய் பேசுவது தகுமா? நான் வெள்ளாட்டியோ? அல்லவோ? இதையாகிலும் நீங்கள் தயைசெய்து சொன்னால், வெள்ளாட்டியாகில் அதற்குரிய பணி செய்கிறேன். அல்லேனாகில் அதற்கேற்றபடி நடக்கிறேன் என்று சொல்லியதைக் கேட்ட வீஷ்மர் சொல்லுகிறார்: ஆ! பெண்மணியே! நீ கேட்ட கேள்விக்கு முன்னமே நான் சொன்னேனே? தரும சூட்சுமம் அறியக்கூடாதது. இந்தச் சபையிலிருக்கிற பேர்களில் ஒருவரும் நீ கேட்ட கேள்விக்கு உத்தரஞ் சொல்லச் சக்தி யில்லாதவர்களா யிருக்கிறார்கள். நானும் அதிநுட்பந் தெரியாமல் சும்மாயிருக்கிறேன். அடி அம்மா

பாக்கியவதி! எப்போதும் உனக்கொரு குறை யில்லை. இவர்களில் ஒருவர் தப்பாமல் நாச மடையப் போகிறார்கள். நீ பதிவிரதை என் னும் புகழ் பெற்றாய். ஆனால், நீ எங்களைக் கேட்ட விஷயத்தை உன் பர்த்தாவாகிய உதிட்டிரரைக் கேட்டால், அவரே அதற்கு உத்தரஞ் சொல்லத்தக்கவர் என்று வீஷ்மா சாரியர் சொல்லி முடித்தார்.

### திரியோதனன் தனது தொடையைக்காட்டி திரௌபதையை அழைத்தல்

அப்போது யாவராலுந் துடைகால னென்று துதிக்கும்படியாகிய துரியோதனனென் வன் மிகவும் புலம்பாநின்ற பாஞ்சாலியை நோக்கிச் சிரித்துக்கொண்டு, அடி திரௌபதீ! முன்னமே நீ சபையாரைக் கேள்வி கேட்ட தற்கு ஒருவரும் ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் போனார்களே. மறுபடியும் அவர்களை ஏன் கேட்கிறாய்? உன் பர்த்தாக்களாகிய வீமார்ச் சுன நகுல சகாதேவர்களைக் கேள். அல்லது உதிட்டிரரைக் கேள். அவர்கள் நீ தாசியல்ல வென்று சொல்லுவார்களாகில் சும்மாயிரு. இல்லாவிடில் பணிவிடை செய். சபையார் ஏன் சொல்லவில்லை யென்றால், பாண்டவருக் குக் கஷ்டம் நேரிட்டதே. நாம் இவ்விஷயத் தில் எது சொன்னாலும் அவர்களுக்கே தீங் காகுமென்று வாயை மூடிக்கொண் டிருக்கிறார் கள் என்று வணங்கா முடியோன் சொல்லக் கேட்ட ராஜாக்களெல்லாஞ் சிறிது முகவாட் டம் நீங்கினவர்களாகி, உதிட்டிரர் என்ன சொல்லப் போகிறாரோ வென்று எதிர் பார்த் துக்கொண் டிருந்தார்கள். இப்படியிருக்க, வீமசேனனென்பவன் எழுந்து, கேளுங்கள் பெரி யோர்களே! இந்த மகாராஜாவாகிய தரும புத்திரர் எங்களுடைய தேசங்களுக்கும், பிரா ணன்களுக்கும் எஜமானர். ஆனபடியினாலே, அவர் தாமே ஜெயிக்கப்பட்டோ மென்று ஒப்புக்கொண்டபோதே, நாங்களும் ஜெயிக் கப்பட்டவர்கள் ஆயினோம். இல்லாவிட்டால், இவர்கள் செய்யும் அநியாயத்தைப் பொறுப் போமோ? திரௌபதியின் கூந்தலைக் கையி னால் பரிசித்தவன் இவ்வளவு நேரம் பிழைத் திருக்கும்படி பார்ப்போமோ? கதாயுதங்கள் போன்ற எனது புஜங்களின் நடுவில் அகப் பட்டவன், தேவேந்திரனானாலும் உயிரோடு பிழைப்பானா? நான் தருமமென்னுங் கயிற் றால் கட்டுண்டிருக்கிறபடியினாலும், உதிட்டிர ரிடத்து நாங்கள் வைத்திருக்குங் குருத்துவத் தினாலும் அடிக்கடி அர்ச்சுனன் செய்கிற சமா தானத்தினாலும், இந்த மகா வீசனத்தையும் பொறுத்துக்கொண் டிருக்கிறேன் என்று கூவினான்.

அப்போது அந்த வீமசேனனுடைய கோபத்தைப் பார்த்தும், அவன் பேச்சைக் கேட்டும் வீஷ்மர், துரோணர் முதலானோர் கள் சமாதானஞ் செய்ய அவன் கோபத்தை யடக்கிக்கொண்டான். அப்போது திரௌ பதியை நோக்கிக் கர்னன் சொல்லுகிறான்: கேளடி திரௌபதீ! உலகத்திற் சுதந்திரராகா தவர் மூவருண்டு. அவர்கள் யாரரென்றால், மூறியானவர்கள், மாணக்கர், பெண்பிள்ளை கள், இவர்களில் மூறிகளுக்கு எந்தச் சொத் திருந்தாலும் அவர்களின் யஜமானர்களுடை யதே யல்லது, அவர்களுடைய தாகமாட் டாது. இப்போது பாண்டவர்களெல்லாம் எங் களுக்கு மூறியானாக ளாகையால், அவர்களு டைய சொத்தாகிய நீர் எங்களுடைய சொத்தா னாய். ஆனதுபற்றி நீ தாசியானதிற் சந்தேக மில்லை. அடி பெண்ணே! உனக்கு நன்மையை சொல்லுகிறேன் கேள்: எங்களிடத்தில் வெகு பெயர் தாசரிருக்கிறார்கள். அவர்களில் யாரி ஷ்டமோ அல்லது கவுரவரில் யாரிஷ் டமோ அவரைக் கணவராக ஏற்படுத்திக் கொள். ஆனால், இப்போது பாண்டவர்களைக் கலியாணஞ் செய்துகொண்டதினாலே வெள் ளாட்டியானாயே, அப்படி யாகாமலிருக்கும் படி சேர். உன்னைப் பந்தயம் வைத்தாடித் தோற்றபோதே உதிஷ்டிரர் உனக்குப் பர்த் தாவுமல்லர். நீயவருக்குப் பாரியையுமில்லை. இப்படிப்பட்ட காரியஞ் செய்தவருக்கு இன் னமும் ஆண்மையிருக்கிறதோ? பெண்ணே! நீயேன் சும்மா நிற்கிறாய்? துரியோதன மகா ராஜாவின் அரண்மனையிற் சென்று பணி விடை செய்யென்று சொன்னான்.

அதைக் கேட்ட வீமசேனன் கோபாக்கினி யினாற் கர்னனை யெரிக்கிறவன்போற் பார்த் துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, உதிட்டிர ரைக் கண்ணுற்று, அண்ணா! என்ன காரியஞ் செய்தீர்? அற்பரெல்லாம் இப்படி இகழ்ச்சி யாய்ப் பேசவும், நாம் அதைக் கேட்டுக்கொ ண்டு சும்மாவிருக்கவுஞ் செய்தீரே; உம்மை வைத்தாடாமலிருந்தால் ஒன்றுமே யில்லையே யென்று விசனத்தோடு சொன்னான். அப் போது துரியோதனன் சொல்லியதாவது: ஓ தருமபுத்திரரே! பாரும் உம்முடைய தம்பி

மார் நால்வரும் உமதாக்கினைக் குட்பட்டு நின்ருர்கள். உமது மனைவியாகிய இவள் மாத்திரம் மீறி நடக்கிருள். அவளுக்குத் தெரியச் சொல்லும். நீர் அவளை வைத்தாடித் தோற்றதுண்டா, இல்லையா என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது விதுரன் அவனைப் பார்த்து அப்பா துரியோதனு! உனக்கு அவர் உத்தரம் சொல்லும்படியாயில்லை. வீணுய்ப் பழியைச் சுமந்து கொள்ளாதே. இனியாகிலும் விட்டுவிடு என்று சொல்லக்கேட்ட துரியோதனன், கேளும் விதுரரே! அவர் இல்லாவிடினும் வீமசேனன் முதலாகிய நால்வருஞ்சொன்னல் திரௌபதி வெள்ளாட்டியாக வேண்டாம் என்று சொன்னன். அதுகேட்டு அர்ச்சுனன் சொல்லுகிருன்: கேளுங்கள் பெரியோர்களே! எங்களெல்லோருக்குந் தருமபுத்திரர் யஜமானன் என்பதற்குச் சந்தேகமில்லை. அவர் எங்களைப் பந்தயம் வைத்தாடியது நியாயந்தான் ஒப்புக்கொண்டோம். ஆனல், அவர் தம்மைத் தோற்றுப் பராதீனரான பின்பு மற்ருெருவரை வைத்தாட யோக்கியதை யுடையவரா, அதை நீங்கள் சொல்லுங்கள் என்ருன். அர்ச்சுனன் சொல்லியதைக் கேட்ட கர்னன் துர்ச்சாதனனை நோக்கி, ஓ துர்ச்சாதனு! நாம் சூதாடினும். ஜெயித்தோம். பாண்டவருந் திரௌபதியும் முறியானுர்கள். இவர்களோடு நாம் வழக்கிட வேண்டுவதென்ன? இழுத்துக்கொண்டு போய் அரண்மனையில் வேலைசெய்யச் சொல்லென்ருன்.

அதுகேட்ட துர்ச்சாதனன் ஓ கர்ணு! நீ சொன்ன பேச்சுக்குச் சந்தோஷப்பட்டேன் என்று சொல்லித் திரௌபதியை வாடி வெள்ளாட்டி யென்றிழுத்தான். இழுக்கவே அவள் கதறிக் கூவி, அங்கிருக்குங் காங்கேயன் முதலிய பெரியோர்களைப் பார்த்து, ஓ பாண்டவருக்குங் கவுரவருக்கும் பாட்டனுராகிய வீஷ்மரே! ஓ ஆசாரியராகிய துரோணரே! ஓ கிருபரே! ஓ சகல தருமங்களையும் அறிந்த விதுரரே! ஓ மாமனுராகிய திரிதராஷ்டிரரே! ஓ மாமியாராகிய காந்தாரிதேவீ! குந்திதேவீ! இவ்விதமாய் துயரப்படாநின்ற உங்கள் மருமகளாகிய என்னை யாராகிலுங் காக்கக்கூடாதா? ஓ தருமராஜனே! ஓ வாயுபகவானே! ஓ தேவராஜனே! அசுவினித் தேவர்களே! நீங்களாகிலும் என்னைக் காப்பாற்றுங்கள். ஐயோ என்னசெய்வேன் என்றிப்படி பலவிதமாகப் புலம்பினுள். அதுகண்ட விதுரன் ஆற்றமாட்டாத விசனத்தை யுடையவனுய், அம்மா பதிவிரதா சிரோமணியே! நானென்ன செய்வேன் என் பேச்சை இந்தத் துரியோதனன் அல்லது திரிதராஷ்டிரன் ஒருவருங் கேட்கவில்லையே; நீ கேட்ட கேள்விக்கு உன் கணவர்களும் ஒன்றுஞ் சொல்லவில்லையே. ஆகையினுலே கொஞ்சநேரம் நீ துக்கத்தைப்பொறுத்திரு பகவான் உன்னைக் காப்பார். அனியாயஞ் செய்தவரைத் தண்டிப்பார் என்று சொல்லித் துரியோதனனைப் பார்த்து, அப்பா துரியோதனு! அனியாயஞ் செய்ததுபோதும் இனியாகிலும் அதை யொழித்து நன்மையாய் நட. வீணுய்க் கெடவேண்டாம். மிகவும் அதிகமாய் பாவஞ் செய்தாற் சீக்கிரத்தில் பலிக்கும். முன்னமும் ஒருவிசை சொல்லி யிருக்கிறேன். இப்பவுஞ் சொன்னேன். ஆகையால், தீய செய்கையை விட்டுவிடு என்றுரைத்துத் திரிதராஷ்டிரனைப் பார்த்து, ஓய் ராஜாவே! நீர் உமது பிள்ளைகளோடு சேர்ந்து பாவங்களைச் செய்கிறீரே இதனல் வெகு துக்கங்களை யனுபவிப்பீர். நல்ல சிந்தையோடிரும். பிள்ளைகளைத் தண்டியும். இந்தக் குலத்தைக் கெடுக்காதேயும். இவளைச் சமாதானப்படுத்தும் கொஞ்சநாளாகிலும் வாழலாமென்று கூறினுன். இப்படி சொல்லக்கேட்டுங் குருடன் ஊமையாய் இருந்தான். துரியோதனனே அத்திரௌபதியைப் பார்த்து, அடி பாஞ்சாலி! அங்கேயேன் அலறுகிருய். இதோ யானைத் துதிக்கைபோல் இராநின்ற எனதுதொடையிருக்கிறதேஇதில் எல்லாருயிரையுங் கொள்ளைகொண்டு உண்ணும்படியான யமனுடைய அம்சங்கொண்ட உனது சிரேஷ்ட பர்த்தாவைப்போல் இன்னெருவர் பர்த்தா யிருக்கின்ருர். ஆதலால், அவரும் உனக்கு இந்த ஐவரோடு அறுவரா யிருக்கவேண்டி ஆசையிருந்தால், இவ்விடத்தில் வந்துட்கார். சவுக்கியப்படுவாய் என்றடிக்கடி தனக்கங்குள்ள மிர்த்யுவைத்தானே கட்டுவான் போல் வஸ்திரத்தை மடக்கித் தொடையைக் காட்டிக்கொண் டிருந்தான்.

## திரௌபதி சபதம்

அப்போது திரௌபதியானவள் வெகுவாய் மனக்கொதிப்பை யடைந்து, அடா பாதகா! கொஞ்சமாகிலும் பயமில்லாமல் எந்தத் தொடையைக் காட்டி என்னை உட்காரச் சொன்னுயோ அந்தத் தொடையில் உன் வாக்கின்படியே உனக்கு மிர்த்யு உண்டாகும். இதுவல்லாமல், "அரசவையி லெனையேற்றி

யஞ்சாமற் றுகிறீண்டி யளகந்தீண்டி, விரை
செயளினம்படிதார் வேந்தரெதிர் தகர்தனவே
விளம்புவோரைப், பொருசமரின் முடி
துணித்துப் புலானாறு வெங்குறுதி பொழிய
வெற்றி, முரசரையும் பொழுதல்லால் விரித்த
குழ லினியெடுத்து முடியேன் கண்டீர்' ஓ
சபையார்களே! அளவற்ற பெரியோர்களும்
ஆசாரியர்களும் மகாராஜாக்களும் இன்னு
முண்டான பல பிரமுகாளிருக்கின்ற இந்த
மகா சபையில் என்னைக் குலப்பெண்ணென்று
சற்றும் யோசிக்காமலும், தன்மானம் பிறமான
மென்பதில்லாமலும், தருமா தருமத்தை
நோக்காமலும், இந்தப் பொல்லாத் துஷ்டப்
பாதகனாகிய துர்ச்சாதனனால் மகா அக்கிரமத்
தோடு யென்னை யழைப்பித்து, மகாராஜ புத்
திரி யென்று சிறிது மதிக்காமல், அஞ்சிக்கை
யென்பது மணுவேனுமில்லாமல், அனியாய
மாய் எனது அளகத்தையுந் துகிலையும் பல
வாறலைய விழுத்துக் களைந்து, தகாத வார்த்
தைகளெல்லாம் பேசி, பஞ்ச கர்த்தாக்களுக்
கொப்பாகிய எனது பர்த்தாக்களெதிரில் ஆக்
கிரமித்து அக்கிரமம் செய்யத் தலைப்பட்ட
அற்பர்கள் யார் யாரோ அவர்களையும் அத
னைக் கூடவிருந்து உபேக்ஷை செய்தபேர்களை
யும், நான் கேட்டகேள்விக்கு உத்திரவுகொடுக்
காமலும், அக்கிரமத்திற் குடம்பட்ட துஷ்
டர்களை அடக்கி வைக்காமலும், ஊமைபோ
லொன்றும் பேசாமற் சும்மாயிருந்த பாவிகளை
யும், இனி நடக்கப்போகின்ற யுத்தகாலத்
தில் அவ்வவர்களுடைய முடிகளெல்லா
மறுபட்டுச் சிதறி நாற்றிசையினும் உதிரவாறு
கள் பெருகும்படியான அக்காலத்திற், பாண்ட
வர்களுடைய ஜயமுரசைக் கேட்ட அப்
பொழுது இக் கூந்தலை வாரிமுடிப்பேனே
யல்லது, இந்திராதிகளே முதலிய தேவர்க
ளெல்லாங் கூடிவந்து எவ்வித சமாதானம்
செய்தாலும் ஒருக்காலும் இதனடுவில் நான்
முடியேன்; இதைச் சத்திய சபதமாக இங்
குள்ள சகலமானபேருங் கெட்டியாய் நம்பக்
கடவீர்கள் என்று சொன்னாள்.

## வீமசேனன் சபதம்

அதுகேட்ட வீமசேனன் தானும் உடனே
வெகுண்டவனாய், அச்சபை நடுங்கும்படி
யொன்று சொல்லுகிறான். "வண்டாருங் குழல்
பிடித்துத் துகிலுரிந்தோ னுடற்குருதி வாரி
யள்ளி, யுண்டாகங் குளிர்வதன்முன் னிக்கரத்
தாற்புனலுண்ணே னொருகாலென்கைத், தண்
டால்வெம் புனலேற்றி மீதெழுந்து விழுந்தி
வலை தண்ணீராகக், கொண்டாவி புரந்திடுவ
னிதுவிரத மெனக்கறிமின் கோட்டியுள்ளீர்''
இதுவரையிலும் இனிமேலும் ஒருவரும்
சொல்லாமலும் செய்யாமலு மிருக்கும்படி
யாகிய பேச்சொன்று சொல்லுகிறேன், சொல்
லியபடி நிறைவேற்றுவேன், இந்தத் துராத்
துமாவாகிய துர்ச்சாதனன் கொஞ்சமாகிலும்
மானம்-வெட்கம்-பயம் - இரக்கம் ஒன்றுமில்
லாமல், திரௌபதியைச் சபையினடுவி விழுத்
துப் பலவிதமாக உபத்திரவித்தானல்லவோ
ஆகையாலே நான்யுத்தத்தில் என் கதையினால்
அவன் மார்பைப் பிளந்து அந்த வழியிற்
பெருகும் உதிரத்தைக் குடிப்பேன். அதுவரை
யில் ஜலத்தைக் கையிலெடேன், ஒருக்கால்
தாகமேலிட்டால் இதோ என் கையிலிருக்குந்
தண்டாயுதத்தினால் ஜலத்தை யடித்து, இப்
போது மேலெழும்புந் துளிகளை அங்காந்து
எனது நாவால் உட்கொண்டு உயிரைக் காத்
திருப்பேன் இது சத்தியமான பிரதிக்கினை.
அன்றியும், இந்தத் துரியோதனன் எந்தத்
தொடையைக்காட்டி திரௌபதியை யுட்காரச்
சொன்னானோ அந்த தொடையை யுத்தத்திற்
கதாயுதத்தினாற் சின்னபின்னமாய் பிளக்கக்கட
வேன். அப்படிக்குச் செய்யாமற் போவேனா
கில், இக் குருகுலத்தோர் சேர்ந்த புண்ணிய
லோகஞ் சேராமல் நரகில் விழக்கடவேனென்
று சொல்லி முகத்திற் கோபாக்கினிச் சுவாலைக
ளெழும்பும்படி நின்றான். அப்போது சபையி
லிருப்போரிற் சிலர் வீமனைப்பார்த்து, ஓமாருதி
குமாரா! நன்றாய்ச் சொன்னாய், தரும் தரும்
என்று சொல்லி துரியோதனனையும் துர்ச்சாத
னனையும் சீ! சீ! என்று இகழ்ந்தார்கள். உட
னே விதுரன் வீமனைக் காட்டிச் சபையாரைப்
பார்த்துச் சொல்லுகிறான்: கேளீர் கனவான்
களே! முன்னம் பலிச்சக்கிரவர்த்திக்கு விஷ்
ணுவின் ஆக்கினையால் வருண பாசக்கட்டு
நேரிட்டதுபோல், இந்த வீமசேனனாலேயே
உங்களுக்கெல்லாம் யமபாசக்கட்டு நேரிட்ட
தென்று நினையுங்கள்; இவ்வளவு காலத்தி
லும் இந்தக் குலத்தில் அனியாயம் உண்டான
தில்லை. இப்போது பாவச் செய்கையில் உங்
களுக்குப் புத்தி வந்து சூதாட யத்தினப்பட்டு
ஸ்திரீயைச் சபையி விழுத்து அனியாயம்
பண்ணினீர்களன்றோ? இதனாலே உங்களுக்
குச் சகல சவுக்கியங்களும் அழிந்தன. நீங்க
ளெல்லாந் திரௌபதியை ஜெயித்ததாய்
நினைத்திருக்கிறது எப்படி யிருக்கிறதென்னில்,

கனவிற் கண்ட பொருளை யொருபேதை தன தென்று நம்பிக் களிப்பதுபோல் இருக்கிறது. ஏனென்றால், தருமபுத்திரர் தம்மைத் தோற்றுப் பராதீனராகியபின், திரௌபதியை வைத்தாட யோக்கியதை இல்லாதவராய் இருக்கிறார். அப்படிப்பட்டவர் பந்தயம் வைத்தாடினதினால் அவளை நீங்கள் ஜெயித்தேன் என்பது சத்தியமன்று. இவை யெல்லாஞ் சகுனி செய்த மோசம். இனி அவைகளைக் குறித்துப் பேசுவதில் என்ன லாபம். கௌரவ குலத்திற்குக் கெடுதி கேளாமலே சம்பவித்துவிட்டது. அரசமரத்தைப் பிடித்த சனி அதின் கீழுள்ள ஐயனார் முதலிய அனைவரையும் பிடித்தது என்கிற பழமொழி போலாச்சுது. இப்போது திரௌபதியும் வீமசேனனுஞ் செய்துகொண்ட சபதம் என்று சொன்னான்.

## அருச்சுனன் சபதம்

கேட்டீரோ ஜனமேஜெய மகாராஜனே! இவ்விருவ சபதம் இவ்வாறுக. "பகலவன்றன் மதலையுயிர் பகைப்புலத்துக் கவர்வனெனப் பார்த்தன் சொன்ன, னகுலனுமற் றெங்கரத்தாற் சௌபலநாயகனுயிர்க்கு நாசமென்றான், சகுனிதனை யிமைப்பொழுதிற் சகாதேவன் றுணித்திடுவேன் சமரிலென்று, னிகளிருவர்மொழிகேட் டெளிதோவிக் கொடும்பழியென் றேங்கினரே" அஃதெப்படியென்றால், திரௌபதியும் வீமசேனனும் சபதஞ் செய்து முடித்த அப்போது, அர்ச்சுனன் கெம்பீரமாய் வீமனைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்: வாராய் வீமசேனா! இவர்களில் ஒருத்தருந் தப்பிப் பிழைக்கப் போகிறதில்லை. உன்னுடைய கோபத்திற்கு இலக்கானபோதே நசித்தார்கள் என்று நினைக்கவேண்டும். இவர்களெல்லாம் யுத்தத்தின் பெருமை யறியாதவர்கள். வீட்டிலிருந்து கறிகளையும், சோற்றையும், மற்றுமுண்டான உணவுகளையும் உருசிப்பார்த்துத் தின்றுக்கொண்டு வேடிக்கையாய்ப் பேசி விளையாடுகிறவர்கள். அதனாலேதான் நீ பிரதிக்கினை செய்ததைப் பார்த்திருந்தும் அஞ்சாமலிருக்கிறார்கள். இவர்களுடைய காயத்திலுள்ள உதிரத்தைப் பூமிதேவி கொஞ்சக்காலத்திற் பானம் பண்ணுவள். இன்னுஞ் சொல்லுகிறேன்: கேளும் அண்ணா வென்று சொல்லுகிறான்: இப்போது நீ பின்னுஞ் சொன்னபடி மிகவுந் துஷ்டனாகி பிரதிக்கினை செய்தபடி மிகவுந் தவனுமாகிய கர்ணனையும் அகங்காரம் பிடித்தவனுமாகிய கர்ணனையும் அவனைச் சேர்ந்தவர்களையுஞ் சங்கரிப்பேன். இந்தத் துரியோதனனுக்கு உபபலமாய் வருகிற பேர்கள் எல்லாரையு முடிப்பேன். இமாலய பருவதம் அசைந்தாலும் அசையும், சூரியன் ஒளிமழுங்கிப் போனாலும் போவன், சந்திரன் குளுமையைத் துறந்தாலுந் துறப்பன், நான் சொல்லிய பேச்சோ ஒருநாளும் வீணாய்ப்போகாது என்று இராஜ கண்டீரவம்போற் கர்ஜித்து நின்றான்.

## நகுல சகாதேவர் சபதம்

உடனே நகுலன் சொல்லுகிறான்: கேளுங்கள் சபையாரே! திரௌபதியைக் கிஞ்சித்தும் அஞ்சாமல் வாய்க்கு வந்தபடி கடுஞ் சொற்களைப் பேசியவர்களாகிய துரியோதனனுடைய தம்பிமார்களையும், இந்தச் சூதாடும் வஞ்சகனுடைய புத்திரனாகிய உலூகனையுஞ் சங்கரிக்காமற் போகமாட்டேன், போவேனாகில் எனக்கு மூத்தவர்களுடைய கதி கிடைக்காமற் போகட்டும் என்று சொல்லியபின், சகாதேவன் சொல்லுகிறான்: யாவருங் கேளுங்கள்: அந்தப் பாவியிருக்கிறானே சகுனி, இவன் வேசியானவள் தனவான்களுக்குத் தனது ஸ்தன முதலாகியவைகளைக் காட்டி மயக்கியுட்படுத்திப் பணம் பறிப்பதுபோல் சூதாட்டத்தினால் மயக்கிப் பறிக்கிறவன், இவன் திருடருக்குச் சமானமானவன், இவனுக்குப் பாச்சிகையைக் கையிலெடுத்துக் கர்ஜிக்கத் தெரியும், அம்பென்றால் அது வம்பென்றேடுவன், இப்படிப்பட்ட வஞ்சனைச் சமரில் கூர்மையுள்ள அம்புகளினாலே தூக்கி நரகக் குழியிற் போடுவேன். அப்படி செய்யாமற்போனால், வீரருடைய லோகத்தை யடையாமற் போகக்கடவேன் என்று பிரதிக்கினை செய்து ஓய்ந்தான். அப்போது ஆகாசத்திலிருந்து புஷ்பவருஷம் விழுந்தது. அதைப்பார்த்து யாவரும் ஆச்சரியப்பட்டுத் திரௌபதியையும் பாண்டவர்களையுந் துதித்தார்கள். துரியோதனாதிகளை வெகுவாய்க் கண்டவர் கண்டபடி நிந்தித்தார்கள்.

## தருமராஜன் அருச்சுனன் கோபமடங்கச் சமாதானஞ் சொல்லுதல்

இப்படியிருக்க, அர்ச்சுனன் மீண்டும் வெகுண்டு சொல்லுகிறான்: கேளுங்கள் சபையாரே! துரியோதனன் எவனுடைய பலத்தைப் பற்றி அதிக கெருவத்தை யடைந்து சகல அநியாயங்களையுஞ் செய்கிறானோ, அப்படிப்

பட்ட கர்னனையும், அவன் மக்களையும், நேசரையும், விசுவாசரையும் இப்போதே கொல்லுவேன். இப்போதெனக்கு அண்டுபடாத கோபமுண்டாகின்றது. இக்கோபமாகிய அக்கினியாஸ்திரத்தை இங்கிருக்கிற மகா துஷ்டர் மேல் இப்போதே விடுவேன், யாவரையும் நாசம்பண்ணிப் போடுவேன். மகா தயாளுவாகிய இந்த மகாராஜாவினால் அதற்குத் தடையுண்டா யிருக்கிறது. இல்லாவிட்டால் இதுவரையில் உயிரோடிருக்க மாட்டார்களென்று சொல்லிக் கோபமென்னு மக்கினிச் சுவாலைகள் முகத்திற் பிரகாசிக்க, கண்கள் சுழல, உதடு துடிக்க, கண்ணினாலே யாவரையுந் தகிப்பதுபோல் வீஷ்மர் முதற் சகலமான பேரையும் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது சபையி லிருப்பவர்களெல்லாம் நடு நடுங்கி, ஒன்றும் பேசாம லிருந்துவிட்டார்கள். அந்த அர்ச்சுனன் அதிகமாய் வெகுண்டு பெருமூச்செறிந்து அடிக்கடி சபையாரைப் பார்க்கிறதும், வில்லைப் பார்க்கிறதும், உறுமுகிறதும், தமயனுரைப் பார்க்கிறதுமாக இருந்தான். அப்போதவனை தக்ஷப் பிரசாபதியின் யாகத்தை நாசம் பண்ணும்படியாகிய உருத்திர மூர்த்திக்குச் சமானமாக நினைத்து யாவரும் நடுநடுங்கி, இனி என்னமாய் முடியுமோ உதிஷ்டிரர் ஒருவேளை சங்கரிக்கும்படி அனுமதி பண்ணுவரோ, அர்ச்சுனனால் நாமெல்லாம் பிராணனை யிழப்போமோ, என்னமோ வென்று நினைத்துப் பிணங்களைப்போற் கை கால்களை அசைக்க மாட்டாமல் இருந்தார்கள். பூமியும் நடுங்கிற்று. ஆகாசத்திற் சஞ்சரிக்கிற பேர்களும் ஸ்தம்பித்துப் போனார்கள். சூரியனும் பிரகாசிக்க மாட்டாமற் போனான். காற்றும் வீசமாட்டாமற் போயிற்று.

இவ் வண்ணமாய் உலகமெல்லாம் நடுங்கும்படி காலாந்தகன்போல் நிற்கிற அர்ச்சுனனைப் பார்த்த வீமசேனன், தானும் கோபாவேசங்கொண்டு யுத்த சன்னாகத்தை யடைந்தான். இவ்விருவரும் இவ்வாறுகியதைக் கண்ட பாஞ்சாலி மனதிற் களிப்பை அடைந்தாள். இப்படிக்குப் பிரளய காலாக்கினியைப் போற் கோபத்தினாலே சொல்லிக்காணின்ற அர்ச்சுனனைப் பார்த்து உதிஷ்டிரர் சொல்லுகிறார்: குழந்தாய் அர்ச்சுனா! உன்னைப் போன்று ஒருவரும் இப்படி சகாயஞ் செய்ய மாட்டார்களே, நீ ஏன் கீர்த்தியை வீணாக்கினாய்? எல்லாம் தெரிந்த நீயே பாலகன்போல் கோபத்திற்கு இடங் கொடுக்கலாமா? நான் நினைத்தால் இந்தப் பாவிகளை ஒரு நொடியில் நாசஞ் செய்யமாட்டேனா? தெய்வச் செயலாய் அவர்களுக்கு விநாசம் வரட்டுமென்று பொறுத்துக்கொண் டிருக்கிறேன். அப்படி நீயும் பொறுத்திருக்க வேண்டும் என்று சொல்லக் கேட்டு, அர்ச்சுனன் சாந்தமா யிருந்தான். அதுகண்டு சபையில் இருக்கிறவர்களெல்லாஞ் சந்தோஷமா யிருந்தார்கள். வீமசேனன் மாத்திரஞ் சத்துருக்களை இப்போதே நாசஞ் செய்யக் கூடாமற் போயிற்றே என்று விசனப்பட்டான்.

### திரிதராஷ்டிரன் திரௌபதிக்கு வரங் கொடுத்தல்

இங்கே இப்படியிருக்க, திரிதராஷ்டிரனுடைய அக்கினிச்சாலையிலே நரிகள் வந்து ஊளையிட்டதுகள். கழுதைகள் கதறிக் கூவின. இன்னும் வெகு அபசகுனங்கள் காணப்பட்டன. இவைகளை விதுரனுங் காந்தாரியுங் கண்டு சொல்லத் தெரிந்த வீஷ்மர் முதலானோர்கள் ஒடுங்கிப்போனார்கள். இச் செய்தியைத் திரிதராஷ்டிரனுங் கேட்டு வெகு பயத்தை யடைந்து, துரியோதனனைப் பார்த்து, அப்பா மகனே! உனக்குக் கேடுகாலங் கிட்டித்தான் பாண்டவர்களுடைய பத்தினியைச் சபையிலிழுத்து அவமானஞ் செய்தாய். பாண்டவர்களுடைய பாரியை ஓர் சாதாரணமானவளானாலும், இப்படி செய்யத்தகாது. இந்தத் திரௌபதியோ சகல குணங்களிலுஞ் சிறந்தவள். அக்கினியிற் பிறந்தவள். மகா மகிமை பெற்றவள். இப்படிப்பட்டவளை அஞ்சாமல் அவமானஞ் செய்தபோதே நீங்கள் மரித்தவர்களென்றே நினைக்கிறேன். இனியாகிலும் சும்மாவிரு வென்று சொல்லித் திரௌபதியை நோக்கி, அம்மா! எனது குலபாக்கியமே! நீ எனக்கு மூத்திய மருமகள். எல்லாவிதத்திலுஞ் சிறந்தவள். இப்படிப்பட்ட மூடர் உன்னை தெரியாமல் அவமானஞ் செய்தார்கள். ஆகிலும், என்னாலே கொண்டாடத்தக்கவளாயிருக்கிறாய். ஆகையினாலே, உனக்கொரு வரந் தருகிறேன் கேளென்று சொன்னான்.

அப்படி சொல்லக் கேட்ட திரௌபதியானவள், ஐயா என் மாமனாகிய மகாராஜனே! உமக்கு வரங்கொடுக்கத் திருவுளமானால் சகல ராஜாக்களுக்கும் சிராபூஷணமாகியும், சாம்பிராச்சிய பட்டாபிஷேகம் பெற்றவராகியும்,

சகல குணங்களை யுடையவருமாகிய உதிஷ்டிர மகாராஜாவை நாய்க்குங் கடையாகிய பேர்கள் முறியென்று சொல்லுகிறார்களே; அவருடைய குமாரனும் ஒப்பற்றவனுமாகிய பிரதிவிந்தியனைத் தாசி புத்திரன் என்று சொல்லுகிறார்களே; இவ்விரண்டு சொற்களு மில்லாமலிருக்கும்படி வரந்தரவேண்டு மென்றாள். அதற்கு அந்த ராஜனும் அப்படியே யாகட்டும்; இவ்வொரு வரமாத்திரங் கொடுப்பது போதாது மற்றொரு வரமுந் தருகிறேன் கேள் என்றான். மறுபடியும் பாஞ்சாலியானவள், ஐயா! அங்ஙனந் திருவுளமாகில் வீமசேனன் முதலிய நால்வரும் அவர்களுடைய குமாரரும் முறித்தன்மையினின்றும் விடுபட்டு, வாகனங்களோடும், ஆயுதங்களோடும், சுதந்தரராகவேண்டும் என்று வேண்டினாள். அவ்வரசனும் அப்படியே ஆகட்டும்; இன்னொரு வரமுந் தருகிறேன் கேளென்று சொல்ல, அந்தப் பாண்டவர் தலைவி சொல்லுகின்றாள்: ஐயா! எவர்க்கும் அதிக ஆசையாகாது. அது வெகு கேடுகளைப் பயக்கும். தனக்குத் தகுமானமட்டும் விரும்பலாகுமேயல்லது, கரும்பு ருசியா யிருக்கிறதென்று வேரோடு கெல்லலாகாது. உமது சித்தத்தின்படி இரண்டு வரங்களைப் பெற்றேன். என் கணவர்களின் முறி தீர்ந்ததே போதும் இனி அவர்கள் உலகமெல்லாம் வெல்ல வல்லவர்கள். மேலும், வைசியர் ஒரு வரத்தை வேண்டலாம். அரசர் இரண்டு வரங்களை வேண்டலாம். வேதியர் நூறு வரங்களை வேண்டலாம். ஆனதுபற்றி அடியாள் மூன்றாவது வரம் வேண்டுவது தகுதியன்று என்று சொல்ல, அது கேட்டு யாவரும் சந்தோஷித்தார்கள்.

## அருச்சுனன் வீமசேனன் கோபமடங்கச் சமாதானஞ் சொல்லல்

அப்போது கர்னன் துரியோதனனைப் பார்த்துச் சொல்லுகிறான்: கேட்டாயோ துரியோதன மகாராஜனே! உலகத்தில் அநேகம் ரூபவதிகளான மகளிருண்டு. அவர்களுடைய திறமைகளைப் பார்த்துமிருக்கிறோம். கேட்டுமிருக்கிறோம். ஆகிலும், இவளைப்போலே திறமை ஒருவருக்கும் இல்லை. பாண்டவர் நம்மால் அவமானம் பண்ணப்பட்டுக்கொண்டிருந்தபோது வெகு பொறுமையா யிருந்து இப்போது எப்படியோ மாயாவி செய்து, கிழவரிடத்தில் வரம்பெற்றுத் துக்க மயக்கமென்னுங் கடலில் ஆழ்ந்த தன் பர்த்தாக்களுக்கு ஓடம்போலானாள். இவ்வளவு சாமர்த்தியமுள்ள பெண்டாட்டியை அடைந்தபடியால் அவர்களும் இவ்வாபத்தினின்றுங் கரையேறினார்கள் என்று சொல்லக்கேட்ட வீமன் அர்ச்சுனனை நோக்கி, அர்ச்சுனா! கேட்டாயோ இந்தத் தேர்ப்பாகன் நமக்குப் பெண்டாட்டியே ஓர் கதியானாளென்று பிதற்றினானே இவன் நாவை அறுக்கவேண்டும். ஆகிலும் உனக்கு சிக்ஷை செய்யலாமென்று தோற்றுகிறதா சொல். அப்படியே செய்கிறேன். மனிதனுக்கு மூன்று பவுருஷங்கள் இருக்கவேண்டும். எவை யென்றால், போரில் முன் வைத்த காலைப் பின் வைக்காமல் இருப்பதும், ஒரு வீரன் சண்டைக்கு அழைத்தவுடனே சந்தோஷமாய்ப் போவதும், தன் பாரியை அயலான் தொட்டால் அவனைத் தண்டிப்பதுமாம். இம் மூன்றிலுங் கடைபடு பவுருஷம் அற்பருக்குஞ் சகசமானது. அதையும் நாம் செலுத்தக்கூடாமல் இருக்கும்படி நம்முடைய மகாராஜா நம்மை அஸ்வாதீன ராக்கினார். ஆகிலும் என்ன செய்யலாம் சொல்லென்ன, அதைக் கேட்ட அர்ச்சுனனானவன் வீமனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

அண்ணலே! நீ சொல்லியது சத்தியந்தான். உலகத்தில் ஒருவனுக்கொருவன் சத்துருவா யிருந்தால் அனேகவிதமாய்ச் சொல்வதும் சகஜந்தான். மேலும் அந்தக் கர்னன் இயல்பாய் துஷ்டன்; உள்ளிப் பூண்டுக்கு எத்தனை வாசனை காட்டினாலுந் துர்க்கந்தத்தையே வீசும். எதிரிகள் பலத்தினால் ஜெயிக்க, நாம் கையிலாகாமல் அவமானப்பட்டுக் கொண்டிருந்தால் அப்போது நமக்கு இகட்சி. மேலும், அவர்கள் மாத்திரம் நம்மை சத்துருக்களென்று நினைக்கிறார்கள். நாமோ அப்படி நினைக்கக்கூடாது. ஏனென்றால், நமக்கு மிகவுந் தாழ்ந்தவர்களை உபேட்சிக்கவேண்டுவதே நியாயமல்லவோ? துஷ்டப் பூச்சிகள் கடிக்கிறபோது அவைகளை நசுக்க எவ்வளவு நேரம் பிடிக்கும்? ஆகிலும் நமது மகா ராஜாவின் கருத்தை அனுசரித்து நாம் துயரின்றி இருக்கவேண்டுமென்று சொன்னான். அதற்கு வீமசேனன் சொல்லுகிறான்: அர்ச்சுனா! இந்தப் பாவிகள் விஷயத்தில் நியாயாநியாயங்கள்கூட விசாரிக்கவேண்டுமா? ஆயுதத்தை யெடுத்து நிமிஷத்தில் தும்சஞ் செய்துப் போடுவோம் அதனாற் பாவம்

வராது. வீணாய்க் கிலேசத்தை யனுபவிப்ப வர்களைப் பரிவாரங்களோடு நாசஞ்செய்து இராச்சியத்தை மகாராஜாவுக்குக் கொடுத்து விடுவோம் என்று சொல்லித் தம்பிமார்களுடனே தன் கதாயுதத்தைக் கையிலெடுக்க முயன்றான். அதுகண்ட அர்ச்சுனன் இந்தச் சமயத்தில் இவனைத் தகையாமற் போவோமாகில், யாவரையும் இந்த நிமிஷத்தில் இங்குதானே நாசஞ்செய்து போடுவானென்று வெகுவிதமாய்ச் சமாதானம் செய்தான். ஆகிலும் அவ்வீமசேனன் அடங்காமல், முகத்திற் சுவாலைகள் எழும்ப, தேகமெல்லாம் வேர்த்து நடுங்க, உதடு துடிக்கப் பெருமூச் செறிந்துக்கொண்டிருந்தான்.

### திரிதராஷ்டிரன் தருமனைச் சமாதானப்படுத்தி மீண்டும் அரசுகொடுத் தனுப்புதல்

இப்படியிருக்க, உதிஷ்டிரரும் வீமனுக்குக் கோபம் சாந்தமாகும்படி வெகுவாய்ச் சாந்தமாகும் வார்த்தைகளால் சமாதானங்களைக் கூறி திரிதராஷ்டிர னிருக்குமிடத்திற்கு வந்து கைகூப்பி நின்றார். அந்தத் திரிதராஷ்டிரன் இவருடைய வணக்க முதலான குணங்களைக் கண்டு இவர் விஷயத்திற் செய்த தீங்குக்காக நாணமும் விசனமு முற்றுச் சும்மாவிருக்க, அவர் மீண்டும் அப்பெரிய தகப்பனாரை நோக்கி, ஐயா மகாராஜாவே! உமது கட்டளையின்படி அடியேன் இவ்விடம் வந்து செய்ய வேண்டியவைகளைச் செய்தேன். இன்னும் ஏதாகிலுஞ் செய்யவேண்டுமாகிற் சுக்கட்டளை யிடலாமென் றுரைத்தார். அதுகேட்ட குருட்டரசன், ஓ குழந்தாய் அஜாதசத்துருவே! உனக்கு எல்லா நன்மைகளு முண்டாகும். நீ சூதினால் தோற்ற இராச்சிய முதலியவைகளை மறுபடியு முனக்கே தந்தேன். ஆனபடியினாலே, நீ தம்பிகளோடும் பத்தினியோடும் இரதகஜ துரகபதாதிகள்சூழ இராச்சியத்திற்குப் போய் தருமபரிபாலனஞ் செய்துகொண்டிரு; இப்போது நானொரு பேச்சு சொல்லுகிறேன் அதைக் கேட்டு அப்படியே நீ நடக்கவேண்டும். அதனாலே உனக்கு மேன்மேலும் நன்மை யுண்டாகும். உனக்குத் தெரியாததல்ல. நீ சகல தருமங்களையும் அறிந்தவன். வெகுபெரியோர்களிடத்திற் பணிவிடைசெய்து தருமசூக்குமங்களைக்கேட்டவன். வணக்கமொடுக்க முதலான சகல நற்குணங்க ளமைந்தவன். ஆனபடியினாலே உனக்குச் சொல்லவேண்டுவ தில்லை. ஆகிலுஞ் சொல்லுகிறேன் கேள்: நீ வீமன் முதலான தம்பிமாரிடத்தில் எப்படி அன்புடையவனாய் இருக்கிறாயோ அப்படியே துரியோதனன் முதலானோரிடத்திலும் இருக்கவேண்டும். கொஞ்சமும் கோபஞ் செய்யாம லிருக்கக் கோருகிறேன். லோகத்திலே ஒருவன் அபகாரஞ் செய்தால் அவன்மீதில் கோபமுண்டாகாமல் போகமாட்டாது. ஆனாலும், அதைப் பாத்திரா பாத்திரமறிந்து இடவேண்டும். அவனே புத்திமான். அவனே தருமசீலன்.

மேலும், கோடாலியானது எதின்மீது எறியப்பட்டாலும் அதைப் பிளக்கும். ஆனாலும் கல்லின்மீதில் போட்டால் கைகளுக்கு வெகு சிரமமுண்டாவதுமன்றி, கல்லும் பிளவாது. கோடாலியும் கூர் மழுங்கிப்போம். அப்படிப்போலவே கோபமென்னும் கோடாலியைப் பந்துக்களென்னுங் கல்லின்மீது போட்டால் பின்பு வெகு விசனத்திற்கு இடமுண்டாவதே யன்றி, அவர்களுக்கு அதினால் அபாயம் நேரிடாது. ஏனென்றால், இந்தக் கோபமாகிய கோடாலி அவர்கள்மீதில் எறியப்படும்போதே கூர் மழுங்கிப் போகின்றது. அல்லது ஒருவேளை மழுங்காமல் அபாயத்தைத்தான் உண்டாக்கினாலும், இவனுக்கு அதனால் தீராத பழியும் பாவமும் வராமல் இருக்கமாட்டாது. மேலும், பெரியோர்கள் அபகாரியினிடத்திலும் நன்மையே சிந்திப்பார்களல்லவோ? என் புத்திரர் வெகு மூடர். அகங்காரம் பிடித்தவர். ஆனதுபற்றி உன் விஷயத்தில் செய்யத்தகாத பொல்லாங்கைச் செய்தார்கள். அதை எவ்வளவுஞ் சிந்திக்க வேண்டாம். அந்தகனையும், மூப்பனையும் இருக்கிற என்னையும் காந்தாரியையும் பார்த்து எத்தனை அபராதங்கள் இருந்தாலும் பொறுக்கவேண்டும். நாங்கள் இருவரும் உங்களுக்கு நன்மையைச் சிந்தித்துக்கொண் டிருக்கிறபேர்கள். இப்படிக்கு இதில் கலகம் நேரிடும் என்று தெரிந்திருந்தால், இக்காரியத்தை ஆரம்பிக்கமாட்டேன். புதிய சபையொன்று விசித்திரமாய்க் கட்டினோமே அதில் நமது குழந்தைகள் வேடிக்கையாய் விளையாடட்டும் என்று நினைத்து உங்களை அழைப்பித்தேன். யாருக்கும் வரவேண்டுவது வழியிற் றங்காது. இவன் உங்கள் விஷயத்திற் செய்த பிழையினாலே வீமசேனனுடைய கோபத்திற்கு யாவரும் இப்போதே இலக்காவார்கள். ஆனால், நீ இருந்தபடியினாலே அப்படி யாகவில்லை.

மேலும், எப்போதும் எனக்குக் குறை
வில்லையென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்.
ஏனென்ருல், என் பிள்ளைகள் துஷ்டராளு
லும் அவர்களுக்கு ஒரு தீங்குமில்லாமல் காப்
பாற்றவும், குடிகளுக்குக் கொஞ்சமுங் குறை
வில்லாமல் இராச்சிய பரிபாலனஞ் செய்யவும்
நீ இருக்கிருய். நன்மை தீமைகளை அறிவிக்க
விதுரனிருக்கிருன். நீயோ தரும சீலன். உன்
தம்பிகள் வெகு பராக்கிரம முடையவர்கள்.
இரட்டைப் பிள்ளைகளோ வணக்க முதலிய
சுகுணங்க ளுடையவர்கள். ஆனதுபற்றி,
உனக்கு எப்போதும் எல்லா நன்மைகளும்
உண்டாகும். அப்பா உதிஷ்டிரா! நீ சகல
க்ஷேம சந்தோஷத்தோடு உன் பட்டணத்துக்
குப் போய்வா என்று பிதா சொல்லியதைக்
கேட்ட உதிஷ்டிரர் பிதாவைப் பார்த்து,
ஐயா! உமது கட்டளையை மீறி நடப்பவ
னல்லேனென்றுசொல்லி நமஸ்காரஞ்செய்து
சகல பரிவாரங்களோடும் இந்திரப் பிரஸ்தத்
துக்குப் போகப் பிரயாணமாஞர். இப்படிக்குச்
சொல்லிவராநின்ற வைசம்பாயன முனிவரை
நோக்கி, ஜெனமேஜெய மகாராஜன் வினவு
கிருன்: சுவாமி வைசம்பாயன மகா முனிவரே!
திரிதராஷ்டிரமகாராசன் கபடமாய்ப் பாண்ட
வரை யழைப்பித்துத் தன் பிள்ளைகள் முதலா
யினேரைக்கொண்டு சூதாடுவித்து எல்லாப்
பொருள்களையும் பறித்துத் திரௌபதியை
யும் வேண்டியபடிக்கு அவமானஞ் செய்த
வன், பின்பு அவர்களுடைய மகிமையைக்
கண்டும் அபசகுனங்களைப் பார்த்தும் பயந்து
மறுபடியுஞ் சகல சம்பத்துக்களோடு இராச்
சியத்துக்குப் போகும்படி செய்தானே. அப்
போது துரியோதனன் முதலானேருடைய
சித்தமெப்படி இருந்தது? என்னசெய்தார்
கள்? இவைகளை அருளிச் செய்யவேண்டு
மென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்
தொடங்கினர்.

## துரியோதனன் திரிதராஷ்டிரனிடஞ் சென்று முறையிடல்

ஜெனமேஜெய மகாராஜனே!
கேளும் திரிதராஷ்டிரன் பாண்டவருக்கு யாவையுங்
கொடுத்து அனுப்பியதைக் கண்ட துர்ச்சாத
னன் முகங் கன்றி அண்ணனிடத்திற்கு வந்து,
அண்ணு! கிழவனுகிய நமது பிதா செய்த
தைக் கேட்டீரா? நமக்குக் கனவிலுஞ் ஜெயித்
தற் கரிதாகிய பாண்டவர்களின் செல்வத்தை
எவ்வளவோ தந்திரஞ் செய்து சம்பாதித்
தோமே அவர்களுடைய ஒப்பில்லாத பராக்
கிரமத்தைப் பயன்பட வொட்டாமல் தரும
மான வழி யென்ருெரு எல்லை ஏற்படுத்தி,
அவர்களே இராச்சியத்தை யெல்லாம் விட்
டுத் தங்களுடம்புகள் மாத்திரம் சுவாதீனங்க
ளாளுற் போதுமென்று நம்மை வேண்டிக்
கொள்ளும்படி செய்தோமே. (குயவனுக்குப்
பலநாள் வேலை தடிக்காரனுக்கு ஒரு நொடி
வேலை) என்கிறபடி அத்தனை வருத்தத்தை
யும் பாழாக்கி, மறுபடியும் அவர்களுக்கு ராச்
சியத்தைக் கொடுத்தனுப்பினர். இனி நாம்
பிழைப்பதேது? நாளைக்கே வந்து புகுந்து
கொல்லுவார்களே அப்போது நாமெல்லாம்
என்ன செய்வோமென்று சொன்னன். அது
கேட்ட துரியோதனனவன், கர்னன்-சகுனி-
அத்துர்ச்சாதனன் என்கிற மூவருடன் யோசி
த்துத், தந்தையினிடத்துக்கு வந்து, ஐயா!
என்ன காரியஞ் செய்தீர்? சத்துருக்களுக்கு
மேன்மை யுண்டாகப் பார்க்கலாமா? நீர் மகா
ராசர்தான். ஆகிலும் ராசநீதி எவ்வளவு மறி
யீர். சாமபேததான தண்டமென்னு நான்குபா
யங்களில் எதினலாகிலுஞ் சத்துருவைத்
தாழ்த்த வேண்டுவது அரசருடைய கடமை
யென்று பிரகஸ்பதி சொல்லி யிருக்கிறதை நீ
உணரவில்லை. எவ்வகையால் தேடினுல்தான்
என்ன செல்வஞ் செல்வ மாகாமற் போகுமா?
அல்லது சுகத்தை யுண்டாக்காதா? எப்படி
யாவது பாண்டவர்களின் இராச்சியத்தை அப
கரித்து, அரசரை யெல்லாஞ் சுவாதீனராக்கி
பூமி முழுவதையும் ஏகச்சக்கிராதிபதியாய்
ஆளலாமென் றெண்ணிச் செய்து கூடிவந்த
காரியத்தைக் கெடுத்தீரே, தன் மக்களுக்குக்
கேடுவர நினைப்பாரு முண்டோ? அச்செல்வ
மெப்படியாகிலு மிருக்கட்டும்; நாளைக்கு இவ்
விரோதங்களை யெல்லாம் உள்ளத்திற்ருனே
வைத்துக் கொண்டிருந்து வந்து, எங்களை
வேரோடுங் கெல்லி யெறிந்து விடுவார்களே?
ஐயோ! இனி இதற்கென்ன செய்கிறது?என்று
துக்கித்துப் பின்னுஞ் சொல்லுகிருன்:

ஓ என் பிதாவே! சுபாவமாய் அவர்கள்
நமக்குச் சத்துருக்கள். மேலும் வெகுவாய்
அபகாரம் செய்யப்பட்டார்கள். ஆனபடியின
லே எங்களை உயிரோடு வைக்கார்கள். ஆனல்
உம்மையொன்றும் செய்யார்கள். அதனலே
நீர் அவர்களை ஆதரணை செய்தீர். கொடு விஷ
முள்ள பாம்பைப் பிடித்து மீண்டும் விடலா
காது விட்டால் வெகு தீங்குகள் நேரிடும்.

பிடித்தவுடனே நசுக்கிப் போடவேண்டும். நீர் உமது மக்களைக் கடித்துக் கொல்லுவே னென்று நினைத்திருக்கிறது குரூரமாகிய சர்ப்பத்தைப் பால் புகட்டி வளர்க்கிறீர். இப் படிப்பட்ட செய்கையை பயித்தியக்காரனும் செய்யான். அவர்களில் நால்வர் சும்மாவிரு க்கமாட்டான். அவன் சுபாவத்திற் பாருபல முள்ளவன். சவுரியமுள்ளவன். ஆயுதவித்தை யில் வல்லவன். அவனுக்கு யாராலும் வெல் லக்கூடாத தேர்-குதிரை-கொடி-வில்-அம்புப் புட்டில் முதலான சாதனங்களும் இருக்கின் றன. ஆயிரங் கைகள் படைத்த கார்த்தவீரி யார்ச்சுனன் செய்யும் செய்கையை இவன் இரண்டு கைகளினாலே செய்கிறான். நம்மிடத் தில் இருக்கிற வீஷ்மர்-துரோணர்-கிருபர்- அசுவத்தாமா-கர்னன்-சகுனி - சோமதத்தன் முதலாகிய வீரரெல்லாம் ஒருமித்துச் சண்டை செய்தாலும் அவனால் வெல்லப்படுவார்களே யன்றி, அவனைக் கொல்லமாட்டார்கள். அவ னுடைய சாமர்த்தியம் நிகரில்லாதது. அப் படிப்பட்ட பெருந்தீயில் எங்களை விழச்செய் தீர். என்ன செய்வோம் என்று மிகவும் விச னத்துடனே சொல்லாநின்ற மகனுடைய பேச்சைக் கேட்ட திரிதராஷ்டிரன் அம்மக னைப் பார்த்துச் சொல்லுகிறான்:

## கார்த்தவீரியார்ச்சுனன் சரித்திரம்

ஓ என்னருமை மகனே! ஆயிரங் கைக ளோடுங் கூடிய கார்த்த வீரியார்ச்சுன னென் கிறவன் யார்? அவன் எத்தன்மையானவன் அதைச் சொல்லென்று கேட்டான். அப்போ துரியோதனன் சொல்லுகிறான்: ஐயா! மகா விஷ்ணுவின் உந்தித்தாமரை மலரினிடத்தி லுதித்த நான்முகத் தேவனுக்கு அத்திரி மகா ரிஷி யென்கிற புத்திரரொருவருண்டானார். அவரிடத்தினின்றும் சந்திரனுண்டானான். அவன் மகன் புதன் பிறந்தான். அவன் புத் திரன் நகுஷன். அவன் புத்திரன் யயாதி. அவனுக்கு ஆயுவென்னும் புத்திரன் பிறந் தான். அவனுக்கு மூத்தகுமாரன் யது மஹாராஜன். அவன் குமாரன் சகசிரோகன். அவன் புதல்வன் சக்கிரதாசன். அவனிடத்தி னின்றும் ஹேஹயன். அவனிடத்தினின்று ந் தருமன். அவனுக்குக் கார்த்தன். அவன் புத் திரன் கிருதவீரியன். அவனுடைய குமாரன் அர்ச்சுனன். இவனே கார்த்தவீரியார்ச்சுனன்.

இவன் தத்தாத்திரேயரென்கிற மகாயோகியை நோக்கிப் பதினாயிரத் தைஞ்ஞூறு வருஷமள வும் உக்கிரமாகிய தவஞ்செய்து, அவனுடைய அனுக்கிரகத்தினாலே ஆயிரங் கைகளையும் மற் றுஞ் சில வரங்களையு மடைந்து, பூமியெல் லாஞ் சுவாதீனராக்கி நிகரில்லாமல் ஆளுகை செய்தான். இப்படியிருக்க, ஒரு காலத்தில் அந்த ராஜன் நருமதா நதியில் ஸ்திரீகளோடு ஜலக்கிரீடை செய்யப்போய், ஆற்றிலிருக்கிற ஜலம் போதாமையால் ஐஞ்ஞூறு கைகளால் ஸ்திரீகளுடைய குயாசலங்களைத் தழுவி விளை யாடிக்கொண்டிருந்தான்.

அப்போது இலங்கைக்கு அரசனாகிய இராவணன் இவனை ஜெயிக்கவேண்டுமென்று யுத்தத்திற்கு வந்து, இவனிருக்கிற கோலா கலத்தைக்கண்டு, நல்லது இவன் சலக்கிரீடை செய்து வரட்டும். நாம் அதற்குள்ளாகச் சிவபூசை பண்ணிக்கொள்ளுவோ மென்று ஸ்நானஞ் செய்து, மிருத்திகை லிங்கம் பிடித் துப் பற்பல புஷ்பங்களைச் சாத்திப் பூசித்துத் தயோத்தியானத்திலிருக்க, அப்போது கார்த்த வீரியன் விளையாட்டு முடிந்து, நீரைத் தடுத் திருந்த கையை எடுத்துவிட்டு ஸ்திரீகளுடன் பட்டணம்போய்ச் சேர்ந்தான். அவன் கைக ளால் அடைபட்டிருந்த ஜலமானது பெரு வெள்ளம் வருவதுபோல் இருகரையு மொரு கரையாய்ப் புரண்டுவந்து இராவணனையும் அவன் பூசித்த மணலி லிங்கத்தையும் வாரிக் கொண்டுபோய்ச் சமுத்திரத்திற் போட்டுவிட் டது. அதனால் இராவணன் மெத்தவும் வருத் தப்பட்டு வெட்கமுற்று, இன்று பிழைத்தோ மென்று இலங்கைக்குப் போய்ச் சேர்ந்தான். அப்பாலொருநாள் அந்த ராவணன் எவ்வி தத்திலேனும் இந்த கார்த்தவீரியனை வெல்ல வேண்டுமென்று ஆலோசித்தவனாய் உடனே அவனிடத்துவந்து சண்டைசெய்ய வழைக்க, கார்த்தவீரியன் மிகவும் வெகுண்டு அந்த ராவ ணனோடு யுத்தஞ் செய்து அவனைத் தன் வில் நாரியினால் கட்டிக் காவலிற் போட்டான். அச் செய்தியைச் சாரணரால் கேள்வியுற்ற அந்த ராவணனுடைய பாட்டனாராகிய புலஸ்தியர், கார்த்தவீரிய னிடத்திற்குவந்து வேண்டிக் கொண்டு தன் பேரனை விடுவித்தார்.

இத்தன்மையாகிய சவுரியமுடைய கார்த்த வீரியன் மற்றொருகாலத்திற் சமுத்திரத்தின் மேற் சரமாரி பொழியவே, அச் சமுத்திர ராஜன் புருஷரூபமாய் வந்து, அப்பா மஹா

ராஜாவே! நானுனக்கு ஒரு அபராதமுஞ் செய்
யாமலிருக்க, நீயேன் வீணாய் என்னை யுபத்
திரவப் படுத்துகிறாயென்று சொல்லினான்.
அதைக்கேட்ட அவ் வர்ச்சுனனானவன் நீ
என்னோடு போர் செய்ய வரவேண்டும். அல்
லது என்னுடன் போர்செய்யத் தகுந்தவனின்
னானென் றுரைக்கவேண்டுமென்றான். என்ற
போது சமுத்திரராஜன் நான் சாமர்த்தியமில்
லாதவன். உன்னோடு யுத்தஞ் செய்யமாட்
டேன். ஜமதக்கினி என்பவருடைய குமாரர்
பரசுராமரென்கிறவ ரிருக்கிறார். மகா சவுரிய
சாலி ஆனதால் அவரோடு நீ யுத்தஞ் செய்
யலாமென்று சொன்னான். அதுகேட்ட கார்
த்தவீரியன் உடனே அவராச்சிரமத்திற்கு
வந்து அவருக்குக் கோபம் வரும்படி செய்து
அமோகமான யுத்தஞ் செய்யுமளவில், அவ
ரால் அவன் கொலை செய்யப்பட்டான். அவன்
ஆயிரங் கைகளினாலும் ஐஞ்ஞூறு வில்களைப்
பிடித்து எத்தனை யம்புகளை யெய்வனோ,
அத்தனை யம்புகளை இந்த விஜயன் இரண்டு
கைகளால் ஒரு வில்பிடித்து எய்கிறான். இன்
னும் இந்த அர்ச்சுனனுடைய சாமர்த்தியங்
களை சொல்லுகிறேன் ஞாபகமாய்க் கேளும்:

ஆதியிற் குருதக்ஷிணைக்காகப் பாஞ்சால
ராஜனை யுத்தத்தில் ஜெயித்து கைப்பிடியாகப்
பிடித்துத் தேரிற் கட்டிக் கொணர்ந்தான்.
பின்பு திரௌபதி சுயம்வரத்திற் சல்லியன்-
ஜராசந்தன்-நரன்-கர்னன் முதலானோரும்
வளைக்கமாட்டாமற்போன வில்லை விளையாட்
டாய் வளைத்து நாணேற்றி, வெகு பிரயாச
மும் அசாத்தியமுமாய் இருந்த குறியையும்
அடித்து, திரௌபதியால் மாலைசூடப்பட்
டான். அப்போது நானுங் கர்னன் முதலா
னோரும் எதிர்த்தோம். லக்ஷியஞ் செய்யாமல்
துரத்தி யடித்து கர்னனைப் புறங்காட்டி
யோடச் செய்தான். எங்களோடுகூட வந்த
அனேக ராஜாக்களை வெகுவாய்ப் பங்கப்படுத்
தினான். பின்பு தீர்த்தயாத்திரை செய்தபோது
துவாரகையில் வந்து கிருஷ்ணனுடைய தங்
கையாகிய சுபத்திரையை ஏகாந்தத்திற் கலி
யாணஞ்செய்து, அதற்காக எதிர்த்த சாம்பன்-
சாருதேஷ்ணியன் முதலான யாதவ வீரரை
யும் அம்புகளினாற் கண்விழிக்க வொட்டாமல்
அடித்து ஜெயித்தான். இப்படிக்கு அவன்
செய்த காரியங்கள் எத்தனையோவுண்டு இவை
யெல்லாம் இருக்கட்டும்; சாக்ஷாத் தேவேந்திர
னுடைய காண்டவ வனத்தைக் கிருஷ்ணனு
டைய சகாயத்தினாலே அக்கினி தேவனுக்கு
எரிக்கும்படி கொடுத்து, அதினிமித்தஞ் சண்
டைக்கு வந்த இந்திரன்-வருணன் முதலாகிய
சகல தேவர்களையும் சொல்லாமல் ஓடும்படி
அடித்தான். எல்லாத் தேவர்களும் ஓடியபின்
இந்திரன் தனித்து வெகுவா யுத்தம் பண்ணி
அனேக மலைகளையுங் கல்லுகளையும் வருஷிக்க
அவைகளை யெல்லாம் ஒரு நொடிப்போதிற்
சூர்ணமாக்கிப்போட்டான்.

அன்றியும், அவ்வனலை அனுபவிக்கும்
பொருட்டுச் சப்த மேகங்களும் பொழிந்த
மழையில் ஒரு துளியும் அதில் விழவொட்
டாமற் சரக்கூடு கட்டினான். அதைக் கண்டு
தேவர்கள் வெகு சந்தோஷ மடைந்தார்கள்.
இவ்விதமாய்த் தேவர்களை ஜெயித்து துட்ட
மிருகங்கள்-பக்ஷிகள்-அரசர்-பிசாசர் - இராக்க
தர் முதலானோரை அவ்வனலிற்றள்ளி எடுத்
தான். இவ்வாறு அக்கினிக்குத் திருப்தி
செய்தபடியினாலே அவன் திவ்விய ரத முத
லானவைகளைக் கொடுக்கப்பெற்றான். மேலும்,
மயனென்பவனை யவ்வாபத்தினின்றுங் காப்
பாற்றியபடியினாலே சிறந்த ஒரு சபையை
யுண்டாக்கிக்கொண்டான். பின்பு திக்குவிஜ
யஞ் செய்யும்பொருட்டு வடதிசையிற் சென்ற
போது, இந்தப் பாரத வருஷமேயன்றிக்
கிம்புருடவருடம்-பத்திராச்சுவவருடம்-கேது-
மாலவருடம்- இரமியகவருடம்-ஹரி வருடம்-
குருவருடம்-இளாவிருத வருடம் இவைகளுக்
குப்போய் அங்கிருந்தவரையெல்லாம் ஜெயித்
துக் கப்பம் வாங்கி வந்தான். இவ்விதமாகிய
மகா பல பராக்கிரமங்களுடையவனாகிய அர்ச்
சுனனை நினைத்தால், என் இதயம் நடுங்கு
கிறது. இரவில் தூக்கத்திலுங் காண்டிவ
மென்னும் வில்லுடனே கூட அவனைக் காண்
கிறேன். அந்த வில்லுடனே அவனைக்
காணும்போது பாசத்தோடுகூடிய இயமனைப்
போலிருக்கிறது. அவனில்லாம லிருக்கை
யிலும் எத்திசையிலும் அவனிருக்கிறதாகவே
தோற்றுகிறது. அகரத்தை முதலெழுத்தா
யுடைய நாமங்களைக் கேட்கும்போதெல்லாம்
அவன் நினைப்பே யுண்டாகிறது. நீரே சுக
மாய் அரசாளலாம் என்று சொல்லி விசனப்
படக்கேட்ட திரிதராஷ்டிரன் சொல்லுகிறான்:

அடா துரியோதனா! நீயே இப்படி அர்ச்
சுனனுடைய சக்தியை அறிவாயல்லவா,
ஆனபடியினாலே அவனோடு பகைக்காதே,
இதுவரைக்கும் அவர்களுக்கு நீ செய்த தீங்

குக்காக அவர்கள் உன்னை ஒன்றுஞ் செய்யாம லிருக்கும்படி நான் செய்கிறேன். பயப்ப டாதே இனியவர்களோடு பகையாதே. அப்பா நீ யிதுவரையில் அவனுடைய பராக்கிரமத் தையும் மற்றவர்களுடைய சாமர்த்தியங்களை யும் அறியாமலே போராடுகிறு யென்றிருந் தேன். இப்போது நீ சகலமும் அறிந்தவனு யிருக்கும்போது, அவனையும் அவனைச் சேர்ந் தவர்களையும் விகற்பமில்லாமல் நேசித்திருக்க வேண்டுமல்லவோ? அப்படி யிருக்க, நீ யவர் கள் விஷயத்தில் அபகாரங்களைச் செய்ய நினைப்பது நியாயமா? இனியாகிலும் அவர் களை விரோதிக்காமற் சும்மாவிரு என்று கூறக் கேட்ட துரியோதனன் பிதாவைப் பார்த் துச் சொல்லுகிறுன்: ஐயா! நாம் அவர்களு க்கு வெகுவாய் அபசாரங்களைச் செய்திருக்கி ரேமாகையால், நமக்கும் அவர்களுக்கும் சினேக முண்டாக மாட்டாது. மறுபடியும் மறுபடியும் வஞ்சனை செய்து அவர்களின் செல்வத்தை யெல்லாம் பறிக்கவேண்டுமே யல்லது, சும்மா விருக்கக் கூடாதென்று சொல்ல, பிதாவானவன், அடா குழந்தாய்! உனக்கேன் இந்தத் துர்புத்தி யுண்டாகிறது? இனி அதை விட்டுவிடு. நீங்கள் செய்த பிழை களை அவர்கள் மனதில் எவ்வளவும் நினைக்க வில்லை. தருமத்தையே பெரிதா யெண்ணி உங்களுக்கும் நன்மையைத்தான் சிந்திக்கிறுர் கள். அப்படிப்பட்டவர்களை நீங்கள் விரோ திப்பது பாவத்திற்கு இடமாகும். சகல பந் துக்களோடும் இன்னும் சில காலம் பூமியில் வாழவேண்டு மென்கிற கருத்திருந்தாற் பாண்டவர்களை நேசித்திருங்கள். ஒரு குறை வும் நேரிடாது. சுகமாய் இருக்கலாமென்று சொன்னுன்.

திரிதராஷ்டிரன் மறு சூதாடத் தருமனை வரவழைத்தல்.

அது கேட்ட துரியோதனன் சம்மதி இல்லாமல், மீண்டுந் தன் தந்தைக்கு மனம் திரும்பும் படியான பிரயத்தனத்துடனே தொழு தெழுந்து, முன்போல் அவர்களு டைய பராக்கிரமத்தையும் அதனுல் தங்க ளுக்கு ஆபத்து வருமென்பதையும் எவ் வகையிலாகிலும் பகைவரை அடக்கவேண்டு வதே ராஜ நீதியின் கருத்தென்பதையுஞ் சொல்லி, ஆனுல் இப்போதென்ன செய்ய வேண்டுவதென்ருல், முன்போலவே வஞ்சனை யாய் அழைத்து, அதில் முன்னம் ஒருவிசை தோற்றுத் தங்களாற் பெற்றுக்கொண்ட இராஜ்ய முதலாகிய சகல சம்பத்துக்களை மீண் டும் பந்தயமாக வைக்கச் சொல்லுவோம் மறு படி தோற்ருல் அவைகளை அவர்கட்கு ஒப்பி விக்க மரவுரி மான்ருேல் தரித்துப் பனிரண்டு வருஷம் வனவாசமும், ஒரு வருஷம் அக் ஞாத வாசமுஞ் செய்யவேண்டுவதென்று ஏற்படுத்தித் தந்திரமாய்த் துரத்திவிடு வோம். இதில் அவர்கட்கும் மற்றையர்க்கும் நம்மேற் சொல்லவேண்டிய தோஷம் ஒன் றும் இல்லாமற் போம் இப்படி ஒரு ஏற்பாடு செய்து தற்காலத்தில் விடவேண்டுமே யல் லது, சும்மாவிருக்கக் கூடாது. நானே சகுனியின் சகாயத்தினுல் தோற்கமாட்டேன் ஒருவேளை அந்தப் பதின்மூன்று வருஷங் களுங் கழித்து வந்தால், அப்போது யுத்தஞ் செய்வோம். அக்கால் அவர்கள் நெடுநாள் காட்டிலிருந்தபடியால் அன்ன முதலான சவுக் கியக் குறைவினுலேயும், சேனைமுதலான பலங் கள் இல்லாமையினுலேயும் சுலபமாய் ஜெயிக் கப்படுவார்கள். நாம் அதற்குள்ளே யாவ ருக்குமேலாகி உறுதியாய் இருப்போம். அப் படி செய்ய நீர் எவ்விதத்திலேனும் மனது யெண்ணி அனுமதி செய்யவேண்டுமென்று சொன்னுன். அதுகேட்ட அப்பிறவிக்குருடன் சம்மதித்து, தருமபுத்திரர் பாதி வழி போயி ருந்தாலும் அழைத்துக்கொண்டு வரும்படி பிரதிகாமி யென்னுந் தூதனை ஏவினுன்.

அப்போது வீஷ்மர்-துரோணர்-சோம தத்தன் முதலான பேர்களெல்லோரும் மறு படி அப்படிப்பட்ட காரியம் வேண்டா மென்று வெகுவாய்த் தடுத்துச் சொல்லியும், அந்தத் திரிதராஷ்டிரன் கேளாமல் வாயை மூடிக்கொண்டிருந்தான். துரியோதனன்,வீஷ் மர் முதலாயினேரை நோக்கி, நீங்கள் இதற்கு விரோதமாய் ஒன்றும் பேசவேண்டாம். நான் உங்களை ஒன்றும் வினவவில்லை. உங்கள் காரி யத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா விருங்கள் என்று சொன்னுன். அக்கால் திரிதராஷ்டி ரன் அக்கொடுஞ் செய்கைக்குச் சம்மதித்துப் பாண்டவரை சீக்கிரத்திலழைத்து வரும்படி மிக விரைவாய்த் தூதனுக்குக் கட்டளையிடக் கண்ட காந்தாரியானவள் தன் கணவனை நோக்கி யுரைக்கிறுள்: ஓ மகாராஜாவே! இந் தத் துரியோதனன் பிறந்தபோது கொள்ளி வாய் நரிபோற் கூவியதைக்கண்ட மகா புத்தி மானுகிய விதுரர், இவன் இந்தக் குலத்தை

நாசஞ்செய்யத் தக்கவனென்றும் இவனை உயிரோடு வைத்திருக்கலாகாதென்றும் அப்போதே நமக்குச் சொல்லி இருக்கின்றார். அவர் பேச்சைக் கேளாமற்போனோம். அஃதிருக்கட்டும். இப்போது அந்தத் துஷ்டன் பேச்சைக் கேட்டு நீர் பழிப்புக்கிடமாகிய சொக்கட்டானாட்டத்தை நடத்தி வெகு அனர்த்தங்களையுண்டாக்கினீர். இவ்வளவு போதாதா? மறுபடியும் அப்படிப்பட்ட காரியத்திற்கேன் முயலுகிறீர்? வீஷ்மர் முதலாகிய பெரியோர்களுடைய பேச்சைக்கேளும். இக்குலம் நசிப்பதற்கு நீரே காரணமாகவேண்டாம். கெடுதியை விட்டுவிடும்.

மேலும், இப்போதுதான் அவர்கள்பலர் முன்னிலையிலும் அவமானப்பட்டு உம்மால் அடங்கிச் செல்கிறார்கள். அப்படி அடங்கியிருக்கிற அக்கினியை யேன் மறுபடியு மூதிப் பற்றும்படி விடுகிறீர்? நீரே இக்கொடுமைக்கு காரணமென்று தெரிந்தும் அப்பாண்டவர்கள் பொறுத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட பேர்களுக்குத் துரோகஞ் செய்வதைக்காட்டிலும் வேறு பாதகமில்லை. நீரோ சகல கலைகளையுமோதியுணர்ந்தவர் பெரியோர்களிடத்தில் வெகு கேள்வி கேட்டவர். வயதில் முதிர்ந்தவர். தருமவான்களுடைய குலத்திற் பிறந்தவர். அனியாயத்தை நடத்துகிறவர்களைத் தண்டிக்கத் தக்கவர். இப்படிப்பட்ட நீரே வஞ்சனைக்கு ஆரம்பித்தால் உமக்கு யார் புத்தி சொல்லத் தக்கவரிருக்கிறார்கள்? இவ்விடத்தில் நீர் ஒருவனுடைய தண்டனைக்குட்படாமற் போனாலும் இயமனுடைய தண்டனை விடாது. சகலமுந்தெரிந்த உமக்கு நான் என்ன சொல்லப் போகிறேன். உமது புத்திரரென்றும் பாண்டு புத்திரரென்றும் பேதமெண்ணிப் பக்ஷபாதஞ் செய்யவேண்டாம். நான் சொல்லுவதற்குக் கோபிக்கவேண்டாம். இதுவரையிலுந் துரியோதனனைக் கொடுமையுள்ளவரென்று சொன்னார்கள். இனிமேல் அந்தச் சொல் உம்மையே தொடரும். ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். எப்படியாகிலும் பாண்டவர் விஷயத்தில் வஞ்சனை செய்யவேண்டாம் என்று காந்தாரி சொல்லியதைக்கேட்ட திரிதராஷ்டிரன் சொல்லுகிறான்: கேளடி காந்தாரி! நீ சொல்லியது சரிதான்; நானென்ன செய்வேன்? உன் மகன் வெகுவாய் நிர்ப்பந்தம் செய்கிறான். இதனாலே பாவம் வந்தாலும் சரி. புண்ணியம் வந்தாலுஞ் சரி. குலம் நசித்தாலுஞ் சரி. குலம் வளர்ந்தாலுஞ் சரி. யார் செத்தாலுஞ் சரி. யார் பிழைத்தாலுஞ் சரி. இவன் ஒரே பிடிவாதமாய்ச் சூதாட வேண்டுமென்பதை நான் வேண்டாமென்று சொல்ல மாட்டேன். தெய்வச்செயலால் வரவேண்டுவதெல்லாம் வரட்டும் என்று சொல்லி வாயை மூடிக்கொண்டான்.

## தருமராஜன் மீண்டும் அஸ்தினாபுரம் வந்து சூதாடுதல்

இப்படியிருக்க, திரிதராஷ்டிரனால் அனுப்பப்பட்ட தூதனாகிய பிரதிகாமியானவன் இந்திரப்பிரஸ்தத்தின் வழியிற் சென்றுகொண்டிருக்கிற பாண்டவர்களைக் கண்டு, திரிதராஷ்டிரன் சொல்லியபடி உதிஷ்டிரரோடு சொல்ல, உதிட்டிரர் அதைக் கேட்டு, காலகதியினால் நடக்கவேண்டியிருப்பதை நாம் தடுக்கக் கூடுமோ? இச்சூது கெட்டதென்பதும், இதனால் நமக்கு வரப்போகிற கதி இவ்வகைப்பட்டதென்பதும், சகுனியின் வஞ்சனையும், துரியோதனனுடைய பொறாமையும், திரிதராஷ்டிரனுடைய கபடமும் இவ்வகைப்பட்டதுகளென்று தெரிந்திருக்கின்றன. ஆகிலும் நாமென்ன செய்யலாம்? வரத்தக்க நன்மைத் தீமைகளை யனுபவித்தே தீரவேண்டும். யார் என்ன சொன்னாலும் என் பிதாவாகிய திரிதராஷ்டிர மகாராஜாவின் வார்த்தையைத் தாண்டமாட்டேன். அவரே மீண்டு மழைக்கிற் போயேதான் தீருவேனென்று சொல்லித் தம்பிமார் முதலான பேர்களோடு திரும்பி அஸ்தினாபுரியின் சபையிற் பிரவேசித்தார். அப்போது அவரைக் கண்ட விதுரர் முதலான பேர்கள் மிகவும் விசனப்பட்டார்கள். சபையிலிருந்தவரில் ஒருவரும் ஒன்றுஞ் சொல்லவில்லை. இவ்வாறு இராஜசபை ஓசையற்று நிற்குமளவில், சகல ராஜ குடும்பங்களுக்கும், துரியோதனாதிகளுக்கும், தனக்கும் நாசத்தை யுண்டுபண்ணத் தலைப்பட்டவனாகிய சகுனியானவன் தருமபுத்திரரைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்:

கேளும் உதிஷ்டிர மகாராஜனே! முன்னே நான் உம்மோடே சூதாடி ஜெயித்த சகல சம்பத்துக்களையும் திரிதராஷ்டிர மகாராஜாவின் மனதின்படி உமக்குக் கொடுத்துவிட்டார். ஆனபடியினாலே நான் ஜெயித்ததற்கு என்னபயன் மறுபடி உம்மோடு ஓடிச்சில செல்வங்களைச் சம்பாதித்தாலும் அவைகளையும்

ராசா உமக்குக் கொடுத்துவிடுவார். மேலுந் தரித்திரனுக்குச் சில பொருள் வந்தாற் சந்தோஷமுண்டாகும். சில பொருள் போனால் துக்கமுண்டாகும். நமக்கோ வந்தாலும் போனாலும் இது ஒரு விஷயமல்ல. ஆனபடியினாலே நாம் இனிமேல் இப்படிப்பட்ட பந்தயங்களை வைக்கக்கூடாது. மற்றென்னவென்றால் தோற்றவன் ராச்சியத்தை விட்டுத் தவசி போல் மரவுரி மான்றோல்களைத் தரித்துக்கொண்டு, பன்னிரண்டு வருஷமளவும் வனவாசம் செய்து, பின்பொரு வருஷம் இன்னவிடத்தில் இன்னபடி யிருக்கிறார்களென்பது தெரியாமல் அக்ஞாதவாசம் செய்யவேண்டும். இதுதான் பந்தயமாக யிருக்கட்டும். உமக்குச் சம்மதியாகில் என்னோடு மறுபடியும் ஆடும் என்று சொல்லக் கேட்ட தருமபுத்திரரானவர், சகுனியைப் பார்த்து, ஓ காந்தாரராஜனே! நீ சொன்னது சரிதான்; நானோ சூதாட அழைத்தால் வருவேன் என்கிற விரதம் உடையவனாகையால், இப்போது பின்னிடையாமல் அப்படியே யாடுகிறேன். நீ பின்னாலே நாசத்தையடையாமல் க்ஷேமப்படவேண்டுமே அதை யோசித்துக்கொண்டு ஆடென்று சொன்னார். அது கண்ட சபையார் உதிட்டிரர் நன்மைக்கும் சகுனியின் கொடுமைக்கும் விசனப்பட்டார்கள். அப்போது துரோணாசாரியானவர் அரசனது கருத்தை யறிந்தவராய் உதிட்டிரரைப் பார்த்துச் சொல்லுகிறார்:

கேளும் தருமராஜனே! இப்போது சகுனி சொல்லிய பிரகாரம் நீர் மறுபடியும் ஆடித்தோற்பீராகில், நீங்கள் ஐவரும் திரௌபதியும் பனிரெண்டு வருஷம் வனவாசமும், ஒருவருஷம் அக்ஞாதவாசமுஞ் செயயவேண்டும் என்றும், அந்த அக்ஞாதவாசத்தில் ஒருவர் கண்ணுக்கும் அகப்படாமல் இருக்கவேண்டுவதென்றும், அப்படி அகப்பட்டால் மறுபடியும் இப்படி பதின்மூன்று வருடம் வனவாசம் செய்யும்படி அனுப்பப்பட வேண்டியதென்றுந் துரியோதனராஜன் சொல்ல, அதற்குத் திரிதராஷ்டிர மகாராஜன் சம்மதியினால் மறுபடி உம்மை யாட அழைத்ததேயன்றி வேறில்லை. ஆகையால், இவ்வாட்டத்தில் ஒருவேளை நீர் தோற்றாலும், இப்போது அவர் எண்ணப்படியே வனம் போய வந்து, பிறகு உங்கள் இராச்சியத்தை நீங்கள் அடையலாம். முன்னம் ஸ்ரீராமமூர்த்தியானவர் வனவாசம் செய்து பிறகு அயோத்திமாநகரை யாளவில்லையா? அதுபோல நீங்களும் வனம் போய்வருவதே உத்தமம் என்றார். அப்போது திரௌபதையானவள் சொல்லுகிறாள்: ஐயா துரோணரே! நாங்கள் அடிமைப்பட்டு வனம் போவது தகுதியன்று. ஆதலால், இந்த அடிமைத்தனந் தீரவே இன்னும் ஒருதரஞ் சூதாடுதல் உத்தமம் என்று சொனனாள். இவ்வாறு திரௌபதி சொன்ன சொல்லைத் தருமராஜன் கேட்டுச் சொல்லுகிறார்: அடிமைப்பட்ட நாங்கள் வனம் போய் வந்து எங்கள் இராச்சியத்தைக் கேட்டால், அடிமைப் பட்டவர்களுக்கு இராச்சியம் ஏதென்று வழக்கு சொல்லவேண்டி வரும். ஆகையால், அடிமைத்தனந்தீர இன்னம் ஒருதரம் சூதாடவேண்டும் என்று சொன்னார். அச்சபையில் இருந்த வீஷ்மர் துரோணர் முதலிய சகலரும் சரிதான் என்று ஒப்புக்கொண்டார்கள். அப்போது அதைச் சகுனியானவன் கேட்டுக் கலகலவென்று நகைத்து, ஓ தருமராஜனே! அடிமைத்தனந்தீர இப்போது நீர் என்ன பந்தயம் வைத்தாடப்போகிறீர் சொல்லும் என்றான். அதைக் கேட்ட தருமராஜன் சொல்லுகிறார்: ஓ சகுனிராஜனே! நான் செய்த புண்ணியங்களைப் பந்தயமாக வைக்கிறேன் நீ கெலித்தால் புண்ணியம் எல்லாம் உன்னது நான் கெலித்தால் எங்கள் அடிமைத்தனம் நீங்கிவிட்டது என்று சொல்ல, அதற்குச் சபையாருஞ் சகுனியும் ஒப்புக்கொள்ள, இருவரும் விருத்தங்களைப் போட, அவ்விருத்தங்களில் தருமர் கெலித்தார். அம்மாத்திரத்தில் முன் சொன்னபடிக்குத் தருமர் அடிமைச் செயலை யகல்வித்துக் கொண்டவராய், உடனே வனத்திற்குப் போகச் சித்தமாக யிருந்தார். துரியோதனாதிகளுந் திரிதராஷ்டிரனுங் கைகொட்டிச் சிரித்தார்கள். மற்ற யாவருங் கண்ணீர் உகுத்தார்கள்.

### துர்ச்சாதனனாதியர் செருக்கு

இப்பால் பாண்டவர்கள் தாங்கள் தரித்திருந்த கவசகிரீட குண்டலாதிகளை வாங்கிப் போட்டு மரவுரி முதலானவை தரித்து வனத்திற் சேரும்படி மனதில் நிச்சயங்கொண்டு நிற்குமளவில், துர்ச்சாதனனானவன் மிகவும் இறுமாப்புடனே சொல்லுகிறான்: அடடா இங்கே யிருக்கிற சேவகன் ஓடி வா! பாண்டவருடைய கவசகிரீடாதிகளையும் நல்ல வஸ்திரங்களையும் வாங்கு. மற்றொரு சேவகனாடா!

இவர்களுக்கு மரவுரிகளும், கிருஷ்ணஜினங்க
ளும் விரைவிற் கொணர்ந்து கொடு. கேளுங்
கள் சபையாரே! இன்றுதான் பாண்டவர்கள்
சகல சம்பத்துக்களையும், சுகங்களையும், பெரு
மைகளையு மிழந்தார்கள். இன்றுதான் துரி
யோதன மகாராஜன் ஏகச்க்ராதிபதியானர்.
அன்றியும், மூத்தவர் குமாரர் சிரேஷ்டராக
வும், இளையவர் குமாரர் நிகிருஷ்டராகவும்
ஆனதால் இப்போதுதான் நியாய மென்பது
உலகத்திற் பயன்பட்டது. இனிப் பாண்ட
வர் நெடுநாள் துக்கத்தை அனுபவித்து நசிக்
கப்போகிறார்கள். அவர்களாலே பயத்தை
அடைந்தவர்களெல்லாம் இனிச் சந்தோ
ஷத்தை அனுபவிப்பார்கள். வெகு நாளாய்
வளர்ந்தசத்துருவென்னும் பூண்டை வேரோ
டுங் களைத்து எறிந்தோம். சூதாடிக் குலதரு
மத்தை யிழந்துபோனதால் அவர்களுக்கு
இம்மை மறுமை இரண்டுங் கெட்டது. அர
சர்களுக்குள் துருபத மகாராஜன் மிகவும்
அகங்காரமுள்ளவன். அவன் இந்தப் பேதை
களை வெகு சூரரென்றெண்ணி அருமையாய்ப்
பெற்ற தன் மகளைக் கொடுத்தான். அப்படிப்
பட்டவளை இந்தச் சபையிலிழுத்து அவமா
னம் செய்தோமே அதை யாவரும் பார்த்துக்
கொண்டுதானே யிருந்தீர்கள். வெகு மானிக
ளென்றுஞ்சூரரென்றுங் கெருவத்தையடைந்
திருந்த இந்த ஐவரும் பார்த்துக்கொண்டு
தானே யிருந்தார்கள். இதைக் குலமுறையி
லடிமையா யிருக்கிறவனும் பார்த்துச் சகிக்க
மாட்டான். இவர்கள் வீரியமில்லாதவர்களா
னதுபற்றிச் சும்மாவிருந்தார்களென்று சொல்
லிப் பின்னுந் திரௌபதியைப் பார்த்து அத்
துஷ்ட சிகாமணியாகிய துர்ச்சாதனன் சொல்
லுகிறான்:

அடி திரௌபதீ! உன் பர்த்தாக்களைந்து
பேரும் உள்ளுக்கு நபும்சகரா யிருந்தும்,
வெளிக்கு ஆடவர்கள்போல் அட்டகாசம்
செய்துக்கொண் டிருப்பது எத்தன்மையா
யிருக்கிறதென்றால், தயிலச் சத்தற்ற போக்
கெள்ளும் நல்லெண்ணெ யொப்பக் காணப்படு
கிறதுபோ லிருக்கிறது. அவர்கட்குச் சவுரிய
தைரிய வீரியங்களென்ப தெவ்வளவுமில்லை.
இருந்தால் அவர்கள் பிரியமுள்ள இல்லாளா
கிய உன்னை நாங்கள் சபையிற் பலவகையால்
அவமானம் செய்ததைப் பார்த்துச் சும்மா
யிருப்பார்களா? ஆடுகளைப்போல் தலையை
வளைத்துக் கொண்டுதானே நின்றார். ஆகை

யாலே, அடி பேதாய்! உனக்கு நன்மை யொன்
றுச் சொல்லுகிறேன் கேள்: இந்த அலிகளைச்
சேர்ந்து கானகமேகுவதில் மிகுந்த துக்கத்தை
யனுபவிக்க வேண்டும். துரியோதன மகா
ராஜாவைச் சேருவையேயாகில் உனக்கொரு
குறைவுமில்லை. மேன்மையையும், சுகத்தையும்
அடையலாம். அல்லது கர்னனையாகிலுங்
கலியாணஞ் செய்துக்கொள். இன்னும் யாரை
யாகிலும் சேர். யாரைச் சேர்ந்தாலும் பாண்
டவர்களைச் சேர்ந்ததுபோலே துக்கத்திற் கிட
மாக மாட்டாது. ஆண் பொம்மைகளைப்போ
லிராநின்ற இப்பாண்டவருக்கு வஸ்திரங்கூட
இல்லை. அன்னமுமில்லை. மரவுரி யுடுத்திக்
கொண்டு காய் கிழங்குகளைத் தின்னப் போகின்
றார்கள். அவர்கள் காகங்கள்போல் ஒருமித்
துச் சேர்ந்திருந்தாலுஞ் சமயத்தி லுபயோக
மில்லை. ஆனபடியினாலே, நீ சவுக்கியப்படும்
படியான வழி தேடென்று சொல்லி மகா கொ
வங்கொண்டு, சபையி லிருப்போர்களிற் சிலர்
சபா சென்று மெச்சவும், சிலர் சீச்சீயென்று
துச்சவும் பிதற்றினான். அதுகேட்ட வீம
சேனனானவன் பொறுமையுங் கோபமு மடை
ந்து, சகுனியையும் துர்ச்சாதனனையும் அதட்
டிச் சொல்லுகிறான்:

### வீமனுதியர் விக்கிரமம்

அடா துராத்துமாவே! சூதாடி மோசஞ்
செய்த மாத்திரத்திலே வெகு சமர்த்தனாக
நினைத்து என் கத்துகிறாய்! இதனாலே சூர
னாவாயோ? நாங்கள் தருமத்திற் கட்டுப்பட்
டிருக்கிறதே உனக்குச் சவுரியம் ஏதுவாக
இருக்கிறது. உன்னைப்போலே இப்போது
நான் வாயினாலே சொல்லமாட்டேன். ஆனால்,
யுத்தத்தில் உன்னைக் கொல்லும்போது நீ
சொன்ன சொற்களையும், செய்த கொடுமைகளை
யும் சொல்லிக் காட்டிச் சிக்ஷை செய்வேன்.
உன்னை மாத்திரமல்ல, உன்னை யடுத்துக் கொ
ள்கிற பேர்களை யெல்லாம் உன்னோடுகூடவே
எமலோகத்திற்கு அனுப்புவேன். இதுவரை
யில் நீங்கள் நடத்திவந்த துரோகங்களில்
ஒன்றேனும் வீணாகப் போகுமென்று நினைக்க
வேண்டாம் என்று வீமசேனன் சொல்வதைக்
கேட்ட துர்ச்சாதனனானவன் லட்சியம் செய்
யாமல், அவனுக்கு எதிரிலே அவன் சொன்ன
பேச்சுகளைச் சொல்லிப் பரிகாசஞ்செய்து கூத்
தாடி, துரியோதனனைப் பார்த்து, ஓ
அண்ணா! இதோ ஒரு மாமிச மலை நிற்
கிறதே இதுவுள்ளே சாரமற்றது. இதற்கு

வீமசேனனென்று பேர் சொல்ல வொண்ணாது இரண்டு கால்மாடென்று சொல்ல வேண்டியதென்றான். அதுகேட்ட வீமன் அக்கினிபோற் சொலித்து அத்துர்ச்சாதனனை நோக்கி, அடா மனிதப் பதரே! உனக்கு மோசஞ் செய்யவும் வாயாற் பிதற்றவுந் தெரியுமேயல்லது, மற்றொன்றுந்தெரியாது. ஆயுத சங்கதியும், யுத்த சங்கதியும் சுத்தமா யறியாய் மெய்யாச் சூறனாயிருக்கிறவன் வாயினாலொன்றுஞ் சொல்லான். ஆகிலும் நான் சொல்லும் சொல் வீணாகாது முன் பிரதிக்கினை செய்தபடி உன் மார்பின் உதிரத்தைக் குடியாமற் போகமாட்டேன் உன் சகோதரரையும் இக்கதையினாலே பரலோகஞ் சேர்க்காம லிருக்கமாட்டேன். உன்னோடு பேசுவதி லென்னபயனென்று சொல்லித் திரும்பினான்.

உடனே துரியோதனன் பரிகாசமாய் ஒரு பேச்சைச் சொல்லுகிறான்: அடா வீமா! நீ மிகவுஞ் சூரனே சந்தேகமில்லை. கொண்ட பெண்டாட்டியைச் சபையில் மானபங்கஞ் செய்யுமளவில் உன் சவுரியம் வெளிக்கு வந்தது யாவருக்குந் தெரியும். இன்னமேன் பவுருஷம் பேசுகிறாய்? நீ சொல்லிய பேச்சு நடக்கமாட்டாது. மற்றெது நடக்குமென்றால், உன் சகோதரரை நான் கொன்று, உன்னையந்தத் துக்கானுபவத்தோடு தவிக்கும்படி செய்ய நினைத்திருக்கிறேனே இதுதான் சந்தேகமின்றி நிறைவேறும் போடா பயித்தியக்காரா வென்று துரியோதனன் சொல்ல, அதை வீமசேனன் கேட்டு ஆகுதி செய்த அக்கினிபோல் சொலியாநின்ற கோபத்தினால் விளங்கு முகத்தை யுடையவனாய் நிற்க, அதுகண்ட அர்ச்சுனன் - நகுல - சகாதேவர் - இம்மூவருந் திரௌபதியும் அடங்கிக்கொள்ள கூடாத குரோதத்தை யுடையவர்களாய், ஒவ்வொருவருந் தாங்கள் முன்பு செய்துகொண்ட சபதங்களை யெல்லாம் மீட்டுஞ் சபைக்கு முன்னிலையிற் சொல்லி, ஆஹா! என்ன மமதை? ஓ தந்தை முதலிய பெரியோர்களே! முன்னாட்டத்திற் செய்த அக்கிரமங்களால் உண்டாகிய எங்கள் சபதங்கள் அணைத்தும் இவ்வாட்டத்தில் செய்த ஒருவித ஏற்பாட்டினால் பேர்ய் விட்டதென்று நினைக்க வேண்டாம். சூரியசந்திராதிகளுடைய நிலை ஒருக்கால் மாறினாலும் எங்கள் சபதங்களிலுண்டாகிய சொற்களிலுள்ள எழுத்துக்களில் ஓரெழுத்தேனுந் திரிமூர்த்திகளே முதலிய பல மூர்த்திகள் வந்து மாறச் செய்யினும் மாறாது. இது உறுதி மொழியாய் நம்பக் கடவீர்களென்று சொன்னார்கள். பின்பு உதிட்டிரர் மகா கோபத்தோடு மிருக்கிற அத்தம்பிமாரோடு பெரிய தகப்பனாரிடத்திற்கு வந்து, ஐயா மகாராஜாவே! உமது கட்டளையின்படி வனவாசம் செய்யச் சித்தனாயிருக்கிறேன்.

ஆகையால் அனுமதி செய்யவேண்டுமென்று கேட்டு, முறையே பீஷ்மர் - துரோணர்-கிருபர்-அசுவத்தாமா-பாகிலிகன் - சோமதத்தன்-பூரி-பூரிச்சிரவன்-விதுரன்-சஞ்சயன்-யுயுச்சு - காந்தாரி முதலானோரிடத்திலும் விடைபெற்றுப் பிரயாணத்திற்குச் சித்தமாயினார். அப்போது இவர்களில் ஒருவரும் ஒன்றும் சொல்லமாட்டாமல் மனதினாலே மாத்திரம் அவர்களுக்குச் சுபமுண்டாக வேண்டுமென்று கோரினார்கள். ஆனால், விதுரன் மாத்திரம் ஒரு வார்த்தை சொன்னான். ஓ உதிஷ்டிரரே! நீர் தரும நிஷ்டரானபடியினாலே உமது பிராதாக்களோடும், சுகுண பத்தினியோடும் வனத்துக்குப் போகவேண்டுவது நியாயந்தான். இந்தக் குந்தி மூப்புடையவள். பிறந்தது முதல் வெகு சுகுமாரமாயிருந்தவள். இவளும் அவ்வனத்தில் வந்து கஷ்டப்பட வேண்டுவதென்ன? வேண்டாம். இம்மனையிற் சுகமா யிருக்கட்டும். நான் வேண்டு முபகாரங்களைச் செய்கிறேன். நீங்கள் இந்தப் பதின்மூன்று வருஷங்களுங் கழித்த வுடனே சுகமாய் வந்து மேன்மை யடைவீர்கள் என்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறான்.

கேளும் உதிஷ்டிரரே! நீர் தரும ரகசியங்களை யறிவீர். சத்துரு சங்காரம் செய்யு முபாயத்தை வீமசேனன் அறிந்தவன். யுத்தத்தின் நுட்பங்களை அர்ச்சுனனறிந்தவன். பொருளைத்தேடு முபாயத்தை நகுலனறிந்தவன். தத்துவ நிச்சயத்தைச் சகாதேவன் நன்றாயறிந்தவன். புரோகிதராகிய தவுமியர் எல்லாவற்றையும் நன்றாய்த் தெரிந்தவர். பாரியையாகிய திரௌபதி மகா புத்திசாலி. சகல குணங்களு முடையவள். இப்படிக்கிருக்கிறபடியினாலே உங்களுக்கொரு குறைவும் நேரிடாது. எல்லா நன்மைகளுந் தானே வரும். இப்படிப்பட்ட சன்மார்க்கங்களோடிருக்கிற உம்மை இந்திரனும் செயிக்கமாட்டான். இமாசலத்தில் மேருசாவர்ணி யென்

பவர் உமக்கு வெகு தருமங்களையும் நீதிகளையும் உபதேசித்திருக்கிறார். வாரணாவதத்திலே வியாசர் வெகு தருமங்களை உமக்குச் சொன்னார். பிருபுச்சந்தமென்னு மிடத்திலே பரசுராமர் உமக்கு அனேக தரும சூட்சுமங்களை யறிவித்தார். திருஷத்துவதியின் கறையிலே சீவன் சகல தருமங்களையும் உபதேசித்திருக்கிறார். அசிதருஞ் சில தருமங்களை உபதேசித்தார். இப்படிக்கு அனேகம் பெரியோர்கள் உபதேசித்தவைகளை யுணர்ந்தவருக்கு என்ன குறைவு வரும்? மேலும் நாரத மகாமுனியிடத்திலும் பற்பல தருமங்களைக் கேட்டிருக்கிறீர். ஆதலால் நீர் ஒன்றுக்கும் விசனப்படவேண்டுவதில்லை. இந்தப் பூமி முழுதும் உமக்கு நினைத்த மாத்திரத்தில் வரும். இப்படி யுணர்ந்த உமக்கு எதிலே சுகம்? எதிலே துக்கம்? புத்திசத்தி - தரும நிஷ்டை - இந்திரஜயம்- கொடை-ஆளுகைத்திறம்-பொறுமை முதலாகிய சகல நற்குணங்களினால் யாவரினும் மேலாயிருக்கிறீர். ஆனபடியினாலே அஞ்சாமற் சுகமாய்ப் போய் வாருமென்று விதுரன் சொல்லியதைக் கேட்டு, உதிஷ்டிரர் சந்தோஷித்துப் புறப்பட்டார்.

## தருமனுதியர் வனவாசக் கோலத்தோடு வெளிப் புறப்படும்போது பட்டினத்தார் பிரலாபம்

அப்போது நகரிலிருக்கிறவர்கள் எல்லாம் பாண்டவரைப் பார்க்க வெகு அபேக்ஷையுடையவர்களாய், ஒருவேளை அவர்கள் சொல்லாமல் ரகசியமாய்ப் போவார்களோ என்னமோவென்று சந்தேகமுற்று, வீடுகள் மீதிலும், மதில்கள் மீதிலும், கோபுரங்கள் மீதிலும், சுவர்கள்மீதிலும், வீதிகளிலும், விளிம்புகளிலும், கூட்டங் கூட்டமாய் வந்து நின்றார்கள். அப்போது பாண்டவர்கள் ஒரு பூஷணமுமில்லாமல் இடையில் மரவுரிகளைத் தரித்து மேலே மானுரி உத்தரியங்களை போர்த்துக்கொண்டு, வறிஞர்போற் காலாலே நடந்து வீதியில் வந்தார்கள். அதைக்கண்ட ஜனங்களெல்லாஞ் சோகத்தையும் மோகத்தையும் அடைந்து சொல்லுகிறார்கள். ஓ! ஓ! என்னகாலம்? எந்த உதிஷ்டிரரை இரதகஜ துரகபதாதிகளும், சேனாநாயகரும், விருது கூறுவோரும், வாத்திய முழக்குவோரும் சூழ்ந்து வருவார்களோ? அப்படிப்பட்ட மகாராஜாவாகிய உதிஷ்டிரர் தம்பியார் நால்வரோடு புரோகிதர் மாத்திரம் பின்றொடர, வெண்குடை வெண்சாமரை முதலானவை யில்லாமலும், பூஷணமுங் கவச கிரீடாதிகளுமில்லாமலும், நல்ல வஸ்திரங்களில்லாமலும் ஏழைகளாய் வீதியில் வருகிறாரே ஐயோ! இவர்களை ஆகாச சஞ்சாரிகளுங் கண்டிருக்க மாட்டார்களோ? அப்படிப்பட்ட திரௌபதிதேவி யாவருங் காணச் சாதாரணமாய் வரும்படியாச்சுதே மகா மேன்மையும் சுகந்தமுமுள்ள சாந்து பூசி, நாணயமாகிய வஸ்திராபரணங்களை யணிந்து, பஞ்சணையிலும், மலரணையிலும் படுக்குமளவிற் கன்றும்படியாகிய இம்மங்கையரசின் மேனி; வெய்யலிலுங் காட்டிலு மடிபட்டு, முள்ளிலுங் கல்லிலுமுராய்ந்து, தூளிகள் படிந்து வாடி யொளிமழுங்கும்படி நேரிட்டதே இது மிகவுமாச்சரியம்.

மேலும், இப்படிப்பட்ட மகா வீரரைப் பெற்று ஒப்பற்ற மருமகளைப்படைத்த குந்திதேவியானவள் வெகு தைரியசாலியாயினாள். இல்லாவிடில் இவர்களிவ்வாறு செல்கையிற் கண்டு மனதுடைந்து மார்பு பிளந்து மரிக்க மாட்டாளோ அவளிருக்கட்டும் நாமெல்லாம் மகாபாவிகள். ஆகையாலே தான் உலகத்துக்குத் தந்தைபோலவும்- தாய்போலவும்-மக்கள் போலவும்-பலவகையிலும் நன்மையைப்பயக்கும் மகாராஜர் இவ்வண்ணஞ் செல்லப் பார்த்து உயிர்வைத்துக்கொண் டிருக்கிறோம். ஐயையோ!! என்ன செய்வோம்? இந்தத் துயரத்தை எப்படிச் சகிப்போம்? அருள்-பொறை- நன்றியறிதல்-பெரியோர்க்கு வழிபடுதல் - கல்வி - அறிவு-சவுரியம்-சத்தியம் முதலிய நற்குணங்களால் அலங்கார முடையோராகிய இந்த மகானுபாவரை வஞ்சித்துப், பலவகையினுந் துன்பப்படுத்திக் காட்டுக்குப் போகும்படி திரிதராஷ்டிரன் முதலாகிய பாதகர்செய்தபடியினாலன்றோ? நாமெல்லாஞ் சுகமிழந்து பெருந் துயரென்னுங் கடலி லாழும்படியாயிற்று. ஆதலால் இக்கொடியசெங்கோல்மன்னனது நாட்டில் நாமிருப்பது தகுதியன்று. ஓர் மரம் வேறற்றபின் அதிலுள்ள கிளைகளும் இலைகளும்-மலர்களும்-வாடாம லிருக்குமோ? இந்த உலகமென்னும் மரத்திற்கு உதிஷ்டிர மகாராஜா வேர். நாமெல்லாங் கிளை முதலானவை. அன்றியும், இவ்வுலகமாகிய மடுவுக்குத் தண்ணீர் போன்றவர் பாண்டவர். நாம் அம்மடுவி லுறையு மீன்கள். நீர் வற்றியபின் மீன்களெப்படி பிழைக்கும்? ஆதலாற் பாண்டவர் போகுமிடத்திற்கே நாமும் போகவேண்

டும். அப்படி செய்யாமல் இப்பாவியினது நாட்டில் இருப்போமேயாகிற் சுகங்கெடுவது மாத்திரமன்றி, நரகமுங் கிடைக்கும்.

அன்றியும், இப்பாவிப் பட்டணத்தில் நமக்கு வீடுகளும் வேண்டாம், நிலங்களும் வேண்டாம், செல்வங்களும் வேண்டாம். இப்படி மைந்தரோடும் மனைவிகளோடும் பாண்டவரைப் பின் தொடருவோம். பாண்டவர் வாசஞ்செய்யுங் கானகம் நாடாகட்டும். இந்நகரங் காடாகட்டும். நாமெல்லாம் விட்டு நீங்குவதினாலே இங்குள்ள எல்லா வீடுகளும் பாழ்த்து, வைதிகஹோமங்களும் மங்கலச் சடங்குகளுமில்லாமல், மயானம்போற் காக்கங்களுங் கழுகுகளும் வட்டமிட, நாய்களும் நரிகளும் பேய்களும் தெருக்களிலுலாவ, இப்பட்டணம் ஒளியற்று நாசமடையட்டும். என்று புலவகையாய் ஜனங்கள் பேசுகிறதைக் கேட்டுக்கொண்டே பாண்டவர்கள் போகுமளவில், நால்வகைச் சாதியாருஞ் சககுடும்பமாகப் பின்றொடர்ந்தார்கள். அப்போது ஸ்திரீகளெல்லாந் திரௌபதி ஒற்றையாடையோடு கூந்தல் விரிந்து பின்புறத்திற் புரளக் காலால் நடந்து போவதைக்கண்டு, ஆ! ஆ! என்று கூவி மார்பிலடித்துக்கொண்டு, துரியோதனாதிகளை வைதார்கள். அதுகாலையில் அரண்மனையிலும் அழுகைக் கூச்சலுண்டாயிற்று. இவ்வகையாய் யாவரும் வருந்தும்படி கானகத்திற்குப் புறப்பட்ட பாண்டவர்களோடு பெரியோர்களையெல்லாம் வந்தனஞ்செய்து விடைபெற்று வீதியில் வராநின்ற திரௌபதியைக் குந்திதேவி நோக்கி, கண்ணீர்வடியக் குரலிட்டழுதுகொண்டு, அடி பாவாய்! அடி என் கண்மணியே! உன்னைப் பிரிந்திருக்குங் காலம் நேரிட்டதே என்ன செய்வேன்? ஆகிலும் இன்றியமையாது வருவனவற்றிற் புத்தியுடையோர் சேரலாகாது. நீயோ! சகல தருமங்களுமுணர்ந்தவள். மகா புத்தியுடையவள். நன்னடையுடையவள். உனக்கு உபதேசிக்க வேண்டுவதொன்றுமில்லை. ஆயினும், எனது மனக்குறை தீரச் சிலவற்றைச் சொல்லுகிறேன். கேளடி என் செல்வச் செழுந்திருவே என்று சொல்லுகிறாள்.

ஓ என தருமை மருமகளே! நீ பர்த்தாக்களையே தெய்வமாக வெண்ணி, அவர்களோடு கூட இருந்து பணிவிடை செய்வதே தருமமென்றுஞ் சுகமென்றும் நினைத்து, வனவாசஞ் செய்வதில் துக்கப்படாமலிரு. உனக்கொரு குறைவும் வராது. உன் குணத்தினால் இரண்டு குலங்களும் விளக்கமுற்று இருக்கின்றன. நீ வெகு பொறுமையுள்ளவள். இல்லாவிட்டால் அந்தத் துராத்துமாக்கள் உன்னை அவமானம் செய்தபோதே சாபத்தினாற் சாம்பராக்கி இருப்பாய். நீ பொறுத்ததே நன்மை (பொறுத்தவர் பூமியாள்வார்). என்று பெரியோர் சொல்லுவார்கள். மற்றொன்று சொல்லுகிறேன் கேள். சகாதேவன் என்றால் மிகவும் அன்பாய் வளர்க்கப்பட்டவன். பாலகன் அவனை நீ வெகு பரிவாய்ப் போஷிக்கவேண்டும். என்னை அவன் நினைக்காமல் இருக்கும்படி நீ செய்யவேண்டும். உனக்கென்ன பாக்கியங் குறைவு? இப்போது குறைநேரிட்டதாய் நினையாதே. விரைவிற் சுபங்களையடைவாய்: ஆனதாற் சுகமாய்ப் போய்வாவென்று சொல்லி மருமகளை கட்டிக்கொண்டு கண்ணீருகுத்தாள். அந்தத் திரௌபதியும் வெகுவாய்க் கண்ணீருகுத்துத் துக்கித்து, மாமியாரை வலம் வந்து அடிதொழுது விடைபெற்றுப் போக அந்தக் குந்தியுஞ் சிலதூரம் பின்றொடர்ந்து தன் புதல்வரைக் கண்டு அளவில்லாத துக்கத்தினால் இப்படி சொல்லுகிறாள்.

ஆ! ஆ! இதென்ன காலத்தின் விபரீதம்? தருமந்தவறாமல் நடக்குங் குணவான்களாகிய என்புத்திரர் இப்படி தாழ்ந்துபோகவும், தருமத்தைப் பகைக்குந் துஷ்டர் மேன்மையடையவும் ஆச்சுதே. இது அவர்களின் விதியுமல்ல தெய்வத்தின் கொடுமையுமல்ல மற்றென்னவென்றால் நான் செய்த தீவினையேதான். இந்தக்கதி வருமென்று தெரிந்திருந்தால், ஆதியிலேயே காட்டிலிருந்து இவ்விடம் வரமாட்டேன். அங்கேயேயிருந்தால் இப்போப்பட்ட துயரப்பட வேண்டுவதில்லையே. இந்த துக்கங்களையெல்லாம் அனுபவிக்காமல் மக்களுண்டானாரென்கிற களிப்போடு அந்தப் பாண்டு மகாராஜன் சுவர்க்க மடைந்தார். மாத்திரையானவள் மகாஞானவதி வருவதை யறிந்து தான் பதியுடன் சஹகமனஞ்செய்து சுகப்பட்டுப்போனாள். ஆனால் அதை எனக்குச் சொல்லாமல்வஞ்சித்தாள். நான் துக்கப்படவேபெண் பிறந்தேன். ஓ குழந்தைகளே! உங்களைப் பிரிந்து நான் எப்படியிருப்பேன்? இந்தத் துக்காக்கினியினாற் சிறிதும் பிளவாமல் இருப்பதைப் பற்றி என்னெஞ்சு கல்லிலும் வலிது நானுங் கூட வருகிறேன். அல்லது சகாதேவனாவது

இவ்விடத்தில் இருக்கட்டும். நீங்கள் வனத்திற்செய்யும் தவப்பயன் அவன் இங்கிருந்து எனக்குப் பணிவிடை செய்வதினாற் கிடைக்காமற் போகாது என்றிப்படி வெகுவாய் அலர்த்தியழுது மூர்ச்சித்த தாயைக்கண்டு, பாண்டவர் மகாதுக்கத்தோடு எடுத்துக் கட்டிக்கொண்டழுது, பலபலவிதமாய்ச் சமாதானஞ் சொன்னார்கள்.

இப்படியிருக்க விதுரன் அவர்களருகில் வந்து, பாண்டவருக்குங் குந்திக்கும் அனேக திடஞ்சொல்லி, குந்தியை மிகவும் உபசாரத்துடனே வீட்டிக்கனுப்பிவித்தான். அப்போது அந்தப்புறத்தில் ஸ்திரீகளெல்லாம் வாய்விட்டழுதார்கள். வீதிகளில் ஜனங்களும் அழுதார்கள். அவ்விரண்டு கோஷமு மாகாயமெல்லாம் பரவிற்று. இந்த கோஷத்தை கேட்டுக்கொண்டே பாண்டவர் தலைகுனிந்து சொல்லுமளவில், ஸ்திரீகள் ஒரு பிரிவாயும், , புருஷர் ஒரு பிரிவாயும், கோவென் றழுதுக்கொண்டு சூழ்ந்து சென்றார்கள். அந்தச் செனங்களையெல்லாம் பார்த்த உதிட்டிரர் மிகவும் விசனப்பட்டு, அவர்களைத் திரும்பிப் போகும்படி வெகுவித தருமங்களைச் சொல்லியும் அவர்கள் திரும்பாமற் சூழ்ந்துவர, அவர்களோடு வர்த்தமான மென்று சொல்லப்பட்ட பட்டணத்தின் வாசலினிடத்திற்குப் போனார். அவ்விடத்திலும் ஜனங்கள் தொடர்ந்து வரக்கண்ட உதிஷ்டிரர் சற்று நின்று, அவர்களை நோக்கி மகாவணக்கமாய் அவரவரிடத்திற்குப்போய்ச் சேரும்படி சொல்லியும், அவர்கள் கேளாமற் சூழ்ந்து யாவருஞ் சங்கேதமாய் நாம் இவரை விட்டுப் பிரியாம லிருக்கக் கடவோமென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு மிகவும் விசனப்பட்டார்கள்.

மேலும் சிலர் தருமராஜனுடைய நற்குணங்களையும், சிலர் வீமசேனனுடைய பராக்கிரமத்தையும், சிலர் அர்ச்சுனனுடைய சாமர்த்தியத்தையும், சிலர் நகுலனுடைய நற்புத்தியையும், சிலர் சகாதேவனுடைய விவேகத்தையும், சிலர் திரௌபதியினது கற்பையும், புகழ்ந்தெடுத்துப் பேசி இவர்களை நாமெப்படிப் பிரிந்திருப்போ மென்று அழுதார்கள். இவ்வாறாய் விசனப்படாநின்ற ஜனங்களை உதிட்டிரர் பார்த்து, ஒரு வார்த்தை சொல்லுகிறார். ஓ ஜனங்களே! நீங்களெல்லாம் எனக்கு வெகு பிரியமானவர்கள். எனக்கு நன்மையைச் சிந்திப்பவர்கள். ஆதலாலே, என் பேச்சைக் கேட்டுத் திரும்புங்கள். லோகத்திலே மனிதனுக்குத் தருமமே பெரிது. அதைப் பரிபாலனம் செய்யவேண்டும். என் பிதாவாகிய திரிதராட்டிர மகாராசா கட்டளை யிட்டதை நான் மீறலாகாது. அவர் என்னிடத்தில் மிகுந்த பரிவுடையவர். எப்போதும் இதத்தையே செய்கிறவர். ஆனதுபற்றி அவர் கட்டளையின்படி பன்னிரண்டு வருஷம் வனவாசமும், ஒரு வருஷம் அக்ஞாதவாசமுஞ் செய்து, புனிதனாய் இவ்விடம் வந்து உங்களைக் காண்கிறேன்,” ‘விசனப்பட வேண்டாம். எங்களுக்கு நன்மையுண்டாக வேண்டுமென்று சிந்தித்துப் பரிவுடனே விடை கொடுத்து எங்களை வலமாய்ச் சுற்றிக்கொண்டு அவரவர்களிடம் போய்ச் சேருங்கள் என்று வெகுவிதமாய்ச் சமாதானஞ் சொன்னார். இதையெல்லாம் கேட்டு ஜனங்கள் ஆராத்துயருடன் விட்டுப்பிரிய மனமற்றவர்களாய் சூழ்ந்துக்கொண்டிருந்தார்கள்.

### அந்நகரத்து வேதியர் திரிதராஷ்டிரனாதியரைத் தூஷித்துத் தருமனிடஞ் செல்ல அவர் சமாதானங் கூறி யனுப்புதல்

இவ்விதமாய்ச் செனங்கள் சூழ்ந்து விசனப்பட்டுக்கொண் டிருப்பதையும், குந்தி முதலானோர் துக்கப்படுவதையும், பாண்டவர் மகா ஏழ்மையோடு செல்வதையும், துரியோதனாதிகளாகிய பகைவர் வேடிக்கையாய்ப் பார்த்து நகைத்துக்கொண்டிருந்தார்கள். அதைக் கண்ட வீஷ்மர்-துரோணர் முதலானோர் தாக்ஷண்யத்தினால் ஒன்றும் சொல்லமாட்டாமற் பாண்டவர்களுக்காக விசனப்பட்டுக் கொண்டிருந்தார்கள். சில பிராமணர்கள் மாத்திரம் அஞ்சாமல் துரியோதனாதிகளுடைய துர்க்குணங்களை யெடுத்துரைக்கத் தலைப்பட்டார்கள். வாரீர் மகா பெரியோர்களும் ஆசாரியர்களும் செங்கோல் மன்னவருமாகிய பிரமுகாளே! யாவரும் கேளுங்கள். இந்தத் துரியோதனாதியர் மிகவும் பொல்லாதவர்கள்; மனமறியப் பாண்டவர்களை மோசமாய் அழைப்பித்துச் சூதாடி யாவையும் பறித்துக்கொண்டதுமன்றி, பலவகையிலும் அவமானம் செய்து, சபையிலே ஸ்திரீயைக் கொணர்ந்து மானபங்கம் புரிந்து அதுவும் போதாமல் மறுபடியும் சூதாடி காட்டுக்குத் துரத்திவிட்டார்களன்றோ? இவர்கள் நெடுநாள் வாழமாட்டார்கள். சீக்கிரத்தில் மரித்து நரகமடைவார்

கள். இவ்வகையாகிய கொடுந் துஷ்டப்பிள்ளைகளின் மனதின்படியே வயது முதிர்ந்த திரிதராட்டிரனும் நடக்கத் தலைப்பட்டானல்லவோ? அவனுக்குப் பெருந்துய ரனுபவிக்க வேண்டியகாலம் நேரிட்டபடியினாலே தான் இப்படிப்பட்ட துர்ப்புத்தி யுண்டாயிற்று. பாலகனுக்குங்கூட இப்படிப்பட்ட மடமையிராது. தமோகுணமே இவ்வுருக்கொண்டு பிறந்தது வெளியில் எப்படி குருடனோ? அப்படியே உள்ளும் குருடன். இந்தப் பாவியொருவன் பிறந்ததினாலே இக் குலமும் அரசரும் மற்றுமுள்ளோரும் கெடும்படியாயிற்று.

மேலும் கல்விகளைக் கற்றுணர்ந்து வயது முதிர்ந்து பெரியோர்களோடு பழகி அரசாட்சி செய்யாநின்ற அக்குருடன் அறிவில்லாமை-பொறாமை-கொடுமை முதலிய சகல துர்க்குணங்களும் பொருந்திய தன்பிள்ளைகளுடன் பேச்சைக் கேட்டுத் துராத்துமாவாகிய சகுனியினுடைய வஞ்சனைக்கு நற்குணக் கடலாகிய உதிஷ்டிரரை யுட்படுத்திக் காட்டுக்குத்துரத்தினானே இப்படிப்பட்ட அனியாயத்தை யார் செய்வார்கள்? இவனிருக்கட்டும். ஆதியிலே தன் பிள்ளைகளைப்போலே ஜனங்களைக் காத்துப் பின்பு தம்பியாகிய விசித்திர வீரியனைக் கொண்டு காக்கச்செய்து தருமமே பிரதானமாயிருக்க இந்த வீஷ்மரும் பிராமண குலத்திற் பிறந்து சகல கலைகளையு மோர்ந்துணர்ந்து, இருதிறப் பிள்ளைகட்கும் வில்லாசிரியரா யிருந்தவர்களாகிய துரோணரும், கிருபரும், தருமம் வழுவாமல் நடக்கிறவனாகிய சோமதத்தன் முதலாயினோரும், இந்த அனியாயத்தைப் பார்த்துத் தடுக்காமற் சும்மாவிருந்தார்களல்லவோ? இவர்கள் எல்லாவகைகளினாலுந் தடுக்க வல்லமையுள்ளவர். இப்படியிருந்தும், அக்கொடுங் குணவரசர் கஷ்டங் கண்டளிக்குஞ் சொற்றையும் சோம்பேயுமே பெரிதாயெண்ணித் தாட்சணியப்பட்டு அதருமத்திற்கு உள்ளாகினார்கள். அதனாலே இவர்களும் பாபத்தை பங்கிட்டுக்கொண்டார்கள். இவர்களுக்கும் விநாசகாலம் நேரிட்டபடியினாலேதான் விபரீதபுத்தி உண்டாயிற்று. ஓ!ஓ! இதென்னமோ காலக்கொடுமை இந்த மகா பாவியாகிய திரிதராட்டிரனது ராச்சியத்தில் நாம் இனி இருப்பது நல்லதன்று. பாண்டவர்களோடு காட்டுக்கே போவோம். அவர்களோடு கூடவே இருப்போம் என்று சொல்லி நிந்தித்துக்கொண்டே வந்து உதிட்டிரரோடு கலந்தார்கள். அதுகண்ட உதிட்டிரர் அவர்களைப் பார்த்து இதனைச் சொல்லுகிறார். ஓ பிராமணோத்தமர்களே! நீங்கள் என்னிடத்தில் பரிவுள்ளவர்கள். ஆனாலும், என் பேச்சைக் கேட்கவேண்டும். இவ்விடத்தினின்றும் நீங்கள் குடும்பங்களோடு திரும்பி மனைகட்குச்சென்று எனக்கு நன்மையைப் பிரார்த்தித்துக்கொண் டிருக்கவேண்டும். இந்தப் பதின்மூன்று வருஷங்களுங் கழித்தவுடனே உங்களைக்கண்டு நானும், என் தம்பிமார்களும் திரௌபதியும் சந்தோஷிப்போம் என்று சொல்லி, யாவரையும் வெகுவாய் சமாதானஞ்செய்து அனுப்பிக் காட்டை நோக்கிப் புறப்பட்டார்.

திரிதராஷ்டிரனுக்கு விதுரன் பாண்டவராதியர் கருத்துணர்ந்த நாரதர் அது நிச்சயமென்று சொல்லி மறைதல்

இவ்வண்ணமாய் உதிஷ்டிர மகாராஜன் காட்டுக்குச் செல்ல, சகல்மான ஜனங்களும், பந்துக்களும், ஊழியக்காரரும், அரசரும், முன்பு ஸ்ரீராமர் அயோத்தியைவிட்டுக் காட்டிற்குபோகுமளவில் அந்த நகரத்தாரெல்லாம் எப்படி விசனப்பட்டார்களோ? அப்படி அருந்தவிசனத்தினாற் கண்ணீர் பெருகப் பெருமூச்சுவிட்டு, வாய்விட்டழுதுகொண்டே சில தூரம் பின்றொடர்ந்து போய், அக்கால் அயோத்தியா நகரத்துச் சனங்கள் கைகேயியை நிந்தித்ததுபோல் திரிதராஷ்டிரனை நிந்தித்து, உயிரிழந்தவர்போல் ஒளியிழந்து திரும்பினார்கள். அப்படியிருக்க, திரிதராஷ்டிர மகாராஜன் பாண்டவர்களின் மகிமையையும், அவர்கள் பிரதிக்கினை செய்ததையும் யோசித்து, மனதிற் பயமுண்டாகித் திகிலடைந்து பரதவித்து விதுரனை அழைப்பிக்க, அவனும் வந்து பக்கத்திலுட்கார, அவனைப் பார்த்து வினவுகிறான். அப்பா விதுரா? நம்முடைய பாண்டவர்கள் வனத்துக்குப் போகின்றார்களே அவர்களுந் திரௌபதியுந் தருமியரும் எப்படி போனார்கள்? என்ன சொன்னார்கள்? என்ன நினைத்துக்கொண்டு செல்கிறார்கள்? இவைகளை நன்றாய்ச் சொல் கேட்க வேண்டுமென்று கூறக்கேட்ட விதுரன் சொல்லத் தொடங்கினான்: கேளுமையா மகாராஜாவே! உதிட்டிரர் கிருஷ்ணசலத்தினால் முகத்தை மூடிக்கொண்டு வெகு சந்தோஷத்தோடு போனார். ஏனென்றால் உமது துஷ்டப்

பிள்ளைகள் பலவகையில் அபராதஞ் செய்
திருக்கச் செய்யும் அதை யெவ்வளவும் மன
தில் நினைக்காமல், அப்படி யிருந்தாலுந்
தருமநோக்குள்ள கண்களால் அவர்களைப்
பார்த்தால் அவர்கள் எரிந்துபோவார்க ளான
படியினாலே முகத்தை மறைத்துக்கொண்டு
போனார்.

இப்பால் வீமசேனனோ? தனது மிகுந்த
வீரமும் அழகும் பொருந்திய கைகளை தொங்க
விட்டுப் பார்த்துக்கொண்டே போனான். அதே
னென்றால் இந்தக் கைகளினாலே தருமபுத்
திரருக்கு விரோதிகளை சீக்கிரத்திற் சங்கரிக்
க்க வேண்டுமென்னும் கருத்தினா லவ்வாறு
போனான். அர்ச்சுனன் கால்களால் மணல்களை
இறைத்துக்கொண்டுபோனான். அதற்குக் கார
ணம் யாதென்றால், இந்தக் காலினால் மணலை
இறைக்குமளவில் இது எப்படி சிதறி நாற்
புறமும் வியாபிக்கிறதோ அப்படியே திரித
ராஷ்டிர சேனையிற் சரங்களை இறைப்பே
னென்கிற கருத்தேயாம். நகுலன் தன் உடம்
பெல்லாம்புழுதிபடிந்துமாறுபட்டிருக்கும்படி
போனான். அதன் கருத்தென்னென்றால், நமது
வடிவை மங்கையர்கண்டு மயங்குவார்கள். அப்
படி ஆகவேண்டா மென்பதேயாம். சகா
தேவன் கைகளாலே முகத்தை மூடிக்கொண்டு
போனான். அதற்கு ஏது என்னவென்றால்,
முகத்தில் உதியாநின்ற கோடாக்கினி வெளி
யிற் பரவக்கூடாதென்கிற எண்ணமேயாம்.
பாஞ்சாலி புஷ்பிணியாக ஒற்றையாடையோடு
தலைமயிரை விரித்துக்கொண்டு சென்றாள்.
அவள் கருத்து என்னவெனில், இப்
போது நான் எப்படிப் போகிறேனோ அவ்
விதமாகவே இதற்குப் பதினான்காவது வரு
ஷத்திலே துரியோதனாதிகளின் மனைவி
கள் தங்கள் கணவரும் மக்களும் யுத்தத்தில்
மடிய அவர்மீதில் வீழ்ந்தழுது அவ் வுதிரங்க
ளாடைகளிற்பட்டுத் தலைமயிரை விரித்துக்
கொண்டு துயரப்படுவார்க ளென்பதுதான்.
புரோகிதராகிய தவுமியர் தருப்பைகளைக் கையி
லேந்தி, யமசாமத்தை யுச்சரித்துக்கொண்டு
போனது எதற்கென்றால் இதற்குப் பதினான்
காவது ஆண்டிலே மடிந்த அரசர்களுக்கு
மிகுந்திருப்பவர் கிரியை செய்வார்களென்று
எண்ணிக்கொண்டே போனார்.

அன்றியும், அந்தப் புரோகிதர் பதினா
லாம் வருஷத்திற் குருடன் சந்ததியற்றுப்
போவானென்றும் உரைத்தார். என்று சொல்
லவே இந்த வார்த்தைகளைக் கேட்ட திரித
ராஷ்டிரன் அஞ்சி, விதுரா! ஜனங்களென்ன
சொன்னார்களென்றுவினவ, விதுரன் மறுபடி
யுஞ் சொல்லுகிறான்: ஓ மகாராஜாவே! ஜனங்க
ளெல்லாம் பாண்டவர் வனம்போக மனம்
பொறுமற்குடும்பத்தோடு வெகுதூரங் கூடவே
போய், அவர்களாற் பலவகையாற் சமாதா
னஞ் செய்யப்பட்டு, கன்றுகளைவிட்டுப் பிரிந்த
பசுக்கள்போற் கதறிக்கொண்டே தங்கள் மனை
களைச் சேர்ந்து, உம்முடையவும் உமது
புத்திரர் முதலானோருடையவுமாகிய பல
துர்க்குணங்களை யெடுத்துப் பழிப்பதும், பா
ண்டவர்களின் நற்குணங்களை யெடுத்து புகழ்
வதுமாக மிகுந்த விசனத்தை யனுபவித்துக்
கொண்டு, அன்னாகாரமில்லாமல் இவ்விராச்
சியத்தி லிருக்க மனமில்லாதவர்களா யிருக்கி
றார்கள். பலவகை அபசகுனங்களாகின்றன.
மேகங்கள் உதிரத்தைப் பொழிகின்றன. வான
த்தினின்றுங் குறைக்கொள்ளிகள் வீழ்கின்
றன. வீதிகளில் நரிகள் வந்து ஊளையிடுகின்
றன. கழுகுகளும் பருந்துகளும் வட்டமிடுகின்
றன. இவ்வகையாய் இப்போதிந்த நகர
மானது ஸ்ரீராமர் வனவாசம் போகும்போது,
திருவயோத்திமாநகர் எப்படி யிருந்ததோ?
அப்படி யிருக்கின்றது என்றுசொல்லி வாயை
மூடிக்கொண்டான். இப்படியிருக்க நாரதமகா
முனியானவர், அனேக முனிவர் குழாங்கள்
சூழத் திரிதராஷ்டிரனிடத்திற்கு வந்து, அவ
னால் உபசரிக்கப்பட்டபின் அவனைப் பார்த்து,
ஓ அரசனே! உனது துராலோசனையினாலும்
உன் புத்திரருடைய கொடுஞ் செய்கைகளினா
லும் பதினான்காவதாண்டிலே உன் வமிசம்
நாசமாய்ப் போமென்று சொல்லி மறைந்து
விட்டார்.

## துரியோதனன் துரோணரை அடைக்கலம் புகுதல்

இவ்விதமாய் விதுரனும் - நாரதரும்
சொல்லக்கேட்ட திரிதராஷ்டிரனும் மற்ற யா
வரும் பயமடைந்து யோசித்து, ஒன்றுந்தோ
ற்றாம லிருந்தார்கள். துரியோதனனானவன்,
துச்சாதனன் - கர்ணன் - சகுனி - இவர்களோடு
துரோணாசாரியரிடத்திற்கு வந்து நமஸ்கா
ரஞ்செய்து ஐயா ஆசாரியரே! அடியேனையும்
இவ்விராச்சியத்தையுந் தேவரீர் திருவடி
களில் சமர்ப்பித்தேன். இவ்விரண்டும் பகை
வர் கையில் அகப்படாவண்ணங் காத்தருள்

வேண்டுமென்று கைகூப்பிப் பிரார்த்தித்தான். அது கேட்ட துரோணர்-கேளப்பா துரியோதனா! பாண்டவர் ஒருவராலுஞ் சங்கரிக்கப்பட மாட்டார்கள். ஆதலால் அவர்களை ஜெயிக்க என்னால் ஆகாது. ஆனாலும், நீ என்னைச் சரணமாக வந்தடைந்ததுபற்றி உன்னையுங் காக்கவேண்டும். அதற்காக ஒன்று சொல்லுகிறேன் கேள்; என்னுயிரிருக்கிறவரையில் உன்னைச் சத்துருக்கள் கையிலகப்படவொட்டாமற் காப்பாற்றுவேன்; எனக்கோ முன்னமே மிருத்யு உண்டாயிருக்கிறது. அது யாதென்றால், துருபத மகாராஜன் என்னிடத்தில் உண்டான விரோதத்தினால் யாஜோபயாஜரை யனுசரித்து, அர்ச்சுனனுக்குக் கொடுக்க ஒரு பெண்ணையும் என்னைக்கொல்ல ஒரு பிள்ளையையும் பெற்றான். அந்தப்பெண் திரௌபதி, அந்தப் பிள்ளை த்ருஷ்டத்யும்னன். அவன் கவசகுண்டலங்களோடும் வில்லோடும் அக்கினியினின்று தித்தான். அவனை நினைத்தால் என் மனம் பதைக்கின்றது. அவனே பாண்டவர்களின் பக்ஷத்திலிருக்கிறான். ஆனபடியினாலே அவனால் நான் கொல்லப்படுவேன் உங்களுக்குங் காலங் குறுகிற்று.

அன்றியும், இந்தப் பதின்மூன்று வருஷங்களையும் ஒரு கணப்பொழுதாய்ப் போக்கி பாண்டவர் உங்களிடத்திற்கு வந்து இராச்சியத்தைக் கேட்பார்கள்; நீங்கள் துர்ப்புத்தியினாற் கொடுக்கப் போகிறதில்லை. அதனாலே உயுத்த முண்டாகும்; அதில் அவர்கள் பிரதிக்கினை செய்தபடி நிறைவேற்றுவார்கள்; சந்தேகமில்லை. விதிவசத்தை யார் தடுக்க மாட்டுவார்கள்? பாண்டவர்களது செல்வம் உங்கட்குச் சதமன்று. ஆதலால் அச்செல்வங் கைவிட்டுப் போகா முன்னமே மறுமைக்கு வேண்டிய தருமங்களைச் செய்யுங்கள். நீங்கள் இதுவரையில் வெகு பாவங்களைச் செய்திருக்கிறீர்கள். அவைகளைத் தருமஞ்செய்து போக்கடித்துக்கொள்ளுங்களென்று சொன்னார். அதைக் கேட்ட திரிதராஷ்டிரன் மிகுந்த விசனமடைந்து புத்திரனைப் பார்த்து, அடா துரியோதனா! என்ன விபரீதங்களை யுண்டாக்கி விட்டாய்? ஐயோ! இனியேனும் அத்துற்குணங்களை யெல்லாம்விட்டு, பாண்டவர் கோபம் நமக்குக் கேட்டிற்கு ஏதுவென்று சொல்லுகிறபடியினாலே நீ இப்போதே விதுரனை அனுப்பிப் பாண்டவரை வனம் போகாமல் வரும்படி சொல். அப்படி அவர்கள் திரும்பாவிடில் அனேக இரதகஜதுரகபதாதிகளையும் ரத்தினங்களையும் - தனங்களையுங் கொண்டு போய்க் கொடுத்துச் சமாதானம் பண்ணியாகிலும் வரச்சொல்லென்று சொன்னான். இப்படியாகச் சொல்லி மனம் நிலைபெறாமல் திரிதராஷ்டிரன் தவித்துக்கொண்டிருக்க, சஞ்சயன் அவ் வரசனிடத்திற்கு வந்து பணிந்து தன்னை அறிவித்து, அவன் அனுமதிப்படி உட்கார்ந்து, அவனைப்பார்த்து இதனைச் சொல்லுகிறான்.

### திரிதராஷ்டிரன் சஞ்சயன் கடிவதைக் கேட்டு பரிதபித்தல்

ஓ மகாராஜாவே! நீரே உமது பிள்ளைகளின் ஆலோசனைக் குட்பட்டு, பாண்டவரை வஞ்சனையால் சூதாடச் செய்து, பலவிதமாய் அவமானப்படுத்தி அவர்கள் செல்வங்கள் யாவையும் பறித்துக்கொண்டு, மரவுரி மான்றோல்களோடு காட்டில் துரத்திவிட்டீரே மனதிலிருந்த கோரிக்கை நிறைவேறிற்றே இன்னம் ஏன் விசனப்படுகிறீர்? என்ன அவர்கள் இடத்தினின்றும் பறித்துக்கொள்ள வேண்டியபொருள்களில் குறைவுபட்டதென்று பரதவிக்கிறீர்? உமது எண்ணத்திற்கும், உமது பிள்ளைகள் அபிப்பிராயத்திற்கும் என்ன குறை உண்டாகியதென்று பெருமூச்செறிகிறீர் இன்னும் என்ன செய்யவேண்டும்? என்று சஞ்சயன் சொல்ல, அதற்கு அவ்வரசன் ஓ சஞ்சயனே! சூரரும், வெல்லப்படாதவரும், யுத்தத்தில் வல்லவரும், தருமவான்களும், வெகு சகாயசம்பத்தோடு கூடியவருமாகிய பாண்டவரோடு பேதைகளாகிய என் மக்களுக்குப் பகை நேரிட்டிருக்க, எப்படி சிந்தைப்படாமலும், விசனப்படாமலும் இருப்பேன். என்றுரைக்கக் கேட்ட சஞ்சயன் ஓய் ராஜாவே! நீர் மனமறிய அநியாயத்தைச் செய்து பாண்டவர்களோடு பகை சம்பாதித்துக்கொண்டு இப்போது ஏன் விசனப்படுகிறீர்? விசனப்பட வேண்டுவதாகிய காலம் இனி யிருக்கிறது. அப்போது விசனப்படலாம். புஷ்பிணியாயிருந்த பாஞ்சாலியைச் சபையில் இழுத்துக்கொண்டு வரச்சொல்லி உமது மூத்தமகன் ஏவ, இளையவன் அப்படியே இழுத்துத் துகிலுரிய, வீஷ்மர் துரோணர் முதலானோர் வேண்டாமென்று சொன்னதையுங் கேளாமல் மனம் பூரித்துச் சும்மா விருந்தீரே அதற்குப் பயனாய் அந்தத் துர்ச்சாதனன் மார்பை வீமன் கதாயுதத்தினாற் பிளந்து உதிர

பானம் செய்யக் கேட்கப்போகின்றீரே அப்போது வேண்டுமான மட்டும் விசனப்படலாம். பாண்டு புத்திரர் விரோதமுராதென்று உமக்குத் தோன்றியிருந்தால், அன்று விதுரர் சொல்லிய பேச்சையும் வீஷ்மர் முதலானோர் சொல்லிய பேச்சையுங் கேட்டீரா? வீணாயிப் போதேன் சிந்தைப்படுகிறீர் என்றான்.

அதுகேட்ட குருட்டரசன் ஓ சஞ்சயனே! தெய்வம் எவனைக்கெடுக்க நினைக்கிறதோ? அவன் விவேகத்தை முன்னமே பறித்து விடுகிறது? யாரை விருத்திசெய்ய நினைக்கிறதோ? அவனைக் குணசாலியாக்கும். காலமும் புத்தியைக் கெடுத்து நசிக்கச்செய்கிறதே யல்லது, ஆயுதத்தை யெடுத்துக் கொல்லுகிறதில்லை. அப்படிதான் எனக்கும் நேரிட்டதென்று சொல்லக்கேட்ட சஞ்சயனனவன், ஓய் ராஜாவே! வந்துவிட்டது பயம். இனி செய்யத்தக்க தொன்றுமில்லை. இல்லாவிட்டால் உம்முடைய குமாரர் கர்னனோடும், சகுனியோடும் கூடிக்கொண்டு, கற்புடைய மங்கையர்க்குச் சிரோன்மணியாகிய திரௌபதியைச் சொல்லாதுஞ் சொல்லிச் செய்யாதுஞ் செய்து அவமானப் படுத்துவார்களா! ராஜாதிராஜராகிய பாண்டவரை அடிமைகளென்றும், நபும்சகரென்றும் பலவாறாய்த் தூஷிப்பார்களா? இப்படி செய்திருக்கவும், அவர்கள் தருமத்திற் கட்டுப்பட்டு உமது கட்டளையை மீறாமற் காட்டிற் சென்றார்களே! அந்தப் பொறுமை என்னுந் தீயே பகைவரைச்சுடும். என்று சொல்லக்கேட்ட திரிதராஷ்டிரன் அச்சஞ்சயனோடு பின்னுஞ் சில பேச்சுகளைச் சொல்லிப் பரதவிக்கிறான்.

ஓ சஞ்சயா! துஷ்டப்பிள்ளைகள் என்பேச்சைக் கேட்கவில்லை. சூது வேண்டாமென்று தடுத்தேன். பின்பு திரௌபதியைச் சபையிலிழுக்கும்போது, காந்தாரி முதலானோர் மிகவும் விசனப்பட்டு என்னோடு சொன்னார்கள். விதுரனுஞ் சொன்னான். அனேக அபசகுனங்களு முண்டாயின. இவையெல்லாங் கண்டு நான் அவளுக்கு இஷ்டமான வரங்களைக் கொடுத்து, பாண்டவர்களுக்குஞ் செல்வங்களை முன்போற் கொடுத்து இராச்சியத்திற்கு அனுப்பினேன். மறுபடியும் இந்தத் துஷ்டர் அழைப்பித்து இப்படி செய்தார்கள். அப்பா சஞ்சயா! நானென்ன செய்வேன்? இதனாலே துருபதமகாராசனுங் கிருஷ்ணன் முதலானோரும் நமக்குப் பகையாளிகள் ஆனார்களல்லவோ? சஞ்சயா நானென்ன செய்யப் போகிறேன்? இனி துருபதமகாராஜனும், வீஷ்மருக்குச் சத்துருவாகிய சிகண்டி - துரோணருக்குச் சத்துருவாகிய திருஷ்டத்துய்மனன் - முதலான துருபதகுமாரரும், விருஷ்ணிகள் - அந்தகர் - போசர் - குகுரர் - தாசார்கள் - சாத்துவதர் - வாதவர் - முதலானோர்களும் புடைசூழ, இந்திரதனுசுக் கொப்பாகிய காண்டீபத்தை வளைத்து நாணேற்றி நாணோசை கொண்டு அர்ச்சுனன் வருவானே; காலதண்டம்போன்ற கதையைக் கையிலேந்தி வீமன் வருவானே; இவர்கள் எதிரில் நின்று யார் தடுக்கமாட்டுவார்கள்? நானும் எத்தனையோவிசை பாண்டவர் பகையாகாது என்று சொல்லியுங் கேட்காமற் போனனே; அரசர்க்குள் பலசாலி ஜராசந்தன் வீமன் கையால் முறிந்தான். இதுகளையெல்லாம் அன்றே விதுரனுஞ் சொன்னான். அதைக்கேளாமற் புத்தியீனனாகிய நான் ஆபத்தைக் கொணர்ந்து விட்டுக் கொண்டேன். என்று திரிதராஷ்டிரன் சஞ்சயனோடுசொல்லி வெகுவாய் விசனப்பட்டான் என்று வைசம்பாயன முனிவர் ஜெனமேஜெய மகாராஜனுக்குச் சொல்லி நிறுத்தினார்.

## சூதுபோர்ச் சருக்கத்தோடு

சபாபருவம் முற்றுப்பெற்றது.

